# இராமாயணம்

ஒட்டக்கூத்தர் இயற்றிய

## உத்தர காண்டம்

(முதற் பகுதி)

உரையாசிரியர்

வித்துவான். செ. வேங்கடராமச்செட்டியார்




அண்ணுமலைப் பல்கலைக்கழகம்

1977

# அணிந்துரை

பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்,
நிகழ்நிலைத் தூணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

மொழியின் நிலைத்த வாழ்வு, அம் மொழி பெற்ற இலக்கியங்களைப் பொறுத்தது. எத்தனையோ உயர்ந்த இலக்கியங்களை- ஆற்றல் மிக்க இலக்கியங்களைத் தமிழ்மொழிபெற்று விளங்குகின்ற காரணத்தினால், அது, கன்னித்தமிழாகத் திகழ்கின்றது. தமிழில் தோன்றிய தலைசிறந்த இலக்கியங்களில் கம்பராமாயணமும் ஒன்று. கம்பருக்கு முன் தோன்றிய இலக்கியங்களின் மரபினையும், கருத்தினையும் பின்தோன்றிய இலக்கியங்களின் அமைப்பினையும், ஆழத்தினையும், கவிவளத்தினையும் கம்பராமாயணத்தில் கண்டு களிக்கலாம். 'கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்' 'கம்பனாரிடைப் பெருமையுளது' என்பன போன்ற தொடர்கள், கம்பரின் அளப்பரும் பெருமை காட்டுவன. 'கல்வி சிறந்த தமிழ்நாடு, புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று பாரதியார் கல்விச் சிறப்பினையும், கம்பன் பிறப்பினையும் இணைத்துப் பாடியுள்ளார்.

இராமாயணக்கதை, நாட்டிலே பரவிக் கம்பர் மனத்திலே பதிந்து, பாட்டிலே வெளிப்பட்டு, ஏட்டிலே நின்று, எண்ணிலா மக்களை இன்பத்தில் ஆழ்த்துகின்ற பெருமை மிக்கது. ஏட்டிலே தவழ்ந்த இராமகாதை, நெடுங்காலம், ஏட்டிலேயே வாழ்ந்தது. கம்பர் எழுதிய ஒரு ஏடு, எத்தனை ஆயிரம் ஏடுகளாய் விரிந்தது!

புதிய எழுச்சிக் காலம் தோன்றியது. தாளும் அச்சுப் பொறியும் மனித ஆற்றலால் கண்டுபிடிக்கப் பெற்றன. அதனால் கம்பராமாயணமும் அச்சு வாகனம் ஏறியது. முதன் முதல் 1842-ல் கம்பராமாயணம் பதிப்பிக்கப் பெற்றது. பின்னர்ப் பல பதிப்புகள் வெளிவந்தன. குறிப்புரைகள், விளக்கவுரைகள் தோன்றின.

கம்பராமாயணப் பதிப்புக்களை நோக்கினால், ஒரு பதிப்பில் உள்ளவாறே மற்றொரு பதிப்பில் காணமுடியாது. அசையோ, சீரோ,

தொடரோ, அடியோ மாறியிருக்கும். அவ்வளவு பாடவேறுபாடுகள்! பாடவேறுபாடுகளின் பெருக்கம், கம்பராமாயணம் பரவியமையைக் காட்டினாலும் கம்பரின் மனம் அறிந்து கற்பதற்கு அவை தடையாயின. இத்தடையை உணர்ந்து நேர்பாடம் கண்டு உயரிய பதிப்புக் கொண்டுவர வேண்டும் எனப் பொருளியல் வல்லுநர் டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் எண்ணினார்கள்.

டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகப் பணியாற்றிய காலத்தில் 1952-ல், கம்பராமாயணப் பதிப்புப் பணி தொடங்கியது. 1955-ல் அண்ணாமலைப் பல்கலைக் கழக வெள்ளி விழா நடைபெற்றபோது, டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் அவர்கள் துணைவேந்தராகப் பணியாற்றிய ஞான்று, சுந்தரகாண்டம் முதற்பகுதி வெளிவந்தது. பணியின் திறமும் பதிப்பின் செம்மையும் கண்டு அறிஞருலகம் பாராட்டியது.

20ஆண்டுகளில், அறிஞர் இருபத்தொருவர் கூடி ஏடுபடித்தல், பாடவேறுபாடு தொகுத்தல், உரை எழுதுதல் போன்ற பணிகளில் ஈடுபட்டனர். இவர்களின் பணிகள், பதிப்பாசிரியர் குழுவில் சேர்ந்த பதினல்வரின் மேலான கருத்துரைகளினால் ஆக்கம் பெற்றுக் கம்பராமாயணக் காண்டங்கள் ஆறும் 16 பகுதிகளாக வெளிவந்துள்ளன. இவற்றின் துணையால் ஆராய்ச்சியாளர்களும், மாணவர்களும், பொதுமக்களும் பெற்றுவருகின்ற பயன்கள் அளப்பில. இப் பதிப்பாசிரியர் குழுவின் பணியில், யானும் பங்குகொண்டுள்ளேன்.

ஒட்டக்கூத்தர் பாடியதாகக் கருதப்பெறும் உத்தரகாண்டம், படலங்கள் பதினேழையும் செய்யுட்கள் ஆயிரத்து எண்ணூறையும் கொண்டது. அவற்றுள் 11 படலங்களுக்கும் 694 செய்யுட்களுக்கும் உரை எழுதப்பெற்று, அப்பகுதி, உத்தரகாண்டம் முதற்பகுதியாக இப்போது வெளிவருகின்றது. இப்பகுதிக்கு உரை வரைந்தவர், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை விரிவுரையாளராகப் பணியாற்றி, இப்போது பல்கலைக்கழக மானியக் குழுவில் பணியாற்றும் வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்கள் ஆவர். உத்தரகாண்டத்திற்கு இதுவரை, உரை

வரையப்பெறவில்லை. இதற்கு உரை எழுதிய முதல் உரையாசிரியராக, வேங்கடராமச் செட்டியார் விளங்குகின்றார். இப் பகுதியும் முன்வந்த இராமாயணப் பகுதிகள் போலவே உரைச் சிறப்பும், பதிப்பு அமைப்பும் உடையது.

வெள்ளி விழாவில், முதற்பகுதி வெளியிடப்பெற்றது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் பொன்விழா, அடுத்த ஆண்டு நிகழும். அப்போது உத்தரகாண்டம் இரண்டாம் பகுதியும் வெளிவந்து, தமிழில் அமைந்த இராமாயணம் முழுமையும் நிறைவு பெறும். வெள்ளிவிழா ஆண்டில் தொடக்கம்! பொன்விழா ஆண்டில் நிறைவு! எவ்வளவு காலம்! எவ்வளவு உழைப்பு! நீண்ட உழைப்பின் நெடிய பயனே, அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் இராமாயணப் பதிப்பு.

இராமாயணத்தினால், தமிழ் வளம் மிகுந்தது. அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட பதிப்பினால், இராமாயணம் செம்மை பெற்றது. இந்த அளவிற்குப் பல்கலைக்கழக இராமாயணப் பதிப்புத் திகழ்கின்றது. இவ்வளவு பெரிய பணியை இப் பல்கலைக்கழகமே நிறைவேற்ற இயலும்! அண்ணாமலைப் பல்கலைக்கழகம், இப் பதிப்புப் பணியை மேற்கொண்டது, மிகப் பொருத்தமாகும்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம், ஐந்தாம் தமிழ்ச் சங்கம் என்று போற்றப்பெறும் தமிழ்ப் பல்கலைக்கழகம். தமிழ் நாட்டின் முன்னேற்றம் கருதியும், தமிழ் மக்களின் நல்வாழ்வு நோக்கியும், தமிழ் மொழியின் ஏற்றம் எண்ணியும் பெருங்கொடை வள்ளல், செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் தோற்றுவிக்கப்பெற்ற அறிவு நிலையமே, அண்ணாமலைப் பல்கலைக்கழகம். அண்ணாமலை வள்ளல் அவர்கள் முக்காலமும் உணர்ந்த மூதறிஞர். ஆதலால், சென்றகாலச் சிறப்பும், நிகழ்கால நிலைமையும், எதிர்கால வாழ்வும் கருதி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினை அமைத்தார்கள். அவர்களின் தூய உள்ளம், கடின உழைப்பு இவற்றால் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வடிவு பெற்றது; வளர்ச்சியுற்றது. அவர்களின் காலத்தில், அவர்களுக்குத் துணையாய் நின்று, பல்கலைக்கழகத் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உதவியதுடன், அவர்களுக்குப்பின், பல்கலைக் கழக இணைவேந்தராகப் பொறுப்பேற்றுப் பல்கலைக் கழகம் விரிவும் வளமும் பெற

ஆவன செய்து, பல்கலைக் கழக வளர்ச்சிக்கு மேலும் மேலும் நல்லனவெல்லாம் நாள்தோறும் செய்து வருகின்ற பெருந்தகை, செட்டிநாட்டு அரசர் டாக்டர் ராஜா சர் முத்தையவேள் அவர்களுக்குக் கல்வி உலகம் என்றும் கடப்பாடுடையது.

மதிப்பிற்கு உரிய முத்தைய வேந்தர் அவர்கள், பிறர்நலம் கண்டு மகிழும் பேரருளாளர்; நாட்டு முன்னேற்றம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட தூய நெஞ்சினர்; முத்தமிழும் வளம் பெற்றுச் சிறப்புற வேண்டும் என்ற பெருவேட்கையர். பொது மக்களாலும் அறிஞர்களாலும் நாட்டுத் தலைவர்களாலும் நன்கு மதிக்கப் பெறும் தலைவர்களில் தலைவர். அவர்களை இணைவேந்தராகப் பெற்ற இப்பல்கலைக் கழக வெள்ளிவிழா, 1955-ல் நடைபெற்ற சீரினை வியவாதார் யார்! விழா என்றால் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெள்ளிவிழா என்று கூறும் அளவிற்குச் சிறப்பாக நடைபெற்றது. அதனை நடத்திய முத்தைய வேந்தர் அவர்கள், இப்போது பல்கலைக் கழகப் பொன்விழாவினைப் பொலிவு மிகக் கொண்டாட வேண்டுமென்று ஆவன செய்து வருகின்றார்கள். அவர்களின் உயர்ந்த தலைமையில் வளர்ந்து வரும் இப் பல்கலைக் கழகம், பெறற்கு அரிய பேறுகளைப்பெற்று வருகின்றது. அவர்கள் தலைமையில், உத்தரகாண்ட முதற் பகுதி, இப்போது வெளியிடப் பெறுகின்றது. 'சிலம்புச் செல்வர்' என்று அனைவராலும் போற்றப் பெறும் மாண்புமிகு ம. பொ. சி. அவர்கள் இந்நூலினை வெளியிடுகின்றார்கள். ம. பொ. சி. அவர்கள், அரசியலில், அனைத்துக் கட்சிகளும் போற்றும் மூத்த அறிஞர். இலக்கியத் துறையில் பழுத்த நெஞ்சினர்; வாய்மையில் சிறந்த வாழ்க்கையினர். பேச்சாற்றலில் வல்ல வித்தகர். எனவே, இவர்கள் வெளியிடுவது சாலப் பொருந்தும்.

பல்கலைக் கழக மானியக் குழுவும், தமிழக அரசும் இக் கம்பராமாயணப் பதிப்பிற்கு நிதி உதவின. இந்நிதியுதவிக்குப் பல்கலைக் கழகத்தின் நன்றி உரியது.

அண்ணாமலைநகர்,
25—9—77

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

# பதிப்புரை

அம்பொனெடு மணிமாட அயோத்தியெய்தி
அரசெய்தி அகத்தியன்வாய்த் தான்முன்கொன்ருன்
தன்பெருந்தொல் கதைகேட்டு மிதிலைச்செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்தமக்கள்
செம்பவளத் திரள்வாய்த் தன் சரிதை கேட்டான்
தில்லைநகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள்
எம்பெருமான் தன்சரிதை செவியால் கண்ணுல்
பருகுவோம் இன்னமுதம் மதியோமன்றே.

— பெருமாள் திருமொழி

செந்தமிழ் நாட்டின் செழுங்கலை நியமமாகத் திகழும் அண்ணுமலைப் பல்கலைக் கழகம் தான் தோன்றிய நாள்முதல் தமிழுக்கு ஆக்கமான பணிகள் பல புரிந்து வருவதனைத் தமிழகம் நன்குணரும். இப்பல்கலைக் கழகம் செய்த சிறப்புடைய தமிழ்ப் பணிகளுள் ஒன்ருகக் குறிப்பிடத் தகுவது உலகப் பெரும் புலவர் எனப் போற்றத்தகும் கம்பர் இயற்றிய இராமாயணமாகிய தமிழ்ப் பெருங்காப்பியத்தின் செம்பதிப்பாகும். கவிச் சக்கரவர்த்தி கம்பர் பாடிய இராமாயணம், நாட்டில் வாழும் பல திறமக்களாலும் விரும்பிப் பயிலப் பெற்று வழங்கிவரும் நிலையில் அந்நூலைப் பாடஞ் சொல்வாரும் பொருள் விரித்துரைப்பாரும் ஏட்டில் எழுது வாரும் ஆகிய பலதிறத்தாராலும் பல பாட வேறுபாடுகளைப் பெறுவதாயிற்று என்பதனைத் தமிழறிஞர் பலரும் நன்குணர்வர். இந்நிலையிற் கம்பர் பாடிய பாடல்களின் தொன்மை வடிவம் இதுவெனத் தேர்ந்து துணியும் ஆராய்ச்சியினை அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறை மேற்கொண்டது. இராமாயணச் சுவடிகளாகத் தமிழகத்திலும் பிற இடங்களிலும் உள்ள பழைய ஏட்டுச் சுவடிகளையும் இதுவரை வெளிவந்த அச்சுப் புத்தகங்களையும் ஒப்புநோக்கி அவற்றிற் காணப் பெறும் பாட வேறுபாடுகள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்து முறைப் படுத்தும் பணி தக்கபுலவர்களால் நிறைவேறியது. கம்பருடைய

வாய்மொழியாக அமைந்த பாடல்களின் இயல்பான அமைப்பு எவ்வாறிருத்தல் வேண்டும் என்பதனைத் தேர்ந்து உரைகண்டு வெளியிடும் பணி திருந்திய முறையில் இனிது நிறைவேறப் பேராசிரியர் சொல்லின் செல்வர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தலைமையில் தமிழகத்து அறிஞர் பலரும் அடங்கிய கம்ப ராமாயணப் பதிப்பாசிரியர் குழு அமைக்கப் பெற்றது. அறிஞர் குழுவினரால் தேர்ந்து கொள்ளப் பெற்ற திருந்திய பாடத்துடன் மூலப்பாடலும் அதனையடுத்து எல்லார்க்கும் பொருள் புலனாகும் நிலையிற் பிரித்த பாடலும் பொழிப்புரையும் சிறப்புரையும் அமையப் பாடவேறுபாட்டு நிரலாகிய பிற்சேர்க்கையுடன் கம்பர் இயற்றிய இராமாயணத்தின் முதல் ஆறு காண்டங்களும் பதினாறு தொகுதி களாக வெளியிடப் பெற்றுள்ளதனைத் தமிழறிஞர் பலரும் நன்குணர்வர். கம்பர் பாடிய இராமாயண காப்பியத்தின் தொன்மை யமைப்பினைத் தேர்ந்து துணிதற்குச் சார்பாயமைந்தது அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட கம்பராமாயணத்தின் செம்பதிப்பே என்பது மிகையாகாது

மேற்குறித்த இராமாயணச் செம்பதிப்பு வரிசையில் ஏழாவது காண்டமாகிய உத்தர காண்டத்தின் முற்பகுதி இப்பொழுது வெளியிடப் பெறுகின்றது. ஏழாவது காண்டமாகிய இவ்வுத்தர காண்டத்தினைக் கம்பரே இயற்றினர் எனவும் இதனையியற்றியவர் வாணிதாசன் என்னும் மற்றொரு புலவரே எனவும் ஆராய்ச்சி யாளர்களிடையே மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. எனினும் இராமாயணத்தின் ஏழாவது காண்டமாகிய உத்தரகாண்டம் முன்னுள்ள ஆறு காண்டங்களிலும் விரித்துரைக்கப் பெறும் செய்திகளைப் புலப்படுத்தும் கதைபொதி விளக்கமாகவும் இராம சரிதையின் முடிபொருட்டொடர்நிலையாகவும் விளங்கும் சிறப் புடையதாகும். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் இவ்வுத்தர காண்டத்தில் உள்ள 'மக்களிழந்த விடும்பையினும்' என்னும் முதற்குறிப்புடைய பாடலை மேற்கோளாக எடுத்தாண் டிருத்தலால் இதன் தொன்மையும் சிறப்பும் இனிது விளங்கும். இத்தகைய உத்தரகாண்டத்துக்குப் பாடபேதங்களோடும் உரை விளக்கத்துடனும் கூடிய பதிப்போ ஆராய்ச்சியோ வெளிவராதது புலவர் உலகிற்கு ஒரு பெருங்குறையாகவே இருந்தது. இக்

குறையினைப் போக்கி நிறைவு செய்யும் முறையில் தண்ணார் தமிழளிக்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம், தான், முன் செம் பதிப்பாக வெளியிட்டுள்ள கம்பராமாயணத்தின் முதல் ஆறு காண்டங்களோடு ஒத்த முறையில் ஏழாவது காண்டமாகிய உத்தரகாண்டத்தினையும் திருத்தமாக வெளியிடும் பணியினை மேற்கொண்டு இப்பொழுது உத்தரகாண்டத்தின் முற்பகுதியினை வெளியிட்டுதவுகின்றது.

இராமாயணத்தின் பிற்பகுதியாகிய உத்தரகாண்டம் திருவோலக்கப்படலம் முதல் சந்திரகேது நகர்ப் படலம் ஈறாகப் பதினேழு படலங்களையுடையதாகும். அவற்றுள் திருவோலக்கப் படலம் முதல் அநுமப்படலம் ஈறாகவுள்ள பதினொரு படலங்கள் அடங்கிய பகுதி முதற்பகுதியாக வெளிவருகின்றது.

உத்தரகாண்டத்திற்குக் கிடைத்த ஓலைச் சுவடிகள் பத்து. அச்சுப்படிகள் மூன்று. இப்பதின்மூன்று சுவடிகளையும் ஒப்பு நோக்கிப் பாடவேறுபாடுகளைத் தொகுத்து முறைப்படுத்தும் பணியினை என்னுடன் உடனிருந்து செய்து உதவியவர்கள் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் வித்துவான் சிரோமணி திரு. பி. எஸ். இராமாநுஜாச்சாரியார், புலவர் திரு. க. இராமச் சந்திரன், டாக்டர் ந.வீ. செயராமன் எம்.ஏ , எம்.லிட்., பிஎச்.டி., திரு புலவர் எஸ். கணபதிராமன் எம். ஏ., என்போராவர். உத்தரகாண்ட மூலச் செய்யுளைப் பாடவேறுபாடு குறித்தற்கேற்ற வகையில் படியெடுத்து உதவியவர் தமிழ்த்துறைத் துணைப் பேராசிரியர் டாக்டர் ஆறு.அழகப்பன்,எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி., அவர்களாவர்.

தமிழாராய்ச்சித் துறையில் கம்பராமாயணப் பணியில் ஈடு பட்டுப் பல படலங்களுக்குச் சிறந்த முறையில் உரையெழுதிய தமிழ்த்துறை விரிவுரையாளரும் பல்கலைக் கழக மானியக்குழுவின் உதவிபெறும் ஓய்வுபெற்ற ஆசிரியரும் ஆகிய திருவாளர் வித்து வான் செ. வேங்கடராமச் செட்டியார் அவர்கள் இப்பகுதிக்குத் திட்பமும் ஒட்பமும் அமைந்த முதலுரையாக உரைவரைந் துள்ளார்கள்.

உத்தரகாண்டம் உரையுடன் வெளிவருதல் வேண்டும் என்னும் உணர்வினைச் செயற்படுத்திய பெருமை தமிழ்த்துறைத் தலைவராயிருந்து இத் துறையினை நன்முறையில் வளர்த்த பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களுக்கேயுரிய தாகும்.

இப்பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்து உதவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும் தஞ்சைச் சரசுவதி மகால் நூல்நிலையத்தார்க்கும் மற்றும் பல அன்பர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றியுரியதாகும்.

இப்பதிப்பினைக் கண்கவர் வனப்புடன் அச்சிட்டுதவிய அண்ணாமலைநகர் சிவகாமி அச்சகத்தாரது பணி பாராட்டத்தகுவ தாகும்.

இத்தகைய தமிழ்ப் பணிகள் இனிது நிகழ்தற்கு வேண்டிய ஊக்கத்தினையும் உதவியினையும் நல்கி அன்போடு ஆவன புரிந்து வரும் அண்ணாமலைப் பல்கலைக்கழக இணைவேந்தரும் முத்தமிழ் வளர்க்கும் பெருங்கொடை வள்ளலும் ஆகிய டாக்டர் ராஜா சர் எம். ஏ. முத்தைய செட்டியார் அவர்களுக்கும் துணைவேந்தர் டாக்டர் சந்திரசேகர் எம். ஏ., பிஎச். டி. அவர்களுக்கும் இந் நூலுக்கு அணிநலஞ் செறிந்த முகவுரை வரைந்துதவிய அண்ணாமலைப் பல்கலைக்கழக நிகழ்நிலைத்துணைவேந்தர் முத்தமிழ் வித்தகர், பண்டிதமணி வித்துவான் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கட்கும் தமிழ்த்துறையின் சார்பில் எனது உளமார்ந்த நன்றியினையும் வணக்கத்தினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அண்ணாமலைநகர்
29—9—77

**க. வெள்ளைவாரணன்**
தமிழ்த்துறைத் தலைவர் (பொறுப்பு)
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

# முன்னுரை

திருப்பாற் கடலில் பாம்பணைப் பள்ளியில் பள்ளி கொண்டருளும் அருட்கடலாகிய திருமால் உயிர்கள்மேல் வைத்த பெருங் கருணையால் தசரதன் மகனாய்ப் புவிமிசைத் தோன்றி இராமன் என்ற பெரும் பெயர் கொண்டு துட்டரைக் கொன்று சிட்டரைக் காத்துச் செய்த சிறப்புறு செயல்களைச் செப்புவதே இராமாயணம். அது, பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், உத்தர காண்டம் என்ற ஏழு காண்டங்களையுடையது. இறுதியில் கூறிய உத்தர காண்டம் முன்னைய காண்டங்களினும் சிறப்புமிக்கது என்பது மேலோர் கருத்து.

இராவண வதத்திற்குப் பின் இராமன் அயோத்திக்கு வந்து பரதன் வேண்டுகோளின்படி முடிசூட்டிக் கொண்டு பதினோராயிரம் ஆண்டுகள் அரசாண்டான் என வான்மீகம் கூறுகின்றது. இராமனது நெடுங்கால நல்லாட்சியையும் பின்பு வைகுண்டம் அடைந்து பண்டுபோல் அங்குத் தெய்வ நிலையில் தங்கிய சிறப்புறு நிகழ்ச்சியையும் கூறுவது உத்தர காண்டம் ஆதலின் இது ஏனைக் காண்டங்களினும் ஏற்றமுடையதாயிற்று.

வடமொழியிலுள்ள வான்மீகத்தை முதனூலாகக் கொண்டு கம்பர் தமிழில் இராமாயணத்தை இயற்றினார் என்பது யாவரும் அறிந்தது. ஆனால் பாலகாண்ட முதல் யுத்த காண்டம் வரையில் உள்ள ஆறுகாண்டங்களை மட்டுமே இயற்றினார், உத்தர காண்டத்தை இயற்றவில்லை என்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும்.

உத்தர காண்டம் என்பது இராமாயணத்தின் பிற்பகுதியைக் கூறும் காண்டம் ஆகும். இது திருவோலக்கப் படலம் முதல் சந்திரகேது நகர்ப்படலம் ஈறுகப் பதினேழு படலங்களையும் ஆயிரத்தைந்நூற்றுப் பத்துச் செய்யுட்களையும் கொண்டுள்ளது.

திருவோலக்கப்படலம் முதல் அனுமப்படலம் வரையில் உள்ள பதினெரு படலங்கள் அடங்கிய முற்பகுதி முதற்பகுதியாக வெளி வருகின்றது. முதற்பகுதி முழுமையும் இராமன் வேண்டுகோளின் படி அகத்திய முனிவர் கூறிய செய்தியாக அமைந்துளது சீதை வனம்புகு படலம் முதல் சந்திரகேது நகர்ப்படலம் வரையில் உள்ள ஆறு படலங்கள் இயல்பாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளாகும். இந்த ஆறு படலங்களும் அடங்கிய பிற்பகுதி இரண்டாம் பகுதி யாக வெளிவர இருக்கின்றது.

இந்த உத்தர காண்டத்தை இயற்றியவர் யார் என்பதில் கருத்து வேறுபாடுகள் உண்டு. கரைசெறி கண்டமேழு என்ற பாடற் பகுதியை உளங்கொண்டு இதனை இயற்றியவரும் கம்பரே எனச் சிலர் கூறுவர். கம்பர் யுத்த காண்டத்தின் இறுதியில் இராமனது முடிசூட்டு விழாவினையும் விழாவிற்கு வந்திருந்தவர்க்கு விடை கொடுத்தனுப்பியதையும் திருமுடிசூட்டுப் படலம் விடை கொடுத்த படலம் என்ற படலங்களில் சொல்லி நிறைவு செய்து விட்டார். அவரே பின்னும் உத்தர காண்டத்தில் அனுமப்படலத் தில் அந்நிகழ்ச்சிகளைக் கூறினர் என்பது பொருத்தமாகாது.

கம்பர், பால காண்டத்தில் கடவுள் வாழ்த்தும் அவையடக்க மும் கூறி முதனூல் வான்மீகம் என்பதையும் விளக்கியுள்ளார். மீண்டும் உத்தர காண்டத்தில் திருவோலக்கப் படலத்தில் பாயிர மாகக் கடவுள் வாழ்த்தும் மெய்ப்பொருள் வணக்கமும் அவையடக் கமும் முதனூல் பற்றியும் கூறியிருக்க மாட்டார். இது தனிநூல் என்று எண்ணும்படி அவை கூறப்பட்டுள்ளன. உத்தர காண் டத்துக் காணப்படும் செய்யுள் நடைக்கும் முன்னைய ஆறு காண் டங்களில் காணப்படும் செய்யுள் நடைக்கும் வேறுபாடு பெரிதும் காணப்படுகின்றது.

1. செய்யுள் நடை வேறுபடுதல் 2. விடைகொடுத்தனுப்பிய செய்தி யுத்த காண்டத்தும் உத்தர காண்டத்தும் காணப்படுதல். 3. பாயிரம் பாலகாண்டத்தும் உத்தர காண்டத்தும் காணப்படுதல் ஆகிய மூன்று காரணங்களால் உத்தர காண்டம் கம்பரால் செய் யப்பட்டதன்று என்பது உறுதியாகின்றது.

### உத்தரகாண்டத்தை இயற்றியவர் ஒட்டக்கூத்தரே

ஒட்டக்கூத்தர் என்ற பெரும் புலவரே உத்தர காண்டத்தை இயற்றியவர் என்பது பலர் கொள்கையாகும். சேதுசமத்தான மகாவித்துவான் திரு. ரா. இராகவையங்கார் அவர்கள் 1904ல் செந்தமிழ்ப் பத்திரிகையில் (தொகுதி 3 பக்கம் 43) இக்கருத்தைத் தெளிவுப்படுத்திப் பின்வருமாறு எழுதியுள்ளார். 'கம்பர் பாடியது பாலகாண்டம் முதல் யுத்தகாண்டம் வரையுள்ள ஆறு காண்டங்களே என்பதும் உத்தர காண்டத்தைப் பின் வந்த ஒட்டக்கூத்தர் பாடினர் என்பதும். அவ்வுத்தர காண்டம் சோழனது அவைக்களத்தே அரங்கேற்றப்பட்டது என்பதும்,

''பூணிலாவுங் கம்பனலம் பொலியுந் தமிழான் புகழெய்திக்
காணுமாறு காண்டமுறுங் கதையிற்பெரிய காதையெனும்
தாணிலாவுங் கழலபயன் சபையிற் பயிலுத்தர காண்டம்
வாணிதாசன் அரங்கேற்ற வைத்தார் சோழமண்டலமே''

என்ற சோழமண்டலச் சதகப் பாடலால் (80) தெளிவாகின்றன. ஒட்டக்கூத்தர் சரசுவதி தம்பலம் கொடுக்க அதனுல் கவித்திறம் எய்தினர் ஆதலால் அவரை வாணிதாசன் என்று சிறப்பித்து வழங்குவர் எனத் தெளியலாம்' என்பது இங்கு நோக்கத்தகும்.

மேலும் ஏழுகாண்டங்களையும் இரண்டு தொகுதிகளாக அச்சிட்ட இராமரத்தினமையர் (சிதம்பர முதலியார் பதிப்பு 1926) உத்தரகாண்டத்தின் முகப்பில் 'மகாகவி' ஒட்டக்கூத்தர் செய்தருளிய இராமாயண உத்தரகாண்டம்' என்ற தலைப்புக் கொடுத்தே வெளியிட்டுள்ளார். 1928ல் பூமகள் விலாச அச்சுக்கூடத்தில் அ. அரங்கசாமி முதலியார் பதித்த புத்தகத்திலும் ஏழாவது காண்ட முகப்பில் 'தெய்வப்புலமை ஒட்டக்கூத்தர் அருளிச்செய்த உத்தரகாண்டம் என்றுளது. எனவே உத்தர காண்டத்தை இயற்றியவர் ஒட்டக்கூத்தரே என்பது உறுதியாகின்றது. மேலும் கம்பரும் ஒட்டக்கூத்தரும் ஒரு காலத்தவரே என்ற கருத்துப்பட விநோதரச மஞ்சரியில் அட்டாவதானம் வீராசாமிசெட்டியார் அவர்கள் எழுதியுள்ள கதையிலும் உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தர் இயற்றியுள்ளதாகவே யுள்ளது.

கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு ஒட்டக்கூத்தர் காலம் பன்னிரண்டாம் நூற்றுண்டு; கம்பராமாயணச் சிறப்புப்பாயிரத்து, எண்ணிய சகாத்தமெண்ணூற்றேழின்மேல்' எனக் குறிப்பிட்டுள்ளபடி கம்பர் காலம் கி.பி. 885 ஆகின்றது. ஒன்பதாம் நூற்றுண்டில் ஆட்சி செய்த சோழன் முதலாம் ஆதித்தன் ஆவன். இவன் கி.பி. 881ல் பட்டம் எய்தி கி.பி. 907 வரை ஆட்சி செய்து காளத்திக் கருகில் உள்ள தொண்டைமானூரில் துஞ்சினவன் என்பது கல்வெட்டால் அறியப்படும் செய்தி. இவனுக்குக் கோதண்டராமன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இப்பெயர்க்கு ஏற்ப ஆதித்த சோழன் கம்பருடைய இராமாயணத்தை விரும்பிக் கேட்டான் என நினைக்க இடமுண்டு. பாலகாண்டத்தில் குல முறை கிளத்துப் படலத்தில் கம்பர் தம் காலத்து ஆட்சி செய்த அரசன் இவன் என்பது புலப்படும்படி செய்துள்ளார். மனு என்ற அரசன் சூரிய குலத்தில் முதலில் தோன்றிய அரசன். அவனைப் பற்றிக் குறிப்பிடும் முதற் செய்யுளில்,

ஆதித்தன் குலமுதல்வன் மனுவினை யார் அறியாதார்' என்று பாடியுள்ளார். இதனால் ஆதித்தன் கம்பர் காலத்து அரசு வீற்றிருந்தவன் என்பதும் அவன் குலமாகிய சூரிய குலத்தில் முதலில் தோன்றியவன் மனு என்பதும் தெளிவாகின்றது. இவ்வாறு புலவர்கள் தம் காலத்து வாழ்ந்த அரசன் பெயரைக் கூறிச் சோழர் குலத்தைப் புலப்படுத்தும் முறை உண்டு என்பதை,

சென்னிநீ டனபாயன் திருக்குலத்து வழிமுதலோர்
பொன்னி நதிப் புரவலனூர் புகழ்ச் சோழரெனப் படுவார்
(பெரியபுராணம் புகழ்ச்சோழர் – 8)

என்ற சேக்கிழார் வாக்கால் அறியலாம். சேக்கிழார் அனபாயன் காலத்து வாழ்ந்தவராதல் புலப்பட அனபாயன் திருக்குலத்து வழிமுதலோர் – புகழ்ச்சோழர் எனப்படுவார் என்று கூறியுள்ளார். சோழர் மரபு தம் காலத்து வாழ்ந்த அனபாய சோழனது மரபு என்பதைச் சேக்கிழார் குறிப்பிட்டதுபோலக் கம்பரும் தம் காலத்து ஆதித்தன் மரபே மனுவின் மரபு என்பதைப் புலப்படுத்தியிருக்கின்றார் எனக் கொள்வதில் தவறொன்றுமில்லை.

கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றும்போது கேட்ட உணர்ச்சியினாலேயே ஆதித்தசோழன் கோதண்டராமன் எனத் தன் பெயரைக் கூறிக்கொண்டான் என்பது பொருத்தமான கருத்தேயாகும். கி.பி. 1118 முதல் 1163 வரை சோழநாட்டை ஆண்ட விக்கிரம சோழன், இரண்டாங் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன் என்ற மூவர் காலத்தும் வாழ்ந்து அம்மூவர் மேலும் உலாப்பாடிய பெரும் புலவராகிய ஒட்டக்கூத்தர் தம் இளமைக் காலத்தில் கவி பாடும் ஆற்றல் பெற்றிருந்தார். கவிபாடு திறமையை வளர்த்துக் கொள்ள ஒருநூல் செய்ய எண்ணினர். கம்பர் பாடாதுவிட்ட உத்தரகாண்டத்தை வான்மீகத்தைப் பின்பற்றிச் செய்தல் எளிமையானது – பயனுடையது எனத் தெளிந்து தமிழில் உத்தர காண்டத்தை மொழிபெயர்த்து இயற்றினர் என்று கொள்வது பொருத்தமானதே. இக்கருத்தினைத் திருவாளர் மு. அருணசலம் எம்.ஏ. அவர்கள் தமது 12-ஆம் நூற்றுண்டு தமிழிலக்கிய வரலாற்றில் ஒட்டக்கூத்தரைப் பற்றிக்கூறும்போது தெளிவுபடுத்தியுள்ளார். அவர் கருத்து ஏற்புடையதாகவேயுள்ளது.

உத்தரகாண்டத்துத் தொடக்கப்பாடல்களை நோக்கின் அவை பழகும்புலவரின் வாக்கு என்பது புலனாகும். பொருட் செறிவும் சொல்லழகும் இன்றிச் சாதாரண நடையில் அமைந்துள்ளன. பாடிப் பாடிப் பழகிய பின்பு அவர் பாடிய பாடல்கள் இனிய சொல்லழகும் கவித்திறனும் பொருட் செறிவும் பொருந்தியதாகப் பொலிகின்றமை காணலாம். கம்பர் கவிக்கு ஒப்பாகச் சொல்ல இயலாவிட்டாலும் ஒருபெரும் புலவரின் வாக்கு எனயாரும் மதிக்கத்தக்கதாகவே உத்தர காண்டப் பாடல்கள் உள்ளன. ஒட்டக்கூத்தரின் உத்தரகாண்டத்தைக் கண்டபின்னரே விக்கிரமசோழன் அவரைத் தன் அவைக்களப்புலவராக ஆக்கிக் கொண்டிருக்கவேண்டும்.

சோழன் அவைக்களப் புலவராய் அமர்ந்த பின்னர் ஒட்டக்கூத்தரின் சொல்வளம் கருத்துவளம் மிக்க சிறப்போடு வளர்ச்சி பெற்றன என்னலாம். எனவே அவர் பாடிய மூவருலா, தக்கயாகப் பரணி முதலிய நூல்கள் உத்திர காண்டத்தின் நடையோடு வேறு பட்டிருத்தல் இயல்பேயாம். மேலும் தொடர் நிலைச் செய்யுளாகிய உத்தரகாண்டமும் சிற்றிலக்கியங்களாகிய மூவருலாவும்

தக்கயாகப் பரணி முதலிய நூல்களும் நடையால் வேறுபடுதல் இயல்பேயாம்.

### உத்தரகாண்டத்தில் உலகியற் கருத்துக்கள்

மணமகனைத் தேர்ந்தெடுப்பதில் குலத்தோரும் தந்தையும் தாயும் மணப்பெண்ணும் வெவ்வேறு கருத்தினராயிருப்பர் என்பதை மண்டோதரியைப் பெற்ற மயன் வார்த்தையாகப் புலவர் புலப்படுத்துகின்றார். குலத்தோர் குலச் சிறப்பையும் தந்தை கல்விச் சிறப்பையும் தாய் செல்வச் சிறப்பையும் மணப் பெண் இளமையழகையும் மணமகன்பால் எதிர்பார்ப்பார்களாம். இக்கருத்து இக்காலத்தும் பொருந்துவதாகவேயுள்ளது.

இனி, அம்மயனே திருமகள் போன்ற பேரழகுடைய மண்டோதரியைப் பெற்றிருந்தும் அம்மகளுக்குத்தக்க கணவன் கிடைக்காமையால்,

> பெண் பெறுகை தனைப்போலப் பெரியதுயர்
> தானுண்டோ பேசுங்காலே,

என்று மனம் நொந்து கூறுகின்றான். மயன் கருத்தையேற்றுக் கொள்ளாதவரும் இக்காலத்து இருப்பரோ? எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் பேருண்மையாதலை யாரே மறுப்பார்?

இனி, மருமகப்பிள்ளை மாமனார் வீட்டில் வந்து பொன்னுக் காகவும் மோதிரத்திற்காகவும் போராடுதலும் அதுகாரணமாக மாமனார் வீட்டார் கூறிய கடுஞ்சொல்லுக்காகக் கோபித்துக் கொண்டு உண்ணுமலிருப்பதும் பழக்கம் என்பதும், மணவாளப் பிள்ளையின் கோபத்தைத் தணிக்க அவன் கேட்டவற்றையெல்லாம் கொடுத்து இன்சொல் சொல்லி மாமனார் வீட்டவர்கள் பூசித்துப் போற்றுவார்கள் என்பதும் சூர்ப்பணகை இராவணனிடம் சொல்லும் சொற்களால் அறியலாம். மேலும் மைத்துனர் தம்மோடு பகை யில்லை என்பதை 'மைத்துனமார் தம்மோடு பகையில்லையென்னு மந்தப் பழமொழியும் கேட்டிலையோ' என்ற அடிகளால் விளக்கு கின்றாள்.

பெண்டிருள் கணவனை யிழந்தோர் படுந்துன்பமே மிகப் பெருந் துன்பம் என்பதை இராவணனின் சிற்றன்னை கும்பீநசி இராவணனை நோக்கிக் கூறும்

மக்களிழந்த இடும்பையினும் மனையாளிழந்த இடும்பையினும்
மிக்கவிடும்பை யொவ்வாத விதவை யிடும்பை'

(திக்குவிசயம்–138)

என்ற செய்யுட்பகுதியால் அறியலாம். இந்தச் செய்யுளைச் சிலப்பதி காரத்திற்குச் சிறப்பான உரைவரைந்த அடியார்க்கு நல்லார் பதிகத்தில் வரும் ஆரஞருற்ற வீரபத்தினி என்றவிடத்து ஆரஞர்-பெரியவருத்தம் ஆவது கணவனையிழத்தல்; என்ற விளக்கத் திற்கு எடுத்துக் காட்டாகக் காட்டியுள்ளமை இங்கு உளங் கொளத்தகும்.

பெண்டிர் உள்ளம் தம் கணவர், தம் கருத்தை மறுக்காமல் ஏற்றுக்கொள்ளவேண்டும் என விரும்பும் இயல்பினது என்பதைக் கணவனையிழந்த சூர்ப்பணகை புலம்பிச் சொல்லும் சொற்களால் அறியலாம்.

காதலால் என்னைக் கைப்பிடித்த வன்று முதல்
பேதையேன் சொல்லிய சொல் பிழைத்தறியாப் பேரவுண,

(திக்குவிசயம்–38)

என்பது காண்க. இதனுல், சூர்ப்பணகையை மணந்து கொண்ட வித்துருசிங்கன் சூர்ப்பணகை சொல்லிய சொல்லைத் தட்டி நடந்தறி யாதவன் என்பதும், இந்த இயல்பினுல் அவனைப் பேரவுண எனப் பெருமையோடு சூர்ப்பணகை விளித்து அழுகின்ருள் என் பதையும் காணலாம்.

இனி, பெற்ற தந்தையிருக்க மகன் இறந்த நிலையில் தந்தை மனம் நொந்து கூறுகின்ற சொற்கள் நம் உள்ளத்தை உருக்கி விடுகின்றன.

தனக்கு நோய் வேண்டாதான்
சந்ததிபெருதொழிக தளர்வுமிக்கு
மனத்துநோய்தான் பெருக
மலடனுக்கின்றியாம்படுமிம் மறுக்கமில்லை

எனக்குநீ செயவிருந்த நீர்க்கடனுனின்னிற்
பினிருந்து பிள்ளாய்
உனக்குநான் செய்வேனே செய்யேன்காண்
உனைத் தொடர்ந்து வருகின்றேனே
(சம்புவன் வதைப் -17)

என்றது காணலர்ம்.

## உத்தர காண்டத்தால் முன்னைய காண்டங்கள் விளக்கம் பெறுதல்

சூர்ப்பணகை இராமனிடம் தன்னை விவரிக்கும்போது,

'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி முப்புரங்கள் செற்ற
சேவலோன் துணைவனுன செங்கையோன் தங்கை திக்கின்
மாவெலாம் தொலைத்து வெள்ளிமலை யெடுத்துலக மூன்றின்
காவலான் பின்னை காமவல்லியாம் கன்னி யென்றாள்'
(சூர்ப்பணகைப் -39)

இந்தப் பாடலின் பொருளைச் சரியாக முறையாக விளங்கிக் கொள்ள வேண்டுமானால் உத்தரகாண்டத்தை யுணர்ந்திருக்கவேண்டும். சூர்ப்பணகை விச்சிரவசுவின் புதல்வி என்பதை விளக்கவே பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி எனத்தன் குலத்தின் கொடிவழியைக் கூறுகின்றாள். பிரமன் புதல்வன் புலத்தியன். புலத்தியன் மகன் விச்சிரவசு, விச்சிரவசுவின் மகள் சூர்ப்பணகை. என்பதுதான் பொருள். இப்பொருளை விளக்கிக்கொள்ள உத்தர காண்டத்தில் புலத்தியப்படலமும், இராவணன் பிறப்புப் படலமும் படித்திருந்தாலன்றித் தெளிவுபெறவியலாது. சேவலோன் துணை வனுன செங்கையோன் என்றது குபேரனை. இவனைப் பற்றியும் இவன் சிவன் தோழன் என்பது பற்றியும் இராவணன் பிறப்புப் படலத்தால்தான் அறியவியலும். 'திக்கின் மாவெலாந் தொலைத்து' என்புழி இராவணன் திசையானைகளை வென்றமை கூறுகின்றார். இந்த வெற்றியையும் திக்குவிசயப்படலத்தால்தான் தெரிந்து கொள்ளவியலும்.

இங்ஙனம் முன்னைய காண்டங்களுக்கும் விளக்கம் தருகின்ற இந்த உத்தர காண்டத்தை மக்கள் விரும்பிப் படிக்காதது ஏனோ? இக்காண்டத்தின் முற்பகுதி அரக்கர்களைப் பற்றியே கூறுகின்றது

என்ற வெறுப்பாலும் விரும்பாமலிருக்கலாம். உத்தர காண்டத்தைக் கம்பர் இயற்றவில்லை என்ற கருத்தாலும் இது புறக்கணிக்கப் பட்டிருக்கலாம்.

மேலும் இராமாயணத்தைப் பதிப்பித்தவர்களில் இரத்தின மய்யரும் அ. அரங்கசாமி முதலியாரும் ஏழு காண்டங்களையும் இரண்டு பகுதியாகப் பதித்துள்ளார்கள். பின்வந்த பதிப்பாசிரியர் களும் உரையாசிரியர்களும் உத்தரகாண்டத்தை ஒதுக்கியே வைத்திருந்தார்கள். அண்மையில் அச்சான மர்ரே கம்பினிப் பதிப்பும் சென்னைக் கம்பர் கழகப் பதிப்பும் உத்தர காண்டத்தை ஒதுக்கி விட்டிருப்பதைக் காணலாம். இராமாயணத்தின் ஆறு காண்டங்களுக்கும் அகலவுரை வரைந்த வை. மு. கோபால கிருஷ்ணமார்யரும் உத்தர காண்டத்திற்கு உரையெழுதாமலே விடுத்துள்ளார். இதனல் தமிழ்நாட்டில் உத்தர காண்டம் பெற வேண்டிய நன்மதிப்பைப் பெறவியலாது போயது.

பெருங்கொடை வள்ளலாகிய ராஜா சர் மு. அண்ணுமலைச் செட்டியார் அவர்கள் தம்முயிர் போல் நினைந்து அமைத்துக் காத்ததும், இப்போதுள்ள ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டு வருகின்றதும் ஆகிய அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் இந்திய அரசின் பேருதவியுடன் கம்பராமாயணம் ஆறு காண்டங்கள் நன்கு ஆராயப்பட்டு நாற்பது ஏடுகளில் கண்ட பாட பேதங்களுடனும் நல்ல உரை விளக்கங் களுடனும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இறுதிக் காண்டமாகிய உத்தர காண்டம் அமைந்த ஏடுகளும் மிகச் சிலவே; ஏழு ஏடுகளே கிடைத்தன. கிடைத்த ஏடுகளில் கண்ட பாடபேதங்களில் நல்லனவற்றைக் கொண்டு உரையெழுதியுள்ளேன். பாடபேதங் களை முன்னைய காண்டங்களில் இறுதியில் சேர்த்தது போலவே இந்தக் காண்டத்தும் பிற்சேர்க்கையாகச் சேர்த்துள்ளேன்.

உத்தர காண்டத்தில் ஒவ்வொரு படலத்திற்கு முன்னும் விளக்கமான முன்னுரை யெழுதப்பட்டுள்ளது. 1. படலப் பொருட் சுருக்கம் 2. வான்மீகத்தோடு ஒட்டக்கூத்தர் வேறுபடும் இடங்கள் 3. படலப் பொருட்சிறப்பு என்ற மூவகையான முன்னுரை அமைந்

துள்ளது. இம் முன்னுரையைப் படித்துவிட்டால் படலத்தில் திரண்ட கருத்தும் நுட்பங்களும் படிப்போர்க்கு எளிதாகத் தெளிவாகும் என்ற நம்பிக்கையுடையேன்.

நூலின் ஒவ்வொரு பாடலுக்கும் தெளிவான பொழிப்புரையும் இலக்கணக் குறிப்பும் சங்க நூல், திருக்குறள், முதலிய நூல்களிலிருந்து காட்டிய உதாரணங்களும் வினைமுடிபுகளும் சொல்லின் திறத்தால் பெறப்படும் நயங்களும் அணிகளும் அருஞ்சொல்பொருள் விளக்கமும் எழுதப்பட்டுள்ளன.

இதுகாறும் உரையெழுதப் படாத உத்தர காண்டத்திற்கு உரை எழுதும்போது இடர்ப்பாடுகள் உளவாதலும் பின்பு திருவருள் நினைவால் தெளிவுபெறுதலும் சிற்றறிவுடைய என்மாட்டு நிகழ்தல் இயல்பேயாம் என் உரையில் குறைபாடுகள் இருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அறிஞருலகம் அக்குறைபாடுகளைப் பொறுத்தருள வேண்டும் என்பது என் பணிவான வேண்டுகோளாகும். உத்தர காண்டத்திற்கு உரையெழுதும் இந்தப் பெரும்பணியை எளியனாகிய என்னைக்கொண்டு முற்றுவித்த திருவருளை நினைந்து பணிகின்றேன்.

உத்தரகாண்டம் அச்சாகுங்கால் எனக்கு உறுதுணையாக இருந்து உதவிய பிரம்மஸ்ரீ வித்துவான் சிரோமணி பி.எஸ். இராமானுஜாச்சாரியார் அவர்களுக்கும், புலவர் திரு க. இராமச்சந்திரன் அவர்கட்கும், ஆராய்ச்சி மாணவர் திரு. பெ. லட்சுமிநாராயணன் எம்.ஏ. அவர்கட்கும் என் நன்றியுரியதாகும்.

இராமாயணத்தின் ஏழாவது காண்டமாகிய இவ்வுத்தர காண்டம் உரையுடன் வெளியிடுவது இன்றியமையாதது என உறுதியுடன் இருந்து எனக்கு ஊக்கம் கொடுத்துவேண்டிய உதவிகளை அவ்வப்போது செய்து வந்த என் கெழுதகை நண்பர் தமிழ்த் துறைத்தலைவர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் எம். ஏ., பிஎச்.டி. அவர்கட்கு என் உளமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

என்பால் பேரன்புடையவரும் இப்போது தமிழ்த்துறைத் தலைவராய் விளங்குபவரும் ஆகிய திருமுறைக் கலைஞர் வித்துவான்

க. வெள்ளைவாரணனார் அவர்கட்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

பல்கலைக் கழக மானியக் குழுவின் பணியை யான் பெறுமாறு செய்த என்கெழுதகை நண்பர் காலஞ்சென்ற திரு. டாக்டர் மு. வரதராசனார் எம்.ஏ., பிஎச்.டி. அவர்களை நினைவில் வைத்து இறைஞ்சுகின்றேன்.

இப்பணியை யான் தொடங்குங்கால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தராய் இருந்த திரு.டாக்டர் ஆதிநாராயணன் எம்.ஏ., பிஎச்.டி. அவர்கட்கும், பின்பு வந்து துணைவேந்தராய்த் திகழ்கின்ற திரு டாக்டர் S. சந்திரசேகரன், M.A., Ph.D., D.Sc., D,Litt., M.D., D.H.L., LL. D. அவர்கட்கும் இந்நூலுக்கு அணிந்துரை தந்து உதவிய பேராசிரியர் நிகழ்நிலைத் துணைவேந்தராய்த் தமிழ்க்கு ஏற்றமளித்துவரும் முத்தமிழ்வித்தகர் பண்டிதமணி வித்துவான் பண்டித திரு. லெ. ப கரு. இராமநாதன் செட்டியார் அவர்கட்கும் என் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

என்னைத் தமிழ்ப் புலவனாய் உருவாக்கி இப்பல்கலைக்கழகத்தே பணிபுரியும் வாய்ப்பைக் கொடுத்து என்னை வளர்த்துவரும் ராஜா சர் மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்கட்கும் அவர்தம் தவப் புதல்வர் ராஜா சர். முத்தையா செட்டியார் எம்.ஏ. அவர்கட்கும் அவர்கள் குடும்பத்திற்கும் என்றென்றும் நன்றியுடையேன்.

இத்தெய்வத் தமிழ்ப்பணியை யான் செய்யத் தகுதியுடையோனாகச் செய்த ஆசிரியத் தெய்வங்களை என்றும் மறவேன்.

இந்தத் தமிழ்ப்பணியைச் செய்ய உதவி செய்து வருகின்ற இந்தியப் பல்கலைக்கழக மானியக் குழுவினுக்கு என்றும் மறவாத நன்றியுடையேன்.

இந்த உத்தரகாண்டத்தின் முதற்பகுதியை நன்கு அச்சடித்துத் தந்த சிவகாமி அச்சகத்தார்க்கு நன்றி.

**செ. வேங்கடராமச் செட்டியார்.**

# பொருளடக்கம்

# இராமாயணம்

## (ஏழாவது உத்தர காண்டம்)

## திருவோலக்கப் படலம்

### முன்னுரை

உத்தர காண்டத்தில் முதற்படலமாகிய திருவோலக்கப் படலம் என்பது இராமபிரான் அரசவையில் வீற்றிருந்த நிலையைப் புலப்படுத்துவது என்ற காரணம் பற்றி வந்தபெயர். இம்முதற் படலம், சில ஏடுகளில் குபேரன் பிறப்புப் படலம் எனவும், வைசிரவணப்படலம் எனவும் இலங்கையழித்த படலம் எனவும் பெயர்பெற்று விளங்குகின்றது. அது பின்வரும் படலங்களையும் சேர்த்து ஒன்ருக்கினமையால் வந்த பெயராக இருக்கலாம். திருவோலக்கம் அரசவை.

### படலப் பொருட் சுருக்கம்

இராமபிரான் இராவண வதத்திற்குப்பின் அயோத்திக்கு மீண்டு மணிமகுடம்பூண்டு மண்ணவர் வணங்க, விண்ணவர் வாழ ஒற்றைவெண் கொற்றக்குடை நீழலில் கருஞாயிறு எனக் கவின்மிக வீற்றிருந்தபோது ஒருநாள் கடலைப்பருகிய பெருமை யுடைய அகத்திய முனிவனும், சமதக்கினி முனிவனும் பரத்துவாச முனிவனும் வசிட்ட முனிவனும் கௌதம முனிவனும் கௌசிக முனிவனும் காசிப முனிவனும் அத்திரி முனிவனும் தௌமிய முனிவனும் சுகத்தி முனிவனும் சேர்ந்து இராமபிரானைக் காண வருகின்ருர்கள்.

முனிவர்களின் வருகையைக் கண்ட இராமபிரான் இருக்கை யினின்றும் எழுந்து மகிழ்ந்து அவர்கள் திருவடிகளில் முடியுற வணங்கி வரவேற்றுத் தக்க பொன் ஆசனங்களில் இருக்கச் செய் கின்ருன். பின் முனிவர்களை நோக்கி நும் அருந்தவத்திற்கு இடையூறு இல்லையே? உங்களைச் சார்ந்தவர்கள் யாவரும் துன்பமின்றி வாழ்

கின்றூர்களன்றே? என வினவுகின்றுன். முனிவர்கள் மகிழ்ந்து இராவணன் முதலிய கொடிய அரக்கர்களையெல்லாம் அழித்த தூய வில்லி நீயிருக்கத் துயரம் உண்டோ எமக்கு என்கின்றூர்கள். மேலும் யாவராலும் வெல்லுதற்கரிய மாயைவல்ல இந்திரசித்தின் தலையைக் கொய்தவன் இருக்க எமக்குப் பயம் உண்டோ? எனச் சிறப்பாகப் புகழ்கின்றூர்கள்.

அதுகேட்ட இராமன், மலைபோன்ற தோள்களையுடைய கும்ப கன்னன் போன்றேர் வென்றியைக் கூருது இந்திரசித்தின் வீரத்தையே மிகுதியாகப் புகழக் காரணம் என்ன? அவன் பெற்றிருந்த வரமும் வலிவும் யாவை? இரக்கமில்லா அரக்கர்களின் பிறப்பும் செயலும் விரிவாகச் சொல்லுங்கள் எனக் கேட்டுக் கொள்ளக் கடலேழினையும் கையால் முகந்து குடித்த அகத்திய முனிவன் சொல்லத் தொடங்குகின்றுன் என்பது இப்படலச் சுருக்கமாகும்.

## வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

திருவோலக்கப்படலத்தில் கூறப்படும் செய்திகளில்வான்மீகத்திற்கும் இந்நூற்கும் வேறுபாடு பெரிதும் இல்லை.

## படலப் பொருட் சிறப்பு

இப்படலத்தில் இராமபிரான் அரியணையில் வீற்றிருக்கும் காட்சி அழகுற வருணிக்கப்படுகின்றது. பகைவரின் கூட்டத்தை அழித்துவிட்டுக் குளிர்ச்சி மிக்க தருமம் தழைக்கவேண்டி, ஒப்பற்ற காவல் தொழிலை மேற்கொண்டு மண்ணவர் வணங்க, விண்ணவர் வாழ வெண்மதி போன்ற ஒற்றை வெண்கொற்றக் குடை நீழல் செய்ய இராமன் அரியணையில் வீற்றிருக்கிறுன். அவன் கண்களும் கால்களும் கைகளும் சிவந்த தாமரை மலர்களின் காட்டினை நமக்கு நினைவுபடுத்திக் காட்டுகின்றன. அவன் திருமேனி திண்ணிய மலைபோலத் திகழ்கின்றது. அவன்மீது தண்ணிய மெல்லிய காற்றுத் தடவுமாறு அணிகலன் அணிந்த பெரிய கொங்கைகளையுடைய மெல்லியலார் வெண்சாமரை வீசுகின்றூர்கள்; வேதியர்கள் வேத மந்திரங்களைச் சொல்லி ஆசி கூறுகின்றூர்கள்.

கரியமேனியனாகிய அவன் தலையில் அணிந்து கொண்டுள்ள மணிமகுடத்தின் தோற்றம், கரிய மலைமேல் கதிரவன் உதயமாகும் காட்சியைக் காட்டுகின்றது. அவன் அழகு மிக்க திருமேனியில் கச்சணிந்த கொங்கை மாதரின் வாள் போன்ற கண்கள் வந்து மொய்க்கின்றன. அதனால், அவன் மேனி ஆயிரங்கண்களையுடைய இந்திரன் மேனியைப் போன்று தோன்றுகின்றது. அவன் மார்பில் முத்துக்களாலியன்ற சன்னவிரம் என்னும் அணி நிலவை வீசிக் கொண்டிருக்கின்றது. அந்த நிலவொளியை ஓட்டி விட்டு அவன் மார்பில் அணிந்த செம்மணிமாலை செவ்வொளிவீசிக் கொண்டிருக்கின்றது. கார்போன்ற அவன் மேனி இப்போது கரு ஞாயிறு போன்று எழிற் காட்சி தருகின்றது. பெருமை பொருந்திய வாகு வலயம் அணிந்த அவன் தடந்தோள்கள் வர்சுகி என்னும் கடை கயிற்றால் சுற்றப்பட்ட மந்தர மலை போலக் காணப்படுகின்றது. அவன் இடையில் உடுத்துள்ள பொன்னிற ஆடை, பாம்பு உமிழ்ந்த மாணிக்க மணிகளாலாய பல தலைகளையுடைய கோவை கோக்கப் பெற்றுப் பொலிவுடன் விளங்குகிறது. முடிமன்னர்கள் வந்து அடி பணிந்து ஏவல்கேட்க அவன் வீற்றிருக்கும் தோற்றம், முனிவர் குழாத்துடன் முப்பத்து மூன்றுகோடி தேவர்களும் திருப்பாற்கடலை அடைந்து 'எம்மைக் காப்பாயாக' என்று போற்றக் கண் துயில் நீங்கி இன்பமுற வீற்றிருக்கும் தன்மையை ஒத்து விளங்குகின்றது என்ற கருத்துக்கள் இப்படலத்துக் குறிப்பிடத்தக்க சிறப்புடையன வாகும்.

## திருவோலக்கப்படலம்

### பாயிரம்

### கடவுள் வணக்கம்

1. வெள்ளியங் கிரியை மீதே
    வேரொடு மெடுத்த வீரக்
கள்ளவன் புயநா லைந்துங்
    கனகமா மவுலி பத்தும்

துள்ளியம் புவிமேல் வீழ
வொருகணை தொடுத்து விட்ட
வள்ளலம் புயமே யன்ன
மலரடி வணக்கஞ் செய்வாம்.

**வெள்ளியங்கிரியை மீதே வேரொடும் எடுத்த வீரக்
கள்ள வன்புயம் நால்ஐந்தும், கனகமா மவுலி பத்தும்,
துள்ளி அம்புவிமேல் வீழ' ஒருகணை தொடுத்து விட்ட
வள்ளல் அம்புயமே அன்ன மலரடி வணக்கஞ் செய்வாம்.**

பொ: [சிவபிரான் அமர்ந்துள்ள] வெள்ளிமலையை வேரோடும் தரைக்குமேல் வரப்பறித்து எடுத்த வீரமும், சீதையைக் கவர்ந்த கள்ளமும் உடைய இராவணன் வலிய தோள்கள் இருபதும், பொன்னுலியன்ற சிறந்த முடியணிந்த தலைகள் பத்தும் அழகிய தரைமேல் துடித்து விழும்படி ஓர்அம்பினை வில்லில் தொடுத்து விட்ட வள்ளலாகிய இராமனது தாமரை மலர்களையே ஒத்த திருவடிகட்கு யாம் வணக்கம் செய்வோமாக.

கு: யாம் வணக்கம் செய்வோம், என எழுவாய் வருவிக்க. தாம் எடுத்துக்கொண்ட உத்தரகாண்டம் இனிது முடிதற்பொருட்டு இராமனுகிய கடவுளை வணங்கியவாறு. இவ்வணக்கத்து, யுத்த காண்டத்தின் நிகழ்ச்சியையும் தொடர்புபடுத்தி, எதிரிலா வலிமை பெற்றிருந்த இராவணனை வென்ற வீரனே இந்தக் காண்டத்தைச் செய்யுங்கால் வரும் இடையூற்றைப் போக்கியருளும் தகுதி யுடையவனுதலின் அவனையே வணங்குவோம் என்பது புலப் படுத்தியவாறு.

வெள்ளியங்கிரி என்றது சிவபிரான் அமர்ந்துள்ள கயிலாய மலையை. வேரொடும் மீதே எடுத்த என்க. மரம் முதலியவற்றிற்குத் தரைக்குக் கீழ் வேர் இருப்பதுபோல, மலைக்கும் வேர் உண்டா தலின் அவ்வேரோடும் பறித்துத் தரைக்குமேல் எடுத்தான் என அவ்விராவணன் புயவலியைப் புலப்படுத்தியவாறு. 'ஈசனுண்டி ருந்த பேரிலங்கு மால்வரை, ஊசிவேரொடும் பறித்து எடுக்கும்

ஊற்றத்தான்' [சடாயுவுயிர்நீத்த-42] என முன் குறிப்பிட்டிருத்தலும் நினைக. இராவணன் தோள்கள் வெள்ளிமலையை அள்ளியெடுத்த வீரமுடைய வாயினும் உலக நாயகன் தேவியாகிய சீதையைக் கவர்ந்த கள்ளமுடையவாதல் புலப்படுத்தி, வள்ளலின் ஒருகணையால் அவை வீழ்தற்கேற்ற தவறுடைமை காட்டியவாறு. மாரீசனாகிய மாயமான் காட்டி இராமனைப் பிரித்து அவன் கற்புடைமனையாளைக் கவர்ந்தமை கள்ளமாதல் தெளிவு. சீதையைக் கவர்ந்த செயல் தோள்களின் செயலாதலறிக. தன்மனையாளை வஞ்சித்துக் கவர்ந்த குற்றத்திற்குத் தண்டனையாகவே இராமன் இராவணனுடைய இருபது கரங்களையும் பத்துச் சிரங்களையும் ஓரம்பால் கொய்து தரையில்வீழ்த்தினன் என்றவாறு. ஓரம்போ வுயிர்பருகிற்றி ராவணனை, [இராவணன் வதை-240] என ஓரம்பால் இராவணனுடைய உயிரைப் பருகினமை முன்னும் கூறியிருத்தல் காணலாம். இராவணன் செய்த தீவினைக்குத் தண்டனை கொடுத்து அவனைத் தூயனாக்கியது இராமனுடைய வள்ளல் தன்மையே என்பார், ஒருகணை தொடுத்துவிட்ட வள்ளல் என்றார். இனி இராவணன் மேலும் உயிர் வாழ்வானாயின் பிறர்மனை நயத்தலாய பெரும் பாவத்தைப் பெருக்கிக் கொண்டே சென்று மீளா நரகத்து ஆழ்வான் என்பது திண்ணம் ஆதலின், அவன் அவ்வாறு கொடு நரகத்து வீழ்ந்து ஆழாமல் அவனுடலிலிருந்து உயிரைப் பிரித்துக் காப்பாற்றிய அருட்செயலை நினைந்து 'வள்ளல்' என்றார் எனக் கொள்ளலும் ஆம்.

வீரப்புயம், கள்ளப்புயம், வன்புயம் எனப் புயத்திற்கு அடையாக்குக. துள்ளி வீழ்தலாவது அம்பால் அறுப்புண்டு துடி துடித்து வீழ்தல். அம்புய மலரேயன்ன அடி, என மாறுக. பிரிநிலை ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. கொடியாரை ஒறுத்தற்குரிய இராமபிரான் கைகள் வலிய வாயினும், சார்ந்தாரைக் காக்கும் அவன் திருவடிகள் தாமரை புரையும் காமர் சேவடியாய் மென்மையும் வனப்பும் வாய்ந்தனவே என்பது புலப்படுத்தியவாறு. இதனால் இராமபிரானின் திருவடிகளின் சிறப்புப் புலனாம். இப் பெரியோனின் திருவடி வணங்கவே யாம் எடுத்துக் கொண்ட நூல் இனிது முடியும் என்பது எச்சமாக வருவிக்கப்படும். (சு)

## மெய்ப்பொருள் வணக்கம்

2. ஒன்றாய்ப் பலவா யுளவா
யிலவா யுரைப்போர்க்
கன்றாகி யாமா யருவா
யுருவாகி மெய்ம்மை
குன்றாத ஞானக் கொழுந்தாய்க்
குணமூன் றிறந்து
நின்றானி யாவ னவனீள்கழ
னெஞ்சில் வைப்பாம்.

**ஒன்றாய்ப் பலவாய் உளவாய் இலவாய் உரைப்போர்க்கு**
**அன்றாகி ஆமாய் அருவாய் உருவாகி மெய்ம்மை**
**குன்றாத ஞானக் கொழுந்தாய் குணம் மூன்று இறந்து**
**நின்றான் யாவன்? அவன் நீள்கழல் நெஞ்சில் வைப்பாம்.**

**பொ :** மூலத்துப் பரம்பொருள் என்கின்ற ஒரு பொருளாகியும் உலகப் பொருள் பலவற்றுள்ளும் கலந்திருப்பதால் அப் பல பொருள்களாகியும் உயிர்களின் காட்சிக்கு எட்டும் உள்பொருளாகியும் காணப்படாத இல்பொருளாகியும் நீ இறைவன் அன்று என்று சொல்லுவோர்க்கு அன்றாகியும் இறைவனே ஆம் என்பார்க்கு ஆம் என்று உடன்படும் பொருளாகியும் உயிர்தொறும் ஒளித்திருக்கும் அருவப்பொருளாயும், எல்லாரும் காணும் அர்ச்சையாதி உருவங்களாகியும், உண்மைத்தன்மை குறையாத ஞானக் கொழுந்தாகியும் சத்துவம், இராசதம், தாமதம் என்கின்ற குணங்கள் மூன்றையும் கடந்து நின்றவன் எவனோ அவனுடைய நீளும் திருவடிகளை நம் நெஞ்சில் நிலைத்திட வைப்போமாக.

**கு :** ஒன்றோடு ஒன்று ஒவ்வாத பல வியல்புகளையுடைய திருமாலின் திருவடிகளைச் சிந்திப்போமாக என்று கவி மெய்ப்பொருள் வணக்கத்தைக் கூறியவாறு. ஆய் ஆகி என்ற வினையெச்சங்கள், நின்றான் என்ற வினையைக்கொண்டு முடிந்தன.

'ஞானக்கொழுந்தாய் நின்ருன்' எனவும் குணம் மூன்று இறந்து நின்ருன் எனவும் தனித்தனி இயையும். இறத்தல் கடந்து நிற்றல். 'ஒன்ருகி மூலத்துருவம் பலவாகி' (ஆரணிய - சரபங்கன் பிறப்பு நீங்கு-30) எனவும், 'அல்லை யிறைவனி ஆதி எனப் பேதுற்று' (ஆரணிய - சரபங்கன் பிறப்பு நீங்கு-31) எனவும் முன்னும் இறைவன் இயல்பு கூறப்பட்டிருத்தல் காணலாம். இறைவன் முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவன் என்பார் 'குணமூன்றும் இறந்து நின்ருன்' என்ருர். நினைப்பவர் நினைப்பிற்கு ஏற்ப நீண்டு சென்று காக்கும் இயல்பு தோன்ற 'நீள்கழல்' என்று சிறப்பித்தார். கழல் என்பது தானி ஆகுபெயராய்க் கழலையணிந்த திருவடியை யுணர்த்தியது. தேவரைக் காத்தற்பொருட்டு வாமனனுய் மாவலிபால் சென்று தானம்பெற்று உலகளக்க நீண்ட கழலாகிய தன்மையை நினைந்து இங்ஙனம் கூறினுர் எனலும் ஆம். நீள்கழல் நெஞ்சில் வைக்கவே நாம் நினைத்தனவெல்லாம் எளிதில் முடியும் என்பது குறிப்பு. (உ)

## அவையடக்கம்

3. புன்சொற்க ளேனும் புதல்வன்
குதலைச்சொ றந்தை
யின்சொற்க ளாகக் கொளலால்
முனியீங் குரைத்த
தென்சொற் றமிழும் வடசொற்
றுறையுந் தெரிந்தோர்
என்சொற்கள் பொல்லா தெனினு
மிகழார்க ளன்றே.

**புன் சொற்களேனும், புதல்வன் குதலைச்சொல் தந்தை,**
**இன் சொற்களாகக் கொளலால், முனி ஈங்கு உரைத்த**
**தென் சொல் தமிழும் வடசொல் துறையும் தெரிந்தோர்,**
**என்சொற்கள் பொல்லாது எனினும் இகழார்கள் அன்றே.**

**பொ :** தன் புதல்வன் சொல்லும் குதலைச் சொற்கள் புன் சொற்களாயிருப்பினும் அச்சொற்களைக் கேட்ட தந்தை இனிய

சொற்களாகக் கொண்டு மகிழ்தல் உலகியல் ஆதலால், அகத்திய முனிவர் இங்குச் சொன்ன தென்னாட்டுக்குரிய சொல்லாகிய தமிழ் மொழியையும் வடமொழியின் துறைகளையும் தெரிந்த புலவர்கள், (யான்கூறும் உத்தரகாண்டத்தில் உள்ள) என் சொற்கள் பொல்லாதனவாயிருப்பினும் இகழமாட்டார்கள்; நல்லனவாகக்கொண்டு புகழ்ந்து பாராட்டுவார்கள்.

கு: குதலை–மழலை. எழுத்து நிரம்பாத மொழி மழலை எனப்படும். இது பெற்றோர்க்கினிதாதலை: ''குழலினிது யாழினி தென்ப தம்மக்கள் மழலைச்சொற் கேளாதவர்'' (திருக்குறள் 66) என்றதால் தெளியலாம். புதல்வன் குதலைச் சொல் புன்சொற்களேனும் என மாறுக. புன்மையாவது, எழுத்து நிரம்பாமை: பாலைப் பாச்சி என்றும், சோற்றினைச் சோச்சி என்றும் குழந்தைப் பருவத்தோர் கூறும் புன்சொற்களைக் கேட்ட பெற்றோர் அவற்றை இன்சொற்களாகவே கொண்டு மகிழ்தல் இயல்பு. தென்தமிழும் வடமொழியும் உணர்ந்த புலவர்கள் என் தந்தை போன்ற பேரன்பினர் ஆகலின், யான் கூறும் சொற்களின் புன்மை நோக்கி இகழாது இராமசரிதம் கூறும் என் அன்பினையே நோக்கிப் புகழ்வார்கள் என்றபடி. இகழார்கள் என்று எடுத்தமொழி, புகழ்வார்கள் என்று இனம் செப்பியவாறு காண்க. இது 'அருத்தாபத்தி' எனப்படும். முனி என்றது அகத்திய முனிவரை. வடமொழியில் கூறப்படும் கலைகள் பல திறத்தனவாதல் புலப்படுத்தி அத்துறைகள் பலவற்றினும் கைதேர்ந்த புலவர்கள் என அவர் புலமை மிகுதி புலப்படுத்தியவாறு. என் சொற்கள் பொல்லாது, என்பது கவிஞரின் அவையடக்கம்; எனினும் இகழார்கள் என்றது அவையோரின் பெருமை புலப்படுத்தியது. அன்று, ஏ அசைநிலைகள். (௩)

## நூலின் சிறப்பு

4. இதுக்குத் தரமில்லை யிராம
கதைப் பரப்பை
நதிக்குத் தரமன்னதை நன்னெறி
யுய்ப்ப தொன்றை

அதுக்கும் தரமில்லதை யாய்பொரு
ளாய வாய
மதிக்குந் தரமுள்ளதை வாக்கினிற்
கூற லுற்றேன்.

**இதுக்குத் தரமில்லை, இராம கதைப் பரப்பை**
**நதிக்கு உத்தரம் அன்னதை, நல்நெறி உய்ப்பது ஒன்றை,**
**அதுக்கும் தரம் இல்லதை, ஆய்பொருள் ஆய ஆய,**
**மதிக்கும் தரம் உள்ளதை, வாக்கினில் கூறல் உற்றேன்.**

**பொ :** இராமபிரானைப் பற்றிய கதையின் பரப்பினை, ஆறுகட்கெல்லாம் தலையாய வடக்கே யோடும் கங்கையாற்றைப் போன்ற தூய்மையுடையதை (படித்தோரையும் கேட்போரையும்) முத்தி நெறியில் செலுத்தவல்ல ஒன்றினை, யாரும் இகழ்ந்து சொல்லும் தன்மை இல்லாததை, அழகிய பொருளை ஆராய ஆராய உள்ளத்தால் மதிக்கத்தக்க தகுதியுள்ள இக்காண்டத்தை யான் வாக்கினுல் சொல்லத் தொடங்கினேன்; இச்செயலுக்கு மேலான செயல் ஏதும் இல்லை.

**கு :** கவி, தான் எடுத்துக்கொண்ட நூலின் பெருமையை நுவல்வது இச்செய்யுள். கதைப்பரப்பை, அன்னதை, உய்ப்பதொன்றை, தரமல்லதை, மதிக்குந்தர முள்ளதை, என்பன ஒரு பொருள் பல பெயர்; இரண்டனுருபேற்று வந்தவை. உத்தர காண்டத்தின் சிறப்பை ஐந்து வகையால் புலப்படுத்தியவாறு. இராமனைத் தலைவனுகக் கொண்டபெருமை, கங்கை போன்று பாவங்களைக் களையும் தூய்மை, முத்திநெறியுய்க்கும் உயர்வு, யாரும் இகழமுடியாத புகழுடைமை, ஆயுந்தொறும் மதிக்கத்தக்க தகுதியுடைமை என்ற ஐந்து சிறப்புக்களும் இக்காண்டத்துள்ளனவாதலின் இதை வாக்கினுல் சொல்லும் இச்செயலுக்கு மேலான செயல் இல்லை எனத் தன் செயலின் உயர்வைப் புலப்படுத்தியவாறு. இது பூட்டுவிற் பொருள்கோள். 'கூறலுற்றேன், இதுக்குத் தரமில்லை, என எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள் பொருள் நோக்குடையதாதல் காணலாம். தரம்-மேன்மை, தகுதி, தன்மை

என்ற பல பொருள்கொண்ட ஒருசொல். நதிக்கு உத்தரம் அன்னதை என்புழி உத்தரம்-வடக்கு; அது இடவாகு பெயராய் வடக்கேயோடும் கங்கை யாற்றிஜனயுணர்த்தியது. நதிகளில் கங்கை யுயர்ந்ததாதல் தெளிவு. அதுக்குதல் – இகழ்ச்சிக் குறிப்புத்தோன்ற வாயை அழுத்துதல். அது இங்கு இகழ்ந்து சொல்லுதஜல யுணர்த்தியது. ஆய்பொருள் – அழகிய பொருள். மனத்தால் நிஜனந்து மதிக்கத்தக்க தொன்றை வாயினுல் சொல்லுதல் அரிது என்பது புலப்படுத்த 'வாக்கினில் கூறலுற்றேன்' என்ருர். உத்தரம் – மேலானது (ச)

முதல்நூல் இதுவெனல்

5. கால்காட்ட வேகுநெறி கண்ணுடை
யோர்கண் முன்னே
கோல்காட்ட மெல்லக் குருடற்கு
நடக்க லாமால்
பால்காட்டு மின்சொல்முனி பாவழி
காட்ட வேத
நூல்காட் டிராமன் கதைமேற்றமிழ்
நூற்க லுற்றேன்.

கால்காட்ட ஏகும்நெறி கண்ணுடையோர்கள் முன்னே
கோல்காட்ட, மெல்லக் குருடற்கும் நடக்கல் ஆம்ஆல்;
பால்காட்டும் இன்சொல்முனி பாவழி காட்ட வேத
நூல்காட்டு இராமன் கதைமேல் தமிழ் நூற்கல் உற்றேன்.

பொ: செல்லும் வழி இதுவென்று தம்காலே காட்டுதலாலும், கண்ணுடையவர்கள் முன்னே கோல் பிடித்துக் காட்டுதலாலும், குருடனுக்கும் மெல்ல நடத்தல் இயலும். அதுபோல, பாலின் சுவையைப் புலப்படுத்துகின்ற இனிய சொல்ஜலயுடையவான்மீகி முனிவரின் காப்பியம் வழிகாட்ட வேதநூலின் நெறியைத் தன் செயலால் ஒழுகிக் காட்டிய இராமனுடைய கதைமேல் தமிழ் நூலாகிய இதஜனச் செய்யத் தொடங்கினேன்.

கு: வழிகாட்டுதற்குரிய கண்கள் குருடாகிய வழியும் நடந்து பழகிய வழியில் அக்குருடன் காலே பழக்கத்தால் வழிகாட்டுதலாலும், கண்ணுடையோர் அக்குருடன் கையில் கோலைக்கொடுத்து முன்னே பிடித்துச் செல்லுதலாலும் அக்குருடன் மெல்ல நடக்க இயலுகின்றது. அதுபோல, வான்மீக முனியின் இராமகாவியம் எனக்கு முன்னே வழிகாட்ட, யான் இராமன் கதைமேல் தமிழில் இராமாயணத்தை இயற்றத் தொடங்கினேன்; என்றவாறு. இது எடுத்துக் காட்டுவமை. தன் நூலுக்கு வான்மீகியின் இராமாயணம் வழிகாட்டிற்று என்பதைக் கவி இதனால் விளக்கியவாறு. முனி என்றது வடமொழியில் முதனூலாகிய வான்மீக ராமாயணத்தையியற்றிய வான்மீகி முனிவரை. பா என்றது வடமொழியில் உள்ள இராமாயணம் என்ற காப்பியத்தை. தமிழ் நூற்கலுற்றேன் என்றமையால் முனி பா என்றது வடமொழிக் காப்பியத்தையே என்பது புலனாகும். வேதநூல்காட்டி ராமன் என்றது வேத நெறிப்படி நடந்து காட்டிய இராமன் என்றவாறு. 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீண் மறைகள் உன் செய்கை யன்னவை தாம் சொன்ன வொழுக்கினவோ' (கவந்தப்-49) என்று இராமனது ஒழுக்கம் பற்றிப் புகழ்ந்துள்ளமை நினையலாம். உவமையில் கூறிய கால்காட்ட ஏகு நெறி என்பதற்கேற்பப் பொருளிலும் வேதநூல் காட்டி ராமன்றன் திருவடி வழிகாட்டியதாகக் கொள்ளலும் ஆம். கண்ணுடையோர் முன்னேகோல் காட்டுவது போன்று வான்மீகியின் காவியம் வழிகாட்டிற்று. ஏகும் நெறி கால்காட்டுவதுபோல, இராமன் திருவடி வழிகாட்டியது என்க. இது குறிப்பால் புலப்படும் பொருள்: நூற்கல் – நூலைச் செய்தல். (ரு)

## இராமன் அரசிருக்கைத் திறம் 6–12

6. **கண்ணு ருலகிற் கருதார்குலக்**
**கட்டை வாங்கித்**
**தண்ணர் தருமந் தழைக்கத்**
**தனிக்காவல் பூண்டு**

மண்ணோர் வணங்க மதிவெண்குடை
மேனி ழற்ற
விண்ணோர் குலம்வாழ விராகவன்
வீற்றி ருந்தான்.

கண்ணார் உலகில் கருதார்குலக் கட்டை வாங்கித்
தண்ணார் தருமம் தழைக்கத் தனிக்காவல் பூண்டு
மண்ணோர் வணங்க மதிவெண்குடை மேல் நிழற்ற
விண்ணோர் குலம் வாழ, இராகவன் வீற்றிருந்தான்.

பொ: கண்ணிற்கு நிறைந்து காணப்படும் இவ்வுலகில் பகைவர் குலத்தின் திரளை யெல்லாம் அழித்து நீக்கிக் குளிர்ச்சி பொருந்திய அறம் தழைத்தோங்க ஒப்பற்ற அரசு காவலை மேற் கொண்டு, மண்ணுலகத்தார் தன்னை வணங்கவும், சந்திரனைப் போன்ற வெண்குடை மேலே நிழல் செய்யவும். விண்ணுலகத் தோர் குலம் வாழவும் இராமன் அரசு வீற்றிருந்தான்.

கு: காண்டற்குரிய இவ்வுலகைக் கண்ணார் உலகம் என்றார். அவ்வமரர் உலகம் போல ஆகம அளவையால் அறிதற்குரியதன்று என்றவாறு. கண்ணுக்கு நிறைந்த கவினுடைய உலகம் எனினும் ஆம். கருதார்–பகைவர்; நண்பராகக் கருதாதவர் என்பது கருத்து. கட்டு என்றது, திரள்; கூட்டம் என்னும் பொருளது. யுத்தகாண்ட நிகழ்ச்சியைத் தொடர்புபடுத்த வேண்டி இராவணாதி யராகிய பகைவரை யழித்தமை முதற்கண் கூறியவாறு. வாங்கு தல் இங்கு அழித்தலை உணர்த்தியது. குளிர்ந்த அன்புள்ளத்தால் செய்யப்படுவதாகலின் தருமம் தண்ணார் தருமம்' எனச் சிறப்பிக் கப்பட்டது. வாங்கி, பூண்டு என்ற செய்து என் வாய்பாட்டு வினையெச்சங்கள் வீற்றிருந்தான் என்ற தன் வினைமுதல் வினை கொண்டு முடிந்தன. தழைக்க என்ற செயவெனெச்சம் காவல் பூணுதற்கு அடையாய் இடைநின்றது. வணங்க, நிழற்ற, வாழ வீற்றிருந்தான் என இயையும். இராகவன் அரசு மேற்கொண்ட நிலையில் மண்ணோர் வணங்குதலும் குடை நிழற்றலும் நிகழ்ந்தன. மண்ணோர் என்றது மண்ணுலகம் காவல் பூண்ட பிற அரசர்களை.

இராமன் ஆட்சியில் வேதவேள்விகள் தடையின்றி நடைபெறுதலின் அவியுணவால் குறைவின்றித் தேவர்குலம் மகிழ்ந்து வாழ்ந்தது என்க. மேலும் தேவர்களை வருத்தும் அரக்கர் குலம் இராமனால் அழிவுபட்டமையால் விண்ணோர் குலம் துன்பமின்றி வாழ்ந்தது எனலும் ஆம். வீறு, பிறிதொன்றற்கில்லாத சிறப்பு. வீற்றிருத்தல் மற்றவர்களினும் சிறக்க இருத்தல். (சு)

### சாமரை வீசுதல்

7. கண்கால் கரஞ்செங் கமலத்தட ங்
காடு காட்டத்
திண்கால் வரைபோற் றிருமேனி
திகழ்ந்து காட்டத்
தண்கா றடவத் தடம்பூண்
முலைத்தைய லார்கள்
வெண்சா மரைவீசிட வேதிய
ராசி கூற.

**கண்கால் கரம் செங்கமலத் தடங்காடு காட்ட**
**திண்கால் வரைபோல் திருமேனி திகழ்ந்து காட்ட**
**தண்கால் தடவ, தடம்பூண் முலைத் தையலார்கள்**
**வெண்சாமரை வீசிட, வேதியர் ஆசிகூற.**

**பொ :** கண்ணும் காலும் கையும் சிவந்த தாமரை மலர்களாலியன்ற காட்டின் தன்மையைக் காட்டா நிற்க, திண்ணிய அடிப்பாகத்தையுடைய மலையைப் போன்று திருமேனி விளங்கிக் காட்டா நிற்க, அம்மேனியில் குளிர்ந்த மென்காற்றுத் தடவி இன்புறுத்துமாறு, பெரிய அணிகலன்களையணிந்த நகில்களையுடைய இளம்பெண்டிர் வெண்கவரி வீசா நிற்க, அந்தணர் ஆசி கூறா நிற்க.

**கு :** குளகம், மேலைச் செய்யுளில் 'வீற்றிருந்தான்' என்ற வினையோடு இயைந்து முடியும். காட்ட, காட்ட, தடவ, வீசிட, கூற

விற்றிருந்தான் என்க. இனிவரும் ஐந்து செய்யுளிலும் வரும் செயவெனெச்சங்களும், இவ்வாறே விற்றிருந்தான் என்ற வினையைக் கொண்டே முடியும் குளகச் செய்யுட்களாகும். இராமனுடைய திருமேனி நீலநிறத்ததாயினும் அவன் கண்களும் திருவடிகளும் திருக்கைகளும் செங்கமலம்போன்று சிவந்து காட்டலின், கமலத்தடங்காடு காட்ட என்றார். இனி, கமலத்தடங் காடு என்பதனைக் கமலக்காடுதடங் காட்ட என மாற்றிக் கமல மலர்க்காட்டினையுடைய தடாகத்தின் அழகினைக் காட்ட எனப் பொருள் கொள்ளலும் ஆம். 'கருமுகில் தாமரைக் காடுபூத்து' (பாலகாண்டம், திருவவதாரப்-13) எனத் திருமாலின் மேனிக்குக் கருமுகிலையும், கண், கை கால் முதலிய உறுப்புகட்குத் தாமரைக் காட்டினையும் உவமை கூறியிருத்தல் காணலாம். 'பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம், விரிகமல வுந்தியுடை விண்ண வனைக் கண்ணும், திருவடியுங் கையும் திருவாயுஞ் செய்ய, கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே' (சிலப்-ஆய்ச்சியர் குரவை-86) என இளங்கோவடிகள் இவ்வழகினை விரித்துக் கூறும் திறம் இங்கு நினையத்தகும். காடு என்பது தாமரை மலர்களின் மிகுதியை யுணர்த்தியது. அவன் திருமேனிக்கு மலை, கருநிறமும் அளக்கலாகா அளவும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் வறப்பினும் வளந்தரும் வண்மையும் பற்றி உவமை யாயது. பூண் தடமுலை என இயையும். இருபுறமும் இருவர் நின்று கவரி வீசுதலின் தையலார்கள் என்று பன்மையாற் கூறினர். செந்தண்மை பூண்ட அந்தணர்கள் நல்லாட்சி செய்யும் இராமனது பெருந்திறலை நினைந்து உலகம் இன்புறப் பல்லாண்டு வாழ்க என ஆசி கூறினர் என்க. (எ)

### மேனி 8 – 9

8. சீரார் மணிச்சோதி திரண்டெழுஞ்
செம்பொன் மோலி
காரார் வரைமேற் கதிரோனெழுங்
காட்சி காட்ட

வாரார் தடங்கொங்கை மடந்தையர்
வாட்கண் மொய்ப்ப
ஏரார் திருமேனியவ் விந்திரன்
மேனி யேய்ப்ப.

**சீர்ஆர் மணிச்சோதி திரண்டு எழும் செம்பொன் மோலி**
**கார்ஆர் வரைமேல் கதிரோன் எழும் காட்சி காட்ட,**
**வார்ஆர் தடங் கொங்கை மடந்தையர் வாட்கண் மொய்ப்ப,**
**ஏர்ஆர் திருமேனி அவ்விந்திரன் மேனி ஏய்ப்ப.**

பொ : இராமன் சூடியுள்ள சிறப்பு நிறைந்த மணிகளின் ஒளி திரண்டு எழுதற்கு இடமான சிவந்த பொன்னாலியன்ற மகுடத்தின் தோற்றம், கருநிறம் பொருந்திய உதய மலைமேல் சூரியன் எழுகின்ற காட்சியைக் காட்டா நிற்க; கச்சணிந்த பெரிய நகில்களையுடைய பெண்டிர்தம் வாள்போன்ற கண்கள், காட்சி விருப்பத்தால் வந்து மொய்த்துக் கொண்டிருப்பதால், இராமனுடைய அழகு நிறைந்த திருமேனி அந்தக் (கவுதம முனிவரின் சாபத்தால் உடம்பெல்லாம் ஆயிரம் கண்கள் பெற்ற) இந்திரனது மேனியை ஒத்துக் காணப்படாநிற்க.

கு : நீலநிறமுடைய இராமன் சூடிய ஒளிமிக்க முடியின் தோற்றம் கரியமலைமிசைத் தோன்றும் செஞ்ஞாயிற்றினை ஒத்தது என்க. இராமன் உடம்பு மலைபோன்றது எனவும் அவன்தலையில் சூடிய மகுடம் மலைமிசையெழுந்த ஞாயிறு போன்றது எனவும் கொள்க. கார்ஆர் வரை என்பதற்கு மேகங்கள் நிறைந்த மலை எனப் பொருள் கூறலும் ஆம். வார்-கச்சு. இராமனது பேரழகைப் பருக நோக்கும் பெண்டிரின் கண்கள் எல்லாம் இராமனது கண்ணாடிபோன்ற எழில்மிகு மேனியில் பதிந்து இருத்தலால் ஆயிரங்கண்ணவனாகிய இந்திரன் மேனியைப் போன்று காணப்பட்டது என்க. இந்திரனும் இராமனும் நிறத்தால் மட்டும் முன்பு ஒப்புமையுள்ளவர்கள். இப்போது உடலமெல்லாம் மொய்த்துள்ள கண்களாலும் ஒப்புமையுடையராயினர் என்றவாறு. இந்திரன் அகலிகைபால் தகாத காமத்தனாய்ச் சென்று கள்ள

வேடத்தால் புணர்ந்தின்புற்ற பெரும்பிழைக்குக் கௌதம முனிவர் கொடுத்த சாபத்தால் உடம்பெல்லாங் கண்களைப் பெற்றான்; இராமனே ஏகதார விரதனாக இருந்தே மகளிர்தம் கண்கள் மொய்த்தலால் அக்கீழோனாகிய இந்திரனை ஒத்தான் என்றவாறு. இராமனது பேரழகை மகளிர் கண்களால் பருகுவார்கள் என்பதை— 'துண்ணெனும் சொல்லாள் சொல்லச் சுடர்முடி துறந்து நாய, மண்ணெனுந் திருவை நீங்கி வழிக்கொளா முன்னம் வள்ளல் பண்ணெனும் சொல்லினார்தம் தோளென்னும் பணைத்தவேயும், கண்ணெனுங் காலவேலும் மிடை நெடுங்கானம் புக்கான்' (அயோத்தி, கைகேசி சூழ்வினை-84) என்றதால் அறியலாம். அவ்விந்திரன் என்புழிச்சுட்டு இழிபுணர்த்தியது. (அ)

9. சீரொத்த முத்தந் திகழ்நீள்
வடஞ்சேர்ந்த சன்ன
வீரத்தொளி யாகிய வெள்ளை
நிலாவை யோட்டி
ஆரத்தெழுஞ் செம்மணிச் சோதி
யலங்கி டத்தன்
காரொத்த மேனி கருஞாயிறு
போன்று காட்ட.

சீர்ஒத்த முத்தம் திகழ்நீள்வடம் சேர்ந்த சன்ன
வீரத்து ஒளி ஆகிய வெள்ளை நிலாவை ஓட்டி,
ஆரத்து எழும் செம்மணிச் சோதி அலங்கிடத் தன்
கார்ஒத்தமேனி கருஞாயிறு போன்று காட்ட.

**பொ :** ஒத்த சிறப்பினையுடைய முத்துக்கள் விளங்குகின்ற நீண்ட வடம் சேர்ந்த சன்னவீரம் என்கின்ற அணியின் ஒளியாகிய வெள்ளை நிலவைத் துரத்திவிட்டு, மணிமாலையில் எழும் செம்மணிகளின் சோதி வெயில்போல விளங்கத் தனது மேகம் போன்ற மேனி, கரிய சூரியனைப் போன்று தோன்ற நிற்க.

கு: உருவத்தாலும் ஒளியாலும் சிறப்பாலும் ஒத்த முத்துக்களையே கோத்துச் செய்யப்பட்ட முத்து வடம் என்பார் 'சீரொத்த முத்தந்திகழ் நீள்வடம்' என்ருர் ஒத்தசீர் முத்தம் என்க. சன்ன வீரம் என்பது ஒருவகையான வெற்றிமாலை. சன்னவீரம் திருமார்பில் வில்லிலக, (திருக்கயிலாய ஞானஉலா.19) என்பது காண்க- அது முத்துவடங்கள் பலவற்றைச் சேர்த்துச் செய்யப் படுவது என்பதை, நீள்வடஞ்சேர்ந்த சன்ன வீரம் என்பதால் அறியலாம். சன்னவீரம் என்னும் அணியின் ஒளி, இங்கு வெள்ளை நிலவாக உருவகம் செய்யப்படுகின்றது. மணியாரத்தில் உள்ள செம்மணியின் சோதி வெயில்போல விளங்குகின்றது. சூரியன் செயலாகிய நிலவையோட்டுதலும் வெயிலை வீசுதலும் இரண்டும் இராமன் அணிந்த மணிமாலையால் நிகழ்கின்றன. இராமன் மேனியில் நிலவாக விளங்குவது சன்ன வீரத்தின் ஒளியே யாகும் சன்ன விரத்தின் வெள்ளொளியை ஓட்டிவிட்டு மணிமாலை செவ்வொளி வீசி வெயில் போலத் திகழ்கின்றது என்க. அலங்குதல் - விளங்குதல். ஞாயிறு என்பதற்கேற்ப மாணிக்கமாலையின் செவ்வொளி இராமன் மேனியில் விளங்குகின்றது என்றவாறு. இராமன் ஞாயிறுபோன்ற ஒளிவீசும் உடம்புடையவன் ஆயினும் அவன்மேனி காரொத்த மேனியாதலின் 'கரு ஞாயிறு' போன்று காட்ட, என இல்பொருள் உவமைகூறினர். (கூ)

### பொன்னுடையின் பொலிவு

10. தடஞ்சேர் வலயந் தழுவுந்
திருத்தோள்க ணாக
வடஞ்சேர் வடமந்தர மாமலை
தன்னை மானப்
படஞ்சே ரரிச்செம் மணிப்பஃறலைக்
கோவை கோத்த
புடஞ்சே ரெழிற்பொன் னிறவாடை
பொலிந்தி லங்க.

தடம்சேர் வலயம் தழுவும் திருத்தோள்கள், நாக
வடம்சேர் வடமந்தர மாமலை தன்னை மானப்,

படஞ்சேர் அரிச் செம்மணிப் பல்தலைக்கோவை கோத்து
புடஞ்சேர் எழில் பொன்னிற ஆடை பொலிந்து இலங்க.

பொ : பெருமை பொருந்திய வலயம் என்னும் அணி அணியப் பெற்ற அழகிய தோள்கள், வாசுகி என்னும் பாம்பாகிய வடம் சேர்ந்த வடக்கேயுள்ள மந்தரம் என்னும் பெரிய மலையைப் போன்று தோன்ற பாம்பின் படத்தில் பொருந்திய பரலாக வமைந்த சிவந்த மாணிக்க மணிகளைப் பலதலைப்புகளையுடைய கோவையாகக் கோத்துள்ள, நெருப்பில் புடம்வைத்து மாசு நீக்கிய அழகுமிக்க பொன்னொலியன்ற நிறமிக்க ஆடை பொலிவு மிக்கு விளங்கா நிற்க.

கு : திருப்பாற்கடல் கடைந்த ஞான்று மந்தரமலையை மத்தாக்கி வாசுகியைக் கடைகயிருக்கிக் கடைந்தார்கள் என்பது புராண வரலாறு. இராமனது திருத்தோள்களில் அணிந்த வாகு வலயத்தின் தோற்றம் அந்த மந்தர மலையில் வாசுகியென்னும் பாம்பு சுற்றியுள்ளது போலத் தோன்றுகின்றது என்பது முன்னிரண்டு அடிகளின் கருத்து. இராமன் தோள்கள் மந்தரமலை போன்றன. அத்தோள்களில் அணிந்துள்ள வலயம், வாசுகி என்னும் பாம்பு போன்றது என உவமையை விரித்துரைக்க. இனிப் பின்னிரண்டடிகளில் இராமன் தோள்மேல் அணிந்த பொன்னுடையின் பொலிவு பேசப்படுகின்றது. மாணிக்கமணி நல்ல பாம்பின் படத்தில் பிறக்கும் இயல்பு விளங்க படஞ்சேர் அரிச்செம்மணி' என்றூர். அரி-பரல். இனி ரேகை எனலும் ஆம். பொன்னுடையின் முன்றுனையில் மாணிக்க மணிகளைப் பல தலைப்புகளோடுங் கூடிய கோவையாகக் கோத்துப் பின்னி அழகு செய்துள்ளமை விளக்கியவாறு. புடம் சேர்தலாவது, நெருப்பின்கண் பொன்னை வைத்துருக்கி மாசு போக்குதல். (கய)

மன்னர் பணி கேட்டல்

11. கொடி மன்னு மாடக் குலமோங்கு
மயோத்தி யெய்திக்
கடிமன்னு வாயிற் கடைநின்றருள்
கால நோக்கிப்

படிமன்னி வாழும் பலமன்னியர்
மண்ட லீகர்
முடிமன்ன ரெல்லா முறையேபுகுந்
தேவல் கேட்ப

கொடி மன்னும் மாடக்குலம் ஓங்கும் அயோத்தி எய்தி
கடிமன்னு வாயில் கடைநின்று அருள்காலம் நோக்கி
படிமன்னி வாழும் பலமன்னியர், மண்டலீகர்
முடிமன்னர் எல்லாம் முறையே புகுந்து ஏவல் கேட்ப

பொ: பூமியின்கண் நிலைபெற்று வாழுகின்ற பல மதிக்கத் தக்க பெருமக்களும் நாட்டின் உட்பகுதியை ஆளுகின்ற மன்னர்களும், முடியுடைவேந்தர்களும் ஆகிய எல்லோரும், கொடிகள் நிலைபெறக் கட்டிய மாடங்களின் வரிசையுயர்ந்துள்ள அயோத்தி நகரை யடைந்து காவல் பொருந்திய கோபுர வாயிலில் நின்று தம்மை அழைத்தருளும் காலத்தை எதிர்நோக்கியிருந்து (அழைப்புப் பெற்றதும்) முறையே திருவோலக்க மண்டபத்தின் உள்ளே புகுந்து தாங்கள் செய்ய வேண்டிய பணியாது? எனக் கேளா நிற்க.

கு: மன்னியர் என்பது குடிமக்களில் மதிக்கத்தக்க பெருமக்களையுணர்த்தி நின்றது. படி-பூமி. மண்டலீகர் என்பது நாட்டின் ஒரு பகுதியை ஆளும் சிற்றரசரைக் குறித்து நின்றது. முடிமன்னர் என்றது நாடாளும் முடிவேந்தரை யுணர்த்தியது. இவர்கள் எல்லோரும் இராமபிரானைக் காண அயோத்திக்கு வந்து கோபுரவாயிலில் நின்று அப்பெருமானுடைய உத்தரவை யெதிர்பார்த்திருந்து அழைப்பு வந்தவுடன் தகுதிமுறையான் திருவோலக்கம் புகுந்து பணிந்து பணிகேட்டு நிற்கின்றார்கள் என்றவாறு. முறையாவது, முன்னர் முடிமன்னரும் பின் மண்டலீகரும் பின் மன்னியருமாக வரிசைநோக்கிச் செல்லுதல். கடி-காவல். எய்தி, நின்று, நோக்கி, புகுந்து ஏவல் கேட்க என இயையும். ஏவல் கேட்டலாவது, எது எமைப்பணிகொளுமாறு என்றுகேட்பது. (கக)

## இன்ப வீற்றிருப்பு

12. மூவா முனிக்கூட்டமு முன்புமுப்
பத்து மூவர்
தேவா திபரும் திருப்பாற்கட
லெய்தி யெம்மைக்
காவா யெனப்போற் றிடக்கண்
டுயினீங்கி யின்பம்
ஓவாது தான்வீற் றிருக்கும்படி
தன்னை யொப்ப

மூவா முனிக் கூட்டமும் முன்பு முப்பத்து மூவர்
தேவாதிபரும் திருப்பாற்கடல் எய்தி எம்மைக்
காவாய் எனப் போற்றிடக் கண்துயில் நீங்கி இன்பம்
ஓவாது தான் வீற்றிருக்கும்படி தன்னை ஒப்ப

**பொ :** முற்காலத்து, தவச்சிறப்பால் மூப்பினையடையாத முனிவர் குழாமும் முப்பத்து மூவராகிய தேவர் தலைவர்களும் திருப்பாற்கடலை அடைந்து 'எம்மைக் காப்பாற்றுவாயாக' எனக் கூறித் துதிக்க (அந்தத் துதிமொழியைக் கேட்டு) அறிதுயில் நீங்கி இன்பம் நீங்காமல் பாம்பணையில் தான் வீற்றிருக்கும் தன்மையைப் போலும்படி (வீற்றிருந்தான்)

**கு :** முன்பு என்பதை முதலிற் கூட்டுக. தவயோகத்தின் ஆற்றலால் உடம்பு என்றும் இளமை மாருமல் இருத்தல் முனிவர்க்கு இயல்பு ஆதலின் மூவாமுனிக் கூட்டம் என்ருர். எப்போதும் தன் திருவடிகளையே நினைந்து தவஞ்செய்யும் முனிவர் திருமாலைக் காண்டற்குத் தேவரினும் சிறப்புரிமையுடையவ ராதலின் அம்முனிவர் கூட்டத்தை முற்கூறினர். கடவுளைக் காண்டற்குச் செல்லுங்கால் தேவரினும் முனிவர்களே முன்பு சென்று வணங்கும் தகுதியும் உரிமையும் உடையவர் என்பதை, 'துனியில் காட்சி முனிவர் முற்புக' (திருமுருகாற்றுப்படை-137) என்பதால் அறியலாம். திருமால், இராமனுக அவதரித்த நிலையில்

கோசலநாட்டு மக்களின் குறைகளைக் கேட்டு முறை செய்ய அரியாசனத்தில் வீற்றிருக்கும் நிலைக்கு உவமையாக வேறு எதனையுங் கூறாமல் அவ்விராமபிரானின் பரநிலையையே இங்குக் காட்டியவாறு. முனிவர் குழாமும் முப்பத்து மூவராகிய தேவர் தலைவரும் முன்பு இராவணன் முதலிய அரக்கர் செய்யும் துன்பங்களைப் பொறுக்க முடியாமையால் வந்து பாற்கடலில் பள்ளி கொண்டருளும் பரமனை நோக்கி அழைத்துத் துதித்து, எம்மைக் காவாய்! என வேண்டினர் என்பதைப் பாலகாண்டத்துக் காணலாம். முப்பத்து மூவர் தேவாதியர் என்றது, முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் தலைவர்களாகிய முப்பத்து மூவரை. அவர், உருத்திரர் பதினொருவர் ஆதித்தர் பன்னிருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் ஆவர். இவர்கள் 'நால் வேறியற்கைப் பதினொரு மூவர்' (திருமுருகாற்றுப்படை-167) எனக் கூறப்படுதலும் காணலாம். வீற்றிருக்கும்படி-வீற்றிருக்கும் தன்மை ஒப்ப இராகவன் வீற்றிருந்தான் என ஐந்தாம் செய்யுளோடு இயைந்து முடியும்.

காட்ட, காட்ட, வீசிட, ஆசிகூற, காட்சிகாட்ட மேனி ஏய்ப்ப, ஓட்ட, காட்ட, மான, பொலிந்திலங்க, ஏவல் கேட்ப, தான் வீற்றிருக்கும் படி தன்னை ஒப்ப இராகவன் வீற்றிருந்தான் எனச் செயவெனெச்சங்களை முடிக்க, பரநிலைக்கும் அவதார நிலைக்கும் உள்ள ஒற்றுமைகருதிப் பாற்கடலில் வீற்றிருந்த நிலையையும் 'தான் வீற்றிருக்கும்படி தன்னை ஒப்ப' என்றார். தான் என்றது இங்கு நாராயணனை. (கஉ)

### அகத்தியர் முதலிய முனிவர் புகுதல் 13 – 16

13. அந்த வேலை யதனு ளடங்கிய
குந்த வேலயில் வாட்கைக் கொடியவர்
நந்த வேலை யடங்கலு நக்கினேன்
சந்த வேலையைச் சார்சம தக்கினி

அந்த வேலை அதனுள் அடங்கிய
குந்த வேல் அயில் வாள்கைக் கொடியவர்,

நந்த, வேலை அடங்கலும் நக்கினேன்
சந்த வேலையைச் சார் சமதக்கினி.

பொ: (இராமபிரான் இவ்வாறு வீற்றிருந்த) அப்பொழுது, ஐம்பொறிகள் அடங்கப் பெற்றவனும், குந்தவேலும் கூரியவாளும் தாங்கிய கைகளையுடைய கொடியவர்களாகிய விருத்தராசுரன் முதலிய அசுரர்கள் இந்திரனது வச்சிரத்தால் அழியுமாறு அவர் மறைந்திருந்த கடல் நீர் முழுமையும் பருகினேனுமாகிய அகத்திய முனிவனும், வேதங்களின் கரையைக் கண்ட சமதக்கினி முனிவனும்.

கு: குளகம். வாயிலை நண்ணினர் என (15) மேல் முடியும். அந்தவேலை-அப்பொழுது. அடங்கிய அகத்திய முனிவர் என்க. வேலையடங்கலும் நக்கினேன் என்றது, கடலைக் குடித்தவர் என்றவாறு. அகத்தியனுக்குக் காரணப்பெயர். நக்குதல் இங்குக் குடித்தலையுணர்த்தியது. குந்தவேல் - கைவேல். அயில்வாள் கூரியவாள். கொடியவர் என்றது விருத்தராசுரன் முதலியோரை. இந்திரனது ததீசிமுனிவரின் முதுகெலும்பாலாகிய வயிரப்படையைக் கண்டு விருத்தராசுரன், அஞ்சிக் கடலில் ஒளிந்து கொண்டபோது இந்திரனுக்கு உதவியாக அகத்தியர் உவர்க்கடலைக் குடித்து அவனையும் அவனைச் சார்ந்தோரையும் புலப்படச் செய்த வரலாற்றை இங்கு உணர்த்தியவாறு. நந்துதல்-அழிதல். வேலை-கடல். சந்தவேலையைச் சார்தலாவது வேதங்களையெல்லாம் உணர்தல். வேலை-கரை. 'வேதம் கரை கண்டான் வீற்றிருக்கும்' (புறப்பொருள் வெ. மாலை. 163) என்புழி வேதம் முழுமையும் உணர்ந்தவனை வேதம் கரைகண்டான் எனக் குறித்திருத்தல் காணலாம். சந்தம்-வேதம்; ஆகுபெயர். (கந)

14. சிரத்து வாச விதழிச் சிவனைநேர்
பரத்து வாசன் வசிட்டன் பகைகெடத்
துரத்து வாசவன் மெய்க்குறி தூக்கினேன்
சுரத்து வாசச் சுகம்புரி கோசிகன்.

சிரத்து வாச இதழிச் சிவனை நேர்
பரத்து வாசன், வசிட்டன், பகைகெடத்
துரத்து வாசவன் மெய்க்குறி தூக்கினேன்
சுரத்து வாசச் சுகம்புரி கோசிகன்.

பொ : தலையில் வாசனை பொருந்திய கொன்றை மாலை யணிந்த சிவபிரானை நிகர்த்த பெருமையையுடைய பரத்துவாச முனிவனும், வசிட்ட முனிவனும், அவுணர் முதலிய புறப்பகை கெடுமாறு துரத்தியழித்த இந்திரனது உடம்பின்கண் பெண்குறிகள் தங்கச் சபித்த கௌதம முனிவனும், பாலைவனத்தில் வசித்துழியும் மந்திர ஆற்றலால் இன்புற்றிருக்கச் செய்தருளிய கோசிக முனிவனும்.

கு : பரத்துவாச முனிவரின் ஆற்றலும் பெருமையும் புலப் படச் சிவனை நேர் பரத்து வாசன் என்றார். இந்திரன் புறப் பகையை வென்ற பொருவரு வீரனாயினும் அகப்பகையாய காமத்தை வெல்ல இயலாது முனிவர் பன்னியாகிய அகலிகைபால் அடங்காக் காமத்தனாய்ச் சென்று அற்ற முண்டாக்கித் தீவினை நயந்து செய்த கொடுமை நினைந்து அவன் விரும்பிய பெண்குறிகள் அவன் உடம்பில் எல்லாம் தோன்றுமாறு சபித்தவர் கௌதம முனிவர் ஆதலின், 'பகை கெடத்துரத்து வாசவன்' எனவும் 'வாசவன் மெய்க்குறி தூக்கினேன்' எனவும் கூறினார். தூக்குதல் இங்குத் தங்கச் செய்தலை யுணர்த்தியது. 'ஆயிர மாதர்க்குள்ள அறிகுறியுனக்குண்டாகென்றேயினன், அவையெலாம் வந்தியைந் தன இமைப்பின் முன்னம்' (அகலிகைப்-78) என்பது நோக்குக. சுரத்துவாசச் சுகம்புரி கோசிகன் என்றது கோசிகன் தாடகையை வதைக்க இராம இலக்குவரை அழைத்து வருங்கால் வழியில் கொடிய பாலைவன வெப்பத்தால் அவ்விருவரும் வருந்துவர் என் றெண்ணி அவ்விருவருக்கும் பிரமன் உண்டாக்கிய மந்திரங்கள் இரண்டையும் நினைத்தவுடன் 'ஊழித்தீயையும் எள்ளுறு கொழுங் கனல் எரியும் வெஞ்சுரம் தெள்ளுதண் புனலிடைச் சேறலொத்தது' (தாடகைவதைப்-19) எனப் பாலகாண்டத்து வரும் நிகழ்ச்சியை நினைத்துக் கூறியது. சுரம்-பாலைவனம். பாலைவனத்து நடக்கும் போதே தண்புனலிடை நடப்பது போன்ற சுகத்தை மந்திரத்தால்

கொடுத்த கௌசிக முனிவன் என அவன் சிறப்பு விளக்கியவாறு. இராமன் குலகுருவாகலின் வசிட்டன் அடைமொழியின்றி அறிதற்குரிய பெருமையன் என்பது தோன்றக் கூறியுள்ள நயம் காண்க. (கச)

15. காயுந் தீவினைக் காசிப னத்திரி
தாயின் மன்னுயிர்க் கன்புடைத் தௌமியன்
தூய ஞானச் சுகத்தி முதலினோர்
நாய கன்றிரு வாயிலை நண்ணினர்.

**காயும் தீவினைக் காசிபன், அத்திரி.**
**தாயின் மன்னுயிர்க்கு அன்புடைத் தௌமியன்**
**தூய ஞானச் சுகத்தி முதலினோர்**
**நாயகன் திருவாயிலை நண்ணினர்.**

**பொ :** தீயசெயல்களை வெறுத்த காசிப முனிவனும், அத்திரி முனிவனும், உலகத்து நிலைபெற்ற உயிர்கட்குத் தாய்போன்று பேரன்புடைய தௌமிய முனிவனும், தூய்மையான ஞானத்தையுடைய சுகத்தி முனிவனும் முதலாயினோர் இராமபிரானுடைய அரண்மனை வாயிலை அடைந்தார்கள்.

**கு :** தீவினையைக் காயும் என மாறுக. நாயகன் என்றது இராமபிரானை. தாயின் என்புழி 'இன்' உவம உருபு. இங்கு எண்ணப்பட்ட முனிவர் பதின்மரில் அகத்தியன், தௌமியன் சுகத்தி என்ற மூவரும் சிறப்பிடம் பெற்றுள்ளனர். ஏனை எழுவரும் சப்தரிஷிகள் எனச் சேர்த்தே எண்ணப்படுவர். (கரு)

**முனிவர் வாயிலோன் வழி உள்புகுதல்**

16. வாயி லோயெம் வரவுரை யென்றலும்
கோயி லெய்தி யவனடி கூறலும்
தூய வன்புகுத் தீங்கெனச் சொல்லலும்
போய வன்புகுத் தப்புகுந் தாரரோ.

வாயிலோய்! எம்வரவு உரை என்றலும்
கோயில் எய்தி அவன்அடி கூறலும்
தூயவன் 'புகுத்து ஈங்கு' எனச் சொல்லலும்
போய் அவன் புகுத்தப் புகுந்தார் அரோ.

பொ: (வாயிலை நண்ணிய முனிவர்கள், வாயிற் காவலனை நோக்கி) வாயிற் காவலனே! எம்முடைய வருகையை இராம பிரானுக்குச் சொல்லுவாயாக என்று சொல்லுதலும் அவ் வாயிற் காவலன் அரண்மனைக்குள் சென்று அவ்விராமபிரானடி வணங்கிக் கூறுதலும், தூயவனாகிய இராமபிரான் 'அம்முனிவர்களைப் புகவிடு இங்கு' என்று சொல்லுதலும் அதைக் கேட்டுச் சென்ற வாயிலோன் போகவிட அரண்மனையினுள் புகுந்தார்கள்.

கு: அரண்மனையின் முறைமை இதனால் உணர்த்தியவாறு. வாயிற் காவலன் தன்பால் வந்தவர் கூறியதைத் தலைவன்பால் சொல்லி அவன் கருத்தறிந்து உள்ளே புகவிடுதலே தக்கமுறை யாதல் காணலாம். தூயவன் என்றது இராமனை, குற்றமொன்றும் இல்லாதவன் என்றவாறு. புகுத்தல் பிறவினை. புகுதல் தன்வினை. (கசா)

## முனிவரைப் பணிந்து வரவேற்றல்

17. புக்க வந்தப் புராண முனிவரை
மிக்கெ ழுந்த வுவகையின் மேதினித்
தொக்க பன்மணிச் சோதி முடிவுறத்
தக்க வாறடி தாழ்ந்து தராபதி

புக்க அந்தப் புராண முனிவரை
மிக்கு எழுந்த உவகையின் மேதினித்
தொக்க பன்மணிச் சோதி முடிஉறத்
தக்கவாறு அடி தாழ்ந்து தராபதி.

பொ: அப்படிப் புகுந்த அந்தப் பழமையான முனிவர்களைத் தரைக்கு அதிபதியாகிய இராமன் பெருகியெழுந்த மகிழ்ச்சியினால்

பலமணிகள் பதிக்கப்பெற்ற ஒளியுடைய தன் முடி பூமியில் பொருந்துமாறு தக்கவாறு அவரடியின்கண் வீழ்ந்து வணங்கி.

கு : தாழ்ந்து என்ற வினையெச்சம் வரும் செய்யுளில் வழங்கி என்ற வினையோடு முடியும். குளகம். தராபதி, உவகையின் சோதிமுடி மேதினியுறத் தாழ்ந்து என இயையும். பன்மணி தொக்க சோதிமுடி என்க. முனிபுங்கவர்களை மன்னவன் வணங்குதல் தகுதியான செயலேயாதலின் தக்கவாறு அடிதாழ்ந்து என்றார். தராபதி-தரைக்குத் தலைவன், மன்னன். (கஎ)

வந்த முனிவர்க்கு இராமன் இருக்கை வழங்கல்

18. ஈச னங்க மெரித்திடு நாண்முதல்
கூச னங்கன் குறுகா வருந்தவ
மாச னங்கண் மகிழ்ந்தினி தேறிட
ஆச னங்கள் வழங்கி யருளினான்

ஈசன் அங்கம் எரித்திடும் நாள் முதல்
கூசு அனங்கன், குறுகா அருந்தவ
மாசனங்கள், மகிழ்ந்து இனிது ஏறிட.
ஆசனங்கள் வழங்கி யருளினான்.

பொ : சிவபிரான் நெற்றிக்கண்ணால் தன் உடம்பை எரித்த நாள் முதலாக (முனிவர்களைக் கண்டு) கூசுகின்ற இயல்புடைய மன்மதன் நெருங்கவியலாத அருந்தவமுடைய பெரிய முனிவர்கள் மகிழ்ச்சி கொண்டு இனிதாக ஏறி அமர்ந்திட ஆசனங்களை வழங்கி அருளினான்.

கு : மேலைச் செய்யுளில் வந்துள்ள தராபதி என்பதே இச் செய்யுளுக்கும் எழுவாயாகும். தராபதி வழங்கியருளினான் என்க. தவவேடத்திலிருந்த சிவபிரான்மேல் மலர்க்கணைதொடுத்து அப் பிரானது நெற்றிக்கண்ணால் எரியுண்ட மன்மதன், முனிவர் வேடங்களைக் கண்டால் அஞ்சிடும் இயல்பினன் என்பார், கூசனங்கன் என்றார். முனிவர்களைக் காமன் நெருங்காமைக்கு

மன்மதனது கூச்சமும், காரணம் என்றவாறு. உரைமாண்ட உள்ளொளி உத்தமன் வந்து உளம் புகலும் கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடந்தவர்கள் முனிவராதலின் அனங்கன் குறுகாஞ யினுன் என்க. குறுகுதல் - நெருங்குதல். காமமொடு கடுஞ்சினங் கடிந்த காட்சியர். (திருமுருகாற் 135-5) என முனிவர் இயல்பு கூறப்படுதல் காணலாம். மாரனை வென்ற வீரர் என்று முனிவரைக் குறிப்பிட்டவாறு. அருந்தவ மாசனங்கள் என்றது, அருந்தவ முனிவர்களாகிய பெரியோர்கள் என்றவாறு. இனி, மாசனங்கள் என்றது கூட்டத்தையுணர்த்தியதாகக்கொண்டு முனிவர் குழாம் எனப் பொருள் கூறலும் ஆம். இராமன் வழங்கிய ஆசனங்களின் பெருமையும் உயர்வும் புலப்பட மகிழ்ந்து இனிது ஏறிட, என்ருர். அவ்வாசனத்தின் சிறப்பு வருஞ் செய்யுளால் புலப்படும். (கஅ)

### இராமன் முனிவரை நலம் வினவுதல்

19. பொருந்து மாமணி போர்த்தபொன் ஞசனத்
திருந்த வந்த விருந்தவத் தோர்களைத்
திருந்து தாமரைச் செங்கணி ஞேக்கிநும்
அருந்த வங்கட் கழிவிலை யேயென்ருன்.

**பொருந்தும் மாமணி போர்த்த பொன் ஆசனத்து**
**இருந்த அந்த இருந்தவத்தோர்களைத்**
**திருந்து தாமரைச் செங்கணின் நோக்கி நும்**
**அருந்தவங்கட்கு அழிவு இலையே? என்ருன்.**

பொ : பொருத்தமான சிறந்த மணிகள் பதித்துச் செய்த பொன்ஞசனத்தில் அமர்ந்த அந்தப் பெரிய தவமுனிவர்களைத் தன் திருத்தமான தாமரை மலர் போன்ற சிவந்த கண்களால் பார்த்து, நூம் அரிய தவங்கட்கு இடையூறு இல்லையே? என்று வினவினன்.

கு : ஆசனத்தின் அமைப்பிற்குப் பொருத்தமான மணி என்பார் 'பொருந்து மாமணி' என்ருர். மணிகளைக் கொண்டு போர்திறற் போல மிகுதியான மணிகளைப் பதித்துப் பொன்ஞற்

செய்த ஆசனம் என்பார் 'மாமணி போர்த்த பொன்னுசனத்து' என்றார். குற்றமின்றித் திருத்தமாகப் பூத்த தாமரை என்பார், 'திருந்து தாமரை' என்றார். இனித் திருந்து செங்கண் என இயைத்துக் கண்ணிற்கு வரும் குற்றங்கள் இன்றித் திருந்திய செங்கண், எனக் கூறலும் ஆம். செங்கண்ணிற்கு உவமையாகக் கூறப்பட்டமையின் தாமரை என்றது இங்குச் செந்தாமரையே என்பது தெளிவு. மனத்தால் நோக்குதலை விலக்கக் 'கணின் நோக்கி' என்றார். அழிவு என்றது அரக்கர் முதலியவர்களால் வரும் இடையூற்றினை. (௧௯)

20. எங்க ளுக்குயி ராய விருந்தவத்
துங்க ளுக்கும்ம் புத்திர பௌத்திரர்
தங்க ளுக்குமைச் சார்ந்தவர் தங்கட்கும்
அங்கெ வர்க்கு மருந்துய ரில்லையே.

**எங்களுக்கு உயிராய இருந்தவத்து**
**உங்களுக்கும் உம் புத்திர பௌத்திரர்**
**தங்களுக்கும் உமைச் சார்ந்தவர் தங்கட்கும்**
**அங்கு எவர்க்கும் அருந்துயர் இல்லையே.**

**பொ:** அரசர்களாயுள்ள எங்களுக்கு உயிர் போன்றுள்ள பெரிய தவத்தினராய உங்களுக்கும் உம் புதல்வர் பௌத்திரர் தங்களுக்கும் உம்மைச் சார்ந்துள்ள உறவினர்களுக்கும் அங்குள்ள மற்ற எவர்க்கும் தீர்த்தற்கரிய துன்பம் ஒன்றும் இல்லையே.

**கு:** மேல் பொதுவகையால் வினவிய இராமன் இச் செய்யுளால் சிறப்புவகையால் வினவியவாறு. அருந்துயர் என்றது தீர்த்தற்கு அரிய பெருந்துயரை. அரசர்களுக்கு முனிவர் உயிர் போன்று தொடர்புடையர் ஆதலின் 'எங்களுக்கு யிராய இருந் தவத்துங்களுக்கு' என்றார். பௌத்திரர்-பேரர். அருந்துயர் இருப்பின் நீக்குவேன் என்ற குறிப்பினால் இராமன் இங்ஙனம் வினவியவாறு. சார்ந்தவர் என்பார் உறவினர். எவர்க்கும் என்றது அம் முனிவர் வாழும் இடத்தில் இருப்பாராய் நெருங்கிய தொடர்பில்லாத அயலவரை. (௨௰)

கவிக்கூற்று

21. சுந்த ரச்சிலை யோன்சுவை யூறிய
அந்த வச்சொலைக் கேட்ட வருந்தவர்
தந்த முள்ளத் துவகை தழைத்திட
இந்த வார்த்தை யிராமற் கியம்பினர்.

சுந்தரச்சிலையோன் சுவை ஊறிய
அந்த அச்சொலைக் கேட்ட அருந்தவர்
தம்தம் உள்ளத்து உவகை தழைத்திட
இந்த வார்த்தை இராமற்கு இயம்பினர்.

பொ : அழகிய வில்லையேந்திய இராமன் கூறிய சுவை ஊற்றெடுக்கும் அந்தச் சொல்லைக் கேட்ட முனிவர்கள், தத்தம் மனத்தில் மகிழ்ச்சி மிகுதலால் இந்தச் சொற்களை இராமனுக்குச் சொன்னார்கள்.

கு : முனிவர்கட்கு வரும் இடையூறுகளைப் போக்குதற்குரிய போர்வில்லையுடையவன் இராமன் என்பது புலப்பட 'சுந்தரச் சிலையோன்' என இராமனைக் குறிப்பிட்டார். இனி, இராமன் ஆட்சியில் பகைவரே இல்லையாதலின் முன் போர் செய்தற்குரிய தாய் இருந்த வில் இப்பொழுது அழகுசெய்யும் கருவியாகவே விளங்குகின்றது என்பது புலப்பட அப்பெயராற் கூறினார் என்று மாம். முனிவர்களுக்கு வரும் துன்பத்தைத் துடைக்கும் இனிய நோக்குடன் கூறிய இனிய சொற்களாதலின் அவை சுவையூறிய சொற்களாயின. ஊறுதல்-சுரத்தல்: பெருகுதல். உவகை தழைத்த லாவது-மகிழ்ச்சி மிகுதல். (உக)

21 (a) பின்வரும் பாடல் பல நல்ல ஏடுகளில் இல்லாமை யால் மிகைப்பாடலாக விடப்பட்டது.

புலத்தியன் றன்வழிப் போந்து
பொல்லா வொழுக்க மில்லாத்
குலத்து முனிவிச் சிரவாவுக்
கரக்கி வயிற்றி னிடைத்தோன்றும்

கொலைக்கை யரக்கர் முதலாய
　　கோடா கோடிப் படைகொன்ற
சலத்தின் வலியாய் நீயிருப்ப
　　வுண்டோ வெமக்குத் தவறென்றார்.

முனிவர்களின் விடை 22 – 24

22. கும்ப னிகும்ப னகம்பன்மனங்
　　குலையும் வெம்போ ரதிகாயன்
உம்ப ருலகு கம்பஞ்செய்
　　கும்ப கன்ன னுலகனைத்தும்
தம்ப மாய நம்பன்வரை
　　சாய்த்த மொய்ம்பன் றசக்கிரிவன்
இம்ப ருலகு தென்புலமேற்
　　றம்பன் விகட னென்றிவரும்.

கும்பன், நிகும்பன், அகம்பன் மனம் குலையும் வெம்போர் [அதிகாயன்
உம்பர் உலகு கம்பஞ்செய் கும்பகன்னன், உலகு அனைத்தும்
தம்பம் ஆய நம்பன்வரை சாய்த்த மொய்ம்பன் தசக்கிரிவன்
இம்பர் உலகு தென்புலமேற்று அம்பன், விகடன் என்றிவரும்

பொ: கும்பன், நிகும்பன், அகம்பன், மனம் நடுங்குதற்குரிய கொடிய போரைச் செய்கின்ற அதிகாயன், விண் உலகத்தோர்க்கு நடுக்கம் உண்டாக்குகின்ற கும்பகன்னன், உலகம் முழுமையும் அழல்தம்பமாய் நின்ற சிவபிரானது கயிலாய மலையைச் சாய்த்த வலிமையுடைய பத்துத் தலைகளையுடைய இராவணன், இவ்வுலக மக்களைத் தென்புலமாகிய எமனுலகத்து ஏற்றுகின்ற அம்பன், விகடன் என்று சொல்லப்படுகின்ற இவரும்.

கு: குளகம்-களத்தவிய என வருஞ்செய்யுளில் வரும் வினையொடு முடியும். அதிகாயன், கும்பகன்னன், தசக்கிரிவன் அம்பன்

இவர்தம் ஆற்றலைப் புலப்படுத்தும் அடைமொழிகள் நினைக்கத் தக்கவை. கம்பம்-நடுக்கம். உலகனைத்தும் தம்பமாய நம்பன் என்றது அயன் செருக்கும் அரியின் செருக்கும் அடங்குமாறு அவ்விரு வரும் அறியாவாறு அழற் பிழம்பாய் சிவபிரான் நீண்டு நின்ற புராண வரலாற்றை யுணர்த்துவதாகும். நம்பன்-சிவபிரான். அவன் வரை என்றது கயிலாயமலையை. தான் ஏறிச் சென்ற புட்பக விமானம் கயிலைமலைமேற் செல்லுதல் ஒழிந்து நிற்பது கண்ட இராவணன் சினந்து அம்மலையைப் பெயர்த்தெடுக்க முயன்று சிவபிரான் சிறுவிரலால் அழுத்தியதும் அம்மலைக்கீழ் அகப்பட்டு அழுது, கைந்நரம்பால் யாழ்செய்து அவ் இறைவனைப் பாடி யுய்ந்து வரம்பெற்றமை, பின் வரையெடுத்த படலத்துக் கூறப் படுதல் காணலாம். தென்புலம் என்றது எமன் உலகை. அம்பன் என்பவன், இவ்வுலகத்தவரையெல்லாம் எமனுலகிற்கு அனுப்பிய வலிமையோன் என்றவாறு. (உஉ)

23. தீய ராய கராதியருந்
 தேவாந் தகனு நராந்தகனும்
மாயை வல்ல மகோதரனு
 மற்று ளோருங் களத்தவிய
பேயு நாயு மவருடலம்
 பிச்சுத் தின்னச் சரந்தொட்ட
தூய வில்லி நீயிருக்கத்
 துயர முண்டோ வெமக்கினியே.

**தீயர்ஆய கராதியரும், தேவாந்தகனும் நராந்தகனும்**
**மாயை வல்ல மகோதரனும், மற்றுளோரும் களத்து அவிய**
**பேயும் நாயும் அவருடலம் பிச்சுத்தின்ன சரம்தொட்ட**
**தூய வில்லி நீ இருக்க, துயரம் உண்டோ எமக்கு இனியே?**

**பொ :** தீயவர்கள் ஆன கரன் முதலிய அரக்கரும் தேவாந்தகன் என்பவனும் நராந்தகன் என்பவனும் மாயையில் வல்ல மகோதரன் என்பவனும் மற்றும் உள்ள அரக்கர்களும் போர்க் களத்தில் இறந்திடுமாறும், இறந்த அவர்தம் உடலங்களைப் பேயும்

நாயும் பிச்சுத்தின்னுமாறும் அம்பு தொடுத்த தூய்மையான வில்லி யாகிய நீ இருக்க எமக்கு இனிமேல் துயரம் வரக் காரணம் உண்டோ?

கு: குளகம். என்று முனிவர்தாங்கூற, என 25ஆம் செய்யுளில் முடியும். கராதியர் என்பது வடமொழி தீர்க்கசந்தி முடிபு; தமிழில் அந்தத் தொடரையே ஆண்டுள்ளார். அவிய, தின்ன, சரந்தொட்ட தூயவில்லி என இயையும். தொட்ட என்பது வில்லில்தொடுத்து விடுத்தமையுணர்த்தியது. தூய வில்லி என்றது தூய அறப்போரே செய்யும் இயல்புடைய வில்வீரன் என்றபடி. வில்லியாகிய நீ எனப் பண்புத் தொகையாக்குக. எமக்கு இனித் துயரம் உண்டோ? என இயையும். (உங)

24. மூவ ராலு மற்றொழிந்த
முனிவ ராலு மூவுலகத்
தியா வராலும் வெலற்கரிய
வெல்லா மாயை களும்வல்லோன்
தேவ ராசன் றனைப்பற்றிச்
சிறையி லிட்ட விராவணியாம்
பாவ காரி சிரமறுத்தோ
னிருக்க வெமக்குப் பயமுண்டோ.

**மூவராலும் மற்று ஒழிந்த முனிவராலும் மூவுலகத்து யாவராலும் வெலற்கு அரிய, எல்லா மாயைகளும் வல்லோன், தேவராசன் தனைப்பற்றிச் சிறையில் இட்ட இராவணியாம் பாவகாரி சிரம் அறுத்தோன் இருக்க எமக்குப் பயம்உண்டோ?**

பொ: அயன் அரி அரன் என்ற மூவராலும் அவர்களொழிந்த முனிவர்களாலும், இனி மூவுலகத்துள்ள எவராலும் வெல்லுதற்கு அரிய எல்லாவகையான மாயைகளும் செய்ய வல்லவனாய் இந்திரனைப் பற்றிச் சிறையில் இட்ட இந்திரசித்து ஆகிய பாவங்களையே செய்பவனது சிரத்தை அறுத்தவனாகிய இலக்குவன் இருக்கும் போது எங்கட்குப் பயம் உண்டோ? (இல்லை)

கு : குளகம். என்று முனிவர்தாம்கூற என மேல் முடியும். இதனால் இலக்குவன் வீரத்தைச் சிறப்பித்தவாறு. தேவராசன் என்றது, தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனை. அவனை வென்றமையால் இந்திரசித்து எனச் சிறப்புப் பெயர் பெற்ற இராவணன் மகனைக்கொன்ற இலக்குவன் இருக்கும்போது பயம் ஏது? என்றவாறு. இராவணி- இராவணன் மகன் என்னும் பொருள்படும் தத்திதாந்தப் பெயர்; தாசரதி போல. பாவகாரி - பாவத்தையே செய்பவன். 'பாவகாரிகள் பார்ப்பரிதென்பரால்' தேவதேவன் சிவன் பெருந்தன்மையே (திருநாவுக்கரசர் தேவாரம் 5-100-5 என்றதும் காண்க. உண்டோ என்னும் வினா ஓகாரம் எதிர்மறை) பொருளது. (உச)

**இராமன் சொல்லியது**

25. என்று முனிவர் தாங்கூற
விராமன் கூறு மோரிரண்டு
குன்ற மனைய திரள்புயத்துக்
கும்ப கன்னன் முதலாயோர்
வென்றி கூறு திராவணிதன்
வீர நீர்கூ றியவாறென்
னன்று சிவன்பா லவன்பெற்ற
வரமும் வலியு மவன்பிறப்பும்.

**என்று முனிவர்தாம் கூற, இராமன் கூறும்; ஓர் இரண்டு குன்றம் அனைய திரள் புயத்துக் கும்பகன்னன் முதலாயோர் வென்றி கூறாது, இராவணிதன் வீரம் நீர்கூறிய வாறுஎன்? அன்று சிவன்பால் அவன்பெற்ற வரமும் வலியும் அவன்பிறப்பும்**

பொ : என முனிவர்கள் சொல்ல, அதுகேட்ட இராமன் சொல்லுவான், ஒப்பற்ற இரண்டு குன்று போன்ற திரண்ட தோள்களையுடைய கும்பகன்னன் முதலியோரது வெற்றியைக் கூறாமல் இந்திரசித்தின் வீரத்தை மட்டுமே நீர் சிறப்பித்துக் கூறியதற்குக்

காரணம் என்னே? அவ்வாறு நீவிர் சிறப்பித்துக் கூறும்படி அந்த இந்திரசித்துச் சிவனிடத்துப் பெற்ற வரமும் வலிமையும் அவன் பிறப்பும்.

கு: குளகம். பரக்கவுரைமின்' எனவருஞ் செய்யுளோடு இயையும். முனிவர்கள் இந்திரசித்தினைச் சிறப்பித்துக் கூறியதற்கு அவன் சிவன்பால் பெற்ற வரமும் வலியுமே காரணமாக இருக்கலாம் என இராமன் உய்த்துணர்ந்து இங்ஙனம் வினவியவாறு.

(உரு)

**இராமன் வேண்டுகோளின்படி அகத்தியர் சொல்லத் தொடங்குதல்**

26. இரக்க மில்லா வன்னெஞ்சத்
தெல்லா மாயை களும்வல்ல
அரக்கர் பிறப்பு மவர்பெற்ற
வரமும் வலியு மவர்செயலும்
பரக்க வுரைமி னெனவமரிற்
பண்டிந் திரனுக் குடைந்தசுரர்
கரக்குங் கடலே ழையும்வாங்கிக்
கையால் குடித்த முனிகழறும்.

**இரக்கம் இல்லா வல்நெஞ்சத்து எல்லா மாயைகளும் வல்ல அரக்கர் பிறப்பும் அவர்பெற்ற வரமும் வலியும் அவர்செயலும் பரக்க உரைமின் என அமரில் பண்டு இந்திரனுக்கு உடைந்து அசுரர் கரக்கும் கடல் ஏழையும் வாங்கிக் கையால் குடித்த முனிகழறும்.**

பொ: இரக்கம் இல்லாத வன்மை மிக்க நெஞ்சத்தோடு எல்லா மாயைகளும் செய்ய வல்லவராய அரக்கர்தம் பிறப்பு வரலாற்றையும் அவர்பெற்ற வரங்களையும் வரங்களால் எய்திய வலிமையையும் அவ்வலிமைகொண்டு அவர்செய்த செயல்களையும் விரிவாகச் சொல்லுங்கள் என்றுகூறி போரில் முற்காலத்து இந்திரனுக்குத் தோற்ற அசுரர்கள் ஒளிந்துகொண்ட கடல் ஏழினையும் கையால் முகந்து குடித்த அகத்திய முனிவன் சொல்லுவானுனன்.

கு: இரக்கமில்லா நெஞ்சம் வன்னெஞ்சம் என நெஞ்சிற்கு அடையாக்குக. பரக்கவுரைத்தலாவது விரிவாகச் சொல்லுதல். விருத்தராசுரன் முதலிய அசுரர் இந்திரனுக்கு அஞ்சிக் கடலில் ஒளிந்துகொண்டாராக இந்திரன் அகத்திய முனிவரை வேண்ட அம்முனிவர் அக்கடல் நீரைக்குடித்து மறைந்திருந்த அசுரர்களை வெளிப்படுத்திய வரலாற்றை நினைந்து 'பண்டிந்திரனுக்கு உடைந்து அசுரர் கரக்கும் கடலேழையும் வாங்கிக் கையால்குடித்த முனி' என்றார். கையால் வாங்கிக் குடித்த என மாறுக. வாங்குதல் இங்கு முகத்தலை யுணர்த்தியது. கழறுதல், இங்குச் சொல்லுதலை யுணர்த்தியது. கழறும், செய்யும் என்னும் வாய்பாட்டு வினை முற்று இங்கு உயர்திணை ஆண்பாலை உணர்த்தியது. (உசு)

**திருவோலக்கப் படலம் முற்றிற்று.**

# 2. புலத்தியப் படலம்

## முன்னுரை

இராமன் விரும்பியபடி அரக்கர்தம் வரலாற்றை அகத்திய முனிவர் சொல்லத் தொடங்கிப் புலத்தியன் என்ற முனிவரின் மரபு விரிந்தமைப் பற்றிக் கூறும் பகுதியாகலின் இது புலத்தியப் படலம் என்று பெயர் பெறுகின்றது. இப்படலம் சில ஏடுகளில் குபேரன் பிறப்புப் படலத்தோடு இணைந்தும் காணப்படுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

அண்டர் நாயகனாகிய திருமாலின் அழகிய திருவுந்தியாகிய மடுவில் முளைத்தெழுந்த தாமரை மலரில் தோன்றிய பிரமன் மகனாகிய புலத்தியன் என்பவன், சூரியனது தேர்,வலம் வருகின்ற விண்ணளாவிய மேரு மலையை அடைகின்றான். அந்த மலைச் சாரலில் அருவினை அகலுமாறு யாவரும் அருந்தவம் செய்தற்குரிய அழகிய பொழில்களையுடைய தவவனத்தில் அமர்ந்து தன்னைச் சார்ந்த வினைகள் தன்னைவிட்டு நீங்குமாறு ஐம்பொறிகளையும் அடக்கி அருந்தவம் செய்து கொண்டிருக்கிறான். அப்பொழுது, நாக கன்னியரும் முனிவர் கன்னியரும் பொன்னுலக மங்கையரும் ஆகிய பாகு போன்ற மொழியினையும் பங்கயம் போன்ற முகத்தையுமுடைய அப்பெண்டிர், அந்தப் பொழில் வனத்தில் புகுந்து, பாடுவார், நீராடுவார், பன்மலர் பறித்துச் சூடுவார், நறுமலர்களை நாடுவார், தோழியரைத் தேடுவார், தேடிக்கூடுவார், தேவரும் திகைப்ப ஆடுவாருமாய் விளையாடுகின்றார்கள்.

இவ்வண்ணம், தான் தவம்புரியும் இடத்தில் வந்து அப் பெண்டிர் நாள்தோறும் விளையாடுதலால் புலத்திய முனிவரின் சிந்தை, ஒருமைப்பாட்டில் நீங்கிக் கலங்கிடத் தவம் சிதைகின்றது. ஆதலால் முனிவர்க்கு அப்பெண்டிர்மேல் கோபம் பொங்குகின்றது. அப்பெண்டிரெல்லாம் மருள அவர்முன் வந்து தோன்றுகின்றான். முனிவன். எரியும் நெஞ்சினனாய்ச் சொல்லுகின்றான். 'கன்னியர்களே! இன்று முதல் நீவீர் இங்கு வரலாகாது. என் செய்தவம்

குலைய ஆடுதலும் பாடுதலும் செய்யலாகாது. என் சொல்லினை மீறி நீங்கள் வருவீராயின் நுமக்கு அடாத கருவுண்டாவதாக, எனச் சபிக்கின்றான். இந்தச் சாபத்தைக் கேட்டவுடன் அந்தக் கன்னியர் கலங்கி வேறு வேருகத் திசைதொறும் வெருவி ஓடிவிடுகின்றனர்.

இந்தப் புலத்தியன் சாபமொழியை அறியாத திரணவிந்துவின் மகள், தன் தோழியரைத் தேடிக்கொணடு அங்கு வருகின்றாள். பயமில்லாது பண்டுபோல் விளையாடுகின்றாள். அவள் வரவையறிந்த புலத்திய முனிவன் தண்டமும் குண்டிகையும் தாங்கிய கைகளோடு மறை பாடிக் கொண்டிருக்கின்றான். அந்த வேதவொலி கேட்டுத் திரும்பிப் பார்க்கின்றாள். தவமுனிவனைப் பார்த்தவுடன் அவள் வயிற்றில் கருப்பம் உண்டாய்விடுகின்றது. மேனி வெளுக்கின்றது விழிகள் பசக்கின்றன. இவ்வாறு ஆதற்குக் காரணம் அறியாத அப்பெண் சென்று தன் தந்தை திரணவிந்துவை வணங்கி வினவுகின்றாள்.

யான் என் பாங்கிமார்களைத் தேடிக்கொண்டு புலத்திய முனிவன் ஆசிரமத்தின் அருகில் சென்றேன். அவ்வளவுதான். என் மேனி இவ்வண்ணம் ஆயது. இப்படி ஆதற்குக் காரணம் யாது என்கின்றாள். புலத்தியன் சாபத்தாலாயது என்பதை திரணவிந்து முனிவன் யோகத்திலிருந்து ஞானக்கண்ணால் அறிந்துகொள்கின்றான். அவ்வாறு அறிந்துகொண்ட முனிவன், பெறற்கரியதன் கன்னியை அழைத்துக்கொண்டு பெருந்தவ முனிவனாகிய புலத்தியன் இருப்பிடத்தை அடைந்து புலத்திய முனிவனை நோக்கி நிறைந்த நூற் கேள்வியையுடையவனே! என் கன்னியாகிய இவள், நின் பன்னியாதற்குச் சிறந்த தகுதியுடையவள். குணவதி என்று சொல்லி மணம் செய்து கொடுக்கின்றான்.

தந்தை புலத்தியனுக்குக் கொடுத்த நாள் முதல் குணதிவ, தன் கொழுநனாகிய புலத்திய முனிவனுக்குப் பொருத்தமான பணிவிடைகளைச் செய்துகொண்டு வரும் நாளில் ஒருநாள் வினைகளைக் கடிந்த புலத்திய முனிவன் தன் காதலியின்மேல் வைத்த பேருளினால் ஒன்று சொல்கின்றான். குணவதி! அன்புமிக்க நின் தோழிய

ராய கன்னியரைச் சோலையில் தேடிக்கொண்டு வந்த நீ யான் சொல்லும் வேதத்தின் ஓசையைக் கேட்டமையால் சிறந்த கேள்வி யன் என்று பொருள்படும் 'விச்சிரவா' என்ற பெயருடைய ஒரு மகனைப் பெறுவாய்' என்று கூறினன். அந்த வாசகத்தை அருள் முனிவன் கூறியவுடன் மகிழ்ந்த மனமுடைய குணவதி தன் திரு வயிற்றினில், தந்தை போலவே தவம் தழைக்க, மறைவிளங்க விச்சிரவா என்பவன் வந்து பிறந்தான், ஒப்பற்றவனாகிய விச்சிரவா தன் தந்தை போன்று அறத்தையே விரும்பி ஒழுகுதலி னால் அவனுக்குப் பரத்துவாச முனிவன் தேவவன்னியாகிய தன் கன்னியை மகிழ்ந்து மணந்து கொடுக்கின்றான்.

தன்னை மணந்துகொண்ட விச்சிரவா சொல்லிய வண்ணம் ஏவல் செய்துகொண்டிருக்க அம்முனிவன் அருளால் அத்தேவ வன்னியின் வயிற்றில் ஓரழகுமிக்க மணிபோன்ற புதல்வன் தோன்றுகின்றான். பிரமன் முதலியோர் வந்து அப்புதல்வனைப் பார்த்து மகிழ்ந்து வைச்சிரவணன் என்று பெயர் வைத்துச் சென்றனர். வைச்சிரவ ணன் வளர்ச்சிபெற்று விரிந்த வேதங்களின் பொருள் முடிவைத் தெரிந்து கொண்டு தவஞ்செய்வதில் பற்றுடையவனாய்த் தருமம் தழைத்திடவும் தீவினை சரிந்து ஓடிடவும் வனத்தில் பல்லாண்டுகள் கடுந்தவம் புரிகின்றான். அவன் தவத்தினையுணர்ந்த பிரமன், அவன் முன்தோன்றி 'உன்னை ஒப்பவர் இம் மூவுலகத்தும் இல்லை என்று புகழ்ந்து 'நீ விரும்பியதைத் தருவேன்' சொல்லுக என் கின்றனன்.

உடனே வைச்சிரவணன் பிரமனை வணங்கி இந்திரன், எமன் வருணன் முதலியவர்களோடு உலகபாலகன் ஆகவும் நிதிக்குத் தலைவனாகவும் விரும்புகின்றேன். என்று சொல்லப் பிரமன் அவ்வாறே கொடுக்கின்றான். பின்பு, போக்கு வரவு புரிவதில் மனத்தின் வேகத்தையுடையதும் சூரியன் தேரைக் காட்டிலும் விரைந்து செல்வதும், ஏழுலகத்தும் உள்ளோர் யாவரும் ஒரு காலத்துக் கலந்து ஏறினாலும் நிரம்பாமல் வெற்றிடம் கொள்வதும், குதிரை பூட்டாததும் ஆகிய புட்பக விமானத்தையும் பிரமன் தானே கொடுக்கின்றான். ஆசிகள் சொல்லிப் போகென விடுத்துச் செல்கின்றான். விண்ணவர் சூழ்தர விரிஞ்சன் போனபின்பு, தடுக்க

முடியாத அருளினையுடைய தனபதி, தான்பெற்ற செல்வங்களைப் பற்றித் தன்னைப் பெற்ற தந்தைக்குச் சொல்கின்றான்.

இத்தகைய பெருவரங்களைக் கொடுத்த பிரமன் இன்ன இடத்தில் இருப்பாயாக என இயம்பவில்லை; ஆதலால், பகைவர்களால் நெருங்கமுடியாததாய்த் துறக்கமே போன்று இன்பம் நிறைந்ததாய் உள்ள ஓரிடத்தை நீ எனக்குச் சொல்லுக என வைச்சிரவணாகிய தனதன் தந்தையைக் கேட்கின்றான். விச்சிரவா, சிந்தித்து, இலங்கை மாநகர் முன்னாளில் இராக்கதர்களின் இருப்பிடமாக இருந்தது. அவர்கள் வலிமை மிக்க சக்கரப் படையையுடைய திருமாலோடு எதிர்த்துப் போர் செய்து கலங்கித் தோற்றோடிப் பாதலத்தில் மறைந்து கொண்டார்கள். அந்த இலங்கை நகரமே நீ சொன்ன இயல்புகளையுடையது. அந்நகரில் நீ சென்று தங்குவாயாக என் விச்சிரவா விளம்பினான். நல்லதொரு நகரைக் குறிப்பிட்ட தந்தையை மகிழ்ச்சியுடன் வணங்கி நன்று! நன்று! எனப்பாராட்டிவிட்டு அந்த இலங்கை மாநகரில் சென்று சித்தர், வித்தியாதரர், இயக்கர் முதலியோர் தன்னைச் சூழ்ந்திருப்பத் தங்கினான். அரக்கர்கள் திருமாலுக்கு அஞ்சி ஓடிய நாள் முதல் அழகு அழிந்து காணப்படும் இலங்கை விளக்கமுற்று இப்போது சிறக்குமாறு தனதன் யாவரும் தன்னைத் தொழுது அடிபோற்றிட மணிமுடியணிந்த இந்திரனைப் போல எழிலுற வீற்றிருக்கின்றான்.

என்று எழுகடலையும் செங்கையால் வாங்கியுண்ட அகத்திய முனிவன் இயம்ப, துளப மணிந்த மணிமுடி துளக்கிச் செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய இராமன், இராவணன் முதலிய அரக்கர் புலத்தியன் மரபினர் என்று முன்னோர் மொழிந்தனர். ஆனால் அம்மரபுக்கு வேறாகவும் ஓரரக்கர் மரபு இருந்தது என்பது இப்போது புலனாகின்றது. அந்த மரபு எது? அந்த மரபில் தோன்றிய அரக்கர் யார்? அந்தப் பெருவலி படைத்த இராக்கதர் பிறப்பும் இலங்கை அவ்விராக்கதர்க்கு உரித்தாய காரணமும் மாயனுக்கு அவ்விராக்கதர் தோற்றோடிய வண்ணமும் பிறவும் சொல்லுங்கள் என, அகத்திய முனிவன் சொல்கின்றான் என்பதாகும்.

## ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்.

**வான்மீகத்தில் :**

**1.** புலத்தியன் புத்திரனுகிய விச்சிரவாவுக்கும் பரத்துவாசரின் மகளாகிய தேவ வன்னிக்கும் சிறந்த புதல்வன் பிறந்தபொழுது, அப்புதல்வனின் பாட்டனுகிய புலத்தியன் குழந்தை பிறந்த காலத்துக் கிரக நிலையைக் கண்டறியும் நுண்ணறிவால் ஆராய்ந்து பார்த்து இவன் தனுதிபதியாய் விளங்கப் போகின்ருன் என்பதையும் கிரக நிலை இவனுக்குப் பெருஞ் சிறப்பு நல்கப் போகின்றது என்பதையும் பெரும்புகழ் பெறப் போகின்ருன் என்பதையும் அறிந்து அப்போதே மகிழ்ச்சி மிக அடைகின்ருன். தேவமுனிவர்களோடு அப்பிள்ளைக்குப் பெயர் வைப்பதுபற்றி ஆராய்ந்து இவன் தந்தை விச்சிரவாவைப் போலவே எல்லாக் குணங்களிலும் ஒத்திருத்தலால், வைச்சிரவணன் எனத் தற்காலம் பெயர் பெறுவானுக என்று கூறியதாக உள்ளது.

**ஒட்டக்கூத்தரில் :**

வைச்சிரவாவின் பிறந்தநாளின் கிரக நிலையைக் கணித்துப் புலத்தியன் தன்பேரனின் எதிர்காலம் பற்றிய நினைவுகளைக் கருதி மகிழ்ந்த நிகழ்ச்சி சொல்லப்படவில்லை. பிரமன் முதலிய தேவர்கள் வந்து பெயர் வைத்ததாகவேயுள்ளது புலத்தியன் பெயர் வைத்ததாகச் சொல்லப்படவில்லை.

**2.** வான்மீகத்தில் : வைச்சிரவணன் ஆயிரம் ஆண்டுகளை ஆகாரம் இன்றி ஓராண்டுபோலத் தவத்தில் கழித்ததாகக் கூறப்பட்டுள்ளது.

இக்கால வரம்பினை ஒட்டக்கூத்தர் சொல்லவில்லை.

**வான்மீகத்தில் :**

**3.** பிரமதேவன் வைச்சிரவணனுடைய தவத்தைப் பாராட்டி வேண்டும் வரம்கேள் என்று கூறியபோது தனுதிபதியாகவும் உலகபாலகரில் ஒருவனுகவும் இருக்க வரம் தருமாறு கேட்கின்ருன். வைச்சிரவணன் உலக பாலகரில் ஒருவனுக வேண்டும் என விரும்பியதைப் பிரமன் அறிந்தபோது மிகவும் மகிழ்ந்து தருமமறிந்தவனே! நானும் உலக பாலகரில் நான்காமவனைப் படைக்க

எண்ணியிருந்தேன். உன்னுடைய விருப்பப்படி நாலாவதாகிய நிதிசன் பதவியை நீ அடைவாய். இந்திரன், வருணன், எமன் இவர்களோடு நான்காமவனாக நீ விளங்கக் கடவாய் எனக் கூறியதாக உள்ளது.

ஒட்டக்கூத்தரின் உத்தரகாண்டத்தில் இவ்வாறு பிரமன் கூறியதாக இல்லை.

4. வான்மீகத்தில்: வைச்சிரவணன் (குபேரன்) தந்தையை வணங்கித் தனக்குப் பிரமன் கொடுத்த வரங்களைக் கூறிவிட்டுத் தங்குமிடம் இதுவெனப் பிரமன் சொல்லவில்லை. ஆதலின் பாது காப்புடைய நல்ல இடம் ஒன்று சொல்லுங்கள் எனக் கேட்ட போது, விச்சிரவா 'தென்கடற்கரையில் திரிகூடம் என்னும் மலையின் உச்சியில் இந்திரனுடைய அமராவதி போன்ற அழகு டைய இலங்கை என்ற நகரம் ஒன்று உளது. அது அரக்கர்கள் வாழ்தற்காக விசுவகர்மாவினால் செய்யப்பட்டது. அமராவதி போன்ற இலக்கணமும் அழகும் அமைந்தது. தங்க மயமான மதிலையும் அகழியையும் உடையது. இயந்திரங்களாலான மதிற் பொறிகளையுடையது. பொன்னாலும் வைடூரியத்தாலும் இயன்ற தோரணங்களையுடையது. இன்ப மயமானது' என இலங்கையின் தனிச்சிறப்பைச் சொல்வதாக இருக்கின்றது

ஒட்டக்கூத்தர் பொதுவகையில் இலங்கையைக் குறிப்பிட்டுள் ளாரேயன்றி இவ்வாறு சிறப்புவகையில் கூறவில்லை.

5. வான்மீகத்தில்: குபேரன், தன் தந்தை குறிப்பிட்ட இலங்கைக்குச் செல்லும் போது நைரிதர்கள் என்னும் பிசாசர் களால் சூழப்பட்டவனாய் இலங்கையில் குடிபுகுந்தான் எனவும் தேவர்களுக்கு இந்திரன்போல அந்த நைரிதர்களுக்கு அரசனாய் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தான் எனவும் உள்ளது.

ஒட்டக்கூத்தர் பிசாசர்களைக் குறிப்பிடவில்லை. சித்தர், வித்தியாதரர், இயக்கர் என்பவர்களோடு இலங்கையில் சென்று குபேரன் குடியேறியதாகக் கூறியுள்ளார்.

## படலப் பொருள் சிறப்பு

இப்படலத்தில் முனிவர் கன்னியர் முதலாய கன்னியர்கள் இமயமலைச் சாரலில் மலர்ப்பொழிலில் புலத்திய முனிவர் தவம் புரியும் இடத்திற்கு அருகே வந்து விளையாடிய நிகழ்ச்சியை யுணர்த்தும் பாடல் இயல்பாக அமைந்து அவர்தம் ஆடலை நம் கண்முன் நிறுத்திக் காட்டுவதாக உள்ளது. 'பாடுவார்' என்று தொடங்கும் அப்பாடலில் பாடுவார் புனலாடுவார். பன்மலர் பறித்துச் சூடுவார். மலர்நாடுவார், தோழியர் தம்மைத் தேடுவார் அவர்க் கூடுவார். தேவரும் திகைப்ப ஆடுவார். விளையாடுவார் ஆயினர் அடங்க என எதுகை நயம் அமைய எட்டுத் தொழில்களில் அவர் தம் செயல்களை விளக்கியிருப்பது சுவை நலம் பயப்பதாகும். பாடுதலும், புனலாடுதலும், பன்மலர் சூடுதலும் நன்மலர் நாடுதலும் தோழியரைத் தேடுதலும் அவரைக் கூடுதலும் தேவரும் திகைப்ப ஆடுதலும் அவர்தம் விளையாட்டாக அமைகின்றன. நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் 'வெள்ளிற்குறுமுறி கிள்ளுபுதெறியாக் கோழியோங்கிய வென்றடு விறற்கொடி வாழிய பெரிதென்றேத்திப் பலருடன் சீர் திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச் சூரர மகளிர் ஆடுஞ்சோலை' எனக் கூறியுள்ள சூரர மகளிரின் ஆடலை நினைப்பிக்கின்றது, இவர்தம் ஆடல்.

இனி, பிரமன் குபேரனுக்குக் கொடுத்த புட்பக விமானத்தின் இயல்பைத் தெரிவித்துள்ள முறை சுருக்கமும் விளக்கமுமாக அமைந்து சுவையூட்டுகின்றது. வானத்தில் செல்லும் சூரியன் தேரினும் கடிய வேகத்தையுடையது. போக்குவரவு புரிவதில் மனோகதிபோன்றது. பதினான்கு உலகத்தும் உள்ள அனைவரும் ஒரே காலத்துக் கலந்து ஏறினாலும் நிரம்பாது வெளியிடம் மிகுவது. வேகமாகச் செல்லும் குதிரைகள் பூட்டப்படாதது புட்பக விமானம், என்கின்றார். இதில் புட்பக விமானத்தின் வேகத்தை உவமையாலும் உறழ்ச்சியாலும் புலப்படுத்தியிருத்தல் காணலாம். மனோகதியுடையது என்பது உவமை. இரவி தேரினும் கடியது என்பது உறழ்ச்சி. விமானத்தின் பரப்பைக் கூறும்போது ஈரேழுலகுள்ளோர், விரவியேறினும் வெளியிட்மிகுவது என்கின்றார். இதனால் எத்தனைபேர் ஏறினாலும் இடமில்லை என்று சொல்ல இடமில்லாமல் விரிந்துகொண்டே போகும் வியத்தகு இயல்புடையது என்பது

புலனுகின்றது. இவ்வளவு வேகமுடைய அந்த விமானம் குதிரைகள் பூட்டப்படாதது என்பதையும் கூறிவிடுகின்றுர். புட்பக விமானத்தைக் காணுத நமக்கும் அதன் வேகமும் பரப்பும் அமைப்பும் நன்கு புலப்படச் செய்துள்ளார்.

### புலத்தியன் மேருமலையை அடைதல்

27. அண்டர் நயக னணிதிக
 மூந்தியா மடுவில்
புண்ட ரீகநான் முகன்மகன்
 புலத்திய னென்போன்
மண்ட லந்தரு திவரகரன்
 றேரது வலஞ்சூழ்
விண்ட லந்திகழ் மேருவாம்
 வெற்பினைச் சேர்ந்தான்.

**அண்டர் நாயகன் அணிதிகழ் உந்தியாம் மடுவில்**
**புண்டரீக நான்முகன் மகன் புலத்தியன் என்போன்**
**மண்தலம்தரு திவாகரன் தேரது வலம் சூழ்**
**விண்தலம் திகழ் மேருவாம் வெற்பினைச் சேர்ந்தான்.**

**பொ :** தேவர்கள் தலைவனுகிய திருமாலின் அழகு விளங்கும் கொப்பூழாகிய மடுவில் தோன்றிய தாமரை மலரில் பிறந்த பிரமனுக்கு மகனுகிய புலத்தியன் என்பவன், மண்ணுலகத்தைத் தன்னொளியால் காப்பாற்றுகின்ற சூரியனுடைய தேரானது வலம் வருதற்குரியதாய் விண்ணுலகம் வரை உயர்ந்து விளங்கும் மேருவாகிய மலையினை அடைந்தான்.

**கு :** அண்டர்-தேவர். தாமரை தோன்றுதற்கு இடமுயைது பற்றி திருமாலின் உந்தியை மடுவாக உருவகஞ் செய்தவாறு. உந்தியா மடுவு உருவகம். புலத்தியன், பிரமன் மகன் என்பதும் அவன் தவஞ் செய்ய மேருமலையை அடைந்தான் என்பதும் இச் செய்யுளால் கூறியபடி. மண்டலந் தரு திவாகரன் என்றது மண்

ணுலகத்தைத் தன்னொளியால் காப்பாற்றுகின்ற சூரியன் என்ற வாறு. சூரியன் ஒளியின்றேல் மண்ணில் ஓருயிரும் வாழாமை தெளிவு. இனி, சூரிய மண்டலத்திலிருந்து பிதிர்ந்த சிறு பிதிர்வே பூமியாவது என்னும் இக்காலத்து விஞ்ஞானிகளின் கருத்திற்கு ஏற்பப் பூமியைத் தந்த சூரியன் எனப் பொருள் கூறலும் ஆம். சூரியனுக்குத் தேர் உண்டு என்பதும் அத்தேர்மேலேறி மேரு மலையைச் சுற்றி வருதல் அவன் இயல்பு என்பதும் புராண மரபு. காய்சினத்த கதிர்ச் செல்வன், தேர்பூண்ட மாபோல' (பட்டினப் பாலை-121-122) என்றதும் நினைக. தேரது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. வலஞ்சூழ் மேரு, விண்டலந் திகழ் மேரு எனத் தனித்தனி மேருவிற்கு அடையாக்குக.

### புலத்தியர் தவஞ்செய்தல்

28. அந்த மால்வரைச் சாரலி
லருவினை யகல
இந்த மாநிலத் தியாவரு
மருந்தவ மியற்றும்
சந்த வார்பொழிற் றடவனஞ்
சார்ந்துசார் வினைகள்
சிந்த மற்றவ னருந்தவஞ்
செய்கின்ற வேலை.

**அந்த மால்வரைச் சாரலில் அருவினை அகல**
**இந்த மாநிலத்து யாவரும் அருந்தவம் இயற்றும்**
**சந்த வார்பொழில் தடவனம் சார்ந்து சார்வினைகள்**
**சிந்த, மற்றவன் அருந்தவம் செய்கின்றவேலை.**

**பொ:** அந்தப் பெரிய மேருமலைச் சாரலில் உயிரை விட்டு அகற்றுதற்கு அரிய இருவினைகளும் அகலுமாறு இப்பெரிய உலகத்து யாவரும் அரியதவத்தைச் செய்தற்குரிய அழகிய நீண்ட பொழில்களோடு கூடிய பெரிய வனத்தை அடைந்து

தன்னுயிரை விடாது சார்ந்துள்ள வினைகள் கெட அந்தப் புலத்தியன் அரிதாகிய தவத்தைச் செய்கின்ற பொழுது

கு: குளகம். இருள்சேர் இருவினையும் அகல உலகத்தோர் தவம் இயற்றுதற்குரிய இடத்தில் தன்வினை கெட அருந்தவம் புரிகின்றான் என்றவாறு. சந்தம்—அழகு. இனி, சந்தவார்பொழில்— சந்தன மரங்கள் நீண்டு வளர்ந்துள்ள பொழில் எனக் கூறலும் ஆம். சார்வினை, வினைத்தொகை. சார்ந்த வினையாவது. சஞ்சிதம் பிராரத்துவம். சாரக்கடவ வினையாவது ஆகாமியவினை. இம்மூவகை வினைகளையும் நீங்கிய வழியல்லது பரம்பொருளைச் சாரவியலாமை யின் அவை சிந்த அருந்தவம் செய்கின்றான் புலத்தியன். மாரியினும் பனியிலும் நீர்நிலை நிற்றலும் கோடைக்கண் வெயில் நிலைநிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தம்முயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு உண்டியின்றிச் செய்யப்படுவ தாகலின் அருந்தவம் எனச் சிறப்பித்தார். வேலை-பொழுது. (உ)

### அங்குக் கன்னியர் புகுதல்

29. நாக கன்னியர் நான்மறை
முனிவர்கன் னியர்கள்
போக மேவிய பொன்னுல
கத்துமங் கையர்கள்
பாகு போன்மொழிப் பங்கய
முகத்திய ரந்தப்
பூக நீடிய பொழில்வன
நாடொறும் புகுந்து.

நாக கன்னியர் நான்மறை முனிவர்கன்னியர்கள்,
போகம் மேவிய பொன்னுலகத்து மங்கையர்கள்
பாகுபோல் மொழிப் பங்கய முகத்தியர் அந்தப்
பூகம் நீடிய பொழில்வனம் நாள்தொறும் புகுந்து.

**பொ :** நாகர் கன்னியர்களும் நான்கு வேதங்களையும் ஓது கின்ற முனிவர் கன்னியர்களும், போக நுகர்ச்சி பொருந்திய பொன் உலகத்து மங்கையர்களும் சர்க்கரைப் பாகுபோன்ற இனிய மொழியைப் பேசிக்கொண்டு தாமரை மலர் போன்று மலர்ந்த முகத்தியராய் அந்தக் கமுக மரங்கள் நீண்டு வளர்ந்துள்ள பொழிலோடு கூடிய வனத்தின்கண் நாள்தொறும் புகுந்து.

**கு :** குளகம். பாடுவார், புனல் ஆடுவார், என வரும் செய்யுளில் முடியும். பொன்னுலகம் போகபூமி எனப்படுதல் புலப் படப் போகமேவிய பொன்னுலகத்து என்றார். இந்த முத்திற மகளிரும் நாள்தொறும் பாகுபோன்று இனிக்கும் மொழிகளைப் பேசிக்கொண்டு செந்தாமரைபோல் மலர்ந்த முகத்தினராய் அந்தத் தவவனத்தில் புகுந்து பாடுதலும் ஆடுதலும்செய்வார் என்றவாறு. பூகம்–கமுகம். கன்னியர்கள் என்றது மணம் செய்து கொள்ளாத பருவ மங்கையரை. பேதை, பெதும்பைப் பருவத் தரையன்று.

(௬)

### அவர் ஆடலும் பாடலும்

30. பாடு வார்புன லாடுவார் பன்மலர் பறித்துச்
சூடு வார்மலர் நாடுவார் தோழியர் தம்மைத்
தேடு வாரவர்க் கூடுவார் தேவருந் திகைப்ப
ஆடு வார்விளை யாடுவா ராயின ரடங்க.

பாடுவார் புனல் ஆடுவார் பல்மலர் பறித்துச்
சூடுவார், மலர்நாடுவார், தோழியர் தம்மைத்
தேடுவா, அவர்க்கூடுவார், தேவரும் திகைப்ப
ஆடுவார் விளைஆடுவார் ஆயினர் அடங்க.

**பொ :** வாய்திறந்து பண்களைப் பாடுவார்கள், பின்பு அருவி நீரில் மூழ்கி நீராடுவார்கள். பின்பு பலவண்ண மலர்களைக் கொய்து தலையில் சூடிக் கொள்வார்கள். மேலும் சூடிக் கொள்ள மலர்களை ஆராய்வார்கள். சிலர் தம் தோழியர்களைத் தேடுவார்

கள். தேடிய அவர்களைக் கண்டு கூடுவார்கள் பின்பு எல்லோரும் தேவர்களும் திகைப்பு எய்துமாறு தனித்தனியே ஆடுவார்கள்; பின்பு பலரும் கூடி விளையாடுவார்கள் ஆயினர்.

கு: அடங்க ஆடுவார் என இயையும்; அடங்க, எஞ்சாமை யுணர்த்தியது. பாடுவார் எனவே பாடுதற்குச் செயப்படு பொருளாகிய பண் வருவிக்கப்பட்டது. நாடுதல்-ஆராய்தல். நல்ல மலர் யாதென ஆராய்தல். மரங்கள் அடர்ந்த வனமாதலின் தம் தோழியரைத் தேடுதல் வேண்டுவதாயிற்று. இம்மங்கையரின் ஆடலைக் கண்டு இவர் யாரோ என இமையா நாட்டமுடைய தேவரும் திகைக்கலாயினர் என்க. தேவரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பும்மை. தனித்தனி ஆடுதலும் பலர் சேர்ந்து ஒருங்கே யாடுதலும் ஆகிய இருதிறனும் புலப்பட ஆடுவார் எனவும் விளையாடுவார் எனவும் கூறினர். 'வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக், கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி, வாழிய பெரிதென் றேத்தப் பலருடன், சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச், சூரர மகளிர் ஆடுஞ்சோலை' (திருமுருகாற்றுப் படை) எனச் சூரர மகளிர் ஆடும் இயல்பை நக்கீரனார் நவின்றிருத்தல் காணலாம். (ச)

புலத்தியர் அவர் முன் தோன்றல்

31. இந்த வண்ணம்வந் தேந்திழை
யார்விளை யாடச்
சிந்தை யானது கலங்கிடச்
செய்தவஞ் சிதைய
அந்த மாமுனி யாரழ
லாமெனச் சீறி
வந்து தோன்றினன் மங்கையர்
யாவரு மருள.

**இந்த வண்ணம் வந்து ஏந்திழையார் விளையாடச்
சிந்தையானது கலங்கிடச் செய்தவம் சிதைய,**

அந்த மாமுனி ஆர்அழல் ஆம் எனச்சீறி
வந்து தோன்றினன் மங்கையர் யாவரும் மருள

**பொ:** உடம்பின்கண் அணிந்த அணிகலன்களையுடைய மங்கையர் இவ்வண்ணம் வந்து விளையாடாநிற்க, அவர்தம் பாடலாலும் ஆடலாலும் அந்தச் சிறந்த புலத்திய முனிவன், சிந்தை கலங்கப் பெற்றுத் தான் செய்து கொண்டிருந்த தவம் சிதைதலால், அரிய நெருப்பு என்னுமாறு சீறிக்கொண்டு மங்கையர் யாவரும் மருட்சி கொள்ளுமாறு அங்கு வந்து தோன்றினான்.

**கு:** ஆடுங்கால் அப்பெண்டிரணிந்த அணிகலன்களின் ஒலியே மிக்குத் தோன்றியமை புலப்பட இங்கு ஏந்திழையார் என அவர்க்குப் பெயர் கொடுத்தார். இழை—அணிகலன். ஏந்துதல்—மெய்யின்கண் அணிதல். மனம் புறம்போகாது ஒருமித்திருந்து இறைவனடி நினைப்பதே தவமாகலின் இம்மங்கையர்தம் ஆடல் பாடல்களால் அம்மன ஒருமை கெட்டுத் தவநிலை சிதைந்துபோனது நினைந்து புலத்தியன் அம்மங்கையர் மருளுமாறு நெருப்புப் போலச் சீறிக்கொண்டு வந்து தோன்றினான் என்க. செய்தவஞ் சிதைதலால் என ஏதுப் பொருளதாக்குக. சீறுதல்—கோபித்தல். மருளல் இங்கு வெருளுதலை உணர்த்தியது. வெருளுதல்—அஞ்சுதல். யாவரும் என்புழி உம்மை முற்றும்மை. மருள வந்து தோன்றினன் என முடிக்க. (ரு)

### புலத்தியன் சபித்தல்

32. எரியு நெஞ்சின னென்னிடை
யிற்றைநா ளொடங்கி
மருவி நீரெனின் மங்கைமீ
ருங்களுக் கடாத
கருவுண் டாகெனச் சவிப்பவக்
கன்னியர் கலங்கி
வெருவி யோடினர் திசைதொறும்
வேறுவே றாகி.

எரியும் நெஞ்சினன் உன்னிடை இற்றைநாள் தொடங்கி
மருவிநீர் எனின், மங்கையீர்! உங்களுக்கு அடாத
கரு உண்டாகெனச் சவிப்ப அக்கன்னியர் கலங்கி,
வெருவி ஓடினர் திசைதொறும் வேவேறுஆகி.

பொ: புலத்தியன், எரியும் மனத்தினனாய் அக்கன்னியரைப் பார்த்து மங்கைமீர்! இன்று தொடங்கி நீவிர் என்னிடத்திற்கு வருவீர்களாயின், உங்களுக்குப் பொருந்தாத கருப்பம் உண்டாவதாக எனச் சாபம் கொடுக்கவே, அந்தக் கன்னியர்கள் மனம் கலங்கி அஞ்சித் திசைதொறும் வேறு வேருகி ஓடினார்கள்.

கு: சினத்தால் மனங் கொதித்தலையே இங்கு எரியும் நெஞ்சினன் என்றார். மனமொருமித்துத் தவஞ்செயும் புலத்தியர்க்குப் பலப்பல கன்னியர் அங்குவந்து ஆடியும் பாடியும் ஆரவாரம் செய்தல் இடையூறாக இருத்தலின் அவர்மனம் கொதித்தது என்க. அம்முனிவர் தவமிருக்கும் இடம் அவர்க்கே யுரியதாதல் தோன்ற என்னிடை மருவி னீரெனின் என்றார். இடை—இடம். கன்னியர் ஆடவனை முறைப்படி மணந்த பின்னர்க் கருவுறுதலே முறைமையாதலின் மணமுறாத கன்னியர் கருவை அடாதகரு என்றார். கூடி விளையாடிய அக்கன்னியர் கூடி ஒருவழிச் செல்லாமல் அச்சத்தால் திக்கிற்கொருவராகப் பிரிந்து ஓடினார்கள் என்பார். திசைதொறும் வேறுவேறு ஆகி ஓடினர் என்றார். (௩௨)

திரணவிந்துவின் மகள் வருதல்

33. அரிய நான்மறைப் பொருளினை
யங்கையிற் கனிபோல்
தெரியு மாமுனி திரணவிப்
துவின்மடக் கன்னி

புரியு மாதவப் புலத்தியன்
சாபம் தறியாள்
கரிய வார்குழற் கன்னியர்
தங்களைத் தேடி.

**அரிய நான்மறைப் பொருளினை அங்கையில் கனிபோல்**
**தெரியும் மாமுனி திரணவிந்துவின் மடக்கன்னி**
**புரியும் மாதவப் புலத்தியன் சாபமது அறியாள்**
**கரிய வார்குழல் கன்னியா தங்களைத்தேடி,**

**பொ:** பிறரால் அறிதற்கு அரிய நான்கு வேதங்களின் பொருளை உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெளிவாகத் தெரிந்த வனாகிய திரணவிந்து என்ற முனிவரின் மகளாகிய இளமை பொருந்திய கன்னி, மாதவம் புரியும் புலத்தியன் இட்ட சாபத்தை அறியாதவளாய், கரிய நீண்ட கூந்தலையுடைய கன்னியர் தங்களைத் தேடிக்கொண்டு.

**கு:** குளகம். விளையாடிட எய்திக் கண்டலும் என வருஞ் செய்யுளில் முடியும். தெரியவரும் மறைப்பொருளைத் தெளிவாகத் தெரிந்தவன் திரணவிந்து என்றவாறு. அகங்கை என்பது அங்கை யென்றாயது. அகமுளர்ச் செவி கைவரின் இடையன கெடும் என்பது நன்னூல். அகங்கை-உள்ளங்கை. நன்கு தெரியும் தன்மைக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல என உதாரணங்கூறுதல் உலகியல். மாதவம் புரியும் புலத்தியன் என மாறுக. இனி, புரியு மாதவத் தினையுடைய எனப் பொருள் கூறிப் பெருந்தவம் கைவரப் பெற்ற வன் புலத்தியன் என்று விவக்கியவாறும் ஆம். சாபமது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி, அறியாளாய்த் தேடி என முற்றெச்ச மாக்குக. கன்னியரின் அழகுடைமை புலப்படக் கரியவார்குழற் கன்னியர் என்றார். பெண்களுக்குப் பேரழகு தருவது கரியதும் நெடியது மாகிய கூந்தலே என்பது தெளிவு. கரிய நெடிய குழலுடையாரைத் தேடி வந்தவள், வெளிய நெடிய சடையும் தாடியும் உடையாரைக் காண நேர்ந்ததே என்ற வியப்புச் சுவை யும் அழுகைச் சுவையும் இங்கு இடம் பெறுமாறு காணலாம். (எ)

வந்த கன்னி முனிவரைக் கண்டவுடன் கருப்பமடைதல்

34. பண்டு போல்விளை யாடிடப்
பயமில ளெய்தி
வண்டு சேர்மலர்க் குழலினுள்
மறையொலி கேட்டுத்
தண்டு குண்டிகை தாங்குகைத்
தவமுனி தன்னைக்
கண்ட லும்மவள் வயிற்றினுண்
டாயது கருப்பம்.

**பண்டு போல் விளையாடிடப் பயம் இலள் எய்தி**
**வண்டு சேர்மலர்க் குழலினுள் மறைஒலி கேட்டு,**
**தண்டு குண்டிகை தாங்குகை தவமுனி தன்னைக்**
**கண்டலும் அவள் வயிற்றின் உண்டாயது கருப்பம்.**

பொ: வண்டுகள் மொய்க்கும் மலர்களையணிந்த கூந்தலை யுடைய அக்கன்னி முன்னை நாள் போலவே பிற கன்னியரோடு விளையாடிடப் பயம் இல்லாதவளாய் அவ்விடத்தை அடைந்து அங்கு எழும் வேத ஒலியைக் கேட்டு (நெருங்கிச் சென்று) யோக தண்டும் கமண்டலமும் தாங்கிய கைகளையுடைய புலத்தியனாகிய தவமுனியைக் கண்ட அளவில் அவள் வயிற்றினுள் கருப்பம் உண்டாயது.

கு: வண்டு சேர் மலர்க் குழலினுள் எனவே, வண்டின் இசையாலும் மலர்களின் மணத்தாலும் அக்கன்னியின் வரவு முனிவர்க்குத் தெரியலாயது என்ற குறிப்புப்பெறப்படும். சாபம் கொடுத்த முனிவர் அச்சாபத்தின் விளைவைக் காண விழைதல் இயல்பாகலின் அவள் கேட்க வேதவொலியை யெழுப்பினர் என் பதும் அவ்வொலி வந்தவழியே சென்று அக்கன்னி அம்முனிவரைக் கண்ணுற்றாள் என்பதும் உய்த்துணரலாம். குண்டிகை தாங்குகை என்ற சொல்லடுக்கின் அழகு காணலாம். குண்டிகை-கமண்டலம்;

தண்ணீர் சேமச்செப்பு. காண்டலும் என்பது எதுகை நோக்கி கண்டலும் என முதல் குறுகியது. (அ)

**கருவுற்றக் குறியோடு கன்னிசென்று தந்தையை வணங்குதல்**

35. மேனி யானது வெளுத்துத்தன்
விழிகளும் பசப்ப
மானி ணேக்கிஞன் மற்றதன்
காரண மறியாள்
தான்வி ரைந்துபோய்த் தந்தையை
வணங்கவித் தன்மை
ஆனகாரண மாங்கவ
னென்னென வறைவாள்.

**மேனிஆனது வெளுத்துத் தன் விழிகளும் பசப்ப
மானின் நோக்கிஞள் மற்றுஅதன் காரணம் அறியாள்
தான்விரைந்துபோய்த் தந்தையை வணங்க, இத்தன்மை
ஆனகாரணம் ஆங்கு அவன் என்னென அறைவாள்.**

**பொ :** மான்விழிபோன்ற கண்ணிணையுடைய அக்கன்னிப் பெண் தன் மேனி வெளுத்துக் கண்களும் பசப்பு எய்தவே, அங்ஙனம் ஆதற்குக் காரணம் யாது என்பதை அறியாதவளாய் விரைந்து சென்று தன் தந்தை திரணவிந்து முனிவரை வணங்கி நிற்க, அவ்விடத்து அம்முனிவன் நின்னுடம்பில் இத்தன்மை உண்டான காரணம் என்னே? என்று வினவ, அவள் சொல்லுவாள்.

**கு :** புலத்திய முனிவன் இவ்வாறு சபித்துள்ளதை அறியாதவளாதலின், அம்முனிவனைக் கண்டதும் மேனி வெளுத்துக் கண் பசந்தமைக்குக் காரணம் இன்னதென அறியாதவளாய்த் தந்தையைச் சென்று வணங்கிய பொழுது, அவன் தன் மகளின் உடம்பில் உண்டாயுள்ள வேறுபாட்டிற்குக் காரணம் யாது என வினவிய பொழுது அவள் நிகழ்ந்ததைச் சொல்லலானுள் என்றவாறு. மேனி வெளுத்துக் கண்பசந்ததை யறிந்தவுடன் அக்கன்னிப் பெண்ணின்

மருட்சியையுணர்த்த வேண்டி, மானினேக்கினள் என்று கூறிய நயம் சிந்தித்தற்குரியது. கணவனைச் சேர்ந்து கருக்கொண்டார்க் குரிய குறிகள் கணவனைப் பெருத கன்னிப் பெண்ணுக்கு உண்டாயுள்ளமை அதிசயம் ஆதலின் அம்முனிவன் இத்தன்மை ஆன காரணம் என்? என வினவலானன். (கூ)

**தன்மகள் சொன்னதுகேட்டு யோக நெறியால் நிகழ்ந்ததை முனிவன் அறிதல்**

36. பாங்கி மார்களைத் தேடியான்
படர்வன மெய்தி
ஓங்கு மாதவப் புலத்திய
னுறைவிட முற்றேன்
ஈங்கென் மேனிபோ யிவ்வண்ண
மாயினதென்ன ஆங்கு
யோகத்தி னிருந்தவன்
புகுந்தவா றறிந்தான்.

**பாங்கிமார்களைத் தேடி யான் படர்வனம் எய்தி**
**ஓங்கும் மாதவப் புலத்தியன் உறைவிடம் உற்றேன்**
**ஈங்குஎன் மேனிபோய் இவ்வண்ணம் ஆயினது என்ன,**
**ஆங்கு யோகத்தின் இருந்தவன் புகுந்தவாறு அறிந்தான்.**

**பொ.** யான் என் தோழியர்களைத் தேடிக்கொண்டு படர்ந்துள்ள காட்டை அடைந்து உயர்ந்த பெருந்தவமுனிவனுகிய புலத்தியன் தங்கியுள்ள இடத்தை அடைந்தேன். இங்கு முன்னிருந்த என் அழகிய மேனிபோய் இவ்வண்ணம் ஆகியது என்றுகூற அவ்விடத்து யோக வீற்றிருந்து அம்முனிவன், புலத்தியன் சாபத்தால் நிகழ்ந்தது இது என்பதை அறிந்து கொண்டான்.

**கு:** தோழியர்களைத் தேடி வனத்துள் புகுந்து புலத்திய முனிவன் தங்குமிடத்தையடைந்தவுடன் பழைய பொன்மேனி

பால்போல் வெளுத்த வண்ணம் ஆயது என்று தன் மகள் கூறியது கேட்டுக் காரணம் புலப்படாத திரணவிந்து முனிவன் யோகத்தி லிருந்து நிகழ்ந்ததை அறியலானுன் என்றவாறு. இவ்வண்ணம் ஆயது என்றது காட்சியளவையால் காணத் தன் வெளுத்த மேனியைக் காட்டிக் கூறியவாறு. பிறருக்குப்புலப்படாத நிகழ்ச்சி களை இவ்வாறு யோக நெறியிலிருந்து அறிதல் முனிவர்களின் இயல்பு. (கூ)

**திரணவிந்து முனிவர் தன் கன்னியைப் புலத்தியர்க்குக் கொடுத்தல்**

37. அறிந்த மாமுனி யரும்பெறற் கன்னியை
யுடன் கொண்
டிறந்த மாதவப் புலத்திய
னிருப்பிட மெய்தி
நிறைந்த கேள்வியாய் நினக்கிவ
டாரமா குகைக்குச்
சிறந்து ளாள்குண வதியெனச்
செப்பினன் கொடுத்தான்.

**அறிந்தமாமுனி அரும்பெறல் கன்னியை உடன்கொண்டு,**
**இறந்த மாதவப் புலத்தியன் இருப்பிடம் எய்தி,**
**நிறைந்த கேள்வியாய்! நினக்கு இவள்தாரம் ஆகுகைக்குச்**
**சிறந்துளாள் குணவதி எனச் செப்பினன் கொடுத்தான்**

**பொ:** (புலத்தியன் சாபத்தால் வந்தது என்பதை) ஞானக் கண்ணுல் அறிந்த திரணவிந்து மாமுனிவன் தன் பெறுதற்கரிய கன்னியைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு மிக்க பெருந் தவத்தையுடைய புலத்தியன் இருக்கும் இடத்தை அடைந்து, நிறைந்த நூற்கேள்வியையுடையாய்! உனக்கு இவள் மணைவி யாதற்குச் சிறந்தவள். குணவதி எனச் சொல்லிக் கொடுத்தான்.

**கு:** பெறல் அருங்கன்னி எனமாறுக. இறத்தல்-மிகுதல். தவத்திற் சிறந்த புலத்தியனுக்கு ஏற்ற அறிவும் ஒழுக்கமும்

குணமும் உடையவள் எனத் தன் கன்னியின் சிறப்பைச் சொல்லி அவன் உடன்பாடு அறிந்து மனைவியாகக் கொடுத்தான் என்க. நிறைந்த கேள்வியுடைய முனிவர் ஆதலின் கொள்ளெனக் கொடுக்கும் கன்னியையேற்றுக் கொள்ளுதல் முறைமை என்பது விளியால் புலப்படுத்தியவாறு. புலத்திய முனிவன் பார்வையால் கருவுற்ற கன்னியைப அம்முனிவனுக்கு மனைவியாக்குதலே முறைமையாதலின் இங்ஙனம் வேண்டிக் கொடுத்தான் என்க. குணவதி குணம் நிறைந்தவள். இனிக் குணவதி என்பது பெயர் எனலும் ஆம். (கக)

### தன் மனைவியின்பால் புலத்தியன் அருளுடையனாதல்

38\. கொடுத்த நாண்முதற் கொம்பனாள்,
கோதறு முனிவற்
கடுத்த வேவல்செய் தாங்கினி
தொழுகிட வந்தக்
கடுத்த வெவ்வினை கடிந்தவன்
காதலி தன்மேல்
எடுத்த பேரரு ளுடையனா
யிவ்வுரை யியம்பும்.

**கொடுத்தநாள்முதல் கொம்புஅனாள், கோது அறு முனிவற்கு அடுத்த ஏவல் செய்து ஆங்குஇனிது ஒழுகிட, அந்தக் கடுத்த வெவ்வினை கடிந்தவன், காதலி தன்மேல் எடுத்தபேர் அருள் உடையனாய், இவ்வுரை இயம்பும்.**

பொ: பூங்கொம்பு போன்றவளாகிய திருணவிந்து முனிவன் மகள். புலத்தியனுக்கு மனைவியாகத் தன்னைக் கொடுத்தநாள் தொடங்கி அந்தக் குற்றமற்ற புலத்திய முனிவனுக்குப் பொருந்திய பணிகளைச் செய்துகொண்டு இனிதாக நடந்துகொள்ள; அதுகண்டு! அந்தக் கடுமையான தீவினைகளை நீக்கியவனாகிய புலத்திய முனிவன் தன் காதலியாகிய அப்பெண்ணின்மேல் வளர்ச்சிமிக்க பேரருள் உடையவனாய் இச்சொல்லைச் சொல்லுவானானான்.

கு: கொம்பு என்பது மலர்கள் நிறைந்த பூங்கொம்பினை. கோது-குற்றம். என்றது, காமவெகுளி மயக்கம் என்ற முக்குற்றங்களை. முனிவன் முக்குற்றமும் அற்றவனாகவே அவன் மனைவி அம்முனிவன் கருத்தறிந்து ஏவல் செய்தல் எளிதாயிற்று. அடுத்த ஏவல் என்றது, அவன் தவநிலைக்குப் பொருத்தமான ஏவலை. ஒழுகுதல் என்றது நடந்து கொள்ளுதலை. கருத்தால், பயனால் கடுமையாதல். வெவ்வினை என்றது கொடிய தீவினையை. கடிந்தவன் என்றது, தீவினையைத் தன்னிடம் சேராமால் நீக்கியவன் என்றவாறு. தீவினை என்ற பெயரும் அறியாவண்ணம் நல்லனவே செய்தொழுகுதல். எடுத்தல்-வளர்த்தல். (கஉ)

அருள்மிக்க முனிவன்,
விச்சிரவா என்னும் மகனைப் பெறுக எனவருளல்

39. காதன் மேவுநின் றோழிய
ராயகன் னியரைச்
சூத நீடு பூஞ் சோலையிற்
றேடியான் சொல்லும்
வேத வோசைநீ கேட்டலின்
விச்சிர வரவென்
றோது நீதியா னொருவனைப்
பெறுதியா லென்றான்.

காதல் மேவும்நின் தோழியர்ஆய கன்னியரைச்
சூதம்நீடு பூஞ்சோலையில் தேடி, யான் சொல்லும்
வேத ஓசை நீ கேட்டலின், விச்சிரவா என்று
ஓதுநீதியான் ஒருவனைப் பெறுதியால் என்றான்.

பொ: அன்பு பொருந்திய நின் தோழியர்களாகிய கன்னியரை மாமரங்கள் நிறைந்த பூஞ்சோலையில் தேடிக்கொண்டுவந்து யான் சொல்லும் வேதத்தின் ஓசையைக் கேட்டமையால் (சிறந்த கேள்வியான் என்று பொருள்படுதற்குரிய) விச்சிரவா என்று பெயர்

சொல்லப்படுகின்ற நீதிமிக்க ஒருவனைப் பெறுவாயாக என்று அருள் செய்தான்.

கு: சூதம்-மாமரம். மாமரங்கள் மிக்க பொழிலைச் சூத நீடு பூஞ்சோலை என்றார். கன்னியரைச் சோலையில் உளராகக் கருதித் தேடி என்றவாறு. தேடிக்கொண்டு வருகையில் புலத்திய முனிவன் சொன்ன வேதவொலியைக் கேட்ட புண்ணியத்தால் அவள் வயிற்றில் தோன்றும் மகன் சிறந்த கேள்வியன் என்ற பொருள்தரும் விச்சிரவா என்னும் பெயருடையனாய் நல்லோனாக இருப்பான் என்றவாறு. சிரவா-கேள்வியன். விச்சிரவா-நல்ல கேள்வியன். தேடிக் கேட்டலின் என இயையும். பெறுதி, முன்னிலை வினைமுற்று. ஆல்-அசை (கக)

### விச்சிரவா பிறத்தல்

40. அந்த வாசக மருண்முனி
கூறலு முவந்த
சிந்தை யாடிரு வயிற்றினிற்
றிசைமுகன் றனக்குத்
தந்தை தோன்றிய தொன்மைபோற்
றவநெறி தழைப்ப
வந்து தோன்றினன் வைச்சிரவ
வாமறை விளங்க.

அந்த வாசகம் அருள்முனி கூறலும்; உவந்த
சிந்தையாள் திருவயிற்றினில், திசைமுகன் தனக்குத்
தந்தை தோன்றிய தொன்மைபோல், தவநெறி தழைப்ப,
வந்துதோன்றினன், வைச்சிரவா, மறைவிளங்க.

பொ: அச்சொல்லை அருள்நிறைத்த புலத்திய முனிவன் சொல்லுதலும், மகிழ்ச்சிமிக்க மனத்தினளாகிய திருவனைய குணவதியின் வயிற்றினில் விச்சிரவா என்பவன், முன்பு நான்முகனுக்குப் புலத்தியனாகிய தன் தந்தை தோன்றியது போலவே புலத்தியனுக்கு

மகனாக, தவநெறி தழைக்கவும், வேதநெறி விளக்கம் பெறவும் வந்து பிறந்தான்.

கு: திசைமுகன்–நான்முகனாகிய பிரமன். தந்தை என்றது, விச்சிரவாவின் தந்தையாகிய புலத்தியனை. நான்முகனுக்குப் புலத்தியன் மகனாகத் தோன்றியதுபோல் புலத்தியனுக்கு விச்சிரவா மகனாகத் தோன்றினான் என்றவாறு. தொன்மைபோல் என்றது, பழைய நிகழ்ச்சிபோல என்றவாறு. விச்சிரவா தவமேற் கொண்டு சிறப்புறுதல் திண்ணமாகலின் தவநெறி தழைப்ப எனவும் வேதங்களை விளங்கவுணர்ந்து உலகிற்கு விளக்கும் விச்சிரவாவின் எதிர்காலப் புலமைநலம் புலப்பட மறைவிளங்க எனவும் கூறினார். வைச்சிரவா தழைப்ப, விளங்கத் தோன்றினன் என முடிக்க. விச்சிரவா, வைச்சிரவா என மருவிற்று. (சசு)

**விச்சிரவாவுக்குப் பரத்துவாசமுனி தன் கன்னியைக் கொடுத்தது**

41. தன்னி னேர்பிற ரில்லவன்
றனக்கருந் தந்தை
அன்ன மாமுனி யறம்புரிந்
தொழுகலி னவற்குப்
பன்னு மாமறை பகருமப்
பரத்துவன் றேவ
வன்னி யேயெனுங் கன்னியைக்
கொடுத்தனன் மகிழ்ந்து.

**தன்னின் நேர் பிறர் இல்லவன் தனக்கு அருந்தந்தை
அன்ன மாமுனி அறம்புரிந்து ஒழுகலின், அவற்குப்
பன்னும் மாமறை பகரும் அப்பரத்துவன், தேவ
வன்னியே எனும் கன்னியைக் கொடுத்தனன், மகிழ்ந்து.**

பொ: தன்னையொப்பாரையில்லாதவனைத் தனக்கு அரிய தந்தையாயுள்ள புலத்திய முனிவன் போன்ற விச்சிரவா என்னும் சிறந்த முனிவன், அறத்தையே விரும்பி நல்வழியில் நடத்தலால்

அவனுக்கு சிறப்பித்துச் சொல்லப்படும் பெரிய வேதங்களைச் சொல்லும் அந்தப் பரத்துவாச முனிவன், தெய்வப்பெண்ணே என்று சொல்லத்தக்க தன் கன்னியை மகிழ்ந்து மணம்செய்து கொடுத்தனன்.

கு: தன் தந்தையாகிய புலத்திய முனிவனைப் போலவே அறத்தை விரும்பி ஒழுகுகின்ற விச்சிரவாவுக்குப் பரத்துவாசர் தம் கன்னியைக் கொடுத்தனர் என்றவாறு. புலத்தியன் தன்னினேர் இல்லவன் எனச் சிறப்பிக்கப்படுகின்றான். நேர்பிறர் இல்லவனாகிய தந்தை அன்ன மாமுனி என இயையும். நேர்பிறர் இல்லவன் என்பதையும் மாமுனிக்கே பெயராக்கலும்ஆம். தவவொழுக்கத்தால் தந்தை போன்றவன் விச்சிரவா என்பதையறிந்த பரத்துவாச முனிவன் தன் கன்னியை அவ்விச்சிராவுக்கு மணம் செய்து கொடுத்தான் என்க. தந்தையொப்பான் மகன், என்றல் இயல்பு. தேவவன்னி-தெய்வப்பெண். பெண்ணைக் குறிக்கும் வருணினி என்ற வடசொல் வன்னி எனத் திரிந்து தமிழில் வந்தது. பரத்துவாசன் கன்னியின் அழகு புலப்பட, தேவவன்னியே எனும் கன்னி எனச் சிறப்பித்தவாறு. மகிழ்ந்து கொடுத்தனன் என முடிக்க. (௪௧)

### தேவவன்னி புதல்வனைப் பெறுதல்

42. தேவ வன்னியச் செய்தவ
முனிவனுங் குரைத்த
ஏவல் செய்தவ ணினிதிருந்
தொழுகிட வந்தப்
பாவை தன்வயிற் றோன்றினன்
பல்லுல குள்ளோர்
யாவ ரும்மன மகிழ்ந்திட
வெழின்மணிப் புதல்வன்.

**தேவ வன்னி, அச் செய்தவ முனிவன் ஆங்கு உரைத்த ஏவல் செய்து அவண் இனிது இருந்து ஒழுகிட, அந்தப் பாவை தன் வயின் தோன்றினன்-பல்உலகு உள்ளோர் யாவரும் மனம் மகிழ்ந்திட-எழில் மணிப் புதல்வன்.**

**பொ:** தெய்வப் பெண் போன்றிருத்தலால், தேவவன்னி என்னும் பெயர்பெற்ற அப்பெண், தன்னை மணந்த அந்தச் செய்யும் தவத்தினனாகிய முனிவன் அங்குச் சொன்ன பணிகளைச் செய்து கொண்டு அவ்விடத்து இனிதாக இருந்து ஒழுகாநிற்க, அந்தப் பாவை போன்ற பெண்ணின் வயிற்றில் பல உலகத்தோரும் மனம் மகிழ்ந்திட ஓர் அழகுமிக்க மணிபோன்ற புதல்வன் தோன்றினன்.

**கு:** தேவ வன்னியே யெனுங் கன்னியை என மேல் உவமையாகக் கூறியதையே இச்செய்யுளில் பெயராகக் கொண்டு கூறினர். செய்தவ முனிவன் என்றது விச்சிரவாவை. தன்கணவன் சொற் பிழையாது அன்புடன் ஏவல் செய்து ஒழுகினமையால் அவள் வயிற்றில் எழில்மணிப் புதல்வன் தோன்றினன் என்றவாறு. மனமொத்த காதலர்க்கு அழகும் அறிவும் நிறைந்த புதல்வன் பிறப்பது இயல்பு என்பது உணர்த்தியவாறு. சிறப்புமிக்க ஒருவன் உலகத்துத் தோன்றும்போது பல உலகத்தவரும் மகிழ்தல் இயல்பாதலின், 'பல்லுலகுள்ளோர் யாவரும் மனம் மகிழ்ந்திடப் புதல்வன் தோன்றினன் என்றார். மணிப்புதல்வன் - மாணிக்கமணி போன்று விளங்கும் புதல்வன். (சுசு)

**வைச்சிரவணன் எனப் பெயர் வைத்துத் தேவர்கள் வாழ்த்துதல்**

43. விரிஞ்ச னேமுத லாகிய
வேதிய ருவகை
புரிந்த நெஞ்சினர் புரந்தர
ஞதியர் புகுந்து
தெரிந்து நோக்கிவைச் சிரவண
னெனப்பெயர் செப்பித்
திரிந்து போயினர் திசைதொறுஞ்
சேயினை வாழ்த்தி.

**விரிஞ்சனே முதல் ஆகிய வேதியர் உவகை புரிந்த நெஞ்சினர், புரந்தர ஞதியர் புகுந்து**

தெரிந்து நோக்கி, வைச்சிரவணன் எனப்பெயர் செப்பித்
திரிந்து பேயினர் திசைதொறும் சேயினை வாழ்த்தி

பொ : பிரமன் முதலிய வேதியர்களும் இந்திரன் முதலிய தேவர்களும் மகிழ்ச்சி மேவிய நெஞ்சினராய் அங்கு வந்து அப் பிள்ளையை ஆராய்ந்து பார்த்து, அவனுக்கு வைச்சிரவணன் எனப் பெயர் சொல்லி வாழ்த்திவிட்டுத் தத்தம் திசைதோறும் மீண்டு போயினர்.

கு : விரிஞ்சன்–பிரமன். புரந்தரன்–இந்திரன். விரிஞ்சன் முதலிய வேதியரும் புரந்தரன் ஆதியரும், உவகைபுரிந்த நெஞ் சினராய்ப் புகுந்து சேயினைத் தெரிந்து நோக்கி; வைச்சிரவணன் எனப் பெயர் செப்பி, வாழ்த்தித் திசைதோறும் திரிந்து போயினர் எனக்கொண்டு கூட்டி வினைமுடிபு செய்க. திரிந்து–மீண்டு. விச்சிரவா என்பவரின் மகன் என்று பொருள்படுவது, வைச்சிர வணன் என்ற பெயர். இது தத்திதாந்தப் பெயர் என்பர் வடமொழிவாணர். (கஎ)

வைச்சிரவணன் தவவனம் புகுதல்

44. விரிந்த வேதங்கள் விளம்பிய
பொருள்களின் முடிவைத்
தெரிந்து கண்டவைச் சிரவணன்
செய்தவந் தன்னில்
புரிந்த நெஞ்சினன் புரையறு
முனிவனம் புக்கான்
சரிந்து தீவினை யோடிடத்
தருமமுந் தழைப்ப.

விரிந்த வேதங்கள் விளம்பிய பொருள்களின் முடிவைத்
தெரித்து கண்ட வைச்சிரவணன் செய்தவம் தன்னில்
புரிந்த நெஞ்சினன், புரை அறு முனிவனம் புக்கான்
சரிந்து தீவினை ஓடிடத் தருமமும் தழைப்ப.

**பொ :** அளவால் விரிந்துள்ள வேதங்கள் சொல்லிய பொருள் களின் முடிபை (வேதாந்தத்தை) ஆராய்ந்து கண்ட வைச்சிர வணன், செய்தற்குரிய தவத்தில் விருப்பங் கொண்ட நெஞ்சின னுய்த் தீவினைகள் சரிந்து ஓடிடவும் தருமம் தழைத்தோங்கவும் குற்றமற்றதாய் முனிவர்கள் தங்கியுள்ளதாய் வனத்தின்கண் புகுந்தான்.

**கு:** வேதாந்தத்தை ஆராய்ந்துணர்ந்த வைசிரவணனுக்கு உலகியல் வாழ்வில் விருப்பம் தோன்ருமல் செய்தவத்திலேயே விருப் பம் தோன்றிற்று. ஆதலின், செய்தவந்தன்னில் புரிந்த நெஞ்சி னன், எனவும் முனிவனம் புக்கான் எனவும் கூறினுர். புரை-குற்றம். முனிவர்கள் தங்கித் தவஞ் செய்தற்கேற்ற வனம் ஆதலின் முனி வனம் என அவ்வனத்திற்குப் பெயர் கொடுத்தார். தவத்தினுய பயன் தீவினை நீங்குதலும் நல்வினை ஓங்குதலுமேயாதலின் சரிந்து தீவினை ஓடிடத் தருமமும் தழைப்ப முனிவனம் புக்கான் என்ருர். தவஞ்செய்யும் நோக்கத்துடன் முனிவனம் புக்க மாத்திரையானே தீவினை சரிந்து ஓடுதலும் தருமம் தழைத்தலும் நிகழும் என அவ் வனத்தின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. இச்சிறப்புத் தோன்றவே புரை அறு முனிவனம் என்று புகன்றமை காணலாம். தெரிதல்– ஆராய்தல். புரிதல்–விரும்புதல். (கஅ)

### வைச்சிரவணன் தவநிலை

45. தோய மேதனக் காகர
மாகவுந் துரக்கும்
வாயு வேயுண வாகவு
மன்னுபே ரறத்தின்
நேய மாகியு நிராசன
னுகியு நீயமம்
சாய்வி லாதுபல் லாண்டுநின்
றருந்தவஞ் சரித்தான்.

**தோயமே தனக்கு ஆகரம் ஆகவும் துரக்கும்**
**வாயுவே உணவு ஆகவும், மன்னுபேர் அறத்தின்**
**நேயம் ஆகியும் நிராசனன் ஆகியும் நியமம்**
**சாய்வு இலாதுபல் ஆண்டுநின்று அருந்தவம் சரித்தான்.**

பொ : தண்ணீரே தனக்கு ஆதாரமாகவும், மூக்கில் விடும் காற்றே உணவாகவும், நிலைபெற்ற பெரிதாய அறத்தின் கண்ணே நேசமுடையவனாகியும் ஆசனம் ஏதும் இல்லாதவனாகவும் நியமம் தவறாமல் பல ஆண்டுகள் நின்று அரிய தவத்தைச் செய்தான்.

கு : தண்ணீரில் நின்று காற்றையே உணவாகக் கொண்டு அறத்தில் விருப்பமுடையவனாய் வைச்சிரவணன் பல்லாண்டுகள் தவஞ்செய்தான் என்றவாறு. ஆயிரம் ஆண்டுகள் என முதனூல் கூறும். தோயம்—நீர். ஆகரம்—ஆதாரம். துரத்தல்—மூக்குவழியே வெளியில் விடுத்தல். பிராணவாயுவையும் வீணாக்காமல் அடக்கி யாண்டால் அதுவே உடம்பை வளர்க்கும் உணவாய் அமையும் என்பது இதனால் புலப்படுத்தியவாறு. ஏற்றியிரக்கி இருகாலும் பூரிக்கும் காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாரில்லை. காற்றைப் பிடிக் கும் கணக்கறிவாளர்க்குக் கூற்றையுதைக்கும் குறியதுவாமே. (திருமந்திரம்—3 பிராணாயாமம்—7) என்ற திருமந்திரத்தில் காற்றை யடக்கிப் பயன்கொள்ளுமுறை கூறப்பட்டிருத்தல் காணலாம். நேயம்—விருப்பம். நிராசனன்—ஆசனமில்லாதவன். பதுமாசனம் முதலிய ஆசனங்களில் அமர்ந்து தவஞ்செய்யாது நீரில் நின்று கொண்டே தவஞ்செய்தான் என்பர், நிராசனனாகியும் என்றார். மன்னுபேரறம் என்றது நிலைபேறானபயனைத் தருகின்ற தவமாகிய அறத்தினை. தான்மேற்கொண்ட நியமத்தில் நின்று தவறாமல் பல ஆண்டுகள் தவஞ்செய்தான் என்பார், நியமம் சாய்வு இலாது பல்லாண்டு நின்று அருந்தவஞ் சரித்தான் என்றார். சரித்தல்—நிகழ்த்துதல். (கரு)

**நான்முகன் தோன்றி, வேண்டுவது யாதெனல்**

46. அன்ன தன்மைவைச் சிரவணனருந்தவஞ் செய்ய
முன்னை நான்முகன் றோன்றியிம் மூவுல கத்தில்

உன்னை யொப்பவர் யாவரு
மில்லையென் றுரைத்துச்
சொன்ன யாவையுந் தருகுவென்
சொல்லுதி யென்றான்.

**அன்ன தன்மை வைச்சிரவணன் அருந்தவம் செய்ய
முன்னை நான்முகன் தோன்றி இம் மூவுலகத்தில்
உன்னை ஒப்பவர் யாவரும் இல்லை என்று உரைத்து,
சொன்ன யாவையும் தருகுவென், சொல்லுதி என்றான்.**

பொ : அவ்வாறு வைச்சிரவணன் அரிய தவத்தைச் செய்து கொண்டிருக்க, பிரமன் அவன்முன் தோன்றி இந்த மூன்று உலகங்களிலும் தவத்தால் உன்னை ஒப்பவர் எவரும் இல்லை என்று புகழ்ந்து சொல்லிவிட்டு, நீ கேட்ட எல்லாவற்றையும் தருவேன் (என்ன வேண்டும்) சொல்லுக என்றான்.

கு : முன்னைச் செய்யுளில் கூறியவற்றை இங்குச் சுட்டி அன்னதன்மை வைச்சிரவணன் அருந்தவஞ்செய்ய என்றார். நான்முகன்—முன்னைத் தோன்றி எனமாறுக. முன்னை—முன்பு. இனி முன்னை நான்முகன் எனக்கிடந்தவாறே இயைத்து உலகத்திற்கு முற்பட்டவனாகிய நான்முகன் எனப் பொருள் கூறலும் ஆம். வைச்சிரவணனின் தவத்தைச் சிறப்பிக்கும் முகத்தான் உன்னை ஒப்பவர் யாவரும் இல்லை என்றான் பிரமன். மூவுலகத்தில் ஒப்பவர் இல்லையெனவே வைச்சிரவணன் தனக்குவமையில்லாத தக்கோன் என்பது புலப்படுத்தியவாறு. யாவையும் தருகுவென் என்றது, அத்தவத்தின் அருமைநோக்கிக் கூறியதாகும். வேண்ட முழுதும் தருவேன் என்றபடி.

(௪௬)

**வைச்சிரவணன் வேண்டியபடி திசைகாப்போனாகவும்
நிதிபதியாகவும் பிரமன் வரமளித்தல்**

**47.** இலகு மாமணி யெழின்முடி
யிந்திர னியமன்
அலகி லாவலி வருணனன்
கவர்களோ டொப்ப

உலக பாலக ஞகவு
மொண்ணிதி தனக்குத்
தலைவ ஞகவும் வேண்டுவென்
ருவெனத் தந்தான்.

இலகு மாமணி எழில்முடி இந்திரன் இயமன்
அலகு இலாவலி வருணன்ஆங்கு அவர்களோடு ஒப்ப
உலக பாலகன் ஆகவும், ஒள்நிதி தனக்குத்
தலைவன் ஆகவும், வேண்டு வென் தாஎனத் தந்தான்.

பொ: ஒளிவிளங்குகின்ற சிறந்த மணிகள் பதித்த அழகிய முடியணிந்த இந்திரன் எமன், அளவில்லாத வலிமையையுடைய வருணன், (என்று சொல்லப்படும் திசைக்காவலர்களாகிய) அவர்களோடு ஒப்பு ஆகுமாறு உலக பாலகன் ஆகவும் ஒளிமிக்க செல்வத்திற்குத் தலைவனுகவும், விரும்புகின்றேன்; தருக என வைச்சிரவணன் வேண்ட, பிரமன் அவ்வாறே தந்தான்.

கு: இலகுதல்–ஒளிவிளங்குதல். அலகு–அளவு. உலக பாலகன் என்றது உலகத்துள்ள திசைகளில் நின்று உலகத்தைக் காப்பாற்றும் திசைக்காவலனை. நிதி தனக்குத் தலைவனுதல் என்பது, நிதிபதியாதல். தா என்பது ஒப்போன் இரப்புரை. தவத்தால் தனக்குவமையில்லாத வைச்சிரவண்ணன் பிரமனுக்கு ஒப்பாக உயர்ந்து விட்டாஞகலின் 'தா' என ஒப்போன் இரக்கும் சொல்லால் கேட்டான். பிரமனும் தந்தான். (உக)

வைச்சிரவணனுக்கு அயன் புட்பக விமானம் கொடுத்தல்

48. வரவு போக்கினுன் மனேகதி
யுடையது வானத்
திரவி தேரினுங் கடியதீ
ரேழுல குள்ளோர்

விரவி யேறினும் வெளியிட
மிகுவது வேகப்
புரவி யில்லது புட்பக
விமானமுங் கொடுத்தான்.

**வரவு போக்கினல் மனேகதி உடையது, வானத்து**
**இரவி தேரினும் கடியது, ஈரேழு உலகு உள்ளோா**
**விரவி ஏறினும் வெளிஇடம் மிகுவது, வேகப்**
**புரவிஇல்லது, புட்பக விமானமும் கொடுத்தான்.**

**பொ :** (தரையில்) போக்கு வரவு புரிவதில் மனம் போன்ற வேகத்தையுடையதும் வானத்தில் செல்லும்போது சூரியனது தேரினும் விரைந்து செல்வதும் பதினன்கு உலகத்திலும் உள்ளவர் கள் எல்லாம் சேர்ந்து வந்து ஒருசேர ஏறினுலும் அப்போதும் வெற்றிடம் மிக்கிருப்பதும் வேகமுடைய குதிரை பூட்டப்படாததும் ஆகிய புட்பக விமானத்தைப் பிரமன் வைச்சிரவணனுக்குக் கொடுத்தான்.

**கு :** வேகத்திற்கு உவமையாக மனத்தைச் சொல்லுதல் மரபு. மானுருவாக நின் மனம் பூட்டினேயோ (அகநா-384) எனவும், 'உள்ளம் போல உற்றுழியுதவும் புள்ளியற் கலிமா உடைமையான' (தொல்-பொருள்) எனவும் சொல்லப்படுதல் காணலாம். வானத்து எனப் பின்னர்க் கூறுவதால் வரவுபோக்கு என்றது, தரையில் நிகழ்வதையே என்பது பெறப்படும். ஈரேழுலகங்களாவன : பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம், என்ற மேலேழுலகங்களும், அதலம், விதலம், சுதலம், ரசாதலம், மகாதலம், தராதலம், பாதலம் என்ற கீழேழ் உலகங்களும் ஆம். பதினன்கு உலகத் தவர் ஏறினும் அவர்கட்கெல்லாம் இடம் கொடுத்தும் மேலும் வெற் றிடமுடையது ஆகும் என்பதால் சுருங்குதலும் விரிதலும் ஆகிய தன்மையுடைய அப்புட்பகத்தின் இயல்பு புலனுகும். (உஉ)

வைச்சிரவணன்
பிரமனிடம் பெற்ற வரங்களைத் தந்தைக்குச் சொல்லல்

49. கொடுத்து மைந்தநீ போதென
வாசிகள் கூறி
விடுத்து விண்ணவர் சூழ்தர
விரிஞ்சனே கியபின்
தடுக்க வொண்கலா வருளுடைத்
தனபதி தனைப்பெற்
றெடுத்த தாதைக்குப் பெற்றன
யாவையு மியம்பி.

**கொடுத்து, மைந்த!நீ போது எனஆசிகள் கூறி,**
**விடுத்து, விண்ணவர் சூழ்தர விரிஞ்சன் ஏகியபின்**
**தடுக்க ஒண்கலா அருள்உடைத் தனபதி தனைப்பெற்று**
**எடுத்த தாதைக்குப் பெற்றன யாவையும் இயம்பி.**

**பொ:** அவ்வாறு கொடுத்து, ஆசிமொழிகள் சொல்லி, மைந்தனே! நீ செல்க. என வைச்சிரவணனைப் போக விடுத்து, தேவர்கள் தன்னைச் சூழ்ந்துவரப் பிரமன் தன்னுலகிற்குச் சென்ற பின்பு, யாராலும் தடுக்க இயலாத அருளையுடைய தனபதி ஆகிய வைச்சிரவணன், தனைப் பெற்றுவளர்த்த தந்தைக்குத்தான் பெற்ற வரங்கள் யாவற்றையும் சொல்லி.

**கு:** கொடுத்து என்பது முன்னைச் செய்யுளில் விமானமுங் கொடுத்தான் என்பதை அனுவதித்தவாறு. ஆசிகள் கூறி மைந்த நீ போதென விடுத்து என இயையும். போது என்பது, இங்குப் 'போ' என்னும் பொருளில் வந்தது. அருளின் சிறப்பைப் புலப் படுத்த தடுக்கவொண்கலாஅருள் என்றார். இனி, தடுக்க ஒண் கலாத் தனபதி என இயைத்து வலிமையால் யாரும் தடுக்க இயலாத தனபதி என்றலும் ஆம். தனபதி என்ற பெயரால் குறிப்பிட்டார், அதற்குரிய வரம் பெற்றமையால். இனித்தனபதி

என்றே ஆள்வர். எடுத்தல்-வளர்த்தல். இயம்பிப் பின்னுங் கூறுவான் என வருஞ்செய்யுளில் இயையும்; குளகம். (உரு)

தங்குதற்குரிய இடத்தைக் கூறுமாறு தனபதி தந்தையைக் கேட்டல்

50. பின்னுங் கூறுவான் பிதாமகன்
பெருவரந் தந்தான்
இன்ன தானத்தி லிருத்தியென்
றியம்பல னெனக்குத்
துன்ன லார்களாற் றுன்னுதற்
கரியதாய்த் துறக்கம்
அன்ன தானநீ யருள்கென
வருண்முனி கூறும்.

பின்னும் கூறுவான் பிதாமகன் பெருவரம் தந்தான்
இன்ன தானத்தில் இருத்தி என்று இயம்பலன் எனக்கு
துன்ன லார்களால் துன்னுதற்கு அரியதாய்த் துறக்கம்
அன்னதானம் நீ அருள்கென அருள்முனி கூறும்.

**பொ :** பின்னரும் சொல்லுவான், எனக்குப் பிரமன் பெரிய வரங்களைக் கொடுத்தான். ஆனால் இன்ன இடத்தில் நீ இருப்பாயாக என்று சொல்லவில்லை. ஆதலால், பகைவர்களால் நெருங்குதற்கரியதாய்ப் பொன்னுலகம் போலும் இனிமையுடைய இடம் ஒன்றை நீ அருளிக்கூறுக என்று தனபதி வேண்டிக்கொள்ள விச்சிரவா சொல்லுவான்.

**கு :** பிதாமகன்—பிரமன். இங்குப் பெருவரம் என்றது திசைக்காவல் பதவியாகிய வரத்தை. வரங்கொடுத்தவன் இந்த இடத்தில் தங்கி இருநீ என்று விதிக்காமையால் தன் தந்தையை நோக்கித் தனபதி இங்ஙனம் கூறுவானுனன். பகைவர்களால் இடையூறு இல்லாமல் இன்பமாகத் தங்கியிருத்தற்கேற்ற இடமாக இருக்க வேண்டும் எனத் தந்தையை நோக்கி வேண்டுகின்ருன். துன்னலார்—பகைவர். துறக்கம்—பொன்னுலகம். தானம்—இடம்.

வேண்டிய வரத்தைக் கொடுக்கத் தக்க பெருமையுடையவர் என்பார், அருண்முனி என்ருர். அம்முனிவர் கூறியது வருஞ் செய்யுளில் புலப்படும். (உச)

**தந்தை தனபதி தங்க இடம் குறித்தல்**

51. இலங்கை மாநக ரிராக்கத
ரிருப்பிட முன்ஞள்
வலங்கொ ளாழிமா மாயஞே
டெதிர்மலேத் தமரில்
கலங்கி யோடிய நிருதர்கீ
ழுலகிடைக் கரந்தார்
அலங்கன் மொய்ம்பிஞே யந்நக
ரிருத்திநீ யென்ருன்.

**'இலங்கை மாநகர் இராக்கதர் இருப்பிடம் முன்நாள்
வலம்கொள் ஆழிமாமாயஞேடு எதிர்மலேந்து, அமரில்
கலங்கி ஓடிய நிருதர், கீழ் உலகிடைக் கரந்தார்
அலங்கல் மொய்ம்பிஞேய்! அந்நகர் இருத்திநீ' என்ருன்.**

பொ: மாலேயணிந்த தோள்களேயுடையவனே! இலங்கை மாநகரம் இராக்கதரின் இருப்பிடமாக இருந்தது; பின்பு வன்மை கொண்ட சக்கரப் படையையுடைய கரிய திருமாலோடு எதிர்த்துப் போர் செய்து, அப்போரில் வலிமையின்றிக் கலங்கிப் பின்னிட்டோடிய அரக்கர்கள், பாதாள உலகத்திடை மறைந்து வாழ்கின்ருர்கள், எனவே, அந்த இலங்கை மாநகரில் நீ இருப்பாயாக என்று பணித்தான்.

கு: மாமாயன் என்றது கரிய நிறத்துத் திருமாலே. இனி, பெருந்தெய்வமாகிய திருமால் எனலும் ஆம். மலேதல்-போர் செய்தல். கலங்கியென்றது இராக்கதர்கள் மாயன் வலிமைக்கு ஆற்ருது உளம் கலங்கி என்றவாறு. தரையிடையிருப்பின் திருமாலின் சக்கரப் படைக்கு இலக்காய் இறக்க வேண்டும் என்பதறிந்து

அரக்கர்கள் பாதலத்திடைக் கரந்தனர் என்றவாறு. மொய்ம்பு-தோள். அலங்கல்-மாலை. (உரு)

### தனதன் கிளைஞரோடு இலங்கை மாநகரம் குடியேறுதல்

52. என்று கூறிய தந்தையை
யிணையடி யிறைஞ்சி
நன்று நன்றென மகிழ்ந்தெழி
லிலங்கைமா நகரில்
சென்று மேவினன் சித்தர்வித்
தியாதர ரியக்கர்
தன்றுணைப் பெருங் கிளைதனைச்
சூழ்தரத் தனதன்.

**என்று கூறிய தந்தையை யிணையடி யிறைஞ்சி**
**நன்று நன்றென மகிழ்ந்து எழில் இலங்கை மாநகரில்**
**சென்று மேவினன், சித்தர் வித்தியாதரா இயக்கர்**
**தன்துணைப் பெருங்கிளைதனைச் சூழ்தரத் தனதன்.**

**பொ:** என்று சொன்ன தந்தை விச்சரவாவினை இரு பாதங்களிலும் வீழ்ந்து வணங்கிவிட்டுத் தனதன் நன்று நன்று என்று (அவன் கூறிய கருத்திற்கு) மகிழ்ந்து, எழில் மிக்க இலங்கை மாநகரில் சித்தர், வித்தியாதரர், இயக்கர், தன் துணையாக உள்ள பெரிய சுற்றத்தார் இவர்கள் யாவரும் தன்னைச் சூழ்ந்திருக்கச் சென்று விருப்பத்தோடு தங்கினன்.

**கு:** எழில் மிக்க இலங்கை மாநகரில் இருக்கப் பணித்த தந்தையின் ஆலோசனை மிகச்சிறப்பாக இருத்தலின், நன்று நன்று என்று தனதன் மகிழ்ந்தான். தனதன், இறைஞ்சி மகிழ்ந்து சித்தர் முதலானோர் தனைச் சூழ்தர இலங்கை மாநகரில் சென்று மேவினன் என வினைமுடிவு செய்க. வாழ்தற்குரிய வளமெலாம் நிரம்பப் பெற்றிருத்தலின் தனதன் விருப்பத்துடன் தங்கினன் என்பார், 'மேவினன்' என்றார். மேவுதல்-விருப்பத்தொடும் தங்குதல். சித்

தரும், வித்தியாதரரும், இயக்கரும் தன்துணைப் பெருங்கிளையும் தனைச் சூழ்தர மேவினன் எனத் பல்பெயர் உம்மைத்தொகை யாகக் கொள்க. தனபதிக்குக் குபேரன் என்ற பெயரும் உண்டு. (உசு)

**குபேரன் இலங்கையில் அரசு வீற்றிருத்தல்**

53. அலங்கன் மோலியா னச்சுதற்
கமரழிந் தரக்கர்
கலங்கி யோடிய நாண்முதற்
கவினழி யிலங்கை
துலங்கி யோங்கிட யாவருந்
தொழுதடி போற்ற
விலங்கு நீண்முடி யிந்திர
னென்னவீற் றிருந்தான்.

**அலங்கன் மோலியான் அச்சுதற்கு அமர் அழிந்து, அரக்கர்
கலங்கி ஓடிய நாள்முதல் கவின் அழி இலங்கை
துலங்கி ஓங்கிட, யாவரும் தொழுது அடி போற்ற,
இலங்கு நீள்முடி இந்திரன் என்ன வீற்றிருந்தான்.**

**பொ :** மாலைகளையணிந்த நெடுமுடி தரித்தவனுகிய திருமாலுக்குப் போரில் தோற்று அரக்கர்கள் உளம் கலங்கி ஓடியநாள் முதலாக அழகு அழிந்து கிடந்த இலங்கை மாநகரம், விளக்க முடையதாய் உயர்ச்சிபெறவும், யாவரும் தன்னைத் தொழுது தன் பாதங்களைப் போற்றவும், விளக்கமுடைய நீண்ட முடியணிந்த இந்திரன் என்று பிறர் மதிக்குமாறு வீற்றிருந்தான் தனதன்.

**கு:** அலங்கல்-மலர்மாலை. மோலி-மணிமுடி. கவின்-அழகு. துலகுங்தல்-விளக்கமுடையதாதல். பாழடைந்து கிடந்த இலங்கை மாநகரம் தனதன் தங்கியவுடன் புதிய விளக்கம் பெற்றுப் பொலிவடைந்துயர்ந்தது என்பார் 'துலங்கி ஓங்கிட' என்றார். யாவரும் என்புழி உம்மை எஞ்சாப் பொருளதாதலின் முற்றும்மையாகும். இலங்குதல்-விளக்கமுடையதாதல். பொன்கொண்டிழைத்து மணி

கள் பதித்துச் செய்யப்பட்டதாதலின் இலங்கு நீள்முடி என்ருர். செல்வச்சிறப்பாலும் பலர்பணிய நின்ற பெருமையானும் இந்திரன் தனதனுக்குப் பொருந்திய உவமையாவான் ஆதலின் இந்திரன் என்ன விற்றிருந்தான் என்ருர். (உஎ)

## இராமன் முடியசைத்துச் சொல்லத் தொடங்குதல்

54. தெண்டி ரைக்கட லேழையுஞ்
செங்கையால் வாங்கி
உண்ட மாமுனி யிவ்வகை
யுரைத்திடக் கேட்டு
வண்ட லம்புதண் டுழாயணி
மணிமுடி துளக்கிப்
புண்டரீகமே யனையகட்
புரவலன் புகல்வான்.

**தெண்திரைக் கடல் ஏழையும் செங்கையால் வாங்கி
உண்ட மாமுனி இவ்வகை உரைத்திடக் கேட்டு
வண்டு அலம்பு தண்துழாய்அணி மணிமுடி துளக்கி,
புண்டரீகமே அனையகண் புரவலன் புகல்வான்.**

**பொ:** தெளிவான அலைகளையுடைய கடல் ஏழையும் தன் சிவந்தகையால் முகந்து பருகிய அகத்திய மாமுனிவன் இவ்வாறு சொல்லக்கேட்டுத் தாமரைமலரே போன்று சிவந்த கண்களை யுடைய இராமன், வண்டுகள் ஒலிக்கும் துளபமாலை அணிந்த தன் மணிமுடியை அசைத்துச் சொல்வானுனன்.

**கு:** ஏழையும் என்புழி உம்மை இனைத்தென்று அறிந்த பொருட்கள் வந்தது ஆகலின் முற்றும்மை. வாங்குதல் இங்கு முகத்தலையுணர்த்தியது. அகத்திய முனிவன் பெருமை புலப்பட

கடலுண்ட செயலைக் கூறினர். உண்ணுதல் என்பது சோற்றுக்குச் சிறப்பு வினையாக வருதலேயன்றி, நுகரப்படும் பொருள்கட்கெல்லாம் பொதுவினையாகவும் வருதலின் கடலேழையும் பருகிய என்னமல் உண்ட என்னும் வினையால் கூறினர். கேட்டுப் புண்டரீகமே யனையகண் புரலவன் மணிமுடிதுளக்கிப் புகல்வான் எனக் கொண்டு கூட்டி வினைமுடிவு செய்க. துழாய்மாலை இராமனுக்கு அடையாள மாலையாகும். திருமாலே இராமன் என்பதை அவன் தாமரைக்கண்ணே காட்டுதல் புலப்பட புண்டரீகமேயனையகண் புரவலன் என்ருன். மணிகள் பதித்துச் செய்யப்பட்டமைதோன்ற மணிமுடி எனப்பட்டது. கடல் ஏழையும் உண்ட முனிவன் என்றது, கடல்போன்ற எத்துணையோ வரலாறுகளையுணர்ந்தவன் என்பது புலப்பட நின்றது. (உ அ)

அகத்திய முனிவர் சொன்னதுகேட்டு இராமன் சொல்லுதல்

55. இந்த மாநிலத் திராவண
ஞதியா மரக்கர்
முந்தையோ ரெலாம் புலத்தியன்
வழியென மொழிந்தார்
அந்த வண்ணமே யன்றியே
வேருெரு வழியால்
வந்துள்ளோர்களார் மாமுனி
யுரைத்தரு ளென்ருன்.

இந்த மாநிலத்து இராவணன் ஆதியாம் அரக்கர்
முந்தையோர் எலாம் புலத்தியன் வழி என மொழிந்தார்
அந்த வண்ணமே அன்றியே வேறுஒரு வழியால்
வந்துளோர்கள் ஆர்? மாமுனி உரைத்தருள் என்ருன்.

பொ: பெருமையுடைய அகத்திய முனிவரே! இந்தப் பெரிய உலகத்தில் இராவணன் முதலிய அரக்கர்கள் புலத்தியன் வழி வந்தவர்கள் என்று முந்தையோர் சொன்னர்கள். (ஆனல்,

நீங்கள் சொல்லும்போது வேறும் ஓர் அரக்கர் மரபு உண்டு என்று தெரிகின்றது) முன்னோர் சொன்ன வண்ணம் அன்றி வேறு ஒரு வழியால் வந்தவர்கள் யார்? சொல்லி அருள்க என்று இராமன் கூறினான்.

கு: இராமன் முன்பு கேள்விப்பட்டது, புலத்தியன் மரபுதான் அரக்கர்களின் பழைய மரபு என்பது; ஆனால், புலத்தியனுக்கு வேறான மரபு ஒன்று உண்டு என்பது அகத்திய முனிவரின் வாக்கால் தெரிவதால் அந்த மரபு எது? அம்மரபில் வந்தவர்கள் யார் யார்? என்பதைத் தெளிவாக்குமாறு அகத்திய முனிவரை இராமன் கேட்டுக் கொள்கின்றான். இந்த இராமன் வினாவிற்குப் பதிலாகத்தான் ஏதியின் மரபு அகத்தியரால் விரிவாக விளக்கப் படுகின்றது. முந்தையோர்—முன்னோர். வேறொரு வழியால் என்றது புலத்தியனுக்கு வேறான மரபினை. (உகூ)

**அரக்கர் பிறப்பு முதலியவற்றைச் சொல்லுக என்றல்**

56. ஏயுநீள்வலி யிராக்கதர் தோற்றமு மிலங்கை
ஆய வாறுமந் நகரவர்க் காயகா ரணமும்
மாய னுக்கவ ரோடிய வண்ணமு மற்றும்
தூய மாமுனி கூறெனக் குறுமுனி கூறும்.

"ஏயும் நீள்வலி இராக்கதர் தோற்றமும், இலங்கை
ஆய வாறும் அந்நகர் அவர்க்கு ஆய காரணமும்,
மாயனுக்கு அவர் ஓடிய வண்ணமும், மற்றும்
தூய மாமுனி! கூறு" எனக் குறுமுனி கூறும்.

**பொ:** நெடிய வலிமை பொருந்திய அரக்கர்களின் பிறப்பும், இலங்கை மாநகரம் உண்டான தன்மையும், அந்த இலங்கை நகரம் அந்த அரக்கர்க்கு உரியதாய காரணமும், திருமாலுக்கு அந்த அரக்கர் தோற்று ஓடிய தன்மையும், மற்றுமுள்ள வரலாறும், தூய்மையுடைய சிறந்த அகத்திய முனிவரே! கூறுக என இராமன் வேண்டிக்கொள்ள குறுமுனிவனாகிய அகத்தியன் சொல்வானானான்.

கு : நீள்வலியேயும் இராக்கதர் என்க. தோற்றம் என்றது, பிறப்பினை. இலங்கை மாநகரம் எப்படி உண்டாயது என்பதை யறிய வேண்டி 'இலங்கையாய வாறும்' கூறு என வினவினன் இராமன். உள்ளும் புறமும் தூய்மையுடையவன் ஆதலின் அவ் வரலாறுகளைப் பொய்யும் புனைந்துரையுமின்றிச் சொல்லுதற்குரிய வன் அகத்தியன் என்ற குறிப்புத் தோன்ற நின்றது, 'தூயமாமுனி' என்ற விளி. புறத்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை வாய்மை யாற் காணப்படும் (திருக்குறள்–298) என அகப்புறத்தூய்மைகளைப் பற்றி வள்ளுவர் கூறியுள்ளதை நோக்குக. குறுமுனி என்றது அகத்திய முனிவரின் குறுகிய உடலமைப்பைக் குறிப்பிட்டவாறு. புலத்தியன் மரபுக்கு வேறான மரபில் தோன்றிய இராக்கதர் வரலாறும் உண்டான தன்மையும் அந்த இலங்கை இராக்கதர்க்கு உரிமையானகாரணமும் அந்த இராக்கதர் மாயனுக்குத் தோற்றோ டிய வண்ணமும் சொல்லுக என்று இராமன் கேட்க அகத்தியன் கூறுகின்றான் என்றவாறு. (கூ௰)

புலத்தியப் படலம் முற்றிற்று.

# 3. அரக்கர் பிறப்புப் படலம்

## முன்னுரை

அரக்கர்களின் பிறப்பைப் பற்றிக் கூறும் படலம் ஆதலின் இது இப்பெயர் பெறுகிறது. இப்படலம் சில ஏடுகளில் இலங்கை யழித்த படலம் என்பதன் தொடர்ச்சியாக அமைந்துளது.

## படலப்பொருட் சுருக்கம்

பிரமனிடத்திலிருந்து உலகங்களும் உயிர்களும் பிறந்த நாளில் சில உயிர்கள் பிரமனை நோக்கி உத்தமனே! நாங்கள் என்னசெய்ய வேண்டும் என்று கேட்டன. பிரமன் அவ் உயிர்களை நோக்கி இந்தப் பல அண்டங்களையும் காப்பாற்றுங்கள் என்றுகூற, அவன் சொற்படி தம்முயிர்க்கு இரங்காமல், 'நின் சொற்படியே இவ் வண்டங்களைக் காப்பாற்றுகின்றோம்' என்று ஏற்றுக்கொண்டு சொன்னமையால் அவ்வுயிர்கள் எல்லாம் அரக்கராயினர். அந்த அரக்கரில் ஏதி, பிரகேதி என்ற பெயருடைய உடன் பிறந்தோர் களில் நீதிக்குரியவனாகிய பிரகேதி என்பவன் தவநெறியாகிய சாந்தமான வழியில் பழகி நிலைபெறச் சார்ந்துவிட்டான்.

ஏதி என்பவன் காலனுக்குத் தங்கையாகிய பயை என்பவளை மணந்து கொள்கின்றான். வெற்றிமிக்க ஏதிக்குப் பயை வயிற்றில் வித்துக்கேசன் என்பவன் பிறக்கின்றான். வீரமிக்க வித்துக் கேசனுக்குச் சந்தி என்பவளின் மகள் காலகடங்கடை மனைவி ஆகின்றாள். வித்துக்கேசனும் காலகடங்கடையும் உயிரும் உடம்பும் போலவும் அன்றிற் பறவைகள் போலவும் ஒன்றிப் பிரியாமலிருக் கின்றார்கள். கடலை அடைந்து கரியமேகம் கருக்கொள்வதுபோலப் பெருகிய காதலையுடைய காலகடங்கடை வித்துக்கேசனின் வீரியம் தாங்கிக் கருவுறுகின்றாள்; அரிதாக ஒருமகனைப் பெறுகின்றாள். பெற்ற அந்தப் பேதைப் பெண் தன் மகவைக் காப்பாற்றாது தனியே விடுத்துத் தன் காதலன் பின் போய்விடுகின்றாள். தாய் அவ்வாறு போன பின்பு அந்தக் குழந்தை அஞ்சல் என்பார் ஆரும் இல்லா மல், தன் கையை வாயில் வைத்துச் சுவைத்துக் கொண்டு மேகம் இடிப்பதுபோலப் பெருங்குரலெடுத்துக் கதறுகின்றான்.

அப்பொழுது சிவபிரான் பார்வதியம்மையோடு விடையில் ஏறிக்கொண்டு உலகவர்தம் இடையூறுகள் நீங்கவும் தீவினைகள் வலியிழந்து ஓடவும் விண்ணில் உலவி வருகின்றான். ஈன்றதாய் இரக்கமில்லாமல் சென்றுவிட்டமையால் அழுகின்ற குழந்தையைப் பார்வதி அருட்கண்ணால் நோக்கிச் சிவனிடம், 'தாயை விட்டுத் தனியே கதறுகின்ற இந்தக் குழந்தைக்கு அருள்செய்யத் தகும்' என்று பணிவுடன் கூறுகின்றாள். உடனே சிவபிரான் இரக்கங் கொண்டு, இங்கு அழுகின்ற நல்லமைந்தன் தன்னைப் பெற்றவளை ஒத்த பருவத்தினையும் எல்லை இல்லாத ஆயுளையும் பெறுவானாக என வரம் கொடுக்கின்றான். பின்பு அவன் வாழ்தற்குரிய தாய் விண்ணிற் செல்லும் சிறப்புடைய ஒளிமிக்க நகரம் ஒன்றையும் படைத்துத் தருகின்றான். பார்வதி இராக்கதர்கட் கெல்லாம் மேவிய கருப்பம் விரைவில் பிறத்தலும் பிறந்தவுடன் தாயை ஒத்த பிராயமும் உண்டாவதாக என அருள் செய்கின்றாள். சிவபிரான் அருளிய வரத்தால் அந்த மைந்தன் அழுகைநீங்கி வளர்ச்சியுற்ற பருவத்தனாய்ச் சிவனடியில் பணிகின்றான். பணிந்தவனுக்குச் சுகேசன் எனப் பெயர் தந்து வலிமை தழைக்க வாழ்த்திச் செல் கின்றான் சிவபிரான். சுகேசன் சிவன் கொடுத்தருளிய விண் வழிநகரில் இந்திரனைப்போல வளத்தோடும் வலிமையோடும் இனிதாக வாழ்கின்றான்.

வாழ்கின்ற சுகேசன், பாடுகின்ற கந்தருவக் குலப் பெண்ணை மணந்து கிராமணி என்பவன் பெற்ற மாணிக்கம்போன்ற சிறப் பினையுடைய தெய்வவதி என்பவளை மணக்கின்றான். இருவரும் காதல் என்னும் கடலுக்குக் கரை காணாது இன்புறுகின்றனர். சுகேசனுக்குத் தெய்வவதி வயிற்றில் மாலியவான், சுமாலி, மாலி என்ற பெயருடைய மூவரும் பிறக்கின்றனர். ஆகுதியால் பொங் கும் மூன்று தீ வளர்வதுபோலவும் மருந்து பிறிது அறியா நோய்கள் வளர்வது போலவும் விரைவாக வளர்கின்றனர்.

வளர்கின்ற அம்மூவரும் அக்காலத்துத் தம் தந்தை சிவனிடத் தில் பெற்ற வரத்தையும் வலிமையையும் சிந்தித்துத் தாமும் அவ் வாறு பெற எண்ணி மேருமலையில் உள்ள தவ வனம் சார்கின்றார் கள். கொலையும் களவும் பொய்யும் சூதும் காமமும் ஆய ஐம்

பெரும் பாவங்களையும் நீக்கித் தம் ஐம்புலன்களையும் அடக்கி, நல்ல மனமும் அருள்நோக்கும் உடையராய் அருந்தவம் செய்கின்றார்கள். அவர்கள் கடுந்தவத்தைக் கண்டு வானவர் தானவர் முதலியோர் இவர் தவத்தால் இவ்வுலகம் என்ன ஆகுமோ என்று நடுங்குகின்றார்கள். அந்த நிலையில் பிரமன் தூய மணித்தேர்மீது வந்து தோன்றி மாதவத்திர்! நும்மனம் விரும்பியதைக் கேளுங்கள் என்கின்றான். உடனே அம்மூவரும் சொல்கின்றார்கள்: மூவுலகத்தும் உள்ள தேவர் முதலிய யாவராயினும் எமக்குப் போரில் தோற்கவும் குறைவு இல்லாத ஆயுட்காலம் வாழவும் செய்வாயாக' என்கின்றனர். பிரமனும் நீர் செப்பின யாவையும் தந்தனன் என்று அருள்செய்து செல்கின்றான். மாலியவான் முதலிய மூவரும் வரம் பெற்ற மகிழ்ச்சியால் பூரிக்கின்றார்கள்.

அம்மூவரும் பிரமனிடம் பெற்ற வரத்தினால் அச்சம் சிறிதுமின்றிப் பாதாளம், பூவுலகம், வானுலகம் ஆகிய மூன்றையும் நலியும்போது பாதாளம் கலங்கிடவும், நானிலம் நாசம் எய்திடவும் வானுலகில் இந்திரன் முதலிய தேவர்கள் புறங்காட்டி ஓடவும் செய்து திசைகள் பத்தினையும் தமக்குக் கீழ்ப்படுத்துகின்றனர். முப்புவனங்களையும் வென்ற மாலியவான் முதலிய மூவரும் தேவர் தச்சனை அழைத்து மூன்றுலகங்களும் அயன் அரி அரன் என்ற முத்தேவரும் கூடிவந்து போர்க்கு முயன்றாலும் நெருங்குதற்கரிய அரணினையுடையதாய்த் தேவர்களின் அமராவதியின் அழகையும் தோல்வியுறச் செய்யும் பேரழகுள்ள நகரத்தை அமைக்க ஏற்பாடு செய்க என்று சொல்ல, தேவர் தச்சனும் நல்லது என்று உடன்பட்டு அந்நகர் அமைவதற்கு உரிய இடத்தை நாடுகின்றான்.

முன்னொரு காலத்து வாயுதேவனும், வாசுகியும் தத்தம் வலிமையைக் கூறிக்கொண்டு மாறுபடுகின்றனர். மேருமலையின் ஆயிரம் சிகரங்களையும் வாசுகி தன் படத்தால் மூடிக்கொண்டு காத்து நிற்கவும், பெரிய காற்றுத் தன் முழுவலிமையும் காட்டித் தாக்கச் சிறுதும் சலியாது நின்றமையால், வாயுதேவன் நாணத்தோடு ஓரிடத்தில் ஒளித்துக் கொள்கின்றான். காற்றின் இயக்கம் இல்லாமையால் மூவுலகமும் கலங்கிப் புழுங்கி வருந்தாநிற்க, அது கண்டு தேவரும் முனிவரும் வேண்டிக் கொள்ள வாசுகி அவர்

வேண்டுகோட்கிணங்கித் தன் தலையொன்றினைச் சற்றே சாய்க்கின்றான். வாயுதேவன் கடும் வேகத்துடன் மோதி மேருவின் மூன்று சிகரங்களை முறித்துக்கொண்டு போய்க் கடலில் இட்ட இடம், இந்த மூவருக்கும் நிலைத்த நகரமாகும் என நினைத்து அவ்விடத்தில் இலங்கையை அழகுபெற உண்டாக்கினான்.

சந்திரனும் சூரியனும் நட்சத்திரங்களும் மேகமும் கீழ்ப்படுமாறு மேலோங்கியுள்ள இலங்கை நகரத்தைச் சூழ்ந்துள்ள மதிலும் அம் மதிலைச் சூழ்ந்துள்ள அகழியும் பார்த்தால் பூமியைச் சுற்றியுள்ள சக்கரவாளகிரியையும் அம்மலையைச் சூழ்ந்துள்ள பெரும்புறக் கடலையும் போலக் காணப்படுகின்றன. இலங்கை நகரத்தில் அமைந்த மலைபோன்ற மாடங்களைப் பார்க்கும்போது, மலைகள் எல்லாம் சேர்ந்து நம்மையெல்லாம் வச்சிரப்படையால் சிறகு அறுக்கும் இந்திரன் இன்னும் வெகுண்டு தீங்கு செய்யலாம் ஆதலின், கடல் சூழ்ந்துள்ள அழியா அரணினையுடைய இலங்கை நகரில் புகுவோம் என விரும்பி, அவ்விடத்தில் திரண்டனவோ? என்று எண்ணத்தோன்றும்.

அந்த இலங்கையின் கோபுரவாயில்களைப் பார்க்கும்போது, தான் உண்டாக்கும் உலகத்தை உகாந்தத்தில் அழிக்கின்ற பிரளய வெள்ளத்திற்குப் போக்கு வேண்டுமே என எண்ணிச் செய்தாற் போன்று பெரியவாய் விளங்குகின்றன. தெருக்களின் இருபுறத்தும் மணிகள் பதித்த திண்ணைகள் வரிசையாக அமைந்துள்ள அழகைப் பார்த்தால், நான்கு திசைகளின் முடிவிடத்தைக் காண்பதற்கு வந்த கரிய இருளை ஓட்டுதற்கென்றே அமைந்தனபோலக் காணப்படுகின்றன. இத்தகைய பேரழகுடைய இலங்கை நகரில் மாலியவான் முதலிய மூவரும் தேவதச்சனுக்குப் பூசனை செய்து குடிபுகுகின்றனர். எத்தகையோராலும் கண்களால் எட்டிப் பார்க்க வொண்ணாத காவலினையுடைய இலங்கையில் அம்மூவரும் அரசு வீற்றிருக்கும்போது கந்தருவப் பெண்ணாகிய நருமதை என்பவள் தான் பெற்றமங்கையர் மூவரையும் மாலியவான் முதலிய மூவர்க்கும் மூப்பின் முறையில் மணம் செய்து கொடுக்கிறாள். மாலியவானுக்கும் சுந்தரிக்கும் வச்சிரமுட்டி, பெரும்பாக்கன், துன்முகி, சுதகந்தன், நியாயகோபன், மத்தன், உன்மத்தன், அனலை என

எண்மர் பிறக்கின்றனர். சுமாலிக்கும் கேதுமதிக்கும் கைகசி, கும்பீநசி என்ற இருமகளிர் பிறக்கின்றனர். மாலிக்கும் இளையாள், வசுதைக்கும் அனலன் அனிலன், அரன், சம்பாதி என்ற புதல்வர் நால்வர் பிறக்கின்றனர். அவர்கள் எமனைப் போலவும் கனலைப் போலவும் நஞ்சினைப் போலவும் கொடியவர் தம் கோபம் போலவும் அதிக வரி வாங்கும் அரசன் பாவம் போலவும் வளர்கின்றார்கள். மைந்தரைப் பெற்ற மகிழ்ச்சியில் திளைக்கின்ற மாலியவானும் சுமாலியும் மாலியும் போர்வேட்கை மிக்கவராய்ப் பிரமனிடம்பெற்ற வரத்தின் வலிமையால் சக்கரத்தையுடைய தேர்ப்படையினராய் வலிய வில்லையுடையவராய் அளவிலாத பெரிய சேனையையுடையவராய் ஊழிக்காலத்து வீசும் காற்றும் ஊழித்தீயும்போல உலகத்தை அழிக்கத் தொடங்குகின்றார்கள்.

பாதாள உலகத்தையடைந்து அங்குள்ள நாகர்களை அடியோடு அழித்தும் மண்ணுலகத்தை அழித்துப் பொடி செய்தும் தேவர் தலைவனாகிய இந்திரனைத் துரத்திவிட்டு அவனுக்குரிய பொன்னுலியன்ற அமராவதியைக் கைப்பற்றியும் கொண்ட வெற்றியினால் செருக்கி, இம்மாலியவான் முதலிய மூவரன்றிப் பலவுலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கின்ற மும்மூர்த்திகளாவார் எவர்காண்? என்று சொல்லுவாராயினர் என்பது.

**ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடுமிடங்கள் :**

1. **வான்மீகத்தில் :** பிரமன் பலவகையான உயிர்களை முதலில் படைத்தவுடன், சில உயிர்கள் பசியாலும் தாகத்தாலும் வாட்டமுற்றவர்களாய்க் கவலையால் வருந்துகின்றவர்களாய்ப் பிரமனைப் பார்த்து நாங்கள் யாது செய்யவேண்டும் என்று கேட்கின்றனர். பிரமன் புன்னகையுடன் அந்த உயிர்களைப் புகழ்ந்துவிட்டு இந்தப் பல புவனங்களையும் முயற்சியுடன் காப்பாற்றுங்கள் (ரக்ஷியுங்கள்) என்று பதில் கூறுகின்றான்.

பசித்தவர்கள், பசியில்லாதவர்கள் என்ற இருதிறத்தாரில் பசியில்லாதவர்கள் அப்படியே காப்பாற்றுகின்றோம் (ரக்ஷிக்கிறோம்) என்று கூறுகின்றனர். பசியுடன் இருப்பவர்கள் (பக்ஷிக்கிறோம்) உண்கின்றோம்? என்கின்றனர். இவ்விருதிறத்தாரும் சொல்லிய

வற்றைக் கேட்ட பிரமன் உங்களில் காப்பாற்றுகிறேம் (ரக்ஷிக்கிறேம்) என்று சொன்னவர்கள் இராக்கதர்களாகுக, உண்கின்றேம் (பக்ஷிக்கிறேம்) என்று சொன்னவர்கள் இயக்கர்களாகுக (பசியைப் பொருட்படுத்தாத வலிவுள்ளவர்கள் அரக்கர்கள். பசிக்கு வருந்தும் மெலிவுள்ளவர்கள் இயக்கர்கள் என்றவாறு) என்று கூறிவிட்டுச் செல்கின்ருன். என்ற விளக்கம் தெளிவாகக் காணப்படுகின்றது.

ஒட்டக்கூத்தர் இந்த விளக்கத்தைக் கூருது, 'பரக்கும் இந்தப் பல புவனங்களே, இரக்கியுங்கோள் என இரங்காமல் ஏன்று, உரைத்தலால் ஏன்றுரைத்த உயிரெலாம் அரக்கர் ஆயினர், என்று மட்டும் கூறிச் செல்கின்ருர். இதில் இரட்சிப்போம் என்றவர் இராட்சதராயினர் என்ற சொல்லமைப்பின் நயம் தோன்றவில்லே. மேலும் பசியால் வாடியவராய்ப் பட்சிப்போம் என்பவர் யட்சர் ஆயினர் என்ற விளக்கமும் இங்குக் காணப்படவில்லே.

2. **வான்மீகத்தில்:** மாலியவான் முதலியோர் ஒன்றுசேர்ந்து யோசித்து விசுவகருமாவை அழைத்துத் தேவர்களுக்கு அவரவர் விரும்பியவாறே மாளிகை அமைக்க வல்லவனுகிய நீ எங்களுக்கு மாளிகை யொன்றை இமயமலேயிலோ மந்தரமலேயிலோ மேரு மலேயிலோ மகேசனது மாளிகைக்கு ஒப்பாக அமைத்துக் கொடுக்க வேண்டும் என்று சொல்கின்றனர். கைத்திறமுடைய விசுவகருமா அந்த அரக்கர்களே நோக்கி இந்திரனுடைய அமராவதி போன்ற அழகிய நகரம் ஒன்றைக் கூறுகின்ருன். தென்கடற்கரையில் திரிகூடம் என்ற ஒருமலே உள்ளது. அம்மலேக்கருகில் சுவேலமலே உள்ளது. இவற்றிற்கிடையில் மேகமண்டலத்திற்கு ஒப்பானதும் பறவைகளாலும் நுழைய முடியாததுமாகிய ஒரு நகரம் உளது. முப்பது யோசனே அகலமும் நூறு யோசனே நீளமும் உள்ளதாய், பொன்மயமான மதில்களால் சூழப் பெற்றதும் பொன் தோரண வாயில்களால் அலங்கரிக்கப் பட்டதுமாய அந்நகரம் இந்திரனது கட்டளேப்படி என்னுல் படைக்கப்பட்டுள்ளது. இந்திரன் முதலிய தேவர்கள் அமராவதியில் மகிழ்ச்சியோடு வாழ்வதுபோல நீங்கள் பகைவர்களால் அணுகமுடியாத அவ்விலங்கை மாநகரில் வாழுங்கள் என்று கூறுகின்ருன். விசுவகர்மாவின் சொற்படி மாலியவான் முதலியோர் இலங்கையில் குடிபுகுந்து வசிக்கின்றனர் என்று உளது.

ஒட்டக்கூத்தர் இக்கதைப்போக்கைச் சிறிது மாற்றியுள்ளார். மாலியவான் முதலியோர் சொன்னபடி நகரை அமைக்கத்தக்க இடத்தைத் தேடி விசுவகருமா முடிவில் தென்கடற்கரையில் உள்ள திரிகூடமலைப் பகுதியில் நகரை அமைத்ததாகக் கூறியுள்ளார். வான்மீகி கூறியுள்ளதுபோல் அந்நகரம் முன்னமே இந்திரன் ஏவலின்படி விசுவகருமாவினுல் செய்யப்பட்டிருந்தது என்பதைக் கூறவில்லை. மேலும் இலங்கையின் நீளம் அகலம் இவ்வளவு என வான்மீகி வரையறையாகக் கூறியதுபோல் இவர் கூறவில்லை; ஆனுல் இலங்கையின் அழகையும் உயர்வையும் நன்கு புனைந்துரைத்திருக்கின்றுர்.

இலங்கை நகரம் வான்மீகியின் கூற்றுப்படி இந்திரன் ஏவலின் படி விசுவகருமாவினுல் நியமிக்கப்பட்டது என்பதும் இந்திரன் விரும்பும்போது தங்குதற்கென்றே அதை அமைத்திடச் செய்திருக்க வேண்டும் என்பதும் புலனுகின்றன. ஆனுல் முதல் முதலில் மாலியவான் முதலிய அரக்கர் மூவரே இலங்கையில் குடியேறி ஆண்டனர் என்பதும் திருமாலுக்கு அவ்வரக்கர் தோற்றுப் பாதாளம் புகுந்தபின்பு பலவாண்டுகள் வாழ்வோரின்றி வறிதே கிடந்தது என்பதும் பின்பு குபேரன் தவஞ்செய்து பிரமன் பால் வரம்பெற்றபின் தன் தந்தையின் சொற்படி அந்த இலங்கையில் குடிபுகுந்து ஆண்டான் என்பதும் புலனுகின்றன.

3. **வான்மீகத்தில் :** சுமாலியின் மக்கள் எனப் பிரகஸ்தன், அகம்பன், விகடன், காலகார்முகன், தூம்ராஷன், தண்டன், சுபார்சுவன், சங்கிராதி, பிரகசன், பாசகர்ணன், ராகை, புட்போத்கடை, கைகசீ, கும்பீநசி, என்ற பதினுல்வர் சொல்லப்பட்டுள்ளனர். ஆண்கள் பதின்மர் பெண்கள் நால்வர்.

**ஒட்டக்கூத்தர் :** சுமாலியின் மக்களாகக் கைகசீ, குப்பீநசி என்ற இரு பெண்டிரையே கூறியுள்ளார். இவ்வாறு கூறக் காரணம் தெரியவில்லை. சுமாலிக்கும் கேதுமதிக்கும் பிறந்தவர்கள் இந்த இரு மகளிர்; மற்றைப் பன்னிருவரும் வேறு மனைவிபால் பிறந்திருப்பரோ? புலப்பட வில்லை.

4. **வான்மீகத்தில் :** மாலிக்குப் பிறந்தவர்களாகிய அனிலன், அனலன், அரன், சம்பாதி என்ற நால்வரும் விடணனுடைய அமைச்சர்கள் என்ற விளக்கம் உள்ளது. ஒட்டக்கூத்தரில் விளக்கம் இல்லை.

5. **வான்மீகத்தில் :** மாலியவான் முதலிய மூவரும் மூவுலகையும் வென்று பெற்ற மகிழ்ச்சியினால் உருத்திரனும் நானே! திருமாலும் நானே! பிரமனும் நானே! தேவேந்திரனும் நானே, எமனும் நானே, வருணனும் நானே, சந்திரனும் நானே, சூரியனும் நானே, என்று ஒவ்வொருவரும் தனித்தனியே சொல்லிக் கொண்டு தேவர்களைத் துன்புறுத்துகின்றனர் என்றுளது.

**ஒட்டக்கூத்தர் :** அவ்வாறு கூறாது, மாலியவான் முதலிய நாங்கள் மூவரேயன்றி மும்மூர்த்திகளாவர் எவரே காண்? என்று அவர்கள் சொல்லிக்கொண்டதாகச் சுருக்கமாகக் கூறியுள்ளார்.

## படலப் பொருட் சிறப்பு

அரக்கர் பிறப்புப் படலமாகிய இப்படலத்தில் இலங்கை நகரில் எழில்மிகு தோற்றம் நன்கு எடுத்தியம்பப்படுகின்றது. மலையென மழையென மாடம் ஓங்கி (மலைபடுகடாம் 484) என மாடத்திற்கு உவமையாக மலை சொல்லப்படுகின்றது கண்ட புலவர், இலங்கை மாநகரில் நெருங்கியுள்ள மாடங்களின் மாண்புமிக்க தோற்றம்கண்டு ஒரு கற்பனைசெய்கின்றார். இலங்கையில் உயர்ந்து எழிலுடன் தோன்றும் மாடங்கள் எல்லாம் மலைகளின் மாண்புறு தோற்றம்போலக் காணப்படுகின்றது. ஆனால், மலைகள் இலங்கையில் புகுதற்குக் காரணம் என்னை? என்பாரை நோக்கிச் சொல்கின்றார். இந்திரனால் சிறகு அறுப்புண்ட மலைகள் எல்லாம் கூடிச் சிந்தித்தனவாம். நாம் நடுங்கும் வண்ணம் வச்சிரப்படையால் நம் சிறகுகளை அறுத்த இந்திரன் இன்னமும் ஒருகால் நம்மேல் கோபம் கொண்டு நமக்குத் திங்கு செய்யலாம், ஆகவே, நாம் பாதுகாப்புடைய இடத்தில் போய்த் தங்குதலே நல்லது என எண்ணி, அலைகள் நிறைந்த பெருங்கடலால் சூழப்பட்டதும் அழிவில்லதுமாகிய இலங்கையில் பாதுகாப்புள்ள அரண் உள்ளதை அறிந்து வந்து அம் மலைகள் எல்லாம் அவ்விலங்கையில் ஒருசேரத் திரண்ட

தைப் போன்றுளது மாடங்கள் என்கின்றார். சங்ககாலத்தில் மலை யென மழையென மாடம் ஓங்கி என மாடத்திற்கு மலையை உவமை சொல்லியிருப்பதை உளங்கொண்டு ஆசிரியர் இங்குத் தற்குறிப்பேற்ற உவமையாக இக்கருத்தை அழகுபடுத்தியுள்ளார்.

**குலையும் வண்ண நமையெல்லாம் குலிகத்தாலே சிறகறுக்கும்**
**இலகுமவுலி யிமையவர்கோ னின்னுஞ் சீற வடுக்குமென**
**அலைகொள் பெருநீர்க் கடல்சூழ்ந்த வழியா விலங்கை யரண்தேடி**
**மலைக ளெல்லா மவ்விடத்தே திரண்ட தொக்கு மணிமாடம்.**

என்பது காணலாம். இச்செய்யுளின் அமைப்பையும் அணியையும் ஒப்பதாகப் பிற்காலத்தே சிவப்பிரகாசர்,

**கண்பிசைந் தொருசே யின்னும் கலுழினும் தனைக்கொடுப்பன்**
**மண்பிசைந் துண்ட மாயன் மறுத்திட வலியனல்லன்**
**நண்பிசைந் திறைவனுக்கே நாமிடமா வமென்று**
**பண்பிசைந் தலைதிரண்ட பரிசினின் றிடுமக்குன்றம்.**

(பிரபுலிங்கலீலை 5-கைலாசகதி)

என வெள்ளிமலையின் சிறப்பைப் பேசுகின்றார். வெள்ளிமலையின் வெள்ளிய தோற்றத்தைக் கண்டவர்கள் திருப்பாற்கடலே மலை யாகத் திரண்டு நின்றது போலுளது என வியந்து கூறுவர். திருப்பாற்கடல் கைலைமலையாகத் திரண்டுவரக் காரணம் வேண் டுமே கூறுகின்றார். உபமன்னியு என்ற குழந்தை அழுதபோது கூத்தப்பிரான் பாலுக்குப் பாலகன் வேண்டியழுவதாக அறிந்து திருப்பாற்கடலையே அழைத்து அக்குழந்தைக்குக் கொடுத்துள்ளார். திருப்பாற்கடல் இந்தப் பழைய நிகழ்ச்சியை நினைத்துப் பார்க் கின்றது. நாம் திருமாலுக்கு இடமாக அமைந்திருந்தும் சிவபிரான் உபமன்னியுக்குக் கொடுத்தபோது நம்மிடத்துப் படுத்துறங்கும் திருமால் மறுப்பேதும் சொல்லாது விடுத்தலால், இனியும் ஒரு குழந்தை கண்ணைப் பிசைந்து கொண்டு பாலுக்கு அழுமானால் உடனே சிவபிரான் நம்மைக் கொடுத்துவிடலாம். எனக்கு இருப் பிடமான பாற்கடலை ஏன் கொடுக்கின்றீர்கள் என்று மறுக்கும் ஆற்றல் மண்பிசைந்துண்ட குழந்தைத்தன்மையுள்ள மாயனுக்கு இல்லை. எனவே இத்தகைய வலிமையில்லாத திருமாலுக்கு இட

மாக இருப்பதை விடுத்து ஆற்றல் மிக்க பெருந்தேவனுகிய சிவ பிரானுக்கே நாம் இடமாவேமானுல், நமக்கு அழிவில்லை என்று நினைத்துப் பாற்கடல் திரண்டு மலையாக வந்துளது என்னும் தன்மையில் அக்கைலைமலை மிக்க வெண்ணிறத்துடன் நிற்கின்றது என்பது தற்குறிப்பேற்றமாகக் கூறப்பட்டுளது காணலாம். இப் படலத்தில் இங்ஙனமே பல சிறப்புள்ள கற்பனைகள் உள்ளன.

### அரக்கர் பிறப்பு

57. ஆதி தன்பா லனைத்துல கங்களும்
பேத மாய வுயிரும் பிறந்த நாள்
ஓது பல்லுயி ரிற்சில வுத்தம
ஏது செய்வ மெனவிறை கூறுவான்.

**ஆதி தன்பால் அனைத்து உலகங்களும்**
**பேதம் ஆய உயிரும் பிறந்தநாள்**
**ஓது பல் உயிரிற் சில உத்தம!**
**ஏது செய்வம்? என இறை கூறுவான்.**

**பொ:** ஆதியாகிய பிரமனிடத்து எல்லா உலகங்களும் அவ் வுலகங்களில் உள்ள வேறு பாட்டையுடைய உயிர்களும் பிறந்த நாளில், வேறுபாடு உடையவாகச் சொல்லப்பட்ட பல உயிர்களில் சில உயிர்கள் இறைவனை நோக்கி, உத்தமனே! எதனைச் செய் வோம் யாம் என்று வினவ, பிரமன் கூறுகின்முன்.

**கு:** ஆதி என்றது பிரமனை. உயிர்கள் எண்பத்து நான்கு நூருயிரம் பேதம் உடையனவாதலின் பேதமாய வுயிரும் என்ருர். பல உயிர்களில் சில உயிர்கள் இறைவனைநோக்கி நாங்கள் இவ்வுல கத்து என்ன செய்ய வேண்டும் என வினவினர்கள். உத்தமன்- எவ்வுயிர்க்கும் தலைமையான பண்புடையவன். (௫)

### பிரமன் சொல்லையேற்றுக் கொண்டவர்கள் அரக்கராதல்

58. பரக்கு மிந்தப் பலபுவ னங்களை
இரக்கி யுங்கோ ளெனவிரங் காமலேன்

றுரைத்த லாலேன் றுரைத்த வுயிரெலாம்
அரக்க ராயின ரந்த வரக்கரில்.

பரக்கும் இந்தப் பலபுவனங்களை
இரக்கி யுங்கோள் என இரங்காமல் ஏன்று
உரைத்தலால் ஏன்றுஉரைத்த உயிர் எலாம்
அரக்கர் ஆயினர் அந்த அரக்கரில்.

பொ: விண்ணில் பரவியுள்ள இந்தப் பல அண்டங்களையும் காப்பாற்றுங்கள் என்று பிரமன் கூற அதுகேட்டுத் தம்முயிர்க்கு இரங்காமல் பிரமன் சொல்லை ஏற்றுக்கொண்டு, அவ்வாறே இவற்றைக் காப்பாற்றுகிறோம் என்று சொன்னமையால் அவ்வாறு பிரமன் சொல்லை ஏற்றுக்கொண்டு சொன்ன உயிர்கள் எல்லாம் அரக்கர்கள் ஆயினார்கள்; அந்த அரக்கர்களில்.

கு: பிரமனிடம் தோன்றிய அண்டத்திலிருந்து பல அண்டங்கள் தோன்றின. அவ்வண்டங்களில் பலவகையான உயிர்களுந் தோன்றின. பல புவனங்களை இரக்கியுங்கோள் என்புழிப் புவனம் ஆகுபெயராய் அப்புவனங்களின் உயிர்களை யுணர்த்தியது. ரக்ஷியுங்கோள் என்ற வடசொல் இரக்கியுங்கோள் எனத் தமிழில் திரிந்து வந்தது. ஐந்திருகவ்வும் (நன்னூல்–பதவியல் 19) என்ற விதிப்படி முப்பத்தைந்தாவது மெய்யாகிய க்ஷ என்பது இருககரமாயது 'ரவ்விற்கம் முதலாமுக்குறிலும்' என்ற விதிப்படி இரக்கியுங்கோள் என இகரம் முன்வந்தது. ஏன்று-ஏற்றுக்கொண்டு. குளகம், வருஞ்செய்யுளில் தொடரும். (உ)

**அரக்கரில் பிரகேதி சாதுமார்க்கத்தைச் சார்ந்தது**

59. ஏதி யும்பிர கேதியு மென்றுல
கோது பேர்க ளுடன்பிறந் தார்களில்
நீதி யோன்பிர கேதி நெறிதவச்
சாது மார்க்கந் தனினின்று சார்ந்தனன்.

ஏதியும் பிரகேதியும் என்று உலகு
ஓதுபேர்கள் உடன் பிறந்தோர்களின்
நீதியோன் பிரகேதி நெறிதவச்
சாது மார்க்கம் தனில் நின்று சார்ந்தனன்.

பொ: அந்த அரக்கரில் ஏதி, பிரகேதி என்று உலகத்தோர் சொல்லுகின்ற பேர்களோடு பிறந்த இருவரில் நீதியுடையனாகிய பிரகேதி என்பவன் தவநெறியாகிய சாந்தமான வழியில் பழகி நிலைபெறச் சார்ந்துவிட்டான்.

கு: ஏதி, பிரகேதி என்ற பேர்களையுடைய உடன்பிறந்தோர் இருவரில் பிரகேதி என்பவன் தவநெறியைச் சார்ந்தான் என்றவாறு. பிரகேதி என்பவன் நீதியோன் ஆதலின், சாது மார்க்கத்தைப் பின்பற்றினான் என்க. (௯)

ஏதி பயையை மணத்தல்

60. மற்றை யேதி மருவல ரோடிடச்
செற்ற காலற் கிளையவ டீவிழிக்
கற்றை வார்குழற் கன்னி பயையெனப்
பெற்ற பேருடை யாள்கை பிடித்தனன்.

மற்றை ஏதி மருவலர் ஓடிடச்
செற்ற காலற்கு இளையவள் தீவிழிக்
கற்றை வார்குழல் கன்னி பயை எனப்
பெற்ற பேர் உடையாள்கை பிடித்தனன்.

பொ: மற்றொருவனாகிய ஏதி என்பவன் பகைவர்கள் ஓடுமாறு வெகுண்ட எமனுக்கு இளையவளும் தீயைப்போல் சிவந்த விழியையும் கற்றையான நீண்ட கூந்தலையும் உடைய கன்னியுமாகிய பயை எனப் பெற்ற பேருடையவளது கையைப் பற்றி மணந்து கொண்டான்.

கு: ஏதி என்பவன் எமனுக்குத் தங்கையாகிய பயை என்பவளை மணந்து கொண்டான் என்றவாறு. மருவலர்-பகைவர்.

காலன்-எமன். அவன் வீரம் புலப்பட 'மருவலர் ஓடிடச் செற்ற காலன்' என்றார். செற்ற-வெகுண்ட. காலனது வெகுட்சி கண்டே பகைவர் ஆற்றாது ஓடினர் என்றபடி. தீவிழியும் கற்றைவார் குழலும் உடைய கன்னி என்க. இளையவளும் கன்னியுமாகிய பயை எனப்பெற்ற பேருடையவளது கையைப் பிடித்தனன் என்க. கை பிடித்தல் என்பது மணத்தலை யுணர்த்தியது. மணத்தின் இன்றியமையாச் சடங்கு தலைவன் தலைவியின் கைப்பற்றுதலே யாதல் தெளிவு. (௬)

### வித்துக்கேசன் பிறத்தல்

61. எத்திக் குந்திற லெய்திய வேதிக்குப்
பத்திச் செம்மயி ராள்பயை பாங்குற
வத்திக் குங்கொடி யாடன் வயிற்றிடை
வித்துக் கேசன் பிறந்தனன் வீரனே.

**எத்திக்கும் திறல் எய்திய ஏதிக்குப்**
**பத்திச் செம்மயிராள் பயை பாங்குஉற**
**அத்திக்கும் கொடியாள்தன் வயிற்றிடை**
**வித்துக் கேசன் பிறந்தனன் வீரனே.**

**பொ:** எத்திசையிலும் சென்று வென்று திறமை பெற்ற ஏதி என்பவனுக்கு வரிசையான செம்பட்டை மயிரையுடையவளாகிய பயை என்பவள் சிறப்புற மதயானையினும் கொடியவளாகிய அவள் வயிற்றில் வித்துக்கேசன் என்ற பெயருடைய வீரன் பிறந்தனன்.

**கு:** ஏதி எட்டுத்திசையிலும் சென்று தன் திறமை காட்டிப் பகைவரை வென்ற வீரன் என்பார் 'எத்திக்கும் திறலெய்திய ஏதி' என்றார். பயை என்பவள் வரிசை வரிசையாகத் தோன்றும் செம்பட்டை மயிருடையவள் என்றவாறு. மதயானையினும் கொடியவளாக விளங்கினவளின் வயிற்றில் ஏதிக்கு வித்துக்கேசன் பிறந்தனன் என்றவாறு. வித்துகேசனாகிய வீரன் பிறந்தனன் என இயைக்க. இனி இராமனை அகத்தியர், வீரனே! என விளித்துச் சொன்னதாகவும் கொள்ளலாம். பயை பாங்குற

வித்துக்கேசன் பிறந்தனன் என இயையும் வித்துக்கேசன்-மின்னலைப்போன்ற சிகையினையுடையவன். காரணப்பெயர். (ரு)

### வித்துக்கேசன் சாலகடங்கடையை மணத்தல்

62. இந்தி ரற்குச் சசிபோ லெழிலுடை
அந்த வீரற் கணிமணிப் பூண்முலைக்
கந்த வார்குழற் சால கடங்கடை
சந்தி தன்மக டாரம தாயினாள்.

இந்திரற்குச் சசிபோல் எழிலுடை
அந்த வீரற்கு அணிமணிப் பூண்முலைக்
கந்தவார்குழல் சால கடங்கடை
சந்தி தன்மகள் தாரம்அது ஆயினாள்.

பொ: இந்திரனுக்கு இந்திராணி அமைந்ததுபோல அழகுமிக்க அந்த வித்துக்கேசன் என்ற வீரனுக்கு மணிகள் பதிந்த அணிகலன்களை அணிந்த நகில்களையும் மணமிக்க நீண்டகூந்தலையுமுடைய, சாலகடங்கடை, - சந்தி என்பாளின் மகள் – மனைவி ஆயினாள்.

கு: வித்துக்கேசன் சந்தியின் மகளை மணந்தது இந்திரன் சசியை மணந்ததுபோன்ற பொருத்தமிக்கது என்றவாறு. சந்தி என்ற கந்தருவப் பெண்ணின் மகள் சாலகடங்கடை. அவள் மணிப்பூணணணி முலையினையும் கந்தவார் குழலையும் உடையவளாக இருந்தாள் என்றவாறு. (சு)

### வித்துக்கேசனும் சாலகடங்கடையும் பிரியாது இன்புறுதல்

63. நீடு வார்குழ னேரிழை யாளும்வண்
டாடு தார்திக ழந்த வரக்கனும்
கூடு மாவியுங் கூடிய வன்றிலும்
பேடு மென்னப் பிரியல ராயினார்.

**நீடு வார்குழல் நேரிழையாளும், வண்டு**
**ஆடு தார்திகழ் அந்த அரக்கனும்**
**கூடும் ஆவியும், கூடிய அன்றிலும்**
**பேடும் என்னப் பிரியலர் ஆயினர்:**

பொ: மிக நீண்ட கூந்தலையுடைய பொருந்திய அணிகலன் அணிந்த சாலகடங்கடையும் வண்டுகள் மொய்க்கின்ற மலர் மாலையணிந்த அந்த வித்துக்கேசியும், உடலும் உயிரும் போலவும் கூடிவாழ்கின்ற அன்றில் பறவையும் அதன் பேடையும் போலவும் ஒன்றிப் பிரியாமல் இன்புற்றிருந்தனர்.

கு: கூடு என்றது உடம்பினை. உடம்பும் உயிரும் ஒன்றியிருத்தல்போல வித்துக்கேசனும் சாலகடங்கடையும் ஒன்றியிருந்தனர் எனவும், அன்றிலும் பேடையும் பிரியாதிருத்தல் போலப் அவர்கள் பிரியாதிருந்தனர் எனவும் கொள்க: முன்னது ஒற்றுமை நயம், பின்னது வேற்றுமை நயம். உடம்பும் உயிரும் ஒன்றெனத் தோன்றுதல் போல அவ்விருவரும் ஒன்றியிருந்தனர் என்க. அன்றிற் பறவையும் பேடையும் இரண்டு வடிவங்களையுடைய வாய்ப் பிரிந்து செல்லுதற்குரியவாயிருந்தும் அன்பினால் பிரியாது இருத்தல்போல, அவ்விருவரும் இருவடிவாய்ப் பிரிந்த வழியும் பிரிந்து சேய்மையிற் செல்லாமல் அருகிருந்தனர் என்பதைப் புலப்படுத்தியவாறு. (எ)

**சாலகடங்கடை கருக்கொண்டது**

64. பெருகு காதலி னுள்பெருத் தோங்கிய
ஒருவன் வீரிய முற்றது தாங்கினாள்
விரியும் வெண்டிரை மேவிய வேலைவாய்க்
கரிய மேகங் கருத்தரித் தென்னவே.

**பெருகு காதலினுள், பெருத்து ஓங்கிய**
**ஒருவன் வீரியம் உற்று, அது தாங்கினாள்;**
**விரியும் வெண் திரை மேவிய வேலைவாய்க்**
**கரிய மேகம் கருத் தரித்தென்னவே.**

பொ : விரிகின்ற வெண்மையான அலைகள் பொருந்திய கடலிடத்துப் படிந்து கரிய மேகம் கருத்தரித்தாற் போன்று, பெருகிய காதலுடையவளாகிய சாலகடங்கடை உருவம் பெருத்து உயர்ந்துள்ள வித்துக்கேசி என்னும் ஒப்பற்றவன் பால் தோய்ந்து அவன் வீரியம் தன் வயிற்றில் பொருந்த அதனைத் தாங்கிக் கருவுற்றாள்

கு : கடல்போன்றவன் வித்துக்கேசி; சாலகடங்கடை அக் கடலில் படிந்து கருக்கொண்ட மேகம் போன்றவள்; என உவமையை விரித்துக் கொள்க. வேலை—கடல். கரிய மேகம் என்றது இயற்கையடை. (அ)

**சாலகடங்கடை மகனைப் பெற்றுவிட்டுக்
காதலனை நோக்கிச் செல்லுதல்**

65\. ஆய பேதை யரிதினி லீன்றதன்
சேயை நீத்துச் சிறந்ததொர் காதலன்
போய தெவ்விட மவ்விடம் புக்கனள்
நேய மோரிடத் தேயன்றி நிற்குமோ.

**ஆயபேதை அரிதினில் ஈன்ற தன்
சேயை நீத்துச் சிறந்ததுஓர் காதலன்
போயது எவ்விடம், அவ்விடம் புக்கனள்;
நேயம் ஓரிடத்தே அன்றி நிற்குமோ?**

பொ : அந்தச் சாலகடங்கடை என்ற பேதைப் பெண், தான் அரிதில் பெற்றெடுத்த மகனை விடுத்துத் தன் சிறந்த காதலனாகிய வித்துக்கேசி போன இடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். (இங்ஙனமும் நிகழுமோ? எனின்) அன்பு என்பது, ஓர் இடத்தில் அன்றி நிற்குமோ? நில்லாது என்றபடி.

கு : பெற்றமகனை விடுத்துக் கணவனை நாடிச் சென்ற தன்மையை நினைந்து ஆசிரியர் இங்கு அவளை 'பேதை' என்று குறிப்பிட்டார். பெண்டிர்க்கு இயல்பல்லாத செயல் இது என்று

பழிப்பவரை நோக்கி இறுதியில் வேற்றுப் பொருள் வைப்பாக 'நேயம் ஓரிடத்தேயன்றி நிற்குமோ?' என்றார். மகனிடத்தும் கணவனிடத்தும் நேயம் இருத்தல் இயல்பன்று ஆதலின், கணவனிடத்து மட்டுமே நேயத்தை வைத்துச் சென்றது பிழையன்று என்று அமைதி கூறியவாறு. மகனைப் பெற்றவுடன் சாலகடங்கடையை விடுத்து வித்துக்கேசி வேறிடம் சென்றானாக, அவன் பிரிவைப் பொறாது அவன் புக்க இடத்திற்குச் சாலகடங்கடை புக்காள், மகனை விடுத்து என்க. நேயம் ஓரிடத்தன்றி நில்லாது என்பது உண்மையாயின் சாலகடங்கடை கணவனை விடுத்து மகனைச் சார்ந்திருத்தல் கூடாதோ? என்பார்க்கு வருஞ்செய்யுளால் விடை கூறுகின்றார். (கூ)

66. சேம மில்லாச் சிறுவனைப் போகட்டுப்
போம டந்தை புரிந்துபின் பார்த்திலள்
வாம மேகலை மாதர்க்கும் மைந்தர்க்கும்
காம மிக்கதன் பின்புகண் தோற்றுமோ?

**சேமம் இல்லாச் சிறுவனைப் போகட்டுப்**
**போம்மடந்தை புரிந்துபின் பார்த்திலள்**
**வாமமேகலை மாதர்க்கும் மைந்தர்க்கும்**
**காமம் மிக்கதன் பின்பு கண் தோற்றுமோ?**

பொ: பாதுகாப்பு வேறு இல்லாத சிறுவனைப் பெற்ற விடத்திலேயே போட்டு விட்டுப்போன சாலகடங்கடை அக் குழந்தையை விரும்பித் திரும்பியும் பார்க்காமல் சென்று விட்டாள். இது அடுக்குமோ எனின்? அழகிய மேகலை யணிந்த பெண்டிர்க்கும் ஆடவர்க்கும் காமம் மிக்கதாயின் பின்பு கண் தெரியுமோ? தெரியாதன்றே.

கு: பெற்ற பிள்ளையைத் தாய் மறந்திருத்தல் இயல்பன்று. அதுதானும் வேறு பாதுகாப்பு இல்லாத புனிற்றிளங்குழவியைப் பெற்றவிடத்திலேயே போட்டுவிட்டுப் போன சாலகடங்கடை

அக்குழவியை நினைந்து விரும்பித் திரும்பியும் பாராது கணவனைப் பின்பற்றிச் சென்றுவிட்டாள்; இது அடுக்குமோ எனின் மாதரார்க்கும் மைந்தர்க்கும் காமம் மிக்கதாயின் கண் தெரியுமோ? என வேற்றுப் பொருள் வைப்பு அணி பொருந்தக் கூறி அமைதி செய்தவாறு. காமத்திற்குக் கண்ணில்லையாதலின் தான் பெற்ற மகனிடத்துக் கண்ணோட்டமின்றிக் காமமிக்குக் கணவனை நாடிச் சென்றாள் என்றவாறு. காதல் மிக்குழிக் கற்றவுங் கைகொடாவாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால் (சீவகசிந்தாமணி–1632) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (௬௰)

**பிறந்த குழந்தை தனியே கிடந்து கதறுதல்**

67. போய பின்புதன் பொற்கர முட்டிநீள்
வாயில் வைத்து மழையிடிப் பொத்திட
ஆய மைந்தன்வந் தஞ்சலென் பாரின்றித்
தாயி ழந்து தனியே கதறினன்.

**போயபின்பு தன் பொற்கரம் முட்டி நீள்**
**வாயில் வைத்து மழை இடிப்பு ஒத்திட,**
**ஆய மைந்தன் வந்து அஞ்சல் என்பார் இன்றித்**
**தாய்இழந்து தனியே கதறினன்.**

**பொ :** சாலகடங்கடை போன பின்பு அந்த மைந்தன் தன்னிடம் வந்து ‘அஞ்சாதே’ என்று தஞ்சம் சொல்வாரின்றித் தாயைப் பிரிந்து தன் அழகிய கரத்தை முட்டிதம் செய்துகொண்டு தன் நீண்ட வாயில் வைத்துக் கொண்டு மேகத்தின் இடிஒலியை ஒக்கும்படி தனியே இருந்து கதறலானன்.

**கு :** போய பின்பு ஆயமைந்தன் அஞ்சல் என்பாரின்றித் தாயிழந்து தன் பொற்கர முட்டி, நீள் வாயில்வைத்து மழையிடிப்பு ஒத்திடத் தனியே கதறினன் எனக் கொண்டு கூட்டி முடிக்க; முட்டி என்பது முட்டித்து என்னும் பொருளுடைய வினையெச்சம். தாய் இழந்து என்றது அவள் அன்பற்ற நிலை மரணத்தையொக்கும் என்ற கருத்தாற் கூறியது. தாய் பிரிந்தனளே அன்றி இறந்திலள்

என்பது உளங்கொண்டு நோக்குதல் வேண்டும். துன்புறுவோர்க்கு அஞ்சேல் என்று வந்து அன்பு காட்டுவார் உளராயின் அத்துன்பம் குறையும். அதற்கு யாரும் இல்லையெனின் அத்துன்பம் பன்மடங்கு பெருகுதல் இயல்பு. முற்றுந்துறந்து அறிவாற் சிவனே யான மாணிவாசகப் பெருமானும், ''பஞ்சேரடியாள் பாகத் தொருவா! பவளத் திருவாயால், அஞ்சேலென்ன ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே'' (திருவாசகம்-425) என இறைவனை நோத்கிக் கதறு தல் காணலாம். இதனால் அஞ்சலென்பாரின் அவசியம் புலப் படும். (௬௬)

தேவர் தொழச் சிவபிரான் பார்வதியோடு பவனி வருதல்

68. இந்தி ராதி யிமையவர் யாவரும்
வந்து கூடி மகிழ்ந்து மலர்மழை
சிந்தி யீசன் றிருவுள மென்கொலென்
றந்த ரத்திடை நின்றடி போற்றிட.

**இந்திராதி இமையவர் யாவரும்**
**வந்து கூடி மகிழ்ந்து மலர்மழை**
**சிந்தி ஈசன் திருவுளம் என்கொல் என்று**
**அந்தரத்திடை நின்று அடி போற்றிட.**

பொ: இந்திரன் முதலிய தேவர்கள் எல்லோரும் வந்து குழுமி மகிழ்ந்து கற்பக மலர் மாரி சொரிந்து ஈசன் திருவுள்ளம் என்ன கருதிற்றோ என்று பணிமொழி கூறி விண்ணிடை நின்று (ஈசன்) திருவடியைப் போற்றா நிற்க.

கு: குளகம். இந்திர-ஆதி, இந்திராதி என்ற வடமொழி தீர்க்க சந்தி தமிழில் வந்தது. இமையவர், இமையால் சிறப்புடைய வர்-இமையா நாட்டமுடையவர் என்றபடி. கற்பகமலரை மழை போல் மிகுதியாகச் சிந்தினார்கள்என்பார் மலர் மழை சிந்தி என்றார். சிவபிரான் பார்வதியோடு உலாவுவதை யறிந்த தேவர்கள் அப் பெருமான் முன் வந்து குழுமி இங்ஙனம் எம்பெருமான் எழுந்தருளி யது என் கருதியோ? என்று பணி மொழி சொல்லி அடி வணங்கிட

இறைவன் உலாவுவான் என வருஞ்செய்யுளில் முடியும். ஈசன் திருவுளம் என்கொல் என்பது முன்னிலையைப் படர்க்கையாக்கிக் கூறியது, வழுவமைதி இங்ஙனம் கூறல் உயர்வு கருதிய மரபாகும். (௬௨)

69. ஊறு நீங்கி யுலகோ ருறுவினை
பாறி யோடப் பவனி யுலாவுவான்
நாறு பூங்குழ னாயகி தன்னொடும்
ஏற தேறி யிறைவனங் கெய்தினான்.

**ஊறு நீங்கி, உலகோர் உறுவினை**
**பாறி ஓடப், பவனி உலாவுவான்**
**நாறு பூங்குழல் நாயகி தன்னொடும்**
**ஏறது ஏறி இறைவன் அங்கு எய்தினான்.**

**பொ :** உலகத்துள்ளோர் இடையூறு நீங்கவும், அவர்பால் உறக்கடவவான தீவினைகள் வலியழிந்து ஓடவும் பவனியாக உலாவுவானாய் இயற்கை மணம் வீசுகின்ற பொலிவு வாய்ந்த கூந்தலையுடைய பார்வதி தேவியொடும் எருது ஏறிக்கொண்டு சிவபிரான் அவ்விடத்தை அடைந்தான்.

**கு :** இறைவன் உலாவருதல் உலகத்தவரின் நன்மைக்காகவே என்பதை இதனால் விளக்குகின்றார். நீங்கி என்னும் செய்தெனெச்சம் செயவெனெச்சப் பொருளில் வந்தது. உலகோர் ஊறு நீங்க, உறுவினை பாறியோட என இயையும். இறைவனது திருக்கணோக்கம் பட்டவுடன் உலகத்துயிர்கள் உற்ற துன்பம் நீங்கப் பெறுவார்கள். இனி உறக்கடவவான எதிர்வினைகளும் பயன் தாராது அஞ்சி ஒடிடும் என்றபடி. பாறுதல்-வலியழிதல். 'பழவினைகள் பாறும் வண்ணம்' (திருவாசகம்-648) என்றது காண்க. பவனி-உலா. உலாவுவான் என்றது உலாவுதலைச் செய்வானாய் என்றவாறு. பவனி பெயர், உலாவுவான் என்பது முற்றெச்சம். உலாவுவானாய் நாயகி தன்னொடும் அங்கு எய்தினான் என இயையும். நாறுபூங்குழல் என்றது இயற்கை மணமுடைய

கூந்தலே. உயர்ந்த இலக்கண முடைய பெண்டிர் கூந்தலுக்கு இயல்பாகவே நறுமணம் உண்டு என்பதை 'கொங்கு தேர் வாழ்க்கை எனத் தொடங்கும் குறுந்தொகை முதற் பாடலாலும் அதன் தொடர்பாக வழங்கும் கதையாலும் தெளியலாம். ஏறது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. நாயகி தன்னெடும் என ஒடுக் கொடுத்துப் பிரித்தலின் எய்தினன் என ஒருமையாற் கூறினர். இறைவன்–சிவபிரான். உயிர்களின் உள்ளக் கமலங் களில் எல்லாம் தங்குபவன் என்ற பொருளும் அச்சொற்குக் கூறுவதுண்டு.

(கசு)

**அழும் குழவியை ஆளுடைய நாயகி கண்டு சிவபிரானிடம் செப்புதல்**

70. இரக்க மின்றியே யீன்றதாய் போகிடத்
தரிக்கி லாதழுஞ் சேயைச் சகத்தினில்
அருட்க ணேக்கிடு மாளுடை நாயகி
திருக்க ணேக்கிச் சிவற்கிவை செப்புவாள்.

**இரக்கம் இன்றியே ஈன்றதாய் போகிட
தரிக்கிலாது அழும் சேயைச் சகத்தினில்
அருள்கண் நோக்கிடும் ஆளுடை நாயகி
திருக்கண் நோக்கிச் சிவற்கு இவை செப்புவாள்.**

**பொ :** எவ்வுயிரையும் அருட்கண்ணால் பார்த்து இன்புறச் செய்யும் இயல்புடைய பார்வதியம்மையாகிய ஆளுடைநாயகி, பூமியில் இரக்கம் சிறிதும் இல்லாமல் பெற்றதாய் பிரிந்து செல்ல, அந்தப் பிரிவைத் தாங்க இயலாமல் அழுகின்ற புனிற்றிளங் குழவியைத் திருக்கண்களால் பார்த்துச் சிவபிரானுக்கு இத்தகைய சொற்களைச் சொல்லலானாள்.

**கு :** ஆளுடைநாயகி சகத்தினில் அழும் சேயைத் திருக்கண் நோக்கிச் செப்புவாள் என இயையும். சகம்–பூவுலகம். அழியும் தன்மையது என்னும் பொருளது. வான்வழிச் செல்லும் ஆளுடைய நாயகி சகத்தினில் அழும் சேயைத் திருக்கண்ணால் நோக்கினள்

என்றவாறு ஆளுடையநாயகியின் இயல்பு புலப்பட அருட்கணேக் கிடும் ஆளுடைநாயகி என்றூர். சிவனுக்கு அவள் செப்பியது வருஞ்செய்யுளில் காண்க. (கச)

பார்வதியின் அருள்மொழி

71. தாயை விட்டுத் தனியே கதறுமிச்
சேயி னுக்கருள் செய்யத் தகுமென
நாய கற்கந்த நாயகி கூறலும்
பாய்பு னற்சடை தாழும் பரமனும்.

தாயை விட்டுத் தனியே கதறும் இச்
சேயினுக்கு அருள் செய்யத் தகும் என
நாயகற்கு அந்த நாயகி கூறலும்
பாய்புனல் சடை தாழும் பரமனும்.

பொ : 'பெற்றதாயை விடுத்துத் தனியே கதறிக் கொண்டுள்ள இந்தக் குழந்தைக்கு அருள் செய்யத் தகும்' என்று தன் நாயகனுகிய சிவபிரானுக்கு அந்த ஆளுடை நாயகி சொல்லுதலும் கீழே பாய்கின்ற கங்கைப் புனலை வைத்துள்ள சடை பின் நீண்டு தொங்கவிடப்பெற்ற சிவபிரானும்.

கு : குளகம். யாரும் அருகில் இல்லாமையால் அழும் குழந்தை தாயை விட்டுத் தனியே கதறும் குழந்தை என்பது பெறப்படுதலின் இங்ஙனம் ஆளுடையநாயகி தன் நாயகற்குக் கூறலானுள். தனித்து வாழத்தக்க தன்மையில்லாதிருக்கும் குழந்தையைக் காத்தல் தெய்வத்தின் கடமை என்பது தோன்ற அருள்செய்யத் தகும் என்றுள். 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்ற பழமொழியும் இங்கு நினைவு கூரலாம். சிவபிரான் உயிர்களிடத்தில் அன்பு பெரிதுடையன் என்பதற்கு அடையாளமாகச் சடையில் கங்கைப் புனலைத் தாங்கியுள்ளான் ஆதலின் அதனை இங்குக் கூறினர். சடைதாழும் பரமன் என்றது தாழ்சடைப் பரமன் என்றபடி. பரமன் என்றது இங்குச்சிவபிரானை. (கரு)

### சிவபிரான் தாயில்லாக் குழந்தைக்கு வரம் கொடுத்தல்

72. ஒல்லை யீன்றவ ளொத்த பிராயமும்
எல்லை யில்பர மாயுவு மிங்கழும்
நல்ல மைந்தன் பெறுகென நல்கிவிண்
செல்லுஞ் சீரிற் றிகழ்புர நல்கினன்.

**ஒல்லை ஈன்றவள் ஒத்தபிராயமும்**
**எல்லைஇல் பரம ஆயுவும் இங்கு அழும்**
**நல்ல மைந்தன் பெறுகென நல்கி, விண்**
**செல்லும் சீரின் திகழ்புரம் நல்கினன்.**

**பொ :** தன்னைப்பெற்றவளை ஒத்த வயதினையும் எல்லை இல்லாத மேலான ஆயுளையும் இங்கே அழுது கொண்டுள்ள நல்ல குழந்தை விரைந்து பெறுவதாக என்று வரம் கொடுத்து (மேலும்) விண்ணில் செல்லும் சிறப்பினையுடைய விளக்கம் மிக்க நகரத்தையும் கொடுத்தான்.

**கு :** ஒல்லை பெறுக என நல்கி என இயையும். எல்லை இல் ஆயு; பரம ஆயு எனத் தனித்தனி இயையும். தன்னைப் பெற்ற தாயின் வயதுள்ளவனாக அக்குழந்தை விரைந்து வளர்ச்சி பெற வேண்டும் எனின் பின்பு நெடிது வாழ இயலாது என்னும் ஐயத்தைப் போக்க, 'எல்லையில் பரமாயுவும் பெறுக' என்று வரங் கொடுத்தார். பரமஆயு, பரமாயு எனத் தீர்க்கசந்தியாயிற்று. புரம்-நகரம், விண்ணிற் செல்லும் புரம், திகழ்புரம், எனத் தனித்தனி இயையும். திரிபுரம் போன்றது போலும். (கசு)

### பார்வதி வரமளித்தல்

73. மேய கற்பம் விரைவில் பிறத்தலும்
தாயை யொக்கும் பிரர்யமுந் தாழ்சடைத்
தூய நக்கன் றுணைவி யிராக்கதர்
ஆய வர்க்கெலா மாக அருளினள்.

**மேய கற்பம் விரைவில் பிறத்தலும்**
**தாயையொக்கும் பிராயமும் தாழ்சடைத்**
**தூய நக்கன் துணைவி இராக்கதர்**
**ஆயவர்க்கு எலாம் ஆக அருளினாள்.**

**பொ:** பின்தாழ்ந்த சடையையுடையவனாகிய தூய்மை மிக்க சிவபிரானுக்குத் துணைவி ஆகிய பார்வதி அம்மையார் இராக்கதராகியவர்க்கு எலாம் பொருந்திய கருப்பம் விரைவில் குழந்தையாகப் பிறத்தலும், அந்தக் குழந்தைக்குத் தாயை ஒக்கும் வயது உண்டாதலும் நிகழுமாறு அருளினாள்.

**கு:** தாயின்றிக் கதறுகின்ற குழந்தைக்குச் சிவபிரான் கொடுத்த வரத்தைப் பார்வதி அம்மையார் இராக்கதர் எல்லோர்க்கும் பொருந்துமாறு செய்தாள் என்றவாறு. இதனால் பார்வதியம்மையின் பேரருளின் பெருமை தெளியலாம். கருப்பம் உற்றவுடனே வயிற்றில் பத்து மாதங்கள் வளர்சியுற்றுத் தங்காமல் உடனே குழந்தை பிறக்கவும் பிறந்த குழந்தை தாயையொத்த பருவமுடையவனாகவும் விளங்க இராக்கதர் எல்லோர்க்கும் வரங் கிடைத்தது என்க. பின் தாழ்ந்த சடையும் தூய்மையும் உடைய நக்கன் என்க. நக்கன்-சிவன். நக்கன் துணைவி என்றது பார்வதியை. பிராயமும்-வயதும். (கஎ)

**அழுத குழந்தை வளர்ந்து அரனை வணங்குதல்**

74. எக்க ணக்கு மிறந்த பெருமையன்
பொக்க ணத்தன் புலியத ளாடையன்
முக்க ணத்தன் மொழிபெற் றழுபவன்
அக்க ணத்தி லவனடி தாழ்ந்தனன்.

**எக்கணக்கும் இறந்த பெருமையன்**
**பொக்கணத்தன், புலி அதள் ஆடையன்**
**முக்கண் அத்தன் மொழிபெற்று, அழுபவன்**
**அக்கணத்தில் அவனடி தாழ்ந்தனன்.**

**பொ:** எல்லா அளவைகளேயும் கடந்து நிற்கின்ற பெருமை யுடையவனும் திருநீற்று பையையுடையவனும் புலித்தோலாகிய ஆடையையுடையவனும் ஆகிய முக்கணப்பன் அருளிய வரத்தைப் பெற்றமையால், அழுது கொண்டிருப்பவனுகிய சிறுவன் அந்தக் கணத்தில் வளர்ச்சியுற்றவனய் அப் பெருமானடியில் வீழ்ந்து வணங்கினன்.

**கு:** கணக்கு-அளவை. காட்சியளவை, அனுமான அளவை, ஆகம அளவை முதலிய அளவைகளாலும் அறிதற்கு அரியவன் ஆதலின் எக்கணக்கும் இறந்த பெருமையன் எனச் சிவபிரானைக் குறிப்பிட்டார். இனிக் கணக்கு என்பது நூல் எனக் கொண்டு வேதம் முதலிய எந்த நூல்களாலும் அறிய முடியாமல் கடந்து நிற்கின்ற பெருமையுடையவன் எனக் கூறலும் ஆம். பொக்கணம் என்றது திருநீற்றுப்பையினை. அதள்-தோல். அத்தன்- அப்பன். மொழி என்றது வரமாகிய மொழியை. ஒல்லை யீன்றவளொத்த பிராயமும், எல்லையில் பரமாயுவும் இங்கு அழும் நல்ல மைந்தன் பெறுக' (16) எனச் சிவபிரான் மொழிந்துள்ளமை நினைக. சிவ பிரான் கொடுத்த வரத்தால் ஈன்றவளொத்த பிராயத்தைப் பெற்ற வனுகலின் அழுபவன், அக்கணத்தில் அவன் அடிதாழ்தல் இயலு வதாயிற்று. (கஅ)

### சுகேசன் எனப் பெயர் பெற்று விண்ணியங்கு நகரமைத்துச் சுகமாக இருத்தல்

75. சுந்த ரத்தோட் சுகேச னெனச்சிவன்
தந்த பேரும் வலியுந் தழைத்திட
அந்த ரத்தோ ருரும்பதி செய்ததில்
இந்தி ரன்போ லினிதிருந் தானரோ.

**சுந்தரத்தோள் சுகேசன் எனச் சிவன்**
**தந்த பேரும், வலியும் தழைத்திட**
**அந்தரத்து ஓர் அரும்பதி செய்து அதில்**
**இந்திரன்போல் இனிது இருந்தான் அரோ.**

**பொ :** அழகிய தோள்களையுடைய சுகேசன் எனச் சிவபிரான் கொடுத்த பேரும் வலிமையும் பெருகித் தோன்ற விண்ணில் ஓர் ஒப்பற்ற அரிய நகரத்தை உண்டாக்கி, அதில் இந்திரனைப்போல இனிதாக வீற்றிருந்தான்.

**கு :** சுகேசன் என்பது சிவபிரான் கொடுத்த பெயர். அப் பெயர்க்கு ஏற்பச் சுகமாக வீற்றிருந்தான் என்பார். பேரும் வலியும் தழைத்திட என்ருர். பேர் தழைத்தலாவது பேருக்கேற்ற இயல்பு தோன்ற இருத்தல். விண்ணில் செல்லும் புரத்தையும் சிவபிரானே நல்கினுன் என்பது முன்னங்கூறப்பட்டது. அச் சிவபிரான் வரத்தைச் செயல்படுத்தியது சுகேசன் ஆதலின் அந்தரத்தோரார் அரும்பதி செய்து எனச் சுகேசன் செயலாகக் கூறினுர். அமராவதியாகிய விண்ணுலகத்தில் இந்திரன் சுகமாக இருப்பதுபோல், சுகேசனும் தான் உண்டாக்கிய விண்ணில் இயங் கும் நகரத்தில் சுகம்பெறும் தலைவனுக இருந்தான் என உவமை முகத்தால் விளக்கியவாறு. சுகேசன் இந்திரனைப் போன்றவன், சுகேசனது நகரம் அமராவதி போன்றது என உவமையை விரித்துக் கொள்க. (கரு)

### பார்வதியின் அருள்பெற்ற சுகேசன்
### கவிக்கூற்று

76\. கொங்க டங்கலர் கொன்றை பெருக்கராத்
திங்க டங்கிய செஞ்சடை யானிடப்
பங்க டங்கிய பார்ப்பதி தன்னருள்
அங்க டங்கலும் பெற்ற வரக்கர்கோன்.

**கொங்கு அடங்கு அலர்கொன்றை எருக்கு, அராத்**
**திங்கள் தங்கிய செஞ்சடையான் இடப்**
**பங்கு அடங்கிய பார்ப்பதி தன் அருள்**
**அங்கு அடங்கலும் பெற்ற அரக்கர் கோன்.**

**பொ :** தேனைத் தன்பால் அடக்கிக் கொண்டுள்ள கொன்றை மலரும் எருக்கமலரும் பாம்பும், சந்திரனும் தங்கிய சிவந்த

சடையையுடைய சிவபிரானது இடப் பாகத்தில் தங்கியுள்ள பார்வதி தேவியின் அருள் முழுவதையும் பெற்றவனுகிய சுகேசன் என்னும் அரக்கர் தலைவன்.

கு: குளகம். வருஞ்செய்யுளில் முடியும். கொங்கு—தேன்; மகரந்தமும் ஆம். கொன்றை மலரின் உயர்வும் மணமும் புலப்பட கொங்கு அடங்கு அலர் கொன்றை என்ருர். எருக்கலரின் இழிபு புலப்பட ஏதும் அடைமொழியின்றிக் கூறியுள்ளார். கொன்றை மலர், மணமிக்கதாய்ப் பிரணவத்தின் வடிவமைப்புடைய ஆர்க்கிணையுடையதாய்ப் பொன்னின் நிறம் பெற்று விளங்குவது. இச் சிறப்பால் சிவபிரானே கொன்றைமலரில் விரும்பி வீற்றிருப்பதாகக் கூறுவதுண்டு. 'புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள் ளான்' எனத் திருத்தாண்டகத்தில் ஆளுடையரசு அருளியிருத்தல் காணலாம். எருக்கம் பூ நறுமணம் அற்றது. புலால் நாறுவது. 'நல்லவுந் தீயவு மல்ல குவியிணர், புல்லிலை எருக்க மாயினு முடையவை கடவுள் பேணேம் என்னு (புறநா. 106) என்புழி எருக்கலரின் இழிவு புலப்படுதல் காண்க. அந்த இழிவுடைய தாயினும் சிவபிரான் விரும்பேன் என்னது ஏற்றுக் கொள்வான் என்று கூறியுள்ளதும் கூர்ந்து நோக்கத்தகும்.

செஞ்சடையாற்குக் கொடுத்துள்ள இந்த அடைமொழிகள் கருத்துடையடைகள் ஆதும். அறத்தின் வழி நிற்கும் தேவர்க்கு அருள்புரிகின்ற பார்வதியம்மை அத்தேவர்க்குப் பகையாய்த் தீவினை நயந்து செய்யும் அரக்கர்க்கு அருள்புரிதல் தகுமோ? என்பார்க்கு விடையாக இவ்வடைமொழிகள் அமைந்துள்ளன. நறுமணமிக்க கொன்றை மலரையும் தாழ்ந்த புல்லிலை எருக்கம் பூவையும் அணிகின்றதோடு அமிழ்தம் நிறைந்த திங்களையும் நஞ்சுடைய பாம்பினையும் சடையிற்கொண்டுள்ள சிவபிரானின் இடப்பாகத்தில் இருப்பவள் ஆதலின், இங்ஙனம் தேவர்களோடொப்ப அரக்கனுகிய சுகேசனுக்கும் அருள்புரிந்துள்ளாள் என உய்த்துணரும் வண்ணம் இவை அமைந்திருத்தல் காணலாம். கொன்றையும் எருக்கும் உயர்வும் தாழ்வுமாகிய வேறுபாடுடையவை. திங்களும் பாம்பும் அமிழ்தும் நஞ்சும் உடையவாய்ப் பகைமையுடையவை என்பது தெளிவு. கங்கையு மதியும் பாம்புங்

கடுக்கையு முடிமேல் வைத்த 'அங்கணர்' (பெரியபுராணம் தடுத்தாட்கொண்ட புராணம்) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். (உ௰)

சுகேசன் தெய்வவதியை மணத்தல்

77. பாடு கந்தரு வக்குலப் பாவையிற்
கேடில் கீர்த்திக் கிராமணி பெற்றிடும்
தேடு மாமணித் தெய்வ வதியினை
நாடி மற்றவ னன்மணஞ் செய்தனன்.

பாடு கந்தருவக் குலப்பாவை யின்
கேடுஇல் கீர்த்திக் கிராமணி பெற்றிடும்
தேடு மாமணித் தெய்வ வதியினை
நாடி மற்றவன் நன்மணம் செய்தனன்.

பொ : பாடுகின்ற இயல்புடைய கந்தருவக்குலப் பெண்ணினிடமாகக் கெடுதல் இல்லாத கீர்த்தியையுடைய கிராமணி என்பவன் பெற்ற, யாரும் விரும்பித் தேடுகின்ற சிறந்த மாணிக்க மணியைப் போன்ற சிறப்பினையுடைய தெய்வவதி என்ற பெயருடைய பெண்ணை விரும்பிச் சுகேசன் நன்மணம் செய்து கொண்டான்.

கு : மற்று—அசை. அவன் என்றது, முன்னைச் செய்யுளில் கூறியுள்ள சுகேசனைச் சுட்டியவாறு. கந்தருவ கானம் என யாரும் போற்றும்படி பாடுதல் கந்தருவர்க்கு இயல்பாகலின் பாடு கந்தருவக்குலம் எனச் சிறப்பித்தார். கிராமணி என்பவன் கந்தருவப் பெண்ணின் வழிப் பெற்ற தெய்வவதி என்பவளைச் சுகேசன் நன்மணம் செய்துகொண்டான் என்றவாறு. தேடுமாமணி போன்ற சிறப்பினையுடைய தெய்வவதி என அப்பெண்ணின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. கிராமணி பெற்றிடும் தெய்வவதி தேடுமாமணித் தெய்வவதி எனத் தனித்தனி இயையும். நாடுதல்-விரும்புதல். களவில் உடன் போகிப் பின் மணக்கும் பிழை மணம் போன்றது அன்றென்பார் நன்மணம் என்றார். (உ௧)

### சுகேசன் இன்புறல்

78. சோதி மாமணி மௌலிச் சுகேசனும்
தீதி றெய்வ வதியெனுந் தெய்வமா
மாத ராரு மயங்கி வளர்பெருங்
காத லென்னுங் கடல்கரை கண்டிலர்.

**சோதி மாமணி மௌலிச் சுகேசனும்
தீது இல் தெய்வ வதி எனும் தெய்வமா
மாதராரும் மயங்கி வளர்பெரும்
காதல் என்னும் கடல்கரை கண்டிலர்.**

**பொ:** ஒளிமிக்க சிறந்த மணிகள் பதித்த முடியினை அணிந்த சுகேசனும் தீமையில்லாத தெய்வவதி என்கின்ற தெய்வத்தன்மை யமைந்த சிறந்த மங்கையும் காமத்தால் மனமயங்கி, வளர்கின்ற பெரிய காதல் என்கின்ற கடலின் கரையைக் கண்டிலராய் அதனுள் அழுந்தியிருந்தார்கள்.

**கு:** இந்திரனைப் போன்ற சிறப்புடையவனாக விண்ணில் இயங்கும் நகரத்தின் தலைவனாக இருப்பவன் சுகேசன் ஆதலின், அவனுக்குச் சோதிமாமணி மௌலி கூறப்பட்டது. தீது என்பது பிறர் நெஞ்சு புகுதல். தீது இல் தெய்வதி எனவே அவள் கற்பு நெறி நிற்பவள் என்பது புலப்படுத்தினாராயிற்று. தெய்வமா மாதரார் எனவே பெயர்க்கேற்பத் தெய்வத் தன்மையுடைய வளாகவும் இருந்தாள் என்பது புலனாகும். மயங்கி என்றது, காமம் தீயது என்று அறிந்திருந்தும் அதனையே உண்மையான இன்பம் என மதிமயங்கிக் கூடினர் என்றவாறு. காதல் மிக்குழிக் கற்றவுங் கைகொடா வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால் (சீவக சிந்தாமணி-கனகமாலை 76) என்பது இங்கு நினைக்கத்தகும். அதில் தோய்ந்தவர் உள்ளம் மேலும் மேலும் அதனையே அவாவி நிற்கும் இயல்பு நினைந்து, 'வளர்பெருங்காதல்' எனச் சிறப்பித்த வாறு. காதல் என்னும் கடல் என உருவகஞ் செய்தார் அதன் ஆழ மும் பரப்பும் நினைந்து. கரை கண்டிலர் என்றது, கரை காணாது அக்காதற் கடலுள் அழுந்திக் கிடந்தனர் என்றவாறு. (௨௨)

மாலியவான், சுமாலி, மாலி பிறத்தல்

79. மாலை தாழும் வரைத்தோட் சுகேசனுக்
ஏல வார்குழல் வல்லி வயிற்றிடை
மால் கொண் மாலிய வானுஞ் சுமாலியும்
மாலி யும்மெனு மைந்தர் பிறந்தனர்.

மாலை தாழும் வரைத்தோள் சுகேசனுக்கு,
ஏல வார்குழல் வல்லி வயிற்றிடை,
மால்கொள் மாலியவானும் சுமாலியும்
மாலியும் எனும் மைந்தர் பிறந்தனர்.

பொ : மலர்மாலை யணிந்த மலைபோன்ற தோள்களையுடைய சுகேசனுக்கு, வாசனை யூட்டப்பட்ட நீண்ட கூந்தலையுடைய வல்லிபோன்ற தெய்வவதியின் வயிற்றில் மயக்கம் கொண்ட மாலியவானும் சுமாலியும் மாலியும் என்கின்ற மைந்தர் மூவர் பிறந்தனர்.

கு : மாலை தாமும் என்புழித் தாழ்தல் அணிதலை உணர்த்தியது. ஏலவார்குழல் என்றது ஏலவார் குழலிமார் இருவர் தங்கணாயகனே (திருவாசகம்–458) என்ற அடியை நினைப்பிக்கின்றது. ஏலம்–வாசனைப் பொருள்: மயிர்ச்சாந்து. வல்லி–கொடி. கொடிபோன்ற தெய்வவதியை யுணர்த்தியது. உவமையாகுபெயர்– சுகேசனுக்கும் தெய்வவதிக்கும் மாலியவான், சுமாலி, மாலி என்கின்ற மூவர் பிறந்தனர் என்க. (உகூ)

மாலியவான் முதலிய மூவரும் வளர்ச்சி பெறுதல்

80. தூய தெய்வ வதிவயிற் றோன்றிய
ஆய மூவரு மாகுதி பொங்குழத்
தீவ ளர்ந்தெனச் செய்மருந் தொன்றிலா
நோய்வ ளர்ந்தென நொய்தின் வளர்ந்தனர்.

தூய தெய்வவதி வயின் தோன்றிய
ஆய மூவரும் ஆகுதி பொங்கும் முத்
தீ வளர்ந்தெனச் செய்மருந்து ஒன்றுஇலா
நோய்வளர்ந்தென நொய்தின் வளர்ந்தனர்.

பொ: தூய்மையுடைய தெய்வவதியினிடத்துப் பிறந்த அந்த மூவரும் ஆகுதியால் மிகுகின்ற மூன்று தீயும் வளர்ச்சி பெற்றாற் போலவும் தணிதலைச் செய்கின்ற மருந்து ஒன்றும் இல்லாத மூன்று வகையான நோய் வளர்ந்தாற் போலவும் விரைந்து வளர்ந்தனர்.

கு: தெய்வவதியின் தன்மைக்கு மாறுபட அவள் வயிற்றில் தோன்றிய மக்கள் வளர்ந்தனர் என்பது கருத்து. மூவரும் மூன்று தீப்போன்றவர்களாகவும் மருந்தால் தணியாத முந்நோய் போன்றவர்களாகவும் வளர்ச்சியுற்றனர் என உவமை முகத்தால் விளக்கியவாறு. முத்தீ ஆவன :- ஆகவனீயம் காருகபத்தியம் தென்திசையங்கி என்பன. ஆகுதியால் தீவளர்தல் போல இவர்கள் உணவினால் வளர்ச்சி பெற்றனர் என்பது உய்த்துணரப்படும். 'நெய்பெய்தீயின்' (குறுந்தொகை-106) என்பதும் 'பொழிந்த நெய்யாகுதி வாய்வழி பொங்கி, எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தாள்' (பால-கார்முகப்-26) என்பதும் இங்கு ஒப்புநோக்கத் தகுவன. நோய் என ஒன்றாய்க் கூறினாரேனும் உவமைக்கேற்ப வாத பித்த சிலேத்தமம் என்ற மூன்றால் வரும் மூவகை நோய்களைப் போல அம்மூவரும் வளர்ந்தனர் என்க. வாத பித்த கபம் என வன்றிறல் ஓதும் மூவரும் ஒத்து நலிந்தனர்' (31) எனப் பிற்கூறுவதால் இங்கு நோய் என்றது 'அந்த மூவகையால் வரும் நோயினையே என்பது தெளியலாம். அந்த மூவரின் ஆற்றலோடு கூடிய வளர்ச்சிக்கு முத்தீயும், அவர் செய்யும் தீமைக்கு முந்நோயும் ஏற்ற உவமையாதல் காணலாம். நொய்து - விரைவு. செய்மருந்து என்புழிச் செய்தலாவது, தணிதலைச் செய்தல் எனக் கொள்க, ஆகுதியால் பொங்கும் என மூன்றுவது விரிக்க. (உச)

அந்த மூவரும் தவவனம் சார்தல்

81. அந்த மூவரு மன்றரன் றன்னிடைத்
தந்தை பெற்ற வரமும் வலியுந்தஞ்

சிந்தை யெண்ணித் திகழ்வட மேருவாம்
சந்த நீடு தவவனஞ் சார்ந்தனர்.

**அந்த மூவரும் அன்று அரன் தன்னிடைத்**
**தந்தை பெற்ற வரமும் வலியும் தம்**
**சிந்தை எண்ணித் திகழ் வடமேருவாம்**
**சந்தம் நீடு தவவனம் சார்ந்தனர்.**

**பொ :** மாலியவான் சுமாலி, மாலி எனப்பெயர் பெற்ற அந்த மூவரும் அக்காலத்துச் சிவபிரானிடத்தில் தம் தந்தையாகிய சுகேசன் பெற்ற வரத்தையும் வலிமையையும் உள்ளத்தில் எண்ணிப் பார்த்துத் தம் தந்தையைப் போலவே தாமும் வரமும் வலியும் பெற வேண்டி, விளக்கமுடைய மேரு மலையில் உளதாகி ப சந்தன மரங்கள் நீண்டு வளர்ந்துள்ள, தவஞ்செய்வோர்க்கு இடமாகிய வனத்தைச் சார்ந்தார்கள்,

**கு :** அன்று என்றது, சுகேசன் தாயைப் பிரிந்த நிலையில் அஞ்சல் என்பவரின்றி அழுது கொண்டிருந்த காலத்தைச் சுட்டிய வாறு. தந்தை பெற்ற வரமாவது பிறந்தவன்றே பெற்றவளின் வயதை ஒத்த வயதினன் ஆதல். வலியாவது எல்லையில்லாத ஆயுள், விண்செல்லும் புரம் என்பன. ஒல்லை யீன்றவளொத்த பிராயமும், எல்லையில் பரமாயுவும், நல்ல மைந்தன் பெறுகென நல்கிவிண், செல்லும் சீரிற் றிகழ்புரம் நல்கினன் (16) என முன் கூறியுள்ளமை நினைக. தந்தை அழுகையால் பெற்ற வரமும் வலியும் தாம் தொழுகையால் பெற நினைந்து அம்மூவரும் தவவனஞ் சார்ந்தனர் என்றவாறு. சந்தம்-சந்தனமரம். மேருமலையில் உளதாம் தவவனம் சந்தநீடு தவவனம் எனத் தனித்தனி இயையும். பொன் மலையாதலின் மேருவிற்குத் திகழ்தல் கூறினர். தவஞ் செய்வோர்க்கு இடமாதல் பற்றித் தவவனம் எனக் காரணப் பெயர் பெற்றது அவ்வனம். (உரு)

**அம்மூவரும் அருந்தவம் செய்தல்**

82. இஞ்சை பொய்கள வேதம்வந் தெய்திடும்
வஞ்சம் பாவம் வரும்வழி மாற்றிநற்

றஞ்ச நெஞ்சர் தயாவினர் தம்புலன்
அஞ்சும் வென்றங் கருந்தவஞ் செய்தனர்.

**இஞ்சை பொய் களவு ஏதம் வந்து எய்திடும்**
**வஞ்சம் பாவம் வரும் வழி மாற்றி நல்**
**தஞ்ச நெஞ்சினர் தயாவினர் தம்புலன்**
**அஞ்சும் வென்று அங்கு அருந்தவம் செய்தனர்.**

**பொ :** கொலை, பொய், களவு, குற்றம் வந்து அடைதற்குக் காரணமான வஞ்சனைச் செயல்களாகிய சூதும் பிறர்மனை விழைதலாகிய காமமும் என்கின்ற பெரும் பாவங்கள் ஐந்தும் வருதற்கு வழியாகிய செயல்களை விடுத்து, நல்ல எளிமையான நெஞ்சினையுடையராய் அருள்நோக்கம் உடையராய்ச் சுவையொளி, ஊறு, ஓசை, நாற்றம் என்கின்ற புலன்கள் ஐந்தின் மேலும் செல்லும் தம் ஆசையை வென்று அடக்கிக்கொண்டு அத்தவவனத்தில் அரிய தவத்தைச் செய்தனர்.

**கு :** ஹிம்சை என்ற வடசொல் 'இஞ்சை எனத் தமிழில் திரிந்து வந்தது. ஐம்பெரும் பாதகங்களில் கொலையும் பொய்யும், களவும் தனித்தனியே கூறப்பட்டன. வஞ்சனையால் பொருளும் இன்பமும் பெறுகின்ற சூதினையும் பிறனில் விழைதலையும் ஒற்றுமை கருதி வஞ்சம் என ஒன்றுக்கிக் கூறினர். இவ்வைந்தினையும் பாவம் எனத் தொகுத்துக் கூறினர். பாவம் என்றது ஐம்பெரும் பாதகங்களை. பாவம் வருதற்கு வழியான செயல்களை வழி என்று கூறினர். இது காரியத்தைக் காரணமாக்கிக் கூறியது. உபசார வழக்கு. மாற்றுதலாவது ஐம்பெரும் பாதகங்களையும் செய்யாமல் மனத்தை மாற்றி வேறு நெறியில் செலுத்துதல். தயா தயை எனத் தமிழிற்கேற்றவாறு திரியாமல் வந்த வடசொல். பாவங்களை நீக்கினவுடன் கடிய நெஞ்சமும் பாரம் நீங்கி எளியதாயிற்று என்பார், தஞ்ச நெஞ்சினர் என்றார். தஞ்சம்-எளிமை. தஞ்சக்கிளவி எண்மைப் பொருட்டே என்பர் தொல்காப்பியர் (தொல், சொல்- இடை-18) பாவங்களுக்கு இடனுயிருந்த அவர்தம் நெஞ்சம் அருளுக்கு இடனுயிற்று என்பார் தயாவினர் என்றார். இல்லறத்திற்கு அன்பு போலத் தவத்திற்கு அருள் இன்றியமையாதது ஆத

லின் தவஞ்செய்யப் புகும் அம் மூவரும் அருள் நெஞ்சினர் ஆயினர் என்க. புலனஞ்சும் என்புழி அஞ்சு என்பது ஐந்து என்றதன் போலியாகும். புலனஞ்சும் வெல்லுதலாவது, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலன்கள் மேல் மெய் வாய் கண் மூக்குச் செவிகளின் வழியாகச் செல்லும் தம் ஆசைகளை அடக்கியாளுதல். அருந்தவம் என்றது, செய்தற்கரிய தவம் என்றவாறு. மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும் கோடைக்கண் வெயில் நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர் நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொள்ள வேண்டியிருத்தலின் அருந்தவம் என அதனைச் சிறப்பித்தார். (உசு)

**அம்மூவரின் தவத்தைக் கண்டு மூவுலகமும் நடுங்குதல்**

83\. முன்னை வானவர் தானவர் முற்றுநூல்
மன்னு தாபதர் மானுடர் மற்றுளோர்
அன்ன மூவ ரருந்தவங் கண்டுல
கென்ன தாகுமோ வென்ன நடுங்கினர்.

**முன்னை வானவர், தானவர், முற்றுநூல்**
**மன்னு தாபதர், மானுடர், மற்றுளோர்,**
**அன்ன மூவர் அருந்தவம் கண்டு உலகு**
**என்னது ஆகுமோ? என்ன நடுங்கினர்.**

பொ : முன்வைத்து எண்ணத்தக்க சிறப்பினையுடைய தேவர்களும் அசுரர்களும் தனக்கோதிய இலக்கணம் முற்ற அமையப்பெற்ற முந்நூலை அணிந்த தவவேடத்து முனிவர்களும், மானுடர்களும் மற்றும் உள்ள நாகர்களும் அந்த மூவரின் அரிய தவத்தைக் கண்டு (இவர்கள் தவத்தால்) இவ்வுலகம் எத்தகையது ஆகுமோ? என்று நடுங்கலாயினர்.

கு : வானவர்-தேவர். தானவர்—அசுரர். தாபதர் என்பார் தவ வேடத்தராகிய முனிவர். இவர்க்கு முந்நூலணிதல் இயல்பாகலின் முற்றுநூல் மன்னு தாபதர் என்றார். முற்றும் நூல் என்றது இலக் கணம் நிறையப் பெறும் நூல் என்றவாறு. முந்நூலுக்கு இலக்கண

மாவது, ஒன்பதாகிய நூலைத் தன்னிடத்தே கொண்ட ஒருபுரி மூன்ருகிய பூணுலாக இருத்தல். ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண் (திருமுருகாற்-183) என்பர் நக்கிரனுர். இனி, நூல் முற்றும் மன்னு தாபதர் என இயைத்து ஞானநூல் முழுவதும் நிலைபெற்ற உள்ளமுடைய தாபதர் எனலும் ஆம். வானவர் விண்ணுலகத்தவர். தானவர், தாபதர், மானுடர் மண்ணுலகத்தவர். மற்றுளோர் என்றது, பாதாளத்தவரை. எனவே மூவர் தவத்தைக் கண்டு மூவுலகத்தவரும் நடுங்கினர் என்றவாருயிற்று. தவத்தைக் கண்டு நடுங்குதல் எற்றுக்கோ எனின், தவாக்கினியால் உலகமே வெந்தழியுமோ என்ற அச்சத்தால் நடுங்கினர் என்க. (உஎ)

மூவர் தவத்தையறிந்து வரந்தரப் பிரமன் அவர் முன் வருதல்

84. ஆய காலத் தவர்கண்மு னந்தணன்
தூய மாமணித் தேர்மிசைத் தோன்றினுன்
ஏயு மாதவத் தீர்நும் மனத்திடை
மேய யாவையும் வேண்டுதிர் நீரென்ருன்.

ஆய காலத்து அவர்கள்முன் அந்தணன்
தூய மாமணித் தேர்மிசைத் தோன்றினுன்;
ஏயும் மாதவத்தீர்! நும் மனத்திடை
மேய யாவையும் வேண்டுதிர் நீர் என்ருன்.

பொ : (மூவுலகமும் நடுங்கும்) அந்தக் காலத்தில் தவம் புரியும் அம்மூவர்க்கு முன்னே பிரமன் தூய்மையான சிறந்த மணிகள் பதிக்கப்பெற்ற தேர்மேல் வந்து தோன்றி, பொருந்திய பெரிய தவத்தையுடையவர்களே! நீர்நும் மனத்தில் விரும்பிய எல்லாவற்றையும் கேளுங்கள்' என்று மனமுவந்து கூறினுன்.

கு : அந்தணன் என்றது பிரமனை. விரைந்து வந்து வரந்தரல் வேண்டி மாமணித் தேர்மிசை வந்தான் என்க. தோன்றினுன் என்பது முற்றெச்சம், தோன்றி என்ற எச்சப் பொருளே கொள்க.

தோன்றி, என்றான் என முடியும். ஏயும்-பொருந்தும். மேவிய என்பது இடை குறைந்து மேய என ஆயது. மேவுதல்-விரும்புதல். நீர் வேண்டுதிர் என்றான் என இயையும். (உஅ)

மூவரும் வரங்கேட்டல்

85. பூவ யன்புக லப்புகல் வாரவர்
தேவ ராதி திரிபுவ னத்துளோர்
ஏவ ரேனு மெமக்கமர் தோற்கவும்
தேய்வில் காலங்கள் செல்லவுஞ் செய்குவாய்.

**பூஅயன் புகலப் புகல்வார் அவர்**
**தேவர் ஆதி திரிபுவனத்து உளோர்**
**ஏவ ரேனும் எமக்கு அமர் தோற்கவும்**
**தேய்வுஇல் காலங்கள் செல்லவும் செய்குவாய்?**

**பொ:** தாமரை மலரில் விற்றிருக்கும் பிரமன் அவ்வாறு சொல்ல, அம்மூவரும் சொல்கின்றார்கள். தேவர் முதலிய மூன்று உலகத்து உள்ளவர்கள் எவராயினும் போரில் எமக்குத் தோல்வி யடையவும், எமக்குக் குறைவில்லாத ஆயுட் காலம் செல்லவும் செய்வாயாக என்று வேண்டினர்.

**கு:** பூவயன் புகல என்பது முன்னைச் செய்யுளில் கூறியதை அனுவதித்தவாறு. திரிபுவனத்துளோர் என்றது மூவுலகத்தும் உள்ள வானவர். மனிதர், நாகர் என்பாரை. தேய்வில் காலம் என்றது குறைவில்லாத ஆயுட்காலத்தை. என்று வேண்டினர் என இசை யெச்சமாக வருவித்து முடிக்க. (உகூ)

பிரமன் அவர்கள் வேண்டிய வரம் கொடுத்தல்

86. சிந்தை யெண்ணிநீர் செப்பின யாவையும்
தந்த னனெனத் தாமரை யாசனத்
தந்த ணாள னருள வவர்கடோள்
வந்து பூரித்த மால்வரை யென்னவே.

சிந்தை எண்ணிநீர் செப்பின யாவையும்
தந்தனன் எனத் தாமரை ஆசனத்து
அந்தணனன் அருள அவர்கள் தோள்
வந்து பூரித்த மால்வரை என்னவே.

பொ : 'நீவிர் மனத்தில் நினைத்துச் சொல்லியன யாவற்றையும் தந்தேன்' என்று தாமரை மலரை ஆசனமாகக் கொண்டுள்ள பிரமன் சொல்லியருள, அம்மூவர்தம் தோள்கள் வளர்ந்து பெரிய மலைகள் போலப் பூரித்தன.

கு : யாவையும் என்புழி உம்மை எஞ்சாப் பொருளது. மூவரும் கேட்ட எல்லாவற்றையும் பிரமன் கொடுத்தான் என்றவாறு. வந்து என்பது வளர்தல் என்னும் பொருளது. அவர்கள்தோள் மால்வரையென்னப் பூரித்த என இயையும். தோள் என்பது பால் பகா அஃறிணைப் பெயர்; இங்குப் பன்மையுணர்த்தியது. பூரித்த என்பது அன்பெருதுவந்த அகர வீற்றுப் பலவின்பால் வினை முற்று. (௩௬)

வரம் பெற்ற மூவரும் முப்புவனங்களையும் நலிதல்

87. ஆதி தன்னிடைப் பெற்ற வரத்தினல்
பீதி யின்றிப் பெரும்புவ னங்களை
வாத பித்த கபமென வன்றிறல்
ஓது மூவரு மொத்து நலிந்தனர்.

ஆதி தன்னிடைப் பெற்ற வரத்தினல்
பீதி இன்றிப் பெரும்புவனங்களை
வாத பித்த கபம் என வன்றிறல்
ஓதும் மூவரும் ஒத்து நலிந்தனர்.

பொ : பிரமனிடத்தில் பெற்ற வரத்தினல் வன்மையும் திறமையும் உடையவராய்ச் சொல்லப்பட்ட மூவரும் ஒன்றுபட்டு (தமக்குப் பிறர் துன்பம் செய்வார்கள் என்ற) அச்சம் இல்லாமல் பெரிய உலகங்களை, உடம்பை வருத்தும் வாத பித்த சிலேத்துமங்கள் போல, வருத்தினர்கள்.

கு: ஆதி என்றது, இங்குப் பிரமனை, பீதி-அச்சம் கபம் என்றது சிலேத்துமத்தை, மிகினும் குறையினு நோய் செய்யும் நூலோர் வளி முதலா எண்ணிய மூன்று (திருக்குறள்-மருந்து 941) என்பது இங்கு நினையத்தகும். வாதபித்த கபம் நலிதல் உடம்பினை. இம் மூவரும் நலிதல் உலகினை. ஒத்து ஒன்றுபட்டு. (கூக)

88. காசில் பன்னக நாடு கலங்கிட
நாச மெய்திட நானில மானது
வாச வன்முதல் வானவ ரோடிட
ஆசை பத்து மடிப்படுத் தாரரோ.

**காசு இல் பன்னக நாடு கலங்கிட,**
**நாசம் எய்திட நானில மாவது,**
**வாசவன் முதல் வானவர் ஓடிட,**
**ஆசை பத்தும் அடிப்படுத்தார் அரோ.**

பொ: குற்றம் அற்ற நாகர்நாடு ஆகிய பாதாளம் கலங்கிடவும், பூவுலகம் அழிவு எய்திடவும், இத்திரன் முதலிய தேவர்கள் தோற்று ஓடவும் செய்து திசைகள் பத்தினையும் தமக்குக் கீழ்ப்படுத்தினர்.

கு: பாதாளம், பூவுலகம், வானுலகம் ஆகிய மூன்று உலகங்களையும் முறையே வென்று அடிப்படுத்தினர் என்றவாறு. ஆசை-திசை. பத்துத் திசைகள் ஆவன. நேர்த்திசை நான்கும் கோணத்திசை நான்கும் ஆகிய எட்டும் மேலும் கீழும் ஆகிய இரண்டும் ஆம். பன்னகம்-பாம்பு. மூவுலகையும் மூன்றுவகையாக வென்றனர் என்பார். பன்னகநாடு கலங்கிட எனவும், நானில மானது நாசம் எய்திட எனவும், வானவர் ஓடிட எனவும் கூறினார். இதனால் நாசம் எய்தியது நானிலம் எனப்படும் பூவுலகம் ஒன்றுமே என்பதும் நாக உலகை நடுங்கச் செய்தனரே அன்றி அழிக்கவில்லை என்பதும் வானவர்கள் தோற்று ஓடிய அளவில் அழிக்காது விடுத்தனர் என்பதும் பெறப்படும். அடிப்படுத்தல் ஆவது மூவுலகையும் தம் மாட்சிக்கீழ் வைத்தல். (கூஉ)

அம்மூவரும் தேவர் தச்சனை வரவழைத்தல்

89. மாவ லிப்புய மாலிய வான்முதல்
மூவர் முப்புவ னங்களை வென்றுளோர்
தேவர் தச்சன் வருகெனச் செவ்விதின்
கூவி மற்றவ னுக்கிவை கூறினர்.

மா வலிப்புய மாலியவான் முதல்
மூவர் முப்புவனங்களை வென்றுளோர்,
தேவர் தச்சன் வருகெனச் செவ்விதின்
கூவி மற்று அவனுக்கு இவை கூறினர்.

பொ : மூன்று உலகங்களையும் வென்றவர்களாகிய பெரிய வலிமையையுடைய தோள்களையுடைய மாலியவான் முதலிய மூவரும் தேவர் தச்சன் இங்கு வருவானாக எனச் செம்மையான நெறியில் அழைத்து அவனுக்கு இச்செய்திகளைச் சொல்லினர்.

கு : வென்றுளோர் ஆகிய மாலியவான் முதல் மூவர் என இயையும். கூவுதல் அழைத்தலை யுணர்த்தியது. செவ்விதின் கூவி என்றது அச்சுறுத்தி அழைக்காமல் அன்பு நெறியில் அழைத்து என்பது கருத்து. இவை என்றது, வருஞ்செய்யுளில் கூறப்படும் நகரி அமைக்கச் சொல்லிய சொற்களை. (கூகூ)

மூவரும் தேவதச்சனிடம் நகரம் அமைக்க இடம் தேடுமாறு கூறுதல்

90. நீடுபுவன மொருமூன்று மயனுஞ்
சிவனு நெடுமாலுங்
கூடி யமரின் முயன்றாலுங் குறுக
வரிய வரணினதாய்
ஆட லமரர் பதியினழ கழிக்கு
நகரி யமைக்கவுடன்
நாடு நல்லோ யெனவுரைப்ப நன்றென்
றவன்போய் நாடுவான்.

நீடு புவனம்ஒரு மூன்றும் அயனும் சிவனும் நெடுமாலும்
கூடி அமரின் முயன்றாலும் குறுக அரிய அரணினதாய்
ஆடல் அமரர் பதியின் அழகு அழிக்கும் நகரி அமைக்க உடன்
நாடு நல்லோய்! என உரைப்ப நன்று என்று அவன்போய் நாடுவான்.

பொ: (தேவதச்சனை நோக்கி) நல்லோனே! நெடிதுகாலமாக உள்ளதாகிய மூவுலகத்து உள்ளவர்களும் பிரமனும் சிவனும் நெடியோனாகிய திருமாலும் ஒன்றுகூடிப் போரில் இறங்கி முயன்றாலும் நெருங்குதற்கு அரிய அரணினையுடையதாய், வலிமை வாய்ந்த தேவர்களின் நகரமாகிய அமராவதியின் அழகையும் கீழ்ப்படுத்தி வெல்லவல்லதாய நகரத்தை அமைப்பதற்குரிய இடத்தை உடனே ஆராய்வாயாக! என்று சொல்ல அத்தேவ தச்சன் நன்று என்று உடன்பட்டுச் சென்று அத்தகைய சிறந்த இடத்தை ஆராய்வான் ஆனான்.

கு: நீடுபுவனம் என்றது நீடித்து நிலைத்துள்ள மூவுலகங்களை. புவனம் என்றது இட ஆகு பெயராய்ப் புவனத்துள்ளாரை உணர்த்தியது. அமரின் முயலுதலாவது போரில் தோல்வியடையுமாறு செய்ய முயலுதல். அழிக்க இயலாமையே யன்றிக் கிட்டவும் இயலாதவாறு அமைந்த அரணினையுடையதாக இருத்தல் வேண்டும். அதற்கு மேலும் தேவர்தம் அமராவதி நகரைத் தோற்கடிக்கத் தக்க அழகினதாயும் இருத்தல் வேண்டும் என்றவாறு. எதுகை நோக்கி அடல் ஆடல் என நீட்டல் விகாரம் பெற்றது. அடல்—வலிமை. அமராபதி என்றது அமராவதி நகரை. நன்று என்பது மேலோரிடம் பணியாளர் உடன்பாட்டை யுணர்த்தும் சொல். நாடுதல்—தேடுதல். (௯0)

### தேவதச்சன் மனத்துள் நினைந்த வரலாறு

91. முன்னாள் காற்றும் வாசுகியும் தந்தம்
வலிமி னிலைமொழிந்து
பொன்னார் வரையை வாசுகிதன் பணத்தாற்
பொத்திப் புறங்காப்பத்

தன்ஞர் விசையின் பெருங்காற்றுத் தாக்கச்
சற்றும் சலியாது
நன்ஞ கந்தான் கவித்திடலு மொளித்தான்
பவன ஞேணேடும்.

முன்நாள் காற்றும் வாசுகியும் தம்நம் வலியின் நிலைமொழிந்து
பொன்ஞர் வரையை வாசுகிதன் பணத்தால் பொத்திப் புறங்காப்பத்
தன்ஆர் விசையின் பெருங்காற்றுத் தாக்க, சற்றும் சலியாது
நல்நாகந்தான் கவித்திடலும் ஒளித்தான் பவனன் நாணோடும்.

பொ: முன்னொரு காலத்தில் வாயுதேவனும் வாசுகியாகிய பாம்பும் தத்தம் வலியின் உயர்வைச் சொல்லி (அதைச் சோதித்து அறிய வேண்டி) பொன்ஞலாகிய அரிய மேருமலையின் ஆயிரம் சிகரங்களையும் வாசுகி தன் ஆயிரம் பணமுடிகளால் மறைத்துக் கொண்டு அச்சிகரங்களைப் புறத்தே காத்து நிற்க, பெரிய காற்றுக் கடவுள் தனது நிறைந்த வேகத்தால் தாக்கவும் அந்த வாசுகி யென்னும் நல்ல நாகம் சிறிதும் தளராது நன்ருகத்தன் படங்களால் கவித்துக் கொள்ளுதலும் காற்றுக் கடவுள் நாணத்தோடு சென்று ஓரிடத்தில் ஒளித்துக் கொண்டான்.

கு: காற்றுக் கடவுளும் வாசுகியும் தம்தம் வலியே பெரியது எனப் பேசித் தருக்கினர். அவர்தம் எண்ணத்தின் உண்மை அறிய ஒரு தேர்வு நடத்த முடிவு செய்தனர். அது வாசுகி தன் ஆயிரம் தலைகளாலும் மேருமலையின் ஆயிரம் சிகரங்களை மறைத்துக் கொள்ள, காற்றுக்கடவுள் அத்தலைகளை அகற்றி அச்சிகரங்களை முரித்துவிட்டால் காற்றுக் கடவுள் வாசுகியினும் வலியன் என ஒப்புக் கொள்ளுதலும் அச்சிகரங்களைக் காற்று முரிக்காமல் வாசுகி காத்தால் வாசுகி வாயுவினும் வலியன் என ஒப்புக் கொள்ளுதலும் ஆம். இந்தத் தேர்வுப் போரில் வாசுகி தன் தலைகளில் ஒன்றையேனும் வாயுதேவன் அசைக்க இயலாத வண்ணம் நன்கு கவித்துக் காத்துக் கொண்டான். அவன் தலையை அகற்ற இயலாத வாயுதேவன் நாணங்கொண்டு ஒருவரும் அறியாதபடி ஓரிடத்தில் ஒளித்துக் கொண்டான் என்பது இதில் கூறப்பட்ட வரலாருகும்.

தத்தம் வலியின் நிலை மொழிதலாவது இருவரும் தத்தம் வலியே பெரியதெனப் பேசுதல். பொன்னூர்வரையென்றது, மேருமலையை. பணம்–பாம்பின் படம். பொத்துதல்–மூடுதல் பவனன்-வாயு தேவன். (௯௫)

92. வாயு வியக்க மில்லாமல்
வானேருலகு மண் ணுலகும்
காயுங் கனலி லிட்டதுபோற் கலங்கிப்
புழுங்கிக் கசிந் துற்று
வேயும் பணத்தா யிரவரவை விண்ணேர்
முனிவர் வேண்டியிடச்
சாயும் படிசற் றறியாதான் சற்றே
தனதோர் முடிசாய்த்தான்.

வாயு இயக்கம் இல்லாமல் வானேர் உலகும்மண் உலகும் காயும் கனலில் இட்டதுபோல் கலங்கிப் புழுங்கிக் கசிந்து உற்று வேயும் பணத்து ஆயிர அரவை விண்ணேர், முனிவர் வேண்டியிடச் சாயும்படி சற்று அறியாதான் சற்றே தனதுஓர் முடி சாய்த்தான்.

பொ : காற்றின் இயக்கம் இல்லாமையால் வான் உலகமும் மண்ணுலகமும் எரியும் நெருப்பில் இட்டதுபோல வெப்பமிக்குக் கலங்கிப் புழுங்கித் துன்பத்தால் உளம் உருகாநிற்க, தேவர்களும் முனிவர்களும் கூடி வந்து ஆயிரம் படங்களைக் கொண்டுள்ள வாசுகி என்னும் பாம்பினைச் சிறிது தலைசாய்க்குமாறு வேண்ட, (அவர்கள் வேண்டுகோட்குக் காரணம்) யாதென்று அறியாதவனாகிய வாசுகி தன் ஒரு தலையைச் சிறிது சாய்த்தான்.

கு : உலகு என்பது ஈரிடத்தும் இடவாகுபெயராய் அங்கு வாழும் உயிர்களை யுணர்த்தியது. காயுங்கனல் என்றது எரியும் நெருப்பினை. கசிந்துற்று என்பதைக் கசிந்துற எனச் செய னெச்சமாகத் திரிக்க. வேயும் ஆயிரம் பணத்து அரவை என மாற்றுக. வேய்தல்–தரித்தல். ஆயிரம் படங்களைத் தாக்கியுள்ள

அரவு என்க. வானோர் உலகின் சார்பாக விண்ணோரும் மண்ணுலகின் சார்பாக முனிவர்களும் சேர்ந்து வாசுகியைச் சற்றுச் சாயும்படி வேண்டினர் என்க. சற்றுச் சாயும்படி வேண்டியிட என இயையும் அவர்தம் வேண்டுகோட்குக் காரணம் அறியாதான் என்க. தனதோர்முடி சற்றே சாய்த்தான் என இயையும். அறியாதான் என்பது வினையாலணையும் பெயராய் வாசுகியையுணர்த்தியது. (௯௨)

தென்கடலிடையே மேருமலையின் சிகரங்கள் வீழ்ந்த இடத்தில் இலங்கையை அமைத்தல்

93. குலையா நிலத்தின் வடமேருக் குலைய
மோதி யதிற்றிகழ்முத்
தலையார் சிகரந் தனைமுறித்துத் தடங்கா
லதனைக் கொண்டுபோய்
அலையார் கடலின் முன்விட்ட வந்த
விடமிம் மூவருக்கு
நிலையாம் பதியா மெனத்தச்ச னினைந்தங்
கிலங்கை நிருமித்தான்.

குலையா நிலத்தின் வடமேருக் குலைய மோதி: அதில் திகழ்முத்
தலையார் சிகரம் தனைமுறித்துத் தடங்கால் அதனைக் கொண்டுபோய்
அலையார் கடலின் முன்இட்ட அந்த இடம், இம் மூவருக்கும்
நிலையாம் பதியாம் எனத் தச்சன் நினைந்து அங்கு இலங்கை
[நிருமித்தான்.

**பொ:** நடுக்கம் இல்லாத நிலத்தின் நடுவேயுள்ள வடமேரு மலை நடுங்குமாறு பெரிய காற்றுக் கடவுள் மோதி அம்மேரு மலையின் உச்சியில் விளங்குகின்ற மூன்று தலைகள் பொருந்திய சிகரத்தை முறித்து அச்சிகரத்தைக் கொண்டுபோய் அலைகள் பொருந்திய தென்கடலில் முன்புபோட்ட அந்த இடம் இந்த மூவருக்கும் நிலையாக இருக்கத்தக்க நகரம் ஆகும் என்று தேவதச்சன் நினைந்து அவ்விடத்தில் இலங்கை நகரைச் செய்தமைத்தான்.

**கு:** குலேதல்-நடுங்குதல். குலேயாமேரு என இலயயும். நிலத்திற்கு ஏற்றலும் ஆகும். கவிஞர் தென்னுட்டவராதலின் மேரு மலேயை வடமேரு என்று சிறப்பித்தார். முத்தலேயார் சிகரம் கடலில் விழுந்த இடமே பகைவரால் புகுதற்கரிய கடலரண முடையதாய் மன்னர் வாழ்தற்குரிய நல்ல நகரம் அமைக்க ஏற்ற இடம் என்று அங்கு இலங்கையை அமைத்தான் தேவதச்சன் என்றவாறு. குலேயா மேருக்குலேய என்புழி முரண்டொடை அமைந்தது காண்க. (கூஎ)

**தேவதச்சன் நிருமித்த இலங்கையின் அமைப்பும் அழகும்**

94\. மூலத் தெய்வக் கனகமலே முறிந்த
சிகர முக்குடுமிக்
கோல வரையாங் கதுபிறராற் குறுக
வரிய கொள்கைத்தால்
ஏல வமைந்த தெவராலு மிலங்கை
யெனப்பேர் தரத்தக்க
தால மனேய கடுந்திற லோர்க்
கதுவே நகர மாமென்ருன்.

**மூலத் தெய்வக் கனகமலே முறிந்த சிகரம் முக்குடுமிக் கோல வரை ஆம்; ஆங்கு அதுபிறரால் குறுக அரிய கொள்கைத்தால் ஏல அமைந்தது; எவராலும் இலங்கை எனப்பேர் தரத்தக்கது; ஆலம் அனேய கடுந்திறவோர்க்கு அதுவே நகரம் ஆம் என்ருன்.**

**பொ:** பூமிக்கு மூலமாக உள்ள தெய்வத்தன்மைவாய்ந்த மேருவாகிய பொன்மலேயினின்று முறிந்த சிகரம், மூன்று குடுமிகளேயுடைய அழகிய மலேயாகும். அங்கு உள்ள அம்மலே, பிறர் எவராலும் நெருங்குதற்கு அரிய இயல்பினேயுடையதும் அம்மலேமேல் பொருத்தமுடன் அமைந்துள்ளதும் ஆகிய நகரம். பார்ப்போர் எவராலும் இலங்கை என்று பேர் தரத்தக்கது;

ஆலகாலம் போன்ற கடுமையான திறலையுடைய அம்மூவர்க்கு அதுவே பொருத்தமான நகரம் ஆம்' என்று தேவதச்சன் கருதினன்.

கு: பூமியின் நடுப்பகுதியில் மேருமலை நின்று, அப்பூமி அசையாது தாங்கிக் கொண்டிருக்கின்றது என்பது புராண முடிபு. கனகமலையினின்று முறிந்து காற்றால் கொணரப்பபட்டுத் தென் கடலில் விழுந்துள்ள முக்குடுமிச் சிகரம் திரிகோணமலை—அழகிய தொரு மலையாகவே அமைந்துள்ளது. கடலுக்கு நடுவே இருக்கும் அந்த மலை பிறரால் நெருங்குதற்கு அரிய தன்மையது. அப்பொன் மலைமேல் பொருத்தமுடன் அமைந்த இந்நகரத்தைப் பார்த்த எவரும் இதனை இலங்கை என்று காரணப்பெயர் கொடுத்துக் கூறுவர் என்றவாறு. பொன்மலைமேல் இலங்குவது ஆகலின் இலங்கை என்பது காரணப்பெயராகக் கொள்ளத்தக்கதாதல் தெளியலாம், இலங்குவது இலங்கை. இலங்கு-ஐ-இலங்கை. உடுக்கப்படுவது உடுக்கை எனக் காரணப்பெயர் பெறுவதும் நினையலாம். பிறரை அழிக்கும் கொடுமை கருதி மாலியவான் சுமாலி, மாலி என்ற மூவர்க்கும் நஞ்சினையுவமையாக்கினர். ஆலம் அனைய கடுந்திறலோர் கடலுக்கிடையில் இருந்தால் அவர்களால் பிறர்க்கு வரும் இன்னல் குறையும் என்ற எண்ணத்தால் இங்ஙனம் கருதினன் போலும். இம் மூவருக்கும் நிலையாம்பதியாம் என மேற்கூறியதையே அனுவாத முகத்தான் இங்கும் ஆலமனைய கடுந்திறலோர்க்கு அதுவே நகரமாம் என்று மீண்டும் கூறியவாறு.

(௯௪)

### இலங்கை மதிலும் அகழியும்

95. தாழ்வின் மதியுங் கதிரோனுந்
  தாராகணமுந் தண்முகிலும்
கீழ வாகி மேலோங்கிக் கிளர்ந்து
  பரந்த நகரியினைச்

சூழு மதிலு மம்மதிலைச் சூழ்ந்த
கிடங்கும் புவிசூழ்ந்த
வாழி வரையு மவ்வரைசூ ழகல்வே
லையயு மொத்துளதால்.

**தாழ்வுஇல் மதியும் கதிரோனும் தாராகணமும் தண்முகிலும்**
**கீழவாகி மேல்ஓங்கிக் கிளர்ந்து பரந்த நகரியினைச்**
**சூழும் மதிலும், அம்மதிலைச் சூழ்ந்த கிடங்கும் புவி சூழ்ந்த**
**ஆழி வரையும் அவ்வரைசூழ் அகல் வேலையையும் ஒத்துளதால்.**

பொ: பூமியில் தாழ்தல் இல்லாமல் (விண்ணில் உயர்ந்துள்ள) சந்திரனும் சூரியனும் விண்மீன்களின் கூட்டமும், குளிர்ந்த மேகமும் கீழவாகித் தோன்ற, அவற்றினும் மேலோங்கி வளர்ந்து பரவியுள்ள அந் நகரத்தைச் சூழ்ந்துள்ள மதிலும் அந்த மதிலைச் சூழ்ந்துள்ள அகழியும் (எவ்வாறு உளவெனின்) சக்கரவாள கிரியையும் அம்மலையைச் சூழ்ந்துள்ள அகலமான பெரும்புறக்கடலையும் ஒத்துள்ளன.

கு: தாழ்வுஇல் என்ற அடையை மதி முதலிய நான்கிற்கும் கூட்டுக. விண்ணில் உயர்ந்து விளங்கும் திங்களும் ஞாயிறும் உடுக்கணமும் குளிர்மேகமும் கீழ்ப்படுமாறு உயர்ந்துள்ளது இலங்கை நகரம் என்றவாறு. ஆகி என்பதை ஆகவெனத்திரிக்க. நகரி-நகரம். இலங்கையைச் சூழ எழுப்பியுள்ள மதில் சக்கரவாள மலையினை ஒத்துளது என்க. இதனால் மதிலின் உயர்வும் அகழியின் ஆழமும் பரப்பும் புலப்படுத்தியவாறு. ஒத்துளது என்பதனைத் தனித்தனி கூட்டுக. மதிலும் கிடங்கும் ஒத்துளது என்பது ஒருமைப்பன்மை மயக்கம், வழுவமைதி எனினும் ஆம். (௯௫)

மாடங்களின் வருணனை

96. சூலையும் வண்ண நமையெல்லாங் குலிசத்
தாலே சிறகறுக்கும்
இலகு மவுலி யிமையவர்கோ னின்னுஞ்
சீற வடுக்குமென

அலைகொள் பெருநீர்க் கடல்சூழ்ந்த வழியா
விலங்கை யரண்டேடி
மலைக ளெல்லா மவ்விடத்தே திரண்ட
தொக்கு மணிமாடம்.

**குலையும் வண்ணம் நமை எல்லாம் குலிசத்தாலே சிறகு அறுக்கும்**
**இலகு மவுலி இமையவர்கோன், இன்னும்சீற அடுக்கும் என,**
**அலைகொள் பெருநீர்க்கடல் சூழ்ந்த அழியாஇலங்கை அரண்தேடி,**
**மலைகள் எல்லாம் அவ்விடத்தே திரண்டது ஒக்கும் மணிமாடம்.**

**பொ :** நடுங்கும்படி நம்மையெல்லாம் வச்சிரப்படையாலே நம் சிறகினையறுக்கும் இயல்பினனாகிய விளக்கமுடைய முடியணிந்த இந்திரன் இன்னமும் அவ்வாறே கோபித்தலும் கூடும் என்று அலைகளைக்கொண்ட பெரிதாகிய நீரையுடைய கடலால் சூழப்பட்ட அழியாத இயல்பையுடைய இலங்கையாகிய அரணைத் தேடிக்கண்டு மலைகள் எல்லாம் அந்த இலங்கையில் ஒருங்கே சேர்ந்ததை ஒத்துத் தோன்றும்; மணிகள் பதித்த மாடங்களின் தோற்றம்.

**கு:** இலங்கை நகரில் உள்ளமாடங்கள் எல்லாம் மலைகள் வந்து திரண்டுள்ளன போலக் காணப்படுகின்றன என்பார், தற்குறிப் பேற்றமாக அம்மலைகள் அங்குத் திரளுதற்கு ஒரு காரணம் கற்பித்துக் கூறியவாறு. குலைதல்–நடுங்குதல். குலிசம்–வச்சிரப்படை. மலைகள் முற்காலத்தில் சிறகுடையனவாய்ப் பறந்து சென்று ஊர்கள்மேல் அமர்ந்து அழித்து வந்தன. அவற்றின் அழிவையுணர்ந்த இந்திரன் தன் வச்சிரப்படையால் அம்மலைகளின் சிறகுகளை அறுத்தான் என்பது புராண வரலாறு. சிறகினையறுத்த இந்திரன் இன்னும் வேறுவகையால் நமக்கு அழிவைச் செய்தலும் கூடும் என்று கருதி மலைகள் எல்லாம் சேர்ந்து கடலால் சூழப்பட்ட இலங்கையின் அரண் சிறப்பையுணர்ந்து அவ்விடத்து ஒன்று சேர்ந்துள்ளது போலக் காட்சியளிக்கின்றன மணிமாடங்களின் தோற்றம் என்க. இது ஏதுத் தற்குறிப்பேற்றவணி ஆகும். இன்னும் சீற அடுக்கும் என்றது சிறகை அரிந்த இந்திரன் இன்னும் வேறுவகையால் கோபித்தலும் கூடும் என்னும் கருத்தி

னது. சிறகையரிய வல்ல இந்திரன் நம் சிகரங்களையே யழித்தலுங் கூடும் என்றவாறு. இந்திரன் முடியில் பதித்த மணிகளின் சிறப் பால் அது இலகு மவுலி எனப்படுகின்றது இலகுதல்-விளக்கமிக்க தாதல். இலங்கை கடலால் சூழப்பட்டிருப்பதும் அழியாத அரணினை யுடையதாயிருப்பதும் இந்திரனுக்குப் பயந்த மலைகட்குப் பாதுகாப் பாகத் தங்கும் இடமாகும் என்று எண்ண ஏதுவாயின. 'கண் பிசைந்தொரு சேயின்னும் கலுழினும் தணைக் கொடுப்பன், மண் பிசைந்துண்ட மாயன் மறுத்திட வலியனல்லன், நண்பிசைந் திறை வனுக்கே நாமிடமாவமென்று பண்பிசைந் தலைதிரண்ட பரிசினின் றிடுமக் குன்றம்' (5 கைலாசகதி-பிரபுலிங்கலீலை) என்பது இச்செய் யுளோடு ஒப்புநோக்கத்தகும். (சலி)

### கோபுர வாயிலும் நெடுவீதியும்

97\. ஆக்கு முலக முகாந்தத்தி
லழிக்கும் வெள்ள மதுதனக்குப்
போக்கு வேண்டு மெனவகுத்த
போன்ற பெருங்கோ புரவாயில்
காக்கு மொருநாற் றிசைமுடிவு
காணப் போந்த காரிருளை
நீக்கு மணிவே திகையிருபா
னிரைத்து விளங்கு நெடுவீதி.

**ஆக்கும் உலகம் உகாந்தத்தில் அழிக்கும் வெள்ளம் அதுதனக்குப் போக்கு வேண்டும் எனவகுத்த போன்ற பெருங்கோபுர வாயில்; காக்கும் ஒருநால் திசை முடிவு காணப்போந்த கார் இருளை நீக்கும் மணிவேதிகை இருபால் நிரைத்து விளங்கும் நெடுவீதி.**

பொ : தான் உண்டாக்கும் உலகத்தை உகாந்தத்தில் அழிக்கின்ற வெள்ளத்திற்குப் போதற்குரிய வழி வேண்டும் எனச் செய்தாற் போன்றுள்ளன பெரிய கோபுர வாயில்கள் சைக் காவலரால் காக்கப்படுகின்ற நான்கு திசைகளின் முடிவிடத்தைக் காண்பதற்கு வந்த கரிய இருளை நீக்குகின்ற ஒளிமிக்க மணிகள்

பதித்த திண்ணைகளை இருபுறத்தும் வரிசையாகப் பெற்று விளங்கும் நீண்ட தெருக்கள்.

கு: இலங்கை நகரில் பெரிய கோபுர வாயில்களின் தோற்றம், ஊழி இறுதியில் உலகத்தை அழிக்கும் பிரளயவெள்ளத்திற்குப் போக்கு வகுத்தாற்போன்று காணப்படுகின்றன. அந்நகரத் தெருக்கள் திசையின் இறுதிவரை நீண்டிருப்பதால், நான்கு திசைகளின் முடிவைக் காண வேண்டும் என்று வந்த கரிய இருளை நீக்குகின்ற ஒளிமிக்க மணிகள் பதித்த திண்ணைகள் இருபுறத்தும் வரிசையுறச் செய்யப்பெற்று விளங்கா நிற்கும் என்க. உலகம் பிரளய வெள்ளத்திலிருந்து ஆதிவராகத்தினுல் எடுக்கப் பட்டது என்ற கருத்து நினைந்து ஆக்கும் உலகம் என்றுர். உலகத்தையுண்டாக்கிய வெள்ளமே ஊழி இறுதியில் அழிக்க வரும்போது, அவ்வெள்ளத்தை வெளியேற்ற வழி வகுத்தாற் போன்று கோபுரவாயில்கள் மிகப் பெரிதாகத் தோன்றுகின்றன என்றவாறு. நான்கு திசைகளின் இறுதிவரையில் ஒவ்வொரு வீதியும் நீண்டு கிடக்கின்றமையால் அத்திசைகளின் முடிவிடத்தைக் காண விரும்பிய இருள் அவ்வீதி வழியல்லது செல்லவியலாமையின் அவ்வீதியில் வருகின்றது. அவ்வாறு வந்த இருளை அவ்வீதியில் உள்ள வரிசையான வீடுகளின் திண்ணைகள் தம் ஒளியால் நீக்கிவிடுகின்றன என்றவாறு. கோசலநாட்டின் நீளத்தைக் கூறப்புகுந்த புலவர் 'சாலும் வார்புனற் சாயுவும் பல, காலினேடியுங்கண்டதில்லையே' (பால். நாட்டுப்-60) எனக் கூறியிருத்தல் இங்கு நினைவு கூரத்தகும். திசை முடிபு காணப் புறப்பட்ட இருள் தொடக்கத்திலேயே வீதியின் இருபுறத்தும் உள்ள தெற்றிகளின் ஒளியால் அழிந்துவிட்டது என அதன் அழிவு கூறு முகத்தால் அத்தெருக்களின் ஒளியுடைமையையும் நெடுமையையும் புலப்படுத்தியவாறு. (௬௧)

### மாடங்களின் ஒளி

98. சகர ரகழ்ந்த நீள்வேலை
 தழுவு மிலங்கா புரிதன்னில்
திகரில் கூட கோபுரமு
 நீடாட ரங்கு நிகரில்லாச்

சிகர மாட மணிச்சோதி
திரண்டொன் ருகச் சிவந்தெழலால்
மகர வேலை யுட்டிகழும்
வடவா முகத்தை யொத்துளதால்.

**சகரர் அகழ்ந்த நீள்வேலை தழுவும் இலங்காபுரி தன்னில்**
**நிகர்இல் கூட கோபுரமும்நீடு ஆடு அரங்கும் நிகர் இல்லாச்**
**சிகர மாட மணிச்சோதி திரண்டு ஒன்ருகச் சிவந்து எழலால்**
**மகர வேலையுள் திகழும் வடவா முகத்தை ஒத்து உளதால்.**

**பொ :** சகரர் அகழ்ந்தெடுத்த நீண்ட கடல் தழுவுமாறு அதன் நடுவில் அமைந்த இலங்கை மாநகரில் ஒப்பில்லாத கூட கோபுரங்களிலும் நீண்டுள்ள ஆடரங்குகளிலும் ஒப்பற்றுயர்ந்த சிகரங்களையுடைய மாடங்களிலும் பதித்துள்ள மணிகளின் ஒளி ஒன்ருய்த் திரண்டு சிவந்த நிறத்தோடு எழுதலால் மகரமீன்களை யுடைய கடலுள் விளங்கும் வடவா முகாக்கினியை ஒத்துக் காணப்படுகின்றது.

**கு :** இலங்கை மாநகரம் கடலுக்கு நடுவேயிருப்பதாலும் இலங்கையிலுள்ள கூட கோபுரம் முதலியவற்றின் செவ்வொளி ஒன்ருய்த் திரண்டு மேலே எழுதலாலும் கடலிடையில் உள்ள வடவாமுகாக்கினியே எழுந்தாற்போன்றுளது. கடலுக்கு இடையில் பெண் குதிரை முகம் போன்ற வடிவில் ஆற்றல் மிக்க நெருப்பு இருப்பதாகப் பழைய நூல்கள் பகர்கின்றன. இன்றைய ஆராய்ச்சியாளரும் அத்தகையதொரு நெருப்பு இருப்பதாக ஒப்புக் கொள்கின்றனர். சகரர் தோண்டியது கீழ்கடலே ஆயினும் தென்கடலையும் அவர்கள் தோண்டியதாக உபசாரம் பற்றிக் கூறினுர் என்க. சகரர் கடலை வெட்டிய கதை பாலகாண்டத்துக் கூறப்பட்டுளது. சகரர் தொட்டலால் சாகரம் எனப்பெயர் தழைப்ப (பால-அகலிகைப்-43) எனவருதல் காண்க. சகரன் என்னும் அரசன் தன் அறுபதினுயிரம் மக்களின் ஆற்றலையுணர்ந்து அசுவ மேதம் புரியக் கருதி ஒரு குதிரையை உலக வலம் வருமாறு செய்ய அஞ்சுமான் என்பவனை அனுப்பினுன். இதனையுணர்ந்த

இந்திரன் அக்குதிரையைப் பாதலத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த கபில முனிவரின் ஆசிரமத்தில் கட்டிவிட்டுச் சென்றான். அதனையறியாது குதிரையை உலகெலாந் தேடியுங்காணாராய்ச் சகரர் அறுபதினாயிரவரும் மண்ணை நூறு யோசனை அகலமும் ஆழமும் தோண்டிக் கபிலமுனிவர் ஆசிரமத்தில் அக்குதிரையைக் கண்டு சீறி அம்முனிவர் கோபத்தீயால் மாண்டனர் என்பது அக்கதை. (சஉ)

## இலங்கை மாநகரில் மாலியவான் முதலிய மூவரும் குடிபுகுதல்

99. இன்ன தாய விலங்கையின தெழிலை
நோக்கி யெதிரில்லா
மன்னு வீர மாலியவான் சுமாலி
மாலி யென்றுரைக்கும்
மன்னர் மூவர் மகிழ்ந்தந்த
வாசாரியற்குப் பூசனைசெய்
தொன்ன லார்கட் கிடந்துடிக்க வொலிநீ
ரிலங்கை யுட்புகுந்தார்.

**இன்னது ஆய இலங்கையினது எழிலை நோக்கி எதிர் இல்லா மன்னு வீர மாலியவான், சுமாலி, மாலி என்று உரைக்கும் மன்னர் மூவர் மகிழ்ந்து அந்த ஆசாரியற்குப் பூசனை செய்து ஒன்னலார்கட்கு இடம் துடிக்க ஒலிநீர் இலங்கையுள் புகுந்தார்.**

**பொ:** இத்தகைய சிறப்புகளையுடைய இலங்கையினது அழகை நோக்கி நிகரில்லாது நிலைபெற்ற வீரத்தையுடைய மாலியவான், சுமாலி, மாலி என்று சொல்லப்படுகின்ற அரசர் மூவரும் மகிழ்ந்து அந்த நகரத்தை அழகுறச் செய்த தேவதச்சனாகிய ஆசாரியனுக்குப் பூசனை செய்து பகைவர்கட்குக் கண், தோள், முதலியன இடம் துடிக்குமாறு ஒலிமிக்க கடல்நீரால் சூழப்பட்ட இலங்கைமாநகருள் குடிபுகுந்தார்கள்.

கு : ஆசாரியன் என்றது தேவதச்சனுகிய விசுவகர்மாவை. அவன் செய்த நகரின் அமைப்பும் அழகும் கண்டு மகிழ்ந்த மாலியவான் முதலியமூவரும் அவனுக்குப் பூசனை செய்தார்கள் என்றவாறு. ஒன்னலார்-பகைவர். இடம் துடிக்க என்றது பகைவர்க்கு இடக்கண்ணும் இடத்தோளும் துடித்துத் தமக்குப் பின்வரும் தீமையை முன்னர் நிமித்தமாக அறிவிக்க என்றவாறு. ஆண்களுக்கு இடம் துடிப்பது தீயநிமித்தம், வலம் துடிப்பது நன்னிமித்தம். பெண்டிர்க்கு இடம் துடித்தால் நன்னிமித்தமாகும் வலந்துடித்தல் தீநிமித்தம். மாலியவான் முதலிய மூவரும் இலங்கையில் குடிபுகுந்து வலமும் வளமும் பெற்றுப் பகைவரை நலியப் போகிருர்கள் ஆதலின், பகைவர்க்கு இப்போது இடம் துடிப்பதாயிற்று. (௯௯)

மூவர்க்கும் திருமணம்

100. யாவ ராலுங் கண்களினு லெட்டிப்
பார்க்க வொண்ணுத
காவ லிலங்கை வீற்றிருந்த
காலேக்கானக் கந்திருவப்
பாவை யான நருமதைதான் பயந்த
மூவர் மங்கையரில்
மூவ ராய வாங்கவர்க்கு மூப்பி
னடைவின் முறைகொடுத்தாள்.

யாவராலும் கண்களினுல் எட்டிப்பார்க்க ஒண்ணுத
காவல்இலங்கை வீற்றிருந்த காலேக் கானக் கந்திருவப்
பாவையான நருமதை தான்பயந்த மூவர் மங்கையரில்
மூவர்ஆய ஆங்கு அவர்க்கு மூப்பின் அடைவின் முறை கொடுத்தாள்.

பொ : எத்தகைய ஆற்றல் படைத்தோராலும் கண்களினுல் எட்டிப் பார்க்கவும் இயலாத கடுமையான காவலேயுடைய இலங்கை மாநகரில் குடிபுகுந்து அம்மூவரும் சிறப்புடன்

வீற்றிருந்த போது இசைபாடுதலில் வல்ல கந்திருவப் பெண்ணுன நருமதை என்பவள், தான் பெற்ற மூவர் மங்கையரில் மூப்பின் தகுதிவண்ணமே மூவராயுள்ள மாலியவான் முதலிய மூவர்க்கும் முறையே மணஞ்செய்து கொடுத்தாள்.

கு: இலங்கைக் காவலின் கடுமை புலப்படுத்த வேண்டி யாவராலும் கண்களினுல் எட்டிப்பார்க்க ஒண்ணுத காவல் என்ருர். கானம்-இசை. கந்திருவப்பெண்ணுகிய நருமதை என்பவள் தான் பெற்ற கன்னியர் மூவரையும் மாலியவான் முதலிய மூவரில் மூத்தவனுக்கு மூத்த பெண்ணையும் நடுவோனுக்கு நடுப் பெண்ணையும் இளையோனுக்கு இளைய பெண்ணையும் மணஞ்செய்து கொடுத்தாள் என்றவாறு. (கக)

### வச்சிரமுட்டி முதலியோர் பிறத்தல்

101. சிறந்த காதன் மாலியவான்
றனக்குஞ் சீரார் சுந்தரிக்கும்
பிறந்தார் பெருவச்சி சிரமுட்டி
பெரும்பாக் கன் துன் முகப்பெயரான்
மறந்தான் பெருகுஞ் சுதகத்த
னியாய கோபன் மத்தன்மனத்
தறந்தா னில்லா வுன்மத்த
னென்னு மெழுவ ரனலையொடும்.

**சிறந்த காதல் மாலியவான் தனக்கும் சீரார் சுந்தரிக்கும் பிறந்தார் – பெருவச்சிரமுட்டி, பெரும்பாக்கள் துன்முகப் பெயரான் மறம்தான் பெருகும் சுதகத்தன் நியாகோபன் மத்தன் மனத்து அறம்தான் இல்லா உன்மத்தன் என்னும் எழுவர் அனலையொடும்.**

பொ: சிறந்த காதலுணர்ச்சியுடைய மாலியவானுக்கும் அவன் மனைவியான சிறப்புப் பொருந்திய சுந்தரிக்கும் பெருவச்சிர முட்டி, பெரும்பாக்கள், துன்முகன் என்ற பெயரையுடையவன்,

பாபம் வளர்தற்குக் காரணமான சுதகத்தன், நியாயகோபன், மத்தன், மனத்தில் தருமம் என்பதே இல்லாதிருக்கும் உன்மத்தன் என்ற எழுவர், அனலை என்ற பெண்ணோடு பிறந்தார்கள்.

கு : இதனால் மாலியவான் மனைவி சுந்தரி என்ற பெயரினள் என்பதும் அவ்விருவர்க்கும் வச்சிரமுட்டி முதலிய எழுவர் ஆண் மக்களும் அனலை என்ற ஒரு பெண்ணும் பிறந்தனர் என்பதும் கூறியவாறு. மறம்–பாபம். நியாயத்தைக் கோபிப்பவன் எனவே அநியாயத்தையே செய்கின்றவன் என்றவாறு. அறம் இல்லாத மனத்தன் எனவே சிந்தையாலும் அறத்தைப் பற்றி நினைக்காதவன் என்பது விளங்கும். (சரு)

**கைகசியும் கும்பிநசியும் பிறத்தல்**

102. பாதி மதிக்குப் படர்செய்நுதல்
பணியா மணியார் கலையல்குல்
சூது மதிக்கு மிளங்கொங்கைத்
துணைக்கை கசியும் தூமலர்மேல்
மாது மதிக்கும் வடிவுடைய
மங்கை கும்பீ நசியுமெழில்
கேது மதிக்குஞ் சுமாலிக்கும்
பிறந்தா ரறந்தான் கெட்டோட.

பாதி மதிக்குப் படர் செய் நுதல் பணியாம் மணியார் கலைஅல்குல்
சூது மதிக்கும் இளங்கொங்கைத் துணைக் கைகசியும் தூமலர்மேல்
மாது மதிக்கும் வடிவுடைய மங்கை கும்பீ நசியும் எழில்
கேது மதிக்கும் சுமாலிக்கும் பிறந்தார் அறந்தான் கெட்டுஓட.

பொ : எட்டாம் நாளில் தோன்றும் பாதிச் சந்திரனுக்குத் துன்பத்தைச் செய்யும் அழகிய நெற்றியும் பாம்பின் படம் போன்றதாய், மணிகள் பொருந்திய மணிமேகலை அணிந்த அல்குலும், சூதாடு கருவியே என எண்ணத்தக்க இளமையான இரு நகிலு

முடைய கைகசியும் தூய செந்தாமரை மலர்மேல் அமர்ந்த திருமகளும் மதிக்கத்தக்க வடிவழகுடைய மங்கையாகிய கும்பீ நசியும், அழகுமிக்க கேதுமதி என்பவளுக்கும் சுமாலிக்கும் தருமம் கெட்டு ஓடுமாறு பிறந்தனர்.

**கு:** அட்டமிச்சந்திரன் அழகினும் அவள் நெற்றி அழகு மிக்கதாக உள்ளமை கண்டு அந்தப் பாதி மதி வருந்தும் என்பார் ‘பாதிமதிக்கும் படர் செய்நுதல், என்றார். படர்–துன்பம். நெற்றி தன் அழகு மிகுதியால் பாதிமதியை வருத்தும் என்றபடி. பணி–பாம்பு. இங்குப் பாம்பின் படத்தையுணர்த்தியது. ஆம் உவம உருபு. பணிபோன்ற அல்குல், மனியார்கலை அல்குல், எனத் தனித்தனி கூட்டுக. மணியார் கலை என்றது மணிகள் பொருந்திய மணிமேகலையை. சூது மதிக்கும் என்பது சூதாடு கருவியே என மதிக்கத்தக்க இளங்கொங்கை என்க. கொங்கைத்துணை என்றது. துணைக்கொங்கை என இயையும், நுதலையும் அல்குலையும் துணைக் கொங்கையையுமுடைய கைகசி என்க. கேதுமதிக்கும் சுமாலிக்கும் கைகசியும் கும்பிநசியும் பிறந்தார் என்றவாறு. இவர்கள் பிறந்த மையால் அறம் நிலைபெறாது போய்விடும் என்பார். அறந்தான் கெட்டோடப் பிறந்தார் என்றார். (சஉ)

### அனலன் முதலிய நால்வர் பிறத்தல்

103. திளையா வெம்போர் அனலன்
சீர்திகழும் அனிலன், அரனுடனே
வளையா வலியான் சம்பாதி
மன்னு முலகின் மைந்தர் மனத்
தளையாம் விழியாள் நருமதைதான்
றந்த மூவர் மங்கையரில்
இளையா டனக்கு மாலிக்கு
மிவர்கள் பிறந்தா ரீரிருவர்.

திளையா வெம்போர் அனலன், சீர் திகழும் அனிலன், அரனுடனே வளையா வலியான் சம்பாதி, மன்னும் உலகின் மைந்தர் மனத்

**தளையாம் விழியாள் நருமதைதான் தந்த மூவர் மங்கையரில்**
**இளையாள் தனக்கும் மாலிக்கும் இவர்கள் பிறந்தார் ஈரிருவர்.**

பொ: நிலைபெற்றஉலகில் உள்ள மைந்தர் மனங்களை யெல்லாம் தன்பால் இழுக்கின்ற பாசம் போன்ற கண்களை யுடையவளாகிய நருமதை என்பவள் பெற்ற மங்கையர் மூவரில் இளையவளுக்கும் மாலிக்கும், பயிற்சியின்றியே கொடிய போர் செய்யும் ஆற்றல் படைத்த அனலன், சிறப்பு விளங்கும் அனிலன், யார்க்கும் தோல்வியுருத வலிமையுடைய சம்பாதி, அரனுடனே இவர்கள் நால்வர் பிறந்தனர்.

கு: திளைத்தல் பயிலுதல். குலவிச்சை கல்லாமல் பாகம்படும் என்பதற்கேற்ப அனலன் என்பவன் பயிலாமலே வெம்போர் செய்யும் வீரனுக விளங்கினுன் என்பார். திளையா வெம்போர் அனலன் என்ருர். அரன்-பகைவரை அழிக்கின்றவன். பெயராலே இவன் ஆற்றல் புலப்படுகின்றமையால் அடைமொழியின்றி அரன் என்று மட்டும் கூறியுள்ளார். வளையா வலி என்றது யார்க்கும் பின்னிடாத வலிமை என்றவாறு. தளை-பாசம். நருமதையின் கண்கள் மைந்தர் மனங்களைத் தன்பால் இழுக்கும் இயல்பினது என்பார், மைந்தர் மனத்தளையாம் விழியாள் என்ருர். மனத்தளையாம் விழி என்றது, மனத்தைக் கட்டுகின்ற கயிறு போன்ற அழகிய பார்வையுடைய விழி என்றவாறு. ஆம் உவமை உருபு. மாலிக்கும் இளையாளுக்கும் அனலன், அனிலன், அரன். சம்பாதி என்ற புதல்வர் நால்வர் பிறந்தனர் என்றவாறு. இவர்கள் ஈரிருவர் பிறந்தார் என இயையும். (சஎ)

**மாலியவான் முதலிய மூவர்தம் மக்களின் வளர்ச்சி**

104. கூற்ற மென்னக் கனலென்னக்
கொதிக்குமால மெனக் கொடியோர்
சீற்ற மென்ன வறிவில்லோர்
செல்வ மென்னத் திகழறத்தின்

ஆற்றி னிற்ற லதுநீக்கி யாறி
லொன்று கொள்ளாதே
ஏற்ற மான விறைகொள்ளு
மிறைவன் பாவ மெனவளர்ந்தார்.

**கூற்றம் என்னக் கனல்என்னக் கொதிக்கும் ஆலம்எனக் கொடியோர்
சீற்றம் என்ன, அறிவு இல்லோர் செல்வம் என்னத் திகழ் அறத்தின்
ஆற்றின் நிற்றல் அதுநீக்கி ஆறில் ஒன்று கொள்ளாதே
ஏற்றமான இறை கொள்ளும் இறைவன் பாவம் என, வளர்ந்தார்.**

**பொ :** கூற்றுவனைப் போலவும், நெருப்பைப் போலவும் கொதிக்கின்ற நஞ்சினைப் போலவும், கொடியவர்களின் கோபம் போலவும் கல்வி அறிவில்லோர்தம் செல்வம்போலவும் விளக்க முடைய அறநெறியில் நிற்றலையொழித்து, ஆறில் ஒன்றினை இறை யாகக் கொள்ளாமல் மிகுதியான வரியைக் குடிகளிடத்திலிருந்து வற்புறுத்திக் கொள்ளும் அரசனது பாவத்தைப் போலவும், அந்தப் பிள்ளைகள் வளர்ந்தார்கள்.

**கு :** இச்செய்யுள் பல்பொருள் உவமை. மாலியவான் முதலிய மூவர்தம் பிள்ளைகளின் வளர்ச்சிக்குக் கூற்றம் முதலிய ஆறு பொருள்களை உவமையாகக் கூறியுள்ளமை காணலாம். அப் பிள்ளைகள் வளர்ச்சியுறுங் காலத்திலேயே பிறர்க்குத் தீங்கு செய்து கொண்டே வளர்ந்தமை புலப்படக் கூற்றத்தையும் கனலையும் ஆலத்தினையும் உவமை கூறியுள்ளார். நல்லோர் சீற்றமாயின் விரைவில் தணிந்து விடுதல் நோக்கிக் கொடியோர் சீற்றத்தையே இங்கு உவமை கூறினர். கொடியோர் சீற்றம் குன்றாது வளர்ச்சி பெற்றுக்கொண்டே இருத்தல் போல அப்பிள்ளைகளும் குன்றாது வளர்ச்சியுற்றனர் என்றவாறு. அறிவுடையோரின் செல்வம் ஆயின், அலந்தோர்க்களித்தல் முதலியவற்றான் குறைவுறும். அறிவிலோர் செல்வத்திற்கு அத்தகைய குறைபாட்டிற்கு வழி இன்றி மேலும் மேலும் வளர்ந்துகொண்டே போகும் ஆதலின், அறிவிலோர் செல்வத்தை உவமை கூறினர். இதனால் அறிவிலோர் தானும் உண்ணாது பிறர்க்கும் ஈயாது இவறியீட்டுவர் என்பது

புலப்படுத்தியவாறு. அரசர்கள் குடிகளிடத்தில் ஆறிலொரு பங்கு வரியாகக் கொள்ளவேண்டும் என்பது அறநூலின் விதியாகும். ஆறில் ஒரு பங்கிற்கு அதிகமாக வரி வாங்குபவன் அறத்தின் வழிநிற்பவன் ஆகான் என்பார். 'திகழறத்தின் ஆற்றினிற்றலது நீக்கி ஏற்றமான இறை கொள்ளும் இறைவன்' என்றார். இறை-வரி. இறைவன்-அரசன். குடிகளிடத்தில் ஏற்றமாக வரி வாங்குகின்றவன் பாவம் பெருகுவது போல அப்பிள்ளைகள் வளர்ந்தார்கள் என்றவாறு.

(சஅ)

### மாலியவான் முதலிய மூவர் செய்யும் அழிவு

105. ஏழிற் புவனம் படைத்தோன்பா
லெய்தும் வரத்தின் வலியாலே
பாழித் திரடோண் மாலியவான்
சுமாலிமாலி யெனும் பாலர்
ஆழித் தேர ரடற்சிலைய
ரளவி லாத பெரும்படையர்
ஊழிக் காற்றுந் தீயும்போ
லுலகை யழிக்கத் தொடங்கினர்.

**ஏழின் புவனம் படைத்தோன்பால் எய்தும் வரத்தின் வலியாலே**
**பாழித் திரன்தோள் மாலியவான், சுமாலி, மாலி யெனும் பாலர்**
**ஆழித்தேரர், அடல்சிலையர், அளவுஇலாத பெரும்படையர்**
**ஊழிக்காற்றும் தீயும்போல் உலகை அழிக்கத் தொடங்கினர்.**

பொ: ஏழு உலகங்களையும் படைத்த பிரமனிடத்தில் பெற்ற வரத்தின் வலிமையால் வலிய திரண்ட தோள்களையுடைய மாலியவான் சுமாலி மாலி என்னும் தன்மையராகிய மூவரும் சக்கரத்தையுடைய தேர்ப்படையினராய், வலிய வில்லையுடையராய் அளவிலாத பெரிய சேனையையுடையவராய், ஊழிக்காலத்து வீசும் காற்றும் ஊழித்தீயும் போல உலகத்தை அழிக்கத் தொடங்கினர்கள்.

கு : இதுகாறும், மாலியவான் முதலியோரின் மைந்தர் பிறப்பும் வளர்ப்பும் சொல்லி இப்பாடலால் அம்மூவரின் செயலைக் கூறுகின்றார். ஏழிற் புவனம் என்புழி இன் தவிர்வழிச்சாரியை. ஏழ்புவனம் என்பதே எதுகை நோக்கி இன் சாரியை பெற்று வந்தது. பாழி-வலிமை. ஊழிக் காற்றும் தீயும் உலகையழிக்கவே தோன்றியவை. அவை போல இம்மூவரும் இவ்வுலகத்துயிர்களை வருத்தி அழிக்கத் தொடங்கினர் என்றவாறு. இவர்களின் கொடுமை மிக்க அழிவுச் செயலுக்கு ஊழிக் காற்றும் தீயும்தம் கொடுந்தொழிலால் உவமையாயின. படைத்தோன்பால் எய்தும் வரம் என்றது இப்படலத்து முப்பதாவது செய்யுளில் சொல்லப் பட்டுளது. (௫௬)

**மாலியவான் முதலிய மூவரும் தம்மை மும்மூர்த்தியாக மதித்தல்**

106. மேவி நாகர் கருவறுத்து
வேலையுலகம் பொடி செய்து
தேவர் கோமான் றனைத்துரந்து
செம்பொ னுலகங் கைக்கொண்டு
பாவு மிந்தப் பல்லுலகம்
படைத்துக் காத்துத் துடைக்கின்ற
மூவ ராவா ரெவர்காணிம்
மூவரன்றி யென்மொழிந்தார்.

**மேவி நாகர் கரு அறுத்து வேலை உலகம் பொடி செய்து தேவர் கோமான் தனைத்துரந்து செம்பொன் உலகம் கைக்கொண்டு பாவும் இந்தப் பல்உலகம் படைத்துக் காத்துத் துடைக்கின்ற மூவர் ஆவார் எவர்காண் இம்மூவர் அன்றி என மொழிந்தார்.**

பொ : பாதாள உலகத்தை அடைந்து அங்குள்ள நாகர்களை அடியோடு தொலைத்தும், கடலால் சூழப்பட்ட இம்மண்ணுலகத்தை அழித்துப் பொடிசெய்தும், தேவர் தலைவனாகிய இந்திரனைத் துரத்தி விட்டு அவனுக்குரிய செம்பொன்னுலியன்ற அமராவதியைக்

கைப்பற்றியும் (கொண்ட வெற்றியினுல்) இம்மாலியவான் முதலிய மூவர் அன்றிப் பரவிய இந்தப் பல உலகங்களையும் படைத்து, காத்து அழிக்கின்ற மும்மூர்த்திகளாவார் எவர்காண்? என்று தருக்கி உரைப்பாரானுர்.

கு. பாதல முதலிய மூவுலகையும் மாலியவான் முதலிய மூவரும் அழித்தமை முறையே கூறியவாறு. கருவருத்து என்றது முற்ற அழித்து என்னும் பொருளது. நாகர்களின் கருவும் இல்லையாம்படிச் செய்து என்றவாறு. இந்திரன் அமிழ்தமுண்டமை யால் சாவாத நிலையினன் ஆதலின் அவனை அழித்தல் கூடாமையின் துரத்திவிட்டு அவன் நாட்டைக் கைப்பற்றினர் என்ருர். யாராலும் வெல்லப்படாத வலிமை பெற்றிருத்தலின் எம்மினும் வலிய மும் மூர்த்திகள் யாண்டுளர்? யாமே மும்மூர்த்திகள் எனச் சொல்லித் தருக்கினர் என்க. இம்மூவர் என்று தம்மையே பிறர்போலக் கூறிக்கொண்டனர் என்க.

அரக்கர் பிறப்புப்படலம் முற்றிற்று.

# 4. தோத்திரப் படலம்

## முன்னுரை

முனிவரும் தேவரும் நாகரும் மாலியவான் முதலிய அரக்கர்கள் செய்யும் துன்பங்களைப் பொறுக்கவியலாதவர்களாய்ச் சிவபிரானைத் தோத்திரம் செய்து தம் குறையைச் சொல்லுதலும், பின்பு சிவபிரான் கூறியபடி பாற்கடலில் பாம்பணையில் பள்ளிகொண்டருளும் திருமாலைத் தோத்திரம் செய்து தம் குறையைச் சொல்லுதலும் இப்படலத்துக் கூறப்படுதலின் இது தோத்திரப்படலம் எனப் பெயர் பெறுகின்றது. சில ஏடுகளில் இப்படலம் இலங்கையழித்த படலத்தில் அடங்கியதாக அமைந்துள்ளது.

## படலப் பொருட் சுருக்கம்

கடல் சூழ்ந்த நிலவுலகத்து உள்ள மக்களும், தனக்குரிய அமராவதி நகரை விட்டு ஓடிய இந்திரன் முதலிய தேவர்களும், தவத்தால் தமக்கு ஒப்பில்லாத முனிவர்களும், நாகர் உலகத்தில் உள்ளவர்களும் ஒரு பற்றுக்கோடும் இல்லாமல், நரகத்தில் கிடந்து அழுந்தி வருந்தி நடுங்குகின்ற உயிர்களைப் போல, மாலியவான் முதலிய அரக்கர் செய்யும் பெருந்துயரால் நடுங்குகின்றனர். இந்தப் பெருந்துன்பத்தை நீக்கவல்லவன், ஆலகாலத்தை அமிழ்தாக அடக்கிவைத்த மணிமிடற்றனும், மார்க்கண்டேயன் என்னும் பாலனுயிரைக் கவரவந்த காலனைக் காய்ந்த காலகாலனும் ஆகிய சிவபிரான் என்பதையுணர்ந்து அவன் வீற்றிருக்கும் கயிலைமலையை அடைகின்றனர். அங்கு மங்கையொரு பங்குடையராய்ப் பவளமலைபோல் விளங்குகின்ற சிவபிரானைக் காண்கின்றனர். எந்தையேபோற்றி! இறைவா போற்றி! ஏழுலகும் தந்தாய் போற்றி! அணிகொன்றைத் தாராய் போற்றி! மலரோனும் செந்தாமரைக்கண் திருமாலும் ஆனாய் போற்றி! என்று அப்பெருமானைப் போற்றுகின்றனர். அவன் தாமரை போன்ற திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்றனர்.

இவ்வாறு தன்னைப் போற்றி வணங்கும் அவர்களை நோக்கிச் சிவபிரான் இன்று தேவர்களும் முனிவர்களும் மற்றையோரும்

இங்கு வந்துள்ள காரணம் என்ன என்று வினவ், அவர்கள் வலிய திண்ணிய தோள்களையுடைய மாலியவான் முதலிய அரக்கர்கள் இந்திரனை வென்று தேவருலகத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அக்கொடிய வீரர்குலத்தை இன்று வேரோடு அறுக்காமல் விட்டால் நாளைக்கு உலகங்கள் எல்லாவற்றையும் அழித்துவிடுவர் என்று சொல்கின்றனர்கள்.

மாலியவான் முதலிய அரக்கர்கள் சுகேசன் தன் மரபில் வந்தவர்கள். அவர்கள் எந்தத் தவறுகளைச் செய்தாலும் அவர்கள் என்னை அடைந்தவர்கள். ஆதலினால், என் கையால் அவர்களை கொல்லமாட்டேன். அவர்களைக் கொல்லும் உபாயங்கள் எல்லாம் வல்லவன் திருமாலே; அவனைக்கொண்டு அவ்வரக்கர்களை வெல்லுங்கள் என்று அவர்கட்கு விடைகொடுத்தனுப்புகின்றான் சிவபிரான். அப்பிரான் மொழிப்படியே அந்தத் தேவர் முதலியோர் திருமால் பள்ளிகொண்டருளும் திருப்பாற்கடலை அடைகின்றனர். திருப்பாற்கடலில் அலைகள் மோதி ஒலிசெய்கின்ற தோற்றம் தன்பால் வந்த தேவர்கள் முதலியோரைக் கண்டு மகிழ்ச்சியால் ஆரவாரித்து வரவேற்பது போலத் தோன்றுகின்றது. அத்தகைய திருப்பாற்கடலை அடைந்த தேவர்கள் முதலியோர், தவ முனிவர்க்கும் யோகியர்க்கும் வேதங்கட்கும் சேயனாய்த் தன்னடைந்தோர்க்கு அணியனாய் விளங்கும் ஆதிநாராயணனைத் தெளிவாகக் காண்கின்றனர்கள். அறிதுயில் செய்துகொண்டுள்ள அப்பரமன் கருத்து யாதாக இருக்குமோ என்ற அச்சத்தால் வானவர் முதலியோர் நடுங்கி நிற்ப, இந்திரன் அப்பெருமானின் குணங்களையெல்லாம் சொல்லித் தோத்திரம் செய்கின்றான். அவன் ஏத்துகின்ற ஒலி நாராயணனின் இருசெவியிலும் எய்துகின்றது. அவன் இன்ப உறக்கத்தை விடுத்து எழுந்து வந்துள்ளவர்களை அன்புற நோக்கி நீங்கள் அனைவரும் வந்த காரணம் என்ன? என்று வினவிய அளவில் தேவர் முதலியோர் மனத்திருந்த துன்பம் நீங்கித் தொழுதகையினராய்ச் சொல்கின்றனர்கள்.

மாலியவான், சுமாலி, மாலி என்பவர்கள் தாங்கள் தவஞ்செய்து பெற்ற வரங்களாலும் வலிமையாலும் செருக்கி இரக்கம் இல்லாமல் எதிரில்லாப் படையோடு வந்து எல்லா உலகங்களையும் அழித்தீப்

போல அழிக்கின்றார்கள். அவர்களை வேரறுத்துப் பெரிய உலகங்களை நீ தாங்கவில்லையெனின் இனி அடியிலிருந்து மீண்டும் படைக்க வேண்டி நேரும். நஞ்சினும் கொடிய வெஞ்சின அரக்கர்கள் நாள்தோறும் கொல்லுதலால் செக்கில் எள் பிழைத்தாற் போல இங்கு வந்துள்ள நாங்களே உயிர் பிழைத்துள்ளோம். அஞ்சினோம், அஞ்சன மேனியாய்! உன் அடியினை அடைந்தோம் அபயம்! அபயம்! என்கின்றனர். அதுகேட்டு நாராயணன் அஞ்சாதீர்கள்! என்று கையை அமைத்துத் தீயவர்களாகிய அரக்கர் குலத்தை வேரறுத்து உங்கள் சிந்தை நோயைத் தீர்ப்பேன்; இது திண்ணம். நீங்கள் சென்று உங்களுக்குரிய இடங்களில் நில்லுங்கள் என்று சொல்லிவிடுக்க அவர்கள் அங்ஙனமே செல்கின்றனர் என்பது இப்படலத்துச் சொல்லப்பட்ட கதைச் சுருக்கமாகும்.

## ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. **வான்மீகத்தில்:** 'மாலியவான் முதலிய மூவர்களால் துன்புறுத்தப் பெற்ற தேவர் முதலியவர்கள் முதலில் கயிலையை அடைந்து சிவபிரானை வணங்கிச் சரணடைந்தவர்களாய் மன்மதனை வென்றவரும் திரிபுரம் எரிசெய்தவரும் ஆகிய முக்கண்ணனைப் பார்த்து மகாதேவ! நின்னால் பாதுகாக்கப்பட வேண்டிய உயிர்கள் எல்லாம் சுகேசன் புதல்வர்களால் துன்பமுறுகின்றன. எங்கள் ஆசிரமங்களும் குடியிருக்கத் தகுதியின்றி அழிக்கப்பட்டன. தேவர்களைச் சுவர்க்கத்திலிருந்து துரத்திவிட்டு அவ்வரக்கர்கள் அச்சுவர்க்கலோகத்தில் ஆனந்தமாய் வாழ்கின்றனர். வரங்களால் செருக்கடைந்தவர்களாய்ப் போரை விரும்பிய அவ்வரக்கர்கள் திருமாலும் நானே, உருத்திரனும் நானே பிரமனும் நானே இந்திரனும் நானே எமனும் நானே வருணனும் சந்திரனும் சூரியனும் நானே நானே என்று சொல்லிக்கொண்டு தேவர்களைத் துன்புறுத்துகின்றனர். ஆதலால் அஞ்சி அஞ்சி மெய்மறந்திருக்கும் எங்கட்கு அச்சத்தை நீக்கித் தேவசத்துருக்களை வதைக்க வேண்டும் என்கின்றனர்' என்றே உளது.

ஒட்டக்கூத்தர் இத்தோத்திரப் படலத்தில் இக்கருத்துக்களைச் சுருக்கமாகச் சொல்லிவிட்டுச் சிவபிரானையும் பின்பு திருமாலையும்

தோத்திரம் செய்யும் பகுதியைச் சிறப்பாகக் கூறியுள்ளார். 'எந்தாய் போற்றி' என்று தொடங்கும் பாடலில் சிவபிரான் எவ்வுயிர்க்கும் தந்தையாவான் என்பதையும் அவன் எருது ஏறுகின்ற இயல்பினன் என்பதையும் ஏழுலகையும் அவனே தந்தவன் என்பதையும் கொன்றைமாலை அணிந்தவன் என்பதையும் இவ்வுலகம் உய்ய வந்தவன் என்பதையும் வஞ்சகர்முன் வாராதவன் என்பதையும் பிரமனும் திருமாலுமாக இருப்பவன் என்பதையும் சொல்லித் தோத்திரம் பண்ணுகின்ற முறையை விரிவாகக் கூறியுள்ளார். இத்தோத்திரத்தால் சிவபிரானுடைய சிறப்பியல்புகள் நன்கு தெளிவாக்கப்பட்டுள்ளன. சிவபிரானே நான்முகனாய் நாரணனாய் இருந்து படைத்துக் காத்துப்பின் தன்னியல்பால் அழிக்கின்றான் என்று சைவர்கள் சொல்லும் அத்தனைச் சிறப்புகளும் இத்தோத்திரத்தில் புலப்படும்படி செய்துள்ளார். கதை நிகழ்ச்சிகே சிறப்பிடம் தந்தது வான்மீகம்

ஒட்டக்கூத்தர் கதை நிகழ்ச்சியோடு இறைவனைப் பற்றிய தோத்திரங்களையும் நன்கு விரித்துக் கூறியுள்ளார். சிவபிரான் கூறியபடி தேவர் முதலியோர் திருப்பாற்கடலை அடைந்து பாம்பணையில் பள்ளிகொண்டருளுகின்ற பரமனை விளித்துச் சொல்கின்ற தோத்திரங்கள் சுவைநலமிக்கவாய், வைணவ சமய முடிபுகளை நன்கு விளக்குவனவாய் உள்ளன.

திருமால் எப்படிப்பட்டவன்? அது இது என்று ஐயுறுபவர்க்கும் காயத்தை வாட்டித் தவம்புரிபவர்க்கும் பிரமன் முதலிய தேவர்கட்கும் தருக்கநூலோர் சொல்லும் ஏதுவுக்கும் தேவர்கட்கும் தோன்றாது சேயனாய்-தொலைவில் உள்ளவனாய் இருப்பவன், ஆனால் தன்னைச் சரணடைந்தோர்க்கு அணியனாய் வந்து அருள் செய்கின்றவன்.

பாற்கடலில் அவன் பள்ளி கொண்டுள்ள பான்மை எப்படி? ஒருமைப்பட்ட மனத்தோடு யோகியர்கள் உண்மை உணர்ந்தவர்களாய் தவமகிமையால் நாராயணன் பக்கத்தில் நெருங்கியிருந்து சேவிக்கவும் நாரதர் நின்றுகொண்டு அப்பெருமானின் குணங்களில் திளைத்துக் கூத்தாடவும் மாகதர்கள் பெரிய கைகளை உயர்த்தி

ஏத்தெடுப்பவும் அலைகள் புரள்கின்ற வெண்மையான பாற்கடலில் ஒரு கருங்கடல் பரந்து கிடப்பது போலக் கிடந்து திருமால் அறிதுயில் செய்கின்றான். பூதேவியும் சீதேவியும் ஆகிய இரு மனைவியரும் தம் சிவந்த மெல்லிய கரங்களால் அவன் சேவடிகளை வருடுகின்றார்கள். அவன் இடையில் பொன்னிற ஆடையை அழகுற உடுத்துள்ளான்; அது கரிய மலையைச் சூழ்ந்து நின்ற மின்னலின் ஒளிபோலக் காட்சியளிக்கின்றது. பிரமன் முதலிய தேவரும் முனிவரும் மற்றுள்ள ஒருவரும் ஒழியாது உலகங்கள் எல்லாம் உள்ளடங்கியுள்ள வயிற்றினையுடையவனாக அவனுள்ளான்.

பிரமன் வண்டுபோலப் பெரிய வேதங்களைப் பாடவும் மேரு மலை தாமரைக் கொட்டையாய் விளங்கவும், சூழ்ந்துள்ள மற்றை மலைகள் எல்லாம் தாமரை மலரின் அகவிதழ்களாய் அமையவும் திசைகள் புறவிதழ்களாய்ப் பொலியவும் திகழ்கின்ற இந்த அண்டமாகிய தாமரை மலரைப் புறப்படவிட்ட உந்தி என்கின்ற அழகிய தடாகத்தையுடையவனாகவும் அலைகடலில் எழுகின்ற சூரியனைப் போலத் திகழ்கின்ற கவுத்துவ மணிமாலையை அணிந்த மார்பினனாகவும் அத்திருமால் விளங்குகின்றான்; என்ற தோத்திரங்கள் உள்ளத்தை உருக்கும் உயர்புடையவை. வான்மீகத்தில் காணப் படாத இத் தோத்திரங்கள் தமிழ் உத்தரகாண்டத்திற்கு உயர் வளிப்பனவாகும்.

இனி, வான்மீகத்தில் தேவர்கள் முதலிய யாவரும் பொது வகையால் நாராயணனை வேண்டிக் கொண்டதாகவேயுள்ளது. ஆனால் ஒட்டக்கூத்தர், தேவேந்திரன் தனியே திருமாலைத் தோத்திரித்ததாகக் கூறுகின்றார். அத்தோத்திரங்கள் பொருள் பொதிந்த பாடல்களாக-அமுதனைய பாடல்களாக மிளிர்கின்றன.

## படலப் பொருள் சிறப்பு

இப்படலத்தில் தேவர் முதலியோர் சிவபிரானைப் போற்றும் தோத்திரங்களும் திருமாலைப் பற்றி இந்திரன் கூறும் தோத்திரங்களும் மதிக்கத்தக்க மாண்புடையவை. சிவபிரான் கயிலையில் உமையொடு வீற்றிருக்கும் ஒப்பற்ற காட்சியைத் தேவர் முதலியோர் கண்டதாகக் கூறும்:

**குவளை விழிப்பூண் இளங்கொங்கைக் கொடிநுண் நுசுப்பின் [குயில்மென்சொல்**
**அவளை இடத்தும், முடியிடத்தில் ஆறும் தரித்த அரும்பொருளைத்**
**தவள நிறத்துத் தடங்கிரிமேல் தவமாமுனிவர் தற்சூழப்**
**பவள வரைபோல் பொலிந்திலங்கும் பரசு பாணி தனைக்கண்டார்.**

என்ற பாடல் உள்ளத்தை உருக்குகின்றது. வளமான தமிழ்ச் சொற்களால் – கேட்குந்தோறும் இனிமை மிகுஞ் சொற்களால் இப்பாடல் அமைந்துள்ளது. ஒருமுறை படித்தோர் பன்முறை படிக்கத் தூண்டும் ஓசைநயமிக்கது. புலவர் நெஞ்சினை யள்ளிக் கொள்ளும் புனிதமான பாடல் இது என்றால் மிகையாகாது. பார்வதியைப் புகழும்போது, குவளை விழியவள், பூண் அவள், இளங்கொங்கையவள், நுண் நுசுப்பினவள், குயில்மென் சொல்லவள் என ஐந்து தொடர்களாக இயையும்படி அமைந்துள்ள அழகைக் காணலாம். ஐந்தெழுத்தால் உணரப்படும் சிவபிரானின் அருட் சத்தியாகிய பார்வதியை ஐவகையான அழகுறுப்புகளோடு காட்டியுள்ளமை உளங்கொளத்தக்கது. உமையம்மையின் கருவிழிகளுக்கு உவமையாம் பேறு பெற்றது குவளை மலரே யாதலின் குவளை விழி என்றார். குவளைக்கண்ணி கூறன் காண்க என்ற மணிவாசகம் இங்கு நினைக்கத்தகும். குவளைமலர் பார்வதிக்குரிய பூவாகப் பேசப்படுதலும் நினைக. அடியார்கட்கு அருளமுதத்தை யூட்டுகின்றது அம்மையின் கண்ணேயாகலின் அந்தக் கண்ணையே முதற்கண் சிறப்பித்தார். நீலமேனி வாலிழை எனச் சங்கச் சான்றோராகிய பெருந்தேவனார், உமையம்மை வெள்ளொளி வீசும் அணிகலன் பூண்பவள் எனச் சிறப்பித்தார். பல உலகங்களையும் ஈன்றெடுத்த தாய் பார்வதி; ஆயினும், என்றும் இளமை மாறாத கன்னியாக இருக்கும் தெய்வநிலையைப் புலப்படுத்த இளங்கொள்கையவள்; எனச் சிறப்பித்துள்ளார். பெண்டிர்க்கு இடை சிறுத்திருத்தலே அழகு என்பது புலப்படுத்த வேண்டிப் பெண்களுக்கெல்லாம் உவமையாய் ஆதிகாரணமாக அமைந்துள்ள பார்வதியைக் கொடிநுண் நுசுப்பினவள் எனச் சிறப்பித்துள்ளார். மலர்க்கொடி போன்ற நுண்ணிய இடையை யுடையவள் என்றவாறு. அம்மையின் இனிமை மிக்க சொல்லுக்கு உவமைகூறவேண்டுமாயின் குயிலின் மெல்லிய குரலொலியையே

கூறலாம் என்பார், குயில் மென்சொல்லவள் எனச் சிறப்பிக்கின்றார். இவ்வளவு பேரழகும் பெருமையுமுடைய பார்வதியம்மையை இடப்பாகத்தில் வைத்த சிவபிரான், முடியிடத்தில் கங்கையை வைத்துள்ள முரண்பாட்டினைக் குறிப்பால் புலப்படுத்தி அம் முரண்பாடுபோல எத்தனையோ முரண்பாடுகளையுடையவன் அவன், அவற்றையெல்லாம் உயிர்களால் முற்றுமுணர்தற்கு இயலாதவன் என்பார், 'முடியிடத்தில் ஆறும் தரித்த அரும் பொருளை' என்று புகழ்கின்றார். சிவபிரான் தன் தூய தன்மைக்கு ஏற்புடையதாக வெள்ளை நிறத்துக் கையிலைமலையில் வீற்றிருப்பதும் உமை மங்கையையிடத்திலும் கங்கை நங்கையை முடியிடத்தும் வைத்துக் கொண்டிருந்தாலும் ஆசையற்றவன் என்பது தோன்றத் துறந்த தவமுனிவர்கள் தன்னைச் சூழ்ந்து கொண்டிருக்கப் பெறுவதும் புலப்படுத்தியுள்ளமை காணலாம். பவளமலைபோலச் செம்மேனி யம்மானாய் அவன் வீற்றிருக்கும் தன்மை கூறிக் கண்டோர் என்றும் காண விரும்பும் பேரழகைப் புலப்படுத்தி யுள்ளமை காணலாம்.

சிவபிரானைத் தேவர்கள் போற்றும்போது 'மலரோனுஞ் செந்தாமரைக்கட் டிருமாலும் ஆனாய் போற்றி' சிவ போற்றி எனப் போற்றிச் சிவபிரானே முழுமுதற் கடவுள் என்பதைப் புலப்படுத்தியுள்ளது காணலாம். இதனால் படைத்தலைச் செய்யும் பிரமனாகவும் காத்தலைச் செய்யும் திருமாலாகவும் சிவபிரான் இருப்பதைத் தெளிவுபடுத்தியுள்ள இவ்வாசிரியர் திருமாலைத் தேவேந்திரன் போற்றும்போது சிவனயனாகி அலகிலா விளையாட்டாடுவாய் அகண்டமாயினாய் ஆருணையறிவார் என்று பேசுவதாக ஆசிரியர் அமைத்துள்ளார்.

இதனால் உத்தரகாண்டம் செய்த ஒட்டக்கூத்தர் சமயத் துறையில் பொது நோக்குள்ளவர் என்பது தெளிவாகின்றது. தமிழ் நாட்டில் சிறந்து விளங்கும் இருபெருஞ் சமயங்கள் சைவமும் வைணவமும் ஆகும். இந்த இரு சமயக் கடவுளரையும் ஒத்த தகுதியுடையவனாகவே ஆசிரியர் நமக்குக் காட்டுகின்றார். தொல்காப்பியமும் இளங்கோவடிகளும் சமயத்துறையில் காட்டிய பொதுநோக்கினையே இப்புலவரும் மேற்கொண்டுள்ளார் என்பது

நன்கு புலப்படுகின்றது. சிவபிரானைக் கூறும்போது, சிவபிரானுக்கே முதன்மையும் எல்லாத் தேவர்களுமாக இருக்கும் பெருமையும் உடையவனாகக் கூறிய இவ்வாசிரியர் திருமாலைக் கூறும்போது திருமாலுக்கே முதன்மையும் சிவன் முதலிய எல்லாத் தேவருமாக இருக்கும் பெருமையும் இருப்பதாகக் கூறிச் செல்வது காணலாம். சிவபிரானைக் கூறும்போது சிறந்த சைவராகவும் திருமாலைக் கூறும்போது பரம வைணவராகவும் இருந்து அவ்வச் சமய விளக்கங்களைத் திறம்படச் சொல்லியுள்ளமை பாராட்டுதற் குரியதாகும்.

### மூவுலகத்தோரும் மாலியவான் முதலிய மூவர்க்கும் அஞ்சி நடுங்குதல்

107. பரவைப் புவியி னுள்ளோரும்
பதிவிட் டோடிந் திரனாதி
சுரர்கொத் துள்ளோர் யாவர்களுந்
துணையில் லாத முனிவர்களும்
உரகப் புவனத் துள்ளோரு
மொருபற் றின்றி யுறுதுயரால்
நரகத் துள்ளே கிடந் தழுந்தி
நடுங்கு முயிர்போல் நடுங்கினார்.

பரவைப் புவியின் உள்ளோரும், பதிவிட்டு ஓடு இந்திரன் ஆதி சுரர்கொத்து உள்ளோர் யாவர்களும், துணைஇல்லாத முனிவர்களும் உரகப் புவனத்து உள்ளோரும் ஒருபற்று இன்றி உறுதுயரால் நரகத்துள்ளே கிடந்து அழுந்தி நடுங்கும் உயிர்போல் நடுங்கினார்.

பொ: கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் உள்ள மக்களும் தனக் குரிய அமராவதி நகரை விட்டு ஓடிய இந்திரன் முதலிய தேவர் குலத்தில் உள்ளவர்களும், தவத்தால் தமக்கு ஒப்பு இல்லாத முனி வர்களும் நாகர் உலகத்தில் உள்ளவர்களும் ஒருபற்றுக்கோடும் இல்லாமல், நரகத்தில் கிடந்து அழுந்தி வருந்தி நடுங்குகின்ற

உயிர்களைப்போல, (மாலியவான் முதலியோர் செய்யும்) மிக்க துயரத்தால் நடுங்கலாயினர்.

கு: பரவை-கடல். கொத்து-குலம். முனிவர் தவத்தால் சிறப்புற்றுத் தமக்கு இணையின்றி யுயர்ந்தவர் என்பார், துணை யிலாத முனிவர்களும் என்றார். இனிக் கடவுளையன்றி வேறு துணை யிலாத முனிவர்களும் எனக் கூறலும் ஆம். உரகர்-நாகர். மூவுலகத்தோரும் தமக்குத் துணையாகப் பற்றுதற்குரியவர் யாரும் இன்றி என்பார், ஒருபற்றின்றி என்றார். உறுதுயரால் நடுங்கினர் என இயையும். மூவுலகத்தோரும் படும் துயர்க்கு வேறு உவமை யின்மையின் நரகத்துள்ளே கிடந்தழுந்தி நடுங்கும் உயிரையுவமை கூறினார். மூவுலகத்தோரும் தத்தம் உலகத்து இயல்பாகப் பெறத் தக்க இன்பங்களைப் பெறாமல் நரகத்துன்பத்தையே பெற்றார் என்ற வாறு. நரகம் என்றது பாவிகள் தங்கித் துன்புறுகின்ற இடம். இருள்சேர்ந்த இன்னாவுலகம் (243) என வள்ளுவரும் நரகத்தைக் குறிப்பிடுதல் காணலாம். திணிந்த இருளையுடையதாய்த் தன் கட் சார்ந்தார்க்கு துன்பஞ் செய்வதோர் நரகம் எனப் பரிமேலழகர் உரைவிளக்கம் செய்திருத்தல் காணலாம். (க)

107. (a) கீழ்வரும் மிகைப்பாடல் பல சுவடிகளில் இல்லாமை யாலும் கதைக்கு இன்றியமையாதது அன்மையாலும் உரை யெழுதப்படவில்லை.

**இத்தன்மையதா மரக்கர் செயும் இடும்பை யழித்தார் யாவரென்று**
**சுத்த மான தவமுனிவர் தோன்ற அருள்செய்திடு மெனக்கா**
**குத்தன் மொழியும் மொழி கேட்ட கும்ப முனிவன் உரை குளக்கண்**
**முத்தன் மொழியா லமரர் சொல முராரி முடித்த முறைமொழிவான்.**

**மூவுலகத்தோரும் கயிலையை அணுகுதல்**

108. கோல கால மாயுலகங் குலைந்து
நடுங்கக் கொதித்துவரும்
ஆல கால மமிழ்தாக வடக்கி
வைத்த மணிமிடற்றன்

பால கால முண்பலெனப்
பற்றிப் பற்றி யிழுத்திடுமக்
காலகாலன் வீற்றிருந்த கயிலை
மலையைக் கண்ணுற்ருர்.

**கோல காலமாய்உலகங் குலைந்துநடுங்கக் கொதித்துவரும் ஆலகாலம் அமிழ்தாக அடக்கி வைத்த மணிமிடற்றன் பாலகாலம் உண்பல் எனப் பற்றிப் பற்றி இழுத்திடும் அக் கால காலன் வீற்றிருந்த கயிலைமலையைக் கண்ணுற்ருர்.**

**பொ :** ஒழுங்கு கெட்டு உலகம் மனம் குலைந்து நடுங்குமாறு வெகுண்டு வந்த ஆலகாலத்தை அமிழ்தாக உண்டு அதனை அடக்கி வைத்த நீலமணி போன்ற கரிய கண்டத்தையுடையவனும், மார்க்கண்டேயன் என்ற சிறுவனின் ஆயுளை உண்பேன் என அவனைப் பற்றிப் பற்றி இழுத்திடும் அந்தக் காலனுக்குக் காலனும், ஆகிய சிவபிரான் வீற்றிருந்த கயிலைமலையை அணுகினுர்.

**கு:** கோலாகலம் என்ற சொல் எதுகை நோக்கிக் கோலகாலம் எனத் திரிந்து நின்றது. கோலாகலம்-ஒழுங்கீனம். இனி, கோலம்-அழகு. அது காலமாக உலகம் குலைந்து என்றது அழகு கெட உலகம் குலைந்து எனக் கொள்ளலும் ஆம். இப் பொருளுக்குக் காலமாய் என்பதைக் காலமாக எனத் திரித்துக் கொள்க. ஆலகாலம் என்றது திருப்பாற் கடல் கடைந்த ஞான்று தாம்பாக அமைந்த வாசுகியென்னும் பாம்பின் பல்லிலிருந்து வெளிப்பட்ட பெரிய நஞ்சினை 'நஞ்சட வெழுதலும் நடுங்கி நாண் மதிச் செஞ்சடைக் கடவுளையடையுந் தேவர்போல் (பால-வேள்விப் படலம்-50) எனக் கம்பர் கூறுதலும் காண்க. நஞ்சினைக்கண்டு அஞ்சிய தேவர் வேண்டச் சிவபிரான் அந்தப் பெருநஞ்சினை உண்டு கண்டத்தில் நிறுத்திக்கொண்டு நீலகண்டனுய் விளங்கின வரலாறு இங்குக் குறிக்கப்படுகின்றது. மணிமிடற்றன், கால காலன் என்பன ஒரு பொருட் பலபெயர். பால காலம் என்றது மார்க்கண்டேயனுடைய ஆயுளை. ஆயுளை உண்ணுதலாவது அவனுயிரைக் கவர்தல், மாலியவான் முதலிய மூவர் செய்யும்

கொடுமைகட்கு ஆற்ருது வருந்திச் சிவபிரானிடம் சொல்லித் தம் துயர் நீக்கிக் கொள்ளும் நிலையில் உள்ளவர்கள் அப்பெருமான் முன்னம் பிறர்க்கு வந்த பெருந்துன்பத்தை நீக்கியுள்ளமை நினைதல் இயல்பாகலின் மணிமிடற்றன், காலகாலன் வீற்றிருந்த கயிலை என அவ்விரு வரலாறுகளையும் குறிப்பிட்டுச் சிறப்பித்தவாறு. மணிமிடற்றன் என்பது 'நீலமணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும நீயே' (புறநா-91) என்ற ஔவையார் பாடலை நினைப்பிக்கின்றது. கண்ணுறுதல் அணுகுதலையுணர்த்தியது. (௨)

### கயிலையில் சிவபிரானைக் காண்டல்

109. குவளை விழிப்பூ ணிளங்கொங்கைக்
கொடிநுண் ணுசுப்பிற் குயின் மென்சொல்
அவளை யிடத்து முடியிடத்தி
லாறுந் தரித்த வரும்பொருளைத்
தவள நிறத்துத் தடங்கிரிமேற்
றவமா முனிவர் தற்சூழப்
பவள வரைபோற் பொலிந்திலங்கு
பரசு பாணி தனைக்கண்டார்.

குவளை விழிப்பூண் இளங்கொங்கைக்
கொடிநுண் நுசுப்பின் குயில்மென்சொல்
அவளை இடத்தும், முடியிடத்தில்
ஆறும், தரித்த அரும்பொருளைத்
தவள நிறத்துத் தடங்கிரிமேல்
தவமாமுனிவர் தற்சூழப்
பவள வரைபோல் பொலிந்து இலங்கும்
பரசு பாணி தனைக்கண்டார்.

பொ: குவளை மலர்போன்ற கண்ணினையும் அணிகலன் அணிந்த இளைய நகிலினையும் கொடிபோன்ற சிறிய இடையினையும் குயிலின் குரல் போன்ற மெல்லிய சொல்லினையும் உடைய உமை

யம்மையை இடப்பாகத்தும் சடைமுடியிடத்துக் கங்கையையும் தாங்கியுள்ள சிவபிரானுகிய அரிய பரம்பொருளை-வெள்ளை நிறத்தினையுடைய பெரிய கயிலைமலைமேல் தவத்தில் சிறந்த பெரிய முனிவர்கள் தன்னைச் சூழ்ந்திருக்கப் பவள மலையைப் போலப் பொலிவுடன் விளங்கும் மழுப்படை தாங்கிய கையுடையவனைக் — கண்டார்கள்.

கு: குவளை விழி என்றது உவமைத்தொகை. குவளை மலர், கண்ணுக்கு உவமை. குவளைக்கண்ணி கூறன் காண்க (திருவாசகம்) என்பது நினைக. விழியையும் கொங்கையினையும் நுசுப்பினையும் மென்சொல்லினையும் உடைய அவள் என்க. அவள் என்றது உலகறி சுட்டு; அவளையிடத்தும் என்ற குறிப்பால் அவள் என்றது உமையம்மையையே என்பது தெளியலாம். இடப்பாகத்து உமை யம்மையையும் முடியிடத்தில் கங்கையையும் தரித்த அரும்பொருள் என்றது சிவபரம் பொருளை. அரும்பொருள் என்றது மெய்ஞ்ஞானத் தாலன்றியறிதற்கு அரிய பரம் பொருள் என்றவாறு. அரும் பொருளை-பரசு பரணிதனைக் — கண்டார் என்க. ஒருபொருட் பல பெயர் இரண்டனுரு பேற்று அரும்பொருளை - பரசுபாணிதனைக் கண்டார்' என முடிந்தது. பரசு பாணியர் பாடல் வீணையர் (திருஞானசம்பந்தர் தேவாரம் 112–1) என்றது காண்க. குயிலின் மென் சொல்லவளை இடத்தும் முடியிலாறுந்தரித்த அரும்பொருள் என்றதனுல் இறைவன் அருட்சத்தியொடுகூடி இன்புற்று உல குயிர்கட்கு இன்பத்தையூட்டுகிருன் என்பதையுணர்த்தியவாறு. பரசுபாணி என்றதனுல் இறைவன் போர்க்குரிய மழுப்படை தாங்கி உலகுயிர்க்கு வீரவுணர்ச்சியை யூட்டுகின்ருன் என்பதை யுணர்த்தியவாறு. தவளநிறத்துத் தடங்கிரி என்றது, வெள்ளிய கயிலாய மலையை. சிவபிரான் பவழம்போன்ற மேனியுடையவன் ஆதலின் பவளவரை அவனுக்கு உவமையாயிற்று. அளக்கலாகா அளவும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் நிறமும் பொதுத் தன்மை. செறுநரைத்தேய்ப்பதற்கு உரிய பரசினைப் பாணியில் வைத்திருக்கும் சிவனை வணங்கினுல் நம் செறுநரையும் அழிப்பார் என்ற நம்பிக்கையோடு கண்டார் என்ற குறிப்பும் இதனுல் பெறப்படும். பரசு-மழு. பாணி—கை. (ரு)

### வந்தவர்கள் சிவபிரானைப் போற்றுதல்

110. எந்தாய் போற்றி யேறேறு
மிறைவா போற்றி யேழுலகுந்
தந்தாய் போற்றி யணிகொன்றைத்
தாராய் போற்றி சகமுய்ய
வந்தாய் போற்றி வஞ்சகர்முன்
வாராய் போற்றி மலரோனுஞ்
செந்தா மரைக்கட் டிருமாலு
மானாய் போற்றி சிவபோற்றி

**எந்தாய் போற்றி! ஏறு ஏறும் இறைவா போற்றி! ஏழ்உலகும் தந்தாய் போற்றி! அணிகொன்றைத் தாராய் போற்றி! சகம்உய்ய வந்தாய் போற்றி! வஞ்சகர்முன் வாராய் போற்றி! மலரோனும் செந்தாமரைக்கண் திருமாலும் ஆனாய் போற்றி! சிவ போற்றி.**

**பொ:** எம் தந்தையே, வணக்கம். எருது ஏறுகின்ற இறைவனே, வணக்கம். ஏழு உலகத்தையும் தோற்றுவித்தவனே, வணக்கம். அழகிய கொன்றைமாலை அணிந்தவனே வணக்கம். உலகம் உய்திபெற வடிவுதாங்கி வந்தவனே வணக்கம். வஞ்ச நெஞ்சத்தவர்க்கு முன்பு வந்து தோன்றாதவனே வணக்கம். வெண்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் சிவந்த தாமரை மலர்போன்ற கண்ணையுடைய திருமாலும் ஆக விளங்குபவனே வணக்கம். சிவனே வணக்கம்.

**கு:-** போற்றி, வணக்கம். காப்பாயாக! என்ற பொருளும் கூறலாம். அம்மையப்பரே உலகிற்கு அம்மையப்பர் என்றறிக என்ற நியதிப்படி சிவபிரான் உலகுயிர்க்கெல்லாம் தந்தை யாகின்றான் ஆதலின் 'எந்தாய்' என விளித்தனர். எந்தை என்ற முறைப்பெயர் விளியேற்று 'எந்தாய்' என ஆயிற்று. இனி எம் தாய் எனப்பிரித்து எமக்குத் தாயாக இருப்பவனே என்ற பொருளும் கூறலாம். ஏறு-எருது. இறைவன் என்பது எல்லாப் பொருள்களிலும் தங்கியிருப்பவன் என்ற காரணம் பற்றி வந்த

பெயர். ஏழுலகு என்பது முன்னம் விளக்கப்பட்டது. ஏழு தீவினை யுடைய பூவுலகம் எனலும் ஆம். சிவபிரானுக்கு கொன்றைமாலை அடையாள மாலையாதலின் அணிகொன்றைத்தாராய் என அவனை விளித்தார். 'நறுங்கொன்றைப் போதினுள்ளான்' என நாவுக்கரசர் கொன்றைப்பூவில் சிவன் இருப்பதாகக் கூறியுள்ளமை நினையலாம். சகம்–உலகம். அழியும் இயல்பினது என்னும் பொருளது. அருவாயுள்ள இறைவன் உலகவர் கண்டு வணங்கியுய்யும் பொருட்டுத் திருமேனி தாங்கி வந்தவன் என்பார், உலகுய்ய வந்தாய் போற்றி என்றார். பொக்கமிக்கவர் பூவும் நீருங்கண்டு அவர்முன் வாராமல் நக்கு நிற்பவன் ஆகலின், வஞ்சகர்முன் வாராய் என்றார். சிவபிரானே பிரமனுகவும் திருமாலாகவும் இருந்து படைத்தலும் காத்தலும் செய்கின்றான் என்பது ஞானநூல் முடிபாகலின் மலரோனும் செந்தாமரைக் கட்டிருமாலும் ஆனாய் போற்றி என்றார். அவ்விறைவனின் இயல்பாய வடிவம் சிவன் வடிவமே என்பது புலப்பட இறுதியின் சிவபோற்றி என்றார். (௬)

**எல்லோரும் இங்கு வந்து போற்றக் காரணம் என் எனச் சிவபிரான் வினவுதல்**

**111.** என்று பலவும் போற்றித்தன்
 னிணைத்தா மரைத்தா டாழ்ந்திறைஞ்சி
நின்று பரவு மவர்தம்மை
 நீலகண்டன் முக நோக்கி
இன்று தேவ ராதிகளு
 மிருடி களுமங் கெல்லீரு
மொன்றி வந்த காரணமென்
 னுரைமி னென்ன வவருரைப்பார்.

என்று பலவும் போற்றித் தன் இணைத் தாமரைத்தாள்
 [ தாழ்ந்து இறைஞ்சி
நின்று பரவும் அவர்தம்மை நீலகண்டன் முகம் நோக்கி,
'இன்று, தேவர் ஆதிகளும் இருடிகளும் அங்கு எல்வீரும்
ஒன்றி வந்த காரணம் என்? உரைமின்' என்ன அவர் உரைப்பார்.

பொ : என்று பலவும் சொல்லிப் போற்றியபின்பு, இறைவன் தன் இருதாமரை மலர் போன்ற பாதங்களில் தலைதாழ்த்து வணங்கி நின்று தோத்திரம் செய்யும் அவர்கள்தம்மை முகநோக்கி நீலகண்டனாகிய சிவபிரான், 'இப்போது தேவர் முதலியவர்களும் முனிவர்களும் அங்குள்ள மற்றை எல்லீரும் ஒருங்கு சேர்ந்து வந்த காரணம் என்ன? சொல்லுங்கள்' என்று கேட்க அவர்கள் சொல்லுகின்றார்கள்.

கு : அவர் தம்மை முகநோக்கி என்புழி, முதலை ஐயுறிற் சினையைக் கண்ணுறும், அது முதற்காயின் சினைக்கு ஐயாகும் என்ற நன்னூற் சூத்திர விதிப்படி அவர் தம்மை முகத்தின்கண் பார்த்து என்று இரண்டனுருபு விரித்தல் வேண்டும். இருடிகள் என்பது வடமொழித்திரிபு; முனிவர்கள் என்பது பொருள். மூவுலகத்தோரில் தேவர்கள் என்றமையால் விண்ணுலகத்தோரும், இருடிகள் என்பதால் மண்ணுலகத்தோரும் அங்கெல்லீரும் என்றதால் பாதலத்தோரும் குறிக்கப்பட்டனர் என்னலாம். அவர் உரைத்தது வருஞ் செய்யுளிற் காணலாம். (ரு)

### போற்றி செய்தோர் சொல்லியவை

112. வன்றிண் புயத்து மாலியவான்
முதலா யுள்ள வாளரக்கர்
சென்றிந் திரனைச் செருவழித்துத்
தேவ ருலகங் கைக்கொண்டார்
வென்றி வீரர் தங்குலத்தை
வேரோ டறுது விடுதியெனில்
இன்று நாளை யுலகங்க
ளெல்லா மழிப்ப ரெனவுரைத்தார்.

வன்திண் புயத்து மாலியவான் முதலாய் உள்ள வாள் அரக்கர் சென்று இந்திரனைச் செரு அழித்துத் தேவர் உலகம் [கைக்கொண்டார்;

**வென்றி வீரர்தம் குலத்தை வேரோடு அருது விடுதிஎனில்,**
**இன்று நாளை உலகங்கள் எல்லாம் அழிப்பர்; என உரைத்தார்.**

பொ: வலிய திண்ணிய தோள்களையுடைய மாலியவான் முதலாக உள்ள கொடிய அரக்கர்கள் சென்று இந்திரனைப் போரில் தோல்வியுறச் செய்து தேவர் உலகத்தைக் கைப்பற்றிக் கொண்டனர்; அந்த வெற்றியையுடைய வீரர்தம் குலத்தை (இறைவனே நீ வேரோடு தொலைக்க வேண்டும்) வேரோடு அறுக்காமல் நீ விடுவாயானால் இன்றோ அல்லது நாளையோ அவர்கள் உலகங்கள் எல்லாவற்றையும் அழித்து விடுவார்கள் என்று சொன்னார்கள்.

கு: வாள் அரக்கர்—கொடிய அரக்கர். இனி வாட்படையேந்திய அரக்கர் எனப் பொருள் கூறலும் ஆம். அரக்கர் கைக்கொண்டார் என இயையும். வென்றி வீரர் என்றது சுட்டளவாய் நின்றது. அவ்வரக்கர் என்பதே பொருள். வேரோடு அறுத்தல் என்றது அடியோடு தொலைத்தலை. செரு—போர். இந்திரனுலகத்தைக் கைக்கொண்டவர்க்கு மற்றை யுலகங்களை யழித்தல் எளிதினும் கடிதினும் இயலும் என்றவாறு. (சு)

### சிவபிரான் சொல்லிய வழி

113. மல்லார் புயத்துச் சுகேசன்றன்
வழியி லுள்ள வாளரக்கர்
எல்லாப் பிழையுஞ் செய்தாலு
மென்னை யடைந்தோ ராதலினுல்
கொல்லே னவரை யென்கையாற்
கொல்லு முபாயங்களு மெல்லாம்
வல்லோன் மாய னென்றவர்க்கு
மங்கைபாகன் விடை கொடுத்தான்.

**மல் ஆர் புயத்துச் சுகேசன் தன் வழியில் உள்ள வாள் அரக்கர்**
**எல்லாப் பிழையும் செய்தாலும் என்னை அடைந்தோர் ஆதலினுல்,**
**கொல்லேன் அவரை என்கையால், கொல்லும் உபாயங்களும் எல்லாம்**
**வல்லோன் மாயன், என்று அவர்க்கு மங்கைபாகன்**
**[விடைகொடுத்தான்.**

**பொ :** மற்போர்த் தொழில் நிறைந்த தோள்களையுடைய சுகேசன் மரபில் தோன்றிய வாளோடு கூடிய அரக்கர்கள் எல்லாத் தவறுகளையும் செய்தாலும், என்னை அடைக்கலமாக அடைந்தவர்கள் ஆதலினால். அவர்களை என் கையால் கொல்ல மாட்டேன்; அவர்களைக் கொல்லுதற்குரிய உபாயங்களும் மற்றத் திறங்கள் எல்லாமும் வல்லவன் திருமால்; (அவனைச் சாருங்கள்) என்று அவர்கட்கு மங்கைபங்கனாகிய சிவபிரான் விடை கொடுத்து அனுப்பினான்.

**கு:** மல் என்றது மற்போர்ப் பயிற்சியை. பிழைகள் என்றுள்ளனவெல்லாம் செய்தாலும் அப்பிழையின் பொருட்டு அவர்களை என் கையால் கொல்லமாட்டேன் என்று சிவபிரான் கூறியதால் அவர் செய்யும் பிழைகள் அவரை அழித்தற்குரிய பெரும்பிழையாக இருக்கும் என்பதும் போதரும். தான் கொல்லாது விடினும் திருமால் அவரைக் கொல்லும் உபாயங்களில் வல்லவன் அவனைக் கொண்டு நும்கருத்தை முடித்துக் கொள்ளுங்கள் என்று அவர்களைத் திருமாலிடம் செல்லுமாறு விடைகொடுத்தனுப்பி விட்டான் சிவன் என்றவாறு. சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதலைக் கருதிச் சிவபிரான் என்னை யடைந்தோராதலினால் என் கையால் அவரைக் கொல்லேன் என்று மறுத்துக் கூறினான். (எ)

**தேவர் முதலியோர் திருப்பாற்கடலைபடைதல்**

114. தூயவன் தன்பொற் றுணையடி பணியாத்
தொகுபுர மெரித்தவன் றரித்த
தீயவன் விடுப்பத் தேவர்தா னவர்கள்
சித்தர்வித்தியாதர ரியக்கர்
மேயகந் தருவர் விளங்குமா முனிவர்
மேதினி யுள்ளவர் நாகர்
ஆயவர் முதலோ ரச்சுதன் றுயிலு
மணிதிருப் பாற்கட லடைந்தார்.

தூயவன் தன் பொன்துணை அடி பணியாத் தொகுபுர எரித்தவன்- [தரித்த
தீயவன் விடுப்ப, தேவர் தானவர்கள் சித்தர் வித்தியாதரர், இயக்கர்
மேய கந்தருவர், விளங்கும் மாமுனிவர் மேதினி உள்ளவர், நாகர்
ஆயவர் முதலோர் அச்சுதன் துயிலும் அணி திருப்பாற்கடல் [அடைந்தார்

பொ : தூய்மை மிக்கவனாகிய சிவபிரானது அழகிய இரண்டு பாதங்களையும் பணிந்து மூன்றாகத் தொகுத்த திரிபுரங்களை எரித்தவனும் கையில் தாங்கிய தீயையுடையவனுமாகிய அச் சிவபிரான் விடைகொடுத்தனுப்ப, தேவர்களும், தானவர்களும் சித்தர்களும் வித்யாதரர்களும் இயக்கர்களும், விருப்பம் பொருந்திய கந்தருவர்களும், மாசின்றி விளங்கும் மேனியினை யுடைய முனிவர்களும் பூவுலகத்துள்ளவர்களும் நாகர்களும் ஆகியோரில் முதன்மை பெற்றவர்களாயுள்ளவர்கள் திருமால் அறிதுயில் கொள்ளும் அழகிய திருப்பாற்கடலை அடைந்தார்கள்.

கு : தொகுபுரம் எரித்தவன், தரித்த தியவன் என்பன ஒரு பொருட் பன்மொழி. தரித்த தீயவன் என்பதைத் தீயைக் கையில் தரித்தவன் என மாற்றிப் பொருள் கொள்க. 'அங்கையினி லனலேந்தி இரவாடும் பெருமானை' எனத் திருநாவுக்கரசர் புகழ் வதும் காண்க. புரமெரித்தவன் - தரித்த தியவன்–விடுப்ப, தேவர் தானவர்கள், சித்தர், வித்தியாதரர், இயக்கர் கந்தருவர், முனிவர், மேதினியுள்ளவர், நாகர் ஆயவருள் முதன்மையோர் தூயவன்தன் பொற்றுணையடி பணியா, அச்சுதன் துயிலும் அணி திருப்பாற்கடல் அடைந்தார் என இயையும். ஆயவர் முதலோர், என்புழி ஆயவருள் முதன்மைபூண்டோர் பாற்கடல் அடைந்தனர் எனக் கொள்க. எல்லோரும் செல்லுதல் இயலாமையின் அவருள் முதன்மை பூண்டோர் (ஒவ்வொரு வகையிலும்) மட்டுமே சென்றனர் என்க. தேவர் முதலிய ஒன்பது வகையினரை எண்ணிய பின் ஆயவர் முதலோர் எனின், ஆயவர் முதலியோர் எனப்பொருள் கொள்ளுதல் பொருந்துமாறில்லை. அச்சுதன்- திருமால். நிலைபேறுடையவன் என்னும் காரணம் பற்றி வந்த பெயர். (அ)

## திருப்பாற்கடலின் ஆரவாரம்

115. தீங்குடை யரக்கர் செல்வமுஞ் செருக்குந்
திறலுட னாயுவுஞ்சிதைந்து
நீங்கின வெங்கு நிலையிலா வறமும்
நிலையினைப் பெற்றது மறைகள்
ஓங்கின வுலகம் பிழைத்தன வென்னு
முவகையா னதுதழைத் தோங்க
ஆங்கவர் தம்மைக் கண்டெழுந் தாடி
யார்ப்பது போன்றதவ் வாழி.

தீங்கு உடை அரக்கர் செல்வமும் செருக்கும்
திறலுடன் ஆயுவும் சிதைந்து
நீங்கின, எங்கும் நிலையிலா அறமும்
நிலையினைப் பெற்றது, மறைகள்
ஓங்கின, உலகம் பிழைத்தன, என்னும்
உவகையானது தழைத்து ஓங்க,
ஆங்கு அவர்தம்மைக் கண்டு எழுந்து ஆடி
ஆர்ப்பது போன்றதுஅவ் ஆழி

பொ: அந்தத் திருப்பாற்கடல், அங்கு வந்துற்ற தேவர் முதலானவரைக் கண்டு இனித் தீங்கினையுடைய அரக்கர்தம் செல்வமும் செருக்கும் திறமையும் ஆயுளும் சிதைந்து நீங்கின. எங்கும் நிலைபேறு இல்லாத தருமமும் நிலையினைப் பெற்றது. வேதங்கள் ஓங்கின. உலகங்கள் உயர்ந்தன; என்னும் மகிழ்ச்சியானது பெருகிவளர எழுந்து ஆடி ஆரவாரிப்பது போன்றது.

கு:– திருப்பாற்கடலின் அலைகள் புரண்டு ஆரவாரிக்கும் காட்சி, அங்குவந்துள்ள தேவர் முதலியவரைக் கண்டு திருப்பாற் கடல், இனி நிகழ இருக்கும் மகிழ்ச்சியான நிகழ்ச்சிகளை நினைந்து எழுந்து ஆடி ஆரவாரிப்பது போன்றது எனத் தற்குறிப்பேற்ற மாகக் கூறியவாறு. அல்லோரையழித்து நல்லோரைக் காக்கவல்ல

அருளாளனாகிய திருமாலிடத்துத் தேவர்கள் முறையிட வந்துள்ளமையால் இனி அத்திருமாலால் அரக்கரின் செல்வமும் செருக்கும் திறனும் ஆயுளும் சிதைந்து நீங்குதலும் அறன் நிலைபெறுதலும் வேதம் ஓங்குதலும் உலகம் உய்தலும் உறுதி என்ற மகிழ்ச்சியால் திருப்பாற்கடல் ஆடி ஆரவாரம் செய்வதுபோல் தோன்றிற்று என்றவாறு. நீங்கின, நிலையினைப் பெற்றது, ஓங்கின, பிழைத்தன என்பன தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்டன; காலவழுவமைதி. (கூ)

### அலைகளின் அசைவு

116. முந்தைமா லியவான் சுமாலிமா லியெனும்
பேரினர் மூவரு மவர்கள்
தந்தகா ளையருந் தடமணித் தேருந்
தானையுந் தரைப்படு முபாயம்
சிந்தையா லெண்ணித் தேவர்கோன் முதலோர்
திருமகள் காதலன் றன்பால்
வந்தன ரென்று மகிழ்ந்தெதிர் கோடல்
போன்றன வரும்பெருந் திரைகள்.

முந்தை மாலியவான், சுமாலி மாலி எனும்
பேரினர் மூவரும் அவர்கள்
தந்த காளையரும், தடமணித் தேரும்,
தானையும் தரைப்படும் உபாயம்
சிந்தையால் எண்ணித் தேவர்கோன் முதலோர்,
திருமகள் காதலன் தன்பால்
வந்தனர்; என்று மகிழ்ந்து எதிர்கோடல்
போன்றன, வரும்பெரும் திரைகள்.

பொ: கரையை நோக்கி வருகின்ற திருப்பாற்கடலின் பெரிய அலைகளின் அசைவு, முற்படத்தோன்றிய மாலியவான், சுமாலி, மாலி என்னும் பேரையுடைய இவர் மூவரும் அம்மூவரும் பெற்ற

காளைப்பருவமுடைய மக்களும் பெரிய மணிகள் பதித்த தேரும் சேனையும் அழிந்து தரையில் படுதற்குரிய உபாயத்தைச் சிந்தையால் ஆராய்ந்து, இந்திரன் முதலியவர்கள் திருமகள் மணாளனாகிய திருமாலிடத்து வந்திருக்கின்றார்கள் என்று மகிழ்ச்சி கொண்டு அவர்களை எதிர்கொண்டழைப்பது போன்றன.

கு : மாலியவான் முதலிய மூவர் தந்த காளையர் என்றது, பெருவச்சிரமுட்டி, பெரும்பாக்கள் முதலியோரை. தரைப்படுதல் என்பது இங்கு அழிதலையுணர்த்தியது எண்ணி - ஆராய்ந்து. எண்ணித்துணிக கருமம் (திருக்குறள்-467) என்பது நினைக. தேவர்கோன் முதலியோர் மாலியவான் முதலியோரை அழிப்பதற்கு உபாயம் திருமாலை அடைக்கலம் புகுவதே என்று ஆராய்ந்து முடிவுசெய்து வந்துள்ளார்கள் ஆதலின், அவர்தம் கருத்தறிந்து பாற்கடல் மகிழ்ந்து அவர்களை வரவேற்க அலைகள் வரிசை வரிசையாக வருவது போன்றுள்ளது. இது தற்குறிப்பேற்றம். (கல)

## தென்றலின் உபசாரம்

117. நீடிய வரக்கர் பெரும்படைக் குடைந்து
நிலையழிந் தொருவழி நில்லா
தோடிய கால ருடைந்தமே னியர்க
ளுறுவிடாய் தணிப்பலென் றவர்கள்
வாடிய முகத்து மார்பினும் புயத்தும்
வளரிளம் புன்னையின் வாசம்
கூடிய சீதம் பூசுவண் டிவலை
கொடுப்பதொத் ததுகுளிர் தென்றல்.

நீடிய அரக்கர் பெரும்படைக்கு உடைந்து
நிலை அழிந்து ஒருவழி நில்லாது
ஓடிய காலர் உடைந்த மேனியர்கள்
உறுவிடாய் தணிப்பல் என்று, அவர்கள்
வாடிய முகத்து மார்பினும் புயத்தும்
வளர்இளம் புன்னையின் வாசம்
கூடிய சீதம் பூசு வண் திவலை
கொடுப்பது ஒத்தது குளிர் தென்றல்.

**பொ :** குளிர்ச்சி மிக்க தென்றல், (அங்குவந்துள்ள தேவர் முதலியோர்மேல் வீசுவது) ஆயுள் நீடித்துள்ள அரக்கருடைய பெரிய சேனைக்குத் தோற்றுத் தம் நிலைமை கெட்டு ஓரிடத்தில் நிலைத்தல் இன்றி ஓடிவந்த கால்களையுடையவர்கள் – வலிமை உடைந்த மேனியையுடையவர்கள், ஆதலின், அவர்தம் களைப் பினைத் தணிப்பேன் யான் என்று அவர்தம் வாடியுள்ள முகத்திலும் மார்பிலும் தோள்களிலும் (கடற்கரையில்) வளர்ந்துள்ள இளமை யான புன்னைமரங்களில் பூத்த பூக்களின் வாசனையோடு சேர்ந்த சீதத்தை மேற்கொண்டுள்ள நீர்த்துளிகளைக் கொடுப்பது போன்றது.

**கு :** தென்றற் காற்றின் குளிர்ச்சி மிகுதியை நோக்குங்கால் நீர்த்துளிகளையே சொரிவது போன்றிருந்தது என்க. அரக்கர்தம் ஆற்றலுக்கு ஆற்ருது தோற்று ஓடிய கால்களையும் வலிமை குன்றிய மேனியையுமுடையவர்கள் ஆகிய தேவர் முதலியோர் இங்கு வந்துள்ளனர். அவர்தம் களைப்பு நீங்குமாறு அவர் வாடிய முகத்திலும் மார்பிலும் தோளிலும் வாசனை கலந்த நீர்த்திவலை களைக் கொடுப்பது போன்று தென்றல் காற்றுக் கடற்கரையில் வளர்ந்த புன்னை மலர்களின் நறுமணத்தோடு கலந்து வந்து தண்ணென வீசியது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. விடாய்-களைப்பு களைத்தவர் களைப்பு நீங்கக் குளிர்ந்த நீர் தெளிப்பது முறை. அம்முறையைத் திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட பெருமானைக் காண வந்த தேவர் முதலியோரின் களைப்பு நீக்கத் தென்றல் மேற்கொண்டது என்க. தென்றல்வீசுவது என ஒரு சொல்வருவிக்க. இயல்பாக வீசுகின்ற தண்ணிய தென்றல் காற்றினை அவர்களைப்பு நீக்க வேண்டி வீசியதாகக் கூறியது தற்குறிப் பேற்றமாகும். (கக)

## தேவர் முதலியோர் திருமாலைக் காணுதல்

118. ஆய பாற் கடலை யடைந்தவாங் கவர்க
ளதுவிதென் றையுறு மவர்க்கும்
காயம துலர்த்தித் தவம்புரி வார்க்குங்
கமலவா சனன்முத லாய

தூயயோ கியர்க்குஞ் சொல்லுமே துவுக்குஞ்
சுருதிக்குந் தோன்றநில்லாது
சேயனு யடைந்தோர்க் கணியனு மாதி
தேவனைத் தெரிவுறக் கண்டார்.

ஆய பாற்கடலை அடைந்த ஆங்கு அவர்கள்
அதுஇது என்று ஐயுறும் அவர்க்கும்
காயமது உலர்த்தித் தவம்புரிவார்க்கும்
கமல ஆசனன்முதலாய
தூய யோகியர்க்கும் சொல்லும் ஏதுவுக்கும்
சுருதிக்கும் தோன்றநில்லாது
சேயனாய், அடைந்தோர்க்கு அணியனும் ஆதி
தேவனைத் தெரிவுறக் கண்டார்,

பொ: மேற்கூறியாங்குத் தோன்றுவதாய திருப்பாற்கடலை அடைந்த அத்தேவர் முதலியோர், பரம்பொருள் அது எனவும் இது எனவும் ஐயுறுகின்றவர்க்கும், உடம்பை உணவில்லாமல் உலர்த்தித் தவஞ் செய்பவர்க்கும் தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட பிரமன் முதலிய தூய்மையான யோகியர்க்கும் அளவை நூல்கள் சொல்லும் ஏதுவுக்கும் சுருதிகட்கும் தோன்றுபவனாய் அணுகி நில்லாமல் தொலைவில் தோன்றாமலிருப்பவனாய், தன்னை அடைக்கலம் புக்கோர்க்கு அணித்தே காணப்படுபவனும் ஆதி நாராயணனைக் கண்களால் தெளிவாகக் கண்டார்கள்.

கு: பாற்கடலின் இயல்புகளாக முன்னர்க் கூறிய கருத்துக் களை அனுவதிக்க வேண்டி ஆய பாற்கடலை என்றார். திருமால் எங்கும் நிறைந்தவனாய் இருப்பினும் ஐயுற்றார்க்கும் தவம்புரி வார்க்கும் யோகியர்க்கும் தருக்கவாதிகட்கும் சுருதிகட்கும் காண்டற்கு அரியவன் என்பதும், எல்லாப் பற்றையும் விடுத்துத் தன்னையே சரணடைந்தோர்க்குக் காண்டற்கு எளியன் என்பதும் புலப்படுத்தியவாறு. தேவர் முதலியோர் தன்னைச் சரணடைந் தமையால் அவர்கள் காட்சிக்கு அணியன் ஆனான் என்பது உய்த் துணர, ஆதி தேவனைத் தெரிவுறக் கண்டார் என்றார். சரணாகதி

யினுல் எளிதாகப் பெறலாயிருக்கவும் அதுவோ இதுவோ என ஐயுற்றும் அளவை நூல் சொல்லும் ஏதுவினைக் காட்டியும் சுருதிகளின் கருத்துக்களை ஓதியுணர்ந்தும், தவம் செய்தும் யோகு செய்தும் வருந்துகின்றவர்கட்குத் திருந்த ஒளித்துக் கொள்ளுதல் என்னையெனின்? அவர்கள் யாம் காண்பேம் என்ற அகங்கார முடையவர்களாயிருத்தலான் என்க. தான் எனும் தருக்கற்று அவன் திருவடிகளே சரண் என அடைகின்றவர்கள் யான் என்னும் அகப்பற்று நீங்கினவராகலின் அவர்க்கு அணியனுக் காட்சியளிக்கின்ருன் இறைவன் என்க.

திசைமுகன் சென்று தேடினர்க்கொளித்தும்... மறைத்திறம் நோக்கி வருந்தினர்க்கொளித்தும்... அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும் ஒன்றுண்டில்லை யென்றறிவொழித்தும் பண்டேபயிறெும் இன்றே பயிறெும் ஒளிக்கும் சோரன் (திருவாசகம் திருவண்டப்பகுதி) என இறைவன் இயல்புகளை-மாணிக்கவாசகர் கூறியவற்றை-இச்செய்யுள் நினைப்பிக்கின்றமை காணலாம். (கஉ)

### பள்ளிகொண்டுள்ள திருமாலின் இயல்பு

119. ஒருங்கிய மனத்தின் யோகிய ருண்மை
யுணர்ந்தவ ருறுபெருந் தவத்தால்
நெருங்கி யெம் மருங்கு மிருந்து சேவிப்ப
நாரதர் நின்று கூத் தாடப்
பெருங்கர மெடுத்து மாகதரேத்தப்
பிறழ்திருப் பாற்கடன் மேலோர்
கருங்கடல் பரந்து கிடந்தது போலக்
கிடந்துதன் கண்டுயில் வானை.

**ஓங்கிய மனத்தின் யோகியர், உண்மை**
**உணர்ந்தவர் உறுபெருந் தவத்தால்**
**நெருங்கி எம் மருங்கும் இருந்து சேவிப்ப,**
**நாரதர் நின்று கூத்து ஆட,**

பெருங்கரம் எடுத்து மாகதர் ஏத்த
பிறழ்திருப் பாற்கடல்மேல் ஓர்
கருங்கடல் பரந்து கிடந்ததுபோலக்
கிடந்துதன் கண்டுயில்வானை.

**பொ:** ஒருமைப்பட்ட மனத்தினையுடைய யோகியரும் பொருந்திய பெருந்தவத்தால் உண்மை உணர்ந்த ஞானியர்களும் நெருங்கி எல்லாப் பக்கத்திலும் இருந்து சேவிக்கவும் நாரதர் நின்றுகொண்டு கூத்தாடாநிற்கவும், மாகதர் தம் பெரிய கைகளைத் தூக்கி ஏத்தெடுக்கவும், அலைகள் மாறி மாறிப் புரண்டு வருகின்ற திருப்பாற்கடல்மேல் ஒரு கருங்கடல் பரவிக்கிடந்ததைப் போலக் கிடந்து உறங்குகின்றவனை.

**கு:** தெளிவுறக் கண்டார் என மேலைச்செய்யுளில் வரும் வினையொடு முடிக்க. பதினுருவது செய்யுள் வரையுள்ள உதரத் தினனை முதலிய இரண்டனுருபேற்ற பெயர்களையெல்லாம் அங்ஙனமே தெரிவுறக்கண்டார் என்ற வினையையே கொண்டு முடிக்க. யோகம் இன்னது என்பது விளங்க ஒருங்கிய மனத்தின் யோகியர் என்ருர். தவத்தின் பயன் மெய்யுணர்தலே என்பது போதர உறுபெருந் தவத்தால் உண்மையுணர்ந்தவர் என்ருர். மாரி யினும் பனியினும் நீர்நிலை நிற்றலானும் கோடையில் வெயில்நிலை நிற்றலாலும் தம்முடம்புக்கு வரும் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு செய்கின்ற தவத்தால் ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்குகின்றவர்களே மெய்ப்பொருளுணர்ந்த ஞானியர் ஆவர். யோகியரும் ஞானியருமே ஏனையோரினும் கடவுளோடு நெருங்கிய தொடர்புடையவர்களாதலின் அவ்விரு திறத்தாரும் எம்மருங்கும் நெருங்கியிருந்து சேவிப்பாராயினர். முன்னைச் செய்யுளில் கூறப் பட்ட கமலவாசனன் முதலிய யோகியரும் காயமதுலர்த்தித் தவம் புரிவாரும் இவர்போல ஒருங்கிய மனத்தினரும் உண்மை யுணர்ந்தவரும் அல்லராகலின் அவர்க்கு இறைவன் தோன்ற நில்லாது சேயனுவான் என்று கூறினர். மாகதர் என்போர் இருந் தேத்துவோர் பிறழ்தல் என்பது புரளுதல். திருமால் கரிய மேனிய ஞதலின் அவன் பாற்கடலில் படுத்துள்ள தன்மை பாற்கடலில் கருங்கடல் பரவிப் படுத்திருப்பதுபோல இருந்தது என இல்பொரு

ளுவமை கூறியவாறு. துயில்வானை என்னுது கண்டுயில்வானை என்றது கண்கள் மூடியபடியே இருக்க எல்லாவற்றையும் அறி கின்ற அவன் அறிதுயிலின் இயல்பு புலப்படுத்த வேண்டி. (கூ)

### திருமாலின் உதரம்

120. தெரியவைய ரிருவர் செங்கையால் வருடச்
சிவந்தசே வடிமல ரானைக்
கருவரை சூழ்ந்து நின்றமின் னொளியைக்
காட்டிய பீதக வாடைத்
திருவரை யானைத் திசைமுக னாதி
தேவரு முனிவரு முற்றும்
ஒருவரு மொழியா துலகங்க ளெல்லா
முள்ளடங் குதரத்தி னானை.

**தெரிவையர் இருவர் செங்கையால் வருடச் சிவந்த சேவடி மலரானை கருவரை சூழ்ந்து நின்றமின் ஒளியைக் காட்டிய பீதக ஆடைத் திருவரையானை திசைமுகன் ஆதி தேவரும் முனிவரும் முற்றும் ஒருவரும் ஒழியாது உலகங்கள் எல்லாம் உள் அடங்கு உதரத்தினானை**

**பொ:** சீதேவி, பூதேவி ஆகிய மகளிர் இருவரும் தம் சிவந்த கைகளால் வருடச் சிவந்த சேவடியாகிய மலரையுடையவனை-கரிய மலையைச் சூழ்ந்து நின்ற மின்னொளியின் இயல்பைக் காட்டுகின்ற பொன்னுடையணிந்த அழகிய இடையையுடையவனை - பிரமன் முதலிய தேவரும் முனிவரும் முழுவதும் ஒருவரும் தவிராமல் உலகங்கள் எல்லாம் உள்ளடங்கியுள்ள வயிற்றினையுடையவனை.

**கு:** தெரிவையர் என்பது இங்குப் பருவத்தைக் குறிக்காமல் மகளிர் என்ற பொதுப்பொருளைக் குறித்து நின்றது. இருவர் என்றது பூதேவி சீதேவி என்பாரை. இருவரும் தம் சிவந்த கையால் திருமாலின் இரண்டு பாதங்களையும் தடவிக் கொடுக் கின்றனர். அவர்கள் சிவந்த கைப்பட்டமையால் முன்னமே சிவந் துள்ள அவன் பாதங்கள் மேலும் சிவந்தன என்பார் வருடச்

சிவந்த சேவடிமலரானை என்றார். சேவடி என்பது இயல்பாகச் சிவந்துள்ள அடி என்னும் பொருளது; சிவந்த சேவடி என்றது செயற்கையால் தெரிவையர் இருவர் செங்கையால் வருடுதலால் சிவந்தது என்று வேறு பிரித்துக் காண்க. வருட என்னும் செயவெனெச்சம் காரணப்பொருளில் வந்தது; மழையெய்யக் குளம் நிறைந்தது என்புழிப்போல. திருமாலின் திருவடி இயல்பாகவே சிவந்துள்ளது என்பதை 'கண்ணுந் திருவடியும் கையும் திருவாயும் செய்ய கரியவனை' (சிலப். ஆய்ச்சியர் குரவை) என்ற இளங்கோ வடிகள் வாக்கால் தெளியலாம். திருமாலின் கரியதிருவரையில் உடுத்துள்ள பொன்னுடையின் தோற்றம் கரிய மலையைச் சூழ்ந்து நின்ற மின்னொளிபோலக் காட்சியளித்தது என்பார், கருவரை சூழ்ந்து நின்ற மின்னொளியைக் காட்டிய பீதகவாடைத் திருவரை யானை என்றார். பீதகம்-பொன் இல்பொருளுவமை. பீதக ஆடை யின் ஒளிமிகுதி காட்ட மின்னொளியை உவமை கூறினார். திருமாலின் இடை கரிய மலை போன்றது; அந்த இடையில் உடுத்துள்ள பொன்னுடை, கரிய மலையினைச் சூழ்ந்து நின்ற மின்னலின் ஒளியைப் போன்றது என்க. இது இரட்டையுவமம் எனப்படும். ''பொன் காண் கட்டளை கடுப்பக் கண்பின், புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பினன்'' (பெரும்பாண் – 220) என்புழிப் போல. உலகத்தைப் படைக்கும் பிரமன் முதலிய எல்லா உயிர் களும் எல்லாப் பொருள்களும் உள்ளடங்குதற்குரிய உதரம் என்பார், முற்றும் எனவும் ஒருவரும் ஒழியாது எனவும் இருமுறை கூறினார். உலகங்கள் எல்லாம் என்றது, பல உலகங்களையும் எஞ்சாமல் தழுவுதற்கு. உதரம்-வயிறு. பேரூழியிறுதியில் எல்லா உலகங்களையும் உயிர்களையும் தன் வயிற்றடக்கிக் கொண்டு குழந்தை வடிவாய் ஆலிலைமேல் பள்ளி கொள்ளும் அவன் இயல்பு நினைந்து இங்ஙனம் கூறினார். (கச)

உந்தியாம் பொற்றடம்

**121.** வண்டென விரிஞ்சன் மாமறை பாட
வடவரை கொட்டையாய்ச் சூழ்ந்த
திண்டடங் கிரிக ளல்லியாய்த் திசைக
ளிதழ்களாய்த் திகழுமிவ் வண்டப்

புண்டரி கத்தைப் புறப்பட விட்ட
வுந்தியாம் பொற்றடத் தானைத்
தெண்டிரைக் கடலி லெழுந்தின கரன்போற்
றிகழொளி யாரமார் பினனை.

வண்டு என விரிஞ்சன் மாமறை பாட
வடவரை கொட்டையாய்ச் சூழ்ந்த
திண்தடங் கிரிகள் அல்லியாய்த் திசைகள்
இதழ்களாய்த் திகழும் இவ் அண்டப்
புண்டரீகத்தைப் புறப்படவிட்ட
உந்தியாம் பொன் தடத்தானை,
தெண்திரைக் கடலில் எழும்தின கரன்போல்
திகழ்ஒளி ஆர மார்பினனை.

பொ: பிரமன், வண்டாகச் சிறந்த வேதமந்திரங்களைப் பாடா நிற்கவும், மேருமலை தாமரைக் கொட்டையாகவும், அம்மேருவினைச் சூழ்ந்து விளங்கும் திண்ணிய பெரிய அட்டகுல மலைகள் எல்லாம் அகவிதழாகவும், திசைகள் எட்டும் புறவிதழ்களாகவும் விளங்கு கின்ற இந்த அண்டமாகிய தாமரை மலரைப் புறத்தே புறப்படு மாறு விட்ட உந்தியாகிய அழகிய தடாகத்தையுடையவனை — தெளி வான அலைகளையுடைய கடலில் எழுகின்ற சூரியனைப் போலத் திகழ்கின்ற ஒளிமிக்க கவுத்துவமணி மாலை அணிந்த மார்பினை யுடையவனை.

கு: திருமாலின் உந்தித் தாமரையிலிருந்து பிரமன் தோன்றி அண்டத்தைத் தோற்றுவித்தான் என்பது புராண மரபு. அம்மர பினை இங்கு விளக்கியவாறு. அந்த அண்டத்தைத் தாமரை மலராக உருவகஞ் செய்கின்றவர், அண்டத்தை உண்டாக்கிய பிரமனை வண்டாகவும் அண்டத்தின் நடுவில் உள்ள மேருமலை யைக் கொட்டையாகவும் மேருமலையைச் சூழ்ந்துள்ள அட்ட குல மலைகளை அகவிதழாகவும் திசையெட்டினையும் புறவிதழ்களாகவும் உந்தியைத் தடாகமாகவும உருவகஞ் செய்துள்ளார். இது இயை புருவகம். தாமரை மொட்டுப் போதாய் நிற்கும் புண்டரீகம் மலரு

மாறு பிரமனுகிய வண்டு பாடி அலர்த்தியதாகக் கொள்க. உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமன் வேதங்களைப்பாடி இவ்வண்டத்தைத் தோற்றுவித்தான் ஆதலின் அவனை அண்டமாகிய புண்டரிகத்தை அலர்த்தும் வண்டாக உருவகஞ் செய்தார். உந்தியாம் பொற்றடத்தானை, ஆரமார்பினனை என்பன ஒருபொருட் பல பெயர்; 'தெரிவுறக் கண்டார்' என்ற பன்னிரண்டாஞ் செய்யுள் வினையோடு முடியும். (கரு)

### வலக்கை கீழ் கொடுத்த மணிமுடி

122. வண்டடங் கிரிபூண் கட்டிய தொப்ப
வலயங்க டழுவுதோ ளானைத்
தண்டர ளத்தி னகையொளி தவழும்
பவளமுந் தாமரை யிரண்டும்
குண்டல மிரண்டுங் குனிசிலை யிரண்டுங்
கூடிய குளிர்மதி வதன
மண்டலத் தானை வலக்கைகீழ்க் கொடுத்து
வளர்ஒளி மணிமுடி யானை.

**வண்தடங் கிரி பூண் கட்டியது ஒப்ப வலயங்கள் தழுவுதோளானை தண்தரளத்தின் நகை ஒளி தவழும் பவளமும் தாமரை இரண்டும், குண்டலம் இரண்டும் குனிசிலை இரண்டும் கூடிய குளிர்மதி வதன மண்டலத்தானை வலக்கைகீழ் கொடுத்து வளர்ஒளி மணிமுடி யானை.**

**பொ:** வளம் பொருந்திய பெரிய மலைக்குப் பூண்கட்டியது போன்று வாகுவலயங்கள் அணிந்த தோள்களையுடையவனை— குளிர்ந்த முத்துக்களைப் போன்ற பற்களின் ஒளிதவழும் வாயாகிய பவளமும் கண்களாகிய தாமரை இரண்டும் (காதிலணிந்த) குண்டலங்கள் இரண்டும் புருவங்களாகிய வளைந்த விற்கள் இரண்டும், பொருந்திய குளிர்ந்த சந்திரனைப் போன்ற முகமண்டலத்தையுடையவனை — வலக்கையைக் கீழே கொடுத்து வளரச் செய்த ஒளிவாய்ந்த மணிமுடி யுடையவனை.

கு : தெரிவுறக்கண்டார் என மேலே முடிக்க. திருமாலின் தோள்கள் மலைபோன்ற தோற்றமுடையன ஆதலின் அத்தோளில் விளங்கும் வலயத்திற்கு இல்பொருள் உவமையாகப் பூண் கட்டிய மலையைக் கூறினர். தோளானை, வதன மண்டலத்தானை, மணி முடியானை என்பன ஒரு பொருட் பல பெயர்கள். வலயம் என்றது ஆடவர்கள் தோளில் அணிதற்குரிய வாகுவலயத்தை. நகை-பல். நகையொளி தவழும் பவளம் என்றமையால் இங்குப் பவளம் என்றது வாயிதழையே என்பது அறியலாம். இதனை மாட்டே றில்லா உருவகம் என்பர். உவமையாகுபெயர் எனலும் ஆம். தாமரை யிரண்டும் குனிசிலை இரண்டும் என்பவற்றிற்கும் இஃ தொக்கும். தாமரை இரண்டும் என்றது, தாமரை மலர் போன்ற கண்களையுணர்த்திற்று. குனிசிலை இரண்டும் என்றது, வளைந்த வில்லினைப் போன்ற புருவங்களையுணர்த்தியது. இவை யாவுங் கூடிய குளிர்மதி வதனமண்டலம் என்றது அற்புத உவமை. அருள் செய்யும் நிலையில் திருமாலின் முகம் தண்மதி போன்று காணப்படும் தன்மையைப் புலப்படுத்தியவாறு. பாற்கடலில் பாம்பணையில் பள்ளிகொண்டருளும் கோலம் இங்குக் குறிக்கப் படுகின்றது. திருமால் வலதுபக்கம் கீழ்ப்பட இடதுபக்கம் மேற்படப் பள்ளிகொள்ளுங்கால் வலக்கையைத் தலைக்குக்கீழ் மடக்கிவைத்துத் துயிலும் தன்மை புலப்பட வலக்கைக் கீழ் கொடுத்து வளர் ஒளி மணிமுடியானை என்றார். திருவரங்கம், தில்லைத் திருச்சித்திரகூடம் முதலிய இடங்களில் இத்தகைய காட்சியைக் காணலாம். வளர்தல்—கண்வளர்தல். (கசு)

### திருமாலின் அறிதுயில்

123. ஆழியுஞ் சங்குஞ் சாபமும் வாளு
மடற்பெருந் தண்டுமிவ் வைந்தும்
சூழவும் வந்து நின்றுமெய் காப்பச்
சுவணனுஞ் சுற்றும்வந் துலாவப்
பாழிமா வனந்தன் யோகத்தி லவன்றன்
பணங்களா யிரங்கொடு கவிப்ப
ஊழியா யிரங்க ளொருகண மாக
யோகநித் திரையுகந் தானை.

ஆழியும் சங்கும் சாபமும்
வாளும் அடல்பெருந்தண்டும் இவ்வைந்தும்
சூழவும் வந்து நின்றுமெய் காப்ப,
சுவணனும் சுற்றும்வந்து உலாவ,
பாழிமா அனந்தன் யோகத்தில் அவன்தன்
பணங்கள் ஆயிரங்கொடு கவிப்ப,
ஊழி ஆயிரங்கள் ஒருகணம்ஆக
யோக நித்திரை உகந்தானை.

பொ: சக்கரமும் சங்கும் வில்லும் வாளும், வலிமை பொருந்திய பெரிய தண்டாயுதமும், ஆகிய இந்த ஐம்படைகளும் சுற்றிச் சுற்றி வந்து நின்று தன் திருமேனியைக் காவல் புரிந்து கொண்டிருக்கவும், கலுழனும் சுற்றிலும் வலம்வந்து உலாவவும், வலிய பெரிய அனந்தாழ்வான் ஒன்றுபட்ட நிலையில் எழுந்து அவனுடைய ஆயிரம் பணமுடிகளைக் கொண்டு கவித்திருக்கவும், ஆயிர ஊழிக்காலங்கள் ஒருகணம்போல விரைந்து கழியுமாறு அறிதுயில் அமர்ந்தவனை.

கு: காப்ப, உலாவ, கவிப்ப யோக நித்திரையுகந்தானைத் தெரிவுறக் கண்டார் என மேல் பன்னிரண்டாஞ் செய்யுள் வினையோடு முடிக்க. திருமால் அறிதுயில் கொள்ளுங்கால் அவன் ஐம்படைகள் அவனைச் சுற்றி வந்தும் நின்றும் அவன் திருமேனியைக் காவல்புரியும் என்பதும், கருடன் அப்பெருமானைச் சுற்றி உலாவிக் கொண்டே இருப்பான் என்பதும், அனந்தாழ்வான் தன் ஆயிரம் முடிப்படங்களை விரித்துக் கொண்டு குடைபோல் கவித்துக் கொண்டு காப்பான் என்பதும் இங்கு உணர்த்தியவாறு. யோகநித்திரை—அறிதுயில். திருமால் அறிதுயில் கொள்ளுங்கால் ஆயிர ஊழிக்காலம் ஒருகணப்பொழுது போலக் கடிதின் கழியும் என்றவாறு. துயிலின் இனிமையில் காலக்கழிவு புலப்படாமை யுணர்த்தியவாறு. அனந்தன் யோகத்தில் பணங்கள் ஆயிரங் கொடுகவிப்ப என்புழி அனந்தன் யோகம் ஆவது திரிதலின்றி ஒன்றுபட்ட நிலையில் திருமாலுக்குப் படுக்கையாக அமைவதேயாம். யோகம்—ஒருமைப்பாடு. உகத்தல்—விரும்புதல். (கஎ)

## திருமாலின் குணங்களை இந்திரன் சொல்லித் துதிக்கத் தொடங்குதல்

124. இன்னதன் மையனு யிந்திரை கொழுநன்
யோக நித் திரைசெயுங் காலை
முன்னைவானவர்க டானவர் முனிவர்
முதலினோர் மூண்டெழு பயத்தால்
என்னதா குங்கொ லிவன்றிரு வுள்ள
மெனநினைந் தியாவரு நிற்ப
அன்னவன் குணந்தா னறிந்தன வெல்லா
மமரர்கோ னறையலுற் றனனால்.

இன்னதன் மையனாய் இந்திரை கொழுநன்
யோகநித்திரை செயும்காலை
முன்னை வானவர்கள் தானவர் முனிவர்
முதலினோர் மூண்டு எழு பயத்தால்
என்னது ஆகுங்கொல் இவன்திருவுள்ளம்
என நினைந்து யாவரும் நிற்க,
அன்னவன் குணந்தான் அறிந்தன எல்லாம்
அமரர்கோன் அறையலுற்றனனால்.

பொ: திருமகள் கேள்வனாகிய நாராயணன் இன்ன தன்மையனாக யோகநித்திரை செய்துகொண்டிருக்கும் பொழுது அவன் முன்னிற்கின்ற தேவர்கள் தானவர்கள் முனிவர்கள் முதலினோர் தம்முள்ளத்தில் மூண்டு எழுந்த அச்சத்தால் இவன் திருவுள்ளம் என்னாகுமோ என்று நினைந்து யாவரும் ஐயத்துடன் நிற்க, இந்திரன் அந்த நாராயணன் குணங்களில் தானறிந்த குணங்களை யெல்லாம் சொல்லித் துதிக்கத் தொடங்கினான்.

கு: இந்திரை-திருமகள். முன்னை என்றது, இடமுன்னாகக் கொள்க. திருமாலின் முன்னிலையில் என்றவாறு. வானவர் முதலிய யாவரும் வந்து நாராயணனைக் கண்டும் அவன் அவர்களைக் காணாது அறிதுயில் செய்துகொண்டே இருப்பதால் இவன் திருவுள்ளம் யாது கொல்லோ என ஐயுறலாயினர். தேவர் முதலியோர் வந்து கண்டனரே யன்றி நாராயணனைப்பற்றி யாதும் கூறித்

துதித்திலர். அவருள் இந்திரன் எழுந்து திருமாலின் குணங்களைத் தானறிந்தவாற்றான் சொல்லத் தொடங்கினான் என்றவாறு. (கஅ)

## இந்திரன் போற்றுதல்

125. உலகினை யெல்லாம் படைத்தளித் தழித்து
முண்டுமிழ்ந் தளந்திடந் தாண்டும்
நிலையுடை வானாய் வாயுவாய்க் கனலாய்
நீரொடு நிலனுமா யெண்ணித்
தொலைவிலா வுயிராய்ச் சுடர்களாய்த்
சுருதியாய்ச் சிவனயனாகி [தோன்றாச்
அலகிலா விளையாட் டாடுவா யகண்ட
மாயினா யாருனை யறிவார்.

உலகினை எல்லாம் படைத்து அளித்து அழித்தும்
உண்டு உமிழ்ந்து அளந்து இடந்து ஆண்டும்
நிலையுடைவான்ஆய், வாயுவாய், கனல்ஆய்
நீரொடு நிலனும்ஆய், எண்ணித்
தொலைவுஇலா உயிராய் சுடர்களாய்த் தோன்றாச்
சுருதிஆய் சிவன் அயன் ஆகி,
அலகு இலா விளையாட்டு ஆடுவாய் அகண்டம்
ஆயினாய், யார்உனை அறிவார்?

**பொ:** உலகத்தையெல்லாம் படைத்தும், அதனைக்காத்தும் அதனை அழித்தும் (ஊழிக்கடையில் பாலனாய் நின்று) அதனை உண்டும், மீள வெளியில் உமிழ்ந்தும் திருவிக்கிரமனாய் ஈரடியால் அளந்தும் ஆதிவராகமாய்ப் பிரளய வெள்ளத்து மூழ்கியிருந்த பூமியைத்தன் கொம்பினால் தோண்டியெடுத்தும் இராமனாய் உலகை ஆட்சி செய்தும், ஏனை நான்கு பூதங்கட்கு இடங்கொடுத்து நிலைத்து நிற்றலையுடைய வானாகியும்,வானில் உலவும் காற்றாகியும் காற்றால் கனன்று எரியும் நெருப்பாகியும் நீராகியும் நிலனாகியும் (பின்பு) எண்ணிமுடிக்க முடியாத உயிர்ப் பன்மையாகியும் சூரியன் சந்திரன் என்கின்ற இருசுடர்களாகியும் ஞானிகட்கும் தோன்றாத சுருதிப் பொருள் ஆகியும் சிவனும் அயனும் ஆகியும் இங்ஙனம்

அளவிடமுடியாத விளையாட்டு ஆடுகின்றவனே! நீயே எல்லாம் ஆக இருப்பவன், உன் இயல்பை யார் அறிவார்? (அறிவாரில்லை என்றபடி).

கு: திருமாலின் பெருநிலை இங்குப் பேசப்படுகின்றது. படைத்தல் முதலிய முத்தொழிலையும் செய்பவன் திருமாலே என்பார், உலகினையெல்லாம் படைத்தளித்தழித்தும் என்றார். 'உலகம் யாவையுந் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டுடையாரவர், தலைவர் அன்னவர்க்கே சரணுங்களே' என்ற பாலகாண்டத்துக் கடவுள் வாழ்த்துச் செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். திருமால் உலகத்தை உண்டு உமிழ்ந்து அளந்து இடந்து செய்த திருவிளையாட்டை, 'அரவாகிச் சுமத்தியால் அணியெயிற்றில் ஏந்துதியால், ஒருவாயின் விழுங்குதியால் ஓரடியால் ஒளித்தியால் திருவானநிலமகளை' (ஆரணிய- விராதன்வதை-58) என்ற செய்யுளாலும் தெளியலாம். திருமால் ஐம்பூதங்களாய் இருசுடராய் நிற்கின்றமை, நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச் சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாய யனாய் (திருவாய்மொழி-6·9-1) என்ற பாசுரத்தால் அறியலாம். தொலைவிலா உயிராய் என்றது திருமால் அந்தர்யாமியாய் எல்லாவுயிர்களிடத்தும் இருத்தல் கொண்டு ஒற்றுமை நயத்தால் கூறியதாகும். சுருதியாய் என்றது சுருதிப்பொருளாய் என்னுங் கருத்தினது. வேதப்பொருளாய் விளங்குபவன் திருமாலே என்றவாறு உலகமே வடிவாக அமைந்தவன் என்பார், அகண்டம் ஆயினாய் என்றார். திருமாலின் மாயவிளையாட்டுக்கள் உயிர்களால் முற்றுமுணர்தற்கு முடியாமையின், 'யாருனையறிவார்' எனவினவினார். (கரு)

126. பிறிவிலா வுயிரு முடலும்வா சகத்துப்
பேர்கலாப் பொருளுமாங் கெழுவும்
வெறியுநன் மலரு மெள்ளு மெண்ணெயும்
விரிந்தவப் பொருள்களின் மேவிக் [போல்
கறுவிமேன் முயலுங் காரிய மாகிக்
கண்ணுமாய்க் கருத்தது வாகி
அறிவுமா யறியப் படுவதா யறிவா
னுயினு யாருனை யறிவார்.

பிறிவு இலா உயிரும் உடலும் வாசகத்துப்
பேர்கலாப் பொருளும் ஆங்கு எழுவும்
வெறியும் நன்மலரும் எள்ளும் எண்ணெயும் போல்
விரிந்தஅப் பொருள்களில்மேலிக்
கறுவிமேல் முயலும் காரியம் ஆகிக்
கண்ணுமாய்க் கருத்தது ஆகி
அறிவும் ஆய் அறியப் படுவதாய்
அறிவான் ஆயினுய் ஆர்உனே அறிவார்?

பொ : பிரிதல் இல்லாத உயிரும் உடலும், சொல்லும் சொல்லினின்றும் பிரியாத பொருளும், நல்ல மலரும் அம்மலரிடத்தினின்று எழுகின்ற மணமும், எள்ளும் அவ்வெள்ளில் நிறைந்துள்ள எண்ணெயும் போல, உலகில் விரிந்து கிடக்கும் அப்பொருள்களில் எல்லாம் கலந்து காரணம் ஆகி அக்காரணத்தால் முயன்று செய்கின்ற காரியமாகி உயிர்களின் கண்களாகி அக் கண்களைக் காணத் தூண்டுகின்ற கருத்தாகி, அறிவும் ஆகி, அறிவால் அறியப்படுகின்ற பொருளாகி அப்பொருளை அறிபவனும் ஆயினுய்; உன் இயல்பு முழுவதையும் அறிவார் யாருளர்? (யாருமில்லை).

கு : பிறிவு கறுவி என்பன எதுகை நோக்கி இடையினம் வல்லினமாயின. திருமால் உலகப் பொருள்களில் இரண்டறக் கலந்துள்ள நிலைமையை விளக்க, உயிரும் உடலும் சொல்லும் பொருளும் மலரும் மணமும் எள்ளும் எண்ணெயும் உவமையாக எடுத்தாளப்பட்டன. கருவியாகி மேல் முயலும் காரியமாகி என ஆக்கச் சொல்லை முன்னும் கூட்டுக. கருவி இங்குக் காரணம் என்னும் பொருளில் வந்தது. மண்ணுகிய முதற் காரணப் பொருளாக இருப்பவனும் திருமாலே என்றவாறு. திருமால் இயங்கும் கருவியாகவும் இயக்கும் முதலாகவும் இருக்கின்ருன் என்பார், கண்ணுமாய்க் கருத்ததுவாகி என்ருர். காண்பதற்குக் கண் கருவியாதலும் அதனைக் காணச் செய்து அதன் வழியே காண்கின்றது மனமாதலும் தெளிவு. இதனை மானதக் காட்சி என்பர். கருத்து என்றது மனத்தை. அது பகுதிப் பொருள் விகுதி. திருமால் ஞாதிரு ஞான நேயங்களாக உள்ளான் என்பார், அறிவுமாய் அறியப்படுவதாய் அறிவான் ஆயினுய் என்ருர். அறிவு–ஞானம், அறியப்படுவது

நேயம். அறிவது ஞாதிரு எனக் கொள்க. வாசகத்துப் பேர்கலாப் பொருளுமாய் என்பதை வாசகமாய், வாசகத்துப் பேர்கலாப் பொருளுமாய் எனப் பிரித்து இயைத்தல் வேண்டும். காரண காரிய மாய் இயங்கும் கருவியாய் இயக்குவோனுய் ஞாதிரு ஞான நேயங்களாய் விளங்கும் திருமாலை இன்னதன்மையன் என வரையறுத்துச் சொல்ல இயலாமையின் யாருனை அறிவார்? என வினவினுன் இந்திரன் என்க. இச்செய்யுளில் திருமால் உலகத் தோடு அபேதமாகக் கலந்துள்ள நிலையை விளக்கியவாறு. (உம)

127. பொன்னிடைப் பிறந்த முடிகட காதி
பூண்பல போலவும் புணரி
தன்னிடைப் பிறந்த தடந்திரை யெனவுந்
தரையினின் றெழுதுக ளெனவும்
நின்னிடைப் பிறந்த சுரர்மனு வாதி
முதலபல் லுயிர்களு நீயும்
அன்னிய மாதி யாயினொன் றாதி
யாழியாய்! யாருனை யறிவார்.

**பொன்னிடைப் பிறந்த முடிகட காதி**
**பூண்பல போலவும் புணரி**
**தன்னிடைப் பிறந்த தடந்திரை எனவும்**
**தரையினில்நின்று எழுதுகள் எனவும்**
**நின்னிடைப் பிறந்த சுரர் மனுஆதி முதல**
**பல் உயிர்களும் நீயும்**
**அன்னியம் ஆதி; ஆயின் ஒன்று ஆதி;**
**ஆழியாய், யார்உனை அறிவார்?**

**பொ :** பொன்னினின்றும் தோன்றிய முடி கடகம் முதலிய பல அணிகள் போலவும் கடலிடைத் தோன்றிய பெரிய அலைகள் போலவும் தரையில் நின்று எழுகின்ற மண் துகள் போலவும் நின்னிடத்துத் தோன்றிய தேவர் மக்கள் முதலிய பல உயிர்களும் நீயும் வேறுபட்டுள்ளாய்; அந்த நிலையை ஆராய்ந்து பார்க்கு

மிடத்து ஒன்றுபட்டும் இருக்கின்றாய்; சக்கரப் படையையுடையவனே! யார் உன் உண்மை இயல்பை அறியவல்லார்? ஒருவரும் இலர்.

கு: பொன்னில் தோன்றிய முடி, கடகம் முதலிய அணிகலன்களும் கடலிடைப் பிறந்த அலைகளும் தரையினின்றும் எழும் துகளும் வடிவாலும் பெயராலும் தன்மையாலும் தம் முதற்காரணப் பொருள்களிலிருந்து வேறுபட்டிருத்தல்போல, நின்னிடத்துப் பிறந்த தேவர் மக்கள் முதலிய உயிர்களிலிருந்து அவ்வுயிர்கட்கு முதற் காரணமாய் நிற்கும் நீ வேறுபட்டுள்ளாய்; தோற்றத்தால் அங்ஙனம் இருப்பினும் உண்மையான் ஆராயுமிடத்து அவ்வுயிர்களோடு ஒன்றுபட்டும் இருக்கின்றாய். வடிவாலும் பெயராலும் பெயராலும் பொன்னும் அணிகலன்களும் வேறுபடினும் அவ்வணிகலன்களில் பொன்னாகிய முதற்காரணம் பிரியாதிருத்தல்போலத் தேவர் மக்கள் முதலிய உயிர்கள் வடிவாலும் பெயராலும் வேறுபடினும் அவர்களுள் அந்தர்யாமியாய் நீ கலந்து ஒன்றுபட்டேயிருக்கின்றாய் என்றவாறு. ஒருவகையால் வேறுபட்டும் ஒருவகையால் ஒன்றுபட்டும் திருமால் உயிர்களோடு பேதாபேதமாய் நிற்கும் நிலைமைக்குப் பொன்னும் பூணும், கடலும் அலையும், தரையும் துகளும் எடுத்துக் காட்டுக்களாம். அன்னியம்–வேறானது. (உக)

128. உறப்பெரி துணரி னுருவமா யருவா
யுளவுமா யில்லையு மாகிப்
பிறப்பிலி யாகிப் பிறத்திநீ யாண்பெண்
ணலியெனப் பேசவும் படாதாய்
மறப்பகை யொன்று மின்றியே யென்றும்
வலிகொள்பஞ் சாயுத மெடுத்தி
அறச்சிலு குடைத்து நின்றிற முரைக்கி
னச்சுதா யாருனை யறிவார்.

**உறப்பெரிது உணரின் உருவமாய் அருவாய்**
**உளவுமாய் இல்லையும் ஆகி,**
**பிறப்புஇலிஆகி, பிறத்திநீ! ஆண்பெண்**
**அலி எனப் பேசவும் படாதாய்!**

மறப்பகை ஒன்றும் இன்றியே என்றும்
வலிகொள் பஞ்சாயுதம் எடுத்தி;
அறச்சிலுகு உடைத்து நின்றிறம் உரைக்கின்
அச்சுதா! யார்உனை அறிவார்?

**பொ :** அச்சுதா! ஆண் என்றோ, பெண் என்றோ இவ்விரண்டும் அல்லாத அலி என்றோ உறுதியாகச் சொல்லவும் படாதவனே! (ஞானிகள்) மிகப் பெரிதும் உணர்ந்து தியானிக்கும் போது, நீ உருவமுடையவனாகவும் விளங்குகின்றாய், அருவமாகவும் உள்ளாய், உலகப் பொருள்கள் எல்லாவற்றிலும் நீ கலந்திருப்பதால் நீ உள்பொருளாகவும் இருக்கின்றாய். யார்க்கும் தெளிவாகக் காணப்படாமையின் இல்பொருளாகவும் சொல்லப்படுபவனாகி பிறப்பே இல்லாதவனாகி யிருந்துகொண்டே இவ்வுலகில் பிறக்கின்றாய்- நினக்கு வீரமுடைய பகையொன்றும் இல்லாதிருந்தே நீ எப்போதும் வலிகொண்ட பஞ்சாயுதங்களைக் கையில் தாங்கிக் கொண்டிருக்கின்றாய், இத்தகைய நின் திறத்தைச் சொல்லுமிடத்து அறவும் முரண்பாடுடையதாக இருக்கின்றது; ஆதலால், யார் உன் இயல்பு முழுவதையும் உண்மையாக அறியவல்லார்?

**கு :** அச்சுதன்-நிலைபேறுடையவன்; திருமாலுக்குக் காரணப் பெயர். திருமால் ஆணாகவும் பெண்ணாகவும் அலியாகவும் இருப்பவன் ஆதலின், அம்மூன்றுள் ஒன்றாக வரையறை செய்து சொல்லப் படாதவனாக இருக்கின்றான் என்றவாறு. உருவாகவும் அதற்கு மாறாக அருவாகவும் உள்பொருளாகவும் அதற்கு மாறான இல் பொருளாகவும் பிறப்பிலியாகவும் அதற்கு மாறாக பிறப்பவனாகவும் இருப்பதோடு பகையொன்றும் இல்லாதிருந்தும் பஞ்சாயுதங்களை எப்போதும் ஏந்திக் கொண்டிருக்கின்றான் திருமால் ஆதலின், நின்றிறம் அறச் சிலுகுடைத்து என்றார். சிலுகு-முரண்பாடு. ஒன்றாய்ப் பலவாய் உளனாய் இலனாய் உரைப்போர்க்கு அன்றாகி யாமாய் அருவாகி உருவாகி (கடவுள் வாழ்த்து – உத்தரகாண்டம்) என்பது இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். திருமால் உலகில் பிறக்கின்றான் என்பதை 'பிறந்தாயுமொத்தி பிறவாயுமொத்தி பிறவாமல் நல்கு பெரியோய்' (நாகபாசம்-258) பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோரிலையே' (பரிபாடல்-3) என்பவற்றால் அறியலாம்.

ஆண் பெண் அலியெனப் பேசவும்படாதாய் என்பது, 'மாண் பாலுலகை வயிற்றெளித்து வாங்குதியால், ஆண்பாலோ பெண் பாலோ அப்பாலோ எப்பாலோ' (ஆரணிய - கவந்தப்-44) 'உணர் வாய பெண்ணினுருவாய், ஆணுதி மற்று மலியாதி யாரிவ் வதிரேக மாயை யறிவார்' (யுத்த-நாகபாசப்-254) என்பவற்றை நினைப்பித்தல் காணலாம். (உஉ)

129. பவக்கடல் கடக்கும் படியறி யாது
பலபெருஞ் சமயத்தின் மயங்கி
அவத்தமே பிறந்து நசிப்பவ ரெல்லா
மகண்டமாய் வாவுபோக் கற்றுச்
சுவத்தனுய் நின்ற நின்னிலை யறியார்
நின்னுளே தோன்றிய வுலகம்
அவற்றினு தார மாயினு யமல
நாட்டினுய் யாருனை யறிவார்.

**பவக்கடல் கடக்கும் படிஅறியாது பல பெருஞ் சமயத்தின்மயங்கி அவத்தமே பிறந்து நசிப்பவர் எல்லாம் அகண்டமாய் [வரவு போக்கு அற்று சுவத்தனுய் நின்ற நின்நிலை அறியார் நின்னுளே தோன்றிய உலகம் அவற்றின் ஆதாரம் ஆயினுப், அமல நாட்டினுய் யார்உனை அறிவார்?**

**பொ :** பிறவியாகிய கடலைக் கடக்கும் வழியிதுவென அறியாது பல பெரிய சமயக் கொள்கைகளில் அறிவு மயங்கி வீணே பிறந்து அழியத்தக்கவர்கள் எல்லாம், எங்கும் நிறைந்தவனுய் வருதலும் போதலும் அற்றுச் சுதந்திரனுய் நின்ற நின் நிலையை அறியமாட்டார்கள். நின்னுளே தோன்றிய உலகங்கட்கு ஆதார மாய்த் தாங்குபவனே! தூய்மையான பரமபதமாகிய நாட்டிற்குரி யவனே! யார் உன்னிலைமையை உள்ளவாறு அறியவல்லார்?

**கு :** பவம்-பிறவி. பிறவியைக் கடலாக உருவகம் செய்தல் மரபு. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேரா தார் (திருக்குறள்-கடவுள் வாழ்த்து-10) என்பதும், காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவிப் பெருங்கடல் என்ருர் என்ற பரிமேலழகர் உரையும் இங்கு நினையத்தக்கவை.

படி என்றது, இங்கு நெறியினை. பல சமயங்களின் கருத்துக்களை யெல்லாம் உணர்ந்து அவைகூறும் பொய்யான கருத்துக்களையே மெய்யான கருத்துக்கள் எனக்கொண்டு மயங்கினவராதலின் அவர் இவ்வுலகில் பிறந்தும் பிறந்த பயனையடையாமல் வீணே இறக்கின்றவராவர். அவ்வாறு நசித்தற் குரியவர்கள் எல்லாம் சுதந்தரமாய் எங்கும் நிறைந்து வரவு போக்கற்று நிற்கின்ற நின்னிலையை அறியமாட்டார்கள். நின்னையறிந்து வழிபட்டுப் பிறவிக் கடலைக் கடக்கவும் மாட்டார்கள் என்றவாறு. அவத்தம்-வீண். சுவத்தம்—சுதந்திரம். எங்கும் நிறைந்த பரம் பொருளுக்குப் போக்கும் வரவும் இல்லாமை தெளிவு. திருமாலின் உந்திக்கமலத்திலிருந்து பிரமனும் உலகமும் தோன்றினமையின் நின்னுள்ளே தோன்றிய வுலகம் அவற்றின் என்றார். உலகைத் தோற்றுவித்ததோடு அவ்வுலகத்திற்கு ஆதாரமாய் நின்று காக்கும் அவன் அருளைப் புலப்படுத்த உலகமவற்றின் ஆதாரமாயினாய் என்றார். அமலநாடு என்றது, பரமபதத்தை; மலமாசு நீங்கினோர்—நித்திய சூரிகள் வாழ்கின்ற உலகமாதலின் அமலநாடு எனப்பட்டது. (உகூ)

130\. தெவ்வட விரைவி னுதவிட வேண்டித்
திகிரிசங் கங்கையிற் றரித்தாய்
செவ்வடங் கோத்த மணியெனக் கோத்துத்
திரியவுஞ் சிதறுவை யுலகை
மொய்வட மேரு வோடுமூன் றுலகை
முற்றுமுண் டாலிலைத் துயின்றாய்
அவ்வட நின்ற தெவ்விட மறியேன்
அமலனே யாருனை யறிவார்

தெவ் அட விரைவின் உதவிட வேண்டித்
திகிரிசங்கு அம்கையில் தரித்தாய்;
செவ்வடம் கோத்த மணி எனக் கோத்துத்
திரியவும் சிதறுவை உலகை;
மொய்வட மேருவோடு மூன்றுஉலகை முற்றும்
உண்டு ஆல் இலைத் துயின்றாய்;
அவ்வடம் நின்றது எவ்விடம் அறியேன்
அமலனே! யார்உனை அறிவார்?

**பொ :** பகைவரைக் கொல்லுதற்கு விரைவில் உதவிட வேண்டுமே என்று கருதிச் சங்கு சக்கரங்களை வேறெங்கும் வைக்காமல் அழகிய கைகளில் தாங்கியுள்ளாய்; நேரியவடத்தில் கோத்த மணியென (உலகங்களை)க் கோத்து, (படைத்துக்காத்து) மீளவும் அவற்றைச் சிதறச் செய்வாய் (அழிப்பாய்) வலிமையுடைய மேருமலையோடு மூவுலகை முழுதும் உண்டு ஆலிலையில் துயின் றனை; அந்த ஆலமரம் நின்றது எவ்விடத்தோ அறியேன்; தூயவனே! யார் உன்னிலைமையை உள்ளவாறு அறியத்தக்கார்?

**கு :** சக்கர முதலிய ஆயுதங்களை ஆயுதச் சாலையில் வைக் காமல் கையில் தாங்கியிருத்தற்குக் காரணம் என்னை? என்ற வினவிற்கு விடையிறுப்பாராய் 'தெவ்வட விரைவினுதவிட வேண்டித் திகிரிசங்கு அங்கையில் தரித்தாய்' என்றார். உலகங்களை உண்டாக்கி வரிசையுற நிறுத்திப் பின்பு அழித்திடும் இறைவன் செயல், வடத்தில் மணிகளை நிரல்படக் கோத்துப் பின்பு சிதறச் செய்வதுபோல் உள்ளது என்றவாறு. மணியென உலகைக் கோத்து என இயைக்க திரியவும்-மீளவும். மொய்-வலிமை. முற்று முண்டு என்றது, சிறிதும் எஞ்சாமல் உண்டு என்றவாறு. மூவுலகையும் உண்டபின் ஆலிலையில் துயில வேண்டுமாயின் அவ்விலையையுடைய ஆலமரம் நிற்பதற்கு இடம் இல்லையாதலின் அவ்வடம் நின்றது எவ்விடம் அறியேன் என்றார். வடம்-ஆலமரம். பாலன்றனதுருவாய் மூவுலகுண்டாலிலையின், மேலன்று கண் டுயின்றாய், மெய்யென்பர் — ஆலன்று, வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ, சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்; (தண்டியலங்காரம் உதாரணம்) என்ற வெண்பா இங்கு நினைவு கூரத்தகும். அமலன்-மலமற்றவன், தூயவன். (௨௪)

**131.** கனற்றுறை நிற்றி யந்தணர்க் குள்ளங்
கசிந்துகண் ணீர்சொரி பத்தர்
இனத்தொடு நிற்றி யேவல்செய் தொழிந்
யாவர்க்கு மாசையி னிற்றி [தோர்

மனத்திடை நிற்றி யோகியருக்கு
மாசறு தூயஞா னிகட்கும்
அனைத்தினு நிற்றி யொருவழிப் படாத
வநந்தனே யாருனை யறிவார்.

கனல்துறை நிற்றி அந்தணர்க்கு; உள்ளம்
கசிந்து கண்ணீர்சொரி பத்தர்
இனத்தொடு நிற்றி ஏவல் செய்து; ஒழிந்தோர்
யாவர்க்கும் ஆசையின் நிற்றி;
மனத்திடை நிற்றி, யோகியருக்கு;
மாசுஅறு தூய ஞானிகட்கும்
அனைத்தினும் நிற்றி, ஒருவழிப்படாத
அநந்தனே யார்உனை அறிவார்?

**பொ:** அந்தணருக்கு வேள்விக் கனலில் நிற்கின்றாய், உள்ளம் உருகிக் கண்ணீர் சொரிகின்ற பத்தர் இனத்தொடு அவர்க்கு ஏவல் செய்து நிற்கின்றாய்; ஒழிந்தோர் அனைவர்க்கும் அவரவர் விரும்பிய படிமத்தில் நிற்கின்றாய். யோகியர்க்கு மனத்தின்கண் நிற்கின்றாய். குற்றமற்ற தூய ஞானிகட்கு எவ்விடத்திலும் நிற்கின்றாய். ஒரு வழியில் நில்லாத முடிவிலாத பலவேறுபட்ட உருவங்களை யுடையவனே! யார் உன் இயல்பை உள்ளவாறு அறிதற்குரியார்?

**கு:** திருமால் யார் யார்க்கு எவ்வெவ் வகையில் தோன்றி அருள் செய்கின்றான் என்பதை இச்செய்யுளால் விளக்குகின்றான் இந்திரன். அந்தணர்க்கு வேள்வித்தீயிலும் யோகியர்க்கு மனத்திலும் ஞானிகட்கு எவ்விடத்திலும் ஊனக்கண் கொண்டு பார்க்கின்ற மற்றையோர்க்கு அவரவர் விரும்பிய படிமங்களிலும் நின்று அருள்செய்கின்ற திருமால், உள்ளமுருகிக் கண்ணீர் சொரியும் பத்தர்கட்கு அப்பத்தர் இனத்தனாய் நின்று அப்பத்தர்கட்கு ஏவல் செய்கின்றான் என்பார், உள்ளம் கசிந்து கண்ணீர் சொரி பத்தர் இனத்தோடு ஏவல் செய்து நிற்றி; என்றார். 'நின்னார்வலர், தொழுதகையமைதியினமார்ந்தோயு நீயே அவரவ ரேவலாளனு நீயே' (பரிபாடல்-4, 70-72) என்பதும், 'நின் அன்பர் தொழுதகை யினது தாழ்ச்சிக்கண் அகப்பட்டோயும் நீ; நினைந்தன முடித்தலான்

அவரவர் ஏவல் செய்வானும்நீ' என்ற பரிமேலழகர் விளக்கமும் இங்கு இணைத்து நோக்கத்தக்கவை. அந்தணர்க்கு கனற்றுறை நிற்றி என்பது, 'உறுகனன் முறை மூட்டித் திகழொளி யொண்சுடர் வளப்பாடு கொளலும், பிறருடம்படுவாரா, நின்னெடுபுரைய அந்தணர்காணும் வரவு' (பரிபாடல் 2-63-68) என்ற பரிபாடற் பகுதியோடு ஒத்திருத்தல் காணலாம். இனி, 'இப்பகுதிக்குப் பரிமேலழர் எழுதியுள்ள 'ஊன்கணுர்க்குப் படிமையினும், அந்தணர்க்கு வேள்வித்தீயினும் யோகிகட்கு உள்ளத்திலும் ஞானிகட்கு எவ்விடத்திலும் வெளிப்படுதலாற் சுடர்வளப்பாடு கோடலை அந்தணர் காணும் வரவு என்றும் கூறினுர்' என்ற உரைப்பகுதியும் ஈண்டைக்கு நினைக்கத்தகும். ஒழிந்தோர் யாவர்க்கும் ஆசையினிற்றி என்றது ஊன்கணுர்க்குப் படிமையினும் என்று பரிமேலழகர் குறிப்பிட்ட கருத்தேயாகும். ஆசை - படிமம் ஒழிந்தோர் என்றது ஞானக்கண்பெருத ஊன்கணுரை. அநந்தன்- எண்ணத் தொலையாத பலவேறு தன்மைகளையுடையவன். ஒருவழிப்படாமைக்கு எதிரானது பலவழிப்படுதலே யாதலின் அநந்தனே என்ற பாடமே பொருந்திய பாடம் ஆதல் தெளியலாம். (உரு)

132. ஒருமுத லாகிக் கவடுமூன் று ஆகி
உயர்பெருஞ் சாகைகள் பலவாம்
தருவென நினருய் தலைபுலை தெரியாச்
சமபநூல் யாவையுந் தந்தாய்
அருவினை யாகி யருவினைப் பயனுப்
அருவினை யனுபவிப் பவனுய்
அருவினை யாக்கி யருவினை யறுக்கும்
அற்புதா யாருனை யறிவார்.

**ஒருமுதல்ஆகி, கவடுமூன்று ஆகி, உயர்பெருஞ் சாகைகள் பலஆம் தருஎன நின்ருய், தலைபுலை தெரியாச் சமய நூல் யாவையும்தந்தாய்; அருவினை ஆகி அருவினைப் பயனுய் அருவினை அனுபவிப் பவனுய் அருவினை ஆக்கி, அருவினை அறுக்கும் அற்புதா! யார்உனை அறிவார்?**

பொ : ஒன்ருய் நிற்கின்ற அடிமரமாகி அந்த அடிமரத்திலிருந்து தோன்றும் மூன்று கவடுகளும் ஆகி அந்தக் கவடுகளினின்றும் தோன்றுகின்ற உயர்ந்த பெரிய கிளைகள் பலவும் ஆகி விளங்குகின்ற மரம்போல, நீ முன்பு ஒருபரம் பொருளாய் நின்று பின்பு நின்னில் தோன்றிய உயர்ந்த பெரிய தேவர்கள் முதலிய எண்ணிறந்த பல்லுயிராகவும் நிற்கின்றவனே! உயர்வு தாழ்வு அறியப்படாத சமய நூல்கள் யாவற்றையும் உண்டாக்கினவனே! தீர்த்தற்கரிய வினைகளாகியும் அந்த அரிய வினைகளின் பயனுகியும் அந்த அரிய வினையை அனுபவிப்பவனுகியும் நீக்குதற்கரிய வினைகளை உண்டாக்கிப் பின்பு அவ்வினைகளை அறுத்தொழிக்கின்ற அற்புதத் தன்மையுடையானே! உன் இயல்பினை இது என அறியவல்லார் யாருளர்? எவருமிலர்.

கு : திருமால், பரம்பொருள் நிலையில் ஒருவராகவும் முத்தொழில் செய்யும் நிலையில் அயன், அரி, அரன் என்ற மும்மூர்த்திகளாகியும் தேவர் மக்கள் முதலிய பல்லுயிர்களாகியும் நிற்கின்ற நிலையை உணர்த்த வேண்டி 'ஒரு முதலாகிக் கவடு மூன்ருகி, யுயர் பெருஞ் சாகைகள் பலவாம் தருவென நின்ருய்' என்ற உவமையைப் படைத்துக் கூறியுள்ளார் ஆசிரியர். கவடாய் முளைத்தெழுந்த மூலமோ (ஆரணிய-கவந்தம்.42) எனக் கவந்தன் தெய்வ வடிவில் நின்று துதித்ததை யிங்கு நினையலாம். இருவினைகளாகியும் இருவினைகளால் உண்டாகும் பயன்களாகியும் இருவினைப் பயனை அனுபவிக்கின்ற உயிர்களாகியும் நின்று இருவினையை யுண்டாக்கிப் பின்பு துய்ப்பித்து அவற்றை அறுப்பவனும் திருமாலே என்றவாறு. இவ்வாறு செய்வது எவராலும் செய்ய இயலாத அற்புதச் செயலாதல் தோன்ற, அற்புதா எனத் திருமாலை விளித்தவாறு. 'கருமமும் கருமத்தின் பயனும் அப்பயன், தருமுதற்றலைவனும் தானுமானவன்' (யுத்த - இரணியன்வதை-64) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். தலை-உயர்ந்தது. புலை-தாழ்ந்தது. தலைபுலையென இணைத்துக்கூறல் மரபு. தலைபுலை தெரியாச் சமயநூல் யாவையும் தந்தாய் என்றது, எது உயர்ந்தது? எது தாழ்ந்தது என்ற அறியவியலாத பல சமய நூல்களையெல்லாம் செய்தவன் திருமாலே என்னுங் கருத்தினது. 'வணங்குந் துறைகள் பலபல வாக்கி மதி விகற்பால் பிணங்குச் சமயம் பலபலவாக்கி அவையவைதோ,

றணங்கும் பலபல வாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்' (திருவிருத்தம்–96) என நம்மாழ்வார் ஓதியுள்ளதை இங்கு நினையலாம். முதலும் கவடும் சாகையும் எனப் பெயராலும் வடிவாலும் வேறுபட்டுளதே யாயினும் மரம் எனும் தன்மை அம் மூன்றிலும் இருத்தல் போலத் திருமால், பரம்பொருளாயும் மும் மூர்த்திகளாயும் இவ்வுலகமாயும் வேறுபட இருந்தாலும் அம் மூன்றும் அவனே என்பது தெளிவு என்றவாறு. (உ௩)

அறிதுயில் உணர்ந்த திருமால்
அவர்களை நோக்கி வந்த காரணம் வினவல்.

133. என்பன சொல்லி யிந்திர னேத்து
மேத்தொலி யிருசெவி யெய்த
இன்பநித் திரையை விட்டுணர்ந் தருளி
யேழுல குடையவ னவரை
அன்புற நோக்கி யனைவரும் வந்த
காரண மென்னென வகத்தில்
துன்பம தொழித்துத் தொழுதகை யினராய்ச்
சுராதிய ரிவையிவை சொன்னார்.

என்பன சொல்லி, இந்திரன் ஏத்தும் ஏத்துஒலி இருசெவி எய்த
இன்ப நித்திரையைவிட்டு உணர்ந்தருளி, ஏழுலகுடையவன் அவரை
அன்புற நோக்கி, 'அனைவரும் வந்த காரணம் என்' என அகத்தில்
துன்பமது ஒழித்துத் தொழுதகையினராய்ச் சுராதியர்
[ இவைஇவை சொன்னார்.

பொ : என்பனவற்றைச் சொல்லி, இந்திரன் துதிக்கும் துதிகளின் ஒலி தன் இரு செவியிலும் வந்தெய்த, ஏழுலகங்களையும் தனக்கு உடைமையாகக் கொண்டுள்ள திருமால் இன்பத்துயிலை விடுத்து விழித்தருளி அவர்களை அன்பு பொருந்தப் பார்த்து, நீவிர் அனைவரும் இங்கு வந்த காரணம் என்னை? என்று வினவ தேவர் முதலானோர் தம் மனத்திலிருந்த துன்பத்தையொழித்துத் தொழுதகையினராய் இவ்விவற்றைச் சொன்னார்கள்.

கு : இன்ப நித்திரை என்றது அறிதுயிலை. ஏழுலகுடையவன் என்றது உலக முதல்வனாகிய திருமாலை. அன்புறநோக்கி அணைவரும் வந்த காரணம் என் என வினவிய அளவில் தம்பால் திருமாலின் அருள் நோக்கம் உளது என்பதை யுணர்ந்தாராதலின், அகத்திலிருந்த துன்பம் ஒழியப் பெற்றாராய்த் தொழுத கையின ராளுர் என்றவாறு. சுராதியர் என்றது தேவர் முனிவர் போன்றோரை. இவை இவை சொன்னுர் என்புழி இவை இவை என்றது பின்வரும் செய்யுட்களால் புலப்படும். (உஎ)

தேவர் முதலோர் தாம் வந்த காரணம் இயம்பல்

134. வரப் பெரு வலியான் மாலிய வானுஞ்
சுமாலியு மாலியு மென்னு
இரக்கமி லரக்க ரெதிரிலாப் படைய
ரெவ்வுல கங்களு மூழி
நெருப்பென வரிக்கு நிருதர்வே ரறுத்து
நீடுல கங்களை நீயே
பரிக்கிலை யாகி னினியடி தொட்டுப்
படைக்கவேண் டும்படி படுமே.

வரப் பெருவலியான் மாலியவானும் சுமாலியும் மாலியும் மென்னும் இரக்கம் இல் அரக்கர் எதிர்இலாப்படையர் எவ்வுலகங்களும் ஊழி நெருப்பு என அரிக்கும் நிருதர்வேர் அறுத்து நீடு உலகங்களை நீயே பரிக்கிலை யாகின், இனி அடி தொட்டுப் படைக்க வேண்டும்படி படுமே.

பொ : வரத்தினால் பெற்ற பெருவலிமையுடைமையால் மாலியவானும் சுமாலியும் மாலியும் என்னும் இரக்கம் இல்லாத அரக்கர்கள், நிகரில்லாத ஆயுதங்களையுடையராயிருக்கின்றனர். எல்லா உலகங்களையும் ஊழியிறுதியில் அழிக்கும் நெருப்புப்போல வருத்துகின்ற அந்த அரக்கரை வேரோடு அழித்துப் பெரிய உலகங்களை நீயே மேற்கொண்டு காப்பாற்றாது விட்டால் (அவர்களால் எல்லாம் அழியும் ஆதலின்) இனி அடி தொடங்கி எல்லாவற்றையும் படைக்க வேண்டி நேரும்.

கு: பிரமன் கொடுத்த வரத்தால் மாலியவான் முதலியோர் எத்தகையோரையும் வெல்லவும் நீண்ட ஆயுளுடையராகவும் வரம் பெற்றுள்ளமை குறிப்பிட்டவாறு. அரக்கரின் இயல்பு புலப்பட இரக்கமில் அரக்கர் எனச் சிறப்பித்தார். எதிரிலாப் படையர் என்புழி படையர் என்பது குறிப்புவினைமுற்று. அரித்தல்-வருத்துதல். நிருதர் என்பது சுட்டுப்பொருளில் வந்தது. அந்நிருதர் என்க. நிருதர்—அரக்கர். வேரறுத்தல் என்பது அடியோடு அழித்தலையுணர்த்தியது. பரித்தல்-தாங்குதல்—மேற்கொள்ளுதல். அடிதொட்டுப் படைக்க வேண்டும்படி படும் என்றது உலகத்து ஒருயிரும் எஞ்சாமல் அவ்வரக்கரால் அழிவது திண்ணமாகலின் படைப்புத் தொழில் முதலிலிருந்து தொடங்க வேண்டிவரும் என்றவாறு. படும்-நேரும். (உ-அ)

135. நஞ்சினுங் கொடிய வெஞ்சின வரக்கர்
நாடொறுங் கோறலா லைய
எஞ்சினேஞ் செக்கி லெள்பிழைத் தாற்போ
லிங்குவந் தேங்களே பிழைத்தோம்
அஞ்சன மேனிக் கஞ்சநன் மலர்க்கண்
ணமலமற் றொருகதி யில்லேம்
அஞ்சினேம் வந்துன் னடியினை யடைந்தே
மாழியா யபயநின் னபயம்.

நஞ்சினும் கொடிய வெஞ்சின அரக்கர்
நாள்தொறும் கோறலால் ஐய!
எஞ்சினேம்; செக்கில் எள்பிழைத்தாற்போல்
இங்குவந்தேங்களே பிழைத்தோம்;
அஞ்சனமேனிக் கஞ்ச நாள்மலர்க்கண்
அமல! மற்றொரு கதிஇல்லேம்;
அஞ்சினேம் வந்துன் அடியினை அடைந்தேம்;
ஆழியாய்! அபயம்நின் அபயம்.

பொ: ஐய! விடத்தினும் கொடியதாகிய வெவ்விய கோபத்தை யுடைய அரக்கர் நாள்தொறும் கொல்லுதலால் எங்கள் எண்

ணிக்கையில் குறைந்துவிட்டோம். செக்கில் இட்டு ஆட்டும்போது சில எள் அறைபடாமல் தப்பினாற்போல இங்கு வந்துள்ள நாங்களே உயிர் பிழைத்தோம்; மை போன்ற மேனியையும் தாமரை மலர் போன்ற கண்ணையுமுடைய தூயவனே! நீயன்றி மற்றொரு பற்றுக்கோடு இல்லேம். அவ்வரக்கர்களுக்கு அஞ்சினோமாய் வந்து உன் இரு திருவடிகளை அடைந்தோம்; சக்கரப் படையையுடையவனே! அடைக்கலம். உன் அடைக்கலம்.

கு: நஞ்சுண்டார், பிற மணி மந்தரங்களால் உயிர் பிழைத்தலும் கூடும், இவ்வரக்கரால் சினக்கப்பட்டோர் உய்தல் ஒரு ஞான்றும் இல்லையாதலின் அரக்கரின் சினம் நஞ்சினும் கொடிய வெஞ்சினம் எனப்பட்டது. நாள்தொறும் கோறலால் எஞ்கினேம், என்றது நாள்தொறும் அரக்கர்கள் எம்மவரைக் கொன்று கொண்டேயிருத்தலால் எம் எண்ணிக்கையில் குறைந்துவிட்டோம் என்றவாறு. செக்கில் இட்டு ஆட்ட இட்ட எள்ளில் ஓரிரண்டு எள் அறைபடாமல் பிழைத்தல்போல இங்கு வந்துள்ள நாங்கள் மட்டுமே உயிர் பிழைத்துள்ளோம் என்றவாறு. அமலன்-தூயவன். கதி–ஆதரவு–பற்றுகோடு. ஆழியாய்! என மீண்டும் விளித்தது அவ்வரக்கரைக் கொல்லுதற்கேற்ற சக்கரப் படையையுடையை ஆதலின் அது கொண்டு அவர்களை அழித்தற்குரியை என்னும் கருத்தினது. அபயம், இங்கு அடைக்கலம் என்னும் பொருளது. அச்சம்பற்றி அபயம் நின்னபயம் என அடுக்கிக் கூறியவாறு. கஞ்சநாண் மலர்க்கண்-அன்றலர்ந்த செந்தாமரை மலர் போன்ற கண். இங்ஙனம் கூறியது அந்தக்கண்கள் எம்மைக்காக்கும் என்ற நம்பிக்கையுடையேம் என்னும் கருத்துப் புலப்பட வேண்டி. (உகூ)

### தேவர்க்குத் திருமால் அபயமளித்து விடுத்தல்

136. ஆங்கவ ரபய மென்றலு மஞ்ச
லஞ்சனீ ரென்றுகை யமைத்துத்
தீங்குடை யரக்கர் குலத்தைவே ரறுத்துச்
சிந்தைநோய் தீர்க்குவென் றிண்ணம்

நீங்கள்போ யுங்க ணிலேகளி னின்மி
 னெனவட னேமியோன் விடுப்ப
ஓங்கிய மனத்தர் போயபி னரக்கர்க்
 குற்றன வொழிவின்றி மொழிவாம்.

ஆங்குஅவர் அபயம் என்றலும் 'அஞ்சல்
 அஞ்சல்நீர் என்று கையமைத்துத்
தீங்குடை அரக்கர் குலத்தை வேர்அறுத்துச்
 சிந்தைநோய் தீர்க்குவென் திண்ணம்;
நீங்கள்போய் உங்கள் நிலேகளில் நின்மின் என
 அடல் நேமியோன் விடுப்ப
ஓங்கிய மனத்தர் போயபின் அரக்கர்க்கு
 உற்றன ஒழிவுஇன்றி மொழிவாம்.

பொ: அவ்விடத்து வந்த அந்தத் தேவர்கள் அபயம் என்று கூறலும் வலிய சக்கரப் படையுடையவனுகிய திருமால் 'அஞ்சா திர்கள் அஞ்சாதிர்கள் நீவிர்' என்று கையால் அமைத்துவிட்டு இங்கு செய்தலேயுடைய அரக்கர் குலத்தை வேரோடு அறுத்து உங்கள் சிந்தையிலுள்ள துன்பத்தை நீக்குகின்றேன், இது உறுதி. நீங்கள் சென்று உம் இருப்பிடங்களில் தங்குங்கள் என்றுகூறி அவர்களே அனுப்ப மகிழ்ச்சியால் உயர்ந்த மனத்தையுடைய தேவர் முதலியோர் அங்ஙனமே போயபின்பு அரக்கர்களுக்கு நேர்ந்ததை விடாமல் சொல்லுவோமாக.

கு: இறுதியடி கவிக்கூற்று. அஞ்சல் அஞ்சல் என்ற அடுக்கு அருள்பற்றிய விரைவு குறித்து நின்றது. அஞ்சல் என்று சொல்லுங் கால் மெய்யின்கண்படும் தொழிலேயுணர்த்த கையமைத்து என்ருர். வேரறுத்தல் என்பது அடியோடு அழித்தலேயுணர்த் தியது. நேமி-சக்கரம்; விடுத்தலாவது, விடைகொடுத்தனுப்புதல். மகிழ்ச்சியால் கிளர்ந்த மனமுடையராதலின் ஓங்கிய மனத்தர் எனப்பட்டார் தேவர். (௩௰)

தோத்திரப்படலம் முற்றிற்று

# 5. இலங்கை அழித்த படலம்

தேவர்களின் வேண்டுகோளின்படி திருமால் இலங்கையி லுள்ள மாலியவான் முதலிய அரக்கர்தம் வலிமையை அழித்த நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாகலின் இது இலங்கையழித்த படலம் எனப்பெயர் பெறுகின்றது. இலங்கை என்பது, இடவாகு பெயராய் இலங்கையில் வாழ்ந்த அரக்கரையுணர்த்தியது. சுமாலியும் மாலியவானும் தோல்வியுற்று அழியவும் மாலி மரண முற்று அழியவும் திருமால் அழித்தமை இப்படலத்துக் கூறப்படுதல் காணலாம். சில ஏடுகளில் திருவோலக்கப்படலம், புலத்தியப் படலம், அரக்கர் பிறப்புப் படலம், தோத்திரப்படலம் என்ற நான்கு படலங்களையும் சேர்த்து இலங்கையழித்த படலம் காணப்படுகின்றது. உத்தரகாண்டத்தின் முதற் படலமே இலங்கையழித்த படலந்தான் என்னும்படி உள்ளது. ஆனல் பல ஏடுகளில் ஐந்து படலங்களாகப் பிரிந்தே காணப்படுகின்றன. அந்நெறியே இங்குப் பின்பற்றப் படுகின்றது.

## படலப்பொருள்

தேவர்கள் அரக்கராலே தாம் அடைந்த துன்பங்களை யெல்லாம் பெண்ணொரு பாகத்தண்ணலாகிய சிவபிரானிடத்துச் சொன்னதையும், அச்சிவபிரான் நம்மை 'அடைக்கலமாக அடைந்த அவ்வரக்கரை நாமே கொன்று வெற்றி கொள்ளுதல் நல்லதன்று; திருமாலிடத்துச் சென்று சொல்லிப் பயன்பெறுங்கள்' என்று சொன்னதையும், அப்பெருமான் கூறியபடி இந்திரன் தேவர் களோடு சென்று திருமாலிடம் சொல்ல, அத்திருமால் நும் மனத்துள் துன்பம் தீர்ப்பேன் என்று அருளியதையும் அறிந்து வந்த ஒற்றர்கள் சொல்ல, மாலியவான் கேள்வியுறுகின்ருன் தம்பியர்க்கும் சொல்லி வெகுளியால் மனம் வெதும்புகின்ருன். திருமால் தானே நம்மேல் போர்க்கு வந்தால் குற்றமில்லை தேவர்கள் அத்திருமாலின் மனத்தை மாற்றியன்ருே நம்மேல் படையெடுக்கச் செய்துள்ளார்.

எனவே அரக்கராயுள்ள நாமெல்லாம் அடியோடு அற்றுப் போக வேண்டும் என்று எண்ணுகின்ற அந்த அறிவுகெட்ட

தேவர்களைப் போரில் அழித்து மீள்வோம் எனப் புறப்படுகின்றனர். மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும் வீரராய் உள்ளோரில் தம்மோடு நேர் நின்று எதிர்த்துப் போர் செய்வோர் எவரையும் பெருமையாலே சோம்பிக் கிடந்த அரக்கர் சேனை, இப்போது போர் என்னும் வார்த்தையைக் கேட்ட அளவிலே பொங்கிய மகிழ்ச்சியால் நிறைமதி கண்ட திரைகடல்போல ஆரவாரித்து எழுகின்றது. எறிபடை வீரரும் விரைபரியும் மதகளிறும் நெடுந் தேரும் என்ற நால்வகைப் படையும் உலகம் அஞ்ச வாயில் தோறும் புறப்பட்டுப் பரவுகின்றது.

தேவர்கள் அந்தப்படையின் வரவு கண்டு என்ன காரியம் செய்துவிட்டோம் என்று ஒளிக்கும் இடம் தேடி ஓடத் தொடங்கு கின்றார்கள். வானத்து மேகம் பரவுவது போலக் கரிய அரக்கர்தம் சேனை வெள்ளம் வான் வழிப் பரவுகின்றது. மாலியவானும் சுமாலி யும் மாலியும் காலில் கட்டிய கழலினராய் கவசமணிந்த மார்பின ராய், வீரபட்டம் விளங்கும் நெற்றியினராய் நீலமலை போன்ற தோற்றத் தினராய் நெடிய பொற்றேரில் ஏறுகின்றனர். தேரோடும் ஒலியும், ஊதுகொம்பும் காளமும் சங்கும் சின்னமும் ஊதுகின்ற பேரொலியும், முரசமும் பேரியும் முழங்குகின்ற ஒலியும், யானை களாகிய மேகங்கள் பிளிறுகின்ற இடிபோன்ற ஒலியும் காற்றுப் போல விரையும் குதிரைகளின் கனைப்பொலியும் எல்லாம்கூடி ஒரே ஒலியாகி உலகம் அஞ்சுமாறு பரவுகின்றது.

குதிரைகளும் யானைகளும் தேர்களும் காலாளும் நிலம் கிழியச் செல்வதால் எழுந்த துகள்கள் எல்லாம் விண்ணில் பரவி வெற்றிடம் இல்லாதபடி பெருகி விண்ணுலகத்தை மண்ணுலகமாக்குகின்றது. அப்போது அரக்கர்க்குத் துன்னிமித்தமாக மேகங்கள் இரத்தத்தை யும் எலும்பையும் பொழிகின்றன. மலைகள் அசைந்து அதிர்கின் றன. காகங்கள் அழுது ஏங்குகின்றன. அத்தகைய துன்னிமித் தங்கள் நிகழக் கண்டும் அவற்றை உளங்கொண்டு அரக்கர்கள் போரைவிடுத்து மீள்கின்றிலர். விதியினை வெல்லவல்லார் யாருளர்?

அரக்கர்களின் போர் ஆரம்பத்தைத் தேவர்கள் தூதுவர் மூலம் திருமாலுக்குத் தெரிவித்தவுடன் திருமால் கருடப்புள்ளி லேறிக் கொண்டு வானவர்கள் வாழ்த்த வந்து அரக்கர்தம் பெரும்

படையைச் சென்று தாக்குகின்ருன். தன்மார்பில் அணிந்த கவுத்துவமணி முதலிய அணிகலன்களின் பொன்னொளி, சூரியனின் ஒளியையும் மறைத்துத் தோன்றத் தனக்கெதிரில்லாத பொன்னிறக் கருடனின் தோள்மேல் வில்லுடன்கூடிய திருமாலின் தோற்றம், பொன்மேருவின் உச்சியில் இந்திர வில்லையும் மின்னலையும் தழுவி நிற்கின்ற கார்மேகம் போன்று கவினுற விளங்குகின்றது.

வெற்றி பொருந்திய கருடனின் விரிந்த சிறகுகளின் வேகத்தால் எழுந்த காற்றுத் தாக்குதலால் அரக்கர்களின் திண்ணிய தேர்கள் முறிகின்றன; யானைகள் வீழ்கின்றன, குதிரைகள் உருளுகின்றன, காலாட்களாகிய அரக்கர்கள் மலைகளைப்போல நடுங்கிச் சாய்கின்ருர்கள், தேரில் கட்டிய கொடிகள் எல்லாம் பஞ்சுபோல் பறந்துபோகின்றன. அப்போது மையினுல் இயன்ற மலையை மூடிக்கொண்டு மேகம் எல்லாம் மழைத்துளிகளைச் சொரிகின்ற தோற்றத்தைக் காட்டிக்கொண்டு அரக்கர்கள், வளைத்த வில்லினராய் வந்து கோபித்துத் திருமாலைச் சூழ்ந்துகொண்டு கூரிய அம்புகளைச் சொரிகின்ருர்கள். மேலும் தண்டு வாள் இருப்புலக்கை வேல் சக்கரம் சூலம், பாசம் பிண்டிபாலம் முதலிய பெரிய படைக்கலங்களையெல்லாம் வீசுகின்ருர்கள். தேவதேவனுகிய திருமால், தன் வில்லாகிய மேரு மலையை வளைத்துக் கொண்டு விட்ட கோடிக் கணக்கான அம்புகளால் அந்தப் பாவிகள் ஏவிய படைக்கலம் அனைத்தையும் பொடிபடச் செய்து அவ்வரக்கர்மேல் தைக்குமாறு அம்பு மழையைப் பொழிகின்ருன். திருமால் எய்த அம்பு மழையால் தேர்கள் துணிபடுகின்றன. அத்தேர் வீரர்கள் துணிபடுகின்றனர். காலாள் வீரர்களின் மார்பமும் மார்பிலணிந்த கவசமும் வில்லும் கையும் காலும் முடித்தலையும் துணிபடுகின்றன. திருமால் எய்த அம்புகள் அறுத்த அரக்கரின் பெரிய உடம்புகளைக் குதிரைகள் குளம்பினுல் மிதித்தலும் அவ்வுடம்புகள் சேருய் இரத்தவெள்ளம் பெருகுகின்றது. போர்க்களத்தில் பள்ளம் நோக்கிச்செல்லும் புனல் வெள்ளம் போலச் சேனை வெள்ளமும் தோற்றுப் பாதுகாப்பான இடத்திற்கு ஓடுகின்றது. அந்தப் படை வெள்ளத்திற்கு சுமாலி அம்புகளால் அணைகட்டி விட்டுத் திருமாலை நெருங்குகின்ருன்.

எடுத்த வில்லினனாய் எறிந்த நாணினனாய், இடித்தாற் போன்ற கடும் சொல்லினனாய் மடித்த வாயினனாய்த் தன்னை வலியனாக மதித்த நெஞ்சில், 'இந்த மாயனது விரும்பத்தக்க இரத்தத்தை கையால் எடுத்துக் குடிப்பேன்' என்று கோபம் பெருகக் குதிரைகள் பூட்டிய குன்றுபோன்ற தேரினைச் செலுத்தி வந்து அம்பு மாரியினால் அந்தத் திருமாலை மூடி மறைக்கின்றான். அதுகண்ட தேவர்கள் ஓடுகின்றனர்; அப்போது திருமால், சுமாலியைப் பார்த்து நீ நல்லை நல்லை. நின்வலிமை நன்று நன்று. உயிர்கள் நடுங்குமாறு போர் செய்கின்ற உபாயத்தில் நீவல்லவன் வல்லவன். உன்னையொக்கும் வில்வீரர்கள் இந்த மாநிலத்து இல்லை என்று பாராட்டி விட்டுத் தன் வில்லிலிருந்து விட்ட அம்பு மழையால் அந்தச் சுமாலிவிடுத்த கொடிய அம்புகளை விலக்கிவிட்டுப் பின்பு விட்ட அம்புகளால் தேர்ப்பாகனோடு குதிரைகளையும் கொன்று தேரினைப் பொடிபடச் செய்கின்றான்.

ஆனை மேலும் குதிரை மேலும் தேர்மேலுமாக நெருங்கிய அளவில்லாத ஆற்றலையுடைய அரக்கர்தம் சேனை சூழ உயர்ந்த தேரைச் செலுத்திக்கொண்டு மலைமேலிருந்த சிங்கத்தைப்போல் வந்த மாலி, வானிற் பறக்கும் கருடன் திருமாலொடு மண்ணும் விண்ணும் மறையுமாறு பெரிய சோனை மாரிபோல ஓய்விலாது அம்புமழையைச் சொரிகின்றான். அந்த அம்புமாரி அனைத்தையும் துணிபடுமாறு திருமால், அம்புகளை எய்து அழித்துக் காரிகையரின் கண்களைப் போன்று கொடிதாகிய அம்பினால் மாலியின் மலை போன்ற மார்பு உருவ எய்து விட்டுத் தேர்ப்பாகனோடு குதிரைகள் நாசமுற பல அம்புகளைச் செலுத்துகின்றான். திருமால் எய்த அம்புபட்ட மார்பினின்றும் இரத்த வெள்ளம் பெருகுதலால் மயக்கமுற்றுப் பின் விரைவில் உணர்வு பெற்றுத் தனது தேரில் நின்றும் தரையில் குதித்து வெகுண்டெழுந்த சிங்கம்போல வீர முழக்கம் செய்து, மேகத்தினின்று கொடிய இடி விழுந்தது என்று சொல்லுமாறும் தேவர் கலங்கும்படியும் கருடனது தலைமேல் தண்டாயுதத்தைக் கொண்டு தாக்குகின்றான். அத்தாக்குதலால் தளர்ச்சியுற்றும் தன் ஊர்தியாக நிலைபெற்ற கலுழனாகிய வீரனது நிலையைக் கண்டு திருமால் தனது வெற்றி தரும் சக்கரப் படையை விடுப்ப அது சூரியனைப் போன்ற பேரொளியுடன் சென்று

மாலியின் சிரத்தை அறுக்கின்றது. அதுகண்டு தேவர்கள் மகிழ்ந்து ஆடுகின்றார்கள். அரக்கர்கள் வாடுகின்றார்கள்.

வேதங்களால் ஓதப்பட்டவனாகிய திருமால், நிலம் கிழியவும் அரக்கர்கள் மயங்கி விழவும் மேருமலையோடு திண்ணிய பெரிய மலைகள் பிளந்திடவும் எண்திசையிலும் விளங்குகின்ற பெரிய திசைமலைகள் நிலைகெடவும் அண்டகோளம் பிளந்தது என அஞ்சித் தேவர்கள் அறிவு மயங்கவும் உலகமுழுமையும் உண்ட தன் செம்பவள வாயில் வைத்துச் சங்கினை ஊதுகின்றான். மாலி இறந்துவிழ அவன் அண்ணன்மார்களாகிய சுமாலி, மாலியவான் என்பவர்கள் சோகம் மிக்குப் போர் செய்ய இயலாதுவிடவே, திருமாலின் திரித்துவிட்ட ஒளிமிக்க சக்கரப்படையாலும் இரண்டு முனைகளையுடைய கூரிய பிறைமுகக் கணைகளாலும் ஆலகாலத்தை ஒத்த கதையினாலும் வாளினாலும் அரக்கர்தம் சேனை, வேலி அற்ற பயிரில் பசுக்கள் புகுந்தாற்போலவும், ஆளும் வேந்தர் இல்லாத உலகம் போலவும் அழிகின்றன.

திருமாலின் சக்கரப்படையால் அரியப் பெற்ற பசுமையான அரக்கர் தலைகள் வெற்றி பொருந்தி விளங்குகின்ற சக்கரப்படையுடன் விண்ணில் ஏறுவனவும் பின்பு தரையில் வீழ்பவையுமாய்ப் போர்க்களத்துப் பொருந்திய வீரமகளாகிய கொற்றவை தன் கையில் வைத்து ஆடுகின்ற அம்மனைக் காய்களை ஒத்துத் தோன்றுகின்றன. அந்தச் சக்கரப் படையால் அறுப்புண்டு வெண்கொற்றக் குடைமேல் வீழ்கின்றனவாகிய அரக்கர்தம் திண்ணிய கைகள், குளிர்ச்சி மிக்க சந்திரனைப் பற்றுகின்ற இராகு என்னும் பாம்பினை ஒத்துத் தோன்றுகின்றன. பருந்துகள் ஊனுண்ண பறக்கின்றன, பேய்கள் வயிறு நிறைகின்றன. திருமாலின் அம்புகளால் துணிக்கப்பெற்ற செந்தலைகள் மீளவும் அவ்விடத்தில் முளைத்தன என்னும்படி விரைந்து பீறிட்டெழுந்த சிவந்த இரத்தம் கடலை ஒத்தது: மேகவண்ணனாகிய திருமாலின் சக்கரமானது தம் கால் களையும் கைகளையும் தலையையும் அறுத்தமையால் அரக்கர், ஐந்துறுப்புகளையும் உள்ளே அடக்கிக் கிடக்கும் நீல ஆமையை ஒத்துத் தோன்றுகின்றனர்.

மதயானைகள் வெட்டுண்டு கிடக்கும் இடமானது, (யானையின் அற்ற கால்கள் உரலை ஒத்துத் தோன்றுதலாலும், அதன் காது முறத்தை ஒத்துத் தோன்றுதலாலும் உரோமங்கள் நீண்டு வளர்ந்துள்ளனவாய் அறுப்புண்ட அதன் வால்கள் துடைப்பத்தை ஒத்துத் தோன்றுதலாலும் அதன் கொம்பு உலக்கையை ஒத்துத் தோன்றுதலாலும் இரவினை ஒத்த நிறத்தையுடைய திருமால், செயமங்கையின் மலர் போன்ற கையைப் பற்றுவதாகிய திருமண நிகழ்ச்சி நிகழுமுன் தரையைக் கோலம் முதலியவற்ருல் அலங்கரித்து முகூர்த்த நெல்லைக் குற்றும் இடத்தை ஒத்துத் தோன்றுகின்றது.

பகைவருடைய உயிர் தளருமாறு கொல்லும் மாலி என்பவன் வீரசுவர்க்கம் சென்றுவிடவே கடுமை மிக்க மாலியவான் அவ்விடத்தினின்றும் விரைந்து புறங்காட்டி ஓடுகின்ருன். அவன் சேனையும் நடுங்கி அவ்வாறே ஓடுகின்றது. பகைவென்ற திருமால் அவர் அழிவுகண்டும் கருணையால் மனம் நடுங்காமல் அவர் சென்ற வழியில், முன் போர் செய்து நின்றதுபோலவே நிற்கின்ருன். தேன் கமழ்கின்ற துளப மாலையோடு விளங்குகின்ற திருமாலைப் பார்த்துச் சுமாலி 'நீ உனக்குத் தோற்ருேடிய சேனையைக் கொன்ருய் ஆதலால் உயர்ந்த வீரர் வரிசையில் எண்ணப் படுவாயல்லை; இவ்வுலகத்தில் பெரிய பழியைப் பூண்டு அறநெறியை விட்டோர்களாகிய கீழ்மக்களின் செயலைச் செய்தாய் ஆகின்ருய். வலிமையும் அறிவும் உடையோனே, போர் செய்தற்கு விருப்பம் இலாதவரும் போரில் முன்பு புறங்காட்டி ஓடினவரும் போர்க்களம் என்று அறியாமல் புகுந்தவரும் கொடிய ஆயுதங்களைத் தரையில் போட்டு நின்றவரும், பகை வேந்தனுல் தூதாக அனுப்பப் பட்டவரும், அலியாய் மங்கையர் வேடம்பூண்டவரும் வலிய நோயுடையவர்களும் கொடிய கொலைத் தண்டத்திற்கு உரியவரல்லர்' என்று உணர்த்துகின்ருன்.

சுமாலி இந்தச் சொற்களைச் சொல்லத் திருமால் உமக்கு அஞ்சி ஓடிவந்த தேவர்கட்கு முன்பு யான் கொடுத்த வரத்தின்படி செய்தேன். அது குற்றமன்று; நின்னை எதிர்த்துப் போர் செய்யவே தனியாக நின்றேன்; யான் நின்ற நிலையினின்றும் பெயரமாட்டேன்; என்னேடு எதிர்த்துப் போர் செய்தற்கு வா என்று கூற

அறத்தை அழித்தவனாகிய சுமாலி என்னும் அரக்கன், இடிபோல ஆரவாரம் செய்துகொண்டு மின்னலோடு மாறுபடுகின்ற ஒளி வாய்ந்த வேலினை அத்திருமால்மேல் விடுக்கின்றான். திருப்பாற் கடலில் எழுந்த கொடிய ஆலகாலத்தையுண்ட சிவபிரான் பெற்ற முருகனுடைய கையில் உள்ள வேலைப் போன்ற அந்த வேல், நெருப்புப்போலக் கனன்று எதிர்சென்று திருமகள் தங்கியுள்ள திருமாலின் மார்பில் தைக்கின்றது. அந்தவேலினைத் திருமால் கையில் பிடித்து எடுத்து அந்தச் சுமாலியின் மார்பில் எறிகின்றான். அக்கொடியவேல் வாழைப் பழத்தில் நுழைகின்ற ஊசியைப்போல் சுமாலியின் மார்பில் நுழைந்து உருவி ஓடிட அவன் வலிமை தளர் கின்றான். அதுகண்ட தேவர்கள் சுமாலி இறந்தான் என்று எண்ணி மகிழ்ந்து எழுந்து ஆடுகின்றார்கள். அந்நிலையில் தூங்கி விழித்தவன் போல அந்தச் சுமாலி மயக்கம் தெளிந்தவனாய் ஒரு சூலத்தை எடுத்து அறத்தைக் காக்கும் கடவுளாகிய திருமால்மேல் விடுகின்றான். அச்சூலம் சென்று அத்திருமாலின் கவுத்துவ மணி யணிந்த மார்பில் நுழையாது அவனுக்கு எதிராகத் தள்ளி ஓடிட, அதைக்கண்ட சுமாலி, தன் வலிமை செறிந்த முட்டியால் திரு மாலின் வயிற்றிலும் முகத்திலும் தாக்கிவிட்டு ஒரு வில் கிடத்தற் குரிய தொலைவில் பாய்ந்து சென்று அவ்விடத்தில் உயர்ந்த மலை போல நிற்கின்றான்.

மாலியவானின் குத்துக்களால் உடையாத வலிமையுடைய திருமால், பேரிடிபோல அதட்டொலி செய்யவும் விலகாமல் எதிரில் நின்றவனாகிய சுமாலி, அலைவீசும் கடலிடத்து விழவும், போர்செய்ய வந்த தேரும் யானையும் குதிரையும் காலாளும் ஆகிய நாற்படை யானது மிகப் பெருங் காற்றில் பஞ்சுபோலப் பறந்து ஓடிடவும், கருடன் தன் இறகால் மோதி அறைகின்றான். அவன் இறகுக் காற்றால் படைக்கலமேந்திய அரக்கர்கள் சிலர் புரள்கின்றார்கள். வாடைக் காற்றால் விழும் சருகுகளைப்போல் சிலர் விழுந்து நெருங்கு கின்றார்கள். சிலர் செறிந்த நிலையிலிருந்து பிரிகின்றார்கள். சிலர் திகைக்கின்றார்கள். சிலர் வாயில் உள்ள பற்கள் கழலப்பெறுகின் றார்கள். சிலர் துன்பம் தாங்கமாட்டாமல் உளம் பதைக்கின்றார் கள். சிலர் தம் உள்ளத்தே தம்மைப் பகைத்து கொள்கின்றார்கள். சிலர் பருத்த தோள்கள் முறியப் பெறுகின்றார்கள். சிலர் ஓடுகின்

றவர்களாக முடிகின்றார்கள். வலிய தோள்களையுடைய சுமாலி எனும் அரக்கனும் மாலியவானும் திருமாலின் ஐம்படைகளாலும் கலுழன் சிறகால் வீசும் ஊழிக்காற்றுப் போன்ற காற்றாலும் இந்த உலகில் நாம் பிழைப்பது அரிது என்று எண்ணிப் போரில் தோற்ற வராய்ப் பாதாள உலகிற் சென்று ஒளிந்து வாழ்கின்றார்கள்.

முன்பு முழுவலிமையோடிருந்த மாலியவான் முதலானோர் சாலகடங்கர் தம் மரபினராவர். உன்னோடு எதிர்த்துப் போர் செய்த இராவணன் முதலியோர் புலத்தியன் மரபினராவர் என்று இராமனை நோக்கிக் கூறிய அகத்திய முனிவர் பின்னும் சொல்லு கின்றார்.

பெருங்குணமுடைய இராம! அறத்தை உணராத அரக்கர் குலம் எஞ்சி நிற்காமல் அடியோடு அழிப்பதற்குக் கூரிய சக்கரப் படையுடைய திருமாலுக்கல்லது இயலாது. நீ திருமாலின் அமிச மாதலின் அவ்வரக்கர் குலம் வேரோடு அறுமாறு அறுத்தாய்; வேறு யாரும் இவ்வீரச் செயலைச் செய்யவியலாது; என்பது இப் படலக் கதை.

### ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில் தேவர்களோடு போர் செய்யப் புறப்படும் மாலியவான் முதலிய அரக்கர்கள் நால்வகைப் படைகளோடு சென்றது மட்டுமன்றி மலைகள் போன்ற கோவேறு கழுதை களோடும் பசுக்களோடும் தேர்களை இழுக்கும் ஒட்டகங்களோடும் சிம்சுமாரம் என்கிற மிருகங்களோடும், நாகங்களோடும் சுரு மீன்களோடும் ஆமைகளோடும் மீன்களோடும் கருடன் போன்ற பறவைகளோடும் சிங்கங்களோடும் வேங்கைகளோடும் காட்டுப் பன்றிகளோடும் மான்வகைகளோடும் சென்றார்கள் என்றுள்ளது.

ஒட்டக்கூத்தர் நால்வகைப் படையோடு சென்றது மட்டுமே சொல்லுகின்றார்.

அரக்கர்கள் போர் செய்யத் துணையாகக் கோவேறு கழுதை பசுக்கள், ஒட்டகங்கள் நாகங்கள், கருடன் போன்ற பறவைகள்

சிங்கங்கள் வேங்கைப்புலிகள் காட்டுப் பன்றிகள் மான்வகைகள் என்பவற்றையும் நீரில் போர் செய்ய நேர்ந்தால் துணையாகச் சுறுமீன்கள், ஆமை, மீன்கள் என்பவற்றையும் உடன்கொண்டு சென்றார்கள் என்பது அக்காலப் போர் முறையை நமக்குத் தெளிவுபடுத்துவதாக உள்ளது.

**2. வான்மீகத்தில்:** அரக்கர்கள் தேவர்களோடு போர்செய்யப் புறப்பட்டபோது இலங்கையில் குடிகொண்டிருந்த தேவதைகள், இலங்கையின் அழிவை முன்னமே உணர்ந்து அரக்கர்களைப் பின்பற்றிச் சென்று விட்டதாக உள்ளது.

ஒட்டக்கூத்தர் இந்த நிகழ்ச்சியைச் சொல்லவில்லை.

**3. வான்மீகத்தில் :** அரக்கர்களுக்கு ஆபத்து வரப் போவதை யுணர்த்தும் பூதங்கள் எல்லாத் திசைகளிலும் அரக்கர்க்கு எதிராகக் காணப்பட்டன எனவும் குள்ளநரிகள் இடிமுழக்கம் போல ஊளை யிட்டன எனவும் வான்மீகம் கூறுகின்றது. சிலப்பதிகாரத்தில் சொல்லப்படும் காவற்பூதங்களை ஒத்த பூதங்களாக இருக்கலாம்.

இப்பூதங்களைப் பற்றியும் குள்ளநரிகள் ஊளையிட்டதைப் பற்றியும் ஒட்டக்கூத்தர் ஒன்றும் சொல்லவில்லை.

**4. வான்மீகத்தில் :** அரக்கர் எய்த அம்புகள் திருமால்மேல் விழுந்ததற்கு நெல் வயலில் வெட்டுக்கிளி விழுவதையும் மலையில் கொசுக்கள் விழுவதையும் தேன்குடத்தில் தேனீக்கள் விழு வதையும் கடலில் மகரங்கள் விழுவதையும் பிரளயத்தில் மானிடர் கள் நாராயணனிடத்தில் வந்து விழுவதையும் உவமையாகச் சொல்லியுள்ளார். மேலும் அரக்கர்கள் அம்பு முதலிய ஆயுதங் களால் திருமாலை மூச்சுவிடமுடியாதபடி செய்தார்கள் என்பதற்கு உவமையாகப் பிராணயாமங்கள் பிராமணனை மூச்சுவிடாதபடி செய்வதுபோலச் செய்தார்கள் என்று உவமை கூறப்பட்டுளது.

மேலும் திருமாலின் சங்கொலியாலும் சாரங்கத்தின் நாணொலி யாலும் படைகளாலும் அரக்கர்கள் தாக்குண்டு தோற்றோடியதற்கு உவமை கூறுங்கால், சரபத்தால் சிங்கமும், சிங்கத்தால் யானையும் யானையால் வேங்கையும் வேங்கையால் சிறுபுலியும் சிறுபுலியால்

நாயும் நாயினுல் பூனையும், பூனையால் பாம்பும், பாம்பினுல் எலியும் அஞ்சியோடுதல்போல ஓடினர். என மேலிருந்து கீழ்வரையில் நிரலான உவமைகள் கூறப்பட்டுள்ளன. ஒட்டக்கூத்தர் இந்த உவமைகளைக் கூறவில்லை.

**5. வான்மீகத்தில் :** மாலி, தேரிழந்தவுடன் தண்டாயுதத்தை எடுத்துக் கருடனை நெற்றியில் வேகமாகத் தாக்குகின்ருன். தாக்கப்பட்ட கருடன் அதிக வேதனையுற்றுப் போர்க்களத்தில் திருமாலைப் பின்புறம் பார்ப்பவனுகச் செய்துவிட்டான். அதாவது கருடன் புறம் காட்டிவிட்டான் என்றுளது.

ஒட்டக்கூத்தர் இதனைச் சொல்லவில்லை. திருமாலுக்கு இழிவு தரும் செயலாதலின் விடுத்தார்போலும். வான்மீகத்தில் காணப்படாத ஒரு கருத்தை ஒட்டக்கூத்தர் தம் உத்தரகாண்டத்தில் கூறுகின்ருர். சுமாலி என்பவன் அம்பினுல் அணைகட்டித் திருமாலை நிறுத்தி, அவன் குருதியைக் கையால் கொண்டு குடிப்பேன் என்று வெகுண்டு மலைபோன்ற திண்ணிய தேரை முடுக்கிவந்து தன் சரமாரியால் திருமாலை மூடிவிடுகிருன். அந்த நிலையில் திருமால் சுமாலியின் வலிமையையும் போர்த்திறத்தையும் வியந்து பாராட்டுகின்ருன்.

**நல்லை நல்லை! வலிநன்று நன்று!**
**உயிர் நடுங்கு போர்செயு முபாயமும்**
**வல்லை வல்லை! உனையொக்கும்**
**வில்லிகளிம் மாநிலத்தினிலை** 156

என்பது திருமாலின் பாராட்டு. பகையாய் வந்து எதிர்த்தோரையும் அவர் போர்த்திறம்கண்டு பாராட்டுதல் வீரர்க்குப் பெருமிதம் தரும் செயலாகும். வான்மீகத்தில் கூறப்படாவிடினும் ஒட்டக்கூத்தர் இக்கருத்தைப் புதுவதாக நுழைத்துக் கூறிப் போர் அறத்தில் புது நெறிகாட்டியுள்ளார். இவ்வாறே இராவணன் இராமபிரானின் வீரச் சிறப்பையும் ஆற்றலையும் பாராட்டி மாலியவானிடம் கூறிய செய்தி யுத்த காண்டத்தில் கும்பகருணன் வதைப்படலத்தில் கூறப்பட்டுள்ளமை காணலாம். அங்குப் பாராட்டின் உச்சநிலையில் 'வாசவன் மாயன் மற்றை மலருளோன் மழுவாளங்கை யீசனென்

றினையதன்மை யிளிவரு மிவராலன்றி நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்' (கும்பகருணன் 31) என இராவணன் இராமனைப் பாராட்டியிருத்தல் காணலாம்.

## படலப் பொருட் சிறப்பு

### உவமைகள்

மாலியவான் போர்க்கு ஆயத்தமாய் நம்சேனை முன்னே செல்க என்றவுடன், போரில்லாமையால் சோம்பிக்கிடந்த அரக்கர் மகிழ்ச்சி மீக்கூர்ந்து புறப்பட்ட நிலையைப் புலப்படுத்த 'சோம்பிய நிருதர்சேனை, போர் எனும் வார்த்தை கேட்டுப் பொங்கிய உவகை தூண்டி, ஆர்கலி யுவாவுற்றன்ன ஆர்த்துமிக் கெழுந்ததன்றே' என்று உவமைகூறியுள்ளார். நிறைமதி கண்ட திரைகடல் பொங்கி ஆரவாரம் செய்யும் இயல்பினது. முன்னைய நிலைமாறி நிறைமதி கண்டவுடன் பேராரவாரம் செய்யும் கடல்போல அரக்கர் சேனை சோம்பிக் கிடந்த நிலைமாறி மாலியவான் வார்த்தை கேட்டவுடன் மகிழ்ச்சிபொங்கி ஆரவாரித்தது என்பது பொருத்தமான உவமை யாதல் காணலாம்.

திருமால் அரக்கரோடு போர்க்குப் புறப்படுகின்றான். பொன்னிறம் பொருந்திய கருடன் தோள்மேல் ஏறிக்கொண்டு கவுத்துவமணி முதலிய அணிகலன்கள் பேரொளி செய்யக் கையில் வில்லுடன் கருநிறம் கொண்ட திருமால் வரும் தோற்றத்திற்கு ஏற்ற உவமை ஒன்று கூறுகின்றார்.

> பொன்னெடு மேருவுச்சிப் பொருசிலை யோடும் கூட
> மின்னெடுந் தழுவி நின்று வீங்குகார் மேகம் போன்றான்

என்பது அவ்வுவமை. பொன்மயமான நெடிய மேருமலையின் உச்சியில் இந்திர தனுசுடன் மின்னலையும் பொருந்தி நின்று உயர்ந்து தோன்றுகின்ற கரிய மேகத்தைப் போன்று விளங்குகின்றான் என்பது அற்புத உவமையாகும். பொன்னிறக் கலுழனுக்குப் பொன்னெடு மேருமலையும், திருமாலின் சாரங்கம் என்ற வில்லுக்கு இந்திரதனுசும், அவன் அணிகல ஒளிக்கு மின்னலும் அவன் கரிய திருமேனிக்குக் கார்மேகமும் உவமையாயின. இந்த

உவமைகள் ஒன்றற்கொன்று இயைபுடையவாய் அற்புதம் தோன்ற வருதலின் இது அற்புத உவமையாயிற்று.

திருமாலின் சக்கரப்படையால் அறுப்புண்ட தலைகள் முதலில் சக்கரத்தோடு விண்ணில் சென்று பின் அது தள்ளியவுடன் தரையில் விழ்கின்ற தோற்றம், போர்க்களத்துப் பொருந்திய வீரமகளாகிய கொற்றவை, தன் கையில் வைத்து ஆடுகின்ற அம்மனைக் காய்களைப்போன்று காணப்பட்டன என்று ஆசிரியர் கூறும் உவமம் புலவர்களுக்குப் புதுவிருந்தாய்ப் பொலிவது காணலாம். தரையில் அமர்ந்து அம்மனைக்காய் ஆடும் பெண்கள் அக்காய்களைக் கையால் உயர எறிந்து பின்பு அவை தரையில் வீழும்போது கையில் பற்றிக் கொள்வது இயல்பு என்பது இங்கு உளங்கொள வேண்டும். சக்கரப்படை கொற்றவையின் கைபோன்றது என்பது குறிப்புவமையால் பெறப்படும். இனி அரக்கர்கள் ஏந்திவந்த வெண்கொற்றக் குடையின்மேல் அரக்கர்களின் அறுப்புண்ட கரிய கைகள் வீழ்கின்ற தோற்றம், குளிர்ச்சி மிக்க முழுமதியைப் பற்றுகின்ற இராகு என்னும் கரிய பாம்பு போன்றது என உவமைகூறி மகிழ்கின்றார். இவையெல்லாம் தற்குறிப்பேற்ற உவமையின் பாற்படும்.

இனி, திருமாலின் சக்கரப்படை சில அரக்கர்களின் கால், கை, தலை ஆகிய ஐந்து உறுப்புக்களை அறுத்துத் தள்ளிய நிலையில் கரிய அவ்வுடம்புகள் கிடக்கும் தோற்றம், தலையும் நான்கு காலும் ஆகிய ஐந்துறுப்புகளை அடக்கிக் கிடக்கும் நீலநிற ஆமையை ஒத்துத் தோன்றின என்கிறார். அரக்கரின் கருநிறம் கருதி நீல ஆமையை உவமையாகக் கூறுகின்றார். இங்குத் திருவள்ளுவ நாயனாரின் திருக்குறளை நினைவிற்கொண்டு இது கூறியுள்ளார் என்று நினையலாம். ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின் எழுமையு மேமாப்புடைத்து' (குறள்-126) என்புழி, ஐம்பொறி அடக்கத்திற்குத் தனக்குத் தீங்கு நிகழாதிருக்க ஐந்துறுப்பினை அடக்கிக் கொள்ளும் ஆமையை உவமை கூறியிருத்தல் காணலாம்.

இனி, செய்யுளில் எதுகை நயம் தோன்றச் சொற்களை அமைத்து முடிப்பது இவர் வழக்கமாகக் காணப்படுகின்றது.

"அதிர மோதினன் அசுப மோதினன்" (25)
"வானவர்க ளாடினர் நிருதர் வாடினர்" (26)
"செம்பள வாயில்வைத்து வளை யூதினன் மறைகளோதினன்" (27)
"ஒரு கண்டம் நூறு பல கண்டம் ஆயினர்கள் கண்டரே" (32)
"நின்றார் பகைவென்றார்" (33)
"ஒளிவேலினை விடுத்தான் அறம் கெடுத்தான்" (37)
"பாதாளமது அடைந்தார் இகலிடைந்தார்" (45)

என்பன காண்க.

### சிவன் திருமால் இவர்களிடம் அமரர் சென்று வேண்டியதை மாலியவான் அறிதல்

137. இமையவ ரரக்க ராலே
யுற்றதம் மிடும்பை யெல்லாம்
உமையொரு பாகத் தானுக்
கொழிவின்றி யுரைத்த வாறும்
நமையடைந் தவரை நாமே
வெல்கைநன் றன்று நாகத்
தமைதுயி லரிபாற் சென்மி
னென்றவ னறைந்த வாறும்.

இமையவர் அரக்கராலே உற்றதம் இடும்பை எல்லாம்
உமை ஒருபாகத் தானுக்கு ஒழிவின்றி உரைத்தவாறும்,
நமை அடைந்தவரை நாமே வெல்கை நன்றுஅன்று நாகத்து
அமைதுயில் அரிபால் சென்மின் என்று அவன் அறைந்த வாறும்.

பொ: தேவர்கள் அரக்கராலே அடைந்த துன்பம் எல்லாவற்றையும் உமையம்மையை இடப்பாகத்தே கொண்டுள்ள சிவபிரானுக்கு ஒன்றுவிடாது சொன்ன தன்மையும் அச்சிவபிரான், "நம்மை அடைக்கலமாக அடைந்த அவ்வரக்கரை நாமே கொன்று

வென்றி கொள்ளுதல் நல்லது அன்று; பாம்பணையில் படுத்துத் துயிலுகின்ற திருமாலிடத்துச் சென்று சொல்லுங்கள்'' என்று சொன்ன தன்மையையும்.

கு: இமையா நாட்ட முடையவர்தம் இமையின் சிறப்பால் இமையவர் எனப் பெயர் பெற்றனர். இடும்பை-துன்பம். அரக்கர்க்கு ஆற்றலும் ஆக்கமும் கொடுத்துப் பாதுகாத்தவன் சிவபிரானே ஆகலின் அவர்களை நமையடைந்தவர் என்று உரிமை பாராட்டினன் என்க. நாகத்து அமைதுயில் அரி என்றது, ஆதி சேடன் என்னும் பாம்பினை அணையாகக் கொண்டு பாற்கடலில் அறிதுயில் அமர்ந்த திருமாலினை. இமையவர்க்கு இடுக்கண் செய்யும் அரக்கரை அழிப்பது முறையே யாயினும் தன்னையடைந்தவரைத் தானே அழித்தல் தகாது ஆகலின் திருமாலைக்கொண்டு அவ்வழித்தல் தொழிலை நிகழ்த்த எண்ணியே இங்ஙனம் கூறினர் என்க. உரைத்தவாறும், அறைந்தவாறும் அருள்செய்தவாறும் சாரணர்தாம் கூற என அடுத்த செய்யுளில் முடியும்; குளகம். அறைதல்-சொல்லுதல். (௬)

138. அந்த மந்திரத்தை நெஞ்சிற்
கொண்டு தம்மல்ல லெல்லாம்
செந்திரு மகள்கோ னுக்குத்
தேவர்கோன் செப்ப வுங்கள்
சிந்தைநோய் தீர்ப்பென் திண்ண
மென்றருள் செய்த வாறும்
வந்தசா ரணர்தாங் கூற
மாலிய வானுட் கொண்டான்.

அந்த மந்திரத்தை நெஞ்சிற் கொண்டுதம் அல்லல் எல்லாம் செந்திரு மகள்கோனுக்குத் தேவர்கோன் செப்ப, 'உங்கள் சிந்தைநோய் தீர்ப்பென் திண்ணம்' என்று அருள் செய்தவாறும் வந்த சாரணர்தாம்கூற மாலியவான் உட்கொண்டான்.

பொ : அந்த ஆலோசனையை மனத்திற்கொண்டு தன் துன்பங்களை எல்லாம் சிவந்த நிறத்தினையுடைய திருமகளின் மணாளனாகிய திருமாலுக்கு இந்திரன் சொல்ல (அத்திருமால்) உங்கள் உள்ளத்தில் உள்ள துன்பத்தைத் தீர்ப்பேன். இது திண்ணம். என்று அருள்செய்த தன்மையையும் அறிந்துவந்து ஒற்றர்கள் சொல்ல மாலியவான் கேட்டு மனத்திற் கொண்டான்.

கு : அல்லல்-துன்பம். தேவர்களின் பிரதிநிதியாகத் தேவேந்திரனே திருமாலிடம் தம் அல்லலை எல்லாம் சொன்னான் என்க. மந்திரம்-ஆலோசனை. சாரணர்-ஒற்றர். தேவர்கள் சிவபிரானிடம் சென்று தம் துன்பத்தைச் சொன்னதும் அவர் திருமாலிடம் சொல்லுமாறு பணிக்க, அவ்வாறே திருமாலிடம் சென்று சொல்ல, அத்திருமால் அவர் துன்பம் நீக்குவதாக உறுதி கூறியதும் அறிந்த ஒற்றர் மாலியவானுக்குக் கூற, அவன் அதனைக் கருத்திற் கொண்டான் என்க. (உ)

### மாலியவான் தம்பியரோடு ஆலோசித்தல்

139. தம்பியர்க் குற்ற தெல்லாந்
தானுரைத் தவருந் தானும்
வெம்பிய மனத்த ராகி
மேற்செயும் வினைக டேர்வார்
அம்புயக் கண்ணன் றன்மே
லாயிலோர் குற்றமில்லை
உம்பர்க ளவன துள்ளந்
திரித்துடன் படுத்திக் கொண்டார்.

தம்பியர்க்கு உற்றது எல்லாம் தான் உரைத்து அவரும் தானும்
வெம்பிய மனத்தர் ஆகி, மேற்செயும் வினைகள் தேர்வார்;
அம்புயக் கண்ணன் தன்மேல் ஆயில் ஓர் குற்றம் இல்லை
உம்பர்கள் அவனது உள்ளம் திரித்து உடன்படுத்திக் கொண்டார்.

பொ: மாலியவான் தன் தம்பியர்க்கு நிகழ்ந்ததை எல்லாம் சொல்லி அத்தம்பியரும் தானும் வெகுளியால் வெம்பிய மனத்தராகி, இனி மேலே செய்யத்தக்க செயல்களை ஆராய்வாரானார். ஆராயுமிடத்துத் தாமரை மலர் போன்ற கண்ணையுடைய திருமால் மேல் குற்றமொன்றுமில்லை. தேவர்கள் அத்திருமாலின் உள்ளத்தினை மாற்றித் தமக்குச் சாதகமாக உடன்படுத்திக் கொண்டார்கள்.

கு: ஆயில், அம்புயக்கண்ணன் தன்மேல் ஓர் குற்றமில்லை என இயையும். பின்னிரண்டடியும் மாலியவான் கூற்று. அம்புயக் கண்ணன் என்றது திருமாலை. ஆராயுமிடத்து திருமால் மேல் குற்றமில்லை எனவே, அத்திருமாலின் உள்ளத்தை வேறுபடுத்தி நம்மேல் பகைகொள்ளுமாறு செய்த தேவர்கள் செயலே குற்றமுடைத்து என்பது கருத்தாயிற்று. திரித்தல்–வேறுபடுத்தல். (௩)

மாலியவான் போர்க்கு ஆயத்தமாதல்

140. ஆதலா னம்மை யெல்லா
மடியற வெண்ணு மந்தப்
போதமி லாத தேவர்
பொன்னகர் பொடிய தாக்கிக்
காதிமற் றவரை யெல்லாங்
களம்படக் கொன்று மீடும்
தீதினஞ் சேனை முன்னே
செல்கதேர் வருக வென்றான்.

'ஆதலால் நம்மை எல்லாம் அடிஅற எண்ணும் அந்தப்
போதம் இலாத தேவர் பொன்னகர் பொடியது ஆக்கி,
காதி மற்றவரை எல்லாம் களம்படக் கொன்று மீள்தும்,
தீதுஇல் நம் சேனை முன்னே செல்க! தேர் வருக' என்றான்.

பொ: 'ஆதலால், அரக்கராயுள்ள நம்மை எல்லாம் அடியோடு அற்றுப்போக வேண்டும் என எண்ணுகின்ற அந்த அறிவில்லாத

தேவர்களின் பொன்னகரம் பொடியாகுமாறு செய்து அழித்து, அங்குள்ள தேவரை எல்லாம் போர்க்களத்தில் இறந்துபடுமாறு கொன்று மீள்வோம். நிமையில்லாத நம் சேனை முன்னே புறப் பட்டுச் செல்வதாக! எனக்குரிய தேர் ஆயத்தமாக வருவதாக' என்று கட்டளையிட்டான்.

கு : திருமாலை நம்மேல் ஏவினவர்கள் தேவர்களே ஆதலால், அவர்தம் பொன்னகரை யழித்து அத்தேவர்களைக் கொன்று மீள்வோமாக என மாலியவான் நெடுமொழி கூறியவாறு. போதம்-அறிவு. அழிக்கமுடியாத வரம்பெற்றுள்ள நம்மை அடியற எண்ணும் தேவர்கள் அறிவுள்ளவராக இருத்தல் இயலாது என்ற கருத்தால் 'போதமிலாத தேவர்' என இழித்துக் கூறியவாறு காதி-அழித்து. களம்படக்கொன்று என்னும் தொடர் 'செங்களம் படக் கொன்றவுணர்த் தேய்த்த' (குறுந்தொகை-1) என்ற குறுந் தொகையடியை நினைப்பித்தல் காணலாம். மாலியவான் கருத்தின் படி அவன் சேனை நீதில்லாத சேனையாகவே காணப்படுதலின் நீதில் நம்சேனை எனப் பொருள் கூறலும் ஆம். நம் சேனைமுன்னே செல்க! தேர் வருக! என்ற தொடர் ஓசைநயத்தாலும் சொல் முர ணாலும் அவன் வீரச் சிறப்பை விளக்குவது காணலாம். (ச)

அரக்கர் சேனை போர் என்ற சொல்லைக்கேட்டு மகிழ்ந்து எழுதல்

141. வீரரா யுள்ளோர் மண்ணில்
விண் ணுல கத்தில் யாரும்
நேரெதிர்ப்போரை யின்றிச் சோம்பிய
நிருதர் சேனை
போரெனும் வார்த்தைகேட்டுப்
பொங்யெ வுவகை தாண்டி
ஆர்கலி யுவாவுற் றென்ன
வார்த் துமிக் கெழுந்த தன்றே

வீரராய் உள்ளோர் மண்ணில் விண்ணுலகத்தில் யாரும்
நேர்எதிர்ப்போரை இன்றிச் சோம்பிய நிருதர் சேனை
போர் எனும் வார்த்தைகேட்டுப் பொங்கிய உவகை தூண்டி
ஆர்கலி உவாஉற்றென்ன ஆர்த்துமிக்கு எழுந்தது அன்றே.

பொ: மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும் வீரராய் உள்ளோரில் தம்மோடு நேர்நின்று எதிர்த்துப் போர் செய்வோர் யாரையும் இல்லாமையாலே சோம்பியிருந்த அரக்கர் சேனை, இப்போது போர் எனும் வார்த்தைக் கேட்ட அளவில் பொங்கிய மகிழ்ச்சி தூண்டுதலால் கடல், நிறைமதியை அடைந்தால் ஆரவாரிப்பது போல, மிகுதியாக ஆரவாரித்து எழுந்தது.

கு: மண்ணில் விண்ணுலகத்தில் வீரராயுள்ளோர் நேரெதிர்ப்போர் யாரையுமின்றி எனக்கொண்டு கூட்டுக. சோம்புதல்-மடிந்திருத்தல். 'எய்யென எழுபகை எங்குமின்மையால் மொய்பொருதினவுறு முழவுத் தோளினன்' (பால. அரசியற்) என்பதும் போரெனிற் புகலும் புனைகழல் மறவர்' (புறநா-31) என்பதும் இங்கு நினைக்கத்தக்கன. போர் எனும் சொல்லைக்கேட்டு ஆரவாரித்த சேனைக்கு நிறைமதி கண்ட கடல் ஆர்த்தல் தொழிலாலும் பரப்பாலும் உவமையாயிற்று. (ரு)

நால்வகைச் சேனையும் புறப்படுதல்

142. எறிபடை வீரர் பாய்மா
இருள்மதக் களிறு திண்டேர்
செறிதலிற் பக்கம் பேர
விடப்பெறு துள்ளே தேங்கி
மறிகடன் மோழை பட்ட
தாமென வாயி ரூறும்
உறுபடை வெள்ளந் தள்ளிப்
பரந்ததெவ் வுலகு முட்க.

எறிபடை வீரர் பாய்மா இருள்மதக் களிறு திண்தேர்
செறிதலில் பக்கம் பேர இடம் பெறுது உள்ளே தேங்கி
மறிகடல் மோழைபட்டது ஆம் என வாயில் தோறும்
உறுபடை வெள்ளம் தள்ளிப் பரந்தது, எவ்வுலகும் உட்க.

பொ: பகைவர்மேல் எறிதற்குரிய படைக்கலங்களை யுடைய வீரர்கள், பாய்ந்து செல்லும் குதிரைகள், கரிய மதம் பெருக்கும் யானைகள் திண்ணிய தேர்கள் ஆகிய நால்வகைப் படைகளும் நெருங்குதலால் பக்கத்தில் பெயரவும் இடம் பெறுது மதிலின் வாயிலுக்குள்ளே தேங்கி நின்றுபின், அலைவீசுகின்ற கடல் உடைபட்டதுபோல வாயல்கள் தோறும் பெரிய படையாகிய வெள்ளம் முன் தள்ளிக் கொண்டு எந்த உலகமும் அஞ்சுமாறு வாயில்களில் புறப்பட்டுப் பரவியது.

கு: வீரர் என்றது காலாட்படையை. பாய்மா என்றது குதிரைப்படையை. களிறு என்றது யானைப்படையை. இருள் மதம் என்றது யானை மதத்தின் நிறத்தினைப் புலப்படுத்தவேண்டி. இருள் போன்ற கரிய களிறு என இயைத்துக் கூறலும் ஆம். திண்டேர் என்றது தேர்ப்படையை. வைகலும் எண்டேர் செய்யும் தச்சன் திங்கள் வலித்த சக்கரமும் பிற உறுப்புக்களும் உடைமை பற்றித் 'திண்தேர்' எனச் சிறப்பித்தவாறு செறிதல்-நெருங்குதல். நால் வகைப்படையும் மதில் வாயிலில் நுழையும்போது உளதாகும் நெருக்கத்தைப் புலப்படுத்த வேண்டி 'பக்கம்பேர இடம் பெறுது உள்ளே தேங்கி' எனவும் அப்படைகள் வாயிலில் நுழைந்து புறப்படும்போது உள்ள தோற்றத்தைப் புலப்படுத்த வேண்டி 'உறுபடை வெள்ளந் தள்ளிப் பரந்தது' எனவும் கூறினர். படை வெள்ளம் என்றது உருவகம். மோழைபடுதல் என்பது கடலின் கரை ஒருபக்கம் உடைபடுதல். கரை உடைபட்ட வழியில் கடல் நீர் பெருக்கெடுத்து வருதல் போல நான்கு வாயில்களிலும் சேனை கள் தள்ளிக்கொண்டு புறப்பட்டுப் பரவியது என்று உவமையை விரித்துக் கொள்க. உட்குதல் அஞ்சுதல். இச்சேனை மிகுதிகண்டே எவ்வுலகும் அஞ்சும் என்றபடி. (௬)

வாயிலில் நுழையாது விண்வழியே சேனை புறப்படுதல்

143. இடருறு கருமம் பார்த்தோ
மென்னகா ரியஞ்செய் தோமென்
றுடனடுங் கும்ப ரெல்லா
மொளிப்பிடந் தேடி யோடப்
புடைபரந் துயர்ந்த வாயிற்
போக்கிடம்பெறுது வானில்
தடமுகில் பரந்த தென்னப்
பரந்தது தானை வெள்ளம்.

இடர்உறு கருமம் பார்த்தோம் என்ன காரியம் செய்தோம் என்று
உடல் நடுங்கு உம்பர் எல்லாம் ஒளிப்பிடம் தேடி ஓட,
புடைபரந்து உயர்ந்த வாயில் போக்கு இடம்பெறுது வானில்
தடமுகில் பரந்தது என்னப் பரந்தது தானை வெள்ளம்.

பொ: அரக்கர்கள் துன்புறுதற்குக் காரணமான கருமத்தை ஆராய்ந்து செய்தோம். (அது நமக்கே இடர்தரும் கருமமாயிற்றே) என்ன காரியம் செய்துவிட்டோம் என்று உடல் நடுங்குகின்ற தேவர் எல்லாம் ஒளிதற்குரிய இடம் தேடிக்கொண்டு ஓடும்படியாகப் பக்கம் பரந்து உயர்ந்துள்ள வழிகளில் போதற்கு இடம் பெருமையால் வானத்தில் பெரிய மேகங்கள் பரவிச் செல்வது போல, அரக்கர் சேனையாகிய வெள்ளம் மதிலேறி வான்வழியே எழுந்து சென்றது.

கு: வாயில்களில் நெருக்கமிருந்தமையால் அரக்கர் சேனை மதில்மேலேறி விண்வழியாக வருதலைப்பார்த்த தேவர்கள், அரக்கர்க்கு இடர் செய்யப்போய் நமக்கே இடர் தேடிக் கொண்டவர்களானேமே என்ற கருத்தால் 'இடருறு கருமம் பார்த்தோம் என்ன காரியம் செய்தோம் என்று உடல் நடுங்கிக் கொண்டு ஒளித்தற்கு இடம் தேடி ஓடலாயினர்' என்க. பெருஞ் சேனை செல்வதற்கென்றே வகுத்த வாயில்கள் பரப்பும் உயர்வும் உடைய வாயினும் எல்லாம் ஒருகாலத்தே புகுந்து செல்ல இடம்

பெருமையால் அரக்கர் சேனை போர்மேல் உள்ள பெருவிருப்பால் மதில்மேலேறி வான்வழி சென்று பரந்தது என்க. கரிய நிறத்தரக்கர் விண்வழிச் செல்லும் தோற்றம் பெரிய முகிற்கூட்டம் வானில் பரவிச் செல்வது போன்றிருந்தது என்க. நிறமும் தொழிலும் பற்றி அரக்கர் சேனைக்குக் கருமுகில் உவமையாயிற்று. தானை வெள்ளம் உருவகம். 'தூர்த்த வானரந்துங்க வரைகளால் சீர்த்த பேரணை தன்னையும் சிந்தின வார்த்ததன்ன மதிலின் வரம்பு கொண்டு, ஆர்த்த வார்கலி காரொடு மஞ்சவே' உயுத்த-முதற் போர் 13) என்ற பாடல் இங்கு ஒப்பு நோக்கத் தகுவது. (எ)

மாலியவான் முதலிய மூவரும் தேரேறுதல்

144. காலிடை யணிந்த வீரக்
கழலினர் கவச மிட்ட
கோலநீள் மார்பர் பட்டங்
குலவிய நுதலர் கொற்ற
மாலிய வானு மற்றைச்
சுமாலியு மாலி தானும்
நீலமால் வரைபோன் மெய்ப
ரேறினர் நெடும்பொற் றிண்டேர்.

**காலிடை அணிந்த வீரக் கழலினர், கவசம் இட்ட**
**கோல நீள் மார்பர், பட்டம் குலவிய நுதலர், கொற்ற**
**மாலிய வானும் மற்றைச் சுமாலியும் மாலி தானும்**
**நீலமால் வரைபோல் மெய்யர் ஏறினர், நெடும்பொன் திண்தேர்.**

பொ : வீரக்கழல் அணிந்த காலினையுடையவராய்க் கவசம் இட்ட அழகிய நீண்ட மார்பினையுடையராய் வீர பட்டம் விளங்கிய நெற்றியையுடையவராய் வெற்றிமிக்க மாலியவானும் மற்றுள்ள சுமாலியும் மாலியும் நீலநிறம் பொருந்திய பெரிய மலைபோன்ற உடம்பையுடையவராய் நெடிய பொன்னாலியன்ற திண்ணிய தேர்மேல் ஏறினர்கள்.

கு: மார்பர், நுதலர் என்பவற்றிற்கேற்பக் 'கழலினர்' என்பதிலுள்ள இன்சாரியையும் அவ் விகுதியையும் பிரித்துக் 'காலினர்' எனக் கூட்டுக. வீரக் கழலணிந்த காலினர் என்க. பட்டம் என்றது வீர பட்டத்தை. மாலியவான் முதலிய மூவர் உடம்பிற்கும் நீலமால்வரை நிறமும், அளக்கலாக அளவும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் பற்றி உவமையாயின. திண்டேர் ஏறினர் என்க. அவர்தம் தோற்றத்திற்கேற்றவாறு நீண்டும் அவர் செல்வத்திற்கேற்றவாறு பொன்னால் செய்யப் பெற்றும் அவர் வலிமைக்கேற்றவாறு திண்மை பெற்றும் விளங்கும் தேர் என்பார். 'நெடும்பொன் திண்டேர்' என்றார். (அ)

தேரொலி முதலிய ஒலிகள் உலகெங்கும் பரவுதல்

145. தேரொலி கொம்பு காளஞ்
செறிவளை சின்னமூதும்
பேரொலி முழங்கு பேரி
முரசொலி பெருங்கை வேழக்
காரொலி கவன மாவாங்
காற்றொலி எல்லாம் கூடி
ஓரொலி யாகி யெங்கும்
பரந்ததெவ் வுலகு முட்க.

தேர்ஒலி கொம்பு காளம் செறிவளை சின்னம் ஊதும்
பேர்ஒலி முழங்குபேரி முரசுஒலி பெருங்கைவேழக்
கார்ஒலி கவனமாவாம் காற்றுஒலி எல்லாம் கூடி
ஓரொலி யாகி எங்கும் பரந்தது எவ்வுலகும் உட்க.

பொ: தேர் ஓடுங்கால் எழும் ஒலியும் ஊதுகொம்பு எக்காளம், நெருங்கிய சங்கு சின்னம் என்பவற்றை ஊதும் பேரொலியும் முழங்குகின்ற பேரியாகிய முரசத்தின் ஒலியும் பெரிய கையை யுடைய யானையாகிய மேகத்தின் ஒலியும் விரைந்து செல்லும் குதிரையாகிய காற்றின் ஒலியும் எல்லாம் சேர்ந்து ஒரு பெரிய ஒலியாகி எவ்வுலகும் அஞ்சுமாறு எவ்விடத்தும் பரவியது.

கு : தேர் ஓடுங்கால் அத்தேரில் கட்டிய மணி முதலியன ஒலித்தலையே தேரொலி என்றார். காளம்-எக்காளம். வளை-சங்கு. சின்னம் ஊது கருவியில் ஒருவகை. பேரிமுரசம் என்பது மிமிசைச் சொல். யானை நிறத்தாலும் முழக்கத்தாலும் மேகம் போலுதலின் வேழக்கார் என உருவகஞ் செய்தவாறு. குதிரை காற்றைப்போல விரைந்து செல்லும் தன்மை பற்றிக் காற்றுக உருவகஞ் செய்த வாறு. நால்வகைப் படையுள் தேரொலியும் யானை ஒலியும் குதிரை ஒலியும் பிரித்துக் கூறப்பட்டமையின் கொம்பு முதலியன ஊதும் பேரொலி காலாட்படையின் ஒலியாகக் கொள்ளலாம். எங்கும் ஒரே ஒலிமயமாக இருப்பதையறிந்து எல்லாவுலகங்களும் அஞ்சின என்றவாறு. கவனம்-வேகம். கவனமா-குதிரை, குதிரை நடைக்குக் கவனம் என்ற பெயருமுண்டு. (சு)

### சேனை செல்லுங்கால் எழுந்ததூளி

146. பண்ணுறு பாய்மா வேழம்
படர்கொடி நெடுந்தேர் காலாள்
எண்ணுறு சேனை பார்கீ
ழிழிந்திட வெழுந்து பொங்கி
விண்ணுல காய தெல்லாம்
வெளியிட மின்றி விம்மி
மண்ணுல காகும் வண்ணஞ்
சேர்ந்தது வளர்ந்த தூளி

**பண்ணுறு பாய்மா வேழம் படர்கொடி நெடுந்தேர் காலாள்**
**எண்ணுறு சேனை பார்கீழ் இழிந்திட எழுந்து பொங்கி**
**விண்ணுலகு ஆயதெல்லாம் வெளியிடம் இன்றி விம்மி**
**மண்ணுலகு ஆகும் வண்ணம் சேர்ந்தது வளர்ந்த தூளி.**

பொ : அலங்கரிக்கப் பெற்ற குதிரை, யானை, படர்கின்ற கொடிகள் கட்டிய நெடிய தேர், காலாள் என்று எண்ணுகின்ற நால்வகைச் சேனைகளும் பூமிகீழே தாழும்படி புறப்பட்டெழுந்து

உலகமுழுதும் மிக்குப் பரவினமையால் வளர்ந்த மண்துகள் விண்ணுலகம் என்று சொல்லப்படும் இடம் எல்லாம் வெளியிடம் இல்லாமல் பெருகி அவ்விண்ணுலகு மண்ணுலகு ஆகும் வண்ணம் விண்ணில் சேர்ந்தது.

கு: பண்ணுதல்—அலங்கரித்தல். போர்க்கு ஆய்த்தம் ஆக்குதலும் ஆம். பாய்மா-பாய்ந்து செல்லும் இயல்புடைய குதிரை. தேரில் கொடிகள் கட்டுதல் மரபு ஆதலின், படர் கொடி நெடுந் தேர் என்றார். கட்டிய இடத்தில் நில்லாமல் பிறிதிடத்துப் படர்ந்து ஆடும் இயல்பு தோன்றப் 'படர்கொடி' என்று சிறப்பித்தார். எண்ணுறு என்பதற்கு மதிக்கப்படுகின்ற என்ற பொருளும் கூறலாம். பார்கீழ் இழிதலாவது நால்வகைப் படையின் பாரம் தாங்கமாட்டாது பூமி கீழே தாழ்தல். பொங்குதல்-மிக்குப் பரவுதல். பொங்கி என்பது காரணப் பொருளது. பொங்குதலால் வளர்ந்த தூளி வெளியிடமின்றி விம்மிச் சேர்ந்தது என இயையும். விண்ணுலகில் வெளியிடம் இல்லாமல் மண்தூளி பெருகிச் சேர்ந்ததால் அவ்விண்ணுலகு மண்ணுலகாயது என்பார், 'விண்ணுலகாய தெல்லாம் வெளியிடமின்றி விம்மி மண்ணுலகாகும் வண்ணம் சேர்ந்தது வளர்ந்த தூளி' என்றார். தூளி—மண்துகள். (கசு)

### தீய நிமித்தங்கள் கண்டும் மீளாது அரக்கர் சேனை செல்லுதல்

147. உதிரமு மென்பு மேகம்
பொழிந்திட வோங்கல் கம்பித்
ததிர்படக் காக மேங்க
வன்னதுன் னிமித்தங் கண்டு
மதியினிற் கொண்டு மீளார்
வாளெயிற் றரக் கருந்தும்
விதியினை வெல்ல வல்லார்
யாவரே வினைய மெண்ணி

**உதிரமும் என்பும் மேகம் பொழிந்திட, ஓங்கல் கம்பித்து அதிர்பட, காகம் ஏங்க, அன்ன துன்னிமித்தம் கண்டும் மதியினிற் கொண்டு மீளார், வாள் எயிற்று அரக்கர், உந்தும் விதியினை வெல்ல வல்லார் யாவரே வினையம் எண்ணி.**

பொ: மேகம் உதிரத்தையும் என்பையும் பொழிந்திடவும் மலைகள் நடுங்கி அதிரவும் காகங்கள் ஏங்கி அழவும் நிகழ்கின்ற அத்தன்மையான துன்னிமித்தங்களை வாள் போன்ற பற்களையுடைய அரக்கர் கண்டும், அத்திய நிமித்தங்களை மனத்திற்கொண்டு மீளாமல் சென்றனர் 'தம்மைப் பிடர் பிடித்துத் தள்ளுகின்ற விதியினை வெல்லும் உபாயத்தைச் சிந்தித்துப் பார்த்து வெல்ல வல்லவர் யாருளர்? யாருமிலர்.

கு: மேகங்கள் இரத்தமழை சொரிதல் முதலியன தமக்குத் தீய நிமித்தம் என்று உணர்ந்து அரக்கர் போர்க்குப் போகாது மீண்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் செய்யாது மேலும் போர்க்குச் சென்று கொண்டேயிருந்தது, விதியது வலியினாலாயது என்பார் 'மீளார் வாளெயிற்றரக்கர் உந்தும் விதியினை வெல்ல வல்லார் யாவரே வினையமெண்ணி' என்றார். 'வாளெயிற்றரக்கர் துன்னிமித்தங் கண்டும் மதியினிற் கொண்டு மீளார் எனவும் 'உந்தும் விதியினை வினையம் எண்ணி வெல்லவல்லார் யாவரே' எனவும் இயையும். இது வேற்றுப் பொருள்வைப்பணி. போர்செய்து இறப்பாயாக எனப் பின்னிருந்து பிடர்பிடித்து உந்துகின்ற விதியினை வெல்லும் உபாயத்தைச் சிந்தித்து வெல்லவல்லவர் யாவரே என்றது, ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினும் தான் முந்துறும்.' (திருக்குறள்-380) என்பதை நினைந்து கூறியதாகும். 'விதி வழிமதி' என்றவாறு. உந்துதல்-தள்ளுதல். வினையம்—உபாயம். மேகம் உதிரத்தையும் எலும்பையும் மழையாகப் பொழிதலும் மலைகள் நடுங்கி அதிர்தலும் காகங்கள் ஏங்கி அழுதலும் அரக்கர்க்குப் பின்வரும் தீமைகளை முன் அறிவிக்கும் நிமித்தங்களாகும். (கக)

திருமால் கருடனில் ஏறிவந்து அரக்கரைத் தாக்குதல்

148. அரக்கரா ரம்ப மெல்லா
மமரர்கள் விடுத்த தூதர்
உரைத்தலு முறக்க நீங்கி
யுணர்ந்தெழுந் துவணப் புள்ளின்

வரைத்தடந் தோளி லேறி
வானவர் வாழ்த்த வந்தச்
செருக்கினர் படையைச் சென்று
தாக்கினன் றிருவின் கேள்வன்.

**அரக்கர் ஆரம்பம் எல்லாம் அமரர்கள் விடுத்ததூதர்**
**உரைத்தலும் உறக்கம் நீங்கி உணர்ந்து எழுந்து, உவணப்புள்ளின்**
**வரைத்தடம் தோளில் ஏறி வானவர் வாழ்த்த வந்துஅச்**
**செருக்கிளர் படையைச் சென்று தாக்கினன், திருவின் கேள்வன்.**

**பொ :** அரக்கர் அமரரோடு போர் செய்ய வரும் ஆரவாரத்தை யெல்லாம் தேவர்கள் விடுத்த தூதர் வந்து சொல்லுதலும் திருமகளின் மணாளனாகிய திருமால், உறக்கத்தினின்றும் நீங்கி உணர்ச்சி பெற்று எழுந்து கருடப்புள்ளின் மலைபோன்ற பெரிய தோளில் ஏறிக்கொண்டு தேவர்கள் தன்னை வாழ்த்தச் சென்று போர்க்கிளர்ச்சியையுடைய அரக்கர் படையைத் தாக்கினான்.

**கு:** அரக்கர்களின் போராரவாரத்தைக் கண்ட அமரர்கள் தூதுவர் வழித் திருமாலுக்குச் சொல்லியனுப்பத் திருமாலுணர்ந்து கலுழன்மேலேறிவந்து அவ்வரக்கர்களைத் தாக்கினான் என்றவாறு. ஆரம்பம்-ஆரவாரம். உவணப்புள்-கருடன். வரைத்தடந்தோள்-மலைபோன்ற பெரிய தோள். கலுழனுக்கு இருசிறகுகளையே தோள்களாகக் கூறுதல் மரபு. வந்து அச்செருக்கிளர் படையைச் சென்று தாக்கினான் என்றது, பொன்னுலகை வளைத்துக்கொண்ட அரக்கரைத் திருமால் எதிர் சென்று தாக்கிய உழிஞைத் திணையைப் புலப்படுத்தியவாறு. திருவின் கேள்வன் ஏறி, சென்று, வந்துபடையைத் தாக்கினான் என்க. (கஉ)

**கலுழன்மேல் வந்த திருமாலின் தோற்றம்**

**149.** **துன்னணி கலப்பொற் சோதி**
**சுடரொளி மறைத்துத் தோன்றத்**
**தன்னெதி ரில்லான் றேளிற்**
**றேன்றிய சார்ங்க பாணி**

பொன்னெடு மேரு வுச்சிப்
பொருசிலை யோடுங்கூட
மின்னெடுந் தழுவி நின்று
வீங்குகார் மேகம் போன்றான்.

**துன் அணிகலப் பொன்சோதி சுடர்ஒளி மறைத்துத் தோன்றத்**
**தன்எதிர் இல்லான் தோளில் தோன்றிய சார்ங்க பாணி**
**பொன் நெடுமேரு உச்சிப் பொருசிலை யோடும் கூட**
**மின்னெடும் தழுவி நின்று வீங்குகார் மேகம் போன்றான்.**

**பொ:** தன்மார்பில் அணிந்துள்ள நெருங்கிய அணிகலன்களின் பொன்னொளி சூரியனது ஒளியை மறைத்து மேற்பட்டுத் தோன்றத் தனக்கு நிகரில்லானாகிய கருடனின் தோள்கள் மேல் தோன்றிய சார்ங்கம் என்னும் வில்லை ஏந்திய திருமால், பொன்மயமான நெடிய மேருமலையினுச்சியில் போர்செய்யும் வில்லுடனே மின்னையும் தழுவிநின்று வீங்குகின்ற கரிய மேகத்தைப் போன்று தோன்றினான்.

**கு:** ஊர்தியாகிய கலுழனும் பொன்னிறமுடையனாயினும் திருமாலின் மார்பிலணிந்த அணிகலன்களின் பேரொளி சூரியன் ஒளியை மறைத்து மேற்பட்டுத் தோன்றியதாகலின் 'துன்னணி கலப் பொற்சோதி சுடரொளி மறைத்துத் தோன்ற' என்றார். சுடரொளி என்றது சூரியன் ஒளியை. 'வெய்யோனொளி தன் மேனியின் விரிசோதியின் மறைய' என்பது நோக்கத்தகும். திருமாலைத் தன்மேற் கொண்டு செல்லும் பெரும்பேறு பிறர் யார்க்கும் இன்றித் தனக்கே யுரித்தாகப் பெற்றவன் கருடனாதலின் அவன் 'தன்னெதிரில்லான்' எனப்பட்டான். சார்ங்கபாணி என்றது, சார்ங்கம் என்னும் வில்லையேந்திய கையனாகிய திருமாலை யுணர்த்தியது. காரணப்பெயர். பொன்னிறக் கலுழன், பொன் னெடு மேரு போன்றவனாகவும் அக்கலுழன்தோள்மேல் வில்லேந்தி அணிகலன்களையணிந்து வந்து தோன்றும் திருமால், அந்த மேருவி னுச்சியில் இந்திரதனுசுடன் மின்னையும் தழுவி நின்று பரவுகின்ற கரிய மேகம் போன்றவனாகவும் கொள்க. திருமால் கார்மேகம் போன்றவன். திருமால் கைவ்வில், இந்திரதனுசு போன்றது.

அவன் மார்பிலணிந்த அணிகலன்கள், மின்னல் போன்றது என உவமையை விரித்துக் கொள்க. (கரு)

**கலுழனால் அரக்கர்படை அழிதல்**

150. வெற்றிசேர் வயின தேயன்
விரிசிறை வேக வாயு
உற்றிட முறிந்த திண்டே
ருலைந்ததோ லுருண்ட பாய்மா
கொற்றவா ளரக்க ரெல்லாங்
குன்றெனக் குலைந்து வீழ்ந்தார்
பற்றுறு பதாகை யெல்லாம்
பஞ்சுபோற் பறந்துபோன.

**வெற்றி சேர் வயின தேயன் விரிசிறை வேக வாயு**
**உற்றிட முறிந்த திண்தேர், உலைந்ததோல், உருண்ட பாய்மா,**
**கொற்றவாள் அரக்கர் எல்லாம் குன்று எனக் குலைந்து வீழ்ந்தார்;**
**பற்றுறுபதாகை எல்லாம் பஞ்சுபோல் பறந்துபோன.**

**பொ :** வெற்றி பொருந்திய கருடனது விரிந்த சிறகின் வேகத்தால் உளதாகிய காற்றுத் தாக்கியதால் திண்ணிய தேர்கள் முறிந்தன; யானைகள் அழிந்தன, பாய்ந்து செல்லும் குதிரைகள் உருண்டன; வெற்றி வாய்ந்த வாளையேந்திய அரக்கர்கள் எல்லாம் குன்றுகள் என்னுமாறு நிலைகெட்டு வீழ்ந்தார்கள்; அவர்கள் கையில் பற்றியிருந்த பெருங்கொடிகள் எல்லாம் பஞ்சுபோல் பறந்து போய்விட்டன.

**கு :** திருமால் போர் செய்து முயலவேண்டாது கருடனே தன் சிறகின் வேகத்தால் நால்வகைப் படையையும் அழித்து விட்டான் என்றவாறு. வயினதேயன்-கருடன். தோல்-யானை. உற்றிட என்னும் செயவெனெச்சம் காரணப்பொருளது. உற்றிடல்-தாக்குதல். முறிந்த குலைந்த உருண்ட என்பன அன்பெறுத

அகரவீற்று வினைமுற்றுக்கள். பதாகை-பெருங்கொடி. காற்றில் பிய்ந்து பஞ்சுபோல் பறந்து போயின கொடிச்சீலைகள் என்க. (கச)

### திருமால்மேல் அரக்கர் அம்பு சொரிதல்

151. ஆயவை நிகழுங் காலை
யஞ்சனக் கிரியை மூடித்
தோயத மெல்லாம் மாரி
சொரிவதோர் தோற்றங் காட்டித்
தீயவர் வளைத்த செம்பொற்
சிலையினர் செறுத்து நோக்கி
மாயவன் றன்னைச் சூழ்ந்து
வடிக்கணை தூவி யார்த்தார்.

ஆயவை நிகழும் காலை, அஞ்சனக் கிரியை மூடி
தோயதம் எல்லாம் மாரி சொரிவதுஓர் தோற்றம் காட்டி,
தீயவர் வளைத்த செம்பொன் சிலையினர் செறுத்து நோக்கி
மாயவன் தன்னைச் சூழ்ந்து வடிக்கணை தூவி ஆர்த்தார்.

பொ: அத்தகைய நிகழ்ச்சிகள் நிகழும்போது, மையினால் இயன்ற மலையை மூடிக்கொண்டு மேகம் எல்லாம் மழைத் துளிகளைச் சொரிகின்றதொரு தோற்றத்தைக் காட்டிக்கொண்டு, தீயவர்களாகிய அரக்கர்கள் வளைத்துக்கொண்ட செம்பொன்னின் நிறமுடைய வில்லினையுடையராய்க் கோபித்துத் திருமாலைச் சூழ்ந்துகொண்டு கூரிய அம்புகளைத் தூவி ஆரவாரித்தார்கள்.

கு: அஞ்சனமலை போன்ற திருமால்மேல், மேகம் போன்ற நிறமுடைய அரக்கர்கள் சூழ்ந்துகொண்டு மழைத்துளிகளைப் போன்ற அம்புகளைச் சொரிந்து ஆரவாரித்தார்கள் என்றவாறு தோயதம்-மேகம். மேகங்கள் எல்லாம் அஞ்சன மலையை மூடிக் கொண்டு மழைத்துளிகளைச் சொரிவது போன்ற காட்சியை, அரக்கர்கள் எல்லாம் திருமாலைச் சூழ்ந்துகொண்டு வளைத்த வில்லினராய் அம்புகளை எய்த தன்மை காட்டிற்று என்க.

உவமேயத்தில 'தீயவர் வளைத்த சிலையினர்' என்பதற்கேற்ப உவமானத்திலும் மேகத்தில் இந்திரவில் தோன்றுவதைக் கொள்க. தூவி ஆர்த்தார் என்றது, திருமால்மேல் அம்புகளைத் தூவின வுடனே வென்றி கொண்டதாகக் கருதி ஆரவாரித்தனர் என அவர் பேதைமை புலப்படுத்தியவாறு. தோயதமெல்லாம் கிரியை மூடி மாரிசொரிவதோர் தோற்றம் காட்டி என்றதனால் மழைத் துளிகளால் மலைக்கு ஊறின்மைபோல அரக்கர் எய்த அம்புகளால் திருமாலுக்குச் சிறிதும் ஊறின்மை புலப்படுத்தியவாறு. வடி-கூர்மை தீயவர், நோக்கிச் சூழ்ந்து தோற்றம் காட்டி வடிக்கணை தூவி ஆர்த்தார் என இயையும். முற்றுவமையணி. (கரு)

அரக்கர் திருமால்மேல் தண்டு முதலிய படைக்கலங்களை விடுதல்

152. ஒண்டிற லரக்கர் வேலை
யுவாக்கிளர்ந் தென்னப் பொங்கித்
திண்டடந் தேரு மாவுஞ்
சினமுகக் கரியுந் தூண்டித்
தண்டுவாள் முசலங் கூர்வேல்
சக்கரம் சூலம் பாசம்
பிண்டிபா லங்கோ லாதிப்
பெரும்படைக் கலங்கள் விட்டார்.

ஒண்திறல் அரக்கர் வேலை உவாக் கிளர்ந்து என்னப் பொங்கி,
திண்தடம் தேரும் மாவும் சினமுகக் கரியும் துண்டி,
தண்டுவாள் முசலம் கூர்வேல் சக்கரம் சூலம் பாசம்
பிண்டிபாலம் கோல் ஆதிப் பெரும்படைக்கலங்கள் விட்டார்.

**பொ:** ஒளியும் திறலும் உடைய அரக்கர்கள், கடல், நிறை மதியைக் கண்டு கிளர்ந்தது போலத் திருமாலைக்கண்டு கிளர்ந்து பகை ஆரவாரம் செய்து, திண்ணிய பெரிய தேரும் குதிரையும் சினக்குறிப்போடு கூடிய முகத்தையுடைய யானையும் தூண்டி நெருங்கிச் சென்று தண்டு வாள், இருப்புலக்கை கூரியவேல்

சக்கராயுதம், சூலம், பாசம், பிண்டிபாலம் அம்பு முதலிய பெரிய படைக்கலங்களை அத்திருமால்மேல் விட்டனர்.

கு: ஒளி என்பது பிறரின் மிக்குத் தோன்றும் சிறப்பு. திறல்-திறமை. வேலை, உவாக் கிளர்ந்தென்ன என்றது, உவாமதி கண்டு கடல் பொங்கி ஆரவாரிப்பதுபோல என்றவாறு. பகைவனாய் வந்த திருமாலைக்கண்ட அரக்கர்கள் மகிழ்ச்சிமிக்குப் போராரவாரம் செய்துகொண்டு அவனை நெருங்கித் தண்டு முதலிய பெரும்படைக் கலங்களை அவன்மேல் எறிந்தார்கள் என்றவாறு. பிண்டிபாலம் என்பது கையால் எறியும் ஒருவகைத் தண்டு. கோல்—அம்பு. பகைவரைத் தாக்கும் தடியும் ஆம். பாசம் என்றது காலபாசம் போன்ற ஒருவகைக் கயிறு. (கருஉ)

திருமால் அரக்கர் படைகளை அழித்து
அம்மூவர்மேல் அம்பு சொரிதல்

153. தேவ தேவனவ் வரக்கர் செய்தசெயல்
கண்டு தன்னுணகை செய்துதன்
சாவ மேருவை வளைத்து விட்டசத
கோடி கோடி தழல் வாளியால்
பாவ காரிகள் விடுத்த பல்படை
யனைத்தை யும்பொடி படுத்தியம்
மூவ ரேவிவிடு மூள்பெ ருப்பகழி
மூழ்க வாளிமழை தூவினான்.

தேவ தேவன் அவ் அரக்கர் செய்த செயல்கண்டு [தன் உள்நகை செய்து தன்.
சாவ மேருவை வளைத்துவிட்ட சதகோடி கோடி தழல் வாளியால்
பாவ காரிகள் விடுத்த பல்படையனைத்தையும் பொடிபடுத்தி, அம்
மூவர் ஏவி விடு மூள் பெரும்பகழி மூழ்க, வாளிமழை தூவினான்.

பொ: தேவதேவனாகிய திருமால் அந்த அரக்கர் செய்த செயலைக் கண்டு தனக்குள் சிரித்துக்கொண்டு தனது வில்லாகிய

மேருவை வளைத்து விட்ட நூறு கோடி கோடி அம்புகளால் அந்தப்பாவத்தை விரும்பிச் செய்கின்ற அரக்கர்கள் விடுத்த பலவகையான படைக்கலங்கள் அனைத்தையும் பொடிப்பொடியாக்கிவிட்டு, தலைவராக உள்ள அம் மூவரால் ஏவி விடப்பட்ட சினமூள்கின்ற பெரிய அம்புகள் தரையில்பட்டு மூழ்குமாறு அம்பு மாரியைத் தூவினான்.

கு: தேவதேவன் என்றது திருமாலை. அரக்கர் செயல்கண்டு தன்னுள்நகைசெய்தது, அவர்தம் பேதைமை கண்டு கொண்ட எள்ளல் நகையாகும். சாவமேரு என்றது வில்லாகிய மேரு என்றவாறு; இது உருவகம். சாவம்-வில். சாபம் சாவம் என எதுகை நோக்கிவந்தது. சதகோடி கோடி என்றது மிகப்பல என்னும் பொருளது. வாளி-அம்பு. பாவகாரிகள் - பாவத்தைச் செய்கின்றவர்கள் என்றது அரக்கரை. 'பாவகாரிகள் பார்ப்பரி தென்பரால் தேவதேவன் திருப்பெருந்தன்மையே' (திருநாவுக்கரசர் தேவாரம்) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். மூவர் என்றது, மாலியவான், சுமாலி, மாலி என்ற அரக்கர் தலைவர்களை. மூள் பெரும்பகழி என்றது சினமூண்டெழுகின்ற பெரிய அம்புகளை. மூழ்க என்றது அவ்வம்புகள் செயல்படாதவாறு அழுந்த என்றவாறு. (கஎ)

### அரக்கரின் அழிவு

154. தேர்து ணிந்த திகழ் தேர்க டாவினர்
சிரந்துணிந்தன துணிந்தமாத்
தார்து ணிந்தமுக முந்துணிந்த
தடவெண்மருப் புடைய செம்முகக்
கார்து ணிந்த மருமந் துணிந்த
கவசம்துணிந்தன துணிந்தவில்
போர்து ணிந்தவடல் வீரர்கால் கையுடல்
பொன்மு டித்தலை துணிந்தவே.

தேர்துணிந்த திகழ்தேர் கடாவினர்சிரம்
துணிந்தன, துணிந்த மா!
தார்துணிந்த, முகமும் துணிந்த,
தடவெண்மருப்புடைய செம்முகக்
கார் துணிந்த, மருமம் துணிந்த,
கவசம் துணிந்தன துணிந்தவில்
போர்துணிந்த அடல்வீரர்கால் கைஉடல்
பொன்முடித்தலை துணிந்தவே.

பொ : (திருமால்விட்ட அம்புகளால்) அரக்கரின் தேர்கள் உடைந்தன; விளக்கமுடைய அத்தேர்களைச் செலுத்தி வந்தவர்தம் தலைகள் அறுப்புண்டன; குதிரைகள் அறுப்புண்டன; அவற்றின் கழுத்தில் அணிந்த கிண்கிணிமாலைகள் அறுப்புண்டன. அவற்றின் முகமும் அறுப்புண்டன. பெரிய வெள்ளிய கொம்புகளையும் செம் புள்ளிகள் பொருந்திய முகத்தையுமுடைய கார்போன்ற யானைகள் அறுப்புண்டன. அவற்றின்மேல் உள்ள வீரர்களின் மார்புகள் அறுப்புண்டன. அவ் வீரர்களின் கவசம் அறுப்புண்டன; அவர்தம் விற்கள் துண்டிக்கப்பட்டன; போர் செய்யத் துணிந்த வலிய வீரர்களின் காலும் கையும் உடலும் பொன்முடிதரித்த தலையும் அறுப்புண்டன.

கு : கடாவுதல் — செலுத்துதல். துணிந்த என்ற சொல் ஒரே பொருளில் பன்முறை வரத் தொடுத்தமையால் இச் செய்யுள் சொற்பொருட் பின்வருநிலையணி. மா-குதிரைகள். தார்—குதிரை கழுத்திடுமாலை. செம்முகக் கார் என்றது, செம்புள்ளிகளையுடைய முகத்தினவாகிய யானைகளை. கார் போன்ற நிறமும் முழக்கமும் மதமழை சொரிதலும் பற்றி யானை கார் என்பதற்கு ஏற்புடைமை காணலாம். செம்முகக் கார் என்றது, மேகத்திலும் வேறுபட்டது இது என்பது புலப்படச் செய்த அடைமொழியாகும். இது வேற்றுமையணி. மருமம்-மார்பு. யானை வீரர்களின் மார்பும் மார்பிலணிந்த கவமுசம் வில்லும்துணிந்தமை கூறியவாறு. அடல் வீரர் என்றது, காலாட்படையினரை. தேரும் யானையும் குதிரையும் காலாளுமாகிய நால்வகைப் படையும் துணிந்தமை கூறியவாறு. (கஅ)

தன்சேனை தோற்றோடவும் சுமாலி மாயவனை நெருங்குதல்

155. கொள்ளை வார்கணை துணித்த பேருடல்
குரத்தி னிற்பரி மிதித்தலும்
அள்ள லாயுதிர வாறு மண்டிய
வமர்க்களத்து நிலை யைத்தரும்
பள்ள மோடுபுனல் வெள்ள மாமென
வுடைந்து போகபடை வெள்ளமும்
கள்ள மேவிய சுமாலி வில்லினணை
கட்டி மாயவனை முட்டினான்.

கொள்ளை வார்கணைதுணித்தபேர் உடல்
குரத்தினில் பரி மிதித்தலும்
அள்ளலாய் உதிர ஆறுமண்டிய
அமர்க்களத்து நிலையைத்தரும்
பள்ளம் ஓடு புனல் வெள்ளம் ஆம் என,
உடைந்துபோக படைவெள் ளமும்
கள்ளம் மேவிய சுமாலி, வில்லின்
அணைகட்டி மாயவனை முட்டினான்.

பொ: (திருமால் விடுத்த) மிகுதியான நீண்ட அம்புகள் அறுத்த அரக்கரின் பெரிய உடல்களைக் குதிரைகள் குளம்பினால் மிதித்தலும் அவ்வுடம்புகள் சேறாய் இரத்த வெள்ளம் பெருகுகின்ற போர்க்களத்தில், தனக்கு நிலையைத் தருகின்ற பள்ளம் நோக்கி ஓடுகின்ற புனல் வெள்ளம்போல் சேனை வெள்ளமும் தோற்றுப் பாதுகாப்பான இடத்திற்கு ஓடாநிற்கவும், வஞ்சம் பொருந்திய சுமாலி வில்லினின்று எய்த அம்புகளால் அணைகட்டித் திருமாலை நிறுத்தி நெருங்கினான்.

கு: கொள்ளை-மிகுதி. திருமாலின் அம்புகளால் அறுப்புண்ட அரக்கர் உடலங்கள் அவ்வரக்கர்தம் குதிரைகள், தம் குளம்பு களால் மிதித்தலால் குழம்பிச் சேறாய் இரத்த வெள்ளம் பெருகின தென்க. புனல் நிலைபெறுதற்குரிய இடம் பள்ளமேயாதலின்.

நிலையைத் தரும் பள்ளம்' என்றார். படைவெள்ளத்தை விலக்க வேண்டி 'புனல் வெள்ளம்' எனச் சிறப்பித்தவாறு. படை வெள்ளமும் புனல் வெள்ளம் ஆம் என உடைந்துபோக என இயையும். வில்லின் அணைகட்டி என்றது வில்லினின்று வெளிப் பட்ட அம்புகளால் திருமாலுக்கு அணைகட்டி நிறுத்தி என்றவாறு. முட்டுதல்-கிட்டுதல். போரில் இவ்வாறு நிகழ்வதுண்டு என்பதை கும்பகருணன் சுக்கிரீவனை எடுத்துக்கொண்டு இலங்கைக்குச் செல்ல முயன்றபோது இராமன் அம்பினால் சரக்கூடம் கட்டித் தடுத்தான் என்ற செய்தியை,

உடைப்பெருந்துணைவனை, யுயிரிற் கொண்டுபோய்க்
கிடைப்பருங் கொடிநக ரடையிற் கேடெனத்
தொடைப்பரும் பகழியின் மாரி தூர்த்துற
அடைப்பனென் றடைத்தனன் விசும்பினூறெலாம்
(கும்பகருணன் வதைப் - 275)

என்ற செய்யுளால் தெளியலாம். (கசு)

சுமாலி திருமாலைத் தன்னம்புகளால் மூடிய அளவில்
அமரர் ஓடுதல்

156. எடுத்த வில்லின னெறிந்த நாணின
னிடித்து ரப்பிய கடுஞ்சொலன்
மடித்த வாயினன் மதித்த நெஞ்சினனிம்
மாயன் வெங்குருதி யங்கையிற்
குடிப்பெ னென்றுசினம் வந்து முந்தவுயர்
குன்று போற்புரவி யொன்றுதேர்
முடுக்கி வந்துசர மாரி யாலரியை
மூடி னனமர ரோடினர்.

எடுத்த வில்லினன் எறிந்த நாணினன்
இடித்து உரப்பியகடும் சொலன்
மடித்த வாயினன் மதித்த நெஞ்சினன்
இம்மாயன் வெங்குருதி அம்கையில்

குடிப்பென் என்று சினம் வந்து முந்த
உயர்குன்று போல் புரவி ஒன்றுதேர்
முடுக்கி வந்து சரமாரியால் அரியை
மூடினன் அமரர் ஓடினர்.

**பொ:** கையில் எடுத்துக் கொண்ட வில்லையுடையவனாய் அவ் வில்லின் நாணியை எறிந்து ஒலியெழுப்பியவனாய் மேகம்போல் இடித்து அதட்டிய கடிய சொல்லினனாய், மடித்துக் கடித்த வாயையுடையவனாய், தன்னாற்றலை மதித்த நெஞ்சினையுடைய வனாய், 'இந்தத் திருமாலின் வெவ்விய இரத்தத்தை உள்ளங் கையால் அள்ளிக் குடிப்பேன்' என்று கூறிக் கொண்டு கோபம் வந்து முற்பட உயர்ந்த குன்று போன்றதாய்க் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரை முடுக்கிக் கொண்டுவந்து தான் விட்ட அம்பு மழையால் திருமாலை மூடி மறைத்தான்; அதைக்கண்ட தேவர்கள் அஞ்சி ஓடினார்கள்.

**கு:** வில்லினன், நாணினன், கடுஞ்சொலன், வாயினன், நெஞ்சினன் என்ற குறிப்பு முற்றுக்கள் எச்சப்பொருளவாய் முடுக்கி என்ற செய்து என் எச்சத்தால் முடிந்தன. முடுக்கி வந்து சரமாரி யால் அரியை மூடினன் என்றியையும். மூடினன் என்ற முற்று வினையைக் கொண்டு அவ்வெச்சங்கள் முடிந்தன. எறிந்த நாணினன் என்றாராயினும் நாணெறிந்தனனாய் என மாற்றிப் பொருள் கொள்ளல் வேண்டும். வில்வீரர்க்கு வில்லின் நாணியைக் கையால் தெறித்து ஒலி எழுப்புதல் இயல்பு என்பதை இதனால் புலப்படுத்தியவாறு. உரப்புதல்-அதட்டுதல். வாயிதழை மடித்துப் பல்லால் கடித்தல் சினக்குறிப்பையுணர்த்தும் செயல் ஆகும். மதித்த நெஞ்சினன் என்றது, மாயவனாற்றலினும் சுமாலி தன்னாற்றலே பெரிது என மதித்த மனத்தினன் ஆதல். அங்கை யால் அள்ளிக் குடிப்பென் என்பதை அங்கையிற் குடிப்பென் என விரைவுபற்றித் தொகுத்துக் கூறியவாறு. குன்றுபோல் தேர்— புரவியொன்று தேர் எனத் தனித்தனி இயையும். முடுக்குதல்- வேகமாய் ஓட்டுதல். மூடினன் என்ற பயனிலைக்கு எழுவாய், மேலைச் செய்யுளில் வந்த சுமாலி என்பவனே ஆவன். (உ௰)

திருமால் சுமாலியின் ஆற்றலை வியந்து அவன் தேரையழித்தல்

157. நல்லை நல்லைவலி நன்று நன்றுயிர்
நடுங்கு போர்செயு முபாயநீ
வல்லை வல்லையுனை யொக்கும் வில்லிகளிம்
மாநி லத்தினிலை யென்றுமால்
வில்லி னுந்துசர மாரி யாலவன்
விடுத்த வெஞ்சரம் விலக்கிவெம்
பல்ல வங்கள்கொடு பாக னோடுபரி
கொன்று தேர்பொடி படுத்தினன்.

'நல்லை நல்லை வலி நன்று நன்று
உயிர் நடுங்கு போர்செயும் உபாயம் நீ
வல்லை வல்லை உனை ஒக்கும் வில்லிகள்
இம் மாநிலத்தின் இலை' என்று மால்
வில்லின் உந்து சர மாரியால் அவன்
விடுத்த வெஞ்சரம் விலக்கி வெம்
பல்லவங்கள் கொடு பாகனோடு
பரிகொன்று தேர்பொடி படுத்தினன்

பொ: (சுமாலியை நோக்கி) நீ நல்லவன்! நல்லவன்! உன் வலியும் நன்று நன்று! உயிர்கள் எல்லாம் நடுங்குதற்குக் காரண மான போரைச் செய்யும் உபாயமும் நீ வல்லவன்; உனை ஒக்கும் வில்வீரர்கள் இந்தப் பெரிய உலகத்தில் இல்லை; என்று திருமால புகழ்ந்துவிட்டுத் தனது வில்லினின்றும் செலுத்து கின்ற அம்பு மழையால் அந்தச் சுமாலி விடுத்த கொடிய அம்புகளை விலக்கிவிட்டுக் கொடிய அம்புகளைக் கொண்டு தேர்ப்பாகனையும் குதிரைகளையும் கொன்று தேரையும் அழித்துப் பொடிப்பொடி ஆக்கினன்.

கு: நீ நல்லை; வலிநன்று, நீ போர் செயும் உபாயம் வல்லை என்பன உவகைபற்றி அடுக்கி வந்தன. நல்லை வல்லை என்பன

முன்னிலை வினைக்குறிப்பு முற்றுக்கள். பல்லவம்—அம்பு. 'கூர்ப்புறு பல்லவங்கொண்ட தூணி' (கந்தபு-மூன்று - யுத்த 13) என வழங்கியிருத்தல் காணலாம். பல்லவங்கள் கொடு என்புழிக் கொடு என்பது மூன்றும் வேற்றுமைக் கருவிப் பொருளில் வந்தது. (உக)

158. நேர ழிந்தமர ரோடு தானவர்க
ளோட வோடவிடு நீள்கொடித்
தேர ழிந்துதம யன்ற ளர்ந்து வினை
செய்வ தொன்றுமறி யாதிடக்
கார ழிந்திட விடித்த டர்ந்துவரு
கால னென்னவிட மென்னவும்
ஆரழுந்துதிரு மேனி யானைவய
மாலி வந்தெதி ரடர்ந்தனன்.

**நேர்அழிந்து அமரரோடு தானவர்கள் ஓட ஓட விடு நீள்கொடித் தேர்அழிந்து தமயன் தளர்ந்து வினைசெய்வது ஒன்றும் அறியாதிட கார்அழிந்திட இடித்து அடர்ந்து வரு காலன் என்ன விடம் என்னவும் ஆர் அழுந்து திருமேனியானை வயமாலி வந்தெதிர் அடர்ந்தனன்**

**பொ :** தேவர்களோடு தானவர்கள் போரில் எதிர் தோற்று ஓட ஓடப் பின் தொடர்ந்து ஓடுமாறு விடுகின்ற நீண்ட கொடிகளையுடைய தேர் அழியத் தன் அண்ணன் சுமாலி தளர்ச்சியடைந்து போர்வினை ஒன்றும் செய்வது அறியாதவனாக, மேகமும் தோற்குமாறு இடிபோன்ற ஒலிசெய்துகொண்டு நெருங்கி வருகின்ற எமன் போலவும், கொல்ல வருகின்ற விடம் போலவும், கவுத்துவ மணி ஆரம் அழுந்தியுள்ள திருமேனியையுடைய திருமாலை, வலிமை வாய்ந்த மாலி வந்து எதிர்த்துப் போர் செய்தான்.

**கு :** அமரரும் தானவரும் அரக்கர்க்குப் பகைவரே ஆகலின் அவ்விருதிறத்தாரும் நேர்நிற்கலாற்றாது தோற்று ஓட ஓட விடுகின்ற தேர் எனச் சுமாலியின் தேர் சிறப்பிக்கப்பட்டது. விடுதேர்,

நீள்கொடித்தேர் எனத் தனித்தனி இயையும். தமயன்–அண்ணன். மாலியை நோக்கிச் சுமாலி தமயன் எனக்கூறப்பட்டான். அறிந்திட என்பதுபோல, அறியாதிட என்புழியும் இட என்பது துணைவினையாக நின்றது. அறியாதிட-அறியாதானாக. கார்–மேகம். மாலியின் அதட்டொலிக்கு மேகத்தின் இடியும் தோற்கும் என்பார், 'காரழிந்திட இடித்து' என்றார். அடர்தல்–நெருங்குதல். (உஉ)

## மாலி திருமால்மேல் அம்புமாரி சொரிதல்

159\. ஆனை பாய்புரவி தேர்நெ ருங்கியவ
ளப்பி லாவடல ரக்கர்வெஞ்
சேனை சூழவுயர் தேர்க டாவிவரை
மேல்கொள் சீயமென மாலிபோர்
வானை நீள்வயின தேயன் மாலினொடு
மண்ணும் விண்ணுமறை யப்பெருஞ்
சோனை மாரியென வோவி லாதசுடர்
வாய வாளிமழை தூவினான்.

ஆனை பாய்புரவி தேர் நெருங்கிய அளப்பிலா அடல் அரக்கர் வெம்
சேனை சூழ உயர்தேர் கடாவி வரைமேல் கொள் சீயம்என மாலி போர்
வானை நீள் வயின தேயன் மாலினொடு மண்ணும் விண்ணும் [மறையப் பெருஞ்
சோனை மாரி என ஓய்வு இலாத சுடர் வாய வாளிமழை தூவினான்.

பொ : ஆனைமேலும், பாய்ந்து செல்லும் குதிரை மேலும் தேர்மேலும் ஆக நெருங்கிய அளவில்லாத ஆற்றலையுடைய அரக்கர்தம் கொடிய சேனை சூழ்ந்துவர உயர்ந்த தேரைச் செலுத்திக் கொண்டு மலைமேல் இடம்கொண்ட சிங்கம் போல மாலி, போரில் வானின்கண் நீண்டு பறக்கும் கருடன் திருமாலோடு மண்ணுலகமும் விண்ணுலகமும் மறையுமாறு பெரிய சோனை மழை போல ஓய்வு இல்லாத சுடர்வீசும் வாயினையுடைய அம்பு மழையைச் சொரிந்தான்.

கு : மலை, தேர்க்கும், சிங்கம் மாலிக்கும் உவமை, கடாவுதல்–செலுத்தல். வானே என்பது உருபுமயக்கம். வானின் கண் என்க. நீளுதல் என்பது இங்குப் பறத்தலை உணர்த்தியது. மாலி சொரிந்த அம்புகளின் மிகுதியால் திருமாலேயன்றி மண்ணும் விண்ணும் மறைந்தன என்றவாறு. சோனைமாரி–விடாமழை. வாளி மழைக்கு உவமை. வாயவாளி என்புழி அகரம் குறிப்புப் பெயரெச்சவிகுதி, 'காலகுருகு' என்புழிப்போல. வாயினையுடைய அம்பு என்க. தூவினுன் என்பது, அம்புகளின் மிகுதியோடு எய்தல் தொழிலின், எளிமையும் விரைவும் புலப்படுத்தி நின்றது. வடிக்கப் பட்ட அம்பு ஆதலின் சுடர்வாய வாயின. (உ௲)

திருமால் மாலியின் தேர் முதலியவற்றை அழித்தல்

160. அந்த வார்கணைக ளாதி நாயகனை
னைத்தையுந் துணிய வெய்துநீள்
கந்த நாறு குழன் மங்கை மாருடைய
கண்க ணேர்கொடிய வம்பினுல்
மந்த ராசலமெ னத்தி ரண்டபுய
மாலி மார்புருவ வெய்துதேர்
உந்து பாகனெடு வாசி நாசமுற
வொன்ற லாதசர முந்தினுன்.

அந்த வார்கணைகள் ஆதிநாயகன் அனைத்தையும் துணிய எய்து, நீள் கந்தம்நாறு குழல் மங்கைமாருடைய கண்கள் நேர் கொடிய அம்பினுல் மந்தராசலம் எனத்திரண்டபுய மாலி மார்புஉருவ எய்து, தேர் உந்து பாகனெடு வாசி நாசம்உற ஒன்று அலாத சரம் உந்தினுன்.

பொ : ஆதிநாயகனுகிய திருமால், மாலியால் தூவப்பட்ட அந்த நீண்டகணைகள் அனைத்தையும் இடையே முறியுறுமாறு அம்புகளை எய்துவிட்டு நீண்டதும் மணம் வீசுவதுமாகிய கூந்தலையுடைய மங்கைப்பருவத்து நங்கைமாரின் கண்களைப் போன்ற கொடிய அம்பினுல், மந்தரமலை என்னும்படி திரண்ட தோள்களை

யுடைய மாலியின் மார்பில் பட்டு உருவிச் செல்லுமாறு எய்துவிட்டு அவனது தேரைச் செலுத்துகின்ற பாகனோடு குதிரைகளும் அழியு மாறு பல அம்புகளைச் செலுத்தினன்.

கு: அந்த வார்கணைகள் அனைத்தையும் என இயையும். அனைத்தையும் எய்து துணிய எய்து. எனத்தனித்தனி இயையும். குறிதப்பாமல் தாக்கும் அம்பின் சிறப்பியல்பு புலப்படவேண்டி மங்கைமாருடைய கண்களை உவமை கூறினர். நீள்குழல், கந்த நாறுகுழல் எனத்தனித்தனி இயையும். பெண்டிர் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டு என்பது புலப்படுத்த வேண்டி 'கந்த நாறுகுழல்' என்றார். இதன் விளக்கம் 'கொங்கு தேர் வாழ்க்கை' என்று தொடங்கும் குறுந்தொகைப் பாடல் பற்றிய பழைய வரலாற்றால் தெளியலாம். அம்பினல் எய்து, மார்புருவ எய்து என இயைக்க. மந்தர அசலம் என்பது தீர்க்கசந்தி என்னும் வட மொழிப் புணர்ச்சிவிதியால் மந்தராசலம் என ஆயது. உந்துதல்-செலுத்துதல். வாசி-குதிரை. பலசரம் எய்தான் என்பார் 'ஒன்றலாத சரம்' என்றார். ஒன்றல்லாதன பல எனல் தமிழ் வழக்கு. (உச)

**மாலி கருடன் தலைமேல் தண்டுகொண்டு தாக்குதல்**

161. மார்பி னின்றுதிர வாறு மண்டிட
மயங்கி யொல்லையி லுணர்ந்துதன்
தேரி னின்றுமி ழியக் குதித்துவெகுள்
சிங்க மாமென முழங்கிவெங்
காரி னின்றிடிவி ழுந்தெ னச்சுரர்
கலங்கி டக்கலுழ னெற்றிமேல்
மூரி நின்றதொரு தண்டு கொண்டதிர
மோதி னனசுப மோதினன்.

மார்பின் நின்று உதிர ஆறு மண்டிட
மயங்கி ஒல்லையின் உணர்ந்து தன்
தேரின் நின்றும் இழியக் குதித்து,
வெகுள்சிங்கம் ஆம்என முழங்கி வெம்

காரினின்று இடி விழுந்தெனச் சுரர்
கலங்கிடக் கலுழன் நெற்றிமேல்
மூரி நின்றதொரு தண்டு கொண்டு அதிர
மோதினுன்—அசுபம் மோதினுன்.

பொ: திருமால் எய்த அம்புபட்ட மார்பினின்றும் இரத்த வெள்ளம் பெருக மயக்க முற்றுப்பின் விரைவில் உணர்ச்சி பெற்றுத் தனது தேரில் நின்றும் கீழே தரையில் குதித்து வெகுண்டெழுந்த சிங்கம் போல வீர முழக்கம் செய்து, மேகத்தினின்று வெவ்விய இடிவிழுந்தது என்று சொல்லுமாறும் தேவர் கலங்கிடும்படியும் கருடனது தலைமேல் வலியதாய் இருந்ததொரு தண்டாயுதத்தைக் கொண்டு அதிர்ச்சியுறுமாறு மோதினுன். யாரெனின் மரணத்தால் மோதுண்ண நிற்கும் மாலி.

கு: தேரும் பாகனும் அழிந்தமையால் திருமாலின் அம்பினுல் தாக்குண்ட மாலி தரையில் குதிக்கலானுன். தரையில் குதித்த நிலையிலும் சோர்ந்திராமல் கோபத்தோடு வீரமுழக்கம் செய்து கொண்டு கலுழன் தலையில் தாக்கினுன் என்க. தன் ஊர்தியாகிய தேரைச் சிதைத்த திருமாலும் ஊர்தியிழப்பானுக என்னும் கருத்தால் மாலி தன் தண்டாயுதத்தால் திருமாலின் ஊர்தியாகிய கருடன் தலையில் தாக்கினுன் என்றவாறு. கரிய நிறத்தரக்கனுகிய மாலி தண்டுகொண்டு கருடனைத் தாக்கியது மேகத்தினின்று இடி வீழ்ந்தது போலிருந்தது என்பார். காரினின்றிடி விழுந்தென என்ருர். நெற்றி-தலை. மூரி – வலிமையானது அசுபம் என்றது மரணத்தை. மரணத்தால் மோதுண்ண நிற்கும் மாலி, கலுழனைத் தண்டுகொண்டு மோதினுன் என்றது, பெரிய திருவடியாகிய கலுழனை மோதிய தீவினையே மாலியை அழியச் செய்தது என்பது புலப்படுத்த வேண்டியே யாம். அசுபம் மோதினுன், கலுழன் நெற்றிமேல் தண்டுகொண்டு மோதினுன் என இயையும். அசுப மோதுதலாவது அசுபத்தால் மோதப்படவிருத்தல். செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினை. (உரு)

திருமால் தன் சக்கரப்படையால் மாலியின் தலையைக் கொய்தல்

162. நெற்றி மேலடி படத்த ளர்ந்துநிலை
நின்ற வீரனிலை கண்டுமால்
வெற்றி நேமியை விடுப்ப மற்றது
விளங்கு மாறிருவ ரன்றியும்
மற்று மோரிரவி யுண்டெ னக்கதுவ
மாலி தன்சிர மடிக்கழுத்
தற்று வீழ்வது கண்டு வானவர்க
ளாடி னார்நிருதர்வாடினார்.

நெற்றிமேல் அடிபடத் தளர்ந்து நிலைநின்ற வீரன் நிலைகண்டு மால் வெற்றி நேமியை விடுப்ப, மற்றஅது விளங்கும் ஆறு இருவர் [அன்றியும்
மற்றும்ஓர் இரவி உண்டு எனக் கதுவ, மாலிதன் சிரம் அடிக்கழுத்து அற்றுவீழ, அதுகண்டு வானவர்கள் ஆடினார், நிருதர் வாடினார்.

பொ: (மாலி தண்டு கொண்டு நெற்றிமேல் அடித்த) அடி படுதலால் தளர்ச்சியுற்றும் தன் ஊர்தியாகவே நிலை நின்ற கலுழனாகிய வீரனது நிலையைக் கண்டு திருமால், தனது வெற்றி தரும் சக்கராயுதத்தை விடுப்ப, அச்சக்கரப்படை உலகத்து ஒளிவிட்டு விளங்கும் ஆதித்தர் பன்னிருவர் அல்லாமலும் மற்றும் ஒரு சூரியன் உண்டு என்னும்படி ஒளிவீசிச் சென்று பற்றுதலால், மாலி தன் தலை, அடிக்கழுத்தோடு அற்றுத் தரையில்வீழ, அதைக் கண்டு தேவர்கள் மகிழ்ச்சியால் கூத்து ஆடினார்கள்; அரக்கர்கள் மன நெகிழ்ச்சியால் முகம் வாடினார்கள்.

கு: மாலியின் தண்டு பட்டமையால் கலுழன் இறந்துபட வேண்டியவனே ஆயினும் திருமாலின் ஊர்தி என்ற பெருமையால் உயிரிழவாது ஊர்தியாகவே நிலைநின்றான் என்பார், 'நெற்றி மேலடிபடத் தளர்ந்தும் நிலைநின்ற வீரனிலை கண்டு' என்றார். திருமாலின் சக்கரப்படை சூரியனைப் போல ஒளிவீசிச் சென்றது என்பார், 'விளங்கும் ஆறிருவர் அன்றியும் மற்று மோரிரவி

யுண்டெனக் கதுவ' என்ருர். ஓராண்டில் ஒரு மாதத்திற்கு ஒரு சூரியனுகப் பன்னிரு மாதங்களிலும் பன்னிரு சூரியர் உலகத்திற்கு ஒளி செய்கின்றனர் என்பது நூல் மரபு. உலகிருளகற்றிய பதின்மருமிருவரும்' (பரிபாடல் 8.4) என்றது காண்க. கதுவதல்–பற்றுதல். கதுவ என்றது காரணப் பொருளதாகிய செயவெனச்சம். கதுவுதலால் அற்று விழ என்க. சிரம் அடிக்கழுத்தொடு அற்றுவிழ என ஒடு விரிக்க. பகைவனது வீழ்ச்சியைக் கண்டமையால் தேவர்க்கு ஆடலும், தம் தலைவனது வீழ்ச்சியைக் கண்டமையால் அரக்கர்க்கு முகம் வாடலும் ஒருகாலத்து ஓரிடத்து ஒரே நிகழ்ச்சியால் நிகழ்ந்தமை புலப்படுத்தியவாறு. (உகூ)

### திருமால் சங்கினை ஊதுதல்

163. மண்ட லங்கிழிய வாள ரக்கர்கண்
மயங்கி வீழவட வெற்பொடும்
திண்ட டங்கிரிகள் விண்டி டத்திகழ்
திசைத்தடங்கிரி திகைத்திட
அண்டம் விண்டதென வஞ்சி வானவ
ரலந்த லைப்படவ கண்டமும்
உண்ட செம்பவள வாயில் வைத்துவளை
யூதி ஞன்மறைக ளோதினன்.

**மண்தலம் கிழிய வாள் அரக்கர்கள் மயங்கிவீழ, வடவெற்பொடும் திண் தடங்கிரிகள் விண்டிட, திகழ்திசைத் தடங்கிரி திகைத்திட, அண்டம் விண்டது என அஞ்சி வானவர் அலந்தலைப்பட, அகண்டமும் உண்ட செம்பவள வாயில் வைத்து வளை ஊதினன் மறைகள் [ஓதினன்.**

பொ : வேதங்களால் ஓதப்பட்டவனாகிய திருமால், தரை கிழியவும், கொடிய அரக்கர்கள் மயங்கி வீழவும் வடமேரு மலையோடு திண்ணிய பெரிய மலைகள் பிளந்திடவும் எண்திசையிலும் விளங்குகின்ற பெரிய திசைமலைகள் நிலைகெடவும் அண்ட

கோளம் பிளந்தது என அஞ்சித் தேவர்கள் அறிவு மயங்கவும் உலகமுழுமையும் உண்ட செம்பவள வாயில் சங்கினை வைத்து ஊதினன்.

கு: மறைகள் ஓதினன் என்றது திருமாலை. மறைகளால் பரம்பொருள் என்று ஓதப்பட்டவன் திருமாலே ஆதலின் இங்ஙனம் கூறினர். ஓதினன் என்ற செய்வினை செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது. ஓதினன், கிழிய வீழ விண்டிட திகைத்திட அலந்தலைப்பட வளையூதினன் என முடியும். வடவெற்பு என்றது மேருமலையினை, திசைத்தடங்கிரி என்றது எட்டுத்திசையினும் நின்ற மலைகளை. திகைத்தல் நிலைதடுமாறல். அலந்தலைப் படல் என்றது, அறிவு மயங்குதலை. திருமாலின் சங்கொலி அண்டகோளம் பிளந்த ஒலிபோலுதலின் வானவர் அண்டம் விண்டதென அஞ்சி அலந்தலைப் பட்டனர் என்க. அகண்டம் என்றது உலக முழுமையையும் குறித்து நின்றது. செம்பவள வாய்-செம்பவளம் போன்ற வாய் என விரியும், உவமத்தொகை. வளை-சங்கு-வளையை வாயில் வைத்து ஊதினன் என்க. இதனால், திருமால் ஊதிய சங்கொலியின் இயல்பை யறியலாம். (உஎ)

## திருமாலின் ஏனை நான்கு ஆயுதங்களால் அரக்கர் அழிந்தமை

164. மாலி பட்டுவிழ மற்ற வன்றமயன்
மார்கள் சோகமுற மாயவன்
கோலி விட்டசுடர் நேமி யாலுமிரு
கூரயிற் கணைக ளாலுமா
ஆல மொத்தகதை யாலும் வாளினு
மரக்கர் தம்படைய விந்தவால்
வேலியற்ற பயிர் காலியுற்றெனவும்
வேந்த ரில்லுலகு மென்னவே.

மாலி பட்டுவிழ மற்றவன் தமயன் மார்கள் சோகம்உற, மாயவன் கோலிவிட்ட சுடர்நேமியாலும் இருகூர் அயில் கணைகளாலும் மா ஆலம் ஒத்த கதையாலும் வாளினும் அரக்கர்தம் படை அவிந்தவால்; வேலிஅற்ற பயிர் காலி உற்றெனவும் வேந்தர் இல்உலகும் என்னவே.

**பொ:** மாலி என்பவன் இறந்து விழ, அவன் அண்ணன் மார்களாகிய சுமாலி மாலியவான் என்பவர்கள் சோகம் அடைந்து போர் செய்ய இயலாதுவிடவே, திருமால் திரித்துவிட்ட ஒளிமிக்க சக்கரப்படையாலும் இரண்டு முனைகளையுடைய கூரிய (பிறைமுகக்) கணைகளாலும் ஆலகாலத்தை ஒத்த கதையினாலும் வாளினாலும் அரக்கர்தம் சேனை, வேலி அற்ற பயிரில் பசுக்கள் புகுந்தாற் போலவும் ஆளும் வேந்தர் இல்லாத உலகம் போலவும் அழிந்தன.

**கு:** திருமால் ஊதிய சங்கொலியால் சாகாதவர்கள் அவன் ஐம்படைகளுள் ஏனைய சக்கரம், வில், கதை, வாள் என்ற நான்கு ஆயுதங்களாலும் அழிந்தமை இச் செய்யுளால் கூறியவாறு. இருகூர் அயில் கணைகள் என்றது, வில்லிலிருந்து விடப்பட்ட பிறைமுகக் கணைகளை. மா ஆலம் என்றது ஆலகாலத்தை. அழிக்கு மாற்றல் மிக்க கதாயுதத்திற்கு ஆலகாலம் உவமை. அரக்கர் படையில் அழிவிற்கு உவமையாக வேலியற்ற-காலிபுற்ற-பயிரும், வேந்தர் இல்லாத உலகும் கூறப்பட்டுள்ளன. காலி—பசு. வேந்தரில்லாத உலகு வாழாது என்பதை: ‘சூழும்படை மன்னவன் தோளிணை காவலின்றி, வாழுந்தகைத்தன்றிந்த வையகம்’ (பெரியபு மூர்த்தி-28) என்ற சேக்கிழார் வாக்காலும் அறியலாம். (உ அ)

**இறந்த அரக்கர்தம் தலைகளும் கைகளும் வீழுங்காட்சி**

165. வெற்றி மேவுதிகழ் சக்க ரத்தின்மிசை
விண்ணி லேறுவன வீழ்பவாய்
அற்ற பைந்தலைக ளுற்ற வீரமக
ளாடு மம்மனையை யொத்தவால்
கொற்ற வெண்குடையி னற்ற திண்கைபவை
சென்று வீழ்வதுளிர் திங்களைப்
பற்றி ராகுவினை யொத்த பாறுகள்
பறந்த கூளிக ளிறைந்தவே.

வெற்றி மேவு திகழ் சக்கரத்தின் மிசை
விண்ணில் ஏறுவன வீழ்பவாய்
அற்ற பைந்தலைகள் உற்ற வீரமகள்
ஆடும் அம்மனையை ஒத்தவால்;
சொற்ற வெண்குடையின் அற்ற
திண்கையவை சென்றுவீழ்வ, குளிர்திங்களைப்
பற்று இராகுவினை ஒத்த; பாறுகள்
பறந்த; கூளிகள் நிறைந்தவே.

பொ : (திருமாலின் சக்கரப்படையால்) அரியப் பெற்ற பசுமையான அரக்கர் தலைகள், வெற்றி பொருந்தி விளங்குகின்ற சக்கரப் படைமேல் பொருந்தி விண்ணில் ஏறுவனவும் பின்பு தரையில் வீழ்பவையுமாக, (போர்க்களத்துப்) பொருந்திய வீர மகளாகிய கொற்றவை தன்கையில் வைத்து ஆடுகின்ற அம்மனைக் காய்களை ஒத்துத் தோன்றின; அச்சக்கரப்படையால் அற்றனவாய வெண்கொற்ற குடையின்மேல் சென்று வீழ்கின்றனவாய அரக்கர் தம் திண்ணிய கரியகைகள், குளிர்ச்சிமிக்க சந்திரனைப் பற்றுகின்ற இராகு என்னும் பாம்பினை ஒத்துத் தோன்றின; பருந்துகள் பறந்தன: பேய்கள் நிறைந்தன.

கு : சக்கரப்படை அரக்கர்தம் தலைகளை ஒவ்வொன்றாய் அரிந்து விண்ணில் விரையும் போது அச்சக்கரப் படையுடன் விண்ணில் சென்று பின் அது தள்ளியவுடன் தரையில் வீழ்கின்ற தலைகளின் தோற்றம், வெற்றிமகள் ஆடுகின்ற அம்மனைக் காய்களின் தோற்றம் போன்று உள்ளது; என்பது முன் இரண்டடிகளின் கருத்து. தரையில் அமர்ந்து அம்மனைக் காய் ஆடும் பெண்டிர் அக்காய்களைக் கையால் உயர எறிந்து பின்பு அவை தரையில் விழும்போது கையில் பற்றிக் கொள்ளும் இயல்பு இங்கு உளங் கொளல் வேண்டும். பைந்தலைகள் அம்மனையை ஒத்த என இயையும். ஆல்-அசை. தலைகள் அம்மனைக்காயை ஒத்தன. சக்கரப்படை வெற்றித் திருவின் கையை ஒத்தன என்க. இனி அங்குள்ள வெண்குடைகளின் மேல் அரக்கர்தம் கரிய கைகள் அறுபட்டுவீழும் தோற்றம் சந்திரனை இராகு என்னும் கரும்பாம்பு பற்றுவது போலுளது என்றவாறு. கொற்றவெண்குடை சந்திரனைப்

போன்றுளது. அக்குடைமேல் விழும் அரக்கர்தம் அறுபட்ட கை இராகு என்னும் கரும்பாம்புபோல் உளது; என உவமையை விரித்துக் கொள்க. இச்செய்யுளில் தற்குறிப்பேற்ற அணி அமைந்துள்ளமை காணலாம். அரக்கர்தம் உடம்புகளைத் தின்னும் பொருட்டு அங்குப் பருந்துகள் பறந்துவந்தன; பேய்கள் விரைந்து வந்து அங்கு நிறைந்தன என்க. பாறு—பருந்து. கூளி—பேய். (உகூ)

**அரக்கர்தம் குருதியும் அற்ற உடம்பும்**

166. வெஞ்சு டர்க்கணை துணித்த செந்தலைகள்
மீள வவ்வழி முளைத்தபோ
லுஞ்ச டக்கெனவெ ழுந்த செங்குருதி
யோத வேலையினை யொத்ததால்
மஞ்ச டக்கிய நிறத்த னேமிபதம்
வன்க ரஞ்சிர மறுப்பவுள்
அஞ்ச டக்கிய கிடக்கு நீலநிற
வாமை யொத்தன ரரக்கரே.

வெஞ்சுடர்க்கணை துணித்த செந்தலைகள் மீள
அவ்வழி முளைத்தபோ
லும் சடக்கென எழுந்த செங்குருதி
ஓதவேலையினை ஒத்ததால்;
மஞ்சு அடக்கிய நிறத்தன் நேமி,
பதம் வன்கரம் சிரம் அறுப்ப உள்
அஞ்சு அடக்கிய கிடக்கும் நீலநிற
ஆமை ஒத்தனர் அரக்கரே.

**பொ:** திருமால் விடுத்த கொடிய சுடர்வீசும் அம்புகளால் துணிக்கப்பட்ட செந்தலைகள், மீளவும் அற்ற அவ்விடத்தில் முளைத்தன என்னும்படி விரைந்து பீறிட்டெழுந்த சிவந்த இரத்தத்தின் அலைகளையுடைய கடலை ஒத்தது, மேகத்தின் நிறத்தை வென்று அடக்கிய நிறத்தினையுடைய திருமாலின்

சக்கரமானது தம் கால்களையும் வலிய கைகளையும் தலையையும் அறுத்தமையால் அரக்கர், அஞ்சு உறுப்புக்களையும் உள்ளே அடக்கிக் கிடக்கும் நீல நிறத்தையுடைய ஆமையை ஒத்துத் தோன்றினர்.

கு: அரக்கர் தலையில் சிவந்த பங்கியிருத்தலின் செந்தலை எனப் பெற்றது. தலையற்ற இடத்துப் பீறிட்டெழும் செங்குருதியின் தோற்றம் அற்ற செந்தலைகள் மீளச் சடக்கென முளைத்தன போன்றிருந்தன என்றவாறு. சடக்கென என்றது விரைவுக் குறிப் புணர்த்தும் இடைச்சொல். ஓதம்-அலை. வேலை-கடல். அரக்கர் உடம்பினின்றும் பெருகிய குருதியின் மிகுதி புலப்பட அக்குருதி கடலை ஒத்தது என்றார். மஞ்சடக்கிய நிறத்தன் என்றது திருமாலை. மஞ்சு-மேகம். மேகத்தின் நிறத்தைக் காட்டிலும் சிறந்த நிறத்தை யுடையவன் திருமால் ஆதலின், அவன் நிறம் மஞ்சு அடக்கிய நிறம் எனப்பட்டது. அடக்குதல் இங்கு வென்று அடக்குவதை யுணர்த்தியது. நேமி-சக்கரம். காலும் கையும் தலையும் அற்ற அரக்கர்தம் உடம்பின் தோற்றம், நான்கு காலினையும் தலையினை யும் உள்ளடக்கிக் கிடக்கும் ஆமையின் தோற்றம் போன்றிருந்தது என்றவாறு. கரிய அரக்கரின் உடம்பிற்கு உவமையாக வேண்டி நிலநிற ஆமை கூறினார். அரக்கர் உடம்பினை அரக்கராகக் கூறியது, அவ்வுடம்போடு அவர்க்கிருந்த ஒற்றுமை கருதி; 'உயிர் நீத்து ஒருமகன் கிடந்தான்' என்புழிப் போலக் கொள்க. ஐந்து அஞ்சு எனப் போலியாயிற்று. தலையும் கையும் காலும் அறுப்புண்ட அரக்கர் உடம்பில் பெருகிய இரத்தம் கடல்போல் தோன்ற அக் கடலில் ஐந்தடக்கிக் கிடக்கும் ஆமைபோல அரக்கர் உடம்பு கிடந்தது என இயைபு படக் கூறியவாறு. (கூ௰)

### பட்ட யானைகளின் தோற்றம்

167. கால்க ளற்றவுர லொத்த லிற்சுளகு
கன்ன மொத்தலிலு ரோமநீள்
வால்க ளற்றனது டைப்ப மொத்திலின்
மருப்பு லக்கையினை யொத்ததால்

மாலை யொத்த நிற மால்செ யக்கொடி
மலர்க்கை பற்றுவது வைக்குமுன்
கோலி நெற்குறுமிடத்தை யொக்குமத
கும்பி பட்டுவிழு சூழலே.

கால்கள் அற்ற உரல் ஒத்தலின்,
சுளகு கன்னம் ஒத்தலில், உரோமம்நீள்
வால்கள் அற்றன துடைப்பம் ஒத்தலின்
மருப்பு உலக்கையினை ஒத்ததால்,
மாலை ஒத்த நிற மால் செயக்கொடி
மலர்க்கை பற்றுவது வைக்குமுன்
கோலி நெற்குறும் இடத்தை ஒக்கும்மத
கும்பி பட்டுவிழு சூழலே?

பொ : மதயானைகள் அறுப்புண்டு விழுந்து கிடக்கும் இடமானது, யானையின் அற்ற கால்கள் உரலை ஒத்துத் தோன்றுதலாலும், அதன்காது முறத்தை ஒத்துத் தோன்றுதலாலும் உரோமங்கள் நீண்டு வளர்ந்துள்ளனவாய் அறுப்புண்ட வால்கள் துடைப்பத்தை ஒத்துத் தோன்றுதலாலும், அதன் கொம்பு உலக்கையை ஒத்துத் தோன்றுதலாலும், இரவினை ஒத்த நிறத்தையுடைய திருமால் செயமங்கையின் மலர்போன்ற கையைப் பற்றுவதாகிய திருமண நிகழ்ச்சி நிகழுமுன் தரையைக் கோல முதலியவற்றால் அலங்கரித்து முகூர்த்த நெல்லினைக் குற்றும் இடத்தை ஒத்துத் தோன்றியது.

கு : மதகும்பி பட்டுவிழுசூழல் நெற்குறும் இடத்தை ஒக்கும் என இயையும், அற்ற கால்கள், அற்றன வால்கள் என மாறிக் கூட்டுக. நெல் குற்றுமிடத்தில் உரலும் உலக்கையும் முறமும் துடைப்பமும் கிடத்தல் இயல்பு. போர்க்களத்தில் உரல் முதலியன இருத்தலால் அவ்விடம் நெற்குற்றும் இடமாதற்கு இயைபுண்டு என்று காட்ட வேண்டி, திருமால் செயக்கொடி மலர்க்கை பற்றுவது ஆகிய திருமண நிகழ்ச்சியைக் கூறியவாறு. அத் திருமணத்திற்காக முகூர்த்த நெல் குற்றும் இடத்தைப் போன்று

தோன்றியது அவ்விடம் என்க. யானையின் கால்கள் உரல் போன்றது; காது முறம் போன்றது, வால் துடைப்பம் போன்றது, கொம்பு உலக்கை போன்றது என்று கூறும் புலவர் மரபு நினைந்து இங்ஙனம் ஏதுத்தற்குறிப்பேற்றவுவமையாகக் கூறியவாறு. திருமணத்திற்கு முன் ஒரு நல்ல நாளில் முகூர்த்த நெல்லினை முதுசெம்பெண்டிர் கூடிக் குற்றுதல் மரபு என்பது இங்கு உளங்கொளல் வேண்டும். திருமாலும் அரக்கரும் செய்யும் இப்போரில் வெற்றி திருமாலுக்கே என்பது உறுதியாதலின் வெற்றியென்னும் திருவைத் திருமால் மணக்கப் போவதாகவும் அம்மணத்திற்குமுன் முகூர்த்த நெல் குற்றுவதற்கு வைத்துள்ள உரல் முதலியன அங்குத் தோன்றுவதாகவும் கூறியவாறு. வைக்கு முன் என்பது நிகழ்த்துமுன் என்னும் பொருளது. கோலி – அலங்கரித்து. கும்பி – யானை. கும்பத்தையுடையது என்ற காரணம் பற்றிய பெயர். சூழல் – இடம்; மாலை ஒத்த நிறமால் என்புழி மாலை என்பது முன்னிரவினையுணர்த்தியாகக் கொள்ளலாம். அதுவே திருமாலின் நிறத்திற்கு உவமையாதற் கேற்றதாதல் நினையலாம். (௬௭)

கதையாலும் வாளாலும் அரக்கர் பட்ட பாடு

168. குன்றின் மேலிடி விழுந்தெனக் கதை
கொதித்து மோதவுயர் கொற்றவன்
பொன்று தோள்களவை தூளியாயின
வுலந்த தானைகண் மலைந்தபோர்
வென்றி வீரர்கள் கரும்புபோலுட
னெரிந்து போயினர் விளங்குசீர்க்
கன்று வாளிலொரு கண்ட நூறுபல
கண்ட மாயினர்கள் கண்டரே.

குன்றின்மேல் இடி விழுந்தெனக்
கதைகொதித்து மோத உயர்கொற்றவன்பு
ஒன்று தோள்கள் அவை தூளி ஆயின;
உலந்த தானைகள், மலைந்தபோர்

வென்றி வீரர்கள், கரும்புபோல் உடல்
நெரிந்து போயினர், விளங்குசீர்க்
கன்று வாளில் ஒரு கண்டம் நூறு பல
கண்டம் ஆயினர்கள் கண்டரே.

பொ: குன்றின்மேல் இடி விழுந்தாற்போன்று கதையினால் மனங்கொதித்து மோதுதலால் உயர்ந்த வெற்றியுடையனவும் வன்மை பொருந்தியனவும் ஆகிய அரக்கர்தம் தோள்கள், நொறுங்கித் துகளாயின. சேனைகள் அழிந்தன; போர் செய்த வெற்றியையுடைய வீரர்கள் ஆலையிலகப்பட்ட கரும்புபோல் உடம்பு நெரிந்து அழிந்துபோயினர்; விளங்கிய சிறப்பினையுடையதாய்ப் பலகாலும் பழகிய வாளினால் கொடியராகிய அரக்கர்கள் துண்டிக்கப்பெற்று ஒரு கண்டம் நூறு கண்டமாகவும் நூறு கண்டம் பல கண்டமாகவும் சிதைந்து அழிந்தனர்.

கு: இடியினால் குன்று இடிந்து துகளாதல் போலத் திருமாலின் கதையினால் வன்மைபெற்ற அரக்கர் தோள்கள் நொறுங்கித் துகளாயின என்க. திருமாலின் முயற்சியின்றியே கதைதானே மோதிப் பகைவரை யழித்தது என்னுமாறு கதையின் தாக்குதல் இருந்தது எனச் சிறப்பித்தவாறு. வாளுக்கும் ஈதொக்கும். துளி–துகள். கதையின் தாக்குதலால் அரக்கர்தம் உடம்பு ஆலையில் அகப்பட்ட கரும்புபோல நெரிந்து குருதி கொப்பளித்தது என்றவாறு. வாளுக்கு விளக்கமும் சிறப்பும் வெட்டி அழித்த பழக்கமும் உண்டு என்பார் 'விளங்குசீர்க்கன்றுவாள்' எனச் சிறப்பித்தார். கன்றுதல்–அடிப்படப் பழகுதல். ஒரு கண்டம் நூறு கண்டமாகவும் நூறு கண்டம் பல்லாயிரம் கண்டமாகவும் அரக்கர் உடம்பு சிதைந்து அழிந்தன என்றவாறு. கண்டர், குற்றமே புரியும் அரக்கர். திருமாலின் கதையினாலும் வாளினாலும் அரக்கர்–அழிந்த நிலையை விளக்கியவாறு. (கஉ)

மாலியவான் புறங்காட்டி ஓடவும் நெடுமால் போர்செய நிற்றல்

169. அடுமாலிய வானீட
வடையா ருயிர்தளரக்
கடுமாலிய வானவ்வழி
கடிதோடிய காலைக்

கொடுமாலிய வான்சேனையுங்
குலைந்தோடிடக் குலையா
நெடுமாலிய வானின்றென
நின்றான்பகை வென்றான்.

அடுமாலி அவான் நீட அடையார் உயிர்தளர
கடுமாலியவான் அவ்வழி கடிது ஓடிய காலை,
கொடுமாலியவான் சேனையும் குலைந்து ஓடிட, குலையா
நெடுமால் இயவான் நின்றென நின்றான் பகைவென்றான்.

பொ: பகைவருடைய உயிர் தளருமாறு கொல்லும் இயல்புடையவனாகிய மாலி என்பவன் அந்த வீர சுவர்க்கம் சென்றுவிட கடுமைமிக்க மாலியவான் அவ்விடத்தினின்று விரைந்து புறங்காட்டி ஓடியபோது அந்தக் கொடிய மாலியவானது சேனையும் நடுங்கிப் புறங்காட்டி ஓடாநிற்க, பகையை வென்றவனாகிய நெடுமால், அவர் அழிவுகண்டு மனம் நடுங்காமல் அவர் சென்ற வழியின்கண் முன் போர் செய்து நின்றதுபோலவே நின்றான்.

கு: உயிர்தளர அடும் மாலி என மாறிக் கூட்டுக. அவ்வான் எனற்பாலது, சந்தம் நோக்கி அவான் என வகரம் குறைந்து நின்றது. வான் என்றது வீரசுவர்க்கத்தை. சுட்டு உலகறிசுட்டு. வழி–இடம். வழியினின்றும் ஓடிட என ஐந்தாவது விரிக்க. கொடுமாலியவான் சேனையென மீண்டும் வந்தது சுட்டுப்பொருளது. அவன் சேனையும் குலைந்தோடிட என்பதே பொருள். பகைவென்றானாகிய நெடுமால், குலையா இயவான் நின்றென நின்றான் என மாறிக்கூட்டி வினைமுடிபு செய்க. குலையா என்பது ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். தனக்குத் தோற்று ஓடுமவர் துன்பங்கண்டு உள்ளம் நடுங்கவேண்டியிருக்க, அது செய்யாது முன்பு போர் செய்துகொண்டு நின்றது போலவே அவர் தோற்றோடிய பின்னும் போர்த்தொழிலோடு நின்றான் என்றவாறு. இயவு–வழி. ஆன் – இங்கு ஏழாம் வேற்றுமைப்பொருளில் வந்தது. (௫௫)

### சுமாலி திருமாலோடு வெகுண்டு கூறல்

170. கட்டோய் கமழ் கண்ணித்திகழ்
கண்ணன்றனைக் கனலாக்
கெட்டோடிய படைகொன்றனை
கிளர்வீரரி லெண்ணப்
பட்டோயலை யுலகிற்பெரும்
பழிபூண்டற நெறியை
விட்டோர்செயல் செய்தாயிது
கேணீயென விளம்பும்.

**கள்தோய் கமழ் கண்ணித் திகழ் கண்ணன்தனைக் கனலாக், 'கெட்டு ஓடிய படை கொன்றனை, கிளர்வீரரில் எண்ணப் பட்டோய்அலை; உலகில் பெரும்பழி பூண்டு அறநெறியை விட்டோர் செயல் செய்தாய்; இதுகேள்நீ' என விளம்பும்.**

பொ: தேன் தோயப் பெற்றுக் கமழ்கின்ற துளப மாலையொடு விளங்குகின்ற திருமாலைப்பார்த்து உளங்கனன்று 'நீ உனக்குத் தோற்றுஓடிய சேனையைக் கொன்றுய்; ஆதலால் உயர்ந்த வீரர் வரிசையில் எண்ணப்படுவோய் அல்லை; இவ் வுலகத்தில் பெரிய பழியைப் பூண்டு அறநெறியை விட்டோராகிய கீழ்களின் செயலைச் செய்தாய் ஆனுய்; இதைக் கேட்பாயாக' என்று சொல்லுவானுனன் சுமாலி.

கு: சுமாலி என்னும் எழுவாய் வருவித்துரைக்க. மும்மூர்த்தி களில் இவன் திருமால் என்னும் அடையாளம் தோன்ற அணிந்து கொண்டுள்ள துளபமாலை, இவன் செயலோடு ஒத்த இயல்பின தாக இல்லை என்னும் குறிப்புத்தோன்ற கட்டோய் கமழ்கண்ணித் திகழ் கண்ணன் என அடையொடு கூறினர். கண்ணி—தலையில் சூடும் மாலை. கண்ணியொடு என மூன்றனுருபு வருவிக்க. கனலா—கனன்று. செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். நீ கெட்டோடிய படை கொன்றனை என மாறிக் கூட்டுக. வலிமை கெட்டுத் தோற்றுப் புறங்காட்டி ஓடிய படையை அருள்

நோக்கோடு விட வேண்டியிருக்க, புறங்காட்டினவர்மேல் படையெய்து கொல்லுதல் வீரர்க்குரிய செயலன்று என்றவாறு. 'அழியுநர் புறக்கொடை யயில் வாளோச்சா கழிதறு கண்மை காதலித்துரைத்தன்று' (பு-வெ. வஞ்சி 20) என்றது காணலாம். இது 'தழிஞ்சி' என்ற துறையாகப் புகழ்ந்து கூறப்படும். கிளர் வீரர்-உயர்ந்தவீரர். தோற்றோடியவனைக் கொன்றவன் வீரனாக மதிக்கப்படான் ஆதலின், கிளர் வீரரில் எண்ணப்பட்டோயலை என்றான். விளம்பியது வருஞ் செய்யுளிற் காணலாம். (௬௪)

சுமாலி விளக்கியது

கொலை செய்யத் தகாதவர்

171. பொரவிட்டமி லாதோரமர்
புறகிட்டவர் புகுந்தோர்
கரம்விட்டவெம் படையோரமர்
கைவிட்டவர் தூதாய்
வரவிட்டவ ரலிமங்கையர்
வன்னோயருன் னுறவென்
றுரம் விட்டவரிவர் வெங்கொலைக்
குரியோரல உரவோய்.

பொர இட்டம் இலாதோர், அமர் புறகிட்டவர், புகுந்தோர்
கரம்விட்ட வெம்படையோர், அமர்கைவிட்டவர், தூதாய்
வர விட்டவர், அலிமங்கையர், வல்நோயர், உன் உறவு என்று
உரம்விட்டவர், இவர் வெம்கொலைக்கு உரியோர் அலர் உரவோய்!

பொ: வலிமையும் அறிவும் உடையோனே! போர் செய்வதற்கு விருப்பம் இலாதவரும் போரில் முன்பு புறங்காட்டி ஓடினவரும், (போர்க்களம் என்று அறியாமல்) புகுந்தவரும், வெவ்விய ஆயுதங்களைத் தரையில் போகட்டு நின்றவரும் (ஆயுதத்தைக் கைவிடாமல்) போர்த்தொழில் செய்யாது விட்டவரும் பகை வேந்தனால் தூதாக அனுப்பப்பட்டவரும், அலியாய் மங்கையர்

வேடம் பூண்டவரும், வலியநோயுடையவர்களும், உன்னுடைய நண்பன் யான் என்று வலிமையிழந்து பணிந்தவர்களும், கொடிய கொலைத்தண்டத்திற்கு உரியவர் அல்லர்.

கு: 'உரவோய்' என்றது, திருமாலை. உரவு என்பதற்கு வலிமை, அறிவு என்ற இருபொருளும் உண்டு. அவ்விரு பொருளும் புலப்படவைத்து அவற்றால் பயன்கொள்ளாமை குறிப்பால் உணர்த்தியவாறு. இட்டம்-விருப்பம். அமர் புறகிட்டவர் என்றது போரில் ஒருமுறை புறங்காட்டி ஓடியவர் என்றவாறு. புகுந்தோர் என்றது போர்க்களம் என்று அறியாது புகுந்த அயலவர். கரம் விட்ட வெம்படையோர் என்றது, கரத்திலிருந்த வெம்படையைத் தரையில் போகட்டுத் தம் தோல்வியை ஒப்புக்கொண்டவரை. அமர் கைவிட்டவர் என்றது, கையில் ஆயுதம் இருந்தும் போர் செய்யாது ஒய்ந்து நின்றவரை. இராவணன் முதல் நாட் போரில் ஓய்ந்து நின்றபோது இராமன் இன்றுபோய்ப் போர்க்கு நாளைவா வென நல்கிய பெருமை இங்கு நினைதற்குரியது. 'தூதரைக் கோறலும தூய்தன்றாம்' என்ற வீடணன் கூற்று நினைக. அலி மங்கையர் என்றது ஆணுமாகாது பெண்ணுமாகாது மங்கை வேடம்பூண்டு ஆடி உண்ணும் இயல்பினதாய ஒருவகை மனித உயிர். உன் உறவு என்று உரம் விட்டவர் என்றது, இனி யான் உன் நட்பரசன் என்றாற்போலத் தோல்வியை மறைமுகமாக ஒப்புக்கொண்டு கூறுபவர். (௫௫)

### திருமாலின் விடை

172. தடந்தோளிரு தன் கூறிடத்
தாமோதரன் மொழிவான்
உடைந்தோடி யுமக்கஞ்சி
யொளித்தும்பர்க ளெனைமுன்
படைந்தோர்களுக் கமரஞ்சி
யழிந்தோடினு முமைநான்
தொடர்ந்தே கொல முன்னேவரங்
கொடுத்தே னெனச் சொன்னான்.

தடந்தோள் நிருதன் கூறிடத்
தாமோதரன் மொழிவான்
உடைந்து ஓடி உமக்கு அஞ்சி
ஒளித்து உம்பர்கள் எனைமுன்பு
அடைந்தோர்களுக்கு அமர்அஞ்சி
அழிந்து ஓடினும் உமைநான்
தொடர்ந்தே கொல முன்னேவரம்
கொடுத்தேன் எனச் சொன்னான்.

பொ : பெரிய தோளையுடைய மாலியவான் என்னும் அரக்கன் இவ்வாறு சொல்லத் திருமால் சொல்கின்றான்:- 'அரக்கர்களாகிய உமக்குப் பயந்து முன்பு தேவர்கள் தோற்றுப் புறமுதுகு காட்டி ஓடி ஒளித்துத்என்னை அடைந்தபோது அவர்கட்கு யான், போர்க்கு அஞ்சித் தோற்றி ஓடினாலும் அரக்கர்களாகிய உங்களைத் தொடர்ந்து வந்து கொல்ல முன்னமே வரம் கொடுத்தேன்' என்று சொன்னான்.

கு: நிருதன் என்றது மாலியவானை. தாமோதரன்—திருமால். கண்ணனாக அவதரித்தபோது அவன் செய்த அடாச் செயலுக்காக யசோதை உரலில் கயிற்றால் கட்டிப் போட்டபோது கண்ணன் தாமஉதரன்-கயிற்றால் கட்டப்பட்ட வயிற்றையுடையவன் ஆயினான். இங்கு அப்பெயர் காரணம் கருதாது திருமாலுக்குப் பெயராக வந்தது. உடைதல்—தோற்றல். முன்னே உங்களால் தாக்குண்டு அஞ்சி ஓடிவந்து என்னை அடைந்த தேவர்கட்குயான் ஒருவரம் கொடுத்துள்ளேன். அது யாதெனில், அரக்கர்கள் போர் செய்தற்கு அஞ்சி ஓடினாலும் அவர்களைத் தொடர்ந்து சென்றும் கொல்வேன் என்பதாகும்;என்று திருமால் கூறினான். தேவர்களைக் கண்ணோட்டமின்றித் தருமம் பாராது துரத்தியடித்த நிலையை அறிந்து திருமால் தேவர்கட்கு இத்தகைய வரம் கொடுத்தான் என உய்த்துணரலாம். அரக்கர்களின் கொடுமை நினைந்து முன் கொடுத்த வரத்தின்படி தோற்றோரைத் தொடர்ந்து சென்று கொல்லுதல் பாவமாகாது. அறமேயாம்; என்பது நிறுவியவாறு. இதனால். மாலியவான் சொன்ன நியதிக்கு அப்பாற்பட்டது இக்கொலை என்பது புலப்படுத்தியவாறு ஆயிற்று. உமை என்றது, மாலியவானை நோக்கிக் கூறிய சுட்டு. அவனைச் சார்ந்த அரக்கரயும் தழுவியது. (௩௬)

## சுமாலி திருமால்மேல் வேலினை விடுத்தல்

173. தன்னோடிணை யில்லாதவன்
றானிங்கிவை கூறி
நின்னோடெதிர் பொருவான்றனி
நின்றேனிலை பேரேன்
என்னோடெதிர் பொரவாவென
நிருதனிடித் துரப்பா
மின்னோடிக லொளிவேலினை
விடுத்தானறங் கெடுத்தான்.

**தன்னோடு இணை இல்லாதவன் தான் இங்கு இவை கூறி, 'நின்னோடு எதிர் பொருவான் தனிநின்றேன் நிலைபேரேன் என்னோடு எதிர்பொரவா' என, நிருதன் இடித்து உரப்பா மின்னோடு இகல் ஒளிவேலினை விடுத்தான் அறம் கெடுத்தான்.**

பொ : தன்னோடு ஒப்பாவார் இல்லாதவனாகிய திருமால் இந்தச் சொற்களைச் சொல்லி, பின்பு 'நின்னோடு எதிர்த்துப் போர் செய்வதற்காகவே தனியாக நின்றேன்; யான் நின்ற நிலையி னின்றும் பெயரமாட்டேன்; என்னோடு எதித்துப் போர் செய்ய வா' என்று கூற, அறத்தை அழித்தவனாகிய சுமாலி என்னும் அரக்கன், இடிபோல ஒலிசெய்து அதட்டி மின்னலோடு மாறுபடுகின்ற ஒளி வாய்ந்த வேலினை அத்திருமால்மேல் விடுத்தான்.

கு: திருமாலின் வீரச்சிறப்புத் தோன்றத் தன்னோடிணை யில்லாதவன் என்றார். எனவே அவன் தனக்குவமை தானே எனத்தக்கோன் என்றவாறு. சுமாலி, கொலை செய்தற்கு உரிய ரல்லாதார் இவர் என எண்ணிக் கூறியவுடன் திருமால் அவனையே போர்க்கு வருக என அழைக்கலாயினான். அறங் கெடுத்தானாகிய நிருதன் என இயையும். இடித்து என்றது இடி போல ஒலியெழுப்பியதை. உரப்புதல்—அதட்டுதல். வேலின் ஒளி மின்னொளியினும் மிக்கதாக இருந்தது என்பார், மின்னோடிகல் ஒளி வேலினை என்றார். நிருதன் என்றது சுமாலி என்னும் அரக்கனை. (கூஎ)

**சுமாலி எறிந்த வேலினைத் திருமால் பிடித்து அச்சுமாலிமேல் எறிதல்**

174. வெவ்வேலையில் விட நுங்கிய
விமலன்றரு குமரன்
கைவ்வேலொடு வலியொப்பது
கனலாமெனக் கனலாச்
செவ்வேதிகழ் திருமார்பிடைச்
சென்றெங்கெதிர் தைப்ப
அவ்வேலினைப் பிடித்தச்சுத
னவன்மார்பிடை யெறிந்தான்.

**வெவ்வேலையில் விடம் நுங்கிய விமலன் தரு குமரன் கைவ்வேலொடு வலி ஒப்பது, கனல் ஆம் எனக் கனலாச் செவ்வே திகழ் திருமார்பிடைச் சென்று அங்கு எதிர்தைப்ப, அவ்வேலினைப் பிடித்து அச்சுதன், அவன் மார்பிடை எறிந்தான்.**

பொ: திருப்பாற்கடலில் எழுந்த கொடிய ஆல காலத்தை யுண்ட சிவபிரான் பெற்ற முருகனுடைய கையில் உள்ள வேலோடு வலிமையால் ஒப்பாவதாகிய அவ்வேல், நெருப்புப்போலக் கனன்று எதிர்சென்று நேரே விளங்குகின்ற திருமகள் தங்கியுள்ள மார்பில் தைக்க, அந்த வேலினைத் திருமால் கையாற் பிடித்து எடுத்து அந்தச் சுமாலியின் மார்பில் எறிந்தான்.

கு: வேலையில் வெவ்விடம் என மாறுக. நுங்குதல்—விழுங்குதல். ஒருவரும் உண்ணாத நஞ்சினை உண்டமை கூறிச் சிவபிரானது ஆற்றலையும் அவன் மகன் முருகன் ஆற்றலையும் புலப்படுத்திய வாறு. விமலன்—தூயவனாகிய சிவபிரான். சுமாலியின் வேலினைச் சிறப்பிக்க வேண்டி கிரவுஞ்சம் என்னும் மலையைப் பிளந்த முருகனது கைவ்வேலை உவமை கூறினர். கனலுதல்—சினத்தல். செவ்வேதிகழ் மார்பு, திருமார்பு எனத் தனித்தனி இயையும். கனலா எதிர் சென்று மார்பிடைத் தைப்ப என்க. செவ்வே-நேராக. அங்கு—அசைநிலை. அச்சுதன்-திருமால். அழிவில்லாதவன் என்னும்

பொருளது. திருமால் அழிவில்லாதவன் ஆதலின், சுமாலி எறிந்த வேலால் ஊறுபடாதவனாய் அவ்வேலையே பிடித்து எடுத்து அச் சுமாலிமேல் எறிந்தான் என்றவாறு. (௧௭௪)

திருமால் எறிந்த வேலால் சுமாலி தளர்ச்சியுறல்

175. அஞ்சத்திய ழைப்பக்கடி
தணுகாரரு ளுடையான்
கஞ்சத்திரு நயனன்றிகழ்
கரியோன்விடு கனல்கால்
வெஞ்சத்தி யரம்பைக்கனி
மேவூசியின் வெய்யோன்
நெஞ்சத்தி னுழைந்தோடிட
நெடுஞ்சத்தி தளர்ந்தான்.

அம்சத்தி அழைப்பக் கடிது அணுகு ஆர்அருள் உடையான்
கஞ்சத்திரு நயனன், திகழ்கரியோன், விடுகனல்கால்
வெம்சத்தி, அரம்பைக்கனி மேவு ஊசியின் வெய்யோன்
நெஞ்சத்தின் நுழைத்து ஓடிட, நெடுஞ்சத்தி தளர்ந்தான்.

**பொ :** அழகுடைய தன் சத்தியாகிய திருமகள் அழைப்ப விரைந்து அவளை அணுகுகின்ற நிறைந்த அருளையுடையவனும், செந்தாமரை மலர்போன்ற கண்களையுடையவனும் விளங்குகின்ற கரியமேனியனும் ஆகிய திருமால் விட்ட நெருப்பைக் கக்குகின்ற கொடியவேல், வாழைக்கனியில் நுழைகின்ற ஊசியைப்போலக் கொடியவனாகிய சுமாலியின் மார்பில் நுழைந்து உருவி ஓடிட, அவன் நெடிய வலிமை தளர்ந்தான்.

**கு :** திகழ்கரியோன் என்றது திருமாலை. அம்சத்தி என்றது அழகிய திருமகளை. திருமகள் அழைப்ப விரைந்து அவளை அணுகு கின்ற அரிய அருளையுடையவன் என்பதும் தாமரை போன்ற அழகிய கண்களையுடையவன் என்பதும் அத்திருமாலையே குறிக்கும் பல் பெயர்கள். வெஞ்சத்தி—கொடியவேல். அரம்பை—வாழை. சுமாலி

விட்ட வேல் திருமாலால் எறியப்பட்ட போது சுமாலியின் மார்பில் அது பாய்ந்த எளிமை புலப்பட வேண்டி, அரம்பைக்கனி மேவு ஊசியை உவமை கூறினார். நெடுஞ்சத்தி என்றது, நெடிதுகால மாக இருந்த வலிமையை. இச்செய்யுளில் சத்தி யென்னும் சொல் பன்முறை பயிலத் தொடுத்தமையால் சொற்பின் வருநிலையணி அமைந்திருத்தல் காணலாம். அஞ்சத்தி என்பதற்கு அழகிய கொற்றவையாகிய தன்னிளங்கிளை எனப் பொருள் கூறலும் ஆம். கொற்றவை மாலவற் கிளங்கிளையாக இளங்கோவடிகளால் கூறப் பட்டிருத்தல் இங்கு நினையத்தகும். (௫-௬)

**தளர்ந்த சுமாலி எழுந்து விட்ட சூலம் எதிர் உதைத்தோடல்**

176. இறந்தானவ னெனவானவ
ரெழுந்தாடிடு மளவில்
உறங்காவுணர்ந் தனன்போலவ
னுணர்ந்தானொரு சூலம்
அறங்காவலன் மிசையேவின
னதுசென்றவன் மணிமார்
பிறங்காதெதிர் ருதைத்தோடிட
விகலானிது செய்தான்.

**இறந்தான் அவன் என வானவர் எழுந்து ஆடிடும் அளவில், உறங்கா உணர்ந்தனன்போல் அவன் உணர்ந்தான், ஒரு சூலம் அறம் காவலன் மிசை ஏவினன்; அது சென்று அவன் மணிமார்பு இறங்காது எதிர் உதைத்துஓடிட, இகலோன் இது செய்தான்.**

பொ : அந்தச்சுமாலி இறந்தான் என்று கருதித் தேவர்கள் மகிழ்ந்து எழுந்து ஆடிடும் அளவில், தூங்கி விழித்தவன்போல அந்தச் சுமாலி மயக்கம் தெளிந்தவனாய் ஒரு சூலத்தை எடுத்து அறத்தைக் காக்கும் கடவுளாகிய திருமால்மேல் ஏவினான்; அச் சூலம் சென்று அத்திருமாலின் கவுத்துவமணி யணிந்த மார்பில் நுழையாது அவனுக்கு எதிராகத் தள்ளி ஓடிட, பகைமையுள்ளத் தோனாகிய சுமாலி இதனைச் செய்தான்.

**கு:** வலியிழந்து சுமாலி மயங்கி வீழ்ந்து கிடந்த நிலை அவன் இறந்துவிட்டான் என இமையாநாட்டத்துத் தேவரும் நினைந்து மகிழ்ந்தாடத்தக்க நிலையினதாக இருந்தது என்றவாறு. உறங்கா செய்யாவென்னும் வாய்பாட்டுவினையெச்சம்; உறங்கி என்பதே பொருள். உணர்ந்தானுய் ஏவினன் என முற்றெச்சமாக்கி முடிக்க. அறங்காவலன் என்றது தருமத்தை நிலைபெறச் செய்யும் கடமை மேற்கொண்டுள்ள திருமாலை. மணி என்றது கவுத்துவமணியை. இறங்குதல் இங்கு நுழைதலையுணர்த்தியது. கவுத்துவமணி யணிந்த மார்பின் தெய்வத்தன்மை யுணர்ந்து அதில் நுழையாது சூலம் எதிரே சிறிது தொலைவுதள்ளி ஓடியது என்றவாறு. இகலோன் என்றது, பகையுணர்ச்சியுடைய சுமாலியை. 'இது செய்தான்' என்றது அடுத்த செய்யுளால் புலப்படும். (௬௰)

**177.** கருவிற்கிடை கடியுங்கனை
கழலான்கரு முகிறன்
உருவிற்கிடை யொருவன்றன
துதரத்துமு கத்தும்
செருவிற்கிடை யாதோன்வலி
செறிமுட்டியிற் சாடி
ஒருவற்கிடை பாய்ந்தவ்வழி
யுயர்வெற்பென நின்ருன்.

**கருவில்கிடை கடியும் கனைகழலான், கருமுகில்தன்**
**உருவிற்குஇடை ஒருவன் தனது உதரத்தும் முகத்தும்**
**செருவிற்கு இடையாதோன் வலிசெறி முட்டியில் சாடி,**
**ஒருவிற்கிடை பாய்ந்து அவ்வழி உயர்வெற்பு என நின்ருன்.**

**பொ:** (தன்னைத் தொழுதாரை) தாயின் கருவில் கிடைத்த லினின்றும் நீக்கும் ஒலிக்கின்ற கழலணிந்த திருவடியை யுடையவனும், மேகம் தனது நிறத்திற்குத் தோற்கும் தன்மை யுடைய ஒருவனுமாகிய திருமாலின் வயிற்றிலும் முகத்திலும்

சுமாலி தன் வலி செறிந்த கைமுட்டியால் தாக்கிவிட்டு ஒரு வில்கிடத்தற்குரிய தொலைவில் பாய்ந்து சென்று அவ்விடத்தில் உயர்ந்த மலைபோல நின்றான்.

கு: திருமாலின் திருவடிச் சிறப்புப் புலப்பட வேண்டி 'கருவிற்கிடை கடியும் கனைகழலான்' என்றார். கிடை—கிடத்தல். தொழிற்பெயர். அவன் திருவடி தன்னைத்தொழுவார்தம் பிறப்பினை அறுக்கும் சிறப்பினது என்றவாறு. கடிதல்—நீக்குதல். கருவில் கிடத்தலை நீக்கும் திருவடியெனவே பிறப்பொழித்துப் பரம பதத்துய்க்கும் பான்மையது என்பது பெறப்படும். முகிலினும் அழகிய வண்ணத்தன் ஆதலின், முகில் தன் உருவிற்கு இடை ஒருவன் என்றார். இடைதல்—தோற்றோடுதல். இடைதற்குக் காரணமாயுள்ள ஒருவனை இடை ஒருவன் என்றார். கனைகழல்—ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடி. கழல் என்பது தானிஆகு பெயராய்க் கழலுக்கு இடமான திருவடியையுணர்த்தியது. கழலான், ஒருவன் என்பன, திருமால் என்னும் ஒருபொருள் குறித்து வந்த பலபெயர்கள். உதரம் வயிறு. செரு—போர். செருவிற்கு இடையாதோன்என்றது, போர்க்குத் தோலாதவனாகிய சுமாலியை உணர்த்தியது. கைவிரல்களை ஒன்றாய்ச் செறித்துப் பிடிப்பதே முட்டி என்பது தோன்ற 'வலிசெறி முட்டி' என்றார். முஷ்டி என்ற வட சொல்லின் திரிபு முட்டி. சாடுதல்—தாக்குதல். வயிற்றிலும் முகத்திலும் முட்டியால் குத்திய சுமாலி ஒருவில் கிடக்கும் தொலைவு பாய்ந்து நின்றான். அருகில் நிற்க அஞ்சி என்க. நீட்டல் அளவைக்கு வில்லினை அளவு கருவியாகக்கொண்டு கூறுதல் பண்டை வழக்கு. சுமாலியின் உடற் பருமை தோன்ற 'உயர் வெற்பென' நின்றான் என்றார். (சுக)

## கருடன் இறகால் அறையச் சுமாலி கடலில் விழுதல்

178. உடையாவலி யினனச்சுத
னுருமேறென வுரப்ப
இடையாதெதிர் நின்றானெறி
கடல்வாய்விழ விறகால்

புடையாவுறு பெருங்காற்றினிற்
பொருதேர்கரி பரியாட்
படையானது பஞ்சாமெனப்
பறந்தோடிட வறைந்தான்.

**உடையாவலியினன் அச்சுதன் உருமு ஏறு என உரப்ப**
**இடையாது எதிர்நின்றான் எறிகடல் வாய்விழ, இறகால்**
**புடையா உறுபெருங் காற்றினில் பொரு தேர் கரி பரி ஆள்**
**படையானது பஞ்சுஆம் எனப் பறந்து ஓடிட அறைந்தான்**

**பொ:** மாலியவானது குத்துகளால் உடையாத வலிமையுடையவனாகிய திருமால் பேரிடிபோல அதட்டொலி செய்யவும் விலகாமல் எதிரில் நின்றானாகிய சுமாலி, அலைவீசும் கடலிடத்து விழவும், போர் செய்ய வந்த தேரும் யானையும் குதிரையும்காலாளும் ஆகிய நாற்படையானது மிகப்பெருங்காற்றில் பஞ்சுபோல் பறந்து ஓடிடவும் (கருடன் தன்) சிறகால் மோதி அறைந்தான்.

**கு:** உரப்புதல்—அதட்டுதல். அதட்டும் ஒலியின் சிறப்புத் தோன்ற 'உருமு ஏறென' உவமை கூறினார். இடைதல்-விலகுதல். இறகால் என்ற குறிப்பினால் திருமாலின் ஊர்தியாகிய கலுழன் தன் இறகுகளைப் புடைத்துக் கொண்டு அறைந்தான் என்பது உய்த்துணர வைத்தவாறு. திருமால் உரப்பவும் இடையாது எதிர் நின்ற சுமாலியின் செயல், அடாச்செயல் ஆதலறிந்து சினந்து கலுழன் இங்ஙனம் செய்தான் என்க. அறைந்தான் என்ற வினைமுற்றுக்குக் கலுழன் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. தேர் முதலிய நால்வகைப் படைக்கும் பொதுவினையாகப் பொரு என்னும் அடை நின்றது. தேர் முதலிய நால்வகையும் படையென்ற ஒருமைச் சொல்லில் அடங்கிநிற்றலின் படையானது என ஒருமையாற் கூறினார். உறுபெருங்காற்றால் பஞ்சு பறந்தோடுதல்போல, கலுழனுடைய இறகுகளின் அறைதலால் அரக்கனின் நால்வகைப் படையும் பறந்து ஓடியது என்றவாறு. நின்றான் கடல்வாய்விழ, படை பறந்தோடிட, கலுழன் இறகால் புடையா அறைந்தான் என இயையும்.

(௬௨)

கலுழன் இறகு அசைவால் அரக்கர் படையடைந்த அல்லல்

179. மறிந்தார்சிலர் மலைபோற்பெரு
வாடைச்சரு கிலைபோல்
செறிந்தார்சிலர் பிறிந்தார்சிலர்
திகைத்தார்சிலர் வாய்பற்
பறிந்தார்சிலர் பதைத்தார்சிலர்
பகைத்தார்சிலர் பணைத்தோள்
முறிந்தார்சில ரிரிந்தார்சிலர்
முடிந்தார் படையெதிர்ந்தார்.

**மறிந்தார்சிலர் மலைபோற்பெரு வாடைச் சருகிலைபோல்**
**செறிந்தார்சிலர் பிறிந்தார்சிலர் திகைத்தார்சிலர் வாய்ப்பல்**
**பறிந்தார்சிலர் பதைத்தார்சிலர் பகைத்தார்சிலர் பணைத்தோள்**
**முறிந்தார்சிலர் இரிந்தார்சிலர் முடிந்தார் படைஎதிர்ந்தார்.**

**பொ:** படைக்கலங்களோடு எதிர்ந்தாராகிய அரக்கர்கள் கலுழனுடைய சிறகுக்காற்றால் மலைபோல்புரண்டார் சிலர், பெரிய வாடைக்காற்றில் சருகாகிய இலைகளைப்போலச் சிலர் விழுந்து நெருங்கலாயினர்; சிலர் செறிந்த நிலையிலிருந்து பிரிந்தார்கள்; திகைப்பு அடைந்தவர்கள் சிலர்; வாயிலுள்ள பற்கள் கழன்றனர் சிலர். துன்பம் தாங்கமாட்டாது உளம் பதைத்தார் சிலர். தம்முள்ளத்தே தம்மைப் பகைத்துக் கொண்டார் சிலர்; பருத்த தோள்கள் முறியப் பெற்றார் சிலர்; ஓடினார் சிலர் ஆக முடிந்தார்கள்.

**கு:** படையோடு எதிர்ந்தார், மறிந்தார் சிலராய்... இரிந்தார் சிலராய் முடிந்தார் என இயையும். மறிதல் கீழ் மேலாய்ப் புரளுதல். வாடைக்காற்றில் அகப்பட்ட சருகுகள் பல ஒன்றாய்ச் செறிதலும், செறிந்தவை பிரிதலும் இயல்பு. அவைபோல அரக்கர்களும் கலுழனின் சிறகுக் காற்றால் சிலர் செறிதலும் சிலர் பிரிதலும் செய்தனர் என்றவாறு. இப்போர்க்கு ஏன் வந்தோம் என்று தம் செயலையே பகைத்துக் கொண்டார் என்பார் பகைத்தார்சிலர் என்றார். (௬௫)

180. கழிந்தார்சிலர் கடலேழையுங்
கலுழன்சிறைக் காற்ருல்
எழுந்தார்சிலர் விழுந்தார்சில
ரிணைந்தார்சில ரேங்கி
அழிந்தார்சிலர் புரண்டார்சில
ரரண்டார்சிலர் விசையற்
ருெழிந்தார்சில ரிரிந்தார்சில
ருலைந்தாரட லரக்கர்.

**கழிந்தார்சிலர் கடல் ஏழையும், கலுழன்சிறைக் காற்ருல் எழுந்தார்சிலர், விழுந்தார் சிலர், இணைந்தார்சிலர், ஏங்கி அழிந்தார்சிலர், புரண்டார் சிலர், அரண்டார் சிலர், விசையற்று ஒழிந்தார்சிலர் இரிந்தார்சிலர் உலைந்தார் அடல் அரக்கர்.**

**பொ :** கருடனது சிறகின் காற்ருல் வலிய அரக்கர்கள் கடல் ஏழிணையும் கடந்தார் சிலர்; எழுந்தார் சிலர்; எழுந்தவுடன் விழுந்தார் சிலர்; இவ்வாறு எழுந்தும் விழுந்தும் இணைப்புற்ருர் சிலர்; வருந்தி அழிந்தார் சிலர்; புரண்டவர்கள் சிலர்; வெருண்டவர் சிலர்; வேகமற்று இயக்கம் ஒழிந்து வீழ்ந்தார் சிலர்; ஓடினுர் சிலராய் வருந்தினுர்கள்.

**கு :** அடலரக்கர் கலுழன் சிறைக் காற்ருல் கடலேழையுங் கழிந்தார் சிலர்... இரிந்தார்சிலராய் உலைந்தார் என இயையும். உலைதல்-வருந்துதல். கழிதல்-கடத்தல். (சச)

**சுமாலியும் மாலியவானும் அஞ்சிப் பாதாளம் சேர்தல்**

181. பாழிப்புயத் தரக்கன் பழி
யொடுதம்பியுந் தானும்
ஆழித்துயி னெடுமால்படை
யைந்தாலுமக் கலுழன்

ஊழிப்பெருங் காற்ருலுமிவ்
வுலகிற்பிழைப் பரிதென்
றேழிற்பெரும் பாதாளம
தடைந்தாரிக லிடைந்தார்.

பாழிப்புயத்து அரக்கன் பழியொடு தம்பியும் தானும்
ஆழித்துயில் நெடுமால் படை ஐந்தாலும் அக்கலுழன்
ஊழிப் பெருங் காற்ருலும் இவ்வுலகில் பிழைப்பு அரிது என்று
ஏழிற் பெரும் பாதாளமது அடைந்தார் இகல் இடைந்தார்.

பொ: வலிய தோள்களையுடைய சுமாலி எனும் அரக்கன், பழியோடு தம்பி மாலியவானும் தானுமாய், பாற்கடலில் துயில்கின்ற திருமாலின் ஐம்படைகளாலும் அந்தக் கருடன் சிறகால் வீசும் ஊழிக்காற்றுப் போன்ற காற்ருலும் இந்த உலகில் நாம் பிழைப்பது அரிது; என்று எண்ணிப் போரில் தோற்றவராய்க் கீழுலகம் எழில் பாதாள உலகை அடைந்தார்.

கு: பாழி—வலிமை. தம்பியென்பது மாலியவானை. ஆழி—திருப்பாற்கடல். கீழுலகம் ஏழு: அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாலம் என்பன. இகலிடைதலாவது போரில் தோற்றல். பாதாளமது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. பழியோடு அடைந்தார் என இயையும். (சு௫)

அரக்கர் இருவழியினர் என்பதை
அகத்திய முனிவர் இராமனுக்கு அறிவித்தல்

182. முன்னேமுழு வலி மாலிய
வானேமுத லானோர்
தன்னேர்வலி பிறரில்லவர்
தாஞ்சாலக டங்கர்
உன்ஞேடெதிர் மலேந்தோர்புலத்
தியனூர்வழி யுள்ளோர்
என்ஞவிவை முனிபின்னுமி
ராமற்கினி தியம்பும்.

முன்னே முழுவலி மாலியவானே முதலா னோர்
தன்நேர்வலி பிறர் இல்லவர்தாம் சாலகடங்கர்;
உன்னோடு எதிர்மலைந்தோர் புலத்தியனார் வழி உள்ளோர்;
என்று இவை முனி, பின்னும் இராமற்கு இனிது இயம்பும்.

பொ : முன்பு முழுவலிமையோடிருந்த மாலியவான் முதலானோர் தன்வலிக்கு நிகரான பிறரை இல்லாதவர்கள் என்று சொல்லப்படுகின்றவராகிய சால கடங்கர் தம் மரபினராவர். உன்னோடு எதிர்த்துப் போர் செய்தவர்களாகிய இராவணன் முதலோர் புலத்தியனார் வழியில் உள்ளவராவர்; என்று இவற்றைக் கூறிய அகத்திய முனிவன் இராமபிரானுக்குப் பின்னும் இவற்றை இனிதாக இயம்புவானானான்.

கு : மாலியவான் முதலானோர் சாலகடங்கர் மரபினர்; இராவணன் முதலியோர் புலத்தியனார் மரபினர்; என அரக்கரின் மரபு இரண்டைப் பற்றி விளக்கியவாறு, இராமற்கு இவை இனி தியம்பும் என இயையும். முனி என்றது அகத்திய முனிவரை.(௧௬)

அரக்கரை யழிக்கத் திருமாலுக்கல்லது இயலாது எனல்

183. ஓராவற நிருதக்குல மொழியாம லறுக்கக்
கூராழியி னாற்கல்லது கூடாததி குணத்தோய்
நேரே திரு நெடுமாலவ னீயாதலி னவர்தம்
வேரோடற வறுத்தாய்பிறர் வேறாரிது
[செய்வார்.

ஓரா அற நிருதக்குலம் ஒழியாமல் அறுக்க,
கூர் ஆழியினாற்கு அல்லது கூடாது; அதி குணத்தோய்!
நேரே திருநெடு மாலவன் நீஆதலின்; அவர்தம் ,
வேரோடு அற அறுத்தாய்; பிறர் வேறு ஆர் இது செய்வார்.

பொ : பெருங்குணமுடைய இராம! அறத்தை உணராத அரக்கர் குலம் எஞ்சி நிற்காமல் அறுப்பதற்குக் கூரிய சக்கரப்

படையையுடைய திருமாலுக்கு அல்லது இயலாது. நீ நேரே திரு நெடுமாலவன் அமிசம் ஆதலின் அவ்வரக்கர் தம் குலம் வேரோடு அறுமாறு அறுத்தாய்; வேறு பிறர் யார் இவ்வீரச் செயலைச் செய்ய வல்லவர்? எவருமிலர்.

கு: அறம் ஓரா நிருதக்குலம் என மாறுக. சாலகடங்கர் மரபை அறுத்தவன் திருநெடுமால்; புலத்தியர் மரபை யறுத்தவன் திருமாலின் நேர் அவதாரமாகிய இராமபிரான்; எனவே அற முணராத அரக்கர் குலத்தை வேரறுக்கச் சக்கரப் படையுடைய திருமாலுக்கல்லது இயலாது என்பதை அகத்திய முனிவர் இராம னுக்குத் தெளிவுபடுத்தியவாறு. இராமன் செய்த இவ்வீரச் செயலை பிறர் யாரும் செய்ய இயலாது. திருமால் செய்த வீரச் செயலைப் பிற தேவர் யாரும் செய்ய இயலாது என இருவகைப்படுத்திக் கூறியவாறு. (சஎ)

இலங்கையழித்த படலம் முற்றிற்று.

# 6. இராவணன் பிறப்புப் படலம்

## முன்னுரை

## பொருட்சுருக்கம்

இராவணனது பிறப்பைப் பற்றியும் அவன் தம்பியர் தங்கை பிறப்புப் பற்றியும் கூறும் பகுதியாகலின் இது இராவணன் பிறப்புப்படலம் எனப் பெயர் பெறுகின்றது.

கடலைக் குடித்த அகத்திய முனிவன் விரித்துச் சொன்ன கதையைக் கேட்டுக் கொண்டல் வண்ணனாகிய இராமன் மணிமுடி துளக்கி வியப்படைந்து இராவணனுடைய பிறப்பையும் அவன் செயலையும் கேட்கப் பெரிதும் விரும்புகின்றேன்; சொல்லுக! என்று சொல்ல அகத்திய முனிவன் கூறுகின்றான்.

மாலியவான் சுமாலி முதலிய அரக்கர்கள் பாதாளத்திலிருந்து நெடிது காலம் வரையில் வேறிடம் பெயராது தங்கியிருந்த காலத்தில் ஒருநாள், சுமாலி தன் மகளுக்குத் தக்க கணவனைத் தேடுதற்காகத் தன் மகளோடு பூவுலகிற்கு வரும் போது, இலங்கை, மன்னனாகிய குபேரன் வருவதைப் பார்த்தான். தன்பால் ஏறுவோர்க் கேற்ப விரிந்து இடம் தருகின்ற புட்பக விமானத்தில் தேவர்களும் இயக்கர்களும் முனிவர்களும் தன்னைச் சூழ்ந்துவரத் தன் தந்தை விச்சிரவசுவினைக் காணும் ஆசையோடு வருகின்ற குபேரன், இந்திரன், எமன், வருணன் என்பவரோடு ஒக்க எண்ணுதற்குரிய உயர்ந்த தரமுடையவனாய்ச் சங்கநிதி பதுமநிதி இரண்டும் பக்கலில் வந்து சேவிக்க, முன்பு செய்த தவமுடையவனாய்ப் பல்வகை மணிகள் பதித்த நீண்ட முடியுடையனாய் விளங்குதலைச் சுமாலி காண்கின்றான். மனம் பொறுது தனக்குள் எண்ணுகின்றான்.

நாராயணனால் நம்மைப்போன்ற வலியவர்கள் எல்லாம் கீழ்ப்பட்டிருக்கவும், வலிமையற்ற மற்றவர்களே மேம்பட்டு நிற்கவும், புலிவாழ்ந்த இடத்தில் பசுவாழ்தல் போல, நாம் வாழ்ந்த இடத்தில் எளியவர் தங்கிப் போர்த்தொழிலுக்குரிய தேரினையுடையவராக,

ஆண்மையற்ற அலியைப் போன்றவனாகிய இக்குபேரனே ஆண்மையுடையவனாகி அஞ்சாமல் இலங்கை நகரத்துள் புகுந்து தன்னை நலிவார் எவரும் இல்லாமல் அரசாளப் பார்க்கின்றான்; என்று நினைந்து தன் மனத்து எழுந்த வெறுப்பினால் மீண்டும் பாதாளத்துப் புகுந்து தன் தமையனோடு இனிச் செய்ய வேண்டியதைப் பற்றி ஆராய்ந்து தெளிந்து அழகுமிக்க தன்மகளை அழைத்துச் சொல்கின்றான்.

மலர்மேலிருக்கும் திருமகள் போன்ற அழகுடையாய்! ஒரு பெண் பிறக்கத் தந்தை குலமும் தாய்க்குலமும் புக்க குலமும் ஆகிய இம்மூன்று குலமும் விளக்கம் பெறும். உன்னாலே நம்குலம் விளக்கும் மக்கள் உண்டாகலாம். ஆதலால், புலத்தியன் மகன் விச்சிரவசுவை நீ கணவனாகக் கொள்! என்று சொல்கின்றான் சுமாலி. தந்தை சொல்லைத் தலைமேற் கொண்ட கைகசி, நன்றே தீதோ வந்தவண்ணம் வருக என்னும் துணிவோடு விச்சிரவசுவின் ஆசிரமத்திற்குச் செல்கின்றாள். அப்போது தூய்மையுடைய அம் முனிவன் அக்கினி காரியம் முடித்துவிட்டுப் பேரொளியோடு விளங்குகின்றான். அம்முனிவனைக் கண்டு தம் காமக் குறிப்புத் தோன்ற நாணத்தோடு இடையை வளைத்துக் கொண்டு கமலமலர் போன்ற காலின் பெருவிரலால் நிலத்தைக் கிறிக்கொண்டு அம் முனிவன் முன்னே திருமகள் போல நிற்கின்றாள்.

அவளை அருளால் நோக்கிய விச்சிரவா, நீயார் மகள்? பெயர் என்ன? எது கருதி வந்தாய்? என்று கேட்கின்றான். அவள், யான் சுமாலியின் மகள் பெயர் கைகசி, யான் வந்தது எதற்கு என்பதை நீரே கண்டு கொள்ளுங்கள் என்று சொல்ல, அவர் கருத்து அறிந்து முனிவன் மைந்தர் பெற நீ காதலித்து வந்துளாய், அந்தக் காரியத்தை நீ எண்ணி என்னிடம் வந்த காலம் தீயது ஆதலின், உன்னிடம் பிறக்கும் மைந்தர் குணத்தாலும் வரத்தாலும் கொடியோராய் இந்த உலகைத் துன்புறுத்துவர் என்று கூறுகின்றான்.

## இராவணன் பிறப்பு

அதுகேட்ட கைகசி, உங்களை அடைந்து உம்மருள் பெற்ற எனக்கு உம் குணத்திற்கு ஒவ்வாத மக்கள் உண்டாகலாமோ?

என்று வினவ முனிவர் உன் வயிற்றில் பிறக்கும் மைந்தர்களில் பின் பிறக்கின்றேன் பேரறிவுடையவனாக விளங்குவான் என்கின்றான். இந்த உண்மைகளைச் சொன்ன விச்சிரவ முனிவன், சூரியன் மேல்திசையில் விழும் அத்தமன காலத்தில் அங்கு அந்தக் கைகசியை அன்போடு அவள் எண்ணத்தின்படி தழுவ, உலகமே நடுங்குமாறு பத்துத் தலையும் இருபது தோளும் உடையனாகப் பூமியையே எடுக்கவல்ல ஆற்றலையுடையனாய் விளங்கும் சிறப்புடைய இராவணன் பிறக்கின்றான்.

## கும்பகருணன் பிறப்பு

பின்பு மணமிக்க கூந்தலையுடைய அந்தக் கைகசியின் வயிற்றில் பூமி முழுவதையும் விழுங்கிடினும் நிறையாத வயிற்றையுடையவனும், நெடிய மலைபோல் நீண்ட வடிவத்தையுடையவனும் நீண்ட கைகளையுடையவனும், பிறைச்சந்திரனைப் போன்று வளைந்த பற்களையுடைய பிலம்போன்ற வாயையுடையவனும், பெரிய கண்களையுடையவனும் ஒருபோதும் குறையாது எழுகின்ற கொடிய பசியையுடையவனும் ஆகிய கும்பகருணன் பிறக்கின்றான்.

## சூர்ப்பணகையின் பிறப்பு

மூன்றாவதாகப் பண்ணினைப் போன்ற இனிய சொல்லினையுடைய கைகசியின் வயிற்றில் பருத்த இடையும் பருத்த கழுத்தும் இடியைப் போன்ற கடுங்குரலும் உடையவளாய்க் கண்ணில் கனலும் புகையும் எழுமாறு கோபித்துக் கொண்டு எமனும் கருப்பம் கலங்கவும், பெண்ணாகப் பிறந்தோர் எல்லாம் அச்சம் கொள்ளவும் பெரிய உருவத்தையுடைய சூர்ப்பணகை பிறக்கின்றாள்.

## வீடணன் பிறப்பு

பின்பு நிலைபேறுடைய தவத்தினனாகிய புலத்தியன் மரபு விளங்க, வேதநெறி விளங்க, தனக்கொப்பில்லாத தந்தை விச்சிரவசுவுக்குத் தக்க மகனாய்ச் சண்டாளர் போன்றோர் முன்பு கிடந்து வந்த வயிறு சுத்தமாகும்படி மின்னலைப்போன்ற இடை

யினளாகிய கைகசியின் வயிற்றில் விளங்குகின்ற புகழினையுடைய வீடணன் பிறக்கின்றான்.

### கல்வியும் செயலும்

இராவணன் வளர்ச்சிபெற்று மனுநூலும் வேதங்கள் ஆயிரமும் விளங்கும் கலைகளும் ஓதுகின்றான். அவன் அவ்வாறு ஓதஓதப் போதம்-ஞானம் பெருகவில்லை. அஞ்ஞானமே ஓங்கிவளர்ந்தது. பாம்புக்குப் பாலும் நெய்யும் வார்த்து வளர்த்தாலும் வேதனை செய்யும் விடந்தானே வளரும்? கும்பகருணனும் அவனைப்போலவே சிறந்த குலத்தில் நற்குடியில் பிறந்தோர் மேற்கொள்ளும் ஒழுக்கத்தை விடுத்துத் தூய முனிவரையே கொன்று தின்னத் தொடங்குகின்றான்.

சூர்ப்பணகை பழியில்லாத மறையவர் குலத்துப் பிறந்திருந்தும் தாய்க்குடியின் வழிநின்று ஆணுகப் பிறந்தவர்களின் பின் தொடர்ந்து, தன்னை விரும்பும் நெஞ்சினர் தமையெல்லாம் கணவரகப் பயன்படுத்திக் கொண்டும் விரும்பாதவர்களை யெல்லாம் எடுத்துப் பூமியில் மோதிக் கொன்று தின்றிடும் இயல்பினளாக விளங்குகின்றாள்.

புகழ்மிக்க வீடணன், பொய்யுங் களவும் கொலையும் காமமும் ஆகிய நாற்பெரும் பாவங்களையும் நீக்கி, மெய்யும் அருளும் அறமும் பொறுமையும் ஆகிய நான்கினையும் மேற்கொண்டு, தான் செய்யும் செயல்கள் எல்லாம் சான்றோர் செய்யும் செயலாகச் செய்து வேதங்கள் சொல்லும் அறத்தின் வழிநின்று ஒழுகுகின்றான். அந்த நால்வரும் வனத்தில் இவ்வாறு ஒழுகிவரும் நாளில் ஒருநாள் குபேரன், தன் தந்தையின் திருவடிமலர்களைப் பணியும் ஆசையினால் அங்குச் செல்வச்சிறப்போடு வர, கைகசி தன் மலர்க் கண்ணாலே நோக்கித் தன்மகன் இராவணனுக்குக் காட்டி, இவன் நின் தமயன், குபேரன். தவ முயற்சியால் தெய்வத்தன்மை வாய்ந்த புட்பக விமானத்தையும் தேடுதற்கரிய சங்கநிதி பதும நிதி என்ற நிதி இரண்டையும் பெற்றுள்ளான்; வலிமை மிக்க திரண்ட தோள்களை யுடைய என் மைந்தனே! நின் வழியில்

வந்த முன்னோர்கள் முன்பு ஆட்சிசெய்த இலங்கைமாநகரை ஆள்கின்றான்; என்று அறிமுகப்படுத்துகின்றாள்.

அதுகேட்ட இராவணன் பொறுமைக் குறிப்புத் தோன்ற பல்லினால் இதழை அதுக்கிக் கொண்டு 'மனவொருமையோடு செய்யும் தவத்தால் இக்குபேரனோடு ஒத்தலோ அல்லது மிகுதலோ செய்வேன்' எனச் சொல்லித் தாயைத் தெளிவித்துத் தன் தம்பியரோடு கொன்றை வனத்தையடைந்து தவம் செய்கின்றான்.

கும்பகன்னன் உடல் கொதிக்கும் வேனிற்காலத்து ஐந்தீயுள் நின்றும், கார்காலத்துப் பெருமழையில் உடல் நனைந்தும், தூணோடு பொருந்திய இருப்பாணிபோல உடல் நடுங்காதிருந்தும், பனிக்காலத்தில் நீருள் மூழ்கிக் கிடந்து வருந்தியும் பதினாயிரம் ஆண்டு, கள் தவத்தில் கழிக்கின்றான்.

வீடணன், முக்காலமும் உணர்கின்ற முனிவரும் திகைக்குமாறு அவ்வனத்தில் தங்கி, ஒருகாலே உள்ளவர்போல ஒருகாலினைத் தரையிடத்து ஊன்றிக்கொண்டு ஒருகாலை உயரத் தூக்கிக்கொண்டு மேலே எரியைக் கக்கும் சூரிய மண்டலத்தினை நோக்கி இரண்டு கைகளையும் உயரத்தூக்கிக்கொண்டு ஐயாயிரம் ஆண்டுகள் தவம் புரிகின்றான். இராவணன் ஓராயிரம் ஆண்டு உண்ணா நோன்போடு தவஞ்செய்து கழிந்தால் ஒருதலை என்ற விழுக்காடு சிறப்புடைய தலையொன்பதினையும் அரிந்து ஓமத்தீயில் ஆகுதிபண்ணி மீண்டும் பெயராத உண்ணா நோன்புடையனாய்ப் பின்னும் ஆயிரம் ஆண்டு கழிந்து இருந்த தலையொன்றினையும் அரியத் தொடங்குகின்றான். அப்பொழுது பிரமன் தோன்றி அவ்விராவணனை நோக்கி அருந்தவம் செய்வதில் நின்னையொப்பவர் நீயேயன்றிப் பிறர் ஒருவர் இல்லை; நினது கையால் முன்பு அரிந்த தலைகள் ஒன்பதும் முன்போல முளைத்திடுவதாக என்று சொல்ல அத்தலைகள் தாம் முன்னையினும் அழகுடையனவாக முளைக்கின்றன. பிரமன் பின்னும் சொல்கின்றான். பெருகிய தவத்தினைச் செய்த நீ கேட்ட வரங்களைத் தருகின்றேன்; விரும்பியவற்றைச் சொல் என்று சொல்ல இராவணன், பழமையான இவ்வுலகில் நிலைபெற்ற மனிதரைப் பொருளாக மதியாமல் அவர்களால் தனக்கு மரணம் வரலாகாது என்று கேட்காமல் மற்றைய பொருள்கள் எல்லாவற்றையும் கேட்கின்றான். அவ்வரங்களையெல்லாம் பிரமன் கொடுக்கின்றான்.

அறத்தின் வழியொழுகும் வீடணன் உண்மையைத் தழுவி நின்று தவம் செய்கின்ற அருமையைக் கண்டு வியப்பெய்தி பிரமன் வெளிப்பட்டு, 'உனது பெருமை பொருந்திய உள்ளத்தின் விரும்பிய வரத்தைக்கேள்' என்று சொல்லத் தீங்கு கலவாத தவத்தினை யுடைய வீடணன் சிந்தித்துக் கேட்கின்றான்: நல்லோனே! நான் நடுங்குதற்குக் காரணமான துன்பம் வரினும் அறத்தைக் கைவிட்டுப் பொல்லாத பாவங்களைச் செய்யாமல் இருப்பேனாக! போரில் நின்னை முதலாகக் கொண்ட யாரும் என்னை வெல்லா திருப்பாராக என்று வேண்டுகின்றான். அவன் சுருக்கமாக வேண்டிய வரங்களைக் கொடுத்துவிட்டுப் பிரமன் என்றும் இறவாது இருப்பாய் என்ற வரத்தைத் தானே விரும்பிக் கொடுக்கின்றான்.

கும்பகன்னன் செய்யும் கொடுந்தவத்தைக் கண்டு நடுங்கி வானவரும் தானவரும் மாதவரும் கூடி, இவன் செய்யும் தவத் திற்கு இவனே வரங்கொள்ள விடுப்போமாயின் நாம் உய்தற்குப் பற்றுக்கோடில்லை என்பது அறிந்து பிரமனிடம் சென்று ஆதியில் பலவுலகங்களையும் படைத்தவனே! முன்னமே கொடுமை செய்யும் இயல்புடைய கும்பகன்னனுக்கு அவன் வேண்டிய வரம் கொடுத் தாயாகில் வழிப்பறி செய்கின்ற கள்வனிடத்தில் சிற்றரிவாளைக் கொடுப்பவனாவாய், எங்களையும் கெடுத்தவனாவாய் என்று சொல்லப் பிரமன், கலைமகளின் முகம் நோக்கி பொல்லாத தீய ஒழுக்கத்தை யுடையனாய் மூவுலகையும் பொடியாக்கவல்ல கும்பகன்னன் என்னிடம் நித்தியத்துவம் வேண்டும் என்று வரம் கேட்கும்போது நீ அவன் வாயில் நின்று நித்திரைத்துவம் வேண்டும் என்று கேட்கும்படி செய்வாயாக என்று கட்டளையிட்டுவிட்டுக் காட்டில் கடுந்தவம் செய்கின்ற கும்பகன்னனிடம் சென்று, 'உன் மனத்துக் கினிய வரம் தருகின்றேன் கேள்' என்று சொல்ல நித்தியத்துவம் வேண்டும் என்று சொல்ல வாயெடுத்தவன் கலைமகளின் சூழ்ச்சியால் நித்திரைத்துவம் வேண்டும் என்று வாய்தவறிக்கேட்டு விடுகின் றான்; அப்படியே கொடுத்தோம் என்று பிரமன் சொல்லிவிட்டுச் செல் கின்றான். சேறு நிறைந்த மடுவில் மூழ்கியிருந்து அரிய பட்டினி விரதம் கிடந்தாலும் உள்ளத்தூய்மையில்லாதவருக்கு ஒரு செயலும் பயனுடையதாகாது. கள்ள மனத்தோடு தவஞ்செய்த குப்பகன்னன், வள்ளலாகிய பிரமனிடத்தில் பெற்ற வரத்தால்

மாருத துக்கத்தையே பெறுகின்ருன். பிரமன் சென்ற பின்பு கும்பகன்னன், சிந்தை தெளிந்து தான் இப்படி வரம்கேட்க நேர்ந்தது தேவர் செய்த வஞ்சகச் செயலால்தான் என்றுணர்ந்து நொந்த மனத்தோடு சென்று வீடணனுக்கும் இதைச்சொல்வி அவனுடனே தம் பழைய வனத்தை அடைகின்ருன்.

அங்கு இராவணன் முதலிய மூவரும் தவஞ்செய்து பெற்றுள்ள வரத்தையும் ஆண்மையையும் அடங்கக்கேட்டு, முன் கண்ண னுக்குப் போரில் தோற்றுப் பாதாளம் புக்கொளித்த மாலியவான் சுமாலி முதலியோர் மகிழ்ச்சி மீக்கூர்ந்து சென்று, திரண்ட தோள்களையுடைய இராவணன் கும்பகன்னன் கலைகளைச் சார்ந்தே வளர்கின்ற விடணன் என்பவர்களைக் கண்ணுல் நோக்கி, அலை கடலில் துயிலும் திருமாலுக்குப் போரில் தோற்ற அரக்கர் எல்லாம் தலையெடுக்கப் பிறந்தவர்களே! வருக என வரவேற்று அவர்களை உயிர்பொருந்தத் தழுவிக் கொள்கின்ருர்கள்.

அவர்கள் மகிழ்ச்சியோடு அளவளாவி இருக்கும்போது சுமாலி இராவணனை நோக்கி, முன்பு தாமெல்லாம் திருமாலுக்குத் தோற்று ஓடிப் பாதாளம் புகுந்தமையும், பண்டு தாம் ஆண்ட பொன் மயமான இலங்கை நகரத்தில் நடுவே குபேரன் புகுந்து விற்றிருக்கின்றதையும், மனம் பொருது சொல்கின்ருன். பிரமன் மரபில் வந்த இராவண! தாம் முன்பு ஆண்டமண்ணுக்கும் பலர் அறிய மணம் செய்து கொண்டு மனையாளாய் வாழ்க்கைப்பட்ட பெண்ணுக்கும் தொடர்புபடாது வாழ்கின்றவர் தம் பெரிய வாழ்வைக் காட்டிலும் பிச்சையேற்று வாழ்வதே நன்று! காண் கின்ற நம் கண்ணிலும் நெருப்புப் பொறி பறக்குமாறு கடல் சூழ்ந்த இலங்கை மாநகரை ஆள்கின்றவன் குபேரன்! காண்பா யாக! பொன்மயமான இலங்கை மாநகரை ஆள்கின்ற குபேரன் அங்கு அரசாண்டு பழகிச்சேர்ந்திருந்த பற்றுணர்ச்சியால் உரிமை யுள்ள உனக்கு அந்த வளநகரத்தை விடுகில்லான்; சாமம், பேதம், தானம் என்ற மூவகை உபாயங்களால் அதை நினக்குத் தர வில்லையெனில் தண்டத்தால் நீ கொள்வாயாக! அப்படி நீ கொள்ளா விட்டால் நம்பகைவராகிய தேவர்கள் நம் நிலையைப் பார்த்து நகைப்பார்கள்! நின் வலியும் பெற்ற வரங்களும் மாசுண்ணும்; என்று கூறுகின்ருன்.

தன் தாய்க்குத் தந்தையாகிய மாலியவான் கூறிய சொல்லைக் கேட்டு இராவணன் எனக்கு மூத்தவனாகிய அண்ணன் குபேரனை யான் நேரே பகைத்துக் கொள்வது எப்படி என்று சொல்ல, சுமாலியின் மகனாகிய பிரகத்தன் சொல்கின்றான்: சூரராயுள்ளோர் இந்த உறவையெல்லாம் பார்ப்பார்களோ? அக்காலத்து ஒரு தந்தைக்கும் இருதாயர்க்கும் பிறந்த அசுரரோடு போர்செய்து அசுரர் குலத்தை அமரர் அழிக்கவில்லையோ? என்று கூறுகின்றான். அதைக்கேட்ட இராவணன் அவன் சொல்லுக்கு இசைந்து, நீயே சென்று குபேரனுக்கு இதனைச் சொல்லி வருக என்று விடுக்க, பிரகத்தன், மலைபோன்ற மாடங்களும் கூடங்களும் கோபுரங்களும் நிறைந்த இலங்கை மாநகரை அடைந்து, சிறப்பில் தனக்கு ஒப்பில்லாத குபேரனுக்குச் சமாதான வாசகங்களையே பொருந்தப் புகல்கின்றான்.

குபேர! நின் தம்பியாகிய உயர்ந்த மலைபோன்ற தோள்களை யுடைய இராவணன் என்னிடம் சொல்லி அனுப்பிய இதனைக் கேள்: 'முன்பு இலங்கை நகரை ஆண்டவர்கள் மாலியவான் முதலிய மூத்த மூவராவர். பின்பு அந்நகரத்திற்கு உரியவர்கள் அவர் மகள் வயிற்றுப் பிறந்தயான் அலால் பிறர் இல்லை. சொல்லு மிடத்து என் உறவை விரும்புவாயானால் இலங்கை நகரை எனக்குத் தருக' என்று சொல்லச் சொன்னான், என்று பிரகத்தன் சொல்லக்கேட்ட குபேரன் வருங்கருமத்தை மனத்தில் ஆராய்ந்து என் அரசும் என் நகரும் என் தம்பிக்குரியன அன்றோ? எனக்கு என்று என்ன இருக்கின்றது? தம்பி சொன்னபடி செய்வேன்; எனச் சொல்லிவிடுத்து அப்பிரகத்தனுக்குச் சொல்லிய எல்லா வற்றையும் தன் தந்தைக்குச் சொல்கின்றான் குபேரன். அதைக் கேட்ட விச்சிரவசு முனிவன், குபேரனை நோக்கி மைந்தா! இராவணன் துன்மதியான் ஆதலின் பழியான செயலை நீ சொல் கின்றாய் என்று அவனிடம் சொன்னாலும் அவன் கேளான். உனக்கு இதமான செயலைச் சொல்கின்றேன் கேள்! பிரமன் வரம் என் கின்ற வலிமையைக் கொண்டு திசைகள் தோறும் பழிவளர இவ் வுலகத்தை நலிகின்றான் இராவணன். நின்னிடத்தே புகழ்வளர அவனிடத்தே இலங்கையை விட்டுவிடு. வடதிசையில் இமயம் என்னும் மலையுளது. உலகவர் அதற்கு மலையரசு எனப் பெயர் சொல்லுவர். அம்மலை உமையை மகளாகக் கொண்டது. உமை

யொரு பாகத்துக்கொண்ட சிவன் தங்கியுள்ள கயிலையைப் பக்கத்தில் கொண்டுள்ளது. சூரியனது வெயில் நுழைதற்கரிய மரச் செறிவினையுடையது. கங்கை பல முகங்களோடு இறங்குகின்ற மொகும் மொகும் என்கின்ற ஒலி குழலோசையைத் தர, மன மகிழ்ந்து முரலுகின்ற வண்டின் ஒலியே இசைப்பாட்டாக ஒலிக்க, மயில் நடம் செய்யும் விரிந்த பொழிலையுடையது.

இத்தகைய எழிலும் சிறப்புமுடைய இமயமலையில் நின் உறவினரோடு போய்த் தங்குக! எனத் தந்தை விச்சிரவசுமுனி சொல்ல, அவர் சொல்லுக்கு இசைந்து குபேரன் இலங்கையை விடுத்து மனத்தினும் வேகமாகச் செல்லும் புட்பகம் என்னும் தெய்வத் தேரில் ஏறிக்கொண்டு இமயமலையில் சென்று தங்குகின்ருன். இராவணன் சேனைக்கடல் சூழச் சென்று தனக்கு உரிமையுள்ள இலங்கைமாநகரைச் சார்ந்து தன் அமைச்சர்கள் முடிசூட்ட மாமணி மண்டபத்தில் மகிழ்ந்து அரசு வீற்றிருக்கின்ருன். தேவர்களின் வேண்டுகோளின்படித் திருமால்முன்பு அரக்கரை அழித்து இலங்கையைப் பாழாக்க, அன்றுமுதல் பாதாளம் அடைந்தவர்களாகிய அரக்கர்கள் எல்லாம் இழந்த தனம் பெற்றவர்களைப் போல மகிழ்ந்து ஆரவாரித்து வந்து தம் பழைய இலங்கை நகரில் குடிபுகுந்து முன்பு போல் வீற்றிருக்கின்ருர்கள். அப்போது இராவணன் தன் தங்கை சூர்ப்பணகையின் நலத்தைக் கண்டு அரம்பையரினும் சிறந்தவள் இவள் என விரும்பிய வித்துருசிங்கன் என்பவனுக்கு விரும்பி மணஞ் செய்து கொடுக்கின்ருன்.

பின்பு ஒருநாள் இராவணன் காட்டில் வேட்டைக்குப் பேரகும் போது அங்குத் தேன்மணக்கும் பூங்குழலாகிய மண்டோதரியோடு மயன் வந்து காண்கின்ருன். உடனே இராவணன் மயனைப் பார்த்து இந்த அழகியை உடனழைத்துக்கொண்டு யாரும் இல்லாத வனத்திற்கு வந்தவனே! நீ யாவன்? தெளிவாகச் சொல் என்று கேட்க மயன், மாலையணிந்த நெடிய தோள்களை யுடையவனே! யான் தயித்தியர் மரபில் வந்த அரசன். மயன் என்னும் பெயரேன்; முற்காலத்துச் செந்தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் திருமகளை யொத்த வடிவழகு பெற்ற கஞ்சனை என்பவளைத் தேவர்கள் எனக்கு மனைவியாகக் கொடுக்க, அவளோடு ஏம புரி என்ற

நகரை நிருமித்து அதில் அவளும் நானும் காமம் என்கின்ற பெருங் கடலுக்குக் கரை காணுது ஐந்நூறு ஆண்டுகள் வாழ்ந்திருந்த போது, அவ்விடத்து அவள் மணிவயிற்றில் வந்து பிறந்தவள் மண்டோதரி என்று பெயருடையவள் இவள். இம்மங்கையுடன் பிறந்தவர்கள் மாயாவி துந்துமி என்ற பெயருடையராவர். இவள் குணத்திற்கும் அழகிற்கும் நேர் ஒத்துள்ள வரனைக் காணுமல் எங்கும் திரிந்து இந்த வனத்துள் புகுந்தேன்.

ஒரு பெண்ணுக்குக் கணவனை ஆராயும்போது குலத்துப் பெருமக்கள் குலம் வேண்டும் என்பர், தந்தைமாரோ கல்வியினுல் குறையாத ஞானவலிமையன் வேண்டும் என்பார்; தாய்மார்கள் பரந்த பெருஞ்செல்வமுடைவயனுக வேண்டும் என்பர்; கன்னி மாரோ இளமையும் அழகும் இயைந்தவன் வேண்டும் என்பர். பண்புடைய குடிப்பிறப்பும் பழிப்பில்லாத பேரழகும் பரந்த கேள்வியால் பெறுகின்ற கல்வியறிவாகிய நுண்பொருளும் நீரை நீக்கிப் பாலை மட்டும் அருந்துகின்ற அன்னம்போல அறநெஞ்சினுல் நோக்கித் தீவினையால் வரும் பொருளை நீக்கிவிட்டு நல்வினையால் வருவதுதானு என்று ஆராய்ந்து கொள்ளும் ஒள்ளிய பொருளும் ஆகிய நான்கினையும் உடையவர்களைக் காணக்கிடையாத இந்தவுலகில் பெண்ணைப் பெறுவது போலப் பெரிய துயர்தான் உண்டோ? என்று சொல்லிவிட்டுப் பின்னும் மயன் இராவணனை நோக்கிச் சொல்லுகின்றுன்.

நின் பெரிய அழகும் இளமையும் பற்றிப் பேச வேண்டுவ தில்லை. நேரில் காண்கின்றேன். உன் மரபும் உன் பதியும் உன் பெயரும் உன் கல்வி நலமும் பற்றிச் சொல்லுக என்றுகேட்க, இராவணனும் பிரமன் மகன் புலத்தியனுக்கு மகனுகிய விச்சிர வசுவின் மைந்தன் யான், அழகிய இலங்கைமாநகரை ஆட்சி செய்கின்ற மன்னவன்; தசக்கிரீவன் என்னும் பெயரையுடை யேன்; ஆயிரம் வேதங்களைக் கற்றுவல்லவனுக இருக்கின்றேன் என்கின்றுன். இதைக்கேட்டவுடன் இம் மங்கையை வளர்த்து வைத்துக் கொண்டிருந்த பயனைப் பெற்றுவிட்டேன்; என்று மயன் மகிழ்ந்துகூறித், தன் கமண்டலத்து நீரைக்கொண்டு தாரைவார்த்து மண்டோதரியைக் கொடுக்க, எண் திசையும் போற்றுதற்குரிய

திறமைமிக்க இராவணன் வலிமை மிக்க அரக்கர்கள் போற்ற வண்டுகள் அமரும் கூந்தலையுடைய மண்டோதரியை மணந்து கொள்கின்றான்.

பின்பு மயன் மகிழ்ச்சி மீக்கூர்ந்து தன் மருமகனுக்குச் சீராக ஒரு வேலினைக் கொடுக்கின்றான். அவ்வேல் பிரமன்மேல் விட்டாலும் அவன் உயிர் கொண்டன்றி மீளாதது; அதைக் கொடுத்துவிட்டு மயன் செல்ல, மண்டோதரியை உடன் கொண்டு, இருபது தோள்களும் பத்துத் தலைகளும் பொலிந்து தோன்ற வாளேந்திய படைசூழ்ந்துவர மணக்கோலத்துடன் இலங்கை நகரில் இராவணன் மகிழ்ச்சியுடன் புகுகின்றான். பின்பு கும்பகன்னன் வயிரோசனன் மகளுக்கு மகள் வச்சிர சுவாலை என்பவளை மணந்து கொள்கின்றான். புகழ்மிக்க வீடணன், கைதூடணன் என்னும் கந்தருவத்தலைவன் மகள் சரபை என்பவளை விதிப்படி மணந்து கொள்கின்றான்.

இந்திரனும் இந்திராணியும்போல இராவணனும் மண்டோதரியும் மனம் கலந்து இன்பம் அனுபவித்து வருங்காலத்தில் மண்டோதரியின் வயிற்றில் பிறந்த மகன் இடியிடித்தாற்போல வாய்விட்டழுதல் கண்டு அவனுக்கு மேகநாதன் எனப் பெயர் வைத்தான் இராவணன். பிறைச் சந்திரனைப் போன்ற எயிற்றினையும் பிலத்துவாரம் போன்ற வாயினையும் பெரியமலை போலக் கருத்த உருவத்தையும் சுழல்கின்ற கண்களையும் திண்ணிய தோள்களையும் வலிய கழலணிந்த காலினையும் உடைய இராவணன் தன் மகனை இந்த மூவுலகையும் சுட்டழிக்கவேண்டி மிக்க சுவையினையுடைய சோறும் கறியும் ஆகிய சிறிய சுள்ளிகளை இட்டு மூட்டிச் சிறிதாக உள்ள நெருப்பினைப் பெரிய நெருப்பாகச் செய்வாரைப்போலச் செவிலித்தாயர்களைக் கொண்டு வளர்க்கின்றான்.

மேகனாதனுக்குப் பின்பு அதிகாயன் அக்ககுமாரன் என்ற இருவரும் வானோருடைய பொன்னகரத்தைப் பொடியாக்கத்தக்க பேராற்றலோடு பிறக்கின்றார்கள். கும்பகன்னனுக்கு வச்சிர சுவாலையின் மணிவயிற்றில் எமனை ஒத்த கும்பன், நிகும்பன்

என்ற இருவரும் பிறக்கின்றனர். பனியைக் காய்ந்துலர்த்துகின்ற இள ஞாயிற்றின் செங்கதிர் ஒளிபோலப் பலமணிகள் பதித்துச் செய்த அணிகலன்களோடு பொலிந்து விளங்குகின்ற இம்மைந்தர்கள் எல்லாம் சிறப்புடன் வளரா நிற்க, கும்பகன்னன் நல்ல தவஞ்செய்து சாதித்தும் வரமாகப் பெற்ற தூக்கம் தன்னைச் சார்ந்த அளவில் இராவணனை அடைந்து 'இங்கு யான் இனிதாக உறங்குதற்கு அழகிய மணிமண்டபம் செய்வி' என்று சொல்கின்றான். அதுகேட்ட இராவணனும் தெய்வதச்சனுக்கு உள்ளபடி சொல்ல, கேட்ட அத்தெய்வத்தச்சனும் ஒருயோசனை அகலமும் இரண்டு யோசனை நீளமும் உள்ளதாய்ப் பொன்னுலியன்ற அழகிய மண்டபத்தை மூவுலகத்திலும் இல்லாத சிறப்புடன் செய்தமைக்கின்றான். கும்பகன்னன் அம்மண்டபத்தைக் கண்டு மகிழ்ந்து நெடிது காலம் கண்ணுறங்கிக் கிடக்கின்றான் என்பது இப்படலத்தில் கூறப்படும் பொருளாகும்.

### ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. **வான்மீகத்தில் :** இராவணன் பிறந்த வேளையில் குள்ள நரிகளும் மற்றைக் கொடிய விலங்குகளும் வாய்களால் நெருப்பைக் கக்கிக் கொண்டு இடப் பக்கமாக வட்டமிட்டுக்கொண்டு எங்கும் திரிந்தன. இந்திரன் ரத்தத்தைப் பொழிந்தான். மேகங்களும் பயங்கரமாய் இடித்தன. விண்ணில் சூரியனும் ஒளிவீசவில்லை. பூமியில் பெரிய கொள்ளிக் கட்டைகள் வீழ்ந்தன எனக் கூறப்பட்டுளது. ஒட்டக்கூத்தர் இந்த உற்பாதங்களைப் பற்றி யாதும் கூறாது விடுத்துள்ளார்.

2. இராவணன் தன் தாயிடம் தன் தவத்தைப் பற்றியும் தவப் பயனைப் பற்றியும் உறுதி கூறிவிட்டுத் தவஞ்செய்யக் கோகர்ணம் என்கின்ற மலைக்குப் போனதாக வான்மீகம் கூறுகின்றது. ஒட்டக்கூத்தரோ இராவணன் தன் தம்பியரோடு கொன்றை வனத்திற்குச் சென்றதாகச் சொல்கின்றார்.

3. வீடணன் ஒருகாலில் நின்று ஐயாயிர வருடங்களும் இருகாலில் நின்று கைகளைத் தலைக்கு மேல் நீட்டிச் சூரியனையே நினைந்து ஐயாயிரம் வருடங்களும் தவஞ்செய்ததாக வான்மீகி

கூறியுள்ளார். ஒட்டக்கூத்தரோ ஐயாயிரம் ஆண்டுகளே அவன் தவஞ்செய்ததாகக் கூறுகின்றார். இராவணனும் கும்பகன்னனும் பதினாயிரம் ஆண்டுகள் தவம் செய்ய விடணன் மட்டும் ஐயாயிரம் ஆண்டே தவஞ்செய்தான் என்பதைவிடப் பத்தாயிரம் ஆண்டுகள் தவஞ்செய்தான் என்ற வான்மீகியின் கருத்தே பொருத்தமாக வுள்ளது.

4. இராவணன் தவத்திற்கு மகிழ்ந்து பிரமன் வெளிப்பட்டு உனக்கு வேண்டிய வரத்தைத் தருகிறேன் என்றபோது, இராவணன் மரணமிலாப் பெருவாழ்வையே வேண்டப் பிரம தேவன், மரணமின்மை என்பது யாருக்கும் கிடைக்காது எனக்கும் கூட கிடைக்காது; வேறு வரம்கேள் என்றதாகவும் பின்பு இராவணன் கருடர்கள், நாகர்கள், இயக்கர்கள் இவர்களுக்கும் தைத்தியர், தானவர், வானவர்களுக்கும் கொல்ல முடியாதவனாக இருக்க வேண்டும் என்றும், மற்றைய மானிடர் முதலான உயிர்களைப் பற்றி எனக்குப் பயமில்லை. அவர்களைத் துரும்புக்கு ஒப்பாக எண்ணுகின்றேன்; என்றும் சொன்னதாக வான்மீகத்தில் உள்ளது.

இந்த விளக்கங்களை ஒட்டக்கூத்தர் சொல்லாது விடுத்துள்ளார். மனிதர்தமைப் பொருளா மனத்தில் நினையான் வாளரக்கன், உன்னும் பொருள் ஒன்றொழியாமல் வேண்ட விரிஞ்சன் உவந் தளித்தான் என மிகச் சுருக்கமாகச் சொல்கின்றார். மேலும் இராவணனுக்கு வேண்டுருவம் எடுக்கும் தன்மையையும் பிரமன் வரமாகக் கொடுத்ததாக வான்மீகம் கூறுகின்றது. ஒட்டக்கூத்தர் இதனைச் சொல்லவில்லை.

5. கும்பகன்னன் தவத்தால் விரும்பிய வரமும் இறவாத நிலைதான். இதையுணர்ந்த தேவர்கள் கும்பகன்னனுக்கு வரமளிக்கச் செல்லும் பிரமனிடம் சென்று தங்கள் கருத்தைத் தெரிவிக்கும்போது, முன்னமே கும்பகன்னன் உலகங்களை நடுங்கச் செய்கின்றான். இந்திரனது நந்தவனத்தில் இருந்த தேவமாதர் எழுவரையும் இந்திரனது பரிவாரங்களாக உள்ள தேவர்கள் பதின்மரையும் மானிடப் பெரியோர்களையும் முனிவர்களையும் கொன்று தின்றிருக்கின்றான். எனவே இத்தகைய அரக்கனுக்கு மரணமிலா வரம் கொடுக்காமல் அறிவு சற்று இழந்திருக்கின்ற

வரத்தைக் கொடுப்பது – உறக்கத்தையே வரமாகக் கொடுப்பது நல்லது என வேண்டிக் கொண்டார்கள் என்று வான்மீகம் கூறுகின்றது. ஒட்டக்கூத்தர் கும்பகன்னனின் கொடுமைகளை இவ்வளவு விளக்கமாகச் சொல்லவில்லை. கும்பகருணன் குவலயத்தில் சுத்தராய முனிவரையே கொன்று தின்னத் தொடங்கினன் எனச் சுருக்கமாகக் கூறியுள்ளார்.

6. பிரகத்தன் சொன்னபடி குபேரனிடம் பழைய உரிமையைக் கேட்க உடன்பட்ட இராவணன் உடனே இலங்கையைச் சேர்ந்த திரிகூட மலைக்கு வந்து சேர்ந்தான் என்றும் அங்கிருந்து தான் பிரகத்தனைக் குபேரனிடம் தூதுபோக விடுத்தான் என்றும் வான்மீகம் கூறுகின்றது.

ஒட்டக்கூத்தர் இதைச் சொல்லவில்லை. தாங்கள் தங்கியிருந்த வனத்திலிருந்தே பிரகத்தனைத் தூதாக அனுப்பியதாகச் சொல்லியுள்ளார்.

7. **வான்மீகத்தில்:** மயன் இராவணனிடத்தில் தன் வரலாறு கூறும்போது ஏமை என்ற பெயருள்ள ஒரு தெய்வப் பெண்ணைத் தேவர்கள் தனக்குக் கலியாணம் செய்து கொடுத்ததாகவும் அவள் ஐந்நூறு ஆண்டுகள் தன்னோடு வாழ்ந்திருந்துவிட்டுப் பின்பு தேவர்களின் காரியத்தில் புகுந்து விட்டதாகவும் அவள் பிரிந்த பதினன்காவது ஆண்டில் மாயையினல் வயிரங்களாலும் வைடூரியங்களாலும் அணிசெய்யப்பட்ட பொன்மயமான ஒரு பட்டணத்தை நிருமித்து அதில் ஏமையைப் பிரிந்த துன்பத்தோடு வாழ்ந்து வந்ததாகவும், அப்பட்டணத்திலிருந்து தன் மகள் மண்டோதரியை அழைத்துக் கொண்டு காட்டிற்கு வந்ததாகவும் கூறுகிருன்.

ஒட்டக்கூத்தர் இந்த விளக்கங்களைச் சொல்லவில்லை. மயன் மனைவிக்குக் கஞ்சனை என்று பெயர் கூறுகின்ருர். ஏமம்-காஞ்சனம் என்கின்ற இரண்டும் பொன்னைக் குறிக்கின்ற சொற்களேயாதலின் ஏமையைக் கஞ்சனை என்ற பெயரால் குறித்தலும் பொருத்தமே. மயன் விட்டு ஐந்நூறு ஆண்டுகளுக்குப்பின் ஏமை தேவர்களோடு சேர்ந்து விட்ட நிகழ்ச்சியைச் சொல்லவில்லை.

அவள் பிரிந்த பின்பு அவள் பெயரால் ஒரு நகரம் அமைத்ததாகச் சொல்லாமல் அவளை மணந்து வந்ததும் ஏமாபுரி என்று அவள் பெயரால் ஒரு நகரத்தை உண்டாக்கி அதில் இருவரும் ஐந்நூறு ஆண்டுகள் இன்புற்றிருந்ததாகவும் சொல்லியுள்ளார். இங்கு வான்மீகியின் கருத்தைவிட ஒட்டக்கூத்தர் சொல்வது-ஏமையோடு வாழ்தற்கு பொன்மயமான ஏமாபுரி என்ற நகரத்தை உண்டாக்கி அதில் வாழ்ந்திருந்தார்கள் என்பது-பொருத்தமாகவுள்ளது. பிரிந்து வருந்துதற்கு என்று ஒரு நகரம் அமைப்பது பொருத்தமாகவில்லை.

## படலப் பொருட் சிறப்பு

### மணமகன் தேர்வு

இராவணன் பிறப்புப் படலத்தில் ஒரு பெண்ணுக்குக் கணவனைத் தேர்ந்தெடுக்கும் நிலையில் அப் பெண் பிறந்த குலத்துப் பெருமக்களும், தந்தையும், தாயும் அப்பெண்ணும் கணவனாக வருபவன் என்ன என்ன வகையில் சிறப்புடையவனாக இருக்க வேண்டும் என்று எண்ணுவர்; என்பதை இந்நூலாசிரியர் மிகப் பொருத்தமாகச் சிந்தித்துச் சொல்கின்றார். ஒவ்வொருவர் மனமும் ஒவ்வொரு வகையில் எதிர்பார்க்கும் என்பதை நன்கு சித்தரித்துக் காட்டுகின்றார் புலவர். அக்குலத்துப் பெருமக்கள் அந்தப் பெண்ணை மணப்பதற்கு நல்ல குலத்துப் பிறந்தவனாக இருக்க வேண்டும் என்று எண்ணுவார்களாம். மணமகனின் கல்வியைப் பற்றியோ, செல்வத்தைப் பற்றியோ அவனழகும் இளமையும் பற்றியோ குலத்தோர் சிந்திக்க மாட்டார்கள். அவர்கள் நோக்கமெல்லாம் மாப்பிள்ளை நல்ல குடிப்பிறப்புள்ளவனாக இருக்க வேண்டும் என்பதேயாம். ஆனால் பெண்ணின் தந்தையோ தன் பெண்ணை மணக்க வருகின்ற மணாளன் கல்வியறிவுள்ளவனாக இருக்க வேண்டும் என அது ஒன்றையே நோக்குவானும். மணமகனது செல்வம்பற்றியோ இளமையழகு பற்றியோ சிறிதும் சிந்திக்க மாட்டானும். ஆனால் பெண்ணைப் பெற்ற தாயோ தன் பெண்ணுக்குக் கொழுநனாக வருபவன் கொழுத்த செல்வமுடையவனாக இருக்க வேண்டும் என்று விரும்புவாளாம். மணமகனின் குலம் பற்றியோ கல்வி நலம் பற்றியோ அழகு பற்றியோ அவள் சிந்தனை செய்ய மாட்டாளாம். ஆனால் மணமகளோ, தன்னை மணக்க

வருபவன் இளமையும் அழகும் உடையவனாக இருக்க வேண்டும் என்ற ஒரே நோக்கம் உடையவளாக இருப்பாளாம். குலமும் கல்வியும் செல்வமும் பற்றி மிகுதியாகச் சிந்திக்கவே மாட்டாளாம்.

மணமகனைத் தேர்ந்தெடுப்பதில் குலத்தோரும், தந்தையும் தாயும் கன்னிப்பெண்ணும் கொள்ளும் மனநிலையை நன்காராய்ந்து ஒருவரோடு ஒருவர் வேறுபட்ட கருத்தினராயேயிருப்பர் என்பதைத் தெளிவாக்கியுள்ளார் ஆசிரியர்.

குலம்வேண்டு மென்றிருப்பர் குலத்துள்ளார்,
கல்வியினுற் குறையா ஞானப்
பலம் வேண்டும் என்றிருப்பர் தந்தைமார்;
பரந்த பெருஞ் செல்வமுள்ள
தலம் வேண்டும் என்றிருப்பர் தாய்மார்கள்;
யவ்வனமும் அழகும் சார்ந்த
நலம் வேண்டும் என்றிருப்பர் நாறுகுழல்
கன்னிமார் நலத்தின் மிக்கார். 60

என்ற செய்யுளைக் காணலாம். மணமகனுக்குக் குலநலமும் கல்வி நலமும் செல்வ நலமும் இளமையழகு நலமும் ஆகிய நான்கும் இருந்தாலொழிய இந்த நால்வகையினரையும் மன நிறைவு செய்யவியலாது. மண்டோதரியைப் பெற்ற மயன் இந்த நால் வகையாரின் மனநிலையையும் நினைத்தே இவ்வாறு சொல்லு கின்றுன். இந்த நால்வகையும் நிரம்பிய மணமகன் இவ்வுலகத்தில் கிடைத்தல் அரிது ஆதலின், பெண் பெற்றவர் அடையும் பெருந் துயரையும் பேசுகின்றுன்.

'இந்நான்கும் உடையாரைக் கிடையாதிவ் வுலகந்தன்னில்
பெண்பெறுகை தனைப்போலப் பெரியதுயர் தானுண்டோ
[பேசுங்காலே' (61)

என்று மனம் நொந்து கூறியிருப்பது இக்காலத்தார்க்கும் பொருந் திய சொல்லாக அமைந்துள்ளது. ஒரு பெண்ணைப் பெற்றவனே இப்படிச் சொல்லுவான் ஆயின் பலபெண்களைப் பெற்றவர் துயரம் சொல்லில் அடங்குமோ?

## பெயராட்சி

மண்டோதரி என்ற பெயரின் உண்மையுருவம் எது என்பதைத் தெளிவிப்பார் போல இவ்வாசிரியர்.

**'வண்டமருங்குழல் மண்டோதரியை மணஞ்செய்ததற்பின்' (63)**

என்று விளக்கம் தருகின்றார். மயன் மகளும் இராவணன் மனைவியும் சிவன்பால் பேரன்புமுடைய நங்கையை மண்டோதரி என்று பெயரிட்டழைப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. இப்பெயர் ஞானசம்பந்தர் தேவாரத்தில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

**'வண்டமரோதி மடந்தை பேணின**
**பண்டையிராவணன் பாடியுய்ந்தன'**

(பஞ்சாக்கிரத் திருப்பதிகம்)

என்பது காணலாம். ஞானசம்பந்தர் காலத்தில் வண்டமரோதி என்றிருந்த பெயர் பிற்காலத்து மண்டோதரி என மாறியிருத்தல் கூடும். கூந்தலின் நறுமணத்தால் வண்டுகள் அமர்ந்திருத்தற்குக் காரணமான இயற்கை மணமுடையவள் என்றோ வண்டுகள் மொய்த்திருப்பது போன்று சுருண்டு கறுத்துச் செறிந்த கூந்தலையுடையவள் என்றோ பொருள்படக் கூடிய பெயராக அது அமைந்திருத்தல் காணலாம். எனவே அப்பெயரின் பழைய வடிவையும் புலப்படுத்திப் புதிய பெயரையும் குறித்துச் செல்லும் இவ்வாசிரியரின் நடுவு நிலையான புலமை பாராட்டுதற்குரியதாகும்.

'வண்டு அமருங்குழல், மண்டோதரி' என்புழி வண்டமருங்குழல் என்பது வண்டமரோதி என்ற பழைய பெயரை நினைவுபடுத்துவதாக அமைந்திருத்தல் காணலாம். மாணிக்கவாசகர் ஆர்கலிசூழ் தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்கு (குயிற்பத்து) என்று இப்பெயரை வேறு வகையாக ஆண்டுள்ளார். வண்டமரோதி என்ற காரணத்தோடு அமைந்த இப்பெயர், வண்டோதரி எனவும் மண்டோதரி எனவும் காலப்போக்கில் மாறி வந்திருப்பதை இங்கு நாம் அறிந்துகொள்ளலாம்.

## உவமைகள்

குபேரன் ஏறிவந்த புட்பகவிமானத்தின் இயல்பைப் பற்றி புலப்படுத்தும்போது இவ்வாசிரியர் ஒரு நல்ல உவமையை எடுத்தாள்கின்ருர். புட்பக விமானம் ஏறுபவர் தொகைக்கேற்ப விரிதலும் குவிதலுமுடையது. ஏறுவோர் சிலராயின் அவர்க்கேற்பக் குவிந்து சிறிதாக அமையும்; ஏறுவோர் மூவுலகத்தோர் அனைவருமாயினும் அவர்க்கேற்ப விரிந்து பெரிதாக அமையும். இது காட்சிப் பொருள். ஏறுவோர் ஏற ஏற, இடமில்லை என்பதற்கிடமில்லாமல் பெருகி இடம் கொடுக்கும் இயல்பினது புட்பகம் என்பதை விளக்க அன்புமிக்கு விளங்கும் குருவின் சொற்படி பாடங்களைக் கற்கும் மாணவர்க்குக் கற்குந்தோறு மிகப் பெருகுகின்ற அறிவுபோலப் பெருகின்ற இடத்தினையுடைய புட்பகம் என்று உவமை கூறி விளக்குகின்ருர் ஆசிரியர்.

'காதற் குருசொல் வழிகாட்டக் கற்குந் தோறும் மிகப் பெருகும்
போதத்தளவும் பெருகிடத்துப் புட்பகத்து மிசையேறி' (3)

என்பது காண்க. 'நவில்தொறு நூனயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு' என்ற வள்ளுவர் வாய்மொழியையே புதிய மெருகு கொடுத்து, காதற்குரு சொல் வழிகாட்டக் கற்குந் தோறும் மிகப் பெருகும் போதம்' என்று கூறியிருப்பது இக்கால மாணவர்க்குப் பெரிதும் வேண்டத்தக்கதொரு பெருங்கருத்தாகும். தாமே சில நூல்களைக் கற்க நேரும்போதும் முன்பு கூறிய குருவின் சொல்லை வழிகாட்டியாகக் கொண்டே கற்க வேண்டும் என்ற மரபினை இங்குப் புலப்படுத்தியிருத்தல் காணலாம்.

இனி, இராவணன் தன் முதல் மகனுகிய மேகநாதனைத் தக்க செவிலித் தாயரைக்கொண்டு சுவைமிகு சோறும் கறியும் ஊட்டி வளர்க்கும் திறத்திற்கு உவமையாக சிறு சுள்ளி இட்டு மூட்டிச் சிறு நெருப்பைப் பெரு நெருப்பா வாக்குவார் போல் வளர்த்தார் செவிலித்தாய்மார் (67) என்று கூறுகின்ருர். இந்த உவமம் மூவுலகையும் அழிக்கத்தக்க கொடுமை மிக்க இந்திரசித்தின் வளர்ச்சிக்கு ஏற்ற உவமமாக அமைந்திருத்தல் காணலாம். உணவென்னும் சிறுசுள்ளி என்றது உருவகம்.

## பெண்ணின் பெருமை

ஆண்மகனுகப் பிறந்தவர்கள் பிறந்த வீட்டுக்கு மட்டுமே விளக்கம் தருபவர்கள்; ஆனல், பெண்ணுகப் பிறத்தவர்கள் பிறந்த குடியும் புக்க குடியும் விளக்கமுறச் செய்பவர் என்பார்கள். இந் நூலாசிரியர் அதற்கு மேலும் ஒன்று கூட்டிச் சொல்கின்றுர். 'பெண் பிறக்கத் தந்தைகுலமும் தாய்க்குலமும்' புக்க குலமும் இவை விளங்கும்' எனச் சுமாலி தன் மகள் கைகசியைப் பார்த்துக் கூறியதாகச் சொல்கின்றுர். பெண்ணுக்குத் தந்தை மரபும் தாயின் மரபும் வெவ்வேறு ஆதலின், அவ்விரு மரபும் ஒரு பெண்ணின் ஒழுக்கத்தால் பெருமை பெறும் என்பதை இங்கு விளக்கி, ஆண்மகனைக் காட்டிலும் பெண்ணுகப் பிறந்தவர் பெருமையைச் சிறப்பித்துக் காட்டியுள்ளார் இந்நூலாசிரியர்.

## நகைச்சுவை

ஒட்டக்கூத்தர் சூர்ப்பணகையின் திருமணம் பற்றிக் கூறும் போது யார்க்கும் நகைச்சுவை தோன்றும்படி செய்துள்ளார். வித்துரு சிங்கன் என்பவன் பருத்த இடையும் பருங்கழுத்தும் இடியென்ன வெடிக்குங்குரலும் புகையும் கனலும் கக்கும் கண்ணும் உடையாளாய் எமனும் நடுங்கப் பிறந்த சூர்ப்பணகையைக் கண்டு 'விடல் ஒல்லேன்' என்று விரும்பியது எப்படி என்பதை ஆசிரியர் நகைச்சுவை தோன்றச் சொல்கின்றுர். 'அரம்பை மாதர் அழகிற் சிறந்தவர்கள் என்று சொல்கின்றுர்கள்; அவர்கட்கு யார்க்கும் தடைபட்டு நிற்காத வலிமையில்லை. அவ்வரம்பையர்க்குத் தம்முலைகளைத் தாங்கங் கூடிய வலிமையுள்ள இடையில்லை. என்னைப்போல் இமைப்பளவில் எவ்வுலகையும் சென்றடைந்து மீளுதற்குரிய விரைந்த நடையில்லை' என்று கூறி, இவையில்லாத அரம்பையர்தம் வலிமையில்லாத நிலையையும் இடையின் பருமையில்லாத நிலையையும் இமைப்பளவில் எவ்வுலகும் சென்று மீளும் விரைந்த நடையில்லாத நிலையையும் மறைப்பதற்காக 'மெல்லியலார் என்றும் நுண்ணிடையர் என்றும் தம்மைத் தாம் பாராட்டிக் கொள்வார்கள் என்ற கருத்துப்படப் பழித்துரைப்பாளாம் சூர்ப்பணகை; அவள் பழித்துரையைக் கேட்டு அவள் நலத்தையும் கண்ட

வித்துருசிங்கன் அரம்பையரினும் இச்சூர்ப்பணகை வலிமையாலும் இடையின் பருமையாலும், விரைந்த நடையாலும் சிறந்தவளே என்று துணிந்து, இவளை விடல் ஒல்லேன் என்று காதலித்தபோது இராவணன் தன் தங்கை சூர்ப்பணகையை அவனுக்கு விதிப்படி மணஞ்செய்து கொடுத்தான். அதனை.

தடையில்லா வலியில்லை அரம்பையர்க்குத்
தம்முலைகள் தம்மைத்தாங்க
இடையில்லை, என்னைப்போல் இமைப்பளவில்
எவ்வுலகு முட்டிமீளும்
நடையில்லை எனப்பழிக்கும் நங்கை மடச்
சூர்ப்ப நகை நலத்தைக்கண்டு
விடலொல்லேன் என விரும்பும் வித்துரு
சிங்கேசனுக்கு விதியின் ஈந்தான்.

என்ற செய்யுளால் அறியலாம். பெண்களுக்கேற்ற மென்மையும் நுண்ணிடையும் அன்னம் போன்ற மென்னடையும் இல்லாத சூர்ப்பநகை, அவையெல்லாம் வாய்க்கப் பெற்ற அரம்பையர்க்குத் தன்னைப்போன்ற வலிமையும் பருத்த இடையும் விரைந்த நடையும் இல்லாமை காட்டிப் பழிக்குந்திறம் நகைச்சுவைக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றது.

## இயற்கையழகும் செய்யுளோசையும்

குபேரன் தன் தந்தையிடம் இராவணன் எண்ணத்தை இயம்ப அந்த விச்சிரவசுமுனிவன், மகனுக்கு அமைதிகூறும் திறம் சிறப்பாக அமைந்துள்ளது. சிறுபிள்ளைகளில் ஒருவர்கையில் உள்ள தின்பண்டத்தை மற்றொருவர் கவர்ந்தபோது தாய்கண்டு, கவலையுற்ற பிள்ளைக்குத் தன் கற்பனைத் திறத்தால் ஆறுதல் கூறுவது போல, இங்குக் குபேரனுக்கு ஆறுதல் கூறுகின்றார். பகைவர் யாரும் அணுக முடியாத கடலரணத்தையுடைய பொன்மயமான இலங்கைமாநகரை வேறு வழியின்றி இராவணனுக்கு விட்டுவந்த குபேரனுக்கு இமய மலையின் இயற்கை எழிலை எடுத்தியம்பி அங்குச் சென்று தங்கச் சொல்கின்றார் முனிவர்.

**இமயம தெனுமலை வடதிசையுளதது மலையரசிதுவென**
**இடமுடையுலகவ ரிடுபெய ருடையது.** 48

என இமயமலையின் சிறப்பைச் சொல்லும் செய்யுள் ஒற்றெழுத்தே இல்லாமல் துள்ளுநடையுடன் செல்லும் இயல்பினதாய்ப் பிள்ளையினுள்ளத்தே உவகைத்துள்ளலை எழுப்பவல்லதாய் அமைந்திருத்தல் காணலாம். அம்மலையின் தலைமையைப் பற்றிக் கூறிய முனிவர் அதன் தெய்வத்தன்மையை விரிப்பாராய் மயிலியல் உமையினை மகளென உடையது எனவும், குயில் மொழி யவளொடு குளிர்சடை யரனுறை கயிலையை ஒருபுடையுடையது எனவும், விளம்புகின்றார். இங்கு மயிம் குயிலும் ஆகிய அழகிய பறவைகள் உவமைகளாக வந்து கேட்போர் உள்ளக் கிளர்ச்சியை யெழுப்ப வல்லதாதல் காணலாம். கயிலை மலையை ஒரு பக்கத்தே கொண்டிருப்பது இமயத்தின் தெய்வத்தன்மையை மிகுதிப்படுத்துகின்றது என்பது கருத்து. அந்த இமயத்தில் உள்ள எழில்மிக்க பொழில்களில் மரங்களின் செறிவால் கதிரவன் வெயில் நுழைவு அரும் மரம் மிடைதடம் உடையது ஆகின்றது என்பது கூறி அம் மலையின் இயற்கை அழகைப் புலப்படுத்துகின்றார்

எழில்மிக்க அப்பொழிலினுடே கங்கை மாநதி பல முகங்களோடு இறங்குகின்றபோது எழுகின்ற மொகு மொகும் என்கின்ற ஒலி முழவின் ஒலியாகக் கேட்கின்றது. கங்கைவெள்ளத்தில் மிதந்து வருகின்ற பலவண்ண மலர்களில் உள்ள தேனை அருந்தும் வண்டுகள் முரலுகின்ற ஓசை இசைப்பாட்டாகக் கேட்கின்றது. அந்த முழவொலியையும் வண்டுகளின் இசைப்பாட்டையும் கேட்ட மயிலினங்கள் அகமிக மகிழ்ந்து நடஞ்செய்கின்றன. இந்நிகழ்ச்சியை:

**பகுமுக மொடுதிகழ் பகிரதி யிழிதரு**
**மொகுமொகு மெனுமொலி முழவொலி யதுதர**
**அகமகிழறுபத வளியிசை முரறர**
**மிகமயினட முறு விரிபொழிலுடையது** 50

என்ற பாடலால் முனிவர் அறிவிக்கும்போது இப்பாடலின் ஓசையே வண்ண மயிலின் வளமார் நடினத்தை நம் கண்முன்

நிறுத்துகின்றது. கங்கைநதி பாய்ந்து வரும் ஓசை நாம் காதில் கேட்கின்றது. வண்டுகளின் ரீங்காரத்தை நம் செவி ஓர்த்துணர் கின்றது. விரிபொழிலின் தண்ணிழல் நம்முடம்பைக் குளிர்விக் கின்றது. இத்தகைய ஓசையமைப்போடு இந்த இயற்கையழகைக் கூறுமுறை நம்முள்ளத்தை மகிழ்விக்கின்றது.

**இராமன் வேண்டுகோளின்படி**
**அகத்திய முனிவன் இராவணன் வரலாறு சொல்லுதல்**

184. வேலை யுண்ட மாமுனிவன்
விரித்து விளம்புங் கதை கேட்டுக்
கோல மணிநீண் முடிதுளக்கிக்
கொண்டல் வண்ணன் வியப்பெய்தி
ஆல மனைய விராவணன்ற
னவதா ரமுமாங்கு அவன்செயலும்
சால விருப்புற் றனன் கேட்கக்
சாற்று கென்ன முனிசாற்றும்.

**வேலை உண்ட மாமுனிவன் விரித்து விளம்பும் கதைகேட்டுக் கோல மணிநீள் முடி துளக்கி, கொண்டல் வண்ணன் வியப்பு எய்தி, 'ஆலம் அனைய இராவணன்தன் அவதாரமும்ஆங்கு அவன் செயலும் சால விருப்புற்றனன் கேட்க சாற்று'கென்ன முனி சாற்றும்.**

**பொ:** கடல்நீரை உண்ட பெருமையுடைய அகத்திய முனிவன் விரிவாகச் சொல்லிய கதையைக் கேட்டு, மேகம்போன்ற வண்ணத்தனாகிய இராமன் தன் அழகிய நீண்ட மணிமுடியை அசைத்து ஆச்சரியம் அடைந்து நஞ்சுபோன்ற நிறமும் கொடுமையு முடைய இராவணனது பிறப்பும் அவன் செய்கையும் கேட்க மிகவும் விருப்பமுடையவனாக உள்ளேன் சொல்லுக! என்று வெண்டிக்கொள்ள அகத்திய முனிவன் சொல்லுவானானன்.

**கு:** வேலை-கடல். மணிமுடி என இயையும்; மணிகள் பதித்துச் செய்யப்பட்ட முடி என்றவாறு. கொண்டல்வண்ணன்.

என்றது இராமனை. ஆலம்–நஞ்சு. கருநிறமும் கொல்லும் இயல்பும், கொண்ட இராவணனுக்குப் பொருத்தமாக பண்பும் பயனும் புலப்பட ஆலத்தை உவமை கூறியுள்ளார். இனி, இராவணன் இருபது கைகளையும் தொங்கவிட்டுள்ள தன்மை நினைந்து பல விழுதுகளைத் தொங்கவிட்டுக் கொண்டுள்ள ஆலமரத்தை உவமை கூறியுள்ளார் என்றலும் ஒன்று. ‘வெறுங்கை நாற்றினன் விழுதுடை யாலன்னமெய்யன்’ (யுத்தகாண்டம்-முதற்போர்-250) எனக் கூறியிருத்தல் காணலாம். ஆங்கு–அசை. கேட்கச் சால விருப்புற்றனன் என மாறிக் கூட்டுக. சாற்றுக என்ன என்புழி அகரம் தொடுத்தல் விகாரம் பெற்று சாற்று கென்ன என ஆயது. இராவணன் அவதாரமும் என்புழி இகழ்ச்சிக்குறிப்பால் பிறப்பினை அவதாரம் என்றார் எனக் கொள்ளலாம். (௧)

### சுமாலி குபேரனைக் காணுதல்

185. பெருநா ளரக்கர் பாதாளம்
பேரா துறையுங் காலத்தில்
ஒருநாள் சுமாலி தன்மகளுக்
கொத்த வரனைத் தேடுவான்
குருநாண் மதிபோன் முகத்தவளைச்
கூடக் கொண்டிக் குவலயத்தில்
வருநா ளம்பொன் மதிலிலங்கை
மன்னன் குபேரன் வரக்கண்டான்.

**பெருநாள் அரக்கர் பாதாளம் பேராது உறையும் காலத்தில்**
**ஒருநாள் சுமாலி, தன்மகளுக்கு ஒத்த வரனைத் தேடுவான்**
**குருநாள் மதிபோல் முகத்தவளைக் கூடக் கொண்டு இக்குவலயத்தில்**
**வருநாள் அம்பொன் மதில் இலங்கை மன்னன் குபேரன்**
**[வரக் கண்டான்.**

பொ: நீண்ட ஆயுள் நாளையுடைய அரக்கர், பாதாளத்தில் நின்றும் நீங்காது, தங்கியிருந்த காலத்தில் ஒருநாள், சுமாலி தன் மகளுக்கு ஒத்த கணவனைத் தேடுதற்காக ஒளிமிக்க நிறைநாள்

சந்திரனைப் போன்ற முகத்தையுடையளாகிய அம்மகளையும் தன்னேடு அழைத்துக்கொண்டு இந்தப் பூவுலகத்தில் சுற்றிவருநாளில், அழகிய பொன்னுலியன்ற மதிலையுடைய இலங்கைக்கு மன்னனுகிய குபேரன் தன்னெதிர் வரக் கண்டான்.

கு : பெருநாள் என்றது நெடிய ஆயுளை. திருமாலுக்கஞ்சிப் பாதாளம் புக்கவர்கள் அங்கு நின்றும் பெயராது ஆங்கே வாழ்ந்திருந்தனர் என்றவாறு. வரன்—கணவன். குரு-ஒளி. நாண்மதி என்றது நாள் நிறை மதியினை—பூரணச்சந்திரனை. கூடக்கொண்டு என்பது உடன் கொண்டு என்னுங் கருத்தினது. மன்னன் குபேரன் என்றது, மன்னனுகிய குபேரன் என இருபெயரொட்டாய் விரியும். சுமாலி, தேடுவானுய்க் குவலயத்தில் வருநாள் குபேரன் வரக் கண்டான் என இயையும். (உ)

குபேரன் சிறப்பு

186. காதற் குருசொல் வழிகாட்டக்
கற்குந் தோறு மிகப்பெருகும்
போதத் தளவும் பெருகிடத்துப்
புட்பகத்து மிசையேறி
வேதத் தலைவ ரியக்கர் திகழ்
விண்ணேர் சூழ வருவானைக்
கோதில் குணத்துத் தாதையிடங்
கூடு மாசை யுடையானை.

காதல் குருசொல் வழிகாட்டக் கற்கும்தோறும் மிகப் பெருகும்
போதத்து அளவும் பெருகிடத்துப் புட்பகத்து மிசைஏறி,
வேதத்தலைவர் இயக்கர், திகழ் விண்ணேர் சூழ வருவானை,
கோதுஇல் குணத்துத் தாதையிடம் கூடும் ஆசை உடையானை.

பொ : அன்புள்ள குருவின் சொல் வழிகாட்டக் கற்கும் மாணுக்கன் கற்குந்தோறும் மிகவும் பெருகுகின்ற அவன் அறிவினைப் போல, ஏறுவோர் ஏறுந்தோறும் பெருகுகின்ற

இடத்தினையுடைய புட்பக விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு வேதத்தையுணர்ந்த முனிவரும் இயக்கரும் விளக்கமுடைய தேவரும் தன்னைச் சூழ்ந்துவர வருகின்றவனை—குற்றம் அற்ற குணத்தையுடைய தன் தந்தை விச்சுரவசுவைச் சேர்ந்து வணங்கும் ஆசையுடையவனை.

கு : கற்குந்தோறும் மாணவன் அறிவு வளர்வது போலப் புட்பகம் தன்மேல் உயிர்கள் ஏறும்தோறும் விரிந்து இடம் கொடுக்கும் இயல்பினது என்று புட்பக விமானத்தின் சிறப்பியல்பு புலப்படுத்தியவாறு. புட்பக விமானத்தில் உயிர்கள் ஏறும்தோறும் காட்சிப்பொருளாயுள்ள இடம் பெருகுவதை விளக்கவந்த ஆசிரியர், கருத்துப் பொருளாகிய அறிவு, குருவின் சொல் வழிகாட்ட அவ் வழியே நின்று கற்கும் மாணவனுக்குப் பெருகும் தன்மையை விளக்கியுவமையாக்கியுள்ளார். இதனால் ஆசிரிய மாணக்க மரபு இனிது விளக்கப்பட்டுளது காணலாம். போதம்—அறிவு. அளவும் உவமையுருபு. வேதத்தலைவர் என்றது வேதமுணர்ந்த முனிவரரை. கோதில் குணத்துத் தாதையிடம் என்றது, குற்றமில் குணத்தனாய விச்சிரவசுவை. இலங்கையிலிருந்து குபேரன் புட்பக விமானத்தில் தந்தையை வணங்கும் ஆசையோடு செல்லும் நிலையில் சுமாலி கண்டான் என்றவாறு. 'எந்தை சரண விணைபணிவே னென்னு மாசை தனையுந்த வந்தவனை' (21) என்புழிக் குபேரன் தன் தந்தையின் திருவடிகளை வணங்கும் ஆசையுடையவன் என்பது புலப்படுத்தியிருத்தல் காணலாம். (௬)

187\. திக்கு நிகழிந் திரனியமன்
　　சீரார் வருணன் குபேரனென
ஒக்க வெண்ணுந் தரத்தானை
　　யொளிசேர் சங்க பதுமநிதி
பக்கம் வந்து சேவிப்பப்
　　பண்டு செய்த தவத்தானை
தொக்க மணிநீண் முடியானைச்
　　சுமாலி கண்டிங் கிவைநினைந்தான்.

திக்குநிகழ் இந்திரன், இயமன்,
சீரார் வருணன், குபேரன் என
ஒக்க எண்ணும் தரத்தானை
ஒளிசேர்சங்க பதுமநிதி
பக்கம் வந்து சேவிப்பப்
பண்டு செய்த தவத்தானை
தொக்க மணிநீள் முடியானைச்
சுமாலி கண்டு அங்கு இவை நினைந்தான்.

**பொ :** நான்குதிசைகளிலும் காவலராய்ப் பொருந்தியுள்ள இந்திரன் இயமன், சிறப்புப் பொருந்திய வருணன், குபேரன் என்று (இந்திரன் முதலியவர்களோடு) ஒருசேர எண்ணுதற்குரிய பெருமையுடையவனை—ஒளிபொருந்திய சங்கநிதி பதுமநிதி என்ற இரு நிதிகளும் தன் பக்கத்தில் வந்து வணங்கிப் பணிகேட்க முன்பு செய்த பெருந்தவமுடையவனை - மணிகள் பதிக்கப்பெற்ற நீண்ட முடியையணிந்தவனைச் சுமாலி கண்டு அவ்விடத்து இவற்றை நினைத்தான்.

**கு :** திக்கு என்றது இங்குப் பெருந்திசைகளாகிய கிழக்கு, தெற்கு, மேற்கு. வடக்கு என்ற நான்கினையேயாம். இவை நான்கிற்கும் முறையே இந்திரனும் எமனும் வருணனும் குபேரனும் காவலராவர். தரம்—பெருமை. நிதியைச் சங்கோடும் சேர்க்க. திருப்பாற்கடலில் பிறந்த சங்கநிதி பதுமநிதி இரண்டும் குபேரன் பக்கத்தில் நின்று சேவித்துப் பணி கேட்கும் சிறப்பை அவன் முன்னைப் பெருந்தவத்தால் பெற்றான் என்றவாறு. வடதிசைக் காவலன் என்ற சிறப்போடு நிதிபதி என்ற சிறப்பும் இருத்தல் பற்றி மணிமுடி சூடிச் செல்லும் பெருமையனாயினன் என்றவாறு. விண்ணோர் சூழ வருவானை தாதையிடங்கூடு மாசையுடையானை, ஒக்கவெண்ணுந் தரத்தானை, பண்டு செய்த தவத்தானை, மணி நீண் முடியானை என இரு செய்யுளிலும் வந்துள்ள இரண்டனுருபேற்ற பெயர்கள், குபேரன் என்னும் ஒரு பொருள்மேல் வந்த பல பெயர்கள் ஆகும். அப்பெயர்கள் கண்டு என்று இறுதியில் கூறிய ஒருவினையோடு முடிந்தன. (சு)

### சுமாலியின் பொருமை

188. வலியா ரெல்லாங் கீழ்ப்பட்டு
மற்றையவரே மேற்பட்டுப்
புலிவா ழிடத்தே பசுவுறைந்து
போரா ராழித் தேரராய்
அலியா மிவனே யாணகி
யஞ்சா திலங்கை யுட்புகுந்து
நலிவா ரின்றி யரசாளக்
கண்டே நாரா யணனாலே.

வலியார் எல்லாம் கீழ்ப்பட்டு, மற்றையவரே மேற்பட்டு, புலிவாழ்இடததே பசுஉறைந்து போர்ஆர் ஆழித்தேரராய் அலியாம் இவனே ஆண்ஆகி அஞ்சாது இலங்கை உள்புகுந்து நலிவார்இன்றி அரசு ஆளக் கண்டேம், நாராயணனாலே.

பொ : நம்மைப்போன்ற வலியவர்கள் எல்லாம் கீழ்ப்பட்டிருக்க, வலிமையற்ற மற்றவர்களே மேம்பட்டு நிற்க, புலி வாழ்ந்த இடத்தில் பசு வாழ்தல்போல, நாம் வாழ்ந்த இடத்தில் எளியவர் தங்கிப் போர்த் தொழிலுக்கு உரிய தேரினை யுடையவராக, ஆண்மையற்ற அலியைப் போன்றவனாகிய இக்குபேரனே ஆண்மையுடையவனாகி அஞ்சாமல் இலங்கை நகரத்துள் புகுந்து தன்னை வருத்துபவர் எவரும் இல்லாமல் அரசு ஆளக்கண்டோம்; (இந்தத் தடுமாற்றங்கள் யாவும்) நாராயணனாலே (நடந்தன).

கு : பட்டு, உறைந்து என்பன செயவெனெச்சப் பொருளன. புலிவாழிடத்துப் பசுவுறைந்து என்பது பிறிது மொழிதல் என்னும் அணிப்பாற் பட்டு வீரமிக்க நாம் வாழ்ந்த இடத்தே வீரமில்லா எளியவர் தங்க என்னும் பொருள் தந்தது. தேரராய் என்பதும் தேரார் ஆக எனத் திரிக்கப்படும். குபேரன் குறைந்த வலிமையன் என்ற கருத்தால் அலியாமிவனே என்று இழித்து எண்ணலானான். வலிமை மிக்க நம்மை நலிய நாராயணனிருந்தது போலக் குபேரனை நலிய யாரும் இல்லை என்பான், நலிவாரின்றி அரசாளக் கண்டேம் என்றான். இவ்வளவு விபரீதங்களுக்கும் காரணம் நாரணனே என்பான், 'கண்டேம் நாராயணனாலே' என்றான். (ரு)

### சுமாலி தன் தமயனுடன் எண்ணித் தன் மகளை நோக்கிச் சொல்லுதல்

189. என்று நினைந்து தன்மனத்தி
லெழுந்த வெறுப்பன் பாதாளம்
சென்று புகுந்து தமயனுடன்
செய்யுங் கருமந் தெரிந்தெண்ணி
வென்றி வேல்வில் பிறைபவளம்
விளங்குந் தரளந் திகழ்வதனந்
துன்று குழறன் மகடன்னைச்
சுமாலி நோக்கி யிவைசொன்னான்.

என்று நினைந்து தன்மனத்தில் எழுந்த வெறுப்பன் பாதாளம்
சென்று புகுந்து தமயனுடன் செய்யும் கருமம் தெரிந்து எண்ணி,
வென்றி வேல், வில், பிறை, பவளம், விளங்கும் தரளம்
[திகழ்வதனம்
துன்று குழல், தன்மகள்தன்னைச் சுமாலி நோக்கி இவை சொன்னான்.

**பொ :** என்று (திருமாலால் தமக்கு நேர்ந்த இழிவை) நினைந்து தன் மனத்தில் எழுந்த வெறுப்பினையுடையனாய், பாதாளத்தில் சென்று தன் மனை புகுந்து தம் அண்ணனுடன் இனிச் செய்ய வேண்டிய கருமத்தை ஆராய்ந்து பின் தனியே எண்ணி, வெற்றிதரும் வேல் போன்ற கண்ணும் வில்போன்ற புருவமும் பிறைச் சந்திரனைப்போன்ற நெற்றியும் பவழம் போன்ற வாயிதழும் விளக்கமுடைய முத்துப் போன்ற பற்களும் திகழ்கின்ற முகத்தினையுடையவளாய் நெருங்கிய கூந்தலையுமுடையவளாய தன் மகள் கைகசியைச் சுமாலி நோக்கி இவற்றைச் சொல்லலானான்.

**கு :** பேராற்றல் பெற்றிருந்து தேவர்களையெல்லாம் வெற்றி கொண்ட தமக்குத் திருமாலால் நேர்ந்த தாழ்வினையும் குபேரனுக்கு வந்துள்ள செல்வச் சிறப்பினையும் நினைந்து பார்க்கும் பொழுது சுமாலிக்குத் தம் வாழ்க்கையில் வெறுப்புண்டாயிற்று.

அவ்வெறுப்புடனே பாதாளம் சென்று தன் தமயனுடன் யோசித்து இனி என்ன செய்தால் நம் குடியுயரும் என்பதைத் தானே நன்கு ஆராய்ந்து முடிவு செய்தபின், பேரழகுடைய தன்மகள் கைகசியை நோக்கித் தன் முடிவைச் சொல்லுகின்ருன் என்க. தெரிதல்— ஆராய்தல். சுமாலியும் மாலியும் தெரிந்த நிகழ்ச்சியைச் சுமாலி தானே எண்ணி முடிவு செய்தான் என்க. வேல் முதலியன உவமையாகுபெயராய்க் கண்ணேயும் புருவத்தையும் நெற்றியையும் வாயிதழிணேயும் பற்களேயும் உணர்த்தின. திகழ் வதனத்தை யுடைய மகள், குழலேயுடைய மகள் எனத் தனித்தனி இயைக்க. மகள் என்றது கைகசியை. சொன்னது வரும் செய்யுளால் புலப்படும். (சுா)

### புலத்தியன் மகனே வரனுகக் கொள் என்றல்

190. தக்க குணத்தோய் பெண்பிறக்கத்
தந்தை குலமுந் தாய்க்குலமும்
புக்க குலமு மிவைவிளங்கும்
பூமே லிருந்த பொற்பாவை
ஒக்க வுருவ முடையாயிங்
குன்ஞலே நங் குலம்விளங்கும்
மக்க ளுண்டாம் புலத்தியன்றன்
மகனே வரனுய் வரியென்ருன்.

**தக்க குணத்தோய்! பெண்பிறக்கத் தந்தை குலமும் தய்க்குலமும் புக்க குலமும் இவை விளங்கும், பூமேல் இருந்த பொற்பாவை ஒக்க உருவம் உடையாய்! இங்கு உன்ஞலே நம்குலம் விளங்கும் மக்கள் உண்டாம்; புலத்தியன் தன் மகனே வரனுய் வரி என்ருன்.**

பொ: தகுதிமிக்க குணத்தையுடையவளே! செந்தாமரை மலர்மேலிருந்த அழகிய திருமகளேப் போன்ற உருவமுடையவளே! ஒரு பெண் பிறந்தால் அப்பெண்ணின் தந்தை குடியும் தாயின் குடியும் அப்பெண் புகுந்த குடியும் ஆகிய இவை யாவும் விளக்க

முறும். இவ்விடத்து உன்னாலே நம்குடி விளங்குதற்குக் காரண மான மக்கட்பேறு உண்டாம்; அக்மக்கட்பேற்றுக்காக புலத்திய முனிவன் மகனாகிய விச்சிரவசு என்பவனை மணாளனாகத் தேர்ந்து கொள்; என்று கூறினான்.

கு: இலங்கெழிலளவு குணம் உண்டு என்பர் ஆதலின், முதற்கண் சிறப்புமிக்க அவள் குணம் புலப்பட, தக்க குணத்தோய் என விளித்துப் பின் அவள் எழில்நலம் புலப்படப் பூமேலிருந்த பொற்பாவை ஒக்க உருவம் உடையாய்! என முறைப்படுத்தி விளித்தான் என்னலாம். குலம் என்றது குடியினை. ஒருபெண்ணால் தாயின் குடியும் தந்தையின் குடியும் மருமகளாகப் புகுந்த மணாளன் குடியும் விளக்கம் பெறும் என்றது, பெண் மகளின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. பிறந்த குடிக்கு மட்டும் விளக்கம் தரும் ஆண்மகனினும் தாய்க்குடி தந்தைகுடி, புகுந்தகுடி என்ற முக்குடியையும் விளக்கும் பெண்மகளே சிறப்புடையள் என்பது தெளிவு. இருவர்ச்சுட்டிய பல்வேறு தொல்குடி (திருமுருகாற்-178) என்று சிறப்பிப்பர் நக்கீரர். பொற்பாவை என்றது திருமகளை. புலத்தியன் மகனை வரித்தால் உன்னாலே நம் குலம் விளங்கும் மக்கள் உண்டாம் என மக்களுக்கு அடையாக்குக. இனி உன்னாலே நம்குலம் விளங்கும் உன் வயிற்றில் மக்கட்பேறு உண்டாம் எனத் தனித்தனி முடித்தலும் ஆம். மக்கள் என்றது மக்கட் பேற்றினை. மக்கள் உண்டாவர் என்று முடிதலே மரபு ஆதல் நினைக. வரன்-கணவன். வரித்தல்-நியமித்தல். பிறருதவியின்றி நீயே கந்தருவநெறியால் விச்சிர வசுவினை மணக்க என்றவாறு. (எ)

191. தந்தை யுரைத்த வம்மாற்றந்
தலைமேற் கொண்ட தடங்கண்ணாள்
எந்தை குறையை யான்முடிப்ப
லிதுநன் றாக தீதாக
வந்த வண்ணம் வருகவென
மனத்திற் கொண்டு மாமறைதேர்
சந்த மலரோன் மகன்மகன்சேர்
தான மதனைத் தானுற்றாள்.

**தந்தை உரைத்த அம் மாற்றம் தலைமேல் கொண்ட தடம் கண்ணாள்,
எந்தை குறையை யான் முடிப்பல்; இது நன்றுஆக, தீது ஆக,
வந்த வண்ணம் வருக என மனத்திற் கொண்டு மாமறைதேர்
சந்த மலரோன் மகன் மகன் சேர் தானம் அதனைத்தான் உற்றாள்.**

**பொ:** தன் தந்தை சுமாலி சொன்ன அச்சொல்லைத் தலைமேற் கொண்ட பெரிய கண்ணையுடையவளாகிய கைகசி, என் தந்தை விரும்பும் காரியத்தை யான் முடிப்பேன்; இச்செயல் நல்லது ஆகவோ அன்றித் தீயது ஆகவோ வந்தபடி வருவதாக. என்று மனத்தில் நினைத்துக்கொண்டு பெரிய வேதங்களைத் தெரிந்தவனாய் அழகிய தாமரை மலரின்கண் வீற்றிருக்கின்ற பிரமனுடைய பேரனாகிய விச்சிரவசு என்பவன் தங்கியுள்ள இடத்தை அடைந்தாள்.

**கு:** தலைமேற்கொள்ளுதல் என்பது அவ்வுரையின்படி பணிவுடன் நடக்க உடன்பட்டமையை யுணர்த்தியது. பெண்டிர்க்குக் கண் பெரிதாக இருத்தல் அழகிலக்கணம் ஆதலின் அழகுமிக்க கைகசியைத் தடங்கண்ணாள் என்று குறிப்பிட்டார். எந்தை குறையை யான் முடிப்பல் இது நன்றாக தீதாக வந்த வண்ணம் வருக என்பன அவள் மனத்துள் நினைத்த நினைவுகளே என்பது புலப்பட, என மனத்திற்கொண்டு என்றார். மாமறைதேர் மலரோன் சந்த மலரோன் எனத் தனித்தனி இயையும். சந்தம்–அழகு. மகன் மகன் என்றது, பிரமனுடைய பேரன் என்றவாறு. பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி (ஆரணிய சூர்ப்பணகைப்–39) எனச் சூர்ப்பணகை தன்னைக் கூறிக்கொண்டதும் இங்கு நினையலாம். பிரமன் மகன் புலத்தியன்; புலத்தியன் மகன் விச்சிரவசு. விச்சிரவசுவின் மக்கள் இராவணன் முதலியோர் என்க. வந்த வண்ணம் வருக என்றது நிகழ்ந்த வண்ணம் நிகழ்க என்னும் பொருளது. தந்தையின் சொற்படி நடந்தால் பயன் எத்தகையது ஆயினும் ஆக எனக் கைகசி துணிந்து செயற்பட்டாள் என்றவாறு. குறை–காரியம். (அ)

**இதன்பின் 54 என்ற எண்ணுள்ள சுவடியில் கீழ்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன.**

191

(அ) தஞ்சமில்லேன் இவனையும் உன் தாரமாக்கி என்னையும் நீ
அஞ்சல் என்று விடில்வேறோர் அரணம் இல்லைஎன்ன.........
தஞ்ச நனியும் வேறென்று ......... விட்டது
மெஞ்ச எஞ்சலில்லா உலகத்தோடிய...... இங்கவனும்
[ஏகினனுல்.

(ஆ) தேரா முனியும் வருகாலத் திரனையுணர்ந்தங்கு ஒருகாலும
பேரா மலையின் மேல்பாலிற் பெருமாதவத்தின் தலைநின்ருன்
போரார் விழிகள் நீர்சொரியப் பொருமி பிரிந்த சோகத்தால்
தாராற் குழலி முனிசமைத்த சாலைதரியாதே தளர்ந்தாள்.

(இ) தங்கு முனிவன் தவவிருக்கை
சாய்கை அதனேர் சாபத்தாற்
இங்கும் பேடை சேவல்தாக்கி
தெளியும் உளத்தான் துணிந்திருந்தே!
எங்கும் பயிலு மோண்டப்
பேர் பெற்றுறையும் இருவோரும்
பொங்கு பசியால் இறைதேடிப்
போனர் அரிதில் புறத்தம்மா.

(ஈ) போயங்கு குறைந்து மீள்போதிற் பொதியுங் கங்குற்பொழுதாக
ஏயுந்திசைகெட் டிருவோரும் பிரியும் பொழுதின் எழிற்பேடை
ஆயுந்தனியே நெறிதேர்ந்தங் கணையுங் கொம்பரணை சேரப்
பாயும் புனற்பங்கய வடவிடரும் சேவல் வதிந்தனவால்.

(உ) வதிசேவலை யப்பெடை தேடி
மயங்கி வடியா வைகறையில்
கதி கொண்டெழுந்து வந்தணைய
கமழ் வாசமுமே வினுங்காணு
கொதி கொண்டே நினையன்றிக்
குறியேன் பிறர் தோளருளென்ன
வதி கஞ்சனமாய்ச் சேவலைப் பார்த்
தழகார் பெடை யொன்றறைந்தனவால்.

(ஊ) மதன் போர்க்கெனே பற்றிடத்
திசைந்தால் வருமச்சபதம் வருத்துமெனு
இதனுட் டவஞ்செய் முனிநாகம்
எனக் கென்றிசைப்ப வெழிற்சேவல்
தனைப் போக ச்சொற் செவியுறலு
மஞ்சியயர்ந்து புலத்தியன்றன்
சுதன்போர் மௌனங் குலைந் தெழுந்து
துடிப்பச் சேவல்தனைப்பாரா.

கைகசி விச்சிரவசுவின் முன் நாணி நிற்றல்

192. சுத்த முனிதீத் தொழின் முடித்துச்
சுடர்தீ நாலுண் டெனத்தோன்ற
வைத்த கலச வனமுலையாள்
மருங்குவளைத்து மலர்க் கமல
மொத்த சரணப் பெருவிரலா
லொல்கி நின்று நிலங்கீறி
மைத்த குழலாள் மற்றவன்முன்
மலர்மேன்மடந்தை யென நின்றாள்.

சுத்தமுனி தீத்தொழில் முடுத்துச் சுடர்தீ நால்உண்டு எனத் தோன்ற,
வைத்த கலச வனமுலையாள், மருங்கு வளைத்து மலர்க்கமலம்
ஒத்த சரணப் பெருவிரலால் ஒல்கி நின்று நிலம்கீறி,
மைத்த குழலாள் மற்றவன்முன் மலர்மேல் மடந்தை என நின்றாள்

பொ: தூய்மை மிக்க விச்சிரவசு என்ற முனிவன் ஆகவனீயம் காருகபத்தியம் தென்திசையங்கி என்ற மூன்றுவகை வேள்வித்தீயில் செய்தற்குரிய ஓமங்களைச் செய்து முடித்துவிட்டுச் சுடர்விசுகின்ற தீ நான்கு உண்டு எனப் பிறர் நினைக்கும் வண்ணம் ஒளிமிக்க மேனியனாய்த் தோன்று நிற்க, அங்குச் செய்துவைத்த கலசம் போன்ற அழகிய முலையையுடையளாய் இடையை வளைத்துக்கொண்டு குழைவுடன் நின்று தாமரை மலரை

ஒத்த பாதத்தின் பெருவிரலால் நிலத்தைக் கீறிக்கொண்டு கரிய கூந்தலையுடையளாய கைகசி அம்முனிவன் முன், செந்தாமரை மலரில் உள்ள திருமகள்போல் நின்ருள்.

கு: முத்தீ வளர்த்து ஓமஞ்செய்த விச்சிரவசு தன் மேனி ஒளியால் நான்காவது தீ உண்டு போலும் எனக் கண்டோர் எண்ணுமாறு சிறப்புடன் விளங்கினன் என்றவாறு. கைகசி அங்குச் சென்று சேர்ந்ததும் விச்சிரவசு அக்கினி காரியம் செய்து முடித்ததும் ஒத்த காலத்து நிகழ்ந்தன என்க. செயற்கையாக அழகுறச் செய்துவைத்த கலசம் போன்று விளங்கும் நகில்களை யுடையாள் என்றது, தற்குறிப்பேற்ற அணிபடக் கூறியதாகும். வனம்–அழகு. மருங்கு–இடை. மருங்கு வளைத்து, ஒல்கிநின்று மலர்க்கமலம் ஒத்த சரணப் பெருவிரலால் நிலங்கீறி நின்ருள் என மாறிக் கூட்டுக. முனிவனுக்குக் காமக்குறிப்பு நிகழும் வண்ணம் நிற்பவள் ஆதலின், வைத்த கலச வனமுலையளாய் மருங்குவளைத்து ஒல்கிநின்று பெருவிரலால்நிலங்கீறி நாணினவள்போல் நின்ருள் எனத் தொழில்தன்மையணி தோன்றக் கூறினர். பெண்டிர் நாணி நிற்கும்போது கால்விரலால் நிலங்கீறி நிற்றல் இயல்பு என்பதை 'கவிழ்ந்து நிலங்கிளையா, நாணி நின்ரேள்' (அகநா–16) என்பதால் அறியலாம். மைத்த குழல் என்றது மைபோன்று கரிதாய கூந்தல். மலர்மேல் மடந்தை என்றது திருமகளை. கைகசியின் பேரழகு விச்சிரவசுவின் கண்ணுக்கு இனிதாக இருந்தமை புலப்பட இங்ஙனம் உவமை கூறினர். (கூ)

### விச்சிரவசு கைகசியின் கருத்தறிதல்

193. அன்ன வவளை யருமறையோ
னருளி னேக்கி யார்மகணீ
என்ன கருமம் போந்ததுபே
ரென்னென் றுரைப்பச் சுமாலிதரும்
கன்னி பெயர்கை கசிவந்த
கருமங் கண்டு கொள்ளெனன
மின்னி னிடைதன் கருத்தறிந்து
வேதமுனிவன் விளம்புவான்.

**அன்ன அவளை அருமறையோன் அருளின் நோக்கி யார்மகள்நீ? என்ன கருமம் போந்தது? பேர் என்? என்று உரைப்ப, 'சுமாலிதரும் கன்னி; பெயர் கைகசி, வந்த கருமம் கண்டு கொள்' என்ன மின்னின் இடைதன் கருத்து அறிந்து வேதமுனிவன் விளம்புவான்.**

**பொ:** அங்ஙனம் நின்ற அக்கைகசியை அரிய வேதங்களை யுணர்ந்தோனாகிய விச்சிரவசு அருளால் பார்த்து யார் மகள் நீ? இங்கு வந்தது என்ன காரியத்திற்காக? உன்பேர் என்ன? என்று கேட்க, 'யான் சுமாலி என்பவன் பெற்ற கன்னிப்பெண்; என் பெயர் கைகசி. யான் வந்த காரியம் இதுவென நீயே கண்டு கொள்க' என்று சொல்ல, வேதமுணர்ந்த விச்சிரவசு மின்போன்ற இடையையுடைய கைகசியின் கருத்தினை அறிந்து சொல்லத் தொடங்கினான்.

**கு:** அரிய வேதங்களையுணர்ந்தோனாகலின் பெண்ணைத் தனியே கண்டவுடன் காமுற்று நோக்காது அருளினால் நோக்கி வினவினான் என்றவாறு. இதனால் அம்முனிவனின் நெஞ்சத் தூய்மையை அறியலாம். யார் மகள்? என அவள் உறவும் வந்த கருமம் யாது எனப் பயனும், பேர் என் என அவள் பெயரின் இயல்பும் அறிந்துகொள்ள அவாவி வினவினான் என்றவாறு. போந்தது—வந்தது. சுமாலி தரும் நங்கை என்றதும். கன்னி என்றதும், முனிவர் மணந்து கொள்ளற்குரிய தகுதி புலப்படுத்த என்க. பெண்களின் இடைக்கு மின்னலை உவமை கூறுவது மரபு. மேகத்தில் தோன்றி மறையும் மின்னலைப் போலப் பெண்டிர் இடையும் கொடிபோல் சிறிதாகத் தோன்றி ஆடையினால் மறைக்கப்படும் ஒப்புமை காணலாம். வேதங்களை ஆழ்ந்தறிந்த முனிவன் ஒரு பெண்ணின் மனத்தை அறிதல் அரிதோ? என்பார், மின்னிடை தன் கருத்தறிந்து வேத முனிவன் விளம்புவான் என்றார். இனி, கண்டு கொள் என அச்சொல்லை இரண்டாகப் பிரித்து, என்னைக் கண்டு, மனைவியாகக் கொள்; என்று குறிப்பிட்ட வாறாகவும் கொள்ளலாம். இனி வந்த கருமம் கண்டுகொள் என்று சொல்லும் போதே முகக் குறிப்பால் தன் காமக் குறிப்பினை உணர்த்திவிட்டாள் என்றும் கொள்ளலாம்.

(கம)

வந்து சேர்ந்த காலத்தால் நினக்குப் பிறக்கும் புதல்வர்
கொடியவராய் இருப்பர் என முனிவர் கூறல்

194. மைந்தர் பெறநீ காதலித்து
வந்தா யந்தக் காரியத்தைச்
சிந்தை யெண்ணி நீயென்னைச்
சேர்ந்த காலந் தீதுன்கண்
வந்த குமரர் குணத்தாலும்
வரத்தி னாலுங் கொடியோராய்
இந்த வுலகை யிடர்செய்வா
ரென்ன மின்னே ரிடைவிளம்பும்.

'மைந்தர் பெறநீ காதலித்து வந்தாய், அந்தக் காரியத்தைச்
சிந்தை எண்ணி நீ என்னைச் சேர்ந்த காலம் தீது; உன்கண்
வந்த குமரர் குணத்தாலும் வரத்தினாலும் கொடியோராய்
இந்த உலகை இடர் செய்வார்' என்ன மின்நேர்இடை விளம்பும்.

பொ : 'நீ மைந்தரைப் பெறுதற்கு விரும்பி வந்துளாய், அந்தக் காரியத்தை மனத்தில் நினைந்து நீ என்னைச் சேர்ந்த காலம் தீய தாக அமைந்துளது; (ஆதலால்) உன்னிடம் பிறக்கும் புதல்வர்கள் குணத்தாலும் பெறும் வரத்தினாலும் கொடியவர்களாய் இந்த உலகத்திற்கு இடர் செய்வார்கள்' என்றுகூற மின்னலைப் போன்ற இடையையுடைய கைகசி சொல்லுவாள்.

கு : கைகசி தன்னை நோக்கி வந்தது எதுபற்றி என்பதை அவள் நிற்கும் குறிப்பாலும் தன் ஞானக்கண்ணாலும் கண்டு மைந்தர்பெற நீ காதலித்து வந்தாய் என விச்சிரவசு கூறினன். அவள் வந்த காலம் சந்தியாவந்தனம் செய்துமுடித்த மாலைக்காலம்; ஆதலின், அக்காலத்துத் தன்னைத் தழுவிப் பெறும் பிள்ளைகள் நல்லவர்களாய் இருத்தல் இயலாது, காலத்தின் தீமையால் அப் புதல்வர்கள் கொடியோராய் உலகர்க்குத் துன்பம் செய்வர் என்று முனிவன் தெளிவு படுத்தினன். கைகசி விளம்பியது வரும்

செய்யுளால் அறியலாம். விளம்பும் என்னும் செய்யும் என்வினை முற்று, உயர்திணைப் பெண்பாலையுணர்த்தியது. (கக)

### கைகசி வேண்டுகோளினால் கடைசி மகன் பேரறிவினன் ஆவன் எனல்

195. உன்னை யடைந்துன் னருள்பெற்றேற்
குன்றன் குணத்துக் கொவ்வாத
அன்ன குமர ருண்டாக
லாமோ வென்று யிழைகூற
வன்னி யனைய சீற்றத்துன்
வயிற்றிற் பிறந்த மைந்தர்களில்
பின்னை யவன்பே ரறிவுடைய
னாகு மென்றான் பெருந்தவத்தோன்.

உன்னை அடைந்து உன்அருள் பெற்றேற்கு உன்தன் குணத்துக்கு [ஒவ்வாத அன்ன குமரர் உண்டாகல் ஆமோ? என்று ஆயிழை கூற, 'வன்னி அனைய சீற்றத்து உன் வயிற்றில் பிறந்த மைந்தர்களில் பின்னையவன் பேரறிவுடையன் ஆகும்' என்றான் பெருந்தவத்தோன்.

பொ: உன்னைச் சேர்ந்து உனது அருளைப் பெற்ற எனக்கு உன்குணத்திற்கு ஒவ்வாத அப்படிப்பட்ட புதல்வர் உண்டாதல் தகுமோ? என்று கைகசி வினவ, 'நெருப்பையொத்த கோபத்தினை யுடைய உன் வயிற்றல் பிறந்த புதல்வர்களில் கடைசியில் பிறக்குமவன் பேரறிவு உடையவன் ஆவன்' என்று பெரிய தவத்தையுடையவனாகிய விச்சிரவசு சொன்னான்.

கு: ஆயிழை — ஆராய்ந்தெடுத்த அணிகலன் அணிந்த கைகசி. வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. அன்ன என்னும் சுட்டு முனிவன் குறிப்பிட்ட கொடிய வராய் உலகையிடர் செய்யும் அத்தன்மையைப் புலப்படுத்தியது. தந்தையொப்பான் மகன் என்பதே மரபாதலின் அம்மரபிற்கு

மாருக உன்குணத்துக்கு ஒவ்வாத கொடுமையுடைய மக்கள் உண்டாகலாமோ? எனக் கைகசி வினவினுள் என்க. சீற்றத்து மைந்தர்களில் என இயையும். வன்னியனை சீற்றம் கைகசிக்கு ஏற்றல் பொருத்தமின்று. பின்னையவன் என்றது இறுதியில் பிறப்பவனை உணர்த்தியது. பின்னையவனைப் பேரறிவுடையனுகச் செய்யும் ஆற்றலன் என்பது தோன்றப் பெருந்தவத்தோன் என்ருர். (சஉ)

**கைகசிபால் இராவணன் உதித்தல்**

196. இத்தத் துவங்க ளுரைத்தமுனி
யிரவி குடபாற் றிசைவீழும்
அத்தப் பொழுதி லாங்கவளை
யன்பா னினைவின் படியணையப்
பத்துத் தலையும் பத்திரட்டித்
தோளுமாகப் பாரெடுக்கும்
சத்தித் திகழுசீர் தசக்கிரிவன்
ருன்வந் துதித்தான் றரைநடுங்க.

**இத் தத்துவங்கள் உரைத்த முனி, இரவிகுடபால்திசை வீழும் அத்தப் பொழுதில் ஆங்கு அவளை அன்பால் நினைவின்படி அணையப் பத்துத் தலையும் பத்துஇரட்டித் தோளும் ஆகப் பார் எடுக்கும் சத்தித் திகழ்சீர் தசக்கிரிவன் தான்வந்து உதித்தான் தரைநடுங்க.**

**பொ:** இந்த உண்மைகளைச் சொன்ன விச்சிரவசு என்னும் முனிவன், சூரியன் மேற்குத்திசையில் விழ்கின்ற அத்தமன காலத்தில் அவ்விடத்து அக்கைகசியை அன்போடு அவன் எண்ணத்தின்படி தழுவ, பத்துத்தலையும் இருபது தோளுமாகப் பூமியை எடுக்க வல்ல வலிமை விளங்குகின்ற சிறப்பினையுடைய இராவணன் தரணி நடுங்குமாறு வந்து தோன்றினுன்.

**கு:** தத்துவங்கள்—உண்மைகள். இரவி—சூரியன் குடபாற்றிசை—மேற்குத்திசை. அத்தம் என்பது அஸ்தம் என்ற வட

சொல்லின் திரிபு. இனி அந்தப் பொழுது என்பது எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது என்னலும் ஆம். நினைவின்படி என்றது கைகசியின் கருத்தின்படி என்றவாறு. முனிவனுக்கு அவளை யணைவதில் கருத்தில்லை என்பதும், மக்கட் பேற்றிற்காகக் கைகசி விரும்பியபடி அணைதல் அறமாகும் என்ற எண்ணத்தால் அணைந் தான் என்பதும் புலப்படுத்தியவாறு. பாரெடுக்கும் சத்தி என்றது பூமியைப் பெயர்த் தெடுக்கும் ஆற்றல் என்றவாறு. இங்குக் கூறிய ஆற்றலை இராவணனே 'பாரினை எடுக்க வேண்டின் ... இராவணற்கரிதென்' (ஆரணிய – சடாயுயிர்நீத்த – 62) என்று தனக்குள்ளதாகக் கூறியது இங்கு நினைதல் தகும். தசக்கிரிவன் பிறந்தபோது உற்பாதமாகத் தரை நடுங்கிற்று என்பார், 'தசக்கிரீவன் தான்வந்துதித்தான் தரை நடுங்க' என்றார். தசக் கிரீவன் தசகண்டன் என்பன ஒருபொருளன. (கசு)

## கும்பகருணன் பிறத்தல்

197. நறையார் குழலா டன்வயிற்றின்
ஞால மடங்க விழுங்கிடினும்
நிறையா வயிற்ற னெடுவரைபோ
னீண்ட வுருவ னிமிர்கையன்
பிறையா ரெயிற்றுப் பிலவாயன்
பெருத்த விழிய னொருக்காலும்
குறையா தெழுவெம் பசியினொடு
கும்பகருண்ணன் பிறந்தனனால்.

**நறையார் குழலாள்தன் வயிற்றில் ஞாலம் அடங்க விழுங்கிடினும் நிறையா வயிற்றன், நெடுவரைபோல் நீண்டஉருவன், நிமிர்கையன் பிறைஆர் எயிற்றுப் பிலவாயன், பெருத்தவிழியன், ஒருக்காலும் குறையாது எழுவெம் பசியினொடு கும்பகருணன் பிறந்தனனால்.**

பொ: மணம் வீசும் கூந்தலையுடைய கைகசியின் வயிற்றிலிருந்து, உலகம் முழுவதையும் விழுங்கினாலும் நிறையாத வயிற்றினையுடையவனாய் உயர்ந்த மலைபோல நீண்ட உருவத்தின

னுய் நிமிர்ந்த தோள்களையுடையவனுய், பிறைச்சந்திரனைப் போன்ற வளைந்த பற்களையுடைய பிலத்துவாரம் போன்ற பெரிய வாயினையுடையவனுய், பெருத்த விழியினையுடையனுய், ஒருக் காலும் குறையாமல் எழுகின்ற கொடிய பசியிஞெடும் கும்பகருணன் பிறந்தான்.

கு: நறை—வாசனை. கும்பகருணனது வயிற்றின் பெருமை புலப்பட வேண்டி, ஞாலமடங்க விழுங்கிடினும் நிறையா வயிற்றன்' என்ருர். நிமிர்கையன் என்புழி கை என்றது, தோளினை; நிமிர்தல் தோளுக்கே ஏற்புடைமை காணலாம். பிறையார் எயிற்று என்புழி 'ஆர்' உவம உருபு. பிலம் என்பது, தரையிலிருந்து பாதாளத்துக்குப் போகும் பெருவழியை. முகத்தளவி னில்லாது பிதுங்கித் தோன்றும் பெருவழியினன் என்க. எவ்வளவு உண்டாலும் குறையாத பசியினன் என்பார், ஒருக்காலும் குறை யாது எழுவெம்பசியிஞெடு கும்பகருணன் பிறந்தனன் என்ருர். எழுபசி, வெம்பசி எனத் தனித்தனி இயையும். வெம்பசி—கொடிய பசி. எழுபசி—எழுகின்ற பசி என வினைத்தொகையாக்குக பசியி ஞெடு பிறந்தான் எனவே, கும்பகருணனை விட்டு என்றும் பிரியாது உடனிருத்தற்குரியது பசியென்பது புலப்படுத்தியவாறு. (கச)

### சூர்ப்பணகையின் பிறப்பு

198. பண்ணூர் மொழியா ளவள்வயிற்றிற்
பருத்தவிடையும் பருங்கழுத்தும்
விண்ணூர் மேகத் திடியென்ன
வெடித்த குரலு முடையாளாய்க்
கண்ணூர் கனலும் புகையுமெழக்
கனன்று காலன் கருக்குலையப்
பெண்ணுய்ப் பிறந்தார் வெருக்கொள்ளப்
பிறந்தாள் பெரிய சூர்ப்பணகை.

**பண்ணூர் மொழியாள் அவள்வயிற்றில்**
**பருத்த இடையும், பருங்கழுத்தும்**
**விண்ணூர் மேகத்து இடி என்ன**
**வெடித்தகுரலும் உடையாளாய்,**

கண்ணுர் கனலும் புகையும் எழக்
கனன்று, காலன் கருக்குலேய,
பெண்ணுய்ப் பிறந்தார் வெருக்கொள்ளப்
பிறந்தாள் பெரிய சூர்ப்பணகை.

பொ: பண்போன்ற இனிய மொழியினளாகிய கைகசியின் வயிற்றிலிருந்து பருத்த இடையும், பருத்த கழுத்தும் விண்ணில் பொருந்திய மேகத்திலுள்ள இடி என்னுமாறு வெடித்தாற்போன்ற கடுங்குரலும் உடையவளாய்க் கண்ணில் நிறைந்த கனலும் புகையும் எழுமாறு கோபித்துக் கொண்டு, எமனும் கருப்பம் கலங்கவும் பெண்ணுகப் பிறந்தவர்கள் அச்சம் கொள்ளவும் பெரிய உருவத்தையுடைய சூர்ப்பணகை பிறந்தாள்.

கு: பண்ணுர் மொழியாள் வயிற்றில் சூர்ப்பணகை பிறந்தாள் என இயையும். பெண்டிர்க்கு அழகு மிகுமாறு மிகச் சிறுத்திருக்க வேண்டிய இடை சூர்ப்பணகைக்குப் பருத்திருந்தது; கழுத்தும் அங்ஙனமே. பண்ணுர் மொழியாள் வயிற்றில் இடியென்ன வெடித்த குரலுடையளாய்ச் சூர்ப்பணகை பிறந்தது வியப்பிற்குரியது என்றபடி. பெண்ணின் மொழிக்குப் பண்ணினை உவமைகூறுதல் மரபு. பண்ணின் நேர் மொழியாள், பங்க நீயல்லால் பற்றுநான் மற்றிலேன் கண்டாய்' (திருவாசகம் வருகைப்பத்து) என்றது காணலாம். சூர்ப்பணகை பிறக்கும்போதே கண்ணில் கனலும் புகையும் எழுமாறு கோபித்த நிலையில் இருந்தாள் என்றவாறு. கனன்று பிறந்தாள் என இயையும். அவள் வெகுண்ட நிலையைக் கண்டு காலனும் கர்ப்பம் கலங்கினுன்; பெண்ணுகப் பிறந்தவர்கள் எல்லாம் வெருவினர் என்றவாறு. பெண்டிர்க்காயின் அச்சத்தால் கருப்பம் கலங்குதல் பொருந்தும். காலனுக்கு எப்படிப் பொருந்தும்? எனின், கருப்பம் கலங்குதல் என்பது உபசார வழக்காய் அச்சத்தால் மனங்கலங்குதலேயும் உணர்த்துவதுண்டு, என்க. பெரிய சூர்ப்பணகை என்றது, உருவத்தால் பெரியளாய சூர்ப்பணகை என்றவாறு. காலன்—எமன். பிறரை அச்சுறுத்தும் எமனும் சூர்ப்பணகையின் சினத்தைக் கண்டு மனமிகக் கலங்கினுன் என அவள் சீற்றத்தின் சிறப்புப் புலப்படுத்தியவாறு.

(கரு)

### வீடணன் பிறத்தல்

199. மன்னு தவத்துப் புலத்தியன்றன்
மரபு விளங்க மறைவிளங்கத்
தன்னே ரில்லாத் தந்தைக்குத்
தக்க மகவாய்ச் சண்டாளர்
அன்னோர் முன்னோ ரவர்கிடந்த
வந்தவயிறு சுத்தமுற
மின்னே ரிடையா டன்வயிற்றில்
விளங்கும்புகழ்வீ டணன் பிறந்தான்.

**மன்னு தவத்துப் புலத்தியன் தன் மரபு விளங்க, மறை விளங்க தன்நேர் இல்லாத் தந்தைக்குத்தக்க மகவாய்ச் சண்டாளர் அன்னோர் முன்னோர் அவர்கிடந்த அந்த வயிறு சுத்தம்உற மின்நேர் இடையாள் தன் வயிற்றில் விளங்கும் புகழ் வீடணன் பிறந்தான் .**

பொ: நிலைபெற்ற தவத்தினையுடைய புலத்தியனது மரபு விளங்கவும் வேதங்கள் விளக்கமுறவும் தனக்கு நிகரில்லாத பெருமையையுடைய தந்தை விச்சிரவசுவுக்குத் தகுதிமிக்க மகனாய், சண்டாளரைப் போன்ற இராவணன் கும்பகருணன் ஆகிய முன்னோர்கள் கிடந்த அந்த வயிறு தூய்மை அடையுமாறு மின்னலைப்போன்ற இடையையுடையாளாகிய கைகசியின் வயிற்றில் இனி விளங்கும் புகழ்க்குரியவனாகிய வீடணன் பிறந்தான்.

கு: ஒருவர் மரபு விளக்கம் பெறுவது பேரனது பண்பினால் ஆதலின், வீடணனால் அவன் பாட்டன்-புலத்தியன் மரபு விளங்குவதாகக் கூறினார். மறைநெறியில் நின்று ஒழுகுவோரால் அம்மறை விளக்கம் பெறுதல் இயல்பு. வீடணன் வேதநெறியில் வேறுபடாமல் ஒழுகுவனாதலின் அவனால் மறை விளங்கும் என்பது கருத்து. சண்டாளர்-இழிசனர், பறையர். சண்டாளர் அன்னோ ராகிய முன்னோர் அவர் என்க. முன்னோர் அவர் என்றது வீடணனுக்கு முன்பு பிறந்த இராவணன் முதலியவரை. கொடியோர்

கிடந்தமையால் தூய்மையற்றிருந்த வயிறு நல்லோனாகிய வீடணன் கிடந்தமையால் தூய்மை பெற்றது என்றவாறு. 'தாயைக் குடல் விளக்கஞ் செய்த தாமோதரனை' என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும் (திருப்பாவை-5) விளங்கும் புகழ் வீடணன் என்றது இனி விளங்க இருக்கும் புகழ்க்குரிய வீடணன் என்று எதிர்காலம் நினைந்துகூறியவாறு. பின் புகழ் பெறுதற்குரிய ஊழ் ஒருவர் பிறக்கும்போதே அமைந்துவிடுதல் இயல்பு ஆதலின், அது கருதி இங்ஙனம் கூறினார் என்க. மரபு விளங்க, மறை விளங்க, வயிறு சுத்தமுறத் தந்தைக்குத் தக்க மகவாய் வீடணன் பிறந்தான் என இயையும். முன்னோரவர் என்பது இருபெயரொட்டு. 'தக்கார் தகவிலரென்பதவரவர் எச்சத்தால் காணப்படும்' (திருக்குறள்-114) என்ற வாய்மொழிப்படி வீடணனால் விச்சிரவசுவின் தகுதி புலப்படுதல் நோக்கித் தந்தைக்குத்தக்க மகவாய் என்றார். (கசா)

இராவணன் மனுநூல் முதலிய கற்றல்

200. பாத மறைவெவ் வரவினுக்குப்
பாலு நெய்யும் புகட்டிடினும்
வாதை செய்யும் வல்விடமே
வளரு மாபோன் மனுநூலும்
வேத மவையோ ராயிரமும்
விளங்கும் கலையுந் தசக்கிரிவன்
ஓத வோதப் போதங்கெட்
டபோத மான தோங்கியதே.

**பாதம் மறை வெவ்அரவினுக்குப் பாலும் நெய்யும் புகட்டிடினும்**
**வாதை செய்யும் வல்விடமே வளருமாபோல் மனுநூலும்**
**வேதம் அவை ஓர் ஆயிரமும் விளங்கும் கலையும் தசக்கிரிவன்**
**ஓத ஓத, போதம் கெட்டு, அபோதம் ஆனது ஓங்கியதே.**

**பொ:** நடத்தற்குரிய பாதம் மறைந்துள்ள கொடிய பாம்புக்குப் பாலும் நெய்யும் ஊட்டினலும், துன்பம் செய்கின்ற வலிய

நஞ்சே வளர்ச்சியடையும் தன்மைபோல, மனுநூலும் வேதங்கள் ஆயிரமும், விளக்கமுள்ள கலைகளும் இராவணன் கற்கக் கற்க அறிவு கெட்டு அறியாமையே வளர்ந்தது.

கு: பாம்புக்குக் கால் இல்லை என்றது, அது மறைந்துள்ளது என்றது, கால் இல்லாமல் இடம்பெயர்தல் இயலாது என்னும் துணிபால் ஆகும். பாம்புக்குப் பாலும் நெய்யும் ஊட்டினாலும் அமுதத்தன்மை வளராது; நஞ்சே வளரும். அதுபோல இராவணன் மனு முதலிய அறிவு நூல்களை பன்முறை கற்றாலும் அவனுக்கு அறிவு பெருகாது அறியாமையே பெருகிற்று என்றவாறு. வாதை துன்பம். வேதம் அவை என்புழி, அவை என்பது பகுதிப் பொருள் விகுதி. ஆயிரம் என்றது பல என்னும் பொருளது. 'நீயயன் முதற்குல மிதற்கொருவ னின்றாய் ஆயிர மறைப் பொருளுணர்ந் தறிவமைந்தாய்' (யுத்த – இராவணன் மந்திரப்-48) எனக் கும்ப கருணன் கூறியதும் நினையலாம். போதம்–அறிவு அபோதம்–அறியாமை. இராவணன் நூல் பல கற்றானேனும் அறிவு வளராது அறியாமையே மேலோங்கியது என்றவாறு. (கஎ)

### கும்பகருணனது வன்செயல்

201. ஒத்த குலத்துக் குடிப்பிறந்தோ
ரொழுக்கங் கெடவிவ் வுலகனைத்தும்
வத்தி யாமை புலத்தியன்றன்
வழிவந் தோர்பாற் கைக்கொண்டோம்
குத்து வாதை மிகநலிந்து
கும்ப கருணன் குவலயத்தில்
சுத்த ராய முனிவரையே
கொன்று தின்னத் தொடங்கினான்.

ஒத்த குலத்துக் குடிப்பிறந்தோர் ஒழுக்கம் கெட இவ்வுலகனைத்தும் வத்தியாமை புலத்தியன்தன் வழிவந்தோர்பால் கைக்கொண்டோம்; குத்து வாதை மிக நலிந்து கும்பகருணன் குவலயத்தில் சுத்தராய முனிவரையே கொன்று தின்னத் தொடங்கினான்.

**பொ:** தம்முள் ஒப்புமையுள்ள குலத்தில் நற்குடியில் பிறந் தோர் ஒழுக்கம் கெடுவாராயின் இந்த உலகமனைத்தும் வளர்ச்சி பெருது என்பதைப் புலத்தியனுடைய வழியில் வந்தவரிடமிருந்து உணர்ந்து கொண்டோம். கும்பகருணன் இவ்வுலகத்தில் தூய ராகிய தவமுனிவரையே குத்தும் துன்பத்தால் மிகவும் வருத்திக் கொன்று தின்னத் தொடங்கிவிட்டான்.

**கு:** உயர்குடிப் பிறந்தோர் ஒழுக்கம் கெட்டால் உலகம் முழுமையும் வளர்ச்சியுருது அழியும் என்ற உண்மையைப் புலத்தி யன் மரபில் பிறந்தவர்களால் உணர்ந்து கொண்டோம். கும்ப கருணன் தன் குடிக்கேற்ற ஒழுக்கம் மேற்கொள்ளாது தூய உள்ளமுள்ள முனிவரைக் கொன்று தின்ருன். அதனுல் இவ்வுலகம் வளர்ச்சியுருது அழிந்து கொண்டேயிருந்தது. கும்பகருணன் தூய ராகிய முனிவரையே கொன்று தின்னத் தொடங்கினுன் ஆதலின் குடிப்பிறந்தோர் ஒழுக்கம் கெட இந்த உலகு அனைத்தும் வளர்ச்சி யுருது கெடும் என்ற உண்மை நிகழ்ச்சியைப் புலத்தியன்தன் வழிவந்தோர்பால் கைக்கொண்டோம் என்றவாறு. காட்சியணி. கைக்கொள்ளுதல் என்பது உணர்தல் என்னும் பொருளில் வந்தது.

காமவெகுளி மயக்கம் என்ற முக்குற்றமும் நீக்கினவராதலின் முனிவரை சுத்தராய முனிவர் என்ருர். சுத்தராய முனிவரையே கொன்று தின்னத் தொடங்கிய கும்பகருணன் ஏனையோரைக் கொன்று தின்னற்குத் தடையென்னே? ஆதலின், உலகனைத்தும் வத் தியாமை தெளிவாயிற்று. வர்த்தி என்ற வடசொல் வளர்ச்சியென் னும் பொருளது. இங்கு வத்தியெனத் தற்பவமாகத் திரிந்தது. (கஅ)

### சூர்ப்பணகையின் தீயொழுக்கம்

202. வசையின் மறையோர் குடிப்பிறந்து
மாதா குலத்தின் வழிநின்றே
அசைவி லாற்றற் சூர்ப்பணகை
யாணுய்ப் பிறந்தார் பின்ருெடர்ந்து
பசையு நெஞ்சர் தமையெல்லாம்
பத்தா வாக வசிகரித்தவ்
விசைவில் லாதார் தமையெல்லா
மெடுத்துப் புடைத்துத் தின்னுமால்.

வசைஇல் மறையோர் குடிப்பிறந்தும் மாதா குலத்தின் வழிநின்றே
அசைவுஇல் ஆற்றல் சூர்ப் .ணகை ஆணுய்ப் பிறந்தார் பின்தொடர்ந்து
பசையும் நெஞ்சர் தமை எல்லாம் பத்தாவாக வசிகரித்து அவ்
இசைவு இல்லாதார் தமைஎல்லாம் எடுத்துப் புடைத்துத் தின்னுமால்.

பொ: தளர்ச்சியில்லாத வலிமையுடைய சூர்ப்பணகை, பழிப்பு இல்லாத அந்தணர் குடியில் பிறந்தும் தாய்க்குடியின் வழியைப் பின்பற்றி நின்று ஆணுகப் பிறந்தோர் யாவராயினும் அவர் பின் தொடர்ந்து சென்று தன்னை விரும்பும் நெஞ்சினையுடையவரை யெல்லாம் கணவனுகுமாறு தன்வயப்படுத்திக்கொண்டு, அத்தகைய உடன்பாடு இல்லாத நல்லோரையெல்லாம் தூக்கிப் பூமியில் மோதித் தின்பாள்.

கு: வசை—பழி. மறையோர்குடி என்றது, விச்சிரவசுவின் குடியை. விச்சிரவசுவின் மகளாகப் பிறந்த சூர்ப்பணகை தந்தையின் தூய ஒழுக்கத்தை மேற்கொள்ளாமல் தாயாகிய கைகசியின் வழியில் நின்று தன்னை விரும்புவோரைக் கணவராக வசப்படுத்தியும் விரும்பாதாரைக் கொன்று தின்றும் வாழ்ந்தாள் என்றவாறு. மாதா குலத்தின் வழிநிற்றலாவது கைகசி விச்சிரவசுவை தானே தழுவியது போலச் சூர்ப்பணகையும் ஆணுய்ப் பிறந்தார் யாவரேயாயினும் அவரைப் பின்தொடர்ந்து கணவராக வசப்படுத்தி இன்புறல். அழகும் குலமும் நலமும் வயதும் பாராது ஆண் என்ற ஒன்றையே பார்த்துப் பின்தொடரும் இயல்பினள் சூர்ப்பணகை என்றவாறு. பத்தா, பர்த்தா என்ற வடசொல்லின் திரிபு; கணவன் என்னும் பொருளது. வசிகரித்தல்—வசப்படுத்தல். புடைத்தல் — அடித்தல்.

(கக௩)

வீடணன் ஒழுக்கம்

203. பொய்யுங் களவும் பாதகமும்
பொல்லா வொழுக்கு மவைகடிந்து
மெய்யுந் தயாவுந் தருமமுடன்
விளங்கும் பொறையு மிவைபூண்டு

செய்யுஞ் செயல்க ளவையெல்லாம்
சிட்டர் செய்யுஞ் செயலாகி
அய்யன் புகழ்வீ டணன்மறைக
ளறைந்த வறத்தின் வழிநின்ருன்.

பொய்யுங் களவும் பாதகமும் பொல்லா ஒழுக்கும் அவைகடிந்து,
மெய்யும் தயவும் தருமமுடன் விளங்கும் பொறைபும் இவைபூண்டு,
செய்யும் செயல்கள் அவை எல்லாம் சிட்டர் செய்யும் செயலாகி,
அய்யன் புகழ்வீடணன் மறைகள் அறைந்த அறத்தின்வழி நின்ருன்.

பொ : பொய்யும், களவும், கொலேயும், பொல்லாத ஒழுக்க மாகிய பிறர்மனை நயத்தலும் என்றவற்றைத் தன்கண் பொருந்தா வண்ணம் நீக்கி, மெய்யும், தயையும் தருமமும் விளக்கமுள்ள பொறுமையும் ஆகிய இவற்றை மேற்கொண்டு தான் செய்யும் செயல்கள் யாவும் பெரியோர் செய்யும் செயலாகுமாறு, சிறந்தோ ணுகிய புகழ்மிக்க வீடணன் வேதங்கள் சொன்ன தருமத்தின் வழியில் நின்று ஒழுகுவாஞனன்.

கு : பாதகம் என்றது கொலேப் பாவத்தை. ஐம்பெரும் பாதகம் எனப் பொதுவகையாற் கூறினும் ஏனை நான்கு பாவத் தினும் கொலேப்பாவமே பெரிதாகலின் அதனைப் பாதகம் எனக் குறிப்பிட்டார். பொல்லாவொழுக்கு என்றது பிறர்மனை நயத்தலே; வீடணன் பொய், களவு, பாதகம், பொல்லா ஒழுக்கு என்ற நான்கினையும் துறந்து மெய்யும் தயவும் தருமமும் பொர்றையும் ஆகிய நான்கினை மேற்கொண்டு ஒழுகினன் என்றவாறு. சிட்டர்– உயர்ந்தோர். சிட்டர் செயல் செய்திலே குலச்சிறுமை செய்தாய் (யுத்த-இராவணன் மந்திரப்-53) என்றது இங்கு ஒப்புநோக்கத் தகும். செயலாகி என்ற செய்தெனெச்சத்தைச் செயலாக எனச் செயவெனெச்சமாகத் திரிக்க. நிந்தனை நறவமும் நெறியிலூன் களும், தந்தன கண்டிலேன் தரும தானமும் வந்தனை நீதியும் பிறவும் மாண்பமைந்து அந்தணரில்லெனப் பொலிந்த தாமரோ' (வீடணனடைக்கலப்-100) என அனுமன் கூறியது இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

(உஸ)

குபேரன் தந்தையைப் பணிய வருதல்

204. அந்த வனத்தி லந்நால்வ
ரந்த வழியே யொழுகுநாள்
எந்தை சரண விணைபணிவே
னென்னு மாசை தனையுந்த
வந்தவவனைக் கைகசிதன்
மலர்க் கணலே நோக்கித்தான்
தந்த திரடோட் டசக்கிரிவன்
றனக்குக்காட்டி யிவை சொன்னள்.

அந்த வனத்தில் அந்நால்வர்
அந்த வழியே யொழுகுநாள்
எந்தை சரண இணைபணிவேன்
என்னும்ஆசை தனை உந்த
வந்த வவனைக் கைகசி தன்
மலர்க்கணலே நோக்கித் தான்
தந்த திரள்தோள் தசக்கிரிவன்
தனக்குக்காட்டி இவை சொன்னள்.

பொ: அந்தக் கானகத்தில் இராவணன் முதலிய அந்த நால்வரும் தாம் மேற்கொண்ட அந்நெறியிலேயே ஒழுகிவரும் நாளில் 'என் தந்தையின் திருவடி இரண்டையும் பணிவேன்' என்னும் ஆசை, தன்னை உய்க்க வந்த குபேரனைக் கைகசி தன் மலர்போன்ற கண்ணலே பார்த்துத் தான் பெற்ற திரண்ட தோள் களையுடைய இராவணனுக்குக் காட்டி இவற்றைச் சொன்னள்.

கு: அந்நால்வர் என்றது இராவணன், கும்பகருணன், சூர்ப்பணகை, வீடணன் என்போரை. அந்த வழியே என்றது முன்பு சொல்லிய அவ்வவர் விரும்பிய வழியினை. சரணம்-பாதம் உந்துதல்-தள்ளுதல், செலுத்துதல். உந்துதற்கு வினைமுதல் ஆசை. தந்தையைக் கண்டு வணங்க வந்த குபேரனை நோக்கிய கைகசி இராவணனுக்குக் காட்டிப் பின்வருமாறு சொல்லலானள். (உக)

## கைகசி இராவணனுக்குக் குபேரனை அறிமுகம் செய்தல்

205. நலஞ்சார் தெய்வப் புட்பகமு
நாடற்கரிய நிதியிரண்டும்
சலஞ்சார் வில்லாத் தவத்தாலே
சாதித் துடையோ னின்றமையன்
வலஞ்சார் திரடோண் மைந்தாநின்
வழியி லுள்ளோர் முன்பாண்ட
இலங்கா புரியை யாள்கின்று
னிவன்காண்குபேர னெனவு ரைத்தாள்.

நலம்சார் தெய்வப் புட்பகமும்,
நாடற்கு அரிய நிதி இரண்டும்
சலம் சார்வு இல்லாத் தவத்தாலே
சாதித்து உடையோன் நின் தமையன்;
வலம்சார் திரள்தோள் மைந்தாநின்
வழியில் உள்ளோர் முன்பு ஆண்ட,
இலங்காபுரியை ஆள்கின்றுன்;
இவன்காண் குபேரன்; என உரைத்தாள்.

பொ : நன்மை பொருந்திய தெய்வத்தன்மையுடைய புட்பக விமானமும் தேடிக்கொள்ளுதற்கு அரிய சங்கநிதி பதுமநிதி என்ற இரண்டும் கோபத்தோடு பொருந்தாத தவத்தினுலே நிறைவேற்றித் தனக்கே யுடைமையாக்கிக் கொண்ட இவன் நின் அண்ணன்; வலிமை பொருந்திய திரண்ட தோள்களையுடைய மைந்தனே! நின் மரபில் பிறந்தோர் முன்பு ஆட்சி செய்த இலங்கையை ஆள்கின்றுன்; இவன்தான் குபேரன் என்று சொன்னுள்.

கு : குபேரனைக் கண்டவுடன் அவன் பெற்றுள்ள புட்பக விமானமும் சங்கநிதியும் பதுமநிதியும் கைகசியின் உள்ளத்தைக் கவர்ந்தமையால் அவற்றைக்கூறி அறிமுகப்படுத்துகின்றுள். சுமாலி கைகசியோடு உலகம் சுற்றி வரும்போது புட்பகத்தில் குபேரன்

செல்வதைக் கண்டு பொருமை கொண்டு அக்குபேரனைப் போன்ற மகப்பேற்றை யெய்தவே விச்சுரவசுவிடம் கைகசியை அனுப்பினுன் ஆதலின், இப்போது குபேரனைக் கண்டதும் கைகசிக்கும் அந்தப் பொருமை தோன்ற, அக்குபேரன் செல்வத்தைத் தன் மக்கள் பெற வேண்டும் என்ற எண்ணத்தால் 'நின் வழியிலுள்ளோர் முன்பாண்ட இலங்காபுரியை ஆள்கின்றுன்' என்று எடுத்துக் கூறினுள். (உஉ)

## இராவணன் தாயின் குறிப்பறிந்து தம்பியரோடு தவஞ்செயச் செல்லுதல்

206. என்று தாய்தா னிவைகூற
வெயிற்றி ஞலே யிதழதுக்கி
ஒன்று தவத்தா லிவனேடே
யொத்தன்மிகுதல் செய்வெ னெனக்
கன்று மனத்தாய் தனைத்தேற்றிக்
கறுவு மனத்த ரிளைஞரொடும்
குன்று புரைதிண் புயத்தரக்கன்
கொன்றை வனத்தைக் குறுகினுன்.

என்று தாய்தான் இவைகூற,
எயிற்றினுலே இதழ்அதுக்கி,
'ஒன்று தவத்தால் இவனேடே
ஒத்தல் மிகுதல் செய்வென்என'
கன்றும் மனத் தாய்தனைத் தேற்றிக்
கறுவும் மனத்தர் இளைஞரொடும்
குன்று புரை திண்புயத்து அரக்கன்
கொன்றை வனத்தைக் குறுகினுன்,

பொ: என்று தாய் குபேரனைக் காட்டி இவற்றைச் சொல்ல, பல்லாலே உதட்டைக் கடித்து, மனம் ஒருமைப்பட்டுச் செய்யும் தவத்தால் இந்தக் குபேரனேடு ஒத்தலேயோ அன்றி மிகுதலேயோ

செய்வேன் என்று கூறிப் பொறுமையால் வெகுண்ட மனத்தை யுடைய தாயைத் தெளியச் செய்துவிட்டு வெளிப்படாத கோபங் கொண்டுள்ள மனத்தையுடையராகிய இரு தம்பிமாரோடும் குன் போன்ற தோள்களையுடைய இராவணன், தவம்செய்யக் கொன்றை மரங்கள் நெருங்கியுள்ள கானகத்தை அடைந்தான்.

கு : தாயின் குறிப்பறிந்த இராவணன், குபேரனை விஞ்ச வேண்டும் என்னும் எண்ணத்தால் தன் பற்களால் வாயிதழை அதுக்கினான் என்க. வஞ்சமனத்தர் இவ்வாறு செய்தல் இயல்பு என்பதை 'கொல்லாத மைத்துனனைக் கொன்றுபென் றதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து பல்லாலே யிதழதுக்கும் கொடும்பாவி நெடும் பாரிற் பழிதீர்ந்தாளோ' (யுத்தகாண்ட-இராவணன் வதைப்-225) என வீடணன் சூர்ப்பணகையின் செயலையறிந்து புலம்புநிலையில் கூறியுள்ளமையால் தெளியலாம். குபேரன் செல்வங்கண்டு கைகசி போலவே அவள் மக்களும் மனம் கனன்றிருந்தனர் என்பது இதனால் அறியலாம். (உ௫)

## கும்பகன்னன் தவம்

207. கும்ப கன்ன னைந்தீயுட்
கொதிக்குங் காலத் திடைநின்றும்
உம்பர் நடுங்கக் கார்காலத்
தொவ்வா மழையி னுடனனைந்தும்
தம்பம் பொருநா ராசத்துச்
சலியா திருந்துஞ் சயித்தியத்தில்
அம்பின் முழுகிக் கிடந்துழந்து
மாண்டு பதினா யிரங்கழித்தான்.

கும்பகன்னன் ஐந்தீயுள் கொதிக்கும் காலத்து இடை நின்றும் உம்பர் நடுங்கக் கார்காலத்து ஒவ்வா மழையின் உடல் நனைந்தும் தம்பம் பொரு நாராசத்துச் சலியாது இருந்தும் சயித்தியத்தில் அம்பின் முழுகிக் கிடந்து உழந்தும் ஆண்டு பதினாயிரம் கழித்தான்

பொ : கும்பகன்னன் உடல் கொதிக்கும் வேனிற் காலத்தில் பஞ்சாக்கினி நடுவில் நின்றும், தேவர்களும் நடுங்கும்படி கார்காலத்தில் ஒப்பில்லாத பெரிய மழையில் உடல் நனைந்தும், தூணோடு பொருத்திய இருப்பாணிபோல உடல் நடுங்காதிருந்தும், பனிக் காலத்தில் நீரில் மூழ்கிக் கிடந்து வருந்தியும் பதினாயிரம் ஆண்டுகளைக் கழித்தான்.

கு : வெயில், மழை, பனி என்ற பகுப்பு நன்னான்கு மாதங்களைக் கொண்ட பெரும் பகுப்பாகும். இளவேனில் முதுவேனில் எனவும் கார் கூதிர் எனவும் முன்பனி பின்பனி எனவும் இவை ஒவ்வொன்றும் இவ்விரண்டாகப் பகுக்கப்பட்டு ஆறு பருவங்களாகக் கூறப்படுதலும் உண்டு. உடம்பு கொதித்தற்குக் காரணமான வெயிற்காலத்தில் நான்கு திசையிலும் தீயை வளர்த்து விண்ணில் சூரியனது வெப்பம்படத் தவஞ்செய்தலையே பஞ்சாக்கினி நடுவில் தவஞ் செய்வதாகக் கூறுவது மரபு. வெயிலால் வரும் வருத்தத்தோடு இந்தத் தீயால் வரும் வருத்தத்தையும் பொறுத்துக்கொண்டு தவம் செய்வதும், தேவர்களும் நடுங்கக் கார் காலத்தில் பெருமழையில் நனைந்து கொண்டு தூணொடு பொருத்திய இருப்பாணிபோல அசையாதிருந்து தவஞ்செய்தலும், குளிர் காலமாகிய பனிக்காலத்தில் நீரில் மூழ்கிக் கிடந்து வருந்தித் தவஞ்செய்தலும் அருந்தவம் எனப்படும். ‘உற்றநோய் நோன்றல் உயிர்க் குறுகண் செய்யாமை அற்றே தவத்துக்குரு‘ (குறள்-261) என்பதற்கேற்பப் பருவ வேறுபாடுகளால் தம்முடம்பிற்கு வரும் வருத்தத்தோடு செயற்கையால் ஏற்றுக்கொண்ட வருத்தமும் பொறுத்துக்கொண்டு கும்பகருணன் பதினாயிரம் ஆண்டுகள் தவஞ்செய்தான் என்றவாறு. பரிமேலழகர் தவம் என்ற அதிகாரத்தில் முகவுரையில் ‘தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கலும் கோடைக்கண் வெயில் நிலை நிற்றலும் மாரியிலும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தம்முயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்களை ஓம்புதல்’. என்று விளக்கியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகும். கார் காலத்தில் மழையில் உடம்பு நனைதலோடு மழையின் வேகத்திற்கு அசையாது தூணில் பொருத்திய இருப்பாணி போல இருத்தலும், பனியில் நீரில் முழ்கிக்

கிடத்தலும் மேற்கொண்டான் என்க. கார் காலத்து மழையில் உடல் நனைந்து கும்பகருணன் செய்யும் தவத்தைக் கண்டால் தேவரும் நடுங்குவர் என்பார் 'உம்பர் நடுங்க... உடனனைந்தும்' என்றார். (உச)

## வீடணன் தவம்

208. திரிகா லமுமுணர் செய்தவத்தோர்
திகைப்ப வைகி யவ்வனத்துள்
ஒருகால் போல வொருகான்மண்
ணூன்றி யொருகா லெடுத்துயர
எரிகா லிரவி மண்டலமே
னோக்கி யிருகை களுமெடுத்து
வருகா லங்கள் வீடணனும்
வருட மையா யிரங்கழித்தான்.

**திரிகாலமும் உணர் செய்தவத்தோர் திகைப்ப வைகி அவ்வனத்துள் ஒருகால்போல, ஒருகால் மண்ஊன்றி, ஒருகால் எடுத்து உயர எரிகால்இரவி மண்டலமேல் நோக்கி இருகைகளும் எடுத்து வருகாலங்கள் வீடணனும் வருடம் ஐயாயிரம் கழித்தான்.**

**பொ :** முக்காலமும் உணர்ந்த முன் செய்த தவத்தினையுடையவர்களும் திகைக்குமாறு அந்த வனத்துள் தங்கி ஒருகாலினை யுடையவர் போல ஒருகாலினைத் தரையிடத்து ஊன்றிக் கொண்டு, மற்றொரு காலினை உயர்த்தூக்கிக் கொண்டு, மேல் எரியைக் கக்குகின்ற சூரிய மண்டலத்தினை நோக்கி இரண்டு கைகளையும் உயரத் தூக்கிக் கொண்டு வீடணனும், மேலும் மேலும் வருகின்ற காலங்களில் ஐயாயிர வருடங்களைக் கழித்தான்.

**கு :** திரிகாலம்–இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்று கால நிகழ்ச்சிகள். காலம் என்பது ஆகுபெயராய் அக்காலத்து நிகழும் நிகழ்ச்சிகளை யுணர்த்தியது. ஒருகாலை மட்டும் தரையில் ஊன்றியுள்ள நிலையைக் கண்டோர் ஒருகாலேயுள்ளவர்போலும்

என எண்ணுவர் என்பார் 'ஒருகால்போல ஒருகால் மண்ணூன்றி' யென்ருர். உயர எடுத்து என மாறுக. ஊர்த்த தாண்டவ மூர்த்தி போல ஒரு காலை உயர்த்தித் தவஞ்செய்தான் வீடணன். மேல் இரவி மண்டலம் என இயையும். வீடணன் ஒருகாலில் நின்று தவஞ்செய்தவாற்றைப் புலப்படுத்திய வாறு. கும்பகன்னனே யன்றி வீடணனும் தவஞ்செய்தான் எனப் பொருள் தருவதால் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாகும். காலத்திற்கு முடிவில்லையாதலின் வருகாலங்கள் என்ருர். (உரு)

### இராவணன் தவம்

209. ஓரா யிரமாண் டுபவசித்துக்
கழிந்தா லோரோர் தலையாகச்
சீரார் சிரமொன் பதுந்தடிந்து
செந்தீ யிடையா குதிபண்ணிப்
பேரா வுபவா சத்தினனுய்ப்
பின்பு மோரா யிரத்தாண்டில்
தாரார் மற்றைத் தலைதடிய
லுற்ருன் பற்றித் தசக்கிரிவன்.

**ஓர்ஆயிரம் ஆண்டு உபவசித்துக் கழிந்தால், ஓர்ஓர் தலையாகச் சீர்ஆர் சிரம் ஒன்பதும் தடிந்து, செந்தீயிடை ஆகுதி பண்ணி, பேராஉப வாசத்தினனுய், பின்பும் ஓராயிரத்து ஆண்டில் தார்ஆர் மற்றைத்தலைதடியல் உற்ருன் பற்றித் தசக்கிரிவன்.**

பொ: ஓர் ஆயிரம் ஆண்டு உண்ணு நோன்போடு தவஞ் செய்து கழிந்தால் ஒருதலை என்ற விழுக்காடு, சிறப்புப் பொருந்திய தலை ஒன்பதினையும் ஓர்ஓர் தலையாக அரிந்து சிவந்த ஓமத் தீ யிடையே ஆகுதிபண்ணி, மீண்டும் பெயராத உண்ணு நோன் புடையனுய்ப் பின்பும் ஓராயிரத்து ஆண்டில் மாலையணிந்த மற்ருெரு தலையையும் பற்றி இராவணன் அரியத் தொடங்கினுன்.

கு : ஓராயிரம் ஆண்டு தவஞ்செய்து முடித்தடவுன் ஒரு தலையை யரிந்து ஓமத்தீயில் ஆகுதி பண்ணுவது; மீண்டும் ஓரா யிரம் ஆண்டு கழிந்தவுடன் மற்றொரு தலையை அரிந்து ஆகுதி பண்ணுவது. இவ்வாறே ஒன்பது ஆயிரம் ஆண்டில் ஒன்பது தலைகளை அரிந்து ஆகுதி பண்ணவும் பிரமன் வெளிப்படாமை கண்டு பின்பும் ஓராயிரம் ஆண்டு உண்ணு நோன்போடு தவங் கிடந்து இறுதியில் பத்தாவது தலையையும் பற்றி இராவணன் அரியத் தொடங்கினுன் என்றவாறு. தடிதல்-அரிதல், வெட்டுதல். உபவாசம்-உண்ணுவிரதம். இராவணன் இவ்வாறு தலைகளை யறுத்து வேள்வித்தியில் இட்டுத் தவஞ்செய்த நிகழ்ச்சியை மாரீசன் 'அற்றகரத்தோடுன்றலை நீயேயனன் முன்றில் பற்றிணையுய்த்தாய் பற்பல காலம் பசிகூர' (மாரீசன் வதைப்-179) என்று இராவண னிடம் கூறுவதைக் காணலாம். (உகூ)

## பிரமன் தோன்றி வரமளித்தல்

210. அன்ன காலை யயன்தோன்றி
யவனை நோக்கி யருந்தவத்தின்
நின்னை யொப்பார் நீயன்றி
யொருவ ரில்லை நின்கரத்தால்
முன்ன மரிந்த தலையெல்லா
முன்பு போல முளைத்திடுக
என்ன வவைதாம் பண்டையிலு
மெழிலுண்டாக வெழுந்தனவால்.

அன்ன காலை அயன் தோன்றி அவனை நோக்கி அருந்தவத்தின்
நின்னை ஒப்பார் நீஅன்றி ஒருவர் இல்லை; நின்கரத்தால்
முன்னம்அரிந்த தலை எல்லாம் முன்புபோல முளைத்திடுக
என்ன, அவைதாம் பண்டையிலும் எழில் உண்டாக எழுந்தன வால்.

பொ : அப்பொழுது பிரமதேவன் அங்குவந்து தோன்றி அவ் விராவணனை நோக்கி 'அருந்தவம் செய்வதில் நின்னை ஒப்பவர்

நீயே யல்லாது பிறர் ஒருவர் இல்லை. நினது கையால் முன்னம் அரிந்த தலைகள் ஒன்பதும் முன்புபோல முளைத்திடுவதாக' என்று கூற அத்தலைகள் முன்னையிலும் அழகுடையனவாக முளைத்தன.

கு: 'நின்னை யொப்பார் நீயன்றி ஒருவரில்லை' என்பது பொது நீங்குவமை எனப்படும். தவத்தால் தனக்குவமையில்லாதவன் இராவணன் என்று பிரமன் புகழ்ந்து கூறியவாறு. உண்ணா விரதத்தால் எழில் குறைந்திருந்த தலைகளைவிட இப்போது பிரமன் கொடுத்த வரத்தால் எழுந்த தலைகள் எழில்மிக்கனவாக விளங்கின என்றவாறு. (உஎ)

211. பின்னுஞ் சொல்லும் பிதாமகன்றான்
பெருகு தவத்து நீயிங்குச்
சொன்ன சொன்ன வரந்தருவேன்
சொல்லென் றுரைக்கத் தொல்லுலகில்
மன்னு மனிதர் தமைப்பொருளாய்
மனத்தி னினையான் வாளரக்கன்
உன்னு பொருளொன் றொழியாமல்
வேண்ட விரிஞ்ச னுவந்தளித்தான்.

**பின்னும் சொல்லும் பிதாமகன் தான்**
**'பெருகுதவத்து நீ இங்குச்**
**சொன்ன சொன்ன வரம் தருவேன்,**
**சொல்' என்று உரைக்க, தொல்உலகில்**
**மன்னும் மனிதர்த்மைப் பொருளாய்**
**மனத்தில் நினையான் வாள்அரக்கன்**
**உன்னுபொருள் ஒன்று ஒழியாமல்**
**வேண்ட விரிஞ்சன் உவந்து அளித்தான்.**

பொ: பிரமன் மேலும் சொல்லுவான், 'பெருகிய தவத்தை யுடைய நீ இவ்விடத்துக் கேட்ட கேட்ட வரங்களைத் தருவேன், சொல்' என்று சொல்ல, கொடிய இராவணனாகிய அரக்கன்,

பழைமையான உலகில் நிலைபெற்றிருக்கின்ற மனிதர்களை ஒரு பொருளாய் மனத்தில் மதியாதவனாய், அவரைத் தவிர்த்துத்தான் நினைத்த பொருள்களை ஒன்றும் ஒழியாமல் வேண்டினனாக, பிரமன் அவ்வரங்களை யெல்லாம் மகிழ்ந்தளித்தான்.

கு : பிதாமகன்–பிரமன். சொன்ன சொன்ன என்ற அடுக்குப் பன்மை பற்றி வந்தது. உலகம் தோன்றிய நாள்தொட்டு வாழும் மனிதரைப் பற்றி மனத்தில் இராவணன் நினையாமையால் அவர்களால் தனக்கு மரணம் நேரலாகாது என்ற வரத்தைக் கேளாதொழிந்தான் என்றவாறு. வாள்–கொடுமை. இனி, வாளையுடைய அரக்கன் எனலும்ஆம். மற்று அவன் நினைத்த வரங்களையெல்லாம் ஒன்று தவிராமல் கேட்கப் பிரமனும் கேட்டவாறே கொடுத்தான் என்க. விரிஞ்சன்–பிரமன். (உஅ)

### வீடணனுக்குப் பிரமன் வெளிப்படுதல்

212. தரும சீலன் வீடணன்மெய்
தழுவி நின்று தவஞ் செய்யும்
அருமை கண்டு வியப்பெய்தி
யாதிமூர்த்தி வெளிப்பட்டு
னிருமை சேர்ந்த வுள்ளத்தி
னியைந்த வரம்வேண் டுதியென்னக்
கருமை சேரா வருந்தவத்தோன்
கருதி யினைய கட்டுரைத்தான்.

தருமசீலன் வீடணன் மெய்தழுவி நின்று தவம் செய்யும் அருமை கண்டு வியப்பு எய்தி, ஆதி மூர்த்தி வெளிப்பட்டு, ‘உன் இருமை சேர்ந்த உள்ளத்தின் இயைந்தவரம்வேண்டுதி’ என்ன, கருமை சேரா அருந்தவத்தோன் கருதி இனைய கட்டுரைத்தான்.

பொ : அறவொழுக்கமுடைய வீடணன், உண்மையைத் தழுவி நின்று தவம் செய்கின்ற அருமையைக் கண்டு வியப்பு அடைந்து பிரமன் வெளிப்பட்டு, ‘உனது பெருமை சேர்ந்த உள்ளத்

தில் விரும்பிய வரத்தை வேண்டுக' என்று சொல்ல, தீமைவிரவாத அரிய தவத்தையுடையவனாகிய வீடணன் சிந்தித்து இவற்றைச் சொன்னான்.

கு: சீலம்–ஒழுக்கம். தருமத்தையே தன் ஒழுக்கமாகக் கொண்டவன் எனலும் ஆம். மெய்தழுவுதலாவது மெய்ப்பொருளைப் பற்றுதல். ஆதிமூர்த்தி என்றது, மும்மூர்த்திகளில் படைப்பிற்குரியது முதற்கடவுளாகிய பிரமனை. இருமை–பெருமை. வேண்டுதி என்பது இகரவீற்று வியங்கோள். கருமை–தீமை. தலையை யரிதல் போன்ற தீய செய்ல்கள் கலவாத அருந்தவத்தோன் வீடணன் என்றவாறு. கட்டுரைத்தல்–உறுதியாகச் சொல்லுதல். (உகூ)

### வீடணன் கேட்டவரம்

213. நல்லா யறத்தைக் கைவிட்டு
நடுங்கு மிடும்பை வரினுநான்
பொல்லா தனசெய் யாதொழிக
போரிற் பிரமா திகளென்னை
வெல்லா தொழிக வீவ்வரங்கள்
வேண்டு மென்ன விரிஞ்சனவை
யெல்லாம் பெறுதி நீயென்று
மிறவா திருத்தி யெனவுரைத்தான்.

நல்லாய்! அறத்தைக் கைவிட்டு
நடுங்கும் இடும்பை வரினும் நான்
பொல்லாதன செய்யாதொழிக;
போரில் பிரமாதிகள் என்னை
வெல்லாதொழிக; இவ்வரங்கள்
வேண்டும்என்ன, விரிஞ்சன் 'அவை
எல்லாம் பெறுதி நீ, என்றும்
இறவாது இருத்தி! என உரைத்தான்.

பொ : நல்லோனே! நான் நடுங்குதற்குக் காரணமான துன்பம் வரினும் தருமத்தைக் கைவிட்டுப் பொல்லாதனவாகிய பாவங்களைச் செய்யாமலிருப்பேனாக. போரில் நின்னை முதலாகக் கொண்ட யாரும் என்னை வெல்லா திருப்பாராக; இவ்வரங்களே வேண்டும் என்று வீடணன் சொல்ல, பிரமன் 'நீ அவை எல்லாம் பெறுவாயாக, மேலும் என்றைக்கும் இறவாமலும் இருப்பாயாக' என்று சொன்னான்.

கு : பிரமனை நோக்கி நல்லாய்! என விளித்தான் வீடணன். நான் நடுங்கும் இடும்பை வரினும் அறத்தைக் கைவிட்டு பொல்லா தன செய்யாதொழிக என மாறிக்கூட்டுக. பிரமனோடு உரையாடு கின்ற வீடணன் பிரமாதிகள் என்னை வெல்லாதொழிக என்றது, முன்னிலையைப் படர்க்கையாக்கிக் கூறியது. வரம்கொடுக்கும் பிரமனாலும் தான் கொல்லப்படலாகாது என்றவாறு. வீடணன் கேட்ட வரத்தையெல்லாம் கொடுத்த பிரமன் அவன் பெருமையை நினைந்து, என்றும் இறவாது இருத்தி எனச் சிரஞ்சீவி நிலையையும் தானே யுவந்து கொடுத்தான் என்க. (௩௰)

### கும்பகன்னன் தவங்கண்டு
### தேவர் முதலியோர் பிரமதேவனை வணங்கி வேண்டுதல்

214. கும்ப கன்னன் றவங்கண்டு
குலைந்தீங் கிவனே வரங்கொள்ளின்
தம்ப மில்லை நமக்கென்று
தடுமா றியசிந் தையராகி
உம்ப ரோடு தானவரும்
உயர்மா தவரு மொத்தீண்டி
எம்பி ரானே கேட்டருளென்
றிறைஞ்சி யயனுக் கிவையுரைத்தார்.

கும்பகன்னன் தவங்கண்டு
குலைந்தீங்குஇவனே வரங்கொள்ளின்
தம்பம் இல்லை நமக்கென்று
தடுமாறிய சிந்தையராகி,

உம்பரோடு தானவரும்
உயர்மாதவரும் ஒத்தீண்டி,
எம்பிரானே கேட்டருளென்று இறைஞ்சி
அயனுக்கு இவையுரைத்தார்.

பொ: கும்பகன்னனுடைய தவத்தைக் கண்டு நடுங்கி, இத்தகையோனே வரமும் பெற்ருல் நமக்குப் பற்றுக்கோடு இல்லை, என்று தடுமாறிய மனத்தினராகி, தேவர்களும் அசுரரும் உயர்ந்த பெரிய தவமுனிவரும் ஒருமித்து நெருங்கி (பிரமனை நோக்கி) 'எம்பிரானே யாம் கூறுவதைக் கேட்டருள்க' என்று வணங்கிப் பிரமனுக்கு இவற்றைச் சொல்வாரானுர்.

கு: குலைதல்—நடுங்குதல். தம்பம்—பற்றுக்கோடு. தானவர்—அசுரர். ஒத்தல்—மனம் ஒத்தல். ஈண்டுதல்—நெருங்குதல். வரம் பெருதிருக்கையிலேயே நம்மை அல்லல் படுத்துமிவன் வரமும் பெற்றுவிட்டால் நம்மனேர்க்குப் பற்றுக்கோடு ஆவார் யாரும் இல்லை என்றவாறு. (கூசு)

### தேவர் வேண்டுகோள்

215. படைத்தா யாதி பல்லுலகம்
பறிப்பான் கையிற் சிற்றரிவாள்
கொடுத்தா யாதி முன்னமே
கொடிய கும்ப கன்னனுக்கு
வடுத்தா னில்லா வினியவரம்
வழங்கி னுயே லெங்களையும்
கெடுத்தா யாதி யெனத்தேவர்
கிளத்த வயனிங் கிதுசெய்தான்.

படைத்தாய் ஆதி பல்உலகம், பறிப்பான் கையில் சிற்றரிவாள் கொடுத்தாய் ஆதி; முன்னமே கொடிய கும்ப கன்னனுக்கு வடுத்தான் இல்லா இனியவரம் வழங்கினுயேல், எங்களையும் கெடுத்தாய் ஆதி; எனத்தேவர் கிளத்த அயன் இங்கு இது செய்தான்.

பொ : ஆதியில் பல உலகங்களையும் படைத்தவனே! முன்னமே கொடியனாக இருக்கும் கும்பகன்னனுக்குக் குற்றம் இல்லாத இனிய வரத்தை வழங்கினாயானால், வழிப்பறி செய்கின்ற கொடியவன் கையில் உதவியாகச் சிறிய அரிவாளைக் கொடுத்தவன் போல்வாய்; எங்களையும் கெடுத்தவனாவாய்; என்று தேவர்கள் சொல்ல, பிரமன் இவ்விடத்து இதனைச் செய்தான்.

கு : ஆதி, பல்லுலகம் படைத்தாய்! என இயையும்– முன்னமே கொடியனாக இருக்கும் கும்பகன்னனுக்கு மேலும் குற்றமற்ற வரத்தைக் கொடுத்தல், முன்னரே வழிப்பறி செய்யும் கள்வனுக்கு உதவியாகச் சிற்றரிவாளைக் கொடுப்பதனோடு ஒக்கும்; நீ கொடுக்கும் வரத்தால் அதிக ஆற்றல் பெற்றுக் கும்பகன்னன் எங்களையெல்லாம் கெடுப்பானாகலின், எங்களையும் நீ கெடுத்தாய் போல்வாய் என்று தேவர்கள் பிரமனிடம் முறையிடலானார். 'கெடுத்தாயாதி என்புழி' ஆதி என்ற ஆக்கச் சொல் உவம உருபின் பொருளில் வந்தது. 'ஆள்வாரிலி மாடாவேனோ' (திருவாசகம்-கோயில்மூத்த-7) என்புழிப்போல. (௩௨)

**பிரமன் கலைமகளை நோக்கிக் கூறியது**

216. சொல்லார் கலைக்கு நாயகிதன்
 றூய கமல முகநோக்கிப்
பொல்லா வொழுக்க மதுபூண்டு
 புவன மூன்றும் பொடிபடுத்த
வல்லான் கும்ப கன்னனெனை
 வரம்வேண் டுங்கா லவன்வாய்நின்
றெல்லாம் பிழைப்பத் துயில்வேண்டு
 மென்னும் படிநீ யியற்றென்றான்.

சொல்லார் கலைக்கு நாயகிதன்
 தூயகமல முகம் நோக்கி
பொல்லா ஒழுக்கமது பூண்டு,
 புவனமூன்றும் பொடி படுத்த

வல்லான் கும்பகன்னன் என்னை
வரம்வேண்டுங்கால் அவன் வாய்நின்று
எல்லாம் பிழைப்பத் துயில் வேண்டும்
என்னும்படி நீ இயற்று என்றான்.

பொ: சொல் நிறைந்த கலைக்குத் தலைவியான கலைமகளின் தூய தாமரை மலர் போன்ற முகத்தை நோக்கி (பிரமன்) கொடிய ஒழுக்கத்தை மேற்கொண்டு உலகம் மூன்றினையும் பொடியாகச் செய்ய வல்லான் ஆகிய கும்பகன்னன் என்னை வரம் வேண்டும் போது அவன் நாவில் நின்று எல்லா எண்ணங்களும் தவறும்படி செய்து, 'துயில் வேண்டும்' என்று கேட்கும்படி நீ செய்க; என்று கூறினான்.

கு: கலைகள் யாவும் சொல்லால் இயன்றவை என்பார். சொல்லார்கலை என்றார். கலைநாயகி என்றது கலைமகளை. ஒழுக்கமது என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. கும்பகன்னனது வலிமை நோக்கின் மூன்று உலகங்களையும் அழித்துத் துகளாக்கவல்லவனாக உள்ளான் என்றவாறு. வாய் என்றது ஆகுபெயராய் நாவினை யுணர்த்தியது. கும்பகன்னன் கேட்க நினைத்துச் சொல்லும் சொல் எல்லாம் தவிறிப்போய்த் துயில் வேண்டும் என்னும் சொல்லை மட்டுமே சொல்லுமாறு நீ செய்க எனக் கலைமகளை நோக்கிக் கூறியவாறு. கலைமகள் சொல்லின் கிழத்தியாதலின் தான் நினைந்த வண்ணம் அவன் சொல்லை மாற்றிவிடலாம் என்பது கருதி இங்ஙனம் கூறலானான். (௩௬)

கும்பகருணன் துயில் வேண்டுவது

217. இந்தப் படிக்கு நாமகளை
யிசைவித் தடவி யிருந்தவஞ்செய்
அந்தக் கும்ப கன்னனிடை
யமரர் சூழ வயன்வந்துன்

சிந்தைக் கினிய வரந்தருவென்
செப்பென் றுரைப்ப நாமகணு
உந்தத் துயில்வேண் டுவனென்ன
வுற்று யென்றுங் கயனுரைத்தான்.

இந்தப் படிக்கு நாமகளை
இசைவித்து அடவி இருந்தவஞ்செய்
அந்தக் கும்பகன்னனிடை
அமரர்சூழ அயன் வந்து உன்
சிந்தைக்கு இனிய வரம் தருவென்
செப்பு என்று உரைப்ப நாமகள்நா
உந்தத் 'துயில் வேண்டுவன்' என்ன,
உற்றுய் என்று ஆங்கு அயன் உரைத்தான்.

பொ : இவ்வாறு நாமகளை இசையச் செய்துவிட்டுக் கானகத்தில் பெரிய தவம் செய்கின்ற அந்தக் கும்பகன்னனிடத்துத் தேவர்கள் தன்னைச் சூழ்ந்துவரப் பிரமதேவன் வந்து, உன் சிந்தைக்கு இனிதான வரத்தைத் தருவேன் கேள் என்று சொல்ல, நாமகள் அவன் நாவில் நின்று அதனைச் செலுத்துதலால் (நித்தியத்துவம் கேட்க வந்தவன்) நித்திரைத்துவம் வேண்டுவன் என்று கேட்க, அவ்வாறே அடைந்தாய் என்று அப்பொழுது பிரமன் சொன்னான்.

கு : அடவி-காடு. இருந்தவஞ் செய் என்ற தொடரை இரு பொருள்பட அமைந்துள்ளார் எனலாம். கும்பகன்னன் செய்த தவம் எல்லாம் அவன் நினைத்த பயனைத் தாராது ஒழிந்தமையால் இருந்து, அவஞ்செய் எனப் பிரித்து அடவி இருந்து பயனற்ற செயலைச் செய்கின்ற கும்பகன்னன் என்னும் பொருளும் கொள்ள இடந்தருதல் காணலாம். நித்தியத்துவம் வேண்டும் என்று தவங் கிடந்தவன் கும்பகருணன், தேவர்கள் செய்த சூழ்ச்சியால் நாமகள் அக்கும்பகருணன் நாவில் நின்று அவனைத் தன் விருப்பப்படி அசைவித்து நித்திரைத்துவம் வேண்டும் என்று கேட்குமாறு செய்துவிட்டாள். கும்பகருணன் வேண்டுகோளின்படி அயனும் 'அங்ஙனமே அடைந்தாய்' என்று வரம் கொடுத்துவிட்டான் என்க. (௩௪)

கும்பகன்னன் மாருத்துயில் பெறுதல்

218. அள்ளன் மடுவின் மூழ்கித்தா
மரும்பட் டினிபட் டலம் வரினும்
உள்ளந் தூய ரல்லாருக்
கொருகா ரியமும் பலமாகா
கள்ள மனச்செய் தவக்கும்ப
கன்னன் கருதும் வரங்கொடுக்கும்
வள்ளன் மலரோ னிடைப்பெற்ற
வரத்தான் மாருத் துயில்பெற்ருன்.

அள்ளல் மடுவில் மூழ்கித் தாம்
அரும்பட்டினிபட்டு அலம் வரினும்
உள்ளம் தூயர் அல்லாருக்கு
ஒருகாரியமும் பலம் ஆகா;
கள்ள மனச் செய்தவக் கும்ப
கன்னன், கருதும் வரம் கொடுக்கும்
வள்ளல் மலரோன் இடைப்பெற்ற
வரத்தான் மாருத் துயில் பெற்ருன்.

பொ : சேறு நிறைந்த மடுவில் மூழ்கி அரிய பட்டினி கிடந்து துன்புற்ருலும் மனந் தூய்மையற்றவர்கட்கு ஒரு காரியமும் பலிக்காது; எங்ஙனம் எனின்? கள்ள மனத்தோடு செய்த தவத்தினை யுடைய கும்பகன்னன், தவம் செய்வோர் கருதும் வரத்தைக் கொடுக்கும் வள்ளலாகிய பிரமனிடத்தில் பெற்ற வரத்தால் எப்பொழுதும் மாறுபாடில்லாத தூக்கத்தைப் பெற்ருன் ஆதலின்; என்க.

கு : அள்ளல்—சேறு. மடு—ஆழமான நீர்நிலை. இச்செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி. 'கள்ளமனச் செய்தவக் கும்பகன்னன் வள்ளல் மலரோனிடைப் பெற்ற வரத்தான் மாருத்துயில் பெற்ருன்' என்ற சிறப்புப் பொருளால் 'உள்ளந்தூயரல்லாருக்கு ஒரு காரியமும் பலமாகா' என்ற பொதுப்பொருளை நிறுவியவாறு காண்க; பலமாகா என்றது பயனுடையனவாகா என்றவாறு; கருதும் வரம்

கொடுக்கும் வள்ளலாகப் பிரமன் இருந்தும் அவன்பால் தான் கருதியதைப் பெருது மாருத்துயிலைப் பெற்றதற்கும் காரணம் கும்பகன்னனுடைய கள்ள மனமே என்றவாறு. (௩௫)

தன் கருத்திற்கு மாருகவரம் பெற்ற கும்பகன்னன்
மனம் நொந்து தம்பியொடு வனம் புகுதல்

219. சந்த மலரோன் போனதற்பின்
றடந்தோட் கும்ப கன்னன்றன்
சிந்தை தெளிந்திங் கிவையெல்லாந்
தேவர் செய்த மாயையென
நொந்த மனத்தன் முன்னேற்ற
நுண்ணூ லுணர்ந்த பின்னவற்கும்
வந்த துரைத்துப் பின்னவர்கள்
வளர்சீர்த் தொல்லை வனமடைந்தார்.

சந்த மலரோன் போனதற்பின்
தடந்தோள் கும்ப கன்னன் தன்
சிந்தை தெளிந்து இங்கு இவைஎல்லாம்
தேவர்செய்த மாயை என
நொந்த மனத்தன் முன் நோற்ற
நுண் நூல் உணர்ந்த பின்னவற்கும்
வந்தது உரைத்துப் பின் அவர்கள்
வளர்சீர்த் தொல்லைவனம் அடைந்தார்.

பொ : அழகிய தாமரைமலரில் வீற்றிருப்போனுகிய பிரமன் போனபிறகு பெரிய தோளிணையுடைய கும்பகன்னன், தனது மனம் தெளியப் பெற்று, இங்கு நடந்த இம் மாறுதல் எல்லாம் தேவர்கள் செய்த வஞ்சகச் செயலாகும்; என்று வருந்திய நெஞ்சத்தனுய் முன்னே தவஞ்செய்த நுண்ணிய நூல்களைக் கற்றுணர்ந்த தம்பியாகிய வீடணனுக்கு நிகழ்ந்ததைச் சொல்லிப் பின்பு அவ்விருவரும் இராவணனேடு வளர்கின்ற சிறப்பினையுடைய பழைய கானகத்தை அடைந்தார்கள்.

கு: வரம்பெற்ற பின்பு தான் கேட்ட வரத்தின் மாறு பாட்டைக் கும்பகன்னன் தெளிந்தான் என்பார், 'தன் சிந்தை தெளிந்து இங்கு இவையெல்லாம் தேவர் செய்த மாயை எனத் நொந்த மனத்தன்' என்றார். பின்னவன் என்றது வீடணனை. கும்பகன்னனினும் வீடணன் நுண்ணறிவுடையவன் என்பார் 'நுண்ணூலுணர்ந்த பின்னவற்கு' என்றார். தனக்கு வந்த தடு மாற்றத்தைக் கும்பகன்னன் தம்பியிடம் கூறிக்கொண்டு இருவரும் இராவணனோடு பழைய தம் இருப்பிடமாகிய வனத்தை அடைந் தார் என்றவாறு. தவம் முடித்தபின் மூவரும் ஒருங்கே தம் வனம் நண்ணினர் என்க. (ந-சா)

வரம்பெற்று வந்தமையறிந்த மாலியவான் முதலியோர்

220. ஆங்கவர்கள் பெற்றுடைய வரமுமாண்
மையும்வலியு மடங்கக் கேட்டுப்
பூங்கமலக் கண்ணனுக்குப் போர்தோற்றுப்
பாதாளம் புக்கு வீழ்ந்த
ஓங்குபுய மாலியவான் சுமாலியெனப்
பேர் பெற்றோ ருள்ளிட்டோர்கள்
தாங்கரிய பேருவகை தள்ளப்போய்த்
தசக்கிரிவன் றன்னைச் சார்ந்தார்.

ஆங்கு அவர்கள் பெற்றுடைய வரமும்
ஆண்மையும் வலியும் அடங்கக்கேட்டு,
பூங்கமலக் கண்ணனுக்குப் போர்தோற்று,
பாதாளம் புக்கு வீழ்ந்த
ஓங்குபுய மாலியவான் சுமாலி எனப்
பேர் பெற்றோர் உள்ளிட்டோர்கள்
தாங்கரிய பேர்உவகை தள்ளப் போய்த்
தசக்கிரிவன் தன்னைச் சார்ந்தார்.

பொ: அவ்விடத்து, அந்த இராவணன் முதலியோர் பெற்றுள்ள வரமும் ஆண்மையும் வலிமையும் முழுவதும் கேள்விப்பட்டு,

செந்தாமரை மலர் போன்ற கண்ணிணையுடைய திருமாலுக்குப் போரில் தோற்றுப் பாதாளத்தில் புகுந்து தளர்ச்சியுற்ற உயர்ந்த தோள்களையுடைய மாலியவான், சுமாலி எனப் பெயர்பெற்ற தலைவரையுள்ளிட்டோர்கள் எல்லாம், தாங்கற்கரிய பெரிய மகிழ்ச்சியானது பிடர் பிடித்துத்தள்ள, இராவணனை அடைந்தார்கள்.

கு: தவஞ்செயச் சென்ற இராவணன், கும்பகன்னன், வீடணன் என்போர் தவம் முடித்து வரம்பலபெற்று ஆண்மையும் வலிமையுமுடையராய் வந்துள்ளனர் என்பதையறிந்து,மாலியவான் சுமாலி முதலிய அரக்கர்கள் மகிழ்ச்சி மிகவுடையராய் இராவணனை அடைந்தனர் என்றவாறு. பேருவகை தள்ளலாவது, அவர்களைப் பார்க்கவும் அவர் பெற்றுள்ளன பற்றிக் கேட்கவும் விரும்பும் ஆசை விரைவுபடுத்துதல். (உ௰)

**இராவணன் முதலியோரை வரவேற்றுத் தழுவிக் கொள்ளுதல்**

221. கொலையெடுத்த குன்றென்னக் குவவுத்தோட்
டசக்கிரிவன் கும்ப கன்னன்
கலையடுத்து வளர்ந்தோங்கும் வீடணனென்
றிங்கிவரைக் கண்ணினோக்கி
அலையடுத்த கடற்றுயிலு மச்சுதனுக்
கமரழிந்த வரக்க ரெல்லாம்
தலையெடுக்கப் பிறந்தீர்கள் வருகவென
வுயிர்பொருந்தத் தழுவிக் கொண்டார்.

**கொலை எடுத்த குன்று என்னக்
குவவுத்தோள் தசக்கிரிவன் கும்பகன்னன்
கலைஅடுத்து வளர்ந்து ஓங்கும் வீடணன்
என்று இங்கு இவரைக் கண்ணில் நோக்கி
அலைஅடுத்த கடல்துயிலும் அச்சுதனுக்கு
அமர் அழிந்த அரக்கர்எல்லாம்
தலைஎடுக்கப் பிறந்தீர்கள் வருக! என
உயிர் பொருந்தத் தழுவிக் கொண்டார்.**

பொ : கொலைத் தொழிலை மேற்கொண்டுள்ள குன்று போலத் திரண்ட தோள்களையுடைய இராவணன், கும்பகன்னன், கலை களைச் சார்ந்தே வளர்ச்சிபெற்று உயர்ந்த வீடணன் என்று சொல்லப்படும் இவர்களைக் கண்ணுல் பார்த்து, 'அலைகளையுடைய கடலில் துயில்கின்ற திருமாலுக்குப் போர் தோற்ற அரக்கர்கள் எல்லாம், அச்சம் நீங்கித் தலைதூக்குமாறு பிறந்தவர்களே! வருக!' என வரவேற்புக் கூறி உயிரோடு உயிர் பொருந்துமாறு தழுவிக் கொண்டார்கள்.

கு : கொலைசெய்து பழகிய இராவணனுடைய தோளுக்கு உவமையாக வேண்டிக் கொலையெடுத்த குன்றென்னக் குவவுத் தோள் என இல்பொருள் உவமையாகக் கூறினர். கொலை எடுத்து வளராமல் கலையடுத்தே வளரும் வீடணனது தூய்மை புலப்பட, கலையடுத்து வளர்ந்தோங்கு வீடணன் எனச் சிறப்பித்தவாறு. முன்னம் கேள்வியால் கருத்தால் நோக்கியவர்கள் இப்போது கண்ணுல் நோக்கி மகிழ்ந்து தழுவினர் என்றவாறு. மாலியவான் சுமாலி இவர்கள் கருதியவாறே இராவணன் முதலியோர் தவத் தால் வரம்பெற்று வந்துள்ளமையால் இனித் திருமாலுக்கு அஞ்சிப் பாதாளத்து ஒளித்து வாழாமல் தரையில் தலைநிமிர்ந்து நடக்கும் நிலையை யுண்டாக்கினுர்கள் என்ற கருத்தால் 'அச்சுதனுக்கு அமராழிந்த அரக்கரெல்லாம் தலையெடுக்கப் பிறந்தீர்கள்' என்றுர். தழுவுங்கால் உடம்போடு உடம்பு பொருந்துதலே இயல்பு; விரும் பித்தழுவும் இருவர்தம் உயிரும் தம்முள் தழுவிக் கொள்ளும் என்பது கருத்தால் நோக்கிக் கூறியதாகும். 'முந்திவந்திறைஞ் சினுனை மோந்துயிர் மூழ்கப்புல்லி' (யுத்தகாண்டம் கும்பகருணன் வதைப்–130) எனக் கும்பகருணனும் வீடணனும் புல்லியது பற்றிக் கூறியுள்ளதும் நினையலாம். (௬அ)

இராவணனை நோக்கிச் சுமாலி குபேரனைப் பற்றிக் கூறியது

222. அன்னவர்க ளினிதிருந்த வக்காலைத்
தசமுகனைச் சுமாலி நோக்கி
முன்னமரிற் ருமெல்லா முகில்வண்ணன்
றனக்கஞ்சி முதுகிட் டோடிப்

பன்னகநா டதுவான பாதாளம்
புக்கமையும் பண்டு தாமாள்
பொன்னகரத் திடைதனதன் புக்குவீற்
றிருந்தமையும் பொருது சொன்னான்.

அன்னவர்கள் இனிது இருந்த அக்காலைத்
தசமுகனைச் சுமாலி நோக்கி,
முன்அமரில் தாம்எல்லாம் முகில்வண்ணன்
தனக்கு அஞ்சி முதுகிட்டு ஓடி,
பன்னகநாடதுவாய பாதாளம்
புக்கமையும், பண்டுதாம் ஆள்
பொன்னகரத்திடை தனதன் புக்கு
வீற்றிருந்தமையும் பொருது சொன்னான்.

பொ: இராவணன் முதலியவர்களும் சுமாலி முதலியவர்களும் பேசி இனிதாக மகிழ்ந்திருந்த அப்பொழுது, இராவணனைச் சுமாலி நோக்கி, முன்பு போரில் தாங்கள் எல்லாம் திருமாலுக்கு அஞ்சிப் புறமுதுகு காட்டி ஓடி நாகர்கள் நாடாகிய பாதாளம் புகுந்து பதுங்கி வாழ்ந்தமையும், முன்பு தாங்கள் ஆண்டுகொண்டிருந்த பொன்மயமான இலங்கை நகரத்தில் குபேரன் புகுந்து அரசு வீற்றிருந்தமையும், மனம் பொருது சொன்னான்.

கு: முகில்வண்ணன் என்றது, மேகவண்ணனாகிய திருமாலை. பன்னகம்–பாம்பு. பாதாளம்–பாம்புகள் வாழும் இடம் என்பது புராண மரபு. இலங்கை பொன்மயமான மதில்களையும் வீடுகளையும் உடையதாயிருத்தலின் அதனைப் பொன்னகரம் எனக் குறித்தார். 'மரமடங்கலும் கற்பகம் மணியெலாங் கனகம்' (சுந்தர – ஊர்தேடு–104) என்றது காணலாம். தனதன் குபேரன். சுமாலி, திருமாலுக்கு அஞ்சிப் பாதாளம் புக்கிருந்த தம் துன்ப நிலையைப் பொருது இராவணனுக்குச் சொன்னதோடு குபேரனது செல்வநிலை கண்டும் பொருது பகைமையுணர்ச்சியுண்டாகுமாறு சொன்னான் என்க.

(௩௯)

223. தண்ணுய்க்குந் தடமலரோன் வழிவந்த
தசக்கிரீவன் ருமுன்பாண்ட
மண்ணுக்கும் பலரறிய மணப்புகுந்து
மனையாளாய் வகுக்கப்பட்ட
பெண்ணுக்கும் படாதார்தம் பெருவாழ்விற்
பிச்சையே நன்று காண்போம்
கண்ணுக்கும் பொறிபறக்கக் கடலிலங்கை
யாள்கின்ருன் குபேரன் காண்டி.

தண்உய்க்கும் தடமலரோன் வழிவந்த
தசக்கிரீவன்! தாமுன்பாண்ட
மண்ணுக்கும், பலர்அறிய மணம்புகுந்து
மனையாளாய் வகுக்கப்பட்ட
பெண்ணுக்கும், படாதார்தம் பெருவாழ்வில்
பிச்சையே நன்று! காண்போம்
கண்ணுக்கும் பொறிபறக்கக் கடல்இலங்கை
ஆள்கின்ருன் குபேரன் காண்டி.

பொ: குளிர்ச்சியைப் பரப்புகின்ற பெரிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் மரபில் வந்த இராவண! தாம் முன்பு ஆட்சி செய்திருந்த மண்ணுக்கும், பலர் அறிய மணம் செய்து கொண்டு மனையாளாய் உரிமை செய்யப்பட்ட பெண்ணுக்கும் தொடர்பு படாது வாழ்பவர் தம் பெரிய வாழ்வினைக் காட்டிலும் பிச்சை எடுத்து வாழ்கின்ற வாழ்வே நன்று. பார்க்கின்ற நம் கண்ணிலும் நெருப்புப் பொறிபறக்குமாறு கடல் சூழ்ந்த இலங்கை மாநகரினை ஆள்கின்றவன் (அரக்கரில் வேறுபட்ட) குபேரன்! காண்பாயாக.

கு: இராவணனது மரபின் பெருமைப்புலப்பட 'தடமலரோன் வழிவந்த தசக்கிரீவன்' எனச் சுமாலி விளித்தான். தசக்கிரீவன் என்பது அண்மைவிளி. தாம் முன்பு ஆண்ட மண்ணுக்கும் பெண்ணுக்கும் தொடர்பு படாதவராய் உரிமை யிழந்து வாழும் வாழ்வினும் பிச்சையெடுக்கும் வாழ்வு பெரிது;

என்று இழித்துக் கூறியவாறு. பிச்சையெடுத்துண்ணும் வாழ்வினும் அவ்விருவகை வாழ்வும் இழிந்தவை என்றவாறு. ஒப்புமைக்கூட்ட அணி தோன்றப் பெண்ணுக்குப் படாதார்தம் வாழ்வினையும் உடன் கூறினான்; சீற்றம் பிறக்க வேண்டி. பெருவாழ்வில் எனக் குறிப்பால் இகழ்ந்தவாறு. முன்பு அரக்கர்க்கு உரியதாய் இருந்த கடல் இலங்கையை அரக்கரல்லாத இயக்கர் குலத்துப் பிறந்த குபேரன் ஆள்வது பார்க்கின்ற பிறர்க்கும் சீற்றத்தைத் தூண்டுவ தாக உள்ளது என்பான் 'காண்போம் கண்ணுக்கும் பொறிபறக்கக் கடலிலங்கை யாள்கின்றான் குபேரன் காண்டி' என்றான். கண்ணிலும் பொறிபறக்க எனற்பாலது, உருபுமயக்கமாய்க் கண்ணுக்கும் என நான்கனுரு வந்தது; ஏழாம் வேற்றுமைப் பொருளில். கடலிலங்கை என்று சிறப்பித்தது அதன் இயற்கை அரண் சிறப்பைப் புலப்படுத்த வேண்டி. குபேரன் காண்டி என்றது அரக்கர் மரபினனல்லாதவன் என்னும் குறிப்பினது. காண்பேமது கண்ணுக்கும் என ஆருவது விரிக்க. (சுய)

**சுமாலி இராவணனுக்கு இலங்கையைக் கொள்ளுமாறு கூறுதல்**

224. தேனத்தார் திகழ்மார்பன் றென்னிலங்கை
யாள்கின்ற குபேரன் சேர்ந்த
மானத்தா லுனக்கந்த வளநகரி
விடுகிலான் சாம பேத
தானத்தாற் றூரானேற் றண்டத்தாற்
கொள்ளுதிநீ கொள்ளா யாகில்
வானத்தார் நகைசெய்வார் மாசுண்ணும்
நின்வலியும் வரமு மென்றான்.

**தேனத்தார் திகழ்மார்பன் தென்இலங்கை**
**ஆள்கின்ற குபேரன் சேர்ந்த**
**மானத்தால் உனக்குஅந்த வளநகரி**
**விடுகிலான் சாம பேத**

தானத்தால் தாரானேல் தண்டத்தால்
கொள்ளுதிநீ கொள்ளாய் ஆகில்,
வானத்தார் நகைசெய்வார்; மாசு
உண்ணும் நின்வலியும் வரமும் என்றான்.

பொ: தேன்சொரியும் மாலை அணிந்த மார்பையுடையவனாகிய சுமாலி (இராவணனை நோக்கி) தென் திசையில் உள்ள இலங்கை மாநகரை ஆள்கின்ற குபேரன், அங்கு அரசாண்டு பழகிச் சேர்ந்திருந்த மான உணர்ச்சியால் அந்த வளமிக்க இலங்கை மாநகரை உனக்கு விட மாட்டான்; சாம பேத, தானம் என்ற மூவகை உபாயங்களால் தரவில்லையானால், நீ தண்டோபாயத்தால் அவனோடு போர் செய்து கைப்பற்றிக்கொள்க; அங்ஙனம் நீ கொள்ளாது விட்டால் வானத்தில் உள்ள தேவர்கள் சிரிப்பார்கள். நின் தவத்தால் பெற்ற வலிமையும் வரமும் மாசுபடும் என்று கூறினான்.

கு: தேனத்தார் என்புழி அகரம் சாரியை. மார்பன் என்றது சுமாலியை. குபேரன் அங்குச் சேர்ந்து வாழ்ந்திருந்த பற்றுணர்ச்சியால் இலங்கையை எளிதில் விடமாட்டான் என்றவாறு. மானம் என்றது இங்குப் பற்றுணர்ச்சியை. மூவகை உபாயங்களால் முயன்று பார்த்தும் தாராதபோது இறுதியதான தண்ட உபாயத்தைக் கையாண்டு கைப்பற்றுக என்றவாறு. தண்டமாவது போரில் தாக்கித் தோல்வியுறச் செய்தல். நின்வலியும் பிரமன்பால் பெற்ற வரமும் சிறப்புறவேண்டுமாயின் குபேரனை வென்று இலங்கையைக் கைப்பற்றுக என்பதே கருத்து. (சுக)

தன் அண்ணனோடு போர் செய்தல் எவ்வாறு என்ற
இராவணனுக்குப் பிரகத்தன் கூறுதல்

225. என்றுதாய் தந்தைதனக் கியம்பிய சொற்
கேட்டதசக் கிரிவ னேரே
யின்றெனக்கு மூத்தானைக் கன்றுமா
றெங்கனு னென்று கூறத்

துன்றுபுயப் பிரகத்தன் சூரரது
பார்ப்பரோ துரந்த போரி
லன்றுபிரா தாக்களா மசுரர் குல
மறுத்திலரோ வமர ரென்றான்.

என்றுதாய் தந்தை தனக்கு இயம்பிய
சொல் கேட்ட தசக்கிரீவன்'நேரே
இன்று எனக்கு மூத்தானைக் கன்றுமாறு
எங்ஙன் நான்' என்றுகூறத்,
துன்றுபுயப் பிரகத்தன் சூரர் அது
பார்ப்பரோ? துரந்த போரில்
அன்று பிராதாக்களாம் அசுரர்குலம்
அறுத்திலரோ அமரர்? என்றான்.

பொ: என்று தன் தாய்க்குத் தந்தையாகிய மாலியவான் தனக்குச் சொன்ன சொல்லைக் கேட்ட இராவணன், இப்போது எனக்கு மூத்தவனாகிய குபேரனை நேரே பகைத்துக் கொள்வது எப்படி? என்று சொல்ல, அங்கு வாழ்த்த வந்திருந்த நெருங்கிய தோள்களையுடைய பிரகத்தன் என்பவன் (இராவணனை நோக்கி) சூரராயுள்ளோர் அந்த அண்ணன் தம்பி என்ற உறவைப் பார்ப்பார்களோ? அன்று ஆயுதங்களை எறிந்து செய்த போரில் சகோதரர்களாகிய அசுரர் குலத்தைத் தேவர்கள் அடியோடு அழிக்கவில்லையோ? என்று வினவினான்.

கு: தாய் தந்தை என்பது தாய்க்குத் தந்தை என்று நான்காம் வேற்றுமைத் தொகையாக்குக. தாய்ப்பாட்டன் என்றபடி. கன்றுதல்–பகைத்துக் கொள்ளுதல். நேரே கன்றுமாறு எங்ஙன் என மாறிக் கூட்டுக. பிரகத்தன் என்பவன் அங்கு வாழ்கின்ற ஓரசுரன். மாலியவன் சொல்லவும் ஏற்றுக்கொள்ளாத இராவணனை ஏற்றுக்கொள்ளச் செய்த சொற்றிறமிக்கவன். அன்று துரந்தபோர் என்று மாறுக. துரந்த போர் என்றது ஆயுதங்களை எய்து செய்த போர் என்றவாறு. பிராதாக்கள்–உடன்பிறந்தார். காசிபரின் மனைவியரில் அதிதியின் புதல்வர்கள் தேவர்கள்; திதியின் புதல்

வர்கள் அசுரர்கள். ஒருதந்தைக்குப் பிறந்தமையால் அசுரரும் சுரரும் உடன்பிறந்தார் ஆகின்றனர். தேவர்கள் திருமாலைத் துணையாகக் கொண்டு அசுரர் குலத்தை வேரோடு அறுத்தார்கள்; ஆதலின் இராவணன் குபேரன் அண்ணனுயிற்றே என்று பாராது அவனை எதிர்த்து இலங்கையைக் கைப்பற்றுதல் குற்றமாகாது என்பதை உவமை முகத்தான் விளக்கியவாறு. குபேரன் விச்சிர வசுவுக்கும் பரத்துவன் மகளாகிய தேவவன்னிக்கும் பிறந்தவன். இராவணன் விச்சிரவசுவுக்கும் கைகசி என்ற அரக்கிக்கும் பிறந்தவன். குபேரனுக்கும் இராவணனுக்கும் தந்தை ஒருவர்; தாயர் இருவர்; பிரகத்தன் என்பவன் சுமாலிக்கும் கேதுமதிக்கும் பிறந்த மகன் என்று வான்மீகம் கூறும். (சஉ)

### இராவணன் எண்ணத்தின்படி
### பிரகத்தன் தூது சென்று சொல்லுதல்

226. என்றுதனக் கவனியம்பக் கேட்டதசக்
கிரிவனதற் கிசைந்து நீயே
சென்றுதன பதிக்கிதனைச் செப்பிவா
வெனவிடுப்ப வவனுஞ் சென்று
குன்றுபுரை மணிமாட கூடகோ -
புரவிலங்கை குறுகிச் சீரின்
தன்றுணையி லான்றனக்குச் சாமவா
சகங்களையே தழுவச் சொன்னுன்.

என்று தனக்கு அவன் இயம்ப, கேட்ட தசக்
கிரீவன் அதற்கு இசைந்து நீயே
சென்று தனபதிக்கு இதனைச் செப்பி வா
என விடுப்ப அவனும்சென்று
குன்றுபுரை மணிமாட கூட கோ
புர இலங்கை குறுகிச் சீரின்
தன் துணையிலான் தனக்குச் சாமவா
சகங்களையே தழுவச் சொன்னுன்.

**பொ:** என்று பிர தன் தனக்குச் சொல்ல அதைக் கேட்ட இராவணன் அவன் சொல்லுக்கு உடன்பட்டுப் பின்பு (அவனை நோக்கி) நீயே சென்று குபேரனுக்கு இச் செய்தியைச் சொல்லி வருக என்று விடுக்க, அந்தப் பிரகத்தனும் சென்று குன்று போன்ற மணிமாடங்களையும் கூட கோபுரங்களையும் உடைய இலங்கை நகரை அடைந்து, சிறப்பில் தனக்கு நிகரில்லாதவனாகிய குபேரனுக்குச் சமாதானமான சொற்களையே அவன் ஏற்றுக் கொள்ளுமாறு சொன்னான்.

**கு:** மணிகள் பதிக்கப்பெற்ற மாடங்கள் உயரத்தால்-அகலத்தால் குன்றுகள்போலத் தோன்றுதலின் குன்றுபுரை மணிமாடம் என்றார். மாடம், கூடம், கோபுரம் என்பன கட்டடங்களின் வேறுபாடுகள். இலங்கை மாநகரின் செல்வச் சிறப்புத் தோன்றக் கட்டடங்கள் அமைந்துள்ளன என்றவாறு. சீரின் தன் துணையிலான் என்றது குபேரனை; தனபதியாகலின் சிறப்பில் தனக்குவமையில்லான் ஆயினான். சாம வாசகங்கள் என்றது, நால்வகை உபாயங்களில் முதலுபாயமாகிய சாம உபாயத்திற் குரிய வார்த்தைகளை; இயைபுபட எடுத்துரைத்தான் என்பார் தழுவச் சொன்னான் என்றார். (உசு)

### பிரகத்தன் குபேரனுக்குச் சொன்னது

227. உன்னுடைய தம்பியா முயர்வரைத்தோட்
டசக்கிரிவ னுரைத்த கேட்டி
முன்னிலங்கை நகராண்டோர் மாலியவான்
முதலாய மூவர் மூத்தோர்
பின்னதனுக் குரியார்கள் யானன்றிப்
பிறரில்லைப் பேசிற் பேணி
என்னுறவு வேண்டுவதியே லிலங்கைநகர்
தருகவென வியம்பச் சொன்னான்.

**உன்னுடைய தம்பியாம் உயர்வரைத் தோள்**
**தசக்கிரிவன் உரைத்த கேட்டி!**
**'முன்இலங்கை நகர் ஆண்டோர் மாலியவான்**
**முதலாய மூவர் மூத்தோர்**

பின் அதனுக்கு உரியவர்கள் யான்அன்றிப்
பிறர் இல்லை; பேசில் பேணி
என் உறவு வேண்டுதியேல் இலங்கைநகர்
தருக, என இயம்பச் சொன்னான்.

பொ: உன்னுடைய தம்பியாகிய உயர்ந்த மலை போன்ற தோள்களையுடைய பத்துத் தலைகளையுடைய இராவணன் சொன்னவற்றைக் கேட்பாயாக! 'முன்காலத்து இலங்கை நகரை ஆண்டவர்கள், மாலியவான் முதலாய மூவர் ஆகிய மூத்தோர் ஆவர். அவர்க்குப் பின்பு அவ்விலங்கை நகரத்திற்கு உரியவர்கள் யான் அல்லது பிறர் இல்லை சொல்லுமிடத்து; என்னுடைய உறவினை விரும்பி வேண்டுவாயானால் இலங்கை நகரை எனக்குத் தருக, என்று என்னைச் சொல்லச் சொன்னான் (என்றான்).

கு: இலங்கை நகரை முன்காலத்து ஆண்டவர்கள் மாலியவான் முதலாய மூவராவார். மாலியவான், இராவணனுக்குத் தாய்ப் பாட்டன் முறையினன் ஆதலின், பின் அதனுக்குரியவர்கள் யானன்றிப் பிறரில்லை என்ன இராவணன் கூறியதாகச் சொன்னான். பேணி-விரும்பி. பேணி வேண்டுதியேல் என இயையும். உயர் வரைத்தோள் தசக்கிரிவன் என்றது, உன்னை வெல்லுதற்குரிய மலைபோன்ற தோள்களையும் பத்துத்தலைகளையும் உடையவன் என்ற கருத்துத் தோன்றக் கூறியவாறு. உறவு வேண்டுதியேல் இலங்கைநகர் தருக என்றமையால் இலங்கையைத் தாராதொழியின் உறவு முறிந்து போர் மூளும்; போரில் அழிவாய் என்பது குறிப்பு—என்றான் என்பது, சொல்லெச்சமாக இறுதியில் வருவிக்கப்பட்டது. (உச)

பிரகத்தன் சொல்லுக்கு உடன்பட்ட குபேரன்
தன் தந்தையிடம் கூறல்:

228. அன்னவா சகங்கேட்ட வருநிதிக்கோன்
வருங்கரும மனத்தி னுய்ந்தே
என்னரசு மென்பதியு மென்றம்பி
யினதன்றே யெனக்கென் றம்பி

சொன்னபடி செய்வெனெனச் சொல்லிவிடுத்
தவன்றனக்குச் சொன்ன வெல்லாம்
தன்னுடைய தந்தைக்குத் தான்கூறக்
கேட்டந்தத் தவத்தோன் கூறும்.

அன்னவாசகம் கேட்ட அருநிதிக்கோன்
வரும்கருமம் மனத்தின் ஆய்ந்தே
'என் அரசும் என் பதியும் என் தம்பியினது
அன்றே! எனக்கு என்? தம்பி
சொன்னபடி செய்வென்' எனச் சொல்லி விடுத்து,
அவன் தனக்குச் சொன்னவெல்லாம்
தன்னுடைய தந்தைக்குத் தான் கூறக்
கேட்டு, அந்தத் தவத்தோன் கூறும்.

பொ: பிரகத்தன் சொன்ன அந்தச் சொல்லைக் கேட்ட குபேரன், இனி வரும் கருமம் யாது என்பதைத் தன்மனத்து ஆராய்ந்து பார்த்து, (இப்போது உடன்படுவதன்றிக் கருமம் வேறில்லை என்பது தெளிந்து) 'என்னுடைய அரசாட்சியும் என் இலங்கைமாநகரமும் என் தம்பிக்கு உரியது அல்லவோ? எனக்கென்று என்ன இருக்கின்றது? தம்பி இராவணன் சொன்னபடி இலங்கை நகரைக் கொடுத்துவிடுகின்றேன்' என உடன்பட்டுச் சொல்லியனுப்பிவிட்டு, அவன் தனக்குச் சொன்ன எல்லாவற்றையும் தன்னுடையதந்தைக்குத்தான் சொல்ல, அதைக் கேட்ட தவத்தோனாகிய விச்சிரவசு சொல்லுவான்.

கு: வருங்கருமம் என்றது, இராவணன் சொன்னதை யுடன்பட்டு இலங்கையைத் தாராதிருந்தால், வரத்தாலும் வலியாலும் பெரியவனாகிய அவனுக்குத் தோல்வியுற வேண்டி வரும் என்ற எதிர்காலத்து நிகழக்கூடியதை; எனக்கு என் என்றது, எனக்கு எதற்கு? என்னும் கருத்தினது. தன்னுடைய தந்தை என்றது விச்சிரவசுவை. விச்சிரவசு தவமேற்கொண்டொழுகுபவராதலின் தவத்தோன் எனப் பெயர் கொடுத்தவாறு. (௬௫)

### விச்சிரவசு விளம்புதல்

229. முன்னாளி லென்னுடைய மூதாதை
யாண்டநக ரிலங்கை யென்று.
பன்னாளு மெனக்குரைப்பப் பழியான
காரியநீ பகர்தி யென்று
சொன்னாலு மவன்கேளான் றுன்மதியோன்
றசக்கிரீவ னவனுக் கானேன்
என்னாதே மைந்தவுனக் கிதமான
காரியங்கே ளென்று சொன்னான்.

முன்நாளில் என்னுடைய மூதாதை
ஆண்டநகர் இலங்கை என்று
பல்நாளும் எனக்கு உரைப்பப் பழியான
காரியம்நீ பகர்தி என்று
சொன்னாலும் அவன் கேளான்; துன்மதியோன்
தசக்ஙிரீவன்; அவனுக்கு ஆனேன்
என்னாதே மைந்த! உனக்கு இதமான
காரியம்கேள்; என்று சொன்னான்.

பொ: (இராவணன் வந்து) முன் நாளில் என்னுடைய மூதாதை (மாலியவான் முதலியோர்) ஆண்ட நகர் இலங்கை என்று பலநாளும் எனக்குச் சொல்ல, அப்போது யான் நீ பழியான காரியம் சொல்லுகின்றாய் என்று சொன்னாலும் அவன் உடன்பட்டுக் கேட்கமாட்டான்; இராவணன் துன்மதியுடையவன் ஆதலால்; என் மைந்தனே; அவனுக்குச் சார்பானேன் என்று கருதாதே, உனக்கு நல்லதான காரியம் எது என்பதைக் கேட்பாயாக; என்று சொல்லத் தொடங்கினான் விச்சிரவசு.

கு: உரைப்பதற்குத் தோன்று எழுவாய் இராவணன், தசக்கிரீவன் துன்மதியோன் ஆதலின், சொன்னாலும் அவன் கேளான் என்றது விச்சிரவசு. இராவணன் கருத்திற்கு இசைவாகப் பேசுதலால் குபேரன் ஒருகால் இராவணனுக்குச் சார்பாக இருப்பதாகக்

கருதிவிடலாகாதே என்ற கருத்தால் கூறியதாகும். மைந்த என்ற விளி நீதான் என் அன்புக்குரிய மைந்தன் என்ற குறிப்புத் தோன்ற நின்றது. இதம்–நல்லது. (௬௬)

வேறு

230. திசைமுகன் வரமெனும் வலிகொடு திசை
வசைமுகம் வளர்தர மகிதல நலிதரு [தொறும்
தசமுகன் வழிநகர் தனைவிடு தரணியில்
இசைமுகம் வளர்தர வெனமுனி
[யிவைசொலும்.

'திசைமுகன் வரம் எனும் வலிகொடு திசைதொறும்
வசைமுகம் வளர்தர மகிதலம் நலிதரு
தசமுகன் வழி நகர்தனை விடு; தரணியில்
இசைமுகம் வளர்தர' என முனி இவை சொலும்.

பொ: 'நான்முகன் கொடுத்த வரம் என்கின்ற வலிமையைக் கொண்டு திசைகள் தோறும் பழி வளரும்படி இவ்வுலகத்தை வருத்துகின்ற இராவணனிடத்தில் இவ்வுலகத்துஉனக்கு புகழ் வளர இலங்கை நகரத்தை விடுக' என்று விச்சிரவசு இவற்றைச் சொல்லுவானானான்.

கு: திசைமுகன்–பிரமன். பிரமன் கொடுத்த வரம் ஆகிய வலிமை இருப்பதால் இராவணன் பழியும் பாவமும் பாராது இவ்வுலகத்தை வருத்துகின்ற இயல்பினனாக ஆனான் என்பார் திசைதொறும் வசைமுகம் வளர்தர மகிதலம் நலிதரு தசமுகன் என அடைமொழியால் சிறப்பித்தவாறு. வசை-பழி. இசை–புகழ் முனி என்றது, விச்சிரவசுவினை. மகிதலம்–பூவுலகம். (௬௭)

விச்சிரவசு சொன்ன இமயமலைச் சிறப்பு

231. குடதிசை குணதிசை தழுவிய குரைகட
லிடையமை யிருதலை யிமயம தெனுமலை

வடதிசை யுளததுமலையர சிதுவென
இடமுடை யுலகவ ரிடுபெய ருடையது.

குடதிசை குணதிசை தழுவிய குரைகடல்
இடைஅமை இருதலை இமயமது எனும் மலை
வடதிசை உளதுஅது, மலை அரசு இது என
இடம் உடை உலகவர் இடு பெயர் உடையது.

பொ : மேற்குத்திசை, கிழக்குத்திசை ஆகிய இருதிசையிலும் ஒலிக்கின்ற கடல் பொருந்தியுள்ளன; அவ்விருதிசைக்கு நடுவே அமைந்த இருதிசையில் இமயம் என்னும் மலை வடதிசைக்கண் உளது; அம்மலை 'மலைஅரசு இது' என்று இடம் அகன்றுள்ள உலகத்து மக்கள் இட்ட பெயரையுடையது.

கு : நான்குதிசையில் மேற்கும் கிழக்கும் ஆகிய திசைகள் மேலைக் கடலாகிய அரபிக்கடலும் கிழக்குக் கடலாகிய வங்காள குடாக்கடலும் தழுவியுள்ளன. அவ்விருதிசைகட்கு நடுவேயுள்ள இரண்டு பக்கங்களில் இமயம் என்னும் மலை, வடதிசைக்கண் உளது. அது மலை அரசு, இதுவென்று இடமகன்ற பரப்பையுடைய உலகத்து வாழ்பவர் இட்ட பெயரினையுடையது; என்றவாறு. இடமுடையுலகம் என்றது உலகத்துக்கு அடை. இமயமலைக்கு உலகத்தவர் மலைஅரசு என்று சிறப்பித்துப் பெயர் கொடுத்தனர் என்க. (உஅ)

232. மயிலிய லுமையினை மகளென வுடையது
குயின்மொழி யவளொடு குளிர்சடை யரனுறை
கயிலையை யொருபுடை யுடையது கதிரவன்
வெயினுழை வருமர மிடைதட முடையது.

மயில் இயல் உமையினை மகள் என உடையது;
குயில் மொழியவளொடு குளிர்சடை அரன் உறை
கயிலையை ஒருபுடை உடையது; கதிரவன்
வெயில் நுழைவு அரும் மரம் மிடைதடம் உடையது.

பொ: மயிலைப் போன்ற சாயலையுடைய உமையம்மையை மகள் எனக்கொண்ட உறவுடையது; குயிலின் குரல் போன்ற இனிய மொழியை யுடைய அவ்வுமையவளோடு குளிர்த்த சடையை யுடைய சிவபிரான் தங்கியுள்ள கயிலைமலையை ஒரு பக்கத்தே கொண்டுள்ளது; சூரியனுடைய வெயில் நுழைய இயலாதபடி மரங்கள் நெருங்கியுள்ள பொழிலையுடையது.

கு: இமய மலையின் சிறப்பைக் கூறவந்த விச்சிரவசு உமையம்மையினை மகளாகக் கொண்டுள்ளதையும் சிவன் தங்கியுள்ள கயிலையை ஒரு பக்கத்தில் கொண்டுள்ளதையும் வெயில் நுழைதற்கு அரிய மரச் செறிவினையுடைய பொழில்களையுடைய யதையும் இங்குச் சிறப்பித்தவாறு. மலைமகள் என்பதற்கேற்ப மலையில் பயிலும் மயிலியல் உமை எனவும், குயில் மொழியவள் எனவும், மலைத் தொடர்பான உவமைகள் கூறியிருக்கும் பொருத்தம் காண்க. குளிர்சடையரன் என்றது, கங்கை தங்கிய சடையனுதல் நினைந்து என்க. மரங்களின் செறிவு மிகுதியால் வெயிலே நுழையாத பொழிலிடங்கள் இமயத்தில் உண்டு என்றவாறு. மரமிடைதடம் என்றது பொழில்களை. 'வெயினுழைபறியாக் குயில் நுழை பொதும்பர்' (பெரும்பாண்-374) என்பது நினைவுகூரலாம். (சக)

233. பகுமுக மொடுதிகழ் பகிரதி யிழிதரு
மொகுமொகு மெனுமொலி முழவொலியதுதர
அகமகி ழறுபத வளியிசை முரறர
மிகமயி னடமுறு விரிபொழி லுடையது.

பகுமுகமொடு திகழ் பகிரதி இழிதரு
மொகுமொகும் எனும் ஒலி முழஒலியது தர,
அகமகிழ் அறுபத அளிஇசை முரல்தர,
மிக மயில் நடம்உறு விரிபொழில் உடையது.

பொ: பல முகங்களோடு விளங்குகின்ற கங்கை மேலிருந்து வீழ்கின்றமையால் உளதாகும் மொகுமொகும் என்கின்ற ஒலி மத்தளத்தின் ஓசையைத் தராநிற்க, மனமகிழ்ந்து முரலுகின்ற

ஆறுகால்களையுடைய வண்டின் ஒலி இசைப்பாட்டாக ஒலிக்க, மயில் மிகுதியாக நடம் செய்கின்ற விரிந்த சோலையையுடையது.

கு: பகுமுகம்-பலமுகம். பகிரதி-கங்கை. மேலிருந்து கீழ் வீழ்கின்ற கங்கையின் ஒலிக்குறிப்பாக மொகுமொகும் என்பது குறிப்பிடப்படுகின்றது. முழவு-மத்தளம். கங்கை இழிகின்ற ஒலி முழவின் ஒலியாகவும் வண்டின் ஒலி இசைப்பாட்டாகவும் ஒலிக்க மயில் நாட்டியம் பயில் நங்கையாக நடம் செய்யும் காட்சியை ஆசிரியர் நமக்குக் காட்டுகின்றார். மலர்களில் உள்ள தேனை யுண்டமையால் வண்டுக்கு அகமகிழ்ச்சி யுண்டாயது என்பது உய்த்துணரப்படும். அறுபத அளி என்றது ஆறுகால்களையுடைய வண்டினை. இசை முரல்தர என்பது இசைப்பாட்டாக இசைந்து ஒலிக்க என்றவாறு. மயில் மிக நடமுறும் என மாறிக் கூட்டுக. இச்செய்யுளின் கருத்து

ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கின்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் துதை குரலாக
.......................................
கழைவளர் அடுக்கத்து இயலி யாடும் மயில்
நனவுப் புகு விறலியில் தோன்று நாடன்' (அகநானூறு -82)

என்ற கபிலர் பாட்டின் கருத்தோடு ஒத்து விளங்குதல் காணலாம். (௩௰)

234. எறிகதிர் மணிமுடி யிமையவர் பொழிலிடை
வெறிமலர் மதுநுகர் விரிசிறை மதுகரம்
உறுதலு மதுநுக ரிவரென வுவகையொ
டறுபத மெதிர்கொளு மரவம துடையது.

எறிகதிர் மணிமுடி இமையவர் பொழிலிடை
வெறிமலர் மதுநுகர் விரிசிறை மதுகரம்
உறுதலும், மதுநுகர் இவர்என உவகையொடு
அறுபதம் எதிர்கொளும் அரவமது உடையது.

பொ: ஒளிவீசுகின்ற மணிகள் பதித்த முடியையுடைய தேவர்கள் விளையாடுகின்ற சோலையில், மணமிக்க மலர்களில் உள்ள தேனை நுகர்தற்குரிய விரிந்த சிறகையுடைய வண்டுகள் (வருதலும்) மதுவை நுகரவருகின்றவர் இவர் என்று மகிழ்ச்சியொடு அம்மலர்களிலுள்ள வண்டுகள் அவற்றை எதிர்கொள்ளும் ஆரவார ஒலியையுடையது (இமயமலை).

கு: இமையவர் பொழில் என்றது, தேவர்கள் விளையாடுதற் குரிய சோலை என்ற கருத்தினாலாகும். வெறிமலர்-மணமலர். மலரில் மதுவை நுகர வருகின்ற வண்டுகள் தொலைவிலிருந்து வரும்போது சிறகுகளை விரித்துக்கொண்டு பறந்து வரும் இயல்பு புலப்பட மதுநுகர் விரிசிறை மதுகரம் என்றார். மதுகரம் என்பது தேனைச் சேகரிப்பது என்னும் பொருளது. தொலைவிலிருந்து வரும் வண்டுகளை மலரில் தங்கித் தேனருந்துகின்ற வண்டுகள் எதிர்கொண்டு வரவேற்றுச் செய்யும் ஒலி மிகுதியாகக் கொண்டுள்ளது இமயம். அறுபதம் என்பது அடையடுத்த சினையாகு பெயராய் ஆறுகால்களையுடைய வண்டினைவுணர்த் தியது. அரவம்-ஒலி. சோலைமலரில் இருக்கும் வண்டுகள் வரும் வண்டுகளை வரவேற்கும் ஆரவாரத்தையுடையது இமய மலை என்றவாறு.
(௩௪)

235. மலைதனி னினமென வரியர வெழ மதி
குலைகுலை தருமுயர் குடுமிய துடையது
கலகல வெனவெழு கழையொலி யொடுபுனல்
சலசல வெனவிழு தடவொலி யுடையது.

மலைதனின் இனம் என வரிஅரவு எழ, மதி
குலைகுலை தரும்உயர் குடுமியது உடையது;
கலகல என எழு கழை ஒலியொடு புனல்
சலசல என விழு தடஒலி உடையது

பொ. (சந்திரனைக் கண்ட) வரிகளையுடைய பாம்பு வெண்ணிற முடைமையால் சந்திரனை இமயமலையின் இனந்தான்

என்று கருதி அதன்கண் செல்ல எழாநிற்க, அப்பாம்பினைக் கண்ட சந்திரன் (தன்னைப் பிடிக்க வரும் இராகு என்னும் பாம்பு எனக் கருதி) மனம் நடுங்குமாறு சந்திரன் வரையில் உயர்ந்துள்ள சிகரத்தையுடையது; கலகல என்று எழுகின்ற மூங்கிலின் ஒலியோடு, தண்ணீர் சலசல என வீழ்கின்ற பெரிய ஒலியையும் உடையது.

கு. இமயமலையின் சிகரமும் அம்மலைச் சிகரத்தை நெருங்கி வருகின்ற சந்திரனும் வெண்ணிறமாக இருத்தலின் அம்மலைச் சிகரத்திலுள்ள பாம்பு, சந்திரனை இமயமலையின் இனமெனக் கருதி அச்சந்திரனிடம்செல்ல எழுந்தது. அப் பாம்பினைக் கண்ட சந்திரன் தன்னைப் பிடிக்க வரும் இராகு எனக் கருதிப் பயத்தால் மனநடுங்கிற்று என்றவாறு. இதனால், இமயமலைச் சிகரம் சந்திரனை நெருங்கியிருந்தமை புலப்படுத்தியவாறு. குலை – மனம். குலைதல்– நடுங்குதல். கழை–மூங்கில். காற்றில் ஒன்றோடு ஒன்று உராய்கின்றபோது எழும் ஒலி கலகல என எழுகின்றது. சிகரத்திலிருந்து நீர் சலசல என வீழ்கின்றது. இவ்விரு பேரொலியையும் இமயம் தன்பாற் கொண்டுள்ளது என்றவாறு. குலைகுலை, கலகல, சலசல என்ற அடுக்குச் சொற்கள் ஒரு செய்யுளில் வருமாறு தொடுத்துள்ள திறம் காணலாம். (௫௨)

### எழில்மிகும் இமயத்தில் இருக்க எனக் குபேரனுக்குச் சொல்லுதல்

236 இனையன வெழிலுடை யிமயம தெனுமலை
தனையுறு கிளையொடு தழுவுதி தழுவிய
பினையத னிடைவளர் பெருநிதி யொடுமிரு
வெனமுனி யிவைசொல விசைமன முடையவன்

இனையன எழிலுடை இமயமது எனுமலை
தனை உறுகிளையொடு தழுவுதி, தழுவிய
பினை, அதனிடை வளர் பெருநிதியொடும் இரு;
என, முனி இவைசொல, இசைமனம் உடையவன்.

பொ: 'இத்தன்மையவான எழிலையுடையதாகிய இமயமலை தன்னை உனக்குப் பொருந்திய உறவினரோடு சென்று சேர்க; சேர்ந்த பின்பு அம்மலையிடத்து வளர்கின்ற பெரிய செல்வத்தோடு வாழ்ந்திருப்பாயாக' என விச்சிரவசு இவ்வார்த்தைகளைச் சொல்ல, அதற்கு இசைந்த மனம் உடையவனானான்.

கு: உடையன் ஆனான் என ஆக்கவினைக் குறிப்பு முற்றுக்குக. மலைதனைத்தழுவுதி, கிளையோடு தழுவுதி என்க. உறுகிளை என்பது மிக்க உறவினரை. இரு என்பது ஏவல்வினை. இமயத்தில் இயல்பாகவே பெருநிதி கிடந்தது ஆதலின் அதனிடை வளர் பெருநிதியொடும் இரு என்றான் முனிவன். இசைமனம்— உடன்பட்ட மனம்; வினைத்தொகை. (நூ௩)

**குபேரன் இமயஞ்சேர்தலும் இராவணன் இலங்கை வேந்தனாதலும்**
**வேறு**

237. எந்தையுரைத் ததுசெய்வெ னெனத்தனத
னிருங்கிளையோ டிலங்கை விட்டுச்
சிந்தையிலும் கடுந்தெய்வத் தேரேறித்
திகழிமையஞ் சென்று சேரத்
தந்திரமா கடறழுவத் தசக்கிரிவன்
றன்னகரி வந்து சார்ந்து
மந்திரிகள் முடிசூட்ட மாமணிமண்
டபத்தின்மகிழ்ந் திருந்தா னன்றே.

'எந்தை உரைத்தது செய்வென்' எனத்தனதன்
இருங்கிளையோடு இலங்கை விட்டுச்
சிந்தையிலும் கடும் தெய்வத்தேர் ஏறித்
திகழ்இமயம் சென்று சேர,
தந்திரமாகடல் தழுவ, தசக்கிரிவன்
தன் நகரிவந்து சார்ந்து,
மந்திரிகள் முடிசூட்ட, மாமணி மண்டபத்தில்
மகிழ்ந்து இருந்தான் அன்றே.

**பொ :** 'என் தந்தை சொன்னதைச் செய்வேன்' என்று குபேரன் தன் பெரிய உறவினரோடும் இலங்கையை விடுத்து மனத்தினும் விரைந்து செல்லும் தெய்வத்தன்மைவாய்ந்த புட்பகம் என்னும் தேரில் ஏறிக்கொண்டு விளக்கமுடைய இமயமலைக்குச் சென்று தங்க, இராவணன் சேனையாகிய கடல் தன்னைச் சூழ்ந்து வரத் தனக்குரிமையுள்ள இலங்கை நகருக்கு வந்தடைந்து மந்திரிகள் தனக்கு மணிமுடி சூட்ட வேந்தனாய்ச் சிறந்த மணிகள் பதித்த மண்டபத்தில் மகிழ்ச்சியோடு இருந்தான்.

கு : அன்று இரண்டும் அசைநிலை. தனதன் செய்வென் என இலங்கை விட்டுத் தேரேறி இமயம்சேர, தசக்கிரிவன் தன்னகரி சார்ந்து, முடிசூட்ட, மகிழ்ந்திருந்தான் என இயையும். தெய்வத்தேர் என்றது புட்பகவிமானத்தை. சிந்தையினும் கடும் தேர் என்றது மனத்தைக் காட்டிலும் விரைந்து செல்லும் தேரினை. கடுமை இங்கு விரைவுணர்த்தியது. 'மானுருவாக நின் மனம் பூட்டினையோ' (அகநனூறு -) என்பது நினைக்கத்தகும் தந்திரம்-சேனை. சேனையின் பெருமை தோன்ற திந்திரமாகடல் என உருவகஞ் செய்தவாறு. தன் நகரி என்றது இராவணனுக்குத் தாய்ப்பாட்டன் வழியாக உரிமையுடைய இலங்கை மாநகரை. இராவணனது செல்வச் சிறப்புத் தோன்ற மாமணி மண்டபத்தில் மகிழ்ந்திருந்தான் என்க. (௫௪)

### இராக்கதர்கள் எல்லாம் இலங்கையில் குடியேறல்

238. உழந்ததுய ரும்பர்க்கா யுலகனைத்து
முண்டுமிழ்ந்த வொருவன் முன்னாள்
அழன்றிலங்கை பாழாக்க வன்றுமுதற்
பாதாள மடைந்து ளோர்கள்
இழந்ததனம் பெற்றவர்போ லிராக்கதர்க
ளிரைத்தீண்டி யிழந்த தங்கள்
பழம்பதியிற் குடிபுகுந்து பண்டுபோல்
வீற்றிருப்ப விலங்கை வேந்தன்.

உழந்ததுயர் உம்பர்க்காய் உலகுஅனைத்தும்
உண்டு உமிழ்ந்த ஒருவன், முன்நாள்
அழன்று இலங்கை பாழாக்க, அன்று
முதல் பாதாளம் அடைந்துளோர்கள்,
இழந்த தனம் பெற்றவர்போல்இராக்கதர்கள்
இரைத்து ஈண்டி இழந்த தங்கள்
பழம்பதியில் குடிபுகுந்து பண்டுபோல்
வீற்றிருப்ப இலங்கை வேந்தன்.

பொ: (தம்மால்) துயர் உழந்த தேவர்க்குச் சார்பாய், உலக முழுவதையும் உண்டு பின்பு உமிழ்ந்த திருமால் முன்னாளில் வெகுண்டு இலங்கைநகரைப் பாழாக்க, அன்று முதலாகப் பாதாளம் புகுந்து வாழ்ந்தவர்களாகிய இராக்கதர்கள், இழந்து விட்ட செல்வத்தைப் பெற்றவர்களைப்போல் மகிழ்ந்து ஆரவாரித்து நெருங்கி, முன்பு இழந்திருந்த தம் பழைய இலங்கை நகரில் குடிபுகுந்து முன்போலவே சிறப்புடன் வாழ்ந்து கொண்டிருக்க, இலங்கை வேந்தனாகிய இராவணன்.

கு: துயருழந்த உம்பர் என மாற்றுக. இராக்கதர்களின் துன்புறுத்தலால் வருந்திய தேவர்கள் திருமாலைச் சரணடைய அத்திருமால் இலங்கை நகரைப் பாழாக்கி இராக்கதரைப் பாதாளத் தொளித்து வாழச் செய்தமை முன்னரே சொல்லப்பட்டுளது. அடைந்துளோர்களாகிய இராக்கதர்கள் என இயையும். முன்பு இழந்த இலங்கையை இராக்கதர் மீண்டும் பெற்றதற்கு உவமையாக இழந்த தனம் பெற்றமை கூறினர். இரைத்தல்–மகிழ்ச்சியால் ஆரவாரித்தல். வீற்றிருத்தல் என்பது இடையூறு சிறிதும் இன்றிச் சிறப்புடன் இருத்தல். இலங்கை வேந்தன் என்ற எழுவாய் வருஞ் செய்யுளில் முடியும்; குளகம். (ருரு)

சூர்ப்பணகையை வித்துருசிங்கனுக்குக் கொடுத்தல்

239. தடையில்லா வலியில்லை யரம்பையர்க்குத்
தம்முலைக டம்மைத் தாங்க
இடையில்லை யெம்மைப்போ லிமைப்பளவி
லெவ்வுலகு முட்டி மீளும்

நடையில்லை யெனப்பழிக்கு நங்கைமடற்
சூர்ப்பணகை நலத்தைக்கண்டு
விடலொல்லே னெனவிரும்பும் வித்துருசிங்
கேசனுக்கு விதியி னீந்தான்.

தடையில்லா வலி இல்லை; அரம்பையர்க்கு,
தம்முலைகள் தம்மைத் தாங்க
இடை இல்லை, எம்மைப் போல் இமைப்பு அளவில்
எவ்வுலகும் முட்டிமீளும்
நடைஇல்லை எனப்பழிக்கும்நங்கை மடச்
சூர்ப்பணகை நலத்தைக்கண்டு,
விடலொல்லேன் என விரும்பும் வித்துருசிங்
கேசனுக்கு விதியின் ஈந்தான்.

பொ: அரம்பைமாதர்க்கு யாராலும் தடுக்க இயலாத வலிமை யில்லை; தம்முலைகளைத் தாங்கிக் கொள்வதற்குரிய இடையும் இல்லை; எம்மைப்போல இமைப்பொழுதில் எவ்வுலகத்தையும் சென்று சேர்ந்து திரும்புதற்குரிய விரைவான நடையுமில்லை என்று சொல்லி அவர்களைப் பழிக்கின்ற நங்கையாகிய வலிமைமிக்க சூர்ப்பணகை யின் அழகைக்கண்டு இவளை விடல் ஒல்லேன் என்று காதலித்த வித்துருசிங்கு என்பவனுக்கு விதிப்படி மணம்செய்து கொடுத்தான்.

கு: இலங்கை வேந்தன் என மேலைச் செய்யுளில் நின்ற பெயரே, ஈந்தான் என்று இச்செய்யுளில் உள்ள வினைக்கு எழுவா யாகும். சூர்ப்பணகை விண்ணுலகிலுள்ள அரம்பை மாதரினும் சிறப்புடையேன் என்ற தருக்குடையவள் ஆதலின், அரம்பையர்க் குள்ள தகுதியின்மையை அடுக்கிச் சொல்கின்றாள். யாராலும் தடுத்து நிறுத்தவியலாத வலிமை தனக்குண்டு அரம்பையர்க்கு இல்லை. கனதனத்தைத் தாங்குதற்குரிய பெரிய இடை தனக் குண்டு. அரம்பையர்க்கில்லை. இமைப்பொழுதில் எவ்வுலகத்தும் சென்று மீளுதற்குரிய விரைந்த நடை தனக்குண்டு; அரம்பையர்க் கில்லை. இந்த மூன்று வகையாலும் அரம்பையரைக் காட்டிலும் தான் உயர்ந்தவள் என்ற கருத்தால் சூர்ப்பணகை அவ் அரம்பை

யரைப் பழித்துக் கூறும் இயல்பினள் என்றவாறு, பெண்களுக்கே யுரிய மென்மையும் சிற்றிடையும் மென்னடையும் சூர்ப்பணகைக்கு இல்லை என்பதையே இங்ஙனம் கற்பனையால் கூறியவாறு. இத் தகைய சூர்ப்பணகையின் நலத்தைக்கண்டு காதலித்த வித்துரு சிங்கு என்பவனுக்கு அவளை மணஞ்செய்து கொடுத்தான் இராவணன் என்றவாறு. வித்துருசிங்கு என்பவன் தானவருள் சிறந்தோன்; காலகை என்பவளின் மகன். மின்னலைப் போன்ற நாக்கினையுடையவன் என்ற காரணம் பற்றி வித்துருசிங்கு எனப் பெயர் பெற்றான். வித்துரு—மின்னல். சிங்கு—நாக்கு. (ருசூ)

இராவணன் மயனைக் காணுதல்

240. ஆங்கொருநாட் டசக்கிரிவ னடவியிடை
வேட்டைபோ மளவி லாங்கோர்
தேங்கமழ் பூங்குழலியொடு திகழ்மணிப்பூண்
மயனவனைச் சென்றுசேர
ஈங்கிவளை யுடனேகொண் டியாவருமில்
லாவனத்து வந்தா யாவன்
பாங்குபெற வுரை என்று தசக்கிரிவன்
பகரமயன் பகரலுற்றான்.

ஆங்கு ஒருநாள் தசக்கிரிவன் அடவியிடை
வேட்டைபோம் அளவில் ஆங்குஓர்
தேம்கமழ் பூங்குழலியொடு திகழ் மணிப்பூண்
மயன் அவனைச் சென்று சேர,
'ஈங்கு இவளை உடனே கொண்டு யாவரும்
இல்லா வனத்து வந்தாய்! யாவன்?
பாங்குபெற உரை' என்று தசக்கிரிவன்
பகர, மயன் பகரலுற்றான்.

பொ : அவ்விடத்து ஒருநாள் இராவணன் காட்டில் வேட்டை மேல் போனபோது அங்கு ஒரு தேன் மணக்கும் மலர்களைச்

சூடிய கூந்தலையுடைய பெண்ணோடு விளக்கமுடைய மணிகள் பதித்த அணிகலன்களையணிந்த மயன் அவ்விராவணனைச் சென்றடைய, அவர்களைக் கண்ட இராவணன் 'இங்குள்ள இவளை உடனழைத்துக்கொண்டு எவரும் இல்லாத காட்டில் வந்தவனே நீயாவன்? தெளிவாகச் சொல்' என்று வினவ, மயன் சொல்லத் தொடங்கினான்.

கு: தேங்கழ்பூங்குழலி என்றது, மயன் மகளாகிய மண்டோதரியை. வண்டமர் ஓதி என்பது, வண்டோதரி என மருவி வழங்குகின்றது. பின் அது மண்டோதரி எனவும் திரிந்தது என்பர். அவனை என்றது இராவணனை. யாரும் இல்லாத காட்டில் கட்டிளமை மிக்க வண்டோதரியோடு வந்தது, அப்பெண்ணை யார்க்கோ மணஞ் செய்து கொடுக்கும் குறிப்பால்தான் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தால் இராவணன் இங்ஙனம் வினவினான். பாங்குபெற உரை என்றது தெளிவாகச் சொல் என்னும் கருத்தினது. (ருஎ)

மயன் தன் வரலாறு கூறுதல் 241 – 244

241. தாம நெடும் புயத்தோயான் தயித்தியர்கோன்
மயனென்னத் தகுவேன் பண்டு
மாமலர்மேற் றிருவொக்கும் வடிவுடைய
கஞ்சனையை வானோ ரீய
ஏமபுரி யென்பதெனக் கிருப்பாக
யானிருமித் தவளு நானும்
காமமெனும் பெருங்கடற் கோர் கரைகாணா
தைஞ்ஞூறுண் டிருந்த காலை.

தாமநெடும்புயத்தோய்! யான் தயித்தியர்கோன்,
மயன் என்னத் தகுவேன் பண்டு
மாமலர்மேல் திருஒக்கும் வடிவுடைய
கஞ்சனையை வானோர் ஈய

ஏமபுரி என்பது எனக்கு இருப்பாக
யான் நிருமித்து அவளும் நானும்
காமம் எனும் பெருங்கடற்குளர் கரை காணுது
ஐஞ்ஞூறு ஆண்டு இருந்தகாலை.

பொ: மாலை அணிந்த நீண்டுயர்ந்த தோள்களுடையவனே! யான் தயித்தியர்மரபில் வந்த அரசன், மயன் என்று பெயர் சொல்லத்தகுவேன். முன் காலத்துத் தாமரை மலர் மேல் அமர்ந்த திருமகளையொக்கும் வடிவழகுடைய கஞ்சனை என்பவளைத் தேவர்கள் எனக்குக் கொடுக்க (மணந்துகொண்டு) ஏமபுரி என்ற நகரத்தை எனக்கு இருப்பிடமாக யான் நிருமித்துக் கொண்டு, அவளும் நானும் காமம் என்னும் பெரியகடலுக்கு ஒரு கரையைக் காணுது ஐந்நூறு ஆண்டுகள் இன்புற்றிருந்தோம்; அப்போது,

கு: குளகம், வரும் செய்யுளில் முடியும். தாமம்-மாலை தயித்தியர் என்பவர் அரக்கரில் ஒருவகையினர். கஞ்சனை என்பவள் தேவமாது, அழகுமிக்கவள். இவள் வான்மீகத்தில் ஏமா என்று சொல்லப்படுகின்ருள். கிட்கிந்தா காண்டந்தில் பிலம்புக்க படலத்தில் பிலத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த சுயம் பிரபை, மயன் என்பானுக்கு ஏமையைப் புணர்த்திய நிகழ்ச்சியை அனுமானுக்குச் சொல்லுவதாகக் கம்பரும் கூறுகின்ருர் ஆதலின், இங்குக் குறிப்பிடப்படும் கஞ்சனை என்னும்பெயர் ஏமை என்பதன் பொருளைத் தருவதாகவே கொள்ளவேண்டும் ஏமா என்பது பொன்னிற முடையவள் என்னும் பொருளது; ஆதலின் அதே பொருள் தரும் கஞ்சனை என்ற பரியாயப் பெயரால் இங்குக் குறிப்பிட்டதாகக் கொள்ளலாம். காஞ்சனம்-பொன். கஞ்சனை-பொன்னிறமுடையவள். ஏமைக்குரியதாகலின் ஏமபுரி எனப் பெயர் கொடுத்தான் போலும் அந்நகர்க்கு. (ருஅ)

242. அங்கவடன் மணிவயிற்றில் வந்துபிறந்
தவண்மண்டோ தரியென் பாளிம்
மங்கையுடன் பிறந்தோர்கள் மாயாவி
துந்துமிவில் வலியின் மிக்கார்

இங்கிவடன் குணத்துக்கு மெழிலுக்கு
நிகரொக்கும் வரனைக் காணு
தெங்குமுழன் றிவ்வனத்தி னிடைப்புகுந்தே
னென்றுரைத்திங் கிவைபின் சொல்லும்.

அங்கு அவள்தன் மணிவயிற்றில் வந்துபிறந்
தவள் மண்டோதரி என்பாள் இம்
மங்கையுடன் பிறந்தோர்கள் மாயாவி,
துந்துமி, வில்வலியின் மிக்கார்
இங்கு இவள்தன் குணத்துக்கும் எழிலுக்கும்
நிகரொக்கும் வரனைக் காணாது
எங்கும் உழன்று இவ்வனத்தின் இடைப்புகுந்தேன்
என்றுஉரைத்து இங்குஇவைபின் சொல்லும்.

பொ: அவ்விடத்து அந்த ஏமையின் அழகிய வயிற்றில் வந்து பிறந்தவள் மண்டோதரி என்பாளாகிய இம்மங்கை, இவளுடன் பிறந்தவர்கள் மாயாவி துந்துமி என்பார், வில்வலியின் மிக்கவர்கள்; இங்குள்ள இவள் குணத்துக்கும் அழகுக்கும் நிகராக ஒத்துள்ள வரனைக் காணுமல் எவ்விடத்தும் திரிந்துதேடி, இந்த வனத்தில் புகுந்தேன்' என்று சொல்லிவிட்டுப் பின்பு இவற்றைச் சொல்லலானுன்.

கு: மயனுக்கும் ஏமைக்கும் பிறந்த பெண், மண்டோதரி. அவளுடன் பிறந்தவர்கள் மாயாவியும் துந்துமியும் ஆவர். நிகரொக்கும் என்பது மீமிசைச்சொல். உழலுதல்—திரிந்து அலைதல். பின் சொல்லியதை வரும் செய்யுளில் காணலாம். (௫௬)

243. குலம் வேண்டு மென்றிருப்பர் குலத்துள்ளார்
கல்வியினுற் குறையா ஞானப்
பலம் வேண்டு மென்றிருப்பர் தந்தைமார்
பரந்தபெருஞ் செல்வமுள்ள
தலம் வேண்டு மென்றிருப்பர் தாய்மார்கள்
யவ்வனமு மழகுஞ் சார்ந்த
நலம் வேண்டு மென்றிருப்பர் நாறுகுழற்
கன்னிமார் நலத்தின் மிக்கார்.

குலம் வேண்டும் என்று இருப்பர் குலத்துஉள்ளார்;
கல்வியினல் குறையாஞானப்
பலம் வேண்டும் என்று இருப்பர் தந்தைமார்;
பரந்தபெருஞ் செல்வம் உள்ள
தலம் வேண்டும் என்றுஇருப்பர் தாய்மார்கள்;
யவ்வனமும் அழகும் சார்ந்த
நலம் வேண்டும் என்றிருப்பர் நாறுகுழல்
கன்னிமார் நலத்தின் மிக்கார்.

பொ: (ஒரு மணமகனைத் தேர்ந்தெடுக்கும்போது) குலத்தில் உள்ள பெருமக்கள் மணமகன் நல்ல குலத்தனுக இருத்தல் வேண்டும் என்று விரும்புவர்; தந்தைமார்கள், அவன் கல்வியினல் குறையாத ஞானவலிமையுள்ளவனுக விருத்தல் வேண்டும் என விரும்பியிருப்பர்; தாய்மார்கள் பரந்த பெரிய செல்வமுள்ள இடம் வேண்டும் என்று விரும்பியிருப்பார்கள்; அழகில் மிக்கவராகிய மணம்வீசும் கூந்தலையுடைய கன்னிமார்கள், இளமையும் அழகும் சார்ந்துள்ள நன்மையே வேண்டும் என்று விரும்பி யிருப்பார்கள்.

கு: குலத்துள்ளோர் குலத்தையும் தந்தை கல்வியையும் தாய் செல்வத்தையும், பெண் இளமையையும் அழகையும் விரும்புதல் இயல்பு என்றவாறு. ஞானப்பலம் – ஞானவலிமை. செல்வமுள்ள இடம் என்றவாறு. யவ்வனம் - இளமை. மணப்பெண், குலத்தையும் கல்வியையும் செல்வத்தையும் பாராமல் அழகையே விருப்பிப் பார்ப்பாள் என்றவாறு. ஒரே நிகழ்ச்சியில் பலவகையான குறிக்கோள் கொண்டுள்ள பலர் இருத்தல் இயல்பு என்பதை இதனுல் உணர்த்தியவாறு. (சுூழ)

244. பண்புடைய குடிப்பிறப்பும் பழிப்பில்லாப்
பேரழகும் பரந்த கேள்வி
நுண்பொருளும் நீரொழியப் பானுகரு
மன்னம்போல் நோக்கித் தேரும்

ஒண்பொருளு மிந்நான்கு முடையாரைக்
கிடையாதிவ் வுலகந் தன்னில்
பெண்பெறுகை தனைப்போலப் பெரியதுயர்
தானுண்டோ பேசுங்காலே.

பண்புடைய குடிப்பிறப்பும் பழிப்பு இல்லாப்
பேரழகும் பரந்த கேள்வி
நுண்பொருளும் நீர்ஒழியப் பால்நுகரும்
அன்னம்போல் நோக்கித் தேரும்
ஒண்பொருளும் இந்நான்கும் உடையாரைக்
கிடையாத இவ்உலகம் தன்னில்
பெண்பெறுகை தனைப்போலப் பெரியதுயர்
தான்உண்டோ பேசுங் காலே.

பொ : பண்புடைய நற்குடிப் பிறப்பும். யாரும் பழித்தல் இயலாத பெரிய அழகும் பரவிய கேள்வியால் பெறுகின்ற கல்வி யாகிய நுண்பொருளும், நீரை நீக்கிவிட்டுப் பாலை நுகரும் அன்னம் போல அறநெஞ்சினுல் நோக்கித் தீவினையால் வரும் பொருளை நீக்கிவிட்டு நல்வினையால் வருவது தான் என்று ஆராய்ந்து கொள்ளும் ஒள்ளிய பொருளும், ஆகிய இந்த நான்கனையும் உடைய வர்களைக் கிடைக்கப் பெறுத இந்த உலகத்தில் பெண்ணைப் பெறுதல் போலப் பெரிய துயரம் வேறு உண்டோ? பேசுமிடத்து.

கு : குடிப்பிறப்பும் அழகும் கல்வியும் அறத்தான் வரும் செல்வமும் உடைய கணவனைக் கிடைக்கப் பெறுத இந்த உலகத் தில் பெண்ணைப் பெறுதல் போலப் பெருந்துயர் தருவது பிறிதில்லை என்ற உண்மையை மயன் இராவணனுக்குத் தெளிவுபடுத்திய வாறு. நீர்ஒழியப் பால்நுகரும் அன்னம்போல் என்ற உவமையால் தீவினையால் வரும் பொருளை விரும்பாது, நல்வினையால்வரும் ஒண் பொருள் என்பது பெறவைத்தவாறு. தன்னையுடையானை உயர்த் தும் சிறப்புப் பற்றியும் நல்வினையான் வருதல் பற்றியும் ஒண் பொருள் எனச் சிறப்பித்தார். கிடையாத இவ்வுலகம் என்புழி அகரம் தொகுத்தல் விகாரம் பெற்றது. (சுக)

மயன் வினவியதற்கு இராவணன் கூறிய விடை

245. பின்னுமயன் கூறுவனின் பேரெழிலும்
யவ்வனமும் பேச வேண்டா
உன்வழியு முன்பதியு உன்பெயரு
முன்னலமு முரைத்தி யென்ன
அன்னவனு மயன்மைந்தன் மகன்மைந்த
னணியிலங்கா புரியையாளும்
மன்னவன்பேர் தசக்கிரிவன் மறைகளோ
ராயிரம் யான் வல்லே னென்ருன்.

பின்னும் மயன் கூறுவன் நின்பேர் எழிலும்
யவ்வனமும் பேச வேண்டா;
உன்வழியும் உன்பதியும் உன்பெயரும்
உன்நலமும் உரைத்தி என்ன?
அன்னவனும் 'அயன்மைந்தன் மகன் மைந்தன்,
அணிஇலங்காபுரியை ஆளும்
மன்னவன்; பேர் தசக்கிரிவன்; மறைகள்
ஓராயிரம்யான் வல்லேன்' என்ருன்.

பொ : பின்னும் மயன் சொல்லுகின்ருன்: உன் பெரிய அழகும் இளமையும் (கண்டவுடன் தெரிவதால்) அவை பற்றிச் சொல்ல வேண்டியதில்லை; உன் குடிமரபும் உன் ஊரும் உன் பெயரும் உனது கல்விநலமும் சொல்வாயாக என்று வினவ, அவ்விராவணனும் பிரமன் புதல்வன் புலத்தியனுக்கு மகனுகிய விச்சிரவசுவின் மைந்தன் யான்; அழகிய இலங்காபுரியை ஆட்சி செய்கின்ற மன்னவன், தசக்கிரிவன் என்னும் பெயரினன், ஆயிரம் வேதங்களைக் கற்று வல்லவனுக இருக்கிறேன்; என்று கூறினுன்

கு : முன்குறிப்பிட்ட நான்கில் ஒன்ருகிய எழிலும் இளமையும் அவனைக் கண்ட அளவிலே புலப்படும் தன்மைய ஆதலின் அவ்விரண்டும் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. ஏனைக் குடிப் பிறப்பும் கல்வியும் செல்வமும் சொல்லித் தெரிய வேண்டியிருத்

தலின் அவை பற்றி வினவினுன் மயன். வழி என்பது மரபு-குடிப்பிறப்பு. பதியும் பெயரும் குடிப்பிறப்போடு சார்த்தி யறியப் படுவன ஆதலின் உடன் கூறினுன். நலம் என்றது கல்வி நலத்தை. அயன் மைந்தன் மகன் மைந்தன் என்றதனுல் வழி கூறியவாறு. இலங்காபுரியாளும் மன்னவன் என்பதால் செல்வத் தோடு பதி கூறியவாறு. தசக்கிரீவன் என்பதால் பெயர் கூறிய வாறு. மறைகளோராயிரம் யான் வல்லேன் என்றதனுல் கல்வி நலம் கூறியவாறு. மறைகள் என்பது நூல்கள் என்னும் பொருளவாதலின் ஆயிரம் என்பது முரணுமாறில்லை: 'ஆயிர மறைப் பொருளுணர்ந்தறிவமைந்தாய் (யுத்த — இராவணன் மந்திரப் -48) எனக் கும்பகருணன் கூறியுள்ளதும் இங்கு நினைய லாம். வழியும் பதியும் பெயரும் நலமும் என்ற வினு முறைப்படி விடையும் அமைந்துள்ள அழகு காணத்தக்கது. (சஉ)

### இராவணனுக்கு மண்டோதரியை மணம் செய்வித்தல்

246. திண்டடந்தோட் டசக்கிரிவ னிவைசெப்பச்
சேயிழையை வளர்த்து வைத்துக்
கொண்டிருந்த பயன்பெற்றே னெனமகிழ்ந்து
குண்டிகைநீ ருதகஞ் செய்ய
எண்டிசையும் போற்றுதிற லிராவணன்தா
னிகலரக்க ரெவரும் போற்ற
வண்டமருங் குழன்மண்டோ தரியைமணஞ்
செய்ததற்பின் மகிழ்ந்து மாமன்.

திண்தடந்தோள் தசக்கிரிவன் இவைசெப்ப,
'சேயிழையை வளர்த்து வைத்துக்
கொண்டிருந்த பயன் பெற்றேன்' எனமகிழ்ந்து
குண்டிகைநீர் உதகம் செய்ய,
எண்திசையும் போற்றுதிறல் இராவணன்தான்
இகல்அரக்கர் எவரும் போற்ற
வண்டு அமரும் குழல் மண்டோதரியை மணம்
செய்தத்தற்பின் மகிழ்ந்து மாமன்.

**பொ :** திண்ணிய பெரிய தோள்களையுடைய இராவணன் இவற்றைச் சொல்ல, (கேட்டமயன்) 'செம்மையான அணிகலன் அணிந்த மண்டோதரியை வளர்த்து வைத்துக் கொண்டிருந்த தனலாய பயனைப் பெற்றுவிட்டேன்' என மகிழ்ந்து தன் கமண்டலத்து நீரைக்கொண்டு தாரை வார்த்துக் கொடுக்க, எட்டுத் திசையும் போற்றுதற்குரிய திறமைமிக்க இராவணன், வலிமை மிக்க அரக்கர் எவரும் போற்ற, வண்டுகள் அமரும் கூந்தலை யுடைய மண்டோதரியை மணம் செய்தபின், மகிழ்ந்து மாமன்.

**கு :** குளகம். சேயிழை என்பது பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; மண்டோதரியை உணர்த்தியது. வளர்த்து வைத்துக்கொண்டிருந்த உழைப்பிற்குப் பயன் கிடைத்து விட்டது என்றது, குலமும், செல்வமும் கல்வியும் அழகும் ஆகிய நான்கும் ஒருங்கே அமையப்பெற்ற கணவனுக்கு மணம் செய்விக்கும் வாய்ப்புக் கிடைக்கப் பெற்ற மகிழ்ச்சியால் சொல்லியது. குண்டிகை—கமண்டலம். உதகம் செய்தல் என்பது இங்குத் தாரை வார்த்துக் கொடுத்தலை உணர்த்தியது மண்டோதரியை வண்டமருங்குழல் என்ற அடையால் சிறப்பித்தது அப்பெயர்க்கும் அவள் குழலுக்குமுள்ள இயைபைக் காட்டுவதாக உள்ளது 'வண்டமரோதி மடந்தை பேணின, பண்டையிராவணன் பாடி யுய்ந்தன' (8.3. ஞானசம்பந்தர் தேவாரம்) என்புழி வண்டமரோதி என்ற பெயரால் மண்டோதரியைக் குறிப்பிட்டிருத்தல் இங்கு நினையத் தகும். தன் மகளைக் கொடுத்தவுடன் இராவணனுக்கு மயன் மாமன்ஆனமை யுணர்த்த அப்பெயரால் அவனைக் குறித்தார்.

(சுகூ)

### மயன் மருகனுக்கு வேல் கொடுத்தது

247. தாளார்தண் டாமரையோன் றனமேலே
விடினுமவன் உயிர்கொண் டன்றி
மீளாவே லுங்கொடுத்து மயன்போக
மெல்லியலை யுடனே கொண்டு

தோளாறு மேழிரண்டுஞ் சுடர்முடிக
ளீரைந்தும் பொலிந்து தோன்ற
வாளார்திண் படைசூழ மதிளிலங்கை
வளநகரின் மன்னன் புக்கான்.

தாளார் தண்தாமரை யோன் தன்மேலே
விடினும் அவன் உயிர் கொண்டு அன்றி
மீளா வேலும் கொடுத்து மயன்போக,
மெல்லியலை உடனே கொண்டு
தோள்ஆறும் ஏழிரண்டும் சுடர்முடிகள்
ஈரைந்தும் பொலிந்து தோன்ற
வாளார்திண் படைசூ மதிள்இலங்கை
வளநகரின் மன்னன் புக்கான்.

பொ: நாளத்தையுடைய குளிர்ந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் மேலே விட்டாலும் அவனுடைய உயிரைக் கொண்டல்லது மீளாத வேலினையும் கொடுத்துவிட்டு மயன் போக, மெல்லியலாகிய மண்டோதரியை உடனழைத்துக்கொண்டு இருபது தோள்களும் சுடர் வாய்ந்த பத்து முடிகளும் பொலிவுடன் தோன்ற வாள் ஏந்திய திண்ணிய சேனை தன்னைச் சூழ், மதில் சூழ்ந்த இலங்கை என்னும் வளநகரில் அந்நகர்க்கு மன்னனாகிய இராவணன் புகுந்தான்.

கு: தாள்–மலரின் நாளம்–தண்டு. இந்த வேலையே இராவணன் இலக்குவன்மேல் விட்டான் என்பதை 'மயன் கொடுத்தது மகளொடு, வயங்கனல் வேள்வி அயன் படைத்துளது ஆழியும் குலிசமும் அனையது' (வேலேற்றபடலம் 26) என்ற பாடல் அறிவித்தல் காணலாம். தாமரையோன் தன்மேலே விடினும் என்றது, கொடுத்த கடவுளையும் கொல்ல வல்லது என்று அதன் ஆற்றல் புலப்படுத்தியவாறு. வேலும் கொடுத்து என்புழி உம்மை, மண்டோதரியைக் கொடுத்ததோடன்றி என்று பொருள்படுதலின் இறந்தது தழுவிய எச்ச உம்மை. அகப்பொருட்குரிய பெண்ணைக் கொடுத்தவனே புறப்பொருளுக்குரிய போர்க்கருவியும் கொடுத்

தான் என்க. தோள், ஆறும் ஏழிரண்டும் என்றது, இருபது தோள்களைக் கூட்டிச் சொல்லியவாறு. இத்தொடர் 'அணிமுகங் களோராறும் ஈராறு கையும்' (சிலப். குன்றக்குரவை) என்ற அடியை நினைப்பிக்கின்றது. பத்துத் தலைகளிலும் பத்து மணிமுடி களை அணிந்திருத்தலின் சுடர் முடிகள் ஈரைந்தும் என்றார். கைகளும் தலைகளும் இராவணனுக்கு முன்னமே அமைந்திருந்தன வாயினும் அவை பொலிவு பெற்று விளங்கியது மண்டோதரியை மணந்தபின்னரே என்பது தோன்ற 'பொலிந்து தோன்ற' என்றார். வேட்டைமேல் வந்தவனுக்கு மண்டோதரியை வேட்டுச் செல்லும் பேறு கிடைத்தமையால் இங்ஙனம் பொலிவொடு சென்றான் என்க. வாளார் திண்படை என்றது, இராவணனோடு வேட்டைக்குச் சென்ற வீரர்களை; மயன் மகளை மணந்த இராவணன், சேனை சூழ இலங்கைபுகுதல் மன்னன் பட்டினப் பிரவேசம் செய்வதாக அமைந்தது என்ற குறிப்புத் தோன்ற 'வளநகரின் மன்னன் புக்கான்' என்றார். (சுஎ)

### கும்பகன்னன் வீடணன் திருமணம்

248. மன்னுவயி ரோசனன்றன் மகள்மகளாம்
வச்சிரசு வாலை யென்னும்
கன்னிதன்னை யணிவீரக் கழற்கும்ப
கன்னன்கைப் பிடித்த பின்பு
தன்னெதிரில் கந்திருவத் தலைவன்கை
தூடணன்றான் றந்த வேற்கண்
மின்னிடையாள் சரபைதனை விளங்குபுகழ்
வீடணன்றான் விதியின் வேட்டான்.

**மன்னுவயிரோசனன்தன் மகள் மகளாம்**
**வச்சிரசுவாலை என்னும்**
**கன்னிதன்னை அணிவீரக் கழல்கும்ப**
**கன்னன் கைப் பிடித்த பின்பு**

தன் எதிரில் கந்திருவத் தலைவன்
கைதூடணன் தான் தந்த வேற்கண்
மின் இடையாள் சரபைதனை விளங்குபுகழ்
வீடணன்தான் விதியின் வேட்டான்.

பொ: நிலைபெற்ற வயிரோசனன் தன் மகளுக்கு மகளாகிய வச்சிரசுவாலை என்னும் கன்னியை வீரக்கழல் அணிந்த கும்பகன்னன் கைப்பிடித்து மணந்தபின்பு, தனக்கு நிகர் இல்லாத கந்திருவத்தலைவன் ஆகிய கைதூடணன் பெற்ற வேல்போன்ற கண்ணையும் மின்னலைப்போன்ற இடையையும் உடையவளாகிய சரபைதனை விளங்கும் புகழையுடைய வீடணன் விதிப்படி மணந்து கொண்டான்.

கு: வச்சிரசுவாலையைக் கும்பகன்னனும் சரபையை வீடணனும் மணந்து கொண்டனர் என்றவாறு. வயிரோசனனுக்கு மகள் வயிற்றுப் பேத்தி வச்சிரசுவாலை. கைப்பிடித்தல் என்பது திருமணம் செய்தலையே யுணர்த்தியது கந்திருவர் தலைவன் கைதூடணன் பெற்ற சரபை என்பவள், வேல் போன்ற கண்ணையும் மின்னலைப் போன்ற இடையையும் உடைய அழகி என்று புலப்பட 'வேற்கண் மின்னிடை சரபை' எனச் சிறப்பித்தார். விளங்குபுகழ் வீடணன் என்றதால் உலகில் என்றும் நிலைத்து நிற்கும் நல்ல புகழையுடையவன் வீடணன் என்பது விளக்கி, இராவணன் கும்பகன்னன் புகழ்கள் அத்தகையனவன்றித் தாமே தம் வலிமையால் பரப்பிய பொய்ப்புகழ்கள் என்பது புலப்படுத்தியவாறு. வீரக்கழலணி கும்பகன்னன் என மாற்றுக. இனி, விதியின் வேட்டான் வீடணன் என்றமையால், கும்பகன்னன் திருமணம் கைப்பிடித்த அளவில் அமைந்தது என்ற குறிப்பும் கொள்ளலாம்.
(சூரு

மேகநாதன் பிறப்பு

249. இந்திரனுஞ் சசியும்போ லிலங்கிழைமண்
டோதரியுந் தானு மேய்ந்து
சிந்தையுவந் தனுபவித்துச் செல்கின்ற
காலத்துத் திருவி னுள்பால்

வந்துபிறந் திடுமைந்தன் மழையிடித்த
தெனவாய்விட் டழுத லாலவ்
வெந்திறன்மைந் தனைமேக நாதனெனப்
பேரிட்டா னிலங்கை வேந்தன்.

இந்திரனும் சசியும்போல் இலங்குஇழை
மண்டோதரியும் தானும் ஏய்ந்து
சிந்தை உவந்து அனுபவித்துச் செல்கின்ற
காலத்துத் திருவி னுள்பால்
வந்து பிறந்திடும் மைந்தன் மழை இடித்தது
என வாய்விட்டு அழுதலால்அவ்
வெந்திறல் மைந்தனை மேக நாதன் எனப்
பேரிட்டான் இலங்கை வேந்தன்

பொ : இலங்கை வேந்தனாகிய இராவணன், இந்திரனும் இந்திராணியும்போல் விளக்கமுள்ள அணிகலன்களை அணிந்த மண்டோதரியும் தானும் கலந்து மனம் மகிழ்ந்து அனுபவித்துச் செல்கின்ற காலத்தில், திருமகள் போன்ற மண்டோதரியினிடத்தில் வந்து மணிவயிறு வாய்த்துப் பிறந்திடும் மகன், மேகம் இடித்தாற்போல வாய்விட்டு அழுதமையால், அந்த விரும்பத்தக்க திறலையுடைய மைந்தனுக்கு மேகநாதன் எனப் பேரிட்டான்.

கு : சசி-இந்திராணி. அழகிலும் அன்பிலும் செல்வத்திலும் இராவணனுக்கும் மண்டோதரிக்கும் உவமையாகத் தக்கோர் இந்திரனும் இந்திராணியுமே யாதலின் அவரையே யுவமை கூறினர். ஏய்தல்-கலத்தல். பிறந்த அன்றே மேகத்தின் இடி போலப் பெருங்குரலெடுத்து அழுதமையால் மகனுக்கு மேகநாதன் எனக் காரணப்பெயர் கொடுத்தான் இராவணன் என்க. மேகம் போன்ற ஒலியையுடையவன் என்பது அப்பெயர்க்குப் பொருள். நாதம் ஒலி. மேகநாதத்தையுடையவன் மேகநாதன் என்றவாறு. கண்ணப்பருக்குப் பிள்ளைத் திருப்பெயர் திண்ணன் என்பதாகும். பிறந்தவுடன் அக்குழந்தையை எடுத்த பொழுது திண்ணென்று இருந்த காரணத்தால் அமைந்த பெயரே அது என்பது இங்கு நினையத்தகும்.

(கூகூ)

மேகநாதனைச் செவிலித்தாயர் வளர்த்தல்

250. பிறையெயிற்றுப் பிலப்பேழ்வாய்ப் பெருவரை
கருவுருவப் பிறழ்கட் டிண்டோள் [போற்
துறுகழற்காற் றசக்கிரிவன் றோன்றலையிம்
மூவுலகுஞ் சுடுவான் வேண்டி
உறுசுவைச்சோ றூன்முதலா வுணவென்னுஞ்
சிறுசுள்ளி யிட்டு மூட்டிச்
சிறுநெருப்பைப் பெருநெருப்பா யாக்குவார்
போல் வளர்த்தார் செவிலித் தாய்மார்.

பிறை எயிற்றுப் பிலப் பேழ்வாய்ப் பெருவரைபோல்
கருஉருவப் பிறழ்கண் திண்தோள்
துறுகழல்கால் தசக்கிரிவன் தோன்றலை இம்
மூவுலகும் சுடுவான் வேண்டி
உறுசுவைச் சோறு ஊன் முதலா உணவு என்னும்
சிறுசுள்ளி இட்டு மூட்டிச்
சிறுநெருப்பைப் பெருநெருப்பா யாக்குவார்
போல்வளர்த்தார் செவிலித் தாய்மார்

பொ : பிறைச்சந்திரனைப் போன்ற பற்களையும் பிலத்துவாரம் போன்று பிளந்த வாயினையும் பெரிய மலைபோன்ற கரிய உருவத்தினையும் சுழலுகின்ற கண்ணினையும் திண்ணிய தோளினையும் வலிய கழலணிந்த காலினையும் உடைய இராவணன் மகனை (மேகநாதனை) இந்த மூன்று உலகங்களையும் சுடுதற்காக, மிக்க சுவையையுடைய சோறு, கறி முதலாக உள்ள உணவு என்கின்ற சிறிய சுள்ளிகளையிட்டு மூட்டிச் சிறிதாக உள்ள நெருப்பைப் பெரிய நெருப்பாகச் செய்பவரைப்போலச் செவிலித்தாய்மார்கள் வளர்த்தார்கள்.

கு : பிறையெயிறு முதலியன தோன்றலுக்கு அடையாக வந்தன. தசக்கிரிவன் தோன்றல் மேகநாதன். சிறிய குழந்தை

வடிவத்தைச் சோறும் ஊனும் ஊட்டி வளர்க்கும் செவிலித்தாய் மாரின் செயல் எவ்வாறு உளது எனின்? சிறுசுள்ளிகளையிட்டு மூட்டிச் சிறுநெருப்பைப் பெரு நெருப்பாய் ஆக்குவார் போன்றுளது என்கின்றார். சிறியதைப் பெருநெருப்பாக வளர்ப்பதற்குக் காரணம் மூவுலகங்களையும் சுட வேண்டும் என்பதே ஆகும். உணவென்னும் சிறுசுள்ளி என்பது உருவகம். உணவென்னும் சிறுசுள்ளி என்று உருவகம் செய்தற்கேற்ப (ஊட்டியென்னாது) மூட்டி என்றார். வளர்ந்த பின்பு மேகநாதன் மூவுலகையும் வென்று தன்னடிப் படுத்த வேண்டி நல்ல உணவுகளை யூட்டி வளர்த்தார்கள் செவிலித்தாயர் என்றவாறு. சிறுநெருப்புப் போன்ற மேகநாதன் என்னும் குழந்தையைப் பெருநெருப்புப் போல் ஆற்றல் பெருகுமாறு ஊட்டி வளர்த்தார்கள் என்பார், சிறுநெருப்பைப் பெருநெருப்பாயாக்குவார்போல் வளர்த்தார் என்றார். (சுஎ)

அதிகாயன் அக்க குமாரன் முதலியோர் பிறப்பு

251. அன்னவன் பின்பிறந்தோ ரதிகாயன்
றிறலக்க குமாரன் வானோர்
பொன்னகரி பொடிபடுத்தித் தனித்தனியே
பூணிக்கும் போரில் வீரர்
மன்னியசீர் வச்சிரச் சுவாலைதன்
மணிவயிற்றுல் வரைத்தோட் கும்ப
கன்னனுக்குப் பிறந்தார்கள் காலனை
கும்ப னிகும்ப னென்போர். [யொக்கு

அன்னவன்தன் பின் பிறந்தோர் அதிகாயன்
திறல் அக்ககுமரன் வானோர்
பொன்நகரி பொடிபடுத்தித் தனித்தனியே
பூணிக்கும் போரில் வீரர்
மன்னியசீர் வச்சிரச் சுவாலைதன்
மணிவயிற்றில் வரைத்தோள் கும்ப
கன்னனுக்குப் பிறந்தோர்கள் காலனை ஒக்கும்
கும்பன் நிகும்பன் என்போர்.

பொ : அந்த மேகநாதனுக்குப் பின் பிறந்தோர்கள், வானோருடைய பொன்னகரத்தைப் பொடியாக்கித் தனித்தனியே பொருந்தும் போரில் வீரராய் விளங்கத்தக்கோராகிய அதிகாயன் திறமைமிக்க அக்ககுமாரன் என்போர் ஆவர்; நிலைபெற்ற சிறப்பினையுடைய வச்சிரச்சுவாலையின் மணிவயிற்றில் மலைபோன்ற தோளையுடைய கும்பகன்னனுக்குப் பிறத்தவர்கள் எமனைப் போன்ற ஆற்றலையுடைய கும்பன் நிகும்பன் என்போர் ஆவர்.

கு : மேகநாதனுக்குப் பின் பிறந்தவர்கள் அதிகாயன், அக்ககுமாரன் என்ற இருவர். கும்பகன்னனுக்கு வச்சிரச்சுவாலையின் வயிற்றில் பிறந்தவர்கள் கும்பன், நிகும்பன் என்ற இருவராவர். பூணித்தல்—பொருந்துதல். வானோர் பொன்னகரி பொடிபடுத்தித் தனித்தனியே பூணிக்கும் போரில் வீரராக விளங்குதற்குரிய அதிகாயன், அக்ககுமாரன் என்றியையும். (சூ-அ)

கும்பகன்னன் உறங்க மண்டபம் அமைக்கச் சொல்லுதல்

252. பனிகாய்செங் கதிரொளியிற் பன்மணிப்பூண்
பொலிந்திலங்கும் பால ரோங்கத்
தனியேநற் றவஞ்செய்து சாதித்தும்
பெற்றதுயி றன்னைச் சாரக்
குனிசாபத் தசமுகனைக் கும்பகன்னன்
றன்குறுகிக் கூறு வானிங்
கினிதாக வெனக்குறங்க வெழின்மணிமண்
டபஞ்சமைப்பி யென்னச் சொன்னான்.

பனிகாய் செங்கதிர் ஒளியின் பன்மணிப்பூண்
பொலிந்து இலங்கும் பாலர் ஓங்க,
தனியேநல் தவஞ்செய்து சாதித்தும்
பெற்ற துயில் தன்னைச் சார;

குனிசாபத் தசமுகனைக் கும்ப கன்னன்
தான் குறுகிக் கூறுவான் இங்கு
இனிதாக எனக்கு உறங்க எழில்மணி மண்டபம்
சமைப்பி என்னச் சொன்னான்.

பொ: பனியைக் காய்ந்துலர்த்துகின்ற இளஞாயிற்றின் செங்கதிர் ஒளிபோல பலமணிகள் பதித்துச் செய்த அணிகலனோடு பொலிந்து விளங்குகின்ற தன் பிள்ளைகள் வளராநிற்க, தான் தனியே யிருந்து நல்ல தவத்தைச் செய்து சாதித்து வரமாகப் பெற்றதுயில் தன்னைச் சார்ந்த அளவில் கும்பகன்னன், வளைந்த வில்லையுடைய இராவணனை நெருங்கிக் கூறுவான் 'இங்கு இனிதாக உறங்குதற்கு எனக்கு அழகிய மணிமண்டபம் ஒன்று செய்வி' என்று சொன்னான்.

கு: கும்பகன்னன் தன் பிள்ளைகள் இளவள ஞாயிற்றின் செங்கதிர் ஒளிபோல வளர்ச்சி பெருநிற்க, தான் தனியே நல்ல தவத்தைச் செய்து சாதித்தும் தேவர் சூழ்ச்சியால் பெற்ற தூக்கம் தன்னைச் சார்கின்றபோது இராவணனை அணுகித்தான் உறங்குதற்கு ஒரு மண்டபம் கட்டுமாறு சொன்னான் என்க. நித்தியத்துவம் வேண்டிப் பதினாயிரம் ஆண்டு தவஞ்செய்த கும்பகன்னன் கலைமகளின் சூழ்ச்சியால் நித்திரை வேண்டும் என்று தவறிச் சொல்ல நேர்ந்தமையும் அவ்வாறே வரம் பெற்றமையும் (34) முன்னர்க்கூறப்பட்டிருத்தல் நினையலாம். செங்கதிர் ஒளியின் ஓங்க என இயையும். பனிகாய் செங்கதிர் எனவே, உதயசூரியனின் செங்கதிர் என்பது புலனும். செங்கதிரொளியின் பன்மணிப் பூண் என இயைத்துப் பொருள் கொள்ளுதல் ஏற்குமாயினும் சிறவாது; என்னை? வளர்கின்ற பருவத்தே பகையை மாய்த்துக் கொண்டே வளர்ச்சி பெற்றுப் பின் முழுப்பகையும் அழிக்கின்ற அரக்கர் சிறுர்க்குத் தோன்றுகின்றபோதே பனிப்பகையைக் காய்ந்து உலர்த்திக் கொண்டே வானிலோங்கி முழுப் பனியையும் அழிக்கின்ற சூரியன் செங்கதிர், பொருந்திய உவமையாகிச் சிறப்புப் பொருளைத் தருதல் போலச் சிறவாமையின் என்பது- சூரியனுக்கு உவமேயமாகின்ற பாலர்க்கும் ஒளி கூற வேண்டிப் பன்மணிப்

பூண் பொலிந்திலங்கும் பாலர் என்றூர். இதனல் பாலர்க்குச் செயற்கை யொளி உண்மை கூறியவாறு. (சுசு)

புதுவதின் அமைத்த பொருவருமண்டபத்தில்
கும்பகன்னன் துயிலுதல்

253. தென்னிலங்கை மன்னவனுந் தெய்வத்தச்ச
னுக்குளவா றுரைப்பக் கேட்ட
அன்னவனு மகலமோ ரோசனையு
மதற்கிரட்டி நீளம் பெற்ற
பொன்னணிமண் டபமுப்பாற் புவனத்தி
னில்லதுசெய் தமைப்பக் கும்ப
கன்னனது கண்டுவந்து நெடுங்காலங்
கண்டுயிலா நின்ற காலே.

தென் இலங்கை மன்னவனும் தெய்வத்தச்சனுக்கு
உளவாறு உரைப்ப, கேட்ட
அன்னவனும், அகலம் ஓர் ஓசனையும்
அதற்கு இரட்டி நீளம் பெற்ற
பொன்அணி மண்டபம் முப்பால் புவனத்தின்
இல்லது செய்து அமைப்ப, கும்ப
கன்னன் அதுகண்டு உவந்து நெடுங்காலம்
கண்துயிலா நின்ற காலே.

பொ: தென்திசையில் உள்ள இலங்கைக்கு மன்னனுகிய இராவணனும் தெய்வத்தச்சனுக்கு உள்ளபடி சொல்ல, கேட்ட அத்தெய்வத் தச்சனும் அகலம் ஒரு யோசனையும் நீளம் இரண்டு யோசனையும் ஆகப் பெற்ற பொன்னுலியன்ற அழகிய மண்டபம், மூன்று உலகத்திலும் இல்லாததாகச் செய்து அமைக்க, கும்ப கன்னன் அம்மண்டபத்தைக் கண்டு மகிழ்ந்து நெடிது காலம் கண்ணுறங்கிக் கிடந்தபோது.

கு: குளகம். தெய்வத்தச்சன் என்றது விசுவகர்மாவை. யோசனை என்பது பத்து மைல் அளவு. எனவே கும்பகன்னன் தூங்கும் மண்டபம் பத்துமைல் அகலமும் இருபது மைல் நீளமும் கொண்டதாக அமைக்கப்பட்டது என்பது அறியலாம். இம் மண்டபம் தனக்குவமையில்லாதது என்பார், 'முப்பாற் புவனத்தி னில்லது' என்றார். விண்ணும் மண்ணும் பாதலமும் என்ற மூன்று உலகங்களிலும் இல்லாத புதுமையும் வனப்பும் பொருந்திய மண்டபம் என்க. மண்டபத்தின் அழகு, உறக்கம் வராதவற்கும் உறக்கம் வரச் செய்யும் தன்மையது என்றால் கும்பகன்னனுக்குச் சொல்ல வேண்டுமோ? எனவே, அம்மண்டபத்தைக் கண்டு உவந்து நெடுங்காலம் கண்டுயின்றான் என்க. தெய்வத்தச்சனுக்கு உளவாறு உரைத்தலாவது கும்பகன்னன் நன்கு உறங்குதற்கு ஏற்ற மண்டபம் அமைக்க வேண்டும் என்பதேயாம். இது மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சியாக இல்லாமையால் உளவாறு உரைப்ப எனக் குறிப்பால் கூறினான். கும்பகன்னன் கண்துயின்ற காலை இராவணன் செருக்கால் செய்த செயல்கள் வரையெடுத்த படலத்தில் கூறப்படுகிறது. (எய)

இராவணன் பிறப்புப் படலம் முற்றிற்று.

# 7. வரையெடுத்த படலம்

## முன்னுரை

இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த நிகழ்ச்சியைப் பற்றிக் கூறும் பகுதியாகலின் இது வரையெடுத்த படலம் எனப் பெயர் பெறுகின்றது. இப்படலத்தில் முதல் அறுபத்து மூன்று செய்யுட்களைப் பிரித்து, ''குபேரன்மேற் செல் படலம்'' எனப் பெயர் கொடுத்துள்ளன சில ஏடுகள். இவ்வேடுகளில் இராவணன் பிறப்புப் படலத்தையும் சேர்த்து 'வரையெடுத்த படலம்' எனப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

## படலப் பொருட் சுருக்கம்

இராவணன் பிரமன்பால் பெற்ற வரத்தினாலும் தன் இருபது தோள்களின் வலிமை பற்றி வந்த செருக்காலும் செய்யலாவது இது; செய்யத்தகாதது இது என்று அறியாதவனாய் இயக்கர், தேவர், பெருந்தவ முனிவர் ஆகியோர் அஞ்சி ஓடுமாறு துரத்தி விட்டு, நல்ல தண்மை வாய்ந்த அளகாபுரியிலுள்ள பொழில்களை யெல்லாம் துவைத்துப் பொடியாக்கிக் கொடிய யானைபோல் அச்சம் இல்லாது திரிகின்றான். அவன் முறைதவறிய செயல்களைக் கேள்விப்பட்டுக் குபேரன் ஒரு தூதுவனை இராவணனிடம் விடுகின்றான். இத்தூதுவன் சென்ற இராவணனை நோக்கி, ''நின் அண்ணன் குபேரன் சொன்ன வார்த்தையைக் கேட்பாயாக'' 'நம்மிலும் மூத்தவர்கள் சொல்லும் சொல், முன்பு இன்னாததாகத் தோன்றிப் பின்பு இனிமை பயக்கும்; அதை உளங்கொண்டியான் சொல்கின்றேன். தருமம் தவறாமல் பார்த்துச் செய்யத்தக்க வற்றைச் செய்வாயாக; பழி உண்டாதற்குரிய செயலைச் செய்யற்க! தேவர்களையும் அந்தணர்களையும் கோவித்துத் தீங்கு செய்யும் தீயவர்கள் எத்தகையராயினும் இப்பிறப்பிலேயே கெடுவார்கள்; மறுமையில், பாவம் செய்தவர்கள் புகுதற்குரிய நரகத்தில் பழி யோடும் புகுவார்கள்; அத்தகைய தீயவர்களோடு அறிவுடையோர் பகையைக் கொள்ள மாட்டார்கள். தேவர்கள் முதலியோர்உனக்குத் தோற்று உலகில் பற்றுக் கோடின்றித் தளர்ந்திருக்கும் தன்மையும்

கேள்வியுற்றேன். மணம் பொருந்திய பொழிற்கண் நீ வந்ததும் அப்பொழிலைப் பொடியாக்கியதும் கண்களால் கண்டேன். தகுதி யுடையவனே! நீ எனக்குத் தம்பி என்கின்ற உறவுடையவன் என்பது உண்மையானால் இத்தன்மையான தீங்குகளைச் செய்யா திருப்பாயாக!

இமய மலையில் எழில் மிக்க சிகரத்திலிருந்து ஐந்து முகங்களை யுடைய ஈசனை நோக்கியான் தவஞ்செய்கின்றபோது சிவபிரானோடு உமையம்மை வரக்கண்டு, இந்த உத்தமி யாரோ? எனக் கவனிக் கின்றபோது இவ்வுமையம்மை அருவருத்து என்னைத் தீயெழுமாறு விழித்துப் பார்க்க, உமையம்மையை ஓர்ந்து பார்த்த எனது இடக் கண் வெந்து நீறாய்த் தரையில் வீழ, யான் வேர்த்து நடுங்கி அங்கு இருக்கவும் அஞ்சி வேறோரிடம் சேர்ந்து மீண்டும் புலன் களையடக்கித் தவம் புரிந்தேன். மேற்கொள்ளற்கரிய பெரிய விரதத் தில் நின்று இருநூறு ஆண்டுகள் வரையில் செய்தற்குரியனவாய பூசைகளை ஒருநாள் போல எல்லா நாட்களும் விருப்பத்துடன் செய்து முடிக்கச், சிவபிரான் என் கண் முன் தோன்றி, அன்போடு என்னை நோக்கி, 'தவத்தினில் நின்னை ஒப்பவர் நீயலாதில்லை. உவமை வேண்டுமாயின் உன்னை யொப்பவர் கடவுளாக இருக் கின்ற யான் அலால் ஒருவருமில்லை ஆதலால், உன்னை உயர்ந்த தோழனாகக் கொள்ள விரும்புகின்றேன்; நீயும் அதை ஏற்றுக் கொள்வாயாக! உமை மங்கை கோபிக்க நேர்ந்த நின் இடக் கண்ணும் பொன்னின் விளக்கமுள்ள நிறத்தினையுடையதாய் நீ பெறுவாயாக! என்று கூறிச் சிவபிரான் இவற்றைச் செய்தான்; இது என் இயல்பாகும்.

இராவண! இந்திரன் முதலாக உள்ள தேவர்களும் தவத்தால் சிவபிரானை ஒத்த முனிவர்களும் நின் வலிமைக்கு எதிர்நிற்கக் கூசி ஓடினவர்கள். அவர்கள் பின்பு நாள்தோறும் ஒன்று கூடி யிருந்து உனக்கு அழிவு வருதற்குரிய வழியை எண்ணுவார்கள். இதனை நினைத்துப்பார்த்துத் தீமை செய்தலை விலக்குதல் நல்லது'' எனக் குபேரன் கூறியதைத் தூதுவன் கூற, அதைக் கேட்டதும் இராவணன் சினந்து வெப்பமாகப் பெருமூச்சு விட்டுக் கையோடு கை சேர்த்துத் தட்டிக் கண்கள் கனலைக் கக்க முன்பு பொதுவாகப்

பார்த்துப் பின்பு பக்கத்தில் உள்ளவர் முகத்தைப் பார்த்து இரக்கம் இல்லாதவனாய் அவர்களுக்கு இவற்றைச் சொல்கின்றான்- ''ஒரு குற்றமும் அற்று உலகுக்கு ஆதாரமாக இருக்கிற சிவ பிரானை ஒப்பவன் அளகாபுரியில் உள்ள அந்தக் குபேரனும்! அதற்கு மேலும் அந்தச் சிவபிரானுக்குத் தோழனும்! அப் பெருமைகளையெல்லாம் மூவுலகுக்கும் தலைவனாகிய என் முன் வந்து பேசிய தூதுவனார் பெறும் பரிசுகள் இவை; என்று கூறிக் கொண்டு தன் கைவாளை வீசுகின்றான் தூதுவன் இரு துண்டங் களாகத் தரையில் வீழ்கின்றான்.

இத்தன்மையான கோபத்தையுடைய இராவணன், 'முதலில் நான் சென்று அளகாபுரியிலுள்ள அந்தக் குபேரனைத் தாக்கி என் மனத்து எழுந்த கோபத்தைத் தீர்த்துக்கொண்டு வந்த பின்னர் தான் மற்றைச் செயல்களைச் செய்வேன்; ஆகவே, என் பெரிய சேனை புறப்படுவதாக' என்று சொன்ன அளவில், கடல் சினந்து எழுந்தாற் போல இராவணன் சேனை குபேரனை நோக்கி எழுகின்றது.

பொன்னாலியன்றதாய் ஒலிக்கின்ற வீரக்கழலினைக் கட்டிய காலையுடையவர்களும், கரிய வட்டத்தை ஒத்த பெரிய உடம்பை உடையவர்களும், விளக்கமுடைய வீரபட்டம் கட்டிய நெற்றியை யுடையவர்களும், பருத்த திண்ணிய தோள்களையுடையவர்களும் பரந்த மார்பில் இட்ட பொற் கவசத்தினையுடையவர்களும் ஆகிய இராக்கதர்கள் போர்க்கு எழுகின்றார்கள். தேர்கள் யானைகளை நெருக்கிடவும், யானைகள் குதிரைப்படையை நெருக்கிடவும், குதிரை கள், காலாள் வீரரை நெருக்கிடவும் வீரர்கள் தங்களுக்குள் நெருக்கிக்கொண்டு பெயர்ந்து செல்ல வழிபெறாதவர்களாய் வருந்து கின்றனர்.

வலிமை மிக்க இராவணன் சேனை எழுவதால் உளதாகிய துகள், மேலுள்ள ஏழு உலகங்களையும் கடந்து சென்றுபின் மீண்டு இந்த உலகத்திலுள்ள கடல்கள் எல்லாவற்றையும் சேருக்கித் தூர்த்து விடுகின்றன. உலகத்தைச் சூழ்ந்து காவல் புரியும் திசை யானைகளின் துதிக்கைத் துளைகளையும் அடைத்து விடுகின்றன. அவ்வாறு சேனை முன்சென்று அளகாபுரியை நெருங்கா நிற்க,

அரக்கர் கோனுகிய இராவணன், பெரிய நிதிபதியாகிய குபேரன் மேல் கறுவுதல் கொண்ட மனத்தனுய், பொன்னுல் இயன்ற நீண்ட கழலைப் பொலிவு பொருந்தக் காலில் கட்டிக் கொண்டு, சிறந்த ஒளிமிக்க மணிகளை வைத்திழைத்த பல தலைப்புகளையுடைய கச்சினை இடையில் கட்டிக் கொண்டு, வேலினைப்போன்ற விழியை யுடைய பெண்டிர் தம் குவிந்த நகில்கள் அழுக்கிய குழியும், பார்ப்பதில் ஆர்வத்தை விடாத அப்பெண்டிர்தம் கண்களும் நெருங்கியிருக்கின்ற சிறப்பினையுடைய வட்டமான மார்பில் கவசத்தையும் சேர்த்தணிந்து கொண்டு, வீரப்பட்டங்களை நெற்றி தோறும் விளங்கக் கட்டிக் கொண்டு, தன் கருத்திற்கேற்ப உடன் துடித்தெழும் படைக்கலத்தையுடையவனுகிய இராவணன், மண் ணுலகம் கீழ் அழுந்தவும் பூமியைத்தாங்கும் ஆதிசேடன் உடம்பு நடுங்கிப் படம் துடித்திடவும் அளகாபுரிக் கரசனுசிய குபேரனுக்கு இடம் துடித்திடவும் தேரில் ஏறுகின்ருன்,

மாயையில் வல்ல மகோதரனும் பிரகத்தனும் சுகசாரணரும் புகைக் கண்ணனும் மாரீசனும் ஆகிய அறுவர் தன்னைச் சூழ்ந்து வர அளகை நோக்கிச் செல்கின்ருன். முன் சென்ற சேனை அளகாபுரியைத்தாக்க, அங்கு நின்ற காவலர் குபேரனிடம் சென்று, "நீசனுகிய இராவணன் நம்மேல் பகைத்து வந்து நமது அழகிய நகர்ப்புறத்தில் சேனையோடு தங்கியுள்ளான்" என்று சொல்லக் குபேரன் தன்பக்கத்துள்ளவர்களை நோக்கி "அறிவு இல்லாதவற்கு அறிய வேண்டிய அரிய கருத்துக்களைச் சொல்லியவர் தாமே அழிவினையடைவார்கள்' என்னும் நூல்முடியை இன்று நம்மிடத்தே காட்சியளவையால் கண்டோம். இராவணனுக்கு உறுதிபயக்கும் காரியங்களைச் சொல்லி விட்டோம்; அது கேட்டு மனம் குழம்பி எனக்கு எதிராகப் போர் செய்ய வந்திருக்கிருன் இராவணன்." என்று குறிப்பால் வாயை மடித்துக் கொண்டு நெருப்பெனக் கண் சிவக்க விழித்துப் பார்த்து. "அரக்கர் தலைவனுன இராவணன் தன் வெற்றியால் வந்த வீரமும் அவன் தவத்தால் பெற்ற வரங் களும் அழிந்து படும் தன்மையை இன்று தேவர்கள் காண்பார் களாக" என்று சொல்லிக் கொண்டே எழுந்து, 'பெரிய குதிரை கள் பூட்டிய தேர்கள் நிறைந்த சேனை முன்பு புறப்பட்டுப் போவ தாகப் போர்க்கு' என்று குபேரன் சொல்கின்ருன்.

அளகாபுரிக்கு அரசனாகிய குபேரன் தன் அமைச்சரிடம் 'அரக்கரோடு போர்' என்று சொன்ன வாசகத்தைக் கேட்ட அளவில், அலைகள் நிறைந்த கடல் ஊழியிறுதியில் சீறியெழுந்த தன்மைபோல அவன் சேனை ஆரவாரித்துப் போர்க்கு எழுகின்றது. பெரிய மேகங்கள் இடி முழக்கம் செய்தன என்னும்படி பேரிகையும் பம்பையும் பெரிய தம்பட்டமும் உடுக்கையும் காளமும் ஊது கொம்பும் சங்கும் முழங்குகின்றன. வீரர்கள் வந்து அணிவகுப்பாகிய வீதியுள் நெருங்குகின்றார்கள். வீரர்களின் கால்களோடு கால்கள் தடுமாறிப் போரிட்டன: அவர்தம் உயர்ந்த தோள்களோடு தோள்கள் நெருங்கிப் போர் செய்தன; அவர்தம் வாள்களோடு வாள்கள் கலந்து போரிட்டன; அவர்கள் தேரில் உயர்த்திக் கட்டியிருந்த கொடிகள் விண்ணில் திரியும் கோள்களோடு சேர்ந்து பின்னிக் கொண்டன.

யானையும் தேரும் குதிரையும் காலாளுமாய் நிறைந்துள்ள அளவற்ற தன் சேனை சூழவும், நெருங்கிய கூந்தலையும் தேன் போன்று இனியசொல்லினையும் மான் நோக்கினையொத்த கண்ணினையும் உடைய மங்கையர் வாழ்த்துச் சொல்லவும், தானம் செய்யும் ஒழுக்கம் உடையவனாய்க் குபேரன் போர்க்களத்திற்குப் புறப்படுகின்றான். அலைகளுடைய பெரிய கடல்மேல் மற்றொரு கடல் சென்றது போல அரக்கர் சேனையோடும் அளகாபுரிக்குரிய குபேரனது சேனை ஆரவாரித்து நெருங்கி எதிர்க்க, கண் இமைத்தல் இல்லாத தேவர்கள் அச்சம் கொள்ளும்படி போர் பெரிதாக விளைகின்றது. இருதிறத்துச் சேனையிலுமுள்ள தேர்களும் தேர்களும் எதிர்த்துத் தாக்கின. யானையும் யானையும் வெகுண்டு தாக்கின; குதிரையோடு குதிரை சென்று பொருந்தின. வீரரும் வீரரும் வெகுண்டு போர் செய்கின்றனர்.

வெற்றி மிக்க வீரர்கள் கொடிய படைக்கலங்களை விடுதலால் அறுபட்ட கால்களும் தலைகளுமாய் நெரிபட்டு மலைபோல உயர்ந்து தோன்றின. கைகள் முறிகின்றன, உடம்புகள் இரு துண்டம் ஆகின்றன. இறந்த வீரர்களின் உடம்பிலிருந்து வெளிப்பட்ட இரத்த வெள்ளம் கடலை அடைகின்றது. அப்போது அளகைக்குரிய சேனைகள் இறக்குமாறு அழித்த புகைக்கண்ணனும் மகோதரனும் முதலிய வீரர்கள் நெருப்புப் பொறி மண்ணில் எழுமாறு கோபிக்

கின்றூர்கள். வீரமிக்க அரக்கர்கள் இயக்கர்களைப் பின்னிட்டு ஓடுமாறு அடித்தலால் மழையோடுங்கூடிய பெரிய காற்றிலும், நாகம் நுழைந்த வழியிலும் அரக்கர் அஞ்சிப்புக விரும்புதற்குரிய கடுமையான போரினை ஏககண்டகன் என்னும் இயக்கன் ஆரவாரத்தோடு செய்கின்றது கண்டு, அவனோடு வலிமை மிக்க மாயைச் செயல் யாவையும் செய்யவல்ல மாரீசன் சென்று தாக்குதலும், அந்த மாரீசனது திண்ணிய வலிமை சாயுமாறு ஏககண்டகன் தன் கைத்தண்டினுல் அவனை மோதுகின்றுன்.

கதையினுல் அடிப்பட்டு உணர்வு மயங்கி வீழ்ந்த மாரீசனும் பின்பு தெளிந்து இயக்கர்களைச் சோர்ந்து ஓடும்படி துரத்திப் பின்பு அந்த ஏககண்டகனது சேனை மண்ணைத் தழுவிக் கீழ் விழும்படி தன் கதையைக் கொண்டு தாக்குகின்றுன். வெற்றி வேலினையுடைய இராவணன், வெகுண்டெழுந்து பகைவர்களின் படுகளமாகிய அம்மியில் வெற்றி பொருந்திய தண்டாயுதம் என்னும் குழவியினுல் அரைத்து அங்குப் பொருந்திய இயக்கர் சேனையை ஒரே குழம்பாகச் செய்கின்றுன். குபேரன் சேனை எல்லாவற்றையும் அழித்துத் தரையில் கிடக்கச் செய்துவிட்டுத் தனக்குத் தமராகவுள்ள தீமை மிக்க மகோதரனோடு ஏனை அரக்கரும் புடைசூழ இராவணன் சென்று, வானளாவியுள்ள அளகாபுரியின் மதில்வாயிலைத் தாக்குகின்றுன்.

விண்ணில் நிமிர்ந்து மேகங்கள் தவழ்கின்ற வாயிலின்கண் உள்ளவனும் மேலே உயர்ந்து எழுந்த உடம்பையுடையவனும் ஆகிய சூரியபானு என்கின்ற பெரியவன் தான் காக்கும் வாயிலில் வந்து முட்டிய இராவணனைப் பார்த்து 'ஏ பாதகனே! நீ நில்' என்று அவன் எதிரில் வந்து போர் செய்கின்றுன். தோரண கம்பத்தை இரண்டு கைகளாலும் நிலம் குலுங்குமாறு பிடுங்கி இராவணன் மேல், மலைமேல் இடி வீழ்ந்தாற்போல வீசி எறிகின்றுன். எறிந்தபோதும் இலங்கைவேந்தன் கலங்காமல் நிற்கின்றுன். சூரியபானு எறிந்த அத்தோரண கம்பத்தையே கொண்டு இராவணன், நிலைபெற்ற பெரிய வலிமையையுடைய அவ்வாயிலோனை உடம்பு உருத்தெரியாதபடி சிதைய மோதுகின்றுன். சூரியபானு இராவணனுல் இறந்து விழுந்தமையால்

குபேரன் காணும்படி அவன் கண்ணெதிரே அவன் இயக்கர் சேனை கை கடந்து பின்னிட்டு ஓடிட, அதுகண்டு சேனைசூழ வந்த மாணுபத்திரன் என்பவன் இராவணனை அவ்வாயிலில் நுழையாதபடி விலக்குகின்றான். அவ்வாறு விலக்கி நிறுத்திய மாணுபத்திரன் கொடிய அரக்கரை கலங்கிப் புறங்காட்டி ஓடுமாறும் போர்க்களத்தில் படுமாறும் கொல்லாநிற்க, வலக்கையில் கொண்ட வாளினையுடைய மகோதரன் முதலியோர் சினங் கொண்டெழுந்த சிங்கம் என்னும்படி வந்து தாக்குகின்றார்கள்.

தாக்கித் தம்மேல் வரும் சேனையைச் சரிந்திடுமாறு தள்ளி ஆயிரம் ஆயிரமாகக் கொன்று குவித்து ஆரவாரம் செய்ய, அந்தச் சேனையைக் காக்கும் மாணுபத்திரன் கண்டு கண்களில் எரி கக்குகின்றான். பின்பு நம் வீரம் நன்று நன்று என்று சொல்லிச் சிரித்துக்கொண்டு, முன்னேறி வருகின்ற எமனைப் போன்ற கொடியவர்களில் கொடிய புகைக் கண்ணனைக் கண்டு சென்று தேவர்களும் திகைக்குமாறு அவனைத் தாக்குகின்றான். அவ்வாறு தாக்குகின்ற கொடிய போரில் வல்ல மாணுபத்திரனும் புகைக் கண்ணனும் ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டு கண்களில் நெருப்புப் பொறி பறக்கப் பார்த்துப் போர்முறையில் ஒரு குற்றமும் இல்லாமல் போர் செய்கின்ற பொழுது, வரிசையாகக் கோக்கப் பெற்ற ஒளிமிக்க மணிகளையுடைய வாகுவாலயம் அணிந்த தோள்களாகிய தூண்களையுடைய புகைக்கண்ணன், மாணு பத்திரனது மலை போன்ற மார்பில் வலிமையுடைய இரும்பு உலக்கையால் தாக்குகின்றான்.

அவன் அவ்வாறு தாக்கிடவும் மானுபத்திரன் நிலை கலங்காமல் அந்த அரக்கனுடைய தலை நெரிந்திடும்படி தண்டினால் அடித்த வுடன் புகைக் கண்ணன் மலைவீழ்வது போல மண்மேல் விழுகின்றான். புகைக்கண்ணன் இறந்து விழக்கண்ட இராவணன் கையில் பற்றிய தண்டினையுடையனாய்ச் சென்று மாணுபத்திரன் முன் நிற்க, மாணுபத்திரனும் போர்த் தொழிலில் நின்று நீங்காத வனாய் வந்து அவனோடு போர் செய்கின்றான். இராவணனும் மாணுபத்திரனும் சினமிக்குச் செய்கின்ற போரில் இராவணனது உடம்பில் அழுந்துமாறும் அவன் பத்து முடிகள் பறிந்திடுமாறும் மாணுபத்திரன் கொடிய தண்டாயுதத்தால் மோதுகின்றான்.

இராவணன் தனது முடி பிளந்து விட்டமையால் தரிக்காத வனாய், மேகத்தில் உண்டாகும் இடி போலக் கதறிக் கொண்டு கொடுமை மிக்க மனத்தையுடையவனாய்க் கோவித்து அம்மாணு பத்திரன் மேல் வீழ்ந்து தாக்க, மாணுபத்திரன் புலிக்குத் தோற் ேறாடும் ஆடு போல இராவணனுக்குத் தோற்று ஓடுகின்ருன். போரில் ஈடுபட்ட இயக்கர்கள் தோற்றோடித் தம் நாட்டையே விட்டுச் சென்றனராய் நல்ல நிலையிலிருந்த மரக்கிளைபை விடுத்த குரங்குகள் போல யாவரும் ஒன்று கூடிக் காட்டினை விடுத்துக் கிட்டுதற்கரிய மலைக் குகைகளில் நுழைகின்றனர். தன் சேனை கெட்டோட அளகாபுரிக்கு அரசனாகிய குபேரன், வாட்போரில் மாறுபட்டு எதிர்ப்போர் இல்லாத இராவணன் முன்பு சென்று, ஏ அறிவிலியே! முன்பு உனக்கு நான் சொன்ன உறுதி மொழி கள் பின்பு எனக்கே பெரும் பகையாகிவிட்டன. கொலையை நினைப்பவர் மனத்தில் அறம் பொருந்துமோ? உனக்கு இனிமேல் என்ன சொல்வது? ஆயினும் கேட்பாயாக!

"தந்தையையும் தாயையும் அண்ணனையும் குருவையும் அந்தணரையும் கோவித்து வருத்தும் அறிவிலாதவர்கள் இந்த உலகத்தில் பெரிய பழியையெய்தி, மேல் மறுமையுலகத்தில் பொறுத்தற்கு அரிய நரகத்தை அடைவார்கள்" என்று சொன்ன நீதி மொழிகள், சுவரிடை வீசிய பந்துபோல அந்த இராவணன் உள்ளத்தில் நுழையாது போகவே தனக்கு நிகரில்லாதவனாகிய குபேரன் தண்டினை எடுக்கின்ருன். இராவணனைத் தாக்குகின்ருன். அவன் தாக்கவும் இராவணன் உடம்பு நடுங்காதவனாய், இவ னுடைய ஆண்மையை இன்று காணலாம் என்று எண்ணி மனங் கொதித்து மலை நடந்து சென்ருற்போலச் சென்று நெருங்கிக் குபேரன் மேல் விழுந்து தாக்க அவ்விரு வீரர்களுக்குள் கொடிய போர் விளைகின்றது.

கோபம் பெருகிய வாலிசுக்கிரீவரும், மனங்கொதித்து எழுந்த சுந்த உபசுந்தரும் போல் இராவணனும் குபேரனும் சாரிகை திரிந்து நெருங்குகின்ற பாவமும் அறமும் போலப் பகைத்துக் கொண்டுவந்து போர் செய்கின்றனர். சித்தர்களும் இயக்கர்களும் தேசம் நாசமானது என்று அஞ்சவும், இந்திரன் முதலிய தேவர்

நடுங்கவும் போர் செய்கின்ற இராவணன்மேல் குபேரன் அக்கினி யத்திரத்தை வீசுகின்ருன். அதை இராவணன் வருணுத்திரத்தால் விலக்கி விடுகின்ருன். பின்பு இராவணன் இவ்விடத்தில் மாயை ஒன்று செய்வது பொருந்தும் என்று நினைந்து மாயையால் குபேரன் உள்ளத்தை மயக்கி விட்டு அவன் தலை மீது அடிக்கின்ருன். குபேரன் உடல் தளர்ந்து உயிர் சோர்ந்து வீழ்கின்ருன். அது கண்டு அவன் சேனை அங்கு நின்றும் அகல்கின்றது.

இராவணன், குபேரனுடைய அளகாபுரியில் புகுந்து அங்கிருந்த செல்வத்தையெல்லாம் கவர்ந்து கொண்டு, பிரமன் கொடுத்த புட்பக விமானத்தையும் கைப்பற்றிக் கொண்டு, அவ்விமானத்தில் வெற்றிபெற்ற மகிழ்ச்சியோடு போகின்ருன். வழியில் கயிலை மலைமேல் செல்லாமல் புட்பகம் விண்ணில் நிற்கின்றது. அவ்வாறு நிற்றற்குரிய காரணம் புலப்படாமல் அமைச்சர்களை வினவுகின்ருன். அவர்களும் சிந்தனையில் ஆழ்ந்து, அருந்தவம் முயன்று செய்து குபேரன் பிரமனிடம் பெற்ற புட்பகம் அக்குபேரனை நெடுநாள் பிரியாமல் இருந்து பிரிந்தமையால் சிந்தை வருந்திச் செயல் படாமல் நின்றதுவோ? என்று தெளிவு பிறவாமல் இருக்கும்போது, நந்தி அங்கு வந்து, இராவணனை நோக்கி, 'நெருங்கிய வலியை யுடையவனே! இம்மலை சிவபிரானும் திருமாலும் பிரமனும் தம் தேவியரோடு மகிழ்ந்து வீற்றிருக்கும் இடமாதலின் இந்தத் தூய்மை யான மலைமேல் எந்தத்தேரும் வருவதில்லை.

பூமியில் உள்ள உயிர்கட்கு அழிவினைச் செய்துவந்த பகைவர்கள் வாழ்ந்து வந்த முப்புரத்தை எரித்த சிவபிரான் தங்கியுள்ள கயிலை மலைக்குமேல் உன் புட்பக விமானம் இயங்குதல் அரிது. இங்கு இறைவன் திருவடிப் பெருமைக்கு அழிவினைச் செய்யாதே. செய்தால் அப்பிரானிடத்து அகப்பட்டுக் கொள்ளுதல் நிச்சயமாகும். எனவே, புட்பகத்தை இவ்விடத்தை விட்டு அகற்றுவாயாக!'' என இடித்துச் சொல்ல, இரக்கமற்ற நெஞ்சினனுகிய இராவணன், பகைவர் மார்பினைக் குடைந்து கொண்டு செல்கின்ற கொடிய அம்பு போன்ற கொடுஞ் சொற்கள் பலவற்றைச் சொல்லி, உயர் குணத்து நந்தியின் முகத்தை இகழ்ந்து பேச, நந்தி, கோப மிக்கவனுய், 'சிறிதும் இரக்கம் இல்லாதவனுய்க் குரங்கு முகம்

என்று என் முகத்தை இகழ்ந்து சொன்ன உனது இலங்கை மாநகரில் குரங்குகள் புகுந்து நின் குலத்துளோரை மிகுதியாகக் கொன்றிடுக' என்று சபிக்கின்றான்.

'புட்பகத்தின் இயக்கத்தைத் கண்டு அஞ்சிய பிறப்பில்லாத சிவபிரானின் தந்திரமிது' என்று கருதிய இராவணன், ஒரு பழிப்பும் இல்லாத மலைமேல் சிகரங்களால் எனது புட்பக விமானத்தைத் தடுத்து நிறுத்தும் கயிலைமலையை முறித்து விடுவேன்' என்று சொல்லிக் கொண்டு கயிலையின் சிகரத்தை விரைந்து எடுக்கின்றான். அதுகண்டு எழுமுனிவர்களும் தவமுனிவர்களும் யோகர்களும் தேவர்களும் பத்தர்களும் சித்தர்களும் அஞ்சிச் சிதறுண்டு ஓடுகின்றனர்.

நாட்டியம் புரிகின்ற அரம்பையர்கள் மனம் கலங்கி அலறு கின்றார்கள். பாடல் பாடுகின்ற தும்புருவும் நாரதரும் பயம் கொள் கின்றார்கள். ஊடியிருந்த உமையம்மை அவ்வூடலை மறந்து நடுக்கத்தோடு சிவனைந் தழுவிக் கொள்கின்றாள். அப்போது, வேதங்களையுணர்ந்த தவமுனிவர்களின் கலக்கத்தையும் இளங் கொடிபோன்ற உமையம்மையின் நடுக்கத்தையும் உள்ளத்தால் உணர்ந்து பிறையணிந்த சடையினனாகிய சிவபிரான் தன் திருவடிப் பெருவிரல் நுனியினால் நெறுக்கென அழுத்திட, அரக் கர்க்கு அரசனாகிய வஞ்சமனத்து இராவணன் தன் உடம்பு நோயினால் பதைபதைத்து அஞ்சிக் கதறுகின்றான். கரும்பு பிழியும் ஆலையில் கரும்பினை நுழைக்கின்றவர்கள் அமுக்கிய கரும்பினைப் போல இராவணனுடைய உடம்பாகிய மலை நெரிய, வாய்கள் பத்திலும் குருதிபொங்கிட ஆயிரம் ஆண்டுகள் வரையில் கயிலை மலையின்கீழ் அடங்கினனாய் முடங்கிக் கொண்டு வருந்தி வாய் விட்டு அலறுகின்றான்.

வானளாவிய வெள்ளி மலையின் கீழ்க் கிடந்து வருந்துகின்ற இராவணனை அவன் அமைச்சர்கள் உற்றுப் பார்த்து, "கொன்றை மாலையணிந்த சிவபிரானுடைய செவியில் சேருமாறு நின் கையினையே வீணையாகக் கொண்டு சாமவேதம் பாடுக" என்று இராவணனிடம் சொல்கின்றார்கள். அதுவே செய்யத்தக்க கருமம்

என்று இராவணனும் தன்தலைகளில் ஒன்றினை வெட்டி வீணை யாக்கிக் கைக்கிளை முதலாகிய இசைகள் ஏழினால் சொல்லுதற்கரிய சாமகீதத்தை அன்புடன் பாடத் தொடங்குகின்றான். அவன் மன முருகிப் பாடும் பாடலைக் கேட்டுச் சிவபிரான் மகிழ்ந்து அந்த இராவணனை அழைத்து, மூவுலகும் ஆள மூன்றரைகோடி வாழ் நாளும் எவ்வகை ஆயுதங்களையும் வெல்லத்தக்க சந்திரகாசம் என்னும் வாளும் கொடுக்கின்றார். வருத்தம் நீங்கி வரம் பெற்ற இராவணன் சிவனிடம் விடைபெற்றுக் கொண்டு போகின்றான் என்பது இப்படலப்பொருள்.

### ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. **வான்மீகத்தில் :** இராவணன் அளகாபுரியில் உள்ள எழில்மிக்க பொழில்களை யழித்ததை அறிந்த குபேரன் அவனுக்கு அறிவுரை கூற ஒரு தூதுவனை இலங்கைக்கு அனுப்புகிறான். அத் தூதுவன் முதலில் வீடணனைக் காண்கின்றான். வீடணன் முறைப் படி உபசரித்துக் குபேரனுடைய நலத்தை விசாரித்து அறிந்தபின் அவையிலமர்ந்துள்ள இராவணனைக் காண்கின்றான் என்றுளது. ஒட்டக்கூத்தர் இந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடவேயில்லை.

2. **வான்மீகத்தில் :** தூதுவனிடம் குபேரன் சொல்லியனுப்பிய செய்திகளில் ''நான், கேதாரம்'' என்கிற விரத்தை மேற்கொண்டு ஐம்பொறிகளை அடக்கிக் கொண்டு இமயமலைச் சாரலில் இருந் தேன். என்றுளது. ஒட்டக்கூத்தர் 'கேதாரவிரதம்' என விரதத்தின் பெயரைக் குறிப்பிடவில்லை. மேலும் குபேரன், தான் செய்த தவத்திற்கிரங்கிச் சிவபிரான் உமையோடு வெளிப்பட, உமையம்மையின் ஒப்பற்ற உருவத்தைப் பார்த்தபோது, அம்மை யின் தெய்வ ஒளியால் தன் இடது கண் புழுதியால் மறைபட்டது போல மண்ணின் நிறத்தை அடைந்து, பார்க்கும் சக்தியை இழந்து விட்டதைக் குறிப்பிடுவதாக உள்ளது.

ஒட்டக்கூத்தரின் உத்தரகாண்டத்தில் உமையைப் பார்த்த குபேரனின் இடது கண் வெந்து நீருகித்தரையில் விழுந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இவ்விடத்து வான்மீகத்தில் உள்ளதே இயற்கை யாகத் தோன்றுகின்றது.

கேதாரவிரதம் என்பதைச் சிவபிரானே ஏற்படுத்தி மேற்கொண்டு முடித்ததாக வான்மீகம் கூறுகின்றது; இவ்விரதத்தை மேற்கொண்டு அயராது முடித்த மற்ருெருவர் குபேரனே என்பதும், இவ்வாறு யாரும் மேற்கொள்ளவியலாத கேதாரவிரதத்தை மேற்கொண்டு முடித்த பெருமை காரணமாகவே சிவபிரான் குபேரனைத் தோழனுகக் கொண்டான் என்பதும், வான்மீகத்தில் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. ஒட்டக்கூத்தர் இந்த விளக்கம் தரவில்லை; இந்த விரதத்தை இருநூறு ஆண்டுகள் முயன்று முடித்ததாகக் கூத்தர் கூறுகின்ருர்.

**3.** இராவணன் குபேரனது தூதுவன் சொன்னதைக் கேட்டவுடன் பெருங் கோபங்கொண்டு, பேசும்போது "இக்குபேரன் எனக்கு மூத்தவன், அருமையானவன், மேற்கொண்டு வெல்லப்பட வேண்டியவனுக-போர் செய்ய வேண்டியவனுக-இருக்கமாட்டான்; என்று எண்ணியிருந்தேன்; அவன் சொல்லைக் கேட்டபின்பு அவன் செய்கைக்காகவே அந்த நான்கு திசைக்காவலர்களையும் எமனுலகத்திற்கு அனுப்பிவிடுகின்றேன்" என்று சொல்லிவிட்டுத் தூதுவனை வாளால் வெட்டி அவனுடம்பைக் கொடிய அரக்கர்களுக்கு உணவாகக் கொடுத்து விட்டான்: என்று வான்மீகம் கூறுகின்றது. ஆனல் ஒட்டக்கூத்தர் இவ்விளக்கங்களைச் சொல்லவில்லை.

**4. வான்மீகத்தில் :** குபேரனும் இராவணனும் போர் செய்த போது இராவணனது தண்டாயுதத்தால் தாக்குண்டு வீழ்ந்த குபேரனைச் 'சங்கநிதி பதுமநிதி முதலிய நிதிகட்குரிய அதிதேவதைகள் எடுத்துக் கொண்டு நந்தனம் என்கின்ற வனத்தில் படுக்கச் செய்து போர்த்தி, களைதீர்த்ததாகக் கூறப்பட்டுள்ளது. ஆனல் ஒட்டக்கூத்தர், இதனை மாற்றிக் குபேரன் சேனையில் உள்ளோர் அக் குபேரனை எடுத்துச் சென்றதாகச் சொல்கின்ருர். மேலும் இராவணன் வெற்றிக்கு அறிகுறியாகப் புட்பகவிமானத்தை மட்டுமே கைப்பற்றியதாக வான்மீகம் கூற, ஒட்டக்கூத்தர் அளகாபுரியில் புகுந்து அங்குள்ள சிறந்த செல்வங்களையெல்லாம் வாரிக்கொண்டு புட்பகத்தையும் கைப்பற்றிச் சென்றதாகக் கூறுகின்ருர்.

5. **வான்மீகத்தில் :** இராவணன் தன் புட்பக விமானம் கயிலை மலைமேல் செல்லாது நின்றது கண்டு சினந்து, இக்கயிலை மலையிலுள்ளவனது சூழ்ச்சியால்தான் புட்பகம் ஓடவில்லை என்று அம்மலையைக் பெயர்க்கக் கைகளை மலைக்கடியில் நுழைத்து அசைக்கின்றபோது, அம்மலையிலுள்ள மரங்களும் புலி முதலிய விலங்குகளும் அசைந்தன. சிவ கணங்களும் நடுங்கின. பார்வதி தேவியும் பயந்து நடுங்கினாள். அப்போது சிவபிரான் தன் கால் பெருவிரலால் விளையாட்டாக அழுத்தினார். மலையின் அடியில் வைக்கப்பட்டிருந்த இராவணன் கைகள் நசுக்குண்டன; அவ் வருத்தம் பொருது இராவணன் மூவுலகும் கேட்கும்படி அழுதான். அவன் அழுகை ஒலியைக் கேட்டுத் தேவர்களும் கலக்கமுற்றார்கள். இராவணனுடைய அமைச்சர்கள் அவ்வொலியை ஊழிக்கடையில் உண்டாகும் இடி முழக்கமோ என எண்ணலானார்கள். அந்த நிலையில் அமைச்சர்கள் இராவணனைப் பார்த்து "நீ சிவபிரானையே புகலிடமாகக் கருதி வணங்கித் தோத்திரம் செய்; அவனையன்றி இத்துன்பத்தைத் தீர்ப்பவரை யாம் கண்டிலேம். உன் தோத்திரத் தைக் கேட்டுக் கருணைக் கடலான சிவபிரான் மனம் குளிர்ந்து உனக்கு அருள்புரிவார்" என்று வேண்டிக் கொள்கின்றார்கள். அவர்கள் சொற்படி இராவணன் சாம கானத் தோத்திரங்களால் துதிக்கின்றான். அந்தத் துதி நீண்டகாலம் நடைபெறுகின்றது.

அதன்பிறகு சிவபிரான் மனமிரங்கி இராவணன் முன் தோன்றி அவன் கைகளை விடுவித்துத் தசானனனே! நின் வலிமையின் சிறப்பைக் கண்டு மகிழ்கின்றேன். மலையடியில் நசுங்கிய நின்னால் இடப்பட்ட கூச்சல் ஒப்புயர்வற்றது. மூவுலகத்திலும் ஒலித்தது. ஆதலால் உன்பெயர் இனி 'இராவணன்' என வழங்குவதாக' எனக் கூறி, 'நீ இனிப் புட்பகம் ஏறி விரும்பியபடி போகலாம்' என விடையளிக்கின்றார். அப்போது இராவணன் சிவபிரானை நோக்கி ஒரு வரம் வேண்டுகின்றான் பிரமனால் எனக்கு நீண்ட ஆயுள் கொடுக்கப் பட்டிருக்கின்றது. ஆயினும் மேலும் ஆயுளையும் ஒரு வாளினையும் கொடுத்தருள வேண்டும்' என் கின்றான். சிவபிரான் சிறிது யோசித்து அவன் விரும்பிய ஆயுளை யும் சந்திரகாசம் என்னும் வாளினையும் தந்தருளுகின்றார். மேலும் கூறுகின்றார் – இந்த வாள் நின்னால் அவமதிக்கப்பட்டால் என்னி

டமே வந்து சேர்ந்துவிடும்; இதற்கு ஐயமில்லை' என்று சொல்லி மறைகின்றார். இராவணன் இலங்கையை அடைந்து பிறரைத் துன்புறுத்திக் கொண்டு திரிகின்றான்'' என்றுள்ளது.

ஒட்டக்கூத்தர் கூறுவதுபோல் தன் கைகளைக் கொண்டு வீணையாக்கிச் சாமகானம் செய்தான் என்று கூறவில்லை; மலையடியில் இராவணன் உடம்பு நசுங்கியதாகச் சொல்லாமல் கைகள் மட்டுமே நசுங்கியதாகச் சொல்லியுள்ளார் வான்மீகி; கைகளைக் கொண்டு வீணை செய்து சாமகானம் பாடினான் இராவணன் என்பதை ஒட்டக்கூத்தர் தேவாரத்தில் கண்டு தம் நூலில் நுழைத்துச் சொல்லுகின்றார் என்றே கொள்ள வேண்டும். திருநாவுக்கரசர் தேவாரத்தில்,

கடுகிய தேர்செலாது கயிலாயமீது கருதேலுன் வீரமொழிநீ, முடுகுவதன்று தன்ம மென நின்று பாகன் மொழிவானை நன்று முனியா, விடுவிடு வென்று சென்று விரைவுற்றரக்கன் வரையுற் றெடுக்க முடிதோள், நெடுநெடு விற்றுவீழ விரலுற்ற பாத நினைவுற்ற தென்றன் மனனே' எனவும்,

**கங்கைநீர் சடையுள் வைக்கக் காண்டலு மங்கையூடத்**
**தென்கையான் தேர்கடாவிச் சென்றெடுத்தான் மலையை**
**முன்கையானரம்பு வெட்டி முன்னிருந்திசைகள் பாட**
**அங்கைவா ளருளினானூ ரணிமறைக் காடுதானே.** (4–34–10)

எனவும் கூறியிருத்தல் காணலாம். இவ்விரு பாசுரங்களிலும் இராவணன் முடியும் தோளும் இற்று வீழச் சிவபிரான் விரலால் அழுத்தியதும் இராவணன் தன் முன்கையால் நரம்பு வெட்டி வீணைசெய்து சாமகீதம் பாடியதும் கூறப்பட்டிருத்தல் காணலாம். வான்மீகத்தில் சொல்லப்படாத இக்கருத்துக்களைத் தேவாரத்தில் கண்டு தம் உத்தர காண்டத்தில் ஒட்டக்கூத்தர் கூறியுள்ளார் என்று கொள்ள வேண்டும்.

**6. வான்மீகத்தில்** இராவணன் நெடுங்காலம் கயிலைமலையின் கீழ் அகப்பட்டு அலறினான் என்று உள்ளது. அதனை ஒட்டக்கூத்தர் ஆயிரம் ஆண்டுகள் அவ்வாறு அலறினான் என்று தெளிவுபடுத்தி

யுள்ளார். மேலும் ஆயுள் நீடிக்கக் கோரிய இராவணனுக்கு அவன் விருப்பப்படி நீண்ட ஆயுளைக் கொடுத்தார் சிவபிரான் என்று வான்மீகி கூற, ஒட்டக்கூத்தர் முக்கோடி அரைக்கோடி வாணுள் கொடுத்ததாகக் கூறியுள்ளார். இந்தவரையறை வான்மீகத்தில் இல்லை.

## படலப்பொருள் சிறப்பு

### நீதிகள்

இராவணன் நல்லோரையெல்லாம் நலிவு செய்துவரும் தீச் செயலைக் கேள்வியுற்ற குபேரன், தன் தம்பி என்ற அன்பு நினைவால் இராவணனுக்குத் தூதுவன்வழிச் சிலநீதிகளைச் சொல்லி யனுப்புகின்றுன். அவை சிறப்பாக விளங்குகின்றன. சொல்லும் போது இனிதாகத் தோன்றும் சொற்கள் பின்பு தீயபயனைத் தருதலும், சொல்லும் போது முழுவதும் கடுக்காய் போன்று இன்னுதனவாய்ப் பின்பு நற்பயன் தருதலும் உண்டு என்பதைக் குபேரன் தெளிவுபடுத்தியுள்ளான். தான் சொல்லும் சொற்கள் இராவணனுக்கு இன்னுவாகத் தோன்றினுலும் அச் சொற்கேட்டு நடந்தால் பின்பு நற்பயன் நல்கும் என்பது அவன் கருத்து. இதை வற்புறுத்தவே உலகின்மேல் வைத்து,

**சொல்லும் போதற வினியவை சூழவு மிருந்து**
**சொல்லுவார் பெரிதாகச் சொற்பயன் இனுத;**
**சொல்லும் போதறக் கடுவதாய்ச் சொற்பயனினிதாய்ச்**
**சொல்லுவாரிலை சொன்ன செய்வார்களும் இல்லை. (3)**

என்று உளம் நொந்து கூறுகின்றுன். இக்கருத்து 'செவிகைப்பச் சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன் கவிகைக்கீழ்த் தங்கு மூலகு' (குறள்–389) என்ற குறளினைத் தெளிவுபடுத்துவதாக வுள்ளது. குபேரன் கூறிய கருத்துக்களில்,

**'அறம் வழுவாமல் பார்த்துச் செய்வ செய்;**
**பழிபடு காரியம் செய்யேல்'**

என்பது மிகச் சிறந்த கருத்தாகும். இக்கருத்தின் விரிவாகப் பல கூறுகின்றுன். அவற்றுள்

**தேவரந்தணர் தங்களைச் சீறிடும் தீயோர்**
**யாவ ராயினும் இம்மையில் கெடுவர், மேல் மறுமைப்**
**பாவ காரியர் புகுந்திடும் பழியொடும் புகுவார்**
**ஆவ செய்குவார் அவரொடும் பகைகொளார் அறிவோர்.**

இப்பாடலும் ஒன்று. இராவணன் தீய செயல்களைத் தடுப்பதற்கு இங்ஙனம் பொதுவகையாகக் கூறியிருப்பது பொருத்தமிக்கதாகும். முடிக்கும்போது இராவணனை நேரே இயைபு படுத்தி

**'வாசவன் முதலாகிய வானவர் தாமும்**
**ஈசனன்ன மாதவம்புரி யிருடிக ளெவரும்**
**கூசி நின்வலிக்கு ஓடினர் கூடினூர் உனக்கு**
**நாசம் எண்ணுவர் தசமுக! நாள்தொறும் இருந்து.''** (12)

என்றுகூறி, இனிவருங்காலத்தில் தேவர்களாலும் முனிவர்களாலும் நாசம் விளையும் என்பதை உரிமையோடு தெளிவுபடுத்துகின்றான். போர்க்களத்தில் இராவணனை நேரில் சந்தித்தபோது குபேரன் கூறும் நீதி மிகச் சிறப்புடையதாகும். 'தந்தை தாயரைத் தம்முனைச் சற்குரு, அந்தணாளரைச் சீறு மறிவிலோர், இந்தவையகத்திரும்பழி யெய்திமேல் அந்த வையத்தரு நரகெய்து வார்' (55) என்பது காணலாம்.

### கற்பனை

இராவணன் குபேரன்மேல் போர் தொடுக்கச் செல்லும்போது அவன் பெரும்படையெழுப்புகின்ற தூசி, ஏழுலகங்களையும் அடைந்து மீண்டு இவ்வுலகத்தில் உள்ள கடல்களையெல்லாம் சேருக்கித் தூர்த்துவிட்டது எனவும் திசையானைகளின் தும்பிக் கையிலுள்ள துளைகளையும் அடைத்துவிட்டது எனவும் கூறுவது (18) சுவைமிக்கதாகவுள்ளது.

### காதற்சுவை

இராவணன் தன் மார்பில் கவசம் அணிந்தான் என்பதைக் கூறவந்த புலவர் அந்த மார்பின் பெருமையை விளக்குகின்றார்.

**'கூர்மையிட்ட வேல்விழியினூர் குவிமுலைக் குறியும்**
**ஆர்வம் விட்டிலா ஆங்கவர் கண்களும் நெருங்கும்**
**சீர்கொள் வட்ட மார்பு'** (20)

என்று புகழ்கின்றார். புறத்திணைக்குரிய போர் மேற்செல்லும் இராவணன் அகத்திணையாகிய காதற்குரியவன் என்பதைக் காட்டு கின்றார். கூர்மை செய்யப்பட்ட வேல் போன்ற விழியினையுடைய அவன் பெண்டிர்தம் அணைப்பினால் அவன் மார்பில் தங்கிய குவிமுலைக் குறிகள் தோன்றுகின்றனவாம். அத்தகைய மார்பில் ஆர்வம் விட்டிலாத அப்பெண்டிர் கண்களும் நெருங்கிப் பதிந் துள்ளனவாம். போர்க்குப் புறப்படும் இராவணன் மார்பினை அவன் பெண்டிர் ஆர்வத்தோடு பார்க்கின்றார்கள் என்பதையே இங்ஙனம் கூறுகின்றார். எனவே அவன் மார்பில் மகளிர்தம் முலைக்கண்களும் முகக் கண்களும் நெருங்கியுள்ளன; அவற்றை மறைப்பவன்போலக் கவசத்தை யணிந்தான் இராவணன் என்பது நூலாசிரியரின் காதற் கற்பனையாகும்.

## உருவக அணி

இராவணன் குபேரன் சேனையோடு போர்செய்து அழிந்ததைக் கூறும்போது, பகைவர்களின் போர்க்களமாகிய அம்மியில் தண்டாயுதம் என்னும் குழவியால் போர்க்கு வந்த சேனையை அறைத்துக் குழம்பாக்கினான் என உருவக மாக்கிக் கூறியிருப்பது வீரச்சுவையை விளக்குவதாகும்.

'பற்ற லார்கள் படுகள அம்மியில்
கொற்ற மேவு தண்டு என்னுங் குழவியால்
வெற்றிவேல் இலங்கேசன் வெகுண்டு எழுந்து
உற்ற சேனை ஒரு குழம்பு ஆக்கினான்.' (37)

என்பது காண்க.

## உவமையணி

இராவணனை மாணுபத்திரன் தண்டாயுதத்தினால் தலையில் தாக்கத் தாங்காது இடியெனக் கதறிக்கொண்டு இராவணன் துரத்த, ஓடுகின்ற மாணுபத்திரன் நிலையை விளக்க,

அடுபுலிக்கு இடை ஆடென ஓடினான்

என உவமை கூறியுள்ளார். அடுபுலி போன்ற இராவணன் துரத்த ஓடும் மாணுபத்திரன் புலிக்குப் பயந்து ஓடும் ஆடு போன்று ஓடினுன் என்ற உவமம் இராவணன் வலிமையையும் மாணு பத்திரனின் எளிமையையும் நன்கு விளக்கும் உவமையாதல் காணலாம். போரில் ஈடுபட்ட இயக்கர்கள் தோற்றுப்போய்த் தம் நாட்டைவிட்டு ஓடி மலைக்குகைகளையடைந்த இழிநிலையை விளக்க,

'நன்னிலைக் கோடுவிட்ட குரங்கெனக்கூடியே
காடுவிட்டருங்கன் முழைநண்ணினுர்' (52)

என்று கூறி நமக்கு நகைச்சுவை யூட்டுகின்ருர் ஆசிரியர்.

## செய்யுளோசை

இராவணன் தன் வலிமைதோன்ற கயிலைமலையைக் கைகளால் பெயர்த்தெடுக்கும் வேகமும், அதனுல் கயிலைமலை அசைதலும், அதனையுணர்ந்த அரனுர் தம் கால் விரல் நுதியினுல் அழுத்தலும், இராவணன் கைகள் இருபதும் தலைபத்தும் நெரிதலுமாகிய நிகழ்ச்சியைக் கூறும் புலவர் அந்த நிகழ்ச்சிக்கேற்ற சந்தத்தில் செய்யுளை அமைத்துக்கொண்டு கூறும் இயல்பு சிறப்பாக அமைந்துளது.

'மறைத்தவர் மறுக்கமும் மடக்கொடி
நடுக்கமும் மனத்தினுணராப்
பிறைச்சடை முடிக்கடவுள் பொற்றிரு
வடிப்பெரு விரற்றலையினுல்
நெறுக்கென வழுத்திட உடற்பொறை
பதைப்ப நிருதர்க் கிறைவனும்
கறுத்த உருவத்தினும் அறக்கருமனத்தன்
வெருவிக் கதறினுன்,'

என்ற (71) செய்யுளின் ஓசையமைப்பைக்காணின் கதை நிகழ்ச்சிக்கு எத்துணைப் பொருத்தமாக அது அமைந்து இனிமையூட்டுகின்றது என்பது புலப்படும்.

இப்படலத்தில் இவ்வாறு பலதிறப்பட்ட பொருட் சிறப்புக்கள் காணப்படினும் இங்கு நீதிகள், கற்பனை, காதற்சுவை, உருவக உவம அணிகள், ஓசைநயம் என்ற சிலவற்றையே எடுத்துக் காட்டியுள்ளேன்.

## இராவணன் அளகைப் பொழிலை அழித்தல்

254. பூவயன்றரு வரத்தினுல்
புயவலிச் செருக்கால்
ஆவதல்லதென் றறிகிலா
அரக்கர்கோ னியக்கர்
தேவர் மாதவர் சிதறிடத்
துரந்துநல் லளகைக்
காவெலாம்பொடி செய்துவெங்
களிறெனத் திரிந்தான்.

பூஅயன் தரு வரத்தினுல் புயவலிச் செருக்கால்
ஆவது, அல்லது என்று அறிகிலா அரக்கர்கோன், இயக்கர்,
தேவர், மாதவர் சிதறிடத் துரந்து, நல் அளகைக்
காஎலாம் பொடி செய்து, வெம்களிறு எனத் திரிந்தான்.

பொ: தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் தந்த வரத்தினுலும் தன் தோள்கள் இருபதும்கொண்டுள்ள வலிமைபற்றி வந்த செருக்கினுலும், செய்யலாவது இது, செய்யத்தகாதது இது என்று அறியாத இராவணன், இயக்கர், தேவர், பெருந்தவமுனிவர் இவர்கள் சிதறி ஓடுமாறு துரத்திவிட்டு, நல்ல தன்மை வாய்ந்த அளகாபுரியில் உள்ள பொழில்களை யெல்லாம் துவைத்துப் பொடியாக்கிக் கொடிய யானைபோல அச்சமின்றித் திரிந்தான்.

கு: பூவயன்- தாமரை மலரில் அமர்ந்த பிரமன். அயன்தரும் வரமாவது பிற எவ்வுயிராலும் தனக்கு இறப்பு வரலாகாது என்பது. மனிதர்களைப் பொருளாக மதியாமையின் அவர்களால் இறப்பு நேராதென நினைத்தான். ஆவது, செய்யத்தகுவது புண்ணியம்; அல்லது, செய்யத்தகாதது, — பாவம். புண்ணியமிது, பாவமிது என்று அறிய மாட்டாத இராவணன் என்க. அயன் கொடுத்த வரமும் தன் தோள்வலியும் உள்ளதை யறியா வண்ணம் மறைத்துவிட்டன என்பார், 'வரத்தினுல், புயவலிச்

செருக்கால், ஆவதல்லதென்று அறிகிலா அரக்கர்கோன்' என்றார். முனிவர் முதயலிவர்களைத் துரத்தி யடித்துவிட்டு அவர்கள் மகிழ்ந்து தங்கியிருந்த பூம்பொழில்களையெல்லாம் துவைத்துப் பொடி செய்தான் என்பது இராவணன் செய்த அடாத செயல்களைப் புலப் படுத்தியவாறு. களிறு புகுந்து கலக்கும் வயலைக் காக்க முடியாத வாறு போல இராவணனையும் தடுக்கவியலாதாயிற்று என்பார், வெங்களிறெனத் திரிந்தான் என்றார். (௯)

**குபேரன் அனுப்பிய தூதுவன் இராவணனிடம் சொல்லுதல்**

255. அன்ன தன்மைய னதிக்கிர
மங்கள்கேட் டளகை
மன்ன வன்னொரு தூதனை
விடுப்பமற் றவன்போய்த்
தென்னி லங்கைநா யகன்றனை
நோக்கி நின் றமையன்
சொன்ன வாசகங் கேளெனத்
தூதுவன் சொல்லும்.

**அன்ன தன்மையன் அதிக்கிரமங்கள் கேட்டு அளகை**
**மன்னவன் ஒருதூதனை விடுப்ப, மற்றவன் போய்**
**தென் இலங்கை நாயகன் தனை நோக்கி 'நின் தமையன்**
**சொன்ன வாசகம் கேள்' எனத் தூதுவன் சொல்லும்.**

பொ: அத்தன்மையன் ஆன இராவணனது முறைகடந்த செயல்களைக் கேட்டு, அளகாபுரிக்கு மன்னவனாகிய குபேரன், ஒரு தூதுவனை இராவணனிடம் விடுப்ப, அத்தூதுவன் சென்று தென்இலங்கை மன்னனாகிய இராவணனை நோக்கி, நின் அண்ணன் சொன்ன வார்த்தையைக் கேட்பாயாக என்று தொடங்கி அத்தூதுவன் சொல்லலானான்.

கு: அதிக்கிரமங்கள்—முறைகடந்த தீய செயல்கள். அவை இயக்கர் முதலியோரைத் துரத்தியதும் பொழில்களைப் பொடி

செய்ததும் ஆம். நின்தமையன் என்றது குபேரனை. இராவண னுக்கு அவன் அண்ணன் முறையினனுதல் அறிந்ததே. தூதுவன் சொன்னது வருஞ்செய்யுளில் காணலாம். (உ)

குபேரன் சொன்னதைத் தூதுவன்
இராவணனுக்குச் சொன்னது 256-259

256. சொல்லும் போதற வினியவை
சூழவு மிருந்து
சொல்லு வார்பெரி தாகவச்
சொற்பய னினுத
சொல்லும் போதறக் கடுவதாய்ச்
சொற்பய னினிதாய்ச்
சொல்லு வாரிலைச் சொன்னசெய்
வார்களு மில்லை.

**சொல்லும்போது அற இனியவை சூழவும் இருந்து
சொல்லுவார் பெரிதாக, அச்சொற்பயன் இனுத;
சொல்லும்போது அறக் கடுவதாய்ச் சொற்பயன் இனிதாய்ச்
சொல்லுவார் இலை, சொன்ன செய்வார்களும் இல்லை.**

**பொ:** ஒருவர்க்கு ஒன்று சொல்லும்போது, முழுவதும் இனிமை யான சொற்களாக அவர்க்கு நெருக்கமாகச் சூழ்ந்து இருந்து பெரிதாகச் சொல்லுவார்கள். ஆனல், அச் சொல்லின் பயன் இன்னுதன–துன்பம் தரவல்லன ஆகும். இனி, ஒரு திறத்தார் சொல்லும் போது, முழுவதும் கடுக்காய்போலக் கேட்டற்கு வெறுக்கத்தக்கதாக இன்னுதனவாகச் சொல்லி. அச்சொல்லின் பயன் இனிதாகுமாறு சொல்லுவார்கள். அத்தகையோர் இப்போது இல்லை. அவ்வாறு சொன்னவற்றைச் செய்வார்களும் இப்போது இல்லை.

**கு:** கேள்விக்கு இனிதாய சொல்லால் நெருங்கிப் பேசுவோர் சொல், பயனுல் இனியதின்றி இன்னுததாகக் கெடுத்தலும் உண்டு.

சொல்லும்போது வேம்பும் கடுவும் போன்ற கடுஞ்சொற்களால் சொல்லி இனிய பயனையுண்டாக்குவோரும் உண்டு என்றவாறு.

'நல்ல போலவும் நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காத னெஞ்சினும் மிடைபுகற் கலமரும்
ஏதின்மாக்கள் பொதுமொழி கொள்ளாது. (புறநா-58)

எனக் காரிக்கண்ணனுர் கூறியுள்ளது, அற இனியவை சூழ இருந்து பெரிதாகச் சொல்லி இன்னுதன பயக்கும் இயல்பினர்க்கு ஏற்ற உதாரணமாகும். கேள்விக்கு இன்னுததாய்ப் பயனுல் இனிதாய சொல் சிறந்தது. ஆனுல் இப்போது அவ்வாறு சொல் வாரும் இல்லை. அச் சொல்லைக் கேட்டுச் செய்வாரும் இல்லை எனத் தூதுவன்வழிக்குபேரன் நொந்து கூறியவாறு. அற இனியவை முழுவதும் இனியவை. அற என்பது முழுவதும் என்ற பொருள் தரும். கடு என்பது கடுக்காயை. கடுக்காய் உண்பதற்கு இன்னுததாக இருக்கும், உடம்புக்கு நன்மை தரும். சொல்லும் அத்தகையதே. 'செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன் கவிகைக்கீழ்த் தங்கு முலகு' (குறள்-389) என்றது கேள்விக்குக் கைப்பான சொல் பின் நன்மை பயத்தலை அறிவித்தல் காண்க. (ந)

257. மூத்து ளோர்கள்சொல் முன்பிஞ
பின்பினி தென்னும்
வார்த்தை யுண்டது மனத்தினிற்
கொண்டியா னுரைத்த
வார்த்தை யாகுமீ தென்றுகொண்
டறம்வழு வாமல்
பார்த்துச் செய்வசெய் பழிபடு
காரியம் செய்யேல்.

மூத்துளோர்கள் சொல் முன்புஇஞ; பின்பு இனிது என்னும் வார்த்தை உண்டு; அது மனத்தினிற் கொண்டு, யான் உரைத்த

வார்த்தையாகும் ஈது; என்று கொண்டு அறம் வழுவாமல்
பார்த்துச் செய்வ செய்; பழிபடு காரியம் செய்யேல்.

**பொ :** நம்மினும் மூத்தவர்கள் சொல்லும் சொல் முன்பு இன்னாததாகத் தோன்றிப் பின்பு இனிமை பயக்கும் என்கின்ற வார்த்தை உண்டு. அதை மனத்தில் கொண்டு யாண் சொன்ன வார்த்தையாகும் இது, என்று உளம் கொண்டு தருமம் தவருமல் பார்த்துச் செய்யத் தக்கவற்றைச் செய்வாயாக; பழி உண்டாதற் குரிய செயலைச் செய்யாதே.

**கு :** மூத்தோர் என்போர் தந்தை, தாய், தமையன் ஆசான் போன்ருேர் ஆவர். அவர் சொல்லும்போது கடுமையாகச் சொல்லி நற்பயன் விளையச் சொல்லும் இயல்பினர் ஆதலின் இன்னாததாகத் தோன்றிப் பயன் அளிக்கும்; இனிதாக அமையும் என்றவாறு. வார்த்தை என்றது உலகப்பழமொழியை. தரும நெறிக்கு மாறு படாத செயல்களையே செய்க. அது புகழையுண்டாக்கும். தரும நெறிக்கு மாறுபட்ட செயல் பழியையுண்டாக்கும். ஆதலால் அதனைச் செய்யாதே என்கின்ருன். அறம் வழுவாமல் பார்த்துச் செய் எனவும் பழிபடு காரியம் செய்யேல் எனவும் கூறியவற்றில் ஒன்று நின்றேயேனையது முடிக்கும் என்ற முறைப்படி, பழிபடு காரியம் என்று பின்வந்துள்ளமையால், அறம் வழூவாச் செயல் புகழ்படு காரியம் என்பதும், பழிபடு காரியம் என்பது அறம் வழுவிய செயல் என்பதும் பெற வைத்தவாறு. குபேரன் இராவணனுக்கு உணர்த்தக் கருதிய வார்த்தை, அறம் வழுவாமல் பார்த்துச் செய். பழிபடு காரியம் செய்யேல் என்ற நீதியேயாகும். இதனைச் சார்ந்தே பின்கூறும் நீதிகள் அமைவது காணலாம். மூத்துளோர்கள் சொல் என்றது இங்குக் குபேரன் தன் சொல்லையே நினைந்து கூறிய தாகும். (௪)

258. தேவ ரந்தணர் தங்களைச்
சீறிடுந் தீயோர்
யாவ ராயினு மிம்மையிற்
கெடுவர்மேன் மறுமைப்

பாவ காரியர் புகுகதி
பழியொடும் புகுவார்
ஆவ செய்குவா ரவரொடும்
பகைகொளா ரறிவோர்

**தேவர் அந்தணர் தங்களைச் சீறிடும் தீயோர்
யாவர் ஆயினும் இம்மையில் கெடுவர், மேல் மறுமைப்
பாவ காரியர் புகுகதி பழியொடும் புகுவார்
ஆவ செய்குவார் அவரொடும் பகை கொளார் அறிவோர்**

**பொ :** தேவர்களையும் அந்தணர்களையும் கோபித்துத் தீங்கு செய்யும் தீயவர்கள் எத்தகையவராயினும் இப்பிறப்பில் கேடுறு வார்கள்; எதிர்காலத்தில் மறுமையில், பாவம் செய்தவர்கள் புகு கின்ற நரக கதியில் பழியோடும் புகுவார்கள். அத்தன்மையதான தீமையைச் செய்கின்றவர்களோடு அறிவுடையோர் பகையை கொள்ளமாட்டார்கள்.

**கு :** சீறுதல் என்பது இங்குச் சீற்றத்தின் காரியமாகிய தீங்கினையுணர்த்தியது. வேறு புண்ணியங்கள் செய்தமையால் எத்தகைய தகுதி பெற்றவராயினும் என்பார், 'யாவராயினும்' என்றார். பாவ காரியர் பாவத்தைச் செய்கின்றவர். பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால் (தேவாரம்–6–100–5) என்பது இங்கு நினையத்தகும். மறுமையில் பாவிகள் புகும் நரகத்தில் புகும்போது இவ்வுலகத்தில் பழியை நிலைக்கச் செய்துவிட்டே போவார் என்பார், 'பழியொடும் புகுவர்' என்றார். ஆவ–அவ்வகையான தீமைகள். அவரொடும் பகைகொள்ளின் உய்தல் அரிது ஆகலின், 'அவரொடும் பகைகொளார் அறிவோர்' என்றார். இராவணன் செய் தீமைகளின் விளைவைப் படர்க்கையில் வைத்து விளக்கியவாறு. (ரு)

**259.** உம்பர் வானவ ராதிய
ருனக்கிடைந் துலகில்
தம்ப மின்றியே தளர்ந்திடுந்
தன்மையுங் கேட்டேன்

வம்பு சேர்பொழில் வந்தது
மடித்ததுங் கண்டேன்
தம்பி யாகிலித் தன்மைசெய்
யாதொழி தக்கோய்.

**உம்பர் வானவர் ஆதியர் உனக்கு இடைந்து, உலகில்**
**தம்பம் இன்றியே தளர்ந்திடும் தன்மையும் கேட்டேன்;**
**வம்புசேர் பொழில் வந்ததும் மடித்ததும் கண்டேன்;**
**தம்பியாகில் இத்தன்மை செய்யாதுஒழி தக்கோய்!**

பொ : விண்ணுலகில் உள்ள தேவர் முதலியோர் உனக்குத் தோற்று உலகில் பற்றுக்கோடு இல்லாமல் தளர்ந்திருக்கும் தன்மையும் கேள்வியுற்றேன்; மணம் பொருந்திய பொழிலின்கண் நீவந்ததும் அப்பொழிலைப் பொடியாக்கி அழித்ததும் கண்களால் கண்டேன்; தகுதியுடையவனே! நீ எனக்குத் தம்பி என்கின்ற உறவுடையவன் என்பது உண்மையானுல் இத்தன்மை யான தீங்குகளைச் செய்யாதிருப்பாயாக!

கு : உம்பர்–விண்ணுலகம். இடைதல்–தோற்றல். தம்பம்–பற்றுக்கோடு. வானவர் முதலியோர்க்கு இராவணன் செய்த தீங்கினை நேரில் பார்க்கவில்லையாதலின் கேட்டேன் என்றும், பொழில் மடித்ததை நேரில் பார்த்தான் ஆதலின் கண்டேன் என்றும் குபேரன் கூறினுன். குபேரனுக்குத் தம்பியாயிருந்தால் இச்செயல்கள் பொருந்தாதனவாம் என்றவாறு. தக்கோய்! என்ற விளி உன் தகுதிக்கு இத்தீச் செய்கைகள் முரணுனவை என்பது புலப்பட வந்தது. (சு)

260. இமயத் தைம்முகத் தீசனை
நோக்கியா னெழில்சேர்
சிமையத் துத்தவஞ் செய்கின்ற
வேலையிற் சிவனே

டுமையைக் கண்டிந்த வுத்தமி
யாவளோ வெனவோர்
சமையத் தாங்கவள் சலித்தெனைத்
தழலெழ விழிப்ப.

**இமயத்து ஐம்முகத்து ஈசனை நோக்கி யான், எழில்சேர்
சிமையத்துத் தவம் செய்கின்ற வேலையில், சிவனோடு
உமையைக் கண்டு இந்த உத்தமி யாவளோ? என ஓர்
சமையத்து ஆங்கு அவள் சலித்து எனைத் தழல் எழ விழிப்ப.**

பொ : இமயமலையில் எழில் மிக்க சிகரத்தில் இருந்த ஐந்து முகங்களையுடைய ஈசனை நோக்கியான் தவம் செய்கின்ற போது, சிவபிரானோடு உமையம்மை வரக்கண்டு, இந்த உத்தமி யாரோ? என கவனிக்கின்ற சமையத்தில் அவ்வுமையம்மை அருவருத்து என்னைத் தீயெழுமாறு விழித்துப் பார்க்க.

கு : இமயத்து எழில்சேர் சிமையத்து என இயையும் சிமையம்-சிகரம். வேலை-சமையம். உமையம்மையைக் கண்டு இந்த உத்தமி யாவளோ? என்று ஐயுற்று ஓர்ந்து பார்த்தபோது, அப்பார்வையைப் பொருத உமையம்மை கோபித்துத் தீயெழ என்னை விழித்துப் பார்த்தாள் எனத் தன் வரலாற்றினைக் குபேரன் குறிப்பிட்டவாறு. தூதுவன் இராவணனுக்கு உரைக்கின்றான். ஓர்தல்-நுண்ணிதின் கவனித்தல். சலித்தல்-அருவருத்தல். இச் செய்யுள் குளகம். மேலைச் செய்யுளோடு முடியும். (எ)

**261.** பார்த்த வென்னிடக் கண்ணது
பற்பமாய் வீழ
வேர்த்து மெய்குலைந் தவ்விடத்
திருக்கயான் வெருவிச்
சீர்த்த வந்திகழ் சிலம்பின்வே
றோரிடஞ் சேர்ந்து
பேர்த்து முன்புபோற் பெருந்தவம்
புரிந்தனன் பேணி.

**பார்த்த என் இடக் கண்ணது பற்பமாய் வீழ,**
**வேர்த்து மெய்குலைந்து அவ்விடத்து இருக்க யான் வெருவி,**
**சீர்த் தவம்திகழ் சிலம்பின் வேறு ஓர் இடம் சேர்ந்து**
**பேர்த்தும் முன்பு போல் பெருந்தவம் புரிந்தனன் பேணி.**

பொ: உமையம்மையை ஓர்ந்து பார்த்த எனது இடக்கண் வெந்து நீருய்த் தரையில் வீழ, யான் வேர்த்து மெய் நடுங்கி அவ்விடத்து இருக்கவும் அஞ்சிச் சிறப்புடைய தவம் விளங்கு கின்ற இமயமலையில் வேறோர் இடம் சேர்ந்து, மீண்டும் முன்பு போலவே பெரிய தவத்தைப் புலன்கள் புறம்போகாதபடி போற் றிப் புரிந்தேன்.

கு: கண்ணது என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. பற்பம்-நீறு. பஸ்மம் என்ற வடசொல்லின் திரிபு. குலைதல்-நடுங்குதல். தன்கண்ணை இழந்த இடமாதலின் அங்குத் தங்கியிருக்கவும் குபேரன் அஞ்சினுன் என்க. வெருவி—அஞ்சி. சீர்த்தவம்—சிறப் புடைய தவம். தவம் திகழ் சிலம்பு என்றது, தவம் விளங்கும் இமயமலையை. முன்னைய இடத்தை விட்டு வேறோர் இடம் நாடி அங்கு முன்போலவே தவஞ் செய்தான் என்றவாறு. பேணுதலாவது பொறிகள் புலன்கள்மேற் செல்லாதவாறு அடக்கிக் காத்தல். பேணிப்புரிந்தனன் என இயையும். புரிந்தனன் தன்மையொருமை வினைமுற்று. பார்த்த என்னிடக்கண் என்றமை யால் குபேரன் பார்த்தது ஒரு கண்ணுல் என்பதும் அது வஞ்சகப் பார்வையாக இருந்தமையின் உமையம்மையின் சினத்தால் வெந்து நீருய் விழுந்தது என்பதும் புலனும். (அ)

262. அரிய மாவிர தத்தினின்
றுண்டிரு நூறும்
உரிய செய்வன வொருதினம்
போற்செய்து முடிக்க
விரிபெ ருஞ்சடை விமலனுஞ்
சிவன்வெளிப் பட்டுப்
பிரிய னுயெனைப் பேணிநோக்
கினனிவை பேசும்.

அரிய மாவிரதத்தில் நின்று ஆண்டு இருநூறும்
உரிய செய்வன ஒருதினம் போல்செய்து முடிக்க,
விரிபெருஞ்சடை விமலனும் சிவன் வெளிப்பட்டு,
பிரியனுய் எனைப் பேணி நோக்கினன், இவை பேசும்.

பொ : மேற்கொள்ளற்கு அரிய பெரிய விரதத்தில் நின்று இருநூறு ஆண்டுகள் வரையில் செய்தற்குரியவாய பூசைகளை ஒருநாள்போல எல்லா நாட்களும் விருப்பத்துடன் செய்து முடிக்க, விரிந்த பெரிய சடையையுடைய விமலனுகிய சிவபிரான் என்கண் முன் வெளிப்பட்டு அன்புடையவனுய் என்னை விரும்பி நோக்கி இவற்றைச் சொல்லலானுன்.

கு : அரிய மாவிரதம் என்றது பிறரால் மேற்கொள்ளுதற்கு அரிய பெரிய தவவிரதத்தை. உரிய செய்வன என்பதைச் செய்தற் குரியன என மாறுக. ஒருதினம்போல் செய்தலாவது, முதல் நாளில் செய்ததுபோன்ற அன்பும் விருப்பமும் இருநூறு ஆண்டு களிலும் நீடித்திருக்கச் செய்வது. விமலன், மலமற்றவன். பேணுதல்-விரும்புதல். பேசியவை வருஞ் செய்யுளில் காணலாம். (கூ)

263. நின்னை யொப்பவர் தவத்தினி
னீயலா தில்லை
உன்னை யொப்பவர் யானலா
லொருவரு மில்லை
நின்னை யுத்தமத் தோழனுய்
வேண்டுவென் யானும்
என்னை யொத்தநின் றேழனுய்க்
கொள்ளுதி யென்ருன்.

நின்னை ஒப்பவர் தவத்தினில் நீஅலாது இல்லை;
உன்னை ஒப்பவர் யான் அலால் ஒருவரும் இல்லை;
நின்னை உத்தமத் தோழனுய் வேண்டுவென் யானும்;
என்னை ஒத்த நின் தோழனுய்க் கொள்ளுதி என்ருன்.

பொ : தவத்தினில் நின்னை ஒப்பவர் (உயிர்களில்) நீஅலாது இல்லை; (உவமை வேண்டுமாயின்) உன்னையொப்பவர் (கடவுளாக இருக்கின்ற) யான் அலால் ஒருவரும் இல்லை; ஆதலால் நின்னை உயர்ந்த தோழனுகக் கொள்ள விரும்புகின்றேன் யானும்; தவத்தால் சிறந்த என்னை, ஒத்த பண்புடைய நின்தோழனுகக் கொள்வாயாக என்று கூறினுன்.

கு : நின்னை ஒப்பவர் தவத்தினில் நீயலாதில்லை என்றது உயிர்களை நோக்கி என்க. இது பொதுநீங்குவமை. நின் தவத்தினுக்கு உவமை வேண்டுமாயின் கடவுளாயிருக்கின்ற யான் அலால் ஒருவரும் இல்லை; என அத்தவத்தின் சிறப்பினைக் கூறிய வாறு. சிவபிரான் அந்தத் தவத்தை முன்னமே செய்தவன் ஆதலின் இங்ஙனம் கூறலாயினன். தவத்தால் இங்ஙனம் சிறந்தவனுக இருத்தலின் குபேரனை உயர்ந்த தோழனுகக் கொள்ள விரும்பினன் சிவபிரானே எனக் குபேரன் தற்பெருமையோடு மிகைபடக் கூறிக் கொண்டான் என்பது இங்கு உளங்கொளல் வேண்டும். யானும் வேண்டுவன் என்புழி உம்மை சிறப்பும்மை, கடவுளாகிய யானும் என்று பொருள் படுதலின். இனி எதிரது தழுவிய உம்மையாகக் கொண்டு யானும் வேண்டுவேன், நீயும் விரும்பித் தோழனுய் ஏற்றுக்கொள்க என்று பொருள் கூறலும் ஆம்.

(கய)

264. மங்கை சீறிட வாய்ந்தநின்
வாமநேத் திரமும்
பிங்க லந்திகழ் நிறத்ததாய்ப்
பெறுதிநீ யென்று
கங்கை சேர்சடைக் கண்ணுத
லானிவை புரிந்தான்
இங்கி தென்னிய லின்னமுங்
கேட்டியா லியம்ப.

மங்கை சீறிட வாய்ந்தநின் வாம நேத்திரமும்
பிங்கலம் திகழ் நிறத்ததாய்ப் பெறுதிநீ; என்று

கங்கைசேர் சடைக் கண்ணுதலான் இவை புரிந்தான்;
இங்கு இது என் இயல் இன்னமும் கேட்டியால் இயம்ப.

பொ: 'உமை மங்கை கோபிக்க நேர்ந்த நின் இடக்கண்ணும் பொன்னின் விளக்கமுள்ள நிறத்தினை யுடையதாய் நீ பெறுவாயாக' என்று கங்கை தங்கிய சடையையுடைய சிவபிரான் இவற்றைச் செய்தான்; இங்குக் கூறிய இது என் இயல்பாகும் இன்னமும் யான் சொல்லக் கேட்பாயாக.

கு: மங்கை என்றது உமை மங்கையை. வாமம்-இடப் பக்கம். பிங்கலம் பொன். உமையின் சாபத்தால் உதிர்ந்த நேத்திரத்தைச் சிவபிரான் கொடுப்பது அவ்வம்மைக்கு மாறுபாடாய்த் தோன்றுமாகலின், அக்கண் பார்வையற்றதாயினும் பொன்னிறமாய் விளங்க வரங் கொடுத்தவாறு. கண்ணுதலான் - கண் பொருந்திய நெற்றியையுடைய சிவபிரான். என்னியல் என்று குபேரன் தன்னியல்பைச் சுட்டியவாறு. இயம்பக் கேட்டியால் என இயையும். (கக)

265. வாச வன்முத லாகிய வானவர் தாமும்
ஈச னன்னமா தவம்புரி யிருடிக ளெவரும்
கூசி நின்வலிக் கோடினர்கூடினு ருனக்கு
நாச மெண்ணுவர் தசமுக நாடொறு மிருந்து

வாசவன் முதலாகிய வானவர் தாமும்
ஈசன் அன்ன மாதவம் புரி யிருடிகள் எவரும்
கூசி நின்வலிக்கு ஓடினர், கூடினர் உனக்கு
நாசம் எண்ணுவர் தசமுக! நாள்தொறும் இருந்து

பொ: தசமுகனே! இந்திரன் முதலாக உள்ள தேவர்களும் பெருந்தவம் செய்து சிவபிரானை ஒத்து விளங்கும் முனிவர்கள் யாவரும், நின்வலிமைக்கு எதிர்நிற்கக் கூசி ஓடினவர்கள் பின்பு நாள்தொறும் கூடினராயிருந்து உனக்கு அழிவு வருதற்குரிய வழியையே எண்ணுவார்கள்.

கு: மாதவம் புரிந்தமையால் ஈசனன்ன இருடிகள் என இயையும்; கூசி ஓடினர் என இயையும். ஓடினர் என்பது வினைப்பெயர். எண்ணுவர் என்ற வினையோடுமுடியும். நாள் தோறும் கூடினராயிருந்து உனக்கு நாசம் எண்ணுவர் என்க. தேவரும் முனிவரும் உனக்குத் தோற்று ஓடின அளவில் அவரை வென்றுவிட்டதாக எண்ணிக் களிக்கின்றாய். ஆனால், ஓடினவர்கள் பின்பு நாள்தொறும் கூடியிருந்து உனது நாசத்துக்கு வழிதேடிக் கொண்டுதான் இருப்பார்கள். எனவே பின்விளைவை எண்ணிப் பார்த்துத் தீமையை விலக்கல் நன்று என்றவாறு. (௬௨)

குபேரன் சொல்லியவற்றைத் தூதுவன் சொல்லக் கேட்ட இராவணன் நிலை

266. அரக்க னன்னவை கேட்டலு
மனலெழ வுயிர்த்துக்
கரத்தி னோடுகைப் புடைத்துவெங்
கனல்விழி காலப்
பரக்க நோக்கித்தன் பாடிருந்
தவர்முக நோக்கி
இரக்க மில்லவ னிவர்களுக்
கிவையிவை யியம்பும்.

அரக்கன் அன்னவை கேட்டலும் அனல்எழ உயிர்த்து
கரத்தினோடு கைப்புடைத்து வெங்கனல் விழி காலப்
பரக்க நோக்கி, தன்பாடு இருந்தவர் முகம் நோக்கி
இரக்கம் இல்லவன் இவர்களுக்கு இவை இவை இயம்பும்.

பொ: தூதுவன் சொன்ன குபேரன் சொற்களை இராவணன் கேட்டலும் நெருப்பு எழுமாறு பெருமூச்சு விட்டுக் கையோடு கை சேர்த்துத் தட்டிக் கண்கள் வெவ்விய கனலைக் கக்க, முன்பு பொதுவாகப் பரக்க நோக்கிப் பின்பு தன் பக்கத்திலிருந்தவர் தம் முகத்தைப் பார்த்து, இரக்கம் இல்லாதவனாய் இவர்களுக்கு இவ்விவற்றைச் சொல்லுவானானான்.

கு: அன்னவை என்றது, குபேரன் கூறியவற்றைத் தூதுவன் சொன்னதை. அரக்கன் என்றது இராவணனை. குபேரன் சொன்ன சொற்கள் இராவணன் நெஞ்சத்திற்கு மாருய்த் தோன்றுதலால் அனல் எழ உயிர்க்கலானுன் என்க. நெஞ்சம் கனல்கின்றபோது மூச்சுக் காற்றும் வெப்பமடைதல் இயல்பாகலின் அனலெழ உயிர்த்து என்ருர். கோபமிகுதியால் இராவணன் கண் களும் கனலைக் கக்கின என்க. பொது நோக்கினையுணர்த்தப் பரக்க நோக்கி என்ருர். அடுத்துத் தன் பக்கத்திலிருந்தவர் முகத்தைப் பார்த்தது சிறப்பு நோக்காகும். இரக்கம் இல்லவன் — இரக்கம் இல்லாதவனுய் எனக் குறிப்பு முற்று வினையெச்சப் பொருளில் வந்தது. வினையெச்சத்திரிபு. இவர்கள் என்றது, இராவணனைச் சார்ந்திருந்த அரக்கரை. இயம்பியது வரும் செய்யுளில் காணலாம்.

(கசு)

இச்செயுளுக்குப் பின் சில சுவடிகளில் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

பன்னப் பாரமில் பல நரி திரண்டொரு சிங்கம்
தன்னைக் கொல்லிய வெண்ணுமத் தன்மையாற் சமரத்
தென்னைக் கொல்லிய வெண்ணுவா ரிமையவ ரோடு
முன்னைப் பார்ப்பன பசுக்களா மொழிவ தெனிதற்கு.

இராவணன் வாளால் தூதுவனை வெட்டுதல்

267. ஆசில் லாதர னொப்பவ
னளகையி லவனும்
ஈசன் ருேழனு மவையெலா
மென்முனஞ் சார்ந்து
பேசுந் தூதனுர் பெறுவன
விவையென வாளால்
வீசி னுனவ னிருதுணியாக
மண் வீழ்ந்தான்.

ஆசுஇல்லாது அரன் ஒப்பவன் அளகையில் அவனும்
ஈசன் தோழனும், அவையெலாம் என்முனம் சார்ந்து,
பேசும் தூதனுர் பெறுவன இவை என வாளால்
வீசினுன் அவன் இருதுணியாக மண் வீழ்ந்தான்.

பொ : ஒரு குற்றமும் அற்று உலகிற்கு ஆதாரமாக இருக்கின்ற சிவபிரானை ஒப்பவன் அளகாபுரியில் உள்ள அந்தக் குபேரனும், அதற்கு மேலும் அந்தச் சிவபிரானுக்குத் தோழனும். அப்பெருமையெல்லாம் மூவுலகுக்கும் தலைவனாகிய என் முன் வந்து பேசிய தூதுவனார் பெறுவனவாகிய பரிசுகள் இவை; என்று கூறிக்கொண்டு தன் கைவாளால் வீசினான்; அத்தூதுவன் இரண்டு துண்டங்களாகத் தரைமேல் வீழ்ந்தான்.

கு : குபேரன் தன்னைச் சிவபிரானை ஒத்தவன் என்று சொல்லிக் கொள்ளுதலும் அச்சிவபிரானுக்குத் தோழன் என்று சொல்லிக் கொள்ளுதலும் தற்பெருமையான சொற்களே என்பது இராவணன் எண்ணம். இராவணனுக்கு உடன்பாடில்லாத அக்கருத்துக்களை இகழும் குறிப்புத் தோன்றவே 'ஆசில்லாதரன் ஒப்பவன் அளகையில் அவனும்' எனவும் ஈசன் தோழனும் எனவும் உடன்பாடின்மை யுணர்த்தும் ஆம் என்ற இடைச்சொல்லோடு சேர்த்துக் கூறினான். 'கைத்தோடுஞ் சிறை கற்போயை வைத்தோனின்னுயிர் வாழ்வானும், பொய்த்தோர் வில்லிகள் போவாராம், இத்தோடொப்பதியாதுண்டே' (சுந்தர-சூளாமணிப்-41) என்புழிப்போல. அளகையில் உள்ள குபேரன் எங்கும் நிறைந்துள்ள சிவனை ஒப்பவன் என்பதும் அப்பெரியோனுக்குத் தோழன் என்பதும் நகையாடற்குரிய பேதைமைச் சொற்களே என்பது இராவணன் கருத்து. என்முனம் என்புழி என் என்பது ஆற்றல் மிக்க சொல்லாகும். தவத்தாற் சிறந்து மூவுலகிற்கும் தலைவனாகவுள்ள எனக்குமுன் என்று பொருள் தந்து நின்றது. தூதனார் என்புழி உயர்த்தற்கண் வரும் ஆர்விகுதி இழித்தற்கண் வந்தது. பொருந்தாச் சொற்களைப் புகன்ற தூதுவன் பெறுதற்குரிய பரிசு வாள் வீச்சே என்ற கருத்தால் தூதனார் பெறுவன இவையென் வாளால் வீசினான் என்றார். (கசு)

268. அன்ன கோபத்தவ் வரக்கர்கோ
னளகையி லவனை
முன்னஞ் சென்றுநான் முட்டியே
மனச்சின முடித்துப்

பின்னை நின்றது செய்வெனென்
பெரும்படை யெழுக
என்ன லுங்கடல் கிளர்ந்தென
வெழுந்தது சேனை.

**அன்ன கோபத்துஅவ் அரக்கர்கோன் 'அளகையில் அவனை**
**முன்னம் சென்று நான் முட்டியே மனச்சினம் முடித்துப்**
**பின்னை நின்றது செய்வென்; என்பெரும்படை எழுக'**
**என்னலும் கடல் கிளர்ந்தென எழுந்தது சேனை.**

**பொ:** அத்தன்மையான கோபத்தையுடைய அந்த இராவணன் முதற்கண் சென்று நான் அளகாபுரியில் உள்ள அந்தக் குபேரனைத் தாக்கி என் மனத்து எழுந்த கோபத்தை தீர்த்துக் கொண்டு வந்த பின்னர்தான் எஞ்சி நின்ற செயல்களைச் செய்வேன்; ஆதலால் என் பெரிய சேனை புறப்படுவதாக! என்று சொன்ன அளவில் கடல் கிளர்ந்து எழுந்தாற் போல இராவணன் சேனை குபேரனை நோக்கி எழுந்தது.

**கு:** யான் முதற்கண் செய்ய வேண்டியது அளகாபுரியிலுள்ள குபேரனைத் தாக்கி என் மனத்தெழுந்த சினத்தை முடிந்துக் கொள்வது. மற்றைச் செயல்கள் எல்லாம் செய்வது பின்னர்தான்; என்பான், 'முன்னஞ் சென்று நான் முட்டியே மனச்சின முடித்துப் பின்னை நின்றது செய்வென்' என்றான். சேனையின் பரப்பும் ஆரவாரமும் புலப்படக் கடல் கிளர்ந்தென எழுந்தது சேனை என்றார். என்பெரும்படை எழுக என்றமையால் குபேரனதும் சிறுபடை என்பதும் அதை வெல்லுதல் எளியது என்பதும் குறிப்பால் உணர்த்தியவாறு. (கரு)

**269. கட்டி விட்டபொற் கனைகழற்**
**காலினர் கரிய**
**வட்ட மொத்தமா மேனியர்**
**வயங்கிய வீரப்**

பட்ட நெற்றியர் பணைத்த திண்
டோளினர் படர்மார்
பிட்ட பொற்கவ சத்தின
ரிராக்கத ரெழுந்தார்.

கட்டிவிட்ட பொன்கழ‌ல கழல் காலினர், கரிய
வட்டம் ஒத்த மாமேனியர், வயங்கிய வீரப்
பட்ட நெற்றியர், பணைத்த திண்தோளினர், படர்மார்பு
இட்ட பொன் கவசத்தினர், இராக்கதர் எழுந்தார்.

பொ: பொன்னாலியன்றதாய், ஒலிக்கின்ற கழலைக் கட்டி விட்ட காலினையுடையவர்களும் கரிய வட்டத்தை ஒத்த பெரிய உடம்பை யுடையவர்களும், விளக்கமுடைய வீரப்பட்டம் கட்டிய நெற்றியையுடையவர்களும் பருத்த திண்ணிய தோளையுடையவர் களும் பரந்தமார்பின்கண் இட்ட பொன்னாலியன்ற கவசத்தினை யுடைய வர்களும் ஆகிய இராக்கதர் போர்க்கு எழுந்தார்கள்.

கு: காலினர் மேனியர் நெற்றியர் தோளினர் கவசத்தினர் ஆகிய இராக்கதர் எழுந்தார் என்க. இனி, கழற்காலினராய், மேனியராய், நெற்றியராய், தோளினராய் கவசத்தினராய் எழுந்தார் என இயைப்பினும் ஆம். பணைத்தல்—பருத்தல். (கசு)

நால்வகைச் சேனையின் நெருக்கம்

270. தேர்க ளுற்றன செம்முகக் கரியினை நெருக்கப்
போர்ம தக்கரி புரவியை நெருக்கிடப் போரில்
வீர ரைப்பரி நெருக்கிட வீரர்கள் போகத்
தாரை பெற்றிலர் தங்களிற் றனித்தனி நெருக்கி

தேர்கள் உற்றன, செம்முகக் கரியினை நெருக்க,
போர் மதக்கரி புரவியை நெருக்கிட, போரில்
வீரரைப் பரி நெருக்கிட, வீரர்கள் போகத்
தாரை பெற்றிலர் தங்களில் தனித்தனி நெருக்கி.

பொ. அங்கு வந்துற்றனவாகிய தேர்கள் செம்புள்ளிகள் நிறைந்த முகத்தையுடைய யானைகளை நெருக்கிடவும் போர்த்திறம் அமைந்த மதயானைகள் குதிரைப்படையை நெருக்கிடவும் போரில் வல்ல குதிரைகள், வீரரை நெருக்கிடவும் வீரர்கள் தங்களுக்குள் தனித்தனி நெருக்கிக்கொண்டு பெயர்ந்து செல்ல வழிபெருதவர்களாய் வருந்தினர்.

கு: நால்வகைப் படையுள் காலாட்படை முன்னும் அதன் பின் குதிரைப்படையும், அதன் பின் யானைப்படையும், அதன்பின் தேர்ப்படையும் செல்கின்றன. பின்செல்லும் தேர்ப்படை நெருக்கிட முன்செல்லும் யானைப்படை நெருங்குகின்றது. யானைப்படை நெருக்கிட குதிரைப்படை நெருங்குகின்றது. குதிரைப்படை நெருக்கிடக் காலாட்படை நெருங்குகின்றது என்பது கூறி நால்வகைப் படையின் பெருக்கத்தால் தரை சுருங்கிக் காட்டிய நிலையையுணர்த்தியவாறு. தாரை-வழி. வீரர்கள் தனித்தனி நெருக்கித் தாரை பெற்றிலர் என இயையும். (கஎ)

### படையின் செலவால் எழும்தூளியின் செயல்

**271.** பாழி சாலெயிற் றரக்கர்கோன் படையெழு தூளி
ஏழு லோகமு மெய்திமீண் டிவ்வுல கத்தில்
ஆழி யானவை யடங்கலுந் தூர்த்த சேருக்கிக்
சூழ மாதிரத் தும்பிகைத் தூம்புசெம் மியதே.

**பாழி சால்எயிற்று அரக்கர்கோன் படைஎழு தூளி**
**ஏழு லோகமும் எய்தி மீண்டு இவ்வுலகத்தில்**
**ஆழி ஆனவை அடங்கலும் தூர்த்த, சேறு ஆக்கி;**
**சூழும் மாதிரத் தும்பிகைத் தூம்பு செம்மியதே.**

பொ: வலிமை மிக்க பற்களையுடைய இராவணன் சேனை எழுவதால் உளதாகிய துகள், மேலுள்ள ஏழு உலகங்களையும் கடந்து சென்று பின் மீண்டு இந்தவுலகத்தில் உள்ள கடல்கள் எல்லாவற்றையும் சேருக்கித் தூர்த்துவிட்டன. உலகத்தைச் சூழ்ந்துள்ள திசைகளில் காவல் புரியும் திசையானைகளின் துதிக்கைத் துளைகளையும் அடைத்துவிட்டன.

கு : இராவணனுடைய நால்வகைச் சேனைகள் புறப்பட்டுச் செல்லும்போது எழுந்த மண் துகள்கள், விண்ணில் உள்ள ஏழு உலகங்களையும் கடந்து சென்று அதற்குமேல் செல்ல இடனின்றித் திரும்பி வந்து மண்ணுலகில் கடல்கள் எல்லாவற்றிலும் படிந்து கடல்நீரைச் சேருக்கிப் பின் தூர்த்துவிட்டன; அதற்குமேலும் திசையானைகளின் துதிக்கையில் உள்ள துளையையும் அடைத்து விட்டன என்றவாறு. பாழி-வலிமை. தூளி-துகள். சேருக்கித் தூர்த்த என்க. மாதிரம்-திசை. மாதிரத்தும்பி என்றது திசை யானைகள் எட்டையும். கைத்தூம்பு என்றது துதிக்கையிலுள்ள துளையை. செம்முதல்-அடைத்தல். (கஅ)

இராவணன் போர்க்கோலம் 19 – 21

272. அன்ன மாப்படை யளகையை
நெருக்கிட வரக்கர்
மன்னன் மாநிதித் தலைவன்மேற்
கறுவுகொண் மனத்தன்
பொன்னின் வார்கழல் பொலிவுறக்
காலிடைப் புனைந்து
மின்னு மாமணிப் பஃறலைக்
கச்சரை விசித்து.

அன்ன மாப்படை அளகையை நெருக்கிட, அரக்கர்
மன்னன், மாநிதித் தலைவன்மேல் கறுவுகொள் மனத்தன்,
பொன்னின் வார்கழல் பொலிவுறக் காலிடைப் புனைந்து,
மின்னும் மாமணிப் பல்தலைக் கச்சு அரைவிசித்து.

பொ : அத்தகைய பெரிய சேனை முன்சென்று அளகாபுரியை நெருங்கா நிற்க, அரக்கர்கோனாகிய இராவணன் பெரியநிதி பதியாகிய குபேரன்மேல் கறுவுதல் கொண்ட மனத்தனாய், பொன்னால் இயன்ற நீண்ட கழலைப் பொலிவு பொருந்தக் காலில் கட்டிக்கொண்டு மின்னுகின்ற சிறந்த மணிகளை வைத்திழைத்த

பல தலைப்பினையுடைய கச்சினை இடையில் இழுத்துக்கட்டிக் கொண்டு.

கு: குளகம். இராவணன் போர்க்கோலம் கொள்ளுமுன் அவன் சேனையின் முன்னணிஅளகாபுரியை அடைந்து நெருக்கியது என அப்படையின் பெருமையும் விரைவும் புலப்படுத்தியவாறு. கறுவுகொள் மனத்தன் என்றது குபேரன் மேல் கொண்ட பகையால் கொதிக்கும் உள்ளத்தன் என்றவாறு. வெளிப்படாது உள்ளடங்கியுள்ள திராக் கோபம் கறுவுதல் எனப்படும். புனைந்து, விசித்து, சேர்த்து, வீக்கி ஏறினன் இரதம் என மேல் முடியும். (ககூ)

173. கூர்மை யிட்டவேல் விழியினர்
குவிமுலைக் குறியும்
ஆர்வம் விட்டிலா வாங்கவர்
கண்களும் நெருங்கும்
சீர்கொள் வட்டமார் பதனிடைக்
கவசமுஞ் சேர்த்து
வீர பட்டங்க ளுதறொறும்
விளங்கிட வீக்கி.

கூர்மை இட்டவேல் விழியினர் குவிமுலைக் குறியும்,
ஆர்வம் விட்டிலா ஆங்கவர் கண்களும், நெருங்கும்
சீர்கொள் வட்ட மார்பு அதனிடைக் கவசமும் சேர்த்து,
வீர பட்டங்கள் நுதல் தொறும் விளங்கிட வீக்கி.

பொ: கூர்மையாகத் தீட்டப்பட்ட வேலைப் போன்ற விழியினையுடைய பெண்டிர்தம் குவிந்த முலைகள் அழுந்திய குறியும் பார்ப்பதில் ஆர்வத்தைவிடாது கொண்டுள்ள அப்பெண்டிர்தம் கண்களும் நெருங்கியிருக்கின்ற சிறப்பினையுடைய வட்டமான மார்பில் கவசத்தையும் சேர்த்தணிந்துகொண்டு, வீரபட்டங்கள் நெற்றிதோறும் விளக்கம் செய்யுமாறு கட்டிக்கொண்டு.

கு: கூர்மையிடுதல் – கூராக்குதல். மகளிர் கூர்விழிக்கு உவமையாகவேண்டிக் கூர்மையிட்ட வேலையுவமை யாக்கினர். மகளிர் மார்பிடைச் சந்தனக்கோலம் எழுதியிருப்பார்கள் ஆதலின் சந்தனக்கோலஞ் செய்த நகில்கள் மார்பிடைப் பதியும்போது அவற்றிலுள்ள சந்தனக்கோலம் இராவணன் மார்பில் குறியாகப் பதிதல் இயல்பு. இராவணனழகைக் கண்களால் பருகுகின்ற ஆர்வம் குறையாதவர்கள் அரக்கர் மாதர் ஆதலின், ஆர்வம் விட்டிலா ஆங்கவர் கண்களும் என்றார். மாதர்தம் முலைக் குறியும் கண்களும் பதிந்த மார்பில் கவசமும் சேர்த்து அணிந்து கொண்டான் என்பார் இறந்தது தழிஇய எச்ச உம்மை கொடுத்துக் கூறினர். இன்பத்திற்கே யுரியதாயிருந்த மார்பை வீரத்திற்கு உரிமையாக்கக் கவசமணிந்தான் என்க. இராவணனுக்குத் தலை பத்தாகலின் 'நுதல் தொறும் விளங்கிட வீக்கி' என்றார். பத்து நெற்றியினும் பத்து வீரபட்டங்களை விளக்கம் செய்யுமாறு கட்டிக் கொண்டான் என்றவாறு. கவசமும் சேர்த்து, வீக்கி ஏறினன் என வருஞ்செய்யுளில் முடியும்; குளகம். (உ௩)

இராவணன் தேரேறுதல்

274. உடன்று டித்தெழும் படையினு
னுலகுகீ ழிருப்ப
விடந்து டித்திடு வெள்ளெயிற்
றனந்தன் மெய்ந் நடுங்கிப்
படந்து டித்திடப் பைம்பொழி
லளகைநா யகனுக்
கிடந்து டித்திட விராவண
னேறினு னிரதம்.

உடன் துடித்து எழும் படையினன் உலகுகீழ் இருப்ப,
விடம் துடித்திடு வெள்ளெயிற்று அனந்தன் மெய்ந் நடுங்கிப்,
படம் துடித்திட, பைம்பொழில் அளகை நாயகனுக்கு
இடம் துடித்திட, இராவணன் ஏறினன் இரதம்.

பொ: (தன் கருத்திற்கேற்ப) உடன் துடித்து எழும் படைக் கலத்தை யுடையவனுகிய இராவணன் மண்ணுலகம் கீழ் அழுந்த வும், நஞ்சு துடிக்கின்ற வெள்ளிய பற்களையுடைய ஆதிசேடன் உடம்பு நடுங்கிப் படம் துடித்திடவும், பசுமையான பொழில்கள் சூழ்ந்த அளகாபுரிக்கு அரசனுகிய குபேரனுக்கு இடம் துடித்திட வும் இராவணன் இரதம் ஏறினுன்.

கு: போருக்கென்று இராவணன் துடிக்கின்றபொழுது அவன் படைக்கலங்களும் உடன் துடித்துத் தம் ஆர்வத்தைக் காட்டும் என்பார் உடன் துடித்தெழும் படையினுன் என்றுர். அனந்தன் என்றது ஆதிசேடனை. இயல்பாக இருந்த பூமியின் பாரத்தைக் காட்டிலும் இராவணன் தேரேறியபோது பாரம் அதிகரித்தமை யால் ஆதிசேடன் பாரம் பொருது உடல் நடுங்கிப் பணமுடி துடித்தன என்க. இராவணன் தேர் ஏறிச் சென்று குபேரனை வெல்லுதல் தப்பாது ஆதலின், முன்னறிவிப்பாகக் குபேரனுடைய இடத்தோளும் இடக்கண்ணும் துடித்தன என்க. இடம் என்பது இடத்தோளையும் இடக்கண்ணையும் குறித்து நின்றது. உலகு கீழ் இருப்ப, அனந்தன் படந்துடித்திட அளகை நாயகனுக்கு இடம் துடித்திட ஏறினன் இரதம் என்று வினைமுடிவு செய்க. துடித்தல் என்ற சொல் பன்முறை வரத் தொடுத்தமையால் இது சொற் பின்வருநிலையணி. (உக)

### இராவணன் துணைவரோடு அளகையை அடைதல்

275. மாயை வல்லனு மகோதரன்
வயப்பிர கத்தன்
தீய ராஞ்சுக சாரணர்
திறற்புகைக் கண்ணன்
ஆய மாமன்மா ரீசனவ்
வறுவர்தற் சூழப்
போயி னுனவ னளகையாம்
பொன்னகர் நோக்கி.

மாயை வல்லனும் மகோதரன், வயப் பிரகத்தன்
தீயராம் சுக சாரணர் திறல்புகைக் கண்ணன்,
ஆய மாமன் மாரீசன், அவ் அறுவர் தற்சூழ
போயினன் அவன், அளகையாம் பொன்நகர் நோக்கி.

பொ : மாயைகள் செய்வதில் வல்லவனாகிய மகோதரனும், வெற்றிவாய்ந்த பிரகத்தனும், தீயர்களாகிய சுகசாரணர்களும், திறமை மிக்க புகைக்கண்ணனும், தனக்குத் துணையான மாமனாகிய மாரீசனும் ஆகிய அந்த அறுவர் தன்னைச் சூழ்ந்துவர அவ்விராவணன் அளகை என்ற பொன் மயமான நகரை நோக்கிப் போயினான்.

கு : வயவு வலியாகும். சுகன், சாரணன் என்பது உம்மைத் தொகையில் சுகசாரணர் என்று வந்தது. மாரீசன் ஆகிய மாமன் இராவணனுக்குத் துணையானவன் ஆதலின் ஆய மாமன் எனச் சிறப்பித்தவாறு. இனி, மாமன் ஆய மாரீசன் எனக்கொண்டு கூட்டினும் அமையும். (உஉ)

காவலர் குபேரனுக்குக் கூறல்

276. சென்ற சேனையச் செறிபொழி
லளகையைச் செறுப்ப
நின்று காப்பவர் நீசனுந்
தசமுக னம்மேல்
அன்றி வந்துநம் மணிநகர்ப்
புறத்துவந் திறுத்தான்
என்று கூறமா டிருந்தவர்க்
கியக்கர்கோ னியம்பும்.

சென்ற சேனை அச்செறிபொழில் அளகையைச் செறுப்ப
நின்று காப்பவர், 'நீசனும் தசமுகன் நம்மேல்
அன்றி வந்து நம் அணிநகர் புறத்து வந்து இறுத்தான்'
என்று கூற மாடு இருந்தவர்க்கு இயக்கர் கோன் இயம்பும்.

பொ : முன்சென்ற சேனை அந்த நெருங்கிய சோலையை யுடைய அளகாபுரியைத் தாக்க அங்கு நின்று காவல் காப்பவர் (குபேரனிடம் சென்று) நீசனாகிய இராவணன் நம்மேல் பகைத்து வந்து நமது அழகிய நகர்ப்புறத்தில் (சேனையோடு) தங்கினான் என்று சொல்ல, தன் பக்கத்தில் இருந்தவர்கட்குக் குபேரன் சொல்வான்.

கு : செறுத்தல்–கோபித்துத் தாக்குதல். அன்றுதல்–பகைத்தல். இறுத்தல் – முற்றுகையிட்டுத் தங்குதல். மாடு – பக்கம். இயக்கர்கோன்–குபேரன். இயம்பியது வருஞ்செய்யுளில் காணலாம். (உகூ)

குபேரன் சொல்லியது

277. அறிவி லாதவற் கறிவன
சொல்லுவா ரவர்தாம்
இறுதி யெய்துவா ரென்னும
தின்றுகை கண்டோம்
உறுதி யாயின காரிய
முரைத்துவிட் டோமால்
மறுகி நேர்பொர வந்தனன்
வாளெயிற் றரக்கன்.

'அறிவு இலாதவற்கு அறிவன சொல்லுவார் அவர்தாம்
இறுதி எய்துவார் என்னும்; அது இன்றுகை கண்டோம்'
உறுதி ஆயின காரியம் உரைத்துவிட்டோமால்
மறுகி நேர்பொர வந்தனன் வாள் எயிற்று அரக்கன்.

பொ : 'அறிவு இலாதவற்கு அறிய வேண்டிய அரிய கருத்துக்களைச் சொல்லுபவர், தாமே அழிவினை அடைவார்கள்' என்னும் நூல் முடிபை இன்று நம்மிடத்தே காட்சியளவையால் கண்டோம். இராவணனுக்கு உறுதி தரும் காரியங்களைச் சொல்லி விட்டோம் அது கேட்டு மனம் குழம்பி எனக்கு நேரே போர்

செய்ய வந்திருக்கின்ருன், வாள்போன்ற பற்களையுடைய இராவணன்.

கு: அறிவு இல்லாதவற்கு அறிவுரை கூறிஞல் கூறிஞேர்க்கே துன்பம் உண்டாகும் என்பது நூல்களில் காணப்படும் நீதியாகும்; அதனைக் குபேரன் தன்னிடத்திலேயே அது நிகழ்தலைக் கண்டான் என்றவாறு. முன்பு இராவணனுக்குத் தூதுவன் மூலம் சொல்லி யனுப்பிய அறிவுரையின் விளைவுதான் இன்று இராவணன் போரோடு வந்தது என்பதைக் குபேரன் தன் அருகில் உள்ளோர்க்குக் கூறியவாறு. 'ஞானமும் கல்வியும் நவின்ற நூல் களும் ஈனருக்குரைத்திடில் இடரதாகுமே' (விவேகசிந்தாமணி) என்பதும் 'காணுதாற் காட்டுவான் தான் காணுன்' (குறள்–849) என்பதும் இங்கு ஒப்பு நோக்கந் தகுவன. மறுகுதல்–மனங் குழம்புதல். நமக்கு அறிவுரை கூற இவன் யார்? என்னும் செருக்கால் மனம் மாறுபடுதல். வாளெயிற்றரக்கன் என்றது, அவன் செய்யும் அடாத செயலை நினைந்து இழித்துக் கூறியபடி. அரக்கர் பிறப்புக் கேற்றதே செய்தான் என்றவாறு. (உஎ)

குபேரன் கோபித்துப் போர்க்குப் புறப்படல்

278. என்று வாய்மடித் தெரிவிழித்
திராக்கதர் கோமான்
வென்றி வீரமும் வரங்களும்
படும்படி விண்ணேர்
இன்று காண்பரா லெனவெழுந்
திரும்பரி யிரதம்
ஒன்று சேனைமுன் செல்கென
வுரைத்தன னுரவோன்.

என்று வாய் மடித்து எரிவிழித்து 'இராக்கதர் கோமான்
வென்றி வீரமும் வரங்களும் படும்படி விண்ணேர்
இன்று காண்பரால்' என எழுந்து இரும்பரி இரதம்
ஒன்று சேனைமுன் செல்கென உரைத்தனன் உரவோன்.

பொ : என்று சினக்குறிப்பால் வாயை மடித்துக்கொண்டு நெருப்பெனக் கண்சிவக்க விழித்துப்பார்த்து, அரக்கர் தலைவனான இராவணன்தன் வெற்றியால் வந்த வீரமும் அவன் தவத்தால் பெற்ற வரங்களும் அழிந்து படும் தன்மையை இன்று தேவர்கள் காண்பார்கள் என்று கூறிக்கொண்டே எழுந்து பெரிய குதிரைகள் பூட்டிய தேர்கள் பொருந்திய சேனை முன்பு புறப்பட்டுப் போவ தாகப் போர்க்கு என்று குபேரன் சொன்னான்.

கு : வாய்மடித்தலும் எரிவிழித்தலும் வெகுளியின் மெய்ப் பாடுகள். இராக்கதர் கோமான் என்றது இராவணனை. வெற்றி யால் வந்த வீரம், வென்றிவீரம் எனப்பட்டது. படும்படி—அழிந்து படும் தன்மை. வீரமும் வரங்களும் படும்படி விண்ணோர் இன்று காண்பரால் என்றது நெடுமொழி கூறலில் அடங்கும். நால்வகைச் சேனையில் இரதம் சிறந்தமைபற்றிப் பரிஇரதம் ஒன்றுசேனை எனச் சிறப்பித்துக் கூறினர். உரவோன் என்றது வலிமையுடைய குபேரனை. (உரு)

சேனையின் எழுச்சி

வேறு

279. அரக்க ரோடம ரென்றள காதிபன்
உரைத்த வாசகங் கேட்டலு மூழியில்
திரைப்பெ ருங்கடல் சீறி யெழுந்தென
விரைத்து மண்டி யெழுந்தது சேனையே.

அரக்கரோடு அமர் என்று அளகாதிபன்
உரைத்த வாசகம் கேட்டலும், ஊழியில்
திரைப் பெருங்கடல் சீறி யெழுந்தென
இரைத்து மண்டி எழுந்தது சேனையே.

பொ : அளகாபுரிக்கு அதிபனாகிய குபேரன் (தன் அமைச்ச ரிடம்) அரக்கரோடு போர் என்று சொன்ன வாசகத்தைக் கேட்ட அளவில் அலைகளோடுங் கூடிய கடல் ஊழியிறுதியில் சீறியெழுந் தன்மைபோல, அவன் சேனை ஆரவாரித்து நெருங்கிப் போர்க்கு எழுந்தது.

கு : குபேரன் சொல்லைக் கேட்டவுடன் அவன் சேனை அரக்கர்மேல் சீறியெழுந்த நிலையை விளக்க, ஊழியில் திரைப் பெருங்கடல் சீறி யெழுந்தென என உவமை கூறினர். உலகத்தை அழிக்கச் சீறியெழும் உகாந்தக் கடல்போல அரக்கரை அழிக்கச் சீறி ஆரவாரித்து எழுந்தது குபேரன் படை என்றவாறு. சேனை யின் பரப்பிற்கு ஊழிக்கடலும் அதன் ஆரவாரத்திற்குக் கடலின் அலையொலியும் அதன் சீற்றத்திற்குக் கடலின் சீற்றமும் ஒப்புமை யாம். இரைத்தல்–ஆரவாரித்தல். மண்டி–நெருங்கி. சேனை, கேட்டலும் இரைத்து மண்டி எழுந்தது என முடிக்க. (உசு)

வாச்சிய முழக்கமும் வீரர் நெருக்கமும் (27,28)

280. மூரி மேக முழங்கின வாமெனப்
பேரி பம்பை பெரும்பட கந்துடி
தாரை கொம்பொடு சங்கு முழங்கின
வீரர் வந்தணி வீதி நெருங்கினர்.

**மூரி மேகம் முழங்கின ஆம் எனப்**
**பேரி பம்பை பெரும்படகம் துடி**
**தாரை கொம்பொடு சங்கு முழங்கின;**
**வீரர் வந்து அணிவீதி நெருங்கினர்.**

பொ : பெரிய மேகங்கள் இடி முழக்கம் செய்தன என்னும் படி பேரிகையும் பம்பையும் பெரிய தம்பட்டமும் உடுக்கையும் காளமும் ஊதுகொம்பும் சங்கும் முழங்கின; வீரர்கள் வந்து அணி வகுப்பாகிய வீதியுள் நெருங்கினர்கள்.

கு : மூரி–பெருமை. பேரிகை முதலியன ஒலித்த போது எழுந்த பேரொலிக்கு உவமையாக மூரிமேகம் முழங்கினவாம் என என்றார். பேரி–பேரிகை–முரசு. பம்பை – ஒருவகை வாச்சியம்; முல்லை நிலப்பறை. படகம்–தம்பட்டம். துடி–உடுக்கை. தாரை–காளம். கொம்பு–ஊதுகொம்பு. அணிவீதி என்ற சக்கரவியூகம் கருடவியூகம் முதலிய அணி வகுப்பின் வீதியினை. (உஎ)

281. தாள்க ளோடவர் தாடடு மாறின
தோள்க ளோடுயர் தோள்க டுறுமின
வாள்க ளோடவர் வாள்கள் மயங்கின
கோள்க ளோடுயர் கொடிகள் பிணங்கின.

தாள்களோடு அவர்தாள் தடுமாறின;
தோள்களோடு உயர்தோள்கள் துறுமின;
வாள்களோடு அவர் வாள்கள் மயங்கின;
கோள்களோடு உயர் கொடிகள் பிணங்கின.

பொ : வீரர்களின் கால்களோடு கால்கள் தடுமாறிப் போரிட்டன. அவர்கள் உயர்ந்த தோள்களோடு தோள்கள் நெருங்கிப் போர் செய்தன. அவர்தம் வாள்களோடு வாள்கள் கலந்து போரிட்டன. விண்ணிலுள்ள கோள்களோடு அவர்கள் தேரில் உயர்த்திக்கட்டிய கொடிகள் பின்னிக் கொண்டன.

கு : இருதிற வீரர்களும் ஒருவரை ஒருவர் உதைத்துக் கொண்டனர் என்பார் அவர் தாள் தடுமாறின என்றார். தோளோடு தோள் மோதிக் கொண்டனர் என்பார், தோள்கள் துறுமின என்றார். துறுமுதல்--நெருங்குதல். வாட்போர் செய்தனர் என்பார் வாள்கள் மயங்கின என்றார். கோள்கள் என்பன விண்ணில் திரிகின்ற ஞாயிறு திங்கள் முதலிய நவ கோள்களை. கொடிகளின் உயர்வைக் குறிக்க வேண்டி உயர்வு நவிற்சியாக அவற்றோடு பிணங்கின என்றார். (உஅ)

குபேரன் போர்க்குப் புறப்படுதல்

282. ஆனை தேர்பரி யாளள வற்றதன்
சேனை சூழச் செறிகுழற் றேமொழி
மானை நேர்விழி மங்கையர் வாழ்த்திடத்
தான சீலன் றன்பதி தோன்றினான்.

ஆனை தேர் பரி ஆள் அளவு அற்ற தன்
சேனை சூழ, செறிகுழல் தேமொழி

**மானே நேர்விழி மங்கையர் வாழ்த்திட**
**தான சீலன் தனபதி தோன்றினுன்.**

பொ: யானேயும் தேரும் குதிரையும் காலாளுமாய் நிறைந்து அளவற்றுள்ள தனது சேனே சூழவும், நெருங்கிய கூந்தலேயும் தேன்போன்ற சொல்லினேயும் மான் நோக்கினேயொத்த கண்ணினேயும் உடைய மங்கையர் வாழ்த்துச் சொல்லவும், தானம் செய்யும் ஒழுக்கமுடையவனுய்க் குபேரன் போர்க்களத்திற்குப் புறப்பட்டான்.

கு: தனபதி சேனேசூழ மங்கையர் வாழ்த்திடத் தோன்றினுன் என இயையும். செறிகுழல் வினேத்தொகை. தேமொழி, உவமைத் தொகை. குழலேயும் மொழியையும் விழியையும் உடைய மங்கையர் என இரண்டனுருபும் உம்மையும் விரித்து மங்கையர்க்கு அடையாக்குக. தனபதிக்கு அடையாக வந்த தானசீலன் என்ற தொடரால் குபேரன் புறப்படும் போது யாத்திராதானம் செய்ததைப் புலப்படுத்தியதாகக் கொள்க. போர்க்களத்திற்குப் புறப்படும் போது தானம் செய்தல் உண்டு என்பதை, ''திருமறை புகன்ற தானம் வீசினன் இயற்றி மற்றும் வேட்டன வேட்டோர்க் கெல்லாம் ஆசற நல்கி யொல்காப் போர்த் தொழிற் கமைவ தானுன்'' (யுத்த–இராவணன் தேரேறு–3) என்றதால் அறியலாம். சீலனுய்த் தனபதி தோன்றினுன் எனக் குறிப்பு முற்றெச்சமாக்குக. (உகூ)

**இருதிறப் படைகளும் கைகலத்தல்**

283. திரைப்பெ ருங்கடன் மேற்கடல் சென்றெென
அரக்கர் சேனேயொ டும்மள கைப்படை
இரைத்து மண்டி யெதிர்ப்ப விமைப்பிலோர்
வெருக்கொ ளும்படி பூசல் விளேந்ததே.

**திரைப் பெருங்கடல்மேல் கடல் சென்றென**
**அரக்கர் சேனேயொடும் அளகைப்படை**
**இரைத்து மண்டி எதிர்ப்ப, இமைப்பு இலோர்.**
**வெருக் கொளும்படி பூசல் விளேந்ததே.**

**பொ :** அலைகளையுடைய பெரிய கடல்மேல் மற்றொரு கடல் சென்றதுபோல அரக்கர் சேனையோடும் அளகாபுரிக்கு உரிய குபேரனது சேனை ஆரவாரித்து நெருங்கி எதிர்க்க, கண் இமைத்தல் இல்லாத தேவர்கள் அச்சம் கொள்ளும்படி போர் பெரிதாக விளைந்தது.

**கு :** அரக்கர் சேனையோடு அளகைக்குரிய குபேரன் சேனை நெருங்கிப் போர் செய்த தோற்றம் ஒருகடல் மேல் மற்றொருகடல் சென்றது போலிருந்தது என இல் பொருள் உவமை கூறி விளக்கிய வாறு. இருதிறப்படையும் இருகடல் போன்ற பரப்பும் ஆரவாரமும் கொண்டிருந்தமை இவ்வுவமையால் புலப்படுத்தியவாறு. இமை யாத நாட்டமுடையராய் அப்போரினைப் பார்க்கும் தேவர்கள் அஞ்சி ஓடும்படி அப்போர் பெரிதாக விளைந்தது என்றவாறு. வெருக்கொளல்—அஞ்சுதல். பூசல்_போர். (ருமு)

**நால்வகைப்படையும் தனித்தனி போர் செய்தல்**

284. சென்று தாக்கின தேர்களுந் தேர்களும்
கன்று வேழமும் வேழமும் காந்தின
ஒன்று மாவொடு மாப்பொர வுற்றன
வென்றி வீரரும் வீரரும் வெம்பினர்.

**சென்று தாக்கின தேர்களும் தேர்களும்;**
**கன்று வேழமும் வேழமும் காந்தின;**
**ஒன்றும் மாவொடு மாப்பொர உற்றன;**
**வென்றி வீரரும் வீரரும் வெம்பினர்.**

**பொ :** இரு சேனைகளிலும் உள்ள தேர்களும் தேர்களும் எதிர்த்துச் சென்று தாக்கிப் போர் செய்தன; மதத்தால் கதமிக்க யானையும் யானையும் மனம் கொதித்துப் போர் செய்தன; வலிமை யால் ஒத்துள்ள குதிரையோடு குதிரை போர் செய்யத் தொடங்கின; வெற்றியினையுடைய காலாள் வீரரும் காலாள் வீரரும் மனம் வெதும்பிப் போர் தொடங்கினர்.

தேர்களும் தேர்களும் சென்று தாக்கின என இயையும். கன்றுதல்—கோபித்தல். காந்துதல் என்றது, இங்கு மனங் கொதித்துப் போர் செய்தலையுணர்த்தியது. ஒன்றுதல்—வலிமையால் ஒற்றுமையுறல். ஆவது, ஒத்தவலிமையுடையது என்றவாறு. வெம்புதல் இங்கு மனம் வெதும்பிப் போரிடுதலை யுணர்த்தியது. (ருக)

**போர் வீரர்களின் அழிவு**

285. கொற்ற வீரர் கொடும்படை யேவிட
அற்ற கால்சிர மாய்நெரிந் தோங்கின
இற்ற கைமெய் யிருதுணி யாயின
உற்ற தாழி யுதிரத்தின் வெள்ளமே.

**கொற்ற வீரர் கொடும்படை ஏவிட**
**அற்ற கால், சிரம் ஆய் நெரிந்து ஓங்கின;**
**இற்ற கை மெய் இருதுணி ஆயின;**
**உற்றது ஆழி, உதிரத்தின் வெள்ளமே.**

பொ: வெற்றிவாய்ந்த வீரர்கள் கொடிய படைக்கலங்களை விடுதலால் அறுபட்ட கால்களும் தலைகளுமாய் நெரிபட்டு அவை மலைபோல் உயர்ந்து தோன்றின; கைகள் முறிந்தன, உடம்புகள் இரு துண்டங்கள் ஆயின; (இறந்துபட்டவர்களின் உடம்பிலிருந்து வெளிப்பட்ட) இரத்த வெள்ளம் கடலை அடைந்தது.

கு: கொடும்படை என்றது செயலால் கொடியதாகிய படைக்கலன். போர் வீரர்களின் அறுபட்ட காலும் தலையும் மிகுதியாதலின் நெரிந்து ஓங்கின என்றார். கைஇற்ற, மெய் இருதுணி ஆயின என்க. உதிரத்தின் வெள்ளம் ஆழி உற்றது என இயையும். உதிர வெள்ளம் கடலை அடைந்தது என்பதால் இறந்தவர்களின் மிகுதி புலப்படுத்தியவாறு. (ருஉ)

**புகைக்கண்ணனும் மகோதரனும் பொருதல்**

286. ஆய காலை யளகைப் பெரும்படை
வீய நூறிய வெம்புகைக் கண்ணனும்

மாயம் வல்ல மகோதர னும்முதல்
ஆய வீர ரழலெழச் சீறினர்.

ஆய காலை அளகைப் பெரும்படை
வீய நூறிய வெம்புகைக் கண்ணனும்
மாயம் வல்ல மகோதரனும் முதல்
ஆய வீரர் அழல் எழச் சீறினர்.

பொ : அப்போது அளகைக்குரிய பெரிய சேனை இறக்குமாறு அழித்த புகைக் கண்ணனும் மாயச் செயல்களில் வல்ல மகோதரனும் முதலாய வீரர்கள் நெருப்புப் பொறி கண்ணில் எழுமாறு கோபித்தார்கள்.

கு : வீதல்—இறத்தல். நூறுதல்-அழித்தல், புகைக்கண்ணன் அளகைப்படையை அழித்தவனுயிருந்தும் மீண்டும் கோபித்தான் என்றவாறு. புகைக்கண்ணனும் மகோதரனும் முதலிய அரக்க வீரர்கள் கண்ணில் தீயெழக் கோபித்தார்கள் அளகைப்படையை என்க. (௩௩)

ஏக கண்டகன் என்னும் இயக்கனது போர் (34,35)

287. ஏக வீர வரக்க ரியக்கரைப்
போக நூறிப் புனல்பெருங் காற்றினும்
நாக மோழை யினும்புக நாடுபோர்
ஏக கண்டக னென்போ னுரறினன்.

ஏக வீர அரக்கர் இயக்கரைப்
போக நூறி, புனல் பெரும் காற்றினும்
நாக மோழையினும் புக, நாடு போர்
ஏக கண்டகன் என்போன் உரறினன்.

பொ : ஒரு தன்மையான வீரத்தையுடைய அரக்கர் இயக்கர்களைப் பின்னிட்டு ஓடுமாறு அழித்தலால், மழையோடுங் கூடிய பெரிய காற்றிலும் நாகம் நுழைந்த வழியிலும் அரக்கர் புக

விரும்புதற்குரிய கடுமையான போரினை ஏக கண்டகன் என்னும் இயக்கன் ஆரவாரத்தோடு செய்யலானான்.

கு: ஏகவீர அரக்கர் என்றது ஒரு தன்மையான வீரத்தை யுடைய அரக்கர் என்றவாறு. நூறி என்பது ஏதுப் பொருளில் வந்த செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; மழைபெய்து குளம் நிறைந்தது என்பது போன்றது. மழையோடுங் கூடிய பெருங் காற்றிலும் நாகம் நுழைந்த வழியிலும் போதல் யார்க்கும் இயலாதது ஆயினும் அவற்றினும் கொடுமை மிக்கது ஏககண்டனின் போர் ஆதலின் அந்தப் போர்க்குப் பயந்த அரக்கர் புனல் பெருங்காற்றினும் நாக நுழைந்த வழியிலும் புக விரும்பினார்கள் என்றவாறு. நாகம் என்றது நஞ்சுமிக்க நல்ல பாம்பினை. மோழை-நுழைவாயில். இதனால் ஏககண்டனின் போரின் கடுமை புலப் படுத்தியவாறு. உரறுதல்-ஆரவாரித்தல். போர் உரறினான் என்றது போரினை ஆரவாரத்தோடு செய்தான் என்னும் கருத்தினது. (௩௬)

288. ஆய வன்னிலை கண்டவ னோடடல்
மாயை யாவையும் வல்லமா ரீசனும்
தீய வன்சென்று தாக்கலுந் திண்டிறல்
சாய மோதினன் றன்கரத் தண்டினால்.

**ஆயவன் நிலை கண்டு, அவனோடு அடல்**
**மாயை யாவையும் வல்ல மாரீசனும்**
**தீயவன் சென்று தாக்கலும், திண்திறல்**
**சாய மோதினன் தன் கரத் தண்டினால்.**

பொ: அந்த ஏககண்டகனின் நிலைமையைக் கண்டு அவனோடு வலிமை மிக்க மாயைச் செயல் யாவையும் செய்ய வல்லவனாகிய மாரீசனாகிய தீயவன் சென்று தாக்குதலும் அந்த மாரீசனது திண்ணிய வலிமை சாயுமாறு, ஏக கண்டகன் தன் கைத் தண்டினால் அவனை மோதினான்.

கு: அடல்மாயை-வலிமை வாய்ந்த மாயச் செயல். மாரீசனும் தீயவன் என்றது இருபெயரொட்டு. தன் கரத்தண்டினால் மோதினவன் ஏககண்டகன் என்னும் இயக்கன் என்க. மோதுதல்-தாக்குதல். (௩டு)

### மாரீசன் போர்

289. மயங்கி வீழ்ந்து தெளிந்தமா ரீசனும்
தயங்கு பூண்வலி சாய வியக்கரைத்
தியங்கி யோடத் துரந்தவன் சேனைமண்
முயங்கி வீழக் கதைகொண்டு மோதலும்.

மயங்கி வீழ்ந்து தெளிந்த மாரீசனும்
தயங்கு பூண் வலி சாய இயக்கரைத்
தியங்கி ஓடத்துரந்து அவன் சேனை, மண்
முயங்கி வீழக் கதைகொண்டு மோதலும்.

பொ: கதையால் அடிபட்டு உணர்வுமயங்கி வீழ்ந்து பின் தெளிந்த மாரீசனும் இயக்கர்களை விளங்குகின்ற அணிகலன்களும் வலிமையும் வீழச் சோர்ந்து ஓடும்படி துரத்திப், பின்பு அந்த ஏக கண்டகனது சேனை மண்ணைத் தழுவிக் கீழ் விழும்படி தன் கதையைக் கொண்டு தாக்குதலும்.

கு: குளகம். வருஞ்செய்யுளில் முடியும். இயக்கர்கள் விளக்கமுடைய அணிகலன்களை அணிவதில் பெருவிருப்புடையவர்கள் ஆதலின் 'தயங்குபூண் வலி சாய' என்றார். பூணும் வலியும் சாய என உம்மைத் தொகையாக்குக. இயக்கரைத் தயங்கு பூண்வலி சாயத் தியங்கி யோடத் துரந்து அவன் சேனை வீழ மோதலும் என இயையும். அவன் என்றது, ஏக கண்டகனை. தரைமேல் வீழும் தோற்றம் மண்ணைத் தழுவுதல் போன்று தோன்றுதலின் மண் முயங்கி வீழ என்றார். மாரீசனும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. ஏககண்டகனேயன்றி மாரீசனும் கதை கொண்டு தாக்கினான் எனப் பொருள்படுதல் கண்டு கொள்க. தியங்குதல்-சோர்தல். துரந்து-துரத்தி. (௩சா)

இராவணன் போர்

290. பற்ற லார்கள் படுகள வம்மியில்
கொற்ற மேவுதண் டென்னுங் குழவியால்
வெற்றி வேலிலங் கேசன் வெகுண்டெழுந்
துற்ற சேனை யொருகுழம் பாக்கினான்.

பற்றலார்கள் படுகள அம்மியில்
கொற்றம் மேவு தண்டு என்னும் குழவியால்
வெற்றிவேல் இலங்கேசன் வெகுண்டு எழுந்து,
உற்றசேனை ஒரு குழம்பு ஆக்கினான்.

பொ : வெற்றிகொள்ளும் வேலினையுடைய இராவணன் கோபித்து எழுந்து, 'பகைவர்களின் படுகளமாகிய அம்மியில் வெற்றி பொருந்திய தண்டாயுதம் என்னும் குழவியினால் (அரைத்து) அங்குப் பொருந்திய இயக்கரின் சேனையை ஒரு குழம்பாகச் செய்தான்.

கு : மாரீசன் கதை கொண்டு மோதலும் இலங்கேசன் அது கண்டு தானும் வெகுண்டெழுந்து இயக்கர் சேனையைத் தண்டா யுதத்தால் உருக்குலைய அழித்தான் என்றவாறு. மாரீசனும் இராவணனும் தண்டு கொண்டு இயக்கர் சேனையைத் தாக்கினார்கள் என்க. பற்றலார்—பகைவர். படுகள அம்மிஎனவும் தண்டென்னும் குழவி எனவும் உருவகமாகக் கூறி அவ்வுருவகத்திற்கு ஏற்பச் சேனையை ஒரு குழம்பாக்கினான் எனத்திறம்படக் கூறியவாறு. அம்மியில் வைத்துக் குழவியால் அரைத்ததைக் குழம்பு ஆக்குதல் அட்டில் தொழிலில் உண்டன்றோ? இலங்கேசன் என்றது இராவணனை. இலங்கேசன் வெகுண்டெழுந்து படுகள அம்மியில் தண்டு என்னும் குழவியால் உற்ற சேனையை அரைத்துக் குழம்பாக்கினான் என ஒரு சொல் வருவித்து முடிக்க. (௩௭)

இராவணன் அளகாபுரி வாயிலைத் தாக்குதல்

291. தானை யாவுந் தரைப்படுத் தித்தம
ரான தீய மகோதர னோடடல்

ஏனை யோர்புடை சூழ விராவணன்
வானை நோக்கிய வாயிலை முட்டினன்.

தானை யாவும் தரைப்படுத்தித் தமர்
ஆன தீய மகோதரனோடு அடல்
ஏனையோர் புடை சூழ இராவணன்
வானை நோக்கிய வாயிலை முட்டினன்.

பொ : குபேரன் சேனை எல்லாவற்றையும் அழித்துத் தரையில் கிடக்கச்செய்து, தனக்குத் தமராகவுள்ள தீமைமிக்க மகோதரனோடு, வலிமை மிக்க ஏனையோர்களும் புடைசூழ இராவணன் சென்று, வானளாவியுள்ள அளகாபுரியின் மதில் வாயிலைத் தாக்கினன்.

கு : தரைப்படுத்தல் என்பது இங்கு அடியோடு அழித்தலை யுணர்த்தியது. அடல்-வலிமை. வானளாவி உயர்ந்த வாயில் என்பார் வானைநோக்கிய வாயில் என்றார். முட்டுதல்-தாக்குதல். வாயிலைத் தாக்குதலாவது வாயில் காத்து நிற்கும் படையைத் தாக்குதல். (௩அ)

இராவணனோடு வாயிற்காவலன் போர் செய்தல் (39-41)

292. வானி மிர்ந்த மழைதவழ் வாயிலோன்
மேனி மிர்ந்தெழு மெய்யினன் சூரிய
பானு வென்னும் பெரியவன் பாதக
நீநில் லென்றெதிர் வந்தமர் நேர்ந்தனன்.

வான் நிமிர்ந்த மழை தவழ் வாயிலோன்
மேல் நிமிர்ந்து எழும் மெய்யினன் சூரிய
பானு என்னும் பெரியவன், பாதக!
நீநில் என்று எதிர் வந்து அமர் நேர்ந்தனன்.

பொ : விண்ணில் நிமிர்ந்ததாய் மேகங்கள் தவழ்கின்ற வாயிலின்கண் உள்ளவனும் மேலே உயர்ந்து எழுந்த உடம்பையுடை

யவனும் ஆகிய சூரியபானு என்கின்ற பெரியவன் (தான் காக்கும் வாயிலில் வந்து முட்டிய இராவணனைப் பார்த்து) ஏ பாதகனே! நீ நில் என்று அவன் எதிரில் வந்து போர் செய்தான்.

கு : வாயிலோனாகிய சூரியபானு இராவணனோடு போரெதிர்ந்தான் என்றவாறு. வான் நிமிர்ந்த வாயில், மழை தவழ் வாயில் என வாயிலுக்கு அடையாக்குக. வாயிலோனும் மெய்யினனும் ஆகிய சூரியபானு என்னும் பெரியவன் என இயையும். வானிமிர்ந்த வாயிலுக்கு ஏற்ப அவ்வாயிலிற் காவலனும் மேல் நிமிர்ந்தெழு மெய்யினனாக இருந்தான் என்றவாறு. 'பாதக' என்பது இராவணனைக் குறித்து வாயிலோன் விளித்த விளி. வாயிலில் நுழையாமல் நில் என நிறுத்தி அவ்விராவணனோடு போர் செய்தான் என்றவாறு. (௯௨)

293. இலங்கு தோரண கம்ப மிருகையால்
நிலங்கு லுங்கிட வாங்கி நிருதன்மேல்
விலங்கன் மேலிடி வீழ்ந்தென வீழ்த்தனன்
கலங்க லானிலங் காபுரிக் காவலன்.

**இலங்கு தோரண கம்பம் இருகையால்**
**நிலம் குலுங்கிட வாங்கி. நிருதன்மேல்**
**விலங்கல்மேல் இடி வீழ்ந்தென வீழ்த்தனன்**
**கலங்கலான் இலங்காபுரிக் காவலன்.**

பொ : வாயிலில் விளங்குகின்ற தோரணகம்பத்தை இரண்டு கைகளாலும் நிலம் குலுங்குமாறு பிடுங்கி இராவணன்மேல் மலைமேல் இடிவீழ்ந்தாற்போல வீசி எறிந்தான்; எறிந்தும் இலங்கை வேந்தன் ஆகிய இராவணன் கலங்காமல் நின்றான்.

கு: சூரியபானு என்பான் வாயிலிலிருந்த தோரணகம்பத்தைப் பிடுங்கி இராவணன் மேல் வீசினான்; இராவணன் அதுகண்டு கலங்காதவனாய் நின்றான் என்றவாறு. தோரண கம்பத்தை நிலத்திலிருந்து வாங்குங்கால் நிலம் குலுங்கிற்று என்றது, அதனை வாங்கும் முயற்சியின் கடுமையுணர்த்தியவாறு. தோரண கம்பம்

இராவணன்மேல் வீழ்ந்தபோது மலையின்மேல் இடிவீழ்ந்தாற் போன்ற பேரொலியும் அசைவும் உண்டாயின என்றவாறு. இலங்காபுரிக் காவலன் கலங்கலான் என்றது இராவணனது துணிவும், வலிவும் புலப்படுத்தியவாறு. இராவணனுக்கு மலையும் தோரண கம்பத்திற்கு இடியும் உவமைகள். (௬௰)

294. அன்ன தோரண மேகொண் டரக்கர்தம்
மன்னன் மன்னும் பெருவலி வாயிலோன்
றன்னை மெய்டெதரி யாவகை சாடினன்
என்ன வீரமோ வென்றிமை யோர்சொல.

அன்ன தோரணமே கொண்டு அரக்கர்தம்
மன்னன் மன்னும் பெருவலி வாயிலோன்
தன்னை மெய்தெரியாவகை சாடினன்;
என்ன வீரமோ என்று இமையோர் சொல.

பொ: சூரியபானு எறிந்த அத்தோரண கம்பத்தையே கொண்டு அரக்கர்க் கரசனாகிய இராவணன் நிலைபெற்ற பெரிய வலிமையையுடைய அவ்வாயிலோனை உடம்பு உருத்தெரியாதபடி மோதினன்; இமையா நாட்டமுடைய தேவர்கள் அவன் செயல் கண்டு என்ன வீரமோ என்று வியந்து சொல்லுமாறு.

கு: அரக்கர்தம் மன்னன் இமையோர் என்ன வீரமோ என்று சொல, அன்ன தோரணமே கொண்டு வாயிலோன்தன்னை மெய்தெரியாவகை சாடினன் என இயையும். வேறு படைக்கலம் வேண்டாமல் சூரியபானு தன்மேல் வீசிய தோரண கம்பத்தையே கொண்டு இராவணன் அவனைச் சாடினன் என இராவணன் திறலைப் புலப்படுத்தியவாறு. மெய்தெரியாவகை சாடினன் என்றது, உருத்தெரியாமல் சிதையுமாறு மோதினன் என்றவாறு. மன்னும் பெருவலியையுடைய சூரியபானுவை இராவணன் இவ்வாறுசாடி யழித்ததைக் கண்டுகொண்டிருந்த தேவர்கள் என்ன வீரமோ என்று வியந்து இராவணனைப் பாராட்டினர் என்றவாறு. (௬௧)

### இராவணனோடு மாணுபத்திரன் போர்

295. ஏணின் மிக்கவன் வீழ, வியக்கர் கோன்
காண வப்படை கைகழிந் தோடிடத்
தாணு வொத்த புயத்தினன் றானைசூழ்
மாணு பத்திரன் வந்து விலக்கினான்.

ஏணின் மிக்கவன் வீழ, இயக்கர் கோன்
காண அப்படை கைகழிந்து ஓடிட
தாணு ஒத்த புயத்தினன் தானைசூழ்
மாணு பத்திரன் வந்து விலக்கினான்.

பொ: வலிமைமிக்கவனாகிய சூரியபானு இராவணனால் இறந்து வீழ்ந்தமையால், குபேரன் காணும்படி அவன் கண்ணெதிரே அவன் இயக்கர் சேனை கைகடந்து பின்னிட்டு ஓடிட, (அதுகண்டு) தூணையொத்த தோள்களையுடையவனும் சேனையால் சூழப்பட்ட மாணுபத்திரன் என்பவன் இராவணனை அவ்வாயிலில் நுழையாதபடி விலக்கினான்.

கு: ஏண்–வலிமை. கைகழிதலாவது படைவகுப்பைக் கழிந்து பின்னிடல். தாணு–தூண், மாணுபத்திரன் என்பவன் தன் சேனைசூழ வந்து அளகாபுரியின் வாயிலில் நுழைய முயலும் இராவணனை விலக்கித் தடை செய்தான் என்றவாறு. போர் செய்தற்கேற்ற தோள்வலியும் உடையவன் என்பது தோன்ற தாணுவொத்த புயத்தினன் தானை சூழ் மாணுபத்திரன் எனச் சிறப்பித்தார். படைவீரர்கள் பின்னிட்டு ஓடவும் தான் ஓடாது நின்று போர் செய்யும் இத்தகைய வீரன் நிலையை எருமை மறம் எனச் சிறப்பிப்பர் புறப்பொருள் வெண்பாமாலையுடையார் 'கடுங்கண் மறவன் கனல் விழியாச் சீறி நெடுங்கைப் பிணத்திடை நின்றான் நடுங்கமருள், ஆள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி வாள் வெள்ளந் தன்மேல் வர' என்ற எடுத்துக்காட்டு இங்கு ஒப்பு நோக்கத்தகும். (௬௨)

மாணுபத்திரனை மகோதரன் முதலியோர் தாக்குதல்

296. விலங்கி யாங்கவன் வெய்ய வரக்கரைக்
கலங்கி யோடக் களப்படக் கொன்றிட
வலங்கொள் வாளம் மகோதர ஞதியோர்
சலங்கொள் சீய மெனவந்து தாக்கினர்.

விலங்கி ஆங்கு அவன் வெய்ய அரக்கரைக்
கலங்கி ஓடக் களப்படக் கொன்றிட,
வலம்கொள் வாள்அம் மகோதரன் ஆதியோர்
சலம்கொள் சீயம் என வந்து தாக்கினர்.

பொ: அவ்விடத்து இராவணனைத் தடுத்து நிறுத்திய மாணு பத்திரன், கொடிய அரக்கரைக் கலங்கிப் புறங்காட்டி ஓடுமாறும் போர்க்களத்தில் இறந்துபடுமாறும் கொல்லாநிற்க, வலக்கையில் கொண்ட வாளினையுடைய அந்த மகோதரன் முதலியோர் கோபங்கொண்டெழுந்த சிங்கம் என்னும்படி சினந்து வந்து தாக்கினர்கள்.

கு: விலங்குதல்–விலக்குதல்; தடுத்தல். அரக்கரைக் கொன்றிட என இயையும். கலங்கியோடுமாறு சிலரையும் களத்தில் இறந்துபடுமாறு சிலரையும் செய்தான் என்றவாறு. கொல்லுதல், வருத்துதலையும் இறக்கச் செய்தலையும் உணர்த்திநின்றது. வலம் என்றது வலக்கையை, வலிமை எனலும் ஆம். சலம்–கோபம். சீயம்–சிங்கம். அம்மகோதரன் என்புழி அகரம் பண்டறி சுட்டாய் நின்றது. (௨௯௬)

297. தாக்கி மேல்வரு தானை சரிந்திட
நூக்கி யாயிர மாயிர நூழில்கள்
ஆக்கி யாங்கவ ரார்த்திட வப்படை
காக்கு நாயகன் கண்ணெரி கான்றுளான்.

தாக்கி மேல்வருதானை சரிந்திட
நூக்கி ஆயிரம் ஆயிரம் நூழில்கள்

ஆக்கி, ஆங்கு அவர் ஆர்த்திட அப்படை
காக்கும் நாயகன் கண் எரி கான்றுளான்.

பொ : மகோதரன் முதலியோர் அவ்வாறு தாக்கித் தம்மேல் வரும் சேனை சரிந்திடுமாறு தள்ளி ஆயிரம் ஆயிரம் கொலைகளைச் செய்து அவ்விடத்தே ஆரவாரம் செய்ய, அந்தச் சேனையைக் காக்கும் தலைவனாகிய மாணுபத்திரன் (கண்டு) கண்களில் எரி கக்குவானானான்.

கு : சரிதல்-பின்னிடுதல்; அழிதலும் ஆம். நூக்குதல்—தள்ளுதல். நூழில்—கொலை. அவர் என்றது மகோதரன் முதலிய அரக்கரை. அப்படை காக்கு நாயகன் என்றது, மாணுபத்திரனை. அரக்கர்தம் செயலைக்கண்ட மாணுபத்திரன் கண்களில் எரியைக் கக்கினான். எரி காலுதலாகிய காரியம் காரணமாகிய கடுங் கோபத்தையுணர்த்தியது. (௪௪)

புகைக்கண்ணன் போர்

298. நன்று நன்றுநம் வீர மெனநகாக்
கொன்று மேல்வரு கூற்றமன்னோர்களில்
கன்று வெம்புகைக் கண்ணனைக் கண்ணுருச்
சென்று தாக்கினன் றேவர் திகைப்பவே.

நன்று நன்று நம் வீரம், என நகாக்
கொன்று மேல்வரு கூற்றம் அன்னோர்களில்
கன்று வெம்புகைக் கண்ணனைக் கண்ணுருச்
சென்று தாக்கினன், தேவர் திகைப்பவே.

பொ : (மாணுபத்திரன்) நம்வீரம் நன்று நன்று என்று கூறிச் சிரித்துக்கொண்டு, சேனையை அழித்துக்கொண்டு முன்னேறி வருகின்ற எமனைப் போன்ற கொடிய வீரர்களில் கோபிக்கின்ற கொடிய புகைக்கண்ணனைக் கண்டு சென்று தேவர்களும் திகைப்புறுமாறு அவனைத் தாக்கினான்.

கு: மாணுபத்திரன் சேனையொடு சென்று தாக்கியும் அரக்கர்கள் துணிந்து பலரைக் கொன்று கொண்டு அளகாபுரி வாயிலில் நுழைந்துவிட்டமையால் நம் வீரம் நன்று நன்று என நகுவானுயினன். தம் வீரமின்மையை எள்ளுதல்காரணமாக நகை பிறந்தது மாணுபத்திரனுக்கு. 'நகா' என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; நக்கு என்பது பொருள். இரக்கமின்றிப் பலரைக் கொல்லுதலால் கொன்று மேல்வரு கூற்றம் அன்னோர்களில் என எமனை அவர்க்கு உவமை கூறினர். கன்றுதல்-கோபித்தல். பழகுதலுமாம். புகைக்கண்ணன் என்பது தூமாட்சன் என்ற வடசொல்லின் பெயர்ப்பாகும். மாணுபத்திரனது தாக்குதலைக் கண்டு தேவர்களும் திகைத்தனர் என்க. இதுகாறும் மாணுபத்திரன்பால் கண்டிராத ஆற்றலைக் காணுதலால் தேவர் திகைக்கலாயினர் என்க.

(சரு)

299. தாக்கு வெம்போ ரியக்கர் தலைவனும்
வீக்கும் பைங்கழல் வெம்புகைக் கண்ணனும்
நூக்கி நாட்ட மெரியெழ நோக்கியோர்
போக்கி லாது பொருகின்ற வெல்லையில்.

**தாக்கு வெம்போர் இயக்கர் தலைவனும்**
**வீக்கும் பைங்கழல் வெம்புகைக் கண்ணனும்**
**நூக்கி நாட்டம் எரிஎழ நோக்கி ஓர்**
**போக்கிலாது பொருகின்ற எல்லையில்.**

பொ: தாக்குகின்ற கொடிய போரில் வல்ல இயக்கர் தலைவனாகிய மாணுபத்திரனும் காலில் கட்டிய பசுமையான வீரக் கழலினையுடைய கொடிய புகைக் கண்ணனும் ஒருவரை ஒருவர் தள்ளிக் கண்களில் எரி எழுமாறு பார்த்துப் போர் முறையில் ஒரு குற்றமும் இல்லாமல் போர் செய்கின்ற பொழுது.

கு: இயக்கர் தலைவன் என்றது மாணுபத்திரனை. வீக்குதல்-கட்டுதல். நூக்குதல்-தள்ளுதல். போக்கு-குற்றம். போர் செய்யும்

முறையில் நேர்கின்ற குற்றங்களில் ஒரு குற்றமும் நிகழாது நல்ல முறையில் போர் செய்கின்றபோது என்க. நாட்டம்-கண். எல்லை இங்குக் கால எல்லையை உணர்த்தியது. குளகம். வரும் செய்யுளில் முடியும். (௬௬)

300. வாணி ரைத்த மணிவல யங்களாம்
பூணு டைப்புயத் தம்பன் புகைக்கண்ணன்
மாணு பத்திரன் றன்வரை மார்பிடை
ஏணு டைக்கை முசலத்தி னெற்றினான்.

வாள் நிரைத்த மணி வலயங்களாம்
பூணுடைப் புயத் தம்பன் புகைக்கண்ணன்
மாணு பத்திரன்தன் வரை மார்பிடை
ஏணுடைக்கை முசலத்தின் எற்றினான்.

பொ : ஒளி பொருந்த வரிசையாகப் பதிக்கப் பெற்ற மணிகளையுடைய வலயங்களாகிய பூணினையுடைய தோள்களாகிய தூண்களையுடைய புகைக்கண்ணன் மாணுபத்திரனது மலை போன்ற மார்பில் வலிமையுடைய இருப்புலக்கையால் தாக்கினான்.

கு : வாள்–ஒளி. நிரைத்தமணி என்றது வரிசையாகப் பதிக்கப் பெற்ற நவமணிகளை. வாகுவலயம் நவமணிகள் பதித்துச் செய்யப் பெற்றமையால் மணிவலயங்கள் எனப்பட்டன. தூண்களுக்குப் பூண் கட்டுதல் உண்டு. புகைக்கண்ணன் தோள்களைத் தூணாக உருவகம் செய்தமைக்கேற்ப, அத்தோள்களில் அணிந்த மணிவலயங்களைப் பூணாக உருவகம் செய்தவாறு. வலயங்களாம் பூண் என்க. தம்பம்–தூண். புயமாகிய தம்பத்தையுடையவன் புயத்தம்பன் எனப்பட்டான். புயத்தம்பனாகிய புகைக்கண்ணன் என இருபெயரொட்டாக்குக. வரைமார்பு உவமைத் தொகை. வரைபோன்ற மார்பு என்க. ஏண்–வலிமை. முசலம்–இருப்புலக்கை. எற்றுதல்–அடித்தல், மோதுதல், தாக்குதல். (௬௭)

301. அலகி லாற்ற லரக்க னடித்திட
நிலைக லங்க லிலாது நிசாசரன்
தலைநெ ரித்திடத் தண்டி னடித்தலும்
மலைவி ழுந்தென வீழ்ந்தனன் மண்ணின்
[மேல்.

அலகு இல் ஆற்றல் அரக்கன் அடித்திட,
நிலை கலங்கல் இலாது, நிசாசரன்
தலைநெரித்திடத் தண்டின் அடித்தலும்
மலை விழுந்தென வீழ்ந்தனன் மண்ணின்மேல்.

பொ: அளவில்லாத ஆற்றலையுடைய புகைக்கண்ணனாகிய அரக்கன் இருப்புலக்கையால் அடித்திடவும் மாணுபத்திரன் நிலை கலங்காமல் அந்த அரக்கனுடைய தலை நெரிந்திடும்படி தண்டினால் அடித்தவுடன் புகைக்கண்ணன் மலைவிழுந்தாற்போல மண்மேல் விழ்ந்தான்.

கு: புகைக்கண்ணன் இரும்புலக்கையால் அடித்திடவும் அந்த அடிக்கு நிலைகலங்காமல் நின்று மாணுபத்திரன் தன் தண்டினால் அப்புகைக்கண்ணன் தலை நெரிந்துபோகும்படி அடித்தலும் அவன் மலைபோலத் தரையில் வீழ்ந்தான் என்றவாறு. புகைக்கண்ணனது உடம்பின் பெருமை தோன்ற மலை விழுந்தென வீழ்ந்தனன் என்று உவமை கூறினர். மாணுபத்திரன் வலிமை புலப்படுத்த வேண்டி 'அலகில் ஆற்றல் அரக்கன் அடித்திட நிலைகலங்கல் இலாது' என்றார். நிசாசரன்—இரவில் சஞ்சரிப் போனாகிய அரக்கன். (சஅ)

இராவணன் மாணுபத்திரனோடு பொருதல்

302. ஆங்க வன்விழக் கண்ட வரக்கர்கோன்
தாங்கு தண்டினன் சென்று தலைப்படப்
பூங்க ழற்கா லியக்கனும் போரெதிர்
நீங்க லான்வந் தவனொடு நேர்ந்தனன்.

ஆங்கு அவன் விழக் கண்ட அரக்கர்கோன்
தாங்கு தண்டினன் சென்று தலைப்பட,
பூங்கழற்கால் இயக்கனும் போர்எதிர்
நீங்கலான் வந்து அவனொடும் நேர்ந்தனன்.

பொ : அவ்விடத்து அப்புகைக்கண்ணன் இறந்துவீழக் கண்ட இராவணன், கையில் தாங்கிய தண்டினையுடையவனாய்ச் சென்று மாணுபத்திரன் முன் நிற்க, பொலிவுடைய வீரக்கழலை யணிந்த காலினையுடைய மாணுபத்திரனும் போர் எதிர்தலில் நின்று நீங்காதவனாய் வந்து அந்த இராவணனோடு போர் செய்யத் தொடங்கினான்.

கு : அரக்கர்கோன் என்றது இராவணனை. தலைப்படல் என்பது அங்குச் சென்று நிற்றலை யுணர்த்தியது. பேராற்றல் படைத்த இராவணனைக் கண்டு நடுங்காமல் மாணுபத்திரன் அவ்விராவணனோடும் போர் நேர்ந்தான் என்பார், போரெதிர் நீங்கலான் வந்து அவனொடும் நேர்ந்தனன் என்றார். இயக்கன் என்றது மாணுபத்திரனை. அவனொடும் என்புழி உம்மை உயர்வு சிறப்பும்மை; புகைக்கண்ணனோடு மட்டுமன்றி இராவணனோடும் நேர்ந்தனன் என இயைத்து, இறந்தது தழுவிய எச்சவும்மையாகவும் கொள்ளலாம். போரெதிர் என்புழி எதிர் என்பது, எதிர்தல் என்று தொழிற்பெயர்ப் பொருளையுணர்த்தியது; முதனிலைத் தொழிற்பெயர். எதிர்தலினின்று நீங்கலான் என ஐந்தன் உருபு விரிக்க. (௩௬)

303. அக்கு ரூர னு மாங்கவ னுஞ்சினம்
மிக்க போரி லிராவணன் மெய்யின்மேல்
தைக்க வெய்ய வியக்கன்வெந் தண்டினால்
பக்க மோலி பறிந்திட மோதினான்.

அக்குரூரனும் ஆங்கு அவனும் சினம்
மிக்க போரில் இராவணன் மெய்யின்மேல்
தைக்க, வெய்ய இயக்கன் வெம் தண்டினால்.
பக்கமோலி பறிந்திட மோதினான்.

பொ : அந்தக் கொடியவனாகிய இராவணனும் அந்த மாணுபத்திரனும் சினமிக்குச் செய்கின்ற போரில் இராவணனது உடம்பின்மேல் அழுந்துமாறும், அவன் அணிந்த பக்கத்து முடிகள் பறிந்திடுமாறும் கொடிய இயக்கனாகிய மாணுபத்திரன் கொடிய தண்டாயுதத்தால் மோதினான்.

கு : குரூரன்-கொடியவன்; இராவணன். அவன் என்றது மாணுபத்திரனை. தைத்தல்-அழுந்தப்படுதல். இராவணன் பத்து முடிகளையுடையனாதலின் தண்டினால் மோதும் போது நடுவில் உள்ள முடிகளின்மேல் படாமல் பக்கங்களில் உள்ள முடிகளின் மேல் படுதலின் பக்கமோலி பறிந்திட என்றார். தைக்க, பறிந்திட மோதினான் எனமாறிக் கூட்டுக. பறிந்திடல் என்பது தலையி லிருந்த முடி பிளத்தல். (௫௰)

304. முடிபி ளக்கத் தரிக்கில னாய்முகில்
இடியெ னக்கத றிக்கொடி ராவணன்
கொடும னத்தன் கொதித்தவன் மேல்விழ
அடுபு லிக்கிடை யாடென வோடினான்.

முடி பிளக்கத் தரிக்கிலனாய் முகில்
இடி எனக் கதறிக்கொடு இராவணன் –
கொடுமனத்தன் – கொதித்து அவன்மேல் விழ,
அடுபுலிக்கு இடை ஆடுஎன ஓடினான்.

பொ : தனது முடி பிளந்துவிட்டமையால் தரிக்காதவனாய், மேகத்தில் உண்டாகும் இடி போல ஓசையுண்டாகும்படி கதறிக் கொண்டு இராவணன் கொடுமைமிக்க மனத்தை யுடையவனாய்க் கோபித்து அம்மாணுபத்திரன்மேல் வீழ்ந்து தாக்க, கொல்லு கின்ற இயல்புடைய புலிக்குத் தோற்றோடும் ஆடுபோல (இராவணனுக்குத் தோற்று) ஓடினான் மாணுபத்திரன்.

கு : மாணுபத்திரன் இராவணனுக்குத் தோற்று ஓடினான் என்றவாறு. தன் முடி பிளந்திட்டமையால் உண்டாகும் தாழ் வினைத் தாங்க மாட்டாதவனாய்க் கதறிக் கொண்டு இராவணன்

மிகச் சினந்து தாக்கினமையால் மாணுபத்திரன் அஞ்சி ஓடினுன் என்க. தரிக்கிலனுய்-பொறுக்காதவனுய். முகில் இராவணனுக்கும் இடி இராவணனது குரலுக்கும் உவமை. இடிமுழக்கம் தோன்றக் கதறிக் கொண்டிருந்து பின் மாணுபத்திரனைத் தாக்கினுன் அவன்மேல் விழ என்றது, அந்த மாணுபத்திரன் மேல் விழுந்து தாக்க என்னும் பொருளது. இராவணனுக்குப் புலியும் மாணுபத்திரனுக்கு ஆடும் உவமை. அடுகின்ற புலி என வினைத் தொகை விரிக்கப்படும்; கொல்லும் இயல்புள்ள புலி என்றவாறு. இடைஆடு-இடைகின்ற ஆடு. இடைதல்-தோற்றல். இதனுல் இராவணனது வலிமைக்கு ஆற்ருது மாணுபத்திரன் அஞ்சி ஓடினமை புலப்படுத்தியவாறு. (நிச)

### இயக்கர் சேனை இரிதல்

305. ஈடு பட்ட வியக்க ரிரிந்துபோய்
நாடு விட்டனர் சென்றனர் நன்னிலைக்
கோடு விட்ட குரங்கெனக் கூடியே
காடு விட்டருங் கன்முழை நண்ணினுர்.

**ஈடுபட்ட இயக்கர் இரிந்துபோய்
நாடுவிட்டனர் சென்றனர் நன்னிலைக்
கோடுவிட்ட குரங்கு எனக் கூடியே
காடுவிட்டு அருங்கல் முழை நண்ணினுர்.**

**பொ :** போரில் ஈடுபட்ட இயக்கர்கள் தோற்ருேடிச் சென்று, தம் நாட்டையே விட்டுச் சென்றனராய் நல்ல நிலையிலிருந்த மரக் கொம்பினை விடுத்த குரங்குகள் போல. யாவரும் ஒன்றுகூடிக் காட்டினை விடுத்துக் கிட்டுதற் கரிய மலைக்குகைகளில் நுழைந்தனர்.

**கு :** இரிதல்—தோற்ருேடுதல். விட்டனர், சென்றனர் என்ற முற்றெச்சங்கள், கூடியே நண்ணினுர் என்ற வினையொடு முடியும். நாட்டை விட்ட இயக்கர்களுக்கு நன்னிலைக் கோடுவிட்ட குரங்கு உவமை. கோடுவிட்ட குரங்குகள் ஒன்றுகூடி வேறிடத்திற்குத் தாவிச் செல்லுதல் போலத் தம் நாட்டைவிட்ட இயக்கர்கள்

ஒன்றுகூடி மலைக்குகைகளில் நுழைந்து கொண்டார்கள். நாட்டை விட்ட இயக்கர் முன்பு காட்டை நண்ணிப் பின் அக்காட்டையும் விட்டுக் குகையை அடைந்தார்கள் என்றவாறு. கல்—மலை. முழை-குகை. தலைவனாகிய மாணிபத்திரன் தோற்றோடியதால் மற்றை இயக்கர்கள் நிற்கவியலாது ஓடிமலைக்குகைகளில் ஒளிந்தனர் என்றவாறு. (ருஉ)

இராவணனுக்குக் குபேரன் இன்மொழிகூறல்

306. அன்ன சேனை கெடவள காபுரி
மன்னன் வாளமர் மாறெதிர்ப் போரிலாத்
தென்னி லங்கைக் கிறைவன்முன் சென்றவற்
கின்ன வாய வினியன செப்பினான்.

**அன்ன சேனை கெட, அளகாபுரி**
**மன்னன், வாள் அமர் மாறு எதிர்ப்போர் இலாத்**
**தென் இலங்கைக்கு இறைவன்முன் சென்று அவற்கு**
**இன்ன ஆய இனியன செப்பினான்.**

பொ: அந்த இயக்கர் சேனை கேட்டோட, அளகாபுரிக்கு மன்னவனாகிய குபேரன், வாட்போரில் மாறுபட்டு எதிர்ப்போரை இல்லாத இராவணன் முன்பு சென்று, அவ்விராவணனுக்கு இத்தன்மையவான இனிய சொற்களைச் சொன்னான்.

கு: தென்னிலங்கைக்கு இறைவன் என்றது, இராவணனை. இராவணனை வெல்லுதல் அரிது என்னும் உண்மை புலப்பட 'வாள் அமர் மாறு எதிர்ப்போர் இலாத் தென்னிலங்கைக்கு இறைவன்' என்றார். செப்பியன வருஞ் செய்யுளில் காணலாம். (ருரு)

307. முன்னு னக்கு மொழிந்த வுறுதிகள்
பின்னெ னக்குப் பெரும்பகை யானவால்
கொன்னி னைப்போர் மனத்தறங் கூடுமோ
என்னு னக்கினிச் சொல்லுவ தோழமைகேள்.

முன் உனக்கு மொழிந்த உறுதிகள்
பின் எனக்குப் பெரும்பகை ஆனவால்;
கொல் நினைப்போர் மனத்து அறம் கூடுமோ?
என் உனக்கு இனிச் சொல்லுவது ஏழை, கேள்!

பொ : முன்பு உனக்குச் சொன்ன உறுதி தரும் சொற்கள், பின்பு எனக்கே பெரும் பகையாகிவிட்டன; கொலையை நினைப்பவர் மனத்தில் அறம் பொருந்துமோ? பொருந்தாது; ஏ அறிவிலியே உனக்கு இனிமேல் என்ன சொல்லுவது? ஆயினும் கேட்பாயாக.

கு : உறுதி தரும் மொழிகள் உறுதிகள் எனப்பட்டன. முன்பு தூதுவன் மூலம் குபேரன் சொல்லி அனுப்பிய சொற்களே; இராவணனைச் சினப்பித்துப் படையெடுத்து வரச் செய்தன ஆதலின், மொழிந்த உறுதிகள் பின் எனக்குப் பெரும்பகையாயின என்றான். கொல் என்பது முதனிலைத் தொழிற்பெயராய்க் கொலைத் தொழிலையுணர்த்தியது. கொலைப்பாவமும் அறமும் இருளும் ஒளியும் போல மாறுபட்டன ஆதலின், கொலையை நினைப்பவர் மனத்தில் அறங் கூடாது என்ற கருத்தால் அறம் கூடுமோ? என்றார். 'அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்' (குறள் 254) என்பது இங்கு நோக்கலாம். அருள் யாதெனில் கொல்லாமை; அல்லது யாதெனில்? கோறல். எனப் பொருள் காணலாம். கொலையாகிய பாவத்தில் பயின்ற பாவிகட்குக் கொல்லாமையாகிய அருளறம் பற்றிய நினைவு வராது என்றவாறு. கொலைப்பாவத்தை விரும்பிச் செய்யும் உனக்கு இனிச் சொல்லுவது என்? என்று முன் வெறுத்துக் கூறிப் பின்பு ஆயினும் சொல்லுவேன் கேள் எனச் சொல்லத் தொடங்குகின்றான் குபேரன். ஏழை—அறிவில்லாதவன். தன் பகைவராலும் செய்ய இயலாத வருத்தத்தைத்தானே செய்துகொள்ளும் பேதையாக இராவணன் இருக்கின்றானே என்ற இரக்கத்தால் ஏழை! கேள் என்று சொல்லத் தொடங்குகின்றான் குபேரன் என்க. (௩௪)

308. தந்தை தாயரைத் தம்முனைச் சார்குரு
அந்த ணாளரைச் சீறு மறிவிலோர்
இந்த வையத் திரும்பழி யெய்திமேல்
அந்த வையத் தருநர கெய்துவார்.

தந்தை தாயரைத் தம் முனைச் சார்குரு
அந்தணாளரைச் சீறும் அறிவு இலோர்
இந்த வையத்து இரும்பழி எய்தி, மேல்
அந்த வையத்து அருநரகு எய்துவார்.

பொ: தந்தையையும் தாயரையும் தம் அண்ணனையும் தம்மால் சாரப்படுதற்குரிய குருவையும் அந்தணரையும் கோபித்து வருத்தும் அறிவிலாதவர்கள் இந்த உலகத்தில் பெரிய பழியை எய்தி, மேல்வரும் மறுமையுலகத்தில் பொறுத்தற்கு அரிய நரகத்தை அடைவார்கள்.

கு: இரண்டனுருபுகள் முன்னும் கூட்டப்பட்டன. தாய் தந்தை, அண்ணன், குரு, அந்தணர் என்போர் பெரிய நீர்மையராகலின் அவரைக் கோபித்துத் தீங்கு புரிந்தவர்கள் இம்மையிற் பழியையும் மறுமையில் நரகத்துன்பத்தையும் அடைவார்கள் என்பதைப் புலப்படுத்தியவாறு. குபேரன் இராவணனுக்கு அண்ணன் முறையினனாகலின் அவனிடம் கோபம் கொள்ளுதலும் தீங்கு புரிதலும் இம்மைக்குப் பழியையும் மறுமைக்கு நரகத் துன்பத்தையும் தரும் என்பது குறிப்பாலுணர்த்தியவாறு. அந்த வையம் என்றது மறுமையுலகத்தை. உயிர்கள் பொறுத்தற்கரிய துன்பம் செய்யும் இயல்பினதாதலை விளக்க அருநரகு எனச் சிறப்பித்தார்.

(௫௫)

நீதி கேளாத இராவணனைத் தாக்கத் தண்டினை எடுத்தல்

309. என்ன நீதி யிராவண னுக்கவன்
சொன்ன மாற்றஞ் சுவரெறி பந்தென
அன்ன வன்னுண் ணுழையா தயர்த்திடத்
தன்னி னேரிலான் றண்டினை வாங்கினான்.

என்ன நீதி இராவணனுக்கு அவன்
சொன்ன மாற்றம், சுவர் எறி பந்து என
அன்னவன் உள் நுழையாது அயர்ந்திட,
தன்னின் நேர் இலான் தண்டினை வாங்கினான்.

பொ : என்று, அக்குபேரன் இராவணனுக்குச் சொன்ன நீதி மொழிகள், சுவரிடை வீசிய பந்துபோல, அந்த இராவணன் உள்ளத்தில் நுழையாது சோர்ந்திட, தனக்கு நிகர் இல்லாத வனுகிய குபேரன் தண்டினை எடுத்தான்.

கு : நீதி மாற்றம் என இயையும், சுவரிடை எறிந்த பந்து அதனுள் நுழைய இயலாது தடைப்பட்டுச் சோர்ந்து வீழ்தல்போல இராவணனுக்குக் குபேரன் சொன்ன நீதி மொழிகள் இராவண ஞல் ஏற்றுக் கொள்ளப்படாமை புலப்பட, உள்நுழையாது அயர்த்திட என்ருர். அயர்த்தல்—சோர்தல். இங்குப் பயனின்றிக் கழிந்தமை யுணர்த்தியது. தன்னின் நேரிலான் என்றது குபேரனை. தண்டினைப் போர் செய்தற்காக எடுத்தான் என்க. வாங்குதல் இங்கு எடுத்தலையுணர்த்தியது. இனித் தன் பணியாள ளிடமிருந்து வாங்கினன் என்றலும் ஒன்று. (ருசா)

இராவணன் குபேரன் போர்

310. நீதியான தோதினுலு
நீசரான வர்க்கறம்
போதியா தெனத்தெளிந்து
போர்புரிந்து பொற்கணுன்
ஏதியான சாதியா
னியாதுதான நாதன்மேல்
ஆதிநாதன் மோதினு
னழன்றுதண்டு கொண்டரோ.

நீதியானது ஓதினுலும் நீசரானவர்க்கு அறம்
போதியாது எனத்தெளிந்து போர்புரிந்து பொன்கணுன்
ஏதியான சாதியான் யாதுதான நாதன்மேல்
ஆதிநாதன் மோதினுன்-அழன்று தண்டு கொண்டரோ.

பொ : கீழ்மக்களுக்கு நீதிகளை ஓதினுலும் அந்த நீதியாகிய அறம் அவர்தம் உள்ளத்துச் செல்லாது, என்று தெளிந்து போர்

செய்ய விரும்பிப் பொன்னிறமுள்ள கண்களையுடைய ஆதிநாதனாகிய குபேரன், வாள் முதலிய படைகளை ஏவாமல் அரக்கர் தலைவனாகிய இராவணன்மேல் கோபித்துத் தண்டாயுதம் கொண்டு தாக்கினான்.

கு: போதியாது—செல்லாது. நீசர்—கீழ்மக்கள். நீசரானவர்க்கு நீதி ஓதினாலும் அவர்தம் உள்ளத்துச் செல்லாது என்பது தெளிந்து இராவணனோடு போர் செய்ய விரும்பிப் பொற்கணனாகிய ஆதி நாதன் வாள் முதலியவற்றை ஏவாமல் இராவணன்மேல் தண்டு கொண்டு மோதினான் என்க. புரிதல்—விரும்புதல். பொற்கணனாகிய ஆதிநாதன் என இருபெயரொட்டு ஆக்குக. குபேரன் கண் பொன்கண் ஆயினதை 'மங்கை சீறிட மாய்ந்த நின் வாம நேத்திரமும், பிங்கலந்திகழ் நிறத்ததாய்ப் பெறுதிநீ' (10) என்று சிவபிரான் முன் கூறியிருத்தலால் அறியலாம். இராவணனுக்கு முன் இலங்கைக்குத் தலைவனாயிருந்தவன் குபேரன் ஆதல் புலப்பட, ஆதிநாதன் என்று அவனைக் குறிப்பிட்டவாறு. ஏதி—வாள். சாதியானாய் என முற்றெச்சமாக்குக. சாதித்தல்—ஏவுதல். யாதுதான நாதன்—அரக்கர் தலைவனாகிய இராவணன் அழன்று—கோபித்து. தண்டு கொண்டு மோதினான் என இயையும் வாள் வீச்சு உடனே கொன்றுவிடுமாதலின் அது செய்யாது தண்டு கொண்டு தாக்கினான், திருந்துவான் என்ற எண்ணத்தால். (நுஎ)

311. துன்று தோளி ராசராசன்
மோத மெய் துளங்கலா
னின்றுகாண லாமிவன்றன்
னாண்மை யென் றிராவணன்
குன்று சென்ற தென்னவுட்
கொதித்து மண்டி மேல்விழ
வென்றி வீரர் தங்களுக்கு
வெய்யபோர் விளைந்ததே.

துன்று தோள் இராசராசன் மோத, மெய் துளங்கலான் இன்று காணலாம் இவன்தன் ஆண்மை என்று இராவணன்

குன்று சென்ற தென்ன உள்கொதித்து மண்டி மேல் விழ,
வென்றி வீரர் தங்களுக்கு வெய்யபோர் விளைந்ததே.

பொ: நெருங்கிய தோளையுடைய குபேர சக்கரவர்த்தி தண்டினால் தாக்கவும் இராவணன் உடம்பு நடுங்காதவனாய் இவன் ஆண்மையை இன்றைக்குக்காணலாம் என்று எண்ணி உளங்கொதித்து மலைநடந்து சென்றாற்போலச் சென்று நெருங்கிக் குபேரன் மேல் விழ்ந்து தாக்க, வெற்றியையுடைய அவ்வீரர் தங்களுக்குள் கொடியபோர் விளைந்தது.

கு: இராசராசன் என்றது குபேர சக்கரவர்த்தியை. துளங்குதல்-நடுங்குதல். தண்டு கொண்டு தாக்கும்போது தண்டாயுதம் பட்ட உடம்பு நடுங்குதல் இயல்பன்றே. இராவணனது வலிமை மிகுதியால் அவனுடம்பு நடுக்கம் கண்டிலது என்றவாறு. இராவணன் சினங்கொண்டு வலங்கொண்டு தாக்கச் சென்ற தோற்றம் ஒருமலை நடந்து செல்வது போலக் காணப்பட்டது என்றவாறு. குன்று சென்றதென என்பது இல்பொருள் உவமை. மலைக்கு நடத்தல் இன்மை அறிந்தது. உட்கொதித்தலாவது, உள்ளத்தே வெகுளியால் கொதித்தல். மண்டுதல்-நெருங்குதல். விளைதல் பெருகுதலை உணர்த்தியது. (௩அ)

312. கோப முந்து வாலிசுக்கி
ரீபருங் கொதித்தசுந்
தோபசுந்த ரும்மெனச்
சுழன்றுசாரி கைதுதை
தாபமின்றி யேதசக்கி
ரீவனுந் தமையனும்
பாபதன்ம மும்மெனப் பகைத்துவந்து
போர் செய்தார்.

கோபம் உந்து வாலி சுக்கிரீவரும், கொதித்த சுந்
தோபசுந்தரும் எனச் சுழன்று சாரிகை, துதை
தாபம் இன்றியே தசக்கிரீவனும் தமையனும்
பாபதன்மமும் எனப் பகைத்து வந்து போர் செய்தார்.

பொ : கோபத்தால் உந்தப்பட்ட வாலி சுக்கிரீவரும் மனம் கொதித்த சுந்த உபசுந்தரும் போல, இராவணனும் குபேரனும் சாரிகை திரிந்து, நெருங்குகின்ற தாகம் முதலிய துன்பங்கள் இல்லாமல், பாவமும் அறமும் போலப் பகைத்துக்கொண்டு வந்து போர் செய்தார்கள்

கு : உந்துதல்-தள்ளுதல். உடன் பிறந்தவராய்ப் போர் புரிந்தமைக்கு எடுத்துக் காட்டாக வாலி சுக்கிரீவரும் சுந்ததோப சுந்தரும் கூறப்பட்டனர்; சாரிகை திரிந்தமைக்கும் அவர் எடுத்துக் காட்டாவர். பகைத்தற்குப் பாவமும் தருமமும் உவமையாகும். குபேரன் தருமத்திற்கும் இராவணன் பாவத்திற்கும் உவமை யாவர். வாலி சுக்கிரீவர் போர் கிட்கிந்தா காண்டத்துக் கூறப் பட்டது. உடன்பிறந்து ஒத்த வலிமையுடைய சுந்நர், உபசுந்தர் என்பவர்கள் வலிமை மிக்கவரை மணப்பேன் என்ற பெண்ணை மணக்கும் ஆசையால் பொருது இருவரும் மாண்டனர் என்ப. சாரிகை திரிதல் என்பது போர் புரியும் இருவர் தொடக்கத்தில் இடது சாரியாகவும் வலது சாரியாகவும் மாறி மாறி அடியிட்டுச் சுற்றிவருதல். துதைதல்-நெருங்குதல். தாபம்-தாகம். போரில் உள்ள ஆர்வத்தால் தாகமும் தளர்ச்சியும் உணராமல் போர் செய்தார் என்றவாறு. பாபதன்மம் உம்மைத்தொகை. தர்மம் என்ற வடசொல் தன்மம் எனத் தமிழில் திரிந்து வந்தது. சுந்தோப சுந்தர் என்பது வடமொழிச் சந்தி. (ருகூ)

313. தேச நாச மானதென்று
சித்தரு மியக்கரும்
கூசவாச வாதியோர்
குலைந்திடச் செருச்செயும்
நீசன்மேலவ் வீசனண்ப
னொணெருப்பி னுயுதம்
வீச வாசில் பாசபாணி
வாளியால் விலக்கினுன்.

தேசம் நாசமானது என்று சித்தரும் இயக்கரும்
கூச வாசவ ஆதியோர் குலைந்திட, செருச்செயும்
நீசன்மேல் அவ் ஈசன் நண்பன் நீள் நெருப்பின் ஆயுதம்
வீச, ஆசு இல் பாச பாணி வாளியால் விலக்கினுன்.

பொ : உலகம் அழிந்தது என்று சித்தர்களும் இயக்கர்களும் அஞ்சவும், இந்திரன் முதலியோர் நடுங்கிடவும் போர்செய்கின்ற இராவணன்மேல் அந்தக் குபேரன் நீண்ட நெருப்புக்கணையை விட, இராவணன் குற்றமில்லாத வருணனுடைய அம்பினுல் அதனைத் தடுத்தான்.

கு : தேசம் என்றது. இவ்வுலகத்தை. கூசுதல்—அஞ்சுதல். குலைதல்—நடுங்குதல். வாசவாதி என்றது வடமொழி தீர்க்கசந்தி பெற்று வந்தது. வாசவன்—இந்திரன். நீசன் என்றது, இழிந்தவனுகிய இராவணனை. ஈசன் நண்பன் என்றது சிவபிரானுக்கு நண்பனுன குபேரனை. அவன் ஈசனுக்கு நண்பனுன வரலாறு முன்னம் கூறப்பட்டது. பாசபாணி என்றது, இங்கு வருணனை. நெருப்புக்கணைக்கு மாருய் அதனை அவிப்பதற்குரியது அந்த வருணுத்திரமே யாதலின் இவ்வாறு பொருள் கொள்ளப்பட்டது. வாளி—அம்பு. (சுய)

314. ஏயுமென்ன மாயையொன்றி
யற்றியுண் மயக்கியத்
தீயவன்கு பேரனைச்
சிரத்தின்மீ தடிக்கவத்
தூயவன்ற ளர்ந்துமெய்
துளங்கியாவி சோர்தலும்
ஆயதன்மை கண்டுசேனை
யங்குநின் றகன்றதால்.

ஏயும் என்ன மாயை ஒன்று இயற்றி உள்மயக்கி அத்
தீயவன் குபேரனைச் சிரத்தின்மீது அடிக்க, அத்

தூயவன் தளர்ந்து மெய்துளங்கி ஆவி சோர்தலும்
ஆய தன்மை கண்டு சேனை அங்கு நின்று அகன்றதால்.

பொ : அந்தத் தீயவனாகிய இராவணன் இவ்விடத்திற்குப் பொருந்தும் என்றுமாயை ஒன்றினைச் செய்து உள்ளத்தை மயக்கிக் குபேரனைத் தலைமீது அடிக்க, அந்தத் தூயவனாகிய குபேரன் மனம் தளர்ச்சியுற்று உடம்பு நடுங்கி உயிர் சோர்ந்து விழுதலும், அந்தத் தன்மையைக் கண்டு இயக்கர் சேனை அவ்விடத்தினின்றும் போயது.

கு : அத்தீயவன் ஏயும் என்ன மாயை ஒன்று இயற்றி உள்மயக்கிக் குபேரனைச் சிரத்தின் மீது அடிக்க என மாறிக் கூட்டுக. ஏயும் என்ன என்றது, இவ்விடத்திற்குப் பொருந்தும் என்று துணிந்து என்றவாறு. அத்தீயவன் அத்தூயவன் என்று இராவணனையும் குபேரனையும் நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். உயிர்சோர்தல் என்பது மூச்சற்று வீழ்தலை. தலைவனாகிய குபேரன் மூச்சற்று விழுந்தவுடன் அவன் பின்வந்த இயக்கர் சேனை அங்கு நின்றும் அகன்று ஓடியது என்க. (கூசு)

இராவணன் குபேரனது புட்பக விமானத்தைக் கவர்ந்து போதல்

315\. வண்டுசேர் பொழிற்குபேர
மன்னன்வாழு மாநகர்
கண்டகண்ட மாடெலாங்
கவர்ந்துகொண்டு பண்டைநாள்
புண்டரீக வாசனன்
கொடுத்தபுட்ப கத்தையும்
கொண்டு வென்றி கொண்டரக்கர்
கோனுவந்து போயினான்.

வண்டுசேர் பொழில் குபேர மன்னன் வாழும் மாநகர்
கண்டகண்ட மாடுஎலாம் கவர்ந்துகொண்டு பண்டைநாள்
புண்டரீக ஆசனன் கொடுத்த புட்பகத்தையும்
கொண்டு வென்றி கொண்டு அரக்கர் கோன் உவந்து போயினான்.

பொ : வண்டுகள் தேனுண்ண வந்து சேர்தற்குரிய பொழில் களையுடை குபேர மன்னன் வாழும் அளகாபுரியாகிய பெரிய நகரில் இராவணன், தன் கண்களால் பார்த்த பார்த்த செல்வங் களையெல்லாம் கவர்த்து கொண்டு, முற்காலத்துப் பிரமன் குபேர னுக்குக் கொடுத்திருந்த புட்பக விமானத்தையும் கைப்பற்றிக் கொண்டு வெற்றி கொண்டு மகிழ்ந்து போயினன்.

கு : பொழில் மாநகர், குபேர மன்னன் வாழும் மாநகர் எனத் தனித்தனி இயையும். பொழிலையுடைய மாநகர் என்க. மாடு-செல்வம். இராவணன் சிறப்புடையதாகக் கண்ட செல்வங் களையெல்லாம் கவர்ந்து கொண்டான் என்பார் கண்ட கண்ட மாடெலாம் கவர்ந்து கொண்டு என்றார். புண்டரிக ஆசனன் என்றது பிரமனை. தாமரையை இருப்பிடமாகக் கொண்டவன் என்றவாறு. குபேரனை வென்றி கொண்டதோடு புட்பகத்தையும் கொண்டு மகிழ்ந்து சென்றான் இராவணன் என்றவாறு. அரக்கர் கோன் என்றது இராவணனை. உவத்தல்-மகிழ்தல். கண்ட கண்ட என்ற அடுக்குப் பன்மையுணர்த்த வந்தது. (கூஉ)

புட்பகம் கயிலாய மலைமேல் இயங்காது நிற்றல்

316. வெற்றிகொ ளரக்கன்விடு புட்பக
மெழிற்கயிலை வெற்பை யணுகா
திற்றவலி யச்சின தெனக்ககன
நிற்றலு மிதற்கு நடவாக்
குற்றம் வரு கைக்குவழி தெற்றென
வுரைத்திரென வுட்கொடியனும்
அற்றதலை பெற்றிடு மரக்கன
துரைத்திட வமைச்சர் நினைவார்.

வெற்றிகொள் அரக்கன் விடு புட்பகம்
எழில் கயிலை வெற்பை அணுகாது
இற்ற வலி அச்சினது எனக்ககனம்
நிற்றலும், இதற்கு நடவாக்

குற்றம் வருகைக்கு வழி தெற்றென
உரைத்திர் என உள் கொடியனுய்
அற்ற தலை பெற்றிடும் அரக்கன்
அது உரைத்திட, அமைச்சர் நினைவார்.

பொ : குபேரனை வெற்றி கொண்ட இராவணன் விட்ட புட்பக விமானம் அழகிய கயிலைமலையை அணுகாமல் முறிந்து போன வலிய அச்சினையுடையது என்னுமாறு விண்ணில் நின்ற அளவில் 'இந்தப் புட்பகத்திற்கு இயங்காத குற்றம் வரக் காரணம் என்னை? தெளிவாகச் சொல்லுங்கள்' என்று உள்ளத்தில் கொடியவனுய்த் தவ வேள்வியில் அரிந்திட்ட தலைகளை வரத்தால் பெற்றிருக்கும் இராவணன் அதைச்சொல்ல, அமைச்சர் சிந்திக்கலாயினர்.

கு : குபேரனது புட்பக விமானத்தில் இராவணன் அமைச்சருடன் ஏறிக்கொண்டு விண்வழி வரும்போது கயிலைமலையை நெருங்காமல் விமானம் விண்ணில் நின்றுவிட்டது. அதை நோக்குவோர் இது இற்றுப்போன அச்சினையுடையதுபோலும் என்று எண்ணுமாறு இருந்தது என்பார் இற்றவலி யச்சினது எனக் ககனம் நிற்றலும் என்ருர். நடவாக் குற்றம் என்றது இயங்காத குற்றத்தை. புட்பகத்திற்கு இயங்க வியலாத குற்றம் எதுபற்றி வந்தது என்பான், இதற்கு நடவாக் குற்றம் வருகைக்கு வழி தெற்றென வுரைத்திர் என்ருன். வழி—காரணம். இராவணன் உள்ளத்தில் கொடியவனுயிருந்தே தன் தலைகளை அரிந்திட்டு வேள்விகளைச் செய்து பின்பு வரத்தால் அத்தலைகளைப் பெற்றவன் என்பார், 'உட் கொடியனுய அற்றதலை பெற்றிடும் அரக்கன்' என்ருர். 'ஒரோர் தலையாகச் சீரார் சிரம் ஒன்பதும் தடிந்து செந்தியிடை ஆகுதி பண்ணி... தாரார் மற்றைத் தலை தடியலுற்ருன் பற்றித் தசக்கிரீவன்' (இராவணுதி பிறப்புப்–26) எனவும் 'அன்னகாலை அயன் தோன்றி... முன்னை அரிந்த தலையெல்லாம் முன்பு போல் முளைத்திடுக என்ன அவைதாம் பண்டையிலும் எழிலுண்டாக எழுந்தனவால்' எனவும் முன் வந்துள்ளமையால் இதனை அறியலாம்.

(சுஙு)

மந்திரிகள் சிந்தனையும் நந்தியின் சொல்லும்

317. அந்தண னருந்தவ முயன்றதன
தன்பெற வுவந்த ருளொடும்
தந்தபி னவன்றனை நெடும்பகல்
பிரிந்திலது தங்குபிரிவால்
சிந்தையல மந்து செய லின்றியது
நின்றதுகொ லென்று தெளியா
மந்திரிகள் சிந்தைசெய வந்த ணுகி
யிந்தவுரை நந்தி புகலும்.

அந்தணன் அருந்தவம் முயன்ற தனதன்
பெற உவந்து அருளொடும்
தந்தபின் அவன்தனை நெடும்பகல்
பிரிந்திலது தங்கு பிரிவால்
சிந்தை அலமந்து செயலின்றி
இதுநின்றதுகொல்? என்று தெளியா
மந்திரிகள் சிந்தைசெய, வந்து அணுகி
இந்த உரை நந்தி புகலும்.

பொ : அருந்தவம் முயன்று செய்த குபேரன் பெறுமாறு, பிரமன் மகிழ்ந்து தன்னைத் தந்த பின்பு நெடுநாட்கள் வரை அவனைப் பிரியாமல் இருந்தது, இப்போது பிரிவு தங்கியதால் சிந்தை வருந்திச் செயல்படாமல் இந்தப்புட்பக விமானம் நின்றதுவோ? என்று தெளிவு பிறவாமல் அமைச்சர்கள் சிந்தித்திருக்க, நந்தி அங்கு வந்து இந்தச் சொல்லைச் சொல்லுவானானன்.

கு : கயிலை மலைமேற் செல்லாமல் புட்பக விமானம் நிற்பதற்குக் காரணம் அமைச்சர்களாலும் காண இயலாமையின் 'பிரிவால் சிந்தை யலமந்து செயலின்றி நின்றது கொல்' என்று தெளிவு பெறாமல் சிந்தை செய்தனர் என்றார். 'தெளியா' என்பது ஈறு கெட்ட எதிர்மறைவினையெச்சம். 'நந்திவந்தணுகி இந்த வுரை புகலும்' என இயையும். அந்தணன் என்றது பிரமனை. குபேரனது

அருந்தவம் கண்டு மகிழ்ந்து பிரமன் தந்தபின் குபேரனைப் பிரியாமல் இருந்த புட்பகவிமானம் இன்று பிரிவு தங்கியதால் சிந்தை அலமந்து செயலற்று நின்றதுபோலும் என அமைச்சர் உய்த்துணர்வால் நினைந்து இராவணனுக்குச் சொல்ல நினைந்தபோது, நந்தி வந்து இந்தச் சொல்லைச் சொன்னான் என்றவாறு. சொன்னது வரும் செய்யுளில் காணலாம். மந்திரிகள் என்றது மாரீசன் முதலியவரை, என்பது வான்மீகத்தால் அறியலாம். பிரிந்திலதாகிய இது நின்றதுகொல் என இயையும். தங்கு பிரிவால் என்பதற்கு நிலை பெற்ற பிரிவு வந்தமையால் எனப் பொருள் கூறலும் ஆம். (கூ௪)

நந்தி கூறியது.

318. சங்கமலை யுந்திடு தடங்கட
லநந்தசய னந்தனிலிருஞ்
செங்கமலை யுந்திகழ் முகுந்தனு
மயன்றனொ டிருந்திரிபுரம்
மங்கழல்செய் சங்கரனு மங்கையு
மகிழ்ந்தினி திருந்தவிடமித்
துங்கமலை யென்றிரத மிங்குவரு
கின்றிலது துன்றுதிறலோய்.

சங்கு அமலை உந்திடு தடங்கடல்
அநந்தசயனம்தனில் இருஞ்
செங்கமலையும் திகழ்முகுந்தனும்
அயன்தனொடு இருந்திரிபுரம்
மங்கழல் செய் சங்கரனும் மங்கையும்
மகிழ்ந்து இனிது இருந்த இடம் இத்
துங்கமலை என்று இரதம் இங்கு
வருகின்றிலது துன்றுதிறலோய்;

பொ: நெருங்கிய வலிமையுடையவனே: சங்குகள் ஒலியுடன் நீந்தித் திரிகின்ற பெரிய கடலில் பாம்பணையில் பள்ளிகொள்ளும் பெருமைவாய்ந்த சிவந்த தாமரையில் இருக்கின்ற திருமகளும்

விளக்கமுடைய திருமாலும் பிரமனும் பெரிய திரிபுரம் அழியுமாறு எரித்த சங்கரனும் உமை மங்கையும் மகிழ்ந்து இனிதாக இருந்த இடம் இந்தத் தூய்மையான மலை என்று எந்தத் தேரும் இங்கு வருவதில்லை.

கு : திறமையால் தேரைச் செலுத்தக் கூடிய மலை இதுவன்று என்ற குறிப்புத் தோன்ற 'துன்றுதிறலோய்' என இராவணனை விளித்தவாறு. கடலில் சங்குகள் ஒலியுடன் உந்தித் திரிவது இயல்பு ஆதலின் சங்கு அமலையுந்திடு தடங்கடல்' எனக் கடலைச் சிறப்பித்தார். உந்துதல் நீந்துதல். அமலையொடு என மூன்றுவது விரிக்க. கயிலைமலையில் திருமகளோடும் பிரமனோடும் திருமாலும் திரிபுரம் எரிசெய்த சிவபிரானும் பார்வதியும் இனிது தங்கியிருக்கும் இடம் ஆதலின் யாருடைய தேரும் இம்மலைமேல் செல்வதில்லை என அம்மலையின் தூய்மையும் பெருமையும் நந்திதேவர் இராவண னுக்குப் புலப்படுத்தியவாறு. சிவபிரானுக்குரிய கயிலை மலையில் திருமால் தன் மனைவி திருமகளோடும் மகன் பிரமனோடும் தங்கி யிருப்பர் என்பது இதனால் புலனாகின்றது. எனவே மும்மூர்த்தி களும் தங்கியுள்ள பெருமையால் யாருடைய தேரும் இதன்மேல் செல்வதில்லை என்பது விளக்கியவாறு. செங்கமலை-திருமகள். முகுந்தன்-திருமால். அயன்தனோடு செங்கமலையும் முகுந்தனும் சங்கரனும் மங்கையும் இனிதிருந்தவிடம் என இயையும். துங்கம்-தூய்மை. நந்தி கூறியதாக இங்குக் கூறப்படும் செய்தியைப் பாகன் கூறியதாகத் திருநாவுக்கரசர் கூறியுள்ளார்.

'கடுகிய தேர் செலாது கயிலாயமீது
கருதேலுன் வீரம் ஒழி நீ
முடுகுவது அன்றுதன்மம் என நின்று
பாகன் மொழிவானை நன்று முனியா (4.14 - 11)

என்றது காணலாம். வான்மீகத்தில் நந்தி கூறியதாகவே யுள்ளது. (சூ)

319. படிக்கழி வினைச்செய்மிகு பற்றலர்கண்
முப்புர நெருப்பின்விழவோர்
வடிக்கணை தொடுத்தவன் மலைக்குமிசை
புட்பக நடக்கவரிதிங்

கடிக்கழி வினைச்செய லகப்படுகை
நிச்சய மகற்றிரதமென்
றிடித்தவ னுரைத்திட விரக்கமி
லரக்கனி துரைத்திது செய்தான்.

படிக்கு அழிவினைச் செய் மிகு
பற்றலர்கள் முப்புரம் நெருப்பின் விழவோர்
வடிக்கணை தொடுத்தவன் மலைக்குமிசை புட்பக
நடக்க அரிது இங்கு
அடிக்கு அழிவினைச் செயல்; அகப்படுகை
நிச்சயம்; அகற்று இரதம்; என்று
இடித்து அவன் உரைத்திட, இரக்கம்இல்
அரக்கன்இது உரைத்து இது செய்தான்.

பொ: பூமியில் உள்ள உயிர்களுக்கு அழிவினைச் செய்து வந்த பெரிய பகைவர்கள் வாழ்ந்து வந்த முப்புரம், நெருப்பில் பட்டு வேகுமாறு ஒருகூரிய அம்பைத் தொடுத்தவனாகிய சிவபிரான் தங்கியுள்ள கயிலை மலைக்குமேல் உன் புட்பக விமானம் இயங்குதல் அரிது; இங்கு இறைவன் திருவடிப் பெருமைக்கு அழிவினைச் செய்யாதே, செய்தால் அப்பிரானிடத்து அகப்பட்டுக் கொள்ளுதல் நிச்சயமாகும்; எனவே இரதத்தை இவ்விடத்தை விட்டு அகற்றுவாயாக என்று நந்தி இடித்துச் சொல்ல, இரக்கமற்ற நெஞ்சினையுடைய அரக்கனாகிய இராவணன் இது சொல்லி, இதனைச் செய்தான்.

கு: படி–பூமி. இடவாகுபெயராய் பூமியில் உள்ள உயிர்களை உணர்த்தியது. மிகுபற்றலர்கள்–பெரிய பகைவர்கள்–திரிபுரத்தில் உள்ள அசுரர்கள். நெருப்பின் விழ என்றது, எரிய என்னும் கருத்தினது. 'தெரித்த கணையால் திரிபுரம் மூன்றும் செந்தீயில் மூழ்க எரித்த இறைவன்' (7–81–4) எனத் திருநாவுக்கரசர் கூறியுள்ளமை இங்கு நினையலாம். அடிக்கு என்பது இறைவன் திருவடிப் பெருமைக்கு என்றவாறு. அழிவினைச் செயல் என்பது அழிவினைச் செய்யாதே என்றவாறு. எதிர்மறை அல்லிற்று வியங்கோள்; 'மகனெனல்' (திருக்குறள்–196) என்புழிப்போல. செய்

தால் அகப்படுகை நிச்சயம் என ஒருசொல் வருவித்து முடிக்க. அவன் என்றது நந்தியை. இடித்துரைத்தல் என்றது கடிந்து சொல்லுதல். இராவணன் உரைத்ததையும் செய்ததையும் வருஞ் செய்யுட்கள் இரண்டால் முறையாகத் தெரியலாம். (சுசு)

### இராவணன் பழித்தலும் நந்தி சபித்தலும்

320. உரங் குடையும் வெஞ்சர மெனுஞ்சொல்
பலவுஞ்சொலி யுயர்ந்த குணனும்
அரன்றனது நந்திதன் முகந்தனை
யிகழ்ந்திட வவன்குபிதனுய்
இரங்கலை குரங்குமுக மென்றெனை
யிகழ்ந்தவு னிலங்கைநகரில்
குரங்குகள் புகுந்துநனி கொன்றிடுக
நின்குலனை யென்றுரை செய்தான்.

உரம்குடையும் வெஞ்சரம் எனும் சொல்
பலவும் சொலி உயர்ந்த குணனும்
அரன் தனது நந்திதன் முகம்தனை
இகழ்ந்திட, அவன் குபிதனுய்,
'இரங்கலை குரங்கு முகம் என்று எனை
இகழ்ந்த உன் இலங்கை நகரில்
குரங்குகள் புகுந்துநனி கொன்றிடுக நின்குலனை'
என்று உரை செய்தான்.

பொ: இராவணன் பகைவர் மார்பினைக் குடைந்து செல்லுகின்ற கொடிய அம்பு போன்ற சொற்கள் பலவற்றையும் சொல்லி, உயர்ந்த குணத்தினனுகிய சிவபிரானது (தொண்டனுகிய) நந்தியின் முகத்தை இகழ்ந்து சொல்ல, அந்த நந்தி கோபமுடையவனுய் 'சிறிதும் இரக்கமில்லாத வனுய்க் குரங்குமுகம் என்று என்னை இகழ்ந்து சொன்ன உனது இலங்கைமாநகரில் குரங்குகள் புகுந்து நின்குலத்துளோரை மிகுதியர்கக் கொன்றிடுக' என்று சாபச் சொல்லைச் சொன்னுன்.

கு : குணனும் நந்தி என இயையும். உரம்–மார்பு, கொடிய சொல்லுக்கு அம்பினை உவமையாக்குதல் உண்டு. 'நின்கைச் சுடுசரம் அனைய சொல்லால்' (பால–அகலிகைப்–78) என்பது காணலாம். இரங்கலை, முற்றெச்சம். குபிதனுய்–கோபம் உடையவனுய். இராவணன் நந்தியின் முகத்தைக் குரங்கு முகம் என்று இகழ்ந்துரைத்தமையால் நந்தி வெகுண்டு 'என் முகத்தைக் குரங்கு முகம் என்று இகழ்ந்த நின் இலங்கை நகரில் குரங்குகள் புகுந்து உன் குலத்தவர்களைப் பெரிதும் கொல்வார்களாக' எனச் சபித்தார் என்றவாறு. நின்குலனை–நின்குலத்தவரை. (கூஎ)

### இராவணன் வெள்ளிமலையை அள்ளியெடுத்தல்

321. சகட்டுருளை யிற்றிரி பிறப்பிலி
சலிப்பவெரு வுற்றதவசிப்
பகட்டிது வெனக்கரு திரக்கமி லரக்க
ளுேர் பழிப்பில்வரை மேல்
முகட்டெனது புட்பகம் விலக்கு
கயிலைக்கிரி முரிப்பனெனவோர்
துகட்டொகை படக்கடி தெடுத்தனன்
மிசைத்தவர் துணுக்கமுறவே.

சகட்டு உருளையில் திரிபிறப்பு இலி
சலிப்ப வெருவுற்ற தவசிப்
பகட்டுஇது எனக் கருது இரக்கம்இல்
அரக்கன் ஓர் பழிப்பில்லவரை மேல்
முகட்டு எனது புட்பகம் விலக்கு
கயிலைக்கிரி முரிப்பன் எனஓர்
துகள்தொகைபடக் கடிது எடுத்தனன்
மிகைத்தவர் துணுக்கம் உறவே.

பொ : புட்பகத்தின் இயக்கத்தைக் கண்டு அஞ்சிய தவசியாகிய வண்டியின் சக்கரம் போலச் சுழன்று வருகின்ற பிறப்பு இல்லாத சிவபிரானின் தந்திரம் இது என்று கருதிய இரக்கம்

இல்லாத அரக்கனாகிய இராவணன் ஒருபழிப்பும் இல்லாத மலையின்மேல் சிகரங்களில் எனது புட்பக விமானத்தை விலக்கும் கயிலைமலையை முரித்துவிடுவேன் என்று ஒரேதுகளின் கூட்டம் தோன்றுமாறு கயிலையின் சிகரத்தை விரைந்து எடுத்தான், அம் மலைமேலிருந்த தவமுனிவர்கள் அஞ்சும்படியாக.

கு : மிசைத்தவர் துணுக்குமுறக் கடிது எடுத்தனன் என இயையும். தவசியாகிய பிறப்பிலி என இயைக்க. சிவபிரான் தவக் கோலத்திலிருப்பவராதலின் தவசி என்றும் வண்டியின் உருளைபோல மாறி மாறி வருகின்ற பிறப்பு அவர்க்கு இல்லையாதலின் பிறப்பிலி என்றும் பெயர்கொடுத்தவாறு. சகடு—வண்டி. உருளை—சக்கரம். இராவணன் ஏறிவரும் புட்பகத்தின் இயக்கம் கண்டு அஞ்சிய தவசியாகிய சிவபிரான் செய்த தந்திரத்தால் புட்பகம் இயக்கமற்றுவிட்டது என்பது இராவணனது எண்ணம். இமய மலையின் தொடர்ச்சியில் கையிலாயம் ஒரு பகுதியாதல் புலப்பட, பழிப்பில்வரை மேல் முகட்டு எனது புட்பகம் விலக்கு கையிலைக்கிரி என்றான். கயிலையின் சிகரம்தான் தன் புட்பகம் இயங்காமைக்குக் காரணம் என்று நினைத்த இராவணன் அந்தச் சிகரத்தை முரிக்க முயன்று விரைந்து எடுத்தான் என்க. சிகரத்தின் அடியில் தன் கைகளை நுழைத்துக் குலுக்கியபோது அந்தச்சிகரம் நடுங்க அதில் தவஞ்செய்திருந்த முனிவர்கள் நடுங்கலாயினர் என்றவாறு. சிகரத்தைப் பெயர்த்து எடுத்தபோது துகளின் கூட்டம் மேலெழுந்தது என்பார், துகள் தொகைபட என்றார். சலித்தல்—அசைதல், இயங்குதல். (சு-அ)

### கயிலையில் இருந்த இருடிகள் முதலியவர் நிலை

322. சத்தவிரு டிக்கண மகப்பட
வெழிற்றவ முனித்தலைவரும்
சுத்தவித யப்பிரம நிட்டரு
மிறப்பில்சுரர் கொத்தடையவும்
பித்தரு மகத்தசிவ பத்தரு
மெழிற்பிற மதத் தலைவரும்
சித்தரு மியக்கரும் வெருக்கொளு
மனத்த ரடையச் சிதறினர்.

சத்த இருடிக்கணம் அகப்பட
எழில்தவ முனித்தலைவரும்
சுத்த இதயப்பிரம நிட்டரும், இறப்புஇல்
சுரர் கொத்து அடையவும்
பித்தரும், மகத்த சிவபத்தரும்,
எழில் பிற மதத்தலைவரும்
சித்தரும், இயக்கரும் வெருக்கொளும்
மனத்தர் அடையச் சிதறினர்.

பொ : சப்த முனிவர்கள் உட்பட அழகிய தவமுனிவர்களின் தலைவரும், தூய உள்ளத்தில் பரம்பொருளை நினைத்துக் கொண்டு யோக நிட்டையிலிருக்கும் நிட்டர்களும், மரணமிலாத தேவர்களின் கூட்டம் முழுவதும் தெய்வப், பித்தர்களும், பெருமை வாய்ந்த சிவ பத்தர்களும், அழகிய அகச் சமயங்களாறில் சேர்ந்த பிறமதத் தலைவர்களும் சித்தர்களும் இயக்கர்களும் அச்சங்கொள்ளும் மனத்தராய் யாவரும் சிதறுண்டு ஓடினர்,

கு : சத்த இருடிகள்—அத்திரி, வசிட்டர், காசியபர், கௌதமர், பரத்து வாசர், விசுவாமித்திரர், ஜமதக்கினி என்ற எழு முனிவர். இந்த எழு முனிவர் உட்பட உள்ள தவமுனித்தலைவர்களும் என்பார், இருடிக்கண மகப்பட எழில் யோக நிட்டையில் இருப்பவர்கள் என்றார். இவர்கள் தம் தூய உள்ளங்களில் பரம் பொருளை நிறுத்திக்கொண்டு அனுபவித் திருப்பவர்கள். கொத்து—கூட்டம். பித்தர் என்றது தெய்வப்பித்துப் பிடித்துத் திரிகின்றவர் களை. மகத்த சிவம் என்றது, பெருமை பொருந்திய சிவம் என்றபடி, பிறமதத்தலைவர் என்றது, அகச் சமயங்கள் ஆறினில் சுத்த சைவமல்லாத பாடாண வர்தம் முதலிய ஐந்தின் தலைவர்களை. வெரு—அச்சம். மனத்தராய்ச் சிதறினர் என இயையும். (௬௬)

ஊடலை மறந்து உமை தழுவுதல்

323. ஆடல்புரி பூண்முலை யரம்பையர்கள்
சிந்தையல மந்தலறினர்
பாடல்புரி தும்புருவு நாரதரு
மாதியர் பயந்தழுவினர்

கூடலை முயன்றரன் விரும்பவதி
கோபமொடு கூடநினையா
ஊடலை மறந்துமை மடந்தை
யரனைத்தன முறத்தழுவினாள்.

ஆடல்புரி பூண்முலை அரம்பையர்கள்
சிந்தை அலமந்து அலறினார்;
பாடல்புரி தும்புருவும் நாரதரும்
ஆதியர் பயம் தழுவினார்;
கூடலை முயன்று அரன் விரும்ப,
அதிகோபமொடு கூட நினையா
ஊடலை மறந்து, உமை மடந்தை
அரனைத் தனம் உறத்தழுவினாள்.

பொ : நாடகம் நடிக்கின்ற அணிகலன் அணிந்த மார்பினை யுடைய அரம்பையர்கள் மனம் கலங்கி அலறினார்கள், பாடல் பாடுகின்ற தும்புருவும் நாரதரும் முதலியோர் பயந்தார்கள்; சிவபிரான் கூடுதற்கு விரும்பி முயல, மிக்க கோபத்தோடு கூடுதற்கு நினையாது ஊடியிருந்ததை மறந்துவிட்டு உமையம்மை (அப்போது நடுங்கி) சிவபிரானைத் தனங்கள் பொருந்தத் தழுவிக் கொண்டாள்.

கு : ஆடல்புரி அரம்பையர், பூண்முலை அரம்பையர் எனத் தனித்தனி இயையும். அலமந்து - கலங்கி. அலறுதல் வாய்விட்டுக் கூவுதல். சிவபிரான் கேட்டு மகிழுமாறு நாரதரும் தும்புருவும் இசைப்பாடல் பாடிக் கொண்டிருக்கும் இயல்பினர் ஆதலின் இராவணன் மலையைத் தூக்கியபோது அவரும் பயந்தார்கள் என்றவாறு. பயம் தழுவுதலாவது பயங்கொள்ளுதல்–பயப்படுதல். அரன் கூடலை விரும்பி முயல எனக்கூட்டுக. 'ஊடுதல் காமத்திற் கின்பம்' (குறள்-1330) ஆதலின் அரன் விரும்பி முயலவும் உமை கூட நினையாமல் ஊடியிருந்தாளாக, இராவணனால் மலைகுலுங்கிய போது நடுங்கி அவ்வூடலை மறந்து சிவபிரானை வலியவந்து தழுவிக் கொண்டாள் என்க. 'அருவியங் குன்ற மரக்கன் பெயர்ப்ப

வெருவிய வெற்பரையன் பாவை-பெருமான், அணியாக மாரத் தழுவினு டான்முன், தணியாத வூடறணிந்து' (தண்டியலங்காரம் உதாரணம்) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இது சமாகித அணி-துணைப்பேறு என்பது பொருள். கூட நினையாத ஊடல் என ஊடலுக்கு அடையாக்குக. (எ0)

சிவபிரான் கால் விரலால் அழுத்த இராவணன் கதறுதல்

324. மறைத்தவர் மறுக்கமு மடக்கொடி
நடுக்கமும் மனத்திலுணராப்
பிறைச்சடை முடிக்கடவுள் பொற்றிரு
வடிப்பெரு விரற்றலையினுல்
நெறுக்கென வழுத்திட வுடற்பொறை
பதைப்பநிரு தர்க்கிறைவனும்
கறுத்தவுரு வத்தினு மறக்கரு
மனத்தன்வெரு விக்கதறினுன்.

மறைத்தவர் மறுக்கமும் மடக்கொடி
நடுக்கமும், மனத்தில் உணராப்
பிறைச்சடை முடிக்கடவுள் பொன்றிரு
அடிப்பெரு விரல்தலையினுல்
நெறுக்கென அழுத்திட உடற்பொறை
பதைப்ப நிருதர்க்கு இறைவனும்
கறுத்த உருவத்தினும் அறக்கரு
மனத்தன் வெருவிக் கதறினுன்.

**பொ:** வேதங்களை உணர்ந்த தவ முனிவர்களின் கலக்கத்தையும், இளங்கொடி போன்ற உமையம்மையின் நடுக்கத்தையும் உள்ளத்தால் உணர்ந்து பிறைச்சந்திரனை அணிந்த சடைமுடியினையுடைய சிவபிரான், தன் அழகிய திருவடிப் பெருவிரல் நுனியினுல் நெறுக்கு என்று சொல்லி அழுத்திட, அரக்கர்க்கு அரசனுகிய-தன் கறுத்த நிறத்திணைக் காட்டிலும் முழுவதும் கறுத்துள்ள மனத்தையுடைய இராவணன், தன் உடற்பாரம் நோயினுல் பதைபதைக்க அஞ்சிக் கதறலானுன்.

கு: மறைத்தவர் என்றது வேதங்களை உணர்ந்த தவ முனிவரை. மடக்கொடி என்றது இளங்கொடி போன்ற மென்மை யுடைய உமையம்மையை. உணரா என்றது செய்யா வென்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். உணரா அழுத்திட என இயையும் நெறுக்கு என்றது மலைச்சிகரத்தை நோக்கிக் கூறிய ஏவலாகும் ஒலிக்குறிப்புணர்த்திய இடைச்சொல் என்றலும் ஒன்று. நிருதர்க்கு இறைவனும் கருமனத்தன் உடற்பொறை பதைப்ப, வெருவிக் கதறினன் என இயையும். உடற்பொறை என்றது உடலாகிய பாரத்தை. பொறை உடல் என மாற்றிக் கூறினும் அமையும். பதைத்தல் நோய் பொறுக்காமல் நடுங்குதல். இராவணன் தன் கறுத்த நிறத்தினைக் காட்டிலும் மிகக் கறுத்த மனத்தினை யுடையவன் என்பார், கறுத்த உருவத்தினும் அறக்கரு மனத்தன் என்றார். அற—முழுவதும். மனம் கருத்தலாவது பாவங்களையே சிந்தித்து இருண்டிருத்தல். 'கூழின் மலி மனம் போன்று இருளா நின்ற கோகிலமே' (திருக்கோவையார்—322) என்பதும் 'புறங் குன்றி கண்டனையரேனும் அகங்குன்றி மூக்கிற் கரியா குடைத்து' (குறள்-277) என்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். (எக)

கயிலை மலைக்கீழ் இராவணன் அலறுதல்

325\. காயவரை யாலைமிசை பாய்பவரமுக்கிய
கரும்பி னெரியச்
சேயுயர் விசும்புநில னுங்கிரிகளுந்
திசைக ளோடதிர்தர
வாயொரு பதுங்குருதி பொங்கிட
வயங்குவரு டங்களவையோ
ராயிரம் விலங்கலு ளடங்கினன் முடங்கி
யலம் வந் தலறினன்.

காயவரை ஆலைமிசை பாய்பவர் அமுக்கிய
கரும்பின் நெரிய,
சேய்உயர் விசும்பும் நிலனும் கிரிகளும்
திசைகளோடு அதிர்தர,

வாய்ஒருபதும் குருதி பொங்கிட, வயங்கு
வருடங்கள் அவை ஓர்
ஆயிரம் விலங்கலுள் அடங்கினன் முடங்கி
அலம் வந்து அலறினன்.

பொ: இராவணனது உடம்பாகிய மலை, கரும்பாலையில் கரும்பை நுழைக்கின்றவர்கள் அமுக்கிய கரும்பினைப் போல நெரிய, மிகவுயர்ந்த விண்ணுலகமும் நிலவுலகமும் மலைகளும் திசைகளோடு அதிருமாறு வாய்கள் பத்திலும் இரத்தம் பொங்கிட, விளக்கமுடைய ஆயிரம் ஆண்டுகள் கயிலைமலையுள் அடங்கினனாய் முடங்கிக் கொண்டு வருந்தி வாய்விட்டலறினன்.

கு: காயவரை—உடம்பாகிய மலை. உருவகம். பாய்பவர் என்றது, கரும்பினை. ஆலையில் நுழைக்கின்றவர்கள். காயவரை கரும்பின் நெரிய என்க. ஆலைவாய்க்கரும்பு போலக் காயம் நெரியப் பொறுக்க மாட்டாதவனாய் விண்ணுலக முதலியன நடுங்குமாறு அலறினன் இராவணன் என்றவாறு. பத்துவாய்களிலும் இரத்தம் பொங்கிவர ஆயிரம் ஆண்டுகள் கயிலையின் கீழ் அடங்கி அலம்வந்து அலறினன் என்க. அதிர்தல்—நடுங்குதல். விலங்கல் என்றது கயிலாய மலையை. சிவபிரான் பெருவிரல் நுனியால் அழுத்துதலால் மலைக்கீழ் அடங்குதலும் அடங்கிய பின் இயக்கமின்மையின் முடங்குதலும் அடங்கிக் முடங்கிக் கிடத்தலால் வருந்துதலும் வருத்தத்தால் அலறுதலும் இயல்பாதல் அறியலாம். (எஉ)

### இராவணனை அமைச்சர் சாமகீதம் பாடச் சொல்லுதல்

வேறு

326. வான்றொடர் வெள்ளி வெற்பின்
கீழுற்று வருந்து கின்ற
ஊன்றிதழ் வேலி னானை
யமைச்சர்தா முற்று நோக்கித்

தேன்றிக ழிதழி யான்றன்
திருச்செவிச் சார நின்கை
தான்றிகழ் வீணை யாகப்
பாடுதி சாம மென்றூர்.

வான் தொடர் வெள்ளி வெற்பின்
கீழ்உற்று வருந்து கின்ற
ஊன்திகழ் வேலி னானை
அமைச்சர்தாம் உற்றுநோக்கி
தேன்திகழ் இதழி யான்தன்
திருச்செவிச் சார நின்கை
தான் திகழ் வீணையாகப்
பாடுதி சாமம் என்றூர்.

பொ: வானளாவிய வெள்ளிமலையின் கீழ்க் கிடந்து வருந்துகின்ற தசைவிளங்கும் வேலையுடைய இராவணனை அமைச்சர்கள் உற்றுப்பார்த்து, தேன் விளங்குகின்ற கொன்றை மாலை அணிந்த சிவபிரானுடைய திருச்செவியில் சேருமாறு, நினது கையினையே வீணையாகக்கொண்டு சாமவேதத்தைப் பாடுக என்று சொன்னூர்கள்.

கு: இராவணனது வேல் பகைவர் மார்பில் பாய்ந்து பழகியதாகலின் அதில் ஊன் திகழ்வதாயிற்று. ஊன்-தசை. இதழி-கொன்றை. கையையே வீணையாக அமைத்துக்கொண்டு என்பார் நின்கைதான் திகழ்வீணையாக என்றூர். சாமவேதம் இசைப்பாட்டு ஆதலின், அதன்கண் சிவபிரானுக்கு விருப்பம் மிகுதியாதல் நினைந்து அமைச்சர்கள் 'சாமம் பாடுதி' என்றூர். (எசு)

இராவணன் சாமகீதம் பாடுதல்

327. அன்னதே கருமமென்னு
வரக்கனு மறிவுட் கொண்டு
தன்னது தலையி லொன்றைத்
தடிந்துதன் கையிற்சேர்த்தி

இன்னன நரம்பிற்றந்தங் கிளைமுத
லிசைக ளேழால்
பன்னருஞ் சாமகீதம் பரிவுடன்
பாட லுற்றான்.

அன்னதே கருமம் என்று
அரக்கனும் அறிவுட் கொண்டு
தன்னது தலையில் ஒன்றைத்
தடிந்துதன் கையில் சார்த்தி
இன்னன நரம்பில் தந்துஅம்
கிளைமுதல் இசைகள் ஏழால்
பன்னரும் சாமகீதம் பரிவுடன்
பாடல் உற்றான்.

பொ: அதுவே செய்யத்தக்க கருமம் என்று இராவணனும் அவ்வறிவுரையை உள்ளத்தே கொண்டு, தன் தலைகளில் ஒன்றினை வெட்டித் தன் கையொன்றோடு சேர்த்து இவற்றை நரம்பினொடு சேர்த்துக் கட்டி, கைக்கிளை முதலாகிய இசைகள் ஏழினால் சொல் லுதற்கரிய சாமகீதத்தை அன்புடன் பாடத் தொடங்கினான்.

கு: அறிவு என்றது இங்கு அமைச்சர் கூறிய அறிவுரையை. தடிந்து-வெட்டி. தன் கையினையே யாழ்த்ததண்டாகச் சேர்த்து என்க. இன்னன என்றது தலையும் கையுமாகிய இவற்றை என்ற வாறு. நரம்பினொடு என ஒடு உருபு விரிக்க. கிளையென்றது கைக்கிளையை. கைக்கிளை முதல் இசைகள் ஏழு ஆவன: கைக்கிளை, குரல், துத்தம், உழை, இளி விளரி, தாரம் என்ற எழு சுரங்களால் அமைந்த இசைப்பாடல்கள். பன்னுதல்-சொல்லுதல். பரிவு- அன்பு. கையும் தலையும் கொண்டு யாழ் செய்து இராவணன் சாம கீதம் பாடினான் என்ற நிகழ்ச்சி முதனூலில் இல்லையாயினும், சிவனருள் பெற்றுய்ந்து பாடிய திருநாவுக்கரசு நாயனார் முதலி யோர் இக்கருத்தைக் கூறியிருத்தலால் இந்நூலாசிரியர் இங்ஙனம் சேர்த்துக் கூறியுள்ளார் எனலாம். மைஞ்ஞீல மணிய கண்ணாள் பங்கன் மாமலையையோடி, மெய்ஞ்ஞரம் புதிரம்பில்க விசை தணிந் தரக்கன் வீழ்ந்து கைஞ்ஞரம் பெழுவிக்கொண்டு காதலால் இனிது

சொன்ன, கின்னரங் கேட்டுகந்தார் கெடில வீரட்டனுரே' (10–29 4) என்றும் 'முன்கை மா நரம்பு வெட்டி முன்னிருக்கிசைகள் பாட' (10–34-4) என்றும் கூறியிருத்தல் காணலாம். (எச)

### சிவபிரான் இராவணனுக்கு வாளும் நாளும் கொடுத்தல்

328. அவ்வழி யவனும் பாட
வரன் மகிழ்ந் தழைத் துக்கொண்டு
மூவ்வகை யுலகு மாள
மூன்றரைக் கோடி யாண்டும்
எவ்வகைப் படையும் வெல்லும்
சந்திர வாளும்மீந்தான்
பொய்வகை நிருதன் பெற்று
விடைகொண்டு போக லுற்ருன்.

அவ்வழி அவனும் பாட
அரன் மகிழ்ந்து அழைத்துக் கொண்டு
முவ்வகை உலகும் ஆள
மூன்றரைக்கோடி ஆண்டும்,
எவ்வகைப் படையும் வெல்லும்
சந்திர வாளும் ஈந்தான்;
பொய்வகை நிருதன் பெற்று
விடைகொண்டு போகல் உற்ருன்.

பொ: அவ்வாறே அவ்விராவணன் பாட, சிவபிரான் மகிழ்ந்து அந்த இராவணனை அழைத்துக்கொண்டு, மூவகையுலகும் ஆளுதற்கு மூன்றரைக்கோடி ஆண்டு வாழ்நாளும் எவ்வகை ஆயுதத்தையும் வெல்லத்தக்க சந்திரகாசம் என்னும் வாளும் கொடுத்தான்; பொய்க்கும் வகையில் பழகிய இராவணன் அவற்றைப் பெற்றுக்கொண்டு விடைபெற்றுக்கொண்டு போனுன்.

கு: முவ்வகை உலகு என்றது எதுகை நோக்கிய குறுக்கல் விகாரம். விண்ணுலகம் மண்ணுலகம், பாதலம் என்பன மூவகை

யுலகம், சந்திரவாள் என்றது, சந்திரகாசம் என்னும் வாளை. உள்ளத்தில் வஞ்சகனாயிருந்தே சாமகீதத்தால் வாளும் நாளும் பெற்றமை வியப்பிற்குரியது என்பது தோன்றப் 'பொய்வகை நிருதன்' என்றார். (எ௫)

இச் செய்யுளின் கீழ் பின்வரும் பாடல் காணப்படுகின்றது.

328. அ) பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகன்
பொருப்பின்கீழ்க் கிடந்து போக்கற்
றிரக்கமுறக் கதறுதலால் இராவணன்று
னெனப்பெயரு மியம்பி வாழென்
றரக்கனுக்கு முக்கோடி யரைக்கோடி
வாணாளும் அளித்துப் போவென்
றுரைப்பவர னடிவணங்கி யாங்கெழில்சேர்
புட்பகத்தி னுவந்து போனான்.

இப்பாடற் கருத்து மேலைப் பாடலிலும் இருத்தலாலும் இது காறும் கூறிவந்த செய்யுளிசை இங்கு வேறுபடுவதாலும் இப்பாடல் மிகைப்பாடல் எனக்கொள்ள வேண்டியுளது. மேலும் ஒருமிகைப் பாடல் பல சுவடிகளில் இல்லாதது கீழ்வருவது.

ஆ) அரக்கனுக் கிவ்வர மளித்த வாறெலாம்
துயக்கர வுணர்ந்தனன் றுளப மார்பனும்
நிறக்கரு மேனிய னிலையுருவகை
அறுப்பனென் றெழுந்தன னமரர் கூப்பிடால்.

இ) தெண்டொடு குடையது செங்கை யேந்தினன்
குண்டிகை நிறைதரக் குளிரச் சாத்தினன்
தெண்டிரைச் கடலினுட் சென்ற வாறெலாம்
நின்றெனச் கருளென நிருதன் கூறுவான்.

ஈ) சென்றனனிராவணனருகு சேறலும்
மன்றலர் மதுமலர் பொழிந்து வாழ்த்தினான்
சென்றவித் திசையினிற் செய்தவாறெலாம்
நின்றெனக் குரைாயன விறைவன் கூறினான்.

உ) பொன்னிறக் கண்ணன் றன்மேற்
பொருந்திடும் போரும் வென்று
நன்னிறத் திங்கள் சூடு
நாயக னிருக்கை போந்தேன்
அன்னது கண்டு தானே
யக மலர்ந் தருளினாலே
பன்னரு வாளொ டாயுள்
பழிப்பிலா னீந்தானென்ன.

இப்பாடல்கள் 54-இல் உள்ளது.

ஊ) ஏன்றிகழ் களத்தில் யாருமெ திரிலாராகப் பெற்றேன்
சான்றவ னிட்ட பேரும் தவிர்த்திராவண னென்றிட்
தேன்றிகழ் குழலிபாகன் செவ்வியாயி யம்பியாயு [டான்
மூன்றரைக் கோடிதந்தானீங்கிது முனிவ னென்றான்.

இப்பாடல் 65-இல் உள்ளது.

எ) அன்னதை யரனும்கண்டு யம்புயத் தயன்பாற் பெற்ற
தென்னென வியம்புகென்ன யானும துரைத் தேனாக
தன்னுளம் கிளந்து பின்னைத் தரமிக வாளுமீந்து
பின்னையு மொன்றுகந்தென்பெரு வரமதனைப்பெற்றேன்.

ஏ) நன்று நீபெற்ற தென்று நான்மறை முனிவன்தானும்
சென்றவத் திசைகளெல்லாம் செயித்துநீ செல்லவென்று
இன்றரன் தன்பால் பெற்ற பெருவர மிதுவும் நன்று
நின்றரைக் கோடியாற்கு வைத்தது நிகழ்த்துவாயே.

ஐ) அன்றரைக் கோடிதானே யருள்செய வேணுமென்று
சென்றினி பெறுதி யாகின் சகமெலா முனக்கேயாகும்
என்றதே மனத்தி னெண்ணியிருள்செறி மிடற்றோன்
[வைகும்
நன்றனிக் கைலைதன்மேல் நாயகன் முன்புசென்றான்.

ஒ) வந்ததைக் கண்டு மாயன் வகுத்தவல் வினைய தென்று
புன்றகை முறுவல் செய்து போந்த வாறென்று கேட்ப
நின்றரைக்கோடி நின்பாற் பெறவந் தேனென்னலோடும்
அன்றரைக் கோடிதானேயருளினே மரக்கா வென்றான்.

ஓ) மற்றவா ளரக்கன்றனே மாயவன் முன்னம்
பெற்றமுன் றரைக்கோடியு மொழியநீ பேணி
உற்றபே ரரைக்கோடிநாள் கோரென வுவந்து
பெற்றவா கனனிடத்தவன் பின்னருஞ் சென்று.

ஔ) இங்கிவை யியம்பி மாயனேதிலா தேகினுனல்
பொங்கு மாசேனே யோடும் பொருக்கென வெழுந்து [பொங்கி
தென்திசை யதனே நோக்கிச் சேறலும் செருவுக்கஞ்சி
அங்குளா ரெல்லாமப்பால் ஆயினராகவே தான்.

க) மூன்ன முன்றரைக் கோடியு மொழியநீ முதல்வ
இன்ன மோரரைக் கோடிநா ளீந்ததரு ளென்ன
மன்னு மாசுணப் பாயலான் மாயமி தென்று
உன்னுமாமலே மகளுட னுமாபதி நகைத்தே.

கா) அன்ன வாறரைக் கோடியே யளித்தன மென்றும்
நின்ற னுமமா மிராவண னெனநிய மித்தும்
மின்னும் வார்சடைக் கண்ணுதல் விண்ணவன் விடுப்பப்
பொன்னின் மாமுடிப் புட்பகம் பொருந்தினன் போனன்.

வரையெடுத்தப் படலம் முற்றிற்று.

# 8. திக்கு விசயப் படலம்

## முன்னுரை

இராவணன் குபேரனை வென்ற பிறகு கிழக்கு முதலிய திசைகளுக்குரிய இந்திரன் முதலிய திசைக்காவலரோடு போர்செய்து வெற்றிபெற்ற நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாகலின் இது திக்கு விசயப் படலம் எனப்பெயர் பெறுகின்றது. சில ஏடுகளில் இவ்வொரு படலமே (1) வேதவதி அனல் மூழ்கு படலம்; (2) மருத்தன் வேள்விப் படலம்; (3) அனரண்ணியன் சாபப்படலம்; (4)இயமன் மேற்செல்படலம்; (5) பாதாளஞ் செல்படலம்; (6) வருணன்மேற் செல்படலம்; (7) சூர்ப்பணகை சோகப் படலம்: (8) மதுவின்மேற் செல்படலம்; (9) அரம்பைப் படலம்; (10) தேவர்கள் மேற்செல் படலம் எனப் பத்துப்படலங்களாகப் பிரிந்தும் காணப்படுகின்றது.

## படலப் பொருள் சுருக்கம்

சிவனருள் பெற்றுவந்த வலிய பெரிய மலைபோன்ற தோள்களையுடைய இராவணன் உலகு எங்கணும் திரிந்து கண்டு பின்பு இமவனம் என்ற வனத்தை அடைகின்றான். அங்கு வேதவதி தவஞ்செய்து கொண்டிருக்கின்றாள். திருமாலின் ஆயிரம் திருநாமங்களையே சொல்லிக்கொண்டு அவனது மழைவண்ணத் திருமேனியையே நினைவிற்கொண்டு பிறிதொன்றினை நினையாமலும் பேசாமலும் சடையும் மரவுரியும் பூண்டு தவநிலையிலிருக்கின்ற அந்தக் கற்புமிக்க வேதவதியை இராவணன் பார்க்கின்றான். அக்கற்புடைக்கன்னியை விளித்து உன் பெயர் யாது? நீ யார் மகள்? என்று வினவியதோடு 'உன்னை நோக்கி உலகத்தார் செய்யவேண்டிய தவத்தை நீ செய்தல் தக்கதன்று' என்றும் கூறுகின்றான்.

அவன் வினவியதறிந்த வேதவதி, 'என்பெயர் வேதவதி குசத்துவசன் என்ற பெருந்தவ முனிவன் வேதங்களை ஓதிட, அவன் ஓதும் வேதத்தில் தோன்றிய எனக்கு வேதவதி என்று என் தந்தை பெயரிட்டான், என்னை மணம்பேச வந்தவர்க்கு என் தந்தை 'என் மகளுக்கு வாசுதேவனே கணவனாக வேண்டும்

என முடிவுசெய்துள்ளேன்' என்று கூற, அவர்கள் ஆசையை விடுத்துச்சென்றனர். சம்பு என்னும் அரக்கன் என் தந்தை உறங்கும்போது வதைத்திட, என் அன்னையும் என் தந்தையோடு எரியில் மூழ்கினுள். பின்பு என் தந்தையின் கருத்தை முடிப்பதற்கு என்னெஞ்சமும் திருமாலையே நாடுவதால் இந்தத் தவத்தை மேற் கொண்டேன் யான்' என்று தன் வரலாற்றினைக் கூறுகிருள். அதைக்கேட்ட இராவணன், 'யான் இலங்கைக்கு மன்னன்; என் பெயர் இராவணன்; புலன்களை வென்ற புலத்தியன் பேரன்; நீ சிந்தை கலங்காமல் என் மனைவியாய்ப் பூவுலகம் முதலிய உலகங் களுக்குத் தலைவியும் ஆவாயாக' என்று வேண்டுகின்ருன். மேலும் சொல்கிருன்–'குலத்தினுலும் மிகுகின்ற வெற்றியினுலும் வலிமையினுலும் ஒரு பழிப்பில்லாத அழகிய வடிவத்தாலும் பிற நலத்தினுலும் என்னை நாரர்யணன் ஒப்பானே? அந்த நாராயணனை நோக்கித் தவஞ்செய்து உடம்பினை வாடச்செய்வதால் என்ன பயன்? என்பது அவன் காமப்பிதற்றலாகும். வேதவதியின் உள்ளத்து உறுதியை ஓராத இராவணன் சொல்லிய இச்சொல் கற்பிற் சிறந்த வேதவதியின் செவியில் நெருப்பில் காய்ந்த இரும்புச் சலாகை நுழைத்தாற்போல நுழைதலும் உடம்பு வேர்த்து அவள் சொல்கிருள்.

'படம் எடுத்து ஆடுகின்ற பாம்பாகிய அணையில் துயில்கின்ற பரம்பொருளை – தூயோனை – என் உயிரை–என் துணையை – நாரா யணனைக் கணவனுக வரித்தேன் யான்' என்று சொல்லவும் நீ பேய் பிடித்தவனைப்போல இவ்வாறு பேசலாமா? இந்த இழிவால் நிலவுலகில் நெடிய பழியையும் இவ்வுடம்பிற்குப்பின் நரகங்கள் பலவற்றையும் பொருந்துவாய்; ஐம்புலன்களையும் வென்ற புலத்திய மாமுனிவனது குலத்துப் பிறந்த உனக்கு இதுவோ குணம்!' என்று குயில் போன்ற குரலில் இங்ஙனம் கூறிய அளவில், இராவணன், மன்மதனுடைய மலர்க்கணைகளால் மதிமயங்கி வேதவதியின் மலர்க்கைகளைத் தொடுதலும், அவள் உடம்பு காய்ந்த நெய்யில் தோய்ந்ததுபோல எரியச் சினந்து 'ஏடா! பிரமன் தந்த வரத்தின் செருக்கால் கூடாத சொற்களைச் சொல்லிக் கூடாத என்னைத் தீண்டினுய்; இனி, உனக்கும் இலங்கைக்கும் உன் உறவினர்க்கும் கேடு உண்டாகத் தோன்று

வென்' என்று சொல்லி விட்டுத் தேவர்கள் மகிழ்ந்து மலர்மாரி சொரிய, முனிவர்கள் வியப்ப, நெருப்பில் மூழ்குகின்றுள். அவ்வாறு நெருப்பில் மூழ்கிய பெருந்தவத்தினளாகிய வேதவதி பெருமை யுடைய சனகனுடைய வேள்வியில் வந்து தோன்ற அந்தச் சீதையைத்தான், இராமா! நீ வில்லை ஒடித்துக் கைப்பிடித்து மணந்தாய்! என அகத்திய முனிவர் கூறுகின்றார். அதுகேட்ட இராமன் வியப்பு அடைந்து, 'சினமிக்க இராவணன் கடைசி வரையில் செய்த செயல்களை ஒன்றும் விடாமல் சொல்லுக' எனப்பணிக்க, முனிவர் சொல்கின்றார்.

## மருத்தன் வேள்வி

வேதவதி வெந்தீயில் மூழ்கியபின்பு ஞானமில்லா இராவணன் புட்பகத்தில் ஏறிக்கொண்டு, தேவர்களும் முனிவர்களும் சேர்ந்தி ருந்த மருத்தன் வேள்விச் சாலையை அடைகின்றான். அவனைக் கண்டவுடன் இந்திரன் அஞ்சி மயிலாக உருமாறிச்செல்கிறான். வருணன் அன்னப்பறவையாகப் பறந்தோடுகின்றான். எமன் காக்கை வடிவெடுத்துக் கடிது பறக்கின்றான். குபேரன் ஓணனின் வடிவு கொண்டு பதுங்கிக் கொள்கிறான். மற்றவர்கள் எல்லாம் இவ்வாறே மாயவடிவுகொண்டு திசைதோறும் மறைந்து ஓடிய பின்பு மருத்தன் என்ற மன்னனை நோக்கி இராவணன், "உனக்குத் தோற்றேன் என்று சொல்" அங்ஙனம் சொல்லவில்லையாயின் என்னோடு போர் செய்க" என்று சொல்ல, கோபம் கொண்ட மருத்தன், "நீ யார்? என்று வினவ, இராவணன் சிரித்துக் குபேரனைப் போரில் வென்று புட்பகவிமானத்தைக் கைப்பற்றிய என்னை அறியாயோ? என்கின்றான். அண்ணனைப் போரில் வென்ற மூர்க்கனோ? என்று மருத்தன் இகழ்ந்து கூறுகின்றான்.

அவ்வாறு இகழ்ந்துகூறிப் போர்க்குப் புறப்படும்போது வேள்வி ஆசான் மருத்தனைப்பார்த்து, 'நீ தொடங்கிய வேள்வியை முற்றுப்பெறச் செய்யாது போவாயாயின் அக்குறைபாடு நின் குலத்தையே அழித்துவிடும்' என்று கூறுகின்றான். அப்புரோகிதன் சொல்லைக்கேட்ட மருத்தன் போர்செய்வதை விடுத்து வேள்வியை யடுத்து அமர்கின்றான். அது கண்ட இராவணன், என்னுடையதே வெற்றி யென்று மகிழ்ந்து சென்றுவிடுகின்றான். அரக்கன்

சென்றதை அறிந்த இந்திரன் ஒரு மயிலினைப்பார்த்து, 'நின்னுருவம் தாங்கி யான் உயிர் பிழைத்தேன்; ஆதலால், என் ஆணையால் மேகம் மழைபெய்யும்போது நீ ஆடும் மகிழ்ச்சியும் என்னைபோல உனக்கு ஆயிரங்கண்ணும் உண்டாகுக' என்று வரம் அளிக்கின்றான்.

காட்டில் ஒரு காக்கையைக் கண்டு எமன், 'நின் உருவு கொண்டு யான் உயர்பிழைத்தேன்; ஆதலால், உனக்குக் கொலையோ நோயோ நேராமல் இருப்பதோடு, உலகத்தில் இறந்தவர்களை நினைந்து உனக்கு ஊட்டுவதால் பிதிரர் மகிழ அதனால், நீ நீண்ட ஆயுளுடன் இருப்பாயாக' என வரம் அருள் கின்றான். வருணன் அன்னப்பறவையைக் கண்டு, 'நின் அழகிய உருவைக்கொண்டு யான் உய்ந்தேன். ஆதலால் நீ பிரமனுக்கு வாகனமாய் விளங்கும்பேறும் வெண்ணிறமும் கொண்டு வாழ் வாயாக' என வரமளிக்கின்றான். குபேரன் ஓணானைப் பார்த்து, 'என் மரணத்தைக் தடுத்துக் காப்பாற்றிய நீ வேண்டிய நிறத்தைப்பெறுவதோடு பொன்னுருவம் பெறுக' என வரம் அளிக்கின்றான்.

## அனரண்ணியன் சாபம்

இவ்வாறு இந்திரன் முதலியோர் தமக்குருவம் கொடுத்த வற்றிற்கு வரங்களைக் கொடுத்துவிட்டு, அந்த மருத்தனது வேள்வியை முடித்துச் செல்கின்றார்கள். இராவணன் பின்பு பூமியில் எதிர்த்தவர்களையெல்லாம் வென்று அயோத்தி நகரத்தை அடை கின்றான். அப்போது அயோத்தியை ஆண்ட அனரண்ணியனை நெருங்கி ''உன்னோடு போர் செய்ய அஞ்சினேன்' என்று சொல்; அல்லது போர் செய்! என இராவணன் அச்சுறுத்த அனரண்ணி யன் 'செல்வமிக்க இந்த அயோத்தியை யாண்ட மன்னர் எவரும் கேளாத சொல்லைச் சொல்கின்றாய்; நாமிருவரும் போர் செய்வோம்' என ஆயத்தமாகின்றான். இருதிரப்படையும் எதிர் எதிர்பொரு கின்றன. இராவணனால் தன் நால்வகைச் சேனையும் பாழாதலைக் கண்ட அனரண்ணியன் மனங்கொதித்து மாரிபோல் அம்புகளைச் சொரிகின்றான்.

அந்த அம்புகளை மதியாமல் இராவணன் அனரண்ணியனை நெருங்கி வந்து அடித்துத் தள்ளி எள்ளி நகைத்து 'நின் சேனை பொடியாயது; நீயும் அடிபட்டு விழுந்தாய்; 'உனக்கு அஞ்சினேன்' என்ற ஒரு சொல் சொல்லிவிட்டு அரசாளாது செருக்குகின்றாய்' என்று கூற, அனரண்ணியன், "நெருங்கிய பத்துத் தலைகளோடு கெட்ட புத்தியையும் உடைய இராவண! அறப்போரும் நல்ல நடையுமில்லாமல் 'யான் தோற்றுவிட்டேன்' என்று நகைத்தாய்! முன் வைத்த காலைப் பின்வைக்கமாட்டோம். இவ்வுலகத்தில் காலத்தின் செயலை வெல்ல வல்லவர் யாருளர்? நஞ்சுபோன்ற மனத்தினையுடையாய்! என்னை அவமதித்தாய்; அதனால், என் குலத்தில் பின்பு தோன்றப் போகின்ற தசரத இராமனது கொடிய கணையால் பனங்குலைபோல நின்தலைகள் தரையில் வீழ்வதாக" எனச் சபிக்கின்றான்.

### நாரதன் வருகை

அந்தச் சாபத்தைப் பொருட்படுத்தாத இராவணன், கையில் வில்லை வளைத்துக் கண்களில் கனல் பரக்கப் பல நச்சுக்கணைகளைத் தூவி விட்டுச் செல்கின்றான். அவன்முன் யாழினை இசைத்துக் கொண்டு நாரதன் அங்குவந்து இராவணனை நோக்கி, போர்த்திறம் பொருந்திய கொடிய வில்லையேந்திய இராவண! எளிய நரியோடு போர்செய்யுமோ சிங்கம்? பசியாலும் மூப்பாலும் வருந்திவாழ்கின்ற மனிதரோடு தொடர்ந்து போர்செய்தாய் எனக்கேள்விப்பட்டோம்; பிணத்தை வெட்டி வாளை முறித்துக் கொள்வதால் பெறும் பேறுதான் யாது? எமன் வாயில் அகப்பட்டுக் குலைந்து வீழ்கின்ற எளிய மானிடரைக் கொல்லுதல் முறையல்லவே, என்று கூறுகின்றான். இராவணன் அச்சொல்லைக்கேட்டு, 'எம்பெருமானாகிய தாங்கள் சொல்லியதைச் செய்வதே என்குறிக்கோள்' என்று கூற, நாரத முனிவன் மகிழ்ந்து 'நீ நல்லவன், நீ சென்று எமனோடு போர் செய்; அவன் தோற்பது திண்ணம்' என்று கூறுகின்றான் அம்முனிவன் சொல்லியது கேட்ட இராவணன், புட்பகத்தில் ஏறிக்கொண்டு தென்திசை நோக்கிச் செல்கின்றான். அந்தப் புட்பகத்துக்கு முன்னே முந்துகின்ற நாரத முனிவனைப் பார்த்து எமன், அம்முனிவனை வணங்கி, வந்த காரியம் வினவ, நாரத

முனிவன், 'ஒளிமிக்க முடியையுடையவனே! பிரமன் கொடுத்த வரம்பெற்ற செருக்கால் மூவுலகத்தையும் வெல்ல எண்ணும் இராவணன் நின்னோடு போர் செய்ய வருகின்றான், அதையறிந்து நினக்குச் சொல்லவே வந்தேன்' என்கின்றான்.

சூரியன் மகனாகிய எமனுக்கு நாரதன் இதைக்கூறும் போது இராவணன் எமனுலகத்திற்கு வந்து சேர்கின்றான்.

### சுவர்க்கம்

பெண்ணாசை நீங்கினவர்களும், உடம்பின் நிலைமையை உணர்ந்து அறங்களைச் செய்தவர்களும், நல்ல நெறியில் வாழ்க்கையை நடத்தினவர்களும் சுவர்க்கத்தில் இனிமையாக வீற்றிருப்பதை இராவணன் காண்கின்றான். பூதானம், கோதானம் செய்தவர்கள், பிற பெரிய தானங்களைச் செய்தவர்கள், தமக்கு கிடைத்த உணவில் பிறர்க்குப் பகுத்துக்கொடுத்து உண்டவர்கள், தம்மை நாடிவந்தோர்க்கும் பசிப்பிணியை தீர அன்னம்பாலிக்கும் அறவோர்கள் ஆகிய அருளாளர்கள் சுவர்க்கத்தில் வீற்றிருந்த தன்மையும் காண்கின்றான். மீண்டும் மீண்டும் உடம்போடு பிறக்கும் தன்மையைக் கொடுக்கின்ற இருவினைகளைத் தம்பால் சாராமல் நீக்கிவிட்ட தவமுனிகள் தங்குமாறு மடம் கட்டிக் கொடுத்தும், மறைநூலுணர்ந்த அந்தணர்க்கு மனைகளைக் கட்டிக்கொடுத்தும், வெப்பம் மிக்க வேனிற்காலத்தில் மக்கள் தாகம் தணியுமாறு தண்ணீர்ப்பந்தல் வைத்தும், குளிர்காலத்தில் துறவியர்க்குப் போர்வையினைக் கொடுத்தும், புதியவர்களாய் வந்தவர்கள் தங்கிச்செல்ல இடம் கொடுத்தும் உதவுகின்ற புண்ணியவான்கள், அழகிய மணிகள் பதித்த பெரிய மணி மண்டபத்தில் இனிதாக வீற்றிருத்தலைக் காண்கின்றான்.

உடுக்க உடையும் உண்ண உணவும் இல்லாத வறியோர்க்குப் புதிய உடையுதவியும் உண்ண உணவு கொடுத்தும் நோய்வந்த போது அதுதீர மருந்துகொடுத்தும் உதவிய பெரியோர்களும், தம்மை அடுத்து அடுத்து வைதவர்களையும் வாழவைக்கும் பொறுமைக் குணமுடையவர்களும், அந்தணர்க்கும் பசுவுக்கும் வந்த நடுக்கத்தைத் தீர்த்த அறவோர்களும், நல்ல பொன்னுலகத்தில் தலைவர்களாய் வீற்றிருப்பதையும் காண்கின்றான் இராவணன்.

### நரகம்

நீதி மன்றத்தில் வழக்குரைக்க வருபவரிடம் பணம்பறித்து உண்டவர்களும், மெய் வழக்கல்லாத பொய்வழக்கை மன்றத்தில் உரைத்தவர்களும், தன் மனைவியோடு மனம் ஒன்றி வாழாமல் தமக்கு வரும் பழியும் பாவமும் பாராமல் பிறர்மனைவியரை விரும்பி அவரோடுகூடி மகிழ்வோர்களும், ஓர் உயிரைக்கொன்று அதன் உடம்பை உணவாகத் தின்றவர்களும், பிறர் குற்றங்களைப் பலரிடம் சொல்லித் திரிகின்றவர்களும்,ஒருவர்மனம் உவந்துசெய்த நன்றியை மறந்தவர்களும், நரகத்தில் கிடந்து துன்புற்று நடுங்குவதையும் இராவணன் ஊன்றி நோக்குகின்றான்.

தம்மிடம் பொருள் வேண்டிவந்த கற்றவர்களைக் கோபித்துத் துரத்தியவர்களும், பல்லோர் அறிய மணந்துகொண்ட காதலியைக் காப்பாற்றாது கைவிட்டவர்களும், பெற்றதாய் பசிமிக்கு வருந்தவும் உணவளிக்காது தம்பெரிய வயிற்றினை மட்டும் உணவால் நிரப்பிய வர்களும், தம்மோடு வேற்றுமையற்றுப் பழகுகின்ற நண்பர்களிடம் வேறுபாடு அறாது பழகுகின்ற வஞ்சகர்களும், அந்தணரை இகழ்ந்தவர்களும், தமக்குச் சேர்ப்பிட்ட அரசனைப் போரில் தனியே விட்டு ஓடுகின்ற கொடியவர்களும் நரகத்தில் தீயில் கொதித்துக்கொண்டிருப்பதையும் காண்கின்றான்.

ஒருவன் செய்த தீச்செயலை மனத்திற்கொண்டு கோபத்தால் அவன் குடிக்கே கேடு செய்தவரும், வறுமை மிக்குப் பசியால் வாடித் தம்மிடம் வந்து யாசித்தவர்களைத் திட்டிவிட்டுச் சிறிது கொடுக்கும் அருளிலாதவர்களும், தமக்கு நேர்ந்த ஆபத்தால் அபயம் என்று கூறிக்கொண்டு தம்பால் வந்தவர்க்கு அபயம் கொடுக்காமல் விட்டவர்களும், பசுவதை, சிசுவதை முதலிய பெரிய பாவத்தைச் செய்தோரும், எப்போதும் பிறரைப் பழித்துக் கொண்டே இருப்பவர்களும் அங்குத் துன்பத்தால் பதைபதைப் பதையும் காண்கின்கின்றான். மண்ணுலகில் மனிதராப் பிறக்கும் பேறு பெற்றிருந்தும் தம் நாவினால் ''அறிஓம் நமோ நாராயணாய நம'' என்று சொல்லமாட்டாத பாவிகளும் பல தெய்வங்களைப் பழித்துப் பேசுகின்ற பாதகர்களும், தங்கள் வாய்வழியாகப் புழுக்களைச் சொரிந்துகொண்டு பெரிய நரகமாகிய குடத்திலே பரவிக் கலங்குவதையும் இராவணன் காண்கின்றான்.

வாள் முதலியவற்றால் வெட்டுண்ட தசையும் மூளையும் குடலும் நிணமும் எல்லாம் குழம்பி ஒன்றாய்ச் சேறுபட்டுக்கிடக்கின்ற கொடிய நரகத்தில் தீவினை செய்தோர்கள் கிடந்து வருந்துகின்ற காட்சியை இராவணன் தெளிவாகப் பார்த்து 'இந்தத் துன்பமிக்க நரகத்திருந்து கரையேறுங்கள்' என்று அவர்களைக் கைதூக்கிவிட, 'இன்று நாமெல்லாம் உய்ந்தோம்' என்று சொல்லிக்கொண்டு துன்பம் நீங்கினவர்களாக, அதனைக்கண்டு யாரும் மீளுதற்கரிய நரகத்தினைக் காக்கின்ற காவலர்கள் இராவணன்மேல் கோபங் கொண்டு வருகின்றார்கள். கொடிய கோபமே வடிவு கொண்டாற் போன்ற மேனியையுடையவர்களும், கொடிய கண்ணையுடையவர் களும் மலையின் குகையைப்போல் அகலத்திறந்த வாயினை யுடையவர்களும், நஞ்சினும் கொடிய நெஞ்சினையுடையவர்களும் ஆகிய எமன் பணியாளர், நம் வலிமைக்கு இவ்வுலகம் முழுமையும் அஞ்சா நிற்கும்; இன்று அஞ்சாதவர் அரக்கர்தாமோ?' எனக் கூறிக்கொண்டு வந்து இராவணனைச் சூழ்ந்துகொண்டு 'உயிரைக் கவர்வோம்' என்று நெருங்கித்தாக்க, மகோதரன் முதலிய அரக்கர்கள் சென்று எமன் சேனையோடு போர் செய்கின்றார்கள்.

## எமனோடு போர்

எமதருமன் சேனை வீரர்கள், தம்மைத்தாக்கிய இராவணனது சேனை அஞ்சுமாறு நெருங்கிப் புகுந்து அரக்கர்சேனை அழியுமாறு கொன்றுவிட்டு, இராவணனுடைய கரிய உடம்பு முருக்கம் பூ பூத்த மலைபோன்று தோன்றி இரத்தம் கொப்பளிக்க ஆயுதங் களைச் சொரிந்து ஆரவாரிக்கின்றார்கள். அப்போது இராவணன் ஊழித்தீப்போலக் கோபித்துப் புட்பகத்தைச் செலுத்திக்கொண்டு தன் இருபது கைகளாலும் ஆயுதங்களைச் சொரிந்து எமன்சேனை வீரரெல்லாம் தரையில் வீழுமாறு மோதுகின்றான். போரில் அழிந்த எம தருமன் சேனைவீரர், பின்பு தேறி எழுந்து, இராவணன் மேனியில் நுழையுமாறு படைகளைச் செலுத்திப் போர் செய்யும் போது இராவணன் கோபங்கொண்டு, புட்பகத்தினின்றும் தரையில் பாய்ந்துநின்று வில்லை வளைத்துக்கொண்டு பாசுபதத்தை விடுத லோடும் எமதருமன் சேனைவீரர் வெந்து தீய்கின்றனர். இராவணன் வெற்றிகொண்டு ஆரவாரிக்கின்றான். அவன்

ஆரவாரத்தைக்கேட்ட எமதருமன் வெகுண்டு செங்குதிரைகள் பூண்ட தேரில் ஏறிக்கொண்டு வருகின்றான். அவனுக்கு இரு புறத்திலும் காலபாசமும் காலதண்டமும் செல்கின்றன.

எமன் வருகையைக் கண்ட அரக்கர்கள், 'அறிவில்லாத இராவணன் இன்று படுவதுபடட்டும்' என்று அஞ்சி ஓடுகின்றார்கள்; இராவணன் மட்டும் ஓடாமல் நிற்கின்றான். அவன் நிலையை கண்ட எமதருமன். 'என்முன் அஞ்சாது நின்றபோதே என்னை வென்றனன் அல்லனோ? என்று எண்ணி ஈட்டி, வேல் முதலிய ஆயுதங்களை இராவணன்மேல் செலுத்த, அவை இராவணன் மார்பில் பட்டவுடன் அவன் கோபித்து, வில்லை வளைத்துக்கொண்டு அம்புகளைச் செலுத்தித் தன்னைக் குறித்துவரும் அவ்வாயுதங்களை வீழ்த்திவிட்டுக் கூரிய கணைகளை எமன் மார்பில் செலுத்தித் துன்பம் செய்கின்றான். இவ்வாறு இருவரும் போர்செய்யும்போது இராவணன் மிகவும் வெகுண்டு எமனது தேர்ப்பாகன் மேலும் எமதருமன் மேலும் காலன்மேலும் ஆயிரக்கணக்கான அம்புகளைச் செலுத்துகின்றான். அதுகண்டு எமதருமன் பெரிதும் வெகுண்ட போது, காலன் நெருப்புப்போலச் சினந்து, எமதருமனைப் பார்த்து, ''என்னைப் போர்க்கு அனுப்புவாயாயின் இராவணனை உயிர்கவர்வேன்; பேராற்றலுடைய மதுகைடவர் முதலாகிய பகைவர்களின் உயிரை யான் முன்பு கவர்ந்திருப்பதை உணர்ந்து பார்ப்பாயாக'' என்கின்றான். அவன் அங்ஙனம் சொல்லவும் எமன், 'இந்த இராவணனது ஆயுளைக் கவர்வேன் பார்ப்பாயாக என்று கூறிக்கொண்டு உலகம் கலங்கக் காலதண்டம் என்னும் ஆயுதத்தை விடக் கருதுகின்றான்.

அப்போது எல்லா உலகங்களும் மாய்ந்துபோகும் என்று தேவர்கள் அஞ்ச, அதனை உணர்ந்த பிரமன் அங்குத்தோன்றி உயிர்கட்கு நாயகனாகிய எமதருமனை அணுகி, ''திண்ணிய பெரிய தோள்களையுடைய இராவணன், முன்பு தவஞ்செய்து பெற்ற வரங்களின் வலிமையால் காலதண்டம் அவனுயிரைக்கவராது; ஆதலால், அதனைவிடாமல் இருப்பது நல்லது என்கின்றான். அவன் சொற்படி எமதருமன் அந்தக் காலதண்டத்தைவிடாமல் நின்ற போது இராவணன், வெற்றி எனதே என்று மகிழ்ந்து தன்

அமைச்சர்களோடு புட்பகம் ஏறிப் பாதாளம் புகுந்து போகவதி என்ற நகரில் புகுகின்றான்.

அந்நகருக்கு அரசன் வாசுகி என்பானோடு அளவளாவி நிலை பெற்ற உறவுகொண்டு பின்பு மணிமதி என்ற பெயர் பெற்ற வளவிய நகரத்தை வந்தடைய, அங்குள்ள நிவாதகவசர் முதலியோர் நில்! நில்! என்று சொல்லி அந்த இராவணனை எதிர்க்கின்றார்கள்.

## நிவாதகவசர் போர்

இராவணன்மேல் அளவிலாப் படைகளை ஏவுகின்றார்கள். அந்தப் படைகளையெல்லாம் தான்விட்ட படைகளால் மாற்றி விட்டு அவர்கள் தாங்குதற்கரிய படையை விடுத்துப் போர்செய்கின்றான். அவர்களும் ஆற்றலோடு போர்செய்ய ஓராண்டுகள் போரில் கழிக்கின்றது. அப்பேர்து பிரமன் வந்து போரைவிலக்கி, நீங்கள் பல்லாண்டுகள் போர்செய்தாலும் ஒருவரை ஒருவர் வெல்ல வொண்ணாது; வலிமையில் ஒத்தவர்கள் நீங்கள். எனவே, உங்கள் ஆற்றல் உலகம் முழுவதும் சென்று பரவியது. இனி, உறவு கொள்வதே நல்லது' என்கின்றான். பிரமன் சொன்னபடி கேட்டுத் தங்களுக்குள் நட்புகொண்டு போர்மறுப்பு உடன்பாடு செய்து கொள்கிறார்கள், அந்த அவுணர்கள் இரர்வணனுக்குச் சிறப்பும் பூசனையும் செய்கின்றார்கங். அந்த நகரில் இராவணன் ஓராண்டு வரையில் இனிதாகத் தங்குகின்றான்.

## வருணன் போர்

அந்த மணிமதி என்கின்ற நகரைவிடுத்து இராவணன், வலிமைமிக்க வருணனை வெல்லும் பொருட்டு அவன்பொருந்தியுள்ள கல்நகரியை நெருங்கி அங்குத் தீவில் வாழ்கின்ற காலகேயரை எல்லாம் ஒருகணநேரத்தில் கொன்றுவிட்டுத் தன்னுடைய தங்கையாகிய சூர்ப்பணகையை மனைவியாகக்கொண்ட வித்துரு சிங்கனையும் போர்க்களத்தில் கொன்று வீழ்த்துகின்றான். பின்பு, கடல் நீரிலே பொருந்தும் வெண்முகில் என்னுமாறு பொலிவுடையதும், சிவபிரான் வீற்றிருக்கும் வெள்ளி மலையைக் கடலிடத்து விண்ணில் ஊடுருவுமாறு நிறுத்தினாற் போன்றதும் அழகிய

வருணதேவன் மாளிகையை இராவணன் கண்களால் காண்கின்றான். அங்கு வருணன் இல்லாதது கண்டு, வருணன் வந்து 'உனக்குத் தோற்றேன்' என்று சொல்லுதல் அல்லது 'போர்செய்தல்' ஆகிய இரண்டில் ஒன்று செய்யாமல் எங்கு ஒளிந்தான் 'என்று விளம்பும்போது, வருணன் மைந்தர் வந்து வெகுண்டு போர்தொடுக்கிறார்கள். இராவணன் அவர்கள் சேனையைப் படையால் வீழச்செய்கின்றான்.

தன்சேனை அழியப் பொருத அம்மைந்தர்கள் சினம் மிக்குப் புட்பகத்தின்மேல் நின்ற இராவணன்மேல் அம்பு மாரியைத் தூவி ஆரவாரிக்கின்றார்கள். அவ்வம்புகளை விலக்குவதே இராவணனுக்குப் பெரும்பாடாயிற்று. இராவணன் அல்லலுறு கின்றான். அதுகண்டு மகோதரன் கோபித்து வருணனது சேனையின் வலிமையைக் கவர்ந்து அச்சேனையை அழிக்கக் கண்டு வருணன் மைந்தர்கள் மனம் கொதிக்கின்றார்கள். மாயப் போர்வல்ல மகோதரன் மேலும் இராவணன் மேலும் பல அம்புகளை எய்தும் இரத்தம் சோரும்படியாக கொடியபோர் செய்து ஆராவாரிக் கின்றார்கள். அதுகண்ட இராவணன் கொதித்து இருபதுகைகளிலும் சூலம் முதலிய ஆயுதங்களைக்கொண்டு அவ்வருணன் மைந்தர் மேல் வீழ்ந்து போர்செய்ய, அம்மைந்தர்கள் பயத்தோடும் பழியோடும் ஓடித் தம் இருப்பிடத்தடைகின்றார்கள். அதுகண்டு நஞ்சினும் கொடியவனான இராவணன் 'என் முன்நில்லாது வருணன் எங்கு ஒளிந்தான்' என்ன, வருணன் அமைச்சர்கள் முன்வந்து, வருணன் பிரமன் உலகத்தில் உள்ளான். அவன் மைந்தரோ நின் போருக்கு ஆற்றாது அழிந்துபோனார்கள். எனவே, நினக்கு ஒருவர் எதிரில்லை; இராவண! நீ இனிதே செல்லுக என்று கூறினார்கள். அச்சொல்லைக் கேட்டவுடனே இராவணன் மகிழ்ந்து பகிரண்டம் அதிர ஆரவாரித்துக்கொண்டு வந்தவழியே புறப்பட்டு இலங்கையை நோக்கி வரும்போது, அந்தணர் கன்னியர், அசுரர் கன்னியர், கந்தருவக் கன்னியர் முதலிய கன்னியரைக் கண்ணில் காண்கின்றான். அந்த அழகிய கன்னியர் எல்லாம் பூனை வாயகப்பட்ட கிளிகளைப் போல் நடுங்க, அவர்களையெல்லாம் புட்பகத்தில் ஏற்றிக்கொண்டு இராவணன் தன் இலங்கையை எய்துகின்றான். அந்த கன்னியர்களின் தாய்மார்கள் கன்றினைப்

பிரிந்த பசுவினைப்போலக் கதறி, 'எங்கள் பெண்கள் நடுங்கச் செய்த பாவத்தால் இலங்கை நகரம் பாழாக! இராவணன் முடியோடுந்தலையற்று வீழ்க! எனச் சபிக்கின்றனர்.

## சூர்ப்பணகை துயரம்

இராவணன் தனது இலங்கையை அடைந்தபின்பு சூர்ப்ப ணகை, காலகேயர் போர்க்களத்தில் தன்கணவன் வித்துருசிங்க னும் மாண்டான் என்பதைக் கேள்விப்படுகின்ருள். பெருந் துயரால் தரைமேல் விழுந்துபுரண்டு அலறித் தலைமேலே கை வைத்துக்கொண்டு தன் கணவன் மாய்ந்துகிடக்கும் போர்க் களத்தை நெருங்கி அவன் உடம்புமேல் ஒரு மலைமேல் மற்ரெரு மலை வீழ்ந்ததுபோல வீழ்ந்து உயிர்ப்பற்றுக் கிடக்கின்றவளைப் பார்த்த பெண்டிர் அவள் முகத்தில் நீரைத்தெளித்து எழுப்பு கின்ருர்கள். செத்தவர் எழுவதுபோல் எழுந்து புலம்புகின்ருள்.

''நாதனே! நீ என்னைக் கைபிடித்த அன்றுமுதல் இன்றளவும் யான் சொல்லிய சொல்லைப் பிழைத்தறியாய்! என்னை நடுக்கம் காணுமல் ஊர்க்குப்போக எழுந்திருப்பாயாக; பொய்யுறக்கம் வேண்டாம். எனக்குபின் சூர்ப்பணகை உயிரோடிருப்பாளோ? அல்லது இறப்பாளோ? என்று அறிய எண்ணி உயிரடங்கிக் கிடக்கின்ருயோ? பெரும்துயரப்பட்டுப் பழிபூண்டு உனக்குப்பின் இருக்கமாட்டேன். நீ எழுந்திருப்பாயாக! என்று இவ்வாறு பல சொல்லி அழுகின்றவளைத் தோழியர் தாங்கிக்கொண்டு வீட்டுக்குள் போக வித்துருசிங்கன் உடம்பை எரியிலிடுகின்ருர்கள்.

அதைக்கேள்வியுற்ற சூர்ப்பணகை நெருப்புப்போலக் கொதிக்கின்ற நெஞ்சினளாய் இடிமுழக்கம் போலக் கதறி அழுது, தோழியர் ஆறுதல் சொல்லவும் தேருமல், 'முன்பு மணக்கச்செய்த என் கணவனைக் கொன்ற இராவணனது நாக்கினைப் பிடுங்கிவிட்டு என் உயிரைப் போக்கிக்கொள்வேன்' என்று கருதிப் புறப்படுகின் கின்ருள். இலங்கையில் புகுந்து தன் அண்ணனைக் கண்டு, அண்ணுவோ! அண்ணுவோ! என் வீடு துன்பங்கொண்டு கல் லெடுக்க, நீ வில்லெடுக்கை உன் வீரத்திற்கு இழுக்கன்ருே? உயிரை வளர்க்கும் முலைப்பாலே உயிரையுண்ணும் நஞ்சாகியது

போலக் கொல்லத்தகாத மைத்துனனைக் கொன்ற உன் தமையன் புலைப்பாவி!. பொல்லாதவன்! என்று எல்லோரும் சொல்லி என்னைப் பார்த்து அலைத்தலாலே முழுவதும் அலைப்புண்டேன்; என இவ்வாறு பலசொல்லி முறையிட்டு மலைவந்து விழுவதுபோல விரிந்த கூந்தலும் வெறும் கழுத்தும் கலங்கும் மனமும் உடையவளாய் இராவணனடியில் வீழ்ந்து புரள்கிருள். அவள் பருந்துயர்க்குக் காரணம் யாதென அறியாது வினவிய இராவணனுக்குச் சொல்லுகின்ருள். 'காலகேயர் பொருகின்ற போர்க்களத்தில் உன் கைவாளால் என் கணவன் ஆவியை உண்டாய்! என அழுகின்ருள்.

அதனை அறிந்த இராவணன் பெருந்துன்பமுற்று உன் கணவனை அறியாது கொன்றிருக்கின்றேன். போரில் என்னை மதிமயங்கச்செய்து என்னுலே என்மைத்துனன் உயிரை யுண்ட விதியைத் தடுக்க வல்லவர் யார்? என்று சொல்லி அவள் மனம் மகிழும்படி எல்லாவகையான பூசனைகளையும் செய்து, 'நம் தாயுடன் பிறந்தவளின் வயிற்றில் உதித்த கரனும் திரிசிராவும் தண்டகவனத்தில் இருப்பார்கள்; முன்னமே அவர்களுக்குச் சொல்லியுள்ளேன். அவர்களோடு மனமகிழ்ந்து அங்கு இருப்பாயாக' என்று அனுப்ப, அவளும் அவ்வனத்திற்கும் சென்று அவர்களோடு தங்கியிருக்கிருள்.

## மதுவின்மேல் போர்

பின்பு இராவணன் நிகும்பலை என்ற பெயருடைய நீண்ட வனத்தில் புகுந்து அங்கு வேள்வி செய்கின்ற தன்மகனைப்பார்த்து மகிழ்ந்து, நீ கருதிச் செய்யும் காரியம் என்ன? சொல்; என்று கேட்கிருன். அவன் கேள்விக்குச் சுக்கிரன் என்கின்ற குரு விடைசொல்லுகின்ருன். இராவண! அங்கிட்டோமம், கோமேதம், இராசசூயம், அயமேதம், பௌண்டிரிகம், வாசபேயம், பாசுபதம் என்ற பெயர்களையுடைய பெரிய வேள்விகள் ஏழினையும் செய்து முடித்த நின் மகனுக்குச் சிவன் வெளிபட்டு மகிழ்ந்து அழிவில்லாத வலிய தேரும், வில்லும் அம்பருத்தூணியும், தப்பாது பாயும் அம்புகளும் பகைவரையழிக்கின்ற வாளும் அளித்து யோகியரும் கலங்குதற்குக் காரணமான மாயைகளை விரைவில்

செய்து தேவர்கள் நடுங்க வெல்லுதற்கேற்ற வலிமைகள் உண்டாவதாக' என வரமும் கொடுத்தான். எனச்சொல்ல, இராவணன் மகிழ்ந்து தன்மகனை நோக்கித் 'தேவர்க்கட்கு அவி கொடுக்கின்ற வேள்விகளை இனிச்செய்யாதே' என்று கூறி அவனோடு இலங்கையை அடைகின்றான்.

அங்கு முன் கொணரப்பட்ட கன்னியர்கள் சோகம்பொருந்திய சிந்தையராய்க் கண்ணீர் சொரிந்துகொண்டிருக்கின்றவர்களை இராவணன் அழைக்கின்றான். அப்போது தீவினைகள் நீங்க முயலுகின்ற வீடணன் அந்தக்கொடிய இராவணனை நோக்கி 'நற்குடிப்பிறப்பும் மானமும் புகழும் அழியுமாறு ஆசைநோய் பெருகக் குலப்பெண்டிரை நடுங்கச்செய்த பாவிகள் தம் குலத்தோடும் நாசமடைந்து பழியோடு மறுமையில் நரகத்தை அடைவார்கள். தனிச்சிறப்புடைய அண்ணா! 'அப்பெண்டிரின் நிகழ்ச்சி இருக்கட்டும்; நம்மைந்தன் வேள்வியிலிருந்தான்; கும்பகன்னன் உறக்கத்தில் இருந்தான்; யான் செபம் செய்யும் நிலையில் நீரில்மூழ்கிக் கிடந்தேன். இங்ஙனம் நாமெல்லாம் இருக்க, 'மது' என்னும் அசுரன் நம் இலங்கைக்குள் புகுந்து நம் சேனையையெல்லாம் அழித்துவிட்டு, நம் சிற்றன்னை கும்பிநசி யாகிய குணவதியைப் பற்றிக்கொண்டு தன்னூர்ப்புக்கான்' என்று சொல்ல, அதுகேட்டு மனம் வெதும்பித் துடிக்கும் நெஞ்சினனாய் இராவணன், பூனைச் செவியை எலிமோந்ததுபோலவும் என் சேனைக்கடலைக்கலக்கி என் சிற்றன்னையைக் கைப்பற்றினவன் மதுவே! இதைக்கேட்டும் நாம் வாழ்ந்து இருக்கின்றோம்! நம் சேனைக்கடல் மதுபுரத்திற்குச் செல்வதாக! எனச் சினந்து கூறுகின்றான்.

பின்பு இலங்கைநகரம் காவல்பெற வீடணனை இருத்திவிட்டு மேகநாதனை போர்க்கு ஆய்த்தமாகுமாறு பணித்துவிட்டுக் கும்ப கன்னனைத் துயிலெழுப்பிப் போர்க்குப் புறப்படச் செய்துவிட்டு இராவணன் போர்க்கோலம்பூண்டு தேர்ஏறிச் செல்கின்றான். மேகநாதன் முன்செல்ல, கும்பகன்னன் பின்செல்ல இராவணன் மதுவின்புரத்தை அடைகின்றான். அதையறிந்து, கும்பிநசி சோகம் மேவும் மனத்தினளாய்ச் கண்ணருவி சோர வந்து இராவணன் கால்மேல் வீழ்கின்றாள்.

தன் கால்மேல் விழுந்த சிற்றன்னையைத் தாங்கி எடுத்து இராவணன் 'உன் மனத்துன்பத்தை விடு, வினையை — விதியைக் கடக்கவல்லார் யார்? என்று ஆறுதல்கூற, அவள் மீண்டும் அவன் அடியில் விழ்ந்து விம்மி விம்மிச் சொல்கின்ருள்.

''மக்களையிழந்த துன்பத்தினும் மனையாளை இழந்த துன்பத்தினும் மிக்க துன்பமாவது, பொருந்தாத விதவைத்துன்பம்'' ஆதலால், என்கழுத்தில் தாலியை நீக்காமல் நீ காத்தருள வேண்டும். என்று இராவணனை வணங்கிப் பின்னும் சொல்கின்ருள்: மணிமுடியுடையவனே! வேதம் சொன்ன பிரமம் முதலிய எட்டு மணத்தில் ஒருமணம் இராக்கதம் என்பதை அறிவாய்; கட்டுக் காவலைக்கடந்து கலக்கிப் புகுந்து கன்னியரைக் கைப்பற்றிக்கொண்டு வந்து மணத்தல் முறையே யாகும்'' என்று கூறுகின்ருள்.

அதுகேட்ட இராவணன் மனமிரங்கி, 'எல்லாப் பிழையையும் இன்று உனக்காகப் பொறுத்துக்கொண்டேன்; உன் கணவன், யான் இமையோருலகம் கைக்கொள்ளச் செய்யுமாறு என்னேடு ஒன்றுபட்டவனுய் என்னேடு வரச்சொல்' என்று சொல்ல, 'நல்லது இது' என்று உடன்பட்டு, உறங்குகின்ற மதுவைக் காண்கின்ருள். அவன் உறக்கத்தைத் தெளிவித்து, 'இராவணன் உன் உறவுவேண்டி இந்நகரின் புறத்தே நிற்கின்ருன். அவனை அடைந்து இனிய சொல்லி அவனுக்குத் துறக்கம் வெல்லத் துணை புரிக' என்று சொல்கின்ருள். அதை உடன்பட்ட மது இராவணனைச் சென்று கண்டு கொண்டாட, அவன் இல்லத்திற்குச் சென்று இராவணன், மதுவின் பூசனையைக்கொண்டு மகிழ்ந்து, ஒருநாள் இனிதிருந்து, மறுநாள் பெரிய சேனைசூழச் சென்று, இமயத்து அளகாபுரியின் புறத்தே தங்குகின்ருன்.

ஒலிமிக்க பெரிய சேனையை உடைய இராவணன், அளகர் புரியின் அருகில் குரா, சுரபுன்னை, செருஞ்சி பச்சிலைமரம் சந்தன மரம்,வெண்கடம்பு, குருந்தம், பாதிரி, முல்லை முதலியன நெருங்கியிருத்தலால் இரவும் பகலும் தெரியாது இருண்டுள்ள பூம்பொழிலை எய்துகின்ருன். வஞ்சமில்லாத யோகியரின் நெஞ்சம்போலத் தெளிந்து மங்கையர் மனம்போல மிக ஆழ்ந்து நிலைத்து நிற்கவிய

லாத நெடிய நீரில் உள்ள தாமரை மலராகிய பள்ளியில் காதல் மிக்க அன்னச்சேவல் தன் துணையாகிய அன்னப்பேடையோடும் தழுவிக்கொண்டு உறங்குகின்ற தடாகத்தைத் தன்பால் கொண்டுள்ளது அப்பூம்பொழில். மேலும், ஆடும் தெய்வமகளிரும் தேவர்களும் அங்குவந்து கூடிக் கலவியர்கிய அமுதினை உண்டு, புன்னையில் குளிர்ந்த நிழலில் வாடையிளங் காற்று வந்து அசைப்ப, மயில்கள் ஆட, வண்டினங்கள் பாடக் கண்டுக்கொண்டு இனிதாக வீற்றிருத்தற்குரிய பளிங்குப் பள்ளியும் அங்குண்டு; அத்தகைய பூம்பொழிலின் எழிலை நோக்கிக்கொண்டு இராவணன் அங்கிருக்கச் சூரியன், "இந்த மாயப் படையெழுச்சி யார்மேல் என்று அறியாது சிந்தை கலங்கி இவ்வரக்கன்முன் நிற்றலும் தீதாம்" என்று மேலைக்கடலுள் ஒளிப்பவன்போல மறைகின்றான். மாலையில் வாடைக்காற்று வீசுகின்றது. வளர்மதியம் கடலின் மேல் தோன்றுகின்றது.

## அரம்பையின் அல்லல்

அப்பொழுது, அளகையிலுள்ள குபேரன் மகனாகிய நளகூபரனை அடைவதற்காகப் பொருந்திய காதலையுடைய மின்னற்கொடிபோல் விளங்குகின்ற அரம்பை செல்வதை இராவணன் காண்கின்றான். அரம்பை, சிலம்புகள் ஒலிக்கும் பாதங்களையுடையவளாய் வாழை இளந்தண்டு போன்ற தொடைகளையுடையவளாய் நுண்ணிய இடையை யுடையவளாய்ப் பொங்கிப்புடைபரந்து எழுந்த முலையை உடையவளாய், முத்திரை பதித்துவைத்த பவழம்போன்ற வாயினை உடையவளாய், மதர்த்த கண்ணும் வளைந்த புருவமும் பிறைபோன்ற நெற்றியும் மலர்ந்த தாமரைபோன்ற முகமும் உடையவளாய்க் கமழ்கின்ற பூங்குழலை உடையவளாய் மெல்ல நடந்து செல்கின்றாள். அவள் செல்வதைக் கண்டு இராவணன் மதனவேளின்சரம் பாய ஆற்றாது, 'இவள், திருமகளோ? புனமயிலோ? அழகின் கொள்கலமோ? என்னை வழியடிமை கொளவந்த பெண்ணோ? ஆரோ?என்று அறிகில்லேன்' என்று அவளைத் தொடர்ந்து சென்று அவள் அழகை இருபது கண்களாலும் கவர்ந்துண்டு? உன் ஊர் எது? உறவு யாவர்? உன் பேரேது? என்று வினவுகின்றான்.

அவள், என்பேர் அரம்பை, அளகைக்கு அரசனாகிய குபேரன்மகன் நளகூபரன் என் கணவன்; என்று சொல்லிவிட்டுச் செல்ல, இராவணன் சிரித்துப் பொதுமகளிராகிய அரம்பையர்க்குக் கணவனும் உண்டோ? என இகழ்ந்து கூறுகின்றான். அதுகேட்டுப் பொறாத அரம்பை 'பொது மகளிராயினும் காதலித்துக் கைக்கொண்டோரைக் கொழுநராகக் கொள்வார், என்கின்றாள். மேலும் தம்மைக் கைக்கொண்டிருந்த கணவரை விடுத்துப் பிறரைச் சேர்தல் முறையாகாது என்பதையும் மொழிகின்றாள். அவள் சொல்லைப் பொருட்படுத்தாமல் இராவணன் அவள்மேல் விழுந்து அணைக்கப்புகும்போது, அரம்பை நின்று நடுங்கி, 'குன்றனைய தோளாய்! நெறியில்லாதன செய்யாதே' என்று தொழுது சொல்கின்றாள். 'குபேரன் மகனாகிய நளகூபரன் முறையால் நின் மைந்தனே ஆதலால், நீ என் குரு' என்கின்றாள். அவள் அம்முறை கூறி வணங்கித் தடுக்கவும் இராவணன்சிந்தை மயங்கி அவளை வலியப் பற்றிப் போகம் என்கின்ற விடத்தினைப் பருகுகின்றான். அரம்பை அவனை வெறுத்து, நீ இந்த உலகத்தில் மாதர்தம் சிந்தை யுடன்பாடின்றி எவரைத் தீண்டினாலும் அவர்தம் கற்பு ஆகிய நெருப்பினால் வெந்து வீழ்வாய்' என்று சபித்துவிட்டுத் தேம்பிக்கொண்டு விரைந்து சென்று தன் காதலனுக்கு நிகழ்ந்ததைச் சொல்ல, நளகூபரன், இராவணன் செய்த பிழையைத் தெளிந்து சினந்து 'இனி இராவணன் பிறன் மனைவியைத் தீண்டினால் அவன் பொன்முடிகளோடு தலையெல்லாம் பொடியாகி வீழ்க' எனச் சபிக்கின்றான்.

## பொன்னுலகப் போர்

அரப்பையைப் பிரிந்த இராவணன். மன்மதன் கணைகளால் மாழ்கித்தண் மதிக்கு வெதும்பித் தென்றலுக்குவருந்தி இரவெல்லாம் பிதற்றிக் கொண்டிருந்து பொழுது விடிந்தவுடன் தாபம் தணிந்து சேனைசூழப் பொன்னகர்க்குப் புறப்பட, அதனை அறிந்து இந்திரன் திருமாலை சென்று சேர்கின்றான். இந்திரன் நிலையைக் கண்ட திருமால், 'உன் மனத்துள்ள துன்பத்தைச் சொல்' என்று வினவ, இந்திரன், "பிரமன் கொடுத்த வரத்தைப்பெற்ற செருக்கினால் எங்களை நெருங்குதற்கு இராவணன் சேனையோடு வந்து

நிற்கின்றான்; யாங்கள் செய்வது என்?'' என்று கூறுகின்றான். அவன் உரைத்தவற்றைக் கேட்ட திருமால் 'அரக்கரையெல்லாம் அழித்து இராவணன் பெற்ற வரத்தை ஒருவழியினால் மாற்றி அவன் பத்துத் தலைகளையும் அறுத்துத் தள்ளி நின் சிந்தை நோயைத் தீர்ப்பேன்' என்று கூறுகின்றான். அதுகேட்ட இந்திரன் தேவர்களோடு தன் பொன்னகரம் சேர்தலும் இராவணன், விரிந்த பெருஞ்சேனையோடு சென்று ஆரவாரித்துத் தேவர்கட்குத் துன்பம் செய்கின்றான். தேவர்களும் சினம்பொங்கி அந்த அரக்க ரோடு போர் செய்யும்போது, அப்போரைக் காண்பதற்குப் பிரமன் அங்கு வருகின்றான்.

தேவர்கள் விட்ட கொடிய படைகளால் அரக்கர்சேனை அழிகின்றது. பேய்கள் ஆடுகின்றன. தன் படை மடியக் கண்ட இராவணன், தன் வலிய படைத்தலைவரைத் தேவர்கள்மேல் செல்ல விடுகின்றான். சூரியசத்துரு, துன்முகன், தூமகேது, சூரன், திரிசிரா, தூடணன், சுகசாரணர், பசாசன், பரசக்கரன், மாரீசன், மகோதரன், நியாயகோபன், பக்கன், புகைக்கண்ணன், குருதிக் கண்ணன், சுகம்பன், கும்பன், நிகும்பன், சம்புமாலி இவர்கள் எல்லாம் தன்னைச் சூழ்ந்துவரச் சுமாலி போர் செய்யத் தொடங்குகின்றான்.

சூலமும் தண்டும், உலக்கையும் வாளும் பாசமும் தோட்டியும் கப்பணமும் (இரும்பு நெருஞ்சிமுள்) கலப்பையும், ஈட்டியும், வட்ட வேலும், முதலிய ஆயுதங்களை விடுத்து அரக்கர்கள் ஆரவாரித்துப் போர்செய்யத் தேவர்கள் மகிழ்ச்சி குறைந்தார்கள். அரக்கர்கள் மகிழ்ச்சி மிக்கவரானார். பின்பு தேவர்கள் ஒன்றுபட்ட மனத்தராய்த் தண்டு வாள் முதலிய படைகளை விடுத்துப் போர் செய்ய, அரக்கர் சேனை தோற்றது. இருபடை வீரரும் வென்றும் தோற்றும் மாறி மாறிப் போர் செய்யும்போது, சுமாலி அம்பு மாரி சொரிந்து தேவர் சேனையை மாய்ப்பக்கண்டு வசுக்கள் எண்மரும் போர்வலி மிக்க வராய் வந்து அந்தச் சுமாலியோடு போர் செய்கிறார்கள். அப்போது இந்திரன் கிளர்ந்துவந்து சுமாலியின் தேரைச் சின்ன பின்னம் செய்துவிட்டு அவன் தலைமேல் தன் தண்டாயுதத்தை எடுத்து வலிமையோடு சுழற்றி விடுகின்றான். அந்தத் தண்டு காலதண்டம்

போலச் சீறிக்கொண்டு சுமாலியின்மேல் சென்றது. மலைமேல் வீழ்கின்ற இடியைப்போலச் சுமாலியின் தலையை வீழ்த்திவிட்டு அவனுடைய மலைபோன்ற உடம்பின் உறுப்புகள் எல்லாம் உருத் தெரியாமல் இரத்த நீராய்க் கரைத்தது, அந்தக் கதையாகிய எமன். சுமாலி என்கின்ற வலிய அணையானது முறிந்தவுடன் தோற்று ஓடுகின்ற அரக்கரின் சேனை வெள்ளத்தைத் தாங்கிநின்று வில்லினால் அம்பு அணைகட்டி வழியை மூடி இந்திரசித்து தடுத்து நிறுத்துகின்றான். மூவுலகத்தையும் அழிக்கவல்ல வீரனாகிய இந்திர சித்து, தேவர்களின் சேனைமேல் வெற்றிவாய்ந்த அம்புகளைத் தொடுத்தான்.

போரில் எதிர்த்த நால்வகைப்படையும் அழியக்கண்டு நின்ற இந்திர குமாரனாகிய சயந்தன் வெகுண்டு இந்திரசித்தோடு நெருங்கித் தாக்குகின்றான். இந்திரசித்தும் முனைகின்றான். இவன் மேகநாதன், இவன் சயந்தன் என்று பிரித்தறிய முடியாதபடி கடுமையாகப்போர் செய்கின்றவர்களை இருதிரத்துச் சேனையும் கண்டுநிற்ப, ஒருவரைஒருவர் வெல்லக் கருதிக் கடும்போர் புரியும் போது, மேகநாதன் மாதலியின் மைந்தனை கோமுகன் என்னும் பா்கன் நடுங்கிட, அவனுடம்பில் உறுதியான அம்புகள் தைத்திடக் கண்டு சயந்தன் வெகுண்டு, இந்திரசித்தின் பாகன்மேல அம்பு மழையைத் தூவிட, அதனால் பாகனுடம்பிலிருந்து பாய்கின்ற இரத்தமாகிய நெய்யினால் பொங்கிவளர்ந்த கோபத்தியினையுடைய மேகநாதன் அம்புகளைச் சயந்தன் மேற்சொரிகின்றான். அந்த எரிகணைகள் மார்பில் தைக்கச் சயந்தன் மயங்கிச்சாய்கின்றான். கோமுகனாகிய பாகன் சயந்தனது வலிமை தப்பாதவண்ணம் அவனைச் தழுவியெடுத்துக்கொண்டு போர்க்களத்தைக் கடந்து போனனாக, அச்சம் மிக்க தேவர்கள் எல்லாம் ஓடினார்கள். கீழ் மகனாகிய மேகநாதனின் வெற்றியையும் தன் மகன் சயந்தனின் தளர்ச்சியையும் கேள்வியுற்ற இந்திரன் கோபமிக்கவனான்.

## மேகநாதன் போர்

வருக தேர் என்கின்றான். மாதலி தேரோடு வந்து நிற்கின்றான். தேவமாதர் திரண்டு வாழ்த்தப் போர்க் கோலத்துடன் தேரில் ஏறுகின்றான் இந்திரன். உருத்திரர் பதினொருவர், ஆதித்தர்

பன்னிருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவராகிய தேவர்கள் தலைவர்கள் முப்பத்து மூவரும் தேவர்களும் வாழ்த்தப் போர்க்களம் நோக்கிச் செல்கின்றான். அவனைக் கண்டவுடன் வெள்ளிமலையை யள்ளியெடுத்த இராவணன் வெகுண்டு போர் செய்யத் தொடங் கும்போது, மேகநாதன் தந்தையை நிறுத்திவிட்டுத் தானே இந்திர னோடு சீறிப் போர் தொடுக்கின்றான். கடலில் நீரை மொண்டு கொண்டு விண்ணின்று பெய்கின்ற கார்காலத்து மழைபோல மேகநாதன், வில்லை வளைத்து விண்ணில் நிறைந்து நின்ற தேவர்கள் மேலெல்லாம் அம்பு தைக்குமாறு தூவுகின்றான்.

மேகநாதன் எய்த அம்புகளால் தேவர்களின் சேனை யானை கள் கால்துணிந்து கைதுணிந்து கழுத்துத் துணிந்து, வால் துணிந்து. மத்தகம் துணிந்து, வெண்கொம்பு துணிந்து வீழ்கின்றன. வீரர் களின் வேலும் வில்லும், மழுவும் துணிந்து வீழ்கின்றன. குதிரைச் சேனையும், கால்லாட்படையும், தேர்ப்படையும் அவ்வாறே துணிந்து வீழ்கின்றன. வீரனாகிய இந்திரசித்து, போர்க்களம் ஆகிய தாழியில் பொருந்திய தேவர்களாகிய தயிர்க்கு மத்துப் போன்ற வனாய்க் கலக்குகின்றான். மேகநாதன் ஒருவனேயாயினும் போரின் விரைவால் விண்ணிலும் மலையிலும் கடல்சூழ்ந்த மண்ணிலும், திசையில் அகத்தும் புறத்தும், தேவர்களின் கண்ணிலும் அவர் கருத்திலுமாக விளங்குகின்றான். மேகநாதனின் விற்போரைக் கண்ட பிரமன் முதலியோர், 'சிவனும் திருமாலுமல்லால் இந்த மேகநாதனை யொக்கும் வில்வீரர் எங்கும் இல்லை'யென்று பாராட்டு கின்றார்கள். தேவர்களோடு அரக்கர் செய்யும் போர் இன்றோடு முடியும் என்றும் கூறுவராயினர்.

விண்ணும் எண்திசைகளும் நின்று அதிரவும், ஆரவாரம் பெருகவும் தூணைத்தூக்கிக் கொண்டு ஒரு பெரிய மலை நடந்து வருகின்றது என்னுமாறு கும்பகன்னன் கண்வழியாக இரத்தம் சிந்த வந்து, தேவர்படை அழியுமாறு தண்டாயுதம் கொண்டு தாக்குகின்றான். அங்குள்ள வலிய யானையை எ த்து மற்றொரு யானையை அடித்தும், தேரினையெடுத்துத் தேரினைத் தாக்கியும் குதிரைச்சேனையைக் குதிரையெடுத்துத் தாக்கியும் கடலைக் கடைகின்ற மந்தரமலையாகிய மத்தினைப்போலத் தேவர்

சேனையாகிய கடலைக் கலக்குகின்றான். கும்பகன்னன், தன் பற்களால் தேவர்களின் தலைகளைக் கடித்துத் திருகித்தள்ளியும் கைம்முட்டியினால் 'அவர்கள் மார்பில் இடிஇடித்தாற்போல குத்தியும் கையால் அடித்தும் தன் பாதத்தின்கீழ் அகப்படச்செய்து மிதித்தும் அறைத்தும், முடியணிந்த தலைகள் தரையில் உருண்டு ஓடுமாறு காலினால் உருட்டியும் தேவர்சேனையை முறியப்பண்ணி உதறித்தள்ளுகின்றான். தேர்களும் யானைகளும் குதிரைகளும் காலாட்களும் அழிகின்றன.

இந்த நிலையைக் கண்ட உருத்திரர் முதலான தேவர்கள், மிகச்சினந்து இரக்கமில் அரக்கனாகிய கும்பகன்னனை தம் படைகளால் தாக்கி அவன் மார்பில் இரத்தம் ஒழுகுதலால் முருக்கமரம் மலர்ந்த மலைபோன்றவனாக ஆக்குகின்றார்கள். மேலும், சூலமும், மழுவும், வச்சிரமும், கதையும், சக்கரமும், அம்புமாகிய விதைகளை வித்திப் போர்க்களம் என்கின்ற வயலில் பிணமாகிய பயிரை விளைத்துப் பேய்கள் நட்டமிட்டுக்கொண்டு உண்ணுமாறு விருந்திட்டவர்களைப் போன்று மகிழ்கின்றார்கள் தேவர்கள். தேவர்கள் சொரிந்த அம்பு மாரியால் யானைகள் உருண்டன; குதிரைகள் புரண்டன; அழுந்தின தேர்கள்; பெரிய மலைபோல் அரக்கப் பிணம் விழுந்தன. போரில் உய்ந்தொழிந் தோர் இல்லாதபடி அரக்கர் இறந்து பட்டார்கள்.

## இராவணன் போர்

இவ்வாறு இமைப்பொழுதில் போரில் அரக்கர் அழிதலும் இராவணன் வடவைக் கனல்போல் மனம் கொதித்துத் தன் தேரினைத் தேவர்கள் பக்கம் செலுத்துகின்றான். தன் நீண்ட வில்லை வளைத்து நாண் எறிந்து இராவணன் தேவர்களின் யானைப் படைமேலும் தேர்ப்படைமேலும் குதிரைப்படைமேலும் காலாள் வீரர் மேலும் அம்புகளைக் கோடைமாரிபோலத் தூவு கின்றான். அவன் அம்புகள் தேவர் சேனையைப் பஞ்சினை எரிக்கும் நெருப்புப் போலப் பற்றி எரிக்கின்றன. பேய்கள் மீண்டும் வந்து தசையுண்ண நெருங்குகின்றன. யானைகள் உருள்கின்றன. தேர்கள் நிலைகுலைகின்றன. குதிரைகள் இறந்துபடுகின்றன.

இந்த இராவணன் செயலைக்கண்டு இந்திரன், சிந்தை அழன்று தேரினைத் செலுத்திக் கொண்டு வந்து தன் வில்லை வளைத்து இராவணனின் மார்பிலும் தலையிலும் நஞ்சினையொத்த தீய அம்புகளை எய்கின்றான். இராவணனும் இந்திரன்மேல் பல அம்புகளைத் தூவுகின்றான். இருபடையிலுள்ள வீரர்களும் தங்களுக்குள் அம்பு மழையைத் தூவிக் கொள்கின்றார்கள். அதனால், எங்கும் அம்புகளாகத் தோன்றின. இந்திரன் அரக்கர் சேனையை அழித்தலும் இராவணன் தரிக்காது தன் பாகனை நோக்கிக் கூறுகின்றான். "சாரதி! நீ தேரினைத் தேவர் சேனையுள் புகுமாறு செலுத்து; யான் யாவரும் இறந்துபட அழித்து இந்திரனைப் பிடித்து, இவன் முதலாகச் சொல்லப்படும் பிரமன் திருமால் என்ற மூவர் உயிரைக் குடித்துப் பின்பு கோபம் தணிந்து மூவுலகாட்சியும் என்ன தாக்கி நீண்ட நாள் அரசாள்வேன்; நீ இதனைக் காண்பாய்! என்று இராவணன் சொல்ல, சாரதியும் அவன் சொன்னபடி மேருமலை போன்ற தேரினைத் தேவர் சேனைக்குள் விடுகின்றான். அத்தேரினைக் கண்டு இந்திரன் தேவர்கட்குச் சொல்கின்றான். "என்னை வஞ்சித்துக் கொல்ல எண்ணுகிறான் இராவணன். இவனை இருபது தோள்களும் தளரும்படி பிடிக்கின்றேன்" என்று சொன்ன இந்திரன், தன்முன் நில்லாது விலகி ஓடுமாறு தேவர்களால் துரத்தப்பட்ட இராவணனது சேனை அழியுமாறு செய்கின்றான்.

அப்போது, நூறு யோசனை தொலைவு உள்ளே புகுந்து அணிவகுப்பினைக் கெடுத்துத் தனது சேனை சாயுமாறு அழிக்கின்ற இராவணனை இந்திரன் தன்சேனையோடு சென்று வளைத்துக் கொள்ள, அதுகண்ட, அரக்கர்கள் 'இராவணன் இன்று இறந்தான்' என்று சிந்தை நொந்து திகைக்கின்றார்கள். அந்த நேரத்தில் மேகநாதன் மனம் கொதித்துக் கோபமிக்குத் தன்தந்தையை வளைத்துக் கொண்டுள்ள தேவர் சேனையை அழித்து அந்த இந்திரன் மார்பிலும் அவன் ஏறியுள்ள தேரின்மேலும் பாகனாகிய மாதலியின் மேலும் அம்புகளைத் தூவுகின்றான்.

மேகநாதனால் இந்திரன் எப்போதும் பட்டறியாத அல்லல் பட்டுத் தரியாதவனாய், சண்ட உக்கிரகிரி என்னும் பெரிய யானை

மேல் ஏறிக்கொண்டு போர்தொடுக்கின்ருன். அதுகண்டு அரக்கர்கள் அவன்முன் உயிர் பிழைத்தல் அரிதென்று ஓடுகின்ருர்கள். அப்போது மேகநாதன் சிங்கம்போலக்கிளர்ந்து தேரின்மீது ஏறுகின்ருன். இந்திரனும் அவனோ போர்செய்ய நெருங்குகின்ருன்.

மேகநாதன், சிவன்பால் பெற்ற வரத்தால் வந்த வலிமை யோடு போர்செய்யும்போது வானில் இருள்மூடிக்கொள்ளுமாறு மாயை செய்கின்ருன். தேவர்கள் மனஒடுங்கி மயங்கி ஒன்றும் உணராதவர் ஆகின்ருர்கள். இந்திரன் செய்வதரியாது கலங்கி நிற்கின்ருன். அவன் கையும் உடம்பும் அகப்படுமாறு கொடிய பாசத்தால் மேகநாதன் கட்டிவிடுகின்ருன். அரக்கர் ஆடுகின்றனர்; அமரர் வாடுகின்றனர். மேகநாதனின் கைப்பர்சத்தால் இந்திரன் கட்டுண்டான் என்று அரக்கர் கடல் ஒலிபோல ஆரவாரிக்கின்றனர். முன்பு அமரரால் வளேக்கப்பட்ட தந்தை இராவணனே வந்து சார்ந்தோம் என்ற மகிழ்ச்சி பொங்க மேகநர்தன், இராவணனேப் பார்த்து "ஐயா! இந்திரன் என்முன் நிற்கமாட்டாது என்கையில் அகப்பட்டான், இனி உன் எதிரி ஒருவர் இல்லே; இனி, உருப்பசி முதலாக உள்ள அன்ன மென்னடை அரம்பையர் உன் அடிகளே வருடவும், முன்பு நின்று தேவர்கள் சேவிப்பவும் மூவுலகங்களேயும் ஆள்வாயாக" என்கின்ருன்.

மேகநாதனின் சொல்லேக் கேட்ட இராவணன் தன் இருபது தோள்களாலும் அவனே வாரித்தழுவிக் கொண்டு இனிதாக நின்று, வீரனே; நீ இன்று வென்றது இந்திரனே மட்டுமன்று; எல்லாவுலகங்களேயுமே வென்றுவிட்டாய் அன்ருே? என்று இது போன்ற பலபாராட்டுகளேயும் சொல்லிக்கொண்டு இந்திரனேடு தம் பொன்மயமான இலங்கைநகரில் புகுந்து இந்திரனே வலிய சிறையில் வைக்கின்ருர்கள். அதனே அறிந்து தேவர்கள் பிரமனே அழைத்துக் கொண்டு அங்கு வருகின்ருர்கள். இராவணனேக் கண்டு பிரமன், 'வெற்றி மிக்க வீரனே! உனக்கு நிகராவார் வேறுயாருளர்? உன்மைந்தன் மேகநாதன் இந்திரனே வென்று சிறையில் வைத்தமையால் இந்திரசித்து' என்று எல்லா உலகங் களும் பெயர் சொல்வதாக! ஈசனிருந்த வெள்ளிமலேயை யெடுத்த

திண்ணிய தோளையுடையவனே! தேவர்கள் என்னை முன் கொண்டு வந்த காரியம் இதுவாகும். உனக்கு வலிமை உயர்ந்தது. இனி இந்திரனைச் சிறையினின்றும் விட்டு விடுவர்யாக! என்று வேண்டுகின்றான்.''

பிரமன் மொழிந்ததுகேட்ட இராவணன், ''இந்திரனை யான் சிறைனின்றும் விடுவதாயின் அதனால் யான் பெறும் பேறும் வேண்டும்; இந்த உலகம் உள்ள அளவும் யான் இறவாது என்றும் இருப்பதாக வரம் அருள்க!'' என்கின்றான். அவ்விராவணனின் விருப்பத்தை யறிந்த பிரமன் சிந்தித்து, இராவண! இவ்வுலகில் எவ்வுயிர்க்கும் நித்த தத்துவம் என்பது பெறல் அரிது என் கின்றான். அப்போது மேகநாதன் கேட்கின்றான்; ''யான் நெருப்பின் நடுவேபிறந்த தெய்வத்தன்மையுள்ள தேரின்மேல் நின்று போர் செய்யவும் என் ஆயுளுக்கு முடிவு வாராதபடியும் எனக்கு வரம் அருள்க' என்று வேண்டப் பிரமன் 'நீ அவ்வரத்தைப் பெற்று யாகுக' என்கின்றான். மேலும் மேகநாதன் கேட்கின்றான்; 'யான் பகைவரை வெல்ல எண்ணித் தொடங்கிய வேள்வி முற்றுப் பெற்றால் பகைவர்கள் யாவரும் தோற்க வேண்டும், எனக்கேட்கப் பிரமன், 'பெறுக' என்கின்றான், உடனே மேகநாதன் மகிழ்ந்து சிறையில் இருந்த இந்திரனை விடுவித்துப் பிரமனுக்குக் காட்ட, அப்போது இந்திரன், மானமாகியவேல் மார்பில்தைக்க, தானுற்ற துயரைப் பொறுக்க வியலாதவனாய் ஒருவரையும் தலைநிமிர்ந்து நேர்க்காமல் தலை கவிழ்ந்து நிற்கின்றான். அவ்வாறு நாணி நிற்கும் இந்திரனைக் கண்டு, 'மலை போன்ற தோள்களையுடையவனே! முன்பு 'கவுதம முனிவன் இட்ட சாபம் உன்னைவந்து பொருந்திய தால் உனக்கு இந்த இழிநிலைவந்தது. அது பற்றி வருந்தாது உன் பொன்னகர்க்குப் போவாயாக' என்று சொல்லிவிட்டுப் பிரமன் தன்னுலகம் புகுகின்றான்.

## வான்மீகத்தோடு ஒட்டக்கூத்தர் வேறுபடும் இடங்கள்.

1 **வான்மீகத்தில்:** வேதவதி தன்னை யார் என்று வினவிய இராவணனுக்கு அதிதிபூசை செய்து பின்பு அவன் கேள்விகளுக்கு விடை சொல்வதாக உள்ளது. மேலும் குசத்துவசர் என்ற தன் தந்தையின் தந்தை பிரகஸ்பதி என்பதையும் கூறுகின்றதாக

உள்ளது. ஒட்டக்கூத்தர் இந்த விளக்கங்களைச் சொல்ல வில்லை. மேலும், சம்பு என்ற தைத்தியர் மன்னன், தான் விரும்பியபடி என்னைக் கொடாத என் தந்தையின்பால் கோபங்கொண்டு அவர் தூங்குகின்றபோது கொலைசெய்து விட்டான் என்று அவன் கொன்றமைக்குக் காரணம் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. ஒட்டக்கூத்தர் இதைக்கூறவில்லை.

2 **வான்மீகத்தில்:** வேதவதி மறுத்துக் கூறும் பொழுதே அவள் கூந்தலை இராவணன் உள்ளங்கையினால் தொட்டதாகவும் அவனால் தொடப்பட்ட கூந்தலை வேதவதி தன்கையினால் சேதித்துவிட்டதாகவும் ஒட்டக்கூத்தரோ வேதவதியின் மலர்க் கரங்களைத் தொட்டதாகக் கூறுகின்றார். வேதவதி தான் சாபமிட்டு இராவணனைக் கொன்றுவிட இயலும், ஆனால், என் தவப் பெருமைக்குக் குறைவு நேரும் என்று அதுசெய்யாது விட்டதாகக் கூறுகின்றார். இதனை ஒட்டக்கூத்தர் சொல்லவில்லை.

மேலும் வேதவதி தன்னால் செய்யப்பட்ட புண்ணியங்களின் பலனும் கொடுக்கப்பட்ட தானங்களின் பலனும் செய்யப்பட்ட தெய்வ பூசையின் பலனும் சிறிதேனும் இருக்குமாயின் இராவணனை அழிப்பதற்காகப் பூமியில் கருவழி வாராது தோன்றுவதாகக் கூறியதாக உள்ளது. இந்த விளக்கம் ஒட்டக் கூத்தர் கூறவில்லை.

2. **வான்மீகத்தில்:** இராவணன் போர்க்கு அழைப்பதைக் கேட்டு மருத்து என்பவன் வேள்வியை விடுத்துப் போர்புரிய எழுந்தபோது வேள்வி ஆசானாக இருந்த சம்வர்த்தர் என்பவர் தடுத்ததாக உள்ளது ஒட்டக்கூத்தர் இப்பெயரைச் சொல்லவில்லை.

4 இராவணன் கதையினால் தாக்குண்டு வீழ்ந்து மரண மடையும் அனரண்ணியனைப் பார்த்து இராவணன் எள்ளி நகையாடி என்னோடு போர்செய்து வெற்றி பெறுகிறவன் மூவுலகிலும் இல்லை என்று கூறியபோது அனரண்ணியன், 'தன்னைத்தானே புகழ்ந்து கொள்கின்ற உன்னாலா யான் கொல்லப்பட்டேன்? இல்லை. விதியினால் நான் மரணமடை கின்றேன். நீ யொரு கருவியே; அவ்வளவுதான்' என்று

கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. ஒட்டக்கூத்தர் இந்த விளக்கத்தைக்கூறவில்லை.

5 **வான்மீகத்தில்:** நாரத முனிவர் இராவணனை நோக்கி மானிடரைக் கொல்லலாகாது என்பதை விளக்கிக் கூறுகின்றார். எங்கே பார்த்தாலும் துன்ப அனுபவங்களோடு எப்பொழுதுமிருக்கின்றவர்கள் மானிடர். பசி தாகம், மூப்பு முதலியவற்றினால் அழிந்துக்கொண்டிருக்கின்றதும் விரும்பியதைப் பெறாது துன்புறுகின்றதும் விதியினால் அழிவதும் ஆகிய மானிட உலகத்தை நீ அழிக்க வேண்டாம். ஓரிடத்தில் மகிழ்ச்சி கொண்ட மக்கள் வாத்தியம் நடனம் இவற்றை அனுபவிக்கின்றார்கள். மற்றோரிடத்தில் மக்கள் துன்பத்தால் கண்ணீர் விட்டுக் கதறுகின்றார்கள். (ஓரில் நெய்தல் கறங்க ஓரில், ஈர்ந்தண், முழவின் பாணி ததும்பப் புணர்ந்தோர் பூவணியணியப் பிரிந்தோர், பைதலுண்கண் பனிவார்புறைப்பப் படைத்தோன் மன்றவப் பண்பிலாளன்'') (புறநா. -- 194) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும்). இத்தகைய மானிடர்கள் துன்பப்பட்டது போதும். உன்னால் மானிட உலகம் முழுமையும் வெல்லப்பட்டது, என்று கூறிய நாரதரை வணங்கிவிட்டு ஏழு பாதாள உலகங்களில் ரசாதலம் என்ற உலகத்தை வென்று கைக்கொள்ளப் போவதாகச் சொல்லிப் புறப்படும்போது, 'இது எமன் உலகத்துச் செல்லும் வழியல்லவோ என நாரதர் வினவ, இராவணன் 'எமனைக் கொல்லப் போகின்றேன்' என்று தென்திசை நோக்கிச் சென்றதாகவும் அவன் கூறியது கேட்டு நாரதர் 'மூன்றுலகத்துயிர்களும் எமனால் துன்புறுத்தப்படும் அந்த எமன் எப்படி துன்புறுத்தப் படுவான்? என்பதை அறிய விரும்பி நாரதரும் எமலோகம் சென்றதாக உள்ளது.

ஒட்டக்கூத்தர் இந்த விளக்கங்களைக் கூறாததோடு நாரதரே இராவணனை எமனோடு போர் செய்யுமாறு சொன்னதாகவும் எமன் தோற்பது உறுதி என்று சொன்னதாகவும் கூறுகின்றார். இக்கருத்து வான்மீகத்தோடு அடியோடு வேறுபடுகின்றது.

6. **வான்மீகத்தில்:** நரகத்தில் பாவம் செய்தவர்கள் வருந்தும் நிலை விரிவாக கூறப்பட்டுள்ளது. கொதிக்கின்ற நொய்மணலில்

அடிக்கடி புரட்டப்படுபவர்கள், கத்திகளே மரங்களாக இருக்கும் வனத்தில் கூர்மையான கத்திரளால் சிலர் துண்டிக்கப்படுதல், நீர்வேட்கை கொண்டவர்களை உப்புத் தண்ணீருள்ள க்ஷாரம் என்ற நதியிலேயும், பசியால் வருந்துவோரை ரெளரவம் என்னும் நகரத்திலேயும் வருத்திக்கொண்டிருத்தல், அசுத்தமான பொருள் களைப் பூசிக்கொண்டிருத்தல், அழுக்கடைந்திருத்தல் முதலியன அவற்றுள் சில. இங்கு இன்ன இன்ன பாவங்களை செய்வதர்கள் இந்த இந்தத் துன்பத்தை அனுபவிக்கின்றார்கள் என்ற விளக்க மில்லை. ஒட்டக் கூத்தர் பாவிகளின் பாவச் செயல்களை விவரித் திருக்கின்றார். ஆனால் நரகத்துன்பங்களின் வேறுபாட்டை விளக்க வில்லை. நரகத்திலிருந்து கதறுகிறவர்களைப் பார்த்து இராவணன் இரக்கம்கொண்டு அவர்களைக் கைதூக்கிக் கரையேற்றுகின்றான். நரகத்தில் இடர்ப்பட்டவர்கள் மகிழ்ச்சியடைகின்றார்கள். ஆனால் அம்மகிழ்ச்சி மூன்றே முக்கால் நாழிகைதான் நிலைத்தது என்பதை வான்மீகி கூறுகின்றார். ஒட்டக்கூத்தர் அக்கால எல்லையைக் கூறவில்லை.

எமனுடைய ஏவலர்கள் இராவணனோடு ஏழுநாட்கள் போர் செய்தார்கள் என்றும் அவனுடைய புட்பகம் எம கிங்கிரரால் தாக் கப்பட்டது; ஆனால், பிரமன் வரத்தால் அது அழிவு எய்தவில்லை என்றும் சூலங்கள் பலவற்றால் இராவணனை ஒருங்கு தாக்கவும் அவன் இரத்தம் ஒழுகும் உடம்புடன் காணப்பட்டாலும் தளர்ச்சி யின்றிப் பொறுத்துக்கொண்டான் எனவும் கூறப்பட்டுள்ளது. எம னுடைய ஏவலனாகிய காலன் எமனுடைய போர்க்கோலத்தைக் கண்டு பொருது, இரவணனை அழிக்கும் பொறுப்பைத் தனக்குத் தருமாறு கேட்கின்றான். அப்போது அவன் முன்பு நரகாசுரன் சம்பரா சூரன், விருத்தராசுரன், சம்பு, கார்த்தேஸ்வரன், பலி சக்கரவர்த்தி, பைரோகர், நமுசி, மதுகைடபர்கள் என்பவர்களை யெல்லாம் தான் அழித்ததுபோல, இராவணனையும் விரைவில் அழிப் பேன்; என வேண்டிக்கொண்டதாகவும் எமதருமன் அதற்குட் படாது தானே இராவணனைக் கொல்வதாகச் சொல்லிக் காலதண் டத்தோடு புறப்படுவதாகவும் கூறப்பட்டுள்ளது. இந்த விளக்கங் களை ஒட்டக்கூத்தர் கூறவில்லை.

**7 வான்மீகத்தில்:-** இராவணன் எமனையும் வருணனையும் வென்று மீளும்போது வழியில் அரசகன்னியர், முனிவர் கன்னியர் தேவ, கந்தருவ கன்னியர் முதலியோரை வலிதிற் பற்றிப் புட்பகத்தில் ஏற்றிக்கொண்டதோடு கலியாணமான மகளிரில் அழகுமிக்கவர்களையும் ஏற்றிக்கொண்டு சென்றதாக உள்ளது. மேலும், அவர்கள் இலங்கையில் தாய்தந்தையர்களையும் கணவர் களையும் அண்ணன்மார்களையும் நினைந்து கண்ணீர் சொரிந்த தாகவும் உள்ளது. மேலும், இராவணனால் கொணரப்பெற்ற பெண்டிர் தம் கணவர்களை அந்த இராவணன் கொன்றுவிட்டான் என்பதையும் சொல்லிப் புலம்பிக்கொண்டு, தன் வலிமை மிகுதியினால் பிறர் மனைவியரைவிரும்பி யடைய முயலுகின்ற இராவணன், ஒருபெண் மூலமாகவே மரணத்தை அடைவான் என்று எல்லோரும் சேர்ந்து சாபம் கொடுக்கின்றார்கள். இதைக் கேட்ட இராவணன் ஒன்றும் செய்ய இயலாதவனாய் ஒளி குன்றியவனாய் ஆகின்றான். அந்த நிலையில் புட்பகம் இலங்கையை அடைகின்றது. இலங்கைக்கு வந்து சேர்ந்த இராவணனை அவன் தங்கை சூர்ப்பணகை கண்டு அழுது புலம்பிக் கொண்டு வீழ்கின்றாள்; என்று உள்ளது.

ஒட்டக்கூத்தர், இராவணனால் கன்னிப் பெண்டிர்களே கொணரப்பட்டதாகக் கூறியுள்ளார். அக்கன்னியரின் தாய்மார்கள் பிரிவாற்றாது வருந்தி எம்பெண்டிரை நடுங்கச்செய்த இராவணன் தன் இலங்கையோடும் சுற்றத்தோடும் அழிவானாக! எனச் சாபம் கொடுத்ததாகவே கூறியுள்ளார்.

**8** அந்தக் கன்னியரையும் கற்புடை மங்கையரையும் கொணர்ந்த பாவப்பயனைப் பார்ப்பவன்போலச் சூர்ப்பணகை தன் கொழுநனை யிழந்து வருந்தும் நிலையை இலங்கையில் இறங்கிய வுடன் காண்பதாக வான்மீகி கூற, ஒட்டக்கூத்தர், அதைச் சிறிது மாற்றி, இலங்கையில் புட்பகம் இறங்கினவுடன் வீடணன் அதில் பெண்டிர் கண்கலங்கிப் புலம்பிக் கொண்டிருப்பதைப் பார்த்துத் தன் அண்ணனுக்கு 'இது கூடாது' என்பதைக் கூறியதோடு அவன் தீச்செயலின் பயனாகவே தம் சிறிய அன்னையைக் கவர்ந்து கொண்டு மது என்பவன் சென்றுவிட்டான் என்பதையும்

கூறுவதாக அமைத்துள்ளார். கதையமைப்பையே இங்கு ஒட்டக்கூத்தர் மாற்றியுள்ளார். கன்னியரை வலிதிற் பற்றிக் கவர்ந்த இராவணன் செயலுக்கு ஈடாக இராவணனின்சிற்றன்னை கவர பட்டாள் என்ற பொருத்தம் காட்டவே இவ்வாறு கதையை மாற்றி அமைத்திருத்தல்வேண்டும்.

9 **வான்மீகத்தில்:** இராவணன் தன்னடியில் விழ்ந்து புலம்பும் சூர்ப்பணகைக்கு அமைதிகூறி எல்லாச் செல்வங்களையும் கொடுத்து அவள் சுகமாய் வாழ்வதற்குத் துணையாகக் கரன், தூடணன், திரிசிரா என்ற தன் சிற்றன்னையின் புதல்வர்களைத் தண்டக வனத்திற்கு அனுப்புவதாக உள்ளது. கரன் அரக்கர்கள் சூழ நருமதை நதிக்கும் கோதாவரிக்கும் நடுவேயுள்ள தண்டக வனத்தை அடைகின்றான். சூர்ப்பணகையும் அங்குச் சென்று தங்குகின்றாள் என்றுள்ளது. ஒட்டக்கூத்தர், இதையும் மாற்றியுள்ளார். சூர்ப்பணகையின் துன்பந்தணிப்பதற்கு இராவணன் அவளுக்குச் சொல்லும்போது, முன்னமே உன்னைப்பற்றிக் கரனுக்குச் சொல்லியனுப்பியுள்ளேன். நீ அங்குச் சென்று அச்சம் இன்றி வாழ்க எனக் கூறியதாகக் காட்டுகின்றார்.

10 **வான்மீகத்தில்:** இராவணனால் கற்பழிக்கப்பட்ட அரம்பை, தன் உண்மைக் காதலனாகிய நளகூபரனிடம் நிகழ்ந்ததைத் தெரிவித்துப் புலம்புகின்றாள். நளகூபரன், தன் யோகக்காட்சியாலும் அந்நிகழ்ச்சியை முனைந்துகண்டு கோபங்கொண்டு தண்ணீரைத் தெளித்துச் சாபமிடுகிறான். 'காதல் கொள்ளாத உன்னைக் கற்பழித்த இராவணன் இனிக் காதல் கொள்ளாத பெண்ணைத் தீண்டுவனாயின் அவன் தலை ஏழு பாகமாக வெடிக்கக்கடவது' என்பது அவன் சாபம். இந்தச் சாபத்தைக் கேள்வியுற்ற இராவணன் தன்னை விரும்பாத பெண்டிரை வற்புறுத்திப் புணர்வதையே விட்டுவிட்டான்; முன்னம் வலிதிற்பற்றிக் கொணர்ந்த பெண்டிரெல்லோரும் நளகூபரன் சாபத்தைக் கேள்வியுற்று மகிழ்ந்தார்கள்' என்றுளது.

ஒட்டக்கூத்தர் நளகூபரன் சாபத்தைச் சிறிது மாற்றிக் கூறுகிறார். 'இராவணன் பிறன் மனைவியைத் தீண்டி வற்புறுத்துவானாயின் அவன் தலைகள் பொடியாவதாக' எனச் சபித்ததாக

கூறுகின்றூர். மேலும், நளகூபரன் சாபத்தைக் கேள்வியுற்ற இராவணன் தன்னை விரும்பாத பெண்டிரை வலிதிற் புணர்வதை விடுத்தான், என்ற செய்தியைக் கூறவில்லை.

**11 வான்மீகத்தில்**: பொன்னுலகப் போரில் சுமாலி பெரும் போர் செய்யும்போது வசுக்களில் ஒருவனுகிய சாவித்திரன் என்பவன் கதையினுல் சுமாலியைத் தாக்கி அழித்ததாக உள்ளது.

ஒட்டக்கூத்தர், இதனைமாற்றி வசுக்கள் பெரும்போர் செய்யும் போது இந்திரன் வந்து தன் தண்டினுல் சுமாலியைத் தாக்கி அழித்தான் என்று கூறுகின்றூர். மேலும் இந்திரன் மகனுகிய சயந்தினும் மேகநாதனும் போர் செய்யும்போது சயந்தன் மயங்கி விழுந்த நிலையில் இந்திராணியின் தந்தையாகிய புலோமன் தன் பேரனுகிய அந்தச் சயந்தனை எடுத்துக்கொண்டு கடலில் புகுந்த தாக வான்மீகி கூற, ஒட்டக்கூத்தர் சயந்தனை அவன் பாகனுகிய கோமுகன் எடுத்துச் சென்று பாதுகாத்ததாகக் கூறுகின்றூர்.

**12. வான்மீகத்தில் :** இந்திரசித்தினுல் சிறைசெய்யப்பெற்ற இந்திரனை மீட்க வந்த பிரமனிடம் இந்திரசித்து அவ்விந்திரனை விடுதலை செய்வதற்குப் பயனுகத் தனக்கு மரணமிலாப் பெருவாழ்வு வேண்டும் என்று கேட்டதாக உள்ளது. ஒட்டக்கூத்தர் இராவணன் அவ்வரத்தைக் கேட்டதாகக் கூறியுள்ளார்.

மரணமின்மை எவ்வுயிர்க்கும் இயல்பன்று என்று பிரமன் மறுத்தவுடன், இந்திரசித்து வேறுவகையான வரம் கேட்கிறுன். யான் பகைவர்களை வெல்லப் போரைத் தொடங்குமுன், அக்கினி பகவானை ஆகுதிகளாலும் மந்திரங்களாலும் ஆராதித்துச் செய்யும் என் வேள்வியில் குதிரைகள் பூட்டியதேர் எனக்கென்றே தோன்ற வேண்டும். அக்கினிதேவனுக்குரிய அத்தேரில் வீற்றிருக்கின்ற எனக்குப்பகைவரால் மரணமின்மை வேண்டும். அக்கினி பகவானை நோக்கிச் செய்யும் அவ்வேள்வி முடிவு பெருதநிலையில் யான் போர்புரியத் தொடங்கினுல் எனக்கு அழிவு உண்டாகட்டும்'' என்பது அது. பிரமன், 'அங்ஙனமே ஆகுக'' என வரம் கொடுக்கின்றுன்.

ஒட்டக்கூத்தர் இந்த விளக்கங்களைக் கூறவில்லை. இந்திரசித்து நெருப்பில் நின்று யான் நேரில் போர்செய்யவும் பகைவர்களை வெல்லவும் வரமருள்க' எனக்கேட்டதாகவும் பிரமன் கொடுத்த தாகவும் சுருக்கமாகக் கூறுகின்றார். 'அக்கினி தேவனை நோக்கிச் செய்யும் வேள்வி முடிவுபெறாத நிலையில் யான் போர்செய்தால் யான் அழிவேனாக' என்றுஇந்திரசித்து கேட்டதை ஒட்டக்கூத்தர் கூறவில்லை.

13 **வான்மீகத்தில்:** பிரமன் வேண்டுகோளின்படி சிறை யினின்று விடுதலை பெற்ற இந்திரன், நாணத்தால் தலைகுனிந்து வருந்தியிருப்பதைக் கண்ட பிரமன், இந்திரனை நோக்கிக் கூறிய செய்தி விரிவாகக் கூறப்படுகின்றது. கவுதமரின் மனைவி அகலிகையை விரும்பி அடாத செயல் செய்ததன் பயனே இப்படி நீ சுதந்திரமிழந்து சிறையிருக்க நேர்ந்தது என்பதைப் பிரமன் இந்திரனுக்குவிளக்குகின்றான்.

ஒரு காலத்தில் மனிதர்கள் எல்லாம் ஒரே குரலும் ஒரே அமைப்பும் உடையவர்களாக என்னால் படைக்கப் பட்டார்கள். உருவமைப்பில் பிறவிக்குணத்தில் வேறுபாடு இல்லாமலிருந்தது. இத்தகைய படைப்பைப்பற்றி நெடிது சிந்தித்து அவர்களுள் வேறுபாடு தோன்றச் செய்யவேண்டும் என்று ஒரு பெண்ணைப் படைத்தேன். பெண்டிரின் ஒவ்வொரு உறுப்பிலும்சிறப்புடையதைப் பொறுக்கி எடுத்து அந்தப் பெண்ணுருவாகச் செய்தேன். எந்த உறுப்பிலும் சிறிதும் குற்றமற்ற அழகிய அகலிகையே அவள்.

அகலிகையின் அழகுமிகுதியைக் கண்டு 'இவள் எவனுக்கு வாழ்க்கைப்படுவாளோ? என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. இந்திர! அப்போது அவளை நின்மனைவி யென நின் மனத்தில் நினைத்துவிட்டாய். அவள் கவுதம முனிவரின் அடைக்கலமாக என்னால் விட்டுவைக்கப்பட்டிருந்தாள். அம்முன்னிவர் அவளைப் பல ஆண்டுகள் பாதுகாத்துப் பின்பு கொணர்ந்து விட்டார். அம்முனிவரின் மனஉறுதியையும் புலனடக்கத்தையும் கண்டு அவருக்கே வாழ்க்கைத் துணைவியாய் அகலிகையைக்கொடுத்தேன் முனிவர் அவளோடு இனிமையாய்க் காலம் கழித்தார். தேவர்கள் எல்லாம் கவுதமரின் மனைவியாய்விட்ட அவளிடம் ஆசை ஒழிந்தவர்களாக ஆனார்கள்.

நீயோ, அம்முனிவரது ஆசிரமத்திற்குச் சென்று ஒளிமிக்க அகலிகையிடம் காம மிக்கு அவளைக் கற்பழித்துவிட்டாய். யான் நின்செயலை யறிந்து வெகுண்டு நினக்குச் சாபமிட்டேன்; பகைவர்களால் சுதந்திரமிழந்து சிறைபட்டது அந்தச் சாபத்தின் பயனே ஆகும். என்று கூறியதாக உள்ளது. இவ்வரலாறு கம்பராமாயணத்தில் பாலகாண்டத்தில் கூறப்பட்ட அகலிகை வரலாற்றோடு வேறுபடுதல் காணலாம். இவ்வரலாற்றின்படி கௌதமர் இந்திரனுக்கு எவ்வகையான சாபமும் இடவில்லை. அகலிகையின் தீய செயலைக் கண்ட கௌதமர் ஆச்சிரமத்திற்கு அருகில் உயிரிழந்து மண்ணில் புதைந்து கிடப்பாயாக' எனச் சபித்தார் அவ்வளவே என்பது தெளியலாம்.

## படலப் பொருட்சிறப்பு

## இராவணன் வெற்றியும் தோல்வியும்

இராவணன் திக்குவிசயம் செய்தது பற்றிக் கூறுகின்ற இப் படலத்தில் மருத்தன், அனரண்ணியன், இயமன், காலகேயர், வருணன் தேவர்கள் ஆகியோர் இராவணனால் வெல்லப்படுகின்றார்கள்; நிவாதகவசர் நட்புச் செய்து கொள்ளப்படுகின்றார்கள். இவ்வெற்றி யெல்லாம் பேரளவில் கொண்ட வெற்றிதான்; இவ் வெற்றியைவிட இராவணன் காமவெறியால் பெற்ற தோல்விகளே மிகுதி எனலாம்.

விரும்பாத வேதவதியைத் தீண்டி இராவணன் பெருஞ்சாபமுறுகின்றான். 'ஏடாவுனக்கும் இலங்கைக்கும் உன் கிளைக்கும் கேடாகத் தோன்றுவேன்' என்று சினந்து சொல்லுகின்றாள். இராவணனால் கொல்லப்பெறும் அனரண்ணியனும் 'கோலத்தசரத ராமன் என்குலத்தோன் கொடுங்கணையால், தாலக்குலைபோல் நின்றலை தரைவீழ்கெனச் சபிக்கின்றான். வருணன் மைந்தரோடு போர்செய்து வெற்றிபெற்ற பின்னர் இலங்கைக்குச் செல்லும் வழியில் அந்தணர் கன்னியர், கந்திருவர் கன்னியர் முதலிய கன்னியரை வலிதிற்பற்றித் தேர்மேலேற்றிக்கொண்டு இலங் கையைச் சேர்கின்றான். அக்கன்னியர்களைப் பெற்ற தாய்மார்கள் மனம் நொந்து ''எங்கள் நன்னுதலார்தமை யெல்லாம் நடுங்கக்

கண்டிடுதலால் நறுமென் கூந்தல் அன்ன நடையார் பொருட்டால் அடலிலங்கை பாழாகி, அரக்கர் கோமான் தன்னுடைய முடியோடுந் தலையற்று விழுக'' எனச் சபிக்கின்றனர்.

நளகூபரனை நாடிச் செல்லும் அரம்பையை வலிதிற்பற்றிப் புணர்ந்தபோது 'நீ மாநில மாதர்தம் சிந்தையாலன்றி யாவரைத் திண்டினும் கந்தவார் குழலார் கற்பெரியினுல், வெந்து வீழ்தி'' என அந்த அரம்பை சபிக்கின்ருள். நளகூபரன், ''ஒருவன் இல்லாளைத் தேராது தீண்டும் இராவணனும் பொல்லா வொழுக்கத் தான் பொன்முடிகளொடுதலை, எல்லாம் பொடியாகி வீழ்க' எனச் சபிக்கின்ருன்.

இந்நிகழ்ச்சிகளையெல்லாம் நோக்கும்போது இராவணன், மருத்தன் முதலியவர்களை வென்ற வெற்றியினும் பெற்ற சாபங்களே மிகுதியென்பது தெளிவாகும். இராவணன் கடுந்தவம் செய்து பெருவரங்களைப்பெற்ற செருக்கினல், வலிமையால் தன்னை நிகர்ப்பார் இல்லையென்ற எண்ணத்தால் செய்த தகாத செயல்கள் மிகப் பலவாகும். உலகமாதாவாகிய சீதையை விரும்புதற்கு முன்னரே பல பெண்டிரிடம் தகாதமுறையில் தன் ஆசையைத் தீர்த்துக் கொண்டுள்ளான். தீவினையைச் செய்துசெய்து பழகிய அவன் எளிய நெஞ்சமே சீதையைக் காமுறச் செய்தது என்ற அடிப்படையுண்மை இந்தத் திக்கு விசயத்தால் நன்குபுலனுகின்றது. வேதவதி முதலியோர் இராவணனுக்கு இட்ட சாபங்கள் சீதையை அவன் தொடமல் காப்பாற்றின என்னலாம்.

## நரகத் துன்பம்

இராவணன் எமனுலகத்தில் உயிர்கள் நரகத்தில் படும் துன்பங்களையெல்லாம் காண்கின்ருன், அப்பொழுது சிலர்வாயிலிருந்து புழுக்கள் வீழ்வதையும் அந்தப் புழுச்சொரியும் வாயினர் கலங்குவதையும் காண்கின்ருன். யார்வாய் அப்படிப் புழுக்கள் சொரிகின்றன? என்ருல், எடுத்தற்கரிய மானிடப் பிறப்பு எடுத்திருந்தும் அப்பிறப்புச் சிறப்புற நாவினுல் திருமாலின் திருப்பெயராகிய 'அரியோம் நமோ நாராயணுய நம' என்ற தூய மந்திரத்தைச் சொல்லமாட்டாத பாவிகளின் வாயிலும், தெய்வங்

களைப் பழித்துரைக்கும் பாதகர் வாயிலுந்தான் புழுக்கள் ஓயாமல் சொரிந்துகொண்டே இருக்கின்றனவாம்;

‘மாவிரிநீர்க் கடல்சூழ்ந்த மண்ணுலகில்
மானிடராய் பிறக்கப்பெற்றும்
நாவில் அரிஓம்நமோ நாராயணாய
நம என்னமாட்டாப்
பாவியரும் பலதெய்வம் பழித்துரைக்கும்
பாதகரும் பரந்து தங்கள்
வாய்வழியே புழுச்சொரிய மாநரகக்
கும்பியிடை மறுகக் கண்டான்’.

என அந்நிகழ்ச்சியை நூலாசிரியர் விவரிக்கின்றார். இதனால் நூலாசிரியரின் தெய்வ நம்பிக்கையும் தாம் கூறும் நூலுக்கு ஏற்புடைத் தெய்வமாகிய திருமாலின் எட்டெழுத்து மந்திரத்திலுள்ள பற்றும் புலனாகும்.

## சூர்ப்பணகையின் அழுகை

இனி, இராவணனால் சூர்ப்பணகையின் கணவன் வித்துரு சிங்கன் மாண்டபோது சூர்ப்பணகையின் அழுகைப்பாடல் சுவை மிக்கதாக உள்ளது. கொழுநர் சொல்லியபடி மனைவியர் நடந்து கொள்வதுதான் பழையமுறை; ஆனால் சூர்ப்பணகை தன்கணவன் பெருமையைக் கூறும்போது,

‘‘காதலால் நீயென்னைக் கைபிடித்த அன்றுமுதல்
பேதையேன் சொல்லிய சொல் பிழைத்தறியாப் பேரவுணா!

என்று சொல்லி அழுகின்றாள். இதனால், சூர்ப்பணகை சொல்லியபடி கணவன் பணிவாக நடந்துகொண்டான் என்பது தெளிவு; மூவுலகையாளும் இராவணன் தங்கையென்ற பெருமை நோக்கி அவன் அவ்வாறு நடந்துகொண்டிருக்கலாம். இங்குச் சூர்ப்பணகை தன்னைப் ‘பேதையேன்’ என அடக்கத்துடன் குறிப்பிட்டுத் தன் கணவனைப் பேரவுணா, என்று புகழ்ந்து பேசுவது நயமிக்கதாக உள்ளது. வித்துருசிங்கன் பெருமை மிக்கவனாக இருந்தும் பேதையாகிய சூர்ப்பணகையின் சொல்லைத் தட்டாமல் அன்போடு பணி

செய்தான் என்பதை இங்குப் புலப்படுத்தியுள்ளார். அதற்கு மேலும் ஒன்று சொல்கின்ருள். வித்துருசிங்கன் இப்போது உயிர் நீத்தவன்போலக் கிடப்பது, சூர்ப்பணகை இந்நிலையைக் கண்டு எவ்வாறு நடுங்குகின்ருள்? தனக்குப்பின் அவள் உயிரோடு இருப்பாளோ? எனச் சோதித்தறியவே போலும். உண்மையாக உயிர்நீத்திருந்தால்,

''பின்னிற்கும் பழிபூண்டு பெருந்துயரப் பட்டுநான்
உன்னிற்பின் இருக்கிலேன் எழுந்திராய் உத்தமனே!''

என்ற சூர்ப்பணகையின் சொற்கள் கற்புக்கடம் பூண்ட காரிகையின் சொற்கள் போலன்ருே காணப்படுகின்றது. இவள் இராமன் அழகிலீடுபட்டுக் கூறும் சொற்களோடு தொடர்பு படுத்திப் பார்க்கும்போது இச்சொற்கள் உண்மையென நம்பவியலுமோ? இவள் நிலையைப் படம் பிடித்துக் காட்டவே நூலாசிரியர் இங்ஙனம் நயம்படக் கூறியுள்ளார். மேலும், ஒருண்மையைச் சொல்கின்ருள்.

முன்னமே தானென்னை முறைமையாலே கொடுத்துப்
பின்னெனைநூ லிழப்பித்த இராவணனும் என் தமையன்
தன்னை மூவுலகாள யான் கண்டு தாரவுணர்
மன்னனே உடல் சுமந்து வாழ்வேனே? வாழ்வேனே?

என்கின்ருள். இது சூர்ப்பணகையின் உண்மைநிலையை உணர்த்தியதாகும். இந்த வஞ்சனை உள்ளத்தால்தான் இராவணனுக்குச் சீதையின் அழகை மிகைப்படுத்திக்கூறி அவன் பெருங்காதல் கொள்ளுமாறு செய்தாள் என்பதும், அக்காதலால் இராவணன் உயிரிழந்தான் என்பதும் பின்பு வரும் உண்மை நிகழ்ச்சிகளாதல் தெளியலாம். இந்தச் சூழ்ச்சியை உணர்ந்த வீடணன் இராவணன் மாண்டபின் புலம்பும்போது,

கொல்லாத மைத்துனனைக் கொன்ருயென்றது குறித்துக்
கொடுமை சூழ்ந்து
பல்லாலே யிதழதுக்கும் கொடும்பாவி நெடும்பாரப்
பழிதீர்ந் தாளோ''

(இராவணன் வதை - 225)

என்று கூறியிருத்தல் இங்கு நினைவு கூறத்தகும்.

## கும்பிநசி

இனி, இராவணன் சிற்றன்னை கும்பிநசியை மது என்னும் அசுரன் ஆளற்றம் பார்த்துக் கவர்ந்து சென்ற செய்தியை வீடணன் வாய் கேட்டுச் சினம்மிக்கு நால்வகைப் படையோடும் அம்மதுவின்மேல் போர்க்குப் புறப்பட்டு வந்த இராவணனை வணங்கிக் கும்பிநசி புலம்பிச் சொல்லும் கருத்து இப்படலத்தில் பாராட்டிற்குரிய கருத்தாக அமைந்துள்ளது.

'இராவணன் வரத்தாலும் வலிமையாலும் படைபலத்தாலும் மிக்கவன்; அவன் போர்க்கு வந்தால் தன்னை இராக்கதமண முறையில் மணந்துகொண்ட மது என்னும் கொழுநன் மாண்டு போதல் உறுதி; என்பதைத் தெளிந்த கும்பீநசி இராவணன் திருவடியில் வீழ்ந்து சொல்கின்ருள் —

"மக்களிழந்த விடும்பையினும் மனையா ளிழந்த விடும்பையினும்
மிக்கவிடும்பை வேல்வேந்தே! விதவை யிடும்பையென விளம்பத்
தக்கததனுல் என் கழுத்திற் ருலி நீதந் தருள்"

என்பது அவள் வேண்டுகோள். நம்நாட்டுப் பெண்டிரின் துன்ப நிலையைக் கணவனுக்குப்பின் அவர்கள் அனுபவிக்கும் அவல நிலையை இப்பர்டல் நன்கு புலப்படுத்துகின்றது. இப்பாடலின் கருத்தாழத்தையறிந்த சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், பதிகச் செய்யுள் உரையில் "ஆரஞர் உற்ற வீரபத்தினி" என்ற அடியில் 'ஆரஞர்' – பெரிய வருத்தம்; ஆவது கணவனை யிழத்தல்; என்று விளக்கம் கூறி விட்டு, "மக்களிழந்த விடும்பை யினும் என்று தொடங்கும் இப்பாடலை மேற்கோளாகக் காட்டி யுள்ளார் என்பது நினைவில் கொள்ளத்தகும். இதனுல், அடியார்க்கு நல்லார் காலத்திலேயே இந்த உத்தர காண்டம் புலவர் போற்றும் புகழ் படைத்திருந்தமையும், இப்பாடலின் அருமை அறிஞர்களால் உணரப்பட்டிருந்தமையும் நன்குபுலப்படும்.

## அரம்பையின் அழகு

இராவணன் சேனையுடன் இந்திரனேடு போர்செய்யும் நோக்கத்தால் புறப்பட்டவன் நடுவே இமயத்தில் உள்ள அளகா புரிக்கு அருகில் தங்குகின்ருன்.

மாலைநேரத்தில் மணமிக்க மலர்ச்சோலையில் இராவணன் தங்கி இயற்கை எழிலைக்கண்டு களித்துக்கொண்டிருக்கிருன்; சந்திரன் தண்ணிலவு வீசிக்கொண்டு விண்ணில் எழுந்து விளங்குகின்ருன். எழில்மிக்க அந்த இராப்பொழுதில் அழகுமிக்க அரம்பை தன்னுயகன் நளகூபரனை நண்ணுதற்காகத் தன்னை அழகுபடுத்திக்கொண்டு அவ்வழியே செல்கின்ருள். அவள் காலில் சிலம்பு சிலம்புகின்ற ஓசையைப் பற்றிப் புலவர் தற்குறிப்பேற்றமாகச் சொல்லும் கற்பனை சிறப்பாக அமைந்துள்ளது. அந்தச் சிலம்பொலியை ஆடவர்கள் கேட்டால் ஆசைபெருகி உயிரையே யிழக்கநேருமாம். ஆகவே ஆடவர்கள் உயிரை இழவாது ஓடிப் போய்விடுங்கள்! அல்லது உயிரைக்காக்க வேருெரு அரணைத் தேடிக் கொள்ளுங்கள்! என்று சொல்வதுபோல அவள்சிலம்பொலி அவளடியெடுத்து வைக்குந்தோறும் ஒலிக்கின்றதாம்.

''ஓடிப்போமின்! ஆடவர்கள் உயிரை
இழவாது, அன்றி அரண்
தேடிக் கொண்மின்! என்பனபோல்
சிலம்பு புலம்பும் பதத்தாளை''

என்பது காணலாம். அவள் காலில் அணிந்த சிலம்புகள் மாறி மாறி ஒலிக்கும் ஒலிக்குறிப்பு இப்புலவர் காதுகட்கு 'ஓடிப்போமின் தேடிக்கொண்மின்' என்னும் பொருள் பொதிந்த சொல்லொலியாக கேட்கின்றதுபோலும்.

இனி, அவள் இடையைப் பற்றி கூறும்போது அனுமான அளவையைக் கையாளுகின்ருர். அவள் இடை மிக நுண்ணியதாக இருத்தலால் கண்ணுக்குத் தோன்றவேயில்லை. ஆனல் இடைக்கு மேல் உள்ள தனபாரங்களை தாங்குவதற்கு ஒரு ஆதாரம் இல்லையெனில் அவை நில்லாது; எனவே காணப்படும் தனபாரத்தைக் கொண்டு காணப்படாத இடையின் இருப்பை அனுமான அளவையால் நிறுவதற்குரிய நுண்ணிடையாய் என்கின்ருர் புலவர்.

'தனமாமலையைத் தாங்குவ தொன்றில்லை யாகினில்லா தென்
றனுமானத்தா லுண்டாக அடுக்கும் என்னும் இடையாளை'

என்பது காண்க. இடையைப் பற்றிய இந்தக் கற்பனையைப் பின்பற்றித் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தம் பிரபு லிங்க லீலையில் —

"மாயை யிடையை யுளால் முலையால்; மற்றை மாதர் போலென்று
தூய மதிஞர் அனுமித்துச் சொல்லு மருங்கல் தோகை"
(பிரபு தேவர் வந்த கதி–37)

என்று வழியளவையை நன்கு அமைத்துக் காட்டியுள்ளார் என்பதை உளங்கொளல் வேண்டும், சிவப்பிரகாசரின் இடையைப் பற்றிய கற்பனைக்கு வித்து, உத்தர காண்டத்தின் இச் செய்யுளே எனல் தகும்.

உவமைகள்

இராவணன் அனரன்ணியனோடு போர்செய்து அவனை வீழ்த்திப்போகும்போது நாரதன் வந்து சில நவில்கின்றான். மனிதர்கள் முன்னமே பசியாலும் பிணியாலும் மரணத் துன்பத்தாலும் வருந்துகின்றவர்கள். அவர்களோடு போர் செய்வது பயனற்ற செயல் என்பதைப் புலப்படுத்தும்போது

"துன்னார் போரில் பேராத நிலையுடையோய்!
பிணம் வெட்டி வாள் முறித்துப் பெறும் பேறுண்டோ" (44)

என்று பிறிது மொழிதல் அணியை அமைத்து விளக்கியிருத்தல் படிப்போர் நெஞ்சில் நன்குபதியும்; இனி, அளகாபுரியின் சோலையில் உள்ள தடாகத்தினைப் பற்றிக் கூறும் பொழுது அந்தத் தடாகத்தின் நீர் தெளிந்திருப்பதற்கும் அத் தடாகத்தின் ஆழத்திற்கும் கூறும் உவமைகள் சிறப்பாக உள்ளன.

"வஞ்சமில்லா யோகியர்தம் மனம்போற்றெளிந்து மங்கையர்தம்
நெஞ்சுபோல மிக ஆழ்ந்து நிலைப்படாத நெடுநீரில்" (144)

என உவமை கூறுகின்றார். இதனால் யோகியர் மனம் எப்போதும் தெளிவாக இருக்கும் என்பதும், காமாதிகளால் கலங்காத தெளிவுடையது என்பதும் அவர் மனம்போலத் தடாகத்தின் நீர் மிகத் தெளிவாக மிளிர்கின்றது என்பதும் அறிகின்றோம். ஆடவர் நெஞ்சத்திலும் பெண்டிர் நெஞ்சம் ஆழமிக்கது. அதனை அறிந்து கொள்ள இயலாது என்பது புலப்பட இங்கு அந்தத் தடாகத்தின் ஆழத்திற்கு மங்கையர் நெஞ்சினை உவமை கூறியுள்ளார்.

**பல்பொருளுவமை**

சந்திரன் தோன்றியவுடன் முன்பு கவிந்திருந்த இருள் மறைந்ததற்கு மூன்று உவமைகளைக் கூறுகின்றார். தூய ஞானம் தோன்ற மாயை அழிவதுபோலவும், அறத்தின் எதிரில் பாவம் அழிவது போலவும், உலகங்காக்கும் திருமால் போர்புரியும்போது அரக்கர் அழிவது போலவும், சந்திரன் தோன்ற இருள் அழிந்தது எனப் பல்பொருள் உவமையாகக் கூறி விளக்கம் தருகின்றார்.

**''தூய ஞானச் சுடர் விளக்குத் தோன்றத்தோன்ற நில்லாத**
**மாயை யெனவும் அறத்தினெதிர் வன்றீவினை மண்டிலமெனவும்**
**நேயவுலகம் காத்தளிப்பா னேர்போர் புரியும் நின்முகத்துத்**
**தீயவரக்கர் நலமெனவும் தீர்ந்ததந்தச் செறியிருளே''** (149)

**இராவணனுக்கும் விதியில் நம்பிக்கை**

மதுவினால் கவரப்பட்ட கும்பிநசி, இராவணன் பாதத்தில் அழுகின்றபோது, அவள் தனக்கு நேர்ந்த பழிபடுதுன்பத்தை நினைத்தே இவ்வாறு அழுகின்றாள் என்று எண்ணிய இராவணன் அவளுக்கு அமைதிகூறும் முறையில்,

**''கேளிதென் சொல்லுன் மனத்துக் கேதமதனை விடுதி; வினைக்**
**கோளை விதியை யார்கடப்பார்?'' என்று கூறுகின்றான்;**

இதனால், தத்தமக்குத் துன்பம் வருகின்றபோது வினையையும் விதியையும் யாரும் நினையாமல் இருக்கவியலாது என்பதை அறிகின்றோம். இராவணன் பிறர்க்குத் துன்பம் செய்தே பழகியவன் விதியை வினையை நம்பியிருந்தால் பிறர்க்குத் தீங்கு செய்திருக்கமாட்டான். வலிந்து பற்றி மகளிரைக் கற்பழித்திருக்க மாட்டான். இத்தகு கொடியோன் தன் சிற்றன்னைக்கு நேர்ந்த சிறுமையை நினைந்து அவட்கு ஆறுதல்கூறும் முறையில் இவ்வாறு ''வினைக்கோளை விதியை யார்கடப்பார்?' என்று கூறும் அவ்விராவணன் சொல்லை உணரும்போது நமக்கு வியப்பே உண்டாகின்றது. கோள்களைச் சிறையிட்ட இராவணனுக்கும் இந்த நம்பிக்கை எப்படி வருகின்றது? தனக்குத் துன்பம் வருகின்ற போது யாரும் இந்த நிலைக்கு ஆட்பட்டே ஆகவேண்டும் என்பது இதனால் அறிகின்றோம்.

## இராவணன் இமவனம் எய்துதல்

329. கங்கை சேர்சடைக் கண்ணுதல் காதலி
தங்கு பங்கன் றனதருள் பெற்றவத்
துங்க மால்வரைத் தோள்நிரு தன்புவி
எங்கும் போய்வந் திமவன மெய்தினுன்.

கங்கை சேர்சடைக் கண்ணுதல்–காதலி
தங்கு பங்கன்–தனது அருள் பெற்ற அத்
துங்க மால்வரைத் தோள்நிருதன் புவி
எங்கும்போய் வந்து இமவனம் எய்தினுன்.

பொ: கங்கை தங்கிய சடையினையும், கண்பொருந்திய நெற்றியையும் காதலியாகிய உமை தங்கிய இடப்பாகத்தினையும் உடைய சிவபிரானுடைய அருள்பெற்ற அந்த வலிய பெரிய மலை போன்ற தோளினையுடைய இராவணன், உலகு எங்கணும் சென்று திரிந்து பின் இமவனம் அடைந்தான்.

கு: அருள்பெற்ற அந்நிருதன் என இயையும், நிருதனுக்கு அடையாக 'அத்துங்க மால்வரைத்தோள் என்பது வந்தது. துங்கம்-வலிமை. மால்வரை-பெரியமலை. இராவணன் தோள்கள் வலிய பெரிய மலைபோன்றிருந்தன என்பதும் அந்தத்தோள்களின் வலிமையால் பொருவாரைத் தேடி இவ்வுலகம் முழுவதையும் சுற்றி வருகின்றுன் என்பதும் புலப்படுத்தியவாறு. இமயமலையைச் சார்ந்த வனம் இமவனம் எனப்பெயர் பெற்றது. வலிய கையிலைமலையைப் பெயர்த்த வலிமை தினைத்து, 'துங்கமால்வரைத்தோள் நிருதன்' என இராவணன் புகழப்பட்டான். (௯)

## வேதவதியின் தவநிலை

330. வாக்கி னுன்மனத் தான் மழை வண்ணனைப்
போக்கி வேறறி யாதபொற் பாவையை
ஆக்கு வேணியு மானுரி யாடையும்
வீக்கு மாதவ வேடத்தி னுடனே.

வாக்கினுல் மனத்தால் மழைவண்ணனைப்
போக்கி வேறு அறியாத பொற்பாவையை—
ஆக்கு வேணியும் மான்உரி ஆடையும்
வீக்கு மாதவ வேடத்தினுள் தனை.

பொ : வாக்கினுலும் மனத்தினுலும் முகில் வண்ணனுகிய திருமாலை யன்றி வேறு ஒன்றையும் அறியாத பொன்னுனியன்ற பாவை போல்பவளை - செயற்கையாக, ஆலின்பால் முதலிய வற்ருல் ஒட்டி ஆக்கிய சடையும், மான்தோலாகிய ஆடையும் கட்டியுள்ள பெருந்தவ வேடத்தினையுடையவளை.

கு : திருமாலின் ஆயிரம் திருநாமங்களையே சொல்லிக் கொண்டு, அவனது மழைவண்ணத்திருமேனியையே நினைத்துக் கொண்டு பிறிதொன்றையும் பேசாது நினையாது இருப்பவள் என்பது போதர. 'வாக்கினுல் மனத்தால் மழைவண்ணனைப் போக்கி வேறு அறியாத பொற்பாவை' என்ருர். வேதவதி வடிவினுல் பொன்னுவியன்ற பாவை போன்ற அழகுடையவள் என்பார். 'பொற்பாவையை' என்ருர். ஆக்கு வேணி என்பது தவம் செய்தற்குரிய சடைமுடியைச் செயற்கையாக, ஆலமரத்தின் பாலைக்கொண்டு கூந்தலை ஒட்டிச் செய்துகொண்டவள் என்றவாறு, இது தவஞ் செய்பவற்குரியது. வீக்குதல் - கட்டுதல். ஆக்குவே ணியை முடியாக வீக்கினுள் என்றும், மானுரியை ஆடையாகக் கட்டிக்கொண்டாள் என்றும் கொள்க.' வீக்குதல் வேணிக்கும் மானுரிக்கும் உண்டு.

### இராவணன் வேதவதியைக் காணுதல்

331. மைத வழ்ந்த கார் வண்ணனைக் கண் ணுறச்
செய்த வம் புரி சிந்தையி னுடனைக்
கைத வம் மிலாக் கற்புடைக் கன்னியை
எய்த வந்த இராவண னேக்கினுன்.

மை தவழ்ந்த கார்வண்ணனைக் கண்ணுறச்
செய்தவம் புரி சிந்தையினுள் தனைக்
கைதவம் இலாக் கற்புடைக் கன்னியை
எய்த வந்த இராவணன் நோக்கினுன்.

**பொ :** கருநிறம் பொருந்திய மேகம் போன்ற வண்ணமுடைய திருமாலைக்காணவேண்டிச் செய்தற்குறிய அரியதவத்தை விரும்பிய சிந்தையையுடையவளை,-வஞ்சகம் இல்லாத கற்பினையுடைய கன்னியை-அனுகவந்த இராவணன் பார்த்தான்.

**கு :** பாவையை - வேடத்தினுள் - சிந்தையினுள் தனை, கன்னியை என்பன ஒரு பொருள் பல பெயர். இராவணனுல் விரும்பப்படுதற்கு உரியளல்லள் என்பதுபோதரக் 'கார்வண்ணனைக் கண்ணுறச் செய்தவம்புரிசிந்தையினுடனை' என்றும் கைதவமிலாக் கற்புடைக் கன்னியை யென்றும் கூறினர். உலகம் காக்கும் கடவுளையடையத் தவஞ் செய்கின்றவள், அரக்கனுகிய இராவணனை விரும்புவாளோ? எனவும், கைதவமிலாக் கற்புடைக் கன்னி, கைதவமுடைய அரக்கனை விரும்புவாளோ? எனவும், உய்த்துணரவைத்தவாறு ஊன்றி நோக்கி யுணரலாம். கைதவம் வஞ்சகம். எய்த வருதலாவது நெருங்க வருதல்; நோக்கினுன் என்றது. அவளை யடையவேண்டும் என்ற விருப்பத்தோடு நோக்கினுன் என்றவாறு.

### இராவணன் வேதவதியை வினவுதல்

332. அன்ன கன்னியை நோக்கி யரக்கர் கோன்
உன்னை நோக்கி யுலகஞ் செயுந்தவம்
தன்னை நீசெயத் தக்கதன் றுன்பெயர்
என்னை யார்மக ணீயென் றியம்பலும்.

அன்ன கன்னியை நோக்கி அரக்கர்கோன்,
"உன்னை நோக்கி உலகம் செயும் தவம்
தன்னை. நீசெயத் தக்கது அன்று; உன்பெயர்
என்னை? யார் மகள் நீ?" என்று இயம்பலும்.

**பொ :** அந்த வேதவதியாகிய கன்னியை நோக்கி இராவணன், "உன்னை நோக்கி உலகத்தோர் செய்ய வேண்டிய தவத்தை நீ செய்தல் தக்கது அன்று. உன் பெயர் யாது? நீ யார் மகள்?" என்று வினவுதலும்.

கு : குளகம். வரும் செய்யுளில் முடியும். அரக்கர் கோன் என்றது இராவணனை. வேதவதியின் அழகை நினைக்கும்போது உலகத்தார் எல்லாம் அவளைப் பெறக்கருதித் தவஞ் செய்வர் என்பான். 'உன்னை நோக்கி உலகம் செயுந்தவம்தன்னை' என்ருன். இப்பேரழகு படைத்த நீ இனித்தவத்தால் பெறற்குரியது இல்லை என்ற கருத்தால் தவந்தன்னை நீ செய்யத்தக்கதன்று என்ருன். அழகியைப் பெற உலகத்தார் தவஞ் செய்வர் என்பதை: 'பொற்புடையரக்கிபூவிற் புனலினில் பெர்ருப்பில் வாழும். அற்புடையுள்ளத் தாரும் அநங்கனும் அமரர் மற்றும், எற்பெறத்தவஞ் செய்கின்ருர்; என்னை நீ இகழ்வதென்னே'' (ஆரணிய-சூர்ப்பனகைப்-68) எனச் சூர்ப்பணகை கூறுதல் கொண்டுணரலாம். உலகம் என்பது இடவாகுபெயராய் உலகில்உள்ளோரை யுணர்த்தியது. மணந்து கொள்ளும் நோக்கத்தால் உன்பெயரென்னை? யார் மகள் நீ என்று பெயரும் மரபும் வினவினுன். இயம்புதல் இங்கு வினவுதலை யுணர்த்தியது.

## வேதவதியின் விடை (5 – 7)

333. கோதி னீதிக் குசத்துவ சன்னெனும்
மாத வன்மறை யோதிட மற்றவன்
ஓதும் வேதத்தி னுற்பவித் தேனையென்
தாதை வேத வதியென்று சாற்றினுன்.

கோதுஇல் நீதிக் குசத்துவசன் எனும்
மாதவன் மறை ஓதிட மற்றவன்
ஓதும் வேதத்தின் உற்பவித்தேனை, என்
தாதை, 'வேதவதி' என்று சாற்றினுன்.

பொ : குற்றமற்ற நீதி வழி நடக்கின்ற குசத்துவசன் என்ற பெருந்தவ முனிவன், வேதங்களை ஓதிட, அவன் ஓதும் வேதத்தில் தோன்றிய எனக்கு என் தந்தை, 'வேதவதி' என்று பெயர் கூறினுன்.

கு: குசத்துவசன் என்பது, தருப்பையைக் கொடியாகக் கொண்டவன் என்னும் பொருளது. வேதங்களை ஓதும்போது அவ்வேத ஒலியிலிருந்து தோன்றிய காரணத்தால் 'வேதவதி' என்று பெயர் சூட்டினன் முனிவன். இது காரணப்பெயர். குசத்து வசன் ஓதிய வேத ஒலியிலிருந்து தோன்றியதால் குசத்துவசன் வேதவதிக்குத் தந்தை ஆயினன். உற்பவித்தல் – பிறத்தல். உற்பவித்தேனை, உற்பவித்தேற்கு என நான்கனுருபாக்குக. உருபு மயக்கம். (ரு)

334. பேசி வந்தவர் தங்களுக் கென்பிதா
மாசில் மால்வர னுயென் மகளுக்கு
வாசு தேவன் தனைவரித் தேனென
ஆசை யற்றங் கனைவரும் போயினர்.

**பேசி வந்தவர், தங்களுக்கு என்பிதா**
**'மாசு இல் மால்வரனுய் என் மகளுக்கு**
**வாசு தேவன் றனை வரித்தேன்' என**
**ஆசை அற்று அங்கு அனைவரும் போயினர்.**

பொ: மணம்பேசி வந்தவர்க்கு என் தந்தை, 'என் மகளுக்குக் குற்றமற்ற பெரிய கணவனாக வாசுதேவன்தனை நியமித்துள்ளேன்' என்று சொல்ல, அங்கு வந்த அனைவரும் ஆசை நீங்கிப் போனார்கள்.

கு: பேசுதல், இங்கு மணம்பேசுதல், வேதவதியை மணந்து கொள்ள விரும்பி முறைப்படி மணம்பேசி வந்தவர்களுக்கெல்லாம் குசத்துவசன் கூறிய விடை 'என் மகளுக்கு வரனாக வாசுதேவனை வரித்தேன்' என்பது. ஆகலின் ஆசையை விடுத்துப்போயினர். மால்வரன் – பெருமையுடைய கணவன். உயிர்தோறும் வசிக்கின்ற இயல்பு பற்றித் திருமால் வாசுதேவன் எனப்பட்டான். வரித்தல் – நியமித்தல். திருமாலைக் கணவனாகக் கொள்ள விரும்பியவள் மானுடரை மணந்து கொள்ளாள் என்பது தெளிந்து போயினர் என்க. (சு)

335. சம்பு வென்னுந் தயித்தியர் கோன்மனம்
வெம்பி யெல்லி யுறங்கிடும் வேலையில்
எம்பி தாவை வதைத்திட வெம்மனே
உம்பர் வாழ்த்த வுடனெரி மூழ்கினுள்.

சம்பு என்னும் தயித்தியர்கோன் மனம்
வெம்பி, எல்லி உறங்கிடும் வேலையில்
எம் பிதாவை வதைத்திட, எம் அனே
உம்பர் வாழ்த்த உடன் எரி மூழ்கினுள்.

பொ: சம்பு என்னும் பெயரையுடைய அரக்கர் தலைவன் (என் தந்தையின் கருத்தை அறிந்து) மனம் வெதும்பி இரவில் உறங்கும்போது என்தந்தையைக் கொல்ல, என் தாய் தேவர்கள் வாழ்த்துமாறு என் தந்தையின் உடலோடு எரியில் மூழ்கி இறந்தாள்.

கு: தயித்தியர்—அரக்கர். சம்பு மனம் வெதும்புதற்குக் காரணம், குசத்துவன் தன் மகளைத் திருமாலுக்கே கொடுப்பேன் என்று கருதினமையேயாகும். எல்லி—இரவு. வேலை—வேளை. அனே, அன்னை என்பதன் தொகுத்தல். உம்பர்-தேவர். கணவனுக்குப் பின் உயிர்வாழ விரும்பாத அவள் உறுதியையும் பத்தியையும் நினைந்து தேவர்கள் வாழ்த்துவாராயினர். உடனெரி மூழ்குதலாவது தன் கணவன் உடம்பை எரிக்கும் தீயிலேயே தானும் விழ்ந்து இறத்தல். (எ)

336. எந்தை யெண்ண முடிக்க வியற்றுமென்
சிந்தை மாதவன் றன்வழிச் செல்கையால்
இந்த மாதவம் பூண்டனென் யானென
அந்த நீச னடாதன கூறுவான்.

'எந்தை எண்ணம் முடிக்க இயற்றும் என்
சிந்தை மாதவன்தன் வழிச் செல்கையால்,
இந்த மாதவம் பூண்டனென் யான்' என
அந்த நீசன் அடாதன கூறுவான்.

பொ : 'என் தந்தையின் கருத்தை முடிப்பதற்குச் செயற்பட வேண்டிய என் சிந்தையும் திருமாலின் வழியே செல்லுதலால் இந்தப் பெருந்தவ வேடத்தை மேற்கொண்டேன் யான்' என்று வேதவதி கூற, அந்த இராவணனாகிய நீசன் நன்னெறியோடு பொருந்தாதவற்றைச் சொல்லுவானானான்.

கு : எந்தை – என்தந்தை. தந்தையின் கருத்தைச் செய்து முடிக்கவேண்டிய கடப்பாடுடைய எனது மனமும் திருமாலின் வழியில் செல்லுதலால் இந்தத் தவக்கோலம் பூண்டேன் என்றவாறு. தந்தையின் கருத்தோடு என் கருத்தும் ஒத்துத் திருமாலையே விரும்பிற்று என்பாள், 'என் சிந்தை மாதவன் தன்வழிச் செல்கையால்' என்றாள். வேதவதி மாதவம் செய்வதற்குக் காரணம் திருமாலையடைய வேண்டும் என்ற கருத்தேயாகும். இவ்வாறுதன் கருத்து இதுவென்று வெளிப்படையாக வேதவதி கூறியபின் அவளை விரும்பாது செல்லுதலே இராவணனுக்கு முறையாகவும் அங்ஙனம் செய்யாது, அவளை விரும்பிக் கூறுதல் பொருந்தாது என்பதுபுலப்பட 'அடாதன கூறுவான்' என்றார். (அ)

இராவணன் தன் பெருமை இயம்புதல்

337. இலங்கை மன்ன னிராவண னென்பெயர்
புலன்கள் வென்ற புலத்தியன் பௌத்திரன்
கலங்கல் சிந்தையென் காதலி யாய்த் தரா
தலங்களுக்குத் தலைவியு மாகென்றான்.

**இலங்கை மன்னன் இராவணன் என்பெயர்;**
**புலன்கள் வென்ற புலத்தியன் பௌத்திரன்;**
**கலங்கல் சிந்தை என் காதலியாய்த் தரா**
**தலங்களுக்குத் தலைவியும் ஆகென்றான்.**

பொ : இலங்கைக்கு அரசன், இராவணன் என்பது என் பெயர்; ஐம்புலன்களையும் வென்ற முனிவனாகிய புலத்தியனின் பேரன்; நீ சிந்தை கலங்காதே! என் காதலியாய்ப் பூமி முதலிய உலகங்களுக்கு அரசியும் ஆவாயாக என்று கூறினான்.

கு : இராவணன் தன்பெயர், மரபு முதலியவற்றைத் தானே கூறுகின்றான். அவன் பெயரினும் இலங்கைக்கு மன்னன் என்பது பெருமைதருவதாக இருத்தலின் 'இலங்கை மன்னன்' என்பதை முன்னர்க் கூறினான். புலன்களை வென்ற புலத்தியன் பேரன் ஆகலின், தவப்பெருமையும் தன் மரபுக்குண்டு என்பதை விளக்கியவாறு. தாயும் தந்தையும் அற்று; வேறோர் சார்பும் அற்று இருக்கின்றோமே என்று கலங்காதே என்பான் 'சிந்தை கலங்கல்' என்றான்: 'கலங்கல் என்பது எதிர்மறை வியங்கோள் வினைமுற்று, 'மகனெனல்' (குறள்-196) என்புழிப்போல. எனக்குக் காதலி ஆகின்ற பொழுதே, மூவுலகங்களுக்கும் அரசியும் ஆகின்றாய் என்பான் 'என் காதலியாய்த் தராதலங்களுக்குத் தலைவியும் ஆக என்றான். ஆ கென்றான் என்புழி அகரம் தொகுத்தல். பட்டத்து அரசியாக ஏற்றுக் கொள்வேன் என்பது கருத்து, தராதலம்–பூமி. பூவுலகம் முதலிய மூவுலகங்களுக்கும் என்பான். தராதலங்களுக்கு எனப் பன்மையால் கூறினான். (கூ)

338. குலத்தி னான்மிகுங் கொற்றத்தி னாற்பெரும்
பலத்தி னாலோர் பழிப்பில் வடிவினால்
நலத்தி னாலெனை நாரண னொக்குமோ
உலத்தி னால்பய னென்கொ லுடம்பை நீ.

குலத்தினால் மிகும் கொற்றத்தினால், பெரும்
பலத்தினால், ஓர் பழிப்புஇல் வடிவினால்,
நலத்தினால் எனை நாரணன் ஒக்குமோ?
உலத்தினால் பயன் என்கொல் உடம்பை நீ.

பொ : குலத்தினாலும் மேன்மேல் மிகுகின்ற வெற்றியினாலும், பெரிய வலிமையினாலும் ஒரு பழிப்பு இல்லாத அழகிய வடிவத்தினாலும், பிற நலத்தினாலும் என்னை நாரணன் நிகர்ப்பனோ? (என்னினும் தாழ்ந்தவனாகிய நாரணனைப் பெற வேண்டி) உன்னுடம்பை உலர்த்தினால் என்ன பயன்?

கு: இராவணன், குலத்தில், கொற்றத்தில், பலத்தில், வடிவில், நாரணனைக் காட்டிலும் உயர்ந்தவன் என்பது புலப்படுத்தியவாறு. நாரணனைக் காட்டிலும் உயர்ந்தவனாகிய யான் விரும்பி மணக்க இருக்கும்போது, என்னினும் தாழ்ந்தவனாகிய நாரணனையடைய அழகிய உடம்பைத் தவத்தினால் உலர்த்துவதால் பயனில்லை என்பான். 'உலர்த்தினால் பயனென்கொல்' என்றான். ''உலர்த்தினால் என்பது எதுகை நோக்கி 'உலத்தினால்' எனவந்தது. மரூஉ முடிபு எனலும் ஆம். நீ உடம்பை உலத்தினால் பயனென் கொல்? என இயையும். (௧௰)

### இராவணன் சொல்லைக்கேட்டு
### வேதவதி வருந்திச் சொல்லுதல். 11-14

339. ஓரா தவரக் கனுரைத் தசொலச்
சீரார் மடவாள் செவியிற் கனல்காய்
நாரா சநுழைந் தெனநண் ணுதலும்
வேரா அவற்கின் னவிளம் பினளால்.

**ஓரா அரக்கன் உரைத்த சொல், அச்**
**சீரார் மடவாள் செவியில் கனல் காய்**
**நாராசம் நுழைந்தென நண்ணுதலும்**
**வேரா அவற்கு இன்ன விளம்பினளால்.**

பொ: வேதவதியின் உள்ளத்து உறுதியை ஓர்ந்துணராத இராவணன் சொல்லிய சொல், அந்தச்சிறப்புப் பொருந்திய வேதவதியின் செவியில், நெருப்பில் காய்ந்த இருப்புச் சலாகை நுழைந்தாற்போல நுழைதலும், உடம்பு வேர்த்து அவள் இத்தன்மையான சொற்களைச் சொன்னாள்.

கு: ஓர்தல்-நுணுகி அறிதல். இராவணன் தன்னைக் காதலிக்குமாறு சொல்லிய சொல், வேதவதியின் செவியில் நெருப்பில் காய்ச்சிய இருப்புச் சலாகையை நுழைத்தாற்போன்ற

வருத்தத்தைத் தந்தது என்றவாறு. வேரா-வேர்த்து; செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அவள் விளம்பியது வருஞ் செய்யுளில் காணலாம். நாராசம்-இரும்புக்கம்பி. (கக)

340. பய்யா டரவிற் றுயிலும் பரனைக்
கய்யா ழியனைக் கருணா கரனை
மய்யார் மழைவண் ணனைமா மலர்மேல்
செய்யா ளுறையுந் திருமார் பினனை.

பய்ஆடு அரவில் துயலும் பரனை,
கய்ஆழியனை, கருணாகரனை,
மய்யார் மழைவண்ணனை, மாமலர்மேல்
செய்யாள் உறையும் திரு மார்பினனை.

பொ: படம் எடுத்து ஆடுகின்ற பாம்பணையில் துயிலுகின்ற பரம் பொருளை,-கையில் ஏந்திய சக்கராயுதத்தை யுடையவனை கருணைக்கு, இருப்பிடமாயிருப்பவனை, -கருநிறம் பொருந்திய மேகம் போன்ற வண்ணமுடையவனை -சிறந்த செந்தாமரை மேல் வீற்றிருக்கும் திருமகள் தங்கியுள்ள அழகிய மார்பை உடையவனை

கு: பய், கய், மய் என்பன செய்யாள் என்பதை நோக்கி வந்த போலிகள். பை, கை, மை என்பனவே உண்மைவடிவம். பை – பாம்பின் படம். அரவு – ஆதிசேடனாகிய பாம்பு. ஆழி - சக்கராயுதம். ஆகரம் – இருப்பிடம். கருணைக்கு இருப்பிடமான வன் கருணாகரன் எனப்பட்டான். மை – கருமை நிறம். செய்யாள் என்றது திருமகளை. திருமால் மார்பில் திருமகள் தங்கியுள்ளாள் என்பது கவி மரபு. "பங்கயத்திருந்த பொன்னை ஆகத்தில் ஒருவன் வைத்தான்" (ஆரணிய–மாரீசன் வதைப்– 76) என்பது காணலாம். (கஉ)

341. சேயோ னையடைந் தவர்சிந் தையனைத்
தூயோ னையெனு வியையென் றுணையை

மாயோ னைவரித் தனென்யா னெனவும்
பேயே றினைபோ லிவைபே சுதியோ.

சேயோனை அடைந்தவர் சிந்தையனை,
தூ யோனை, என் ஆவியை, என் துணையை,
மாயோனை, வரித்தனென் யான் எனவும்,
பேய் ஏறினைபோல் இவை பேசுதியோ?

பொ: தன்னை அடையாதவர்க்குச் சேய்மையில் இருப்பவனை — தன்னை அடைந்த அன்பர்தம் சிந்தையில் அணித்தாய் இருப்பவனை - தூய்மையானவனை — என் உயிராக இருப்பவனை என் துணையானவனை - மாயச் செயலில் வல்லவனை—என் கொழுநனாக நியமித்துக்கொண்டேன் யான்' என்று சொல்லவும், நீ பேய் கோட்பட்டனை போல இவற்றைப் பேசுதல் தகுமோ?

கு: சேயோனை, என்பது முதல் மாயோனை என்பது வரையிலுள்ள இரண்டனுருபேற்ற பெயர்கள் ஆறும் ஒருபொருள்மேல் வந்த பலபெயர்கள்; வரித்தனென் என்ற வினைகொண்டு முடிந்தன. தம்மியல்பில் உள்ள யாரும் பேசத்தகாதவற்றைப் பேசினான் என்பது தோன்ற 'பேயேறினைபோ லிவை பேசுதியோ? என்றாள். வரித்தல்—கணவனாக ஏற்றுக்கொள்ளுதல். (கரு)

342. நிலமன் னநெடும் பழிமே னிரயம்
பலமன் னுவைபா ரினினைந் திடிலைம்
புலன்வென் றபுலத் தியமா முனிவன்
குலமன் னவனுக் கிவையோ குணமே.

நிலம் மன்ன நெடும்பழி மேல் நிரயம்
பல மன்னுவை; பாரின் நினைந்திடில் ஐம்
புலன் வென்ற புலத்தியன் மாமுனிவன்
குல மன்னவனுக்கு இவையோ குணமே?

பொ: நிலவுலகில் நிலைபெற நெடிய பழியையும், இவ்வுடம்பிற்குப்பின் நரகங்கள் பலவற்றையும் பொருந்துவாய்; இவ்வுலகத்தில் ஆராய்ந்து பார்க்குமிடத்து ஐம்புலன்களையும்

வென்ற புலத்திய மாமுனிவரது குலத்துப் பிறந்த அரசனுக்கு இவைதாமோ குணம்? (குணமல்ல; என்றவாறு)

கு: மன்ன - நிலைபெற. நெடும்பழி மன்னுவை; மேல் நிரயம் பல மன்னுவை; என முன்னும் கூட்டுக. நிரயம்-நரகம். மன்னுதல் - பொருந்துதல். ஐம்புலன்களை வென்ற புலத்திய முனிவர் மரபில் வந்த மன்னவன், புலனடக்கம் பொருந்தியவனாக இருத்தலே இயல்பாகவும், அதற்கு மாறாகப் புலனடக்கமின்றிப் பிறர்க்கு உரிமைபூண்டுள்ள பெண்ணை விரும்புதல் குணமாகாது என்பாள், 'இவையோ குணமே?' என்றாள். இவை குணமல்ல என்பது இசையெச்சமாகக் கொள்ளப்படும். 'புலன்கள் வென்ற புலத்தியன் பௌத்திரன்' எனத் தன்னை முன்னம் அறிமுகம் செய்து கொண்டான் இராவணனாகலின் இது கூற வேண்டியதாயிற்று.

### இராவணன் செயல்

343. குயில்பற் றியசொல் லிவைகூ றுதலும்
மயல்பற் றியமன் மதனைங் கணைதன்
உயிர்பற் றியரிந் திடவுள் ளழியும்
செயிர்பற் றியசிந் தையனீ துசெயும்.

**குயில்பற்றிய சொல் இவை கூறுதலும்,**
**மயல் பற்றிய மன்மதன் ஐங்கணைதன்**
**உயிர் பற்றி அரிந்திட, உள்அழியும்**
**செயிர் பற்றிய சிந்தையன், ஈதுசெயும்.**

பொ; குயிலின் இனிய குரல் தன்மையைப் பற்றியுள்ள சொல்லினையுடையவளாகிய வேதவதி, இவற்றைச் சொல்லுதலும், காம மயக்கம் பற்றுதற்குக் காரணமான மன்மதனுடைய மலர்க்கணைகள் ஐந்தும் தனது உயிரைப்பற்றி அரிந்திடலால் உள்ளே அழிகின்ற குற்றம் பொருந்திய சிந்தையையுடைய இராவணன், இதைச் செய்வானானான்.

கு : சொல் என்பது ஆகுபெயராய்ச் சொல்வினையுடைய வேதவதியை உணர்த்தியது. குயில்பற்றிய சொல் என்றது குயிலின் இனிய குரல் போன்ற குரலாலாகிய சொல் என்றவாறு. வேதவதியின் சொல்லினிமையில் இராவணன் ஈடுபட்டானே யன்றி, அச்சொல்லின் கடுமையை யுணர்கில்லானுயினுன் என்பது புலப்பட, 'குயில்ப்பற்றிய சொல்லிவை கூறுதலும்' என்றுர். மயல் பற்றிய ஐங்கணை என்று இயையும், இராவணனது இயல்பான கொடுமைக்கு மேலாக, மன்மதன் ஐங்கணையும் உயிரைப்பற்றி அரிதலால் உள்ளழிகின்ற சிந்தையன் எனப்பின் அவன் செயலுக்குக் காரணம் கூறியவாறு. செயிர்—குற்றம். (கரு)

### இராவணன் வேதவதியின் கையைப் பற்றுதல்

344. மய்யார் குழலா டன்மலர்க் கையினைக்
கய்யா லவன்முட் டிடலுங் கனல்காய்
நெய்யா ரழலா மென நின் றெரியச்
செய்யார் வடிவா ளிவைசெப் பினளால்.

மய்யார் குழலாள்தன் மலர்க் கையினைக்
கய்யால் அவன் முட்டிடலும், கனல்காய்
நெய்யார் அழலாம் என நின்று எரியச்
செய்யார் வடிவாள் இவை செப்பினளால்.

பொ : கருநிறம் பொருந்திய கூந்தலையுடைய வேதவதியின் காந்தள் மலர்போன்ற கையினை அவ்விராவணன் தன்கையால் தொடுதலும், நெருப்பின் கண் காய்கின்ற நெய்யின் வெப்பம்போல நிலைநின்று உடம்பு எரியச் செந்நிறம் பொருந்திய வடிவுடைய வேதவதி சொன்னுள்.

கு : மய், கய் என்பன எதுகை நோக்கிய போலிகள். மை, கை என்பனவே இயல்பான சொற்கள். மலர் என்றது, கைக்கு உவமையாகத்தக்க காந்தள் மலரினை. முட்டுதல் என்பது தீண்டுதலை உணர்த்தியது. நெருப்பின் வெப்பத்தினும் நெருப்பில் காய்கின்ற நெய்யின் வெப்பம் கடுமையானது ஆதலின்,

கனல்காய் நெய்யாரழலை உவமை கூறினர். இராவணன் கை தீண்டியதைப் பொருத வேதவதியின் உடம்பு சினத்தால் கொதித்தமை புலப்படுத்தியவாறு. அழல் என்றது இங்கு நெய்யின் அழற்சியை — வெப்பத்தை. (கசு)

வேதவதியின் வெஞ்சினவுரை.

345\. வாடா மலரோன் வரச்செருக்கான் மற்றெனை நீ
கூடா தனசொல்லிக் கூசாது தீண்டினையால்
ஏடா வுனக்கு மிலங்கைக்கு முன் கிளைக்கும்
கேடாகத் தோன்றுவே னென்றாள் கிளர்
[சினத்தாள்.

'வாடா மலரோன் வரச்செருக்கால் மற்று எனைநீ,
கூடாதன சொல்லிக் கூசாது தீண்டினையால்,
ஏடா! உனக்கும் இலங்கைக்கும் உன் கிளைக்கும்
கேடாகத் தோன்றுவேன்' என்றாள், கிளர் சினத்தாள்.

பொ "ஏடா! நீ, வாடுதல் இல்லாத தெய்வத்தன்மை பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவன் கொடுத்த வரத்தின் செருக்கினால், பொருந்தாத தீய சொற்களைச் சொல்லிக்கொண்டு கூசாமல் என்னைத் தீண்டினாய்; (இங்ஙனம் நீ செய்தமையால்) உனக்கும் இலங்கைக்கும் உன் உறவினர்களுக்கும் கேடு வருமாறு பிறப்பேன்" என்று கூறினாள், கிளர்ந்தெழுந்த கோபம் உடைய வேதவதி.

கு: கிளர் சினத்தாள் என்பது வினைப்பெயர். கிளர் சினத்தாள் கேடாகத் தோன்றுவேன் என்றாள் என இயையும். திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றியவன் பிரமன் ஆதலின், 'மலரோன்' எனப்பட்டான். எப்போதும் மலர்ந்தேயிருக்கும் அதன் தெய்வத் தன்மை புலப்பட வாடாமலர் எனப்பட்டது. "ஏடா, நீ செருக்கால் கூடாதன சொல்லிக்கொண்டு கூசாது எனைத் தீண்டினை என இயையும், 'ஆல்' ஆதலால் என்னும் பொருளது. 'ஏடா, என்பது இழித்தற் குறிப்புணர நின்ற முன்

னிலே ஆனொருமை. கேடு ஆகத் தோன்றுவேன் என்றது, கேடு உண்டாகத் தோன்றுவேன் என்னும் பொருளது. கிளர்தல் — வளர்தல். (கஎ)

வேதவதி தீயில் மூழ்குதல்

346. வானோர் மகிழ்ந்து
மலர்மா மழைபொழிய
ஏனோர்க ளெல்லா
மினிப்பிழைத்தோ மென்றியம்பக்
கானா ருருந்தவத்தோர்
கண்டு வியப்பெய்தத்
தேனார் மொழிமடவாள்
செந்தழலின் மூழ்கினாள்.

வானோர் மகிழ்ந்து மலர்மா மழைபொழிய
ஏனோர்கள் எல்லாம் இனிப் பிழைத்தோம்என்று இயம்ப,
கான்ஆர் அருந்தவத்தோர் கண்டு வியப்பு எய்த,
தேன்ஆர் மொழி மடவாள் செந்தழலின் மூழ்கினாள்.

பொ: வானுலகத்திலுள்ள தேவர்கள் (வேதவதியின் சாபச் சொல்லைக் கேட்டு) மகிழ்ந்து கற்பக மலர் மழையைச் சொரியா நிற்கவும், மற்றவர்கள் எல்லாம் இனி உயிர் பிழைத்தோம்' என்று சொல்லா நிற்கவும், காட்டிலிருந்து அரிய தவத்தைச் செய்து கொண்டிருக்கும் ; தவமுனிவர்கள் வேதவதியின் செயலைக்கண்டு வியப்பு அடையவும், தேன்போன்ற இனிமை பொருந்திய சொல்லை யுடைய இளையாளாகிய வேதவதி, சிவந்த நெருப்பில் மூழ்கி மாழ்கினாள்.

கு: தேவர்கள், தம்மால் வெல்லப்படாத பேராற்றலையுடைய இராவணன் வேதவதியின் சிற்றத்தால் இனிக் கேடு அடையப் போகிறான் என்ற உறுதியினால் மகிழ்ந்து மலர்மாரி சொரிந்தார்கள் என்க. ஏனோர் என்றது மண்ணுலகில் உள்ள `உயர்ந்தோர்களை.

அவர்களும் இராவணனால் அல்லல்மிக எய்துகின்றவர்கள் ஆதலின், அவர்கள் இனிப் பிழைத்தோம் என்று மகிழ்ந்து சொல்லலாயினர் என்க. பிழைத்தல் என்றது, இங்கு உயிர் உய்தலை. கானம்-காடு. கானர் அருந்தவத்தோர்,வேதவதியின் தவஉறுதியைக்கண்டு தம்மினும் அவள் தவ ஆற்றல் விஞ்சியிருப்பதை யறிந்து வியப்பாராயினர். பொழிய. இயம்ப, வியப்பெய்த மடவாள், செந்தழலின் மூழ்கினள் என இயையும், மூழ்கி இறந்தாள் என்றவாறு வேதவதியின் குரலினிமையும் இளமையெழிலும் புலப்படத் 'தேனர் மொழி மடவாள்' எனக் குறிப்பிட்டவாறு. (கஅ)

**வேதவதி சானகியாகப்பிறக்க அவளை நீ மணந்தாய்**
**என இராமனை நோக்கி அகத்தியர் கூறியது.**

347. வன்னி யிடை மூழ்கிய
மாதவத்தாள் மாச்சனகன்
தன்னுடைய வேள்வித்
தரணியிடை வந்துதிப்ப
அன்னவளை முன்னா
ளமிழ்திற் பிறந்தாளைப்
பொன்னொளிசேர் பூணினாய்
வில்லிறுத்துக் கைப்பிடித்தாய்.

**வன்னியிடை மூழ்கிய மாதவத்தாள், மாச்சனகன்**
**தன்னுடைய வேள்வித் தரணியிடை வந்து உதிப்ப,**
**அன்னவளை, முன்நாள் அமிழ்தில் பிறந்தாளை,**
**பொன் ஒளி சேர்பூணினாய்! வில் இறுத்துக் கைப்பிடித்தாய்.**

பொ: நெருப்பில் மூழ்கிய பெருந்தவத்தினளாகிய வேதவதி பூமியில் பெருமையுடைய சனகனுடைய வேள்வியில் வந்து தோன்ற அந்தச் சானகியை – முன்காலத்துப் பாற்கடலில் அமிழ் தோடு பிறந்த திருமகளை, பொன்னால் இயன்ற ஒளிபொருந்திய ஆபரணம் அணிந்தவனே: நீ வில்லை ஒடித்துக் கைப்பிடித்து மணந்தாய்.

கு : வேதவதியே சனகன் வேள்வியில் பிறந்த சானகி என்பதைப் புலப்படுத்தியவாறு, மேலும் திருப்பாற்கடலில் அமிழ்தத்தோடு தோன்றிய திருமகளும் அவ்வேதவதியே என்பதும் விளக்கியவாறு, வேதவதி முன்பு திருமகளாக இருந்தவள் தவத்தால் திருமாலை அடையஎண்ணித் தவஞ் செய்யலானாள் என்க. வன்னி -நெருப்பு. நெருப்பில் மூழ்கினவள் மீண்டும் சனகனது வேள்வித்தீயிலே தோன்றினாள் என்ற இயைபும் காணலாம். தரணியிடை மாச்சனகன் தன்னுடைய வேள்வி வந்துதிப்ப என மாறிக் கூட்டுக. மாதவத்தாள் என்றது வேதவதியை. மாச்சனகன் மகளாதற்குரிய பெருந்தவம் முன்னரே செய்துமுடித்தவள் என்பது தோன்ற 'மாதவத்தாள்' என்றார். இனி, நீ கைப்பிடித்தற் கேற்ற மாதவத்தையுடையாள் என்று இராமனைச் சிறப்பித்தலும் ஆம். இராவண சங்காரத்திற்குப் பின் இராமன் அயோத்தி அரசனாய்த் திகழ்கின்றபோது அகத்தியர் இராவணாதியரின் பிறப்பும் சிறப்பும் கூறுகின்றார், ஆதலின், இராமனை விளித்து இங்ஙனம் அகத்தியர் கூறினார் என்க. (கசு)

**இராமன் விரும்பியபடி இராவணனது மேல்வரலாற்றை அகத்திய முனிவன் கூறத்தொடங்குதல்**

348. என்று முனியு மியம்ப வதுகேட்டு
வென்றிச் சிலைதரித்த வீரன் வியப்பெய்திக்
கன்றிய சிந்தை யரக்கன் கடைச்செய்த
தொன்று மொழியா துரைத்தி யெனவுரைப்பான்.

**என்று முனியும் இயம்ப, அதுகேட்டு,**
**வென்றிச் சிலை தரித்த வீரன், வியப்பு எய்திக்**
**'கன்றிய சிந்தை அரக்கன் கடைச் செய்தது**
**ஒன்றும் ஒழியாது உரைத்தி' என, உரைப்பான்.**

பொ : என்று அகத்திய முனிவனும் சொல்ல, அவ் வரலாற்றைக்கேட்டு, வெற்றிவில் தாங்கிய வீரனாகிய இராமன் வியப்படைந்து, 'கோபித்தே பழகிய சிந்தையினை உடைய

இராவணன் கடைசிவரையில் செய்ததை ஒன்றும் விடாமல் சொல்வாயாக' என்று வேண்டிக்கொள்ள அகத்திய முனிவன் சொல்வானுனன்:

கு: முனி என்றது அகத்திய முனிவரை. இராவணனைக் கொன்று வெற்றி யெய்திய வில்லையேந்தினவனுக இருந்தும், இராவணனது பழைய கொர்டுமைகளைக்கேட்டு வியப்பு எய்தினுன் என்பார், வென்றிச் சிலைதரித்த வீரன் வியப்பெய்தி' என்ருர். கன்றுதல் – கோபித்தல். இராவணனது, சிந்தை கோபித்தலில் பயின்றது என்பதும் புலப்படக் 'கன்றிய சிந்தை' என்ருர். கன்றுதல்-பயிலுதல். இருபொருளுக்கும் பொருத்தமாக இத்தொடர் அமைந்திருத்தல் காணலாம். (உ௰)

**இராவணன் மருத்தனது வேள்வியை யடைதல்**

349 வேதவதி தான்சீறி வெந்தீயின் மூழ்கியபின்
போதமிலா வாளரக்கன் புட்பகத்தின் மீதேறி
ஏதமிலா விந்திரனே யாதி யிமையவரும்
மாதவருஞ் சேர்ந்த மருத்தன் மகமடைந்தான்.

**வேதவதி தான்சீறி வெந்தீயில் மூழ்கியபின்**
**போதம்இலா வாள் அரக்கன், புட்பகத்தின் மீதுஏறி,**
**ஏதம் இலா இந்திரனே ஆதி இமையவரும்**
**மாதவரும் சேர்ந்த மருத்தன் மகம் அடைந்தான்.**

பொ: வேதவதி இரர்வணனிடத்துக் கோபித்துக்கொண்டு (வெஞ்சின உரை கூறிவிட்டு) வெம்மைமிக்க நெருப்பில் மூழ்கிய பின்பு, அறிவில்லாத கொடிய இராவணன், புட்பக விமர்னத்தில் ஏறிக்கொண்டு, குற்றமில்லாத இந்திரன் முதலிய தேவர்களும் பெரிய தவமுனிவர்களும் சேர்ந்திருந்த மருத்தன் என்பவனது வேள்வியைச் சென்று சேர்ந்தான்.

கு: தன்னுல் தீண்டப்பட்டதைப் பொருது ஒரு நங்கை தீப்புக்கு இறந்தாள் என்பதை அறிந்தும் அதுபற்றித் திருந்தாத

இராவணனது மடமையை நினைந்து 'போதமிலா வாளரக்கன்' என்றார். போதம் – ஞானம்–அறிவு. வாள் – கொடுமை. சிவன் கொடுத்த வாளினை உடைய சிறப்பால் இராவணன் 'வாளரக்கன்' எனப்பட்டான் எனலும் ஆம். மருத்தன் என்பவன் ஒரு வேள்வி செய்ய அவ்வேள்விக்கு இந்திரன் முதலிய தேவர்களும் பெருந்தவ முனிவர்களும் வந்திருந்தனர் என்பார், 'இந்திரனே யாதி இமையவரும் மாதவரும் சேர்ந்த மருத்தன் மகம்' என்றார். மகம்–வேள்வி. (உக)

### இராவணனுக்கு அஞ்சித் தேவர்கள் வேற்றுருவங் கொள்ளுதல்

350. வாசவ னஞ்சி மயிலுருவந் தான்கொண்டான்
பாசக் கரத்தான் பறந்தானோ ரன்னமாய்க்
காசி னமன்கலங்கிக் காக்கை வடிவாகக்
கூசிக் குபேரனுங் கோம்பி வடிவானான்.

வாசவன் அஞ்சி மயில் உருவம் தான்கொண்டான்;
பாசக் கரத்தான் பறந்தான் ஓர் அன்னமாய்;
காசுஇல் நமன் கலங்கிக் காக்கை வடிவு ஆக;
கூசிக் குபேரனும் கோம்பி வடிவு ஆனான்.

பொ: (இராவணனைக் கண்டவுடன்) இந்திரன் அஞ்சி மயிலின் உருவாக மாறினான்; பாசத்தைக் கையில் கொண்டுள்ள வருணன் ஓர் அன்னப்பறவையாக உருக்கொண்டு பறந்தோடினான்; குற்றமற்ற எம தருமன் மனம் கலங்கிக் காக்கையின் வடிவை மேற்கொள்ளக் குபேரனும் அவன் முன்னிற்கக் கூசி, பச்சோந்தியின் வடிவு கொண்டு ஓடினான்.

கு: வாசவன்–இந்திரன். பாசக்கரத்தன் என்றது வருணனை. பாலைநீர் ஒழியவுண்ணும் பறவையை வருணன் கண்டு, என்று பின் (30) வருணன் அன்னத்தைக் கண்டு கூறுவதாக இந்நூலாசிரியரே கூறிப் பாசக்கரத்தான் என்றது வருணனையே என்பது விளங்கவைத்துள்ளமை காணலாம். வருணனுக்குப் பாசம்

உண்டு. அன்னமாய்ப் பறந்தான் என்க. காசு-குற்றம். நமன் - எமன். எமன் காக்கை வடிவுகொள்ள, குபேரன் கோம்பியின் உருவம் கொண்டு ஓடினான் என்க. மருத்தன் வேள்விசெய்யுமிடத்தில் இராவணன் வந்தவுடன் அவனுக்கு அஞ்சி வேற்றுவடிவம் கொண்டு ஓடியுய்ந்ததை உணர்த்தியவாறு. தக்கன் வேள்வியில் இவ்வாறே இந்திரன் வீரபத்திரர்க்கு அஞ்சி வேற்றுருத்தாங்கி ஓடியுள்ளான் என்பதை:-

''புரந்தர னாரொரு பூங்குயிலாகி மரந்தனி லேறினா ருந்தீபற
வானவர் கோனென்றே யுந்தீ பற''

(திருவாசகம்-திருவுந்தியார்-9)

என்பதால் அறியலாம். தக்கன் வேள்வியில் குயிலான இந்திரன் இங்கு மருத்தன் வேள்வியில் (இரா்வணனுக்கு அஞ்சி) மயிலானான் என்க. (உஉ)

### வேள்வித் தலைவனாகிய மன்னனை நோக்கி இராவணன் கூறத்தொடங்குதல்

351 மற்றை யவரெல்லா மாய வுருவங்கொண்
டுற்ற திசைதிசையே யோட வுயர்நியமம்
பற்றி யிருந்தபார் மன்னன் றனைநோக்கி
கொற்றம் புரிமனத்துக் கோளரக்கன் கூறுவான்.

மற்றையவர் எல்லாம் மாய உருவம் கொண்டு
உற்ற திசை திசையே ஓட உயர்நியமம்
பற்றி யிருந்த பார்மன்னன் தனை நோக்கி,
கொற்றம் புரி மனத்துக் கோள்அரக்கன் கூறுவான்.

பொ : மற்றவர்கள் யாவரும் மாயஉருவங்களை மேற்கொண்டு தத்தமக்குப் பொருந்திய திசைகளிலே ஓடிவிட, உயர்ந்த நியமத்தை மேற்கொண்டு ஓடாதிருந்த மருத்தனாகிய மன்னனைப் பார்த்து, வெற்றியை விரும்புகின்ற மனத்தையுடைய வலிய அரக்கனாகிய இராவணன் கூறுவானானான்.

கு: உற்றதிசை என்றது, தமக்குப் பொருத்தமான திசையை. திசை திசை என்ற அடுக்குப் பன்மையுணர்த்தியது. நியமம்-நியதி. ஓடலாகாது என்ற உயர்ந்த நியதியை மேற்கொண்டிருந்தான் என்பார், 'உயர்நியமம் பற்றியிருந்த பார் மன்னன்' என்ருர். கொற்றம்-வெற்றி புரிதல்-விரும்புதல். கோள்-வலிமை பார் - மன்னன் என்றது, மருத்தன் என்ற மன்னனை. (உரு)

இராவணன் சொல்லியது

352. தோற்றே னுனக்கென்று
சொல்லுதிநீ சொல்லாயேல்
ஆற்றலி னென்னோ
டமர்பொரவா வென்றுரைப்பக்
சீற்றமிகு மன்னனீ யாரே
யெனச் செப்பக்
கூற்ற மனையோ
னகைத்தினைய கூறுவான்

**தோற்றேன் உனக்கு என்று சொல்லுதி நீ; சொல்லாயேல்**
**ஆற்றலின் என்னோடு அமர்பொர வா! என்று உரைப்ப,**
**சீற்றம் மிகும் மன்னன் 'நீ யாரே?' எனச் செப்ப,**
**கூற்றம் அனையோன் நகைத்து, இனைய கூறுவான்.**

பொ: நீ, "தோற்றுவிட்டேன் உனக்கு" என்று (என்னிடம்) சொல்; அவ்வாறு சொல்லவில்லையானல், வலிமையினுல் என்னோடு போர் புரிய வா!" என்று இராவணன் சொல்ல, கோபமிக்க மன்னவனுகிய மருத்தன், நீ யார்? என்று கேட்க, எமனை ஒத்தவனுகிய இராவணன் சிரித்து இதனைச் சொல்லுவானுனன்.

கு: மருத்தன் சொல்லவேண்டிய தொடரை இராவணனே சொல்லிக் காட்டியவாறு 'தோற்றேன் உனக்கு' என்று மருத்தன் இராவணனனை நோக்கிக் கூறவேண்டும் என்றவாறு. ஆற்றல்-

வலிமை. சொல்லல் எளிதாதலும், அமர் செய்தல் கடினமாதலும் நோக்கி முன் எளிய வழியைக் கூறி அங்ஙனம் சொல்லவில்லை யென்றால் என்னோடு அமர் புரியும் கடுமையான வழியைப் பின் பற்றுக என்றவாறு. இவ்வாறு அகங்காரத்தோடு பேசுகின்றவன் யார் என்று ஐயம் தெளிதற்பொருட்டு 'நீ யாரோ!' என மன்னன் வினவினான் என்க. செப்புதல் இங்கு வினவுதலையுணர்த்தியது. நகைத்தல் எள்ளுதல் பற்றி வந்தது; தன்தலைகளைக் கொண்டே யார் என்று அறியலாயிருக்க, அங்ஙனம் உய்த்துணராது 'நீயாரே, என்று வினவுவது அறியாமையை யறிவிக்கும், என்று குறிப்பால் நகைத்தான் இராவணன். (உச)

### இராவணன் சொன்னவிடை

353. மன்னன் குபேரனைமுன்
வாளமரிற் போர்வென்று
பொன்னின் விமானமாம்
புட்பகமுங் கைக்கொண்ட
என்னை யறியாயோ
வென்ன விறையுனக்கு
முன்னவனைப் போர்வென்ற
மூர்க்கனே தானென்றான்.

'மன்னன் குபேரனைமுன் வாள்அமரில் போர்வென்று
பொன்னின் விமானமாம் புட்பகமும் கைக்கொண்ட
என்னை அறியாயோ? என்ன, இறை, உனக்கு
முன்னவனைப் போர்வென்ற மூர்க்கனேதான்' என்றான்.

பெர்: மன்னவனாகிய குபேரனை முன்பு வாட்போரில் வென்று பொன்னாலியன்ற புட்பகவிமானத்தையும் அவ்வெற்றி யின் பயனாகக் கைப்பற்றிய இராவணனாகிய என்னை அறிந்திலையோ? என்று கூற, அரசனாகிய மருத்தன், உனக்கு முன்னவனாகிய குபேரனைப் போரில் வென்ற மூர்க்கனே நீ என்று இகழ்ந்து கூறினான்.

**கு :** இராவணன் தன் வெற்றிகளில் குபேரனை வென்று புட்பகவிமானத்தைக் கைப்பற்றியதே தலைமையானது. ஆகலின், அதனைக்கூறித் தன்னை புலப்படுத்திக்கொண்டான் என்க. இறை என்றது, மருத்தனுகிய மன்னவனை. அண்ணன் என்ற முறையையும் பாராது குபேரனை இராவணன் போரில் வென்றது பண்பற்ற செயலாதலின் 'முன்னவனைப் போர்வென்ற மூர்க்கனே' என்று இகழ்ந்தான். மூர்க்கன்-மூடத்தன்மையன்; கோபக்காரன். (உரு)

### மருத்தனுக்குப் புரோகிதன் புகன்றது
### வேறு

354\. என்றுரைத் தெரியிற் பொங்கி
யெழுந்தமர் புரிய நீதிப்
புன்றொழில் கடிந்த வந்தப்
புரோகித னவனை நோக்கித்
துன்றிய திறலோய் நீமுன்
தொடங்கிய மகமுற் றுது
குன்றிய வினைய தாகிற்
கொல்லுநின் குலத்தை யென்றான்.

என்று உரைத்து எரியின் பொங்கி
எழுந்து அமர் புரிய, நீதிப்
புன்தொழில் கடிந்த அந்தப்
புரோகிதன், அவனை நோக்கி,
துன்றிய திறலோய்! நீமுன்
தொடங்கிய மகம் முற்றுது,
குன்றிய வினையது ஆகின்
கொல்லும் நின் குலத்தை என்றான்.

**பொ :** என்று இராவணனை இகழ்ந்து சொல்லி, நெருப்புப் போலக் கோபம் பொங்கி எழுந்து அவனேடு போர்புரியத் தொடங்க, நீதியையுடையனுய்ப் புல்லிய செயல்களைத் தன்னிடம் நிகழாதபடி நீக்கி யொழுகுகின்ற அந்தப் புரோகிதன், அந்த

மருத்தனை நோக்கி, நெருங்கிய திறமையுடையவனே! நீ முன்பு தொடங்கிய வேள்வி, முற்றுப்பெறாது குறைபட்ட செயலது ஆனால், அந்த வேள்வி நின்குலத்தை அழித்துவிடும்' என்று கூறினான்.

கு: கோபம் மிகுதற்கு எரியை உவமை கூறுதல் மரபு ஆகலின் 'எரியின் பொங்கி' என்றார். நீதிப் புரோகிதன்-புன் தொழில் கடிந்த அந்தப் புரோகிதன் எனத் தனித்தனி இயையும். அமர் புரியத் தொடங்கினால் முன் தொடங்கிய மகம் முற்றாது குன்றிய வினையதாகும்; அங்ஙனம் ஆனால், அக்குறைபட்ட வேள்வி நின் குலத்தைக் கொல்லும் என்பது புரோகிதன் செவி யறிவுறூஉ. புரோகிதன் என்பான் இங்கு வேள்வியை நடத்த வழிகாட்டுபவன். இராவணனோடு போர் செய்யாமையால் நின் திறமை தோன்றாமற் போகாது என்ற கருத்துத் தோன்ற 'துன்றிய திறலோய்' என விளித்தான். கொல்லுதல் இங்கு அழித்தலை யுணர்த்தியது. முன் தொடங்கிய மகத்தை முற்றுப்பெறச் செய் யாது, போரைத் தொடங்குதல் கூடாது என்பது புரோகிதர் குறிப்பு. (உரு)

இந்திரன் மயிலை நோக்கிக் கூறியது

355. அன்னவ னறையக் கேட்ட
வரசர்கோ னமர்கை விட்டு
வன்னிசார்ந் திருப்பக் கண்டு
மாமக மடைய நூறி
என்னது வெற்றி யென்றாங்
கிராவண னேகத் தேவர்
மன்னவன் பிழைத்தே னென்றோர்
மயிலினை நோக்கிக் கூறும்.

அன்னவன் அறையக்கேட்ட
அரசர்கோன், அமர்கைவிட்டு,
வன்னி சார்ந்திருப்பக்கண்டு,
மாமகம் அடைய நூறி,

என்னது வெற்றி என்றுங்கு
இராவணன் ஏக, தேவர்
மன்னவன் 'பிழைத்தேன்' என்று ஓர்
மயிலினை நோக்கிக் கூறும்.

பொ: அந்தப் புரோகிதன் அவ்வாறு சொல்லக்கேட்ட அரசர் கோனாகிய மருத்தன் போர்செய்தலை விடுத்து வேள்வித் தீயைச் சார்ந்து இருப்பக் கண்டு அந்த வேள்வித்தீயை முழுதும் அழித்துவிட்டு இராவணன், 'வெற்றி என்னதே' என்று கூறிக் கொண்டு செல்லா நிற்க, தேவர்க்கு அரசனாகிய இந்திரன் உயிர் பிழைத்தேன் என்று மகிழ்ந்து அங்கிருந்த ஒரு மயிலை நோக்கிச் சொல்லுவான்.

கு: அன்னவன் என்றது புரோகிதனை. அறைதல்-சொல்லுதல் அரசர்கோன் என்றது, மருத்தனாகிய மன்னவனை. புரோகிதன் கூறியபடி வேள்விமுடிக்கும் குறிக்கோளுடன் இராவணனோடு போர் செய்யாது வேள்வித்தீயின் அருகில் இருந்தானாக, அதுகண்ட இராவணன் அந்த வேள்வியை அழித்துவிட்டு, 'என்னதே வெற்றி' என்று ஆரவாரம் செய்துகொண்டு போய்விட்டான் என்றவாறு. வன்னி-நெருப்பு. மருத்தன் இராவணனை எதிர்த்துப் போர்செய்யாது வேள்வியைச் சார்ந்ததே தனக்கு அஞ்சிய நிலையைக் குறிக்கும் என்ற கருத்தால் இராவணன் 'என்னது வெற்றி' என்று ஏகுவானானான். இராவணன் சென்றது அறிந்த இந்திரன் இனி உய்ந்தோம் என்ற கருத்தால் 'பிழைத்தேன்' என்று மகிழ்ந்தான். மயில்வடிவு தாங்கி இந்திரன் உய்ந்தமையினால் அந்த மயிலிடம் நன்றியுடையவனாய் சில சொல்லுகிறான். சொல்லியது வருஞ்செய்யுளில் காணலாம், (உஎ)

356. தீயவல் லரக்கன்சீறத் திகழுநின்
னுருவங் கொண்டு
போயுயிர் பெற்றேனின்ற
புகழினாய் புவனத் தன்னில்

ஒய்விலா மாரி பெய்ய
வுவகையு மென்னைப் போல
ஆயிரங் கண்ணு முண்டா
கென்றன னமரர் கோமான்.

**தீயவல் அரக்கன் சீறத் திகழும் நின் உருவம் கொண்டு**
**போய் உயிர் பெற்றேன்; நின்ற புகழினுய்! புவனம் தன்னில்**
**ஒய்விலா மாரி பெய்ய உவகையும், என்னைப்போல**
**ஆயிரம் கண்ணும் உண்டா கென்றனன் அமரர் கோமான்.**

பொ: தீயனவே செய்யும் அரக்கனுகிய இராவணன் கோபித்துவர, (அஞ்சி) விளக்கமுடைய நினது உருவை மேற் கொண்டுஓடி உயிர்பெற்றேன். 'நிலைபெற்ற புகழையுடையாய்! பூமியில் ஒய்விலாமல் மழைபெய்யாநிற்க அதுகண்டு மகிழும் மகிழ்ச்சியும் என்னைப்போல ஆயிரம் கண்களும் உண்டாவதாக' என்று வரங்கொடுத்தான் தேவர்கட்கு அரசனுகிய இந்திரன்.

கு: அமரர் கோமான், என்றனன் என இயையும், மயில் தன்கண்முன் பட்டமையால் அதுபோல உருவுகொள்ளும் எண்ணம் இந்திரனுக்கு உண்டாயிற்று. ஆதலின், அச்சிறிய உதவி நினைந்து இந்திரன் மயிலுக்கு மாரிபெய்யக் காணின் உவகையும் தோகையில் கண்போலக் காணப்படும் மயிற்கண்கள் ஆயிரமும் உண்டாகுமாறு வரம்கொடுத்தான் என்றவாறு. மயிலுருவமே தன்னையுய்வித்தது என்பது இந்திரனுடைய எண்ணம். மயில் மழைபெய்ய மகிழும் இயல்பினது ஆதலை ''கருங்குயில் கையற, மாமயிலாலப், பெருங்கலிவானம் உரறும்'' (கார் நாற்பது-16) என்பதால் அறியலாம். மயிலின் தோகையில் உள்ள வண்ணப்புள்ளிகளைக் கண்களாகக் கூறுதல் உண்டு என்பதை: ஓடாநின்ற களிமயிலே!...... தேடா நின்ற வென்னுயிரைத் தெரியக் கண்டாய் சிந்தையுவந்து ஆடாநின்ருய் ஆயிரங்கண் உடையாய்க்கு ஒளிக்கு மாறுண்டோ?'' (கிட்கிந்-பம்பைப்- 26) என்ற இராமன் சொல்லால் தெளியலாம். இந்திரன் கௌதமரின் சாபத்தால் உடம்பெல்லாம் ஆயிரம் கண்களைப்

பெற்றமை பாலகாண்டத்து அகலிகைப்படலத்தால் அறியலாம். இந்திரன் தனக்கு ஆயிரங் கண்கள் இருத்தல்போலவே தான் உய்யவழி செய்த மயிலும் ஆயிரங்கண்கள் பெற்றுத்திகழ வரம் அருளினன் என்க. (உஅ)

எமன் காக்கையை நோக்கிக் கூறுதல்

357. வனத்திலோர் காக்கை கண்டு
மன்னுசீ ரியமன் கூறும்
உனக்கொரு கொலைநோ யின்றி
யுலகத்தி லிறந்தோர் தம்மை
நினைத்துனை யூட்ட வன்னோர்
மகிழநீ ணிலத்தில் வாழும்
அனைத்துயிர் களினுந் தீர்க்க
வாயுவுண் டாகவென்ருன்.

வனத்தில் ஓர் காக்கை கண்டு மன்னுசீர் இயமன் கூறும்: "உனக்கு ஒரு கொலை நோய் இன்றி உலகத்தில் இறந்தோர் தம்மை நினைத்து உனை ஊட்ட, அன்னோர் மகிழ நீள் நிலத்தில் வாழும் அனைத்து உயிர்களினும் தீர்க்க ஆயு உண்டாக' என்ருன்.

பொ: காட்டில் ஒரு காக்கையைக் கண்டு நிலைபெற்ற சிறப்புடைய எமன் சொல்லுகின்ருன்: (காக்கையே!) உனக்குக் கொலையோ நோயோ ஒன்றும் இல்லாமல் இருப்பதோடு உலகத்தில் இறந்தவர் தம்மை நினைத்து உனக்கு உணவினை ஊட்டுதலால் அந்தப் பிதிரர் மகிழ்ச்சி யடைய, அதனால் பெரிய பூமியில் வாழும் எல்லா உயிர்களினும் நினக்கு நீண்ட ஆயுள் உண்டாவதாக என்று வரம் கொடுத்தான்.

கு: காக்கையின் வடிவம் தாங்கி எமன் இராவணனிட மிருந்து தப்பினன் ஆகலின், அவ்வாறு உய்திகொடுத்த காக்கை வடிவத்திற்கு நன்றி செலுத்தும் கடப்பாட்டில் இங்ஙனம் வரங்

கொடுத்தான் என்க. காக்கை, மக்களோடு வாழும் எளிய பறவையாதலின் அதனைப் பெரும்பாலும் யாரும் கொல்வதில்லை; காக்கைக்கு நோயும் வருவதில்லை. எமன் வரத்தினால்தான் இங்ஙனம் உள்ளது காக்கையினம் என்பதை உணர்தல் வேண்டும். கொலை நோய் என்பது உம்மைத்தொகை; கொலையும் நோயும் எனவிரியும். இறந்தவருக்கு இறுதிக்கடன் செலுத்துவோர் காக்கைக்கு உணவூட்டுவதும் காக்கை உண்டால் இறந்தோர் உண்டதாகக் கொண்டு மகிழ்தலும் எமன் வரத்தால் ஆனவையே என்றவாறு", "உயர்ந்தோ னேந்திய வரும்பெறற் பிண்டம், கடுங்கட் பேய்மகள் கைபுடையூ நடுங்க, மரபிற், கருங்கட் காக்கையொடு பருந்திருந்தார" (பதிற்றுபத்து 30) என்ற அடிகளில் எறும்பும் மொய்க்காமல், கடுங்கண் பேயும் தொடமுடியாமல் நடுங்குதற்குக் காரணமாயிருந்த பிண்டத்தைக் கருங்கண் காக்கை அமைதியாக இருந்து அருந்தும் நிகழ்ச்சி கூறப்பட்டிருத்தல் காணலாம். (உகூ)

### வருணன் அன்னத்திற்குக் கூறுதல்

358. பாலைநீ ரொழிய வுண் ணும்
பறவையை வருணன் கண்டுன்
கோலநீ டுருவமெய்யைக்
கொண்டுநான் பிழைத்துப்போந்தேன்
மேலைநான் முகத்தி னுனுக்
கூர்தியாய் விளங்கும் வெள்ளை
வாலிதா நிறமுமாகி
வாழுதியாக வென்முன்.

பாலை நீர்ஒழிய உண்ணும் பறவையை வருணன் கண்டு, உன் கோல நீடு உருவமெய்யைக் கொண்டுநான் பிழைத்துப் போந்தேன் மேலை நான்முகத்தினுனுக்கு ஊர்தியாய் விளங்கும் வெள்ளை வாலிது ஆம் நிறமும் ஆகி வாழுதியாக, என்முன்.

பொ: நீர் ஒழியப் பாலைப்பிரித்துண்ணும் இயல்பையுடைய அன்னப்பறவையை வருணன் பார்த்து, 'நான், உனது அழகிய உருவத்தையுடைய உடம்பை தாங்கிக் கொண்டு இராவணனிடத்திருந்து பிழைத்து வந்தேன்; ஆதலால், (அதற்கு கைம்மாருக) மேலுலகத்தில் (பிரம லோகத்தில்) உள்ள பிரமனுக்கு வாகனமாய் விளங்கும் பேறும்;வெள்ளை யாகிய தூயநிறமும் உடையையாகி வாழ்வாயாக' என்று வரங்கொடுத்தான்.

கு: பாலை நீர் ஒழிய உண்ணும் பறவை என்றது அன்னப் பறவையை. ''தெள்ளிதின் ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீ ரொழியப் - பாலுண்குருகில் தெரிந்து' (நாலடியார் - கல்வி-5) என்புழியும் அன்னத்திற்கு இவ்வியல்பு கூறப்பட்டிருத்தல் காணலாம். 'மேலை' என்றது, பிரம உலகத்தை. ஊர்தி- வாகனம். (௩௰)

359. பொானனிறச் செல்வன் கோம்பி
போவதைப் போற்றிக்கூறும்
என்னிற வதனைக் காத்தோய்க்
கெதிருப கார முன்டோ
மின்னுற விளங்கும் பூணாய்
வேண்டுவேண் டுருவ மாகி
உன்னிற மெல்லாம் செம்பொன்
ஞெளிநிற மாகவென்றான்.

பொன்நிறச் செல்வன் கோம்பி போவதைப் போற்றிக் கூறும்,
'என் இறவு அதனைக் காத்தோய்க்கு எதிர் உபகாரம் உண்டோ?
மின்னுற விளங்கும் பூணாய்! வேண்டு வேண்டு உருவம் ஆகி,
உன் நிறம் எல்லாம் செம்பொன் ஒளி நிறம் ஆக, என்றான்.

பொ: மின்னொளி பொருந்த விளங்கு ஆபரணமணிந்த இராம! பொன்னிறமுடைய செல்வனாகிய குபேரன் பச்சோந்தி போவதைப் பார்த்துச் சொல்வான். (கோம்பி!) என்னுடைய

மரணத்தை வராமல் காத்த உனக்கு எதிராகச் செய்யும் உதவியும் உண்டோ? நீ வேண்டிய உருவமுடையை யாகி, உனது நிறமுழுமையும் செம்பொன்னின் ஒளிவாய்ந்த நிறம் ஆவதாக என்று வரங் கொடுத்தான்.

கு: மின்னுற விளங்கும் பூணுய்! என்றது, அகத்திய முனிவர் இராமனை விளித்தது. போற்றுதல் என்பது ஓர்ந்து அறிதலை இறவு-இறப்பு-மரணம். காத்தோய்க்கு என்பது முன்னிலை வினை யாலணையும் பெயர் நான்கனுருபு ஏற்று நின்றது. உயிர் காத்தலினும் சிறந்த உதவி இலது ஆதலின் 'எதிர் உபகார முண்டோ? என வினவலானுன். விரும்பிய நிறத்தைப் பெற்று விளங்குவதால் கோம்பி இன்னநிறத்தது என்று சொல்லஇயலாத நிலையுண்டாயது. ஆயினும், அதற்கு உரிய நிறம் செம்பொன் நிறம்தான் என்று குபேரன் கூறியவாறு. கடவுளின் தன்மையைப் பல சமயத்தவர்களும் பலவகையாகக் காணுதல் போலப் பச்சோந்தியும் பலர்க்கும் பல நிறமாகக் காட்சிதரவல்லது. குபேரன் தன்னிறம் பொன்னிறம் ஆதலின், தனக்குதவிய பொன்னெளி நிறம் ஆக, எனவரம் கொடுத்தான். (௩௧)

**இந்திரன் முதலோர் மகமுடித்துப் போக**
**இராவணன் அயோத்திக்குப் போதல்**

360. இந்திரன் முதலா யுள்ளோ
 ரிவ்வகை வரங்க ளீந்து
வந்துமன் னவனே டந்த
 மகத்தினை முடித்துப் போனர்
வெந்திற லரக்கன் பாரி
 லெதிர்ந்தவர் தம்மை யெல்லாம்
அந்தகன் புரத்தி னேற்றி,
 யயோத்திமா நகரஞ் சார்ந்தான்.

**இந்திரன் முதலாய் உள்ளோர், இவ்வகை வரங்கள் ஈந்து வந்து, மன்னவனேடு அந்த மகத்தினை முடித்துப் போனர்;**

**வெந்திறல் அரக்கன் பாரில் எதிர்ந்தவர் தம்மை எல்லாம்**
**அந்தகன் புரத்தின் ஏற்றி, அயோத்தி மாநகரம் சார்ந்தான்.**

பொ: இந்திரன் முதலிய தேவர்கள் மயில் முதலியவற்றிற்கு இத்தகைய வரங்களைக் கொடுத்துவந்து, மருத்தன் ஆகிய மன்னவனோடு சேர்ந்து அந்த வேள்வியை முடித்துத் தத்தம் இடங்கட்குப் போனார்கள்; கொடிய வலிமையையுடைய இராவணன் பூமியில் தன்னை எதிர்த்தவர்களை யெல்லாம் எமபுரத்திற்கு ஏற்றிவிட்டு அயோத்தி மாநகரத்தை அடைந்தான்.

கு: மன்னவன் என்றது மருத்தனை. அந்தகன் புரத்தின் ஏற்றுதலாவது கொல்லுதல். இராவணன் திக்கு விசயம் செய்கின்றானாகலின் பலநாடுகளுக்கும் சென்று அங்குள்ளோரோடு பொருது வென்று பின்பு அயோத்திக்கும் போனான் என்க. (௩௨)

### அனரண்ணியனிடம் இராவணன் கூறுதல்

361. எம்மாலு மிருக்காலு
மொருக்கா வுணரிமையோர்
தம்மாலு மொருக்காலு
நினைக்குந் தரமல்லோய்
இம்மா நகரனரண்ணிய
னென்போ னினிதாள்வான்
அம்மா நிலமன்னற்கிவை
யுரைத்தா னடலரக்கன்

**எம்மாலும் இருக்காலும் ஒருக்கா உணர் இமையோர்**
**தம்மாலும் ஒருக்காலும் நினைக்கும் தரமல்லோய்!**
**இம்மா நகர் அனரண்ணியன் என்போன் இனிதாள்வான்**
**அம்மா நில மன்னற்கு இவைஉரைத்தான் அடல் அரக்கன்.**

பொ: (முனிவர்களாய) எம்மாலும், இருக்கு முதலிய நான் மறைகளாலும், மனத்தை ஒருமைப்படுத்தி உணர்கின்ற தேவர்

களாலும், ஒருமுறையும் அறுதியிட்டு இத்தன்மையன் என்று நினைக்கும் தன்மையன் அல்லாதவனே! இந்த அயோத்தி மாநகரில் அனரண்ணியன் என்ற பெயருடையவனும் இனிதாக ஆளுகின்றவனும் அழகிய பெருநில மன்னனும் ஆகிய அவனுக்கு வலிமையுடைய இராவணன் இவற்றைச் சொன்னான்.

கு: அகத்திய முனிவர் இராமனை நோக்கி விளித்துக் கூறுவதாகலின் 'எம்மாலும்' என ஏனைய முனிவர்களையும் உளப்படுத்திக் கூறியுள்ளார். இறைவனைக் காண்பதற்கென்றே தவம்புரிகின்ற எம்மாலும் நினைக்குந் தரமல்லோய் என உம்மையை உயர்வுச் சிறப்பும்மையாக்குக. இனி, எம்மாலும், இருக்காலும்' இமையோர்தம்மாலும் நினைக்குந்தரமல்லோய்! என எண்ணும்மையாகவும் உரைத்தல் வேண்டும். இறைவனை நினைப்பதில் தலைமையானவர்கள் முனிவர்களே யாதலின், 'எம்மாலும்' எனவும் முனிவர்கட்கும் ஞானத்தை யூட்டவல்ல பெருமை இருக்கு முதலிய வேதங்களுக்கு இருத்தலின் அடுத்து 'இருக்காலும்' எனவும், அவ்வேதத்தில் சொல்லப்படுகின்ற பெருமையுடையவர்களாய் மனத்தை ஒருமைப்படுத்தி இறைவனையுணர முயல்கின்றவர்கள் தேவர்களாதலின், இருக்கினையடுத்து 'இமையோர் தம்மாலும்' எனவும் முறை தெரிந்தோதினார் என்க. 'ஒருக்காலும் நினைக்கும் தரமல்லோய் என்றது, இவன் இவ்விடத்திவ்வியல்பினனே என ஒருக்காலும் அறுதியிட்டு நினைக்க இயலாத இறைவனாகிய இராமனே என்றவாறு. 'இம்மாநகர்' என்று அகத்தியர் அயோத்தியைச் சுட்டிக்காட்டிக் கூறுகின்றார். அயோத்தி நகரில் இருந்துகொண்டு இனிதே யாட்சி செய்கின்ற அழகிய பெருநில மன்னனாகிய அனரண்ணியனுக்கு என்க. அரக்கன் என்றது இராவணனை. (௯௯)

இராவணன் கூறியது

362. போரஞ்சின னுனக்கென் னுதல்
போர்செய்குதல் செய்கென்
றீரஞ்சின னெனவிஞ்சொளி
முடியோனிவை யியம்ப

வீரஞ்சின மிகுமன்னவன்
மேகங் குமுறிடமைச்
சீரஞ்சிறை மயிலாலிய
திருநாடனீ துரைக்கும்.

**'போர் அஞ்சினன் உனக்கு' என்னுதல், போர்செய்குதல், செய்(க) [என்று ஈர்அஞ்சுஇனன் என விஞ்சு ஒளி முடியோன் இவை இயம்ப,**
**வீரம் சினம் மிகுமன்னவன் – மேகம் குமுறிட மைச்**
**சீர்அம்சிறை மயில்ஆலிய திருநாடன் ஈது உரைக்கும்**

பொ : உன்னோடு போர்செய்ய அஞ்சினேன்; என்று சொல்லுதல் அல்லது போர்செய்தல் (இவற்றில் ஒன்றினைச்) செய்க; என்று பத்துச் சூரியர்களைப் போல மிக்க ஒளிவீசுகின்ற பத்து முடிவுகளையணிந்த இராவணன் இவற்றைச் சொல்ல,வீரமும் கோப மும் மிக்க மன்னவனாகிய – மேகம் இடியிடித்திடக் கரிய சிறந்த அழகிய சிறகுகளையுடைய மயில் மகிழ்ச்சியால் ஆடுகின்ற அழகிய கோசல நாட்டையுடைய அனரண்ணியன் இதனைச் சொல்வான் ஆனான்.

கு : உன்னோடு என்பது உனக்கு என உருபு மயக்கமாக வந்தது. 'உன்னோடு போர்செய்ய அஞ்சினன்' என்று சொல்லுதல் அல்லது 'போர்செய்தல் இவற்றில் ஒன்றினைச் செய்க என இராவணன் அனரண்ணியனை வற்புறுத்தினன் என்க. விஞ்சு ஒளி மிகக் தாகிய ஒளி. வீரம் சினம் என்பது உம்மைத் தொகை. வீரமும் சினமும் என விரியும். மன்னவன் திருநாடன் என்பன ஒரு பொருள்மேல் வந்த பலபெயர்கள். மன்னவனாகிய திருநாடன் என இரு பெயரொட்டாக்குக. மேகங்குமுறிட மைச்சீர் அஞ்சிறைமயில் ஆலிய திருநாடு என்பது கருத்துடையடை கொளியணி. மேகங் களின் குமுறுதலுக்கு அஞ்சி நடுங்காது மயில் மகிழ்ந்தாடுகின்ற நாடன் எனவே இராவணனுடைய ஆரவாரமொழிகளுக்கு அஞ்சாது மகிழ்ந்து போரினை வரவேற்கும் இயல்புடையன் அனரண்ணியன் என்ற கருத்துக் காண்க. ஆலுதல் – ஆடுதல். இனன்–சூரியன்

(௬௪)

அனரண்ணியன் போர் 35–37

363. திருவோங்கிய விம்மா நக
ரரசாண்டவர் தீயோய்
ஒருவோங்களுங் கேளாதசொல்
லுரைத்தாயெனே யினிநாம்
இருவேம் பொர விடுவெம்படை
யிடை வந்தமர் பொருத
பொருவேம்செரு வெனலும்புடை
புறப்பட்டது படையே.

திருஓங்கிய இம்மாநகர் அரசாண்டவர், தீயோய்!
ஒருவோங்களும் கேளாதசொல் உரைத்தாய் எனே; இனி நாம்
இருவேம் பொர விடுவெம்படை இடைவந்து அமர்பொருத,
பொருவேம் செரு; எனலும், புடை புறப்பட்டது படையே,

பொ: 'கொடியோனே! செல்வத்தால் சிறந்த இந்த அயோத்தி மாநகரில் அரசாண்டவர்களில் ஒருவரும் கேளாத சொல்லைச் சொன்னாய் என்னிடத்து; இனி நாம் இருவரும் போர் செய்வதற்காக விடுகின்ற கொடிய சேனை நடுவே வந்து போர் செய்யா நிற்க, நாம் போர்புரிவோம்' என்று சொன்னவுடனே சேனை பக்கங்களில் வந்து சேர்ந்தது.

கு: இம்மாநகரம் என்று சுட்டியது அயோத்தியை. அரசாண்டவர் எவரும் கேளாத சொல் என்றது, 'போரஞ்சினன் உனக்கு' என்னும் சொல்லை. எனே என்பது என்னிடத்து என ஏழாவதன் பொருட்கண் வந்தது; வேற்றுமை மயக்கம். 'நம் இருதிறத்தார் படையும் நம் பக்கலில் நின்று போர்செய்யா நிற்க, நாம் போர் செய்வோம், என்று அனரண்ணியன் கூறினான் என்க. புடை-பக்கம் புறப்பட்டது என்பது சேர்ந்தது என்னும் பொருளில் வந்தது. (௩௫)

364. பாழிப்புயத் தரக்கன்பொரு
படையின்கரி பரியும்
ஆழிப்பெருந் தேராண்மிடை
யனரண்ணியன் படையும்
ஊழிக்கன லெனவொன்றிட
வுறுசேனையை யரக்கன்
நூழிற்படச் சோரிக்கணை
நூறாயிரம் சொரிந்தான்.

பாழிப்புயந்து அரக்கன் பொரு படையின் கரி பரியும்,
ஆழிப் பெருந்தேர் ஆள்மிடை அனரண்ணியன் படையும்,
ஊழிக்கனல் என ஒன்றிட உறுசேனையை அரக்கன்
நூழில்படச் சோரிக்கணை நூறு ஆயிரம் சொரிந்தான்.

பொ: வலிய தோள்களையுடைய இராவணனது போர்புரியும் சேனையில் உள்ள யானைகளும் குதிரைகளும், சக்கரத்தோடுங் கூடிய பெரிய தேர்களும் ஆண்மைமிக்க வீரர்களும் நிறைந்த அனரண்ணியனது சேனையும் கடையூழிக் காலத்து அழிக்கும் நெருப்புப் போலச் சினந்து நெருங்கிப் போர் செய்யா நிற்க, இராவணன் இரத்தம் கக்கும் கணைகளை நூறு ஆயிரமாகச் சொரிந்தான்.

கு: பாழி வலிமை. வெள்ளிமலையையள்ளி யெடுத்த வலிமை புலப்படப் பாழிப்புயத்தரக்கன் என்றார். ஆழி-தேர் உருளை. ஆள் – வீரர்கள். மிடை–நெருங்கிய. இராவணன் சேனையும் அனரண்ணியன் சேனையும் உகாந்த காலத்து நெருப்புப்போலச் சினந்து நெருங்கிப் போர்செய்யாநிற்க அவ்விருவரில் இராவணன், இரத்தம் கக்கும் நூறாயிரம் கணைகளை அனரண்ணியின் சேனையின் மேல் சொரிந்தான் என்றவாறு. ஒன்றிட என்றது போர் செய்ய நெருங்க என்றவாறு. நூழில்–பொடி. வீரர்களின் மார்பகங்களில் நுழைந்து செல்வதால் கணைகள் சோரி கக்குவனவாயின. (௩௬)

365. ஆனைப்பரி தேராண்மிடை
யளவற்றன பெரும்போர்த்
தானைக்கடல் பாழாகிடத்
தரியாதவன் சலியா
மானத்தின னனரண்ணியன்
வளைவாளெயிற் றினன்மேல்
சோனைப் பெரு மாரிக்கணை
சொரிந்தான்மன மெரிந்தான்.

ஆனைப்பரி தேராண்மிடை அளவுஅற்றன பெரும்போர்த்
தானைக்கடல் பாழாகிடத் தரியாதவன் சலியா
மானத்தினன் அனரண்ணியன், வளைவாள் எயிற்றினன்மேல்
சோனைப் பெருமாரிக்கணை சொரிந்தான் மனம் எரிந்தான்.

பொ: யானையும் குதிரையும் தேரும் காலாளும் நெருங்கிய அளவில்லாதனவாகிய பெரிய போரினைச் செய்ய வல்ல சேனையாகிய கடல், இராவணன் விட்ட அம்புகளால் அழிந்து பாழாகிடக் கண்டு தரியாதவனாகிய, தளராத மானத்தினுடைய அனரண்ணியன், மனம் கொதித்து வளைந்த வாள்போன்ற பற்களையுடைய இராவணன் மேல் விடாப் பெருமழை போன்ற அம்புகளைச் சொரிந்தான்.

கு: ஆனைப்பரிதேர் ஆள் மிடை தானை, அளவற்றனவாகிய பெரியபோர்களைச் செய்யவல்ல தானை, எனத்தனித்தனி இயையும் தானைக்கடல் என்பது உருவகம். மிடைதல்-நெருங்குதல். தரியாமை -பொறுக்கவியலாமை. தரியாதவன் -மானத்தினன் அனரண்ணியன் என்க. தரியாதவனும் மானத்தினனுமாகிய அனரண்ணியன் என்றவாறு, சலியாமை தளராமை. மானம் ஆவது, எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும் தெய்வத் தாற்றாழ்வு வந்துழி உயிர்வாழாமையும் ஆம். வளைவாள் எயிற்றினன் என்றது இராவணனை. சோனைமாரி விடாத பெரு மழை. மாரி போன்ற கணை என உவமைத்தொகை யாக்குக

அனரண்ணியன் மனமெரிந்தவனுய்க் கணைசொரிந்தான் என இயையும். மனமெரிதலாவது, மனம் கொதித்தல். (௩௭)

**இராவணன் அனரண்ணியனைக்**
**கையால் வீழ்த்திச் சொல்லியது 38,39**

366. வீரச்சிலை யனரண்ணியன்
விடுவாளிகள் வெய்யோன்
மார்பத்திடை யறத்தைக்கவு
மதியாதுவந் தடர்ந்துப்
பாரப்பணைக் கரத்தாலவன்
பதைப்பப்புடைத் தாவி
சோரத்துய ருறுவான்றனை
முகநோக்கினன் சொல்லும்.

**வீரச்சிலை அனரண்ணியன் விடு வாளிகள், வெய்யோன் மார்பத்திடை உறத்தைக்கவும் மதியாது, வந்து அடர்ந்துப் பாரப்பணைக் கரத்தால் அவன் பதைப்பப் புடைத்து, ஆவி சோரத் துயர் உறுவான்தனை முகம் நோக்கினன், சொல்லும்.**

பொ: வீரம்பொருந்திய வில்லை யேந்திய அனரண்ணியன் விட்ட அம்புகள் கொடியவனுகிய இராவணனது மார்பத்தில் ஆழத்தைத்திடவும் இராவணன் அவற்றைப் பொருட்படுத்தாது, அனரண்ணியனை வந்து நெருக்கிப் பாரமான பெரிய கையினுல் அந்த அனரண்ணியன் பதைபதைக்குமாறு அடித்து, உயிர்சோரத் துயரம் அடைகின்ற அனரண்ணியனை முகம் நோக்கினனுய்ச் சொல்லுவான்.

கு: வெய்யோன் என்றது, கொடியவனுகிய இராவணனை. உறத்தைத்தல் – மிகுதியாக – ஆழத்தைத்தல், அனரண்ணியன் விட்ட அம்புகளை மதியாது என்றது, அவ்வம்புகள் இராவண னுடம்பில் பட்டுத்துன்பஞ் செய்யாமையின் அவற்றை அவன்

பொருட்படுத்தாது என்றவாறு. அடர்த்தல்-நெருங்குதல். பாரப் பணைக்கரம்-பாரமானபெரிய கை. பணை-பெருமை. பதைத்தல் - நடுங்குதல். புடைத்தல்-அடித்தல். உயிர்சேர்தலாவது ஆற்ற லிழந்து மெலிதல். இராவணன், மதியாது வந்து அடர்ந்துப் புடைத்துத் துயருறுவான்றனை நோக்கினனுய்ச் சொல்லும் என இயையும், இராவணன் என்பது தோன்று எழுவாயாய் நின்றது நோக்கினன் சொல்லும் என்புழி, நோக்கினன் முற்றெச்சம். சொல்லும் என்னும் செய்யும் என்முற்று உயர்திணை ஆண்பால் உணர்த்தியது. (௩௬)

367. பொடிபட்டது நின்றிண்படை
பொரவந்தம ராற்று
தடிபட்டுவி ழுந்தாயுனக்
கமரஞ்சின னென்று
மிடிகெட்டர சாளாதற
மிகைத்தாயென மிகையால்
இடிபட்டிட நகைசெய்தலு
மனரண்ணிய னியம்பும்.

பொடிபட்டது நின் திண்படை; பொர வந்து அமர் ஆற்றுது அடிபட்டு விழுந்தாய்; உனக்கு அமர் அஞ்சினன், என்று மிடிகெட்டு அரசுஆளாது அறமிகைத்தாய்' என மிகையால் இடிபட்டிட நகைசெய்தலும் அனரண்ணியன் இயம்பும்.

பொ: "நினது திண்மை மிக்க அம்பு என் உடம்பில் பட்டுப் பொடியாயது; என்னோடு போர்செய்யவந்து போர்க்கு ஆற்றுமல் என்னுல் அடிபட்டு விழுந்தாய்; 'உனக்குப் போர் அஞ்சினேன்' என்று எளிதாகச் சொல்லிவிட்டு, வறுமைநீங்கி அரசு ஆண்டு கொண்டு இராமல் மீறிப்பேசினுய்' என்று கூறிச் செருக்கினுல் இடியொலி உண்டாகுமாறு இராவணன் சிரித்தலும், அதுகண்டு அனரண்ணியன் சொல்லுவான்.

கு : திண்படை என்றது குறிப்புச்சொல். பொடிபட்டது நின் திண்படை என்புழிப் பொடிபட்ட படை திண்படையாகாமை தெளிவு. படை என்றது, அனரண்ணியன் விட்ட அம்பினை. அனரண்ணியன் விட்ட அம்புகள் இராவணன்மேல் பட்டுப் புண் ஒன்றும் செய்யாமல் தாமே பொடியாய் வீழ்ந்தன என்க. போர் செய்ய வந்தவன் போர்செய்ய வியலாது அடிபட்டுவிழுதல் சிறுமை யாகும். போர்செய்யுமுன் தன் வலியும் பகைவலியும் அறிந்து போர்செய்யத் துணிந்திருக்க வேண்டும். என் ஆற்றலை உள்ள வாறறியாமல் என்னொடு பொரவந்து பின்பு ஆற்ருது அடிபட்டு வீழ்தல் வீரத்திற்கு இயல்பன்று என்றவாறு. இத்தகைய துன்பமுருமல் எளிதாக, 'உனக்கு அமரஞ்சினன்' என்று சொல்லி யிருந்தால் வறுமையொழிந்து நீ அரசாண்டு கொண்டிருக்கலாம் அதைச் செய்யாமல் வலிமையுள்ளவன்போல மீறிப்பேசினுய்; இப்போது என்னுனுய்? என எள்ளிப் பெருஞ்சிரிப்புச் சிரித்தான் இராவணன் என்றவாறு; அறமிகைத்தல் - மிகுதியாகத் தன் பெருமையை உயர்த்திப் பேசுதல்—மீறிப்பேசுதல். என்று - என்று சொல்லி. சொல்லெச்சம். மிகையால் – செருக்கினுல். இடியின் ஒலி பொருந்த நகைத்தான் என்பான் 'இடிபட்டிட நகைசெய்து என்ருன். (௩௬௬)

அனரண்ணியன் சொல்லியது

368. துன்னிட்ட தலைத்துன்மதி
தோற்றேனென வறப்போர்
நன்னிட்டை யிலாதேயெமை
நகைசெய்தனை நாங்கள்
வென்னிட்டில முனக்கென்ஞேடு
வெம்போர்செயு, மெங்கால்
முன்னிட்டது பின்னிட்டிலெ
மெனப்பின்னையு மொழிந்தான்.

'துன்னிட்ட தலைத்துன்மதி! தோற்றேன் என அறப்போர் நல்நிட்டை இலாதே எமை நகை செய்தனை; நாங்கள்

**வெந் இட்டிலம் உனக்கு; என்னெடு வெம்போர் செயும் எம்கால்**
**முன் இட்டது பின்னிட்டிலெம்' எனப் பின்னையும் மொழிந்தான்.**

**பொ :** நெருங்கியுள்ள பத்துத் தலைகளோடு கெட்ட புத்தியினையுடையோனே! 'யான் தோற்றேன்' என்று அறத்தொடு பொருந்திய போரும் நல்ல நடையும் இல்லாமல் எம்மைப் பார்த்து இகழ்ந்து சிரித்தாய்; நாங்கள் முதுகு காட்டி ஓடவில்லை உனக்கு; என்னெடு ஒன்றுபட்டிருந்து கொடிய போரினைச் செய்யும் எம் கால் முன்னிட்டே சென்றது. எனவே யாங்கள் பின்னிட்டிலேம். என்று பின்னும் சொன்னுன்.

**கு :** துன்னுதல்-நெருங்குதல். இராவணனுக்குத் தலை பத்தாகலின் அவை ஒன்றெடொன்று நெருங்கியிருந்தமை புலப்படுத்த துன்னிட்டதலை என்ருர். துன்மதி - கெட்டபுத்தி. அறப்போர் செய்யும் தன்மையும் நல்ல நடையும் உடையோர் தோற்ருேரைக் கண்டு எள்ளிநகை செய்யார் ஆதலின், 'அறப்போர் நன்னிட்டையிலாதே எம்மை நகைசெய்தனை' என்ருன். நாங்கள் உனக்கு வென்னிட்டிலம் என இயையும். வெந் என்பது எதுகை நோக்கி வென் என ஆயிற்று. எம்கால், எம்மோடு உடன்பட்டுப் போர் செய்ய முன்னிட்டே சென்றது ஆதலின், யாம் பின்னிட்டிலம் என வருவித்து முடிக்க. நல்நிட்டை – நல்ல நடை. கால் பின்னிட்டால் யாம் பின்னிட்டதாகக் கொள்ளலாம். எம் கால் முன்னிட்டுச் சென்றதால் யாம் பின்னிட்டவர் ஆகமாட்டோம் என்றவாறு. (௬௰)

**அனரண்ணியன் சாபம்**

**369.** **காலத்தினை ஞாலத்தவ**
**ரெவரேகடப் பவர்தாம்**
**ஆலக்கொடு மனத்தோயவ**
**மதித்தாயெனை யதனுல்**
**கோலத்தசரத ராமனென் குலத்தோன்**
**கொடுங் கணையால்**
**தாலக்குலை போனின்றலை தரை**
**வீழ்கெனச் சபித்தான்.**

காலத்தினை ஞாலத்தவர் எவரே கடப்பவர்தாம்!
ஆலக் கொடு மனத்தோய் அவமதித்தாய் எனை; அதனால்,
கோலத் தசரதராமன் என் குலத்தோன் கொடுங்கணையால்
தாலக் குலைபோல் நின்தலை தரைவீழ்கெனச் சபித்தான்.

பொ : இவ்வுலகத்தாரில் காலத்தினை வெல்பவர் எவரேதாம்! (எவருமிலர்) நஞ்சுபோன்ற கொடிய மனத்தையுடையவனே! எனை அவமதித்தாய்; அதனால், அழகுடைய தசரதராமன் என்கின்ற என்குலத்தவனது கொடிய அம்பினால் நின் தலைகள் பனங்காய்க்குலைபோல் தரையில் வீழ்க' என்று சபித்தான்.

கு : ஒருவர்க்கு நல்லதாம் காலமும் தீதாம் காலமும் உண்டு. நன்றாங்கால் நல்லதாகக் காண்பவர் இன்புறுங்காலமும், அன்றாங்கால் தீவினையால் துன்புறு காலமும் யாவர்க்கும் வரும் என்பதும் அக்காலத்தை வெல்பவர் ஞாலத்து எவரும் இலர் என்பதும் புலப்படுத்தியவாறு. அனரண்ணியனுக்குத் தீமை விளையுங் காலம் ஆதலின் இராவணனுக்குத் தோற்க நேர்ந்தது; எனக் காலத்தின் மேலேற்றியவாறு. இனி இத்தகைய தீமைவிளையுங்காலம் இராவஇராவணனுக்கும் வரப்போகின்றது; அக்காலத்துத் தன் குலத்துத் தோன்றப்போகும் தசரதராமனது கொடிய அம்பினால் இராவணன் தலைகள் பத்தும் பனங்காய்கள் உருள்வதுபோலத் தரையில் உருள்வதாக என அனரண்ணியன் சாபம் கொடுத்தவாறு. இராவணன் தலைகள் பத்தாகலின் அவை தரையில் உருளும்போது பனங்குலையிலிருந்து காய்கள் உதிர்வதுபோல உருண்டோடும்; என உவமையினால் விளக்கியவாறு. தாலம் - பனை. (௬௯)

இராவணன் அனரண்ணியன் மேல் கணைகளைத் தூவிவிட்டுப் போதல்

370\. இச்சாப மயோத்திப் பதிக்
கிறைவன் சினத்தியம்ப
அச்சாப மனத்திற்கொள்
கில்லாத டலரக்கன்

கைச்சாபம் வளைத்துப்
பலவிழியுங் கனல்பொங்க
நச்சார்கணை பலதூவி
நடந்தான்பழி படர்ந்தான்.

இச்சாபம் அயோத்திப் பதிக்கு இறைவன் சினத்து இயம்ப,
அச்சாபம் மனத்தில் கொள் கில்லாது, அடல் அரக்கன்
கைச்சாபம் வளைத்துப் பலவிழியும் கனல்பொங்க
நச்சுஆர் கணை பலதூவி நடந்தான் பழிபடர்ந்தான்.

பொ: இந்தச் சாபச்சொல்லை அயோத்திநகர்க்குத் தலைவனாகிய அனரண்ணியன் கோபத்தோடு சொல்ல, அந்தச் சாபத்தின் விளைவு பற்றி மனத்தில் கொள்ளாமல் வலிமைமிக்க இராவணன், கையில் உள்ள வில்லை வளைத்துப் பல கண்களிலும் கோபக்கனல் பொங்க, நஞ்சு பூசியுள்ள அம்புகள் பலவற்றை அனரண்ணியன் மேல் எய்துவிட்டுப் பழியால் படரப்பட்டவனாய் வழிநடந்தான்.

கு: இராவணனது வலிமைமிகுதி, அனரண்ணியன் சொன்ன சாபத்தைப் பற்றி ஒரு பொருளாக எண்ணாதபடி செய்தது என்ற குறிப்புத் தோன்ற 'அச்சாப மனத்திற்கொள் கில்லாது அடலரக்கன்' என்றார். கைச்சாபம் என்றது வில்லினை. வாய்ச்சாபத்தினை விலக்க வேண்டிக் கைச்சாபம் என அடைகொடுத்தவாறு; இராவணனது இருபது விழிகளிலும் கோபக்கனல் பொங்கியது என்பார், 'பல விழியுங்கனல் பொங்க' என்றார். நச்சு – விடம். தனக்கு வாய்ச்சாபமிட்ட அனரண்ணியனை இராவணன் கைச்சாபக் கணையால் எய்தான் என்றவாறு. தூவுதல் என்பது எய்தலின் எளிமை புலப்பட நின்றது. 'பழிபடர்ந்தான்' என்றது, தன் கையடியால் தரையில் வீழ்ந்து கிடப்பவன்மேல் நச்சார்கணை தூவியதாலாய பழியால் படரப் பெற்றவனாய்ச் சென்றான் என்னும் கருத்தினது. தோற்றோர்மேல் படைதொடுத்தல் போரறம் அன்று ஆதலின், அது பழியினைத் தந்தது என்பார். 'பழிபடர்ந்தான்' என்றார். பழியால் படரப்பட்டவனாய்ப் போனான் என்றவாறு. (௬௨)

நாரத முனிவன் இராவணனைக் காணுதல்

371. ஒன்னார்களி லங்காபுரி
யுடையானுட னொளிவாழ்
மின்னார்முடி யனரண்ணியன்
வெம்போரெழும் வேலைப்
பொன்னார்புரி யாழ்கொண்டிடை
பொன்னாடியல் புகலும்
நன்னாரத முனிவந்திறை
யிதுகேளென நவில்வான்.

ஒன்னார்கள் இலங்காபுரியுடையானுடன் ஒளிவாழ்
மின்னார்முடி அனரண்ணியன் வெம்போர் எழும் வேலைப்
பொன்னார் புரியாழ் கொண்டு இடை பொன்னாடு இயல் புகலும்
நல் நாரதமுனிவந்து, 'இறை இதுகேள்' என, நவில்வான்.

பொ: பகைவர்களுக்குரிய இலங்கையைத் தனக்கு உரிமையாக உடையவனாகிய இராவணனுடன் ஒளிநிலைபெற்று மின்னுகின்ற முடியையணிந்த அனரண்ணியனது கொடியபோர் நிகழ்ந்து கொண்டிருக்கும்பொழுது அழகு பொருந்திய நரம்பால் கட்டப்பட்ட யாழைக்கொண்டு இசைப்பாட்டால் பொன்னாட்டின் இயல்பைப் புகழ்ந்து சொல்லும் தன்மையனாய் நல்ல நாரதமுனி அங்குவந்து (இராவணனை நோக்கி) அரசனே! இதைக் கேட்பாயாக, என்று சொல்வானானன்.

கு: வெம்போர் எழும்வேலை என்றது, கொடியபோர் நிகழ்ந்துகொண்டிருக்கும் பொழுது என்றவாறு. போரில் அனரண்ணியன் சாபம் கொடுத்தலும், இராவணன் அந்தச் சாபத்தைப் பொருட்படுத்தாது சில அம்புகளை அனரண்ணியன்மேல் தூவிச் செல்லுதலும் ஆகிய நிகழ்ச்சிகள் நிகழும் காலம் – 'வெம்போரெழும் வேலை' எனப்பட்டதாகக் கொள்க. இராவணன் வீசிய அம்புகளால் அனரண்ணியன் இறந்து வீரசுவர்க்கம் புக்கான் என்பது முதனூலைக்கொண்டு உய்த்துணர்ச்சியால் இங்குச் சேர்த்துக்

கொள்ளவேண்டும். அனரண்ணியன் இறந்த பின்பு இராவணனை நாரத முனிவர் கண்டு உரையாடுகின்றார் என்க. அழகு பொருந்திய நரம்புகளால் கட்டப்பட்ட யாழ் என நாரத முனிவரின் யாழின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. இன்னிசையால் பொன்னாட்டின் இயல்பைப் புகலுகின்ற நாரத முனி – என இயையும். இறை! என்றது, இங்கு இராவணனாகிய அரசனை விளித்தவாறு. (சாக)

இராவணனுக்கு நாரத முனி கூறியது

வேறு

372. போரார்வெஞ் சிலையரக்க பொருளல்லா
நரியோடும் பொருமோ சீயம்
தீராத தீவினையா லடர்ப்புண்டு
திண்பசிநோய் மூப்பி னொந்து
சோராவிம் மானுடரைத் தொர்ந்தடர்ந்தா
யெனக்கேட்டோம் துன்னார் போரில்
பேராத நிலையுடையோய் பிணம் வெட்டி
வாள்முறித்துப் பெறும் பேறுண்டோ?

போரார் வெஞ்சிலை அரக்க! பொருள் அல்லா
நரியோடும் பொருமோ சீயம்!
தீராத தீவினையால் அடர்ப்புண்டு
திண்பசி நோய் மூப்பின் நொந்து,
சோரா இம்மானுடரைத் தொடர்ந்து அடர்ந்தாய்
எனக்கேட்டோம் துன்னார் போரில்
பேராத நிலையுடையோய்! பிணம் வெட்டி
வாள்முறித்துப் பெறும்பேறு உண்டோ?

பொ: போர்த்திறம் பொருந்திய கொடிய வில்லை யேந்திய இராவண! ஒரு பொருட்டாக மதிக்கப்படாத நரியோடும் போர் செய்யுமோ சிங்கம்? நீங்காத தீவினையால் மொத்துண்டும், திண்

ணிய பசியினலும் நோயினலும் மூப்பினலும் வருந்தியும் சோர்வுரு மல் வாழ்கின்ற இந்த மனிதரைத் தொடர்ந்து போர்செய்தாய் எனக்கேள்விப்பட்டோம்; பகைவவரோடு செய்யும் போரில் பின்னிடாத் திண்ணிய நிலையை யுடையவனே! உயிர்நீங்கிய பிணத்தை வெட்டி வாளை முறித்துக்கொள்வதால் நீ பெறும் பேறுதான் உண்டோ?

கு: நரியோடும் பொருமோ சீயம்? என்பது பிறிதுமொழி தலணி. சிங்கம் போன்று சிறந்த வலிமைபடைத்த நீ, சிறிய நரிபோன்ற வலியற்ற மானிடரோடு போர் செய்யலாமா? என்னும் கருத்து அவ்வுவமையில் அமைந்துள்ளது. தீவினையினல் தாக் குண்டு பசியினலும் நோயாலும், முதுமையாலும் வருந்தவேண்டி யிருந்தும் இவ்வாழ்வை வெறுத்துச் சோர்வடையாது வாழ்கின்ற மானுடரை என்க. சோர்வுற்று இறக்கவேண்டியவர்கள், ஏதோ இறவாமல் உயிர்வாழ்கின்ருர்கள் என்றவாறு. இறந்து கொண்டிருக் கின்றவர்களைக் கொல்லுதல் பிணத்தை வெட்டுதலோடோக்கும் என்று இராவணன் செயலை இகழ்ந்தவாறு. பசிநோய் மூப்பினெந்து என்புழி இறுதியில் உள்ள ஏதுப் பொருளாதாகிய இன் உருபைப் பசியின் நோயின் என முன்னும் கூட்டுக. அடர்தல் – போர் செய்தல்; இங்குக் கொல்லுதலையுணர்த்தியது. பிணத்தை வெட்டி ஞல் வாள் மடியுமே யன்றி ஒருவனைக் கொன்ற வீரப்புகழ் வாராது என்பார். பிணம்வெட்டி வாள் முறித்துப் பெறும் பேறுண்டோ? என்ருர். இதுவும் பிறிதுமொழிதல் அணி; மெலிந்து இறந்து கொண்டிருக்கும் மானிடரைக் கொல்லுதல் அம்பு முதலிய படைகளை யிழந்த இழப்புப் பெற்றதன்றி வீரப்புகழ் பெற்ற தாகாது என்றவாறு. துன்னர்–பகைவர். பகைவர்க்குப் பின்னிடாத உன் வீரத்திற்கு மானிடரைக் கொல்லுதல் புகழ்தராது என்ற வாறு.

(சச)

373. பெற்றதாய் புரண்டலறப் பிள்ளையுயிர்
தான்கொண்டும் பெருகு காதல்
உற்றழவப் பாலர்தமை யீன்றெடுத்து
வளர்த்ததா யுயிரை யுண்டும்

குற்றமான துபெருக்குங் கொடுநமன்றன்
வலைப்பட்டுக் குலைந்து வீழும்
மற்றோரா தரமில்லா மானுடரைக்
கொல்லல்வழக் கன்றே யென்றான்.

'பெற்றதாய் புரண்டு அலறப் பிள்ளைஉயிர்
தான் கொண்டும், பெருகு காதல்
உற்று அழ, அப்பாலர்தமை ஈன்று எடுத்து
வளர்த்ததாய் உயிரை உண்டும்,
குற்றமானது பெருக்கும் கொடுநமன் தன்
வலைப்பட்டுக் குலைந்து வீழும்
மற்று ஓர் ஆதரம் இல்லா மானுடரைக்
கொல்லல் வழக்கு அன்றே' என்றான்.

பொ : 'பெற்ற தாய் பிரிவாற்றாது தரையில் புரண்டு அழுது அலறாநிற்க, பிள்ளையின் உயிரைக் கவர்ந்தும், அந்தப் பிள்ளைகள் பெருகிய காதலுற்று அழுதரற்றுமாறு அவர்களைப் பெற்றெடுத்து வளர்த்த தாயின் உயிரைக் கவர்ந்தும், குற்றமான செயலையே பெருகச் செய்கின்ற கொடுமையுடைய எமனுடைய பாசவலையில் அகப்பட்டு நடுங்கி வீழ்கின்ற வேறொரு ஆதரவும் இல்லாத மனிதர்களைக் கொல்லுதல் முறையன்றே' என்று கூறினான்.

கு : தாய் அழப் பிள்ளையையும் பிள்ளையழத் தாயையும் உயிர் கவர்கின்ற கொடியவன் எமன் என அவன் செயலைப் பழித்தவாறு. "தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ்செல்வர், ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர், முதியோரென்னான் இளையோரென்னான் கொடுங் தொழிலாளன் கொன்றனன் குவிப்ப" (மணிமேகலை 6:-97-100) என எமனுடைய கொடுமை விளக்கப்பட்டிருத்தல் காணலாம். குலைந்து – நடுங்கி. ஆதரம் – ஆதாரம். குலைந்து வீழும் மானுடர், ஆதரம் இல்லா மானுடர் எனத் தனித்தனி இயையும். வழக்கு – முறை. எமனது பாசவலையில் அகப்படும் பொழுது மற்றோராதாரம் இல்லாமல் நடுங்குகின்ற மானுடர் என அவர்தம் இழிவு புலப் படுத்தியவாறு. (சரு)

### நாரதமுனி எமனேடு போர்செய்ய இராவணனை ஏவுதல்

374. என்றுமுனி யிவைகூற விராவணன்கேட்
டெம்பெருமா னியம்பிற்றொன்றே
இன்றுசெய்வ திதுவல்லால் யானறிவ
தொன்றுண்டோ வென்றுகூற
நன்றுபெரி தெனமகிழ்ந்து நாரதமா
முனிகூறு நல்லை யின்னே
சென்றுநமன் றன்னேடு செருச்செய்தி
யவன்தோற்கை திண்ண மென்முன்.

என்று முனி இவைகூற இராவணன் கேட்டு,
எம்பெருமான் இயம்பிற்று ஒன்றே
இன்று செய்வது; இதுஅல்லால் யான் அறிவது
ஒன்று உண்டோ? என்று கூற!
'நன்று பெரிது' என மகிழ்ந்து, நாரதமாமுனி
கூறும்;; நல்லை.; இன்னே
சென்று நமன் தன்னேடு செருச்செய்தி,
அவன் தோற்கை திண்ணம், என்முன்.

பொ: என்று நாரதமுனி இவற்றைச் சொல்ல, இராவணன் கேட்டு, 'எம்பெருமானுகிய நீங்கள் சொல்லியது ஒன்றே இன்று யான் செய்வது; இதுவல்லது யான் அறிந்து செய்வது ஒன்று உளதோ? என்று சொல்ல, நாரத மாமுனி பெரிதும் நன்று என மகிழ்ந்து சொல்லுவான்: நீ மிகநல்லவன்; இப்பொழுதே எமனேடு போர் செய்வாயாக! அவ்வாறு செய்தால், அந்த எமன் தோல்வி யுறுதல் திண்ணம் என்று கூறினுன்.

கு: எம்பெருமான் என்றது, நாரத முனிவனை. முனிவனிடம் இராவணனுக்குள்ள நன்மதிப்புத் தோன்ற இங்ஙனம் விளித்ததே யன்றி, 'நீ இயம்பிற்றொன்றே இன்று செய்வது; இதுவல்லால் யானறிவது ஒன்று உண்டோ' எனவும் கூறினுன். பெரிது நன்று என மாறுக, தோற்கை – தோல்வியறுதல். செரு – போர். (௩௪)

நாரத முனி எமனிடம் ஏகுதல்

375. அந்தமுனி யிவை யருள வவனுடைய
வடிவணங்கி யரக்கர் கோமான்
சிந்தையினுங் கடுந்தெய்வத் தேரேறித்
தென்திசையில் விடுப்பத்தேரின்
முந்துமுனி தனைக்கண்டு முறையாலே
யருச்சித்து முனிநீ யிங்கு
வந்தபொரு ளுரையென்று நமன்கூற
மாமுனிவன் வரைந்து கூறும்.

அந்த முனி இவை அருள அவனுடைய
அடிவணங்கி அரக்கர் கோமன்,
சிந்தையினும் கடுந்தெய்வத்தேர் ஏறித்
தென்திசையில் விடுப்பத், தேரின்
முந்துமுனிதனைக் கண்டு, முறையாலே
அருச்சித்து முனி, நீ இங்கு
வந்த பொருள் உரை என்று நமன்கூற
மாமுனிவன் வரைந்து கூறும்.

பொ: அந்த நர்ரத முனி இவ்வாறு சொல்லியருள, அம் முனிவனுடைய திருவடியை வணங்கிக் கொண்டு இராவணன், மனத்தினைக் காட்டிலும் விரைந்து செல்கின்ற தெய்வத் தன்மை யுடைய புட்பகத் தேரில் ஏறிக்கொண்டு அத்தேரினைத் தென் திசையில் விடுக்க, அந்தத் தேரினையும் முந்திக் கொண்டு வந்த நாரதமுனிவனைக் கண்டு எமன் முறைப்படி அம்முனிவனை அருச்சித்து, 'முனியாகிய நீ இங்கு வந்த காரணம் சொல்' என்று வினவ, சிறந்த நாரத முனிவன் வரையறை செய்து சொல்லுவர்னுனன்.

கு: அரக்கர் கோமான் என்றது இராவணனை. புட்பகத் தேரின் விரைவினைப் புலப்படுத்த, 'சிந்தையினுங் கடுந்தெய்வத் தேர்' என்றுர். மனத்தினும் கடிய புட்பகத்தினும் முனிவன்

முந்திச் சென்முன் என்பார். 'தேரின் முந்து முனி' என்ருர். நாரத முனிவரைக் கண்டவுடன் எமன் அம் முனிவனை வரவேற்றுத் திருவடிக்கு அருச்சனை செய்தான் என்றவாறு. எமலோகத்திற்கு முனிவன் வரக் காரணம் ஏதேனும் இருக்க வேண்டும் என்ற கருத்தால் 'நீ இங்கு வந்த பொருள் உரை, என்று எமன் வினவினன். வரைந்து கூறுதலாவது தான் வந்த காரணத்தை வரையறை செய்து சொல்லுதல். (சஎ)

நாரதன் நமனுக்கு நவின்றது.

376. மின்னஞ்சு மொளிமுடியாய் விளம்பக்கேள்
வேதியனும் விதியை நோக்கி
முன்னஞ்செய் தவசெருக்கால் முனிவினன்
மூலவுகும் சுடுவான் எண்ணும்
வன்னெஞ்ச விராவணன்வா ளமர்பொருவா
னின்றன்மேல் வரக்கண்டாற்ரு
தென்னெஞ்ச மெனையுந்த யான் வந்தே
னதுவிங்குப் புகுந்த தென்முன்.

'மின் அஞ்சும் ஒளிமுடியாய்! விளம்பக்கேள்;
வேதியனும் விதியை நோக்கி'
முன்னம் செய்தவச் செருக்கால் முனிவினல்
மூவுலகும் சுடுவான் எண்ணும்
வல்நெஞ்ச இராவணன், வாளமர்பொருவான்
நின் தன்மேல் வரக்கண்டு ஆற்ருது,
என்நெஞ்சம் எனை உந்த யான் வந்தேன்;
இது இங்குப் புகுந்தது' என்முன்.

பொ: மின் ஒளியே அஞ்சுதற்குக் காரணமான மிக்க ஒளிபடைத்த முடியை யணிந்தவனே சொல்லக்கேள்; வேதியனுகிய பிரமனை நோக்கி முன்பு செய்த தவத்தின் செருக்கினலும், கோபத்தினலும் மூவுலகத்தையும் சுடுவதற்கு எண்ணுகின்ற

வலிய நெஞ்சத்தை யுடைய இராவணன் வாட்போர் செய்தற்கு உன்மேல் வரக்கண்டு பொருது என்மனம் என்னைத் துரத்த யான் நின்பால் வந்தேன்; இதுதான் இங்கு வந்ததற்குக் காரணம், என்று கூறினான் நாரதமுனிவன்.

கு: எமனுடைய முடியின் ஒளி மிக்கிருத்தலால் மின்னொளியும் அதற்கு அஞ்சுவதாயிற்று. இராவணன் பொர வருவதற்குக் காரணம் அவன் பிரமனை நோக்கித் தவஞ்செய்து பெற்ற வரங்களின் செருக்கு ஒன்று; அவன் கோபம் ஒன்று என்பார், தவச் செருக்கால், முனிவினால் என்றார். இரவணனது வன்னெஞ்சின் கடுமை புலப்பட, 'மூவுலகும் சுடுவான் எண்ணும் வன்னெஞ்ச இராவணன்' என்றார். இராவணன் நின்மேல் பொரவரக்கண்டு ஆற்றாது எனது நெஞ்சம் என்னைப் பிடர் பிடித்துந்த யான் வந்தேன்' எனத் தன் ஆற்றாமை யுணர்த்தினான் நாரதன். உந்துதல்:- தள்ளுதல். புகுந்தது – புகுந்ததற்குக் காரணம். புகுதல் – வருதல்.

(சஅ)

இராவணன் எமபுரிக்குள் புகுதல்

377. ஆதித்தன் றருமைந்தற் கந்தமுனி
யிந்தவுரை யறையுங்காலைச்
சாதிக்கும் பொருளெல்லாம் தவத்தினாற்
சாதிக்கத் தகுமென்பானபோல்
சோதிப் பொன் மணிநெடுந்தேர்ச் சுடர்மவுலி
யிராவணன்தொல் லுலகை யெல்லாம்
வாதிக்கு நமன்றன்னை வாதிப்பான்
வளநகரி வந்து சார்ந்தான்.

ஆதித்தன் தருமைந்தற்கு அந்தமுனி
இந்த உரை அறையும் காலை,
சாதிக்கும் பொருள் எல்லாம் தவத்தினால்
சாதிக்கத் தகும் என்பான்போல்
சோதிப் பொன்மணி நெடுந்தேர்ச் சுடர்மவுலி
இராவணன், தொல்உலகை எல்லாம்
வாதிக்கும் நமன் தன்னை வாதிப்பான்
வளநகரி வந்து சார்ந்தான்.

பொ : சூரியன் பெற்ற மகனாகிய எமனுக்கு அந்த நாரத முனிவன் இந்தச் சொல்லைச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது, பிற சாதனங்களால் சாதிக்கத்தக்க பொருள்கள் எல்லாவற்றையும் தவத்தினால் சாதிக்கத்தகும் என்று கூறுவான்போல், ஒளிவாய்ந்த பொன்னும் மணியும் கொண்டு செய்யப்பட்ட நெடிய புட்பகத் தேரினையும் சுடர்மிக்க முடியினையும் உடைய இராவணன், பழமையான உலகத்தை எல்லாம் துன்புறுத்துகின்ற எமனை வருத்துவதற்காக வளம்வாய்ந்த எமபுரிக்கு வந்து சேர்ந்தான்.

கு : எமன் சூரியன் மகன் ஆதலின் 'ஆதித்தன் தரும் மைந்தன் என அவனைக் குறிப்பிட்டவாறு. தவத்தினால் எல்லாம் செயல் கூடும் என்பதை மெய்ப்பிப்பான்போல் தவத்தால் சிறந்த இராவணன் யாரும் புகமுடியாத எமபுரிக்குள் புகுந்தான் எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. 'கூற்றங் குதித்தலும் கைகூடும் நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு' (திருக்குறள்–269) எனவும் 'ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும், எண்ணிற் றவத்தான் வரும்' (திருக்குறள்–264) எனவும் வள்ளுவர் கூறியுள்ளதைத் தழுவியதாக, 'சாதிக்கும் பொருள் எல்லாம் தவத்தினால் சாதிக்கத் தகும்' என்ற தொடர் அமைந்திருத்தல் காணலாம். 'தொல்லுலகை யெல்லாம் வாதிக்கும் நமன் தன்னை வாதிப்பான் வளநகரி வந்து சார்ந்தான்' என்பது, ''நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார் நோயின்மை வேண்டுபவர்'' (திருக்குறள்–320) என்ற குறளைத் தெளிவுபடுத்தல் காணலாம். உலகத்தாரைத் துன்புறுத்தி உயிரைக் கவர்கின்ற எமனையும் துன்புறுத்த இராவணன் வந்தான் என்பதனால், நோய், நோய் செய்தார் மேலது ஆதலைத் தெளியலாம். (சசு)

### சுவர்க்கத்தில் புண்ணியஞ் செய்தோர் வீற்றிருக்க இராவணன் பார்த்தல் 50–53

378. சீர்க்குமிழி னிலை கலக்கித் திகழ்குழையைச்
செலநோக்கி செறுத்துக் கோட்டிப்
பார்க்கும்விழிப் பாவையராம் படுகுழியில்
விழாதோர்க்கும் பற்றொன் றில்லா

நீர்க்குமிழி யுடம்பென்று நிலையறங்கள்
செய்தோர்க்கு நெறியினின்றோர்
யார்க்குமுள வஞ்சுவர்க்கத் தவ்வவர்க
ளினிது வீற்றிருப்பக் கண்டான்.

சீர்க்குமிழின் நிலைகலக்கித் திகழ்குழையைச்
செலநோக்கிச் செறுத்துக் கோட்டிப்
பார்க்கும் விழிப் பாவையராம் படுகுழியில்
விழாதோர்க்கும் பற்று ஒன்று இல்லா
நீர்க்குமிழி உடம்பு என்று நிலை அறங்கள்
செய்தோர்க்கும் நெறியின் நின்றோர்
யார்க்குமுள அஞ்சுவர்க்கத்து அவ்வவர்கள்
இனிது வீற்றிருப்பக் கண்டான்.

பொ: சிறந்த குமிழம் பூப்போன்ற மூக்கினை மோதி அதன் நிலையைக் கலக்கியும் காதில் விளங்குகின்ற குழையென்னும் காதணியின்கண் பார்வை செல்லுமாறு கடைக்கணால் பார்த்தும், கோபித்துப் புருவத்தை வளைத்துப் பார்க்கும் கண்களையுடைய பெண்டிர் என்கின்ற படுகுழியில் வீழாவதவர்க்கும், யான் எனது என்கின்ற அகப்பற்றுப் புறப்பற்று ஆகிய இருவகைப்பற்றில் ஒரு பற்றும் இல்லாது உடம்பு நீரில் தோன்றும் குமிழி போன்று நிலையற்றது என்ற உண்மை தெரிந்து நிலையான தருமங்களைச் செய்தவர்கட்கும், நல்ல நெறியில் நின்றோர் எல்லோர்க்கும் உரியதாக உள்ள அழகிய சுவர்க்கத்தில் மேற்கூறிய முத்திறத்தோரும் இனிதாக வீற்றிருப்பதை இராவணன் கண்டான்.

கு: குமிழ் என்றது குமிழம்பூவினை; அது இங்கு ஆகுபெயராய்க் குமிழம்பூப் போன்றிருக்கும் மூக்கினையுணர்த்தியது. கண்ணின் ஒருபுறத்தில் மூக்கும் மற்றொருபுறத்தில் குழையணிந்த காதும் இருப்பதால் ஒருகால் மூக்கினையும் மற்றொருகால் குழையினையும் கண் தாக்கிநோக்குகின்றது என்றவாறு. "குழை பொருது நீண்டு குமிழ்மேல் மறியா", (தண்டி–விலக்குவமை) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். கோட்டுதல் என்பது

புருவத்தை வளைத்தல்; கோபப் பார்வையில் புருவம் வளைதல் இயல்பு. பாவை போன்ற பெண்டிர்பால் வைத்த ஆசையை இங்குப் பாவையராம் படுகுழி என உருவகஞ்செய்தவாறு. பெண்ணாசை நீங்கினவர்க்கும் உடம்பின் நிலையாமை யுணர்ந்து அறங்கள் செய்தோர்க்கும் நல்ல நெறியில் ஒழுகினோர்க்கும் உரிமையிடமாகச் சுவர்க்கம் உளது என்பதும் அச்சுவர்க்கத்தில் அந்த முத்திறத்தோரும் இனிதாக வீற்றிருக்கிறார்கள் என்பதும் இங்குக் கூறியவாறு. இராவணன், பெண்ணாசை மிக்கவனாய் உடம்பை நிலையென்றுணர்ந்து நிலையறங்கள் செய்யாதவனாய், நெறி தவறியவனாய் இருப்பவன் ஆதலின், அவனுக்கு மாறுபட்டவர்கள் இனிது வீற்றிருக்கும் சுவர்க்கக் காட்சியைக் கண்டேனும் திருந்தலாம் என்ற நோக்கோடு இவை பேசப் பட்டுள்ளன எனலாம். (ருய)

379. பூதானங் கோதான முதலான
பூசுரர்க டம்மைப் போற்றி
மாதானஞ் செய்தோரும் வறியோரா
யிவை கொடுக்க மாட்டா ராயின்
யாதானுந் தமக்கப்போழ் தெய்தியதை
யிட்டுண் ணு மவரு மன்ன
தாதாவு முதலான தயாவினோர்
வீற்றிருந்த தன்மை கண்டான்.

பூதானம் கோதானம் முதலான
பூசுரர்கள் தம்மைப் போற்றி
மாதானம் செய்தோரும் வறியோராய்
இவை கொடுக்க மாட்டார் ஆயின்
யாதானும் தமக்கு அப்போழ்து எய்தியதை
இட்டு உண்ணும்அவரும் அன்ன
தாதாவும் முதலான தயாவினோர்
வீற்றிருந்த தன்மை கண்டான்.

பொ : பூமிதானம், பசுத்தானம் முதலானவற்ருல் அந்தணர் தம்மைப் பாதுகாத்து மற்றைய பெரிய தானங்களைச் செய்தவர்கட்கும் வறியவர்களாய் இத்தகைய பெரிய தானங்களைச் செய்யமாட்டாத வராயின், ஏதேனும் தமக்கு அந்தப் பொழுதில் கிடைத்த உணவுப் பொருளைப் பிறருக்குக் கொடுத்து எஞ்சியதை உண்ணுகிறவர்களும், அங்ஙனமின்றி வந்தவர்களின் பசிப்பிணிதீர அன்னம் பாலிக்கும் அன்ன தாதாவும் முதலிய அருளாளர்கள் அங்கு விற்றிருந்த தன்மையைக் கண்டான்.

கு : முதலானவற்ருல் என மூன்ருவது விரிக்க. பூசுரர். பூதேவர் எனப்படும் அந்தணர். போற்றுதல் - பாதுகாத்தல். சொன்ன தானம் முதலியவற்றைத் தொகுத்து 'மாதானம்' என்ருர். தமக்குக் கிடைத்த உணவில் சிறிது பகிர்ந்து கொடுத்த வறியவர்களும் பூதானம் கோதானம், மாதானம் செய்தாரோடு ஒப்ப விற்றிருக்கின்றனர் என்றவாறு. தயாவிஞேர் – அருளாளர்கள். அன்னதாதா என்றது பிறதானங்களை விடுத்து அன்ன தானத்தையே செய்யும் பேரருள் ஆளர்களை. (ருக)

380. சடங்கொடுக்கும் விளைகடிந்த தாபதர்க
ளினிதங்குத் தங்கக் கட்டி
மடங்கொடுத்து மறையவர்க்கு மனையவர்க்கு
மனைகொடுத்து வைகாசி மாதந்தண்ணீர்க்
குடங்கொடுத்துக் குளிர்காலங் குளிர்ந்தவர்க்குப்
போர்வையினைக் கொடுத்துத்தங்க
இடங்கொடுக்கு மீங்கிவர்க ளெழில்மணிமா
மண்டபத்தி லிருக்கக் கண்டான்.

சடம்கொடுக்கும் வினைகடிந்த தாபதர்கள்
இனிது அங்குத்தங்கக் கட்டி,
மடம்கொடுத்து, மறையவர்க்கு மனையவர்க்கு
மனைகொடுத்து, வைகாசி மாதம் தண்ணீர்க்

**குடம் கொடுத்துக் குளிர்காலம் குளிர்ந்தவர்க்குப்**
**போர்வையினைக் கொடுத்துத் தங்க**
**இடம் கொடுக்கும் ஈங்கிவர்கள் எழில்**
**மணிமா மண்டபத்தில் இருக்கக்கண்டான்.**

பொ: மீண்டும் உடம்பொடு பிறக்கும் தன்மையைக் கொடுக்கின்ற இரு வினைகளைத் தம்பால் சாராமல் நீக்கிவிட்ட தவ முனிவர்கள் தங்குமாறு மடம் கட்டிக்கொடுத்து, மறைநூலுணர்ந்த அந்தணர்க்கு மனைகளைக் கட்டிக் கொடுத்து, வெப்பமிக்க வைகாசி மாதத்தில் மக்கள் தாகம் தணியுமாறு தண்ணீர்க் குடம்கொடுத்து, குளிர்காலத்தில் குளிர்மிக்கவர்க்குப் போர்வையினைக் கொடுத்து, புதியராய் வந்தவர்கள் தங்கிச் செல்லுமாறு இடமும் கொடுக்கின்ற இத்தகைய புண்ணியர்கள், அழகிய மணிகள் பதித்த பெரிய மணிமண்டபத்தில் இனிது வீற்றிருக்கக் கண்டான்.

கு: சடம் - உடம்பு. சடம் கொடுக்கும் வினை என்றது, இரு வினையின் இயல்பு கூறியபடி. பிறவியைக் கொடுக்கும் வினை என்றது இரு வினையை. இருவினையும் பிறவிக்கு வித்தாகலின் இங்கு வினையென்றது இருவினையையும் குறித்து நின்றது. தாபதர்கள் – தவமுனிவர்கள். தங்க மடம் கட்டிக்கொடுத்தும் என மாறுக. வெப்பமிக்க வேனிற்காலத்தில் வைகாசி மாதமே சித்திரையினும் வெம்மையது ஆதலின் தண்ணீர்க்குடம் கொடுத்தற் குரிய மாதமாக அதனை எடுத்துக் கூறினர். தண்ணீர்க்குடம் கொடுத்தல் என்றது தண்ணீர்ப் பந்தல் வைத்தலை யுணர்த்திய தாகக் கொள்க. தங்க இடம் கொடுத்தல் என்றது யாத்திரை செய்வோர் தங்கிச் செல்வதற்கு இடம்கொடுத்தலை உணர்த்தியது. மடம் கட்டிக் கொடுத்து, மனைகொடுத்து, தண்ணீர்க்குடம் கொடுத்து, போர்வையினைக் கொடுத்து என்பன வினைச்செவ்வெண். 'செவ்வெணீற்றதாம் எச்ச உம்மை' என்ற விதிப்படி, இடமும் கொடுக்கும் ஈங்கிவர்கள் என்று அமைய வேண்டிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கதாகக் கொள்க. மடம் கட்டிக்கொடுத்தல் முதலிய ஐவகை அறங்களைச் செய்தவர்கள் சுவர்க்கத்தில் எழில் மணிமா மண்டபத்தில் இன்பமாக இருப்பதை இராவணன் கண்டான் என்றவாறு.

(ருஉ)

381. உடுப்பதுவு முண்பதுவு மில்லாதோர்க்
குடைகூறை யுதவி யுண்ணக்
கொடுத்தவர்நோய் தீர்த்தோருங் கொடியோ
குற்றங்கள் செய்து தம்மை [ராய்க்
அடுத்தடுத்து வைதாலும் பொறுப்போரு
மந்தணரோ டாவுக்குற்ற
நடுக்கமது தீர்த்தோரு நல்லுலகி
ஞயகரா யிருப்பக் கண்டான்.

உடுப்பதுவும் உண்பதுவும் இல்லாதோர்க்கு
உடைகூறை உதவி உண்ணக்
கொடுத்து அவர்நோய் தீர்த்தோரும்,
கொடியோராய்க் குற்றங்கள் செய்துதம்மை
அடுத்துஅடுத்து வைதாலும் பொறுப்போரும்,
அந்தணரோடு ஆவுக்குஉற்ற
நடுக்கமது தீர்த்தோரும், நல்லுலகில்
நாயகராய் இருப்பக் கண்டான்.

பொ: உடுப்பதற்குரிய உடையும் உண்பதற்குரிய உணவும் இல்லாத வறியவர்க்குப் புத்தாடை உதவியும் உண்ண உணவு கொடுத்தும் அவர்க்கு வந்த நோயினைத் தீர்த்தோரும், கொடியவர்களாய்க் குற்றங்கள் பலசெய்து தம்மை அடுத்து அடுத்து வைதாலும் பொறுத்துக்கொண்ட பெரியோர்களும், அந்தணர்க்கும் பசுவுக்கும் வந்த நடுக்கத்தைத் தீர்த்தவர்களும், நல்லதாகிய பொன்னுலகத்தில தலைவராய் இருப்பதைக் கண்டான்.

கு: கூறையுடை என மாற்றிப் புத்தாடை எனப்பொருள் கொள்க. உடையாகிய கூறை என விரிப்பினும் அமையும். நோய் என்றது இங்குப் பசி நோயினை, கொடுத்துத் தீர்த்தோரும் என இயையும். தம்மிடத்துக் கொடுமை யுடையராய்க் குற்றங்கள் பலபுரிந்து பலமுறை வைதவர்களிடம் சினம் காட்டாது

பொறுத்திருந்த புண்ணியர் என்க. நடுக்கம் என்றது, துன்பத்தை. அந்தணரும் ஆவும் வருத்தத்தால் நடுங்குகின்றபோது அவ் வருத்தத்தைத் தீர்த்தவர்களும் என்க. நல்லுலகு என்றது சுவர்க்கத்தை. நாயகர் — தலைவர். வறியவர்க்கு உடையும் உணவும் கொடுத்தோரும், தமக்குத் தீங்கு செய்தாரிடம் பொறுமை காட்டிய வரும் அந்தணர்க்கும் ஆவுக்கும் உற்ற நடுக்கந் தீர்த்தோரும் நல்லுலகில் நாயகராய் வீற்றிருப்பதை இராவணன் கண்டான் என்றவாறு. (ருங)

நரகத்திலுள்ளோரை இராவணன் பார்த்தல். 54–57

382 மன்றுபறித் துண்டோரும் வழக்கல்லா
துரைத்தோரு மனையாடன்னோ
டொன்றியுடன் வாழாதே யோராதே
பிறன்தார முவந்துள்ளோரும்
கொன்றுடலந் தின்றோருங் கோட்சொல்லித்
திரிவோருங் கோலிச்செய்த
நன்றிதனை மறந்தோரு நரகத்தி
னிடைக்கிடந்து நடுங்கக் கண்டான்.

மன்று பறித்து உண்டோரும், வழக்கு அல்லாது
உரைத்தோரும், மனையாள் தன்னோடு
ஒன்றியுடன் வாழாதே ஓராதே
பிறன்தாரம் உவந்துள்ளோரும்,
கொன்று உடலம் தின்றோரும், கோள்சொல்லித்
திரிவோரும், கோலிச் செய்த
நன்றிதனை மறந்தோரும் நரகத்தி
னிடைக் கிடந்து நடுங்கக் கண்டான்.

பொ: நீதிமன்றத்தின்கண் வழக்குரைக்க வருவோரிடம் பணம் பறித்து உண்டவர்களும், மெய் வழக்கல்லாத பொய் வழக்கை மன்றத்தில் உரைத்தோர்களும், தன் மனைவியோடு

மனம் ஒன்றி வாழாமல் (தமக்குவரும் பழியும் பாவமும் ஓராமல் பிறர்மனைவியரை விரும்பி அவரோடுகூடி மகிழ்வோர்களும், உயிரைக் கொன்று அதன் உடம்பை உணவாகத் தின்றோரும், பிறர் குற்றங்களைப் பலரிடம் சொல்லித்திரிகின்றவர்ளும், ஒருவர் மனமுவந்து செய்த நன்றியை மறந்தவர்களும் நரகத்தில் கிடந்து துன்புற்று நடுங்குவதை இராவணன் கண்டான்.

கு : 'மன்றுபறித்துண்ணேல்' என்றநீதிநூல் கருத்தைத்தழுவி மன்று பறித்துண்டோரும், என இங்குக் கூறியவாறு. மன்று-நீதிமன்றம் பொய்வழக்கு உரைத்தோர் என்பார், 'வழக்கல்லா துரைத்தோரும்' என்றார். ஓர்தலாவது தம் செயலால் தமக்குவரும் பழிபாவங்களைச் சிந்தித்தறிதல். கொல்லுதலாவது ஒருயிரை அது நின்ற உடலிலிருந்து பிரித்தல். அங்ஙனம் பிரிந்தபின் எஞ்சியுள்ள உடம்பைக் காயங்களான் இனிய சுவைத்தாக்கி யுண்ணுதல். கொலைப்பாவத்தையும் ஊனுண்ட பாவத்தையும் கொடுத்தலின் அவர் நரகில் விழுந்து நடுங்குவோராயினர். கோள்-பிறர் குற்றத்தைப் பலரிடம் கூறுதல். புறங்கூறல். கோலிச்செய்த, என்பது மீமிசைச் சொல். கோலுதல்-செய்தல். தமக்குப்பிறர் செய்த நன்றியை மறத்தல் கொலைப்பாவத்தினும் குற்றமிக்க செயலாகலின் அதன் கொடுமை நினைந்து அதனை இறுதியிற் கூறினார். 'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை செய்ந் நன்றி கொன்ற மகற்கு' (குறள்-110) என்பது இங்கு நினையத்தகும். (ருச)

383. கற்றவரைக் காய்ந்தோரும் கைப்பிடித்த
காதலியைக் கைவிட் டோரும்
பெற்றதாய் பசிகூரப் பெருவயிறு
வளர்த்தோரும் பேணித் தம்மோ
டற்றவருக் கருதோரு மந்தணரை
யிகழ்ந்தோரு மமரி லாண்ட
கொற்றவனை விட்டோடுங் கொடியோருங்
கும்பியிடைக் கொதிப்பக் கண்டான்.

கற்றவரைக் காய்ந்தோரும், கைப்பிடித்த
காதலியைக் கைவிட்டோரும்,
பெற்றதாய் பசிகூரப் பெருவயிறு
வளர்த்தோரும் பேணித் தம்மோடு
அற்றவருக்கு அறுதோரும், அந்தணரை
இகழ்ந்தோரும், அமரில் ஆண்ட
கொற்றவனை விட்டோடும் கொடியோரும்
கும்பியிடைக் கொதிப்பக் கண்டான்.

பொ: தம்பால் பொருள் வேண்டி வந்த கற்றறிந்தவர்களைக் கோபித்துத் துரத்தியவர்களும், பல்லோர் அறிய ஓமத்தீ முன்னர்க் கைப்பிடித்து மணந்த காதலியைக் காப்பாற்றாது கைவிட்டவர்களும், பெற்றதாய், பசிமிக்குவருந்த அவர்க்கு உணவளிக்காது தம்பெரிய வயிற்றினைமட்டும் உணவால் வளர்த்த வர்களும், விரும்பித் தம்மோடு வேற்றுமையற்று நட்புக் கொண்ட வரிடம் தாமும் அவ்வாறு வேறுபாடற்று நட்புக் கொள்ளாது, வேறுபாடு அறாது பழகுகின்ற வஞ்சகர்களும், அந்தணரை இகழ்ந்த வர்களும், தம்மைச் சோறிட்டு ஆண்ட அரசனைப் போரில் தனியே விட்டு ஓடுகின்ற கொடியவர்களும், நரகத்தில் தீயில் கொதித்துக் கொண்டிருப்பதை இராவணன் கண்டான்.

கு: காய்தல்—கோபித்தல். கற்றவர் என்றது செல்வரைப் பாடிப் பொருள் தேடும் புலவரை. பசிகூர்தல்—பசிமிகுதல். ஈன்றாள் பசிகாண்பது மிகவும் கொடியசெயல் என்பதை: ''ஈன்றாள் பசி காண்பானாயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை'' (குறள்-656) என்ற வள்ளுவர் வாக்கால் அறியலாம். பேணித்தம் மோடற்றவர் என்றது, தாம் அவர் என்ற வேற்றுமையற்று நட்புச் செய்து கொண்டவரை, அறுதோர் என்றது, அத்தகைய நட்புடையோரிடத்தில் தாமும் வேற்றுமை யற்று நட்புக் கொள்ளாமல் வேறுபாடு அறாது வஞ்சனையுடன் பழகுபவரை. அற்றவர்க் கற்ற சிவனுறைகின்ற ஆலவாயாவது மிதுவே' (திருஞானசம்பந்தர் தேவாரம் (2-120-2) என்ற திருமுறைத் தொடரை இத்தொடர் நினைப்பிக்கின்றது காணலாம். எவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுகின்ற அந்தணர்பால்

எக்குற்றமும் இல்லாதிருந்தும் அவரை இகழ்தல் குற்றமாகலின், அந்தணரை இகழ்ந்தோரும் கும்பியிடைக் கொதிப்பதர்கக் கூறினர். தம்மைப் பெரிய வீரராக நினைத்துத் தன் படையில் சேர்த்துச்சோறளித்து ஆண்ட அரசனுக்குப் போர்புரிதல் செய்யாது அரசனைத் தனியே விட்டு ஓடுகின்றவர்கள் நன்றி யில்லாக் கோழைகளாதலின் அக்கொடியோரும் கும்பியில் கொதிப் பாராயினர். கும்பி–நரகம்; கொப்பரையில் எண்ணெய் கொதிக்க அதில் இந்தப் பாவிகளையிட்டுக் கொதிக்கச்செய்யும் நரகத் தண்டனையை இரர்வணன் காண்கின்ருன் என்றவாறு. (ருரு)

384. கோபத்தால் வினை யெண்ணிக் குடிகேடு
சூழ்ந்தோருங் குறைந்து வந்து
தாபத்தா லிரந்தோரைத் தாமடர்ந்து
வைதளிக்குந் தயாவி லோரும்
ஆபத்தா லபயமென்றே யடைந்தோரை
விட்டோரு மாதி யாய
பாபத்தோ ரும்பலரைப் பழிப்போரும்
படுநரகிற் பதைப்பக் கண்டான்.

கோபத்தால் வினை எண்ணிக் குடிகேடு
சூழ்ந்தோரும், குறைந்துவந்து
தாபத்தால் இரந்தோரைத் தாம் அடர்ந்து
வைதுஅளிக்கும் தயாஇலோரும்.
ஆபத்தால் அபயம் என்றே அடைந்தோரை
விட்டோரும், ஆதிஆய
பாபத்தோரும் பலரைப் பழிப்போரும்,
படுநரகில் பதைப்பக் கண்டான்.

பொ: ஒருவன் செய்த தீச்செயலை மனத்திற்கொண்டு கோபத்தால் அவன் குடிக்கே கேடு செய்தோரும், தம் செல்வம் குறைந்துவந்து பசித்தீயின் கொடுமை தாங்காது தம்மிடம் வந்து

யாசித்தவர்களைத் தாம் நெருங்கித் திட்டிவிட்டுப் பின்பு சிறிதே கொடுக்கும் அருளிலாதவரும், தமக்கு நேர்ந்த ஆபத்தினால் அபயம் என்று கூறிக்கொண்டு தம்பால் வந்தவரை அபயம் கொடுக்காமல் விட்டவர்களும், பசுவதை, சிசுவதை முதலிய முதன்மையான கொடுமையுடைய பாவத்தைச் செய்தோரும், எப்போதும் பலரைப் பழித்துக்கொண்டே இருப்பவரும் பெரிய நரகத்தில் துன்பத்தால் பதைப்பதைக் கண்டான் இராவணன்.

கு : கோபத்தால் குடிகேடு சூழ்ந்தோரும் என இயையும். குறைதலாவது, செல்வத்தால் குறைதல். தாபமர்வது, பசிவருத்தம். பசித்துயர் பொருதுவந்து தம்பால் யாசித்தவரை முன்வைதுவிட்டுப் பின்பு வெறுப்போடு ஏதேனும் கொடுக்கின்ற அருள் இல்லாத வர்களும் படுநரகில்பட்டுப் பதைக்கின்றார்கள். ஆபத்து-பெருந் துன்பம். அபயம்—பயம் இல்லாமை. பயம் இன்மையைத் தருவான் என்று அபயம் புகுந்தவரைக் கைவிடுதல் பெரும்பாவம் ஆகும். 'உய்ய நிற்கபயம் என்றான் உயிரைத் தன்னுயிரி னேம்பாக் கையனுமொருவன் செய்த வுதவியிற் கருத்திலோனும், மையற நெறியினோக்கி மாமறைநெறியில் நின்ற, மெய்யினைப் பொய் யென்றானும், மீள்கிலா நரகில் வீழ்வார்'' (யுத்த—வீடணனடைக் கலப்-117) என இராமன் கூறியுள்ளது இங்கு நினைக்கத்தகும். ஆதியாய பாபம் என்பது 'ஆன்முலை யறுத்தல் மகளிர் கருச் சிதைத்தல்' முதலியன; பலரைப் பழிப்பதும் பெரும்பாவம் என்றபடி.

(ருசு)

385. மாவிரிநீர்க் கடல்சூழ்ந்த மண்ணுலகின்
மனிதராய்ப் பிறக்கப்பெற்றும்
நாவிலரி யோநமோ நாராய
ணாயநம வென்ன மாட்டாப்
பாவியரும் பரதெய்வம் பழித்துரைக்கும்
பாதகரும் பரந்து தங்கள்
வாய்வழியே புழுச்சொரிந்து மாநரகக்
கும்பியிடை மறுகக் கண்டான்.

மாவிரிநீர்க் கடல்சூழ்ந்த மண்ணுலகில்
மனிதராய்ப் பிறக்கப்பெற்றும்
நாவில் அரி ஓம்நமோ நாராய
ணயநம என்ன மாட்டாப்
பாவியரும் பரதெய்வம் பழித்துஉரைக்கும்
பாதகரும், பரந்து தங்கள்
வாய்வழியே புழுச்சொரிந்து மாநரகக்
கும்பியிடை மறுகக் கண்டான்.

பொ: பெரிய விரிவான நீர்நிறைந்த கடலால் சூழப்பட்ட மண்ணுலகில் மனிதராய்ப் பிறக்கும்பேறு பெற்றிருந்தும், தம் நாவினுல் 'அரி ஓம் நமோ நாராயணுயநம' என்று சொல்ல மாட்டாத பாவிகளும், பிறதெய்வங்களைப் பழித்துப் பேசுகின்ற பாதகர்களும், தங்கள் வாய்வழியாகப் புழுக்களைச் சொரிந்து கொண்டு பெரிய நரகமாகிய குடத்திலே பரவிக் கலங்குவதைக் கண்டான்.

கு: பாற்கடல் முதலிய கடல்களை விலக்க வேண்டி நீர்க் கடல் என்ருர். இனமுள்ளடை. மாகடல், விரிநீர்க்கடல் எனத் தனித்தனி இயையும் எண்பத்து நான்கு நூருயிரமாம் யோனி பேதங்களில் ஏனைய பிறவியிற்பிறவாது மனிதராகப் பிறப்பது பெரிதும் அரிதாகலின் மனிதராய்ப் பிறக்கப் பெற்றும்' என்ருர். திருமாலின் எட்டெழுத்து மந்திரத்தைச் சொல்லி விரைந்து நற்கதி யடையலாயிருக்க அது செய்யாது கொன்னே வாணாளை வீணாளாக்குகின்றனர் என்பார் 'நாராயணுயநம' என்ன மாட்டாப் பாவியரும் என்ருர். நாராயணு என்னு நாவென்ன நாவே' (சிலம்பு – ஆய்ச்சியர் குரவை – 37) என இளங்கோவடிகள் கூறுவதும் இங்கு நினையலாம். அரி ஓம் நமோ என்ரே நாராயணுய நம என்ரே சொல்லமாட்டாப் பாவியர் என இரு தொடரர்கப் பொருள் கொள்ளலாம். 'தெய்வமிகழேல்' என்ற ஆன்ரேர் சொல்லை மறந்து பல தெய்வங்களையும் பழித்துப் பேசுதல் பெரும்பாவம் என்பார். 'பாதகரும்' என்ருர். பரந்து மறுகக் கண்டான் என இயையும். தெய்வத்தின் திருப்பெயரைச் சொல்லாத வாயும் தெய்வத்தை இகழ்ந்துரைக்கும் வாயும் புழுக்

களைச் சொரியும் வாயாக அமையக் கலங்குவதை இராவணன் கண்டான் என்க. (௩௭)

நரகத்தில் இடர்ப்படுவோரை இராவணன் கரையேற்றுதல்.

386. கூறுபடு தசைமூளை குருதியோடு
குடர்வழும்பு குழம்பி யொன்றுச்
சேறுபடு கொடுநரகிற் றீவினையோர்
கிடந்துழைப்பத் தெரிய நோக்கி
ஏறிடுமினென் றரக்க னேறவிட
வின்றெல்லாம் பிழைத்தோ நாமென்
றாறுதுய ரினராக யருநரகங்
காவலர்க ளழன்று வந்தார்.

கூறுபடு தசை, மூளை, குருதியோடு
குடர், வழும்பு குழம்பி ஒன்றுச்
சேறுபடு கொடுநரகில் தீவினையோர்
கிடந்து உழைப்பத் தெரிய நோக்கி,
'ஏறிடுமின்' என்று அரக்கன் ஏறவிட
இன்று எல்லாம் பிழைத்தோம் நாம் என்று
ஆறுதுய ரினராக, அருநரகம்
காவலர்கள் அழன்று வந்தார்.

பொ : வாள் முதலியவற்றுல் கூறுபட்ட தசையும் மூளையும் குடலும் நிணமும் எல்லாம் - குழம்பி ஒன்றுய்ச் சேறுபட்டுக் கிடக்கின்ற கொடிய நரகத்தில், தீவினை செய்தோர்கள் கிடந்து வருந்தா நிற்க, அக்காட்சியை இராவணன் தெளிவாகப் பார்த்து, இந்தத் துன்பமிக்க நரகத்திலிருந்தும் ஏறுங்கள் என்று அவர்களைக் கரையேற்றிவிட, இன்று நாம் எல்லாம் உய்ந்துவிட்டோம் என்று சொல்லிக்கொண்டு துன்பம் நீங்கினவர்களாக! அதனைக்கண்டு யாரும் மீளுதற்கரிய நரகத்தினை காக்கின்ற காவலர்கள் இராவணன்மேல் கோபித்து வந்தார்கள்.

கு: நரகத்தின் அருவருக்கத்தக்க நிலையைப் புலப்படுத்த ''கூறுபடு தசை மூளை குருதியோடு குடர்வழும்பு குழம்பி ஒன்றாய்ச் சேறுபடு கொடுநரகில்'' என்றார். போர்க்களத்தில் வாள் முதலிய போர்க் கருவிகளால் கூறு படுத்தப்பட்டுத் தசை முதலியன குழம்பியிருப்பது போல நரகத்திலும் இருந்தன என்றவாறு. தீவினை நயந்து செய்கின்ற இராவணன், தன்னைப்போல் தீவினை செய்தோர் நரகத்தில் இடர்ப்படுவது கண்டு பொறுதவனாய் அவர் களைக் கொடுநரகக் குழியினின்றும் கைகொடுத்து கரையேற்றி விட்டான் என்றவாறு. இராவணனால் இன்று நாமெல்லாம் பிழைத்தோம் என்று நரகத்திலிருந்தவர்கள் துயர் ஆறினர் என்க. ஆறு துயரினர் என்றது, துயர் ஆறினர் என்றவாறு. அழலுதல் – கோபித்தல். வழும்பு–கொழுப்பு. (௫அ)

எமன் ஏவலாளரின் ஆரவாரம்
வேறு

387. வெஞ்சின முருக்கொண் டன்ன
மேனியர் வெய்ய கண்ணர்
மஞ்சிடி யிடித்த சொல்லர்
மலைமுழை திறந்த வாயர்
நஞ்சினுங் கொடிய நெஞ்சர்
நமன்றமர் ஞாலம் மெல்லாம்
அஞ்சுநம் வலிக்கின் றஞ்சா
ரரக்கரோ வெனவந் தார்த்தார்.

வெஞ்சினம் உருக்கொண் டன்ன
மேனியர் வெய்ய கண்ணர்
மஞ்சு இடிஇடித்த சொல்லர்;
மலைமுழை திறந்த வாயர்;
நஞ்சினும் கொடிய நெஞ்சர்;
நமன்தமர், ஞாலம் எல்லாம்
அஞ்சும் நம், வலிக்கு இன்று அஞ்சார்
அரக்கரோ! என வந்து ஆர்த்தார்.

பொ: கொடிய கோபமே ஒரு வடிவு கொண்டாற்போன்ற மேனியையுடையவர்களும், கொடிய கண்ணையுடையவர்களும், மேகம். இடி இடித்தாற்போன்ற சொல்லையுடையவர்களும் மலையின் குகையைப் போல அகலத்திறந்த வாயினை உடையவர்களும், ஆகிய எமன் பணியாளர், நம் வலிமைக்கு இவ்வுலகம் முழுமையும் அஞ்சாநிற்கும்; இன்று அஞ்சாதவர் அரக்கர்தாமோ' எனக் கூறிக்கொண்டு வந்து ஆரவாரித்தனர்.

கு: 'வெஞ்சினம் உருக்கொண்டென்ன மேனியர்' என்றது தற் குறிப்பேற்ற உவமை. வெஞ்சினம்-கொடிய கோபம். மஞ்சு - மேகம். இடி இடித்தாற்போன்ற சொல்லர் என்பார், இடி இடித்த சொல்லர் எனத் தொகுத்துக் கூறியவாறு. முழை-குகை, முழை போலத் திறந்தவாயர் என உவமையுருபு விரிக்க. நமன் தமர் என்றது, எமனுடைய பணியாளரை. ஞாலம் எல்லாம் அஞ்சும் நம் வலிக்கு இராவணன் அஞ்சாது நரகக் குழியில் கிடந்தோரைக் கரையேற்றினுனே என்ற எண்ணத்தால், நம் வலிக்கு இன்று அஞ்சார் அரக்கரோ! என வியந்து ஆரவாரித்தார் என்க. எமனுக்குப் பணியாளரின் மேனியும் கண்ணும், சொல்லும், வாயும், நெஞ்சும் இத்தன்மையன எனப் புலப்படுத்திய முகத்தான் அவர் தம் கடுமையின் பெருமை காட்டியவாறு. (௫௬)

எமனுடை நரகக் காவலர் இராவணனைத் தாக்குதல்

388. என்றுரைத் தெரியிற் பொங்கி
யிராவணன் றன்னைச் சூழ்ந்து
கொன்றுயிர் குடித்து மென்று
கொதித்துமேன் மண்டி வீழ
வன்திற லரக்கனுன மகோதரன்
முதலா யுள்ளோர்
சென்று தாக்கினர் களந்தச்
செருக்கினர் சேனையோடும்.

என்று உரைத்து எரியிற் பொங்கி,
'இராவணன் தன்னைச் சூழ்ந்து
கொன்று உயிர் குடித்தும்' என்று
கொதித்துமேல் மண்டி வீழ
வன்திறல் அரக்கனான மகோதரன்
முதலா யுள்ளோர்
சென்று தாக்கினர்கள், அந்தச்
செருக்கிளர் சேனையோடும்.

பொ: (எமன் பணியாளர்) என்று சொல்லிக்கொண்டுநெருப்புப் போலக் சினந்தெழுந்து, 'இராவணனைச் சூழ்ந்துகொண்டு கொன்று அவனுயிரைக் கவர்வோம்' என்று மனம் கொதித்து இராவணன்மேல் நெருங்கித் தாக்க, வலிய திறமை மிக்க அரக்கனான மகோதரன் முதலிய அரக்கர்கள் சென்று, அந்தப்போர்க் கிளர்ச்சியுள்ள எமன் சேனையோடு போர் செய்தார்கள்.

கு: எரியிற் பொங்கி என்றது, எமன் கோபத்தைப் புலப்படுத்த வேண்டி. நெருப்பெனச் சினந்து என்றவாறு. அழிப்பதில் நெருப்புச் சிறப்புடையதாகலின் அழிக்கும் சினத்திற்கு அதனை உவமை கூறியவாறு. குடித்தும் என்பது தன்மைப்பன்மை வினைமுற்று. குடிப்போம் என்றவாறு. கவர்தலைக் குடித்தலாக உபசரித்தவாறு. செருக்கிளர் சேனை. போர்க் கிளர்ச்சியினையுடைய சேனை. எமன் தமர் இராவணனைத் தாக்கப் புகுந்தபோது மகோதரன் முதலிய அரக்கர் இடைப்புகுந்து தாக்கினர் என்க. (௯௰)

எமன் சேனை அரக்கரைத் தாக்குதல்.

389. தருக்குடைக் தருமன் சேனை
தாக்கிய வரக்கன் சேனை
வெருக்கொள நெருக்கிப் புக்கு
வெங்களத் தவிய நூறி

அரக்கர்கோன் கரிய மேனி
யணிதிகழ் முருக்குப்பூத்த
பொருப்பெனக் குருதி பொங்கப்
பொருபடை தூவி யார்த்தார்.

தருக்கு உடைத் தருமன் சேனை
தாக்கிய அரக்கன் சேனை
வெருக்கொள நெருக்கிப் புக்கு,
வெங்களத்து அவிய நூறி
அரக்கர் கோன் கரிய மேனி,
அணிதிகழ் முருக்குப் பூத்த
பொருப்பு எனக் குருதி பொங்கப்
பொருபடை தூவி ஆர்த்தார்.

பொ: வலிமை மிக்குடையோம் என்ற செருக்கினையுடைய எமதருமன் சேனை வீரர், தம்மைத் தாக்கிய இராவணனது சேனை அஞ்சுமாறு நெருக்கிப் புகுந்து, வெவ்விய போர்க்களத்தில் அச்சேனை அழியுமாறு கொன்று விட்டு, இராவணனுடைய கரிய உடம்பு, அழகு விளங்கும் முருக்கம்பூ பூத்த மலை போன்று தோன்ற இரத்தம் கொப்பளிக்கப் போர் செய்யும் அம்பு முதலிய ஆயுதங்களைச் சொரிந்து ஆர்ப்பரித்தார்கள்.

கு: தருக்கு – செருக்கு; தம் மிகுதிபற்றி உள்ளத்தே தோன்றும் பெருமித உர்ணவு. தருமன் என்றது எமதருமனை· வெருக்கொள–அஞ்ச. அவிய–அழிய–இறக்க. நூறுதல்-அழித்தல்-கொல்லுதல். இராவணனது கரிய உடம்பில் செந்நிறக் குருதி பாயும் தோற்றம் முருக்கம்பூ பூத்துள்ள மலை போன்றிருந்தது என்பார், 'அரக்கர்கோன் கரிய மேனி அணிதிகழ் முருக்கம் பூத்த பொருப்பெனக் குருதி பொங்க' என்கிறார். மலை, கரிய மேனிக்கும் மலையில் பூத்த முருக்கம்பூ, மேனியில் பொங்கும் குருதிக்கும் உவமை. பொருபடை என்றது, போர்க் கருவிகளை. தூவுதல்-சொரிதல். பெரிதும் முயன்று' சொரியாமல் எளிதாகச் சொரிந்தார்கள் என்பது தோன்றத் தூவி' என்றார். முருக்கு என்பது ஒருவகை மரம், தருமன் சேனைவீரர் நெருக்கிப்புக்கு நூறி, தூவி ஆர்த்தார் என்க.

(சுக)

இராவணன் எமன் சேனையைத் தாக்குதல்.

390. விரிகட லிலங்கை வேந்தன்
மேவிய வூழிக் காலத்
தெரியென வெழுந்து பொங்கி
யிருபது கரங்களாலும்
பொருபடை வழங்கித் தெய்வப்
புட்பகங் கடாவி வெம்போர்த்
தருமன்றன் சேனை யெல்லாம்
தரைபடச் சாடுங்காலை.

விரிகடல் இலங்கை வேந்தன்
மேவிய ஊழிக் காலத்து
எரி என எழுந்து பொங்கி,
இருபது கரங்களாலும்
பொருபடை வழங்கி, தெய்வப்
புட்பகம் கடாவி, வெம்போர்த்
தருமன் தன் சேனை எல்லாம்
தரைபடச் சாடும் காலை.

பொ: விரிந்த கடல் நடுவில் உள்ள இலங்கை நகர்க்கு, அரசனாகிய இராவணன், ஊழிக் காலத்துத் தோன்றிய பெரு நெருப்புப்போல எழுந்து கோபித்து, தெய்வத்தன்மை வாய்ந்த புட்பக விமானத்தைச் செலுத்தித் தன் இருபது கைகளாலும் போர்க்குரிய ஆயுதங்களைச் சொரிந்து, கொடிய போர்த் திறனுடைய எமதருமன் சேனை வீரர் எல்லாம் தரையில் இறந்து படுமாறு மோதும்போது.

கு: 'ஊழிக்காலத்து மேவிய எரியென' எனக்கூட்டுக பொங்குதல்-கோபித்தல். புட்பகங்கடாவி, இருபது கரங்களாலும் பொருபடை வழங்கிச் சாடுங்காலை என இயையும், இராவணன் ஏவிய படைகளில் மிகுதி புலப்பட 'வழங்கி' என்றார். வழங்குதல்

வரையறையின்றி ஏவுதல். கடாவி-செலுத்தி; வெம்போர்ச் சேனை என இயையும். இராவணனது ஒவ்வொரு கரமும் ஒவ்வொரு படையை ஏவியது என்பார் இருபது கரங் களாலும் பொருடை வழங்கி என்றார். (கூஉ)

எமன் சேனை இராவணனைத் தாக்குதல்

391. செருவழி தருமன் சேனை
திரண்டொருங் கெழுந்து செல்லின்
உருவழி யரக்கன் மேனி
யுள்ளுறப் படைக ளுந்தி
ஒருவழி யிருவர் போகா
வகையுறு படையை யோட்டிப்
பொருவழி யரக்கன் சீறிப்
புட்பக நின்றும் பாய்ந்தான்.

செருஅழி தருமன் சேனை திரண்டு
ஒருங்கு எழுந்து, செல்லின்
உருஅழி அரக்கன் மேனி
உள்உறப் படைகள் உந்தி,
ஒருவழி இருவர் போகா
வகை உறுபடையை ஒட்டிப்
பொருவழி அரக்கன் சீறிப்
புட்பகம் நின்றும் பாய்ந்தான்.

பொ: போரில் அழிந்த எமதருமன் சேனைவீரர், பின்பு தேறி எழுந்து ஒருங்கே திரண்டு, கரியமேகத்தின் நிறத்தையும் தாழப்பண்ணுகின்ற இராவணனது கரிய மேனியின் உள்புகுமாறு படைகளைச் செலுத்தியும், அவன் சேனையில்உள்ளோர் ஒருவழியில் இருவர் சேர்ந்து போகாதபடி சிறந்த படைக்கலங்களை ஓட்டியும் போர்செய்யும் போது இராவணன் கோபித்துத் தன் புட்பக விமானத்தில் நின்றும் தரையில் பாய்ந்தான்.

கு : செரு—போர். இராவணனுக்குத் தோற்ற தருமராசன் சேனை வீரர்கள் பின்புமெல்ல எழுந்து, ஒன்றுசேர்ந்து மீண்டும் இராவணனோடு போர் புரிந்தார்கள் என்றவாறு. செல்—மேகம் இராவணன் மேனியின் கருமை மேகத்தின் கருமையினும் மேம் பட்டது, என்பார் 'செல்லின் உருவழி அரக்கன் மேனி' என்றார் உரு—நிறம். மேகத்தின் நிறத்தை அழித்தலாவது கருமுகிலின் நிறத்தினும் சிறந்த கருநிறத்ததனுதல். உந்துதல்—செலுத்துதல். ஒருவர் சென்ற வழியில் மற்றொருவரும் சென்றால் மீண்டும்வலிமை பெற்றுப் போர்செய்யத் திட்டமிடுவார்கள் ஆதலால், ஒருவழி இருவர் போகா வகை படையை ஓட்டினர் என்க. இவ்வாறு தனக்குத் தோற்ற எமன் சேனை, தன்னையும் தன் சேனையையும் தாக்குவதுகண்டு இராவணன் பொருது சீறினன் என்றவாறு. (௩௯௧)

இராவணன் எய்த பாசுபதத்தால் எமன் சேனை அழிதல்

392. வரிசிலை கையில் வாங்கி
வாளெயிற் றரக்க னீசன்
பொருபடை விடுத லோடும்
பொங்கெரி பரந்து மண்டத்
தருமன்வெஞ் சேனை தாவத்
தாவிய தால மென்னத்
திரிபுர மென்ன வெந்து
தீய்ந்தனர் சிலைக்கை வீரர்.

வரிசிலை கையில் வாங்கி வாள் எயிற்று அரக்கன், ஈசன் பொருபடை விடுதலோடும் பொங்கு எரி பரந்து மண்டத் தருமன் வெஞ் சேனை தாவத் தாவியது ஆலம் என்னத் திரிபுரம் என்ன வெந்து தீய்ந்தனர் சிலைக்கை வீரர்.

பொ : ஒளிபொருந்திய பற்களையுடைய இராவணன், ஈசன் அம்பாகிய பாசுபதம் என்னும் போர் செய்யும் படையை விடுதலும் அது, மிக்க தீப் பரந்து நெருங்கத் தருமனது கொடியசேனை தாவி

ஓடுமாறு நஞ்சுபோலத் தாவிச்சென்றது; வில்லேந்திய கையினை யுடைய எமன் சேனை வீரர்கள், திரிபுரம் எரிந்ததுபோல வெந்து தீய்ந்து போயினர்.

கு: ஈசன்பொருபடை என்றது, பாசுபதத்தை, பாசுபதக் கணை செல்லுங்கால் இருபுறமும் மிக்க தீப்பரவி நெருங்கச் சென்றது என்பார், 'பொங்கு எரிபரந்து மண்டத் தருமன் வெஞ்சேனை தாவத் தாவியது ஆலம் என்ன' என்றார். சேனை தாவுதலாவது அஞ்சி ஓடுதல். ஆலம் விரைந்து பரவுவது போல, ஈசன்கணை விரைந்து சென்றது என்றவாறு. சிவபிரான் சிரிப்பினால் திரிபுரம் வெந்து தீய்ந்ததுபோலச் சிவன் கணையால் எமன் படைவீரர் வெந்து தீய்ந்தனர் என்க. (கூசு)

**இராவணன் ஆரவாரத்தைக் கேட்டு எமன் சினந்து புறப்படுதல்**

393. போர்ப்படை யொடிய நூறிப்
புனைகழ லரக்க னார்ப்ப
ஆர்ப்பொலி செவியி னெய்த
வனலுயிர்த் தழன்று பொங்கித்
தார்ப்பொலி குருதி வண்ணத்
தாண்டுமாப் பூண்டு செம்பொன்
தேர்ப்பொலிந் திலங்கு மேனித்
தென்புலத் திறைவன் சீறி.

**போர்ப்படை ஒடிய நூறி, புனைகழல் அரக்கன் ஆர்ப்ப ஆர்ப்பு ஒலி செவியின் எய்த அனல் உயிர்த்து அழன்று பொங்கி, தார்ப் பொலி குருதி வண்ணத் தாண்டுமாப் பூண்டு, செம்பொன் தேர்ப் பொலிந்து இலங்கும் மேனித் தென்புலத்து இறைவன்சீறி.**

பொ: போர்செய்யும் எமனது சேனை மாயுமாறு அழித்து விட்டு, வீரக்கழல் அணிந்த இராவணன் ஆரவாரிக்க, அவன் ஆரவாரத்தின் ஓசை தன் காதில்பட, நெருப்புப்போல பெருமூச்சு

விட்டு மனம் கொதித்துக் கிளர்ந்து கிண்கிணியால் பொலிவுபெற்ற இரத்த வண்ணத்தனவாகிய, தாவிச் செல்லுகின்ற, குதிரைகள் பூட்டப்பெற்றுச் செம்பொன்ஞலியன்ற தேரில் அமர்ந்து பொலிவுடன் விளங்கும் மேனியனுய் எமன் கோபித்து.

கு: குளகம். சீறித் தோன்றினன் எனப் பின் முடியும். ஒடிதல் — மாய்தல், நூறுதல் — அழித்தல். அரக்கன் என்றது இராவணனை. இராவணனது ஆர்ப்பொலி கேட்டவுடன் எமன் அனல்போல் உயிர்த்து மனம் கொதித்துக் கிளர்ச்சியுற்றுக் கிண்கிணியணிந்த செந்நிறக் குதிரைகள் பூட்டப்பெற்ற பொற்றேரேரி அமர்ந்தான் என்றவாறு தென்புலத்திறைவன் என்றது, தென் திசைக் காவலனுகிய எமனை. தார் - கிண்கிணிமாலை; குதிரையின் கழுத்தில் அணிவது. தாரால் பொலிதலும் குருதி வண்ணத்ததாதலும் தாவிச் செல்லுதலும் குதிரைக் குரியன. தாண்டுமா—தாவிச் செல்லும் குதிரை. இதனுல், இயமனுக்கு எருமை யூர்தியேயன்றிச் செங்குதிரைபூட்டிய பொற்றேரும் உண்டு என்பது பெறப்படுகின்றது. (சூரு)

இயமன் இராவணன் முன் தோன்றுதல்.

394 நெற்றியிற் காலன் செல்ல
நீள்பெருங் கால பாசம்
மற்றைவெங் கால தண்டம்
வந்திரு மருங்குஞ் செல்ல
உற்றபே ரூழிக் காலத்
துருத்திர மூர்த்தி யொப்பச்
சுற்றிய சேனை யோடும்
தோன்றின னுலக முட்க.

நெற்றியில் காலன் செல்ல, நீள்பெருங் காலபாசம்
மற்றை வெங்கால தண்டம் வந்து இருமருங்கும் செல்ல,
உற்றபேர் ஊழிக் காலத்து உருத்திர மூர்த்தி ஒப்ப,
சுற்றிய சேனையோடும் தோன்றினன் உலகம் உட்க.

**பொ :** சேனையின் முகப்பில் காலன் செல்லவும், நீண்ட பெரிய காலபாசமும் மற்றைய கொடிய கால தண்டமும் வந்து இருபுறமும் செல்லா நிற்கவும், பெரிய ஊழிக்காலத்தில் வந்துற்ற உருத்திரமூர்த்தியைப் போலத் தன்னைச் சூழ்ந்துள்ள சேனையோடும் உலகம் அஞ்சி நடுங்குமாறு, தோன்றினன்.

**கு :** தென்புலத்திறைவன் சீறி, காலன் நெற்றியில் செல்ல, காலபாசம், காலதண்டம் இருமருங்கும் செல்ல, உருத்திரமூர்த்தி ஒப்ப, உலகம் உட்கத் தோன்றினன் என்று குளகமாய் முடியும். காலன் என்பான் இயமனுக்கு ஏவலாளன் – உயிர்களுக்குக் கால அறுதியைச் செய்கின்றவன். அத்தகைய காலன் சேனையின் முன்னணியில் செல்லவும் காலபாசமும் காலதண்டமும் தன் இரு புறமும் செல்லவும் பேரூழிக் காலத்து உலகை அழிக்கத் தோன்றும் உருத்திரமூர்த்தியைப் போன்றவனாய்ச் சேனைசூழ இயமன் தோன்றினன் என்க. உட்குதல் – அஞ்சுதல். இராவணனோடு போர்புரியச் சினந்துகொண்டுவரும் இயமனின் தோற்றம், உலகை யழிக்கத் தோன்றும் உருத்திர மூர்த்தி போன்றிருந்தது என்ற வாறு. கால பாசமும் காலதண்டமும் இயமனுடைய ஆயுதங்கள். அவை அவனால் ஏந்தப்படாமலே அவன் இருபுறத்தும் சென்றன என்றவாறு. பேரூழிக் காலத்து உற்ற உருத்திர மூர்த்தி என மாறிக் கூட்டுக. (சு.சு)

### இயமனைக் கண்டு இராக்கதர் சேனை இரிந்தோடுதல்

395. நட்டமா முலக மின்றே
நாமினிப் பிழைப்ப தெங்கே
எட்டனை யறிவு மில்லா
விராவண வேழை யின்று
பட்டது படுக வென்று
பயமுறப் பின்பு பாராக்
கெட்டன ரரக்க ரெல்லாங்
கொடாதிலங் கேச னின்றான்.

**'நட்டம் ஆம் உலகம் இன்றே; நாம் இனிப் பிழைப்பது எங்கே?**
**எள் தனை அறிவும் இல்லா இராவண ஏழை இன்று**
**பட்டது படுக' என்று பயமுறப் பின்பு பாராக்**
**கெட்டனர் அரக்கர் எல்லாம்; கெடாது இலங்கேசன் நின்றான்.**

**பொ :** உலகம் இன்றைக்கு அழியும்; இவ்வுலகில் உள்ள நாம் இனி உய்வது என்பது எங்கேயுளது? எள்ளளவு அறிவும் இல்லாத இராவணனாகிய அறிவிலி, இன்றைக்கு படுவது படட்டும்; என்று அச்சம் பொருந்தப் பின்பக்கம் பார்த்துக்கொண்டு அரக்கர் எல்லாம் கெட்டு ஓடினர்; இலங்கைக்கு அரசன் இராவணன் மட்டும் ஓடாமல் நின்றான்.

**கு :** உலகம் இன்றே நட்டமாம் என மாறுக. நட்டம் ஆதல் என்பது அழிதலை உணர்த்தியது. சிறுமைக்கு எள் என்னும் கூலத்தைச் சொல்வது வழக்கம் ஆதலின், சிறிதும் அறிவில்லா இராவணன் என்று சொல்லவேண்டியவிடத்தில் 'எட்டனை யறிவு மில்லா இராவணன்' என்றார். ஏழை – அறிவிலி. படுவது படுக என்னுமல் காலவழுவமைதியாக 'பட்டதுபடுக' என்றார். பயம் - அச்சம். ஓடுகின்றவர்கள் முன்னே பார்த்து ஓடாமல் தம்மை யாரேனும் பின்பற்றுவார்களோ என்ற அச்சத்தால் பின்பு திரும்பிப் பார்த்துக்கொண்டே கெட்டோடினர் என்றவாறு. இலங்கேசன்– இராவணன். கெடாது என்பது கெட்டோடாது என்னும் பொருளது. (௬௭)

**இயமன் இராவணன்மேல் ஈட்டி முதலியவற்றை ஏவுதல்**

396. நின்றவ னிலைமை கண்டு
நெய்சொரி யழலிற் பொங்கி
வென்றன னன்றோ வென்முன்
வெருவல னின்ற போதே
என்றுதென் றிசைக்கு நாத
னீட்டிவேல் குலிச மேவச்
சென்றவன் றிறத்திற் றைக்கத்
தென்னிலங் கேசன் சீறி.

நின்றவன் நிலைமை கண்டு நெய்சொரி அழலின் பொங்கி,
வென்றனன் அன்றே, என்முன் வெருவலன் நின்றபோதே;
என்றுதென் திசைக்கு நாதன், ஈட்டி வேல் குலிசம் ஏவ,
சென்றவன் நிறத்தில் தைக்கத் தென் இலங்கேசன் சீறி.

பொ : அஞ்சாது நின்றவனாகிய இராவணனது நிலைமையைப் பார்த்துத் (தன்னைக் கண்டும் அஞ்சவில்லையே என்று) நெய்பெய்த நெருப்புப்போலச் சினம்பொங்கி 'என்முன் அஞ்சாது இவன் நின்ற பேர்தே என்னை வென்றனன் அல்லனோ?' என்று நினைந்து தென் திசைக் காவலனாகிய இயமன், ஈட்டி, வேல், வச்சிராயுதம் என் பனவற்றை இராவணன்மேல் செலுத்த, அவை சென்று அந்த இராவணன் மார்பில் தைக்க இராவணன் கோபித்து.

கு : சீறிக் கார்முகம் வளைய வாங்கி என வருஞ்செய்யுளில் முடியும்; குளகம். முன்னமே எரியா நின்ற நெருப்பில் நெய் சொரிந்தால் பெரியதாகப் பொங்கிக் கொழுந்துவிட்டெரியும் இயல் பினது நெருப்பு. முன்னமே இராவணனது ஆரவாரம் கேட்டுச் சினந்து வந்த இயமன், தன்னைக் கண்டும் அஞ்சாது நிற்கின்ற இராவணனைப் பார்த்த அளவில் சினமிக்கவன் ஆனான் என்பது காட்ட 'நெய் சொரி அழலிற் பொங்கி' என்றார், 'நெய்பெய் தீயின் எதிர்கொண்டு (குறுந்-106) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். 'என்முன் வெருவலன் நின்றபோதே வென்றனன் அன்றோ?' என மாற்றுக. நமன் தமர், ஞாலமெல்லாம் அஞ்சு நம் வலிக்கு இன்று அஞ்சாது அரக்கர்கள் வந்தடர்த்தார். (16) என்று முன் கூறியதுபோலவே, இங்கு நமனும் 'என்முன் வெருவலன் நின்றபோதே வென்றனனன்றோ' என்று கூறலானான். இதனால் நமன் தன் பெருமை புலப்படுத்தியவாறு. குலிசம் – வச்சிராயுதம். நிறம் – மார்பு. (சூ அ)

இராவணன் இயமன்மேல் அம்புசொரிதல்

397. கார்முகம் வளைய வாங்கிக்
கார்முக் மாரி போலக்
கூர்முக வாளி யாலே
குறித்தவை துணித்து வீழ்த்த

நேர்முகத் தெதிரிலாத நிருதனு
　　நிறத்தில் வன்னி
ஆர்முகக் கணைக ளுந்தி
　　யந்தகற் கலக்கண் செய்தான்.

கார்முகம் வளைய வாங்கி, கார்முக மாரிபோலக்
கூர்முக வாளியாலே குறித்தவை துணித்து வீழ்த்து
நேர்முகத்து எதிர்இலாத நிருனுதம் நிறத்தில் வன்னி
ஆர்முகக் கணைகள் உந்தி அந்தகற்கு அலக்கண் செய்தான்,

பொ : வில்லை வளைத்துக் கார்காலத்து மழைபோலக் கூரிய முகத்தினை உடைய அம்பினாலே தன்னைக் குறித்துவந்த ஈட்டி முதலியவற்றைத் துணித்து வீழ்த்தி விட்டு, போர் நேருமிடத்துத் தனக்கு நிகரில்லாது போர்செய்யவல்ல இராவணனும் நெருப்பில் வைத்துக் கூர்மையாக்கப்பட்ட முனையினையுடைய கணைகளை மார்பில் செலுத்தி எமனுக்குத் துன்பத்தைச் செய்தான்.

கு : கார்முகம் – வில். கார்முகமாரி என்றது கார்காலத்து மழையை. முகம் இங்கு இடத்தையுணர்த்தாது காலத்தையுணர்த்தியது. குறித்தவை என்றது, தன்னைக் குறித்து வந்த ஈட்டியும் வேலும் வச்சிராயுதமும் ஆகியவற்றை; நிருதன் துணித்து விழ்த்தி உந்தி அந்தகற்கு அலக்கண் செய்தான் எனஇயையும். வன்னி – நெருப்பு. நெருப்பில் வைத்து வடித்த கூரிய அம்புகள் என்பார், வன்னி ஆர்முகக் கணைகள் என்றார். உந்துதல் – செலுத்துதல். அலக்கண் – துன்பம். அந்தகன் – இயமன். (6௯)

ஏழுநாள் பொருதபின் இராவணன் தேர்ப்பாகன் முதலியோர்மேல் ஆயிரங்கணைகளை விடுதல்

398. இருவரு மிந்த வண்ண
　　மேழுநா ளிடைவி டாதங்
கொருவரை யொருவர் வெல்லத்
　　தொடங்குவ ருபாயம் பார்ப்பர்

பொருவழி யரக்கன் சீறிப்
பொருந்துதேர்ப் பாகன் றன்மேல்
தருமன்மேற் காலன் றன்மேற்
சரங்களா யிரந்தைப் பித்தான்.

**இருவரும் இந்தவண்ணம் ஏழுநாள் இடைவிடாது அங்கு ஒருவரை ஒருவர் வெல்லத் தொடங்குவர், உபாயம் பார்ப்பர், பொருவழி அரக்கன் சீறிப் பொருந்துதேர்ப் பாகன் தன்மேல் தருமன்மேல் காலன் தன்மேல் சரங்கள் ஆயிரம் தைப்பித்தான்.**

பொ: இராவணனும் இயமனும் இவ்வாறு ஏழு நாள்வரையில் இடைவிடாமல் ஒருவரை ஒருவர் வெல்லத்தொடங்குபவராயும் உபாயம் பார்ப்பவராயும் போர்செய்யும்போது, இராவணன் மிகவும் கோபித்து இயமனது தேரில் பொருந்தியுள்ள தேர்ப்பாகன் மேலும் எமதருமன்மேலும் காலன்மேலும் ஆயிரம் அம்புகள் சென்று தைக்குமாறு ஏவினன்.

கு: இந்த வண்ணம் என்றது, வெற்றி தோல்வியில்லாமல் என்றபடி. வெல்லத் தொடங்குபவராகவும், உபாயம் பார்ப்பவராகவும் பொருவழி என முற்றெச்சமாக்கி முடிக்க. காலன், எமன் ஏவலாளன்; சேனையின் முன்னணியில் நின்றவன். தைப்பித்தான் என்பது பிறவினை; தைக்குமாறு ஆயிரம் அம்புகளை ஏவினன் என்பதே பொருள். (எ௰)

**இராவணன்மேல் இயமன் சீறுதல் 71, 72**

**வேறு**

399. என்பு லத்திய மேனி யிருந்தவன்
வன்பு லத்தியல் மாற்றிய மாமுனி
நன்பு லத்தியன் நன்மகன் மைந்தன்மேல்
தென்பு லத்திய மன்மிகச் சீறினன்.

என்பு உலத்திய மேனி இருந்தவன் -
வன்புலத்து இயல் மாற்றிய மாமுனி -
நன்புலத்தியன் நன்மகன் மைந்தன்மேல்
தென்புலத்து இயமன் மிகச் சீறினன்.

பொ: என்பு எழுந்து உலர்வுகின்ற (வற்றிய) உடம்பின ைகிய பெரிய தவசியும், உலகப் பொருள்களில் செல்லுகின்ற வலிய ஐம்புலங்களின் இயல்பை இறைவன்பால் செல்லுமாறு மாற்றிய மாமுனிவனும் ஆகிய புலத்திய முனிவனது நல்ல மகனுகிய விச்சுரவசுவிற்கு மகனுகிய இராவணன்மேல் தென் திசைக்குத் தலைவனுகிய இயமன் பெரிதும் கோபம் கொண்டான்.

கு. என்பு உலத்திய மேனி என்றது, நண்பகல் பலவுடன் கழிந்த வுண்டியை யுடைமையால் தசைப்பற்று இன்றி என்பு மேலெழுந்து தோன்றி இயங்கும் இயல்பினையுடைய உடம்பு என்ற வாறு. உலாத்திய என்பது உலத்திய எனக் குறுகிற்று. என்பு உலாவுகின்ற மேனி என்றவாறு. "என்பெழுந்தியங்கும் யாக்கையர் நண்பகல் பலவுடன் கழிந்த வுண்டியர்" (திருமுருகாற்றுப்படை-130, 131) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். வன்புலத்து இயல் மாற்றுதலாவது, உலகப் பொருள்களைக் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் பழகிய ஐம்பொறிகளை இறைவன் பால் செலுத்திக் கண்ணவனைக் காணவும் காதுஅவனைக் கேட்கவும் வாய் அவனைப் பாடவும் செய்து மடைமாற்றுதலை. இருந்தவனும் மாமுனியுமாகிய புலத்தியன் என்க. நன்மகன் என்றது விச்சிர வசுவை. அவன் அமைந்தன் என்றது முனிவர் பரம்பரையின் ஆற்றலைப் புலப்படுத்தவேண்டி என்க'. வன்புலம் என்றது தன் வழி யுயிர்களை யீர்க்கும் ஆற்றலுள்ள புலன்களை என்றவாறு. (௭௧)

400. ஆல மென்ன வனலென்ன வந்தகன்
ஞால மெல்லா நடுங்கக் கொதித்திடும்
வேலை வெங்கன லென்ன வெகுண்டுவெங்
கால னன்னவற் கின்ன கழறினன்.

ஆலம் என்ன, அனல் என்ன, அந்தகன்
ஞாலம் எல்லாம் நடுங்கக் கொதித்திடும்
வேலை வெங்கனல் என்ன வெகுண்டு வெம்
காலன் அன்னவற்கு இன்ன கழறினான்.

பொ: பாற்கடலில் தோன்றிய விடம்போலவும் கடலில் தோன்றிய வட அனல்போலவும், எமன், உலகம் எல்லாம் நடுங்குமாறு உளம்கொதித்து வெகுளும்போது, கொடிய நெருப்புப்போலச் சினந்து வெவ்விய காலன் அந்த இயமனக்கு இந்தச் சொற்களைச் சொல்லலானான்.

கு: கொதித்தல் இங்குப் பெருங்கோபம் கொள்ளுதலை உணர்த்தியது. வேலை என்றது பொழுது என்னும் பொருளது. காலன், தான் இருக்க இயமன் இராவணன் மேற் சென்றதுபற்றி வெகுண்ட நிலைமையை யுணர்த்த 'வெங்கனலென்ன வெகுண்டு' என்றார். அன்னவற்கு என்றது இயமனுக்கு என்றவாறு. கழறுதல் – இடித்துரைத்தல். (எஉ)

காலன் கூறியது

401. என்னை யேவுதி யென்னி லிராவணன்
றன்னை நா னுயிருண்பன் றடையிலா
வன்னி யன்ன மதுகை டவர்முதல்
ஒன்ன லாருயி ருண்ட துணர்தியால்.

என்னை ஏவுதி என்னில் இராவணன்
தன்னை நான் உயிர் உண்பன்; தடைஇலா
வன்னி அன்ன மதுகைடவர் முதல்
ஒன்னலார் உயிர் உண்டது உணர்தியால்.

பொ: என்னைப் போர்க்கு அனுப்புவாயாயின் இராவணனை யான் உயிர்கவர்வேன்; தடையிலாது பரவுகின்ற நெருப்பினைப் போன்ற பேராற்றலுடைய மது கைடவர் முதலாகிய பகைவர்கள் உயிரை யான் முன்பு கவர்ந்திருப்பதை உணர்ந்து பார்ப்பாயாக.

கு : இராவணன் உயிரைக் கவரத்தனக்கு ஆற்றல் உண்டு என்பதை நிறுவவேண்டி, முன்பு மது கைடவர் முதலிய பகைவரைக் கொன்றதை நினைப்பித்தான் என்க. மது, கைடவர் என்பார் இருவரும் திருமாலின் காதிற் பிறந்த அசுரர் ஆவர். வன்னி - நெருப்பு. ஒன்னலார் – பகைவர். (எங)

**இயமன் காலதண்டத்தை இராவணன்மேல் விடக் கருதுதல்**

402. கால னிவ்வகை கூறிடக் காணிவன்
கால முண்பெ னெனநமன் கண்ணெரி
கால மன்னுயி ரெல்லாங் கலங்கிடக்
கால தண்டம் விடுவான் கருதினன்.

**காலன் இவ்வகை கூறிடக் 'காண்! இவன்**
**காலம் உண்பென், என' நமன், கண் எரி**
**கால, மன்னுயிர் எல்லாம் கலங்கிட,**
**கால தண்டம் விடுவான் கருதினன்.**

பொ : காலன் இவ்வாறு சொல்ல, இயமன், இந்த இராவணனது ஆயுட்காலத்தைக் கவர்வேன்; பார்ப்பாயாக! என்று கூறிக் கண்ணில் சினக்கனல் சிந்தவும், உலகில் நிலைபெற்ற உயிர்கள் எல்லாம் கலங்கவும் காலதண்டம் என்னும் ஆயுதத்தை விடக் கருதினன்.

கு : இவன் காலம் உண்பென் என்றது, இராவணனுடைய ஆயுட்காலத்தைக் குறைத்து அவன் உயிரைக் கவர்வேன் என்றவாறு. கண் எரி காலுதலாவது, கண்ணில் சினத்தால் தீப் பொறி பரத்தல்; இயமன் காலதண்டம் விடுவானயின் உலகத்து உயிர் எல்லாம் கலங்கும் என்றபடி. (எச)

**பிரமன் வந்து எமனுக்குச் சொல்லுதல்**

403. ஆய காலை யனைத்துல கங்களும்
மாயு மின்றென வானவ ரஞ்சிடத்

தூய நான்முகன் ருேன்றியத் தொல்லுயிர்
நாய கன்றனை நண்ணி யிவை சொல்வான்.

ஆய காலை 'அனைத்து உலகங்களும்
மாயும் இன்று' என வானவர் அஞ்சிட
தூய நான்முகன் தோன்றி, அத்தொல்லுயிர்
நாயகன் தனை நண்ணி இவை சொல்வான்.

பொ : அப்பொழுது 'எல்லா உலகங்களும் மாய்ந்துபோகும்' என்று தேவர்கள் அஞ்சாநிற்க, அதனை யுணர்ந்த தூய்மையுடைய பிரமன் அங்குத் தோன்றி அந்தப் பழமையான உயிர்கட்கு நாயகனாகிய இயமனை அணுகி, இவற்றைச் சொல்வான் ஆனான்.

கு : வானவர் அஞ்சியதை யுணர்ந்த பிரமன் இயமனை நணுகிச் சில சொல்லுகின்றான் என்றவாறு. அத்தொல்லுயிர் நாயகன் என்றது இயமனை. உயிர்களைக் கவர்ந்து அவரவர் அறம் பாவங்களுக்கேற்ப இன்பத் துன்பங்களைத் துய்க்கச் செய்பவன் இயமன் ஆதலின் அவனை அப்பெயரால் கூறினர். (எரு)

காலதண்டத்தை இராவணன் மேல் விடல் வேண்டாவெனல்

404. திண்ட டம்புயத் தென்னிலங் காதிபன்
பண்டு பெற்ற வரத்தின் பலத்தினால்
தண்டு நீவிடி னாங்கவன் றன்னுயிர்
உண்டி டாது விடுத லொழிதியால்.

திண் தடம்புயத் தென்இலங் காதிபன்
பண்டு பெற்ற வரத்தின் பலத்தினால்
தண்டு நீ விடின், ஆங்கவன் தன் உயிர்
உண்டிடாது; விடுதல் ஒழிதி யால்.

பொ : 'திண்ணிய பெரிய தோள்களையுடைய தென்னிலங்கைக்கரசனாகிய இராவணன், முன்பு தவஞ்செய்து பெற்ற வரங்களின் வலிமையால் காலதண்டத்தை நீ விட்டால் அத்

தண்டம் அவனுயிரை உண்ணாது ஆதலால், அத்தண்டத்தை விடுவதை நிறுத்துக.

கு: இலங்காதிபன் என்பது இலங்கா அதிபன் என்ற இரு சொற்கள் தீர்க்க சந்தியால் சேர்ந்தது. வரத்தின் பலத்தினால் அவன்றனுயிர் உண்டிடாது என இயையும். இராவணன் தவஞ் செய்து பெற்ற வரத்தின் வலிமை அத்தகையது என்றவாறு. 'விடுதல் ஒழிதியால்' என்று நான்முகன் இவ்வாறியம்பலும் என வருஞ் செய்யுளில் முடியும்; குளகம். விடுதல் ஒழிதலாவது, விடாமல் இருத்தல். (எசு)

இயமன் தண்டினைவிடாது நிற்றல்

405. என்று நான்முக னிவ்வா றியம்பலும்
தென்றி சாதிபன் றீய வரக்கன்மேல்
வென்றி மேவிய தண்டை விடாதவன்
நின்ற காலை நிருதர் குலாதிபன்.

என்று நான்முகன் இவ்வாறு இயம்பலும்
தென்திசாதிபன் தீய அமைச்சன்மேல்
வென்றி மேவிய தண்டை விடாது அவன்
நின்ற காலை நிருதர் குலாதிபன்.

பொ: என்று பிரமன் இவ்வாறு சொன்னவுடன் தென் திசைக்குத் தலைவனாகிய இயமன், கொடியவனாகிய இராவணன் மேல் வெற்றி பொருந்திய காலதண்டினை விடாமல் அங்கு நின்ற பொழுது, அரக்கர் குலத்தலைவனாகிய இராவணன்.

கு: 'குலாதிபன், வெற்றியென தென்றுரைத்து' என வருஞ் செய்யுளில் இயையும்; குளகம். தென்திசாதிபன், குலாதிபன் என்பன வடசொற்கள், தீர்க்க சந்தியால் புணர்ந்தவை. தண்டை-காலதண்டினை. அவண்-அவ்விடத்து. வென்றியே புனையும் கால தண்டினை வரங்களின் வலிமையுடைய இராவணன்மேல் விடுத்தால் அவன் உயிர் கவராது இழிவுறுமே என்று கருதி இங்ஙனம் நின்றான் எமன். (எஎ)

**இராவணன் வெற்றி எனதே என உரைத்துப் போகவதிக்குப் போதல்**

**வேறு**

406. வெற்றியென தென்றுரைத்து மிக்கெழுந்த
உவகையனாய் விறலின் மிக்க
மற்றடந்தோள் மாரீசன் மகோதரனே
முதல்வரொடு மணித்தே ரேறிப்
பற்றலரை நிலை கெடுப்பான் பாதாளத்
திடைபுக்குப் பண்பி னோடும்
பொற்றடமா ளிகைவிளங்கும் போகவதி
யெனுநகரி சென்று புக்கான்.

வெற்றி எனது என்று உரைத்து மிக்கு எழுந்த
உவகையனாய், விறலின்மிக்க
மல்தடங்தோள் மாரீசன் மகோதரனே
முதல்வரொடு மணித்தேர் ஏறி,
பற்றலரை நிலைகெடுப்பான் பாதாளத்
திடை புக்கு பண்பினோடும்
பொற்றடமாளிகை விளங்கும் போகவதி
எனும் நகரி சென்று புக்கான்.

பொ : (நிருதர் குலாதிபன்) வெற்றி எனது என்று சொல்லிக் கொண்டு மிகுந்து எழுந்த மகிழ்ச்சியுடையவனாய் வெற்றிமிக்க மற்போர் பயின்ற பெரிய தோளையுடைய மாரீசன், மகோதரன் முதலியவரோடு மணிகள் பதித்த புட்பகத் தேரில் ஏறிக்கொண்டு, பகைவரை நிலைகுலையச் செய்யவேண்டிப் பாதாளத்தில் புகுந்து, பொன்னாலியன்ற பெரிய] மாளிகைகள் விளங்குகின்ற போகவதி என்னும் நகரத்தில் பண்பினோடு சென்று புகுந்தான்.

கு : இயமன் காலதண்டினைத் தன்மேல் செலுத்தாமல் நின்றவுடன், இராவணன் 'வெற்றி எனது' என்று சொல்லிக் கொண்டு மகிழ்ச்சி மிக்கவனாய் நண்பர்களோடு புட்பகமேறிப்

பேர்கவதிக்குச் சென்ருன், என்றவாறு. எல்லாருடைய உயிரையுங் கவரும் இயமனேயே வென்றுவிட்டோம் என்ற மகிழ்ச்சி இராவண னுக்குப் பெரிதாக வளர்ந்தது என்றவாறு. போகவதி என்னும் நகரம் பொன் மாளிகைகளும் பண்பும் நிறைந்த நகரம் என்பார் 'பண்பினேடும் பொற்றடமாளிகைகளும் விளங்கும் போகவதி' என்ருர்; அது பாதாளத்தில் உள்ளது. இராவணன் போகவதிக்குப் போவது அதற்கு ஆக்கந்தர வல்ல என்பார்'. பற்றலரை நிலை கெடுப்பான்! என்ருர். பாதாளத்தில் போகவதி நகரத்தில் உள்ள பகைவரை நிலகுலையச் செய்யவேண்டியே அங்குத் தன் நண்ப ருடன் சென்ருன் என்றவாறு. (எஅ)

### இராவணனேடு நிவாதகவசர் பொருதல்

407. அந்நகருக் கரசனு மடன்மிகுதோள்
வாசுகியோ டளவளாவி
மன்னியநல் லுறவாகி மணிமதியாம்
வளநகரி வந்து சாரத்
தந்நிகரில் லாதோர்கள் சாதித்த
பெருவரமும் வலியுஞ் சார்ந்தோர்
நின்னிலெனப் புறப்பட்டு நிவாதகவ
சாதியர்கள் சென்று நேர்ந்தார்.

அந்நகருக்கு அரசனும் அடல்மிகுதோள்
வாசுகியோடு அளவளாவி,
மன்னிய நல் உறவாகி, மணிமதியாம்
வளநகரி வந்து சாரத்
தம் நிகர் இல்லாதோர்கள் சாதித்த
பெருவரமும் வலியும் சார்ந்தோர்,
நில்! நில்! எனப் புறப்பட்டு
நிவாதகவசாதியர்கள் சென்று நேர்ந்தார்.

பொ: அந்தப் போகவதி நகருக்கு அரசனுகிய வலிமை மிக்க தோள்களையுடைய வாசுகி என்பானேடு கலந்துரையாடி

நிலைபெற்ற நல்ல உறவுடையனாகிப் பின்பு மணிமதி என்ற பெயருடைய வளநகரத்திற்கு வந்தடைய, தமக்கு நிகரில்லாதவர்களும் தவமுயற்சியால் பெற்ற பெருவரமும் வலிமையும் உடையவர்களும் ஆகிய நிவாதகவசர் முதலியோர், (அவ்விராவணன் முதலியோரைக் கண்டு) நில்! நில்! என்று சொல்லிக்கொண்டே புறப்பட்டுச் சென்று அவர்களை எதிர்த்தார்கள்.

கு: போகவதி நகருக்கு அரசன் வாசுகி. இராவணன் அந்த வாசுகியோடு கலந்துரையாடி உறவு பூண்டான்; எனவே அங்குப் போர்க்கு இடனில்லை. மணிமதி என்ற நகரில் உள்ள நிவாத கவசர்கள், தமக்கு நிகரில்லாதவர்கள்; முயன்று பெற்ற பெருவரமும் வலிமையும் உடையவர்கள்; இராவணனைக் கண்டவுடனே நில் நில் என்று எதிர்த்தார்கள் என்றவாறு. நேர்தல்–எதிர்த்தல். (எசு)

408 ஆங்கவர்க ளடர்ந்துவந்தார்த் தரக்கர்மே
லளவிலாப் படையை யேவப்
பூங்கழற்கா லரக்கனுமப் பொருபடையைப்
பொருபடைகள் விடுத்து மாற்றித்
தாங்கரிய படைவிடுத்து மப்படையை
யவர்தடுத்துந் தளர்வொன் றின்றி
ஓங்கியபே ராற்றலர்க ளோராண்டு
கைவிடா துறுபோர் செய்தார்.

**ஆங்கு அவர்கள் அடர்ந்துவந்து ஆர்த்து அரக்கர்மேல்**
**அளவுஇலாப் படையை ஏவ,**
**பூங்கழற்கால் அரக்கனும் அப்பொருபடையைப்**
**பொருபடைகள் விடுத்து மாற்றி,**
**தாங்கரிய படைவிடுத்தும் அப்படையை**
**அவர்தடுத்தும் தளர்வு ஒன்று இன்றி,**
**ஓங்கிய பேர்ஆற்றலர்கள் ஓராண்டு**
**கைவிடாது உறுபோர் செய்தார்.**

**பொ :** அவ்விடத்து வந்த நிவாதகவசர்கள் நெருங்கிவந்து ஆரவாரித்து, இராவணன் முதலிய அரக்கர்மேல் அளவில்லாத ஆயுதங்களைச் செலுத்த, பொலிவுடைய கழலை யணிந்த இராவண னும் அவர்கள்விட்ட போர் ஆயுதங்களை, வேறு போர் ஆயுதங் களை விடுத்து மாற்றிவிட்டு, அவர்களால் தாங்குதற்கு அரிய ஆயுதத்தை விடுத்தும், அந்த ஆயுதத்தை அவர்கள் தடுத்தும் இங்ஙனமாகத் தளர்ச்சி சிறிதும் இல்லாது உயர்ந்த பேராற்றலை யுடைய அவ்விருதரத்தாரும் ஓராண்டுக்காலம் இடைவிடாமல் பெரிய போரினைச் செய்தார்கள்.

**கு :** அடர்தல்–நெருங்குதல். படை–ஆயுதம். பொருபடை என்றது போர் செய்தற்குரிய ஆயுதத்தை. மாற்றுதல் ஆவது, தம்மேல் படாது தடுத்தல். தாங்கரிய படை என்றது, தாங்குதற் கரிய துன்பத்தைச் செய்யும் ஆயுதத்தை, ஓங்கிய பேராற்ற லர்கள் என்றது, இராவணன் முதலானவர்களையும் நிவாத கவசர் களையும் ஆம். கை என்றது இங்கு இடத்தை யுணர்த்தியது உறுபோர்–பெரும்போர். உறு–மிகுதியுணர்த்தும் உரிச்சொல். (அம)

**பிரமன் இருதிறத்தாரையும் உறவாக்குதல்**

409. புண்டரிகத் தயன்வந்து பொருமவரைப்
போர்விலக்கிப் புகல்வா னீங்கள்
பண்டுடைய வரத்தினுற் பகைத்துநீர்
பல்லாண்டு படைசெய்தாலும்
திண்டிறலி லொத்தீர்க ளொருவரையு
மொருவரமர் வெல்ல வொண்ணு
தெண்டிசையு முங்கள்வலி யேறியதா
லினியுறவே யினிதிங் கென்ருன்.

**புண்டரிகத்து அயன் வந்து பொருமவரைப்**
**போர்விலக்கிப் புகல்வான், 'நீங்கள்**
**பண்டு உடைய வரத்திஞல் பகைத்துநீர்**
**பல்லாண்டு படைசெய்தாலும்**

திண்திறலில் ஒத்தீர்கள் ஒருவரையும்
ஒருவர் அமர் வெல்ல ஒண்ணாது;
எண்திசையும் உங்கள் வலி ஏறியதால்; இனி
உறவே இனிது இங்கு' என்றான்.

**பொ :** தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் வந்து போர் செய்கின்றவர்களை விலக்கிவிட்டுச் சொல்வான்: 'நீங்கள் முற்காலத்துப் பெற்ற வரத்தினால் பகைத்துக்கொண்டு பல ஆண்டுகள் படைகொண்டு போர்செய்தாலும் திண்ணிய வலிமையிலே ஒத்துள்ள நீங்கள் ஒருவரை ஒருவர் வெல்ல இயலாது. எட்டுத்திசைகளிலும் உங்கள் வலிமை சென்று பரவிவிட்டது; இனி, இங்கு உறவு செய்துகொள்வதே இனியது' என்றான்.

**கு :** பண்டு நீங்கள் பெற்றுள்ள வரத்தினால் செருக்கிப் பகைத்துப் போர் செய்தாலும் ஒருவரை ஒருவர் வெல்ல ஒண்ணாது; காரணம், திண்திறலில் ஒத்துள்ளீர்கள்; என்று விளக்கினான் பிரமன். படைசெய்தல் என்பது படைகொண்டு போர் செய்தலை உணர்த்தியது. வலிமை புலப்பட வேண்டிச் செய்யும் போர் இது; உங்கள் வலிமை எண்திசையிலும் சென்று பரவியது ஆதலின், இனிப் போர் செய்து உங்கள் வலிமையை உலகிற்குக் காட்ட வேண்டுவதில்லை; இனி இங்கு உறவே இனிது என்றான் என இயையும். ஏறுதலாவது, உலகம் முழுமையும் இவர்கள் ஓராண்டு காலமாக வெற்றி தோல்வியின்றிப் போர் செய்கின்றார்கள் என்ற செய்தி சென்று பரவியிருத்தலே. தங்கள் வலிமை உலகிற்குப் புலப்பட வேண்டும் என்ற குறிக்கோளை நிறைவேற்றிவிட்ட பின்னர் அதற்குக் காரணமாய் உள்ள போர் தேவையின்று என்றவாறு. (அக)

### நிவாதகவசர் பணிதலால் இராவணன் மணிமதியில் ஓராண்டு தங்குதல்

410. பூமருவு நான்முகத்தோன் புகன்றவுரை
யதுபோற்றி யவனைப் போக்கி
தாமருவி யெல்லாருந் தப்பாமற்
றனித்தனியே சபதஞ் செய்யத்

தேமருவு தாரவுணர் சிறப்பொடுபூ
சனைசெய்ய வரக்கர் கோமான்
ஏர்மருவு மந்நகரி லீராறு
திங்களினி திருந்தா னன்றே.

பூமருவு நான்முகத்தோன் புகன்ற உரை
அதுபோற்றி அவனைப் போக்கி,
தாம் மருவி எல்லாரும் தப்பாமல்
தனித்தனியே சபதம் செய்யத்
தேமருவு தார் அவுணர் சிறப்பொடு
பூசனை செய்ய, அரக்கர் கோமான்
ஏர்மருவும் அந்நகரில் ஈராறு
திங்கள்இனிது இருந்தான் அன்றே.

பொ : தாமரைமலரில் வீற்றிருக்கும் நான்முகன் சொன்ன சொல்லை வரவேற்றுப் போற்றி அப்பிரமனை அனுப்பிவிட்டு, இராவணன் முதலியோரும் நிவாதகவசர்களும் ஆகிய இருதரத்தாரும் தாம் ஒன்றுசேர்ந்து 'இனிப் போர் செய்யமாட்டோம் நண்பர்களாகவே வாழ்வோம்' எனத் தனித்தனியே சபதம் செய்து கொள்ளப், பின்பு தேன்பொருந்திய மாலையை யணிந்த அவுணர்கள் இராவணனுக்குச் சிறப்போடு பூசனையைச் செய்ய, இராவணன் அழகு பொருந்திய அந்த மணிமதியில் பன்னிரண்டு திங்கள் இனிதாகத் தங்கியிருந்தான்.

கு : பிரமன் கூறிய சொல் இருதிறத்தார்க்கும் பொருத்தமாக இருத்தலின் அவன் சொல்லை யேற்றுப் போற்றினார்கள். தனித்தனியே சபதம் செய்தலாவது, 'இனி, ஒருவரோடு ஒருவர் போர் செய்வதில்லை; நண்பர்களாகவே வாழ்வோம்' எனச் சத்தியம் செய்து கொள்ளுதல். வான்மீகத்தில் தீ மூன்னர் இங்ஙனம் சபதம் செய்து கொண்டதாக உள்ளது. இராவணன் வரங்களால் ஏற்றம் பெற்றவனாதலின் நிவாதகவசர்கள் அவனுக்கு நித்திய பூசையும் விழாச் சிறப்பும் செய்து போற்றினார்கள் என்க. சிறப்பு – விழா. 'சிறப்பொடு பூசனை செல்லாது' (திருக்குறள்–18) என்பது இங்கு ஒப்பு நோக்கற்குரியது. ஏர் – அழகு. இனிதிருந்த காலை என்ற

மையால் இராவணன் தனது இலங்கையில் வாழ்ந்ததைவிடச் சிறப்பான மகிழ்ச்சியுடன் மணிமதியில் இருந்தான் என்பது புலனாகும். (அஉ)

### இராவணன் தன் தங்கை கணவனைக் கொல்லுதல்

411. அந்நகரி விட்டரக்க னடல்வருணன்
றனைவெல்வா னவன்றான் மேவும்
கன்னகரி தனைமுட்டிக் காலகே
யரையெல்லாம் கணத்திற் கொன்று
தன்னுடைய தங்கையாஞ் சலமிகுத்த
சூர்ப்பணகை தன்னைக் கொண்ட
மின்னனைய சுடரிலைவேல் வித்துருசிங்
கன்றனைவெங் களத்து வீழ்த்தான்.

அந்நகரி விட்டு அரக்கன் அடல் வருணன்
தனை வெல்வான் அவன் தான் மேவும்
கன்னகரி தனைமுட்டிக் காலகேயரை
எல்லாம் கணத்தில் கொன்று
தன்னுடைய தங்கையாம் சலமிகுத்த
சூர்ப்பணகை தன்னைக் கொண்ட
மின் அனைய சுடர் இலைவேல்
வித்துருசிங்கன் தனை வெங்களத்து வீழ்த்தான்.

பொ: அந்த மணிமதி என்ற நகரை விடுத்து இராவணன் வலிமைமிக்க வருணனை வெல்லும் பொருட்டு, அவன் பொருந்தியுள்ள கல்நகரம் அதனை நெருங்கி, அங்குத் தீவில் வாழ்கின்ற காலகேயரை எல்லாம் ஒருகணநேரத்தில் கொன்றுவிட்டுத் தன்னுடைய தங்கையாகிய கோபமிக்க சூர்ப்பணகை தன்னை மனைவியாகக் கொண்ட மின்னலைப்போன்ற ஒளியுடைய இலைவடிவாகச் செய்யப்பட்ட வேலையேந்தியுள்ள வித்துருசிங்கனையும் கொடிய போர்க்களத்தில் கொன்று வீழ்த்தினான்.

கு : அந்நகரி என்றது மணிமதி என்னும் நகரை. அரக்கன் என்றது இராவணனை. வருணன் வாழும் நகரம் கல் நகரி. முட்டுதல் – நெருங்குதல். வருணன் வாழும் கன்னகரிக்குச் செல்லும் வழியில் காலகேயர் என்ற கூட்டத்தார் இருந்தார் என்றும் அவர்களை யெல்லாம் இராவணன் ஒருகணத்தில் கொன்றான் என்றும் கொள்க. சூர்ப்பணகையின் கணவனான வித்துருசிங்கன் என்பவன் காலகேயர்களில் ஒருவனாக இருந்தமையின் அவனும் கொல்லப்பட்டான். சலம் – கோபம்; வஞ்சனையும் ஆம். (அரு.

இராவணன் வருணன் மாளிகையைக் காணுதல்

412. புனலுறுவெண் மேகமெனப் பொலிந்திலங்கித்
தோன்றுவதைப் பொருந்தாரூரை
நினைவதன்முன் னெரிசெய்த நெடுஞ்சரத்தோ
னிருக்கின்ற நெடிய வெற்புத்
தனையுருவ நிறுத்தினு லொக்குமெனத்
தகுவதனைச் சாயா வென்றிக்
கனைகழற்காற் றசக்கிரிவன் கடலரசன்
மாளிகையைக் கண்ணிற் கண்டான்.

புனலுறு வெண்மேகம் எனப் பொலிந்து இலங்கித்
தோன்றுவதை–பொருந்தார் ஊரை
நினைவதன்முன் எரிசெய்த நெடுஞ்சரத்தோன்
இருக்கின்ற நெடிய வெற்புத்
தனை உருவ நிறுத்தினுல் ஒக்கும் எனத்
தகுவதனை, சாயாவென்றிக்
கனைகழற்கால் தசக்கிரிவன் கடல் அரசன்
மாளிகையைக் கண்ணில் கண்டான்.

பொ. கடல்நீரிலே பொருந்தும் வெண்முகில் என்று சொல்லுமாறு பொலிவுடையதாய் விளங்கித் தோன்றுகின்றதனை, – பகைவர்களாகிய திரிபுராதிகளின் திரிபுரத்தை நினைப்பதற்கு முன்னே

(விரைந்து) நகைத்து எரித்த நீண்ட அம்பினை யுடையவனுகிய சிவபிரான் இருக்கின்ற நீண்டு உயர்ந்த வெள்ளிமலையைக் கடலிடத்து விண்ணில் ஊடுருவுமாறு நிறுத்தினற் போலும் என்று புகழத்தகுவதனை-கடலரசனுகிய வருணதேவனுடைய மாளிகையை – பின்னடையாத வெற்றியினையும் ஒலிக்கின்ற கழலையணிந்த காலையு முடைய இராவணன் கண்களால் பார்த்தான்.

கு: வருணனுடைய மாளிகை கடல்நடுவில் வெண்ணிறத்ததாக உயர்ந்து தோன்றுவதை இராவணன் கண்டான் என்றவாறு. கடல்நடுவில் வெண்மாளிகையிருப்பது கடலின் வெண்முகில் தங்கியிருப்பது போன்றது என்பார். 'புனலுறுவெண் மேகமெனப் பொலிந்திலங்கித் தோன்றுவதை' எனவும், அம்மாளிகை வானளாவி உயர்ந்து காணப்படுலதால் சிவன் வீற்றிருக்கும் வெள்ளிய கயிலாய மலையைக் கடலில் நிறுத்திவைத்தாற்போன்றது என்பார் 'பொருந்தாரூரை' எரிசெய்த நெடுஞ்சரத்தோனிருக்கின்ற நெடிய வெற்புத்தனை உருவ நிறுத்தினல் ஒக்குமெனத் தகுவதனை' என்றும் கூறினர். தோன்றுவதை – தகுவதனை – கடலரசன் மாளிகையைத் தசக்கிரீவன் கண்ணிற் கண்டான் என இயையும். ஒரு பொருள் மேல்வந்த பலபெயர்கள் இரண்டனுருபேற்றுப் பிரிவிலவாய் நின்று இறுதியில் கண்டான் என்ற ஒருவினை கொண்டு முடிந்தன. பொருந்தார் ஊர் என்றது திரிபுரத்தை. செய்த நெடுஞ்சரம் என்றது, திருமாலாகிய அம்பினை. நெடுஞ்சரத்தோன் என்றது சிவபிரானை' வெற்புத்தனை உருவநிறுத்தினல் ஒக்குமெனல் இல்பொருளுவமை. சாயா வென்றிக் கனைகழற்கால் தசக்கிரிவன் கண்ணிற்கண்டான் என்றது, இம்மாளிகையையும் தனதாக்கிக் கொள்வான் இராவணன் என்னும் குறிப்பினது. (அச)

### இராவணன் காமதேனுவிடம் வருணன் எங்கொளிந்தான் என வினவுதல்

413. பைவிரிநா கத்தணைமேற் பரன்றுயில்கொள்
பரந்தபாற் கடலிற் றந்த
தெய்வநெடுஞ் சுரபிதனைச் சென்னிநில
முறவணங்கித் திறலின்மிக்க

மைவரைபோன் மெய்யரக்கன் வந்துனக்குத்
தோற்றேனென் றுரைத்தலன்றி
வெய்யமர்செய் குதல்செய்யா தெங்கொளித்
வருணனென விளம்பும் வேலே. [தான்

பைவிரி நாகத்து அணைமேல் பரன்துயில்கொள்
பரந்த பாற்கடலில் தந்த
தெய்வ நெடுஞ் சுரபிதனைச் சென்னிநிலம்
உற வணங்கித் திறலின் மிக்க
மைவரைபோல் மெய் அரக்கன் வந்து உனக்குத்
தோற்றேன் என்று உரைத்தல் அன்றி,
வெய்அமர்செய்குதல் செய்யாது, எங்கு ஒளித்தான்
வருணன்? என விளம்பும் வேலே.

பொ : படம் விரிந்த பாம்பணைமேல் திருமால் அறிதுயில் செய்கின்ற பரவிய திருப்பாற் கடலிலிருந்து கடல்கடைந்த காலத்துக்) கொணர்ந்த தெய்வத் தன்மை வாய்ந்த உயர்ந்த காமதேனுவைத் தலை நிலத்தில்பட வணங்கிப், பின் வலிமை மிக்க கரிய மலைபோன்ற உடம்பினையுடைய இராவணன் நெருங்கிவந்து• 'உனக்குத் தோற்றேன் என்று சொல்லுதல்', அல்லது, கொடிய போரினைச் செய்தல் (இந்த இரண்டில் ஒன்று) செய்யாது வருணன் எவ்விடத்தில் ஒளித்துக் கொண்டான்' என்று கேட்கும் பொழுது.

கு : நாகம், ஆதிசேடன்; பரன் என்றது திருமாலை. காமதேனு பாற்கடல் கடைந்தபோது தோன்றியது ஆகலின், பாற்கடலில் தந்த... சுரபி! என்றார். சுரபி-காமதேனு. தருதல் என்பது, கொணர்தலை உணர்த்தியது. இராவணன் வலிமையும் வண்ணமும் புலப்படத் திறலின்மிக்க மைவரைபோல் மெய்யரக்கன்' என்றார். இராவணன் காமதேனுவை வணங்கி வருணன் அமரும் செய்யாது தோல்வியையும் ஒத்துக்கொள்ளாது யாங்கு ஒளித்துக் கொண்டான்? என வினவியவாறு. மேலைச் செய்யுளில் கூறிய வெள்ளை மாளிகையில் வருணனைக் காணாமையால் இராவணன் காமதேனுவை வணங்கி வினவுவானானன். விளம்புதல் இங்கு வினவுதலை உணர்த்திற்று. (அரு)

## இராவணன் வருணன் மக்களை வெல்லுதல்

414. ஊழித்தீ யெனப் பொங்கி யோங்கியசீர்
வருணன்றன் னுயர்தோண் மைந்தர்
ஆழித்தேர் படைசூழ வரக்கர்பெரும்
படையோடு மமர்செய் காலைச்
சூழிப்போர் மதகரியும் தொகுபரியும்
மிரதமும்போர் துணிய நூறிப்
பாழித்தோள் வாளரக்கன் பாசகரத்
தான்படையைப் பாரில் வீழ்த்தான்.

ஊழித்தீ எனப் பொங்கி ஓங்கியசீர்
வருணன்தன் உயர்தோள் மைந்தர்,
ஆழித்தேர் படைசூழ அரக்கர்பெரும்
படையோடும் அமர்செய்காலை,
சூழிப்போர் மதகரியும் தொகுபரியும்
இரதமும் போர்துணிய நூறி,
பாழித்தோள்வாள் அரக்கன், பாசகரத்தான்
படையைப் பாரில் வீழ்த்தான்.

பொ: கடையூழியில் உலகையழிக்கும் தீயைப்போலக் கோபித்துக் கொண்டு உயர்ந்த சிறப்பினையுடைய வருணனின் உயர்ந்த தோள்களையுடைய பிள்ளைகள், சக்கரத்தையுடைய தேரோடுங்கூடிய சேனை தன்னைச் சூழ்ந்துவரச் சென்று, அரக்கரது பெரிய சேனையோடு போர்செய்யும் போது, முகப்பட்டத்தையுடைய தாய்ப் போர்செய்யும் மத யானைகளும் கூட்டமாய்ச் சேர்ந்துள்ள குதிரைகளும் தேர்களும் போரில் துண்டிக்கப்பட்டு வீழுமாறு அழித்து, வலியதோள்களை உடைய வாளேந்திய இராவணன் பாசமேந்திய கையனாகிய வருணனது சேனையைத் தரையில் வெட்டி வீழ்த்தினன்.

கு: வருணனுடைய மைந்தர்கள் சினம் ஊழித்தீப் போன்றிருந்தது என்க. ஆழி – தேருருளை, தேர்ப்படை சூழஎன்றது,

தேர் முதலிய நால்வகைப் படைசூழ என்றவாறு, சூழி – யானை முகப்பட்டம். நூறுதல் - அழித்தல்; பொடியாக்குதல் என்றும் ஆம். பாழி – வலிமை. சிவபிரான் கொடுத்த வாளையேந்திய பெருமையுடையவன் இராவணன் என்பது புலப்பட வாளரக்கன, என்றார். பாசகரத்தான் என்றது, வருணதேவனை, வருணனுக்குப் பாசம் உண்டு என்பது முன்னும் கண்டது. வருணனுடைய மைந்தர் படை, வருணன் படையேயாதல் தெளிவு. (அசு)

வருணன் மைந்தர்களால் இராவணன் இடருறுதல்

415. சேனைபடத் தரியாது திறல்வருணன்
றன்மைந்தர் சீற்றம் பொங்கி
வானமதிற் புட்பகத்தின் மிசைநின்ற
வாளரக்கன் றன்மேல் வந்து
சோனைமுகிற் குலமாரி சொரிவனபோற்
கணைமாரி தூவி யார்ப்ப
ஆனவவை விலக்குகையே பணியாக
வடலரக்க னலக்க ணுற்றான்.

சேனை படத் தரியாது திறல் வருணன்
தன் மைந்தர் சீற்றம் பொங்கி.
வானமதில் புட்பகத்தில் மிசைநின்ற
வாள்அரக்கன் தன்மேல், வந்து
சோனைமுகில் குலமாரி சொரிவனபோல்
கணைமாரி தூவி ஆர்ப்ப,
ஆன அவை விலக்குகையே பணியாக
அடல் அரக்கன் அலக்கண் உற்றான்.

பொ : தம்சேனை அழிந்துபட்டமையால் மனம் பொறுது, திறமைமிக்க வருணனுடைய மைந்தர்கள், கோபம் மிக்கு, வானத்தில் புட்பக விமானத்தின்மேல் நின்ற கொடிய இராவணன் மேல் வந்து. விடாமழை பொழியும் மேகமானது பெருமழை பெய்வது

போல், அம்பு மழையைத் தூவி ஆரவாரிக்க, தன்மேல் வருவன வான அவ்வம்புகளைத் தன்மேல் படாதபடி விலக்குவதையே பெரிய பணியாகக் கொண்டு துன்புற்றான் வலிமை மிக்க இராவணன்.

கு: வருணன் மைந்தர் தம்சேனை இராவணனால் அழிந்ததைக் கண்டு பொறுக்கலாற்றாதவராய்க் கோபம் கொண்டு வானத்தில் உயர்ந்து சென்று இராவணன் ஏறியுள்ள புட்பகவிமானத்தின் மேல் பெருமழை பெய்வதுபோல் அம்புகளை எய்தார்கள் என்பதும், அவ்வம்புகளைத் தன்மேல் படாதவண்ணம் தடுத்திடவே பெரிதும் முயன்றானேயொழிய வேறு படை அப்பகைவர்மேல் செலுத்த இயலாதவனாக இராவணன் இருந்தான் என்பதும் புலப்படுத்திய வாறு. சோனைமுகில் - விடாமழை பெய்யும் மேகம். குலமாரி - பெருமழை. தூவுதல் இங்கு முயற்சிபெரிதின்றி எளிதாக அம்பு எய்தலை யுணர்த்தியது. அலக்கண் - துன்பம். (அ௭)

**மகோதரன் தம் படையைக் கொல்ல வருணன் மக்கள் கொதித்தல்**

416. மதிகொன்றை வளர் சடையோன் வரையெடுத்
வாருணிக ளொடும் போர்செய்ய [தோன்
அதுகண்டு மகோதரன்பே ரழலென்ன
வாலமென வழன்று வேகக்
கதிகொண்டு வருணபலங்கைக்கொண்டு
களத்தவிய நூறக்கண்டு
குதிகொண்டு வாருதிநீர் குரைகடற்கோன்
மைந்தர்மனங் கொதித் துளார்கள்.

மதிகொன்றை வளர்சடையோன் வரைஎடுத்தோன்
வாருணிகளொடும் போர் செய்ய,
அதுகண்டு மகோதரன்பேர் அழல் என்ன
ஆலம் என அழன்று வேகக்
கதிகொண்டு, வருணபலம் கைக்கொண்டு
களத்து அவிய நூறக் கண்டு,
குதிகொண்டு வாருதிநீர் குரைகடற்கோன்
மைந்தர்மனம் கொதித்து உளார்கள்,

**பொ ;** பிறைச் சந்திரனும் கொன்றை மாலையும் பொருந்திய வளர்ந்த சடையையுடையவனாகிய சிவபிரானது வெள்ளிமலையை அள்ளியெடுத்தோனாகிய இராவணன், வருணன் மைந்தர்களோடும் போர் செய்யா நிற்க, அந்த நிலைமையைக் கண்டு மகோதரன் பெரிய வடவைக்கனல் போலவும், ஆலகாலம் போலவும், கோபித்து வேகமான நடையை மேற்கொண்டு வருணனது சேனையின் வலிமையைக் கவர்ந்து அச்சேனை போர்க்களத்திலே மாயுமாறு அழிக்கக் கண்டு, குதித்தல் கொண்டு ஒலிக்கின்ற கடலுக்குத் தலைவனாகிய வருணனுடைய மைந்தர்கள் மனம் கொதிக்கலானார்கள்.

**கு :** சடையோன் வரை என்றது கயிலாய மலையை. வரையெடுத்த படலத்தில் இராவணன் வெள்ளிமலையாகிய கைலாயத்தை எடுத்த செய்தி பேசப்பட்டிருத்தல் நினையலாம். வாருணிகள் – வருணனுடைய மைந்தர்கள். தசரதன் மகன், தசரதி ஆனது போல, வருணன் மைந்தர் வாருணிகள் எனப்பட்டனர். தத்திதாந்தம். பேரழல் என்றது வடவைக்கனலை. ஆலம் என்றது, ஆலகாலத்தை. மகோதரனுடைய பெருங்கோபத்தை விளக்க இவை உவமையாக வந்தன, வேகக்கதி கொண்டு என்பது வேக நடையை மேற்கொண்டு என்னும் பொருளது. கதி-நடை. வருண பலங்கைக்கொண்டு என்றது, வருணனது சேனையின் வலிமையைப் போக்கி என்னுங் கருத்தினது. குரைகடல், - வினைத்தொகை. ஒலிக்கும் கடல் என்க, நீர் குதித்தல்கொண்டு ஒலிக்கும் கடல் என்றவாறு. கடற்கோன் என்றது, வருணனை. (அஅ)

**வருணன் மைந்தர் வெற்றி யார்ப்பு**

**417.** மாயமிக வல்லவனு மகோதரன்றன்
மருமத்தில் வன்னி போலும்
சாயகங்க ளுறத்துரந்து, தானையினைத்
தரைப்படுத்துத் தசக் கிரீவத்

தீயவன்றன் செறிவயிரத் திரள்புயத்தும்
மார்பகத்துஞ் செந்நீ ரோதம்
பாயவடிக் கணையேவிப் பகிரண்டங்
குலுங்கவுயிர் பதைக்க வார்த்தார்.

மாயம் மிக வல்லவனும் மகோதரன்தன்
மருமத்தில் வன்னி போலும்
சாயகங்கள் உறத் துரந்து, தானையினைத்
தரைப்படுத்துத் தசக்கிரீவத்
தீயவன்தன் செறிவயிரத் திரள்புயத்தும்
மார்பகத்தும் செந்நீர் ஓதம்
பாய, வடிக்கணை ஏவிப் பகிரண்டம்
குலுங்க, உயிர் பதைக்க, ஆர்த்தார்.

பொ : மாயப்போரில் வல்லவனாகிய மகோதரனது மார்பில் பொருந்துமாறு நெருப்புப் போன்ற அம்புகளை எய்தும், அவன் சேனையினைக் கொன்று தரையில் வீழ்த்தியும், இராவணனாகிய கொடியவனது இருபதாக நெருங்கியுள்ள வயிரம்போன்ற திரண்ட தோள்களிலும் மார்பிலும் இரத்த வெள்ளம் பாயுமாறு கூரிய அம்புகளை எய்தும், பேரண்டம் குலுங்கவும் உலகத்துயிர்கள் அவ்வொலி கேட்டுப் பதைக்கவும் வருணன் மைந்தர் ஆரவாரித்தார்,

கு : முன்னைச் செய்யுளில் வந்துள்ள 'குரைகடற்கோன் மைந்தர் மனம் கொதித்துள்ளார்' என்ற தொடரில் உள்ள 'கொதித்துள்ளார்' என்ற வினைப்பெயரே இச்செய்யுளில் உள்ள துரந்து, படுத்து, ஏவி, ஆர்த்தார்' என்ற வினைகட்கு எழுவாயாகும், மருமம் – மார்பு. வன்னி – நெருப்பு. அம்புக்கு நெருப்புச் சேர்ந்தாரைக் கொல்லுவதில் உவமையாயிற்று. சாயகம் - அம்பு. மருமத்தில் உறச் சாயகங்கள் துறந்து என மாறுக. இனிக் கிடந்தாங்கே நிறுத்தி மிகுதியாக எய்து என்று பொருள் கூறலும் ஒன்று. துரத்தல் – ஏவுதல். இராவணனுக்கு இருபது புயங்கள் இருப்பது புலப்படுத்த 'செறிவயிரத்திரள் புயத்தும்' என்றார். செறிதல் – நெருங்குதல். செந்நீர் – இரத்தம். வடி – கூர்மை. பகிரண்டம் –

பேரண்டம். குலுங்குதல் – அதிர்தல். உயிர் என்றது உலகத்துயிர் களை. வருணன் மைந்தர்கள், இராவணன் மேல் அம்புகளை ஏவி ஆர்த்த ஆரவாரிப்பால் பேரண்டம் குலுங்கியது. உலகத்துயிர்கள் பதைபதைத்தன என்றவாறு. (அகூ)

**இராவணன் போர்க்காற்ருது வருணன் மைந்தர் தோற்ரேடுதல்**

418. ஆலமென்ன வழலென்ன வழன்றரக்கர்
கோன்கரங்க ளனைத்தி ஞலும்
சூலமயில் வெங்குலிசந் தோமரந்தண்
டுலக்கை முதற் படைக டூண்டிக்
காலனெனக் கதித்துரப்பிக் கடிதடர்ந்து
மேல்வீழ, வருணன்றந்த
பாலரனை வருங்கெட்டுப் பயத்தோடும்
பழியோடும் பதியின் மீண்டார்.

ஆலம் என்ன அழல் என்ன அழன்று அரக்கர்
கோன் கரங்கள் அனைத்திஞலும்
சூலம் அயில் வெங்குலிசம் தோமரம் தண்டு
உலக்கை முதல் படைகள் தூண்டி,
காலன் எனக் கதித்து உரப்பிக்
கடிது அடர்ந்து மேல்வீழ, வருணன் தந்த
பாலர் அனைவரும் கெட்டுப் பயத்தோடும்
பழியோடும் பதியின் மீண்டார்.

பொ: விடம் போலவும் நெருப்புப் போலவும் கோபித்து இராவணன் தன் இருபது கரங்களாலும் சூலம், வேல், கொடிய வச்சிராயுதம், கைவேல், தண்டாயுதம், உலக்கை முதலிய ஆயுதங் களை ஏவி, எமனைப்போல ஆரவாரித்து, அதட்டி, விரைந்து நெருங்கி, மேல் வீழ்ந்து போர் செய்ய, வருணன் பெற்ற மைந்தர் கள் எல்லோரும் தோற்றுப் பயத்தோடும் பழியோடும் தமது இருப் பிடத்திற்கு மீண்டார்கள்.

கு: இராவணன் கோபத்திற்கு ஆலமும் அழலும் சேர்ந்தாரைக் கொல்லும் இயல்பில் உவமையாயின. அழலுதல்–கோபித்தல். அரக்கர்கோன் என்றது இராவணனை. இராவணனுக்கு இருபது கரங்கள் இருத்தலின் அந்த இருபது கரங்களாலும் சூலம் முதலிய படைகளை வருணன் மைந்தர்மேல் தூண்டிப் போர் செய்தான். தோமரம்-கைவேல். கதித்தல் ஆரவாரித்தல். உரப்புதல் அதட்டுதல். அடர்த்தல்-நெருங்குதல். பயம்—அச்சம். பயத்தோடு மீண்டவர்க்குப் புறங்காட்டி ஓடியதாலாய பழி தானே வந்தடைந்தது என்க. வருணன் தந்த பாலர் என்றது, அவன் மக்களாகிய கோவன், புட்கரன் என்பாரைக் குறித்தது. வருணன் பேரர்களும் இப்போரில் கலந்து கொண்டனர் என்று வான்மீகம் கூறும். அவர்களையும் சேர்த்துப் பாலர் அனைவரும் என்னூர் போலும். பாலர், சிறுவர் எனப் பொருள்கொண்டு அமைதி கூறலாம். (கூ௰)

### வருணன் எவ்விடத்தான் என்ற இராவணனுக்கு அமைச்சர் சொன்னது

419. வெவ்விடத்திற் கொடியோனும் விறலரக்கன்
விளம்புவான் விழியினில்லா
தெவ்விடத்தான் வருணனென வவனமைச்ச
ரீரண்டு முகத்தோன் வைகும்
அவ்விடத்தா னவன்குமர ரமருக்கின்
றூற்றூரா யழிந்து போந்தார்
இவ்விடத்தி னினக் கொருவ ரெதிரில்லை
யிராவணநீ யினிதே கென்றூர்.

வெவ்விடத்தின் கொடியோனும் விறல்அரக்கன்
விளம்புவான், விழியின் நில்லாது
எவ்விடத்தான் வருணன்? என அவன்
அமைச்சர் ஈர்இரண்டு முகத்தோன் வைகும்

அவ்விடத்தான்; அவன் குமரர் அமருக்குஇன்று
ஆற்ருராய் அழிந்து போந்தார்
இவ்விடத்தில் நினக்கு ஒருவர் எதிர் இல்லை;
இராவண நீ இனிது ஏகு என்ருர்.

பொ : கொடிய நஞ்சினும் கொடியவனுகிய வெற்றிமிக்க இராவணன் சொல்லுவான் : 'என்கண்முன் நில்லாது வருணன் எவ்விடஞ் சென்ருன்? என்று வினவ அவனுடைய அமைச்சர், 'நான்முகத்தோனுகிய பிரமன் தங்கியுள்ள அந்த பிரம உலகத்திற்குப் போயிருக்கின்ருன்; அவ்வருணனுடைய மைந்தர்கள் இன்று உன்னேடு செய்யும் போருக்கு ஆற்ருதவராய் நினக்குத் தோற்றுப் போனுர். இனி இவ்விடத்தில் நினக்கு எதிரானவர் யாரும் இல்லை; இராவண! நீ இனிதாகச் செல்வாயாக' என்று கூறினர்.

கு : பிறரைக் கொல்வதில் இராவணன் நஞ்சினும் கொடியன் என்றவாறு. வருணனை நாடி அவன் மாளிகைக்கு வந்த இராவணன் வருணனைக் காணுமையால் விழியினில்லாது எவ்விடத்தான்? 'என்று வினவலானுன் என்க. விழியின் நில்லாது என்றது, கண்ணில் காணப்படாது என்னும் கருத்தினது. 'அழிந்துபோந்தார் – தோற்றுப் போனுர். இங்கு இல்லாதவனைத் தேடிக் கொண்டிராது வருணனது மக்கள் தோற்றுப் போனமையால் வருணனை வென்றதாகவே எண்ணிக் கொண்டு இனிதாகச் செல்க. என அமைச்சர் கூறினுர் இராவணனுக்கு என்க. (கூக)

இராவணன் இலங்கை நோக்கிச் செல்லும்போது
கன்னியர் பலரைக் காண்டல்

420. அந்தவுரை கேட்டுவந்த வடலரக்கன்
பகிரண்ட மதிர வார்த்து
வந்தவழி புறப்பட்டு மதிலிலங்கை
நகர்நோக்கி வழிக்கொள் வேலை

அந்தணர்தங் கன்னியரு மசுரர்கடங்
கன்னியரு மளவி லாத
கந்தருவர் கன்னியரு முதலாய
கன்னியரைக் கண்ணிற் கண்டான்.

அந்த உரை கேட்டு உவந்த அடல் அரக்கன்,
பகிரண்டம், அதிர ஆர்த்து,
வந்த வழி புறப்பட்டு மதில் இலங்கை
நகர்நோக்கி வழிக்கொள் வேலை,
அந்தணர்தம் கன்னியரும், அசுரர்கள்தம்
கன்னியரும் அளவு இலாத
கந்தருவர் கன்னியரும் முதலாய
கன்னியரைக் கண்ணிற் கண்டான்.

பொ: வலிமை மிக்க இராவணன் (அமைச்சர் சொன்ன) அந்தச் சொல்லைக் கேட்டு மகிழ்ந்து பேரண்டம் அதிருமாறு ஆரவாரித்து வந்தவழியே திரும்பிப் புறப்பட்டு, மதில் சூழ்ந்த இலங்கை நகரை நோக்கிச் செல்லும்போது, அந்தணர் தம் கன்னியரும் அசுரர் கன்னிரும், அளவில்லாத கந்தருவர் கன்னியரும் முதலிய கன்னியரைக் கண்ணால் பார்த்தான்.

கு: வருணனுடைய அமைச்சர் சொன்ன 'நினக்கு ஒருவர் எதிரில்லை இராவண! நீ இனிது ஏகு' என்ற உரையினையே இங்கு அந்த வுரை எனச் சுட்டினார். பகிரண்டம்-பேரண்டம். வேலை-பொழுது. கன்னியர் என்றது மணமாகாத மங்கைப் பருவத்து மாதரை. கேட்டாலே காமுறுபவன் இராவணன், கண்ணிற் கண்டால் விடுவானோ என்ற கருத்துப் புலப்படக் 'கண்ணிற் கண்டான்' என வேண்டாது கூறினார். கண்ணாலன்றிக் காண்டல் இயலாமையின், கண்டான் என்ற அளவிலே கண்ணால் கண்டான் என்பது தானே புலப்படவும் கண்ணில் என்றது, வேண்டா கூறல் ஆதல் அறிக்.

(கூஉ)

இராவணன் அக்கன்னியரைத்
தேரில் ஏற்றிக்கொண்டு இலங்கையடைதல்.

421. ஆங்கவர்கள் பூனைவா யகப்பட்ட
கிளியென்ன வளவி லாற்றல்
ஓங்குபுலி வாய்ப்பட்ட வுழையென்ன
வுண்ணடுக்க முற்று ரந்த
தேங்கமழ்பூங் குழலியரைத் தெய்வத்தேர்
மிசையேற்றிச் சேனை சூழத்
தாங்கரிய பேராற்றற் றசக்கிரிவன்
றன்னகரி வந்து சார்ந்தான்.

ஆங்குஅவர்கள் பூனைவாய் அகப்பட்ட
கிளிஎன்ன, அளவில் ஆற்றல்
ஓங்கு புலி வாய்ப்பட்ட உழை என்ன,
உள்நடுக்கம் உற்றார், அந்த
தேங்கமழ் பூங் குழலியரைத் தெய்வத்தேர்
மிசையேற்றிச் சேனை சூழத்
தாங்கரிய பேராற்றல் தசக்கிரிவன்
தன்நகரி வந்து சார்ந்தான்.

பொ : அங்கு அக்கன்னியர்கள் பூனையின் வாயில் அகப்பட்ட கிளிபோலவும் அளவில்லாத வலிமையையுடைய உயர்ந்த புலியின் வாயில் அகப்பட்டு மான்போலவும் உள்ளத்தே நடுக்கம் அடைந்தார்கள்; அந்தந் தேன் கமழுகின்ற மலர்களைச் சூடிய கூந்தலை யுடைய கன்னியரைத் தெய்வத் தன்மை வாய்ந்த புட்பகத்தேரிலே ஏற்றிக்கொண்டு, சேனை தன்னைச் சூழ்ந்துவரப் பிறர் தாங்குதற் கரிய பேராற்றலையுடைய இராவணன் தனது இலங்கை நகர்க்கு வந்து சேர்ந்தான்.

கு : இராவணனிடம் அகப்பட்ட கன்னியர்க்கு உவமையாக பூனைவாயாகப்பட்ட கிளியும், புலிவாயில் அகப்பட்ட மானும் கூறப்பட்டன. மீளமுடியாமை உணர்த்தியவாறு. உழை-மான்,

அந்தக் குழலியரை என்றது, அவ்வாறு உள்ளம் நடுங்குகின்ற கன்னியரை என்றவாறு. தெய்வத்தேர் என்றது புட்பக விமானத்தை; பிறரால் தடுத்தற்கு அரிய பேராற்றல் படைத்தவன் இராவணன்; ஆதலின், அப்பெண்டிரின் பெற்ரோர் அவனைத் தடுக்ககில்லார் ஆயினர் என்பார், தாங்கரிய பேராற்றல் தசக்கிரிவன்' என்ருர். இதனுல் பெண்டிரை வலிதிற் கவர்ந்த இராவணனது இராக்கதத்தன்மை புலப்படுத்தியவாறு. (கூகூ)

**கன்னியர்களின் தாய்மார்**
**இராவணனும் இலங்கையும் அழியச் சபித்தல்.**

422. கன்னியர்க டாய்மார்கள் கன்றிழந்த
பசுப்போலக் கதறி யெங்கள்
நன்னுதலார் தமையெல்லா நடுங்கக்கண்
டிடுதலா னறுமென் கூந்தல்
அன்னநடை யவள் பொருட்டா லட
பாழாகி யரக்கர் கோமான் [லிலங்கை
தன்னுடைய முடியோடுந் தலையற்று
விழுகவெனச் சபித்தா ரன்றே.

**கன்னியர்கள் தாய்மார்கள் கன்று இழந்த**
**பசுப்போலக் கதறி, எங்கள்**
**நன்னுதலார்தமை எல்லாம் நடுங்கக்**
**கண்டிடுதலால், நறுமென் கூந்தல்**
**அன்னநடை யவள் பொருட்டால் அடல் இலங்கை**
**பாழாகி, அரக்கர் கோமான்**
**தன்னுடைய முடியோடும், தலை அற்று**
**விழுக எனச் சபித்தார் அன்றே.**

**பொ:** அந்தக் கன்னியரின் தாய்மார்கள், (இராவணனது அடாத செயலைக் கண்டு) கன்றினை இழந்த பசுவைப்போலக் கதறி அழுது, 'எங்கள் கன்னியரையெல்லாம் நடுங்குமாறு கொண்டு

சென்றமையால் நறுமணம் கமழும் மெல்லிய கூந்தலையுடைய அன்னம் போன்ற நடையினையுடைய ஒருபெண்ணின் பொருட்டாக, வலிமைமிக்க இலங்கை நகரம் பாழாகி, அந்நகர்க்கு அரசனாகிய இராவணன் தன்னுடைய மணிமுடியோடும் தலைகள் அற்றுத் தரையில் விழுக' என்று சாபம் இட்டார்கள்.

கு : தம் மகளிரைப் பிரிந்த தாய்மார்களின் துயரத்திற்குக் கன்றினை இழந்த பசுவின் துயரமே தக்க உவமையாதல் நோக்கி கன்றிழந்த பசுப்போலக் கதறி' என்று கூறினார். "கன்று பிரிந்துழிக் கறவை யொப்பக் கரைந்து கலங்கினாள்" (அயோத்தியா – நகர நீங்கு–14) என இராமனைப் பிரிந்து வருந்திய கோசலைக்குக் கன்று பிரிந்த கறவையை யுவமை கூறியிருத்தல் நினையலாம். நடுக்கங் கண்டிடுதலால் என்பது செய்தல் என்னும் பொருளில் வந்தது; திரு நகரங்கண்ட படலம் (திருவிளையாடல்) என்புழிப் போல. அன்ன நடையவள் என்றது சீதையை-கற்புடைப் பெண்டிராதலின் அப்பெண்டிர் கொடுத்த சாபம் சீதையின் பொருட்டால் பலித்தது என்ற பின்னிகழ்ச்சி கொண்டு 'அன்ன நடையவள் என்று அவர்கள் கூறிய பொதுப்பெயர் சீதையையே குறித்தது என்பதுணரலாம். வாழ்வோர் பலர் இன்மையின் நகரம் பாழாகும் என்றவாறு. (கூச)

## சூர்ப்பணகை, காலகேயர் போரில் தன் கணவன் பட்டதையறிதல் வேறு

423. ஆயவன்ற னணிநகர
மவனடைய வுடல்கால
கேயரமர் பொருகளத்துக்
கிளரரக்கர் பெருஞ்சேனை
சாயவமர் பொருதழித்துத்
தன்கணவன் படக்கேட்ட
தீயகொடுஞ் சூர்ப்பணகை
செய்தனயா முரைசெய்வோம்.

ஆயவன்தன் அணிநகரம் அவன்அடைய, உடல் கால
கேயர் அமர் பொருகளத்துக் கிளர் அரக்கர் பெருஞ்சேனை
சாய அமர் பொருதுஅழித்துத் தன்கணவன் படக் கேட்ட,
தீய கொடுஞ் சூர்ப்பணகை செய்தனயாம் உரைசெய்வாம்.

பொ : அந்த இராவணன் தனது அழகிய இலங்கை நகரத்தை அடைய, மாறுபட்ட காலகேயர் போர் செய்கின்ற போர்க்களத்தில் கிளர்ந்தெழுந்த அரக்கரின் பெரிய சேனை பின்னிடுமாறு போர் செய்து அழித்துவிட்டுத் தன் கணவன் இறந்துபட அதனைக் கேள்வியுற்ற தீயவளும் கொடியவளுமாகிய சூர்ப்பணகை செய்தவற்றை இனிச் சொல்வோம்.

கு : இது நுதலிப்புகுதல். உடலுதல்–மாறுபடுதல். வித்துருசிங்கன் என்பவனே சூர்ப்பணகையின் கணவன். அவன் காலகேயர் போரில் கொல்லப்பட்டமை முன்னர்க் கூறப்பட்டது. 'சூர்ப்பணகை தனைக்கொண்ட மின்னனைய சுடரிலைவேல் வித்துருசிங்குவினையும் வெங்களத்து வீழ்த்தான்' (83) என்றது காண்க. வித்துருசிங்கன் போரில் அரக்கர் பலரைப்பொருதுஅழித்தபின்னரே இறந்தான் என்பது அவன் வீரமரணத்தைப் புலப்படுத்துவதாகும். சூர்ப்பணகையின் கொடுமை மிகுதிபுலப்பட வேண்டித் 'தீயகொடுஞ் சூர்ப்பணகை' என இரண்டு அடையால் சிறப்பித்தார். (௬௫)

### சூர்ப்பணகை கணவன் உடல்மேல் விழுதல்

424\. சலமேவு துயரினளாய்த்
தான்விழுந்து புரண்டலறித்
தலைமேலே கைவைத்துத்
தன்கணவன் முன்கிடந்த
கொலைமேவு போர்க்களத்தைக்
குறுகியவன் மிசைக்கிடந்த
மலைமேலே வந்ததொரு
மலைவிழுந்த தெனவிழுந்தாள்.

சலம்மேவு துயரினளாய்த் தான்விழுந்து புரண்டு, அலறித்
தலைமேலே கைவைத்துத், தன்கணவன் தான்கிடந்த
கொலைமேவு போர்க்களத்தைக் குறுகி அவன்மிசைக் கிடந்த
மலைமேலே வந்ததொரு மலைவிழுந்தது என விழுந்தாள்.

பொ: கோபம் பொருந்திய துயரத்தை யுடையவளாய்ச் சூர்ப்பணகை தானே தரையில் விழுந்து புரண்டு வாய்விட்டு அலறிப் பின்பு தலைமேலே கைகளை வைத்துக்கொண்டு தன் கணவன் விழுந்து கிடக்கும் கொலைத்தொழிலே விரும்பும் போர்க்களத்தை அணுகி, அவன் உடம்பின்மேல், தரையில் கிடந்த மலையின்மேல் வந்ததாகிய ஒருமலை விழுந்தது என்று சொல்லுமாறு விழுந்தாள்.

கு: சலம்—கோபம். தன் தமையனால் தன் கணவன் கொல்லப் பட்டானே என்ற காரணத்தால் சூர்ப்பணகைக்குச் சலமேவு துயர்வந்தது என்க. இனிச் சலம் என்பது நீரையுணர்த்தியதாகக் கொண்டு கண்ணீர் வருதற்குரிய துயரினளாய் எனப் பொருள் கூறலும் ஆம். அவள் இது காறும் களித்தறிவாளே யன்றிக் கண் கலங்கி யறியாதவள் ஆதலின், தன் கணவன் இறப்பை எண்ணிக் கண்ணீர்மேவினுள் என்பது கருத்து. துன்பமுற்றோர் தலைமேலே கைவைத்தல் இயல்பு. அவ்வியல்பு தோன்றத் 'தலைமேலே கைவைத்து' என்றார். இனித் தன் கணவனை வணங்குங் குறிப்பினளாய்த் தலைமேலே குவித்த கரத்தினளாய் வந்தாள் எனலும் ஆம். போர்க்களம் செல்லுவோர் அனைவரும் அருள் நோக்கமின்றிக் கொலை நோக்கமே கொண்டிருத்தலின் 'கொலைமேவு போர்க்களம்' என்றார். அவன்மிசை விழுந்தாள் என இயையும். கிடந்த மலைமேலே வந்ததொரு மலைவிழுந்ததென விழுந்தாள் என்பது தற்குறிப்பேற்ற அணி. கிடந்தமலை போன்றவன் வித்துருசிங்கன்; வந்ததொரு மலைபோன்றவள் சூர்ப்பணகை. இறந்தவர் உடம்பின் மேல் பெண்டிர் விழுந்து அழுதல் இயல்பு. (கூசு)

425. விழுந்தாளை நெடும்பொழுது
வெய்துயிர்ப்பொன் றில்லாளைக்
கழிந்தாடன் கணவனொடு
மென்றிரங்கிக் காரிகையார்

செழுந்தாரை நீர்முகத்துத்
தெளித்தெழுப்பச் செத்தவர்கள்
எழுந்தார்போ லெழுந்தவடா
னிவைசொல்லிப் புலம்பினாள்.

**விழுந்தாளை நெடும்பொழுது வெய்து உயிர்ப்பு ஒன்று இல்லாளை.**
**கழிந்தாள்தன் கணவனொடும்; என்று இரங்கிக் காரிகையார்**
**செழுந்தாரை நீர் முகத்துத் தெளித்து எழுப்ப, செத்தவர்கள்,**
**எழுந்தார்போல் எழுந்தவள் தான் இவை சொல்லிப் புலம்பினாள்.**

**பொ :** கணவன் உடம்புமேல் விழுந்தவளாகிய சூர்ப்ப ணகையை-நெடிது நேரம் வெப்பமான மூச்சுக்காற்றுச் சிறிதும் இல்லாமல் இருந்தவளைத்-'தன் கணவனுடன் இறந்து விட்டாள்' என்று நினைத்து மனமிரங்கிப் பெண்டிர், செழுமையான மழைநீரை யள்ளி அவள் முகத்தில் தெளித்து எழுப்பச் செத்தவர்கள் மீண்டும் எழுந்தாற்போல எழுந்தவளாகிய சூர்ப்பணகை இவற்றைச் சொல்லிப் புலம்புவாளானாள்.

**கு :** தரையில் கிடந்த தன்கணவன் உடம்புமேல் விழுந்தவள் பின்பு மூச்சுக்காற்றும் இன்றி மயங்கிக் கிடந்த நிலையில் அருகில் உள்ள பெண்டிர், 'இவள் கணவனுடன் இறந்தாள்' என்றே எண்ணினர். பின்பு அவள் முகத்தில் குளிர்ந்த நீரைத் தெளித்த வுடன் இறந்துபோனவர்கள் மீண்டும் எழுந்ததுபோல எழுந்து பல சொல்லிப் புலம்பலானாள் என்க. கழிந்தாள்-இறந்தாள். காரிகையார்-பெண்டிர். தாரைநீர் என்றது, மழைநீர். நீர்தெளித்த வுடன், சூர்ப்பணகை மயக்கம் தெளிந்து எழுந்தமைக்கு உவமை யாகச் 'செத்தவர்கள் எழுந்தார்போல்' என்றார். அவள் சொல்லிப் புலம்பியதைப் பின்வரும் பாடல்களில் காணலாம். (கூஎ)

**சூர்ப்பணகையின் புலம்பல் 98-101**

**426.** காதலா னீயென்னைக்
கைப்பிடித்த வன்றுமுதல்
பேதையேன் சொல்லிய சொல்
பிழைத்தறியாய் பேரவுண

நாதனே யென்னைநீ
நடுக்கங்கா ணுதூரில்
போதநீ யெழுந்திராய்
பொய்யுறக்க முறங்காதே.

காதலால் நீ என்னைக் கைப்பிடித்த அன்றுமுதல்
பேதையேன் சொல்லியசொல் பிழைத்தறியாய் பேரவுண!
நாதனே! என்னைநீ நடுக்கம் காணுது ஊரில்
போத ீ எழுந்திராய் பொய்யுறக்கம் உறங்காதே.

பொ : பெருமை யுடைய அவுணனே! என்கொழுநனே? நீ காதலினுல் என்னைக் கைப்பிடித்து மணந்த அன்றுமுதல் இன்று வரை பேதையாகிய யான் சொல்லிய சொல்லைத் தவறியறியாய்; ('நின்னை யிழந்தால் யான் எவ்வாறு நடுங்குவேன் என்பதை காண்பதற்காகவே இறந்தாரைப் போலக் கிடக்கின்ருய்) அவ்வாறு நீ எனது நடுக்கத்தைக் காணவிரும்பாது ஊர்க்குப்போக எழுந்திருப் பாயாக! பொய்த்தூக்கம் தூங்கவேண்டாம்.

கு : பேரவுண! என அவன் மரபையும், நாதனே! எனத் தனக்குள்ள உறவையும், புலப்படுத்தி இருமுறை விளித்தவாறு. 'பேதையேன்' என்பது, சூர்ப்பணகை தன்னடக்கத்துடன் கூறிக் கொண்ட சொல்; 'அறிவிலி' என்பது பொருள். யான் அறிவிலியாக இருந்தாலும் யான் சொல்லிய சொல்லைத் தட்டாது நடந்து நின் பெருந்தன்மையைப் புலப்படுத்தினுய்; என்றவாறு அவன் இறந்து விடவில்லை; தர்ன் இறந்தால் தன்மனைவி எவ்வாறு நடுங்கி வருந் துவாள் என்பதை காண்பதற்காகவே பொய்யுறக்கம் உறங்கி இறந்தவனைப்போல நடிக்கின்ருன் என்பது சூர்ப்பணகையின் கருத்து. அந்த நடிப்பை விடுத்து ஊர்க்குப் போக எழுந்திருப்பா யாக என்று கட்டளை யிடுகின்ருள் கணவனுக்கு. இது வரையில் தன் கட்டளையைத் தவருது நிறைவேற்றிய கணவன் இந்தக் கட்டளையையும் நிறைவேற்ருமல் இரான் என்பது அவள் கருத்து. அவ்வெண்ணம் புலப்படவே 'பேதையேன் சொல்லிய சொல் பிழைத்தறியாய்' என்பதை முன்னர்க் கூறினுள். (கூஅ)

427. என்னிற் பின் சூர்ப்பணகை
யிருப்பாளோ விராளோவென்
றுன்னிச்சோ திப்பானுள்
ளுயிரடக்கிக் கிடந்தாயோ
பின்னிற்கும் பழிபூண்டு
பெருந்துயரம் பட்டுநான்
உன்னிற்பின் னிருக்கலே
னெழுந்திரா யுத்தமனே

என்னிற்பின் சூர்ப்பணகை இருப்பாளோ? இராளோ? என்று
உன்னிச் சோதிப்பான் உள் உயிர் அடக்கிக் கிடந்தாயோ?
பின்நிற்கும் பழிபூண்டு பெருந்துயரம் பட்டு நான்
உன்னில் பின் இருக்கலேன் எழுந்திராய் உத்தமனே!

பொ: சூர்ப்பணகை எனக்குப்பின் இருப்பாளோ? இருக்க மாட்டாளோ? என்று எண்ணி அதைச் சோதிப்பதற்காக உள்ளே உயிர்ப்பை அடக்கிக் கிடந்தாயோ? நான் அவ்வாறு பிற்காலத்து நிலைத்து நிற்கின்ற பழியைப் பூண்டுகொண்டு, நின் பிரிவால் பெரியதுயரம் பட்டுக்கொண்டு உனக்குப்பின் இருக்கமாட்டேன்; உத்தமனே! எழுந்திருப்பாயாக.

கு: என்னின் என்பது எனக்கு என்னும் நான்காம் வேற்றுமைப் பொருளில் வந்த உருபுமயக்கம்; உன்னிற் பின் என்பதும் அதுவே. வித்துருசிங்கன் சூர்ப்பணகை தனக்குப்பின் வாழ்ந்திருப்பாளோ? அல்லது வாழாமல் உடனிறந்து படுவாளோ? என்பதைச் சோதித்துப் பார்க்கவே இப்போது உயிர்ப்பை உள்ளே இழுத்து அடக்கிக்கொண்டு கிடக்கின்றான் என்பது சூர்ப்ணகையின் கருத்தாகும். அவனுக்கு ஐயமின்றி உறுதிகூறும் முகத்தாலேதான் 'உன்னிற்பினி ருக்கலேன்' என்று கூறினாள். கணவனுக்குப் பின் ஒருத்தி வாழ்ந்தால் அவளைக் கண்டு உலகத்தார், இவள் கணவனிடம் அன்பு இல்லாதவளாதலின் அவனிறந்தபோது உடனிறவாது உயிர் வாழ்கின்றாள், என்று பழிகூறுவர். மேலும், கணவனை

யிழந்தபின்கைம்மைநோன்புநோற்றலில்,பெருந்துயரம்படவேண்டியிருக்கும். சுவையற்ற உணவை உண்டு பரற்கற்கள் பரப்பிய தரையில் பாயின்றிப் படுக்கும் துன்பமிக்கது கைம்மை நோன்பு என்பதை. 'அணல்வரிக் கொடுங்காய் வாள்' போழ்ந்திட்ட காழ் போல் நல்விளர் நறுநெய் தீண்டாது, அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம், வெள்ளெட் சாந்தோடு புளிப்பெய்தட்ட, வேளை வெந்தை வல்சியாகப் பரற்பெய்பள்ளிப் பாயின்றி வசதியும் உயவற் பெண்டிரேம்'' (புறநா-216) என்று பூதபாண்டியன் தேவி பெருங் கோப்பெண்டு கூறியிருத்தலால் அறியலாம். இவையாவும் துன்பப் பிதற்றல். (கூகூ)

428. முன்னமே தானென்னை
முறைமையா லேகொடுத்துப்
பின்னெனைநூ லிழப்பித்த
விராவணனு மென்றமையன்
றன்னைமூ வுலகாள
யான்கண்டு தாரவுணர்
மன்னனே யுடல்சுமந்து
வாழ்வேனோ வாழ்வேனோ.

**முன்னமே தான் என்னை முறைமையாலே கொடுத்துப் பின் எனைநூல் இழப்பித்த இராவணனும் என்தமையன் தன்னை, மூவுலகுஆள, யான்கண்டு தார் அவுணர் மன்னனே! உடல் சுமந்து வாழ்வேனோ? வாழ்வோனோ?**

பொ: மாலையணிந்த அசுரர்கள் தம் அரசனே! முன்னரே என்னை முறைப்படி தானே உமக்கு மணம் செய்து கொடுத்து விட்டுப் பின்பு என்னை மங்கல நாண் இழக்கச் செய்த இராவணனாகிய என் அண்ணன் தன்னை மூன்று உலகங்களையும் ஆள்வோனாகப் பார்த்துக்கொண்டு, இந்த உடம்பைச் சுமந்துகொண்டு, வாழ்வேனோ? யான் வாழ்வேனோ? வாழேன் என்றவாறு.

கு: என்னிச்சையாக மணக்கவில்லை என்பாள், தான் என்னை முறைமையாலே கொடுத்து, என்றும், வேதவிதிப்படி முடித்த மணம் என்பாள், 'முறைமையாலே கொடுத்து என்றும் கூறி, இராவணன் தானே முன்னின்று வேதவிதிப்படி நடத்திய திரு மணத்தைத், தானே சிதைத்துவிட்டு என்னை நூலிழப்பித்தானே என்று சினத்தால் ஏங்கியவாறு. என் கணவனைக் கொன்று என் இன்பத்தைக் கெடுத்த இராவணன் மூவுலகாண்டு புகழும் இன்பமும் பெறப் பார்த்துக் கொண்டு யான் வாழேன் என்பாள், என் தமையன் தன்னை மூவுலகாள யான் கண்டும் வாழ்வேனோ? என்றாள். தாரவுணர் மன்னனே! என்றது வித்துருசிங்கனை விளித்தது. (ஈ)

429. கைம்முறுக்கி வாய்மடித்து
நீகிடந்த கருத்தறியேன்
மைம்முறித்த கருமனத்து
வாளரக்கர் கோமானை
மெய்ம்முறிக்கப் பெற்றிலே
னென நினைந்தோ மேவாரை
மொய்ம்முறிக்கு மாற்றலாய்
காரணமென் மொழியாயோ?

**கைம்முறுக்கி, வாய்மடித்து நீகிடந்த கருத்து அறியேன்;**
**மைம்முறித்த கருமனத்து வாள் அரக்கர் கோமானை**
**மெய்ம்முறிக்கப் பெற்றிலேன் என நினைந்தோ? மேவாரை**
**மொய்ம் முறிக்கும் ஆற்றலாய்! காரணம் என்? மொழியாயோ?**

பொ: பகைவரைப் போரில் அழிக்கும் ஆற்றலுடையவனே! கையை வளைவாக முறுக்கிக் கொண்டும் வாயை மடித்துக் கடித்துக் கொண்டும் நீ தரையில் கிடக்கின்ற கருத்துயாது என்பதை யான் அறியேன்; மையினையும் முறித்துக் கீழ்ப்படுத்திய கரிய மனத்தினை யுடைய கொடிய அரக்கர்கோமானாகிய இராவணனை உடம்பு முறிக்கப் பெற்றிலேனே! என்று நினைந்துதானோ? வேறுகாரணம் என்னையோ? சொல்ல மாட்டாயோ?

கு: வித்துருசிங்கன் போர்க்களத்தில் கையை முறுக்கிக் கொண்டும் வாயை மடித்துக் கொண்டும் கிடப்பது அவன் சினக் குறிப்பைக் காட்டுவதால் (இராவணன் உடம்பை முறிக்கப் பெற்றிலேனே' என்ற கருத்தால்தான் அங்ஙனம் கிடக்கின்ருனே? அல்லது வேறு காரணம் உண்டோ? என்று ஐயுற்று வினவியவாறு. இராவணன் மனம் கருமையுடையது என்பது அவன் வஞ்சக எண்ணம் பற்றிக் கூறியது ஆயினும் பண்பு என்பதால் நிறப்பண்பும் அடங்குதலின் மைம் முறித்த கருமனம் என்ருர். "கூழின் மலி மனம் போன்று இருளாநின்ற கோகிலமே" (திருகோவையார் 322) என்புழிப்போல. கரியமையினும் அழுத்தமான கருமனம் என்றவாறு. உடன்பிறந்த சூர்ப்பணகைக்கே இராவணன் மனம் செம்மையதன்று என்பது தெளிவாகியுள்ளது என்பது இதனுலறியலாம். மேவலரை மெர்ய்ம் முறிக்கும் ஆற்றலாய்! என்ற விளி கருத்துடையது. அத்தகைய ஆற்றலிருந்தும் இராவணனைக் கொல்லாது கொலையுண்டாயே என்றவாறு. (கமக)

சூர்ப்பணகை கணவனது உடம்பை எரித்தல்

430. எனறினைய பலபன்னி
யெழிற்கணவன் றனைப்புல்லிக்
கன்றியநெஞ் சினளாகிக்
கதறுகின்ற சூர்ப்பணகை
தன்றுணைவி மாரவளைத்
தாங்கிக்கொண் டகம்போகக்
குன்றனைய தோளானை
விதிமுறைநீக் கொளுத்தினர்.

என்று இனையபல பன்னி எழில் கணவன் தனைப் புல்லி,
கன்றிய நெஞ்சினள் ஆகி, கதறுகின்ற சூர்ப்பணகை,
தன் துணைவிமார் அவளைத் தாங்கிக் கொண்டு அகம்போக,
குன்று அனைய தோளானை விதிமுறை தீக்கொளுத்தினர்.

பொ : என்று இத்தன்மையான பலவற்றைப் பலகால் சொல்லிக்கொண்டு, அழகிய கொழுநனை அணைத்துக்கொண்டு, வருந்திய மனத்தினளாகிக் கதறி அழுகின்ற சூர்ப்பணகையினது தோழிமார்கள், அந்தச் சூர்ப்பணகையைக் கையால் தாங்கி நடத்திக் கொண்டு வீட்டுக்குள் அழைத்துச்செல்ல, மலைபோன்ற தோளையுடைய வித்துருசிங்கனை விதிப்படி ஈம விறகேற்றிக் கொளுத்தினார்கள்.

கு : போர்க்களத்தில் இறந்து வீழ்ந்து கிடக்கும் கணவனைத் தழுவி அழுகின்ற சூர்ப்பணகையை அவள் தோழியர் தம்கையால் தாங்கி வழி நடத்திக் கொண்டு வீட்டிற்கு அழைத்துச் சென்றார்களாக, உறவினர்கள் வித்துருசிங்கனது உடம்பை ஈமவிறகில் ஏற்றிக் கொளுத்தினர் என்றவாறு. கன்றுதல் – வருந்துதல் அகம் – வீடு.

(கயிஉ)

சூர்ப்பணகையின் கதறல்

431. ஆயவடன் காதலனை
யழற்படுத்தா ரெனக்கேட்டுக்
காயும்வெங் கனலென்னக்
காந்துகின்ற மனத்தினளாய்
வாயொருகா லோயாதே
மழையிடித்த தெனக்கதறிச்
சேயிழையா ரெல்லாருந்
தேற்றவுந்தான் றேருதே.

ஆயவள்தன் காதலனை அழல்படுத்தார் எனக்கேட்டு,
காயும் வெங்கனல் என்னக் காந்துகின்ற மனத்தினளாய்,
வாய் ஒருகால் ஓயாதே மழைஇடித்தது எனக்கதறி,
சேயிழையார் எல்லோரும் தேற்றவும் தான்தேருதே.

பொ : மனையடைந்த அச்சூர்ப்பணகை, தன் கொழுநனுடம்பைத் தீயிலிட்டுக் கொளுத்திவிட்டனர் என்றுகேள்விபட்டு அதனுல்

கொளுத்துகின்ற கொடிய நெருப்புப் போல வெதும்புகின்ற மனத்தினளாய் வாய் ஒருகாலும் ஓயாமல் மேகம் இடிக்கின்றது போலக் கதறி அழுது, செம்மையான அணிகளையுடைய பெண்டிர் எல்லாம் ஆறுதல் சொல்லித் தேற்றவும் தேருமல்.

கு : குளகம்; வருஞ் செய்யுளில் முடியும். தன் கணவனுடைய உடம்பு கனலில் எரிந்தது என்பதைக் கேள்விப்படுகின்ற போது சூர்ப்பணகையின் மனம் அந்த நெருப்பினுல் பற்றப்பட்டது போல வெதும்பி எரிந்தது. அதனுல் மேகம் இடிக்கின்றது. போன்ற பெருங்குரல் எடுத்துக் கதறி அழலானுள் என்றவாறு. செம்மையான கற்கள் பதித்த அணிகலன்களை அணிந்த அரிவையர் என்பார் சேயிழையார் என்றுர். கணவனேடு வாழும் செம்பெண்டிர் என்ற குறிப்பும் உண்டு. (கயரு)

சூர்ப்பணகை இராவணனிடம் செல்லுதல்

432. ஆக்குமவ னேயழிக்கை
யழகன்றென் றுணராதே
தாக்கியே காதலனைத்
தரைப்படுத்த தசமுகனுர்
நாக்கினை நான் பிடுங்கியென்ற
னடலைநோ யதுதீரப்
போக்குவெனென் னுயிரென்று
சூர்ப்பணகை புறப்பட்டாள்.

‘ஆக்கும் அவனே அழிக்கை அழகு அன்று என்று உணராதே
தாக்கியே காதலனைத் தரைப்படுத்த தசமுகனுர்
நாக்கினை நான் பிடுங்கி என்தன் நடலைநோய் அது தீரப்
போக்குவேன் என்உயிர்’ என்று சூர்ப்பணகை புறப்பட்டாள்.

பொ : ‘ஒருபொருளை உண்டாக்கிய அவனே அப்பொருளை அழிப்பது என்பது அழகு அன்று என்பதை உணர்ந்து பார்க்காமல்

(முன் மணக்கச் செய்த) என் கணவனைக் கொன்று தரையில் வீழ்த்திய இராவணனது நாக்கினை நான் பிடுங்கி விட்டு எனது துன்பநோய் தீர எனது உயிரைப் போக்குவேன்' என்று கருதிச் சூர்ப்பணகை புறப்பட்டாள்.

கு : ஒருபொருளை உண்டாக்கினவன் அதனை அழிக்கத் துணிய மாட்டான் என்பதை ''தாம் வளர்த்ததோர் நச்சுமாமரமா யினுங் கொலார்' (திருவாசகம்–96) என்ற மணிவாசகர் வாக்காலு முணரலாம். ஆக்கினவன் என்றது வித்துருசிங்கனைக் கொழுந னுக்கினவன் என்றவாறு. தரைப்படுத்தல் என்பது கொல்லுதலைக் குறிப்பால் உணர்த்தியவாறு. நடலை – துன்பம். கணவனைப் பிரிந்த துன்பத்தையே இங்கு நடலை என்றார். தன் கணவனைக் கொன்றவன். தனக்கு அண்ணனாக இருந்தாலும் அவன் நாக்கைப் பிடுங்கிக் கொன்றுவிட்டுத் தன்னுயிரைமாய்த்துக் கொள் வது என்ற துணிவோடே புறப்பட்டாள் என்றவாறு. தேற்றவும் தேறாதே சூர்ப்பணகை புறப்பட்டாள் என்று முடியும். (கமச)

சூர்ப்பணகையின் முறையீடு 105 – 109

433. மாத்தானை யுரிபோர்த்த
வளர்சடையோன் வாழ்கயிலை
பேர்த்தானைப் பெருவலியாற்
பெரும்புவனங் களைவென்று
போர்த்தானை புடைசூழப்
பொன்னகரிற் புகுந்திருந்த
மூத்தானை யிளையாள்கண்
டிவைசொல்லி முறையிட்டாள்.

**மாத்து ஆனை உரிபோர்த்த வளர் சடையோன் வாழ்கயிலை பேர்த்தானை, பெருவலியால் பெரும்புவனங்களை வென்று போர்த்தானை புடைசூழ, பொன் நகரில் புகுந்திருந்த மூத்தானை, இளையாள் கண்டு இவைசொல்லி முறைஇட்டாள்.**

பொ: விலங்கினத்தைச் சேர்ந்த யாணையின் தோலைப் போர்வையாகப் போர்த்த நெடிதாக வளர்ந்த சடையையுடைய சிவபிரான் வாழ்கின்ற கயிலைமலையைப் பெயர்த்தவனுகிய இராவணனை, தன்பெரிய வலிமையால் பெரிய முப்புவனங்களையும் வென்று விட்டுப் போர்செய்யும் ஆற்றலையுடைய சேனை, பக்கத்தில் சூழ்ந்துவரப் பொன்மயமான இலங்கைமாநகரில் போய்த் தங்கியிருந்த தன் அண்ணனை, இளையவளாகிய சூர்ப்பணகை பார்த்து இவற்றைச் சொல்லி முறையிட்டாள்.

கு: மா-விலங்கு. மாத்து ஆனை என்றது, விலங்கினத்ததாகிய ஆனை என்றவாறு. இனி, மகத்து என்பது மாத்து என மருவியதாகக் கொண்டு பெரிதாகிய யானை எனப் பொருள் கொள்ளலும் ஆம். இராவணனது வலிமை புலப்படக் கயிலை பேர்த்தானை, என்றும் அவனது உறவுபுலப்பட, மூத்தானை என்றும் கூறியவாறு பெரும் புவனங்கள் என்றது, மண்ணுலகும் விண்ணுலகும் பாதாள உலகமும் ஆகிய மூவுலகங்களை. போர்த்தானை — போர் செய்யும் சேனை. புடை—பக்கம். பொன்னகர் என்றது பொன்மயமான இலங்கை நகரை. அவள் சொல்லியவை அடுத்த செய்யுளில் காணலாம். (கயரு)

434. சொல்லெடுத்துன் பழிதூற்றித்
துன்பங்கொண் டென்வீடு
கல்லெடுக்க நல்லுற்றார்
கரைந்தேங்கக் கடைக்காணீ
வில்லெடுக்கை யுன்னுடைய
வீரத்துக் கிழிவன்றோ
அல்லெடுக்குந் தலைமாய்த்த
வண்ணுவோ வண்ணுவோ.

சொல் எடுத்து உன்பழிதூற்றி, துன்பங்கொண்டு என்வீடு கல்லெடுக்க, நல் உற்றார் கரைந்து ஏங்கக் கடைக்கால் நீ, வில்எடுக்கை உன்னுடைய வீரத்துக்கு இழிவு அன்றோ? அல் எடுக்கும் தலைமாய்த்த அண்ணு ஓ! அண்ணு ஓ!

**பொ:** (நரை யின்றி) இருளைத் தாங்கினாற் போன்ற கருமை யான குடுமியையுடைய என் கணவன் தலையை மாய்த்த ஓ அண்ணா! ஓ அண்ணா! உன் பழியைச் சொல்லால் எடுத்துத் தூற்றித் துன்பத்தைச் சுமந்துகொண்டு என்வீடு கல்லெடுப்பு நடத்தவும், நல்ல உறவினர்களெல்லாம் மனங்கரைந்து ஏங்கவும், கடைசியில் நீ வில்லை எடுத்தல் உன் வீரத்திற்கு இழுக்காகும் அல்லவோ!

**கு:** திக்குவிசயத்தின் இறுதியில் தன்கணவனைக் கொன்றான் என்பது புலப்பட, கடைக்கால் நீ வில்லெடுக்கை உன்னுடைய வீரத்திற்கு இழுக்கன்றோ? என்றாள். இராவணன் வில்லெடுப்புத் தன்வீட்டுக் கல்லெடுப்புக்குக் காரணமாய் அமைந்தமை புலப்படுத் தியவாறு. அல் எடுக்குந்தலை என்றது, இருளைப்போன்று கறுத்த குடுமியையுடைய-இளமையுடைய தன் கணவன் தலையை. தங்கை கணவன் தலையை. மாய்க்க வில்லெடுக்கை, வீரத்தைப் புலப்படுத்த வேண்டியிருக்க, உன் மைத்துனனைக் கொன்றமையால் அது வீரத்திற்கு இழுக்கினையன்றோ புலப்படுத்திவிட்டது என்றவாறு. இறந்தாரைத் தெய்வமாக்கி நிறுத்த இறுதிச் சடங்கில் கல்லை நடுதல் மரபு; கல்லெடுப்பு என்பது அச் சடங்கிற்குப் பெயர்

(கயசு)

435. முலைப்பாலே நஞ்சாகி
முனைமுகத்தி லொருக்காலும்
கொலைப்பால னல்லாத்தன்
மைத்துனனைக் கொலைசூழ்ந்த
புலைப்பாவி யுன்றமையன்
பொல்லானென் றெல்லாரும்
அலைப்பாலே யறவலைந்தே
னண்ணாவோ வண்ணாவோ.

முலைப்பாலே நஞ்சு ஆகி. முனைமுகத்தில் ஒருக்காலும் கொலைப்பால னல்லாத்தன் மைத்துனனைக் கொலை சூழ்ந்த

புலேப்பாவி உன் தமையன் பொல்லான் என்று எல்லேரும்
அலேப்பாலே அறஅலேந்தேன்; அண்ணு ஓ! அண்ணு ஓ!

பொ. ஓ அண்ணு! ஓ அண்ணு! உயிரை வளர்க்கும் முலேப் பாலே உயிரை யுண்ணும் நஞ்சாகியதுபோல, (உயிர் வாழ்க்கைக் குத் துணே செய்யத்தக்க உரிமை உடையவனுயிருந்தும்) 'ஒருக் காலும் கொல்லத்தக்கவன் அல்லாத தனதுமைத்துனனேக் கொன்ற புலேத் தன்மைமிக்க பாவியாகிய உன்அண்ணன் மிகவும் கொடியன், என்று எல்லோரும் என்னேப் பார்த்து அலேத்தலாலே முழுவதும் அலேப்புண்டேன்.

கு: நஞ்சாகி, என்புழி, நஞ்சாகியது போலாகி எனவரும் உவம உருபு தொக்கதாகக் கொள்க. முலேப்பால் உயிரை வளர்க் கும் இயல்புடையது. அது நஞ்சாகி அவ்வுயிரைக் கொல்லுதல் கூடாநிகழ்ச்சியாகும். கூடாத இந்நிகழ்ச்சியை யுவமையாக்கித் தங்கை கணவனே வாழ்விக்க வேண்டிய இராவணன் கொன்ற இயல்பை விளக்கியவாறு. முலேப்பாலே நஞ்சாகி என்பது இல் பொருளுவமையாகும். புலே—கீழ்மை. சூர்ப்பணகையை நோக்கி, ஊரில் உள்ள எல்லோரும், 'உன்தமையன் கொல்லத்தகாத மைத்துனனேக் கொன்ற பாவி என்றும் பொல்லான்' என்றும் சொல்லி தன்னேத் துன்பத்திற்குள்ளாக்குகின்ருர்கள் என்பாள். பொல்லானென்று எல்லோரும் அலேப்பாலே அறஅலேந்தேன்' என்ருள். அலேத்தல் — வருத்துதல்.
(கயஎ)

436. காசுக்கும் பொன்னுக்கு
மாழிக்குங் கடுஞ்சொல்லின்
வாசிக்குங் கலாய்த்துண்ணு
மணவாளப் பிள்ளேதனேப்
பூசிக்கை பொருகளத்துக்
கொன்றுபுரட் டிடுகையோ
ஆசைக்கப் புறம்செலுத்து
மண்ணுவோ வண்ணுவோ.

**காசுக்கும், பொன்னுக்கும், ஆழிக்கும், கடுஞ்சொல்லின்**
**வாசிக்கும், கலாய்த்து, உண்ணு மணவாளப் பிள்ளைதனைப்**
**பூசிக்கை, பொருகளத்துக் கொன்று புரட்டிடுகையோ?**
**ஆசைக்கு அப்புறம் செலுத்தும் அண்ணுவோ! அண்ணுவோ!**

**பொ:** திக்குக்கு அப்புறத்தும் ஆணை செலுத்துகின்ற அண்ணுவோ! அண்ணுவோ! (நம் மனைக்கு வந்தபோது) காசுக்காவும், பொன்னுக்காவும், மோதிரம் முதலிய அணிகளுக்காகவும், கடுஞ்சொல்லின் மிகுதிக்காகவும் கோபம் கொண்டு உண்ணுமலிருக்கின்ற மணவாளப் பிள்ளையை (கோபம் தீர்த்துப்) நீ பூசித்தல் என்பது போர்க்களத்தில் அப்பிள்ளையைக் கொன்று பூமியில் புரட்டிடுதல் தானே?

**கு:** ஒருவர் வீட்டுக்கு மருமகன் வந்தால், அவன் காசுக்காகவும் பொன்னுக்காகவும் மோதிரம் முதலிய அணிகளுக்காகவும் விரும்பி அவற்றைப் பெற வியலாதவழிக் கோபித்துக் கொண்டு உண்ணுதிருத்தலும், அது கண்டு மாமடிகள் முதலியோர் கடுஞ்சொல் சொல்லியவழி அச்சொல்லில் கடுமை மிகுதிக்காக உண்ணுதிருத்தலும் இயல்பு என்பதை முதல் இரண்டடிகள் உணர்த்துகின்றன. வாசி - மிகுதி; கலாய்த்தல் — கோபித்தல். சூர்ப்பணகையின் கணவன் வேறுவகையான பகைமைக்கலாம் கொண்டவன் அல்லன் என்பாள், 'காசுக்கும் ......கடுஞ்சொல்லின் வாசிக்கும் கலாய்த்துண்ணு மணவாளப் பிள்ளை' என்று விளக்கியவாறு. இவ்வாறு காசு முதலிய வற்றிற்காகச் கோபித்துக் கொண்டு உண்ணுதிருக்கும் மணவாளப்பிள்ளையை மைத்துனர் என்பார் அணுகி, 'நீ வேண்டியதைத் தருகிறோம் உணவு உண்க' என்று அம்மணவாளப் பிள்ளைதனைப் பூசித்துப் பேசுதலே இவ்வுலகியல்பு. ஆனல், வித்துருசிங்கனுக்கு மைத்துனனுகிய இராவணன் இவ் வியல்பிற்கு மாருக அவனைக் கொன்றமையால், மணவாளப் பிள்ளைதனைப் பூசிக்கை பொருகளத்துக் கொன்று புரட்டிடுகையோ'? என்று வினவினுள் சூர்ப்பணகை. ஆசை — திசை. செலுத்தும் என்ற வினையால் ஆணை என்று சொல் வருவிக்கப்படும். (கமஅ)

437. மிகையெல்லாஞ் செய்தாரே
யாயிடினும் விளையாட்டாம்
வகையல்லா லொருக்காலு
மைத்துனமார் தம்மோடும்
பகையில்லை யெனுமந்தப் பழமொழியும்
பார்த்திலை பொன்
னகவிலான் வரையெடுத்த
வண்ணவே வண்ணவோ.

''மிகை எல்லாம் செய்தாரே ஆ'பிடினும், விளையாட்டாம் வகையல்லால் ஒருக்காலும் மைத்துனமார் தம்மோடும் பகை இல்லை'' எனும் அந்தப் பழமொழியும் பார்த்திலை; பொன் அகவிலான் வரை எடுத்த அண்ணவோ! அண்ணவோ!

பொ: பொன்மலையாகிய மேருவை வில்லாகக் கொண்ட சிவபிரானது வெள்ளிமலையை எடுத்த அண்ணவோ! அண்ணவோ! குற்றங்கள் எல்லாம் செய்தாரே ஆனாலும், விளையாட்டாம் வகையால் செய்தார் என்று கொள்வதன்றி, ஒருகாலும் மைத்துனர் மாரோடு பகை கொள்ளுதல் இல்லை' என்கின்ற அந்தப் பழமொழியையும் எண்ணிப் பார்தாயில்லையே (கொலை செய்துவிட்டாயே!)

கு: மிகை – குற்றம். மைத்துனர் செய்யும் குற்றங்களையும் விளையாட்டாகச் செய்ததாகவே கொள்ளுதல் வேண்டும், பகைமையால் செய்ததாகக் கொள்ளுதல் கூடாது என்பது கருத்து தன் கணவனாகிய வித்துருசிங்கன் ஒருகால் மிகை செய்திருந்தாலும், நகற்பொருட்டுச் செய்ததாகக் கொள்வதல்லது, பகையால் செய்த தாகக் கொண்டு கொலைசெய்தல் பொருந்துமோ? என்றவாறு. அகம் – மலை. பொன் – பொன்அகம் – பொன்மயமான மேருமலை. பொன் அகவிலான் என்றது சிவபிரானை, பார்த்திலையே என்றது, பாராது கொலை செய்தனையே என்னும் குறிப்பினது. (கயகூ)

### சூர்ப்பணகை இராவணன் அடியில் வீழ்ந்து அழுதல்

438. இலங்கை வேந்தன் றன்முன்னே
யென்றுசொல்லி முறையிட்டு
விலங்கல் வந்து விழுவதுபோல்
விரித்தகுழலும் வெறுங்கழுத்தும்
கலங்கு மனமு முடையாளாய்க்
கைதானெடுத்துக் கூப்பிட்டுப்
புலம்பி யவன்ற னடிவீழ்ந்து
பொடியிற்கிடந்து புரண்டழுதாள்.

**இலங்கை வேந்தன் தன்முன்னே என்றுசொல்லி முறையிட்டு விலங்கல் வந்து விழுவதுபோல் விரித்தகுழலும், வெறுங் கழுத்தும், கலங்கும் மனமும் உடையாளாய்க் கைதான் எடுத்துக் கூப்பிட்டுப் புலம்பி அவன்தன் அடிவீழ்ந்து பொடியிற்கிடந்து புரண்டு அழுதாள்**

பொ: என்று சொல்லி முறையிட்டு இலங்கைக்கு அரசனாகிய இராவணன் தன் முன்னே மலைவந்து விழுவதுபோல, (பின்னுது) விரித்த கூந்தலும், (தாலியில்லாத) வெறும் கழுத்தும், கலங்குகின்ற மனமும் உடையவளாய் கையெடுத்து அழைத்துக்கொண்டு புலம்பி, அவ்விராவணனுடைய பாதங்களில் வீழ்ந்து மண்பொடியில் கிடந்து புரண்டு அழுதாள்.

கு: என்று சொல்லி முறையிட்டு இலங்கைவேந்தன் தன் முன்னே விலங்கல் விழுவதுபோல் அவனடி வீழ்ந்து புரண்டழு தாள் எனமுடியும். விரித்த குழலும், வெறுங்கழுத்தும் கலங்கும் மன மும் உடையவளாய் என்பன அவள்தன் துன்பநிலையை இயல்பாக உணர்த்தியிருத்தல் காணலாம். 'மெய்யிற் பொடியும் விரித்த கருங் குழலும், கையிற் றனிச்சிலம்பும் கண்ணீரும் – வையைக்கோன், கண்டளவே தோற்றான் காரிகை தன் சொற்செவியில், உண்டளவே தோற்றானுயிர் (சிலப்–வழக்குரை காதை வெண்பா) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். பொடி என்றது தரையில் கிடக்கும் தூசினை.

(கசுா)

இராவணன் வினவும் சூர்ப்பணகையின் விடையும்

439. தங்கை விழுந்து புரண்டலறக்
தாங்கி யெடுத்துத் தசக்கிரிவன்
மங்கை யுனக்கிவ் வன்றுயரம்
வந்த தென்கா ரணமென்னக்
கங்கைமுடியோன் வரையெடுத்தோய்
காலகேயர் பொருகளத்துன்
அங்கை வாளா லென்கணவ
னுவியுண்டா யெனவழுதாள்.

தங்கை விழுந்து புரண்டு அலற, தாங்கி எடுத்துத் தசக்கிரிவன் மங்கை! உனக்கு இவ் வன்துயரம் வந்தது என் காரணம் என்ன, 'கங்கைமுடியோன் வரை எடுத்தோய்! காலகேயர் பொருகளத்து அம்கைவாளால் என்கணவன் ஆவி உண்டாய் என' அழுதாள். [உன்

பொ: தன்தங்கை தன்முன் விழுந்து இவ்வாறு தரையிற் புரண்டு அலறி நிற்க இராவணன் தன்கையால் தாக்கி எடுத்து நிறுத்தி, மங்கைப் பருவமுடைய உனக்கு இத்த வலிதாய துயரம் வந்தது எக்காரணத்தான்' என்று வினவ, (சூர்ப்பணகை) கங்கை முடிக்கணிந்த சிவபிரானது வெள்ளிமலையை யள்ளியெடுத்தவனே! காலகேயர் போர்செய்த போர்க்களத்திலே உனது அகங்கையிற் பிடித்திருந்த வாளினுல் என் கணவனது உயிரைப் போக்கினுய்' என்று சொல்லி அழுதாள்.

கு: தங்கை என்னும் உரிமை தோன்ற இராவணன் சூர்ப்பணகையைத் தன் கையால் தாங்கி எடுத்து நிறுத்தி அவள் துன்பக் காரணத்தை வினவினன் என்க. கங்கை முடியோன் என்றது சிவபிரானை. சூர்ப்பணகையின் தோற்றமும் அழுகையும் அவள் தன் துயரத்தின் வன்மையை யுணர்த்தினவாதலின், இவ் வன்துயரம் எனச்சுட்டிக்கூறி வினவினன். அகங்கை, அங்கை என இடையெழுத்துக் கெட்டது. இனி அம்கை எனவே கொண்டு

அழகியகை எனப் பொருள் கூறிக் குறிப்பால் இகழ்ந்ததாகவும் கொள்ளலாம். உண்டாய் என்பது உண்டற்குரிய அல்லாப் பொருளையுண்டன போலக் கூறும் முறையை பற்றிவந்தது. வழுவமைதி. உண்டாய் என்பது போக்கினுய் என்னும் பொருளதே யாகும். (கககக)

சூர்ப்பணகையின் முறையீடு

440. பெண்ணுகி யுன்குலத்துப்
பிறந்தாள்பே ரிடும்பையுற
அண்ணுநீ யரசாள
லரக்கர்குலத் தறனுமோ
எண்ணுதென் காதலனை
யிகலமரு ளுயிருண்டாய்
விண்ணுரென் கூறுவா
ரெனவிம்மி வெய்துயிர்த்தாள்.

'பெண்ணுகி உன்குலத்துப் பிறந்தாள் பேரிடும்பை உற,
அண்ணுநீ அரசாளல் அரக்கர்குலத்து அறன் ஆமோ?
எண்ணுது என்காதலனை இகல்அமருள் உயிர்உண்டாய்
விண்ணுர் என் கூறுவார்' எனவிம்மி வெய்து உயிர்த்தாள்.

பொ: அண்ணு! உன் குடியில் பெண்ணுகிப் பிறந்தவளாகிய யான் பெருந்துன்பம் அனுபவித்துக் கொண்டிருக்க நீ மகிழ்ச்சி யோடு மூவுலகங்களையும் அரசாண்டுகொண்டிருத்தல் அரக்கர் குலத்திற்கு ஏற்ற அறனுகுமோ? எண்ணிப் பார்க்காமல் மாறு பாட்டால் செய்கின்ற போரில் என் காதலனைக் கொன்றுவிட்டாய். இந்நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் தேவர்கள் என்ன சொல்லுவார்கள்? என்று சொல்லித் தேம்பிப் பெருமூச்சு விட்டாள்.

கு: உன்குலத்துப் பெண்ணுகிப் பிறந்தாள் 'என்புழிக் குலம் என்றது குடியை. உடன்பிறந்தாள் பெருந்துன்பமுறும்பொழுது தானும் துன்புறுவது இயல்பாக இருக்க, உடன்பிறந்தயான் பெருந்துன்பமுற நீ மகிழ்ச்சியோடு அரசாளுதல் அறனுகாது.

தேவர்கள் இதனைப்பார்த்து இகழ்ந்து பேசுவர் என்பது கருத்து. என்று கூறுவர் என்றது, இகழ்ந்து கூறுவரே'. என்னும் கருத்தினது. விம்முதல் – தேம்புதல். உயிர்த்தல் – பெருமூச்சுவிடுதல் இவை துன்பக் காலத்தில் மெய்யின்கண் தோன்றும் இயல்பு நிகழ்ச்சிகளாகும். இராவணன் விண்ணோர் புகழ வாழும் கருத்தினனாகலின், அவன் குறிப்பறிந்து விண்ணோர் என் கூறுவார்' என்றாள். (௪௪0)

### இராவணன் விதியின் வலிகூறித் தங்கையின்துயர் தணித்தல்

### வேறு

441. இன்ன பலவும் பன்னுமிவட்
கிலங்கைவேந்த னீதுரைக்கும்
உன்னையுடைய கணவனைநா
னொன்றுமுணரா துயிருண்டேன்
என்னை யமரின் மதிமயக்கி
யென்னா லேயின் றவனாவி
தன்னையுண்ட விதியாரைத்
தடுக்கவல்லார் தாமுண்டோ.

**இன்னபலவும் பன்னும் இவட்கு இலங்கை வேந்தன் ஈது உரைக்கும்;
உன்னை உடைய கணவனை நான் ஒன்றும் உணராது உயிர் உண்டேன்
என்னை அமரின் மதிமயக்கி என்னாலே இன்று அவன் ஆவி
தன்னை உண்ட விதியாரைத் தடுக்க வல்லார்தாம் உண்டோ?**

பொ: இத்தன்மையரான பலவற்றையும் சொல்லி அழுகின்ற இந்தச் சூர்ப்பணகைக்கு, இலங்கைக்கு வேந்தனாகிய இராவணன் இதைச் சொல்வானானன், 'உன்னை மனைவியாக உடைய உன் கணவனை நான் ஒன்றும் உணராமல் கொன்றுவிட்டேன்; என்னைப் போரில் (ஆர்வங் கொள்ளுமாறு) என் புத்தியை மயக்கி, (அவன் மைத்துனனாகிய என்னாலே இப்போது அவனுடைய உயிரைக் கவர்ந்த விதியைத் தடுக்க வல்லவரும் உண்டோ? (இல்லை).

கு: உன்னையுடைய கணவனை என்பது உன்னை மனைவியாக உடைய உன் கணவனை என்னும் பொருளது. வித்துருசிங்கன் கொல்லத்தகாதவன் என்பது, சூர்ப்பணகையை மனைவியாக அவன் உடையவன் என்ற உறவினாலே யாதலின் அவ்வுறவு புலப்பட இங்ஙனம் கூறலானான். உன் கணவனைக் கொன்றது விதியேயல்லது யானல்லேன் என்பான், 'என்னை அமரின் மதி மயக்கி, என்னாலே இன்று இவன் ஆவிதன்னையுண்ட விதியாரைத் தடுக்கவல்லார் தாமுண்டோ?' என்று கூறினான். மைத்துனன் என்று அவனை உணராதபடி என் மதியை மயக்கியதும் என்னைக் கொண்டு அவன் உயிரைக் கவர்ந்ததும் விதியே' எனத் தங்கைக்கு அமைதி கூறியவாறு. 'ஊழிற்பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான்முந்துறும்' (380). என வள்ளுவர் விதியின் வலிமையை விளக்கியிருத்தல் காணலாம். விதியார்' என ஆர் விகுதி கொடுத்தது, அதன் வலிமை புலப்பட வேண்டி. ''உலகெலாம் பெறுவிப்பான்றலை, அரிவு செய்விதியினார்க் கரிதுண்டாகுமோ'' (ஆரணிய - சடாயு உயிர்நீத்த - 194) என விதிக்கு உயர்திணைக்குரிய ஆர் விகுதி கொடுத்திருத்தலை இங்கு நினையலாம். இங்கு இராவணனும் ஊழ்வினையில் நம்பிக்கையுள்ளவன் என்பது புலப்படுதல் காணலாம். (கக௩)

### இராவணன், தங்கையை மனநிறைவு செய்தல்

442. என்று தங்கை மனமுவப்ப
வெல்லாப் பூசை களுமியற்றி
ஒன்று குணத்து நற்றுய ருடனே
பிறந்தார் வயிற்றுதித்த
வென்றிவீரர் கரனுமவன் விரிந்த
படைக்குத் தலைவனும்
துன்று விற்கைத் தூடணனுந்
தோலா வலிமுச் சிரத்தோனும்.

என்று, தங்கை மனம் உவப்ப எல்லாப் பூசைகளும் இயற்றி ஒன்று குணத்து நற்றாயர் உடனே பிறந்தார் வயிற்று உதித்த

வென்றி வீரர் கரனும் அவன் விரிந்த படைக்குத் தலைவனும்
துன்று விற்கைத் தூடணனும் தோலர்வலி முச்சிரத்தோனும்.

பொ : என்று அமைதிகூறி, தங்கையின் மனம் மகிழுமாறு எல்லாவகையான பூசைகளையும் செய்து, பொருந்தும் குண முடைய தன் நற்ருயோடு பிறந்தவளின் வயிற்றிலே தோன்றிய வெற்றியையுடைய வீரர்களாகிய கரனும், அவளது விரிவான சேனைக்குத் தலைவனாகிய வில்லையேந்திய கையையுடைய தூடண னும் யார்க்கும் தோல்வியுருத வலிமையினையுடைய திரிசிராவும்.

கு : குளகம். வருஞ்செய்யுளில் முடியும். எல்லாப் பூசையும் என்றது, உணவு வகைகளாலும் அணிவகைகளாலும் உடைவகை களாலும் குறைவிலா வண்ணம் நிரப்புதலும், இன்சொல் கூறலும் முதலாயவற்றை. ஒன்று குணம் என்றது பொருத்தமான குணத்தை. நற்ருயர் என்புழி அர்விகுதி உயர்வு குறித்து வந்தது. வில்துன்றுகை என மாறிக் கூட்டுக. முச்சிரத்தோன் என்றது திரிசிராவை. (கசச)

இராவணன் சூர்ப்பணகையைத் தண்டகவனத்திற்கனுப்புதல்

443. இந்தமூவர் தண்டகமா மெழில்சேர்
வனத்து ளிருப்பாரால்
முந்தியேநா னுங்கவர்க்கு
மொழிந்துவிட்டே னவரோடும்
சிந்தை யுவந்தாண் டினிதிருத்தி
யென்னத் தேவர் செய்தவத்தால்
அந்த வரக்கி யவ்வனத்தி
லவரோடுறையு மக்காலை.

'இந்த மூவர் தண்டகமாம் எழில்சேர் வனத்துள் இருப்பாரால், முந்தியே நான் ஆங்கு அவர்க்கு மொழிந்துவிட்டேன்; அவரோடும் சிந்தை உவந்து ஆண்டு இனிது இருத்தி' என்ன, தேவர் செய்தவத் அந்த அரக்கி அவ்வனத்தில் அவரோடு உறையும் அக்காலை. [தால்

பொ : (கரன், தூடணன், திரிசிரா என்கிற) இம் மூவரும் தண்டகம் என்ற பெயருடைய அழகு பொருந்திய வனத்தில் இருப்பார்கள்; முன்னமே அங்குள்ள அவர்கட்கு நான் (நின்னைப்பற்றிச்) சொல்லி அனுப்பியிருக்கிறேன்; அந்த மூவரோடும் மனம் மகிழ்ந்து அவ்விடத்தில் இருப்பாயாக! என்று இராவணன் கட்டளையிட, தேவர்கள் செய்த தவத்தால் அந்தச் சூர்ப்பணகையாகிய அரக்கி, அத் தண்டக வனத்தில் அவ்வண்ணன்மாரோடு தங்கியிருக்கும் அக்காலத்து.

கு : 'முந்தியே மொழிந்துவிட்டேன் என்று இராவணன் கூறியது, சூர்ப்பணகையின் வரவைத் தூதுவர் மூலமாகத் தெரிவித்துள்ளேன் என்றபடி. சூர்ப்பணகை இங்கிருந்தால் இராவணன் மனைவிமார்களோடு மாறுபாடு உண்டாகலாம்; கணவனையிழந்தவள் கணவனோடு வாழும் மங்கையரைக் கண்டு பொருமை கொண்டு தீங்கும் இழைக்கலாம்; என்பன சிந்தித்து அவளைத் தண்டகவனத்திற்கு அனுப்பினனுதல் வேண்டும். தேவர் செய்த தவத்தால் அந்த அரக்கி அவ்வனத்தில் அவரோடு உறையும் அக்காலை' என்றது,சூர்ப்பணகை அவ்வனத்தில் தங்கியது தேவர்கள் செய்த தவப் பயனுகும் என்றவாறு. யாங்ஙனம் எனின்? சூர்ப்பணகை அவ் வனத்துத் தங்கியதால் அங்குத் தங்கிய இராமபிரானை அவள் கண்டு காதலிக்கவும் அது கைகூடாமையின் சீதையை யெடுத்தலும் மூக்கறுபடுதலும், இராவணனிடம் சென்று தன் மூக்கைக் காட்டி இங்ஙனம் ஆனது நின் பொருட்டுச் சீதையை யெடுக்கச் சென்றதனுல்தான் என்று கூறுதலும், அது கேட்டு இராவணன் சீதைமேல் காதல்கொண்டு மாரீசனுதவியால் இராமனைப் பிரித்துச் சீதையைக் கொண்டுபோய்ச் சிறைவைத்தலும், சீதையை மீட்க இராமன் வானர சேனையோடு சென்று தேவர்கட்குத் தீங்கு செய்து கொண்டிருந்த இராவணன் முதலியோரை வதைத்தலும், அதனுல் தேவர்கள் துன்பமின்றி வாழ்தலும் நிகழ்ந்தனவாகும். தேவர்கள், தம் பகைவர்களாகிய இராவணன் முதலியோரால் வரும் இடர் நீங்கி வாழ்வதற்குப் பரம்பரை காரணமாகச் சூர்ப்பணகையின் தண்டக வனத்துறைவு அமைதல் நோக்குக. "அரக்கர் பாவமும் அல்லவரியற்றிய அறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்" (அயோத்-2-78) என்றதும் இக்கருத்தானேயாம்.(கக௫)

மதுவின் மேற்செல்லுதல்
நிகும்பலையில் புகுந்து இராவணன் இந்திரசித்தினை வினவுதல்

444. நிருதர்கோமா னிகும்ப லையா
நீடுவனத்தி னுட்புக்கு
மருவி யங்கு மகஞ்செய்யு
மகனைக்கண்டு மனமகிழ்ந்து
கருதி நீசெய் காரியமென்
கழறென் றுரைப்பக் குருவாய
சுருதிவேலை கரைகண்ட தோலாவினைச்
சுக்கிரன் சொல்லும்.

நிருதர்கோமான் நிடும்பலையாம் நீடுவனத்தினுள் புக்கு, மருவி, அங்கு மகம் செய்யும் மகனைக்கண்டு மனம் மகிழ்ந்து 'கருதி' நீசெய் காரியம் என்? கழறு! என்று உரைப்பக் குருவாய சுருதிவேலை கரைகண்ட தோலாவினைச் சுக்கிரன் சொல்லும்.

பொ : அரக்கர் வேந்தனாகிய இராவணன், நிகும்பலை என்ற பெயருடைய நீண்ட வனத்தினுள் புகுந்து, நெருங்கி, அவ்விடத்தில் வேள்வி செய்கின்ற தன் மகனைப் பார்த்து மனம் மகிழ்ந்து, 'நீ கருதி செய்யும் காரியம் என்ன? சொல்? என்று கேட்ப, தம் குல குருவாய, வேதங்கள் என்னும் கடலைக் கரைகண்ட, தோல்வியுறாத செயலினையுடைய, சுக்கிரன் சொல்லுவான்.

கு : நிகும்பலை – ஆலமரம். ஆலமரங்கள் நிறைந்திருந்தமையால் நிகும்பலை வனம் என அவ்வனம் பெயர் பெற்றது. மகஞ் செய்யும் மகன் என்றது, இந்திரசித்துவை நிகும்பலையில் செய்யப் பட்டமையின் நிகும்பலை வேள்வி என்று பெயர் கூறப்படும். மகம் – வேள்வி. கழறுதல் – சொல்லுதல். குருவாய சுக்கிரன்; சுருதி வேலை கரை கண்ட சுக்கிரன், தோலாவினைச் சுக்கிரன் எனத் தனித்தனி இயையும். சுருதி வேலை – வேதங்களாகிய கடல்; உருவகம். கரைகண்ட என்றது வேதங்களை நன்கு கற்ற

என்னும் பொருளது. சுக்கிரன் செய்யும் எந்தச் செயலும் தோல்வியுற்றதில்லை என்பார். 'தோலாவினைச் சுக்கிரன் என்றார். இப்பொழுது இந்திரசித்தினைக் கொண்டு செய்யும் நிகும்பலை வேள்வியும் தோல்வியுறாது வெற்றியே தரும் என்னும் குறிப்பும் அத்தொடரால் புலனாகும். (ககசு)

### இந்திரசித்தின் பெருமையைச் சுக்கிரன் சொல்லுதல்

445. அங்கிட் டோமங் கோமேத
மிராச சூய மயமேதம்
பங்கப்படாத பௌண்டரிகம்
வாசபேயம் பாசுபதம்
இங்குப்பேராம் பெருவேள்வி யேழுங்
சமைத்த நின்மகற்குக்
கங்கைச் சடையோன் வெளிப்பட்டுக்
காளை யிவனைக் கண்டுகந்து.

**அங்கிட்டோமம், கோமேதம், இராசசூயம், அயமேதம்,**
**பங்கப்படாத பௌண்டரிகம் வாசபேயம் பாசுபதம்**
**இங்குப் பேராம் பெருவேள்வி ஏழும் சமைத்த நின்மகற்குக்**
**கங்கைச் சடையோன் வெளிப்பட்டுக் காளை இவனைக்கண்டு உகந்து.**

பொ: அங்கிட்டோமம், கோமேதகம், இராசசூயம், அயமேதம், குற்றப்படாத பவுண்டரிகம், வாசபேயம், பாசுபதம், என்று இங்குச் சொன்ன பேர்களையுடைய பெரிய வேள்வி ஏழும் செய்து முடித்த நின்மகனுக்குக் கங்கை தங்கிய சடையையுடைய வனாகிய சிவன் வெளிப்பட்டுக் காளைப்பருவம் உடைய இந்த இந்திரசித்துவைக் கண்டு மகிழ்ந்து.

கு: குளகம்; வருஞ்செய்யுளில் முடியும். மேற்கூறிய ஏழு பெரிய வேள்விகளை இந்திரசித்துச் செய்து முடித்தது கண்டு சிவபிரான் அவ்விந்திரசித்துக்கு வெளிப்பட்டான் என்றவாறு. 'காளையிவனைக் கண்டு உகந்து' என்றது யாருஞ் செய்யாத பெரிய

யாகங்களையெல்லாம் இந்திரசித்துக் காளைப் பருவத்திலேயே செய்து முடித்த அதிசயத்தைக் கண்டு மகிழ்ந்து என்னும் பொருளது. அங்கிட்டோமம் - சோமயாகம். கோமேதம், ஒருவகை வேள்வி. இராசசூயம் என்பது வெற்றிபெற்ற வேந்தர்கள் வெற்றி தோன்றச் செய்யும் வேள்வி. அயமேதம் - அசுவமேத யாகம். பௌண்டரிகம் என்பது, பதினொரு நாளில் செய்யும் ஒருவகை வேள்வி. வாச பேயம், பாசுபதம் என்பன வேள்விகளின் பெயர்கள். பாசுபதி என்பது இங்குப் பாசுபதம் என ஆளப்பட்டுள்ளது. உகத்தல் - மகிழ்தல். (கக௭)

446. அழிவி லாத வடற்றேருஞ்
சிலையு மாவ நாழிகையும்
இழிவிலாத பெருந்தவத்தி
னின்பதுன்பங் களையறுத்தோர்
மொழியுஞ் சாப மெனத்தப்பா
முனைப் பல்லவமு முனைமுகத்தில்
ஒழிவிலாது பகையறுக்கு
மொளிப்பத் திரமு முவந்தளித்து.

அழிவு இலாத அடல்தேரும், சிலையும், ஆவ நாழிகையும்,
இழிவு இலாத பெருந்தவத்தின் இன்பதுன்பங்களை அறுத்தோர்
மொழியும் சாபம் எனத்தப்பா முனைப்பல்லவமும், முனைமுகத்தில்
ஒழிவு இலாது பகை அறுக்கும் ஒளிப்பத்திரமும் உவந்து அளித்து.

பொ : பகைவர்களால் அழிதல் இல்லாத வலிய தேரும் வில் லும், அம்பறுத்துணியும் இழிவு இல்லாத பெரிய தவத்தின் சிறப் பால் இன்ப துன்பங்களை இல்லையாகச் செய்த முனிவர்கள் சொல் லும் சாப மொழி போலத் தவறாது செல்லும் கூர்மையுடைய அம்பு களும், போர் முகத்தில் ஒழியாமல் பகைவரை அறுக்கின்ற ஒளி வாய்ந்த வாளும் மகிழ்ந்து அளித்து.

கு: குளகம் அடல்—வலிமை. சிலை-வில். ஆவநாழிகை என்பது அம்புப்புட்டில். பல்லவம்—அம்பு. அம்பு தப்பாமல் பகை

வரைக் கொல்லவல்லது என்பதை விளக்க, முனிவரின் சாப மொழியை உவமை கூறினர். அஃது இத்தன்மையிற் சிறந்தது ஆதலின். இன்ப துன்பங்களையறுத்தோர் என்றது, வேண்டுதல் வேண்டாமையில்லாத முனிவர்களை, தடுப்பருஞ்சாபம் வல்ல வரந்தரு முனிவன்' (பா. அகலிகைப்-77) எனவும். 'சொல் லொக்குங் கடிய வேகச் சுடுசரம்' (பால – தாடகை 72) எனவும் முனிவர்தம் சாபமொழியின் தடுப்பருந்தன்மையைப் புலப்படுத்தி யுள்ளதோடு இராமனது அம்பிற்கு உவமையாக்கியுள்ளமையும் காணலாம். பத்திரம்-வாள். (கக அ)

447. இலங்கா பரணத் திளமுலையா
ரிடுக்கண் மாயத் தகப்பட்டு
கலங்கா நெஞ்சத் தியோகியரும்
கலங்கு மாயை கடிதியற்றி,
நிலங்கால் குலைய நீடமரர்
நின்று நடுங்க நேர்வெல்லும்
பலங்க டனக்குண் டாக வென்று
பரமன் னளித்தா னெனப் பகர்ந்தான்.

இலங்கு ஆபரணத்து இளமுலையார்
இடுக்கண் மாயத்து அகப்பட்டு,
கலங்கா நெஞ்சத்து யோகியரும்
கலங்கும் மாயை கடிதுஇயற்றி,
நிலம் கால்குலைய நீடு அமரர் நின்று
நடுங்க நேர் வெல்லும்
பலங்கள் உனக்கு உண்டாக, என்று
பரமன் அளித்தான், எனப் பகர்ந்தான்.

பொ: "விளக்கமுடைய அணிகலன்களை அணிந்த இளமுலை யினையுடைய பெண்டிர்தம் துன்பந்தரும் மாயவலையில் அகப்பட்டுக் கலங்காத (உறுதியான) நெஞ்சத்தினையுடைய யோகியர்களும் கலங்குதற்குக் காரணமான மாயைகளை விரைவின் செய்து, பூமி

நிலைகுலையவும், நீடித்துள்ள தேவர்கள் நின்று நடுங்கவும் வஞ்சியாமல் நேரே நின்று வெல்லுதற்கேற்ற வலிமைகள் உனக்கு உண்டாவதாக' என்று சிவபரம்பொருள் வரங்கொடுத்தான்' எனச் சுக்கிரன் சொன்னான்.

கு: தையலார் மையலிலே மயங்காத மனவுறுதியையுடைய யோகியர்களும் மயங்குமாறு செய்யும் மாயச் செயல்களில் வல்லவனாகும்படி இந்திரசித்துக்குச் சிவன் வரங் கொடுத்தான் என்றவாறு. யோகியரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. நிலங்கால் குலைய என்புழி கால் என்றது நிலையை;பூமி நிலைகுலைய என்றவாறு. இனி, 'அமரர் நின்று நடுங்க எனப் பிற்கூறப்படுதலின் இங்கு நிலம் என்பது இடவாகு பெயராய் மக்களை யுணர்த்தியதாகக்கொண்டு, 'மக்கள் கால் நடுங்க' எனப் பொருள் கூறலும் ஆம். பலங்கள்—வலிமைகள். நேர் வெல்லும் என்றதனால் வஞ்சித்து வெல்ல வேண்டாமைப் புலப்படுதியவாறாயிற்று. பரமன் என்றது சிவபிரானை. இந்தப் பாடலுக்குப் பதிலாக ஆழ்வார் திருநகரிப் பதிப்பில் பின்வரும் பாடல் ஒன்று காணப்படுகின்றது. (கககூ)

இன்னன சுக்கிரன் இயம்பக் கேட்டருள்
மன்னனு மரக்கனும் மகிழ்ந்து மைந்தனைப்
பொன்னகர் பொருவிடும் இலங்கை புக்குருத்
தன்னினநட் டாரொடுஞ் சார மற்றோர் நாள்

இச்செய்யுள் எந்த ஏட்டிலும் அச்சுப் புத்தகங்களிலும் இல்லாமையானும், பொருளியையும் மோனையும் ஓசையும் பொருந்தாமையானும், முன்னும் பின்னும் அறுசிராசிரிய விருத்தம் இருக்க, இக் கலிவிருத்தம் நடுவே வந்துள்ளமையானும், இது புதுவதாய்ச் சேர்த்த பாட்டாகும் என்பது தெளிவாகின்றது.

இராவணன் இந்திரசித்தோடு இலங்கையடைதல்

448. அந்த வெள்ளி யிவை கூற,
வரக்கர் கோமா னகமகிழ்ந்து
மைந்தன் றன்னை முகநோக்கி
வானோ ரானோர்க் கவிர்ப்பாகம்

உந்துகருமம மினிச் செய்கை
பொழிதி யென்று விலக்கித்தான்
தந்த குமர ஞெடுமந்தத்
தசக்கிரீவ னகர்சார்ந்தான்.

**அந்த வெள்ளி யிவை கூற, அரக்கர் கோமான் அகம் மகிழ்ந்து, மைந்தன் தன்னை முகம் நோக்கி, வானோர் ஆனோர்க்கு அவிர்ப்பாகம் உந்து கருமம் இனிச்செய்கை ஒழுதி!, என்று விலக்கித் தான் தந்த குமர ஞெடும் அந்தத் தசக்கிரிவன் நகர் சார்ந்தான்**

பொ: அந்தச் சுக்கிராச்சாரி இவற்றைச் சொல்ல, இராவணன் மனம் மகிழ்ந்து தன்மைந்தன் முகத்தைப் பார்த்து, 'தேவர்களுக்கு அவிர்ப்பாகம் தருகின்ற வேள்வி வினைகளை இனிச் செய்வதைத் தவிர்வாயாக' என்று தடுத்துவிட்டுத் தான்பெற்ற மகனாகிய இந்திர சித்தினோடும் அந்த இராவணன் தன் நகரத்தை அடைந்தான்.

கு: தேவர்களுக்கு அவி கொடுக்கும் வேள்வியைச் செய்யாதே என இராவணன் இந்திரசித்துக்குக் கூறியவாறு, தன் பகைவர்கள் நலம் பெறுமாறு அவிர்ப்பாகம் கொடுக்க வேண்டியிருத்தலின், பெரிய நன்மை தரும் யாகங்களை இராவணன் விலக்கினனுதல் வேண்டும். உந்துதல் – செலுத்துதல் – தருதல். (கஉய)

**இராவணன் தான் பற்றிக் கொணர்ந்த கன்னியரை அழைத்தல்**

449. பாகு போலும் மொழியாரைப்
பற்றிக் கொணர்ந்த நாள் தொட்டுச்,
சோக மேவுஞ் சிந்தையரைத்
துணைக்கண் ணருவி சோர்வாரைச்
சேகு சேரு மனத்தரக்கன்
திரள வழைப்பத் தீவினைகள்
போக முயன்ற வீடணனப் பொல்லாச்
சரிதற் கிவை புகன்றான்.

**பாகுபோலும் மொழியாரைப் பற்றிக் கொணர்ந்த நாள் தொட்டு, சோகம் மேவும் சிந்தையரைத் துணைக்கண் அருவி சோர்வாரை,**

**சேகு சேரும் மனத்து அரக்கன் திரள அழைப்ப, தீவினைகள் போக முயன்ற வீடணன் அப்பொல்லாச் சரிதற்கு இவை புகன்றான்.**

பொ: சர்க்கரைப் பாகு போன்ற இனிய மொழி பேசும் பெண்டிரை வலிதில் பற்றிக் கொணர்ந்த நாள் முதலாகச் சோகம் பொருந்திய சிந்தையராய் இருகண்களிலும் அருவிபோலக் கண்ணீர் பெருக்குகின்ற அப்பெண்டிரை, வயிரம் ஏறிய மனத்தினையுடைய இராவணன் திரண்டு வருமாறு அவ்வனைவரையும் அழைத்தானாக· தீவினைகள் நீங்க வேண்டும் என்று நல்வினையில் முயன்ற வீடணன் அந்தக் கொடிய வரலாற்றினையுடைய இராவணனுக்கு இவற்றைச் சொன்னான்

கு: சிந்தையரை, சோர்வாரை என்பன ஒரு பொருட் பல பெயர். சோகம் – பெருந்துன்பம். ''தேங்கமழ் பூங்குழலியரைத் தெய்வத் தேர் மிசையேற்றிச் சேனை சூழத் தாங்கரிய பேராற்றல் தசக்கிரிவன் தன்னகரி வந்து சார்ந்தான்'' (93) என முன்னம்· அந்தணர்தம் கன்னியரையும் அசுரர்கள்தங் கன்னியரையும் கந்தருவர் கன்னியரையும் பற்றிக் கொணர்ந்த நிகழ்ச்சிக்குச் சொல்லப்பட்டிருத்தல் காணலாம். சேகு - வயிரம், வன்மை திரள – திரண்டு வருமாறு. இராவணன் உடன்பிறந்தவனாயினும், வீடணன் அவநெறி நில்லாது தவநெறியில் சென்று பழகியவன் ஆதலின், அவனை, ''தீவினைகள் போக முயன்ற வீடணன்'' எனச் சிறப்பித்தார். 'நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியல்லால், சாதியால் வந்த சிறு நெறியறியான் என் தம்பி' (கும்பகருணன் வதை–356) எனக் கும்பகருணன் வீடணனைப் பற்றி இராமனிடம் கூறியிருத்தல் இங்கு நினைக்கத் தகும். பொல்லாச் சரிதன் என்றது இராவணனை. கொடுமை செய்து பழகிய வரலாற்றினையுடையவன் என்றவாறு **(கஉக)**

**இராவணனுக்கு வீடணன் செவியறிவுறுத்தல்**

450. மாசி லாத குடிப்பிறப்பு
மானங் கீர்த்தி யிவைமாய
ஆசை நோயா னதுபெருக
வநங்க சரத்தா லேவுண்டு

கூச லின்றிக் குலத்தவரைக்
குலையச் செய்தார் குலத்தோடும்
நாச மெய்திப் பழியோடு
நரக முறுவ ரெனவுரைத்தான்.

**மாசு இலாத குடிப்பிறப்பு மானம், கீர்த்தி இவை மாய, ஆசைநோயானது பெருக, அநங்க சரத்தால் ஏவுண்டு, கூசல் இன்றிக் குலத்தவரைச் குலையச் செய்தார், குலத்தோடும் நாசம் எய்திப், பழியோடும் நரகம் உறுவர் என உரைத்தான்.**

பொ: 'குற்றம் இல்லாத நற்குடிப்பிறப்பும், மானமும், கீர்த்தியும் ஆகிய இவை அழியவும், ஆசைநோயானது பெருக மன்மதன் அம்பினால் ஏவுண்டும், கூசுதல் இல்லாமல், நல்ல குலத்துப் பிறந்த நங்கையரை நடுங்கச் செய்த பாவிகள். தாம் பிறந்த குலத்தோடும் இம்மண்ணுலகில் அழிவுற்றுப் பழியோடு மறுமையில் நரகத்தை அடைவார்கள், என்று சொன்னான்.

கு: தனக்கு உரிமையில்லாத குலப்பெண்டிரை ஒருவன் விரும்பினால் நற்குடிப்பிறப்பும் மானமும் கீர்த்தியும் அழியும்; மன்மதன் அம்பால் ஏவுண்டு காமம் பெருகுதலால் கூசுதல் இன்றி அக்குலப் பெண்டிரை நடுங்கச் செய்து கவர்ந்தவன், குலத்தோடு இவ்வுலகில் நாசம் அடைவான்; மறுமையில் நரகம்புகுவான் என்றவாறு "அறம்புகழ் கேண்மை பெருமை யிந்நான்கும், பிறன்றார நச்சுவார்ச் சேரா – பிறன்றார. நச்சுவார்ச் சேரும் பகை பழி பாவம் என்று அச்சத்தோ டிந்நாற் பொருள்" (நாலடியாள்-82) என்பது இங்கு நினையலாம். குலையச் செய்தலாவது, அவர் நடுங்குமாறு வலிதிற் கலத்தல். (கஉஉ)

451. ஏக வீர விதுகிடக்க
வியம்பக் கேண்முன் பெய்தியதை
மேக நாதன் வேள்வியினான்
வீர னுய வும்பி துயிற்

போக மேவி யவன் கிடந்தான்
புனலின் மூழ்கி யான் கிடந்தே
னுக மதுவா மடலசுர
னணிநீ ளிலங்கை யரண்புகுந்தான்.

ஏக வீர! இது கிடக்க. இயம்பக் கேள் முன்பு எய்தியதை!
மேகநாதன் வேள்வியினன்; வீரன் ஆய உம்பி, துயில்
போகம் மேவி அவன் கிடந்தான்; புனலில் மூழ்கி யான் கிடந்தேன்
ஆக, மதுவாம் அடல் அசுரன் அணிநீள் இலங்கை அரண்புகுந்தான்.

பொ: தனிச்சிறப்புடைய வீரனே! அப்பெண்டிர் நிகழ்ச்சி யிருக்கட்டும்; முன்பு நிகழ்ந்ததை யான் சொல்லக் கேட்பாயாக! நம் மைந்தன் மேகநாதன் வேள்வியில் இருந்தான்; வீரனுகிய உன் தம்பி கும்பகருணன், தூக்கமாகிய போகத்தைப் பொருந்திப் படுக்கையில் கிடந்தான்; யான் செபம் செய்யும் நிலையில் நீரில் மூழ்கிக் கிடந்தேன்; இங்ஙனம் நாமெல்லாம் இருந்தோமாக, மது என்னும் பெயரையுடைய வலிய அசுரன், அழகிய நீண்ட இலங்கை நகரத்தின் அரணுக்குள் புகுந்தான்.

கு: ஏக வீரன் என்றது, ஒப்பார் இல்லாத பெருவீரன் என்னும் பொருளது. 'கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவன்' என்றும் ஆம். மேகநாதன் என்றது இந்திரசித்தினை. வேள்வி யினன் என்றது, நிகும்பலை வேள்வி செய்வதில் கருத்தூன்றி யிருந்தான் என்றவாறு. துயிற்போகம் என்றது, உறக்கமாகிய போகம் என்றவாறு. உம்பியவன் என இயையும், புனலின் மூழ்கி யான் கிடந்தேன் என்றது, செபம் செய்யும் நிலையில் நீருள் மூழ்கிக் கிடந்தேன் என்றவாறு. நீருள் மூழ்கியிருந்து செய்யும் மந்திர செபம் உண்டு. அகமருடணம் என்று இதனைக் கூறுவர். சிவபாத இருதயர் இம்முறையினுல் நீருள் மூழ்கியிருந்த போது தான் அவர் குழந்தை அழுதது கண்டு சிவபிரான் உமையோடு வந்து பால்கொடுத்து அழுகை தீர்த்து ஆட்கொண்டார் என்று பெரியபுராணம் கூறும்.அரண் அழகிதாய் நீண்டிருந்தது என்பான் அணி நீள் அரண் என்றுன். இலங்கை அரண் அழகாக இருந்ததே

யன்றி மது என்பவனைப் புகாமல் தடுக்கவில்லை என்பது குறிப்பு. அரண் - மதில். (கஉரு)

452. உற்ற கரிதேர் பரிகாலா
ளுலைய நூறி உயர்மௌலிக்
கொற்ற வாநஞ் சிற்றவையைக்
கும்பி நசியாங் குணவதியைப்
பற்றிக் கொண்டு தன்னுடைய
பதியிற் புக்கா னெனத்தம்பி
சொற்ற வார்த்தை கேட்டழன்று துடிக்கு
நெஞ்ச னிவை சொன்னான்.

உற்ற கரி, தேர் பரி, காலாள்
உலைய நூறி, உயர் மௌலிக்
கொற்றவா! நம் சிற்றவையை -
கும்பி நசியாம் குணவதியைப்
பற்றிக் கொண்டு தன்னுடைய பதியில்
புக்கான் என, தம்பி
சொற்ற வார்த்தை கேட்டு, அழன்று,
துடிக்கும் நெஞ்சன் இவை சொன்னான்.

பொ: 'உயர்ந்த முடியணிந்து விளங்கும் வெற்றி அரசே! இலங்கையில் பொருந்திய யானை, தேர், குதிரை, காலாள் ஆய நால்வகைப் படைகளும் வருந்துமாறு அழித்துவிட்டு, நமது சிறிய அன்னையை - கும்பிநசி என்னும் பெயருடைய குணவதியை - வலிந்து பற்றிக்கொண்டு தனது நகர்க்குப் போய்விட்டான்' என்று தம்பி வீடணன் சொன்ன வார்த்தையைக் கேட்டுக் கோபித்துத் துடிக்கும் நெஞ்சினனாகிய இராவணன் இவற்றைச் சொன்னான்.

கு: கும்பிநசி என்பவள் குணமிக்கவள்; இராவணனுக்குச் சிறியதாயாம் உறவினள். சிற்றவையை - குணவதியை என்பன ஒரு பொருள்மேல் வந்த பல்பெயர். அண்ணன் என்ற முறை

கூறுது, 'உயர் மௌலிக் கொற்றவா' என இராவணனை விளித்தது, உயர்ந்த முடிசூடிய கொற்றவனாக நீ இருந்தும் இந்நிகழ்ச்சி நிகழ்ந்துள்ளது; இதையறிந்து முறைசெய்யற்குரியவன் நீயே என்பதுணர்த்த வேண்டி. அழலுதல் – கோவித்தல். நெஞ்சன் என்றது இராவணனை. (௪௫௪)

**இராவணன் சினந்து, மதுவின் ஊருக்குச் சேனை புறப்படுக, எனல்.**

453. பூனைச் செவியை யெலிமோந்து
புலியைப் புல்வாய் தொடர்ந்ததெனத்
தானைக் கடலைக் கலக்கியென்றன்
தாயர்க் கிளையா டனைக்கொண்டென்
மானக் குலத்தை வரம்பழித்தான்
மதுவே கேட்டும் வாழ்ந்தோ நாம்
சேனைக் கடலை மதுபுரத்திற்
செல்க வென்றான் சினமிக்கான்.

'பூனைச் செவியை எலிமோந்து, புலியைப்
புல்வாய் தொடர்ந்தது' எனத்
தானைக் கடலைக் கலக்கி, என் தன்
தாயர்க்கு இளையாள் தனைக் கொண்டு, என்
மானக் குலத்தை வரம்பு அழித்தான்,
மதுவே? கேட்டும் வாழ்ந்தோம் நாம்!
சேனைக் கடலை மதுபுரத்தில் செல்க!
என்றான், சினம் மிக்கான்.

பொ: எளியதாகிய எலி, தனக்கு எமனாக உள்ள பூனையின் செவியை மோந்து பார்க்க, மான் (தனக்கு எமனாக உள்ள) புலியைத் துரத்தியதுபோல, பெருவீரனாகிய எனது சேனையாகிய கடலைக்கலக்கி என் தாயார்க்கு இளையவளாகிய கும்பிநசியை வலிதில் கைப்பற்றிக்கொண்டு என் மானமிக்க குலத்தினது உயர்வை அழித்தவன் எளியனாகிய மது என்பவனோ? இந்தக்

கூடா நிகழ்ச்சியைக் கேட்டும் (மானக்குலத்தில் பிறந்த) நாம் வாழ்ந்திருக்கின்றோம். (என்னே!) என்று கூறி வியந்து, சினமிக்க வனாகிய இராவணன், தன் சேனையாகிய கடலை (நோக்கி), 'மது வினது ஊர்மேற் செல்க!' எனக் கட்டளை யிட்டான்.

கு : 'மோந்து' என்னும் செய்தெனெச்சம் மோக்க என்ற செயவெனெச்சம் பொருளில் வந்தது. பூனைச் செவியை எலி மோத்தலும் புலியைப் புல்வாய் துரத்தலும் நிகழாதவாறு போல, மது என்பவன் இலங்கையில் புகுந்து சேனையைக் கலக்கிச் சிற்றன்னையைக் கவர்தல் நிகழக்கூடாத நிகழ்ச்சி என்பது இராவணன் கருத்து. எளியவனாகிய மது என்பவன் இராவணனை நோக்கப் பூனைக்குமுன் எலியும் புலிக்குமுன் புல்வாயும் போன்றவனாவன். அவன் இன்று இலங்கையில் புகுந்து சேனையைக் கலக்கித் தன் சிற்றன்னையைப் பற்றிச் சென்றான் என்றால் இனிப் பூனைச் செவியை எலிமோத்தலும், புலியைப் புல்வாய் துரத்தலும், வியப்பாகாது என்பான், இங்ஙனம் கூறினான். இது கூடாவுவமை, 'மதுவே என்ற வினா இழிவுப் பொருளையுணர்த்தியது. இந்தக் கூடா நிகழ்ச்சியைக் கேட்டு மானம் விடாது உயிர்விடவேண்டிய நாம் வாழ்ந்திருத்தலே பிழையென்ற கருத்தால் 'வாழ்ந்தோம் நாம்' என்றான். (௪உ௫)

கும்பகருணனை எழுப்புதல்

454. நம்பி புகழ்வீடணன்றன்னை
நகரங் காவல் பெறவிருத்தி
வெம்பு போருக் கொருப்படுக
மேக நாதனென விளம்பி
எம்பி யுறக்கந் தீர்த்தவனை
யிவணீர் கொணர்தி ரெனவியம்பப்
பம்பை பேரி துடிமுரசம்
பலவு முழக்க வவனுணர்ந்தான்.

நம்பி புகழ் வீடணன்தன்னை நகரம் காவல் பெற இருத்தி,
'வெம்பு போருக்கு ஒருப்படுக மேகநாதன்' என விளம்பி,
எம்பி உறக்கம் தீர்த் துஅவனை இவண் நீர் கொணர்திர் என இயம்ப.
பம்பை, பேரி, துடி, முரசம் பலவும் முழக்க அவன் உணர்ந்தான்.

பொ: ஆடவரிற் சிறந்தோனாகிய புகழ்மிக்க வீடணனை இலங்கை நகரம் காவல் பெறுமாறு இருக்கச் செய்து, மேகநாதன் உளங்கனன்று செய்யும் போருக்கு ஆய்த்தம் ஆவானாக! என்று சொல்லிவிட்டு, என் தம்பியாகிய கும்பகருணனது உறக்கத்தை தெளிவித்து அவனை இங்குக் கொண்டு வாருங்கள் என்று இராவணன் சொல்ல உடுக்கை, முரசம் முதலிய பலவாச்சியங்களையும் முழங்கப் பண்ணின அளவில் அக்கும்பகருணன் துயிலுணர்ந்தான்.

கு: நம்பி – ஆடவரிற் சிறந்தோன். வீடணன் தன்னை இருத்தி என இயையும். நகரம் காவல் பொருந்துமாறு வீடணனை இருக்கச் செய்து என்றவாறு. வெம்பு போர் என்றது, மனங்கனன்று செய்யும் போரினை. மேகநாதன் ஒருப்படுக, என்றது, மேகநாதன் ஒருப்படுமாறு சொல்க என இராவணன் தன் கட்டளையைக் கூறியவாறு. பம்பை, முதலிய நான்கும் தோல் போர்த்த வாத்திய வகைகள். இறுத்தி, முழக்க என்பன இருக்கச் செய்து, முழங்கச் செய்ய எனப் பொருள்படும் பிறவினைச் சொற்கள். (கஉசு)

### துயிலுணர்ந்த கும்பகருணன் உண்ணுதல்

455. வய்ய மோரா யிரத்தேற்றி
வந்த சோறு மதுவெள்ளம்
பெய்த குடங்க ளாயிரமும்
பெருங்கை வேழப் பெருந்தசையும்
வெய்ய கோப னிவையெல்லாம்
விழுங்கப் பசிநோய் மிகுந்ததால்
நெய்யை நெய்யைச் சொரிந்தக்கா
னெருப்பை யவிக்க வொண்ணுமோ.

வய்யம் ஓராயிரத்து ஏற்றி
வந்த சோறும்' மதுவெள்ளம்
பெய்த குடங்கள் ஆயிரமும்,
பெருங்கை வேழப் பெருந்தசையும்
வெய்யகோபன் இவை எல்லாம்
விழுங்கப் பசிநோய் மிகுத்ததால்
நெய்யை நெய்யைச் சொரிந்தக்கால்
நெருப்பை அவிக்க ஒண்ணுமோ?

**பொ :** ஓராயிரம் வண்டிகளில் ஏற்றி வந்த சோறும், மது வெள்ளத்தைப் பெய்துவைத்திருந்த குடங்கள் ஆயிரமும், பெரிய கையையுடைய யானைகளின் மிக்க தசையும் ஆகிய இவற்றை எல்லாம் கொடிய கோபத்தையுடைய கும்பகருணன் விழுங்கவும் பசிநோய் குறையாமல் மிக்கது நெய்யைப் பலமுறை சொரிந்தால் நெருப்பை அவிக்க இயலுமா? இயலாது என்றவாறு.

**கு :** வையம் – வண்டி. எதுகை நோக்கி வய்யம் எனப் போலியாக வந்தது. ஆயிரம் வண்டிகளில் வந்த சோற்றினையும் ஆயிரம் குடங்களில் கொணர்ந்த கள்ளையும் யானைகளின் தசையை யும் கும்பகருணன் உண்டும் பசிநோய் தணியாது மிக்கது என்பது கூறி, அது பொருத்தமே எனச் சாதிப்பதற்கு 'நெய்யைச் சொரிந்தக்கால்' நெருப்பை அவிக்க ஒண்ணுமே, என வேற்றுப் பொருளை எடுத்துக்கூறி விளக்கியவாறு இது வேற்றுப்பொருள்வைப் பணி. ஒண்ணுமோ? என்ற வினு ஓகாரம், ஒண்ணுது என்ற எதிர் மறைப் பொருளை யுணர்த்தியது. எரிகிற நெருப்பில் நெய்யை ஊற்றினுல் எரிமிக்கெரிவதுபோல வெய்ய கோபமுடைய கும்ப கருணன் வயிற்றிற்குச் சோறும் மதுவும் கறியும் கொடுத்தும் பசி முன்னையிலும் மிகுவதாயிற்று என்றவாறு. நெய்யால் நெருப்பை அவிக்க இயலாதது போலக் கோபமிக்க கும்பகருணன் பசியைச் சோறு முதலியவற்றினுல் தணிக்கவியலாதாயிற்று என்க. "நெய்யா லெரிநுதுப்பே மென்றற்ருற் கௌவையாற், காமம் நுதுப்பே மெனல்" (திருக்குறள் – 1148) என்புழி வந்துள்ள உவமை இங்கு நினைத்தற்குரியது. நெய்யை நெய்யைச் சொரிந்தக் கால் என்புழி வந்த அடுக்குச் சொரியுந் தொழிலின் பன்மை யுணர்த்த வந்தது.

(கஉஎ)

### கும்பகருணன் போர்க்குப் புறப்படுதல்.

456. பின்னு மோரா யிரஞ்சகடம்
பெய்த சோற்றுப் பெருங்குப்பை
தன்னை யுண்ணச் சிறிதுபசி
தணிந்து மகிழ்ந்து வாய்பூசி
மன்ன னழைத்த காரியத்தைக்
கேட்டு மறுகு மனத்தினனாய்
பொன்னின் மணித்தேர் போர்க்கோலம்
பொலியவேறிப் புறப்பட்டான்.

**பின்னும் ஓர் ஆயிரம்சகடம் பெய்த சோற்றுப் பெருங்குப்பை தன்னை உண்ணச் சிறிதுபசி தணிந்து, மகிழ்ந்து வாய்பூசி மன்னன் அழைத்த காரியத்தைக் கேட்டு, மறுகு மனத்தினனாய் பொன்னின் மணித்தேர் போர்க்கோலம் பொலியஏறிப் புறப்பட்டான்.**

**பொ:** பின்னும் ஓராயிரம் வண்டிகளில் பெய்து கொணர்ந்த சோற்றுப் பெருங்குவியலை உண்ணச் சிறிது பசிணிதந்து மகிழ்ச்சி கொண்டு, வாய்கழுவிக்கொண்டு மன்னனாகிய அண்ணன் அழைத்த போராகிய காரியத்தைக் கேள்விப்பட்டுக் கலங்கும் மனத்தை யுடையனாய்த் தன் போர்க் கோலம் பொலியுமாறு பொன்னா லியன்ற மணிகளையுடைய தேரில் ஏறிப் போர்க்குப் புறப்பட்டான்.

**கு:** மேலும் ஆயிரம் வண்டிச் சோறு உண்ட பின்பு சிறிது பசிதணிய மகிழ்ந்து போர்க்கோலம் பூண்டு பொற்றேரில் பொலிவுடன் ஏறிப் புறப்பட்டான் கும்பகருணன் என்றவாறு. வாய் பூசுதல் என்பது நீரினால் உண்ட வாயைத் தூய்மை செய்தலை. அண்ணன் என்னாது மன்னன் என்றது, இட்ட கட்டளையை நிறைவேற்றியே யாகவேண்டும் என்ற குறிப்பு புலப்படவேண்டி. மறுகுதல் – கலங்குதல். கலங்கு மனம் அசச்சத்தால் வந்ததன்று; போர்மேல் தோன்றிய வெறுப்பினால் வந்தது. கும்பகருணன் போர்க்கோலம் பொற்றேரில் ஏறியதால் பொலிவு மிகுவதாயிற்று என்பார், 'பொலிய ஏறி' என்றார். (கஉ௮)

கும்பகருணன் தேரில் செல்வதறிந்த உம்பர்மடவார் உரையாடல்

457. கும்ப கன்ன னுணர்ந்தெழுந்து
கொடிவீதியுளா னெனக் கேட்ட
கொம்பு போலு நுண்ணிடையார்
கோதைசரியக் குழல் சரியச்
செம்பொன் மாடத் தரமியத்தும்
சீரார் மணிப்பொற் கோபுரத்தும்
உம்பர் மடவார் தொக்கீண்டி
யொருவர்க் கொருவ ரிவையுரைத்தார்.

கும்பகன்னன் உணர்ந்து எழுந்து
கொடிவீதி உளான்; எனக்கேட்ட
கொம்பு போலும் துண்ணிடையார்,
கோதைசரிய, குழல் சரிய,
செம்பொன் மாடத்து அரமியத்தும்,
சீரார் மணிப் பொற் கோபுரத்தும்,
உடம்பர் மடவார் தொக்கு ஈண்டி, ஒருவர்க்கு
ஒருவர் இவை உரைத்தார்.

பொ. கும்பகன்னன் துயிலுணர்ந்து எழுந்து கொடிகள் கட்டியுள்ள தெருவில் தேர்மேற் சென்று கொண்டுள்ளான்' என்று கேள்விப்பட்ட பூங்கொம்பு போன்ற நுண்ணிய இடையையுடையவர்களாகிய தேவமாதர்கள், தாம் அணிந்த மாலை கீழே சரியவும் கூந்தல் சரியவும் விரைந்து, சிவந்த பொன்னால் செய்யப்பட்ட மாடத்தில் உள்ள நிலாமுற்றத்தும், சிறப்புப் பொருந்திய மணிகள் பதித்த கோபுரத்தும் ஏறிக் கூட்டமாகக் கூடி நெருங்கிக் கொண்டு ஒருவர்க்கொருவர் இவற்றைச் சொல்லலானூர்.

கு: 'வீதியுளான்' என்றது, வீதியில் சென்று கொண்டுளான் என்னும் பொருளது'. துண்ணிடையாராகிய உம்பர்மடவார் என இயையும். வீதியிற் செல்லும் கும்பகருணனைக் காணவேண்டும் என்னும் வேட்கையினுல் விரைகின்றபோது, கோதை சரிதலும்,

குழல் சரிதலும் நிகழ்ந்தன என்றவாறு. கோதையும் குழலும் சரிதலாகிய காரியத்தைக் கொண்டு அப்பெண்டிரின் விரைந்த செலவினை அனுமானிக்க வைத்தவாறு. அரமியம் – நிலாமுற்றம். தொகுதல் - ஒன்று கூடுதல். ஈண்டுதல் – நெருங்குதல் தெருவில் தேர்மேற்செல்லும் கும்பகன்னனைக் காண உயர்ந்த நிலாமுற்றத்தும் கோபுரத்தும் ஏறித்திரண்ட தேவமாதர்கள் தம்முள் உரையாடியவாற்றைப் பின்பு கூறுவர். உம்பர் மடவார் என்றது, இராவணனால் வலிதிற் கொணரப்பெற்றவர்கள். (கூஉசு)

## மடவார் பேச்சு 458-459

458. கண்ணு லிவனை யண்ணாந்து
கணைக்கான் மேற்காண் பரிதென்பார்
விண்ணு டருக்கிங் கிவன்மேனி
விளங்கக் காண லாமென்பார்
பெண்ணு ளிங் கொருத்திபெறும்
பிள்ளை யேயிங் கிவனென்பார்
ஒண்ணார் படைவந் தெதிர்ப்படுமே
லிவன்கை யாலென் படுமென்பார்.

'கண்ணால் இவனை அண்ணாந்து
கணைக்கால்மேல் காண்பு அரிது' என்பார்;
'விண்ணுடருக்கு இங்கு இவன்மேனி
விளங்கக் காணல் ஆம்' என்பார்
பெண்ணுஆள், இங்கு ஒருத்திபெறும்
பிள்ளையே இங்கு இவன்' என்பார்;
'எண்ணார் படைவந்து எதிர்ப்படுமேல்
இவன்கையால் என்படும்?' என்பார்.

பொ: பேருருவம் உடைய கும்பகருணனாகிய இவனைக் கண்ணால் அண்ணாந்து பார்த்தாலும் இவனது கணைக்காலுக்குமேல் காணுதல் அரிது, என்பார்கள், இங்குள்ள இக்கும்பகருணன் மேனியை விளங்கக் காணுதல் விண்ணுட்டில் உள்ளவர்க்கே

எளிதாகும்' என்று சிலர் சொல்வார்கள்; (இவன் எவ்வளவு பேருருவமுடையவனுயினும்) நம்மைப்போன்ற பெண்ணுனவள் ஒருத்தி பெறும் பிள்ளைதானே! இங்குள்ள இவன் என்று சிலர் சொல்லுவார்கள்; பகைவர் சேனை வந்து எதிர்ப்படுமாயின் அச் சேனை இவன்கையால் என்னபாடுபடும்? என்று சிலர் வியந்து கூறுவார்கள்.

கு: உயர்ந்த இடத்தில் நின்று காணும் மாதர்கள் நின்ருங்குப் பாராமல் கண்ணுல் அண்ணுந்து பார்த்தும் கும்பகன்னனுடைய கணைக்காலுக்குமேல் காண இயலாமை கூறி அவனது பேருருவத்தைப் புலப்படுத்திப் புகழ்கின்ருர்கள் சிலர். மண்ணுளோர் அவன் கணைக்காலுக்குமேல் காண வியலாமையால், அவன்மேனி முழுவதையும் விளங்கக் காணுவது விண்ணுடருக்கே எளிதாகும். எனக்கூறி அவன் மேனியைக் காண்டர்க்குரியாரைப் புகழும் முகத்தால் அவன் பேருருவைப் புலப்படுத்துகின்ருர்கள் சிலர். இவன் எவ்வளவு பெரிய உருவம் படைத்தவனுயினும் நம்மைப் போன்ற ஒருபெண் பெற்ற பிள்ளைதானே இவன் என்று தம் பெண்ணினப் பெருமையை நாட்டி அவனைச் சிறப்பித்துப் பேசினர் சிலர். இனி, இவ்வடிக்கு, கும்பகருணனது பேருருவத்தைப் பார்த்து இவன் நம்மைப்போன்ற ஒருபெண் சுமந்துபெற்ற பிள்ளையா? அப்படியிருக்க இயலாது. என வியந்து உண்மையை மறுத்துக் கூறினர் சிலர்; என்றும் கொள்ளலாம்; இவன் கையின் பெருமையைக் கண்ட சிலர், பகைவர் படைவந்து எதிர்ப்பட்டால் அதுஎன்ன பாடுபடும் என்று வியந்து கூறினர் என வேறு படுத்திக் காண்க.

(கரு௰)

459. மண்கை தாழ வருமிதுவோர்
மலையென் பாராண் வடிவென்பார்
திண்கை யொன்ரு லெடுக்குமரன்
சிலையை யென்பார் சினமிகுந்த
கண்க ளென்பா ரல்லவெறுங்
கனலே யென்பார் கண்டமடப்
பெண்க ளானு ரிவ்வண்ணம் பேசப்
பெருவீ தியைக் கடந்தான்.

**மண்கைதாழ வரும்இது, மலை என்பார்; ஆண்வடிவு, என்பார்;
திண்கை ஒன்றால் எடுக்கும் அரன் சிலையை என்பார்; சினம்மிகுந்த
கண்கள் என்பார்; அல்ல; வெறுங்கனலே என்பார்; கண்டமடப்
பெண்கள் ஆனார் இவ்வண்ணம் பேச, பெருவீதியைக் கடந்தான்.**

பொ: ஒரு பக்கம் தாழுமாறு வருகின்ற இவ்வுரு மலையே என்பார் சிலர்; (சிலர் அன்று) ஆண்வடிவுதான் என்பார்;' சிவ பிரானது வில்லாகிய மேருமலையைத் தன் திண்ணிய கை ஒன்றினாலே எடுப்பான்', என்று சிலர் சொல்வார்கள்; (அவன் முகத்தில் காணப்படுபவை) சினமிக்க கண்கள்தாம் என்பார் சிலர்; (வேறு சிலர்), வெறும் கனலே என்று கூறுவர்; (கும்ப கருணனைக் கண்ட இளமையையுடைய பெண்கள்) இவ்வணம் தத்தம் மனத்தனபேசாநிற்க கும்பகருணன் பெருவீதியைக் கடந்துசென்றான்.

கு: மண் கைதாழுதலாவது, கும்பகருணனது பாரம் தாங்க மாட்டாது தரை அவன் செல்லுமிடம் அழுந்துதல். கும்பகருண னுடைய உருவின் பெருமையை மட்டுங் கண்டு அவன் அவயங் களைக் கருதாதவர்கள், 'இதுவோர் மலையே' என்றும், அவனுடம்பி லுள்ள அவயவப்பகுப்பை உணர்ந்தவர்கள்,('ஆண்வடிவு'என்றும், மாறுபடக் கூறுவர் என்க. இராவணன் இருபது தோள்களால் வெள்ளிமலையை யெடுத்தான்; இவனே ஒருகையால் மேருமலையை யெடுப்பான்' என்று இராவணனைக் காட்டிலும் இவன் வலியன் என்பது காட்டுவர் சிலர். கும்பகருணனுடைய கண்கள் சினத் தால் அழலுதலைக் கண்டவர்கள், 'சின மிகுந்த கண்கள் தாம் இவை என்று உண்மை கூறுவர்; சிலர் அவ்வுண்மையை மறுத்து, அவனுதி உருவகத்தால் 'அல்ல வெறுங்கனலே' என்பர். மடப் பெண்கள் – இளமையுடைய பெண்கள். உலா இலக்கியத்தில் உலாவரும் அரசனைப் பெண்டிர் பார்த்துப் பேசுதல் போல இங்குக் கும்பகருணனது தன்மையைக் கண்ட மகளிர் பேசுவதாக அமைத்துள்ளார். இஃதோர் சிற்றுலாப்போலும். (௩௩௧)

மேகநாதன் புறப்பாடு

460. கண்ணார் நுதலா னருளியதிண்
கவச மிட்டுக் கழல்கட்டித்
திண்ணா ராவம் புறத்தார்த்துச்
செம்பொற் றேரின் மிசையேறி
மண்ணோர் குலையத் தானவர்கண்
மறுகி யோட மனங்கலங்கி
விண்ணோர் வெருவச் சிலையேந்தி
மேகநாதன் புறப்பட்டான்.

கண்ணார் நுதலான் அருளிய திண்கவசம் இட்டுக் கழல்கட்டி,
திண்ணார் ஆவம் புறத்து ஆர்த்துச் செம்பொன்தேரின் மிசைஏறி,
மண்ணோர் குலைய, தானவர்கள் மறுகி ஓட, மனம்கலங்கி
விண்ணோர் வெருவச், சிலை ஏந்தி மேகநாதன் புறப்பட்டான்.

பொ: கண்பொருந்திய நெற்றியையிடையு சிவபிரான் கொடுத்தருளிய திண்ணிய கவசத்தை மார்பிலணிந்து, வீரக்கழலைக் காலில்கட்டி, திண்மை பொருந்திய அம்புப்புட்டிலைத் தோட்புறத்தே கட்டிக்கொண்டு, செம்பொன்னலியன்ற தேரின்மேல் ஏறிக்கொண்டு மண்ணுலகத்தோர் நடுங்கவும், தானவர்கள் மனங்கலங்கி ஓடவும், மனங்கலங்கித் தேவர்கள் அஞ்சவும் வில்லைக் கையில் ஏந்திக்கொண்டு மேகநாதன் புறப்பட்டான்.

கு: கண்ணார் நுதலான் என்றது நெற்றிக் கண்ணையுடைய சிவபிரானை. மேகநாதன் கவசம் இட்டு, கட்டி, ஆர்த்து, ஏறி, ஏந்தி, புறப்பட்டான் என இயையும். குலைய, ஓட, வெருவச் சிலை ஏந்தி என்க. இவை சிலையேந்துதற்கு அடையாய் இடைநின்றன. இடைப்பிறவல். குலைதல்—நடுங்குதல். மறுகுதல்—மனம் அச்சத்தால் கலங்குதல் மேகநாதன் என்ற இந்திரசித்தினை. (கூ௨)

## இராவணன் புறப்பாடு

461. இலங்கை வேந்த னிலங்கயில்வா
ளிறுக வீக்கி யெதிரிகளால்
கலங்க லில்லாத் திண்கவசங்
கட்டி வீரக் கழலார்த்து
விலங்கன் மேன்மின் பரந்ததென
வீர பட்ட நுதல்விசித்துச்
சலங்கொ ணெஞ்சன் தரைநெளிய
வேறி னன்பொற் றடந்திண்டேர்.

இலங்கை வேந்தன் இலங்கு அயில்வாள்
இறுக வீக்கி, எதிரிகளால்
கலங்கல் இல்லாத் திண்கவசம்
கட்டி வீரக் கழல் ஆர்த்து,
விலங்கல்மேல் மின் பரந்தது என
வீரபட்டம் நுதல் விசித்துச்
சலங்கொள் நெஞ்சன் தரை நெளிய
ஏறினன் பொன் தடங் திண்தேர்.

பொ : இலங்கைக்கு வேந்தனாகிய இராவணன், விளக்கமும் கூர்மையுமுள்ள உடைவாளை (இடைக்கச்சில்) இறுகச் செருகிக் கொண்டு, எதிரிகளின் படைகளால் கலங்குதல் இல்லாத திண்ணிய கவசத்தை மார்பில் கட்டிக்கொண்டு, வீரக்கழலைக் காலில் கட்டிக்கொண்டு, மலையின்மேல் மின்னல் பரவியது என்னும்படி நெற்றியில் வீரபட்டத்தைக் கட்டிக்கொண்டு கோபங் கொண்ட நெஞ்சினனாய்த் தரை பொறை தாங்கமாட்டாது நெளியு மாறு, பொன்னாலியன்ற பெரிய திண்ணிய தேரில் ஏறினன்.

கு: இலங்கை வேந்தன் இலங்கயில்வாள் என்பதில் மடக்கு என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காணலாம். வீக்குதல்-கட்டுதல். எதிரிகள்-பகைவர். எதிரிகளால் கலங்கல் இல்லாத் திண்கவசம்' என்புழி எதிரிகளால் என்பது எதிரிகள்

எறியும் படைக்கலங்களால் என்னும் பொருளது. விலங்கல்-மலை. மலைபோன்ற பெரிய தலைப்பகுதியிலுள்ள நெற்றியில் வீரபட்டம் மின்னுவது, மலைமேல் மின் பரவியது போன்றிருந்தது என்றவாறு; இது, தற்குறிப்பேற்றவுவமை. விசித்தல்-கட்டுதல். சலம்-கோபம். இலங்கை வேந்தன், வீக்கி, கட்டி ஆர்த்து விசித்து, நெஞ்சனைய்த் திண்டேர் ஏறினன், என இயையும், தரை நெளிய ஏறினன். என்றது, இவன் உடற்பொறை தாங்கமாட்டாது தரையும் நெளியுமாறு ஏறினன் என்றவாறு. (கசுக)

படையின் செலவு

462. தேரு மாவுஞ் சினக்களிறுஞ்
செறிந்து செல்ல வழிகாணர்
வீர ராஞர் பின்னின்றார்
முன்னின் றாரை மிகநெருக்கிப்
பேரும் பேருமெனவுரைப்பப்
பேரார்பேரு மிடமில்லா
தூருந் தெருவும் வகுத்தவன்றான்
றென்று மறியா னெனவுரைத்தார்.

தேரும் மாவும் சினக்களிறும்
செறிந்து செல்ல, வழிகாணர்
வீரராஞர் பின்னின்றார்
முன்னின்றாரை மிகநெருக்கி,
பேரும்; பேரும்; என உரைப்ப,
பேரார்; பேரும் இடம் இல்லாது;
ஊரும் தெருவும் வகுத்தவன்தான் ஒன்றும்
அறியான் என உரைத்தார்.

**பொ:** (நால்வகைப் படையுள்) தேர்களும் குதிரைகளும் சினமிக்க யானைகளும் நெருங்கிச் செல்லாநிற்க, பின்னின்றவர்களாகிய காலாள்வீரர்கள் தாம் செல்லுதற்குரிய வழியைக் காணுதவர்களாய் முன்னின்றவர்களை மிகவும் நெருக்கிக்கொண்டு

நகருங்கள்! நகருங்கள்! என்று சொல்ல, முன்னின்றவர்கள் பேரும் இடமில்லாமையால் பெயர முடியார்தவர்களாய், இவ் ஊரையும் தெருக்களையும் வகுத்தவன் ஒன்றும் அறியாதவனுவன் என்று இழித்துரைத்தார்கள்.

கு: நால்வகைப் படைகளும் நடப்பதற்கேற்ற விரிவுடையதாக ஊரையும் தெருவையும் அமைக்காமையால் இங்ஙனம் வழிகாணுது வருந்த வேண்டியுள்ளது என்ற வெறுப்பினுல், 'ஊரும் தெருவும் வகுத்தவன்தான் ஒன்றும் அறியான்' என இழித்துரைத்தவாறு. மா என்பது, தேரும் களிறும் ஆகியவற்ருேடு சார்த்தி எண்ணப்பட்டமையால் குதிரை என்னும்பொருள்தாயிற்று. பின்னின்ருராகிய வீரரானுர் வழிகாணுராய் என மாற்றி, முற்றெச்சமாக்கி உரைப்ப என்பதனேடு முடிக்க. பேரும்பேரும் என்ற அடுக்கு ஏவற்பொருளில் வந்தது. உம்மீற்றிலும் ஏவல் வருவதுண்டு; 'பேர்மின்' என்ற சொல்லே பேரும் என மருவியது போலும். இடமில்லாது என்பது காரணப் பொருட்கண் வந்த வினையெச்சம். இடமில்லாமையால் பேராராய் உரைத்தார் என இயையும். அறிநதவனுயின் இங்ஙனம் படைகள் செல்லமுடியாத படி சிறியதாகச் செய்திருக்கமாட்டான் என்பது அருத்தாபத்தியால் புலனுகும்'. (சுசு)

படையெழுச்சியால் தேவர் வருந்துதல்

463. உமையாள் பாகன் வரையெடுத்த
உயர்தோ ளரக்கன் படையெழுச்சி
சமையா துலகெங் கணுநிறையத்
தரணி யெழுந்த தடந்தூளி
அமையா தோங்கிக் கண்மறைப்ப
வகல்வா னத்தி னமரர்கள்கண்
இமையா தொழிய வெமையிழைத்தோ
னிடும்பை செய்தா னெமக்கென்ருர்.

உமையாள் பாகன் வரை எடுத்த
உயர்தோள் அரக்கன் படைஎழுச்சி
சமையாது உலகு எங்கணும் நிறையத்
தரணி எழுந்த தடந்தூளி,
அமையாது ஓங்கிக் கண்மறைப்ப,
அகல்வானத்தின் அமரர்கள். கண்
இமையாது ஒழிய எமை இழைத்தோன்
இடும்பை செய்தான் எமக்கு, என்றார்.

பொ: உமையம்மையை இடப்பாகத்தில் கொண்டுள்ள சிவன் தங்கியுள்ள கயிலைமலையை எடுத்த உயர்ந்த தோள்களையுடைய இராவணன் தன் எழுச்சி கொண்ட நால்வகைப் படைகளும் சிறிதிடமும் ஒழியாது உலகின் எவ்விடத்தும் நிறைதலால், தரையில் எழுந்த பெரியதூளி, பூமியளவில் அமையாது உயர்ந்து சென்று, அகன்ற வானத்தின்கண் உள்ள தேவர்களின் கண்களையும் மறைத்தலால் (அத்தேவர்கள்) 'கண் இமையாதிருக்குமாறு எம்மைப் படைத்தவன் எமக்குத் துன்பத்தைச் செய்தான்' என்று கூறுவாராயினர்.

கு: இராவணனது தோள்வலி காட்டவேண்டி உமையாள் பாகன் வரையெடுத்த உயர்தோள் அரக்கன்' என்றார். படையெழுச்சி என்பதை, எழுச்சி கொண்ட படையென மாற்றி உலகெங்கணும் நிறைதற்கு அப்படையையே யெழுவாயாக்குக. சமையாது – ஒழியாது. தரணி – தரை. தடந்தூளி என்றது, தரையில் நின்றும் எழுந்த பெரிய புழுதியை. தேவர்கள் இமையா நாட்டமுடையவர்கள் ஆதலின் தரையிலிருந்து எழுந்து வரும் புழுதி அவர்தம் கண்களை மறைத்துவிடுகின்றது; இமைத்தற்குரிய இமையிருப்பின் அப்புழுதியினின்றும் தம் கண்களைக் காத்துக்கொள்ளலாம்; அதற்கு வழியின்றி இமையா நாட்டமுடையவர்களாகத் தம்மைப் படைத்தவன் தமக்கு நன்மை செய்யவில்லை; துன்பமே செய்தான்; என வெறுத்துக் கூறியவாறு. இழைத்தல் – படைத்தல். இடும்பை' – துன்பம். உலக அழகுகளைப் பார்க்கும்போது இமையா நாட்டம் நல்லதாகத் தோன்றுகின்றது; இவ்வாறு புழுதி மறைக்கும்போது அதுவே தீயதாகத் தோன்றுகின்றது என்றவாறு. உமையாள் மேனி கண்டவர் காட்சி கரைகாணார், இமையா நாட்

டம் பெற்றிலமென்றுர் இருகண்ணுல், அமையாதென்றுரந்தர வானத்தவரெல்லாம்'' (பால - மிதிலைக் காட்சி - 25) என்பது இங்குநினைக்கத்தகும். (௪௬௫)

மதுவின் தேவி இராவணன் காலில் விழுதல்

464. மேக நாதன் முன்செல்ல
வெய்யதம்பி பின் செல்ல
நாக மனைய புயத்திலங்கை
நாதன் மதுவின் புரநண்ணச்
சோக மேவும் மனத்தினளாய்த்
துணைக்கண் ணருவி சோரவிட
வேக மதுவின் றேவியவன்
விளங்குங் கழற்கான் மிசைவீழ்ந்தாள்.

மேகநாதன் முன்செல்ல,
வெய்யதம்பி பின்செல்ல,
நாகம் அனைய புயத்து இலங்கை
நாதன், மதுவின்புரம் நண்ண,
சோகம் மேவும் மனத்தினளாய்த்
துணைக்கண் அருவி சோரவிட
வேக மதுவின் தேவி, அவன்
விளங்கும் கழற்கால் மிசைவீழ்ந்தாள்.

பொ : இந்திரசித்து முன்பு செல்லவும், விரும்பத் தக்க தம்பியாகிய கும்பகருணன் தனக்குப் பின்பு வரவும், மலைபோன்ற தோள்களையுடைய இராவணன், மது என்பவனது நகரை அடைய, (அப்போது) சோகம் பொருந்திய மனத்தினை யுடையவளாய், இரு கண்களும் அருவிபோன்று கண்ணீரைச் சொரியர்நிற்க, வேகம் பொருந்திய மதுவின் தேவிவந்து, அவ்விராவணனுடைய விளக்க முடைய கழலையணிந்த கால்மேல் வீழ்ந்தாள்.

கு : மேகநாதன் - இந்திரசித்து. இராவணனுக்கு முன் இந்திரசித்தும், பின் கும்பகருணனும் செல்ல. இராவணன் நடுவிற்

சென்றுன் என்றவாறு. வெய்ய – விரும்பத்தக்க; இனி, கொடிய எனவும் பொருள் கொள்ளலாம். நாகம் – மலை. இராவணன் தோள்களுக்கு உவமையாகத்தக்கன மலைகளே யாதலின். நாகமனைய புயத் திலங்கைநாதன்' என்ருர். மதுவின் மனைவி, என்றது இராவணனைக் கண்டவுடன் தன் கணவனைக் கொல்லத்தான் வருகின்றுன் என்பது அறிந்து, சோகமேவும் மனமும் அருவிசோரும் கண்ணும் உடையளாய இராவணனது சிற்றன்னையாகிய கும்பிநசியை. (கசுகூ)

இராவணன் ஆறுதல் சொல்லக் கும்பிநசி

465. தாளின் விழுந்த தாயர்தமைத்
தாங்கி யெடுத்துத் தசக்கிரிவன்
கேளி தென்சொல் லுன்மனத்துக்
கேத மதனை விடுதிவினைக்
கோளை விதியை யார்கடப்பா
ரென்று கூறக் கொடியிடையாள்
மீள வவன்ற னடிவீழ்ந்து
விம்மி விம்மி யிவைவிளம்பும்.

தாளின் விழுந்த தாயர்தமைத்
தாங்கி எடுத்துத் தசக்கிரிவன்
கேள், இது என்சொல்! உன்
மனத்துக் கேதம்அதனை விடுதி! வினைக்
கோளை – விதியை – யார் கடப்பார்?
என்று கூற, கொடி இடையாள்,
மீள அவன்தன் அடிவீழ்ந்து
விம்மிவிம்மி இவை விளம்பும்.

பொ: இராவணன், தன் பாதத்தில் விழுந்த தாயாகிய கும்பிநசியைத் தன் கையால் தாங்கி எடுத்து நிறுத்தி, என் சொல்லாகிய இதனைக் கேட்பாயாக! உன் மனத்துள்ள துன்பத்தை விடுவாயாக! வினைவலியை – விதியை வெல்லவல்லார் யாருளர்? என்று சொல்லா நிற்க, கொடி போன்ற இடையையுடைய

கும்பிநசி மீண்டும், அவ் இராவணனது அடியில் வீழ்ந்து, தேம்பித் தேம்பியழுது கொண்டு இவற்றைச் சொல்லுவாளானுள்.

கு: தசக்கிரிவன், தாங்கி எடுத்து, என் சொல்கேள்; உன் மனத்துக் கேதமதனை விடுதி. வினைக் கோளை - விதியை யார் கடப்பர்ர்' என்று கூற, கொடியிடையாள் வீழ்ந்து விம்மி இவை விளம்பும் என வினை முடிவு செய்க. என்சொலிது கேள் என மாற்றுக. கேதம் – துன்பம். கேதம் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை (திருவாசகம் – கண்டபத்து 10) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வருதல் காணலாம். கோள் – வலிமை. வினைக் கோள் - வினைவலி. விதி என்றது, வினையினுலுளதர்கிய ஊழினை. ஒருயிர் செய்யும் இருவினைகளே பின் ஊழாய் வந்தூட்டும் என்பது சமய நூலோர் கருத்தாகும். விதியை யார் கடப்பார்' என்பது, ''ஊழிற்பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்'' (திறக்குறள் – ஊழ். 10) என்ற குறளை நினைப்பித்தல் காணலாம். 'துதியறு பிறவியி னின்பதுன்பந்தான், விதிவய மென்பதை மேற்கொளாவிடின் மதிவலியான் விதிவெல்ல வல்லமோ? (ஆரணிய – சடாயுவுயிர் நீத்த - 193) தன் தாளில் விழுந்து அழுகின்ற கும்பிநசி, மதுவின் தகாத செயலை நினைத்து அழுகின்றதாகக் கொண்டு இராவணன் 'வினைக்கோளை – விதியை யார்கடப்பார்?' என அமைதி கூறுகின்ருன், என்பதை யுணர்ந்து கொண்டு அவள் மீண்டும் அடிவீழ்ந்து விம்மி அழுது கூறுகின்ருள் என்றவாறு. அவள் விளம்பியதை வருஞ்செய்யுளிற் காணலாம். (கூ௬எ)

கும்பிநசி கூறுவது

466. மக்க ளிழந்த விடும்பையினு
மனையா ளிழந்த விடும்பையினும்
மிக்க விடும்பை யொவ்வாத
விதவை யிடும்பை யெனவிளம்பத்
தக்க ததனு லென்கழுத்திற்
ருலி - நீதந் தருளென்று
தொக்க மணிப்பூண் மார்பானைத்
தொழுது பின்னு மிவைசொல்லும்.

'மக்கள் இழந்த இடும்பையினும்,
மனையாள் இழந்த இடும்பையினும்
மிக்க இடும்பை, ஒவ்வாத
விதவை இடும்பை; என விளம்பத்
தக்கது; அதனால், என் கழுத்தில்
தாலி நீதந்து அருள்' என்று
தொக்க மணிப்பூண் மார்பானைத்
தொழுது, பின்னும் இவைசொல்லும்.

பொ : 'தம் மக்களை யிழந்த துன்பத்தினும், மனையாளை இழந்த ஒருவன் துன்பத்தினும் மிக்க துன்பமாவது, பொருந்தாத விதவையின் துன்பமாகும் எனச் சொல்லத்தக்கது; அதனால், என் கழுத்தில் உள்ள தாலியை (நீக்காமல்) நீ தந்தருளவேண்டும் என்று மணிகள் பதித்த அணிகலன்கள் பலதொக்குள்ள மார்பினை யுடைய இராவணனை வணங்கிப் பின்னும் இவற்றைச் சொல்லலானாள்.

கு: விதவைத் துன்பம் பெரிதென்பது காட்ட வேண்டி, மக்களிழந்த இடும்பையும் மனையாளிழந்த இடும்பையும் படிமுறையான் இங்கு எடுத்துக் காட்டியவாறு. மக்களை யிழந்தவர்கள் மீண்டும் மக்களைப் பெற்றுக் கொள்ள வாய்ப்புண்டு; மனையாளை யிழந்தவன் மறுமணம் செய்து கொண்டு மகிழ வாய்ப்புண்டு; ஆனால், கணவனை இழந்த விதவை மீண்டும் மணந்து மகிழ்தல் தமிழ்நாட்டுப் பண்டையொழுக்கமின்மையின் மிக்க இடும்பை ஒவ்வாத விதவை இடும்பை யென விளம்பத்தக்கது' என்றாள். என் கழுத்திற்றாலி நீதந்தருள்' என்றது, என் கணவனாகிய மதுவினைக் கொல்லாதுவிடுத்து, என் கழுத்திற்றாலியை நிலைபெறச் செய்க என்னும் கருத்தினது. 'முன்பு இல்லாத தாலியை நீ தந்தருள்' என்று கேட்டிலள். மணிப்பூண் பல தொக்க மார்பினை யுடைய இராவணன்,தன் மார்பிலணிந்த தாலியாகிய ஒரு பூணினை வாங்காது காத்தற்குரியவன் என்னும் கருத்துப் புலப்பட வேண்டி. 'தொக்கமணிப் பூண் மார்பானை' என்றாள். (கசுஅ)

கும்பிநசி இராக்கதமணம் ஏற்கத்தக்கதே எனல்

467. விட்டு விளங்கு மணிமுடியாய்
வேதஞ் சொன்ன பிரமாதி
எட்டு மணத்தி லொருமணமா
மிராக்கதத்தி னியல்பறிதி
கட்டு மரிய காவலையுங்
கலக்கிப் புக்குக் கன்னியரை
முட்டி யவரைக் கொடுபோந்து,
வேட்கை முறையே யெனமொழிந்தாள்.

விட்டு விளங்கும் மணிமுடியாய்!
வேதம் சொன்ன பிரமாதி
எட்டு மணத்தில் ஒருமணமாம்
இராக்கதத்தின் இயல்பு அறிதி;
கட்டும் அரிய காவலையும்
கலக்கிப் புக்குக் கன்னியரை
முட்டி, அவரைக் கொடு போந்து
வேட்கை, முறையே என மொழிந்தாள்.

பொ : ஒளிவிட்டு விளங்கும் மணிமுடியுடையவனே! வேதம் சொல்லிய பிரமம் முதலிய எட்டு மணத்தில் ஒருமணமாகிய இராக்கத மணத்தின் இயல்பை அறிவாயன்றோ? மதில்கட்டினையும் கடத்தற்கரிய காவலையும் கலங்கச் செய்து உள்புகுந்து. கன்னிப் பெண்டிரைத் திண்டி அவரைக் கொண்டுபோய் மணத்தல் நமக்கு அமைந்த முறையேயாகும், என்று சொன்னாள்.

கு : 'மறையோர் தேஎத்து மன்ற லெட்டினுள்' (களவியல்—1) எனத் தொல்காப்பியர் கூறிய கருத்தறிந்தே, 'வேதம் சொன்ன பிரமாதி எட்டு மணத்தில் ஒமருணமாம் இராக்கதத்தின் 'இயல்பறிதி' என்றாள். பிரமாதி எட்டு மணமாவன:- பிரமம், பிரசா பத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. இராக்கத மாவது; தலைமகள் தன்னிலும், தமரிலும்

பெருது வலிதிற் கொள்வது கட்டு என்றது மதிற்காவலை; அது சுண்ணும்பும் கல்லுங் கொண்டு கட்டப்படுவதாகலின் கட்டு எனப் பட்டது. அரிய காவல் என்றது, யாரும் கடந்து போகாவண்ணம் விழிப்புடன் பார்த்திருக்கும் வாற்பி காவலரை. கன்னியின் விருப் பத்தையோ அவள் தமரின் விருப்பத்தையோ எதிர்பாராது கட்டுங்காவலும் கடந்துபுகுந்து கன்னியரைத் தீண்டித் தூக்கிச் கொண்டு போய் மணத்தல் இராக்கதராகிய நமக்கு முறையே யாகும், என்றவாறு. முட்டுதல் – தீண்டுதல். எதிர்ப்படுதலும் ஆம். வேட்கை – வேட்டல்; – மணத்தல். (கஙகூ)

இராவணன் கருத்தையுடன்பட்டுக் கும்பிநசி மதுவினிடம் செல்லுதல்

468. என்று சிறுதா யிவைகூற
வெல்லாப் பிழையு முனக்காக
இன்று பொறுத்தோ முன்கணவ
னிமையோ ருலகங் கைக்கொள்ள
ஒன்று மனத்தோ ளுயென்னே
டொக்க நடக்க வுரைத்தியென
நன்றி தென்று துயின்மதுவை
நல்லாள் சென்று கண்ணுற்ருள்.

என்று சிறுதாய் இவைகூற,
'எல்லாப் பிழையும் உனக்காக
இன்று பொறுத்தோம்; உன் கணவன்,
இமையோர், உலகம் கைக்கொள்ள
ஒன்றும் மனத்தோன் ஆய், என்னேடு
ஒக்க நடக்க உரைத்தி' என
நன்று இது என்று, துயில் மதுவை
நல்லாள் சென்று கண்ணுற்ருள்.

பொ: என்று தன் சிற்றன்னையாகிய கும்பிநசி இவற்றைச் சொல்ல (இராவணன்) அவன் செய்த எல்லாப் பிழைகளையும் உனக்காக இன்று பொர்றுத்தோம்; இனி, உன்கணவன் தேவ

ருலகத்தை யான் கவர்தற்கு என்னோடு ஒன்றுபட்ட மனத்தவனுகி ஒக்க நடக்குமாறு அவனுக்குச் சொல்லுதி' என்றுகூற, கும்பிநசி, நன்று இது, என்று உடன்பட்டு, உறங்கிக் கொண்டிருந்த தன் கணவனுகிய மதுவைச் சென்று கண்டாள்.

கு: எல்லாப் பிழையும் என்றது, இலங்கையில் இராவணன் இல்லாதபோது நுழைந்தது; மதிற்காவலையும் வாயிற்காவலையும் கலக்கி அரண்மனையுள் புகுந்தது; கும்பிநசியின் உடன்பாடும், அவன் தமராகிய தன்னுடன்பாடும் தம்பியர் உடன்பாடும் இன்றி அவளைக் கவர்ந்து சென்றது; பின்னும் அறிவிப்பின்றி அவளை மணந்து கொண்டது முதலிய பிழைகளை. உனக்காகப் பொறுத்தோம் என்றது, உன் வேண்டுகோளுக்காக — உன் தாலியை நிலைபெறுதற்காகப் பொறுத்தோம் என்றவாறு. இனி, விண்ணவர் உலகம் கைக்கொள்ள நடக்கும் போரில் மது, தன்னோடு சேர்ந்து கொள்ளவேண்டும் என்பது இராவணனுடைய கட்டளையாகும். அந்தக் கட்டளை நிறைவேற்றத் தக்கதாகவே யிருத்தலின் 'நன்றிது', என்று கும்பிநசி உடன்பட்டாள். நல்லாள் என்று அவளைக் குறித்தது, தன் கணவன் உயிரை இராவணன் கவராது, காப்பாற்றிய நன்மையளாதல் பற்றி என்க. (கசய)

மது, தன் மனைவியின் கருத்துப்படி இராவணனைக் காணுதல்

469. உறக்க நீக்கி யிராவணனுன்
னுறவு வேண்டி யிந்நகரின்
புறத்தி னின்ரு னவனோடும்
பொருந்தி யினிய புகன்றவற்குத்
துறக்கம் வெல்லத் துணைப்படுதி
யென்று தூய மொழிசொல்ல
மறுக்கி லாத மதுவிலங்கை
மன்னன் றன்னை வந்துற்ருன்.

உறக்கம் நீக்கி, 'இராவணன் உன்
உறவு வேண்டி இந்நகரின்
புறத்தின் நின்றான்; அவனோடும்
பொருந்தி. இனிய புகன்று அவற்குத்
துறக்கம் வெல்லத் துணைப்படுதி' என்று
தூய மொழி சொல்ல,
மறுக்கிலாத மது, இலங்கை
மன்னன்தன்னை வந்து உற்றான்.

பொ : (கும்பிநசி தன் கணவனை) உறக்கத்தினின்றும் எழுப்பி, 'இராவணன் உன்உறவு வேண்டி இந்நகர்ப்புறத்தில் நின்றுளான்; அவனோடும் நட்புக்கொண்டு இனிய சொற்களைச் சொல்லி, விண்ணுலகை வெல்லத் துணையாய் நிற்பாயாக' என்று தூய்மையான மொழியைச் சொல்ல, அவள் சொல்லை மறுக்காத மது, இலங்கை மன்னனாகிய இராவணனைச் சென்று சேர்ந்தான்.

கு : மதுவின் உறக்கத்தை நீக்கினவள் கும்பிநசி. அவ்வாறு துயிலுணர்த்தியதும் அவனை நோக்கி 'உன் உறவு வேண்டி இராவணன் இந்நகரின்புறத்தில் தங்கியுள்ளான்; அவனோடு நட்புச் செய்துகொண்டு அவனுக்குப் போரில் துணைசெய்க' என்ற கும்பிநசியின் சொல்லைச் சிறிதும் மறுக்காமல் ஏற்றுக்கொண்டான் என்பார்', 'மறுக்கிலாத மது' என்றார். (கசுக)

இராவணன் மதுவின் துணைபெற்று அளகாபுரி அடைதல்

470. கொற்ற வரக்கன் மதுவந்து
கொண்டாடப்போ யவனில்லம்
உற்று மதுசெய் பூசனைகொண்
டுவந்தாங் கொருநா ளினிதிருந்து
பிற்றை வைகல் பெருஞ்சேனை
சூழவேகிப் பெருவினைகள்
அற்ற தவத்தோர் பயிலிமயத்
தளகா புரியினய லிறுத்தான்.

கொற்ற அரக்கன், மதுவந்து
கொண்டாடப்போய் அவன் இல்லம்
உற்று மதுசெய் பூசனைகொண்டு உவந்து
அங்கு ஒருநாள் இனிது இருந்து,
பிற்றை வைகல் பெருஞ்சேனை
சூழஏகி, பெருவினைகள்
அற்ற தவத் தோர் பயில்இமயத்து
அளகாபுரியின் அயல் இறுத்தான்.

பொ : வெற்றிமிக்க இராவணன், மது தன்பால்வந்து பாராட்டிக் கொண்டாட, அவனுடன் சென்று அவனது இல்லத்தை அடைந்து, அவன் செய்த விருந்து முதலிய பூசனைகளை ஏற்றுக் கொண்டு மகிழ்ந்து அவ்வீட்டில் ஒருநாள் இனிதே தங்கியிருந்து, மறுநாள் பெரிய சேனைசூழச் சென்று பெரிய வினைகள் அற்ற தவசிகள் தங்கியுள்ள இமயத்தில் உள்ள அளகாபுரியின் புறத்தே சேனையோடு தங்கினன்.

கு : சென்ற போர்தோறும் வென்றியே புனையும் இராவணன் மதுவினைத் தன் வயப்படுத்தும் தன்மை நினைந்து 'கொற்ற வரக்கன்' என அவனைக் குறிப்பிட்டார். கொண்டாடுதல் என்பது, இராவணன் பெருமைகளைச் சொல்லிப் பாராட்டுதல். வைகல்—நாள். தவத்தோர் தம் தவத்தின் பெருமையால் இருவினையும் இலராய் தூய ஞானவடிவினராய் இருந்தமை யுணர்த்தவேண்டி, 'இரு வினைகள் அற்ற தவத்தோர்' என்றார். தவத்தோர் தங்கும் இமயத் தில் அவர்க்குப் பகைவனான இராவணன் போர்க்கோலம் பூண்டு போதல் பொருந்தாது என்னும் கருத்துத்தோன்ற, 'தவத்தோர் பயில் இமயத்து அளகாபுரியன் அயல் இறுத்தான்' என்றார். அளகாபுரி இமய மலையில் இருந்ததை யுணர்த்தியவாறு. இறுத்தல்— சேனையோடு தங்குதல். (கசஉ)

இராவணன் பொழிலை அடைதல்

471. அரவம் பெருகும் பெருஞ்சேனை
யரக்கர் கோமா னளகையயல்
குரவம் செருந்தி சுரபுன்னை
கோலத்தமாலங் குளிர் சந்தம்

மரவங் குருந்தம் பாடலஞ்சீர்
மௌவ லாதி மிகநெருங்கி
இரவும் பகலுந் தெரியாத
விருட்பூம் பொழிலை யெய்தினன்.

அரவம் பெருகும் பெருஞ்சேனை
அரக்கர் கோமான் அளகையயல்
குரவம், செருந்தி, சுரபுன்னை,
கோலத்தமாலம், குளிர் சந்தம்
மரவம், குருந்தம், பாடலம், சீர்
மௌவல் ஆதி மிக நெருங்கி,
இரவும், பகலும் தெரியாத
இருட்பூம் பொழிலை எய்தினன்.

பொ: ஒலிமிக்க பெரிய சேனையையுடைய இராவணன் அளகாபுரியின் அருகில், குரா, செருந்தி, சுரபுன்னை, அழகிய பச்சிலைமரம், குளிர்ச்சிமிக்க சந்தனமரம், வெண்கடம்பு, குருந்தம், பாதிரி, சிறப்புடைய முல்லை முதலியன மிகவும் நெருங்கியிருத்தலால் இரவும் பகலும் தெரியாத இருண்ட பூஞ்சோலையை அடைந்தான்.

கு: குரா முதலியவற்றின் நெருக்கத்தால் பகலும், இரவு போலத் தோன்றுமாதலின், இரவும் பகலுந் தெரியாத இருள்பூம் பொழில் என்றார். தமாலம் – பச்சிலை மரம். மரவம் – வெண்கடம்பு. பாடலம் – பாதிரி. மௌவல் – முல்லை. நெருங்கி – நெருங்குதலால். காரணத்தின்கண் வந்த வினையெச்சம். இருள் செறிந்த பூஞ்சோலையை இருட்பூம்பொழில் என்றார். (கசா)

தடாகத்தின் நிலை

472. வஞ்சமில்லா யோகியர்தம்
மனம்போற் றெளிந்து மங்கையர்தம்
நெஞ்சுபோல மிகவாழ்ந்து
நிலைப்பிலாத நெடுநீரில்

கஞ்ச மலர்ப்பா சடைப்பள்ளிக்
காதற் சேவ லன்னந்தன்
தஞ்ச மாய பெடையோடும்
தழுவித் துயிலுந் தடத்தினதே.

வஞ்சம் இல்லா யோகியர்தம்
மனம்போல் தெளிந்து மங்கையர்தம்
நெஞ்சுபோல மிக ஆழ்ந்து
நிலைப்பு இலாத நெடுநீரில்.
கஞ்ச மலர்ப் பாசடைப் பள்ளிக்
காதல் சேவல் அன்னம் தன்
தஞ்சம் ஆய பெடையோடும்
தழுவித் துயிலும் தடத்தினதே.

பொ : வஞ்சமில்லாத யோகியரின் நெஞ்சம் போலத் தெளிந்து, மங்கையர்தம் நெஞ்சம்போல மிக ஆழ்ந்து, நிலைத்து நிற்க இயலாத நெடியநீரில், பசிய இலைகளோடு கூடிய தாமரைமல ராகிய படுக்கையில் காதல்மிக்க ஆண் அன்னம் தன் துணையாய பெண் அன்னத்தோடும் தழுவிக் கொண்டு உறங்குகின்ற தடாகத் தினையுடையது.

கு : தடாகத்தின் நீர் கலங்கலின்றித் தெளிந்திருப்பதற்கு யோகியரின் மனம் உவமை. யோகியர் மனம் வஞ்சம் இல்லாமை யாலும் மெய்ப் பொருளின் நினைவாலும், எப்போதும் தெளிவாக இருக்கும். பெண்டிரின் மனம் மிக ஆழமானது. அதன் ஆழத்தை யாராலும் அறிதல் இயலாது என்பர். அத்தி மலரைக் கண்டாலும் மானார்விழியார் மனத்தைக் கடவுளரும் காணமுடியாது என்பர். மங்கையர்தம் நெஞ்சுபோலத் தடாகம் ஆழ்ந்துள்ளது என்றவாறு. நீந்தலாமன்றி நிலைத்து நிற்க இயலாது என்பார். 'நிலைப்பிலாத நெடுநீரில்' என்றார். பாசடை – பசிய இலை. கஞ்சம் – தாமரை. பாசடைக் கஞ்ச மலர்ப்பள்ளி எனக் கூட்டுக. இலைகளையுடைய தாமரைமலராகிய பள்ளியில ஆண் அன்னம், பெண் அன்னத்தைத் தழுவிக் கொண்டு தூங்கும் தடாகம் என அதன் எழிலும் இன்ப மும் இயம்பியவாறு. நெடுநீர் என்றது, ஆழத்தால் நெடிதாகிய என்றவாறு. தஞ்சம் – துணை. (கசசு)

பளிக்குப்பள்ளியின் அமைப்பு

473. ஆடற் றெய்வ மடந்தையரு
மமரர் களும்வந் தவ்விடத்துக்
கூடிக் கலவி யமு துண்டு
கொழும்பூம் புன்னைக் குளிர் நீழல்
வாடைக் கன்று வந்தசைப்ப
மயில்க ளாட வண்டினங்கள்
பாடக் கண்டாங் கினிதிருக்கும்
படிகத் தலம் பூம்பள்ளியது.

ஆடல் தெய்வ மடந்தையரும்
அமரர்களும் வந்து, அவ்விடத்துக்
கூடிக் கலவி அமுதுண்டு,
கொழும்பூம் புன்னைக் குளிர்நீழல்
வாடைக்கன்று வந்து அசைப்ப,
மயில்கள் ஆட, வண்டு இனங்கள்
பாட, கண்டு ஆங்கு இனிது
இருக்கும் படிகத்தலம்பூம் பள்ளியது.

பொ: நாட்டியம் ஆடுதலை யுடைய தெய்வ மகளிரும் தேவர்களும் இணைந்துவந்து அவ்விடத்தில் கூடிக் கலவி இன்ப மாகிய அமுதத்தை உண்டு செழுமையான மலர்களையுடைய புன்னை மரத்தின் குளிர்ந்த நீழலில், வாடையாகிய கன்று வந்து உலாவ வும், மயில்கள் ஆடவும், வண்டினங்கள் பாடவும் அவற்றைப் பார்த்துக் கொண்டு ஆங்கு இனிதாக இருத்தற்குரிய பளிங்குத் தலமாகிய பொலிவு மிக்க பள்ளியினை யுடையது.

கு: அரம்பையரும் அமரரும் எழில்மிக்க அவ்விடத்தில் வந்து கூடி யின்புற்றும் பின், புன்னை நீழலில் மெல்லிய வாடை வீச, மயில்களாட, வண்டினம் பாடப் பார்த்துக்கொண்டும் அமர் தற்கு உரிய பளிங்குப் பாறையாகிய பொலிவுடைய பள்ளியை யுடையது. அச்சோலை என்றவாறு. வாடையாகிய கன்று என

உருவக மாக்குக. வாடையைக் கன்று என்றது, முதிர்ந்து வலி தாகத் தாக்காது, மெல்லிதாய் வந்து உலாவுகின்ற வாடையின் இளமை புலப்பட வேண்டி. பொழில் நடத்தினது, பள்ளியது என இயையும். படிகம் – பளிங்கு. (கசரு)

சூரியன் மறைவு

474. அந்த வரக்க னப்பொழிலி
னழகை நோக்கி யங்கிருக்க
இந்த மாயப் படையெழுச்சி
யாவர் மேலென் றறியாது
சிந்தை கலங்கிச் செஞ்சுடரோ
னிவன்மு னிற்கை தீதாமென்
றுந்து திரைநீர்ப் பெருங்கடலு
ளொளிப்பான் போலக் குளித்தனனால்.

அந்த அரக்கன் அப்பொழிலின்
அழகைநோக்கி, அங்கு இருக்க,
இந்த மாயப் படை எழுச்சி
யாவர்மேல்? என்று அறியாது,
சிந்தை கலங்கிச் செஞ்சுடரோன்
இவன்முன் நிற்கை தீது ஆம் என்று,
உந்து திரைநீர்ப் பெருங்கடலுள்
ஒளிப்பான்போலக் குளித்தனனால்.

பொ: அந்த இராவணன் அந்தப் பொழிலின் அழகை நோக்கிக்கொண்டு அங்கு இருக்க, சிவந்த சூரியன், இந்த வஞ்சகமான படை எழுச்சி யார்மேலோ? என்று அறியாது மனங்கலங்கி இக்கொடியோன்முன் நிற்றல் நமக்குத் தீதாக முடியும் என்று எண்ணி, வீசுகின்ற அலைகளையுடைய நீர்நிறைந்த பெரிய கடலில் ஒளித்துகொள்பவன் போலக் குளித்து மறைந்தான்.

கு: இராவணன் அங்குவந்து, பொழிலின் அழகை நோக்கிக் கொண்டிருக்கும்பொழுது, சூரியன் மறைந்த நிலையைத் தற்குறிப்

பேற்றமாக இராவணன் முன் நின்ருல், தனக்குத் தீதுவரினும் வரும் என்று அஞ்சிக் கடலில் ஒளிப்பவன் போலக் குளித்தான் என்ருர். இராவணன் காரணமின்றிப் படையெடுத்துச் சென்று பலரைத் துன்புறுத்தியவன் ஆதலின், தன்மேல் பாய்ந்து வருத்தலும் கூடும் என்று அஞ்சினன் சூரியன் என்க. உந்துதல் - வீசுதல். குளித்தல் - மறைதல். மாலையில் சூரியன் மேலைக்கடலில் மறைவதாகக் கூறுதல் மரபு. அம்மரபு நோக்கி இங்ஙனம் தற்குறிப்பேற்ற அணியை அமைத்தார். நிற்கை - நிற்றல். (கசசு)

திங்களின் தோற்றம்

475. மாலை யடைய மடவார்கண்
மனம்போற் செறிந்த விருளினதாய்
மாலை யடைய மடவார்கண்
மனமுங் கண்ணும் வரிவண்டு
மாலை யடைய வளர்புயத்து
வயவா ளரக்கன் வன்னெஞ்சம்
மாலை யடைய வாடையொடும்
வந்த தாழி வளர் திங்கள்.

மாலை அடைய மடவார்கள்
மனம்போல் செறிந்த இருளினதாய்
மாலை அடைய மடவார்கள்
மனமும் கண்ணும்; வரிவண்டு
மாலை அடைய வளர்புயத்து
வயவாள் அரக்கன் வன்னெஞ்சம்
மாலை அடைய, வாடையொடும்
வந்தது; ஆழி வளர்திங்கள்.

பொ: மாலைப்பொழுது வந்து அடைய உலகம் அறிவிலிகளின் மனம்போல் நெருங்கிய இருளினையுடையதாக; தலைவரைப் பிரிந்த பெண்டிரின் மனமும் கண்ணுக் மருட்சிகொள்ளுமாறும், இசை பாடும் வண்டுகள் வந்தடையுமாறு மாலை தங்கிய தோளினை

யுடைய வெற்றிவாளினையேந்திய இராவணனது வலிய நெஞ்சம், காம மயக்கத்தை யடையுமாறும் வாடைக்காற்ருேடும் வளர்ச்சி பெற்ற சந்திரன் கடலில் வந்து தோன்றியது.

கு: இருளினதாய் என்ற செய்தெனச்சத்தை இருளினதாக எனச் செயவெனச்சமாகத் திரிக்க. உலகம் என்பது தோன்ரு எழுவாயாக வந்தது. உலகம் செறிந்த இருளினதாக என்க. மடவார்கள் என்றது ஞானமில்லாதவர்களை. அவர்கள் மனம் காம மயக்கத்தால் இருண்டிருப்பதுபோல உலகமும் இருண்டதாக என்க. இரண்டாவது வந்த மடவார்கள் என்பவர், தலைவனைப் பிரிந்த கற்புடைய பெண்டிர்; அவர்தம் மனமும் கண்ணும், மாலையில் வருவதாகச் சொல்லிச் சென்ற தலைவனது தேர் வாராமையால் மருட்சியடைகின்றன; காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலைமலரும் நோயுடையராயினமையின் தலைவனைக் காணப்பெருத மனமும் கண்ணும் மருட்சியுற்றன என்றவாறு.வரி- இசை.இசைபாடும் வண்டு வரிவண்டு எனப்பட்டது. வரிவண்டுகள் வந்து அடையுமாறு மாலை வளர்கின்ற புயத்தினையுடைய வாளரக்கன் என்க. மாலை வளர் புயம் என இயையும் மலர்மாலை பொருந்திய தோளையுடைய வெற்றிவாள் ஏந்திய இராவணனது வன்னெஞ்சம் இம்மாலையில் காம மயக்கத்தை யடையுமாறு வாடைக்காற்ருேடு வளர்மதி கடலில் வந்து உதித்தது என்க. தண்பொழிலும் தெண்கயமும் வெண்பளிங்குப் பள்ளியும் காதலர் காட்சியும் வாடையும் மாலைமதியமும் இராவணனைக் காம மயக்க முடையவனுகச் செய்துவிட்டது என்க. ஆழி – கடல். வளர்திங்கள் என்றது முழுவதும் வளர்ந்த நிறைமதியை. இச்செய்யுளில் ஒவ்வோரடியிலும் முதல் இருசீர்களும் ஒத்துவந்தமையால் இது யமகம் எனப்படும். முதலில் மாலை, மலைக்காலம் இரண்டாவது மாலை – மருட்சி; மூன்ருவது, மலர்மாலை; நான்காவது மால் – காமம் எனப்பொருள் வேறுபாடு காண்க. (கசஎ)

476. வெய்ய பருதி யெனுமன்னன்
வீழக் கண்ட விருட்குறும்பன்
வய்யம் புரக்க வக்குறும்பை
மாய்ப்பான் ருேன்றி மதிமன்னன்

மய்கொ ளாழி கிளர்ந்தார்ப்ப
மண்ணில் வாழுஞ் சராசரங்கள்
உய்ய நிலவாம் படைபரப்பி
யுதய கிரிவா ரணமேற.

வெய்ய பருதி எனும் மன்னன்
வீழக்கண்ட இருள் குறும்பன்
வய்யம் புரக்க, அக்குறும்பை
மாய்ப்பான் தோன்றி, மதிமன்னன்
மய்கொள் ஆழி கிளர்ந்து ஆர்ப்ப,
மண்ணில் வாழும் சராசரங்கள்
உய்ய, நிலவாம் படைபரப்பி,
உதயகிரி வாரணம் ஏற.

பொ : வெப்பத்தையுடைய சூரியன் என்கின்ற அரசன் கடலில் வீழக்கண்ட இருளாகிய குறும்பன், இவ்வுலகைத் தன் வயமாக்கிக் காக்க, அந்தக் குறும்பரசனை மாய்ப்பதற்காகச் சந்திரனாகிய மன்னன் தோன்றிக், கருமைநிறம் கொண்ட கடலாகிய முரசம் கிளர்ந்து ஆரவாரிக்க, மண்ணுலகில் வாழ்கின்ற இயங்குவனவும் நிற்பனவுமாகிய உயிர்கள் வாழும்படி, நிலவாகிய சேனையைப் பரப்பிக்கொண்டு உதயமலையாகிய யானையின்மேல் ஏற.

கு : குளகம். இர்ந்த தந்தச் செறியிருள் என் வருஞ்செய்யுளில் முடியும். பருதியெனும் மன்னன் இருளாகிய குறும்பன், மதியாகிய மன்னன், நிலவாம் படை, உதயகிரியாகிய வாரணம் என்பன இயைபுருவகமாக அமைந்துள்ளன. ஆழி என்னும் முரசு என்று உருவகஞ்செய்யாமையால் அநேகாங்க உருவகம் எனலும் ஆம், வையம், மை என்பன எதுகை நோக்கி 'வய்யம்', 'மய்' எனப்போலியாயின. சூரியன் மறைந்தவுடன் இருள் பரவிய நிலை, ஒருவேந்தன் வீழ்ந்தவுடன் அந்நாட்டுக் கலகக்காரனாகிய குறும்பன் தன் ஆட்சியை நடத்துவது போன்றிருந்தது. எனவும், பின்பு சூரியனோடு இயைபுடைய சந்திரன் இருள் மாயத் தோன்றிய நிலை, மறைந்த அரசனோடு தொடர்புடைய அரசன், அந்தக் குறும்

பரசன் மாயும்படி சேனைசூழ யானையேறிவந்தது போன்றது எனவும் கொள்க. சரம் – இயங்குமுயிர்; அசரம் – நிற்குமுயிர். (௧௪அ)

இருள் தீர்தல்

477. தூய ஞானச் சுடர்விளக்குத்
தோன்றத் தோன்ற நில்லாத
மாயை யெனவு மறத்தினெதிர்
மண்டும் வினைமண் டலமெனவும்
நேய வுலகங் காத்தளிப்பா
னோர்போர் புரியு நின்முகத்துத்
தீய வரக்க ராமெனவுந்
தீர்ந்த தந்தச் செறியிருளே.

தூய ஞானச் சுடர்விளக்குத்
தோன்றத் தோன்ற நில்லாத
மாயை எனவும், அறத்தின் எதிர்
மண்டும் வினைமண் டலம் எனவும்,
நேய உலகம் காத்தளிப்பான்
நேர்போர் புரியும் நின்முகத்துத்
தீய அரக்கராம் எனவும்
தீர்ந்தது அந்தச் செறிஇருளே.

பொ: தூய ஞானமாகிய ஒளிவிளக்குத் தோன்றத் தோன்ற நில்லாது ஒழிகின்ற மாயையின் பொய்த்தோற்றம் போலவும், அறத்திற்கு எதிராக நெருங்கும் பாவமண்டலம் போலவும், அன்பு மிக்க உலகத்தைக் காப்பாற்றியருளுதற்காக நேரே சென்று போர் புரிகின்ற நின் எதிரில் தீயவர்களாகிய அரக்கர் மாய்வதுபோலவும் அந்த நெருங்கிய இருள் நீங்கியது.

கு: இதுபல் பொருளுவமை. சந்திரன் தோன்றச் செறியிருள் தீர்ந்தமைக் குவமையாக, ஞானந் தோன்ற மாயை நில்லாமையை யும், அறத்திற்கு எதிர் பாவம் நில்லாமையையும் இராமனுக்கு

முன் அரக்கர் நில்லாமையையும் கூறியுள்ளமை காணலாம். ஞானச் சுடர் விளக்கு என்பது ஞானமாகிய ஒளிவிளக்கு என உருவகமாக வந்தது; முன்னர் உருவகம் செய்து பின் அதனையே உவமித்தலின் இதனை உருவக உவமை என்னலாம். மண்டுதல் நெருங்குதல். நேயம்—அன்பு. செறியிருள் தீர்ததது என இயையும், இச்செய்யுள் இராமனை நோக்கி நேரே கூறியதாகும். (கசக)

இராவணன் நளகூபரன் காதலியைக் காண்டல்.

478. ஆய காலை யிளந்தென்ற
லடைய வநங்க சரம்பாயப்
பாய நெஞ்சு பதைபதைத்துப்
பணைத்தோ ளரக்கர் பதியளகை
நாய கன்றன் மகனுய
நளகூ பரனை நண்ணுவாள்
மேய காதன் மின்கொடிபோல்
விளங்கு மரம்பைதனைக் கண்டான்.

ஆய காலை இளம்தென்றல்
அசைய, அநங்கசரம் பாயப்
பாய, நெஞ்சு பதைபதைத்துப்
பணைத்தோள் அரக்கர்பதி, அளகை
நாயகன் தன் மகனுய
நளகூபரனை நண்ணுவாள்—
மேய காதல் மின்கொடிபோல்
விளங்கும் அரம்பைதனைக் கண்டான்.

பொ : அத்தகைய பொழுதில், இளமையானதென்றல் காற்று வீச, மன்மதன்கணை பாயப்பாய மனம் பதைபதைத்து, பருத்த தோளினையுடைய இராவணன், அளகைக்கு அரசனுகிய குபேரன் மகன் நளகூபரனை நண்ணுகின்ற வளாகிய — பொருந்திய காதலையுடைய மின்னற் கொடிபோல விளங்கும் — அரம்பையைக் கண்டான்.

கு : இளந்தென்றலின் மெல்லிய அசைவினைப் புலப்படுத்த வேண்டி வீச என்ற சொல்லாலும் சொல்லாமல் 'அசைய' என்று சொன்னார். அநங்கன் – மன்மதன்; உடம்பு இல்லாதவன் என்னும் பொருளது; சிவபிரான் நெற்றிக் கண்ணினால் மன்மதன் உடம்பு எரிந்தது என்பது புராணமரபு. அநங்கசரம் என்றது, மன்மதனது தாமரைமலர் முதலிய மலர்க்கணைகளை. பாயப்பாய'என்ற அடுக்குப் பன்மை குறித்து வந்தது. பணைத்தோள் – பருத்ததோள். நண்ணு வாளாகிய - அரம்பை என இயையும். நண்ணுவாளாகிய அரம்பை- விளங்கும் அரம்பை எனத் தனித்தனி இயைக்க. அரக்கர்பதி யாகிய இராவணன் அரம்பைதனைக் கண்டான் என்க. அநங்க சரம் தன் மார்பின் பாயப்பாயத் துன்பம் பொறுக்காமல் பதை பதைத்து நின்றவன் அரம்பையைக் கண்டான் என்றவாறு. (சுருங)

அரம்பையின் அழகு

479. ஓடிப் போமி னாடவர்க
ளுயிரையிழவா தோடி யரண்
தேடிக் கொண்மி னென்பனபோற்
சிலம்பு புலம்பும் பதத்தாளை
ஆடற் கதலி யிளந்தண்டி
னழகை யிழக்கும் குறங்காளை
வீடுற் றவரும் விரும்புமெழில்
விளங்கு மல்குற் றடத்தாளை.

ஓடிப் போமின் ஆடவர்கள்; உயிரை இழவாது ஓடி அரண் தேடிக் கொண்மின்; என்பனபோல் சிலம்பு புலம்பும் பதத்தாளை– ஆடல் கதலி இளம்தண்டின் அழகை இழக்கும் குறங்காளை– வீடுஉற்றவரும் விரும்பும் எழில் விளங்கும் அல்குல் தடத்தாளை.

பொ : 'ஆடவர்கள் எல்லாம் ஓடிப்போமின்; இந்த அரம்பை யின் அழகில் மயங்கி உயிரை இழந்துவிடாது ஓடித் தக்க பாதுகாவலான இடத்தைத் தேடிக் கொள்ளுங்கள்; என்று

சொல்வன போலச் சிலம்புகள் ஒலிக்கும் பாதங்களை யுடையவளை-அசைந்து ஆடுகின்ற வாழைத்தண்டின் அழகை இழப்பிக்கும் துடையையுடையவளை சீவன் முத்தர்களும் விரும்பத்தக்க அழகு விளங்கும் அல்குலையுடையவளை.

கு. பதத்தாளை, குறங்காளை, அல்குல் தடத்தாளைக் கண்டு என மேல் ஐம்பத்துநான்காம் செய்யுளில் வரும் சொல்லைக் கொண்டு முடிக்க. அரம்பையின் காலில் அணிந்த சிலம்பினொலிக்குப் பொருள் தற்குறிப்பேற்றமாகக் கூறுவாராய், 'ஓடிப்போமின் ஆடவர்கள், உயிரை இழவாது ஓடி அரண் தேடிக் கொண்மின் என்பனபோல்' என்றார். ''ஊடினீரெல்லாம் உருவிலான்றன் னாணை கூடுமின் என்று குயில் சாற்ற'' (சிலப் - வேனிற்காதை வெண்பா) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். அரம்பை நடக்குங்கால் அவள் தொடைகள் அசைவதை நினைந்து ஆடற்கதலியைக் கூறினார். இளந்தண்டின் அழகை இழக்கும் குறங்காளை என்புழி இழக்கும் என்பது இழப்பிக்கும் குறங்காளை எனப் பிறவினைப் பொருள தாக்குக, வீடுற்றவரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பது· வீடுற்றவர் என்றது சீவன் முத்தரை. 'பாவையை ஆடவர்' கண்டால் அகறலுமுண்டோ? பேடியரன்றே பெற்றியினின்றிடின்' (மணிமேகலை - 3 - 24, 25) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

(கருக)

உந்தியும் இடையும்

480. வனவா சச்சீர் மாதவரும்
வானு ளோரு மற்றெவரும்
மனமா ழுற்று விழுந்தழுந்தும்
வலஞ்சே ருந்திச் சுழியாளைத்
தனமா மலையைத் தாங்குவதொன்
றில்லையாகி னில்லாதென்
றனுமா னத்தா லுண்டாக
வடுக்கு மென்னு மிடையாளை.

வனவாசச் சீர் மாதவரும்
வான் உளோரும் மற்று எவரும்
மனம் மால்உற்று விழுந்து அழுந்தும்
வலஞ்சேர் உந்திச் சுழியாளை—
"தனமாம் மலையைத் தாங்குவது ஒன்று
இல்லை ஆகின் நில்லாது, என்று
அனுமானத்தால் உண்டாக அடுக்கும்"
என்னும் இடையாளை.

பொ: 'வனத்தின்கண் வதிதலையே சிறப்பாகக் கருதுகின்ற பெருந்தவ முனிவரும் விண்ணுலகில் உள்ள தேவர்களும் மற்றும் உள்ள எத்தகையோரும் மனத்தின்கண் ஆசையுற்று விழுந்து அழுந்துகின்ற – வலமாகச் சுழித்துள்ள கொப்பூழாகிய சுழியை யுடையவளை—முலையாகிய மலையைத் தாங்குவதாகிய ஒருறுப்பு இல்லையானால் அம்முலை நில்லாது; ஆதலால் இடையுண்டு; என அனுமான அளவையால் இடை உளதாதல் பொருந்தும் என்று கருதியுணர்தற்குரிய இடையையுடையவளை.

கு: இச்செய்யுளில் அரம்பையின் கொப்பூழ்ச் சிறப்பும் இடையின் சிறுமையும் புலப்படுத்தியவாறு. ஆற்றில் சுழிகள் இருக்கும்; அச்சுழியில் அகப்பட்டவர்கள் மீள முடியாமல் அதன் கண் அழுந்தி மறைவர்; அதுபோல அரம்பையின் உந்திச் சுழியும், மாதவரும் தேவரும் மற்றுள்ள யாவரும் ஆசையுற்று வீழ்தற்குரிய இடமாகச் சொல்லப்பட்டது. (திருவலஞ்சுழியின் நினைப்பினால் இங்கு வலஞ்சேர்உந்திச் சுழி' என்று சொன்னார் போலும்) உந்தி—ஆறு, கொப்பூழ்; அரம்பையின் உந்தி, ஆற்றில் ஏற்படும் சுழிபோல சுழிந்து இருக்கும் அழகைக் கண்டவர்கள் ஆசை மேலிட்டு வருந்துவர் என்பது கருத்து. பெண்டிர்க்கு இடை சிறுத்திருப்பது அழகு என்பர். இதை உளங்கொண்டு இடை காட்சிக்கு எட்டாதது; கருதலளவையால்தான் கருதி உணரமுடியும் என்று கற்பனை செய்கின்றார். கண்ணால் காண முடியாத இடையைக் கருதியுணர் வது எப்படியெனின்? அவ்விடைக்கு மேலிடத்தில் தனங்களாகிய மலைகள் உள்ளன. அவற்றைத் தாங்குவதற்கு இடை என்று ஒருறுப்பு இல்லையானால் அந்தத் தனங்கள் நிற்கவியலாது; அவை நிற்றலின் அவற்றைத் தாங்கும் இடையும் உண்டு' என்று

அனுமான அளவையால் உறுதிசெய்வது. "இட்டிடை யிருக்குந் தன்மை ......கட்பொறி கதுவா; கையில் தொட்ட எற்கு உணரலாம் மற்று உண்டெனும் சொல்லுமில்லை" (கிட்கிந்தா–நாடவிட்ட– 38) என இராமன் சீதையின் இடையைப் பற்றிக் கூறுவது இங்கு ஒப்புநோக்கலாம். (கருஉ)

மார்பாடையும் கழுத்தும் வாயும்

481. பூணிற் பொலிந்து புடைபரந்து
பொங்கியெழுந்த முலையுலகைக்
காணிற் கொல்லு மென்றவற்றின்
கண்ணை மறைத்த துகிலாளைச்
சேணிற் சுடர்சீ ராபரணந்
திகழத் திகழுங் கழுத்தாளை
வாணித் திலத்தி னிரைபதித்து
வைத்த பவள வாயாளை.

பூணில் பொலிந்து புடைபரந்து
பொங்கி எழுந்த முலை, உலகைக்
காணில் கொல்லும் என்று அவற்றின்
கண்ணை மறைத்த துகிலாளை–
சேணில் சுடர் சீர் ஆபரணம்
திகழத்திகழும் கழுத்தாளை–
வாள் நித்திலத்தின் நிரை பதித்து
வைத்த பவள வாயாளை.

பொ: அணிகலன்களால் பொலிவுபெற்றுப் பக்கங்களில் எல்லாம் பரவி மேலே கிளர்ந்து எழுந்துள்ள நகில்கள், உலகத்தைக் கண்டால் கொன்றுவிடும் என்று அவைகளின் கண்ணை மறைத்த ஆடையையுடையவளை – தொலைவில் சென்று ஒளிவீசுகின்ற சிறந்த அணிகலன்கள் விளங்கும் கழுத்தினையுடையவளை – ஒளிவாய்ந்த முத்துக்களின் வரிசை பதித்துவைத்த பவழம் போன்ற வாயினையுடையவளை.

கு: பூணில் என்புழி ஐந்தனுருபாகிய இல் ஏதுப்பொருளது. புடைபரந்து பொங்கியெழுந்த முலைகளைக் கண்டவர்கள் காம மேலீட்டால் இறந்தபடுவார் என்பார், முலைமேலேற்றி, 'உலகைக் காணில் கொல்லும் என்று அவற்றின் கண்ணை மறைத்த துகிலாளை' என்றார். முலைக்காம்பினைக் கண் என்றல் மரபு. அவற்றின் கண்ணை மறைக்காவிட்டால் உலகைக் கண்டு கொன்றுவிடும் என்பது கருத்து. 'கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர், படாஅ முலைமேற் றுகில்' (திருக்குறள்–1087) என்ற குறளும், "இம்மாதர் படாமுலைகளின் மேலிட்ட துகில் அவை கொல்லாமற் காத்தலின் கொல்வதாய மதக்களிற்றின் மேலிட்ட முகபடாத்தினையொக்கும்' கண்ணை மறைத்தல் பற்றிக் கட்படாம் என்றான். துகிலான் மறைத்தல் நாணுடை மகளிர்க்கு இயல்பாகலின், அத்துகிலூடே அவற்றின் வெம்மையும் பெருமையுங் கண்டு இத்துணையாற்ற லுடையன இனியெஞ்ஞான்றும் சாய்வில வெனக் கருதிப் படாமுலை என்றான். உவமை சிறிது மறையாவழி உவை கொல்லும் எனபது தோன்ற நின்றது" என்ற பரிமேலழகர் உரையும், இங்கு ஒப்புநோக்கத்தகும். புடைபரந்து பொங்கி எழுந்த முலை, என்பது, படாமுலை என்பதற்கு விளக்கமாக அமைந்திருத்தல் காணலாம். இனி அவ்வரம்பையின் கழுத்தில் நெடுந் தொலைவு சென்று விளங்கும் அணிகலன்களை அணிந்திருந்தமை கூறினர். 'சேணிற் சுடர் சீராபரணம்' என்றது" "நாவலொடு பெயரிய பொலம்புனை யவரிழைச் சேணிகந்து விளங்கும் செயிர்தீர் மேனி" திருமுரு காற்றுப்படை 18, 19) என்ற அடிகளை அடி யொற்றினவாக விளங்குதல் காணலாம். பவளவாய் என்பது உவமைத் தொகை. நித்திலத்தின் நிரை பதித்து வைத்த பவளவாய் என்றது, முத்துப் போன்ற வரிசையான பற்களைக் கொண்ட சிவந்த வாயினை விளக்கக்கூடிய இல்பொருள் உவமையாகும். (கருரு)

கண் முதலியன

482. நீண்டு பரந்து குழையோடு
நெருங்கி மதர்த்த கண்ணுளைப்
பூண்டு கொலையே புரிசாபப்
புருவத்தாளைப் பூரித்து

மாண்ட மதிபோ னுதலாளை
மலர்த்தா மரைபோன் முகத்தாளை
ஈண்டு மலரு நறும்புகையு
மின்றிக் கமழ்பூங் குழலாளை.

நீண்டு பரந்து குழையோடு
நெருங்கி, மதர்த்த கண்ணுளை
பூண்டு கொலையே புரிசாபப்
புருவத்தாளை - பூரித்து
மாண்ட மதிபோல் நுதலாளை -
மலர்த்தாமரைபோல் முகத்தாளை
ஈண்டு மலரும் நறும்புகையும்
இன்றிக் கமழ்பூங் குழலாளை.

பொ : காதளவு நீண்டு பரவிக் காதிலணிந்த குழையோடு நெருங்கி மதர்த்துள்ள கண்களையுடையவளை-கொலைத் தொழிலையே மேற்கொண்டு புரிகின்ற வில்லைப்போன்ற புருவங்களையுடையவளை-கலைகள் நிறைவுற்றுப் பின்பு தேய்ந்து போன பிறைமதி போன்ற நெற்றியை உடையவளை - தாமரை மலரைப் போன்ற முகத்தையுடையவளை - மாலையாக நெருங்கும் மலரும் நறுமணப் புகையும் இல்லாமலே கமழ்கின்ற பொலிவுமிக்க கூந்தலை உடையவளை.

கு : 'அரம்பையின் கண் நீளமும் அகலமும் மதர்ப்பும் உடையவாக இருந்தன என்றவாறு. குழையோடு நெருங்குதல் என்பது காதிலணிந்த குழையினைத் தாக்குமாறு பார்க்கும் பார்வையள் என்றவாறு. மங்கையர் வதன சீத மதியிரு மருங்குமோடிச் செங்கயல் குழைகள் நாடும் திருமுனைப்பாடி நாடு'' (பெரியபுராணம் -தடுத்தாட்-1) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும்- மதர்த்தல்- குருதி ஓட்டமிக்குப் பெருத்திருத்தல். கொலையே பூண்டு என மாறுக. கொலை செய்தலையே விரதமாகப் பூண்டு என்க. புரி - செய்கின்ற. சாபம் - வில். வில்லினைப் போன்று வளைந்துள்ள புருவங்களை உடையவளை. இனி, பூண்டு என்பதற்கு நாணிபூட்டப் பெற்று' எனப் பொருள் கூறலும் ஆம். பூரித்த மாண்ட மதி

என்றது தேய்மதியை. பூரித்தல் – நிறைதல். மாண்ட – தேய்ந்த. நுதலுக்கு உவமையாக்கியிருத்தலின் நிறைமதி என்றல் பொருந்தாமை காணலாம். பிறைமதி போன்ற சிறுநெற்றியினை என்றவாறு. தாமரை மலர்போல் என மாறுக. இயற்கை மணமுடைய கூந்தலாள் என்பார், 'ஈண்டு மலரும் நறும்புகையும் இன்றிக் கமழ்பூங் குழலாளை' என்றார். செறியெயிற்றரிவை கூந்தலி னறியவு முளவோ நீயறியும் பூவே'' (குறுந் – 1) என்பது இங்கு நினையத் தகும். பெண்டிர் கூந்தலுக்கு மலராலும் அகிற்புகையாலும் மணமூட்டுதல் மரபு. (கஙச)

## இராவணனது சிந்தனை

### வேறு

483. கண்டு மனமகிழ்ந்து காதற் கடல்பெருக
எண்டிசையும் வென்ற விராவணனார் தாநிற்ப
ஒண்டிறன் மார னுரத்தோர் கணையுய்ப்பத்
திண்டிற லோய்ந்தாங் கவனினைய சிந்தித்தான்.

கண்டு மணம் மகிழ்ந்து காதற் கடல்பெருக
எண்திசையும் வென்ற இராவணனார் தாம் நிற்ப,
ஒண்திறல் மாரன் உரத்து ஓர்கணை உய்ப்ப,
திண்திறல் ஓய்ந்து ஆங்கு அவன் இனைய சிந்தித்தான்.

பொ: (அத்தகைய அரம்பையைக்) கண்டு உளம் மகிழ்ந்து உள்ளத்தில் காதலாகிய கடல் பெருகாநிற்க, எட்டுத்திசைகளையும் வென்ற இராவணனார் தாம் நின்றுகொண்டிருக்க, ஒளிமிக்க திறமையுடைய மன்மதன், அவ்விராவணன் மார்பில் ஒருமலர்க் கணையைச் செலுத்தினனாக, இராவணன் திண்மை மிக்க தன் திறமையெல்லாம் குறைந்து அவ்விடத்து இத்தன்மையானவற்றைச் சிந்தித்தான்.

கு: சிலம்பு புலம்பும் பதத்தாளை என்பது முதல், கமழ் பூங்குழலாளை என்பது ஈறாகக் குறித்த சிறப்பினையுடைய அரம்பையைக் கண்டு என்றவாறு. பதத்தாளை முதலிய பன்னிரண்டு

தொடரில் வந்த இரண்டனுருபுகள் இச்செய்யுளில் வந்த 'கண்டு என்னும் வினையைக் கொண்டு முடிந்தன. 149 ஆம் செய்யுளில் வந்த 'அரம்பைதனைக் கண்டான்' என்பதனையே இங்குக் 'கண்டு' என அநுவதித்துக் கூறியவாறு. காதற்கடல் பெருக இராவணனுர் தாம் நிற்ப, மாரன் ஓர்கணை உய்ப்ப, அவன் திறலோய்ந்து இனைய சிந்தித்தான் என முடிக்க. இராவணன் எண்டிசையும் வென்றவனுக இருந்தும் மாரனை வெல்ல இயலாது, திண்டிறல் ஓய்ந்தான் என்பது கூறிக் காமனுடைய வல்மையைப் புலப்படுத்தியவாறு. இச்செய்யுள் அகப் பொருட்டுறையில் காட்சி எனப் படும். (கருரு)

ஐயம் 156, 157

484. புண்டிரிக மாதோ
புனமயிலோ பொற்கொடியோ
அண்டர் கடைந்த
வமிழ்தோ வதன்சுவையோ
தண்டதர னிந்தச்
சகத்தினைத்தா னீடழிப்பான்
கொண்டதொரு கோலமோ
கோலத்தின் கொள்கலமோ.

புண்டரிக மாதோ? புனமயிலோ? பொற்கொடியோ?
அண்டர் கடைந்த அமிழ்தோ? அதன் சுவையோ?
தண்டதரன் இந்தச் சகத்தினைத்தான் ஈடு அழிப்பான்.
கொண்டது ஒரு கோலமோ? கோலத்தின் கொள்கலமோ?

பொ: செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகளோ? அன்றிப் புனத்தின்கண் உள்ள புதுவகையான மயிலோ? அல்லது, காமவல்லி என்னும் பொன்னிறப் பூங்கொடியோ?; அல்லது,

தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்தெடுத்த தேவ அமிழ்தமோ? அல்லது, அவ்வமிழ்தின் சுவைதானோ? தண்டாயுதத்தைத் தாங்கியுள்ள இயமன்தான் இந்த உலகத்து ஆடவரை வலிமை அழிப்பதற்காக மேற்கொண்ட வஞ்சகப் பெண்வடிவமோ? அல்லது, அழகினைப் பெய்துவைத்துள்ள பாத்திரமோ?

கு: அரம்பையின் அழகைக் கண்ட இராவணன் அவளை முதற்கண் திருமகளாகவே எண்ணினமை புலப்பட, 'புண்டரிக மாதோ' எனத் தனக்குள் வினவிக்கொண்டான். ஒகாரங்கள் ஏழும் ஐயவினாப்பொருளில் வந்தன. புனமயிலோ, என்றது, பறவையோ? என்னும் பொருளதாகக் கொள்ளாமல், புனத்திலுள்ள புதுமையான மயிலோ என்றதாகக் கொள்க. புதுமை பெண்வடிவங் கொண்டுள்ளமை. 'அணங்குகொ லாய் மயில் கொல்லோ கனங்குழை, மாதர்கொன் மாலுமெ னெஞ்சு'' (திருக்குறள்-1081) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். 'ஆய்மயில்: படைத்தோன் விசேடமாக ஆய்ந்து படைத்த மயில்; மயிற்சாதியுள் தெரிந்தெடுத்த மயிலென்றுமாம்' எனவும், சாயலும், பொழில் வயினிற்றலும் பற்றி ஆய்மயில் கொலென்றும், கூறினன் எனவும் பரிமேலழகர் உரைத்த உரைவிசேடம் இங்கு நினையத்தகும். தண்டதரன் – இயமன். தண்டாயுதத்தை தாங்கியவன் என்னும் காரணம்பற்றியது. பண்டறியேன் கூற்றென்பதனை இனி அறிந்தேன் பெண்டகையாற் பேரமர்க் கட்டு'' (1083) என்ற குறளும், 'வெறுப்பினல், வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங் கொல்' (கலி-56–9) என்ற கலித்தொகையடியும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். சகத்தினை எனப் பொதுவகையாற் கூறியிருப்பினும் ஆடவர் உலகத்தை என ஏற்புழிக் கோடல் என்ற உத்தியாற் கொள்க. ஈடு – வலிமை. கோலத்தின் கொள்கலமோ? என்றபடி கோலம் – அழகு. (கருசு)

485. விண்ணோ ருலகெல்லாம்
வெற்றவெறும் பாழாக்கி
மண்ணோரி லென்னை
வழியடிமை கொள்ளவந்த

பெண்ணே யான்செய்த
பெருந்தவத்தின் பேறேவென்
கண்ணே கனகண்ணே
காமத்தின் றீங்கனியோ.

விண்ணோர் உலகு எல்லாம்
வெற்றவெறும் பாழ் ஆக்கி,
மண்ணோரில் என்னை வழி
அடிமை, கொள்ள வந்த
பெண்ணோ? யான் செய்த
பெருந்தவத்தின் பேறோ? என்-
கண்ணோ? கனை கண்ணோ?
காமத்தின் தீங்கனியோ?

பொ : (தான் இல்லாமையால்) விண்ணவர் உலகம் முழுவதும் பெரும்பாழ் ஆகுமாறு செய்துவிட்டு, மண்ணுலுகத்தில் வாழ்பவர்களில் என்னை வழிவழியர்க அடிமைகொள்ளுதற்காக வந்த பெண்ணோ? அல்லது, யான் செய்த பெரிய தவத்தினுல் விளைந்த பெண்ணோ? அல்லது என் கண் போன்று சிறப்பும் உரிமையும், உடையவளோ? அல்லது எனக்குப் பற்றுக் கோடாக இருப்பவளோ? அல்லது காமம் என்னும் தருவில் கனிந்த தித்திக்கும் கனியோ?

கு : ஐயத்தில் இரண்டு அல்லது மூன்று பொருளைச் சொல்லி இவற்றில் இவ்வுரு எதுவோ என்று மொழிவதாகவே வருவது மரபு. இராவணன் அரம்பையை நோக்கி மேலைச் செய்யுளில் ஏழுபொருளையும் இச்செய்யுளில் நான்கு பொருளையும் சொல்லிப் பதினொரு பொருளில் இவள் யாரே எனப் புனைந்துரை வகையில் புகல்கின்றுன். பாழ் என்பது ஒருபொருளும் இல்லாத இடத்திற்குப் பெயர்; அதனை விளக்க வெறும் பாழ் எனவும் அதன் மிகுதியை விளக்க வெற்ற வெறும்பாழ், எனவும் இங்குக் கூறியவாறு: வருகிறவள் விண்ணுலக மாதாகிய அரம்பை என்பதை அறிந்து கொண்டவனுகலின், விண்ணோருலகெல்லாம் 'வெற்றவெறும் பாழாக்கி' என்றுன். அரம்பை விண்ணுலகம் தான் இல்லாமை

யால் பெரும் பாழாகத் தோன்றுமாறு செய்துவிட்டு மண்ணுலகிற்குத் தன்னை வழியடிமை கொள்ளுதற்காகவே வந்தாளோ என்று இராவணன் ஐயுற்ருன் என்க. இராவணன் தான் செய்த தவத்தின் பயனே இவ்வடிவு தாங்கி வந்ததோ? அல்லது தன் கண்ணே இவ்வடிவு தாங்கி வந்ததோ? என ஐயுற்று வியந்தவாறு. கனை கண்-பற்றுக்கோடு. காமவல்லிக் கொடியில் கனிந்த தீங்கனியோ எனப் பொருள் கூறலும் ஆம். (௪௫௭)

இராவணன் அவளை யாரென வினவுதல்

486. ஆரோவென் றறிகிலேனென்றவளை வந்தடர்ந்து
காரோதி பேரழகைக்கண்ணிருப தாற்கவர்ந்துன்
ஊரே துனக்கிங் குறவேவ ருன்னுடைய
பேரேது பெண்ணமிழ்தே பேசென் றவன்பேச.

ஆரோ? என்று அறிகிலேன்; என்று அவளை வந்துஅடர்ந்து,
கார் ஓதி பேரழகைக் கண் இருபதாற் கவர்ந்து 'உன்
ஊர் எது? உனக்கு இங்கு உறவு ஏவர்? உன்னுடைய
பேர் ஏது?, பெண் அமிழ்தே பேசு' என்று அவன்பேச.

பொ : இவள் யரர் என்று அறியேன்; என்று கூறிக்கொண்டு அந்த அரம்பையை நெருங்கி, கரிய கூந்தலை உடைய அவள்தன் பேரழகைத்தன் இருபது கண்களால் கவர்ந்து பருகி, பெண்களுக்குள் அமுதம் போன்றவளே! உன் ஊர் எது? இங்கு உன் உறவாவார் யார்? உன்னுடைய பெயர் எது? சொல்லுவாயாக' என்று இராவணன் பேச;

கு : ஆரோ என்புழி ஒகாரம் அசைநிலை. ஆர் என்று அறிகிலேன் என்க. அடர்தல் – நெருங்குதல். காரோதி என்பது உவமைத் தொகைப்புறத்து பிறந்த அன்மொழித் தொகையாய் அரம்பையை யுணர்த்தியது. மேகம் போன்ற கூந்தலையுடைய அரம்பையின் பேரழகை இருபது கண்களாலும் விரும்பிப் பார்த்து என்றவாறு. இருகண்களேயுடைய மற்றவரினும் இருபது கண்

களை இயல்பாகப் பெற்றவன், அக்கண்கள் பெற்ற பயனை நன்கு அனுபவித்தான் என்பார், கண்ணிருபதாற் கவர்ந்துஎன்ருர் . கரு அ)

அரம்பை தான் யார் என விளக்கல்
வேறு

487. ஆயவ ளென்பே ரரம்பை யளகைக்கு
நாயகன் மைந்த னளகூ பரனென்னும்
தூயவன் னென்பதி யென்ருங் கவள் சொல்லத்
தீய வரக்கன் சிரித்திவை செப்பினன்.

ஆயவள் ''என்பேர் அரம்பை, அளகைக்கு
நாயகன் மைந்தன் நளகூபரன் என்னும்
தூயவன் என்பதி'' என்று ஆங்குஅவள் சொல்ல,
தீய அரக்கன் சிரித்து இவை செப்பினன்.

பொ : (வந்த) அவள், என்பேர் அரம்பை; அளகாபுரிக்குத் தலைவனாகிய குபேரனது மகன் நளகூபரன் என்ற பெயரை யுடைய தூயோன் என் கணவன்; என்று அவள் சொல்ல, அதைக் கேட்ட தீயோனாகிய இராவணன் சிரித்துக் கொண்டு இவற்றைச் சொன்னான்.

கு : ஊரும்பேரும் உறவும் கேட்ட இராவணனுக்கு வந்த நங்கை 'என்பேர் அரம்பை' என்று சொன்னவுடன் பொன்னுலகத் தவள் என்பது புலப்படுத்தியதனால் ஊரும் உடன் கூறியதா யிற்று; என்னை? அரம்பை அமராவதியாகிய பொன்னுலகத்தன்றிப் பிறிதிடத்தில் இன்மையின் என்க. உறவு எவர்? என்ற வினவுக்கு விடையாக 'நளகூபரன் என்னும் தூயவன் என்பதி' என்று கூறினாள். அளகைக்கு நாயகன் மைந்தன் நளகூபரன் என்றது, இராவணனுக்கு அண்ணன் மகனே நளகூபரன், என்ற உறவும் அவனுக்குப் புலப்படுத்தவேண்டி. பிறப்பு, குடிமை முதலியவற் றால் தூயவன் நளகூபரன் என்பதோடு யார்க்கும் பகையாகத் தீமை புரியாதவன் என்ற தூய பண்பும் புலப்படுத்தியவாறு. இராவணன் என்னாது 'தீய அரக்கன்' என ஆசிரியர் கூறியது

தன் மகன் மனைவி என்பது அறிந்தும், அவன் அவள் மாட்டுத் தகாதன செய்யத் தலைப்பட்ட திமை நினைந்து. தலைபத்துடைமை யான் இவன் இராவணன் என்பதை அரம்பை அறிந்து கொண் டாள் எனக்கொள்க. ஆங்கு – அசைநிலை. (கடுரு)

இராவணன் இயம்பியது

488. தேவரே யாதி
திரிபுவனத் துள்ளோர்கள்
யாவரே யாயினு
மெதிர்ந்தோரை வசிகரித்துப்
போவதே யல்லாற்
பொதுமகளி ராந்தெய்வப்
பாவையர்க்கு முண்டோ
பதியென் றவன்பகர்ந்தான்.

**தேவரே யாதி திரிபுவனத்து உள்ளோர்கள்**
**யாவரே ஆயினும், எதிர்ந்தோரை வசிகரித்துப்**
**போவதே அல்லால், பொதுமகளிராம் தெய்வப்**
**பாவையர்க்கும் உண்டோபதி? என்று அவன் பகர்ந்தான்.**

**பொ :** மூவுலகங்களிலும் உள்ளோர்களில் தேவர் முதலான யாவரே ஆயினும், எதிர்ப்பட்டவர்களை மனங்கவரச் செய்து இன்ப மூட்டிப் போவது அன்றிப் பொதுமகளிராகிய நும்போன்ற தெய்வப் பெண்டிர்க்குக் கணவனும் உண்டோ? என்று இராவணன் இகழ்ந்து சொல்ல.

**கு :** அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி என்ற நால்வரும் தேவதாசியர்; இந்திரசபையில் நடனமாடி மகிழ்ச்சி யூட்டுபவர்கள் ஆதலின், இராவணன் இங்ஙனம் கூறினன். திரி புவனம் என்றது, விண்ணுலகம் மண்ணுலகம் பாதாளஉலகம் என்ற மூன்றையும், மூவுலகத்தோர்க்கும் பொதுமகளிராய் இருப்ப தன்றி, ஒருவன்றனுக்கே உரிமை பூண்டொழுகும் கற்பொழுக்க

முடையராதல் இல்லையே என்பான், 'பொது மகளிராந் தெய்வப் பாவையர்க்கு முண்டோ பதி' என்று வினவினன். (கசுஎ)

அரம்பையின் அமைதியுரை

489. போரார் வேற்கையாய்
பொதுமகளி ராகியவக்
காரார் குழலியரைக்
காதலித்துக் கைக்கொண்டோர்
யாரேனு மாக
வவரளவு தாமொன்றும்
பாராரப் பாவையர்க
டம்பதியாய்க் கொள்வாரால்.

போர்ஆர் வேல் கையாய்; பொதுமகளிர் ஆகிய அக்
கார்ஆர் குழலியரைக் காதலித்துக் கைக்கொண்டோர்
யாரேனும் ஆக அவரளவு தாம் ஒன்றும்
பாரார் அப்பாவையர்கள்; தம்பதியாய்க் கொள்வரால்.

பொ: போர் ஆற்றல் நிறைந்த வேலைத்தாங்கிய கையை யுடையவனே! பொதுமகளிர் ஆகிய அந்தக்கரு நிறம்பொருந்திய கூந்தலையுடையவர்களைக் காதலித்துக் கைக்கொண்டவர்கள் யாரா யிருந்தாலும் இருக்கட்டும், அவர்தம் அளவு ஒன்றினையும் தாம் பாராமல் அப்பெண்டிர், அவரைத் தம் கொழுநராகக் கொள்வார்கள்.

கு: பொதுமகளிர்க்குப் பதியாவார் இல் என்ற கருத்துப்படப் பேசிய இராவணனுக்கு விடையாக அரம்பை, பொதுமகளிர்க்கும் கணவருண்டு என்பதை விளக்குகின்ருள். தம்மைக் காதலித்துக் கைக் கொண்டவரையே கணவராகக் கொள்ளுதல் அப்பொது மகளிரின் இயல்பு என்றவாறு 'அவரளவுதாம் ஒன்றும் பாரார்' என்றது, அவர் வேறுமனைவியரையுடையவரா? என்ருற் போன்ற அவர் குடும்ப அளவினைப்பாராமல் என்றவாறு. போரார் வேற்கை யாய்! என்ற விளி, இராவணனுடைய வீரத்தையும் கொடுமையை

யும் புலப்படுத்தி அவ்வேற்கைக்குப் பயந்து உடன்படாதவள் அரம்பை என்பதையும் விளக்கி நின்றது. பதி – கணவன். (கசுக)

490. மெய்க்கொண்ட வுள்ளத்து
மேலோரே யாயிடினும்
பொய்க் கொண்ட சிந்தையர்க
ளேனும் பொதுவாய
மய்க் கொண்ட கண்ணார்
மனைவியரா கத்தம்மைக்
கய்க்கொண் டிருந்தார்க்குத்
தப்பல் கடனன்றே.

மெய்க்கொண்ட உள்ளத்து மேலோரே யாயிடினும்
பொய்க்கொண்ட சிந்தையர்களேனும், பொதுவாய
மய்க்கொண்ட கண்ணார் மனைவியராகத் தம்மைக்
கய்க் கொண்டிருந்தார்க்குத் தப்பல் கடன் அன்றால்.

பொ : பொது மகளிராகிய மை தீட்டிய கண்ணையுடைய பெண்டிர், உண்மையான உள்ளத்தையுடைய மேலோர்களாயிருந்தாலும், அன்றிப் பொய்மைகொண்ட சிந்தையினையுடைய கீழ் மக்களாக இருந்தாலும், தம்மைக்காதலியராகக் கைகொண்டிருந்தவர்க்கு உரிமையாதலினின்றும் தப்பிப் பிறர்வயின் சேர்தல் முறைமையாகாது

கு : மய், கய் என்பன, எதுகை நோக்கிப் போலியாக வந்தன; மை, கை என்றலே உண்மை வடிவு. மேலோராயினும் என மேல் வந்தமையால் கீழ் மக்கள் என்பது வருவிக்கப்பட்டது; ஒன்று நின்றே ஏனையது முடிக்கும் என்பது இலக்கணமாகலின், பரிமேலழகர் உரைக்குறிப்புப் (138ஆவது குறளுரையில்) பார்க்க, பொதுமகளிர் மேலோராயினும் கீழோராயினும் தம்மைக் கைக் கொண்டிருந்தாரை விடுத்து வேறொருவரைச் சேரார் என்பது விளக்கியவாறு, கைக்கொண்டிருந்தார்க்குத் தப்பல்' என்றது, அவரைவிடுத்துப் பிறரை விரும்புதல் என்னும் பொருளது. (கசுஉ)

## இராவணன் செய்கையும் அரம்பை நடுக்கமும்

491. என்றரம்பை கூற
விராவணன் மேல்விழுந்து
சென்றவளைப் புல்லப்
புகுமளவிற் சேயிழையாள்
நின்று நடுங்கி,
'நெறியல்லாதன செய்யேல்
குன்றனைய தோளாய்!
எனத் தொழுது கூறுவாள்.

என்று அரம்பை கூற இராவணன் மேல் விழுந்து
சென்று, அவளைப் புல்லப்புகும் அளவில், சேயிழையாள்,
நின்று நடுங்கி, நெறியல்லாதன செய்யேல்;
குன்று அனைய தோளாய்! எனத் தொழுது கூறுவாள்.

பொ: என்று அரம்பை சொல்ல, அப்பொழுதே இராவணன் சென்று மேல்விழுந்து அவ்வரம்பையை அணைக்கப் புகுமளவில் செம்மையான அணிகலன்களையுடையவளாகிய அரம்பை செயலற்று நின்று, நடுங்கிக்கொண்டு, 'குன்றுபோன்ற தோள்களையுடையவனே! நெறியல்லாதனவற்றைச் செய்யாதே! என்று அவனடி தொழுது கூறுவாளானாள்.

கு: அரம்பை கூறிய நெறியான சொற்கள் தன் செவியில் விழுந்து கொண்டிருக்கும்போதே இராவணன் நெருங்கிச் சென்று மேல்விழுந்து அவளைப் புணரப்புகுந்தான் என அவன் கொடுமை புலப்படுத்தியவாறு. 'குன்றனைய தோளாய்' என்ற விளி, அத் தோள்வலிமைக்கு எதிர்நிற்கும் ஆற்றல் இல்லாதேனைக் காப்பாற்று என்னும் குறிப்புத் தோன்ற நின்றது. 'நெறியில்லாதன' என்றது பிறனுக்குரியவளைத் தனக்குரியவளாக்குதலை. சென்று மேல் விழுந்து என மாறிக் கூட்டுக.

(கசுரு)

நளகூபரன் நின்மைந்தன் ஆதலின்
நீ என் குரு என அரம்பை கூறுதல்

492. சன்மங் கடிந்த புலத்தியனுந் தாபதன்றன்
மன்மைந்தன் மைந்தன் றனதன் வயிற்றுதித்த
நன்மைந்த னென்கோ னளகூ பரன்முறையால்
நின்மைந்த னுதலினு னீயென் குருவென்ருள்.

'சன்மம் கடிந்த புலத்தியனும் தாபதன் தன்
மன்மைந்தன் மைந்தன் தனதன் வயிற்று உதித்த
நன்மைந்தன் எங்கோன் நளகூபரன், முறையால்
நின்மைந்தன் ஆதலினுல் நீ என்குரு என்ருள்.'

பொ: பிறவி நீக்கிய புலத்தியனுகிய தவமுனிவனுக்கு நிலை பேறுடைய மைந்தனுகிய விச்சிரவசுவின் மகன் குபேரன்; அக் குபேரன் வயிற்றில் பிறந்த நல்ல மைந்தன் என் தலைவனுகிய நளகூபரன்; (அவன் நின்தமையன் மகனுதலின்) முறையால் நின் மைந்தனே ஆவான், ஆதலின் நீ, என் குரு ஆவாய் என்று கூறினுள்.

கு: சன்மம் – பிறவி. தவத்தின் சிறப்பால் இனிப் பிறவாத பெருநிலை பெற்றவன் புலத்தியன் என்பார், 'சன்மங் கடிந்த புலத் தியனுந் தாபதன்' என்ருர். கடிதல் – நீக்குதல். புலத்தியன் மன்மைந்தன் என்றது விச்சிரவசுவினை. விச்சிரவசுவின் மைந்த னுகிய தனதன் என்க. தனதன் – குபேரன். விச்சிரவசு, பரத்து வாசமுனிவன் மகளை மணந்து குபேரனைப் பெற்ருன்; பின்பு சுமாலி என்னும் அரக்கன் மகளான கேகசியைக் கலந்து இராவணன் முதலிய நால்வரைப் பெற்ருன். எனவே, குபேரனும் இராவணனும் ஒருதந்தைக்கு இருதாயர் வழிப் பிறந்தவராவர். குபேரன் மகனுகிய நளகூபரன் மனைவி அரம்பைக்கு இராவணன் மாமனுர் முறையினன். மாமனுரைக் குருவென்றது, தன்கணவனுக் குக் குரவனுதல் நினைந்து. குரவன், குரு ஒருபொருட்சொற்கள். அண்ணனுக்கு மருமகள், இராவணன் தனக்கும் மருமகளாம் முறையினளே என்பது விளக்கியவாறு. தான் வணங்கும் குரு

வாக உள்ள இராவணன் தன்னை விரும்புதல் முறையன்று என்பதை அரம்பை விளக்கியவாறு. (கசுரு)

இராவணன் வலிதிற் புணர்தல்

493. அரிவை யிவைவிளம்ப
வாற்ரு தநங்கன்றன்
தெரிகணைகள் பாயத்தன்
சிந்தை தடுமாறி
ஒருதலையா லின்ஞது
காமமென வுன்ஞன்
புரிகுழலைத் தான்பற்றிப்
போகவிடந்தானு ண்டான்.

அரிவை இவை விளம்ப ஆற்ருது அநங்கன் தன்
தெரிகணைகள் பாயத் தன் சிந்தை தடுமாறி,
ஒருதலையால் இன்ஞது காமம் என உன்ஞன்,
புரிகுழலைத் தான்பற்றிப் போகவிடம் தான் உண்டான்.

பொ: அரம்பை இவற்றைச் சொல்லவும் இராவணன் மன்மதன் தெரிந்து எய்த அம்புகள் பாய ஆற்ருமல் தன் சிந்தை தடுமாறிக் காமம் (இருதலையிலும் இல்லாமல்) ஒருதலையில் இருப்பின் இன்ஞததாகும் என்று எண்ஞதவனய்ப் பின்னிய கூந்தலையுடைய அந்த அரம்பையைப் பற்றிப் போகமாகிய நஞ்சினை நுகர்ந்தான்.

கு: அரிவை என்பது பருவப் பெயராகாமல் பெண்டு என்னும் அளவினதாய் நின்றது. அநங்கன் – உடம்பு இல்லாத மன்மதன். தெரிகணை – ஆராய்ந்து எய்த அம்பு. கணைகள் பாய ஆற்ருது சிந்தை தடுமாறி என இயையும். காம உணர்ச்சி இன்பந்தருவது, தலைவன் தலைவி என்ற இருவரிடம் ஒப்ப இருந்துழியே என்பதையும் அவ்விருவரில் ஒருவரிடம் அவ்வுணர்ச்சியிருப்பின் துன்பமே

தரும் என்பதையும் இராவணன் அறிந்திருந்தும் இப்போது அதனை நினையாது, தன்னை விரும்பாத அரம்பையைப் பற்றி வற்புறுத்திப் புணர்ந்தான் என்பார், 'ஒருதலையால் இன்னது காமம்' என உன்னுன், புரிகுழலைத் தான்பற்றிப் போகவிடம் தான் உண்டான்' என்ருர். இவ்விடத்து, ''ஒருதலையா னின்னது காமங்காப் போல, இருதலையானு மினிது' (திருக்குறள் - 1196) என்ற குறட் கருத்து இடம் பெற்றிருத்தல் காணலாம். இராவணன் போகம் என்று கருதி நுகர்ந்த இன்பமே பின்பு அவன் அழிவிற்குக் காரணமாய் நின்றமை நினைந்து, போக விடம்தான் உண்டான்' என்ருர். விடம் - நஞ்சு. ஒருதலை - ஒருபக்கம். இராவணன் அரம்பை என்ற இருவரில் இராவணன் என்ற ஒருபக்கத்தில் காமவிருப்பம் மிக்கு, அரம்பை யென்ற மற்ரெரு பக்கத்தில் அவ்வுணர்வு இல்லாதிருக்கவும் வற்புறுத்திச் சேர்ந்தமையால் காமம் போக மாகாது நஞ்சாயிற்று எனவும் ஆம். (கசூ௫)

அரம்பை இராவணனைச் சபித்தல்

494. வந்தி யாகநீ மாநில மாதர்தம்
சிந்தை யாலன்றி யாவரைத் தீண்டினும்
கந்த வார்குழ லாள்கற் பெரியினுல்
வெந்து வீழ்தி யென் றேகினள் விம்மினுள்.

வந்தி யாக நீ மாநில மாதர்தம்
சிந்தையால் அன்றி யாவரைத் தீண்டினும்
கந்த வார்குழலார் கற்பு எரியினுல்
வெந்து வீழ்தி, என்று ஏகினள் விம்மினுள்.

பொ: கட்டாயப் படுத்துவனுக நீ இப்பெரிய நிலத்திலுள்ள பெண்டிர்தம் சிந்தையுடன்பாட்டாலன்றி யாரைத் தொட்டாலும், மணமிக்க நீண்ட கூந்தலையுடைய அப்பெண்டிர்தம் கற்பு என்கின்ற தீயினுல் வெந்து விழ்வாயாக என்று சபித்துவிட்டுத் தேம்பிக்கொண்டு சென்ருள்.

கு: வந்தி-கட்டாயப்படுத்துபவன். சிந்தையாலன்றி என்பது சிந்தையுடன்பாட்டாலன்றி என்னும் பொருளது. கந்தம் - மணம்

கந்தவார்குழலார் என்பது சுட்டின் பொருளதாய் நின்றது. யாவரைத் தீண்டினும் அவர்தம் கற்பு எரியினால் என்பதே பொருள். கற்பாகிய எரி என்பது உருவகம். கற்பினைக் கனலாக்கிக் கூறுதல் மரபு. ''விண்ணும் மண்ணும் விரிந்த போரரக்க ரென்னும், கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கண்ணிற்கண்டாள்'' (சூர்ப்பணகை - 58) என்பது காணலாம். இச்செய்யுள் சில சுவடிகளில் இல்லை. வான்மீகத்தினும் அரம்பை இராவணனைச் சபித்ததாக இல்லை. (கசுசு)

இராவணன் செய்ததை நளகூபரன் அறிதல்

495. மின்னனையாள் சால
வெருவி விரைந்தேகித்
தன்னுடைய காதலர்க்குத்
தான்புகுந்த வாறுரைப்ப
அன்னவனு மோகத்தி
ளுயிழையைத் தன்வலியால்
தென்னிலங்கை மன்னவன்றான்
செய்தபிழை யுட்டெளிந்தான்.

மின் அனையாள் சால வெருவி விரைந்து ஏகி,
தன்னுடைய காதலற்குத் தான் புகுந்தவாறு உரைப்ப
அன்னவனும், மோகத்தின் ஆயிழையைத் தன்வலியால்
தென்இலங்கை மன்னவன்தான் செய்த பிழை, உள்தெளிந்தான்.

பொ: மின்னலைப்போன்ற ஒளியுடம்பையுடைய அரம்பை, பெரிதும் அஞ்சி, விரைந்து சென்று, தன் காதலனாகிய நளகூபரனுக்கு நிகழ்ந்ததை நிகழ்ந்தபடியே சொல்ல, மோகத்தால் இராவணன் அரம்பையைத் தன் வலிமையால் வற்புறுத்திச் செய்த பிழையை அந்நளகூபரனும் உள்ளத்தே தெளிந்தான்.

கு: காதலன் என்றது நளகூபரனை. அன்னவனும் உள் தெளிந்தான் என இயையும். மோகம் - பெண்ணாசை. ஆயிழை,

ஆராய்ந்தெடுத்த அணிகலனையணிந்தவள் என்ற பொருளையுடைய வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (௧௬௭)

நளகூபரன் இராவணனைச் சபித்தல்

496. நல்லார் புகழு
நளகூ பரனொருவன்
இல்லாளைத் தேராது
தீண்டி லிராவணனும்
பொல்லா வொழுக்கத்தான்
பொன்முடிக ளோடுதலை
எல்லாம் பொடியாகி
வீழ்கவெனச் சபித்தான்.

நல்லார் புகழும் நளகூ பரன், 'ஒருவன்
இல்லாளைத் தேராது தீண்டில் இராவணனும்
பொல்லா ஒழுக்கத்தான் பொன் முடிகளோடு தலை
எல்லாம் பொடி ஆகி வீழ்க' எனச் சபித்தான்.

பொ: நல்லோர் எல்லாம் புகழ்கின்ற சிறப்பினனாகிய நளகூபரன், "இனி, பிறன் ஒருவன் மனையாளை அவள் உள்ளத்தை ஆராயாது தீண்டினால் இராவணனாகிய கெட்ட ஒழுக்கத்தை யுடையோன் தன் பொன்னாலியன்ற முடிகளோடு தலைகள் எல்லாம் பிளந்து பொடியாகி வீழ்வானாக என்று சாபம் கொடுத்தான்.

கு: சாபம் கொடுக்கத்தக்க ஆற்றலுடைமை புலப்பட 'நல்லார் புகழும் நளகூபரன்' என்று சிறப்பித்தார். ஒருவன் இல்லாளை யென்றது பிறனொருவன் மனையாளை என்னும் பொருளது. 'எனைத் துணைய ராயினு மென்னாந் தினைத்துணையும் தேரான் பிறனில் புகல்' (திருக்குறள்-144) என்பது இங்கு நினைக்கத்தகும். தேராது என்பது அவள் உள்ளத்தை ஆராயாது என்றும் தன்பிழையை ஓராது என்றும் பொருள்படும். இங்கு இருபொருளும் ஏற்கும். பொல்லா ஒழுக்கம் தீயொழுக்கம். தீண்டில் தலையெல்லாம்

பொடியாகி வீழ்க என்றது. இனி அத்தகைய தீமை அவன்பால் நிகழாமை தடுத்தவாறு. (கசு அ)

## இராவணன் விரகதாபம்

497. கோகனக மாதனைய கொம்பு தனைப்பிரிந்து
போக நெடும்பொழுது போனவழி பார்த்திருந்து
சோக முறுமனத்தன் றூயவணை மீதேறி,
வேக மடங்கு களிறனையான் வெய் துயிர்த்தான்.

கோகனக மாது அனைய கொம்பு தனைப்பிரிந்து
போக, நெடும்பொழுது போனவழி பார்த்திருந்து
சோகம் உறும்மனத்தன் தூய அணைமீது ஏறி,
வேகம் அடங்கு களிறு அனையான் வெய்துயிர்த்தான்.

பொ: செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளை ஒத்த அரம்பையாகிய பூங்கொம்பு, தன்னைப் பிரிந்துபோக, அவள் போன வழியை நெடிது நேரம் பார்த்திருந்து பிரிவாற்ருது சோகம் கொண்டமனத்தனுகிய இராவணன், தூயபஞ்சணையின்மேல் ஏறிப் படுத்துக்கொண்டு, மதவேகம் அடங்கிய களிறுபோன்றவனாய் வெப்பமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தான்.

கு: கோகனகம் – தாமரை. கொம்பு என்றது, உவமை ஆகு பெயராய் அரம்பையை யுணர்த்தியது. இராவணன் பிரிவாற்ருது பெரிதும் வருந்துதற்கு காரணம் அரம்பையின் பேரழகே என்பது புலப்பட, 'கோகன மாதனைய கொம்புதனைப் பிரிந்து' என்ருர். உறக்கம் மிகுதற்குரிய நல்லணை என்பார். 'தூயவணை' எனச் சிறப்பித்தார். அத்தகைய அணையில் படுத்தும் உறக்கமின்றிப் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தான் என்றது, அவன் படும் பிரிவாற்ருத்துயரை புலப்படுத்தியதாகும். (கசுகூ)

498. நீடு மதிய நிலாவலையை வீசியிட
ஓடு மிடங்காணு னெளிப்பிடமு மொன்றின்றி

வாடிய சிந்தை மதிளிலங்கை மன்னவனைக்
கோடிய வின்மதனன் கொல்லத் தொடங்கினான்.

நீடும் மதியம் நிலா அலையை வீசியிட,
ஓடும் இடம் காணான்; ஒளிப்பிடமும் ஒன்று இன்றி,
வாடிய சிந்தை மதிள் இலங்கை மன்னவனைக்
கோடிய வில் மதனன் கொல்லத் தொடங்கினான்.

பொ : நெடுந்தொலைவில் உள்ள சந்திரன் நிலாவாகிய வலையை விச, அவ்வலைக்குத் தப்பி ஓடுதற்குரிய இடமும் காணாதவனாய், ஒளிந்துகொள்வதற்குரிய இடமும் ஒன்றும் இல்லாமையால் வாடிய மனத்தையுடைய, மதில்சூழ்ந்த இலங்கை வேந்தனாகிய இராவணனை, வளைந்த கரும்பு வில்லையேந்திய மன்மதன் கொல்லத் தொடங்கினான்.

கு : நெடு மதியம் என்றது, விண்ணில் நெடுந்தொலைவில் உள்ள சந்திரன் என்றவாறு. நெடுந்தொலைவில் இருப்பதால் சந்திரன் அஞ்சாது நிலவாகிய வலையை இராவணன்மேல் வீசினான் என்ற குறிப்பும் கொள்க. இனி, நெடிது போழ்து நீடித்து நிலவினைத்தரும் முழுமதி எனலும் ஆம். நிலாவலை என்றது, உருவகம். இராவணனை மீனாக உருவகம் செய்யாமையால் இது ஏகதேச உருவகம். நிலவின் கொடுமைக்குத் தப்பி ஓட நெடுந்தொலைவிலும் ஓரிடம் இல்லை; அண்மையில் ஒளித்துக் கொள்ளவும் ஓரிடம் இல்லை என்பார். ஓடுமிடங்காணான் ஒளிப்பிடமும் ஒன்றின்றி, என்றார். அவன் நிலவு வீசாத இடமே இல்லை என்பது புலப்படுத்தியவாறு. 'விளிக்கும் வேலையை வெங்கணநங்கனை, ஒளிக்கலாமிடம் யாதென வுன்னுமால்'' (சூர்ப்பணகை-79) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். நிலவுக்கு ஆற்றாது வாடுகின்ற இராவணனை மதனனும் கொல்லத்தொடங்கினானே எனக் கவிஞரும் இரக்கந் தோன்றக் கூறுகின்றார். இராவணனது இப்பிரிவுத் துயரத்தில் மன்மதன் அம்புகளை யெய்வது வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பானை ஒக்கும் என்றவாறு. (கஎ௰)

499. வென்று மதனன் விடுசரம்பாய் வெம்புண்ணில்
சென்று நுழைந்து புகுந்தென்றற் கனலாவி

நின்ற விடந்தேட நிலைகலங்கி நீடுயிர்த்தே
ஒன்று மறியா துளைந்தீங் கிவையுரைத்தான்.

வென்றி மதனன் விடுசரம்பாய் வெம்புண்ணில்
சென்று நுழைந்து புகும் தென்றற் கனல், ஆவி
நின்ற இடம் தேட, நிலைகலங்கி, நீடு உயிர்த்தே
ஒன்றும் அறியாது உளைந்து ஈங்கு இவை உரைத்தான்.

பொ: யாரையும் வெற்றிகொள்கின்ற மன்மதன் விட்ட அம்பு பாய்ந்த வெப்பமிக்க புண்ணில் நுழைந்துசென்று புகுகின்ற தென்றலாகிய நெருப்பு, அவ்விராவணனுடைய உயிர் நின்றுள்ள இடம் யாதெனத் தேடாநிற்க, அவன்தன் நிலைமைகெட்டு நெடு மூச்சுவிட்டு செய்வது ஒன்றும் அறியாதவனாய் மனம் வருந்தி இங்கு இவற்றைச் சொன்னான்.

கு: யோகரையும் வென்றிகொள்ளும் அவனாற்றல் புலப்பட வென்றி மதனன்' எனச் சிறப்பித்தவாறு. மன்மதனுடைய மலரம்புகள் பாய்ந்ததாலுளதாய வெவ்விய புண்களில் தென்றல் நுழையும்போது, புண்ணில் கனல் நுழைப்பது போன்ற துன்ப வுணர்வு தோன்றும் என்பார், 'தென்றற்கனல்' என மெல்லிய பூங்காற்றைக் கனலாக உருவகம் செய்தார். தென்றல் வீசும்போது உயிர் பிரிவது போன்ற துன்புணர்வு தோன்றியது என்பார், 'தென்றற்கனல்ஆவி நின்றவிடந் தேட நிலைகலங்கி நீடுயிர்த்தே' என்றார். உளைதல் – வருந்துதல். இதனால் இராவணன் மன்மதன் மலரம்புகளாலும் இளந்தென்றலாலும் பெரிதும் வருந்தினமை கூறியவாறு.

(௧௭௪)

மதியொடு புகல்வது

500. மின்னிடையி னார்தம்மை
வெல்லவரி தென்றெண்ணி
உன்னுடைய காந்தி யொழித்த
வொளி முகத்தாள்

தன்னிடைநீ சீருய்
　　தழல்சொரிந்து தண்மதியே
என்னிடைநீ சீறவுனக்
　　கென்னபிழை யான் செய்தேன்.

மின் இடையினுர் தம்மை வெல்ல அரிது என்று எண்ணி
உன்னுடைய காந்தி ஒழித்த ஒளிமுகத்தாள்
தன்னிடை நீ சீருய், தழல்சொரிந்து தண்மதியே!
என்னிடை நீ சீற, உனக்கு என்ன பிழை யான் செய்தேன்?

பொ : குளிர்ந்த சந்திரனே! மின்னலைப்போன்ற இடையினை யுடைய பெண்டிரை வெல்லல் அரிது; என்று எண்ணிக் கொண்டு உன்னுடைய ஒளிவடிவத்தைக் கீழ்ப்படுத்தி ஒழித்த ஒளிமிக்க முகத்தையுடைய அரம்பை தன்னிடம் நீ சீருயாயினை! என்னிடத்துக் கனலைச் சொரிந்து நீ கோபிக்க உனக்கு யான் என்ன பிழைசெய்தேன்?

கு: தண்மதி காரணமில்லாமல் தன்னை வெதுப்புவதாக இராவணன் எண்ணி அம்மதியோடு புலம்புகின்ருன். தன்னை எரிப்பதை விடுத்து அரம்பையை வெதுப்பினுல் அவள் ஆற்ருத வந்து தன்னைச் சேர்வாள் என்ற கருத்தினுல் இங்ஙனம் கூறுகின்ருன். அரம்பையின் முகம் சந்திரனைவிட ஒளியும் அழகும் உடைமையால் அந்தச் சந்திரனைக் கீழ்படுத்திப் புகழைக் கெடுத்துவிட்டது எனலாம். அந்தப் பெரும்பிழை செய்த அரம்பையை வெதுப்புவதே முறை. அவளை வெதுப்பாமைக்குக் காரணம் 'மின்னிடையினுர் தம்மை வெல்வது அரிது' என்ற பொதுவான எண்ணமே ஆகும். நின்பால் பிழை செய்த அரம்பையைச் சீருமல் பிழையேதும் செய்தறியாத என்னைச் சீறுதல் முறையோ? என்று மன முளைந்து சந்திரனை நோக்கிக் கூறினுன் இராவணன். அவ்வரம்பையோடு தொடர்புடமை கருதித்தான் என்னைச் சீறுகின்ருயோ? என்பது அவன் உட்கோள். (௬௭௨)

501. தாழ்ந்தாரைக் கொல்லார்
தயாவுடையோர் தங்கேடு
சூழ்ந்தாரே யாயிடினுந்
தோலா வலிமதனன்
காந்தார மென்மொழியாள்
கண்ணம்பா லேவுண்டு
வீழ்ந்தாரைக் கொல்லுமது
வீரற் கழகன்றால்

**தாழ்ந்தாரைக் கொல்லார், தயாவுடையார், தம்கேடு
சூழ்ந்தாரே ஆயிடினும், தோலா வலி மதனன்,
காந்தார மென்மொழியாள் கண் அம்பால் ஏவுண்டு
வீழ்ந்தாரைக் கொல்லுமது வீரற்கு அழகன்றால்.**

பொ: தமது கேட்டிற்குரிய கொடிய சூழ்ச்சிகளைச் செய்தாரே ஆயிடினும், தம்மினும் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களைத் தயாவினையுடைய பெரு மக்கள் கொல்லமாட்டார்கள்; அந்நிலையே யன்றி அதற்குமேலாக, யார்க்கும் தோல்வியுறாத பெருவலியுடைய மன்மதன், காந்தாரப் பண்போன்ற மெல்லிய சொல்லினையுடைய அரம்பையின் கண்ணாகிய அம்பால் எய்யப் பெற்று வீழ்ந்த இந்த இராவணனாரைக் கொல்லுவது வீரராய் உள்ளோர்க்கு அழகு அன்று.

கு: இராவணன் தன்னைப் பிறன்போல வைத்து, மன்மதனைப் படர்க்கையில் வைத்துப் பழித்தவாறு. தாயா – அருள். அருட் குணமுடைய வீரர்கள், தம்மினும் தாழ்ந்த வலியினரைக் கொல்ல மாட்டார்கள்; அவர்கள் தமக்குத் திங்கு செய்திருப்பினும். மன்மதன் வலிமைக்குத் தாழ்ந்தவன் இராவணன்; அதற்குமேலும், பிறர் எய்த அம்பாலேறுண்டு வீழ்ந்தவன் எனவே இராவணன் இரு வகையில் கொல்லத் தகாதவனாகின்றான்; வலியில் தாழ்ந்தமை ஒன்று; பிறரம்பால் ஏவுண்டமை ஒன்று. வீரராயுள்ளோர் இவ் வகையோரைக் கொல்லாமாட்டார்கள் என்பதை ''வீறின்மையின்

விலங்காமென மதவேழமுமெறியான்; ஏறுண்டவர் நிகராயினும் பிறர் மிச்சிலென் றெறியான், மாறன்மையின் மறம் வாடும் என்று இளையாரையும் எறியான், ஆறன்மையின் முதியாரையுமெறியான் அயிலுழவன்'' (சீவகசிந் – மண்மகளிலம்பகம் – 159) என்ற செய்யுளால் அறியலாம். இங்குக் கூறிய இளையாரையு மெறியான் என்பதில் தாழ்ந்தாரைக் கொல்லார் என்பதும் அடங்குதல் காணலாம். "வில்லும் வெங்கணையும் வீரர் வெஞ்சமத் தஞ்சினர்மேல் புல்லுந வல்ல வாற்றல் போற்றலர்க் குறித்தல் போலாம்; அல்லுநன் பகலு நீங்காய் அநங்கநீ அருளில் தீர்ந்தாய், செல்லுமென்றெளி வந்தோர்மேல் செலுத்தலும் சீர்மைத்தாமோ'' (கிட்கிந்தா – கார்காலப் – 63) என்று இராமன் கூறி இரங்குவது இங்கு ஒப்புநோக்கத்தகும். (கஎகூ)

502. நின்றலைக்கு மாழிக்கு நீளு மிரவுக்கும்
அன்றிலுக்குந் தன்னை யடக்குவா ரில்லாது
தன்றலைக்கன் ருகித் தனியே னுயிர்கொள்ளும்
தென்றலுக்கு மென்னோடு சீற்றமென்னோ
தேர்ந்திடினே.

நின்று அலைக்கும் ஆழிக்கும், நீளும் இரவுக்கும்
அன்றிலுக்கும் தன்னை அடக்குவார் இல்லாது
தன் தலைக்கு அன்ருகித் தனியேன் உயிர்கொள்ளும்
தென்றலுக்கும் என்னோடு சீற்றம் என்னோ தேர்ந்திடினே.

பொ: ஆராய்ந்து பார்க்குமிடத்து, நிலையாகி நின்று, ஓயாமல் அலை வீசி, என்னை வருத்துகின்ற கடலுக்கும், விடியாது நீண்டு கொண்டிருக்கின்ற இரவுப் போதுக்கும் (துணைபிரியாது நின்று கூவுகின்ற) அன்றில் பறவைக்கும், தன்னையடக்கும் தலைவனில்லாமல், தன்தலைமையால் அடங்குவதுமில்லாததாய்த் தனித்திருக்கின்ற எனது உயிரைக் கவர்கின்ற தென்றலுக்கும் என்னோடு கோபித்துக்கொண்டு வருத்தக் காரணம் என்னையோ? (அறியேன்).

கு: கடலின் அலை ஒலியும், இரவும், அன்றிலின் ஒலியும் தென்றலின் அசைவும் தலைவியைப் பிரிந்தார்க்குப் பிரிவுத்துயரை மிகுதிப்படுத்தல் இயல்பாதலின் அரம்பையின் பிரிவால் வருந்து கின்ற இராவணன் இங்ஙனம் தனக்குள் வினவிக்கொள்கின்முன். அலைத்தல் – அலை வீசுதல். வருத்துதல். இயல்பாக உள்ள இரவே பிரிந்தார்க்கு நெடிது நிற்பதாகத் தோன்றுதலின் 'நீளும் இரவுக் கும், என்முன். மாலைமலரும் காமநோய் இரவில் மிகவருத்துதலின் இரவு நெடிதாகத் தோன்றுதல் இயல்பு. பிரியாது நின்று அன்றில் பறவைகள் கூவும் ஒலி பிரிந்து வருந்துவோர்க்குப் பெருந்துயர் செய்தலின் அன்றிலும் தன்னேடு சீறியதாகக் கூறினுன். தன்னை யடக்குவாருமின்றித் தானேயும் அடங்காமல் தென்றல் திரிந்து தன் துன்பத்தை மிகுதிப்படுத்துவது அது, தன்னேடு சீற்றம் உற்றதனுல்தான் என்பது இராவணன் கருத்து. 'தன் தலைக்கு அன்றுகி' என்றது, தானே தலைமையாகி நின்றும் அடங்காது என்னும் பொருளது. தன்னை யடக்குவாருமில்லை; அடங்குவது மில்லை என்றவாறு. காற்றினையுணவாகக் கொள்ளும் பாம்பு வந்தாவது இத்தென்றலையுண்டு அடக்கலாகாதா என்ற கருத்தால் 'தன்னையடக்குவாரில்லர்து' என்றும், தென்றல் தானே என் துன்பநிலைகண்டு வீசாமல். அடங்கியிருக்கலாமேஎன்ற கருத்தால் 'தன் தலைக்கு அன்றுகி' என்றும் கூறலானுன். (௧௭௪)

503. செம்பஞ்சிற் சீறடியுஞ்
சீர்க்குறங்கும மல்குலும்
கொம்பஞ் சிடையுங் குவிமுலையு
மென் மனத்தைக்
கம்பஞ்செய் தோளும்
கழுத்தும் கவின்முகமும்
அம்பஞ்சுக் கஞ்சுமென்
ஞவி யகற்றிடுமே.

**செம்பஞ்சின் சீறடியும், சீர்க்குறங்கும், அல்குலும், கொம்பு அஞ்சு இடையும், குவிமுலையும், என்மனத்தைக்**

கம்பம் செய் தோளும் கழுத்தும் கவின் முகமும்
அம்பு அஞ்சுக்கு அஞ்சும் என் ஆவி அகற்றிடுமே.

பொ: செம்பஞ்சினை யூட்டிச் சிவப்பித்த சிறிய அடியும், சிறப்பு மிக்குத் தோன்றும் தொடையும் சிறப்புடைய அல்குலும் பூங் கொம்பு உவமையாகாமையால் அஞ்சுதற்குக் காரணமான இடையும், குவிந்து தோன்றும் முலையும், என் மனத்தை நடுங்கச் செய்கின்ற அழகுமிக்க தோளும் கழுத்தும் அழகு அமைந்த முகமும் மன்மதனுடைய மலரம்புகள் ஐந்துக்கும் அஞ்சியிருக்கின்ற என் உயிரை உடம்பிலிருந்து நீக்கிவிடும் தன்மையனவே.

கு: அரம்பையின் அழகை அடி முதல் முடிவரையில் நினைந்து ஆற்ருது கூறியது. பாதாதி கேசமாகக் கூறியது என்பர். குறங்கு-தொடை. சீர் என்ற அடை -யை அல்குலுக்கும் இயைக்க. கொம்பு என்றது வஞ்சிப் பூங்கொம்பினை. கம்பம்–நடுக்கம். தோளின் வளமும் வனப்பும் நினையுங்கால் அவற்றைப் பெற வியலாமையால் இராவணன் நெஞ்சம் நடுங்கும் என்றவாறு. மனத்தைக் கம்பஞ் செய்தல் கழுத்துக்கும் ஏற்றுக. கவின் – அழகு. அம்பு அஞ்சு என்றது, தாமரையும், மாம்பூவும், அசோகும், முல்லையும், நீலமும் ஆகிய மன்மதன் அம்பு ஐந்தினையும் என்க. மாரனைவென்ற வீரனுகத் தான் இல்லாமை நினைந்து 'அம்பஞ்சுக் கஞ்சும் என்' என்ருன். அரம்பையின் உறுப்புக்களே என்னைக் கொல்ல வல்லன; அம்பு அஞ்சும் வேண்டா போலும் என்பது கருத்து.
(கஎ௩)

504. உம்பர்வள நாட்டு
மொப்பிலா வுத்தமிகண்
அம்பவள நீல
மணிதரள முன்னிரைத்த
செம்பவளஞ் செவ்வாய்
கரும்பவடன் செஞ்சொன்மதன்
வெம்பவளத் தாழ்புருவம்
வில்லே விளம்பிடினே.

உம்பர் வளநாட்டும் ஒப்புஇலா உத்தமிகண்
அம்ப வளநீலம்; அணிதரளம் முன்நிரைத்த
செம்பவளம் செவ்வாய்; கரும்பு அவள் தன் செஞ்சொல்; மதன்
வெம்ப வளம்தாழ்புருவம் வில்லே; விளம்பிடினே.

பொ: தேவர்தம் வளப்பமிக்க நாட்டில் தனக்கு ஒப்பு இல்லாமல் சிறந்துள்ள உத்தமியாகிய அரம்பையின் கண், நீரின் கண்ணதாகிய வளமிக்க நீலமலர்; அழகிய முத்துக்களை முன் னிடத்து வரிசைப்பட வைத்த சிவந்த பவளமே வாய்; அவள்தன் சொல் கரும்பாகும்; மன்மதன், தன்வில் தாழ்ந்துவிட்டதே என்று வெம்புமாறு, வளம்பொருந்திய புருவம் வில்லேயாம்; சொல்லு மிடத்து.

கு: அரம்பையின் கண், வாய், சொல், புருவம் ஆகிய உறுப் புகளை உவமை கூறி நினைந்து வருந்தியவாறு. அம்பு - நீர். அம்ப வளநீலம் - நீரின் கண்ணதாகிய வளம் வாய்ந்த நீலமலர்போலும் என்றவாறு. பற்களையும் வாயையும் ஒருங்கே கூறும் கருத்தனாய் 'அணிதரளம் முன்னிரைத்த செம்பவளம் செவ்வாய்' என்றான். மதன் வெம்பியது தனது கரும்பு வில்லும் தாழுமாறு அழகுடன் வளைந்துள்ள புருவத்தின் சிறப்பு மிகுதிநோக்கி. வளம் தாழ்தலா வது வளம் தங்குதல். வில்லே என்பதிலுள்ள ஏகாரத்தை மேலே கூட்டிக் கண் நீலமே; செவ்வாய் செம்பவளமே; செஞ்சொல் கரும்பே; என உருவகமாக்கிக் கூறலும் ஆம். (௫௦௪)

505. விண்ணோர் பெருமான்றன்
வெற்பெடுத்த வெவ்விறல்தீர்த்
துண்ணேவு செய்தென்
னுயிருண்டாள் கேவலமோர்
பெண்ணோ வவளல்லள்
பெண் ணுருவங் கொண்டிருந்திம்
மண்ணோர் களையெல்லா
மாய்க்க வருங்கூற்றே.

விண்ணோர் பெருமான் தன் வெற்பு எடுத்த என் விறல் தீர்த்து,
உள் நோவு செய்து என் உயிர் உண்டாள்; கேவலம் ஓர்
பெண்ணோ அவள்? அல்லள்; பெண் உருவம் கொண்டிருந்து இம்
மண்ணோர்களை எல்லாம் மாய்க்க வரும் கூற்றே.

பொ : விண்ணுலகத்திலுள்ள தேவர்கட்கு எல்லாம் பெருமானாகிய சிவபிரானது கயிலைமலையைத் தூக்கிய என் வலிமையை நீக்கி உள்ளத்தில் நோயை யுண்டாக்கி, என் உயிரையே உண்டு விட்டாள்; ஆதலால், அவள் எளிய ஒரு பெண்ணோ? அல்லள்; பெண்ணுருவம் தாங்கியிருந்து இம்மண்ணுலகத்தோரை எல்லாம் கொல்ல வந்திருக்கும் கூற்றே ஆம்.

கு : விண்ணோர் பெருமான் என்றது சிவபிரானை 'வெள்ளந் தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர் பெருமானே' என மணிவாசகர் கூறியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகும். வெற்பெடுத்த என் விறல் தீர்த்து என்றது கயிலை மலையை எளிதின் எடுத்த தன் பேராற்றல் அரம்பையின் ஆசையால் நீங்கினமை புலப்படுத்தியவாறு "துடியிடை......... தில்லைச் சிவன்அருளாம் பொற்றடமலர் சூடுமென்னாற்றலகற்றியதே" (திருக்கோவையார்-21) என்பதும், "ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள் நண்ணாரு முட்கு மென் பீடு" (குறள்-1088) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். 'என் விறல்தீர்த்து உள் நோவுசெய்து என் உயிர் உண்டாள் அவள் கேவலம் ஓர் பெண்ணோ அல்லள்' என இயையும். கேவலம் - எளிமை. வெற்பெடுத்த என் விறல் தீர்த்து என் உயிரை உண்டாளாகிய அவ்வரம்பை கேவலம் ஓர் பெண்ணோ அல்லள். எளியபெண்ணுக்குப் பேராற்றல் படைத்த என்னுயிரை யுண்ணும் வலிமையுளதாகாது. பெண்ணுருவந் தாங்கி இம்மண்ணுலகத்தவரை யெல்லாம் மயக்கவந்த கூற்றே யாம் எனத் துணிந்து கூறினன் இராவணன். தன்னைமட்டுமே யன்றி இவ்வுலக மக்களனைவரையுமே மயக்கவல்ல கூற்றே என்றது தானே யன்றிக் கண்டோர் அனைவரும் தன்னைப்போலவே மயங்க நேரிடும் எனத் தன் பிழையை அவள் பிழையாக ஏற்றிக் கூறியவாறு, "வெறுப்பினால், வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல்' (கலித்-56) என்பதும், 'பண்டறியேன் கூற்றென

பதனை யினியறிந்தேன், பெண்டகையாற் பேரமர்க்கட்டு''
(குறள்–1082) என்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். (௬௭௭)

சூரிய உதயம்

506. மதியா னனிவருந்த
வண்ணம்வே றாக
உதியாமை யோரிரவோ
ரூழியாயிற் றென்னக்
கொதியா வரக்கனமைக்
கோளிழைக்குங் கொல்லென்று
கதிரோ னடுங்குவான்
போலுதயங் கண்ணுற்றான்.

'மதியால் நனிவருந்த, வண்ணம் வேறு ஆக.
உதியாமை, ஓர் இரவு ஓர் ஊழி ஆயிற்று என்ன,
கொதியா, அரக்கன் நமைக் கோள் இழைக்கும் கொல், என்று
கதிரோன் நடுங்குவான் போல் உதயம் கண்ணுற்றான்.

பொ: சந்திரனால் யான் மிக வருந்தவும் என் வண்ணம் வெளுத்து வேறாகவும் சூரியன் உதிக்காமையால் ஓர் இரவே ஓரூழிபோல நெடிதாயிற்று என்று மனங்கொதித்து இராவணனாகிய அரக்கன் நம்மைத் துன்புறுத்துவானோ! என்று ஐயுற்றுச் சூரியன் அஞ்சி நடுங்கினவன் போல உதய மலையை நெருங்கினான்.

கு: உதியாமை – சூரியன் உதிக்காமையால்; சூரியன் உதியாமையால் மதியால் நனிவருந்தவும் வண்ணம் வேறாகவும் ஓரிரவே ஓரூழியாக நீளவும் ஆயின என்று அரக்கன் கொதித்து நம்மைத் துன்புறுத்துவனோ என்று அஞ்சி சூரியன் விரைந்து உதித்ததுபோல உதயமலையை நணுகினன் என்பது தற்குறிப் பேற்றவணி. சூரியன் இராவணனுக்கு அஞ்சி உதித்தவன்போல உதித்தான் என்றவாறு. பிரிந்தார்க்கு ஒருநாழியும் ஓரூழியாவதுண்டு இங்கு ஓரிரவு ஓரூழியாவது கூறினான். ''கொடியார்

கொடுமையிற் ருங்கொடிய விந்நா ணெடிய கழியு மிரா" (குறள்–1169) என்பது இங்கு நினையலாம். கோள் - துன்பம்; – கொலை. இழைத்தல் - செய்தல். நடுங்குதல் என்பது அச்சத்தால் நிகழும் மெய்ப்பாடு. கண்ணுறுதல் என்பது நெருங்குதலை யுணர்த்தியது.

(கஎஅ)

இராவணன் தேவர் மேற்சேறலும் இந்திரன் திருமாலையடைதல்

507. துன்னிரு டுரந்து வெய்யோன்
தோன்றிடத் துயர நீங்கித்
தன்னெதி ரில்லா வென்றித்
தசமுகன் ருனை சூழப்
பொன்னுல கத்தை நோக்கிப்
புறப்படப் புரைதீர் வானோர்
மன்னவ னதனைக் கேட்டு
மாயனை வந்து சார்ந்தான்.

துன்இருள் துரந்து வெய்யோன் தோன்றிடத் துயரம் நீங்கித்
தன் எதிர் இலாத வென்றித் தசமுகன் தானை சூழ,
பொன்னுலகத்தை நோக்கிப் புறப்பட, புரைதீர் வானோர்
மன்னவன் அதனைக்கேட்டு, மாயனை வந்து சார்ந்தான்.

பொ: நெருங்கிய இருளை ஓட்டிவிட்டுச் சூரியன் உதயமலையில் உதித்திடத் தனக்கு நிகரில்லாத வெற்றியையுடைய இராவணன் முன்னைப் பிரிவாற்ருத் துயரம் நீங்கித் தன் சேனை சூழப் பொன்னுலத்தை நோக்கிப் புறப்பட்டானக. குற்றம் இல்லாத தேவர்கட்குத் தலைவனுகிய இந்திரன் அதனை அறிந்து திருமாலை அடைந்தான்.

கு: துரத்தல் – ஓட்டுதல். தசமுகன்–பத்து முகங்களுடைமை பற்றி இராவணனுக்குக் காரணப்பெயர். இராவணன் தன் பொன்னுலகை நோக்கி சேனைசூழ வருகின்ருன் என்பதைக் கேள்விப் பட்டவுடனே இந்திரன் அவனை வெல்லல் தன்னுல் இயலாது

என்பதையுணர்ந்து ஆற்றல்மிக்க திருமாலைத் துணையாக்கிக் கொள்ள அவன்பால் அடைந்தான் என்றவாறு. புரை – குற்றம். இராவணனுக்கு எவ்விதத் தீங்கும் செய்யாதவன் இந்திரன் என்பார், புரைதீர்வானோர் மன்னவன்' என்றார். மாயன் - கரு நிறமுடைய திருமால்; மாயச்செயல்களைச் செய்யவல்லவன் என்றும் கொள்க. அரக்கர்தம் மாயப்போரையறிந்து தன் மாயச் செயலால் வெல்ல வல்லவன் திருமாலே ஆதலின் அவனை அடைந்தான் இந்திரன் என்க. (கஎசு)

திருமாலின் எழில்வடிவம்.

508. ஒருங்கிய மனத்தி னோர்க

ளுள்ளெழு மொளியை யும்பர்

அருந்திடு மமிழ்தை யன்பர்க்

கன்னையை யகன்று நீண்டு

திருந்திய கைகால் கண்வாய்

சிவந்தொளி திகழ்த லாலே

கருங்கடல் கமலம் பூத்த

தெனத்திகழ் காட்சி யானை.

ஒருங்கிய மனத்தினோர்கள் உள் எழும் ஒளியை - உம்பர் அருந்திடும் அமிழ்தை – அன்பர்க்கு அன்னையை – அகன்று நீண்டு, திருந்திய கை, கால், கண், வாய் சிவந்து ஒளி திகழ்தலாலே, கருங்கடல் கமலம் பூத்தது எனத்திகழ் காட்சியானை.

பொ: ஒருமைப்பட்ட மனத்தினையுடைய யோகியர்தம் உள்ளத்தே எழுகின்ற ஒளியாக இருப்பவனை – தேவர்கள் உண்ணும் அமிழ்தமாக இருப்பவனை–தன்பால் அன்புடையார்க்குப் பேரன்பால் தாய்போன்றவனை – திருமேனி அகன்றும் நீண்டும் கிடத்தலாலும், இலக்கணப்படி திருத்தமாக அமைந்துள்ள கைகளும் கால்களும் கண்களும் வாயும் சிவந்து ஒளியுடன் விளங்குதலாலும் கரிய கடல் தாமரை மலர்களைப் பூத்துக்கொண்டிருக்கின்றது. என்னுமாறு காட்சிதருபவனை.

கு: ஒளியை, அமிழ்தை, அன்னையை, திகழ் காட்சி யானை என்பவை திருமால் என்னும் ஒருபொருள்மேல் வந்த பல பெயர்கள் இரண்டனுருபு ஏற்று நின்றன. ஒருங்கிய மனத்தினோர்கள் என்றது மனஒருமைப்பாடுடைய யோகியரை; அவர்கள் உள்ளத்தில் திருமால் ஒளிவடிவாக நின்று காட்சிதருபவன் ஆதலின், உள்ளெழும் ஒளியை என்றார். உம்பர் இன்று உண்ணும் அமுதம் திருமாலால் கடைந்து கொடுக்கப்பட்டது ஆதலின் உபசாரமாக அத்திருமாலையே அமிழ்தமாக்கி 'உம்பர் அருந்திடும் அமிழ்தை' என்றார். இனித் தேவர்கள், தம் கண்களென்னும் வாயினால் அப்பெருமானின் வடிவழகை அமிழ்தெனப் பருகுகின்றமை நினைந்து அங்ஙனம் கூறினர் எனலும் ஆம். அன்பர்க்கு அன்னையை என்றது, தன்பால் அன்புகொண்ட அடியார்க்குத் தாயிற் சிறந்த தயாவான தத்துவன் என்பதனை விளக்கியவாறு. கருங்கடல் அகன்றும் நீண்டும் கிடத்தல்போலத் திருமாலின், கரிய திருமேனி அகன்றும் நீண்டும் கிடத்தலாலும், கையும், காலும் கண்ணும் வாயும் சிவந்து ஒளிதிகழ்தலாலும் கருங்கடல் செங்கமல மலர்களைப் பூத்துக்கொண்டு இருத்தல் போலத் திருமால் காணப்படுகின்றான் என்றவாறு. கார்க்கடல் கமலம் பூத்தெனப் பொலிவானைக் கண்டான்' (விடணனடைக்கலம் – 132) கருமுகிற் றாமரைக் காடு பூத்து (பால – திருவவதாரம்· 12) என்றது நினைக. 'கண்ணும் திருவடியும் கையும் திருவாயுஞ் செய்ய கரியவனை' (சிலப் – ஆய்ச்சியர் குரவை – 35) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். குளகம். வருஞ்செய்யுளில் முடியும். (கஅய)

509. உண்டிலை யெனறு தம்மி
லுணர்விலோர் பிணங்க நின்ற
புண்டரீ கக்க ணனைப்
போக்கொடு வரவி லானைக்
கண்டன மென்றோர்க் கென்றுங்
காண்பரி யானை யென்றுங்
கண்டில மென்றோர் காணுங்
கண்ணனைக் கண்ணிற் கண்டான்.

**உண்டு, இலை, என்று தம்மில் உணர்வு இலோர் பிணங்க நின்ற**
**புண்டரீகக் கண்ணனை – போக்கொடு வரவு இலானை**
**கண்டனம் என்றோர்க்கு என்றும் காண்பரியானை – என்றும்**
**'கண்டிலம்' என்றோர் காணும் கண்ணனைக் – கண்ணிற் கண்டான்.**

பொ : மெய்யுணர்வு வாய்க்கப் பெறாதவர்கள், கடவுள் உண்டு என்றும், 'இல்லை' என்றும் கூறித் தமக்குள் மாறுபட்டுப் பேச, அவர்க்கு எட்டாது நின்ற தாமரை மலர்போன்ற கண்களை யுடையவனை – எங்கும் நிறைந்துள்ளமையால் போக்கும் வரவும் இல்லாப் புண்ணியனாய் இருப்பவனை – கண்டுவிட்டோம் என்று செருக்கிக்கூறுகின்றவர்கட்கு எக்காலத்தும் காணுதற்கு அரியவனை– என்றும், அவன் இயல்பு முழுவதும் கண்டிலேம் என்று அடங்கிக் கூறுகின்றவர்கள் ஞானத்தால் காணுதற்குரிய கண்ணனை இந்திரன் தன் கண்ணில் கண்டான்.

கு: உண்டு என்றும் இல்லை என்றும் பிணங்குவோர் என்றது உலகாயதர் முதலிய சமயவாதிகளை. பிணங்குதல் – மாறுபடுதல் சமயவாதிகள் பிணங்கிக் கூறுவதால் இறைவன் இருப்பு மாறு படாது என்பார், பிணங்க நின்ற புண்டரிகக் கண்ணனை, என்றார். இறைவனது இயல்பில் ஒரு கூறே கண்டு 'கண்டனம்' என்று சொல்பவர் அவன் இயல்பு முழுமையும் காணாதவரே ஆதலின், 'கண்டனம் என்றோர்க் கென்றும் காண்பரியானை என்றும் அவன் இயல்பு முழுமையும் காணாமையறிந்து, 'கண்டிலம் என்பவர்கள் உண்மை கூறினவர் ஆதலின், அவர்கள் ஓரளவு காண்டற்கெளியன் என்பார்'. கண்டிலம் என்றோர் காணும் கண்ணனை என்றும் கூறினார். அத்தகைய பெரியவனைக் கண்ணிற் காண்டல் அருமையென்பது புலப்படக் கண்ணிற் கண்டான் என்றார். 'கண்ணனை' என்பது கண்ணழகுடையவனை எனவும், கண்ணில் நிற்பவன் எனவும் பொருள்தந்து நின்றது. இரண்டா வுருபேற்ற ஒருபொருளின்மேல் வந்த பலபெயர்கள் பிரிவிலவாய் நின்று, கண்டான் என்ற வினைகொண்டு முடிந்தன. (கஅக)

### திருமால் வினவுதல்

510. கண்டடி வணங்கி நின்ற
கடவுளர் கோனை நோக்கிக்
கொண்டலுங் கடலு மாமை
குன்றிடுங் கோல மேனி
வண்டுசேர் துளவ மாலை
மார்பனு மனத்திற் பீடை
உண்டதை யுரைத்தி யென்ன
வும்பர்கோ னுரைக்க லுற்றான்.

கண்டு அடி வணங்கி நின்ற கடவுளர் கோனை நோக்கி,
கொண்டலும் கடலும் மாமை குன்றிடும் கோல மேனி,
வண்டுசேர் துளவ மாலை மார்பனும் 'மனத்திற் பீடை
உண்டு, அதை உரைத்தி' என்ன, உம்பர்கோன் உரைக்கலுற்றான்.

பொ: திருமாலைக் கண்டு அவன் திருவடிகளை வணங்கி நின்ற இந்திரனைப் பார்த்து, நீர்கொண்ட மேகமும் கருங்கடலும் நிறம் குன்றுதற்குக் காரணமான பேரழகுள்ள திருமேனிகொண்ட, வண்டுகள் தங்கும் துளவ மாலை யணிந்த மார்பினனாகிய திருமாலும், நின் மனத்தில் துன்பம் ஏதோ இருக்கின்றது; அதைச் சொல்லுக! என்று சொல்ல, இந்திரன் சொல்லத் தொடங்கினான்.

கு: மாமை – நிறம். திருமாலின் அழகிய நீலமேனியைக் காணும்போது கருங்கொண்டலும், கருங்கடலும் ஒப்பாகாமல் தாழ்ந்த நிறத்தனவாகும் என்பார். 'கொண்டலும் கடலும் மாமை குன்றிடும்கோல மேனி' என்றார். மேனிகொண்ட மார்பனும் என இயையும். துளவ மாலையில் உள்ள மணத்திற்கும் தேனுக்கும் விருப்பம் கொண்ட வண்டுகள் வந்து தங்கும் என்றவாறு. திருமாலணிந்த மாலை, வண்டுகளுக்கு வாழ்வளிக்கின்றது என்பதால் அம்மாலையை யணிந்த திருமால் தன்னடைந்தார்க்கு வாழ்வளிப்பவன் என்பது குறிப்பால் புலப்படுத்தியவாறு. பீடை - துன்பம். இந்திரன் வரவாலும் முகக்குறிப்பாலும் அவன் உள்ளத்தில் துன்ப

முண்டு என்பதை உணர்ந்து கொண்ட திருமால் 'மனத்திற் பிடை உண்டு அதை உரைத்தி' என்று சொன்னன் என்க. (கஅஉ)

## இந்திரன் உரைத்தல் 183, 184.

511. முன்பெமக் கிடரைச் செய்த
முரணுடை யசுர ரோடும்
வன்பகை யரக்கர் வர்க்கம்
வழிவழி யறுத்து மாற்றிப்
பின்பெமக் கிதமே செய்து
பெற்றதா யென்னப் பேணும்
அன்பவோ ரலக்கண் வந்தா
லாருளர் நீயே யல்லால்.

முன்பு எமக்கு இடரைச் செய்த முரணுடை அசுரரோடும்
வன்பகை அரக்கர் வர்க்கம் வழிவழி அறுத்து மாற்றி,
பின்பு எமக்கு இதமே செய்து பெற்றதாய் என்னப் பேணும்
அன்ப! ஓர் அலக்கண் வந்தால் ஆர் உளர் நீயே அல்லால்;

பொ: முற்காலத்து எங்கட்கு இடர்செய்த வலிமையுடைய அசுரரோடு வலிய பகைமையுடைய அரக்கர் இனத்தை வழி வழியே அறுத்துப் போக்கிப் பின்பு எங்கட்கு இனியவே செய்து எம்மைப் பெற்றதாய் போலக் காப்பாற்றி வருகின்ற அன்பு மிக்க பெருமானே! இன்று ஒரு துன்பம் வந்தால் அத்துன்பத்தைத் தீர்க்க நீ அல்லால் எமக்கு யார் இருக்கின்றார்கள்?

கு: எமக்குத் துன்பம் துடைப்போர் நீ யன்றிப் பிறர் யாருமிலர் என்றவாறு. முரண் – வலிமை; மாறுபாடுமாம். வர்க்கம்- இனம். அறுத்து மாற்றுதலாவது, அறுத்து ஒழித்தல். இதன் – இன்பம். பேணுதல் – காப்பாற்றுதல்; அலக்கண் – துன்பம். திருமால் அன்பு வடிவினன் என்பது தோன்ற 'அன்ப' என விளித்தவாறு.

(கஅங)

512. சிரத்தொகை யறுத்துத் தீக்குத்
திருத்திசெய் தயன்பாற் பெற்ற
வரத்தினன் வலியின் மிக்கோன்
மண்ணுல கழித்தின் றெம்மை
நெருக்குவான் சேனை யோடு
நிருதர்கோன் வந்து நின்றான்.
திருத்திகழ் மார்ப யாங்கள் செய்வதென்
னென்னச் சொன்னான்.

சிரத்தொகை அறுத்துத் தீக்குத் திருத்திசெய்து அயன்பால் பெற்ற வரத்தினன்—வலியின்மிக்கோன், மண்உலகு அழித்து இன்று,எம்மை நெருக்குவான் சேனையோடும் நிருதர்கோன் வந்து நின்றான்; திருத்திகழ் மார்ப! யாங்கள் செய்வது என்? என்னச் சொன்னான்.

பொ: இலக்குமி விளங்குகின்ற மார்பத்தையுடையவனே! தன் தலை ஒன்பதினையும் அறுத்து இட்டு வேள்வித் தீயினுக்கு மனம் நிறைவுசெய்து, பிரமனிடம் பெற்ற வரத்தினையுடையவனும், வலியில் மிக்கவனும் ஆகிய இராவணன், மண்ணுலகத்தை அழித்து இன்றைக்கு எம்மை நெருக்கி அழிப்பதற்காகச் சேனையோடும் வந்து நின்றுளான்; நாங்கள் செய்யத்தக்கது என்ன? என்று சொன்னான்.

கு: சிரத்தொகை என்றது, ஒன்பது என்னும் தொகையின வாகிய தலைகளை. வேள்வித் தீயில் இராவணன் தன் தலைகளை அறுத்துப் பெய்து அங்கியங்கடவுட்கு மனம் நிறைவுசெய்தான் என்றது பிரமனை நோக்கிச் செய்த வேள்வியில் செய்த செயலைப் புலப்படுத்தியவாறு "ஓராயிரமாண்டு வசித்துக் கழிந்தால் ஓரோர் தலையாகச் சீரார் சிரம் ஒன்பதுந் தடிந்து செந்தீயிடையாகுதி பண்ணிப் பேரா உவவாசத்தினனாய்ப் பின்னும் ஓராயிரத்தாண்டில், தாரார் மற்றைத் தலைதடிய லுற்றான் பற்றித் தசக்கிரிவன்" (உத்தர – இராவணனுதிப் பிறப்பு–26) என்பது இங்கு நினையலாம். மண்ணுலகத்தை அழித்துவிட்டு விண்ணுலகத்தையும் அழிக்க

வந்துள்ளான் என்றபடி. நெருக்குதல் – துன்புறுத்தல். வரத்தானும் வலியானுமிக்க இராவணன் சேனையோடு வந்தபின் எளியோமாகிய யாம் செய்யத் தக்கது யாதுளது? என்றுதன் செயலற்ற நிலையை இந்திரன் புலப்படுத்தியவாறு. நிருதர்கோன் – அரக்கர்கள் தலைவனாகிய இராவணன், 'திருத்திகழ் மார்ப!' என்ற விளி, அருள்வடியாகிய இலக்குமியோடு வந்து எம் இன்னலை நீக்கியருள் என்னும் குறிப்பினது.

(கஅச)

திருமாலின் அன்புரை.

513. உரைத்தவா சகங்கள் கேட்ட
வுத்தம னுலகைக் காயும்
அரக்கரை யவிய நூறி
யிராவண னயன்பாற் பெற்ற
வரத்தையோர் வழியி னாலே
மாற்றிமற்றவனீ ரைந்து
சிரத்தினை யறுத்து வீழ்த்துன்
சிந்தைநோய் தீர்ப்பெ னென்றான்.

உரைத்த வாசகங்கள் கேட்ட உத்தமன் 'உலகைக் காயும் அரக்கரை அவிய நூறி, இராவணன் அயன்பால் பெற்ற வரத்தை ஓர் வழியினாலே மாற்றி, மற்றுஅவன் ஈரைந்து சிரத்தினை யறுத்து வீழ்த்து உன் சிந்தை நோய் தீர்ப்பென்'என்றான்.

பொ: இந்திரன் சொன்ன சொற்களைக் கேட்ட திருமால், உலகை வருத்துகின்ற அரக்கரை அடியோடு இறக்குமாறு அழித்து, இராவணன் பிரமனிடம் பெற்ற வரத்தை ஓர் உபாய வழியினாலே மாற்றி அவனுடைய பத்துத் தலைகளையும் அறுத்துத் தரையில் வீழச்செய்து உன் மனத்துன்பத்தைத் தீர்ப்பேன்' என்று அருளுரை கூறினான்.

கு: உத்தமன் என்றது, திருமாலை; தலைமையானவன் என்னும் பொருளது. காய்தல் – கோபித்தல்; நூறுதல் – அழித்தல். மற்று – அசை.

(கஅரு)

### இராவணன் தேவரைத் துன்புறுத்தல்

514. என்றவரி யியம்பக் கேட்ட
விந்திர னிமையோ ரோடும்
தன்றிரு நகரஞ் சென்று
சார்தலுந் தருக்கின் மிக்க
வென்றிவே லரக்கர் கோமான்
விரிபெருஞ் சேனைசூழச்
சென்றுவிண் ணதிர வார்த்துத்
தேவருக் கிடுக்கண் செய்தான்.

என்றவர் இயம்பக்கேட்ட இந்திரன் இமையோரோடும்
தன்திரு நகரம் சென்று சார்தலும், தருக்கின் மிக்க
வென்றிவேல் அரக்கர் கோமான், விரிபெருஞ் சேனைசூழச்
சென்று, விண் அதிர ஆர்த்து, தேவருக்கு இடுக்கண் செய்தான்.

பொ: என்று திருமால் சொல்லக் கேட்ட இந்திரன் மற்றைத் தேவர்களோடும் தன் அழகிய பொன்னுலகிற்குச் சென்றுசேர்தலும், செருக்குமிக்க, வெற்றிவேல் தாங்கிய இராவணன் தன் விரிந்த பெருஞ் சேனைசூழச் சென்று விண்ணுலகம் அதிருமாறு ஆரவாரித்துத் தேவர்கட்குத் துன்பம் செய்தான்.

கு: திருமாலிடம் உரையாடியவன் இந்திரன் ஒருவனே என்பதும் மற்றைத் தேவர்கள் உடனிருந்தனர் என்பதும் தெளிக. தன்திருநகர் என்றது இந்திரனுக்குரிய பொன்னுலகத்தை. இந்திரன் தன்னகரம் சேர்தற்கும் இராவணன் சேனையோடு நுழைதற்கும் காலம் ஒன்றுயிருந்தது. தருக்கு – செருக்கு; வரத்தாலும் வலிமையாலும் வந்தது. இடுக்கண் – துன்பம். (கஅசு)

### அமரர் போர்காண அயன் வருதல்

515. சேனையோ டரக்க னம்மேற்
செருச்செய வந்தா னென்னு
வானர் சேனை வெள்ள
மறிகட லென்னப் பொங்கி

ஆனைதேர் பரிமா வுந்தி
யரக்கரோ டமர்செய் வேலை
ஆனவர் பூசல் காண்பா
ஞதிரித் தயன்வந் துற்ருன்.

**சேனையோடு அரக்கன் நம்மேல் செருச்செய வந்தான், என்று,**
**வானவர் சேனை வெள்ளம் மறிகடல் என்னப் பொங்கி,**
**ஆனை,தேர், பரிமா உந்தி அரக்கரோடு அமர் செய் சேனை,**
**ஆனவர் பூசல் காண்பான் ஆதரித்து அயன் வந்து உற்ருன்.**

பொ: இராவணன் என்னும் அரக்கன் சேனையோடு நம்மேல் போர்செய்ய வந்தான்' என்று தேவர்கள் சேனையாகிய வெள்ளம், அலைகள் மறித்து வீசுகின்ற கடலைப்போலப் பொங்கி யானையும், தேரும் குதிரையும் செலுத்திக்கொண்டு அவ்வரக்கர்களோடு போர்செய்யும்போது அத்தேவர்கள் தம் போரைக் காண்பதற்கு ஆசைப்பட்டுப் பிரமன் வந்து அடைந்தான்.

கு: மறிகடல்-அலைகள் மடங்கி வீசுகின்ற கடல். பொங்குதல் மிகுதலையுணர்த்தியது. உந்தி – செலுத்தி. வேலை – வேளை; பூசல்-போர். ஆதரித்தல் – விரும்புதல் தேவர்கள் சேனை இராவணனது சேனையொடு செய்யும் போரைக் காண விரும்பிப் பிரமன் வந்தான் என்றவாறு. (கஅஎ)

இருசேனையும் பொருதல்

516. கொற்ற வானவர்கள் விட்ட
கொடும்படை அரக்கர் சேனை
உற்றன; ஊழித் தீயி னுடன்றன;
தொடர்ந்து கொல்ல,
இற்றன, கைகால்; பொங்கி
யெழுந்தன குருதி வெள்ளம்,
அற்றன தலைகள்; பாடி
யாடின வலகைக் கூட்டம்.

கொற்ற வானவர்கள் விட்ட கொடும்படை அரக்கர் வேலை
உற்றன; ஊழித்தீயின் உடன்றன; தொடர்ந்து கொல்ல,
இற்றன, கைகால்; பொங்கி எழுந்தன குருதி வெள்ளம்,
அற்றன தலைகள்; பாடி ஆடின அலகைக் கூட்டம்.

பொ : வெற்றியுடைய தேவர்கள் விட்ட கொடிய ஆயுதங்கள் அரக்கர்தம் சேனையை அடைந்தனவாய் ஊழிக் காலத்துப் பரவுகின்ற நெருப்புப்போலக் கோபித்தனவாய்த் தொடர்ந்து கொல்ல, அரக்கர்தம் கைகால் முறிந்தன. அவர்தம் உடம்பிலிருந்து சொரிந்த குருதி வெள்ளம் பொங்கியெழுந்தன, அவர்தம் தலைகள் அறுப்பட்டன. பேய்க் கூட்டங்கள் பாடி, ஆடின.

கு : கொற்றம் – வெற்றி. கொடும்படையென்றது கொடிய ஆயுதங்களை. கொடும்படை உற்றனவாய் உடன்றனவாய்த் தொடர்ந்து கொல்ல என இயையும். உடலுதல் – கோபித்தல். கைகால் இற்றன; குருதி வெள்ளம் பொங்கியெழுந்தன; தலைகள் அற்றன; அலகைக் கூட்டம் பாடி ஆடின என இயையும். அலகை – பேய். போர்க்களத்தில் பேய்கள் இறந்தோர் தம் நிணந்தின்று செருக்கியாடுதல் உண்டு. "உறுகெழு செலவின் அஞ்சுவருபேய்மகள், குருதியாடிய கூருகிற் கொடுவிரற், கண் தொட்டுண்ட கழிமுடைக் கருந்தலை, ஒண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர, வென்றடு விரற் களம் பாடித் தோள்பெயரா, நிணந்தின் வாயள் துணங்கை தூங்க" திருமுருகாற்றுப் 51–56) எனப் பேய் பாடித்துணங்கை யாடியதை நக்கீரர் கூறியுள்ளது காணலாம். (கஅஅ)

இராவணன் தேவர்மேல் தன்படைத்தலைவரை ஏவுதல்

517. மின்படை யனேக கோடி
விடுத்துவிண் ணோர்கள் கொல்லத்
தன்படை மடியக் கண்டு
தசமுகன் சலித்துத் தன்மேல்

அன்புடை நெஞ்ச ராயிவ்
வவனியை யழிக்கு மாற்றல்
வன்படைத் தலைவர் வானோர்
மேற் செல வகுத்துவிட்டான.

மின்படை அனேக கோடி விடுத்து விண்ணோர்கள் கொல்லத்
தன்படை மடியக் கண்டு தசமுகன் சலித்துத் தன்மேல்
அன்பு அடை நெஞ்சராய் இவ் அவனியை அழிக்கும் ஆற்றல்
வன் படைத்தலைவர் வானோர்மேல் செல வகுத்துவிட்டான்.

பொ: மின்னுகின்ற ஆயுதங்களை அனேக கோடியளவு விடுத்துத் தேவர்கள் கொல்லுதலால், தனது சேனை மடிதலைக் கண்டு இராவணன் சலிப்படைந்து, தன்னிடத்து அன்பு அமைந்த நெஞ்சினராய் இந்த உலகை அழிக்கும் ஆற்றலையுடையவர் களாகிய வலிய தன்படைத்தலைவர்களைத் தேவர் மேல் போர் செய்யச் செல்லுமாறு அணிவகுத்து விடுத்தான்.

கு: மின்னுகின்ற படை என்க. வினைத்தொகை. அனேக கோடி என்றது பலகோடி என்னும் பொருளது. இவ்வளவு பேராற்றலும் வரமும் நமக்கிருந்தும் நம்சேனை தேவரால் கொல்லப்படுகின்றதே என மனத்தில் சலிப்படைந்தான் என்பார். 'சலித்து' என்றார். இராவணன்மேல் அன்பு கொண்டவராய் இவ்வுலகையே அழிக்கும் ஆற்றலையுடையவர்களாய படைத்தலைவர்களைத் தேவர்மேல் போர்செய்யச் செல்லுமாறு செய்தான். வகுத்து விடுதல் என்பது அணிவகுத்து விடுதலையுணர்த்தியது. (கஅகூ)

அரக்கர் தலைவர்கள்

518. சூரியன் பகைஞன் கோபத்
துன்முகன் தூம கேது
காரிய மறியா வென்றிக்
கரன்றிரி சிரத்தோன் போரில்

கூரிய தூட ணன்றீக்
கொடுஞ்சுக சார ரென்போர்
பாரியல் பேது மில்லாப்
பசாசன்வெம் பாசக் கையான்.

சூரியன் பகைஞன், கோபத் துன்முகன் தூமகேது,
காரியம் அறியா வென்றிக் கரன், திரிசிரத்தோன், போரில்
கூரிய தூடணன், தீக்கொடுஞ் சுகசாரர் என்போர்,
பார் இயல்பு ஏதும் இல்லாப் பசாசன், வெம்பாசக் கையான்.

பொ : சூரியனுக்குப் பகைவனாகிய சூரியசத்துரு, கோபமிக்க துன்முகன், தூமகேது, வேறு காரியம் அறியாமல் வெற்றியையே காரியமாகக் கொண்டுள்ள கரன், திரிசிரா, போரில் மிக்கோனாகிய தூடணன், தீமையும் கொடுமையும் உடைய சுக சாரர் என்பவர்கள், இவ்வுலக இயல்பு சிறிதும் இல்லாத பசாசன், கொடிய பாசத்தை ஏந்திய கையையுடைய பாசக்கரன்.

கு : சூரியன் பகைஞன் என்றது சூரிய சத்துரு என்ற காரணப் பெயருடைய அரக்கனை. சுகன், சாரன் என்பார் சுகசாரர் என உம்மைத் தொகையின் பெயர்பெற்றனர். பசாசன், இரும்பு போன்றவன் என்னும் பொருளது. பாசத்தை எப்போதும் கையில் கொண்டுள்ள காரணத்தால் பாசக்கையன் எனப்பட்டான். குளகம். (கசூ௰)

சுமாலியின் போர்

519. மங்கிய புகழ்மா ரீசன்
மகோதர னியாய கோபன்
பொங்கிய வீர பக்கன்
புகைக்கண்ணன் குருதிக் கண்ணன்

தங்கிய வகம்பன் கும்ப
விடும்பன்வெந் சம்பு மாலி
துங்கநீண் மொய்ம்பி னேடுஞ்
சூழ்தரச் சுமாலி நேர்ந்தான்.

மங்கிய புகழ் மாரீசன், மகோதரன், நியாய கோபன்,
பொங்கிய வீர பக்கன், புகைக்கண்ணன், குருதிக் கண்ணன்
தங்கிய அகம்பன், கும்பன், நிகும்பன், வெம் சம்புமாலி,
துங்கநீள் மெய்ம்பினேடும் சூழ்தரச் சுமாலி நேர்ந்தான்.

பொ : (விசுவாமித்திரன் வேள்வியில்) மங்கிப் போன புகழையுடைய மாரிசன், மகோதரன், நியாயகோபன், மிக்க வீரத்தை யுடைய பக்கன் (மகாபாரிசுவன்) புகைக்கண்ணன் (தூமாக்கன்) குருதிக் கண்ணன், அங்கு அருகில் தங்கியுள்ள அகம்பன், கும்பன், நிகும்பன், கொடிய சம்பு மாலி என்ற இவ் வீரர்கள் பெருமைமிக்க போர்வலிமையோடும் தன்னைச் சூழ்ந்து வரச்சுமாலி போர்செய்ய வந்தான்.

கு : இராவணன் வதைக்குபின் சொல்லப்படும் வரலாறு ஆதலின், மாரீசன் விசுவாமித்திரனது வேள்வியில் இராமனுக்குப் பயந்தொளிந்த பழியை நினைந்து, அகத்திய முனிவர், மாரீசனை 'மங்கிய புகழ் மாரீசன்' என்ருர். துங்கம் – பெருமை. மொய்ம்பு – வலிமை. துங்கநீண் மொய்ம்பு என்றது பெருமைமிக்க வலிமை என்னும் பொருளது. நேர்தல், போரில் இறங்குதல். (கூகூக)

போரில் அரக்கர் கை ஓங்குதல்

520. விட்டெறி சூலந் தண்டு
விறன்மிகு வுலக்கை கூர்வாள்
கட்டுநீள் பாசந் தோட்டி
கப்பணங் கலப்பை யீட்டி

வட்டவேல் முதல வுந்தி
மழையிடிப் பென்ன வார்ப்பக்
கெட்டனர் விண்ணோ ரோகை
கிளர்ந்தன ரரக்க ரெல்லாம்.

விட்டு எறி சூலம், தண்டு, விறல்மிகு உலக்கை, கூர்வாள்,
கட்டும் நீள் பாசம், தோட்டி, கப்பணம், கலப்பை, ஈட்டி,
வட்டவேல், முதல உந்தி மழை இடிப்பு என் ஆர்ப்ப,
கெட்டனர் விண்ணோர் ஓகை; கிளர்ந்தனர் அரக்கர் எல்லாம்.

பொ: விட்டு எறிகின்ற சூலம், தண்டாயுதம், வெற்றிமிக்க உலக்கை, கூரிய வாள், பகைவரைக் கட்டுதற்குரிய பாசம், அங்குசம், இரும்பு நெருஞ்சி முள், கலப்பை, ஈட்டி, வட்டமான வேல், முதலியவற்றைச் செலுத்தி மேகத்தின் இடிமுழக்கம்போல ஆரவாரிக்கத் தேவர்கள் மகிழ்ச்சி குறைந்தார்கள். அரக்கர்கள் எல்லாம் மகிழ்ச்சி மிக்கவராயினர்.

கு: பகைவர்கள்மேல் விட்டெறிதற்குரிய சூலம் என்றது கைவேலினை. உலக்கை யென்றது இரும்புலக்கையை. தோட்டி – அங்குசம். கப்பணம் – இரும்பு நெருஞ்சி முள்; இதனை யானைவரு வழியில் சிதறினால் பகைவர் யானை வரவியலாது. நிலத்தையுழுங் கலப்பையையே பகைவர் மார்பையும் உழப் படையாகக் கொண்டார் என்றவாறு. பலராமன் ஆயுதமும் கலப்பை யாதல் இங்கு நினையலாம். ஈட்டி என்பது குறிய வாள். வேலில் ஒருவகையை உணர்த்த வட்டவேல் என்றார். உந்துதல் – செலுத்துதல். ஓகை கெட்டனர் எனவும் ஓகை கிளர்ந்தனர் எனவும் இருவழியும் இயைந்து ஓகை என்ற சொல் தாப்பிசைப் பொருளதாக நின்றது. அரக்கர் உவகை ஓங்கும் போது தேவர்களின் மகிழ்ச்சி கெடுகின்றது என்க. (ககூஉ)

அரக்கர் தோற்றல்

521. பொருப்புறழ் களிறும் தேரும்
புரவியும் போகத் தாண்டி
இருப்புறழ தண்டு வாளே
முதனெடும் படைகளுந்திச்

செருப்புரி வானோ ரானோர்
திரண்டனர் செறுத்துத் தம்மில்
ஒருப்புரிந் துந்த நில்லா
துடைந்ததவ் வரக்கன் சேனை.

பொருப்பு உறழ் களிறும் தேரும் புரவியும் போகத் தூண்டி,
இருப்பு உறழ் தண்டு வாளே முதல் நெடும் படைகள் உந்திச்
செருப்புரி வானோர் ஆனோர் திரண்டனர் செறுத்துத் தம்மில்
ஒருப் புரிந்து உந்த, நில்லாது, உடைந்தது அவ்வரக்கன் சேனை.

பொ. மலைபோன்ற யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் விரைந்து போகுமாறு ஓட்டிக்கொண்டு, இரும்போடு மாறுபடத்தக்க தண்டாயுதம், வாள் முதலிய நீண்ட ஆயுதங்களைச் செலுத்திப் போர் புரிகின்ற தேவர்கள், கோபித்துத் தம்மில் ஒற்றுமைகொண்டு திரண்டனராய்ப் பல ஆயுதங்களையும் செலுத்தவே அரக்கர் சேனையானது நில்லாமல் தோற்றது.

கு: யானைக்கு மலை வடிவத்தால் உவமையாயது. தூண்டுதல் என்பது விரைந்து செல்லுமாறு ஓட்டுதலை உணர்த்தியது. உறழ், உவமையுருவு. தண்டின் வலிமை புலப்பட இருப்புறழ் தண்டு என்றார். உறழ்தல், மாறுபடுதல். உந்துதல் – செலுத்துதல். வானோ ரானோர் தம்மில் ஒருப்புரிந்து திரண்டனர் என இயையும். ஒருப்புரிதலாவது, ஒருமைப்பாடு உடையராதல். பலரும் திரண்டு செலுத்திய ஆயுதங்களால் அரக்கர் சேனை தோற்றது என்க. உடைதல் – தோற்றல். (௫௨௧)

சுமாலியோடு வசுக்கள் போர்

522. இருபடை வீர ருள்ளோர்
யாவரு மெழுந்து சாய்ந்து
பொருவழிச் சுமாலி நோக்கிப்
பொருகணை மாரி தூவி

வருபடை மாய்ப்பக் கண்டு
வசுக்களோ ரெண்ம ராவோர்
செருவலி மிகுபொற் றோளார்
சென்றவ னோடு நேர்ந்தார்.

இருபடை வீரர் உள்ளோர் யாவரும் எழுந்து, சாய்ந்து
பொருவழி, சுமாலி நோக்கி, பொருகணை மாரி தூவி,
வருபடை மாய்ப்பக் கண்டு, வசுக்கள் ஓர் எண்மர் ஆவோர்.
செருவலி மிகுபொன் தோளார், சென்று அவனோடும் நேர்ந்தார்.

பொ: தேவர் அரக்கர் என்ற இருபடையினும் வீரராய் உள்ளோர் யாவரும் ஒருமுறை கிளர்ந்து எழுந்தும் மறுமுறை சாய்ந்தும் போர் செய்யும்போது, சுமாலி பார்த்துத் தமக்குத் தாமே ஒப்பாகிய அம்புகளை மழை போலத் தூவித் தன்மேல் பொரவருகின்ற தேவர் படையை மாய்ப்பதைக் கண்டு வசுக்கள் எண்மரும் போர்செய்யும் வலிமிக்க அழகிய தோள்களை யுடையராய்ச் சென்று அந்தச் சுமாலியோடும் எதிர்த்தார்கள்.

கு: எழுந்து சாய்ந்து என்பன வெல்லுதலையும் தோற்றலையும் உணர்த்தின. வெற்றியும் தோல்வியும் மாறி மாறி இருபடை வீரர்க்கும் உண்டாயின என்றவாறு. வெற்றியே பெறவேண்டும் என்ற நோக்கத்தால் சுமாலி சிறந்த அம்புகளை மாரிபோல் தூவிப் போர்செய்தான் என்றவாறு. சுமாலியின் கடும் போரைக்கண்டு வசுக்கள் எண்மரும் போர் விருப்பம் மிக்கு வந்து அச் சுமாலியோடு போர் செய்தனர் என்க. தங்கள்படை பின்வாங்கிய நிலையில் இருப்பது காணும்போது வசுக்களுக்குப் போர் செய்யும் விருப்பம் மிக்கது என்பார், 'வருபடை மாய்ப்பக் கண்டு...... செருவலி மிகு பொற்றோளார் சென்றவனோடு நேர்ந்தார், என்றார். தோளாராய் நேர்ந்தார் என முற்றெச்சமாக்கி முடிக்க. (கசுசு)

இந்திரன் சுமாலியோடு பொருதல்

523. ஒண்டிற லோர்க ளிம்மே
லுற்றமர் செய்யுங் காலைக்
கண்டவர் வியப்பஞ் சால
விந்திரன் கனன்று பொங்கித்

திண்டிறற் சுமாலி தேரைச்
சின்னஞ்செய் தவன்றன் சென்னித்
தண்டினை வாங்கி யாற்றற்
றடக்கையாற் சுழற்றி விட்டான்.

ஒண் திறலோர்கள் தம்மேல் உற்றமர் செய்யும் காலை,
கண்டவர் வியப்பம் சால, இந்திரன் கனன்று பொங்கி,
திண்திறல் சுமாலி தேரைச் சின்னம் செய்து அவன்தன் சென்னி,
தண்டினை வாங்கி ஆற்றல் தடக்கையால் சுழற்றி விட்டான்.

பொ: ஒளிமிக்க திறமையுடைய வசுக்கள்மேல் பாய்ந்து சுமாலி போர் செய்யும்பேது, கண்டவர்தம் வியப்பு மிகுமாறு இந்திரன் மனம் கனன்று வெகுண்டு, திண்மையும் திறமையு முடைய சுமாலியின் தேரைச் சின்ன பின்னம் செய்துவிட்டு அவன் தலைமேல் தன் தண்டாயுதத்தை எடுத்து, வலிமை மிக்க தன் பெரிய கையால் சுழற்றி விடுத்தான்.

கு: ஒண்டிறலோர் என்றது, எண்மர்வசுக்களை. வசுக்ளோடு சுமாலி போர்செய்யும்போது இந்திரன் மனம் கொதித்துச் சினந்து அச்சுமாலியின் தேரை அழித்துத் தண்டாயுதத்தை அவன் தலைமேல் விடுத்தான் என்றவாறு. வியப்பு என்னும் சொல் இங்கு அம்சாரியைப் பெற்று வியப்பம் என்ருயிற்று. வியப்பஞ் சால என்பது கண்டவர்கட்கு வியப்புமிகுமாறு என்றவாறு. திண்டிறல் தேர்க்கும் அடையாக்கலாம். தேரைச் சின்னம் செய்தலாவது தேரின் உருவமே தெரியாவண்ணம் சின்னபின்னமாகச் சிதைத்தல். தண்டினை எடுத்துச் சுழற்றி அவன்தன் சென்னிமேல் விட்டான் என்க. வாங்குதல், எடுத்தல் என்னும் பொருளது. (ககூரு)

இந்திரன்விட்ட தண்டின் செலவு

524. காலவெந் தண்ட மென்னக்
கடவுளர் சீற்ற மென்ன
ஆலம தென்ன வூழி
யனலென்ன வரனூர்விட்ட

சூலமே தென்ன மாயோன்
சுடர்விடு நேமியென்னச்
சீலமொன் றில்லான் றன்மேற்
சென்றது தேவர் வாழ்த்த.

கால வெம் தண்டம் என்ன, கடவுளர் சீற்றம் என்ன,
ஆலம் அதுஎன்ன, ஊழி அனல்என்ன, அரனூர் விட்ட
ஆலம் அதுஎன்ன, மாயோன் சுடர்விடு நேமி என்ன,
சீலம் ஒன்று இல்லான் தன்மேல் சென்றது தேவர் வாழ்த்த.

பொ: (இந்திரன் விட்ட அத்தண்டு) எமன்விட்ட கொடிய தண்டாயுதம் போலவும், முனிவரின் சீற்றம் தப்பாது செல்லுதல் போலவும் நஞ்சு போலவும், ஊழிக்கடையில் எழும் நெருப்புப் போலவும் சிவபிரான்விட்ட சூலப்படை போலவும், திருமாலின் சுடர்விடுகின்ற சக்கரப்படை போலவும் தேவர்கள் வாழ்த்த, ஒழுக்கமற்றவனாகிய சுமாலியின்மேல் சென்றது.

கு: இந்திரன் விட்ட தண்டு சுமாலியின் மேற்சென்றதற்கு ஆறு உவமைகள் கூறப்பட்டன. இது பல்பொருள் உவமை. காலவெந்தண்டம் என்றது எமனுடைய கொடிய தண்டத்தை. அது செல்வதுபோலச் சென்றது என்றமையால் சுமாலிக்கு அது காலதண்டமாக அவனை அழிக்கும் என்னும் கருத்தினது. கடவுளர் சீற்றம் என்றது, தவத்தால் சிறந்த முனிவரின் கோபம் என்றவாறு. கடவுளர் என்றது இங்கு முனிவரை யுணர்த்தியது. ஆலம் என்றது, பாற்கடலில் எழுந்த நஞ்சினை. காலதண்டமும் கடவுளர் சீற்றமும் ஆலமும் ஊழி அனலும் அரனூர்விட்ட சூலமும் மாயோன் விட்ட நேமியும் இந்திரன் தண்டத்திற்கு உவமையாதல் விரைந்த செலவும் தப்பாமல் அழித்தலும் பற்றியாம். சீலம் ஒன்றில்லான் என்றது சுமாலியை.

(கசகசு)

525. குன்றில்வீ ழசனி யென்ன
வமரர்கோன் குலிச மென்ன
வென்றிசேர் சுமாலி சென்னி
வீழ்த்தவன் வெற்பு மேனி

ஒன்றிய வங்க மெல்லா
முருத்தெரி வுருத வண்ணம்
கன்றிய குருதி நீராய்க்
கரைத்தது கதையாங் கூற்றம்.

குன்றில்வீழ் அசனி என்ன, அமரர்கோன் குலிசம் என்ன
வென்றிசேர் சுமாலி சென்னி வீழ்ந்து அவன் வெற்பு மேனி
ஒன்றிய அங்கம் எல்லாம் உருத்தெரிவுருத வண்ணம்
கன்றிய குருதி நீராய்க் கரைத்தது கதைஆம் கூற்றம்.

பொ: அந்தக் கதையாகிய எமன், குன்றின்மேல் வீழ்ந்த இடிபோலவும், இந்திரனது வச்சிராயுதம் போலவும் தாக்கி, வெற்றிபொருந்திய சுமாலியின் தலையைத் தரையில் வீழ்த்தி, அவனது மலை போன்ற உடம்பில் பொருந்தியுள்ள அங்கங்கள் எல்லாம் உருத்தெரியாதபடி கன்றிப்போன இரத்தநீராகக் கரைத்துவிட்டது.

கு: குன்று சுமாலியின் உடம்புக்கும் இடி தண்டாயுதத்திற்கும் உவமை. குலிசம்—வச்சிரப் படை. இந்திரன் வீசிய தண்டிற்கு உவமையாக அவனது வச்சிரப்படையையே இங்கு உவமையாகக் கூறப்பட்டது. வெற்பு மேனி உவமைத் தொகை. சுமாலியின் கை இது, காலிது எனத் தெரியவொண்ணுதபடி இரத்தக் குழம்பாகும்படி கதை கரைத்துவிட்டது என்றவாறு. கதை ஆம் கூற்றம் என்பது உருவகம். (கக௨எ)

இந்திரசித்தின் போர்

526. பல்லணை குளிப்பப் பண்டு
படிக்கொரு வீர னென்னுஞ்
சொல்லணை யுறப்போர் வென்ற
துறுகழற் சுமாலி யென்னும்

வல்லணை முறிய வோடும்
வளர்படை வெள்ளந்தாங்கி
வில்லணை கட்டிப் போர்த்து
விலங்கினன் மேக நாதன்.

பல் அணை குளிப்பப் பண்டு படிக்கு ஒரு வீரன் என்னும்,
சொல் அணையுறப் போர்வென்ற துறுகழல் சுமாலி என்னும்
வல்அணை முறிய, ஓடும் வளர்படை வெள்ளம் தாங்கி,
வில்அணை கட்டிப் போர்த்து விலங்கினன், — மேகநாதன்

பொ: (பற்களைக் கடிக்கும்போது) பற்கள் தமக்கு அணையாக விளங்கும் வாயிதழ்களில் அழுந்துமாறு கோபித்து, 'இந்த உலகத்திற்கு ஒப்பற்ற ஒரு வீரன்' என்று சொல்லுகின்ற புகழ்ச்சொல் தன்னை அடையுமாறு போரில் பகைவரை வென்ற வலிய கழலை அணிந்த சுமாலி என்கின்ற வலிய அணையானது முறிந்து சாய்ந்தவுடன் தோற்று ஓடுகின்ற வளர்ச்சியுள்ள சேனையாகிய வெள்ளத்தைத் தாங்கி நின்று வில்லினால் அம்பு அணைகட்டி வழியை மூடி இந்திரசித்துத் தடுத்து நிறுத்தினான்.

கு: பல்லணை என்புழி அணையென்றது பல்லை அடுத்துள்ள உதட்டினை. வெகுளும்போது பற்கள் உதட்டில் பதியக் கடித்தல் இயல்பு. அவ்வியல்பு புலப்படப் 'பல் அணை குளிப்ப' என்றார். சுமாலி பண்டு போர் செய்யுங்கால் நிகழ்ந்த மெய்ப்பாட்டினை புலப்படுத்தியவாறு. பண்டுபோர் வென்ற சுமாலி என்னும் வலிய அணை இப்போது முறிதலால் புறப்பட்டு ஓடும் சேனையாகிய வெள்ளத்தை இந்திரசித்து அம்பினால் அணைகட்டித் தடுத்து நிறுத்தினான் என்க. படி – பூமி. தன்னொப்பார் இல்லாத பெரு வீரன் என்பார், படிக்கொரு வீரன் என்னச் சொல்கின்ற புகழ்ச் சொல் அணையுறப் போர்வென்ற சுமாலி' என்றார். துறுகழல் – வலிய வீரக்கழல். சுமாலி என்னும் வல்லணை, படைவெள்ளம் என்பன உருவகம். அணைமுறிய ஓடும் வெள்ளம்போலச் சுமாலி இறந்தவுடன் ஓடின சேனையின் இயல்பைப் புலப்படுத்த வேண்டி இங்ஙனம் உருவகஞ் செய்தவாறு. சுமாலி இறந்தவுடன்

கெட்டோடிய அரக்கர் படையை இந்திரசித்து கண்டு தன் வில்லிலிருந்து விட்ட அம்புகளால் அணைகட்டி வழிமூடித்தடுத்தான் என்றவாறு. போர்த்தல் – மூடுதல். வில்லணை என்றது வில்லில் விடுத்த அம்பாலாகிய அணையை. விலங்குதல் தடுத்தல். (கசூஅ)

527. பரியின்மேற் பதாதி தன்மேற்
பாய்மத வருவி வேழக்
கிரியின்மேற் செம்பொற் றேர்மேற்
கிளர்வலிப் பாகன் றன்மேல்
விரியுமேற் பதாகை தன்மேன்
விறற்கணை விடுத்தான் வெம்போர்
புரியுமேற் புவன மூன்றும்
பொடி செய வல்ல வீரன்.

பரியின்மேல், பதாதி தன்மேல் பாய்மத அருவி வேழக் கிரியின்மேல், செம்பொன்தேர்மேல், கிளர்வலிப் பாகன் தன்மேல் விரியும்மேற் பதாகை தன்மேல் விறல்கணை விடுத்தான்; வெம்போர் புரியுமேல், புவன மூன்றும் பொடிசெய வல்ல வீரன்.

பொ : கொடிய போரைச் செய்வானுயில் உலகம் மூன்றையும் அழித்துப் பொடி செய்யவல்ல வீரனுகிய இந்திரசித்து, குதிரையின்மேலும், காலாட்படைமேலும், பாய்கின்ற மத அருவியினை யுடைய யானைகளாகிய மலைகளின்மேலும், சிவந்த பொன் மயமான தேர்மேலும், மிக்கவலிமையினையுடைய பாகன்மேலும், விரிந்துள்ள தேர்மேற்கொடியின்மேலும் வெற்றிவாய்ந்த அம்புகளை விடுத்தான்.

கு : பதாதி என்றது காலாட்படையினரை. வேழக்கிரி என்றது உருவகம். இதனுல் யானையின் பருமை புலப்படுத்திய வாறு. விரியும் பதாகை; தேர்மேற் பதாகை என்க. விறற்கணை – வெற்றி வாய்ந்த அம்பு. மூவுலகத்தையும் நோக்கிப் போர் புரிவானுயின் அம்மூவுலகத்தையும் அழித்துப் பொடியாக்கத்தக்க

வலிமை படைத்தவன் இந்திரசித்து என்றவாறு. அத்தகையோன் தேவர்களின் நால்வகைப் படையின் மேலும் அம்புகள் தூவினல் தடுக்கவல்லார் யார்? என்றவாறு. (கசுகூ)

சயந்தன் போர்

528. ஒட்டிய பரிதேர் காலாள்
உலைந்திடக் கண்டு நின்ற
வட்டவெண் குடைமா மௌலி
வாசவன் மைந்தன் சீறி
விட்டிலங் கெயிற்றுப் பேழ்வாய்
மேகநா தன்ற னேடு
முட்டின னவனுஞ் சென்று
முடுகினன் போரின் மூண்டான்.

ஒட்டிய பரிதேர் காலாள் உலைந்திடக் கண்டு நின்ற
வட்ட வெண்குடை மா மௌலி வாசவன் மைந்தன் சீறி,
வீட்டு இலங்குபிற்றுப் பேழ்வாய் மேகநாதன் தனேடு
முட்டினன்; அவனும் சென்று முடுகினன் போரில் மூண்டான்

பொ. போரில் எதிர்ந்த குதிரை, தேர், காலாள் யாவும் அழியக் கண்டு நின்ற, வட்டமான வெண்கொற்றக்குடையும் பெரிய முடியும் உடைய இந்திரனுக்கு மகனுகிய சயந்தன் வெகுண்டு, ஒளிவிட்டு விளங்குகின்ற கோரப்பற்களோடு கூடிய பிளந்தாற்போன்ற வாயினையுடைய இந்திரசித்தோடு நெருங்கித் தாக்கினன். அந்த இந்திரசித்தும் சென்று விரைந்து போர்செய்யத் தலைப்பட்டான்.

கு: ஒட்டுதல் — எதிர்தல். வஞ்சினம் கூறி எனப் பொருள் கூறலும் ஆம்; யானை இனம் பற்றிக் கொள்ளப்படும்; எனவே, நாற்படையும் அழியக்கண்டு சயந்தன் சீறி மேகநாதன் தன்னேடு முட்டினன் என்க. முட்டுதல் — நெருங்கித் தாக்குதல். பேழ்வாய் —

பிளந்தாற்போன்ற வாய். முடுகுதல் – விரைதல். முடுகினனாய்ப் போரில் மூண்டான் என முற்றெச்சமாக்கி முடிக்க. போரில் மூளுதல் என்பது போர் மேற் கொள்ளுதல் என்றவாறு. (உ௰௰)

529. இருவரு மேக நாத
னிவனவன் சயந்த னென்று
தெரிவருங் கடுமை யோராத்
திரிபுவ னத்து ளோர்கள்
வெருவர விருவர் சேனை
வியந்துபோர் கண்டு நிற்ப
ஒருவரை யொருவர் வெல்ல
வுற்றமர் புரியுங் காலை.

இருவரும் மேகநாதன் இவன்; அவ்ன் சயந்தன்; என்று
தெரிவு அரும் கடுமை ஓராத் திரிபுவனத்துளோர்கள்
வெருவர இருவர் சேனை வியந்து போர்கண்டு நிர்ப,
ஒருவரை ஒருவர் வெல்ல, உற்று அமர் புரியும் காலை.

பொ: மூவுலகத்தவர்களும் மேகநாதன் இவன்; அவன் செயந்தன்; என்று இதுகாறும் தெரிந்திராத அவர் கடுமையை ஓர்ந்து அஞ்சா நிற்கவும், இருதிறத்தார் சேனைகளும் வியப்படைந்து போர்கண்டு நிற்கவும், ஒருவரை ஒருவர் வெல்ல எண்ணி, இருவரும் நெருங்கிப் போர் புரியும்போது.

கு: இருவரும் உற்றமர் புரியும் காலை என இயையும். திரிபுவனத்துளோர்கள் இவன் மேகநாதன்; இவன் சயந்தன்; என்று, தெரிவருங் கடுமை ஓரா வெருவரவும், சேனை கண்டு நிற்பவும் ஒருவரை ஒருவர் வெல்ல இருவரும் அமர் புரியுங்காலை என இயையும். கடுமை ஓர்ந்து வெருவர என்க. ஓரா செய்யா வென்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். இருவர் சேனை என்றது, தேவர் சேனை அரக்கர் சேனை என்ற இருசேனையையும், வெருவர, நிற்ப இருவரும் அமர் புரியுங்காலை என முடிக்க. குளகம். (உ௰௧)

530. ஏமுக மறிய வல்ல
விராவணி யெதிர்த்தோ ரஞ்ச
மாமுக மறிந்து தூண்டு
மாதலி மைந்த னான
கோமுக னென்னும் பாகன்
குலைந்திட வவன்றன் மெய்யில்
தீமுக வயிர வாளி
செறித்திடச் சயந்தன் சீறி.

ஏமுகம் அறிய வல்ல இராவணி, எதிர்த்தோர் அஞ்ச,
மாமுகம் அறிந்து தூண்டும் மாதலி மைந்தனான
கோமுகன் என்னும் பாகன் குலைந்திட, அவன் தன் மெய்யில்
தீமுக வயிர வாளி செறித்திடச் சயந்தன் சீறி.

பொ: அம்பின் தன்மையை அறிந்து பயன்படுத்த வல்லவனான இந்திரசித்து, எதிர்த்தவர்கள் அஞ்சுமாறு குதிரையின் தன்மை அறிந்து ஓட்டுகின்ற மாதலியின் மகனான கோமுகன் என்னும் பாகன் நடுங்கிட அவனுடைய உடம்பில், நெருப்பை முகத்தே கொண்டுள்ள வயிரம் போன்ற உறுதியான அம்பு எய்திடக் கண்டு சயந்தன் வெகுண்டு.

கு: குளகம். ஏ – அம்பு. முகம் என்பது இங்குத் தன்மையை யுணர்த்தியது. இராவணன் மகன் இராவணி எனப்பட்டான். இது தத்திதாந்தம். மா – குதிரை. முகம் என்றது இங்கு முகக் குறிப்பினை உணர்த்தியதாகவும் கொள்ளலாம். அறிந்து தூண்டுதல் மாதலிக்கும் அடையாக்கலாம். மாதலி இந்திரனது பாகன், இந்திரன் மகனுக்கு கோமுகன் பாகனாயிருந்தான். குலைதல் – நடுங்குதல். தீமுக வாளி என்றது, நெருப்பைச் சொரிகின்ற முகத்தினையுடைய அம்பினை. வயிர வாளி என்றது, வயிரம் போன்ற உறுதியினை உடைய அம்பினை. செறித்தல் – தைத்தல். இராவணி, வாளி செறித்திடச் சயந்தன் சீறி என்க. (உ௰உ)

531. ஏகவீ ரியனு யுள்ள
விராவணி யேறு திண்டேர்ப்
பாகன்மேற் பகழி மாரி
தூவிடப் பாயுஞ் சோரி
வேகமா நெய்யிற் பொங்கி
யோங்கிய வெகுளித் தீயின்
மேகநா தன்றன் வாளி
விடுத்தனன் சயந்தன் றன்மேல்.

ஏக வீரியனுய் உள்ள இராவணி ஏறு திண்தேர்ப்
பாகன்மேல் பகழிமாரி தூவிடப், பாயும் சோரி
வேகமாம் நெய்பில் பொங்கி, ஓங்கிய வெகுளித் தீயின்
மேகநாதன் தன் வாளி விடுத்தனன் சயந்தன் தன்மேல்.

பொ : சயந்தன், தனித்தன்மை வாய்ந்த வீரனுக உள்ள இந்திரசித்து ஏறியுள்ள திண்ணிய தேரை ஓட்டும் பாகன்மேல் அம்புமழைவயத்தூவிய, அதனல் பாகனுடம்பிலிருந்து பாய்கின்ற இரத்தம் ஆகிய வேகமாம் நெய்யினுல் பொங்கி வளர்ந்த கோபத் தீயினையுடைய இந்திரசித்து, தன் அம்புகளைச் சயந்தன்மேல் விடுத்தனன்.

கு : ஏகவீரியன், ஒப்பற்ற வீரன் என்றவாறு. சோரியாகிய வேகமா நெய்யினுல் இந்திரசித்தின் வெகுளியாகிய தீ பொங்கி ஓங்கியது என்றது உருவகம். பாகன் உடம்பிலிருந்து சொரியும் குருதியைக்கண்டு இந்திரசித்துக் கோபித்து அம்பு சொரிந்தான் என்பது கருத்து. பாயும் சோரியாகிய வேக நெய்யினுல் பொங்கி ஓங்கிய வெகுளித் தீயினையுடையவனுன இந்திரசித்து, சயந்தன் மேல் வாளிவிடுத்தனன் என முடிக்க. தீக்கு வேகந் தருதல் பற்றி வேகமா நெய் எனச் சிறப்பித்தவாறு.

(உ௰௧)

சயந்தன் மயங்கி வீழ்தல்

532. இயங்கிய வடவைத் தீயி
னெரிகணை நிறத்திற் றைப்ப
மயங்கினன் சயந்தன் பாகன்
மகன்வலி தப்பி லாமை
முயங்கியாங் கவனைக் கொண்டு
முனைக்களங் கடந்து போகப்
பயங்கிளர் வானோ ரெல்லாம்
பாறினர் பரந்தா ரெங்கும்.

இயங்கிய வடவைத் தீயின் எரிகணை நிறத்தில் தைப்ப, மயங்கினன் சயந்தன்; பாகன் மகன், வலி தப்பிலாமை முயங்கி ஆங்கு அவனைக் கொண்டு முனைக்களம் கடந்துபோக, பயங்கிளர் வானோ ரெல்லாம் பாறினர்; பரந்தார் எங்கும்.

பொ: எழுந்து திரிகின்ற வடவாமுகாக்கினிபோல எரிகின்ற அம்புகள் தன் மார்பில் தைத்தலால் சயந்தன் அறிவு மயங்கினன்; மாதலியாகிய பாகனுக்கு மகன் ஆகிய கோமுகன், சயந்தனது வலிமை தப்பாத வண்ணம் அவ்விடத்து அவனைத் தழுவி எடுத்துக் கொண்டு போர்க்களத்தைக் கடந்து போனுகை, அச்சம் மிக்க தேவர்கள் எல்லாம் எவ்விடத்தும் பரவினராய் ஓடினர்கள்.

கு: வடவைக்கனல் கடலினுள் தங்கியிருப்பது; அது எழுந்து இயங்கினற் போல இந்திரசித்தின் எரிகக்கும் கணைகள் சென்று சயந்தன் மார்பில் தைத்தன என்றவாறு. இது இல்பொருளுவமை. இந்திரசித்தின் எரிகக்கும் கணைக்கு உவமையாக வேண்டி இயங்கிய வடவைத் தீயின் என இல்பொருளைக் காட்டியவாறு. பாகன் மகன் என்றது, மாதலியாகிய பாகனின் மகனாகிய கோமுகனை. இனி, பாகன் என்றது கோமுகனை எனவும் மகன் என்றது சயந்தனை எனவும் கொண்டு அச்சயந்தனது வலிமை தப்பாதபடி அவனைத் தழுவி

எடுத்துக் கொண்டு சேர்முகன் போர்க்களம் கடந்து போனான் என்றலும் ஒன்று. முனைக்களம் – போர்க்களம். சயந்தனே மயங்கினபோது யாம் செய்வதென்னை? எனத் தேவர்கள் அச்சமிக்க வராய்ப் பலவிடத்தும் பரவி ஓடினர் என்க. ஒரே வழியில் ஓடினால் பகைவர் பின்தொடர்தலும் ஆகும் ஆதலின், எங்கும் பரந்து பாறினர் என்க. பாறுதல் – ஓடுதல். (உயச)

### இந்திரனது கோபம்

533. சன்மகன் மந்திர் செய்யா
டலைமகன் றந்த வந்தத்
தொன்மகன் மைந்தன் றன்பாற்
றோன்றிய தூய மைந்தன்
புன்மகன் பயந்த வந்தப்
புலைமகன் செயமும் போரில்
தன்மகன் றளர்வுங் கேட்ட
சதமகன் சலத்தின் மிக்கான்.

சன்மகன் மந்திர் செய்யாள் தலைமகன் தந்த அந்த
தொல்மகன் மைந்தன் தன்பால் தோன்றிய தூய மைந்தன்
புன்மகன் பயந்த அந்தப் புலைமகன் செயமும், போரில்
தன்மகன் தளர்வும் கேட்ட சதமகன் சலத்தின் மிக்கான்.

பொ: பிறவியையும் பிறவிக்குக் காரணமான வினைகளையும் தீர்க்கவல்ல திருமகள் நாயகனாகிய திருமால்பெற்ற அந்தப் பழமை யான மகனாகிய பிரமனுக்கு மைந்தனாகிய புலத்தியனிடத்தில் தோன்றிய தூய மகனாகிய விச்சிரவசுவுக்குப் பிறந்த புன்மை மிக்கவனாகிய இராவணன் பெற்ற அந்தக் கீழ்மகனாகிய இந்திர சித்தின் வெற்றியும், போரில் தன் மகன் சயந்தனது தளர்ச்சியும் கேள்வியுற்ற இந்திரன் கோபம் மிக்கவனானான்.

கு: செய்யாள் தலைமகன் என்றது திருமாலை. சன்மகன்மந்திர் தலைமகன் எனத் திருமாலுக்கு அடையாக்குக.

சன்மம் - பிறப்பு. கன்மம் – வினை. சன்மகன்மம் என்பது உம்மைத் தொகை. பிறப்பையும் பிறப்புக்குக் காரணமான வினையையும் தீர்க்கவல்ல திருமால் என்றவாறு. இந்திரசித்தின் வெற்றியையும் சயந்தனது தளர்ச்சியையும் கேள்வியுற்று இந்திரன் கோப மிக்கவனானன் என்பதைக் கூறவந்த ஆசிரியர், திருமால் முதலாகத் தொடர்ந்தவரும் இந்திரசித்தின் கொடி வழியைக் கூறி, இந்திரசித்தின் வெற்றிக்குக் காரணம் அவன் பரம்பரையின் பெருமையே' என்பது புலப்படச் செய்தவாறு. தொல்மகன் என்றது பிரமனை. தொல்மகன் மைந்தன் என்றது, புலத்தியனை. புலத்தியன்பால் தோன்றிய தூய மைந்தன் என்றது, விச்சிரவசுவை. விச்சிரவசுவின் புன்மகன் என்றது, இராவணனை. புலைமகன் என்றது இந்திரசித்தனை. சதுமகன் என்றது, நூறு பரிவேள்விகளைச் செய்து இந்திரபதவியைப் பெற்றவன் என்னும் பொருளது. சலம்- கோபம்.

(உ௩௩)

இந்திரன் தேரேறுதல்

534. வருகதே ரென்ன வொல்லை
மாதலி கொணர்ந்து நிற்பக்
குரைகழ லணிந்து கோவை
விசித்துத்தன் கோல மார்பில்
திருமணிக் கவசம் வீக்கித்
திகழ்நுதற் பட்டஞ் சேர்த்தித்
தெரிவையர் திரண்டு வாழ்த்த
வேறினன் செம்பொற் றிண்டேர்.

'வருகதேர்' என்ன, ஒல்லை மாதலி கொணர்ந்து நிற்ப,
குரைகழல் அணிந்து கோவை விசித்துத் தன் கோல மார்பில்
திருமணிக் கவசம் வீக்கி, திகழ் நுதல் பட்டம் சேர்த்தி,
தெரிவையர் திரண்டு வாழ்த்த, ஏறினன் – செம்பொன் திண்தேர்.

பொ: 'வருக தேர்' என்று இந்திரன் கூறின அளவில் விரைவில் தேரினை மாதலி கொணர்ந்து நிற்ப, அவ்விந்திரன்

காலில் ஒலிக்கின்ற வீரக்கழலினை அணிந்து, மணிமாலையைக் கட்டிக்கொண்டு, தனது அழகிய மார்பில் அழகிய மணிகள் பதித்த கவசத்தைக் கட்டிக் கொண்டு, நெற்றியில் விளங்குகின்ற பட்டத்தைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு, பெண்டிரெல்லாம் திரண்டு வந்து வாழ்த்துக் கூறச் சிவந்த பொன்னாலியன்ற திண்ணிய தேரில் ஏறினான்.

கு: இந்திரன் கட்டளையை மாதலி விரைந்து நிறைவேற்றினன் என்பார், 'வருக தேர்' என்ன ஒல்லை மாதலி கொணர்ந்து நிற்ப' என்றார். காலில் கழலும், கழுத்தில் கோவையும், மார்பில் கவசமும் நெற்றியில் பட்டமும் கட்டிக்கொள்ளுதல் போர் வீரர்க்கு இயல்பு. இந்திரன் போகியாகலின் அவனைத் தெரிவையர்திரண்டு வாழ்த்தினர் என்க. தெரிவையர் என்றது பருவம் குறியாமல் பெண்டிர் என்ற பொருளில் வந்தது. விசித்தல்; விக்குதல் என்பன கட்டுதல் என்னும் பொருளன. திகழ் பட்டம் என இயையும். திகழ்தல் - விளங்குதல். (உயசு)

புறப்பாட்டாரவாரம்

535. ஆனக முரசம் பேரி
யாகிய வியங்க ளெல்லாம்
வானக முழக்கி னின்று
முழங்கமா கதர்க ளேத்தத்
தேனகு கோதை மாதர்
திரண்டனர் குனிப்பத் தெய்வக்
கானம்வந் தெழவந் தெங்குங்
கலந்துகந் திருவர் பாட.

ஆனகம், முரசம், பேரி ஆகிய இயங்கள் எல்லாம் வானக முழக்கின் நின்று முழங்க, மாகதர்கள் ஏத்த, தேன்நகு கோதை மாதர் திரண்டனர் குனிப்ப, தெய்வக் கானம் வந்து எழ, வந்து எங்கும் கலந்து கந்திருவர் பாட.

பொ: துந்துமி, முரசம், பேரி ஆகிய வாத்தியங்கள் எல்லாம் விண்ணில் இடி முழக்கம் போன்று நின்று முழங்கிடவும், மாகதர்கள் ஏத்தவும், தேனோடு மலர்ந்த மலர்மாலை அணிந்த பெண்டிர்கள் திரண்டுவந்து நடனமாடவும், தெய்வீக இசைவந்து எழுமாறு வந்து கந்திருவர் எங்கும் பரவிப் பாடா நிற்கவும்.

கு: ஆனகம் – துந்துமி. முரசம், பேரி என்பன போர்க்குரிய வாத்தியங்கள். இயம் - வாத்தியம். வானக முழக்கம் என்றது இடி முழக்கத்தை. மாகதர்கள் – இருந்து ஏத்தும் இயல்பினர் என்பர். தெய்வக்கானம் – தெய்வீக இசை. கந்திருவர் என்போர் இசை பாடி மகிழும் தேவ இனத்தவர். நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின், மென்மொழிமேவலர் என இவர்களைக் கூறலாம். குளகம்.

(உ௫௭)

536. உருத்திர ரொருவ ரோடு
பதின்மரு மொளிரு மீரா
றருக்கரு மெண்ம ராய
வசுக்களு மாய்ந்த கேள்வி
மருத்துவ ரிருவர் தாமு
முதலினர் வானோர் வாழ்த்தச்
செருக்கள மதனை நோக்கிச்
சென்றனன் றேவர் கோமான்

உருத்திரர் ஒருவரோடு பதின்மரும், ஒளிரும் ஈராறு
அருக்கரும், எண்மர்ஆய வசுக்களும், கேள்வி
மருத்துவர் இருவர்தாமும் முதலினர் வானோர் வாழ்த்த,
செருக்களம் அதனை நோக்கிச் சென்றனன் தேவர் கோமான்.

பொ: உருத்திரர் பதினொருவரும், ஒளிவீசுகின்ற பன்னிரண்டு ஆதித்தரும், எண்மராகக் குறிக்கப்படும் வசுக்களும், மருத்துவ நூலை ஆராய்ந்த அறிவையும் கேள்வி அறிவையுமுடைய மருத்துவர் இருவரும் ஆகிய முதன்மையுடையராகிய முப்பத்துமூவர் தேவர்

வாழ்த்தா நிற்க, தேவர் கோமானாகிய இந்திரன் போர்க் களத்தை நோக்கிச் சென்றான்.

கு: முப்பத்து முக்கோடி தேவர்களில் ஒரு கோடிக்கு ஒரு தலைவராக முப்பதுமூவர் தலைமைத் தேவர் உளர். அவர்தாம் உருத்திரர் பதினொருவர், ஆதித்தர் பன்னிருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் என நால்வகையாகப் பகுத்துக் கூறப்படுவர். அருக்கர் – சூரியர்; ஓராண்டின் பன்னிரண்டு மாதங்களில் ஒரு மாதத்திற்கு ஒரு சூரியனாகப் பன்னிரண்டு சூரியர் நமக்கு ஒளி நல்குகின்றனர் என்பது புராண மரபு. மருத்துவர் இருவர் என்பார் அசுவனித்தேவர்கள் எனப்படும் இரட்டையர்; முதலினர் வானோர் என்றது முதன்மையுடையவராகிய முப்பத்துமூவர் தேவர் என்றவாறு. முப்பத்து முக்கோடி தேவர்கட்கும் அரசனாகிய இந்திரன் புறப்படும்போது அவர்களுள் தலைவராகிய முப்பத்து மூவர் வாழ்த்துதல் இயல்பாதல் தெளியலாம். (உ௰௮)

இந்திரசித்தின் போர்

வேறு

537. இந்து சேகரன் பொருப்
பெடுத்ததோ ளிராவணன்
அந்தவிந்தி ரன்றன்மே
லழன்றுபோ ரமர்ந்திட
விந்தையான திண்புயத்து
மேகநாத னில்லெனத்
தந்தையைத் தவிர்த்துவந்த
தானையொடு சீறினான்.

இந்துசேகரன் பொருப்பு எடுத்த தோள் இராவணன்
அந்த இந்திரன் தன்மேல் அழன்றுபோர் அமர்ந்திட,
விந்தையான திண்புயத்து மேகநாதன் நில் எனத்
தந்தையைத் தவிர்த்து, வந்த தானையோடு சீறினான்.

பொ: சந்திரசேகரனாகிய சிவபிரான் வீற்றிருக்கும் வெள்ளி மலையை எடுத்த வலிய தோள்களையுடைய இராவணன், அந்த இந்திரன்மேல் வெகுண்டு போர்செய்ய விரும்ப, வியத்தக்க திண்ணிய தோள்களையுடைய மேகநாதன், தன் தந்தை இராவணனை 'நில்' என்று நிறுத்திவிட்டு, வந்த இந்திரன் சேனையோடு கோபித்துப் போர் தொடங்கினான்.

கு: இந்து – சந்திரன். சிவபிரான் பிறைசூடிய பெம்மான் ஆகலின், இந்துசேகரன் எனப்பட்டான். தேவதேவன் மலையை யெடுத்த வன்மைமிக்க தோள்களையுடையவன் இராவணன் ஆகலின் அத்தோள் வலியால் இந்திரனை வெல்லல் எளிதெனப் போர்செய்ய விரும்பினான் என்ற குறிப்புப் பொருட்பெடுத்த தோள் இராவணன் என்ற அடைபிறல் புலப்படும். அமர்தல் – விரும்புதல். விந்தை – வியப்பு. விந்தையான திண்புயம் என்பதற்கு விரத்திரு அமர்ந்த திண்ணிய தோள் எனலும் ஆம். தவிர்த்தல் – தடுத்தல். (உமசு)

538. வாரிமொண்டு கொண்டெழுந்து
மாகமேவி வார்சிலைக்
காரதிர்ந்து கொண்டுதூவு
காலமாரி யாமெனா
வீரவெஞ்சி லைத்தடக்கை
மேகநாதன் விண்ணகம்
தூரவும்பர் சேனையம்பு
துன்றநின்று தூவினான்.

வாரி மொண்டு கொண்டு எழுந்து மாகம் மேவி வார்சிலைக்
கார் அதிர்ந்துகொண்டு தூவு கால மாரி ஆம் எனா,
வீரவெஞ்சிலைத் தடக்கை மேகநாதன் விண்ணகம்
தூர உம்பர் சேனை அம்புதுன்ற நின்று தூவினான்.

பொ: கடலில் நீரை மொண்டு கொண்டு எழுந்து விண்ணிடத்தைப் பொருத்தி நீண்ட இந்திர வில்லினையுடைய மேகம்

இடித்துக்கொண்டு பொய்கின்ற கார்கால மழையாம் என்னுமாறு, வீரமிக்க கொடிய வில்லையேந்திய பெரிய கையினையுடைய மேகநாதன், ஆகாயம் முழுமையும் நிறைய நின்ற தேவர்கள் மேல் எல்லாம் அம்புகள் தைக்குமாறு நிலைத்துநின்று தூவினன்.

கு: வாரி – கடல். மொண்டு என்ற வினையினால் நீர் என்பது உணரவைத்தவாறு. மாகம் – விண்; வார்சிலை என்றது, இந்திர தனுவை. மேகநாதன் விற்போருக்கு மேகம் உவமை. மேகம், கடலில் நீரை முகந்து கொண்டு விண்ணில் சென்று இந்திரவில் வளைத்து இடித்து மாரி பெய்வதுபோல, மேகநாதனும் அம்புகளை நிரப்பிக்கொண்டு விண்ணில் சென்று, ஆரவாரித்துக் கொண்டு வில்லை வளைத்து அம்புகளைத் தேவர்கள்மேல் சொரிந்தான் என உவமையை விரித்துக்கொள்க. மேகநாதன், நிறத்தாலும் வில்லுடைமையாலும் இடிக்குரலாலும் அம்புமாரி சொரிதலாலும் மேகத்தை நிகர்த்தவனானன் என்க. விண்ணகம் தூர நின்ற உம்பர் சேனை என ஒருசொல் வருவிக்க, இனி, விண்ணகம் தூரவும் உம்பர் சேனை அம்பு துன்றவும் தூவினன் என முடித்தலும் ஆம். தூர்தல் – நிறைதல். (உகஅ)

யானைகளின் அழிவு

539. காறுணிந்த கைதுணிந்த
கந்தரந்து ணிந்தநீள்
வாறுணிந்த மத்தகந்
துணிந்தவெண் மருப்பொடும்
தோறுணிந்த தன்மையாவர்
சொல்லுவார் துணிந்தவாள்
வேறுணிந்த விற்றுணிந்த
வெம்மழுத் துணிந்தவே.

கால்துணிந்த, கைதுணிந்த, கந்தரம் துணிந்த, நீள் வால் துணிந்த, மத்தகம் துணிந்த, வெண்மருப்பொடும் தோல் துணிந்த தன்மை யாவர் சொல்லுவார்? துணிந்த வாள், வேல் துணிந்த, வில்துணிந்த வெம் மழுத் துணிந்தவே.

பொ : கால்கள் துண்டிக்கப் பெற்றனவும், துதிக்கைகள் துண்டிக்கப் பெற்றனவும், கழுத்துக்கள் துண்டிக்கப்பெற்றனவும், நீண்ட வால்கள் துண்டிக்கப் பெற்றனவும், வெள்ளிய கொம்பு களோடு மத்தகம் துண்டிக்கப்பெற்றனவுமாய் யானைகள் துண்டிக் கப்பட்ட தன்மையை யாவர் முழுவதும் சொல்லவல்லவர்கள்? வீரர்கள் கையிலிருந்த வாள்கள் துணிந்தன; வேல்கள் துணிந்தன; விற்கள் துண்டிக்கப்பெற்றன; கொடிய மழுப்படைகளும் துண்டிக் கப்பெற்றன.

கு : துணிந்த என்ற சொல் ஒரே பொருளில் பன்முறை வரத் தொடுத்தமையால் இச்செய்யுள் சொற்பொருட்பின் வருநிலை அணியாகும். தோல் – யானை. காலும் கையும் கழுத்தும் வாலும் மத்தகமும் மருப்பும் துண்டிக்கப்பெற்றனவாய் யானைகள் துண்டிக் கப்பெற்ற தன்மை பெரும் கோரக் காட்சியாக இருத்தலின் அதனை துணிந்து சொல்வார் எவருமிலர் என்ற கருத்தால் 'யாவர் சொல்லு வார்?' என்றார். வெண் மருப்பொடும் மத்தகம் துணிந்த என இயையும். கால் முதலியன சினைகள்; தோல், முதல்; முதலும் சினையும் ஆகிய ஒற்றுமையுண்மையான் கால் முதலியன துணிந்தனவாய் யானை துணிந்த தன்மையை யாவர் சொல்லுவார்? என ஒன்றுபடுத்திக் கூறினார். வாள், வேல், வில், மழு என்ற ஆயுதங்கள் தேவர்கள் கையிலிருந்தவை. மேகநாதனின் அம்புகளால் யானைகள் துணிந்தன; வாள் முதலியன துணிந்தன என்றவாறு. துணிந்த என்றது அன் சாரியை யில்லாத அகரவீற்றுப் பலவின்பால் வினைமுற்று. (உகக)

குதிரைகளின் அழிவு

540. உரந்துணிந்த காறுணிந்த
வாறுணிந்த வுற்றமா
சிரந்துணிந்த தார்துணிந்த
வார்துணிந்த திண்பதக்
குரந்துணிந்த கூளியுற்ற
குத்துவாதை தீரவூன்
பரந்தவிந்தி ரன்பதாதி
பட்டதேவர் பட்டுளார்.

உரம் துணிந்த, கால்துணிந்த, வால்துணிந்த, உற்றமா
சிரம்துணிந்த, தார்துணிந்த, வார்துணிந்த, திண்பதக்
குரம் துணிந்த. கூளியுற்ற குத்துவாதை தீர ஊன்
பரந்த, இந்திரன் பதாதி பட்ட; தேவர் பட்டுளார்.

பொ: தேவர் சேனையில் பொருந்திய குதிரைகளின் மார்பு துணிக்கப்பெற்றன; கால்கள் துண்டிக்கப்பெற்றன; வால்கள் துண்டிக்கப்பெற்றன; தலைகள் துண்டிக்கப்பெற்றன; கிண்கிணி மாலை துண்டிக்கப்பட்டன; கட்டியுள்ள வார் துண்டிக்கப் பெற்றன; திண்மையான காலில் உள்ள குளம்பு துண்டிக்கப்பெற்றன. பேய்கள்தாம் உற்றிருந்த வயிற்றைக் குத்தும் பசிவாதை தீருமாறு, தசைகள் போர்க்களம் எங்கும் பரவியிருந்தன. இந்திரன் காலாட் படைகள் இறந்துபட்டன; தேவர்களும் இறந்துபட்டார்கள்.

கு: தேவர் சேனையில் குதிரைகள் பட்டதையும் காலாளும் தேவர்களும் பட்டதையும் விளக்கியவாறு. உற்றமா உரம் துணிந்த என மாறிக் கூட்டுக. உரம் – மார்பு. தார் – கிண்கிணி மாலை. இது குதிரையின் கழுத்திலிருந்தது. வார் என்பது தோலாலாகிய கயிறு. இக்கயிறு கடிவாளமாகக் குதிரையின் வாய் தொடுத்துக் கட்டப்பட்டிருக்கும். குரம் – குதிரையின் கற்குளம்பு. கூளி–பேய். குத்துவாதை என்பது வயிற்றைக் குத்துகின்ற பசிநோய். இனி, கொற்று என்பது உணவு என்ற பொருளில் வருதலால் அச் சொல்லே, பின் குற்று – குத்து என மருவியதாக கொண்டு உணவு பற்றிய பசிநோய் எனப் பொருள் கூறலும் ஆம். வாதை–துன்பம். பதாதி – காலாட்படை. படைவீரர்கள் பலர் இறந்தமையால் பேய்களின் பசித்துன்பந்திருமாற தசையாகிய உணவுகள் எவ் விடத்தும் பரவியிருந்தன என்றவாறு. (உகஉ)

### தேர்கள் அழிந்தமை

541. ஆழியற்ற வாணியற்ற
வச்சுமற்ற வுற்றதேர்
ஊழியற்ற வாடையா
லுலைந்தகுன்றை யொத்தவால்

வேழமுற்ற வீரவிற்கை
மேகநாதன் வெங்களத்
தாழியுற்ற தேவர்வெண்
டயிர்க்குமத்த தாயினன்.

ஆழிபற்ற ஆணி அற்ற, அச்சும் அற்ற உற்றதேர்,
ஊழிஉற்ற வாடையால் உலைந்த குன்றை ஒத்தவால்;
வேழம் உற்ற வீரவில்கை மேகநாதன், வெங்களத்
தாழி உற்ற தேவர்வெண் தயிர்க்கு மத்து ஆயினன்.

பொ: அப்போர்க்காளத்தில் வந்தடைந்த தேர்கள், சக்கர மற்றனவும் அச்சாணி அற்றனவும் அச்சு அற்றனவும் ஆகி ஊழிக் காலத்து வீசும் கடுங்காற்ருல் சிதைந்த குன்றினை ஒத்துச் சிதைந்து காணப்பட்டன; மூங்கிலால் செய்தலுற்ற வீரவில்லைத் தாங்கிய கையினையுடைய மேகநாதன், வெவ்விய போர்க்களமாகிய தாழியில் உள்ள தேவர்களாகிய வெண்தயிரைக் கலக்கும் மத்தானன்.

கு: உற்ற தேர், அற்றவாய்க் குன்றை ஒத்த என இயையும்; அற்ற என்பன மூன்றும் முற்றெச்சங்கள். அற்றனவாய் வாடையால் உலைந்த குன்றை ஒத்தன என்க. வாடை என்பது வடக்கிருந்து வீசும் காற்றுக்குச் சிறப்புப் பெயர்; அது இங்குப் பொதுப் பொருளில் வந்தது. ஊழிக்காற்ருல் மலையும் மரங்களும் உயிர்களும் அழிவதுண்டு. மேகநாதன்விட்ட அம்புகளால் அழிவுற்ற குன்றுகளைப் போல இருந்தன என்றவாறு. வேழம் – மூங்கில். மூங்கிலாலாகிய வில்லேந்தி மேகநாதன் தேவர் சேனையைக் கலக்கியதைப் புலப்படுத்த வேண்டிப் போர்க்களத்தைத் தயிர்த் தாழியாகவும் அங்குள்ள தேவர்களை வெண் தயிராகவும் மேகநாதனை மத்தாகவும் உருவகம் செய்தவாறு. இது இயைபுருவகம். இனி, மத்தாயினன் என்புழி வந்துள்ள ஆக்கச்சொல்லை உவம உருபாகக் கொண்டு மத்துப் போன்றவனாயினன் என உவமையாகக் கொள்ளலும் ஆம். ஆக்கச் சொல் உவம உருபாக வருவதுண்டு என்பதை 'ஆள்வாரிலி மாடாவேனோ' (திருவாசகம் – கோயில் மூத்த – 7)

என்பது கொண்டறியலாம். தாழி என்பது வாயகன்ற பெரிய பாத்திரம். மத்தாயினான் என்பதற்கேற்ப விற்கை மேக நாதன் என்றது, மத்துப்போன்றவன் மேகநாதன்; மத்தின் காம்பு போன்றது வில் என்னும் கருத்தும் புலப்பட வேண்டியாகும். (உகரு.)

மேகநாதன் எங்குமாய்த் தோன்றுதல்

542. எண்ணகத்த தும்பை
வீரனேகரூபி யாயினும்
விண்ணகத்தும் விண்ணைமூடு
வெற்பகத்தும் வேலைசூழ்
மண்ணகத்தும் மாதிரப்பு
றத்தகத்தும் வானுளோர்
கண்ணகத்து முள்ளமோர்
கருத்தகத்து மாயினான்.

எண் அகத்த தும்பை வீரன் ஏக ரூபி ஆயினும்,
விண்ணகத்தும், விண்ணை மூடு வெற்பகத்தும் வேலைசூழ்
மண்ணகத்தும் மாதிரப் புறத்தகத்தும், வான் உளோர்
கண்ணகத்தும் உள்ளம் ஓர் கருத்தகத்தும் ஆயினான்.

பொ: யாவரும் மதிக்கத்தக்க தும்பைத்திணைக் குரியனாகிய மேகநாதன், ஒருருவத்தை உடையவனே ஆயினும், விண்ணிலும் விண்ணை மறைக்கும் மலையிலும், கடல்சூழ்ந்த மண்ணுலகத்திலும், திசைகளின் புறத்திலும் விண்ணவர்தம் கண்ணிலும், அவர்கள் உள்ளம் ஓர்கின்ற கருத்திலும் இருப்பவனாயினான்.

கு: மேகநாதனின் போர் விரைவு இதனால் புலப்படுத்திய வாறு. தும்பை என்பது, புறத்திணைகளுள் ஒன்று. 'அதிரப் பொருதல் தும்பை' என்பர். பகைவர் அதிரப் பொரும் மேகநாதன் இங்குத் தும்பை வீரன் எனச் சிறப்பிக்கப்பெற்றான். எண்–மதிப்பு மேகநாதனின் உள்ளம் பிறரெல்லாம் மதிக்கத்தக்க வீரப்

பேருள்ளம் என்பார், எண்ணகத்த தும்பைவீரன் என்றார். அகம் – உள்ளம். ஏனைய அகம் யாவும் ஏழாம் வேற்றுமைப் பொருளன. விண்ணிலும் வெற்பிலும் மண்ணிலும் மாதிரப் புறத்திலும் கண்ணிலும் கருத்திலும் என்பதே பொருள். மாதிரம்–திசை. வானுளோர் கண்ணில் தோன்றி அச்சுறுத்திய மேகநாதன் அவர்கள் நினைக்கின்ற கருத்திலும் தோன்றினான் எண்க. ஓர்தல்–ஆழ்ந்து சிந்தித்தல் ஏகரூபி – ஓர் உருவத்தான். மேகநாதன் ஒருவனே எனினும், போர் செய்யும் விரைவால் எங்குமாய்த் தோன்றினான் என்றவாறு. "பொய் யொரு முகத்தனாகி மனிதனும் புணர்ப்பி தன்றால், மெய்யுற வுணர்ந்தோம் வெள்ள மாயிரம் மடைந்த சேனை, செய்யுறு வினையமெல்லாம் ஒருமுகந் தெரிவதுண்டே, ஐயிரு நூறு மல்ல வநந்தமா முகங்களம்மா" (மூலபலவதைப் – 219) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (உசுச)

மேகநாதன் வில்வீரத்தைப் பிரமன் முதலோர் புகழ்தல்

543. சந்த வில்லி முப்புரந்
தழற்படச் சரந்தொடும்
அந்த வில்லி யுஞ்சினத்
தரக்கரோடு தானவர்
சிந்தவில்லி யைந்தெடுத்த
தேவர்தேவ னும்மலால்
இந்தவில்லி யொக்கும் வில்லி
யெங்குமில்லை யில்லையே.

சந்தவில்லி முப்புரம் தழல்படச் சரம் தொடும்
அந்தவில்லியும், சினத்து அரக்கரோடு தானவர்
சிந்த வில் இயைந்து எடுத்த தேவர் தேவனும், அலால்
இந்த வில்லி ஒக்கும் வில்லி எங்கும் இல்லை இல்லையே.

பொ: முப்புரம் எரிந்துபடுமாறு அம்பினைத் தொட்ட அழகிய மேருமலையாகிய வில்லையுடையவராகிய அந்தச் சிவபிரானும், சினம் மிக்க அரக்கரோடு தானவர்களும் சிந்தி அழியுமாறு செய்ய

வில்லினை இசைந்து எடுத்த தேவர்தேவனாகிய திருமாலும் அல்லது, இந்த வில் வீரனாகிய மேகநாதனை ஒக்கும் வில்வீரர்கள் எங்கும் இல்லை, இல்லை.

கு: சந்த வில்லியாகிய அந்த வில்லியும் என்க. சந்த வில்லி என்றது மேருமலையாகிய அழகிய வில்லையுடைய சிவபிரானை. வில்லி என்பது, சினை முதற்பெயர். இயைந்து – இசைந்து. தேவர் தேவன் என்றது திருமாலை. சிவனும் திருமாலுமாகிய இரு வில் வீரர்களல்லால் மேகநாதனுக்கு வேறுயாரும் நிகராகார் என்றவாறு. எங்கும் என்றது மூவுலகினும் என்றவாறு. இல்லை இல்லையே என்ற அடுக்கு வற்புறுத்தற் பொருளது. (உகரு)

544. என்றுகூறி நான்முகத்த
னாதிதேவர் யாவரும்
வென்றிவில்லி மேகநாதன்
வீரமேவி ளம்பியுள்
கன்றுதேவ ரோடுபோர்செய்
காய்சினத்த ரக்கர்போர்
இன்றொடு முடிந்ததென்
றியம்புகின்ற வெல்லையில்.

என்று கூறி நான்முகத்தன் ஆதி தேவர் யாவரும்
வென்றி வில்லி மேகநாதன் வீரமே விளம்பி, உள்
கன்றுதேவரோடு போர்செய் காய்சினத்து அரக்கர்போர்
இன்றொடே முடிந்தது என்று இயம்புகின்ற எல்லையில்.

பொ: என்று சொல்லி பிரமன் முதலிய தேவர் யாவரும் வென்றிமிக்க வில்லியாகிய மேகநாதனது வீரத்தையே புகழ்ந்து, சொல்லி 'மனம் கன்றியுள்ள தேவரோடு போர் செய்கின்ற கொல்லும் கோபத்தையுடைய அரக்கரது போர் இன்றையோடு முடிந்தது' என்று சொல்லுகின்றபோது.

கு : குளகம். உள்கன்று தேவர் என்றது அரக்கர்களின் அடாத செயல்களால் மனம் கொதித்திருக்கின்ற தேவர்களை, மேகநாதனுடைய போரே பகைவரை யெல்லாம் அழித்துவிட்ட மையால் இனிப் போர் நிகழாது என்பார், 'அரக்கர்போர் இன்றொடே முடிந்தது' எனலாயினர். (உகசு)

கும்பகருணன் போர் 217-219

வேறு

545. அம்பரமு மெண்டிசையு நின்றதிர
வங்கணர வம்பெருகிடத்
தம்பமது கொண்டொரு தடங்கிரி
நடந்துவரு கின்றதெனவும்
கும்பகரு ணன்குருதி கண்கள்வழி
சிந்தவொரு குன்றென நடந்
தும்பர்படை தன்கையொரு தண்டுகொ
டறைந்தன னுலந்துவிழவே.

அம்பரமும் எண்திசையும் நின்றுஅதிர,
அங்கண் அரவம் பெருகிட,
தம்பமது கொண்டு ஒரு தடங்கிரி
நடந்து வருகின்றது எனவும்
கும்பகருணன் குருதி கண்கள்வழி சிந்த
ஒரு குன்று என நடந்து
உம்பர்படை தன்கை ஒரு தண்டுகொடு
அறைந்தனன் உலந்துவிழவே.

பொ : விண்ணும் எண்திசைகளும் நின்று நடுங்கவும் அங்கு ஆரவாரம் பெருகிடவும் தூணைத் தூக்கிக்கொண்டு ஒருபெரிய மலை நடந்துவருகின்றது என்று கண்டோர் சொல்லிடவும், கும்பகருணன் கண்வழியாக இரத்தம் சிந்த, ஒரு குன்று நடப்பதுபோல நடந்து வந்து தேவர் படை அழிந்துவிழுமாறு தன்கையிலிருந்த ஒரு தண்டாயுதத்தைக் கொண்டு தாக்கினன்.

கு: அம்பரம் – ஆகாயம். அதிர்தல் – நடுங்குதல். அரவம் – ஒலி. தம்பம் – தூண். தம்பமது கொண்டு ஒரு தடங்கிரி நடந்து வருகின்றதெனவும் என்றது, தற்குறிப்பேற்றம். குன்று என நடந்து என்பது கும்பகருணனது பருமையைக் காட்டவந்த உவமை. உம்பர்படை உலந்துவிழத் தண்டு கொடு அறைந்தனன் என இயையும். அறைதல் – மோதுதல். (உகஎ)

546. அடற்பொரு களிற்றினை யெடுத்தொரு
களிற்றினை யடித்துமணிதேர்
தடக்கையி னெடுத்தொரி ரதத்தினை
யடித்தும்வலி தாவுகொடியோன்
படப்பரி யினைப்பரியி னெற்றியு
மெதிர்ந்தசுர ரைச்சுரரொடும்
கடற்கடையு மத்தென மிகைப்பொரு
படைக்கடல் கலக்கினனரோ.

அடல்பொரு களிற்றினை எடுத்து ஒரு
களிற்றினை அடித்தும், அணிதேர்
தடக்கையின் எடுத்து ஓர் இரதத்தினை
அடித்தும் வலி தாவு கொடியோன்,
படப்பரியினைப் பரியின் எற்றியும்
எதிர்ந்த சுரரைச் சுரரொடும்
கடல் கடையும் மத்து என மிகைப்பொரு
படைக்கடல் கலக்கினனரோ.

பொ: வலிமையோடு போர் செய்கின்ற யானையைத் தூக்கி மற்றொரு யானையை அடித்தும், அழகிய தேரைத் தன் பெரிய கையால் எடுத்து மற்றொரு தேரினை அடித்தும், வலிமையோடு தாவிச் செல்கின்ற கொடியவனாகிய கும்பகருணன், இறந்துபடுமாறு குதிரையைக் குதிரையை எடுத்துதாக்கியும், தேவர்களைத் தூக்கித் தேவர்மேல் தாக்கியும், பாற்கடலைக் கடையும் மந்தர மலையாகிய மத்தினைப்போல, மிகுதியாகப் போர் புரியும் தேவர்சேனையாகிய கடலைக்கலக்கினான்.

கு: அடல் — வலிமை. வலிதாவு கொடியோன் என்றது, வலிமையொடு தாவிச்செல்கின்ற கும்பகருணனாகிய கொடியேனே. எற்றுதல் — தாக்குதல். சுரரைச் சுரரோடும் 'எற்றியும்' எனப் பின்னும் கூட்டுக. கடல்கடையும் மத்து என்றது மந்தரமலையாகிய மத்தினை. தேவர்தம் நாற்படையாகிய பாற்கடலைக் கும்பகருணனாகிய மத்து கலக்கியது என்றவாறு. களிற்றினை யெடுத்துக் களிற்றினை யடித்தும், தேரினை யெடுத்துத் தேரினை அடித்தும் பரியினை பரியினால் எற்றியும் சுரரைச் சுரரோடு எற்றியும் பொருபடைக்கடல் கலக்கினான் கும்பகருணன் என அவன் கலக்கியவாற்றை விவரித்தவாறு. (உகஅ)

547. கடித்தெயி றுறத்திருகி யிட்டும்வலி
மிக்ககர முட்டிகளினால்
இடித்தென உரத்தின்மிசை குத்தியு
மெதிர்த்தசுர ரைக்கரமெடுத்
தடித்துமடி யிற்பட மிதித்து
மவரைப்பட வறைத்துமணியார்
முடித்தலை களைப்புரள வெற்றியு
முரட்படை முரித்துதறினான்.

கடித்து எயிறு உறத்திருகியிட்டும்
வலிமிக்க கரமுட்டிகளினால்
இடித்தென உரத்தின்மிசை குத்தியும்
எதிர்த்த சுரரைக் கரம்எடுத்து
அடித்தும், அடியில்பட மிதித்தும்
அவரைப்பட அறைத்தும் மணியார்
முடித்தலைகளைப் புரள எற்றியும்,
முரண்படை முரித்து உதறினான்.

பொ: (கும்பகருணன்) தன் பற்கள் அவர்கள் கழுத்தில் உறுமாறு கடித்துத் தலையைத் திருகியிட்டும், வலிமைமிக்க கர முட்டியினால் இடிஇடித்தாற்போல அவர் மார்பில் படுமாறு குத்தி

யும், எதிர்த்த தேவர்களைத் தன் கையெடுத்து அடித்தும், தன் பாதத்தின்கீழ் அகப்படச்செய்து மிதித்தும் அவரைத் தரையில் படுமாறு பாதத்தால் அரைத்தும், மணிகள் பதித்துள்ள முடிகளை யணிந்த தலைகளைப் புரண்டோடுமாறு காலினால் மோதியும் அந்தத் தேவர்களின் வலிய சேனையை முறியப்பண்ணி உதறித் தள்ளினான்.

கு: தலையைத் திருகி யெடுக்குங்கால் கும்பகருணன் அவர் தம் கழுத்தில் எயிறு பொருந்தக் கடித்துப் பின் கையால் திருகி எடுத்து வீசினன் என்க. முட்டியாகப் பற்றிய கரம் என்பார் கரமுட்டிகளினால் என்றார். கும்பகருணன் கரமுட்டியால் தேவர் களின் மார்பில் குத்தும்போது எழுந்த ஒலி, இழ இடித்தாற் போன்று இருந்தது என்பார் 'இடித்தென உரத்தின்மிசை குத்தி யும் என்றார். வாயினும் கையினும் வருத்தித் தலையைத் திருகி வீசியும், மார்பில் முட்டியால் குத்தியும், கையால் அடித்தும் அடியில் மிதித்தும் தரையில்வைத்து அரைத்தும். முடித்தலைகளைப் புரண்டோடுமாறு காலால் எற்றியும் தேவர்தம் சேனையை முரியச் செய்து உதறினன் என்றவாறு" உதறுதல் - சிதற அசைத்து வீசுதல்.

(உகசு)

### தேர்களினழிவு

548. முறிந்தன தகர்ந்தன பிளந்தன
நெரிந்தன முரண்டிரள்பணை
பறிந்தன நுகங்களு மொடிந்தன
விரிந்துபரி பாகனொடுபோய்
மறிந்தன கவிழ்ந்தகல மாமென
விழுந்தன வலிந்து கடவும்
செறிந்ததுணை யாழிக ளகன்றன
சிதைந்தபொறி தேர்நிரைகளே.

முறிந்தன, தகர்ந்தன பிளந்தன நெரிந்தன முரண் திரள் பணை பறிந்தன நகங்களும் ஒடிந்தன விரிந்துப்ரி பாகனொடுபோய்

மறிந்தன கவிழ்ந்தகலம் ஆம் என விழுந்தன; வலிந்து கடவும்
செறிந்த துணை ஆழிகள் அகன்றன; சிதைந்த பொறி; தேர்
[நிரைகளே

பொ: (கும்பகருணனால்) தேரில் உள்ள வலிய திரண்ட மூங்கில்கள் முறிந்தன சில; உடைந்தன சில; இரண்டாகப் பிளந்தன சில; நெரிந்துபோயின சில; தேரில் உள்ள நுகங்களும் தேரிலிருந்து பறிக்கப் பெற்றனவாய் ஒடிந்தன; தேர்களின் வரிசைகள், வலிமைபெற்றுச் செலுத்துதற் குரியவாய் நெருங்கியிருந்த இணைஒத்த சக்கரங்கள் நீங்கப்பெற்றனவாய்ச் சிதைந்து போன இயந்திரத்தையுடையவாய் விரிந்தனவாய்க் குதிரையோடும் பாகனோடும்போய்த் தலைகீழாய்ப் புரண்டனவாய்க் கவிழ்ந்த மரக்கலங்களைப் போல விழுந்தன.

கு: தேரில் அமைந்த மூங்கிலின் சிறப்புப் புலப்பட முரண் திரள் பணை என்றார். பணை – மூங்கில். தேரில் இணைத்திருந்த நுகத்தடியும் பறிக்கப்பெற்றனவாய் ஒடிந்தன என்றவாறு. தேர் நிரைகள், வலிந்து கடவுதற்குரிய துணையாழிகள் நீங்கப் பெற்றவாய்ச் சிதைந்துபோன இயந்திரத்தையுடையவாய் விரிந்து பரி பாகனோடு போய் விழுந்தன; என வினை முடிவுசெய்க. மறிந்தன கவிழ்ந்த கலமாமென விழுந்தன' என்பது உவமை. கலம்–கப்பல். மறிந்தனவாய்க் கவிழ்ந்த என முற்றெச்சமாக்கி முடிக்க. மறிதல், மேல் கீழாதல். இரத்தவெள்ளத்தில் வீழ்ந்துள்ள தேர்களின் தோற்றம் கடலில் மறிந்து வீழ்ந்து கிடக்கும் கப்பலைப்போன்றன என்றவாறு. (உஉ)

யானைகளின் அழிவு

519. முரண்டரு மெலும்புகள் முறிந்தசில
நீள்வயிர மொய்கொள் பணையாற்
றிரண்டகை நெரிந்தசில திண்பத
மொடிந்தசில வின்பதியினின்

றிரண்டுபிறை கொண்டுவிழு மஞ்செசன
விழுந்திரண மொன்றுகளரிப்
புரண்டசில கொம்புகள் முறிந்தசில
பொங்குமத தும்பியினமே.

முரண்தரும் எலும்புகள் முறிந்த சில;
நீள்வயிர மொய்கொள் பணையான்
திரண்டகை நெரிந்தசில; திண்பதம்
ஒடிந்தசில; விண்பதியின் நின்று
இரண்டு பிறை கொண்டுவிழும் மஞ்சுஎன
விழுந்து இரணம் ஒன்றுகளரிப்
புரண்ட சில; கொம்புகள் முறிந்தசில;
பொங்குமத தும்பி இனமே.

பொ: பொங்கி வழியும் மதத்தினையுடைய யானைக் கூட்டங்கள், வலிமைபொருந்திய எலும்புகள் முறியப்பெற்றன சிலவும், நீண்ட வயிரம் போன்ற வலிமைகொண்ட கொம்புகளோடு திரண்ட துதிக்கை நெரிந்தன சிலவும்; திண்ணிய கால்கள் ஒடிந்தன சிலவும்; விண்ணுலகத்தினின்றும் இரண்டு பிறைச் சந்திரனைப் பற்றிக்கொண்டு விழும் மேகம்போல விழுந்து ஓசை பொருந்திய போர்க்களத்தில் புரண்டன சிலவும்; கொம்புகள் முறிந்தன சிலவும் ஆயின.

கு: தும்பி – யானை. மொய்கொள்பணை– வலிமைகொண்ட கொம்பு. பணையான் என்புழி, 'ஆன்' உடனிகழ்ச்சிப் பொருளது. 'தூங்கு கையானோங்கு நடைய' என்புழிப்போல. பதம் என்றது, காலினை. இரண்டு கொம்புகளோடு போர்க்களத்தில் விழுந்து புரளும் யானைக்குத் தற்குறிப்பேற்ற உவமையாக, விண்பதியினின்று இரண்டு பிறைகளைப் பற்றிக்கொண்டு விழும் மஞ்செசன' என்றார். இரண்டு கொம்புகட்கு இரண்டு பிறையும் யானைக்கு மஞ்சும் உவமை. இரண்டு பிறைகொண்டு விழும் மஞ்சு' என்றது இல்பொருளுவமையும் ஆம். இரணம் – தசை. களரி – போர்க்களம் தும்பியினம், முறிந்தசிலவும் நெரிந்தசிலவும், ஒடிந்தசிலவும்,

புரண்ட சிலவும், முறிந்த சிலவும் ஆயின என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. (உஉக)

குதிரைகளும் காலாளும் படுதல்

550. பரிந்தவிரி வார்குசை பரிந்தமணி
 தார்கள்பரு மங்களுடனே
நெரிந்த வெரி நென்புற
 நெளிந்தன கிடந்தன நெடுந்துரகமாச்
சொரிந்ததலை மூளையினர் தொங்குகுட
 ரோடமர் தொலைந்தவலியோர்
சரிந்தனர்கள் வானவர்க டானவ
 ரடர்ந்தனர் தயங்குபடையால்.

பரிந்த விரிவார்குசை, பரிந்த
 மணி தார்கள் பருமங்களுடனே
நெரிந்த வெரின் என்புற,
 நெளிந்தன கிடந்தன நெடுந்துரகமா
சொரிந்ததலை மூளையினர் தொங்கு
 குடரோடு அமர் தொலைந்து
வலியோர் சரிந்தனர்கள் வானவர்கள்;
 தானவர் அடர்ந்தனர் தயங்குப்டையால்.

பொ: நெடிய குதிரைச்சேனை, விரிவானவாரும் கடிவாளமும் அறுபட்டனவும், மணிகளும் கிண்கிணியும் சேணங்களுடன் அறு பட்டனவும், முதுகின் எலும்பு மிகுதியாக நெரிந்தனவும் ஆய் நெளிந்து கிடந்தன; தேவர்கள் தலை மூளை சொரியப் பெற்ற வராய்த் தொங்குகின்ற குடலோடு போரில் வலிமை தொலைந்த வராய்ச் சரிந்து ஒடலானார்கள், அரக்கர்கள் விளங்குகின்ற தம் ஆயுதங்களால் தாக்கினார்கள்.

கு: நெடுந்துரகமா, விரிவார், குசை பரிந்த; பருமங்களுடனே மணிதார்கள் பரிந்தன; வெரின் என்புற நெரிந்த; நெளிந்தன

கிடந்தன என இயையும், மா, பரிந்தனவாயும் நெரிந்தனவாயும் நெளிந்து கிடந்தன என முற்றெச்சமாக்கி முடிக்க. துரகம் - குதிரை. வெரிந் முதுகு. வானவர்கள் மூளைசொரிந்த தலையின ராய்த் தொங்கும் குடரோடு அமர்வலி தொலைந்தனராய்ச் சரிந் தனர் என இயையும். சரிதல் - புறங்காட்டி ஓடுதல். தானவர் - அரக்கர், தானவர் தயங்கு படையால் அடர்ந்தனர் என இயையும். (உஉஉ)

அமரர் கும்பகன்னனைத் தாக்குதல்

551. அருக்கரும் வசுக்களு முருத்திரரு
முட்பட வனைத்தமரரும்
வெருக்கொள நெருக்கொடு பொருக்கென
வுடற்றுகுட வெஞ்செவியனும்
இரக்கமி லரக்கனை யடர்த்துவ
னுரத்தட மிரத்த மெழலால்
முருக்கலர் பொருப்பினை நிகர்த்திட
வடிக்கணை முடுக்கினர்களே.

அருக்கரும் வசுக்களும் உருத்திரரும்
உட்பட அனைத்து அமரரும்
வெருக்கொள நெருக்கொடு பொருக்கென
உடற்று குடவெஞ் செவியனும்
இரக்கமில் அரக்கனை அடர்த்து அவன்
உரத்தடம் இரத்தம் எழலால்
முருக்கு அலர் பொருப்பினை நிகர்த்திட
வடிக்கணை முடுக்கினர்களே.

பொ : பன்னிரு சூரியரும், அட்ட வசுக்களும், பதினொரு உருத்திரரும் உட்பட எல்லாத் தேவர்களும் அச்சம் கொள்ளுமாறு நெருக்குதலோடு விரைந்துவந்து போரிடுகின்ற குடம்போன்ற கொடிய செவியுடையனாகிய கும்பகன்னன் என்கின்ற இரக்கம் இல்லாத அரக்கனை எதிர்த்து அவன் மார்பில் இரத்தம் பொங்கி

எழுதலால் அவனுடம்பு முருக்கமரம் அலரப் பெற்ற மலையை ஒக்குமாறு கூரிய அம்புகளைத் தேவர்கள் முடுக்கிவிட்டார்கள்.

கு: அனைத்தமரரும் என்றமையால் மருத்துவர் இருவரும் அடங்குவர். முப்பத்து மூவர் தலைவர் உட்பட முப்பத்து முக்கோடி அமரரும் கும்பகன்னனன் தாக்குங்கால் அஞ்சினுர்கள் என்றவாறு. குடவெஞ் செவியன் என்றது, கும்பகன்னன் என்ற வட மொழிப் பெயரைத் தமிழ்ப்படுத்தியவாறு. அடர்த்தல் – எதிர்த் தல். உரத்தடம் – மார்பாகிய இடம். இரத்தம் எழலால் முருக்கலர் பொருப்பினை நிகர்த்திட என்றது ஏது உவமை. வடி – கூர்மை. வடிக்கணை முடுக்குதலாவது கூரிய கணைகளை விரைந்து தொடுத்தல். முன்பு அஞ்சிய அமரர் பின்பு கும்பகன்னனை அம்பு களால் எய்து அவன் மார்பில் குருதி கொப்புளிக்குமாறு செய் விட்டார்கள் என்றவாறு. (உ௨௯)

552. முத்தலை யயிற்கணைய முற்கர
மிரட்டியொடு கற்படை கவண்
சத்திமழு வச்சிர முலக்கைகதை
சக்கர முரட்கணைகளாம்
வித்தினை விதைத்துறு களச்செறு
வினிற்படு பிணப்பயிர்விளைத்
தொத்தலகை நட்டமொ டுணப்புதிய
திட்டனர்க ளொத்தனர்களே.

முத்தலை அயில், கணையம், முற்கரம்
இரட்டியொடு கற்படை கவண்
சத்தி, மழு, வச்சிரம், உலக்கை
கதை, சக்கரம் முரண்கணைகளாம்
வித்தினை விதித்து உறுகளச்
செறுவினிற் படுபிணப்பயிர் விளைத்து
ஒத்து அலகை நட்டமொடு
உணப்புதியது இட்டனர்கள் ஒத்தனர்களே.

பொ : மூன்று முனைகளையுடைய சூலம், வளைதடி, சம்மட்டி, இரட்டிக்கும் தன்மையோடு கற்களை எறிகின்ற கவண், வேல், மழுவாயுதம், வச்சிராயுதம், உலக்கை, தண்டாயுதம், சக்கரப் படை வலிமையுடைய அம்புகள் என்கின்ற விதைகளை விதைத்து, பெரிய போர்க்களமாகிய வயலில் மிக்க பிணமாகிய பயிரை விளையச்செய்து, பேய்கள் தம்மில் ஒத்த நட்டமிட்டுக்கொண்டு உண்ணுமாறு விருந்திட்டவர்களை ஒத்தார்கள் தேவர்கள்.

கு: முத்தலை அயில் முதலிய விதைகளைப் போர்க்களமாகிய வயலில் விதைத்துப் பிணங்களாகிய பயிரை விளைத்து அலகை யுண்ண விருந்திட்டவரை ஒத்தனர் தேவர் என்க. முத்தலை அயில் என்றது சூலப்படையை. கணையம் - வளைதடி. முற்கரம்-சம்மட்டி கவணின் இயல்பு புலப்பட 'இரட்டியொடு கற்படை கவண்' என்றார். இரட்டித்த தோற்றத்தோடு கற்களை வீசுகின்ற கவண் என்றவாறு. சக்தி - வேல். மழு - மழுப்படை. முரண்கணை - வலிமையுள்ள அம்பு. செறு - வயல். கணைகளாம் வித்து, களச் செறு, பிணப்பயிர் என்பன உருவகங்கள். சுவைமிக்க உணவை யுண்ணுங்கால் கூத்தாடிக்கொண்டு உண்ணுதல் பேயின் இயல்பு. 'திணைந்தின் வாயள் துணங்கை தூங்க' (திருமுருகாற்றுப்படை) என்பது நினைக. புதியது என்றது இங்குப் புதுவதாகச் சமைத்த விருந்தினை உணர்த்தியது. இட்டனரை ஒத்தவர் தேவர் என்க, புதியது இட்டனர்களொத்தனர்களே என்றது, தற்குறிப்பேற்றம். பேய்கட்கு விருந்திடுவது தேவர்களின் குறிக்கோள் அன்று ஆயினும் அவ்வாறு கருதுமாறு உளது என்றவாறு. (உஉச)

553. பொழிந்தகணை மாரியுற வெங்களி

றுருண்டன புரண்டபரிமா

அழுந்தின வழுங்கிரத மம்பரமு

மெண்டிசையு மாகிமலைபோல்

விழுந்தன பெரும்பிண மெழுந்தன

கவந்தவினம் வெங்களமெலாம்

ஒழிந்தனரிலாத வகை யொன்றமர்

மலைந்தன ருலந்தனர்களே.

பொழிந்த கணைமாரியுற, வெங்களிறு
உருண்டன; புரண்ட பரிமா;
அழிந்தன அழுங் கிரதம், அம்பரமும்
எண்திசையும் ஆகி மலைபோல்
விழுந்தன பெரும்பிணம், எழுந்தன
கவந்த இனம் வெங்களம்எலாம்,
ஒழிந்தனர் இலாதவகை ஒன்று
அமர் மலைந்தனர் உலந்தனர்களே.

பொ: வில்லினின்றும் பொழிந்த அம்பு மாரி பொருந்துதலால் கொடிய யானைகள் இறந்து தரையில் உருண்டன; குதிரைகள் இறந்து தரையில் புரண்டன; வருந்துகின்ற இரதம் ஆகாயமும் எட்டுத்திசைகளும் நிறைந்த மலைபோல் அழுந்தின; காலாட்களின் பெரும்பிணம் தரையில் விழுந்தன; வெவ்விய போர்க்களமெல்லாம் தலையற்ற உடல்களாகிய கவந்தங்கள் எழுந்து ஆடின; ஒன்று பட்டுப் போரினைச் செய்தவர்கள் உய்ந்தொழிந்தனர் இல்லாதபடி இறந்துபட்டார்கள்.

கு: களிறு உருண்டன; பரிமா புரண்டன; இரதம் மலை போல் அழுந்தின; பெரும்பிணம் விழுந்தன; கவந்த இனம் எழுந்தன. அமர் மலைந்தனர் ஒழிந்தனர் இலாவகை உலந்தனர் என இயையும். பெரும்பிணம் என்றது, காலாட்படையின் பிணங் களை. இதனால் நால்வகைப் படைகளின் அழிவும் கூறியவாறு ஒன்றமர் என்றது, இருதிறப்படையும் ஒன்று சேர்ந்து செய்யும் போரினை. உலத்தல் - இறத்தல். அம்பரம் – ஆகாயம். (உஉரு)

இராவணன் கொதித்துத் தேவர்கள்மேல் செல்லுதல்

554. இப்படி யரக்கர்க ளிமைப் பொழு
தினிற்பொரு களத்தவிதலும்
மைப்படி மனத்திரள் புயத்தச
முகத்தன்வட வைக்கடியதீ

எப்படி கொதிக்குமன மப்படி
கொதித்தெயி றதுக்கியிடையான்
மெய்ப்படி மனச்சுரர் மிசைத்தனி
ரதத்தினை விடுத்தனனரோ.

இப்படி அரக்கர்கள் இமைப்பொழுதினில்
பொருகளத்து அவிதலும்,
மைப்படி மனத் திரள்புயத்
தசமுகத்தன் வடவைக்கடியதீ
எப்படி கொதிக்கும்; மனம் அப்படி
கொதித்து. எயிறு அதுக்கி இடையான்
மெய்ப்படி மனச்சுரர் மிசைத் தன்
இரதத்தினை விடுத்தனன் அரோ.

பொ: இராக்கதர்கள் இப்படி இமைப்பொழுதில் போர்க்களத்தில் அழிந்துபடுதலும், வஞ்சகம் ஆகிய கருநிறம் படிந்த மனத்தினையும் திரண்ட தோளினையும் உடைய தசமுகத்தனாகிய இராவணன் கடுமையான வடவைத்தீ எப்படி கொதிக்குமோ அப்படி மனம் கொதித்துப் பற்களைக் கடித்துக்கொண்டு பின்னிடையாதவனாய் உண்மை பொருந்திய மனத்தையுடைய தேவர்கள்மேல் தனது தேரினை விடுத்தான்.

கு: பொருகளம், போர்புரிகின்ற களம்; வினைத்தொகை. அவிதல் – இறத்தல். மைப்படி மனம் என்றது, தூய்மையில்லாமல் வஞ்சக எண்ணங்களாகிய கருமை படிந்த மனம் என்றவாறு. மைப்படி மனத்தையும் திரள் புயத்தையுமுடைய தசமுகன் என்க. தசமுகன் என்றது, பத்துமுகங்களையுடைய இராவணனை; காரணப்பெயர். தன் சேனையில் உள்ள அரக்கர் அனைவரும் அழிந்தமை கண்ட இராவணன் மனம் கொதித்த இயல்பை நன்கு புலப்படுத்தவேண்டி, 'வடவைக் கடியதீ எப்படி கொதிக்கும்! மனம் அப்படி கொதித்து' என்று உவமை கூறினார். கொடிய வடவைத் தீப்போல இராவணன் மனம் கொதித்தான் என்றவாறு. எயிறு அதுக்குதல் என்றது, கடுங்கோபத்தால் பற்களை

நெறுநெறு என மெல்லுதல். இடையான் என்றது தேவர்களால் அரக்கர் அழிந்ததுகண்டு மனம் சோர்ந்து பின்னிடாதவனுய் என்றவாறு. தேவர்களின் மனம் பொய்விரவாது மெய்யே படிந்துள்ள தூயமனம் என்பார், மெய்ப்படி மனச்சுரர் என்ருர். இனி, மெய் என்றதற்கு மெய்ப்பொருளாகிய இறைவன் என்று பொருள் கொண்டு இறைவனிடத்தே பதிந்த மனத்தையுடையவர்களாகிய தேவர்கள் எனக் கூறலும் ஆம். தன் இரதத்தினை என்புழித் தனிக்குறில்முன் ஒற்றிரட்டியாது வந்தது; தொகுத்தல் விகாரம். இனி, தனி ரதத்தினை எனப்பிரித்து, ஒப்பற்ற ரதத்தினை எனப் பொருள் கூறலும் ஆம். இப்பொருட்கு 'ரதம்' என்ற வடசொல் தமிழ்க்குரியவாறு இரதம் என வாராது வடமொழிக்குரிய வடிவத்தோடு வந்ததாகக் கொள்ளுதல் வேண்டும். அரோ, அசை.(உஉசு)

### இராவணன் தேவர்மேல் அம்புமழை பொழிதல்

555. நீடு வார்சிலை நாணெறிந்து
நிசாச ரேச னிராவணன்
ஓடை யானையின் மேலுமாகதி
யோய்விலாதுயர் தேரினும்
ஆடன் மாவினும் வீரராகிய
வவனி காவலர் மேலுமா
வாடை கூடிய கோடை மாரியின்
வாளி மாமழை தூவினன்.

நீடுவார்சிலை நாண்எறிந்து, நிசா சரேசன் – இராவணன்
ஓடை யானையின் மேலும் மாகதி ஒய்வு இலாது உயர் தேரினும்
ஆடல் மாவினும் வீரராகிய அவனிகாவலர் மேலுமா
வாடை கூடிய கோடை மாரியின் வாளி மாமழை தூவினன்

பொ: அரக்கர்களின் அரசனுன இராவணன், மிக நீண்ட வில்லின் நாணினை விரல் நுதியால் எறிந்து ஒலியெழுப்பி, முகப்பட்டத்தை உடைய யானையின்மேலும், மிக விரைந்து செல்வதில்

ஓய்விலாததாய் உயர்ந்து உள்ள தேரிலும், தாள ஒற்றினுக்கு ஏற்ப ஆடல்புரிந்து செல்லும் குதிரையிலும் காலால் வீரராக உள்ள அரசர் மேலும் படுமாறு, வாடைக்காற்ருேடு கூடிய கோடை மழையைப் போல பெரிய அம்பு மழையைத் தூவிஞன்,

கு: இரவில் சஞ்சரிக்கின்ற இயல்புடைமை பற்றி அரக்கர் நிசாசரர் எனப்பட்டார். அரக்கர்களின் அரசன் நிசாசரேசன் எனப்பட்டான். நிசாசரேசன் என்பது வடமொழி குணசந்தி. நிசாசரே சஞகிய இரர்வணன் என்பது இருபெயரொட்டு. ஓடை – யாணேயின் முகத்தில் கட்டும் பட்டம். இராவணன் வார்சிலே நாண் எறிந்து, யாணேயின் மேலும் தேரின்மேலும், மர்வின்மேலும் காலாள்மேலும் ஆகுமாறு வாளி மாமழை தூவிஞன் என இயையும். நீடு, வார் என்பன நீட்சி என்னும் ஒரே பொருளில் வந்த மீமிசைச்சொல். மிகநீண்ட வில் என்றவாறு. நாண் எறிதலாவது, வில்லில் நாண் ஏற்றியபின் அந் நாணிஜே விரல் நுதியால் எறிந்து ஒலியெழுப்புதல். தேர்க்கு அடைமொழியாக, மாகதி ஓய்விலாதுயர் என்பது வந்துளது. மாகதி – மிக்க வேகம். வேகத்தில் ஓய்வு பெருது எப்பொழுதும் இயங்கிக்கொண்டிருக்கின்ற உயர்ந்ததேர் என்றவாறு. தாள ஒற்றிற்கேற்பச்சதி மிதித்துச் செல்லும் இயல்பு புலப்பட 'ஆடல்மா' எனப்பட்டது. வீரர் என்றது காலாள் வீரரை. அவனி – பூமி. அதைக்காக்கும் மன்னர் அவனிகாவலர் எனப்பட்டார். சிலமன்னர் காலாள் வீரராகவும் நின்று போர் செய்தனர் என்றவாறு. கார் காலத்து மழையினும் கோடைமழை வேகத்தில் சிறந்தது ஆதலின் இராவணனது அம்புமழைக்கு உவமையாக்கப்பட்டது. அம்பின்வேகம் புலப்படுத்த வேண்டி, வாடை கூடிய கோடை மாரியைக் கூறிஞர். வாளி–அம்பு. (௨௨௭)

## இராவணன் அம்புமாரியால் தேவர்களின் நால்வகைச் சேனேயும் நிலேகுலேதல்

556. வெஞ்ச ரங்கள் பரந்துசென்று
நெருங்கு விண்ணவர் சேனேயைப்
பஞ்ச ரங்கிய வங்கி யாமென
நின்று பற்றி யெறித்தவால்

மஞ்ச ரங்க மறித்து, வந்து
செறிந்த கூளிகள் வார்மதக்
குஞ்ச ரங்க ளுருண்ட
தேர்கள் குலைந்தவாசி தொலைந்தவே.

வெஞ்சரங்கள், பரந்து சென்று நெருங்கு விண்ணவர் சேனையைப்
பஞ் சரங்கிய அங்கி ஆம் என, நின்று பற்றிஎரித்தவால்,
மஞ்சு அரங்க மறிந்து வந்து செறிந்த கூளிகள்; வார்மதக்
குஞ்சரங்கள் உருண்ட தேவர்கள் குலைந்த; வாசிதொலைந்தவே.

பொ: (இராவணன் விட்ட) கொடிய அம்புகள், பரவிச் சென்று, எதிரில் நெருங்கியுள்ள தேவர்களின் சேனையையும் பஞ்சினை எரித்து வருத்தும் நெருப்புப்போல நிலையாகப் பற்றி எரித்தன; பேய்கள், விண்ணில் மேகங்கள் வருந்துமாறு மீண்டு வந்து (தசையுண்ண) நெருங்கின; நீண்ட மத ஒழுக்கினையுடைய யானைகள் உருண்டன; தேர்கள் நிலைகுலைந்தன; குதிரைகள் இறந்துபட்டன.

கு: வெஞ்சரம்–கொடிய அம்பு. சரங்கள் சென்று விண்ணவர் சேனையைப் பற்றி எரித்த என்க. ஆல், அசை, பேய்கள் விண்ணில் விரைந்து வந்து நெருங்கும்போது அங்குள்ள மேகங்கள் இடமின்றி வருந்தின என்பார், மஞ்சு அரங்க மறிந்து வந்து செறிந்த கூளிகள், என்றார். செறிதல் – நெருங்குதல். கூளிகள் – பேய்கள். இடையறாது ஒழுகும் மதத்தினை யுடையதாகலின் குஞ்சரம் வார் மதக் குஞ்சரம் எனப்பட்டது. குஞ்சரம்–யானை. வார்தல் - நீண்டு ஒழுகுதல். வாசி– குதிரை. தொலைதல் – இறந்துபடுதல். விண்ணவர் சேனை என்றது காலாட்சேனையை. எனவே, இச்செய்யுளில் காலாளும் யானையும் தேரும் குதிரையும் ஆகிய நால்வகைப் படையும் அழிந்தமை புலப்படுத்தியவாறு. உருண்ட, குலைந்த என்ற வினைகள் அழிதலைக் குறிப்பாலுணர்த்தின.

(உஉஅ

### இந்திரன் இராவணன்மேல் அம்பு எய்தல்

557. அன்ன வன்செயல்கண்டு சிந்தை
யழன்று வெந்திற லிந்திரன்
நின்னி லென்றெதிர் தேர்க டாவி
நெடுந் திகந்த நடுங்கிடத்
தன்னெ டுஞ்சிலை நாணெ றிந்து
தசக்கி ரீவ னுரத்தினும்
சென்னி மீதும் விடத்தி னோடுறழ்
தீய வாளிக டூவினான்.

அன்னவன் செயல்கண்டு, சிந்தை அழன்று வெந்திறல் இந்திரன், நில்நில் என்று எதிர் தேர் கடாவி, நெடுந் திகந்தம் நடுங்கிடத் தன்நெடுஞ்சிலை நாண் எறிந்து, தசக்கிரீவன் உரத்தினும் சென்னி மீதும் விடத்தினோடு உறழ், தீய வாளிகள் தூவினான்.

பொ: அந்த இராவணனுடைய செயலைக் கண்டு விரும்பத் தக்க திறமையுடைய இந்திரன் மனம் கொதித்து, (இராவணனை நோக்கி) நில், நில் என்று சொல்லிக் கொண்டு தனது தேரினைச் செலுத்திக்கொண்டு நெடிய திசைகளின் முடிவு வரையில் உள்ளோர் நடுங்கிடுமாறு தனது நீண்ட வில்லின் நாணினை எறிந்து ஒலி எழுப்பி இராவணனது மார்பிலும் தலையிலும் படுமாறு நஞ்சினை ஒத்த கொடிய அம்புகளைத் தூவினான்.

கு: அன்னவன் என்றது இராவணனனை. சிந்தை அழலுதலாவது சினத்தால் மனம் கொதித்தல். இந்திரன், அன்னவன் செயல்கண்டு சிந்தை அழன்று, தேர் கடாவி நாண் எறிந்து தசக்கிரீவன் உரத்தினும் சென்னிமீதும் வாளிகள் ஏவினான்; என இயையும். தேர் கடாவுதல் பாகன் செயலே யாயினும் இந்திரன் ஏவுதல் கருத்தாவாதலின் தேர்கடாவி என அவன் செயலாகக் கூறினார். திக் அந்தம் – திகந்தம் ஆயிற்று. திசைகளின் முடிவிடம் வரையில் என்றவாறு. நடுங்குதல், நிலத்திற்கும் நிலத்துள்ள

உயிர்க்கும் பொருந்தும். இதனல் இந்திரன் செய்த நாணெலியின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. கொல்லும் செயலில் அம்புகள் நஞ்சோடு ஒப்பன ஆதலின், விடத்திறேடுறழ் வாளிகள் என்ருர். விடத்திறேடுறழ் வாளிகள் – தீயவாளிகள் எனத் தனித்தனி இயையும். தூவினன் என்பது சொரிந்தான் என்னும் பொருளது. வலிய இராவணன்மேல் இந்திரன் அம்புகள் மலர் தூவுதல் போன்று துன்பம் விளைக்காமல் இருந்தன என்ற குறிப்பும் இவ் வினையால் புலப்படும். வரும் செய்யுளாலும் இது புலப்படும். (உஉகூ)

### இராவணன் இந்திரன் இருவரும் விட்ட அம்புகளால் எங்கும் அம்புகளாகத் தோன்றுதல்

558. அந்த அம்பு நிறத்த ழுந்தவு
மாற்ற லேது மழிந்திலா
விந்தை தங்கிய தோளி ராவணன்
வெய்ய வாளிக டூவலும்
இந்தி ரன்கணை மாரி தூவவி
ரண்டு சேனையில் வீரரும்
தந்த மிற்சர மாரி தூவிட
வெங்க ணுஞ்சர மாயதே.

அந்த அம்பு நிறத்து அழுந்தவும், ஆற்றல் ஏதும் அழிந்திலா
விந்தை தங்கிய தோள் இராவணன், வெய்யவாளிகள் தூவலும்
இந்திரன் கணைமாரி தூவ, இரண்டு சேனையில் வீரரும்
தம்தமில் சரமாரி தூவிட எங்கணும் சரம் ஆயதே,

பொ ; இந்திரன் எய்த அந்த அம்பு மார்பகத்தில் அழுந்தவும் அதனல் தன் வலிமை சிறிதும் அழியாதவனுகிய வீரத்திருமகள் தங்கிய தோள்களையுடைய இராவணன், இந்திரன்மேல் கொடிய அம்புகளை விடுதலும் (அதுகண்டு) இந்திரன் அம்புமாரி சொரித்தானுக அதுகண்டு இருதிறத்துச் சேனையில் உள்ள வீரர்களும் தங்களுக்குள் ஒருவர்மேல் ஒருவர் அம்பு மழையைத் தூவிட, அதனல் போர்க்களம் முழுவதும் அம்புகளாகவே தோன்றியது.

கு : நிறம் – மரர்பு. ஆற்றலேதும் அழிந்திலா இராவணன். விந்தை தங்கிய தோளிராவணன் எனத் தனித்தனி இயையும். ஏதும் – சிறிதும். இராவணன் ஆற்றலழியாமைக்குக் காரணம் புலப்படுத்துவார், விந்தை தங்கிய தோளிராவணன்' என்றுர். விந்தை – வீரத்திரு. வெய்ய வாளி – கொடிய அம்பு. இராவணனும் இந்திரனும் தமக்குள் கணைமாரி தூவிக் கொள்வதால் அவ்விருவர் சேனைவீரரும தமக்குள் அம்புமாரி சொரிவாராயினர் என்றவாறு. இந்திரன் கணை மாரிக்கு இராவணன் வாளிதூவியது காரணமாயது. இரண்டு சேனைவீரரும் தத்தமில் சரமாரி தூவிட இந்திரன் கணை மாரிதூவியது காரணமாயது; அது எங்கணும் சரம் ஆதற்குக் காரணமாயது என்க. தூவ, தூவிட என்பன காரணப் பொருளில் வந்த வினையெச்சம்

(உ௫ய)

இராவணன் சாரதிக்குச் சொல்லத் தொடங்கல்

559. அரக்கர் சேனையை வாச வன்றன
நீகவீர ரழன்று போர்
நெருக்கி வேழமு மாளு மாவுநெ
டுங்களத்து விழுத்தலும்
தரிக்கி லாதத சக்கிரீவன்
வெகுண்டுசாரதி தற்குறித்
துரைக்கு மென்னுரை கேட்டி யாகிலு
ணர்ந்து கேளென வோதுவான்.

அரக்கர் சேனையை வாச வன்தன்
அனீக வீரர், அழன்று போர்
நெருக்கி வேழமும் ஆளும் மாவும்
நெடுங்களத்து விழுத்தலும்,
தரிக்கிலாத தசக்கிரீவன் வெகுண்டு
சாரதி தற்குறித்து,
'உரைக்கும் என்னுரை' கேட்டியாகில்
உணர்ந்து கேள், என ஓதுவான்.

பொ: அரக்கரின் சேனையை இந்திரனுடைய சேனையிலுள்ள வீரர்கள் கோபித்துப் போரில் நெருக்கி, யானையையும் காலாட்களையும், குதிரைகளையும் நெடிய போர்க் களத்தில் அடித்து வீழ்த்துதலும், அதைக் கண்டு பொறாத இராவணன் வெகுண்டு சாரதியை நோக்கி, சொல்லுகின்ற என் சொல்லைக் கேட்பவனே ஆனாலும், இப்போது உணர்ந்து கேட்பாயாக என்று சொல்லுவானானான்.

கு: வாசவன்தன் அனிகவீரர் என்றது இந்திரன் சேனை வீரர்களை. வாசவன் – இந்திரன், அனிகம் – சேனை. அழலுதல் - மனம் கொதித்தல் கோபித்தல். போர் நெருக்குதலாவது போர்த் தொழிலாலே எதிரிகளை வளைத்துக்கொள்ளுதல். யானை, காலாள், குதிரை என்ற முப்படையினையும் தரையில் விழுமாறு தேவர்கள் செய்தனர் என்க. தேவர்களின் செயலைக் கண்டு தரிக்கிலாத இராவணன் வெகுண்டு தன் சாரதிக்குச் சொல்லலானான் என்றவாறு. ஊன்றிக்கேள் என்பான், கேட்டியாகில் உணர்ந்துகேள் என்றான் என்க. விழுத்தல் – பிறவினை. வாசவன்தன் அனீக வீரர், அழன்று போர் நெருக்கி வேழமும் ஆளும் மாவும் நெடுங்களத்து விழுத்தலும், என்க. வேழமும் ஆளும் மாவும் நெடுங்களத்து வீழுமாறு வாசவன் சேனை வீரர் செய்தனர் என்றவாறு. (உ௬௧)

**தேவர் சேனையினுள் புகத் தேர்கடாவுமாறு இராவணன் கூறல்**

560. தேவர் சேனையி னுட்பு கத்திகழ்
தேர்க டாவுதி யாயின்யான்
யாவரும் பட நூறி யிந்திர
னைப்பி டித்திவ ணுதியாம்
மூவ ராருயி ருண்டு பின்சின
மொழிய மூவுல கங்களும்
காவ லென்னது வாக்கி நீடர
சாள்வ னியிது காண்டியால்.

தேவர் சேனையின் உள்புகத் திகழ்தேர் கடாவுதி யாயின், யான்
யாவரும்பட நூறி இந்திரனைப் பிடித்து இவன் ஆதியாம்
மூவர் ஆர் உயிர் உண்டு, பின் சினம் ஒழிய மூவுலகங்களும்
காவல் என்னது ஆக்கி, நீடு அரசு ஆள்வன்; நீ இது காண்டியால்.

பொ: தேவர் சேனையின் உள் புகுமாறு விளக்கமுடைய என் தேரைச் செலுத்துவாய் ஆயின், யான் பகைவர் யாவரும் இறந்து படுமாறு அழித்து, இந்திரனைப் பிடித்து, இவன் முதலாகச் சொல்லப்பட்ட பிரமன், திருமால் என்ற மூவரின் அரிய உயிரைக் குடித்துப்பின்பு கோபம் ஒழிய மூன்று உலகங்களையும் காப்பாற்றும் அரசு காவல் என்னுடையதாக ஆக்கி நீண்டகாலம் அரசு ஆள்வேன்; நீ இதனைக் காண்பாய்!

கு: தேவர் சேனையின் உள் நுழையாமல் புறத்தில் நின்று போர் செய்தமையால் விரைந்து வெற்றிபெற முடியவில்லை. அவர் சேனையின் உள்ளிடத்துப் புகுந்தால் தேவர் யாவரையும் கொல்லுதலும் இந்திரனைப் பிடித்தலும் அவன் முதலாக எண்ணப்படும் மூவர் உயிரைக் குடித்தலும் எளிது என்பது இராவணன் கருத்து. பகையழிந்தபின் சினம் மிகையாதலின் 'சினம் ஒழிய' என்றான். விண்ணுலகம் மண்ணுலகம் பாதலம் என்ற மூவுலகங்களும் காக்கின்ற காவல் எனக்கே யுரியதாக்கி நெடிது காலம் ஆள்வேன்; இதனை நீ காணப்போகின்றாய் என்று இராவணன் எதிர்கால நம்பிக்கையைப் புலப்படுத்தியவாறு. ஆல். அசை. (உ௬உ)

இராவணன் சொன்னபடியே தேர் தேவர்சேனையுள் புகுந்தவுடன்
இந்திரன் தேவர்க்குச் சொல்லத் தொடங்கல்

561. என்று புன்மொழி லோனி யம்ப
விசைந்த சாரதி மேருவாம்
குன்று போலுயர் தேரை வானவர்
கூடு சேனையி னுள்விடச்
சென்ற தேரது கண்டு தீயவ
ரக்க னண்ணின னென்னவே
வென்றி மேவிய விந்தி
ரன்னிவை விண்ணவர்க்கு விளம்பினான்.

என்று புன்தொழிலோன் இயம்ப, இசைந்த சாரதி, மேருவாம்
குன்றுபோல் உயர்தேரை வானவர் கூடு சேனையின் உள்விடச்
சென்ற தேர்அது கண்டு, தீய அரக்கன் நண்ணினன் என்னவே
வென்றி மேவிய இந்திரன் இவை விண்ணவர்க்கு விளம்புவான்.

பொ: என்று, புல்லிய தொழிலை விரும்புவோனாகிய இராவணன் சொன்னவுடன், அவன் சொல்லுக்கு இசைந்த சாரதி, மேருவாகிய மலை போன்று உயர்ந்த தேரினைத் தேவர்கள் கூடியுள்ள சேனையின் நடுவே விடச் சென்ற தேரினைக் கண்டு, தீயவனாகிய அரக்கன் தூய நம்சேனைக்கு நடுவே புகுந்தான் என்று தேவர் சொல்லவே, வெற்றி பொருந்திய இந்திரன் தேவர்கட்கு இத்தகைய சொற்களைச் சொன்னான்.

கு: நல்ல செயல் செய்யாது புல்லிய தொழிலையே விரும்பிச் செய்கின்றவன் இராவணன் ஆதலின் அவனை 'புன்றொழிலோன்' எனக்குறித்தார். குன்று என்பது இங்கு மலையென்னும் பொருளது. இராவணனது தேரின் பெருமையும் பருமையும் புலப்படுத்த வேண்டி, 'மேருவாம் குன்று போலுயர் தேரை' என்றார். தேரது கண்டு என்புழி அது பகுதிப்பொருளது. தூயவர் நடுவே தீயவன் நண்ணியது, தீய குறி ஆதலின் அதுபற்றி இந்திரன் தேவர்க்குச் சொல்லுவானானான். தன்னைப்பற்ற எண்ணிவரும் இராவணனை வென்றி கொள்ளும் திறம் இந்திரனுக்கு உண்டு என்பது புலப்பட 'வென்றிமேவிய இந்திரன்' என்று சிறப்பித்தார். விண்ணவர்க்கு விளம்பியதை வரும் செய்யுளில் காணலாம். (உருரு)

இராவணன் கூறியது

562. என்னை வஞ்சனை செய்து
கொன்றிட வெண்ணு மிந்தவிராவணன்
றன்னை நாலு புயங்க
ளுந்தள ரப்பிணிக்குவெ னென்றவன்

முன்னி லாதுவி லங்கி யோட
முயங்கு தேவர்மு டுக்கிய
தென்னி லங்கை யரக்கர் கோன்மிகு
சேனை பாழ்பட நூறினன்

என்னை வஞ்சனை செய்து கொன்றிட எண்ணும் இந்த இராவணன்
தன்னை நாலு புயங்களுந்தளரப் பிணிக்குவென் என்றவன்,
முன்நில்லாது விலங்கிஓட, முயங்கு தேவர் முடுக்கிய
தென் இலங்கை அரக்கர்கோன் மிகுசேனை பாழ்பட நூறினன்.

பொ: 'என்னை வஞ்சித்துக் கொல்ல எண்ணுகின்ற இந்த இராவணனை இருபது தோள்களும் தளருமாறு கட்டிப் பிடிப்பேன் என்று சொன்ன இந்திரன், தன்முன் நில்லாது விலகி ஓடுமாறு ஒன்று சேர்ந்துள்ள தேவர்களால் துரத்தப்பட்ட தென்னிலங்கைக்கு அரசனாகிய இராவணனது சேனை அழியுமாறு அழித்தான்.

கு: 'என்னைக் கொன்றிட எண்ணும் இந்த இராவணன் தன்னை நாலும் புயங்களும் தளரப் பிணிக்குவென்' என்றவன், அரக்கர்கோன் மிகு சேனைபாழ்பட நூறினன் என இயையும். இராவணன் இந்திரன்முன் நில்லாதபடி துரத்தினார்கள் என்றும், அவ்வாறு தேவர்களால் துரத்தப்பட்ட அரக்கர்கோனின் சேனை பாழ்படுமாறு இந்திரன் அழித்தான் என்றும் கொள்க. நூறினன் என்பதற்கு, இரண்டாம் அடியிறுதியில் உள்ள 'என்றவன்' என்ற வினையாலணையும் பெயரை எழுவாயாகக் கொள்க. 'இராவணன் தன்னை நாலும் அவன்றனைத் தளரப் பிணிக்குவென், என்ற பாடம் பிழையானது. 'இராவணன் தன்னை' என்று முன் குறித்துவிட்டு 'அவன்தனை' என மீண்டும் சொல்லுவது கூறியது கூறலாதல் காணலாம். இராவணன் தன் ஐநாலு புயங்களும் தளரப் பிணிக்குவென்' என்ற பாடமே பொருத்தமான தாகும். ஐநாலு – இருபது. தளரப் பிணிக்குவென் என்றவன், முன்நிலாது விலங்கி ஓடுமாறு தேவர்களால் முடுக்கப்பட்ட அரக்கர்கோனைப் பிணிக்காமல் அவன் சேனையை நூறினன் என்க. நூறுதல் – அழித்தல். தேவர் முடுக்கிய, என்பதற்குத்

தேவர்களால் முடுக்கப்பட்ட என மூன்றனுருபும் படுசொல்லும் விரித்துப் பொருள் கொள்க. முடுக்குதல் — துரத்துதல். முயங்கு தேவர் — ஒன்றுகூடிய தேவர்கள். (உ௬௪)

### இராவணன் இறந்தான் என அரக்கர் வருந்துதல்

563. அன்ன காலையி னூறு
யோசனை யுள்புகுந்தணி கெட்டிடத்
தன்னெ டும்படை சாய நூறு
தசக்கி ரீவனை வானுளோர்
மன்ன வன்படை யோடுவந்து
வளைப்ப வஞ்ச வரக்கரத்
தென்னி லங்கைமன்வீடி னனென
நொந்து சிந்தை தியங்கினர்

அன்ன காலையில் நூறுயோசனை உள்புகுந்து அணி கெட்டிடத் தன் நெடும்படை சாய நூறு தசக்கிரீவனை, வானுளோர் மன்னவன், படையோடு வந்து வளைப்ப, வஞ்ச அரக்கர் அத் தென் இலங்கை மன் வீடினன் என நொந்து சிந்தை தியங்கினர்.

பொ: அப்போது நூறுயோசனை தொலைவு உள்ளே புகுந்து அணிவகுப்புக் கெடுமாறும் தனது நெடிய படை சாயும்படியும் அழிக்கின்ற இராவணனைத் தேவர்கள் தலைவனாகிய இந்திரன் படையோடு வந்து வளைத்துக்கொள்ள, வஞ்சனைமிக்க அரக்கர்கள் அந்தத் தென் இலங்கைக்கு மன்னவனாகிய இராவணன் இறந் தான் என்று சிந்தை நொந்து திகைத்தார்கள்.

கு: இந்திரனைப் பிடிக்கும் சூழ்ச்சியோடு தேவர் படையுள் நூறுயோசனை அளவு உள்ளே புகுந்து அவர்தம் அணிவகுப்புக் கெட்டிடுமாறும் தேவர்படை சாயுமாறும் அழிக்கின்ற இராவணனை இந்திரன் தன் சேனையொடு வந்து வளைத்துக்கொள்ளவே, வஞ்சக அரக்கர்கள் தம் தலைவன் இராவணன் அழிந்தான் என்று கருதிச்

சிந்தை நொந்து திகைத்தார்கள் என்றவாறு. இனி, அணி கெட்டிட நூறு யோசனை புகுந்து தன்னெடும்படை சாய நூறும் தசக்கிரீவனை என இயைத்துக் கூறலுமாம், தியங்குதல் - செய்வ தறியாது திகைத்தல். (உகூரு)

மேகநாதன் வந்து போர் தொடங்குதல்

564. அந்த வேலையின் மேக நாத
னழன்று பொங்கி யமர்த்துறைத்
தந்தை தன்னை வளைத்து வந்து
நெருக்கு தானையை நூறியவ்
விந்தி ரன்றனு ரத்து மங்கவ
னேறு தேரினும் வேகமா
உந்து மாதலி மேலும் வாளிக
ளோய்வி லாவகை தூவினன்

அந்த வேலையில் மேகநாதன் அழன்று பொங்கி அமர்த்துறைத் தந்தை தன்னை வளைத்து வந்து நெருக்கு தானையை நூறி அவ் இந்திரன்தன் உரத்தும் அங்கு அவன் ஏறு தேரினும் வேகமா உந்து மாதலி மேலும் வாளிகள் ஓய்வு இலாவகை தூவினன்.

பொ: அந்த நேரத்தில் மேகநாதன் மனம் கொதித்துக் கோபமிக்குப் போர்த்துறையில் ஈடுபட்டுள்ள தந்தையாகிய இராவணனை வளைத்துக் கொண்டு வந்து நெருங்குகின்ற தேவர் சேனையை அழித்து அந்த இந்திரன்தன் மார்பகத்திலும் அவ்விடத்து அவன் ஏறியுள்ள தேரின்மேலும் தேரை விரைவாகச் செலுத்துகின்ற பாகனாகிய மாதலியின் மேலும் அம்புகளை ஓய்வின்றித் தூவினான்.

கு: மேகநாதன் தன் தந்தையை வளைத்து நெருக்குகின்ற சேனையை அழித்துவிட்டு இந்திரன் மார்பிலும் அவன் ஏறியுள்ள தேரிலும் பாகன் மேனியிலும் அம்புகளை ஓய்வு இல்லாமல் தூவினான் என்றவாறு. தூவுதல் - சொரிதல். அழலுதல் - மனம் கொதித்தல்.

பொங்குதல் – கோபித்தல். அமர்த்துறைத் தந்தை என்றது போர்த் துறையில் ஈடுபட்டு இருக்கின்ற இராவணனை. வளைத்துக் கொண்டு நெருக்குகின்ற தேவர்கள் சேனையை முன்னம் அழித்து விட்டுப் பகையாக எதிர்த்துள்ள இந்திரன்மேல் அம்புகளை ஓய்வின்றிச் சொரிந்தான் மேகநாதன் என்றவாறு. (உகசு)

இந்திரனும் மேகநாதனும் பொருதல்

565. அண்ட ருக்கர சன்னெ திர்த்த
வமர்க்க ளத்தடை யார்களால்
பண்டு பட்டறி யாத பாடு
படத்த ரிக்கில னுயவன்
கொண்ட லொத்த முழக்கு டைப்பொரு
குன்றை யொப்பதோர் வென்றிசேர்
சண்ட வுக்கிர கிரியெ னுங்கரி
தன்னையோர் நொடி யேறினன்

அண்டருக்கு அரசன் எதிர்த்த அமர்க்களத்து அடையார்களால்
பண்டுபட்டு அறியாத பாடுபடத் தரிக்கலனுய் அவன்
கொண்டல் ஒத்த முழக்குடைப் பொருகுன்றை ஒப்பதுஓர் வென்றி
'சண்ட உக்கிரகிரி' எனுங்கரிதன்னை ஓர்நொடி ஏறினன். [சேர்

பொ : தேவர்கட்கு அரசனுகிய இந்திரன், எதிர்த்துப் போர் செய்த போர்க்களத்தில் பகைவர்களால் முன்பு எப்போதும் பட்டு அறியாத அல்லல்படத் தரியாதவனுய் அவனுக்குரிய மேகத்தை யொத்த முழக்கத்தை யுடையதும் போர் செய்கின்ற குன்றை ஒப்பதும் ஆகிய ஒரு வெற்றி பொருந்திய சண்ட வுக்கிரகிரி என்னும் பெயரையுடைய யானையின்மேல் ஒரு நொடிப்பொழுதில் ஏறினன்.

கு: இந்திரன் இதுகாறும் செய்து பழகிய போரில் படாத துன்பங்களை யெல்லாம் மேகநாதனேடு செய்த போரில் பட்டான் என்றவாறு. அடையார் – பகைவர். தரிக்கிலனுய் - தாங்கமாட்டாத

வனுய். முழக்கத்தால் மேகத்தையும் உருவத்தால் குன்றையும் ஒத்த யானை என்பார். கொண்டலொத்த முழக்குடைப் பொரு குன்றை யொப்பதோர்...... கரி' என்றார். உவமையணி. 'சண்டவுக் கிரகிரி' என்பது அயிராவதத்திற்கு வேறுஒரு பெயர். இந்திரன் ஏறிய விரைவு புலப்பட நொடி ஏறினுன் என்றார். (உ௬௭)

566. ஏறி னுனயி ராபதத்தை
யினிப்பிழைப்பரி தின்றெனப்
பாறி னுரவ் வரக்கரவ்வழிப்
பாக சாதன னங்கியிற்
சீறி னுனுறு போரிலாளி
யெனத்தசக்கிரீ வன்மகன்
ஏறினுனுயர் தேரின் மீதம
ரேசனும்பொர வுற்றனன்

ஏறினுன் அயிராபதத்தை; இனிப் பிழைப்பு அரிது இன்று எனப்
பாறினுர் அவ் அரக்கர்; அவ்வழிப் பாகசாதனன் அங்கியின்
சீறினுன்; உறுபோரில் ஆளிஎனத் தசக்கிரீவன் மகன்
ஏறினுன் உயர்தேரின்மீது; அமரேசனும் பொர உற்றனன்.

பொ: அயிராவதம் என்னும் யானையின் மேல் இந்திரன் ஏறினுன்; ஆதலின், இன்று அவன்முன் உயிர் பிழைத்தல் அரிதாகும் என்று அரக்கர்கள் ஓடினுர்கள்;அவ்விடத்து இந்திரனும் நெருப்புப் போலச் சீறினுன்;(அது கண்டு) இராவணன் மகனுகிய மேகநாதன், சிறந்த போரில் சிங்கம்போலக் கிளர்ந்து உயர்ந்த தேரின்மீது ஏறினுன், இந்திரனும் போர்செய்ய நெருங்கினுன்.

கு: இந்திரன் அயிராவதத்தில் ஏறிப் போர் செய்வானுயின் அவன்முன் போர்செய்து உய்தல் அரிது என்பதை அரக்கர் உணர்ந்தவராகலின், 'இனிப் பிழைப்பரிதின்றெனப் பாறினுர் அவ்வரக்கர்' என்றார். அயிராவதத்தில் ஏறும்போது அவன் ஆற்றல் மிகுதிப்படும் என்பது கருத்து. பாறுதல் – ஓடுதல். திசைச்

சொல். பாகசாதனன் - இந்திரன், அங்கி-நெருப்பு. ஆளி-சிங்கம். சிங்கத்தின் அமைப்பும் துதிக்கையும் உடையதாய் ஆளி என்ற ஓர் விலங்கும் உண்டு; அதையே குறித்ததாகவும் கொள்ளலாம். உறுபோர் - சிறந்த போர். தசக்கிரீவன் மகன் மேகநாதன் உயர்ந்த தேரில் ஏறிப் போர்க்கு ஆயத்தமானவுடன் இந்திரனும் போர் செய்ய நெருங்கினன் என்றவாறு. அமர - ஈசன், அமரேசன் என வந்தது வடமொழிக் குண சந்தியாகும். (உகூஅ)

567. வன்னி கொன்றை யெருக்குத்
துீம்பை தரித்தவீசன் வரத்தினல்
அன்னெ டுந்திறன் மேக நாத
னடர்ந்த போதகல் வானகம்
துன்னு பேரிருண் மூட மாயை
வகுப்ப நெஞ்சு துளங்கிவான்
மன்னு தேவர்க ளாயி னேர்கண்
மயங்கி யொன்று முணர்ந்திலார்.

**வன்னி கொன்றை எருக்குத் தும்பபை தரித்த ஈசன் வரத்தினல், அங் நெடுந்திறல் மேகநாதன் அடர்ந்த போது, அகல் வானகம் துன்னு பேர் இருள்மூட, மாயை வகுப்ப, நெஞ்சு துளங்கி வான் மன்னு தேவர்கள் ஆயினேர்கள் மயங்கி ஒன்றும் உணர்ந்திலார்.**

பொ: வன்னிப் பத்திரம், கொன்றை மலர், எருக்க மலர், தும்பை மலர் இவற்றைத் தரித்த் சிவபிரான் கொடுத்த வரத்தினல் அந்தப் பெரிய திறமையுடைய மேகநாதன் போர்செய்தபோது அகலமான வானகத்தில் நெருங்கிய பெரிய இருள் மூடுமாறு மாயையைச் செய்ய, அதுகண்டு வானுலகில் வாழ்கின்ற தேவர்கள் நெஞ்சு நடுங்கி, மயக்கம் கொண்டு ஒன்றும் உணராதவ ராயினர்கள்.

கு: சிவபிரான் பொல்லாதவனுகிய மேகநாதனுக்கும் வரத்தைக் கொடுக்கலாமோ? என்ற ஐயத்தைப் போக்கவேண்டி

'வன்னி கொன்றை எருக்குத் தும்பை தரித்த வீரன்' என அடைமொழி கொடுத்துச் சிறப்பித்தார். உயர்ந்த மலர்களாகிய கொன்றையும் தும்பையும் தரித்ததுபோலவே புல்லிய எருக்கையும் சேர்த்து அணிகின்றவன் சிவபிரான் ஆதலின், நல்லோர்க்குக் கொடுப்பது போலவே பொல்லாதவனுகிய மேகநாதனுக்கும் வரம் கொடுத்தான் என்ற கருத்துப் புலப்பட வைத்தமையால் இது கருத்துடையடைகொளியணி எனப்படும். புல்லிலை யெருக்கமாயினும் உடையவை கடவுள் பேணேமென்னு'' (புறநா - 106) என்புழி எருக்கு இழிந்த பூவாதல் கூறப்பட்டிருத்தல் காண்க. வரத்தினுல் மாயை வகுப்ப என இயையும். அந்நெடுந்திறல் என்பது எதுகை நோக்கி அன்னெடுந்திறல் என ஆயிற்று. தேவர்களாயினேர், கண் மயங்கி எனப்பிரித்துத் தேவர்கள் கண் மயங்கி ஒன்றும் உணராதவராயினர் எனலும் ஆம். கண் மயங்குதல் என்பது மேகநாதன் வகுத்த மாயையால் இருள்மூடியவுடன் பொருள்களைப் பார்க்கும் கண்கள் ஒளியின்மையால் மயங்கியது என்றவாறு. (உ௬௬)

### மேகநாதன் பாசத்தால் பிணித்தல்

568. செய்வ தொன்றறி யாதுசிந்தை
கலங்கி யிந்திர னின்றிடக
கய்யு மெய்யு மகப்ப
டத்தெறு காலபாச மிதாமெனும்
வெய்ய பாச முறப்பி
ணித்தனன் மேகநாதன் விளங்குசீர்
அய்ய வெய்ய வரக்க
ரானவ ராடினுர்சுரர் வாடினுர்

செய்வது ஒன்று அறியாது சிந்தை கலங்கி இந்திரன் நின்றிடக்
'கய்யு மெய்யும் அகப்படத் தெறு கால பாசம் இது ஆம்' எனும்
வெய்ய பாசம் உறப்பிணித்தனன் மேகநாதன்; விளங்குசீர்
அய்ய வெய்ய அரக்கர் ஆனவர் ஆடினுர்; சுரர் வாடினுர்.

பொ : இந்திரன், அப்போது செய்வது ஒன்றும் அறியாது சிந்தை கலங்கி, நின்றிட, 'கையையும் உடம்பையும் அகப்படச் செய்து அழிக்கின்ற காலபாசம் இதுவே ஆகும்' என்று சொல்லத் தக்கக் கொடுமையான பாசத்தால் அழுத்தமாகக் கட்டினன், மேகநாதன்; விளங்குதற்குரிய சிறப்பு நுணுகுமாறு கொடிய அரக்கர்கள் ஆடினர்கள்; தேவர்கள் வாடினர்கள்.

கு : கை, ஐ என்பன எதுகை நோக்கிக் கய், அய் எனப் போலியாய் வந்தன. எமனுடைய பாசக்கயிறு மக்களின் கைகளை யும் உடம்பையும் உட்படுத்தி இறுக்கி வருத்தும் இயல்பினது; அந்த இயல்பு மேகநாதனது பாசத்திற்கும், இருத்தலின், கால பாச மிதாமெனும் வெய்ய பாசம்' என்றார். உறப் பிணித்தலாவது – இறுகக் கட்டுதல். உயர்ந்தோர்க்கு விளங்கு சீர் பெருகுதல் வேண்டும்; தாழ்ந்தோர்க்குப் பழிபெருகுதல் வேண்டும். இங்குக் கொடியவர்களாகிய அரக்கர்கள் மகிழ்ச்சி யினால் ஆடுகின்றார்கள். நல்லவர்களாகிய தேவர்கள் வாடுகின்றார் -கள். எனவே, விளக்கம் பெறுதற்குரிய சீர் இங்கு நுணுகுகின்றது என்றவாறு. 'அய்ய' என்றது, நுணுக – தேய என்றவாறு. ஐ – நுண்மை. ஐய – நுணுக. 'அணுத்தருந்தன்மையில் ஐயோன் காண்க' (திருவாச 3, 45) என்புழி ஐ இப்பொருளாதாதல் காண்க. தேவர்களின் விளக்கம்பெறுதற்குரிய சிறப்பு நுணுகுமாறு அரக்கர் -கள் ஆடினர்கள் என்றவாறு. இந்திரன் செய்வதறியாது கலங்கி நின்றிட, மேகநாதன் வெய்ய பாசமுறப் பிணித்தனன்; என இயையும். காலபாசத்தின் இயல்பு புலப்படுத்த வேண்டிக் கையும் மெய்யும் அகப்படத்தெறு காலபாசம் என்றார். காலபாச மிதா மெனும் வெய்ய பாசம் என்றது, உவமையணி. (உசஅ)

இந்திரன் தன் பாசத்தால் கட்டுண்டதை மேகநாதன் இராவணனுக்குச் சொல்லுதல்

569. வெந்திற லரக்கர் சேனை
மேகநா தன்கைப் பாசத்
திந்திரன் கட்டுண் டானென்
றெறிகட லொலியி னார்ப்பத்

தந்தையை வந்து கூர்ந்து
தரிப்பரு முவகை பொங்க
எந்தைநீ கேட்டி யென்னு
யிராவணி யினைய சொன்னான்

வெந்திறல் அரக்கர் சேனை,
மேகநாதன் கைப்பாசத்து
இந்திரன் கட்டுண்டான் என்று
எறிகடல் ஒலியின் ஆர்ப்பத்
தந்தையை வந்து கூர்ந்து,
தரிப்பரும் உவகை பொங்க,
எந்தை! நீ கேட்டி! என்னு
இராவணி இனைய சொன்னான்.

பொ: கொடுமையான திறமை படைத்த அரக்கர் சேனை, 'மேகநாதன் கையிலிருந்து வீசிய பாசத்தால் இந்திரன் கட்டுண்டான்' என்று மகிழ்ந்து கூறி அலைவீசுகின்ற கடல் ஒலியினைப் போல ஆரவாரிக்க, மேகநாதன் தன் தந்தையிடம் வந்து அணுகித் தாங்குதற்குரிய மகிழ்ச்சி மேலோங்க, என் தந்தையே நீ கேட்பாயாக என்று இத்தன்மையானவற்றைச் சொன்னான்.

கு: அரக்கர் சேனை எறிகடல் ஒலியில் ஆர்ப்ப, இராவணி, தந்தையைச் சார்ந்து எந்தை நீ கேட்டி என்னு இனையசொன்னான் என இயையும், அரக்கர்கள் என்ன சொல்லி ஆரவாரித்தார்கள் என்பதைப் 'புலப்படுத்த மேகநாதன் கைப்பாசத்து இந்திரன் கட்டுண்டான்' என்று எறிகடல் ஒலியின் ஆர்ப்ப என்றார். அரக்கர் சேனை ஆர்ப்ப, இராவணி சொன்னான் என்றது, செயவெனெச்சம் பிறவினை கொண்டதாகும். கட்டுண்ணுதல் என்பது கட்டப்படுதல். இராவணன் மகனை இராவணி என்றது தத்திதாந்த நாமம் எனப்படும். சானகி என்பதுபோல. கேட்டி, என்றது, இகரவீற்று முன்னிலை வினைமுற்று. என்னு என்றது செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். இராவணி சொன்னதை வரும் செய்யுளால் அறியலாம்.

(உசக)

மேகநாதன் இராவணனை மூவுலகாளச் சொல்லுதல்

570. என்னெதிர் நிற்க மாட்டா
திந்திர னென்கைப் பட்டான்
உன்னெதி ரொருவ ரில்லை
யுருப்பசி முதலா யுள்ள
அன்னமென் னடையி னாருன்
னடியிணை வருட வையா
முன்னைவா னவர்சே விப்ப
மூவுல காள்தி யென்றான்

என்எதிர் நிற்கமாட்டாது இந்திரன் என்கைப்பட்டான்;
உன்எதிர் ஒருவர் இல்லை; உருப்பசி முதலாய் உள்ள
அன்னம் என் நடையினார் உன் அடியிணை வருட, ஐயா!
முன்னை வானவர் சேவிப்ப, மூவுலகு ஆள்தி, என்றான்.

பொ: ஐயா, என் எதிரில் போர்செய்து நிற்க முடியாமல் இந்திரன் என் கையில் அகப்பட்டுவிட்டான்; இனி, உனக்கு எதிரானவர் ஒருவரும் இல்லை; ஊர்வசி முதலாக உள்ள அன்னம் போன்ற நடையினையுடைய அரம்பை மாதர் உன் இரு திருவடிகளையும் தம்மென்கையால் வருடாநிற்கவும் உன் முன்னிலையில் தேவர்கள் சேவிக்கவும் நீ மூவுலகங்களையும் ஆளுக' என்று கூறினான்.

கு: இந்திரன் தன்கைப்பாசத்தால் கட்டுண்டதை மேகநாதன் தந்தைக்குக் கூறி, இனி, யாரும் எதிரில்லாமையால் நீ மூவுலகையும் ஆளுக; எனத் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தது. என் கைப்பட்டான் என்றது தன் கைப்பாசத்தால் பிடிப்பட்டதை உணர்த்தியவாறு. இந்திரன் என் கைப்பட்டமையால் இனி உனக்கு எதிரில் நின்று போர்செய்வார் ஒருவரும் இலர், எனவே, இனி, மகிழ்ச்சியோடு மூவுலகையும் ஆளுக என்பான். 'உருப்பசி முதலாயுள்ள அன்னம் என் நடையினார் உன் அடியிணை வருட, முன்னை வானவர் சேவிப்ப மூவுலகாள்தி' என்று கூறினான். இந்திரனுக்

குரிய அரம்பையர் இராவணனுக்கு உரியவராவர் என்பதும் தேவர்கள் இனி வணங்குவது இராவணனையே யென்பதும் புலப் படுத்தியவாறு. சேவித்தில் — வணங்குதல். மூவுலகு என்பன: மண்ணும் விண்ணும், பாதலமும் ஆம். (உசஉ)

இராவணன் மேகநாதனை தழுவிப் பாராட்டுதல்

571. என்றவ னியம்பக் கேட்ட
விராவண னிருப தாய
தன்றிர டோள்க ளாரத்
தழுவிக்கொண் டினிது நின்று
பொன்றிரண் மணிமா மோலிப்
புரந்தரன் றனையே யன்று
வென்றதெவ் வுலகு மன்றோ
வின்றுநீ வீரவென்றான்

என்று அவன் இயம்பக் கேட்ட இராவணன், இருபது ஆய தன்திரள்தோள்கள் ஆரத் தழுவிக் கொண்டு, இனிது, நின்று பொன்திரண் மணிமா மோலிப் புரந்தரன் தனையே அன்று வென்றது எவ்வுலகும் அன்றோ இன்று நீ வீர! என்றான்.

பொ: என்று மேகநாதன் சொல்லக்கேட்ட இராவணன், தன் இருபது திரண்ட தோள்களாலும் அவனை ஆரத்தழுவிக் கொண்டு இனிதாக நின்று, 'வீரனே! நீ இன்று வென்றது, பொன்னால் செய்யப்பட்ட திரண்ட மணிகள் பதித்த சிறந்த முடியினையுடைய இந்திரனை மட்டுமே அன்று; எல்லாவுலகங்களை யும் அன்றோ? என்றனன்.

கு: மேகநாதன் தன் வெற்றியைச் சொல்லக்கேட்ட இராவணன் தன் இருபது தோள்களாலும் அவனைத் தழுவிக் கொண்டு நின்று: நீ இந்திரனை மட்டுமா வென்றாய்? எல்லா உலகத்தையும் அன்றோ வென்றாய்? என்று பாராட்டியவாறு. இந்திரன் பொன்னுலகாளும் பெருமையனாகலின் அவனை வென்றது

எவ்வுலகத்தையும் வென்ற தோடொக்கும் என்று புகழ்ந்தவாறு. இராவணன் தோள்களாரந் தழுவிக்கொண்டு நின்று வீர! நீ இன்று வென்றது புரந்தரன்தன்னையே அன்று; எவ்வுலகுமன்றோ? என்றான் என இயையும். (உசுரு)

இந்திரன் சிறைப்பட்டதையறிந்து தேவர் அயனோடு வருதல்

572. இன்னன பலவும் பன்னி
யிந்திர னோடு தங்கள்
பொன்னக ரெழுந்து பொங்கி
யெதிர்கொளப் புகுந்து தேவர்
மன்னவன் தன்னைக் கட்டி
வன்சிறை வைத்த காலை
அன்னவா கனனை முன்கொண்
டமரர்க ளடங்க வந்தார்

இன்னன பலவும் பன்னி, இந்திரனோடு தங்கள்
பொன்நகர் எழுந்து பொங்கி எதிர்கொளப் புகுந்து, தேவர்
மன்னவன் தன்னைக் கட்டி வன்சிறை வைத்த காலை
அன்ன வாகனனை முன்கொண்டு அமரர்கள் அடங்க வந்தார்.

பொ: இதுபோல்வன பலபாராட்டுதல்களையும் சொல்லிக் கொண்டு இந்திரனோடு, தம்முடைய பொன்மயமான இலங்கை மாநகர் எழுந்து மகிழ்ச்சி பொங்கப் பெற்று எதிர்கொள்ள நுழைந்து, தேவர்கள் தலைவனான இந்திரனைக் கட்டி வலிதாய சிறையில் வைத்தபொழுது தேவர் எல்லோரும் அதனை அறிந்து அன்ன வாகனனாகிய பிரமனை முன்னிட்டுக் கொண்டு அங்கு வந்தார்கள்.

கு: பன்னுதல் – பலகால் சொல்லுதல். தங்கள் பொன்னக ரெழுந்து பொங்கி எதிர் கொள இந்திரனோடு புகுந்து அத்தேவர் மன்னவன் தன்னைக் கட்டி வன்சிறை வைத்த காலை என இயையும். பன்னுதற்கு வினைமுதல் இராவணன். தங்கள் என்புழி மேகநாதனை யும் உளப்படுத்தியவாறு. பொங்குதல்–மகிழ்ச்சியால் மனம் எழுச்சி பெறுதல். தேவர் மன்னவன் தன்னை என்றது, சுட்டுப் பொருளது தாய் நின்றது. அவ்விந்திரனை என்பதே பொருள். சிறையிடுங்கால்

இந்திரனைக் கையும் காலும் கட்டி வன்மையான காவலுடன் வைத்தார்கள் என்ற இயல்பு புலப்பட வேண்டி 'கட்டி' வன்சிறை வைத்தார்கள் என்றார். வன்மை காவலின்மேலும் அங்கு அவ் விந்திரன்பால் கருணைகாட்டாத வன்கண்மை மேலுமாய் நின்றது. அன்னவாகனன் என்றது, பிரமனை. தங்கள் தலைவனைக் காணாத நிலையில் அத்தலைவனுக்குத் தலைவனுயுள்ள பிரமனை நாடுதலே இயல்பாதல் தெளியலாம். அடங்க என்பது முழுவதும் என்னும் பொருளது. (௫௭௨)

பிரமன் இராவணனை அணுகி மேகநாதனுக்கு
இந்திரசித்து எனப்பட்டம் கொடுத்தல்

573. வந்திலங் கேசற் கண்டு
மலரயன் புகல்வான் வைவேல்
வெந்திற லுடைய வீர
வேறுனக் கெதிரா ருன்றன்
மைந்தனிந் திரனை வென்று
வான்சிறை வைத்த தாலே
இந்திர சித்தென் றெல்லா
வுலகமு மியம்ப வென்றான்.

வந்து இலங்கேசற் கண்டு மலர்அயன் புகல்வான் – வைவேல் வெந்திறல் உடைய வீர! வேறு உனக்கு எதிர் ஆர்! உன்தன் மைந்தன், இந்திரனை வென்று, வான்சிறை வைத்ததாலே, இந்திரசித்து என்று எல்லா உலகமும் இயம்ப, என்றான்.

பொ: அவ்வாறு வந்து இலங்கைக்கு அரசனாகிய இராவணனைக் கண்டு தாமரை மலரில் தங்கும் பிரமன் சொல்லுகின்றான். கூரிய வேலினையும் விரும்பத்தக்க திறமையுமுடைய வீரனே! உனக்கு நிகராவார் வேறு யாருளர்? உன் மைந்தன் மேகநாதன், இந்திரனை வென்று, கொடுமையிற் சிறந்த சிறையில் வைத்தமையால் 'இந்திரசித்து', என்று எல்லா உலகங்களும் சிறப்பாகப் பெயர் சொல்வதாக, என்று கூறினான்.

கு: 'வந்து' என்ற வினை தேவர்கட்கும் பிரமனுக்கும் பொது வினை. ஐ—கூர்மை. வெந்திறல் என்பதில் வெம்மை, விருப்பம் என்னும் பொருளது; கொடுமை எனப் பொருள் கொள்ளுதலும் ஆம். வேறுனக்கெதிரார் என்பதை, உனக்கு எதிர் வேறு ஆர், என மாற்றிக் கூட்டுக. வான்சிறை, என்றது, சிறைக்குரிய இலக்கணத்தில் குறையாத சிறப்புடைய சிறை என்றவாறு. இந்திரசித்து, என்பது இந்திரனைச் செயித்தவன் என்னும் காரணம் பற்றிய பெயர். 'இயம்ப' என்றது, இயம்புவதாக என்று பிரமன் நியமித்தவாறு. (உசரு)

இந்திரனை சிறைவிடுமாறு பிரமன் இராவணனை வேண்டுதல்

574. சந்திர மவுலி யீசன்
றடவரை யெடுத்த திண்டோள்
வெந்திற லரக்கர் கோவே
விண்ணவ ரெனைமுன் கொண்டு
வந்தகா ரியமி தாகும்
வலியுனக் கேறிற் றெங்கும்
இந்திரன் றன்னை யொல்லை
யிருஞ்சிறை விடுதியென்றான்.

சந்திர மவுலி ஈசன்
தடவரை எடுத்த திண்தோள்
வெந்திறல் அரக்கர் கோவே!
விண்ணவர் எனைமுன் கொண்டு
வந்த காரியம் இது ஆகும்;
வலி உனக்கு ஏறிற்று எங்கும்;
இந்திரன் தன்னை ஒல்லை
இருஞ்சிறை விடுதி, என்றான்.

பொ: பிறைச்சந்திரனைச் சூடிய சடைமுடியையுடைய சிவ பிரானது பெரிய வெள்ளிமலையை அள்ளியெடுத்த திண்ணிய

தோள்களையும் கொடிய வலிமையினையுமுடைய அரக்கர்களுக்கு அரசனே, விண்ணுலகிலுள்ள தேவர்கள் என்னை முன்கொண்டு வந்த காரியம், இதுவாகும், (இந்திரனைச் சிறைவைத்தமையால்) உனக்கு வலிமை எவ்விடத்தும் ஏற்றம் பெற்றுள்ளது, எனவே, இந்திரனை விரைவில் பெரிய சிறையிலிருந்து விட்டுவிடுவாயாக. என்று வேண்டினான்.

கு: மவுலி என்றது, சடைமுடியினை. ஈசன் தடவரை என்றது கயிலாய மலையை. வரையெடுத்த திண்டோள் என்றமையால் இராவணனின் தோள்வலி கூறி யுயர்த்தி பேசியவாறு. வந்த காரியம் இதாகும் என்றது, பின் கூறப்படும், இந்திரன்றன்னை ஒல்லை இருஞ்சிறை விடுதி, என்றதையே சுட்டி நின்றது. உனக்கு வலி எங்கும் ஏறிற்று என மாற்றி உனக்கு வலிமை எவ்விடத்தும் ஏற்றம் பெற்றுள்ளது எனப் பொருள் கூறுக. இந்திரனைச் சிறை வீடு செய்தாலும் உன் வலிமை உயர்ச்சியே பெறும் என்பது குறிப்பு. ஒல்லை-விரைவு. இருஞ்சிறை-பெரிய சிறை. விடுதி என்பது முன்னிலை ஏவல். (உசகூ)

### இராவணன் பிரமனிடம் சாகா வரங்கேட்டல்

575. என்றவ னியம்பக் கேட்ட
விராவண னியம்பு வானிங்
கின்றவன் றன்னை விட்டால்
யான்பெறும் பேறும் வேண்டும்
பொன்றிகழ் மேனி யாயிப்
புவனமுள் ளளவும் பொன்றா
தென்றுநா னிருப்ப தாக
விவ்வர மருள்க வென்றான்.

என்று அவன் இயம்பக் கேட்ட இராவணன். இயம்புவான், இங்கு இன்று அவன் தன்னை விட்டால் யான்பெறும் பேறும்வேண்டும்; பொன்திகழ் மேனியாய்! இப்புவனம் உள்ளளவும் பொன்றாது என்றும் நான் இருப்பதாக இவ்வரம் அருள்க, என்றான்.

பொ: என்று பிரமன் சொல்லக்கேட்ட இராவணன் சொல்லுவான், இங்குள்ள சிறையிலிருந்து இன்றைக்கு அவ்விந்திரனை விட்டால், அதற்கு ஈடாக யான்பெறும் பேறும் இருக்கவேண்டும்; 'பொன்போல் விளங்குகின்ற மேனியை உடைய பிரமதேவனே! இவ்வுலகம் உள்ள அளவும் யான் இறவாது என்றும் இருப்பதாகிய இவ்வரத்தை எனக்கு அருள்க' என்று சொன்னான்.

கு: பிரமன் வேண்டுகோளுக்கு இணையாக இராவணனும் தனக்கு நித்தியத்தும் வேண்டும் என்று கேட்கின்றான். சிறை செய்யப்பட்டுள்ள இந்திரனை விடுதலை செய்வதனால் எனக்குப் பயன் என்னை? எனக்கும் ஒரு பேறு வேண்டும் என்று கூறியவன் அப்பேறு இன்னது என்பதையும் கூறிவிடுகின்றான். இந்த வரம் கொடுக்கத்தக்க தெய்வ வடிவும் ஆற்றலும் உடையவன் பிரமன் என்பது போதர, 'பொன்றிகழ் மேனியாய்' என விளிக்கின்றான். 'இவ்வுலகம் உள்ள காலம்வரை யான் இருக்கவேண்டும்' என்பது இராவணன் வேண்டும் வரம். இதில் உயிர் நித்தியமாதலின் என்றும் இருப்பது இயல்புதானே! இதற்கு வரம் வேண்டுமோ என்ற கேள்வி எழும்; அதைப்போக்கவே பொன்றாது என்றும் நான் இருப்பதாக என்று மேலும் விளக்கம் தருகின்றான். இதனால் இறந்து பல உடம்பிற் பிறந்தும் உயிர் என்றும் இருக்கும் என்பது பொதுவியல்பு. யான் பொன்றாது என்றும் இவ்வுடம்போடே இருக்கவேண்டும் என்ற அவன் விருப்பம் புலப்படுகின்றது. இந்திரனைச் சிறையிலிருந்து விடுதலை செய்ய வேண்டுகின்ற பிரமனிடத்து இராவணன் தன்னை மரணச் சிறையிலிருந்து விடுதலை செய்யுமாறு கேட்கும் திறம் பாராட்டற்குரியது. (உ௫எ)

பிரமன் இவ்வுலகிற் பிறந்தார்க்கு நித்தியதத்துவம் அரிது என்னல்

576. இராவண னிணைய கூற
விதயத்தி லெண்ணிப் பார்த்துப்
பராவரு முலக மெல்லாம்
படைத்தவன் பகரும் பாரிற்

சராசர மான யோனி
சார்ந்தபல் லுயிர்கட் கெல்லாம்
நிராமய மான நித்த
தத்துவ மரிதிங் கென்றான்.

இராவணன் இனைய கூற, இதயத்தில் எண்ணிப் பார்த்துப்
பராவரும் உலகம் எல்லாம் படைத்தவன் பகரும்; பாரில்
சராசரம் ஆன யோனி சார்ந்த பல் உயிர்கட்கு எல்லாம்
நிராமயம் ஆன நித்த தத்துவம் அரிது இங்கு, என்றான்.

பொ: இராவணன் இத்தன்மையான வரத்தைச் சொல்ல, துதித்தற்கரிய பெருமையுடைய உலகம் எல்லாவற்றையும் படைத்த பிரமன் இதயத்தில் எண்ணிப் பார்த்துச் சொல்லுவான். 'இப்பூமியில் இயங்குவனவும் நிற்பனவுமாகிய பிறப்பில் சார்ந்த பலவகையான உயிர்கட்கெல்லாம் நோயில்லாததான நித்தியத்தும் பெறுதல் அரிது இவ்விடத்தில்' என்று கூறினான்.

கு: இராவணன் கேட்ட வரம் உடனே கொடுக்கக்கூடியதாக இல்லாமையால் பிரமன் இதயத்தில் எண்ணிப் பார்க்க வேண்டியவனானான். பிரமன் பெருமை புலப்பட வேண்டிப் 'பராவரும் உலகம் எல்லாம் படைத்தவன்' என்றார். பராவரும் - துதித்தற்கரிய; இந்த அடை, 'உலகமெல்லாம் படைத்தவன்' என்ற தொடரால் குறிக்கப்படும் பிரமனுக்குரியதாகும். மக்களால் கண்டு துதித்தற்கு அரிய பிரமன் என்றவாறு. சரம் – இயங்குகின்ற மக்கள் விலங்கு போன்ற உயிர்கள். அசரம் – இயங்காது நிற்கின்ற மரம் செடி போல்வனவான உயிர்கள். சர–அசரம் என்ற இரண்டு சொற்கள் வடமொழி தீர்க்க சந்தியால் சராசரம் எனப்புணர்ந்து நின்றது. யோனி – பிறப்பு. உலகில் இயங்குவனவும் நிற்பனவுமான உயிர்கட்கு என்றும் இருத்தலாகிய நித்தியதத்தும் வாய்க்காது என்பான், 'நித்த தத்துவம் அரிது' இங்கு என்றான். ஆமயம் – நோய்; நிராமயம் - நோயில்லாமை. நோயில்லாத நித்ததத்துவம் என அதன் பெருமை பேசியவாறு. சில்வாழ்நாள் பல்பிணியுடைய உயிர்கட்கு நோயில்லாது என்றுமுள்ள நித்ததத்துவம் வாராது என்றவாறு. (உசஅ)

### இந்திரசித்து வேறு வரம் பெறுதல்

577. ஆயது விரிஞ்சன் கூற
வரக்கர்கோன் மைந்தன் சொல்லும்
தீயிடைப் பிறந்த தெய்வத்
தேரினின் றியான்போர் செய்ய
ஆயுவுக் கிறுதி வாரா
வகையெனக் கருணீ யென்ன
நீயது பெற்ரு யென்ருன்
நிருதன்மற் றிதுநி கழ்த்தும்.

ஆயது விரிஞ்சன் கூற, அரக்கர்கோன் மைந்தன் சொல்லும்;
தீயிடைப் பிறந்த தெய்வத் தேரில்நின்று யான் போர்செய்ய,
ஆயுவுக்கு இறுதி வாராவகை எனக்கு அருள்நீ என்ன,
நீ அது பெற்ருய் என்ருன், நிருதன் மற்று இது நிகழ்த்தும்

பொ: அந்தச் செய்தியைப் பிரமன் கூறியவுடன் இராவணன் மைந்தனுகிய இந்திரசித்துச் சொல்லுவான்; நெருப்புக்கு நடுவே பிறந்த தெய்வத்தன்மையுடைய தேரில் நின்று யான் போர்செய்ய ஆயுளுக்கு முடிவு வாராதபடி வரம் எனக்கு அருள் நீ என்று வேண்ட (பிரமன்) நீ அவ்வரத்தைப் பெற்ருயாகுக, என்று கூறினுன்; அவ்வரக்கன் இதனைச் சொல்வானுனன்.

கு: விரிஞ்சன் – பிரமன். அரக்கர்கோன் மைந்தன் என்றது இந்திரசித்தினை. வேள்வித் தீயிடைத் தோன்றியது ஆதலின் அது தெய்வத்தேர் எனப்பட்டது. இந்திரசித்து செய்யும் வேள்வி முற்றுப் பெற்றபின் அவ்வேள்வித் தீயில் தோன்றுகின்ற தேரில் நின்று போர்செய்தால் அவனுக்கு மரணம் வரலாகாது; அந்த வேள்வி முடிதற்கு முன்னர் இந்திரசித்து போர் தொடங்குவானுயின் அழிவு நேரவேண்டும் என்பது இந்திரசித்தின் வேண்டுகோளாக வான்மீகத்தில் உள்ளது. இந்த வரத்தையே பிரமன் இந்திரசித்துக்குக் கொடுத்தான். இவ்விளக்கம் வருஞ் செய்யுளால் புலனுகலாம்.

(உஎகூ)

578. திடந்திக ழமரி னையா
செறுநரை வெல்வா னெண்ணித்
தொடங்கிய வேள்வி முற்றுப்
பெற்றிடிற் றுன்ன லார்கள்
அடங்கலுந் தோற்க வேண்டு
மெனவயன் பெறுக வென்னத்
தடம்புயத் தரக்கன் மைந்தன்
றான்மகிழ்ந் தினைய செய்தான்.

'திடம்திகழ் அமரின் ஐய! செறுநரை வெல்வான் எண்ணித்
தொடங்கிய வேள்வி முற்றுப் பெற்றிடில் துன்னலார்கள்
அடங்கலும் தோற்க வேண்டும்; என அயன் பெறுக' என்னத்
தடம்புயத்து அரக்கன் மைந்தன் தான் மகிழ்ந்து இனைய
[செய்தான்.

பொ: 'ஐயனே! ஒருவரின் வலிமை விளங்குதற்குரிய போரில் பகைவரை வெல்வதற்கு எண்ணி யான் தொடங்கிய வேள்வி முற்றுப் பெறுமாயின் பகைவர்கள் எல்லாம் தோற்கவேண்டும்' என்று கேட்கப் பிரமன் 'அவ்வரம் பெறுக' என்று சொல்ல, பெரிய தோள்களையுடைய இராவணன் மகன் இந்திரசித்து மகிழ்ச்சியுற்று இதனைச் செய்தான்.

கு: ஐய என்பது பிரமனை நோக்கிய விளி; உயர்ந்தோனே! என்பது பொருள். திடம் – வலிமை. ஒருவர் வலிமை இத்தகையது என்பது விளங்குதற்குரிய இடம் போர்க்களமே ஆதலின், 'திடந்திகழ் அமரின் என்றார். செறுநர் – பகைவர். பகைவரை வெல்லும் நோக்கத்திற்காகச் செய்யத் தொடங்கிய வேள்வி முற்றுப் பெறுமாயின் அவ்வேள்வித் தீயிலிருந்து தெய்வத்தேர் ஒன்று தோன்றும்; அத்தேரில் இருந்து போர் செய்தால் பகைவர் யாவரும் தோற்க வேண்டும், என்பது இந்திரசித்துவின் ஆசை. வேள்வி முற்றுப் பெற்றிடின் துன்னலர் அடங்கலும் தோற்க வேண்டும் என்று கேட்டதால் வேள்வி முற்றுப்பெறுதமுன் போர் தொடங்கினல் தான் அழியவேண்டிவரும் என்பது அருந்தாபத்தி

யால் பெறப்படும். வான்மீகத்தில் இந்திரசித்துவே இதனைச் சொல்கின்றான்; இவ்வரத்தின்படியே இந்திரசித்து நிகும்பலை வேள்வி செய்து முடித்து இலக்குவனைக் கொல்லவேண்டும் என்ற எண்ணத்தோடு மந்தணமாக அவ்வேள்வியைச் செய்துகொண் டிருக்கின்றபோது விடணனால் அந்த மந்தணத்தை யறிந்து கொண்டு, இலக்குவன் வந்து போர்செய்ய அவ்வேள்வி முற்றுப் பெறச் செய்யாமையால் இந்திரசித்து இறந்துபட்ட நிகழ்ச்சி இங்கு நினைதல் தகும். வரம் பெற்ற மகிழ்ச்சியால் இந்திரசித்து இந்திரனை விடுதலைசெய்து காட்டிய நிகழ்ச்சியையே 'இனைய செய்தான்' என்று குறிப்பிட்டார். இது வருஞ் செய்யுளில் புலனாகும். (உ௫அ)

579. சிறையிடை யிருந்த வந்தத்
தேவர்கோன் றன்னை விட்டு
மறையவன் றனக்குக் காட்ட
மானவேன் மருமத் தூன்ற
உறுதுயர் பொறுக்க லாற்றா
தொருவரை யெடுத்து நோக்கான்
கறைகெழு வேற்கை வானோர்
காவலன் கவிழ்ந்து நின்றான்.

**சிறையிடை இருந்த அந்தத் தேவர்கோன் தன்னை விட்டு, மறையவன் தனக்குக் காட்ட, மானவேல் மருமத்து ஊன்ற, உறுதுயர் பொறுக்கலாற்றான் ஒருவரை எடுத்து நோக்கான் கறைகெழுவேற்கை வானோர் காவலன் கவிழ்ந்து நின்றான்.**

பொ: இந்திரசித்து சிறையில் அடைபட்டிருந்த அந்தத் தேவேந்திரனை விடுவித்துப் பிரமதேவனுக்குக் காட்ட, இரத்தக் கறை பொருந்திய வேலைத்தாங்கிய கையையுடைய தேவர்கட்குத் தலைவனாகிய இந்திரன், மானம் என்கின்ற வேலானது தன் மார்பில் பாய்தலால் உளதாகிய துயர் பொறுக்க மாட்டாதவனாய் ஒருவரையும் தலைதூக்கிப் பாராதவனாய் முகம் கவிழ்ந்து நின்றான்.

கு: தன் பகைவனாகிய இந்திரசித்து, தன்னை விடுதலை செய்து பிரமதேவனிடம் காட்டி ஒப்படைத்தபோது இந்திரனுக்கு உண்டான மான உணர்ச்சியை இங்கு வேலாக உருவகஞ் செய்ததோடு அந்த மானமாகிய வேல் அவன் மார்பில் ஊன்றியதாகவும் அந்த மானவேல் பாய்ந்த துயர் பொறுக்கவியலாது போனதாகவும் கூறியுள்ளார், மருமத்து எறிவேல் பாய்ந்த துயரினும் பகைவன் கையில் அகப்பட்டு சிறைப்பட்டிருத்தலாகிய இழிவுத்துயர் தன்னைச் சார்ந்த பிரமன் முன்பு மிகப் பெரியதாயிற்று என்பதைப் புலப்படுத்தவே இங்ஙனம் 'உறுதுயர் பொறுக்கலாற்றான்' ஒருவரை எடுத்து நோக்கான் கவிழ்ந்து நின்றான்' என்றார். இந்த இழிநிலைக்கு இந்திரன் உரியவனல்லன் என்பது புலப்படுத்த 'கறைகெழு 'வேற்கை' வானோர் காவலன், எனச் சிறப்பித்தார். 'மானவேல், என்பது உருவகம். மருமம் – மார்பு. மறையவன் என்றது நான்கு வேதங்களுக்குரிய பிரமனை. ஊன்றுதல்-அழுந்துதல், பாய்தல். உறுதுயர்–மிக்கதுயர். உறு மிகுதியுணர்த்தும் உரிச்சொல். கறை என்றது, வேலில் உள்ள இரத்தக் கறையை. இதனால் அவ்வேல் பல பகைவரை வென்ற வேல் என்பது புலனாகும். கவிழ்தற்கு எழுவாயாக முகம் வருவிக்கப் பட்டது. (உருக)

இந்திரன் அடைந்த இழிவிற்குக் காரணம் கௌதமன் இட்ட சாபமே என்பது கூறிப் பிரமன் போதல்

580. அன்னதன் மையனாய் நின்ற
வமரர்கோன் றன்னை நோக்கிக்
கன்னிகர் தோளாய் முன்பு
கௌதம னிட்ட சாபம்
உன்னைவந் துறுத லாலே
யுனக்கிது வந்த துன்றன்
பொன்னகர் புகுதி யென்று
விட்டயன் போயி னானல்.

அன்னதன்மையனய் நின்ற அமரர் கோன் தன்னை நோக்கிக்
கல்நிகர் தோளாய்! முன்பு கௌதமன் இட்ட சாபம்
உன்னை வந்து உறுதலாலே உனக்கு இது வந்தது; உன்தன்
பொன் நகர் புகுதி! என்றுவிட்டு அயன் போயினன் ஆல்.

பொ: அவ்வாறு மிக்க துயரோடு யாரையும் தலைதூக்கிப் பார்க்காது முகம் கவிழ்ந்து நின்ற இந்திரனைப் பார்த்து, 'திரண்ட கல்லை ஒத்த வலிய தோளை யுடையவனே! முன்பு அகலிகைபால் நீ செய்த தவறுக்காகக் கவுதமன் இட்ட சாபம் இப்போது உன்னை வந்து அடைதலால் உனக்கு இந்த இழிநிலை வந்தது; இனி உனக்கு உரிய பொன்னகரத்திற்குப் போவாயாக' என்று சொல்லி அவனை விடுத்துப் பிரமன் தன்னுலகத்திற்குப் போனன்.

கு: திரண்ட கல்லை ஒத்த தோளிருந்தும் வெற்றி காண முடியாமல் போயிற்றே என்ற இரக்கம் தோன்ற இந்திரனைப் பிரமன் விளித்தவாறு. உடல் வலியினும் ஊழ்வலி பெரிது என்பதை உணர்த்தவே 'முன்பு கவுதமன் இட்ட சாபம் உன்னை வந்துறுதலாலே உனக்கிது வந்தது' என்பதைக் கூறினன். இதனல், 'ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்' என்ற திருக்குறள் கருத்து வலியுறுத்தப் படுகின்றது. அகலிகையையும் கவுதமனையும் பிறர்முன் நாணுமாறு செய்த இந்திரனது அடாத செயலே இன்று பிறர்முன் அவனை நாண வைத்தது என்பது கருத்து. வான்மீகத்தில் இந்நிகழ்ச்சி விரிவாக விளக்கப் படுகின்றது. (உ௫உ)

திக்கு விஜயப் படலம் முற்றிற்று.

# 9. கார்த்த வீரியார்ச்சுனப் படலம்

## முன்னுரை

இராவணன் கார்த்தவீரியார்ச்சுனனிடம் போர் செய்து தோல்வியுற்றுச் சிறைப்பட்ட நிகழ்ச்சியும் பின் பிரமன் வேண்டு கோளின்படி கார்த்த வீரியார்ச்சுனன் விடுப்ப அவ்விராவணனை இலங்கையில் விட்டுப் பிரமன் தன்னுலகம் எய்திய செய்தியும் கூறப்படுதலின் இது கார்த்தவீரியார்ச்சுனப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. இராவணனைப்பற்றிய செய்தியேயாயினும் இங்கு வென்றவன் கார்த்தவீரியார்ச்சுனன் ஆகலின் அவன் பெயரால் இப்படலம் பெயர் பெறுகின்றது.

## படலப்பொருள் சுருக்கம்

இராவணனது வெற்றிச் செயல்கள் முழுவதையும் கேட்ட இராமன் அதிகமான ஆச்சரியம் அடைந்து, 'இப்பேருலகத்தார் அஞ்சுமாறு இராவணன் வெற்றிகொண்டு செருக்கும் நாளில் தேர்ப்படையுடைய மன்னர்களில் அவனை எதிர்த்தார் இருந்த தாகச் சொல்லவில்லையே! இராவணனுக்குத் தோல்வியுருதோர் இருந்திருப்பின் அவரைப்பற்றிச் சொல்லுக' என்று சொல்லத் தவத்தால் ஓங்கி வடிவால் குறுகிய அகத்திய முனிவன் சொல் கின்றான்.

மிகப்பெரிய இவ்வுலகத்தைத் தம் அடிப்படுத்தித் தம்மை எதிர்க்கும் பகைவரே இல்லாமல் இம்மண்ணுலகை யாண்டிருந்த கார்த்தவீரியார்ச்சுனனுக்கும் வாலிக்கும் அக்கொடியவனாகிய இராவணன் தோற்றுளான் என்ற அளவில், இராமன் வியந்து அக்கதையை விரித்துச் சொல்லுக எனப் பணிக்கின்றான். அகத்திய முனிவன் சொல்கின்றான்.

கடல் சூழ்ந்த இவ்வுலகில் வாழ்கின்ற மன்னர்களைத் தோல்வி யுறச் செய்துவிட்டு அந்த வாளேந்திய இராவணன், ஆயிரம் திண்ணிய தோள்களையுடைய அர்ச்சுனனது அழகிய நகரை அடைந்து, இங்கு இப்பெரிய நகர்க்கு அரசன் எங்குளான்

அவனோடு போர் செய்ய இராவணன் சித்தமாய் வந்துள்ளான் என அங்குச் சென்று அவனுக்கு உணர்த்துங்கள் என்று சொல்ல, கார்த்திவீரியார்ச்சுனனின் அமைச்சர்கள் கேட்டு அரசன் தன்மனைவியரோடு நருமதை நதியில் நீராடச் சென்றிருக்கின்றான் என்று சொன்னார்களாக, அது கேட்டுப் போர் வெறிகொண்ட இராவணன் அவ்விடத்திற்கும் செல்ல எண்ணி ஆயிரம் சிகரங்களையுடைய விந்தமலையை அடைகின்றான். மழை பொழிகின்ற மேகத்தின் முழக்கம் கேட்டுப் பொறுக்காமல் யானையின் பிளிறெலியென மயங்கிச் சிங்க ஏறு எதிர்த்து அதன் எதிரே முழங்குகின்ற குகைகளையுடைய அம்மலைமேல் தேவர்களும் தானவர்களும் புன்சிரிப்பினையுடைய அரம்பையர்களோடு மிகப்பெரிய காதலுடையவர்களாய் விளையாடிக்கொண்டு காமத்தால் விளையும் போகமாகிய கனியை நுகர்தற்கு இடமாக அருவிகள் விழ்கின்ற வரடை தவழ்கின்ற அம்மலைச்சாரல் அமைகின்றது. இத்தகைய விந்தமலையின் அழகினைப் பார்த்துப் பின்பு இராவணன், அழகிய நுரையாகிய புடைவையையும் நிலைபெற்ற காஞ்சி (மரம்) விளங்குகின்ற பக்கமலையாகிய அல்குலையும் வஞ்சிக் கொடியாகிய இடையினையும் நீர்ச்சுழியாகிய கொப்பூழினையும் மலையிலுள்ள பொன்னாகிய ஆரத்தையும் மணற்குன்றுகளாகிய மெல்லிய கொங்கைகளையும் போர் செய்கின்ற கயல்களாகிய கண்களையும் கருமணலாகிய கூந்தலினையும் அன்னங்களின் நடையாகிய மென்னடையினையும் உடைய நருமதை என்னும் நங்கையைத் தெளிவாகப்பார்க்கின்றான்.

அந்தத் தெய்வத்தன்மை வாய்ந்த நருமதை நதியில் தன் மந்திரிமார்களோடு இராவணன் மனமகிழ்ந்து நீராடி விட்டு அவ்வாற்றின் மணலை இலிங்க வடிவாகக் குவித்து நஞ்சுண்ட கண்டத்தினையும் நீண்ட சடையினையும் உடைய சிவபிரானை ஆவர்கனம் செய்து அருச்சனை செய்கின்றான். அப்பொழுது கார்த்தவீரியார்ச்சுனனும் இருண்ட கூந்தலையுடைய தன் பெண்டிரோடு நீர்விளையாடுவதற்காகத் தன் கைகளின் திரட்சியால் மிக்க வேகத்தினையுடைய அவ்வாற்று நீரைத் தேங்கி நிற்குமாறு கட்டுகின்றான். அவ்வாறு தேங்கிய நீர் எதிர்ஓடி ஆற்றின் இருகரையும் புரளச் சென்று இராவணன் செய்யும் பூசையைச் சிதைக்கின்றது. அது கண்ட இராவணன் சினமிக்குச் சுகசாரணர்களைப் பார்த்து 'இங்கு

ஆற்றுநீர் எதிரேறி வருவதற்குக் காரணம் யாதென நீர் அறிமின் எனக் கட்டளையிட, அவ்விருவரும் செல்கின்றார்கள். தன் மனைவியரோடு நீர்விளையாட்டுச்செய்யும் கார்த்தவீரியார்ச்சுனன் தன் ஆயிரம் கைகளால் அந்த நருமதை நதியின் நீரை அடைக்க, அவ்வாற்றுநீர் எதிரேறு வதை யறிந்து கொண்டு வந்து இராவணனுக்குச் சொல்கின்றார்கள்.

அதுகேட்ட இராவணன் தன் அமைச்சருடன் புறப்பட்டு அருச்சுனன் இருந்த இடத்தை எய்தி மனம் பொறாது கார்த்தவீரியார்ச்சுனனின் அமைச்சரை நோக்கி, 'இராவணன் இவ்விடத்துப் போர் செய்ய வந்துளான் என்பதை அருச்சுனனுக்குத் தெரிவியுங்கள், என்ன அமைச்சர்கள் தனக்குரிமை பூண்ட பெண்டிரிடம் பதிந்த காதல் நெஞ்சினனாய் அருச்சுனன் நீர்விளையாட்டில் இன்புற்றிருக்கும்போது நீ போர் செய்ய முயலுதல் நன்றன்று. நாளைக்குப் போர்செய்யலாம் என்கின்றனர். இராவணன் பொறாமல் அருச்சுனனோடு மேல்வீழ்ந்து போர் செய்ய முயலும்போது அமைச்சர்கள் அவ்விராவணனை எதிர்த்துப் போர் செய்யத் தொடங்குகின்றார்கள். அருச்சுனன் அமைச்சர்களோடு இராவணன் அமைச்சர்களும் நெருங்கிவந்து எதிர்த்ததால் பெரிய போர் மூளுகின்றது. அருச்சுனனின் போர்க்கிளர்ச்சியையுடைய சேனை, அரக்கர்மேல் சினங்கொண்டு சென்று தாக்குகின்றது. தாக்குண்ட வீரர்களின் இரத்தத்தால் போர்க்களம் மலர்ந்துள்ள முருக்கமரக் காடு போலச் சிவந்து காணப்படுகின்றது.

நெறிக்கு மாறுபட்ட மனத்தையுடைய மகாபாரிசுவன் மகோதரன், மாரீசன், தூமாக்கன் முதலியோர் சக்கரம், இருப்புலக்கை தண்டாயுதம் வேல் வச்சிராயுதம் மழுவாயுதம் ஆகிய ஆற்றல் மிக்க ஆயுதங்களை வழங்கினமையால் அருச்சுனன் சேனை தோற்கின்றது. தனது சேனை தளர்ந்து தரையில் வீழக்கண்டு கார்த்தவீரியார்ச்சுனன் நீர் விளையாட்டில் ஆசையுடைய பெண்டிர் அஞ்சி நடுங்கவும் அஞ்சாதீர்கள் என்று அவர்களைக் கையால் அமைத்துவிட்டு மின்னுகின்ற படைக்கலங்களையுடைய கார்த்தவீரியார்ச்சுனன் விரிந்த நருமதையின் புனலைவிடுத்துக் கொடிய நெருப்புப்போல மனம் கொதித்து இராவணனது சேனையைத்

துரத்த அவ்வருச்சுனனேடு பிரகத்தன் என்பவன் எதிர்வந்து போர் செய்கின்ருன். நேர்மையற்ற மனத்தையுடைய பிரகத்தன் அருச்சுனன் மேல் நீண்ட உலக்கையை நெருப்பு எழுமாறு எறிய, அவ்வுலக்கை பொடிபடுமாறு அருச்சுனன் தன் தண்டாயுதத்தால் மோதிவிட்டு அப்பிரகத்தனையும் தரையில் விழுமாறு அடிக்க, அதுகண்டு மகோதரன் முதலியவர்கள் அஞ்சி ஓடிய ஓட்டத்தைக் கண்டு இராவணன் கடையூழியில் எழும் நெருப்புப் போலக் கோபித்துப் போர் செய்ய வருகின்ருன்.

தண்டாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு இராவணன் ஆயிரங்கைகளையுடைய கார்த்தவீரியார்ச்சுனனேடு போர் செய்கின்ருன், இரண்டு இளமையான எருதுகள் ஒன்றுபோல் ஒன்று சினங்கொண்டு நெருங்கிப் போர் செய்வது போலவும், இரண்டு குன்றுகள் மேகம் போல அதிர்குரல் எழுப்பிக் கொண்டு நெருங்கிப் போர் செய்வது போலவும், எட்டுத்திசை யானைகளில் இரண்டு யானைகள் எதிர்நின்று போர் செய்வது போலவும் அவ்விருவரும் போர் செய்கின்ருர்கள். போர்செய்யும்போது இராவணன் காற்றைப் போல் விரைந்து அருச்சுனனது மார்பில் தண்டாயுதத்தால் அடித்திட, அவ்வடிக்குக் கலங்காது தாங்கிநின்று அருச்சுனன் இராவணனைப் போலவே அவ்விடத்து அடிக்க, இராவணன் வலிமையிழந்து தோல்வி யுறுகின்ருன். இராவணன் தளர்ச்சி யுறுவது கண்ட அருச்சுனன் தன் ஆற்றல் மிக்க தோள்களும் அயர்ச்சியடையுமாறு தூக்கிக்கொண்டு போகத் தொடங்குகின்ருன். அதுகண்ட மகோதரன் முதலிய அரக்கர்கள், போரில் நம் இராவணன் அகப்பட்டுக் கொண்டான் என்று தெளிந்து நில் நில் என்று அந்த அருச்சுனன்மேல் ஆயுதங்களைச் செலுத்துகின்ருர்கள். அருச்சுனனும் நெருப்புப்போல மனம் கொதித்துத் தன் ஆயிரங்கைகளிலும் தண்டாயுதம் முதலிய ஆயுதங்களை வாங்கிக் கொண்டு தன்னை எதிர்த்த அரக்கர்கள் நிலைகுலைந்து வலிகெட்டு ஓடிட, வீசிவிட்டுத் தன் அழகிய நகரத்தில் புகுந்து தீயவனுகிய இராவணனைச் சிறைவைக்கின்ருன்.

தோற்றுப்போன கொடிய அரக்கர்கள் கிளர்ந்தெழுந்த பெரிய பயத்தினுல் இதுவரை யார்க்கும் பின்னிடாத இராவணன்

போரில் அருச்சுனனிடம் பட்ட பாடெல்லாவற்றையும் விடண னுக்குச் சொல்ல இரக்கமிக்க மனத்தினனாகிய அவ்வீடணன் சென்று தம் குடிக்கெல்லாம் சிறந்தோனாக விளங்கும் பிரமனுக்குச் சொல்ல, அதுகேட்டு மனம் வருந்திய பிரமன் இராவணனை விடுவிக்க அருச்சுனனது நகர்க்கு வருகின்றான்.

வந்த பிரமனை கண்டவுடன் அருச்சுனன் அவன் திருவடிகளை வணங்கி அருச்சனை செய்து துதித்துவிட்டு வந்த காரணத்தை வினவுகின்றான். பிரமன் அருச்சுனனைப் பார்த்து மன்னவ! இந்திரன் முதலிய பலரையும் வென்று நெடுங்காலமாகச் சம்பாதித்த வெற்றியெல்லாவற்றையும் இராவணன் உனக்குக் கொடுத்துவிட்டு நின் தலைவாயிலில் உள்ள சிறையில் வாடுகின்றான். இனி, உன்னைத் தடுப்பவர் யாருளர்? என்று கூறிவிட்டு மன்னவனே உனக்கு இப்போது பெருகியுள்ள வலிமையே போதும், இராவணன்மேல் கொண்ட கோபத்தை விடுத்து அவனைச் சிறையிலிருந்து விடுதலை செய்க என்று பிரமன் வேண்டுவதைக் கேட்ட அருச்சுனன், ஆறிய சினத்தினனாய் இராவணனை விடுதலை செய்ய, விடுதலைபெற்ற இராவணனை இலங்கையில் விடுத்துவிட்டுத் தெளிந்த சிந்தையுடன் பிரமன் தன்னுலகத்திற்குச் சென்று சேர்கின்றான்; என்பது இப்படலத்துக் கூறப்படும் பொருளாகும்.

## ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்: கார்த்தவீரியார்ச்சுனன் கேகய தேசத்திற்கு அரசன் என்பதும் அவன் தலைநகர் மாகுஷ்டதி என்பதும் கூறப்படுகின்றன. நருமதை நதியைப் புட்பக விமானத்திலிருந்து கண்ட இராவணன் இது கங்கையே யென்று புகழ்ந்துவிட்டு விமானத்திலிருந்து இறங்கி ஆர்வத்தோடு அந்த நருமதை நதியில் மூழ்கித் திளைத்துவிட்டுப் பற்பல மலர்களால் நிறைந்து அழகுடன் விளங்கும் மணற்பரப்பில் இனிதே அமர்ந்து தன் அமைச்சருடன் விளையாட்டாகப் பேசி மகிழ்கின்றான். விந்தமலையின் மரச் செறிவுகளாலும் நருமதை நதியின் தன்மையாலும் நண்பகற் சூரியன் வெப்பமின்றி விளங்குகின்றான். ஆனால் இராவணன் சொல்கின்றான், தன்னை நினைத்தே வெப்பமின்றிச் சூரியன் சந்திரன் போலக் குளிர்ச்சியாக விளங்குகின்றான் என்றும் வாயுதேவனும்

தன்னிடமுள்ள அச்சத்தினுல் மிகவும் முயன்று நருமதையின் குளுமையையும் நறுமண மலர்களின் மணத்தையும் வீசித் தன் இளைப்பைப் போக்குகின்ருன் என்றும், நருமதையாறும் தன்னைக் கண்டு அஞ்சிய பெண்மணிபோலப் பொழுதுபோக்கக் காரணமாய் எழிலுடன் இலங்குகின்றது என்றும் தன் அமைச்சர்களிடம் இராவணன் கூறி மகிழ்கின்ருன். இதனுல் இராவணனது தற் பெருமையுள்ளம் புலப்படுகின்றது. இராவணன் பின்பு மகோதரன், சுகன் சாரணன் முதலியவர்களை நோக்கி நீங்கள் கங்கையின் மூழ்கும் யானைகளைப்போல இந்த நருமதையாற்றில் மூழ்கிச் செய்த பாவத்தைப் போக்கிக் கொள்ளுங்கள், யானும் தனியே ஒளி யுடைய மணற்பரப்பில் சிவபிரானுக்கு மலர்களால் அருச்சனை செய்கின்றேன் என்று கூறிச் சிவபூசை செய்யப் புறப்படுகின்ருன். அமைச்சர்கள் இராவணன் சொற்படி நருமதையில் மூழ்கித் திளைத்து விளையாடிவிட்டுக் கரையேறி இராவணனுடைய பூசைக் காக மலர்களைக் கொணர்ந்து மலைபோலக் குவிக்கின்ருர்கள். மலர்கள் கொண்டு வரப்பட்டமை கண்ட இராவணன் தேவார்ச் சனைக்காக மீண்டும் மந்திர செபத்தோடு நருமதையில் இறங்கிச் சாத்திர முறைப்படி நீராடிக் கரையேறி ஈர ஆடையைக் களைந்து வெண்பட்டு உடுத்துக்கொண்டு சிரமேற் குவித்த கரங்களை யுடையவனுய்ச் சிவத்தியானத்துடன் நடக்கின்ருன். அவன் அமைச்சர்கள் பொன்னுல் செய்யப்பட்ட இலிங்கத்தை எடுத்துச் செல்கின்ருர்கள். இராவணன் அந்தப் பொன்னிலிங்கத்தை மணல் மேடையின்மேல் எழுந்தருளப்பண்ணி மாருமணமுடைய திரவியங் களாலும் மலர்களாலும் பூசிக்கின்ருன். புகழ்ந்து பாடுகின்ருன், பின்பு தன் நெடிய கைகளைப் பரப்பிக்கொண்டு நாட்டியம் ஆடுகின்ருன்; என்று வான்மீகம் கூறும் கருத்துக்களை ஒட்டக் கூத்தர் விளக்கமாகக் கூறவில்லை. மணலை இலிங்கமாகச் செய்து வழிபட்டதாகக் கூறியுள்ளார்.

2. நருமதையாற்றில் சிவபூசை செய்துகொண்டிருந்த இராவ ணன் ஆற்றுநீர் எதிர்த்துவந்து சிவபூசையைச் சிதைப்பதைக் கண்டு சினந்து சுகசாரணரை நோக்கி வெள்ளம் எதிரேறுதற்குக் காரணம் அறிந்துவரப் பணிக்கச் சென்று மீண்ட அத் தூதுவர்கள் அருச்சுனன் மனைவியரோடு நீராடுகின்றவன் தன் ஆயிரம் கை

களால் வெள்ளத்தைத் தடுக்கின்றமையால் இது நிகழ்ந்தது என்று கூறக்கேட்டு இராவணன் சினந்து, அந்த அருச்சுனனோடு போர் புரியப் புறப்படும்போது மேகத்தின் பேரொலியோடு குருதிமழை பெய்தது என வான்மீகம் கூறுகின்றது. ஒட்டக்கூத்தர் அதனைக் கூறவில்லை.

3. கார்த்தவீரியார்ச்சுனன் இராவணன் மார்பில் எறிந்த கதாயுதம் வலிமைமிக்கதாயிருந்தும் முற்றிலும் வலிமையற்றதாகி இரண்டாக முறிந்து மண்மீது வீழ்ந்ததாக வான்மீகம் கூறுகின்றது. இந்த நிகழ்ச்சியை ஒட்டக்கூத்தர் உரைக்கவில்லை.

4. கார்த்தவீரியார்ச்சுனன் இராவணனைக் கட்டிப்பிடித்துத் தன்னகரத்துச் சிறை செய்துள்ளதைக் கேள்விப்பட்ட புலத்திய முனிவர் மனங்கலங்கி கார்த்தவீரியார்ச்சுனனை நேரில் காண விண்வழியே சென்று மாகிஷ்மதி நகரத்தினை அடைந்தபோது வாயிற்காப்போர் விண்ணை விடுத்து மண்ணில் வந்த சூரியனைப் போன்று தவத்தால் ஒளிமிக்கு விளங்கும் புலத்தியரை யாரெனக் கேட்டுத் தெரிந்துகொண்டு அருச்சுனனுக்குச் சொல்கின்றனர். அருச்சுனன் விரைந்தெழுந்து சூரியனைப்போன்ற ஒளியுடைய புலத்திய முனிவரை வணங்குகின்றான். தங்களுக்கு ஆக வேண்டியதைச் செய்யக் காத்திருக்கின்றோம் என்று ஆர்வமொழி கூறுகின்றான். புலத்திய முனிவர் சொல்கின்றார். 'இராவணன் நின் சிறையில் சுதந்தரமின்றிக் கிடக்கின்றான். கடலும் காற்றும் எவனுக்கு அஞ்சிக் கட்டுப்பட்டுள்ளனவோ அவன் என் பேரன், எவனாலும் வெல்லப்படாத இவன் நின்னால் பிடித்துக் கட்டப்பட்டான். என் பேரனுடைய வெற்றிப் புகழ் நின்னால் பருகப் பட்டது இப்பொழுது என் வேண்டுகோளின்படி அந்த இராவணனை விட்டுவிடு' என்று வேண்டுகின்றார். கார்த்தவீரியார்ச்சுனன் புலத்திய முனிவரின் வேண்டுகோளுக்குப் பெருமதிப்புக்கொடுத்து இராவணனை விட்டு விடுகின்றான்.

விடுதலை பெற்ற இராவணனுக்கு அருச்சுனன் ஆடையணிகளாலும் மலர் மாலைகளாலும் மரியாதை செய்து பாராட்டி (நாம் ஒருவரை ஒருவர் இனித்துன்புறுத்தலாகாது என்ற உடன்பாடு செய்து கொண்டனர். பிரமனைப் போன்ற புலத்திய முனிவரை

வணங்கித் தத்தம் வீடு செல்கின்றனர் என வான்மீகம் கூறுகின்றது. இந்தப்போர் மறுப்பு உடன்பாடு பற்றி ஒட்டக்கூத்தர் ஒன்றும் கூறவில்லை.

ஒட்டக்கூத்தர் இங்குப் புலத்தியர்க்குப் பதிலாகப் பிரமனையே கூறுகின்றார். இராவணன் அருச்சுனனால் சிறைப்படுத்தப்பட்ட செய்தியைக் கேள்விப்பட்ட விடணன் பிரமனிடம் சென்று சொல்லி வேண்டப் பிரமனே அருச்சுனனிடம் வந்து வேண்டி இராவணனைச் சிறைவீடு செய்து இலங்கைக்கு அழைத்துச் சென்று விடுத்ததாக ஒட்டக்கூத்தர் கூறுகின்றார். இராவணன் பாட்டனாகிய புலத்திய முனிவர் இராவணன் சிறைப்பட்டமைக்கு வருந்தி விடுதலை செய்தார் என்பதே பொருத்தமாக உள்ளது. மூவரில் ஒருவராய்ப் படைப்புத் தொழிலுக்குரிய பிரமன் இவ்வாறு எளியனாய்த் தேவர்களின் பகைவனாய்த் தீங்கினை விரும்பிச் செய்யும் இராவணனைச் சிறை மீட்பதற்கு மண்ணுலகத்து வந்தான் என்பது அவ்வளவு பொருத்தமாக இல்லை. 'செழுமறை முனியாந் திசைமுகன் தன்னுலகடைந்தான் என்பது ஒட்டக்கூத்தர் வாக்கு.

## படலப் பொருள் சிறப்பு

கார்த்தவீரியார்ச்சுனப் படலத்தில் விந்திய மலையும் நருமதையாறும் சிறப்பாக வருணிக்கப்படுகின்றன. மலைமிசையுலவும் மழைமுகில் முழக்கம் கேட்ட சிங்கம் அதனை யானையின் பிளிறெலியாக மயங்கி அதற்கு எதிராக முழங்கும் விலங்கின் மயக்கத்தையும் மலைக்குகைகளையுடைய விந்தமலையில் வானவர்களும் தானவர்களும் அரம்பையரின் முகிழ்நகை கண்டு மயங்கிக் கழி பெருங்காதலோடு விளையாடிக் காமபோகக் கனியை நுகர்கின்ற மதிமயக்கத்தையும் காட்டுகின்ற முறை அழகாக அமைந்துளது.

## நருமதையாறு

இராவணன் விந்தமலையில் தோன்றி மேல்கடலை நோக்கி ஓடுகின்ற நருமதையாற்றைக் காண்கின்றான் என்பதைக் கூற வந்த கவிஞர், காண்கின்ற இராவணனின் மனநிலைக்கேற்ப அந்த ஆற்றினைப் பெண்ணாக உருவகம் செய்து நருமதை என்னும் அரிவையைத் தெரிவுறக் கண்டான் என்று கூறியிருப்பது மிகவும்

பொருத்தமாகவுள்ளது. இராவணன் பெண்ணினைப் பார்க்கும் விருப்பத்தோடு ஆற்றினையும் பார்க்கின்றான் என்றதால் பெண்ணின் உறுப்புக்கள் அனைத்தும் உருவகமாக ஆற்றிலும் அமைந்திருப்பதைக் காட்ட வேண்டியவராகின்றார் புலவர்.

மலையின் எழிலைக்கண்ட இராவணன், அதில் பிறந்து செல்கின்ற நருமதையென்னும் பெண் அழகிய நுரையாகிய ஆடையினையும் காஞ்சி மரமாகிய காஞ்சியணியினையும் அணிந்த பக்கமலையாகிய அல்குலையும் வஞ்சிக் கொடியாகிய இடையினையும் நீர்ச்சுழியாகிய உந்தியினையும் மலையிலுள்ள பொன்துகளாகிய அழகிய ஆரத்தினையும் மணற்குன்றுகளாகிய முலைகளையும் ஒன்றோடொன்று போர் செய்யும் கயல்மீன்களாகிய கண்களையும் கருமணலாகிய கூந்தலினையும் அன்னங்களின் நடையாகிய மென்னடையினையும் உடையவளாகச் செல்வதைத் தெளிவர்கக் காண்கின்றான்; என்று கூறியிருக்கும் உருவகம் முற்றுருவகமாய் மகிழ்ச்சியூட்டுதல் காணலாம்.

## இராவணார்ச்சுனப் போர் உவமை

இனி, இராவணனும் கார்த்தவீரியார்ச்சுனனும் தண்டு கொண்டு செய்யும் போரினைக் கூறுமிடத்து ஒன்றோடு ஒன்று கறுவுகொண்டு மழவிடைகள் இரண்டு மலைவன போலவும் இரண்டு குன்றுகள் மேகத்தைப்போல் அதிர்குரல் எழுப்பிக்கொண்டு போர் செய்வன போலவும் திசை யானைகளில் இரு யானைகள் எதிர்நின்று மலைவன போலவும் போர் செய்தார்கள்; என மூன்று வகையான உவமைகளைக் கூறி அவர்தம் போரின் சிறப்பைப் புலப்படுத்துகின்றார் புலவர். இது பல்பொருளுவமையாகவும் இல்பொருளுவமையாகவும் அமைந்து படிப்போர்க்கு மகிழ்மிக ஊட்டுவதாக அழகுடன் விளங்குவது காணலாம். இவ்வுவமைகளால் போர் செய்யும் இரு வீரர்களின் உருவப்பெருமையும் வலிமைப்பெருமையும் வீரப் பெருமையும் விளங்குதல் காணலாம்.

## செய்யுள் சிறப்பு

செய்யுளில் பல பொருள்களைப் பற்றிக் கூறும் பொழுது அடைமொழிகள் பலசேர்த்துச் சொல்லுதலே இயல்பு. அடைமொழி

யின்றிப் பல பொருள்களையும் அடுக்கிக் கூறுவது புலவர்களின் நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டுவதாகும். இராவணனைச் சேர்ந்த அரக்கர்கள் அருச்சுனனோடு போர் செய்யும்போது பற்பல ஆயுதங்களை ஆயிரங் கைகளால் அருச்சுனன் ஏவுகின்றான் என்பதைக் கூறவந்த புலவர் 'தண்டுவாள் முசலம் சக்கரம் சூலம் தடமழுத் தோமரம் நாஞ்சில் பிண்டிபாலம் கோல் முதலவாயு தங்கள்...... துரந்து' என்கின்றார். இங்குத் தடமழு என்புழி கொடுத்த அடைமொழியன்றி வேறு அடைமொழிகள் இல்லாமல் ஒன்பது ஆயுதங்களை அழகுற அடுக்கிக் கூறியுள்ள முறை வியக்கத் தக்க முறையில் விளங்குதல் காணலாம்.

இராமன், இராவணனைக் காட்டிலும்
வலிமைபெற்றிருந்தோரைக் கூறு எனல்

581. அரக்கர்கோன் விசய மடங்கலுங் கேட்ட
வாழியா னதிவியப் பெய்தித்
திரைக்கட லுலகம் வெருக்கொள வரக்கன்
செருக்குநாட் டேர்மன ரெதிர்ந்தோர்
ஒருத்தருண் டாக வுரைத்திலை யுடையா
வுறுவலி யுடையரா னோரை
உரைத்திநீ யென்ன யுரைத்திடத் தவத்தா
லோங்கிய குறுமுனி யுரைக்கும்.

அரக்கர்கோன் விசயம் அடங்கலும் கேட்ட
ஆழியான் அதிவியப்பு எய்தித்
திரைக்கடல் உலகம் வெருக்கொள அரக்கன்
செருக்கும் நாள் தேர்மனர் எதிர்ந்தோர்
ஒருத்தர் உண்டாக உரைத்திலை, உடையா
உறுவலி உடையர் ஆனோரை
உரைத்திநீ என்ன உரைத்திடத் தவத்தால்
ஓங்கிய குறுமுனி உரைக்கும்.

பொ: அரக்கர்களுக்குத் தலைவனாகிய இராவணனது வெற்றிச் செயல் முழுவதையும் கேட்ட ஆணைச் சக்கரத்தையுடைய

இராமன், அதிகமான ஆச்சரியம் அடைந்து 'அலைகள் நிறைந்த கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தார் அஞ்சுமாறு இராவணன் வெற்றிகொண்டு செருக்கும் நாளில், தேர்ப்படையுடைய மன்னர்களில் அவனை எதிர்த்தோர் ஒருத்தர் இருந்ததாகச் சொல்லவில்லையே, அப்படி அவ்விராவணனுக்குத் தோல்வியுருத மிகுவலி படைத்தோர் இருந்திருப்பின் அவரைப் பற்றிச் சொல்லுக' என்று சொல்லத் தவத்தால் ஓங்கி வடிவால் குறுகிய அகத்திய முனிவன் சொல்வான்.

கு: விசயம் – வெற்றி. ஆழியான் என்றது இராமனை. ஆழி – ஆணைச் சக்கரம். இனிப் பழைய தெய்வநிலையை நினைந்து சக்கரப் படையுடைய திருமாலின் அமிசமாகிய இராமன் எனக் கூறலும் ஆம். வெருக்கொள – அஞ்சுமாறு. வெருக்கொள அரக்கன் செருக்கு நாள் என்புழி வழியெதுகை அழகுற அமைந்திருத்தல் காணலாம். உடையா உடையர் என்புழியும் ஓங்கிய குறுமுனி என்புழியும் முரண்டொடை அமைந்துள்ள அழகைக் காணலாம். தவத்தால் ஓங்கி உடம்பால் குறுகியுள்ள அகத்திய முனிவரைத் 'தவத்தா ரோங்கிய குறுமுனி' என்றது அவர்தம் உருவுகண்டு எள்ளாது தவம் கருதி பெரிதும் மதித்தல் வேண்டும் என்ற கருத்தை உண்டாக்குதல் காணலாம். உடையா – தோல்வியுருத, உறுவலி – மிக்கவலிமை. உரைத்திநீ என்ன உரைத்திடக் குறுமுனி உரைக்கும் என்புழி வந்த சொல்லே மீண்டும் மீண்டும் வந்து சொற்பின் வருநிலையணியைத் தோற்றுவித்தல் காணலாம். உரைக்கும் என்பது செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று. இச்சொல் ஐம்பாலில் பலர் பால் ஒழிந்த ஏனை நான்கு பாலையும் உணர்த்தும். இங்கு உயர்திணை ஆண்பாலை உணர்த்தியது. (க)

இராவணன் இருவர்க்குத் தோற்றமை
அகத்தியர் கூறத் தொடங்குதல்

582. மாயிரு ஞால மடிப்படுத் தெதிர்க்கு
மருவல ரின்றிமண் ணாண்ட
ஆயிரந் திண்டோ ளருச்சுனன் றனக்கும்
வாலிக்கு மடலழிந் தனனத்

தீயவா ளரக்க னன்றெனச் செப்பச்
செறிபுக ழிராகவன் மனத்துத்
தூயமா முனியே யக்கதை விரித்துச்
சொல்லென மாமுனி செப்பும்.

மாயிரு ஞாலம் அடிப்படுத்து எதிர்க்கும்
மருவலர் இன்றிமண் ஆண்ட
ஆயிரம் திண்தோள் அருச்சுனன் தனக்கும்
வாலிக்கும் அடல் அழிந்தனன் அத்
தீயவாள் அரக்கன் அன்று, எனச் செப்ப,
செறிபுகழ் இராகவன் மனத்துத்
தூய மாமுனியே! அக்கதை விரித்துச்
சொல்என மாமுனி செப்பும்.

பொ : மிகப்பெரிய இவ்வுலகத்தைத் அடிப்படுத்தித் தம்மை எதிர்க்கும் பகைவரே இல்லாமல் மண்ணுலகை ஆண்ட ஆயிரம் திண்ணிய தோள்களையுடைய கார்த்தவீரியார்ச்சுனன் தனக்கும் வாலிக்கும் தன்வலி அழிந்து அந்தத் தீயவனாகிய வாள்ஏந்திய இராவணன் அக்காலத்துத் தோற்றுளான் எனச் சொல்ல, நெருங்கிய புகழையுடைய இராமன், 'மனத்தில் தூய்மை மிக்க சிறந்த முனிவரே! அந்தக் கதையை விரித்துச் சொல்லுக' என்று சொல்ல, அகத்திய முனிவர் சொல்லுவார்.

கு: ஞாலத்தை அடிப்படுத்தலாவது உலக முழுவதையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தல். மருவலர் – பகைவர். ஆயிரந் திண்தோள் அருச்சுனன் என்றது கார்த்தவீரியார்ச்சுனனை. கார்த்தவீரியார்ச்சுனனுக்கு இராவணன் தோற்றதை இப் படலத்தாலும் வாலிக்கு அடல் அழிந்ததை வாலி வாலால் கட்டுண்ட படலம் என்ற அடுத்த படலத்தாலும் விரித்துக் கூறு கின்றார். அடல் – வலிமை. வலிமை அழிதலாவது தோற்றல். அத்தீயவாள் அரக்கன் அன்று அருச்சுனன் தனக்கும் வாலிக்கும் அடல் அழிந்தனன் என இயையும். செறிபுகழ் இராகவன் என்றது நெருங்கிய புகழையுடைய இராமன் என்றவாறு. மனத்துத்

தூய மாமுனி என்றதால் அகத்திய முனிவரின் உள்ளத்தூய்மை புலப்படுத்தியவாறு. (உ)

### இராவணன் அருச்சுனன் நகர்க்குச் சென்று வினவுதல்

583. உந்துநீர் வேலை யுலகிடை வாழு
மொளிமுடி மன்னரை யோட்டி
அந்தவா ளரக்க னாயிரந் திண்டோ
ளருச்சுன னணிநக ரடைந்திங்
கிந்தமா நகருக் கிறைவனெவ் விடத்தா
னிராவண னிகல்செயச் சமைந்து
வந்தன னெனவாங் குணர்த்துமி னென்ன
மந்திரத் தலைவர்கள் மொழிவார்.

உந்துநீர் வேலை உலகிடை வாழும்
ஒளிமுடி மன்னரை ஓட்டி
அந்த வாள் அரக்கன் ஆயிரம் திண்தோள்
அருச்சுனன் அணிநகர் அடைந்து இங்கு
இந்த மாநகருக்கு இறைவன் எவ்விடத்தான்?
இராவணன் இகல் செயச் சமைந்து
வந்தனன் என ஆங்கு உணர்த்துமின் என்ன,
மந்திரத் தலைவர்கள் மொழிவார்.

பொ: அந்தக் கொடிய இராவணன் காற்றினுல் தள்ளப் படும் அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகத்தில் வாழுகின்ற ஒளி வாய்ந்த முடிசூடிய மன்னரைத் தோற்ருேடச்செய்துவிட்டு ஆயிரம் திண்ணிய தோள்களையுடைய அருச்சுனனது அழகிய நகரை அடைந்து, இங்கு இந்தப்பெரிய நகர்க்கு அரசன் எவ்விடத்து இருக்கின்ருன்? இராவணன் அவனோடு போர் செய்யச் சித்தமாய் வந்துள்ளான் என, அங்குச் சென்று அவனுக்கு உணர்த்துங்கள் என்று சொல்லக் கார்த்தவீரியார்ச்சுனனது ஆலோசனைக்குரிய மந்திரிமார்கள் சொல்கின்ருர்கள்.

கு : உந்துதல் - தள்ளுதல். கடல் அலைகள் காற்றினால் உந்தப் பட்டுக் கரைசேர்கின்ற இயல்புணர்த்த உந்துநீர் வேலை என்றார். ஓட்டி – தோற்றோடச் செய்து. உலகத்து மன்னர்களையெல்லாம் ஓட்டிய துணிவால் கார்த்தவீரியார்ச்சுனனையும் வெல்ல நினைத்து வந்தான் இராவணன் என்றவாறு. இராவணன் சென்றபோது கார்த்தவீரியார்ச்சுனன் அரண்மனையில் இல்லாமையால் இந்த மாநகருக்கு இறைவன் எவ்விடத்தான்? என வினவினான். அவன் சென்றவிடத்துச் சென்று போர் செய்யும் கருத்தினன் இராவணன் ஆகலின், இராவணன் இகல் செயச் சமைந்து வந்தனன் என ஆங்கு உணர்த்துமின் எனச் சொல்லுவானானான். மந்திரத்தலைவர் என்றது ஆலோசனைக்குரிய அமைச்சர்களை. சமைதல் என்றது தயார்நிலையில் இருத்தலை. (ரு)

### மந்திரிகள் சொன்னது

584. தெரிவைய ரோடு நருமதை யென்னுந்
திருநதி நீர்விளை யாட்டில்
புரியுநெஞ் சினனாய்ப் போயின னரச
னென்றவர் புகன்றிடக் கேட்டுப்
பொருகழ லரக்க னவ்விட நோக்கிப்
போகுவான் பூம்பொழிற் சாரல்
விரிபெருஞ் சிகர மாயிர மோங்கி
விளங்குசீர் விந்தத்தை யடைந்தான்.

தெரிவையரோடு நருமதை என்னும்
திருநதி நீர் விளையாட்டில்
புரியும் நெஞ்சினனாய்ப் போயினன் அரசன்
என்று அவர் புகன்றிடக் கேட்டுப்
பொருகழல் அரக்கன் அவ்விடம் நோக்கிப்
போகுவான் பூம்பொழில் சாரல்
விரிபெருஞ் சிகரம் ஆயிரம் ஓங்கி
விளங்குசீர் விந்தத்தை அடைந்தான்.

பொ: தன்மனைவியரோடு நருமதை என்று சொல்லப்படும் திருநதியில் நீர் விளையாட்டுச் செய்தலில் விருப்பமுடைய நெஞ்சின னாய்ப் போயிருக்கின்றான் அரசன்; என்று அந்த அமைச்சர் சொன்னதைக் கேட்டுப் போர்செய்யும் ஆர்வமுடைய வீரக்கழலை அணிந்த இராவணன், அவ்விடத்தை நோக்கிப் போக எண்ணிப் பலவகை மலர்கள் நிறைந்த பொழில்களையுடைய சாரலையும் விரிந்த பெரிய சிகரங்கள் ஆயிரம் ஓங்கி விளங்கும் சிறப்பினையு முடைய விந்தமலையை அடைந்தான்.

கு: தெரிவையர் என்றது, கார்த்தவீரியார்ச்சுனன் உரிமை மகளிரை. நருமதை என்னும் ஆறு விந்தியமலையில் தோன்றி மேற்கே ஓடும் புண்ணியநதி. அந்த ஆற்றில் தன் மனைவியரோடு நீர்விளையாட வேண்டும் என்று விரும்பிய நெஞ்சினனாய்ச் சென்றுளான் எனக் கேள்விப்பட்ட இராவணன் அந்நதியை நோக்கிச் செல்பவன், ஆயிரம் சிகரங்களையுடைய விந்தமலையை அடைந்தான் என்க. விந்தத்தின் பெருமை புலப்படுத்த பூம்பொழில் சாரலும் விரிபெருஞ்சிகரம் ஆயிரம் ஓங்கி விளங்குதலும் கூறப் பட்டன. பொருகழல் அரக்கன் என்றது, போர் செய்தற்கென்றே கட்டிய வீரக்கழலையுடைய இராவணன் என்றவாறு. பொருகழல் அரக்கன் ஆதலின், அரசன் இன்பத்துறையில் ஈடுபட்டிருப்பதை யும் உளங்கொளாது போர்க்கு அழைக்கும் நோக்கோடு சென்றான் என்று விளக்கியவாறு. (சு)

**விந்தமலையின் விழைவுறு காட்சி**

585. மழைமுகின் முழக்கங் கேட்டெதிர் பொருது
வாளரி யேறெதிர் முழங்கும்
முழையுடை யதன்மேல் முனைவர்தா னவர்கண்
முகிழ்நகை யரம்பைய ரோடும்
கழிபெருங் காத லொடுவிளை யாடிக்
காமபோ கக்கனி நுகரும்
இழிபுன லருவி தழுவின வாடை
யிடைதவழ் சாரன் மேவியதே.

மழைமுகில் முழக்கம் கேட்டு எதிர் பொறுது
வாள் அரியேறு எதிர்முழங்கும்
முழையுடை அதன்மேல் முனைவர் தானவர்கள்
முகிழ்நகை அரம்பையரோடும்
கழிபெருங் காதலொடு விளையாடிக்
காமபோகக் கனிநுகரும்
இழிபுனல்அருவி தழுவினவாடை
இடைதவழ் சாரல் மேவியதே.

பொ: மழைபொழிகின்ற மேகத்தின் முழக்கத்தைக் கேட்டுப் பொறுக்காமல் கொடிய சிங்க ஏறு எதிர்த்து அதன் எதிரே முழங்குகின்ற குகைகளையுடைய அம்மலைமேல் தேவர்களும் தானவர்களும் முகிழ்க்கின்ற புன்சிரிப்பினையுடைய அரம்பையர் களோடு மிகப்பெரிய காதலோடு விளையாடிக்கொண்டு காமத்தால் விளையும் போகமாகிய கனியை நுகர்தற்கு இடமாக, இறங்குகின்ற நீரருவியைத் தழுவிய வாடைக்காற்று இடையிடையே தவழ்கின்ற பெருமையோடு அம்மலைச் சாரல் பொருந்தியது.

கு: விந்தமலையின் குகைகளில் சிங்கங்கள் வாழ்கின்றன. விந்தமலையில் மழை பொழி மேகம் இடிக்கின்றது. இந்த இடி யொலியைக் கேட்டு அதுயானையின் பிளிறொலியாகக் கருதிச் சிங்கம் பொறுக்காமல் எதிர்முழக்கம் செய்கின்றது என்பது விந்த மலையின் வளத்தைப் புலப்படுத்துவதாகும். இடிமுழக்கத்தைக் கேட்ட சிங்கம் பொருது எதிர்முழக்கம் செய்தற்குக் காரணமில்லை யாதலின் அது தனக்குப் பகையான யானையின் பிளிறல் என மயங்கி எதிர்முழக்கம் செய்தது என உய்த்துணர்ந்து கொள்ளலாம். முழை – மலைக்குகை. குகைகளையுடைய அவ்விந்திய மலைமேல் தேவர்களும் தானவர்களும் அரம்பையர்களோடு விளையாடிக் காம போகக் கனியை நுகர்வதற்கு இடமாக இருப்பது அருவி; அந்த அருவியைத் தழுவிச்செல்லும் வாடைக்காற்று. அந்தத் தண்ணிய வாடையிடையே தவழ்கின்ற சிறப்புடையது அம்மலைச் சாரல் என்றவாறு. முனைவர் என்றது தேவர்களை. தானவர் என்பார் பதினெண் தேவசாதியினரில் ஒருதிறத்தார். வானவர்க் கும் தானவர்க்கும் போகத்தைக் கொடுப்பவர்கள் அரம்பையர்.

வானவர் முதலியோரைக் கண்டவுடன் அரம்பையர்க்கு மகிழ்ச்சி பொங்குவதால் அரும்புகின்ற புன்சிரிப்புடையவர்களாக அவர்கள் விளங்கினுர்கள் என்பார், முகிழ்நகை யரம்பையர் என்ருர். போகக்கனி என்றது உருவகம். (ரு)

இராவணன் நருமதை என்னும் ஆற்றினைக்காண்டல்

586. இன்னமா மலையி னெழிலினை நோக்கி
யிராவண னெழினுரை யாடை
மன்னிய காஞ்சி திகழ்வரை யல்குல்
வஞ்சிநே ரிடைசுழி யுந்தி
பொன்னணி யாரம் புளினமென் கொங்கை
பொருகயல் கண்ணறல் கூந்தல்
அன்னமென் னடைசேர் நருமதை யென்னு
மரிவையைத் தெரிவுறக் கண்டான்.

இன்னமாமலையின் எழிலினை நோக்கி,
இராவணன் எழில்நுரை ஆடை
மன்னிய காஞ்சி திகழ்வரை அல்குல்,
வஞ்சிநேர்இடை, சுழி உந்தி
பொன் அணி ஆரம், புளினம் என் கொங்கை
பொருகயல் கண், அறல் கூந்தல்
அன்னம்மென் நடைசேர் நருமதை என்னும்
அரிவையைத் தெரிவுறக் கண்டான்.

பொ: இத்தன்மையான பெரிய விந்தமலையின் அழகினைப் பார்த்துப் பின்பு, இராவணன் அழகிய நுரையாகிய புடைவையையும் நிலைபெற்ற காஞ்சி (மரம்) விளங்குகின்ற பக்கமலையாகிய அல்குலினையும், வஞ்சிக் கொடியாகிய நுண்ணிய இடையினையும், நீர்ச்சுழியாகிய உந்தியினையும், மலையிலுள்ள பொன்னுகிய அழகிய ஆரத்தையும் மணற்குன்றுகளாகிய மெல்லிய நகிலினையும் ஒன்ருேடொன்று போர் செய்கின்ற கயல்களாகிய கண்களையும், கருமணலாகிய கூந்தலினையும் அன்னங்களின் நடையாகிய மென்னடையினையும் சேர்ந்துள்ள நருமதை என்னும் நங்கையைத் தெளிவாகப் பார்த்தான்.

கு : விந்தமலையின் எழிலினைக் கண்ட இராவணன் பின்பு நருமதை என்னும் நதியினைக் கண்டான் என்று கூறவந்த கவிஞர், நருமதையை நதியாகக் காணுமல் நங்கையாகவே கண்டான் என்று சிலேடைவகையால் சிறப்புக் கூறி இராவணனது பெண்ணுசையைக் குறிப்பிடுகின்ருர் எனலாம். வெள்ளத்தில் தோன்றும் நுரையினை மெல்லிய ஆடைக்கு உவமையாகக் கூறுதல் மரபு. இங்கு அந்த நுரையினையே புடவையாக உருவகஞ் செய்கின்ருர். காஞ்சி என்பது ஒருவகை மரத்தையும் மகளிர் புடைவைக்குமேல் அணியும் அணியையும் குறிக்கும் சொல்- இங்குச் சிலேடைவகை யால் காஞ்சி என்னும் அணிதிகழ்கின்ற பக்கமலையாகிய அல்குல் என உருவகம் செய்தார். வரை – பக்கமலை. வஞ்சி என்பது ஒரு வகைக்கொடி, அது அம்மலையில் உள்ளது; மங்கையர் இடைக்கு உவமையாகக் கூறப்படுவது; இங்கு வஞ்சியாகிய நுண்ணிய இடை என உருவகம் செய்தார். நேர் – நுட்பம். சுழி, நீர்ச்சுழி; இது கொப்பூழ்க்கு உவமையாகக் கூறப்படுவது; இங்குச் சுழியாகிய உந்தி என உருவகம் செய்துள்ளார். உந்தி - கொப்பூழ். மலையில் பொன் உண்டு. அந்தப் பொன்னுகிய அணியாரத்தையணிந்த மணற்குன்ற மாகிய நகில்களையும் என உருவகம் செய்கின்ருர். ஆற்றில் உள்ள போர் செய்கின்ற இருகயல்களையே நருமதை யென்னும் பெண்ணின் கண்களாக உருவகம் செய்கின்ருர். ஆற்றில் காணப்படும் கருமணற் செறிவைக் கூந்தலாகவும், அன்னங்களின் மென்னடையினையே நருமதையென்ற பெண்ணின் நடையாகவும் உருவகம் செய்துள்ளார். இவ்வாறு ஒவ்வோர் உறுப்பினையும் உருவகம் செய்ததோடு நருமதையென்னும் அரிவை என முதற்பொருளையும் உருவகம் செய்துள்ளார். இச்செய்யுள் சிலேடையுருவக அணி.

(சு)

இராவணன் நருமதையில் நீராடி மணலால்
இலிங்கம் கோலிப் பூசித்தல்

587. அத்திரு நதியி லமைச்சர்க ளோடு
மரக்கர்கோ னகமகிழ்ந் தாடி
மைத்திகழ் மிடற்று வளர்சடை யோனை
மணல்குவித் தருச்சனை செய்ய

நெய்த்திருள் குழலா ரொடு மருச்சுன னு
நீர்விளை யாடுவா னிமிர்ந்த
கைத்திர ளதனுற் கடுவிசை நீரைக்
கட்டினன் றேங்கிநின் றெதிர்ப்ப.

அத்திரு நதியில் அமைச்சர்களோடும்
அரக்கர்கோன் அகம் மகிழ்ந்து ஆடி,
மைத்திகழ் மிடற்று வளர்சடையோனை
மணல்குவித்து அருச்சனை செய்ய,
நெய்த்து இருள் குழலாரொடும் அருச்சுனனும்
நீர்விளை யாடுவான் நிமிர்ந்த
கைத்திரள் அதனுல் கடுவிசை நீரைக்
கட்டினன் தேங்கிநின்று எதிர்ப்ப.

பொ: அந்தத் தெய்வத்தன்மை வாய்ந்த ஆற்றில் தன் மந்திரிமார்களோடும் இராவணன் மனமகிழ்ந்து நீராடிவிட்டு அவ்வாற்றின் மணலை இலிங்கவடிவாகக் குவித்து நஞ்சயின்றமையால் மைபோல் விளங்கும் கண்டத்தினையுடைய வளர்ந்த சடையினனுகிய சிவபிரானை ஆவாகனம் பண்ணி அருச்சனை செய்யாநிற்க, அப்பொழுது கார்த்தவீரியார்ச்சுனனும் நெய்ப்புத்தன்மையுடையதாய் இருண்ட கூந்தலையுடைய பெண்டிரோடு நீர் விளையாடுவதற்காகத் தன் கைகளின் திரட்சியால் மிக்க வேகத்தினையுடைய ஆற்றுநீரை ஓடாமல் தேங்கி நின்று எதிர்த்துச் செல்லுமாறு கட்டினுன்.

கு: இராவணன் நருமதை நீரைக் கண்டதும் விருப்பமிக்கனுய்த் தன் மந்திரிகளோடு நீராடினுன் எனவும். நீராடியபின் சிவபூசை செய்யும் பழக்கமுடையவனுதலின் மணலில் இலிங்கம் அமைத்து அருச்சனை செய்தான் எனவும் கொள்க. இராவணன் நருமதையாறு தொடங்கும் இடத்தில் அருச்சித்தான் எனவும் கார்த்தவீரியார்ச்சுனன் அவ்விடத்திற்குச் சிறிது மேற்கே மனைவியரோடு நீராட ஆழம் போதாமையின் அவன் தன் ஆயிரங் கைகளையும் ஒன்றன்மேலொன்ருக வைத்து, விரைந்து செல்லும்

நீரைத் தேங்குமாறு செய்து கட்டிவிட்டான் எனவும் கொள்க. அவ்வாறு கார்த்தவீரியார்ச்சுனன் கட்டினமையால் ஆற்றுநீர் தடைபட்டுத் தேங்கி எதிர்த்திசையில் இராவணன் அருச்சிக்கும் இடத்திலும் பரவியது. (எ)

நீரெதிரேறுதற்குக் காரணம் அறியும்படி
இராவணன் ஏவுதல்

588. தேங்கிய பெருநீ ரிருகரை புரளச்
சென்றுகுன் றிருபதிற் றிகழ்தோட்
டீங்குடை யரக்க னவன்செயும் பூசை
சிதைத்திடத் திகைத்தனன் சீறி
யீங்கிது விளைந்த காரண மெல்லா
மிருவரு மறிமினென் றியம்பப்
பூங்கழல் வானோர் புறங்கொடுத் தோடப்
பொருசுக சாரணர் போனார்.

தேங்கிய பெருநீர் இருகரை புரளச்
சென்று குன்று இருபதின் திகழ்தோள்
தீங்குடை அரக்கன் அவன் செயும்பூசை
சிதைத்திடத் திகைத்தனன் சீறி
ஈங்கு இது விளைந்த காரணம் எல்லாம்
இருவரும் அறிமின் என்று இயம்ப
பூங்கழல் வானோர் புறங் கொடுத்து ஓடப்
பொருசுக சாரணர் போனார்.

பொ: அவ்வாறு தேங்கிய மிக்கநீர் ஆற்றின் இருகரையும் புரளச் சென்று இருபது குன்றுகள்போல் விளங்கும் தோள்களை யுடையவனாய்த் தீங்கும் செய்யும் இயல்பையுமுடைய இராவணன் செய்யும் பூசையைச் சிதைத்திட அதுகண்டு திகைப்புற்றவனாய்க் கோபித்து இவ்விடத்து இது விளைதற்குரிய காரணம் எல்லாவற்றையும் நீவிர் இருவீரும் சென்று அறிமின்! என்று சொல்ல, பொலிவு

மிக்க வீரக்கழலினையுடைய தேவர்கள் புறமுதுகுகாட்டி ஓடுமாறு போர் செய்கின்ற ஆற்றலையுடைய சுகன் சாரணன் என்ற இருவரும் போனார்கள்.

கு: இயல்பாக ஓட வேண்டிய ஆற்றுநீர் கார்த்தவீரியனால் தடைபட்டவுடனே தேங்கி நின்று முன்னைய அளவில் மிக்குப் பெருகலாயிற்று என்பார், தேங்கிய பெருநீர் என்றார். கரைக்கு உள்ளடங்கிச் செல்லவேண்டிய வெள்ளம், தடைபட்டமையால் நிரம்பி இருகரையிலும் நீர் புரளுமாறு சென்றது என்பார், 'இரு கரைபுரள' என்றார். இராவணனின் இருபது தோள்களும் இருபது குன்றுகள்போலத் திரண்டு உயர்ந்து விளங்குவன என்பார், 'குன்றிருபதிற் றிகழ்தோள்' என்றார். இன் உவமையுருபு. குன்று இருபதுபோல எனவே அவன் தோள்கள் இருபது என்பதும் புலப்படுத்தியவாறாயிற்று. இருபது திண்ணியதோள்களோடு தீங்கு செய்யும் இயல்பையும் உடையவனாதலின் இராவணன் பூசை சிதையுமாறு நீர்பெருகற்குரிய காரணத்தை விரைந்தறியுமாறு ஏவினான்; நீர் பெருகச் செய்தாரைத் தண்டிக்கும் ஆற்றலும் கோபமும் உடையவன் என்பார், 'குன்றிருபதிற்றிகழ்தோள் தீங்குடையரக்கன்' என்றார். நீர் விரைவில் பெருகியது கண்டு திகைப்பும் அது பூசையைச் சிதைத்தது கண்டு சீற்றமும் தோன்றின என்க. தான் பூசிக்கின்ற இவ்விடத்தில் இது நிகழ்தல் கூடாதே என்ற நினைப்புடைமை புலப்பட, ஈங்கிது விளைந்த காரணம் எல்லாம் இருவரும் அறிமின் என்று இயம்பலானான் என்க. சுக சாரணர்கள் காரணத்தை யறிவதோடு காரணமாயிருந்தவரையும் அழிக்கும் ஆற்றலுடையவர் என்பது புலப்பட 'பூங்கழல் வானோர் புறங் கொடுத்தோடப் பொரு சுகசாரணர்' என்று சிறப்பித்தார். (அ)

கார்த்தவீரியனால் நிகழ்ந்தது என்பது கண்டு
இராவணனுக்குச் சொல்லுதல்

589. போயவர் செறிதோட் பூமிமன னவர்க்கும்
புதுமலர்ப் பூங்குழ லார்க்கும்
நேயம்வந் தொன்றிநீர்விளை யாட்டு
நிகழ்வுழி நெடுநில மன்னன்

ஆயிரங் கையா லாற்றுநீ ரடைப்ப
வப்புன லெதிர்த்தமை யறிந்து
தீயவர் வந்து தென்னிலங் கேசற்
கச்செய றெரிவுறச் சொன்னார்.

போயவர் செறிதோள் பூமிமன்னவர்க்கும்
புதுமலர்ப் பூங்குழ லார்க்கும்
நேயம்வந்து ஒன்றி நீாவிளையாட்டு
நிகழ்வுழி நெடுநில மன்னன்
ஆயிரம்கையால் ஆற்றுநீர் அடைப்ப,
அப்புனல் எதிர்ந்தமை அறிந்து
தீயவர் வந்து தென் இலங்கேசற்கு
அச்செயல் தெரிவுறச் சொன்னார்.

பொ - சென்ற சுகசாரணர்கள் ஆகிய தியவர்கள், நெருங்கிய தோள்களையுடைய புவி அரசனாகிய கார்த்தவீரியார்ச்சுனனுக்கும் புதுமலர் சூடிய பொலிவுமிக்க கூந்தலையுடைய அவன் பெண்டிர்க்கும் காதல் வந்து ஒன்றுபட்டு நீர்விளையாட்டு நிகழுங்காலத்தில் நெடிய நிலவுலகிற்கு மன்னவனாகிய கார்த்தவீரியார்ச்சுனன் தன் ஆயிரம் கைகளால் அந்த நருமதை யாற்றின் நீரை அடைக்க, அதனால் அவ்வாற்றுநீர் எதிர்த்து நீர் பெருகினமை யறிந்து கொண்டு வந்து தென்னிலங்கைக்குத்தலைவனாகிய இராவண னுக்கு அச்செயலைத் தெளிவாகச் சொன்னார்கள்.

கு: போயவராகிய தியவர் மன்னன் ஆயிரங் கையால் ஆற்றுநீர் அடைப்ப அப்புனல் எதிர்த்தமையறிந்து வந்து இலங் கேசற்குச் சொன்னார் என இயையும். ஆயிரங்கைகளைச் செறி தோள் பூமி மன்னவர், என்பதனால் புலப்படுத்தியவாறு. புதுமலர் சூடிய பூங்குழலார் என்றது மன்னவனுக்கு நேயம் வந்தொன்று தற்குக் காரணம் புலப்படுத்தியவாறாகவும் கொள்ளலாம். போய வராகிய தியவர் என இரு பெயரொட்டாக்குக. இலங்கையீசன் என்பது இலங்கேசன் என வந்தது வடமொழி விருத்த சந்தி யாகும்.

(சஅ)

அருச்சுனன் அமைச்சர் கூறியது

590. ஆங்கவ ருரைப்ப வமைச்சருந் தானு
மருச்சுன னின்றிட மணுகிப்
பூங்கழ லரக்கன் பொருதுவெய் துயிர்த்துப்
புரவல னமைச்சரை நோக்கி
ஈங்கமர் செய்ய விராவணன் வந்தா
னென்றுகுன் றுயிர மென்ன
வோங்கிடுந் தோளாற் குணர்த்துமி னென்ன
வுறுவலி யமைச்ச ரீதுரைத்தார்.

ஆங்கு அவர் உரைப்ப அமைச்சரும்
தானும் அருக்சுனன் நின்றிடம் அணுகிப
பூங்கழல் அரக்கன் பொருது வெய்துயிர்த்துப்
புரவலன் அமைச்சரை நோக்கி
ஈங்கு அமர்செய்ய இராவணன் வந்தான்
என்று குன்று ஆயிரம் என்ன
ஓங்கிடும் தோளாற்கு உணர்த்துமின் என்ன
உறுவலி அமைச்சர் ஈதுஉரைத்தார்.

பொ: அவ்விடத்து அந்தச் சுகசாரணர்கள் சொல்லப் பொலிவுடைய வீரக்கழலை அணிந்த அரக்களுகிய இராவணன், தானும் அமைச்சருமாக அருச்சுனன் நின்ற இடத்தை அணுகி, மனம் பொருது வெப்பமாக மூச்சுவிட்டுக்கொண்டு கார்த்தவீரியார்ச்சுனனின் அமைச்சரை நோக்கி, இவ்விடத்துப் போர் செய்ய இராவணன் வந்தான் என்று, குன்றுகள் ஆயிரம்போல உயர்ந்திருக்கும் தோள்களையுடைய அருச்சுனனுக்குத் தெரிவியுங்கள். என்று சொல்ல, மிக்க வலிமையுடைய அமைச்சர்கள் இதனைச் சொன்னுர்கள்.

கு: நின்ற இடம் என்பது தொகுத்தால் விகாரம் பெற்று நின்றிடம் ஆயிற்று. பலபகைவரை வென்று பழகி வீரக்கழலை

அணிந்தவன் இராவணன் ஆதலின் கார்த்தவீரியார்ச்சுனனையும் வென்றுவிடலாம் என்ற கருத்துடையான் என்பது புலப்பட பூங் கழலரக்கன் என்றார். இராவணன் தன்பூசை சிதையுமாறு அருச் சுனன் நீரைத்தடுத்தது கண்டு பொருது சினத்தால் வெப்பமாகப் பெருமூச்சுவிட்டான் என்க. புரவலன் என்றது கார்த்தவீரியார்ச் சுனனை. நீராடிக்கொண்டிருக்கும் அருச்சுனனுக்கு அமைச்சரைச் சொல்லச்சொன்ன செய்தி அமர்செய்ய இராவணன் இங்கு வந்தான் என்பதேயாகும். அருச்சுனற்கு உணர்த்துமின் என்னது குன்று யிரமென்ன ஓங்கிடு தோளாற்கு உணர்த்துமின் என்றது, ஆயிரந் தோளுடைமையால் செருக்கியுள்ளான் போலும் என்ற குறிப்புணர நின்றது. இராவணனை எதிர்த்து நிற்கும் திறம்புலப்பட உறுவலி அமைச்சர் எனச் சிறப்பித்தார். (கம)

நாளை நீர்பொருமின் என்ற அருச்சுனன் அமைச்சரோடு
இராவணன் பொருதல்

591. தன்றெரி வையர்பாற் றாழ்ந்தநெஞ் சினனுய்த்
தாழ்குழ லார்களும் தானும்
நின்றுபே ராற்றி னீர்விளை யாட்டி
னிகழ்வுழி நீயமர் புரிதல்
நன்றிது வன்று நாளைநீர் பொருமி
னென்றவர் நவின்றிட வரக்கன்
சென்றுமேல் வீழ்ச் செறுவலி யமைச்ச
ரவனெதிர் சென்றுபோர் மூண்டார்.

தன்தெரிவையர் பால் தாழ்ந்த நெஞ்சினனுய்த்
தாழ்குழலார்களும் தானும்
நின்று பேராற்றில் நீர் விளையாட்டில்
நிகழ்வுழி நீ அமர் புரிதல்
நன்று இது அன்று, நாளை நீர் பொருமின்
என்று அவர் நவின்றிட அரக்கன்
சென்றுமேல் வீழச் செறுவலி அமைச்சர்
அவன் எதிர் சென்று போர் மூண்டார்.

பொ: தனக்குரிமை பூண்ட பெண்டிரிடம் பதிந்த காதல் மனத்தனாய் நீண்ட கூந்தலையுடைய அப்பெண்டிரும் தானுமாய் நின்று பெரிய ஆற்றில் நீர் விளையாட்டில் இன்புற்றிருக்கும்பொழுது நீ சென்று போர்புரிதல் ஆகிய இது நன்றன்று. நாளைக்கு நீங்கள் போர் செய்யுங்கள்; என்று அந்த அமைச்சர்கள் சொல்ல, அரக்கனாகிய இராவணன் அவர் சொல் கேளாது அருச்சுனன் மேல் போர்க்குப் புறப்பட, பகைவெல்லும் மிகு வலியுடைய அவ்வமைச்சர்கள் அவ்விராவணனை எதிர்த்துச் சென்று போர் செய்யத் தொடங்கினார்கள்.

கு: தன்னுரிமை மகளிரோடு நீராடுதல் மன்னவர்க்கு இயல்பேயாதலின் அந்நீர் விளையாட்டு முடிந்தபின் நாளைக்குப் போர் செய்தல் நன்று என்ற அமைச்சர் சொல்லைக் கேளாது நீர்விளையாட்டுச் செய்யும் அரசன்மேல் தாக்குதற்குச் செல்லும் இராவணனைத் தடுத்து அருச்சுனன் அமைச்சர்கள் போர் செய்ய லானார்கள் என்றவாறு. பிறர்க்குரிய மகளிர் அல்லர் என்பார், 'தன் தெரிவையர்பால்' என்றார். தாழ்ந்த நெஞ்சினனாய் என்றது பதிந்த காதல் நெஞ்சினனாய் என்றவாறு. புரிதலாகிய இது நன்று அன்று என இயையும். இராவணன் என்னாது அரக்கன் என்றது, அருச்சுனன் காதல் நிகழ்ச்சியில் குறுக்கிடலாகாது என்ற இரக்கமும் இல்லாத நெஞ்சினன் என்பது புலப்படவேயாம். 'சென்று மேல்வீழ' என்றது, அமைச்சர் சொல்லையும் கேளாது அருச்சுனனிடம் சென்று வலியத்தாக்க முயல என்னும் கருத்தினது. செறுவலி என்றது, பகைவரை அழிக்கும் வலிமையை. (கக)

இருதிறத்துச் சேனையும் பொருதலால் போர்க்களம் சிவத்தல்

592. தருக்கிலர் மிக்க தராபதி யமைச்சர்
தம்மொடுந் தசமுக னமைச்சர்
நெருக்கிவந் தெதிர்ப்ப நிகழ்ந்தது பெரும்
நெடுஞ்சமர் நெருங்கின நிருபன் [போர்
செருக்கிளர் சேனை நிருதர்மே லழன்று
சென்றுதாக் கியதுசெந் நீரால்
முருக்கலர் வனத்திற் சிவந்தது படைஞர்
மூண்டமர் புரிமுனைக் களமே.

தருக்கு இலர் மிக்கதராபதி அமைச்சர்
தம்மொடும் தசமுகன் அமைச்சர்
நெருக்கிவந்து எதிர்ப்ப நிகழ்ந்தது பெரும்போர்;
நெடுஞ்சமர், நெருங்கின நிருபன்
செருக்கிளர்சேனை, நிருதர்மேல் அழன்று
சென்று தாக்கியது; செந்நீரால்
முருக்கு அலர் வனத்தில் சிவந்தது படைஞர்
மூண்டு அமர் புரி முனைக் களமே.

பொ : செருக்கு இல்லாதவர்களாகிய சிறந்த அருச்சுனனின் மந்திரிகள் தம்மோடு இராவணன் மந்திரிகள் நெருக்கி வந்து எதிர்த்தலால் பெரிய போர் நிகழ்ந்தது. நெருக்கப் பட்ட அருச்சுனனின் போர் கிளர்ச்சியையுடைய சேனை அரக்கர்மேல் சினங்கொண்டு உளங்கொதித்துச் சென்று தாக்கியது (தாக்குண்ட— வீரர்களின்) இரத்தத்தால் பகைவீரர்கள் கிளர்ந்தெழுந்து போர் புரிகின்ற போர்க்களம் முருக்கமரம் மலர்ந்துள்ள காட்டைப்போலச் சிவந்து காணப்பட்டது.

கு : பெரும்போர் நெடுஞ்சமர் என்பது மீமிசைச்சொல். மிக்க தராபதி என்றது, சிறப்பு மிக்கு விளங்கும் கார்த்தவீரியர்ச்சுனனை. இராவணன் படை நெருக்க நெருக்குண்டது அருச்சுனன் சேனையே யாதலின் 'நெருங்கிய நிருபன் செருக்கிளர்சேனை' எனப்பட்டது. நெருங்குதல் நெருக்குண்ணுதல். செந்நீர் — இரத்தம். படைஞர் — சேனைவீரர். மூண்டு கோபமூண்டு. முனைக்களம் — போர்க்களம். நெருங்கின நிருபன் சேனை சென்று தாக்கியது என இயையும். (கஉ)

இராவணன் சேனைக்கு அருச்சுனன் சேனை தோற்றல்

593. வக்கிர மனத்து மாபெரும் பக்கன்
மகோதரன் வஞ்சமா ரீசன்
செக்கரை நிகர்க்குஞ் செம்மயிர்
செறிதோட் டிப்புகைக் கண்ணனே முதலோர்

சக்கர முலக்கை தண்டுவேல் குலிசம்
தடமழு வாதிய சமரத்
துக்கிர முடைய வாயுதம் வழங்க
வுடைந்ததா லருச்சுன னனிகம்.

வக்கிர மனத்து மாபெரும் பக்கன்,
மகோதரன், வஞ்சமாரீசன்
செக்கரை நிகர்க்கும் செம்மயிர் செறிதோள்
தீப்புகைக் கண்ணனே முதலோர்
சக்கரம் உலக்கை தண்டுவேல் குலிசம்
தடமழு ஆதிய சமரத்து
உச்கிரம் உடைய ஆயுதம் வழங்க,
உடைந்ததால் அருச்சுனன் அனிகம்.

பொ: நெறிக்கு மாறுபட்ட மனத்தையுடைய மகாபாரிசுவன் மகோதரன் வஞ்சனையுடைய மாரீசன் செக்கர்வானை யொக்கும் செம்மயிரினையும் நெருங்கிய தோளினையுமுடைய தூமாக்கன் முதலியோர் சக்கராயுதம் இருப்புலக்கை தண்டாயுதம் வேல் வச்சிராயுதம் பெரிய மழுவாயுதம் முதலாகிய போரில் ஆற்றல் மிக்க ஆயுதங்களை வழங்கினமையால் அருச்சுனனுடைய சேனை தோற்றது.

கு: வக்கிரம் — நெறிக்கு மாறுபட்டது. மகாபாரிசுவான் என்னும் வடமொழிக்கு 'மாபெரும் பக்கன்' என்பதும் தூமாட்சன் என்னும் வடமொழிக்குப் புகைக்கண்ணன் என்பதும் உரிய தமிழ்ச் சொல்லாக ஒட்டக்கூத்தரால் வழங்கப்பட்டுள்ளன. தீப்புகைக் கண்ணன் என்பது தீயின்கண் தோன்றும் புகை போன்ற கண்ணையுடையவன் என்னும் பொருளது. உக்கிரம் — ஆற்றல். இராவணன் சேனையிலுள்ளோர் போர்க்கென்றே ஆயுதம் தாங்கி வந்தவர்கள்; அருச்சுனன் சேனையிலுள்ளோர் போரினை எதிர் பார்த்தவர்களல்லர். எனவே அருச்சுனன் சேனை தோற்க நேர்ந்தது எனலாம். அனிகம் — சேனை.

(கரு)

கார்த்தவீரியார்ச்சுனன் நீராடல் விட்டுப் பொருதல்

594. தன்படை சாய்ந்து தாரணி வீழத்
தராபதி நீர்விளை யாட்டில்
அன்புடை மாத ரஞ்சிமெய்ந் நடுங்க
வஞ்சலீ ரென்றுகை யமைத்து
மின்படை வேந்தன் விரிபுனல் விட்டு
வெவ்வன லெனக்கொதித் திலங்கை
மன்படை துரப்ப வயப்பிர கத்தன்
மற்றவ னோடெதிர் மலைந்தான்.

தன்படை சாய்ந்து தாரணி வீழத்
தராபதி நீர்விளையாட்டில்
அன்புடை மாதர் அஞ்சி மெய்ந்நடுங்க,
அஞ்சலீர் என்று கை அமைத்து
மின்படை வேந்தன் விரிபுனல் விட்டு
வெவ் அனல்எனக்கொதித்து இலங்கை
மன்படை துரப்ப, வயப்பிர கத்தன்
மற்றவனோடு எதிர் மலைந்தான்.

பொ: தனது சேனை மெலிந்து தரையில் விழ(க்கண்டு) தரைக்குத் தலைவனாகிய கார்த்தவீரியார்ச்சுனன் நீர்விளையாட்டில் ஆசையுடைய பெண்டிர் அஞ்சி உடல் நடுங்கவும் அஞ்சாதீர்கள்! என்று கையால் அமைத்துவிட்டு, மின்னுகின்ற படைக்கலங்களையுடைய அவ்வேந்தன் விரிந்த நருமதையாற்றின் புனலைவிடுத்துக் கொடிய நெருப்புப்போல மனங் கொதித்து இலங்கையரசனுடைய சேனையைத் துரத்த, அவ்வேந்தனோடு வலிமை மிக்க பிரகத்தன் என்பவன் எதிர்வந்து போர் செய்தான்.

கு: விழக்'கண்டு' என ஒரு சொல் எச்சமாக வருவிக்க. தரா என்ற வடசொல் தமிழ்க்கேற்ற விகாரம் பெறுமல்வந்தது. தராபதி- மண்ணுலக மன்னன். அஞ்சலீர் என்று கையமைத்தது, சாய்ந்து விழும் தன் சேனையை நோக்கி. அருச்சுனன் பிரிவதைக் கண்டு நீர்விளையாட்டில் அன்புடை மாதர் அஞ்சி மெய்ந்நடுங்கினர் என்க.

'மெய்ந்நடுங்கும் மாதரார்க்கும் அஞ்சலிர் என்ற சொல் பொருத்த மாக அமைந்தது. அருச்சுனனுக்குக் காதலினும் வீரத்தில் விருப்பம் மிக்கிருந்தது என்பது இதனல் புலனகும். மின்படை – மின்னு கின்ற ஆயுதம். வினைத்தொகை. தராபதி என மேல்வந்தமையின் மின்படைவேந்தன் என்பது சுட்டின் பொருளதாகக் கொள்க. அருச்சுனனது கோபமிகுதியையுணர்த்த வெவ்வனல் எனக் கொதித்து என்ருர். வெவ்வனல் – கொடிய நெருப்பு. கொதித்தல் – சினத்தால் மனம் கொதித்தல். இலங்கை மன் என்றது இராவ ணனை, துரப்ப – துரத்த. வய – வலிமை. இராவணன் சேனையை அருச்சுனன் துரத்தும்போது பிரகத்தன் வந்து போர் செய்தான் என்க.

(கச)

அருச்சுனனேடு இராவணன் எதிர்த்தல்

595. கோடிய மனத்துக் கொடுந்திற லரக்கன்
கொற்றவன் மிசைக் கொலை வலியால்
நீடிய வுலக்கை நெருப்பொழத் துரப்ப
நீறுபட் டிடவது தண்டால்
சாடிமற் றவனைத் தரைப்பட வடிப்பத்
தடம்புய மகோதரன் முதலோர்
ஓடிய வோட்டங் கண்டிலங் கேச
னூழிவெந் தீயென வுடன்ருன்.

கோடிய மனத்துக் கொடுந்திறல் அரக்கன்
கொற்றவன் மிசைக்கொலை வலியால்
நீடியஉலக்கை நெருப்பு எழத் துரப்ப,
நீறுபட்டிடஅது தண்டால்
சாடி, மற்று அவனைத் தரைப்பட அடிப்ப,
தடம்புய மகோதரன் முதலோர்
ஓடிய ஓட்டம் கண்டு இலங்கேசன்
ஊழிவெந் தீஎன உடன்ருன்.

பொ: நேர்மையின்றி மாறுபட்ட மனத்தையும், கொடுமை யான வலிமையுமுடைய அரக்கனுகிய பிரகத்தன், அருச்சுனன்

மேல், கொலைசெய்யும் வன்மையால் நீண்ட உலக்கையை நெருப்பு எழுமாறு எறிய, அவ்வுலக்கை பொடிபடுமாறு அருச்சுனன் தன் தண்டாயுதத்தால் மோதிவிட்டு அப்பிரகத்தனையும் தரையில் விழுமாறு அடிக்க, (அதுகண்டு) பெரிய புயத்தையுடைய மகோதரன் முதலியவர்கள் அஞ்சி ஓடிய ஓட்டத்தைக் கண்டு இராவணன் கடையூழியில் எழும் பெருநெருப்புப்போலக் கோபித்துப் போர் செய்ய வந்தான்.

கு: பிரகத்தனது உள்ளமும் உடம்பும் நேர்மையற்றவை என்பார், கோடிய மனத்துக் கொடுந்திறல் அரக்கன் என்றார். கொடுந்திறல் என்றது உடம்பின் வலிமையும் அது செயற்படும் நெறியினையும் புலப்படுத்தியவாறு. கொற்றவன் என்றது, அருச்சுனனை. கொலை வலியால் நீடிய உலக்கை என்றது உலக்கையின் வடிவ நீட்சியையும் வலிமை நீட்சியையும் புலப் படுத்தியவாறு. எறியும் வலிமையால் அவ்வுலக்கையில் நெருப்புப் பொறிபரக்கும் என்க. துரப்ப—வீச. அது நீறுபட்டிட என மாற்றுக பிரகத்தன் எறிந்த உலக்கையை அருச்சுனன் தண்டாயுதத்தால் பொடிபட அடித்துவிட்டு அதை எறிந்த பிரகத்தனையும் தரையில் விழுமாறு அடித்தான் என்றவாறு. பிரகத்தன் பட்ட பாட்டினைக் கண்ட மகோதரன் முதலியோர் போரைவிடுத்து ஓடுவது கண்டு இராவணன் பெருஞ்சினங் கொண்டு போர் செய்யவந்தான் என்க. இலங்கை — ஈசன் இலங்கேசன் என வடமொழி சந்தியாற் புணர்ந்தது. பேராற்றலையுடைய இராவணன் கோபத்திற்குப் பொருந்திய உவமையாக ஊழிவெந்தீயைக் கூறினர். ஊழியிறுதி யில் உலகத்தை நெருப்பே அழிப்பதுண்டு. உலகையழிக்கும் அப் பெருந்தீப் போல இராவணன் பெருஞ்சினங்கொண்டு பொரவந் தான் என்க. உடலுதல்-போர் செய்தல்; கோபித்தலும் ஆம். (கரு)

இருவரும் போர் செய்யும் காட்சி

596. தண்டது வாங்கித் தடக்கையா யிரத்தோன்
றன்னெடுந் தசமுக னோர
மண்டியொன் றென்றிற் கறுவுகொண்
மழவிடை மலைவன வெனவும் [டிரண்டு

கொண்டலி னதிர்த்துக் கொதித்தடர்த்
குன்றுபோர் கூடிய வெனவும் [திரண்டு
எண்டிசைக் கரிக ளிரண்டெதிர் மலைவ
வென்னவு மிருவரும் பொருதார்.

தண்டு அதுவாங்கித் தடக்கை ஆயிரத் தோன்
தன்னொடும் தசமுகன் நேர,
மண்டி ஒன்று ஒன்றிற் கறுவு கொண்டு இரண்டு
மழவிடை மலைவன எனவும்
கொண்டலின் அதிர்த்துக் கொதித்து அடர்த்து இரண்டு
குன்று போர்கூடிய எனவும்
எண்திசைக் கரிகள் இரண்டு எதிர்மலைவ
என்னவும் இருவரும் பொருதார்.

பொ: தண்டாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு பத்து முகங்களையுடைய இராவணன் பெரிய ஆயிரங் கைகளையுடைய கார்த்தவீரியார்ச்சுனனோடு எதிர்க்க, இரண்டு இளமையான எருதுகள் ஒன்றுபோல் ஒன்று சினங்கொண்டு நெருங்கிப் போர் செய்வன போலவும், இரண்டு குன்றுகள் மேகத்தைப்போல அதிர்குரல் எழுப்பிக் கொண்டு நெருங்கிப் போர் செய்கின்றது போலவும் எண்திசையானைகளில் இருயானைகள் எதிர்நின்று போர் செய்வது போலவும் அவ்விருவரும் போர் செய்தார்கள்.

கு: தண்டது என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. பத்து முகங்களையுடையவன் இராவணன் என்றால் அருச்சுனன் ஆயிரங் கைகளையுடையவன் என்பது புலப்படுத்த தடக்கையாயிரத் தோன்றன்னொடும் தசமுகன் நேர என்றார். மண்டுதல் – நெருங்குதல். இராவணனும் அருச்சுனனும் போர் செயும் காட்சிக்கு மூவகையான உவமங்கூறி மகிழ்கின்றார் ஆசிரியர். இளமை மீக்கூர்ந்து அவ்விருவரும் பொருவது இளமையுடைய எருதுகள் இரண்டு போர் செய்வது போலத் தோன்றுகிறது. பெருவலி படைத்த பேருடம்பினையுடைய அவ்விருவரும் பொருவது இரண்டு குன்றுகள் மேகம்போல அதிர்குரல் எழுப்பிக்கொண்டு போர்

செய்வதுபோலக் காட்சியளிக்கின்றது இது இல்பொருள் உவமை யாகும். இரு குன்றுகள் அதிர்த்துக் கொதித்துப் போர் செய்தல் இல்லையாதலின் இது இல்லாத பொருளை உவமை கூறியதேயாகும். அபூத உவமையென்பர் தண்டியலங்கார ஆசிரியர். திசையானை கள் இரண்டு மலைவதுபோலவும் தோன்றியது என்பது மூன்றுவது உவமை. இருவரும் பொருவதற்கு உவமையாக மூன்று நிகழ்ச்சி களைக் கூறியதால் இச்செய்யுளில் பல்பொருளுவமை என்ற அணி அமைந்துளது. இம்மூன்றுவமைகளில் இளமையும் பேருடம்பும் மதர்ப்பும் முறையே பொதுத்தன்மையாகக் கொள்ளலாம். (கசு)

அருச்சுனனுக்கு இராவணன் தோற்றல்

597 கூற்றுவ னென்னக் கொடுங்கன லென்னக்
கொதித்திரு தண்டினி லெற்றி
வற்றபோர் முகத்தி ராவணார்ச் சுனர்க
ளிருவரும் பொருவுழி யரக்கன்
காற்றென முடுகிக் காவல னுரத்துக்
கதையினு லடித்திடக் கலங்கா
தாற்றின னின்றுங் கருச்சுன னடிப்ப
வரக்கர்கோ னுற்றல்போ யழிந்தான்.

கூற்றுவன் என்னக் கொடுங்கனல் என்னக்
கொதித்து இருதண்டினுல் எற்றி
ஏற்றபோர் முகத்து இராவணார்ச்சுனர்கள்
இருவரும் பொருவுழி அரக்கன்
காற்றென முடுகிக் காவலன் உரத்துக்
கதையினுல் அடித்திடக் கலங்காது
ஆற்றினன் நின்று ஆங்கு அருச்சுனன் அடிப்ப,
அரக்கர்கோன் ஆற்றல்போய் அழிந்தான்.

பொ: கூற்றுவனைப் போலவும் கொடுமையான நெருப்பைப் போலவும் மனம் கொதித்து இரண்டு தண்டாயுதங்களாலும் மோதி ஏன்று கொண்ட போர்முனையில் இராவணனும் அருச்சுன

னும் ஆகிய இருவரும் போர் செய்யும்போது இராவணன் காற்றைப்போல விரைந்து அருச்சுனனது மார்பில் தண்டாயுதத்தால் அடித்திட, அவ்வடிக்குக் கலங்காது தாங்கி நின்று (இராவணனைப் போலவே) அவ்விடத்து அருச்சுனன் அடிப்ப, இராவணன் வலிமையிழந்து தோற்றான்,

கு: இராவணன் தண்டால் அடித்த அடியை அருச்சுனன் தாங்கி ஆற்றல் இழவாது நின்றாற்போல இராவணன் அருச்சுனன் அடித்த அடியைத் தாங்கி நிற்கும் ஆற்றல் இன்றித் தோற்றான் என்றவாறு. உடம்பையும் உயிரையும் கூறுபடுத்தும் காரணத்தால் கூற்றுவன் எனப் பெயர் பெற்றான், இருவர் கொதிப்பையும் புலப் படுத்தக் கூற்றுவனையும் கொடுங்கனலையும் உவமை கூறினார். ஒவ்வொருவர்க்கும் அவ்விரு உவமைகளையும் கூறினர் என்றலும் ஒன்று. போர் தொடங்கும்போது தண்டுடன் தண்டினை எற்றுதல் மரபு. இது இருவரும் போரினை ஏற்றுக்கொண்டதற்கு அடையாள மாகும். போர் முகம் என்றது, போர்முனையை. இராவணார்ச்சுனர் கள் என்றது உம்மைத்தொகை. வடமொழித் தீர்க்க சந்தியால் இராவண அர்ச்சுனர்கள் என்பது இராவணார்ச்சுனர்கள் என ஆயது. விரைவிற்கும் வலிமைக்கும் காற்றினை உவமை கூறுவதுண்டு. இராவணன் காற்றைப்போல விரைந்து வலிவுடன் அருச்சுனன் மார்பில் கதையினால் தாக்கினான் என்றவாறு. காவலன் என்றது அருச்சுனனை. உரம்—மார்பு ஆற்றல் போயழிந் தான் என்றது வலிமை குறைந்து தோற்றான் என்ற வாறு. (கஎ)

அருச்சுனனோடு மகோதரன் போர் 18, 19

598. அன்னவன் றளர வறிந்தவா யிரந்தோ
ளருச்சுன னாற்றலி னவனைப்
பொன்னெடுந் தோள்களயர்வுறப் பிணித்துப்
போகலுற் றானைவெம் போரில்

மன்னவ னகப்பட் டானென நின்ற
மகோதர னாதிவா ளரக்கர்
நின்னிலென் றவன்மே னெடும்படை துரப்ப
நிருபனு நெருப்பெனக் கொதித்தான்.

அன்னவன்தளர, அறிந்த ஆயிரம் தோள்
அருச்சுனன், ஆற்றலின் அவனைப்
பொன்நெடுந் தோள்கள் அயர்வுறப் பிணித்துப்
போகலுற்றனை வெம்போரில்
மன்னவன் அகப்பட்டான் என நின்ற
மகோதரன் ஆதிவாள் அரக்கர்
நில்நில் என்று அவன்மேல் நெடும்படை துரப்ப,
நிருபனும் நெருப்பெனக் கொதித்தான்.

பொ: அவ்விராவணன் தளர்ச்சியுற அதனை அறிந்த ஆயிரந் தோள்களையுடைய அருச்சுனன் தன் ஆற்றலால் அவ்விராவணனைத் தன் பொன்போன்ற நெடிய தோள்கள் அயர்ச்சியடையுமாறு கட்டிக்கொண்டு போகத் தொடங்கினன். அவ்வாறு போகின்றவனைக் கண்டு நின்ற மகோதரன் முதலிய கொடிய அரக்கர்கள் கொடிய போரில் நம் மன்னவனுகிய இராவணன் அகப்பட்டுக் கொண்டான் என்று தெளிந்து, நில்! நில்! என்று அவ்வருச்சுனன் மேல் நெடிய ஆயுதங்களைச் செலுத்த, அருச்சுனனும் நெருப்புப் போல மனம் கொதித்தான்.

கு: பொன்னெடுந் தோள்கள் அயர்வுறப் பிணித்து என்றமையால் இராவணனது உடம்புத்திண்மை அருச்சுனனின் தோள்களையும் அயர்வுறச் செய்துவிட்டது என்பது புலப்படுத்தியவாறு, இனி, இத்தொடர்க்கு இராவணனது பொன்னணிகள் அணிந்த தோள்கள் அயர்ச்சி கொள்ளுமாறு இறுகப்பிடித்துப் போகின்ற அருச்சுனனை எனப் பொருள் கூறலும் ஆம். வாளரக்கர் என்பதற்கு வாளேந்திய அரக்கர் எனப் பொருள் கூறலும் ஆம். நில் நில் என்ற அடுக்கு விரைவு பற்றி வந்தது, பேராற்றலுடைய இராவணனைத் தூக்கிச் செல்லும்போது எளிய மகோதரன் முதலியோர் வந்து தடுக்கின்றனரே என்ற சினத்தால் அருச்சுனன் மனம் நெருப்பெனக் கொதித்தது என்றவாறு. (கஅ)

599. தண்டுவாண் முசலஞ் சக்கரஞ் சூலந்
தடமழுத் தோமர நாஞ்சில்
பிண்டிபா லங்கோன் முதலவா யுதங்கள்
பெருங்கையா யிரங்களால் வாங்கிக்
கொண்டுமேல் வீழுங் கொடுந்திற லரக்கர்
குலைந்துகெட் டோடிடத் துரந்து
திண்டிற னிருபன் றிருநகர் புகுந்து
தீயவன்றனைச் சிறை வைத்தான்.

தண்டு வாள் முசலம் சக்கரம் சூலம்
தடமழுத் தோமரம் நாஞ்சில்
பிண்டி பாலம் கோல் முதல ஆயுதங்கள்
பெருங்கை ஆயிரங்களால் வாங்கிக்
கொண்டு மேல் வீழும் கொடுந்திறல் அரக்கர்
குலைந்து கெட்டு ஓடிடத் துரந்து
திண்திறல் நிருபன் திருநகர்புகுந்து
தீயவன் தனைச் சிறை வைத்தான்.

பொ: தண்டாயுதமும் வாளும் இருப்புலக்கையும் சக்கரமும் சூலமும் பெரிய மழுவாயுதமும் கைவேலும் கலப்பையாயுதமும், பிண்டி பாலமும் கோலும் முதலான ஆயுதங்களை ஆயிரம் பெருங் கைகளால் வாங்கிக்கொண்டு, தன்மேல் வந்து வீழ்கின்ற கொடுமை யும் திறலுமுடைய அரக்கர்கள் நிலைகுலைந்து வலிகெட்டு ஓடிட வீசிவிட்டுத் திண்ணிய திறமையுடைய அருச்சுனன் தன் அழகிய நகரத்தில் புகுந்து தீயவனாகிய இராவணனைச் சிறைவைத்தான்.

கு: பிண்டிபாலம் - எறியாயுதவகை. கோல்-தடி. பத்து வகையான ஆயுதங்களைச் சொல்லிவிட்டு முதல ஆயுதம் என்றமை யால் கார்த்தவீரியார்ச்சுனன் தன் ஆயிரங் கைகளிலும் ஆயிரம் வகை ஆயுதங்களையேந்திக் கொண்டு அரக்கர்கள்மேல் எறிந்து துரத்தினான் என்பது புலனாகும். குலைந்து - நிலைகுலைந்து. கெட் டோடுதல் என்பது வலிமை கெட்டுப் புறமுதுகு காட்டி ஓடுதலை

உணர்த்தியது. வந்த அரக்கர் பலராகலின் அருச்சுனன் தன் ஆயிரங் கைகளிலும் ஆயுதம் ஏந்தி அவர்கள்மேல் விடுத்துத் துரத்த வேண்டியவனுனன். தீயவன் என்றது இராவணனை. பகையேதும் இல்லாதிருந்தும் நீர்விளையாட்டிலிருந்த மன்னனேடு போர் செய்ய வந்த முறையற்ற செயலை நினைந்து தீயவன் என இராவணனைக் குறிப்பிட்டவாறு. சிறைவைத்தலாவது தப்பி யோடாதபடி பாதுகாவலுள்ள இடத்தில் வைப்பது. (கக)

இராவணன் சிறைப்பட்டதை வீடணன் பிரமற்குரைத்தல்

600. கெட்டவா ளரக்கர் கிளர்பெரும் பயத்தாற்
கேடில்சீ ரிராவண னமரில்
பட்டபா டெல்லாம் வீடணற் குரைப்பப்
பரிவுறு மனத்தின னவன்போய்ச்
சிட்டனு யுள்ள பிதாமகற் குரைப்பச்
சிந்தைநொந் தச்சிறை விடுப்பான்
வட்டமா மதில்சூ ழருச்சுனன் வாழும்
வளநகர் மாமுனி வந்தான்.

கெட்ட வாள் அரக்கர் கிளர்பெரும்
பயத்தால் கேடுஇல்சீர் இராவணன் அமரில்
பட்ட பாடு எல்லாம் வீடணற்கு உரைப்பப்
பரிவுறு மனத்தினன் அவன்போய்ச்
சிட்டனுய் உள்ள பிதாமகற்கு உரைப்பச்
சிந்தை நொந்து அச்சிறை விடுப்பான்
வட்ட மாமதில் சூழ் அருச்சுனன் வாழும்
வளநகர் மாமுனி வந்தான்.

பொ: தோற்றுப்போன கொடிய அரக்கர்கள் கிளர்ந்து எழுந்த பெரிய பயத்தினுல் இதுவரை யார்க்கும் கெட்டோடுதல் இல்லாத சிறப்பினையுடைய இராவணன் போரில் அருச்சுனனிடம் பட்டபாடு எல்லாவற்றையும் வீடணனுக்குச் சொல்ல, இரக்கம்

பொருந்திய மனத்தினனாகிய அவ்வீடணன் சென்று தம் குடிக்கெல்லாம் சிறந்தவனாக விளங்கும் பிரமனுக்குச் சொல்ல, அதுகேட்டு மனம் வருந்தி அந்தச் சிறையிலிருந்து இராவணனை விடுவிக்கும் பொருட்டு வட்டமான பெரிய மதில் சூழ்ந்துள்ள அருச்சுனன் வாழ்கின்ற வளநகர்க்குச் சிறந்த பிரமதேவன் வந்தான்.

கு: அருச்சுனற்குத் தோற்றோடிய அரக்கர் என்பது புலப் பட 'கெட்ட வாள் அரக்கர்' என்றார். கெடுதல் இங்குத் தோல் வியை யுணர்த்தியது. உள்ளத்தில் மேலோங்கிய அச்சத்தையே இங்குக் 'கிளர் பெரும்பயம்' என்றார். கேடில்சீர் என்றது இரா வணனின் இறந்தகால வாழ்வை நினைந்து கூறியதாகும். யார்க் கும் தோலாது சென்ற போர் தோறும் வென்றியே புனையும் இராவணன் என்பது புலப்படுத்தியவாறு. அமரில் பட்டபாடு என்றது இராவணன் அருச்சுனனிடம் பட்ட துன்பத்தை. இரா வணன் சிறைப்பட்ட நிகழ்ச்சியை அரக்கர் அவன் தம்பியாகிய வீடணனுக்குச் சொன்னார்கள். வீடணனே பிரமனுக்குச் சொன் னான், அவன் அரக்கர் தங்குல முதல்வனாகலின் சிந்தை நொந்து அவனைச் சிறைவிடு செய்ய அருச்சுனன் நகர்க்குப் போனான் என்க. பிதாமகன்-பிரமன். அந்தணர் வடிவினனாகலின் பிரமன் மாமுனி எனப்பட்டான். அருச்சுனனுடைய நகரம் பாதுகாப்பு மிக்கது என்பது புலப்படுத்த 'வட்டமாமதில்சூழ்... வளநகர்' என்றார். சிட்டன் – சிறந்தோன்; சிரேஷ்டன் என்ற வடமொழி யின் திரிபு. (உ௰)

அருச்சுனனோடு அயன் உரையாடல்

601. அந்தமா முனிவ னடியிணை வணங்கி
யருச்சுன னருச்சனை செய்தீங்
கெந்தைநீ வந்த காரண மென்கொ
லியம்புதி யெனமுனி யியம்பும்

இந்திரா தியரை வென் றுற நெடுநா
ளீட்டிய விறலெலா முனக்குத்
தந்திரா வணனின் றலைக்கடைச் சிறையான்
றராபதி யாருனைத் தடுப்போர்.

அந்த மாமுனிவன் அடியிணை வணங்கி
அருச்சுனன் அருச்சனைசெய்து ஈங்கு
எந்தைநீ வந்த காரணம் என்கொல்?
இயம்புதி என முனி இயம்பும்
இந்திராதியரை வென்று உறநெடுநாள்
ஈட்டிய விறல் எலாம் உனக்குத்
தந்து இராவணன் நின்தலைக் கடைச் சிறையான்
தராபதி! யார்உனைத் தடுப்போர்?

பொ : (வந்தவனாகிய) அந்தச் சிறந்த பிரமனுடைய இரு திருவடிகளையும் வணங்கி அருச்சுனன் அருச்சனை செய்து துதித்து விட்டு என்தந்தைபோன்ற நீ இங்கு வந்த காரணம் என்னை? சொல்லுக என்று கேட்க, பிரமன் சொல்லுவான். தரைக்கு அதிபதியே! இந்திரன் முதலியோரை வென்று மிக நெடுங்காலமாகச் சம்பாதித்த வெற்றி எல்லாவற்றையும் உனக்குக் கொடுத்துவிட்டு இராவணன் நின் தலைவாயிலில் உள்ள சிறையில் உள்ளான்; உன்னை இனித்தடுப்பவர் யாருளர்? (என்றான்).

கு : அருச்சுனன் அருச்சனை செய்து என்பதில் உள்ள மடக்கணி காண்க. எந்தை என்பது அன்பினால் விளித்த விளியாகும். பிரமன் தான்வந்த காரணத்தைக் கூறுமுன் இராவணனை வெற்றி கொண்ட அருச்சுனனின் சிறப்பைப் புகழ்கின்றான். இராவணன் இந்திரன் முதலியவர்களை வென்று நெடுங்காலமாக ஈட்டிய வெற்றி எல்லாவற்றையும் சிறிது நேரத்தில் உன்னிடம் இழந்து தோல்வியுற்றான் என்பான், 'விறலெலாம் உனக்குத் தந்து இராவணன் நின்தலைக்கடைச் சிறையான்' என்றான். இந்திரன் முதலியோரை வெற்றிகொண்ட இராவணன் ஆற்றல் அருச்சுனனிடம் பயன்படவில்லை என்பது கருத்து. மூவுலகிலும் பெரிய வீரன் என்ற புகழ்

பெற்ற இராவணன் அருச்சுனனுக்குத் தோற்ற பின்பு அருச்சுனனைப் போரில் தடுத்து வெல்லுதற்குரியோர் இனி யாருமிலர் என்ற கருத்தால் யாருனைத் தடுப்போர்? என்றான். (உக)

இராவணனை சிறைமீட்டுப் பிரமன் தன்னுலகடைதல்

602. ஏறிய வலியே யினியுனக் கமையு
மிறைவகே ளிராவணன் றன்மேல்
சீறிய சீற்றந் தவிர்ந்துநீ யவனைச்
சிறைவிடு கெனமுனி செப்ப
ஆறிய மனத்த னுயவன் விடுப்ப
வரக்கனை யிலங்கையில் விடுத்துத்
தேறிய சிந்தைச் செழுமறை முனியாந்
திசைமுகன் றன்னுல கடைந்தான்.

ஏறிய வலியே இனி உனக்கு அமையும்,
இறைவ! கேள் இராவணன் தன்மேல்
சீறிய சீற்றம் தவிர்ந்து நீ அவனைச்
சிறைவிடு(க) எனமுனி செப்ப,
ஆறிய மனத்தனுய் அவன் விடுப்ப,
அரக்கனை இலங்கையில் விடுத்துத்
தேறிய சிந்தைச் செழுமறைமுனியாம்
திசைமுகன் தன்உலகு அடைந்தான்.

பொ: அரசனே! கேட்பாயாக! இனி உனக்குப் பெருகிய வலிமையே போதும்; இராவணன்மேல் கோபித்த கோபம் விடுத்து நீ அவனைச் சிறையிலிருந்து விடுதலை செய்க என்று பிரமன் சொல்ல, அவ்வருச்சுனன் கோபம் ஆறிய மனத்தினனுய் இராவணனை விடுதலை செய்ய, விடுதலை பெற்ற இராவணனை இலங்கையில் விடுத்துத் தெளிந்த சிந்தையையுடைய செழுமையான வேதங்களைச் சொன்ன முனிவனுகிய பிரமன் தன் உலகத்திற்குச் சென்று சேர்ந்தான்.

கு: இராவணனைச் சிறைவைத்தமையால் உலகறிய பெருமித் தோன்றும் வலிமையே அமையும். அவ்விராவணனைச் சிறை வைத்திருத்தல் வேண்டா என்பது கருத்து. உயர்ந்த தகுதி யுடைய பிரமன் சொல்லியபடி இராவணனை விடுதலை செய்ய லானுன் அருச்சுனன், பிரமன் சொல்லியவுடனேயே அருச்சுனன் சினம் ஆறிய மனத்தனுய் விடுதலை செய்த பெருந்தன்மை காண லாம். தேறிய சிந்தை - கலக்கத்தில் நின்று தெளிந்த சிந்தை என்க. சிறையிலிருந்து விடுதலை பெற்ற இராவணனை அயன் இலங்கையில் கொண்டுபோய் விடுத்துப் பின் தன்னுலகு சேர்ந் தது பெருமிதச் செயல். (உஉ)

கார்த்த வீரியார்ச்சுனப் படலம் முற்றிற்று

# 10. வாலி வாலால் கட்டுண்ட படலம்

## முன்னுரை

இராவணன் வாலியின் வாலால் கட்டுண்ட செய்தியைக் கூறும் படலம் ஆதலின் இது இப்பெயர் பெறுகின்றது இராவணனைப் பற்றிய செய்தியே யாயினும் வென்றவன் வாலியே யாதலின் அவன் பெயரோடு சேர்த்து இப்படலம் பெயர் பெறுகின்றது.

## படலப்பொருள் சுருக்கம்

ஒழுக்கத்திற் சிறந்த பிரமனாகிய முனிவனால் கார்த்த வீரியார்ச்சுனனது சிறையினின்றும் விடுதலை பெற்றவனாகிய இராவணன், எமன் போலவும் நெருப்புப் போலவும் காற்றுப்போலவும் நஞ்சு போலவும் வெகுண்டு இவ்வுலகில் இறங்கி வலிமையிற் சிறந்த வாலி வாழ்கின்ற வளமான கிட்கிந்தையை யடைகின்றான். வாலியின் அரண்மனையிற் சென்று இராவணன், இங்கு வாலி இல்லையோ? அவன் எங்கிருக்கின்றான்? என்று கேட்கின்றான். அந்த அரண்மனையில் தங்கியிருந்த தாரை, இராவணனைப் பார்த்து நீ பிசாசர்களைப்போல இரவில் வந்த காரணம் என்ன? என்று கேட்கின்றாள். 'வாலியோடு வாட்போர் செய்திட ஆயத்தமாக வந்தேன்' என்று அவ் இராவணன் சொல்ல, தாரை எமனோடு கோபித்துப் பிழைக்கத்தானோ! மிகவும் நல்லது! எனச் சொல்கின்றாள்.

மேலும் தாரை தனக்கு முன்பு காணப்படும் மலையைக் காட்டி 'இந்தப் பெரிய மலை துந்துமி என்னும் பெயருடையோன் முதலாக வந்து வாலியோடு போர் செய்த பகைவரின் உடம்பிற் பொருந்திய பல எலும்பின் குவியல்தான் என்பதை அறிவிலியாகிய நீ அறிந்துகொள்வாயாக' எனவே வலிமை மிக்க வாலியோடு நீ போர் செய்தால் நீ சாவது உறுதி. வாலி, நான்கு கடலினும் தீது இல்லாத சிவபூசை செய்து முடித்துவிட்டுப் பாய்ந்து வருவான், அதற்குள் பதறாதே என்று கூறிவிட்டுப் பின் இராவணனின் துடிப்பைக் கண்டு அரக்கனே! நீ வாலி வரும்

வரையில் தரிக்கமாட்டாய் எனில் தென்கடலுக்குச் செல்வாயாக என்கின்ருள். அவள் சொன்னபடி இராவணன் தென்கடலுக்குச் சென்று சிறப்புள்ள சிவபூசையில் இருக்கின்ற வாலியை அணுகி நோக்குகின்ருன்.

மேருமலையை ஒக்கும் தோற்றமும் நிறமும் பெற்ற மேனியை யுடையவனுய்ப் பொருள்கள் விளங்குதற்குக் காரணமான விரிந்த கிரணங்களைப் பரப்பிக்கொண்டு குணதிசைக் குன்றில் உதிக்கின்ற சூரியனை ஒக்கின்ற முகத்தினனுய்த் தேவர்க்கும் அசுரர்க்கும் கொடுக்கும் பொருட்டும் பாற்கடலை அமிழ்து எழக்கடைந்த வீர னுகிய வாலி, வேறு ஒன்றையும் அறியானுகித் தன்வயம் இழந்து பரவசனுய்க் கண்களை மூடிக்கொண்டு தியானத்தில் இருந்திட, வஞ்சகத்தால் கறுத்த மனமுடை இராவணன் இப்போது யான் செய்யத்தக்க காரியம் இதுவே! இவ்வாலியைக் கட்டுவேன் என்று கருதுகின்ருன்.

அப்போது வாலி கண்விழித்துப் பார்த்து, வந்தவன் அரக்கன் என்பதை அறிந்து கொள்கின்ருன். அறியாதவன்போல நடித்துப் பகைவரிடத்துக் கொடிய போரினைச் செய்யும் வலிமை மிக்க வாலி, மீண்டும் கண்ணை மூடிக் கொள்கின்ருன். இராவணன் இவ்விடத்து இவ்வாலியைக் கட்டுவேன் என்று மானைப் பிடிக்கச் செல்லும் புலி போலவும் கொடிய எருது ஒதுங்கி வருவதுபோலவும் மெல்லெனப் பின்னுல் ஒளிந்து வந்து வாலியைப் பற்றுகின்ருன். இருபது கைகளாலும் பிடித்துக் கட்டிய இராவணனை வாலி தன் இரு கைகளாலும் இறுக்கிப் பிடித்துப் பின்பு வாலினுல் கட்டிவிட்டுச் சிவபூசையைச் செய்து முடித்துக்கொண்டு, வாலில் இராவணன் தொங்கிக் கொண்டுவரப் படத்தினையுடைய பாம்பினைக் கவ்விக் கொண்டு விண்ணில் பறந்து செல்லும் கருடனைப்போல மேல் கடலில் பாய்கின்ருன்.

அவன் உடம்பு வேகத்தால் உளதான காற்ருல் அவனுக்கு முன் இருக்கும் மலைகளும் மரங்களும் முறிந்து அவனுக்கு முன்பு செல்கின்றன. நின்றபடி நிற்றற்குரிய வலிமையில்லாது அவன் பின்பு இருக்கும் மலைகளும் மரங்களும் வேர் பறித்து அவன் பின்னே செல்கின்றன. வலிமை மிக்க மகோதரன் முதலிய

இராவணன் அமைச்சர்கள் தம் அரசனை மீட்கும் பொருட்டு வாலியின் பின்னே தொடர்ந்து செல்கின்றனர். வாலியின் வேகத்தால் உண்டான காற்றே அவர்களை வருத்த அனைவரும் தரையில் வீழ்கின்றார்கள்.

வாலியோ பாரத தேசம் பரவியுள்ள ஒன்பதினாயிரம் யோசனைகளைக் கடந்து இமயமலையினைக் கடந்து கிம்புருட தேயம் ஒன்பதினாயிரம் யோசனைத் தொலைவைக் கடந்து ஏமகூட மலையினைக் கடந்து பொன்மயமான அரிவருட தேயத்தின் ஒன்பதினாயிரம் யோசனைத் தொலைவினைக் கடந்து பின் நிடதத்தைக் கடந்து மேற்குக் கடலை அடைகின்றான். அதில் சிவபூசையை விதிமுறையால் செய்து முடித்துக்கொண்டு இரமிய வருடம் என்னும் தேயத்தின் ஒன்பதினாயிரம் யோசனைத் தொலைவைக் கடந்து நீலமலையின் இரண்டாயிரம் யோசனைப் பரப்பினைக் கடந்து நிலைபெற்று விளங்குகின்ற கிளாவிருத தேசம், சுவேத மலை இவற்றின் பரப்பாகிய பதினோராயிரம் யோசனையைக் கடந்து அழகுமிக்க குருவம், சிருங்கம் என்கின்ற மலைகளையும் கடந்து வடகடலை அடைந்து அங்குச் சிவபூசையைச் செய்து முடித்துக் கொண்டு கீழ்த்திசையிலுள்ள கருங்கடலை அடைந்து சிவபிரானைப் பூசித்துவிட்டுப் பின்பு மேற்கூறிய கீழ்க்கடலோடு தென்கடலுக்குள்ள தொலைவினை விரைவில் கடந்து மணிகளைக் கொண்டு அழகு செய்யப்பெற்ற கிட்கிந்தையில் புகுகின்றான்.

வாலியின் வரவு கண்டு மனமகிழ்ந்த தாரை, அவன் வாலில் தொங்கிக் கொண்டுள்ள இராவணனின் துயரைக் கண்டு இரக்கம் கொண்டு வாலியைப் பார்த்து, இங்குள்ள இவன் யார்? இவனை இனிப் போக விடுக! என்கின்றாள் தாரையின் சொற்படி அவ்விராவணனை விடுத்துவிட்டு அக்கொடியவனுக்குச் சொல்கின்றான். அரக்கா! சிவபிரான் பூசை செய்தல் வேண்டிப் பெருங்கடல் தொறும் யான் பாயும் நிலையில் நீ வந்த காரணம் யாது? என வினவ, இராவணன் உன்னோடு போர் செய்யவே வந்தேன் என்கின்றான். அதுகேட்ட வாலி, ஒளிவீசும் முடியையணிந்தவனே! போரில் வென்றவர் தோற்பர், தோற்றவர் வெல்வர் எனவே என்னோடு போர்செய்ய ஆசையிருந்தால் இப்பொழுது

போர் செய்வாயாக என்கின்றன். இராவணன் நாணி நின் வாலால் கட்டுண்டு கலங்கினேன். அப்போதுபட்ட துன்பம் என் உடம்பில் கிடக்கவும் இன்னமும் போர் செய்யவோ? இனிப் போர் வேண்டா, இன்றுமுதல் நின் தோழன் யான் என்று கூறுகின்றன்.

இலங்கை மாநகர்க்கு அரசனுக உள்ள இராவணன் அவ்வாறு கூறினவுடன் வாலி மகிழ்ந்து அவனைத் தழுவிக்கொண்டு தன் நகர்க்கு அழைத்துச் சென்று விருந்தூட்டி முகமன்கூறி ஒருமாதம் வரையில் தன் வீட்டில் உடன் வைத்திருந்து, இன்றுமுதல் என்னுடைய தோழன் நீ என்று சொல்லி இராவணனை இலங்கைக்கு அனுப்புகின்றன்.

பாற்கடலில் பாம்பணையில் துயில் விடுத்து அயோத்தியில் அவதரித்த இராமா? நீ விடுத்த செம்மையான அம்பு ஒன்று மார்பைப் பிளத்தலால் இறந்து விழுந்தான் இராவணன். இவ்வுலகில் உன்னை ஒப்பார் யாருளர்? என்று அகத்திய முனிவர் பாராட்டுகின்றர் என்பது இப்படலத்துக் கூறப்படும் பொருளாகும்.

## ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்:- இராவணன் போர் வேட்கையால் கிட்கிந்தைக்குச் சென்று வாலியைப் போருக்கு அழைத்தபோது தாரையின் தந்தையாகிய தாரன் என்பவனே பதில் சொல்வதாக வான்மீகம் கூறுகின்றது. ஒட்டக்கூத்தர் தாரையே பதில் சொல்வதாக மாற்றியுள்ளார். மேலும் வாலி நான்கு கடல்களிலும் சந்தியோபாசத்தைச் செய்துவரச் சென்றதாக வான்மீகம் கூற, ஒட்டக்கூத்தர் வாலி சிவபூசை செய்யவே நான்கு கடல்களுக்கும் சென்றதாகக் கூறியுள்ளார் (சந்நியோபாசம்-சந்தியாவந்தனம்).

சந்தியாவந்தனத்தைச் செய்து முடித்துவிட்டு ஒரு முகூர்த்தத்தில் (ஒன்றரை மணி நேரம்) வாலி திரும்பி வந்துவிடுவார். அதுவரையில் காத்திரு என்த் தாரன் கூறிவிட்டு எதிரிலுள்ள எலும்புக் குவியல்களைக் காட்டி இதனைக் கவனித்துப்பார். இந்த மண்டையோடுகள் வாலியிடம் போர் வேண்டி வந்தவர்களுடையவை. நீ அமிர்தம் அருந்தியிருந்தாலும் வாலியைத் தாக்கும்

உன்னுயிர் நிலைபெறுது. மரணமடைய அவசரப்படுகின்றாய் என்றால், தென்கடலுக்குச் செல்லுக. அங்குப் பெறுவாய்' என்கின்றான். அதுகேட்ட இராவணன், தாரனைத் திட்டிவிட்டு உடனே புட்பகத்தில் ஏறிக்கொண்டு தென்கடலுக்குச் செல்கின்றான். அங்கு வாலி பாலசூரியனைப் போன்ற முகமுடையவனாய்ச் சந்தியாவந்தனத்தில் கருத்தூன்றி யிருப்பதைக் கண்டு வாலியைப் பிடிக்க முயலும்போது இராவணனை வாலி கக்கங்களிலே சிக்கிக்கொள்ளச் செய்து ஏனைய மூன்று கடல்களிலும் சென்று மூழ்கிச் சந்தியாவந்தனம் செய்து முடித்துக்கொண்டு கிட்கிந்தையின் பூம்பொழிலில் வந்து இறங்கி, இராவணனைத் தன் கக்கத்திலிருந்து உதறுகின்றான். தரையில் விழுந்த இராவணனைப் பார்த்து, தேவரீர் எவ்விடத்திலிருந்து எப்பெழுது எழுந்தருளினீர்கள்? என்று எள்ளிக்கேட்க இராவணன், தான் பட்ட பாட்டால் வெருள விழிக்கும் கண்களையுடையவனாய் வாலியைப் பார்த்து 'இந்திரனிலும்' விஞ்சிய புகழுடையவனே! அரக்கர் மன்னனாகிய யான் நின்னிடம் போர் செய்யும் ஆசையால் வந்தேன். நின்னிடம் சிக்கிக்கொண்டு நான்கு கடல்களிலும் அலக்கழிக்கப் பெற்றேன். ஒப்பற்றவீர! என்னையும் தூக்கிக் கொண்டு சிறிதும் சோர்வு என்பதின்றிப் பெரிய கடல்களை வேறு எந்த வீரன் கடப்பான்?

உன் வலிமையை நேரில் யானே அனுபவித்துவிட்டேன். இனி யான் உன்னோடு அக்கினி சான்றாக நட்புச் செய்துகொள்ள விரும்புகின்றேன் என்கின்றான். வாலியும் அதற்கு உடன்பட இருவரும் அக்கினியை வளர்த்து ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு அன்றுமுதல் உடன் பிறந்தார் போலிருக்க உறுதிசெய்துகொள்கின்றார்கள். அப்பூம் பொழிலிலிருந்து வாலியும் இராவணனும் மகிழ்ந்து உரையாடிக் கொண்டு இருசிங்கங்கள் மலைக்குகையில் நுழைவது போலக் கிட்கிந்தைக்கு வருகின்றார்கள். இராவணன் கிட்கிந்தையில் வாலியோடு சுக்கிரீவனைப் போலவே அன்புடன் ஒரு மாதம் தங்கி மகிழ்கின்றான். பிறகு இலங்கை செல்கின்றான் என்றுளது.

**ஒட்டக்கூத்தர் :** வாலி இராவணனை வாலில் கட்டித் தொங்க விட்டுக்கொண்டு நாற் கடலுக்கும் தாவிச் சென்றதாகச் சொல்

கின்றார். வாலி பாற்கடலைக் கடைந்து அமரர்க்கும் அசுரர்க்கும் அமுதம் கொடுத்த நிகழ்ச்சியும் கூறுகின்றார். இவை ஒட்டக் கூத்தரின் கற்பனையே. வாலியும் இராவணனும் நெருப்புச்சான்றாக நட்புச் செய்து கொண்டதாக ஒட்டக்கூத்தர் கூறவில்லை. மேலும் வாலியின் வலிமையைச் சிறப்பித்துக் கூறும் இப்படலத்திறுதியில் வாலியின் வலிமை ஒப்புயர்வு அற்றதாய் விளங்கிற்று. 'அவ் வாலியும் இராமபிரானாகிய நின்னால் நெருப்பில் வீழ்ந்த விட்டில் பூச்சிப்போலக் கொல்லப்பட்டான்' என்று அகத்தியர் கூறுவதாக அமைப்பதே பொருத்தமாகும். அவ்வாறு பொருத்தமுறக் கூறிய வான்மீகியின் கருத்தினை விடுத்து ஒட்டக்கூத்தர்; இராமனை நோக்கி 'நின் வல்ய அம்பு மார்பினைப் பிளக்க இறந்து வீழ்ந்தான் இராவணன்' என்று கூறியிருப்பது சிறிதும் பொருத்தமாகவில்லை. இராவணனை மெலிவுறச் செய்த வாலியும் இராமன் அம்பு ஒன்றால் இறந்தான் என்பதே கதைப்போக்கிற்குப் பொருத்தமாதலை ஊன்றி நோக்கியுணரலாம்.

மேலும் கிட்கிந்தையைச் சார்ந்த பூம்பொழிலில் வாலி இராவணனை விடுவித்து எள்ளல் மொழி கூறியதாகவும் அது பொறுது வருந்திய இராவணன் நெருப்புக்கடவுள் சான்றாக நட்புக் கொண்டதாகவும் வான்மீகம் கூறவும், ஒட்டக்கூத்தர்: வாலியின் வாலில் தொங்கிக் கொண்டுவந்த இராவணனைப் பார்த்து இரக்கம் கொண்டு இவனை விடுவித்துப் போகவிடுக எனத் தாரை கூறியதாக அமைத்தது அவர்தம் கற்பனையேயாம்.

மேலும் வான்மீகத்தில் வாலி நான்கு கடலிலும் சென்று சந்தியாவந்தனம் செய்து மீண்டான் என்று பொதுவகையால் கூறப்பட்டுள்ளது. எத்தனை யோசனைகள் கடந்து சென்றான் எவ் வெம்மலைகளைக் கடந்து சென்றான் எனக் கூறவில்லை. ஒட்டக் கூத்தரோ வாலிகடந்து சென்ற தொலைவினைத் தனித்தனியே கணக்கிட்டுச் சொல்கின்றார். 66 ஆயிரம் யோசனைத் தொலைவு வாலி சென்றதாக ஒட்டக்கூத்தர் சொல்லிப்பின் கணக்கிடாமல் பல யோசனைகளைச் சொல்லியுள்ளார். இக்கணக்கு ஒட்டக்கூத் தரின் கற்பனையேயாகும். மேலும் வாலியைத் தேடிவந்த இராவணனைப் பார்த்து இரவில் ஏன் வந்தாய் எனத்தாரை கேட்டதாக

வுள்ளது. எனவே வாலியின் சிவபூசைக்குரிய காலம் இரவுதான் என்பதைப் புலப்படுத்தியுள்ளார்.

## படலப் பொருட் சிறப்பு

வாலியின் வாலால் இராவணன் கட்டுண்ட இப்படலத்தில் வாலியின் மனைவியாகிய தாரை தன் கணவன் தகுதிக் கேற்ற பெருந்தன்மையும் இரக்க நெஞ்சமும் உடையவளாகக் காணப் படுகின்றாள். இராவணன் வந்து 'இங்கு வாலி இருந்திலனோ? என்று கேட்டபோது இராவணனின் தோற்றத்தையும் வீரத்தையும் தலைமையையும் பொருட்படுத்தாமல் 'பைசாசர் போல இரவில் நீ வரக்காரணம் என்ன' என்று வினவும் தாரையின் துணிவையும் பெருமிதத்தையும் காண்கின்றோம். பின்பு அவன் 'வாலியோடு வாட்போர் செய்திட வந்தேன்' என்றபோது தாரை 'காலனோடு கனன்று பிழைக்கவோ? சால நன்று' என்று தன்கணவன் வலிமையைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றாள். எமனோடு போர் செய்து உய்ய முடியாது; அதுபோலவே, எமனைப் போன்ற இவ் வாலியோடும் போர் செய்து உய்தல் இயலாது என்ற கருத்தைப் பிறிது மொழிதல் அணி பொருந்த வினவிப் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

மேலும் 'சால நன்று' என்று குறிப்புச் சொல்லால் இராவணன் செயலை இழித்துக் கூறியுள்ள நயத்தையும் காணலாம். இனி வாலியின் வலியறியாது வந்து போர் செய்து மடிய இருக்கின்ற இராவணன்மேல் வைத்த இரக்கவுணர்ச்சியால் எதிரில் காணப் படும் எலும்பு மலையை இராவணனுக்குக் காட்டி இந்த எலும்பு மலை வாலியோடு போர் செய்தோரின் எலும்புகளேயாகும் என்பதை அறிவிலியாகிய நீ அறிந்துகொள்க என்று கூறுகின்றாள். இவ்வளவு சொல்லியும் அஞ்சாது போர்க் குறிப்போடு நிற்கின்ற இராவணன் மனநிலையை யுணர்ந்து கொண்ட தாரை மேலும் சொல்லுகின்றாள்.

வாலியோடு நீ போர் செய்தால் நீ சாதல் திண்ணம். பூமியைச் சுற்றியுள்ள நாற்றிசைக் கடல்களிலும் சென்று நீராடி குற்றமற்ற சிவபூசை செய்து விட்டுப் பாய்ந்துவருவான் விரைவில்,

அதற்குள் பதருதே' என்றும், 'உன்னுல் தரிக்கமுடியவில்லை என்ருல் இப்போது தென்கடலில் வாலி பூசை செய்துகொண்டிருக்கலாம், அங்குச் செல்க' என்றும் கூறுகின்ருள். தாரையின் இச்சொற்கள் யாவும் வாலியின் பெருமையைப் புலப்படுத்துவதோடு இராவணன் அறியாமையால் போர் செய்து வீணே அழியலாகாதே என்ற இரக்க உணர்ச்சியையும் நன்கு புலப்படுத்தியிருத்தல் காணலாம்.

வாலி சிவபூசை முடித்துவிட்டுத் தன் வாலில் இராவணன் கட்டுண்டு தொங்கிக்கொண்டு வரக்கண்ட தாரை, இராவணனது துயரத்தை யுளங்கொண்டு வாலியைப்பார்த்து,

'ஈங்கிவன் யாவன்? இவனை நீ போகவிடு' என மனம் இரங்கிக் கூறியதை நோக்கின் தாரையின் பெண்மைக்குரிய இரக்கவுணர்வினை யறியலாம். தன் கணவனின் வலிமை மிகுதி கண்டு செருக்கிப் பிறர் அழிவு கண்டு மகிழாமல், அருள் நெஞ்சமுடையளாய் வாலியின் வலிமையறியாது வந்து இறக்க வேண்டாவே என்று பிறர்க்கு அறிவுரை கூறி உய்விக்கும் பெருந்தன்மை தாரையின்பால் இயல்பாக அமைந்து அழகு செய்தலை இங்கு உணர்கின்ருேம்.

தன்னினும் இராவணன் மெலியன் என்பதை நன்குணர்ந்தவன் வாலி 'உன்னுேடு பொருவான் வந்தகப்பட்டேன்' என்று இராவணன் கூறியபோது தன்வலிமை நினைந்து செருக்காமல்,

'மின்னுெளிர் முடியாய்! வென்றவர் தோற்பார்
தோற்றவர் வெல்வர் வெஞ்சமரில்
என்னுெடும் பொருவான் இச்சை
யுண்டாயின் இராவணு! பொருதி'

என்று கூறியுள்ள நடுவுநிலையான முடிவைப் பார்க்கும்போது வாலியின் பெருந்தன்மையும் பகைவனை மதிக்கும் பண்பாடும் நமக்கு நன்கு புலப்படும். வெற்றியும் தோல்வியும் தனி ஒருவர்க்கே உரிமையுடையதல்ல முன்பு நல்ல சூழ்நிலையுள்ளபோது வென்றவன், பின்பு சூழ்நிலையின் தீமையால் தோல்வியுறுதலும் கூடும் என்ற உண்மையை வாலியினுள்ளம் வலிமை மிக்க நிலையிலும் மறந்திடவில்லை என்பதை நினைதல் வேண்டும்.

இனி, இராவணன் நிலையை நோக்குவோம். வலிமையாலும் வரத்தாலும் மிக்கவனாகிய இராவணன், தன்னின் மெலியாரை நோக்கின் அவரை அழித்தலும் தன்னின் வலியாரைக் கண்டுழி அவரோடு போர் செய்யலாற்றாது தோற்றுழித் தோழமை பூணுதலும் ஆகிய சூழ்ச்சியை மேற்கொண்டு விளங்குகின்றான். முன்னம் கார்த்தவீரியார்ச்சுனனை எளியனென்று கருதி வலிய போர்க்குச் சென்ற இராவணன், அவன் வலிமை கண்டு அவனோடு போர் மறுப்பு உடன்பாடு செய்துகொண்டதும் நட்புப் பூண்டதும் காண்கின்றோம். அதுபோலவே வாலியோடு போர்செய்து வென்று விடலாம் என்று எண்ணி வந்தவன், விரைவில் வந்து விடுவான் வாலி எனத் தாரை சொல்லவும் பொருது சென்று சிவபூசையில் இருக்கும்போதே வாலியைக் கட்டிப்பிடிக்க எண்ணித் தான் கட்டுண்டதும் பிறகு அவ்வாலியோடு நட்புப் பூண்டதும் இப் படலத்துச் சிறப்பு நிகழ்ச்சிகளாகும். இந்த நட்பினை நினைந்தன்றே அங்கதன் இராவணனிடம் தூது சென்றபோது வாலியின் மகன் என்பதையுணர்ந்து அவனை மகன்மை கொண்டாடினான் இராவணன் என்பதும் இங்கு நினையத்தகும்

### இராவணன் வாலியின் நகரையடைதல்

603. சீல மாமுனி யாற்சிறை பேர்ந்தவன்
காலனென்னக் கனலெனக் காலென
ஆலமென்ன வவனி யிழிந்துமா
வாலி மன்னும் வளநக ரெய்தினான்.

சீல மாமுனி யால் சிறை பேர்ந்தவன்
காலன் என்னக் கனல் எனக் கால் என
ஆலம் என்ன அவனி இழிந்து மா
வாலி மன்னும் வளநகர் எய்தினான்.

பொ: ஒழுக்கத்திற் சிறந்த பிரமனாகிய முனிவனால் கார்த்த வீரியார்ச்சுனனது சிறையினின்றும் பெயர்ந்தவனாகிய இராவணன் எமன் போலவும் நெருப்புப் போலவும் காற்றுப் போலவும் நஞ்சு போலவும் வெகுண்டு இவ்வுலகில் இறங்கி வலி சிறந்த வாலி வாழ்கின்ற வளமான நகரை அடைந்தான்.

கு : சிறையிலிருக்க நேர்ந்ததே எனவருந்தி அமைதியாக இருக்க வேண்டிய இராவணன், பகைவெல்லும் தகையினுல் எமனைப்போலவும் நெருப்பைப் போலவும் கொடுங்கோபமுடைய வனாய் இம் மண்ணுலகில் வந்திறங்கி வாலியின் நகரத்தை அடைந்தான் என்றவாறு. இராவணன் விண்வழிச் செல்லும் இயல்பினனாகலின் 'அவனியிழிந்து' எனப் புவியில் இறங்கினமை கூறினார். மாவாலி – வலிமையாற் பெரிய வாலி என்க. இராவணன் சினத்திற்குக் காலன் முதலிய நான்குவமை கூறியதால் இது பல்பொருளுவமையணி. என்ன என்பன நான்கும் உவமை யுருபுகள். ஆலமென்ன வெகுண்டு எனச் சொல்லெச்சமாக ஒரு சொல் வருவிக்க. இனி, காலன் என்னக் கனல் எனக் கால் என ஆலம் என்னவாலி மன்னும் வளநர் எய்தினன் என இயைத்து வாலிக்கு உவமையாக்கலும் ஆம். பேர்ந்தவன் எய்தினன் என இயையும். சீல மாமுனி என்றது புலத்திய முனிவரையே என முதல் நூற்கருத்திற்கேற்பப் பொருள் கூறலும் ஆம். (க)

வாலி எங்குளான் எனத் தாரையை வினவுதல்

601. இங்கு வாலி யிருந்தில னேவவன
எங்கு ளானென் றிராவணன் கூறிடத்
தங்கு சீருடைத் தாரைப சாசரின்
கங்குல் வாய்வந்த காரண மென்னென்றாள்.

இங்கு வாலி இருந்திலனே? அவன்
எங்கு உளான்? என்று இராவணன் கூறிடத்
தங்கு சீருடைத் தாரை பசாசரின்
கங்குல்வாய் வந்த காரணம் என்? என்றாள்.

பொ : (வாலியின் அரண்மனையிற் சென்று) இராவணன் இங்கு வாலி இல்லையோ? அவன் எங்கு இருக்கின்றான்? என்று கேட்க, அந்த அரண்மனையில் தங்கியுள்ள சிறப்புடைய தாரை (இராவணனை பார்த்து) பிசாசர்களைப்போல இரவில் நீ வந்த காரணம் என்னை என்று கேட்டாள்.

கு: வாலியை அரண்மனையில் காணுமையால் இராவணன் இவ்வாறு வினவினன். கூறுதல் இங்குக் கேட்டலை உணர்த்தியது. தங்குசீர் என்பதற்கு நிலைபேருகத் தங்கிய சிறப்பு எனப் பொருள் கூறலும் ஆம். பசர்சர் – பிசாசர் – பேய்கள். நள்ளிரவில் திரியும் தன்மை பேய்களுக்கே உண்டு ஆகலின் தாரை இவ்வாறு வினவினள். பசாசரின் என்புழி இன் உவம உருபு. கங்குல் வாய் என்புழி வாய் ஏழாம் வேற்றுமை உருபு. இங்குக் காலம் இடமாயிற்று. (உ)

வாலியோடு வாள் அமர் செய்ய வந்தேன் எனல்

605. வாலி தன்னெடும் வாளமர் செய்திடக்
கோலி வந்தனெ னென்றவன் கூறிடக்
கால னேடு கனன்று பிழைக்கவோ
சால நன்றெனத் தாரை யியம்புவாள்.

வாலி தன்னெடும் வாள் அமர் செய்திடக்
கோலி வந்தனென் என்று அவன் கூறிடக்
காலனேடு கனன்று பிழைக்கவோ!
சால நன்று எனத் தாரை இயம்பு வாள்.

பொ: வாலியோடு வாட்போர்செய்திட ஆயத்தமாக வந்தேன் என்று அவ்விராவணன் சொல்லத் தாரை, எமனேடு கோபித்துப் பிழைக்கத்தானே! மிகவும் நல்லது எனச் சொல்லலானுள்.

கு: கோலுதல் போர்க்குரிய கோலங்கொண்டு ஆயத்தமாதல். எமனேடு கோபித்துப் பிழைக்க முடியாதவாறுபோல வாலியோடு வெகுண்டு யாரும் உய்யமாட்டார்கள் என்பாள், 'காலனேடு கனன்று பிழைக்கவோ' என்று ஒட்டணியால் கூறினுள். வினு ஓகாரம் எதிர்மறைப் பொருளது. பிழைத்தல் இயலாது என்னும் பொருளது. சாலநன்று என்றது குறிப்புச் சொல். கற்கறித்து நன்கட்டாய் என்புழிப்போல. நன்றன்று என்றவாறு. (ங)

தாரை வாலியின் வலிமை கூறுதல்

606. துந்து மிப்பெய ரான்முதற் றுன்னலர்
வந்து வாலியு டன்மலைந் தோருடற்
பந்த மேவிய பல்லெலும் பின்குவை
இந்த மாமலை யென்றுகொ ளேழைநீ.

'துந்துமிப் பெயரான் முதல் துன்னலர்
வந்து வாலியுடன் மலைந்தோர் உடல்
பந்தம் மேவிய பல்எலும்பின் குவை
இந்த மாமலை' என்று கொள் ஏழை நீ.

பொ : துந்துமி என்னும் பெயருடையோன் முதலாகிய பகைவர் வந்து வாலியோடு போர் செய்தோர் தம் உடற்கட்டில் பொருந்திய பல எலும்பின் குவியல்தான் இந்தப் பெரிய மலை என்பதை அறிவிலியாகிய நீ அறிந்து கொள்வாயாக.

கு : தாரை தன் முன் உள்ள மலையொன்று காட்டி இந்த மாமலை, வாலியுடன் போர்செய்ய வந்த துந்துமி முதலியவர்களின் உடற்கட்டிலிருந்த எலும்பின் குவியலே என்பதை அறிந்து கொள்ளுமாறு கூறினாள். இந்த எலும்பின் மலையைக் கண்டேனும் இராவணன் வாலியின் வலிமையறிந்து அஞ்சித் திரும்புவான் என்ற நோக்கத்தோடு தாரை இது கூறினாள். ஏழை – அறிவிலி. அறிவிருந்தால் வாலியோடு போர் செய்ய வாரான் என்றவாறு. உடற்பந்தம் – உடற்கட்டு. இங்கு வீரக்குடியில் பெண் கொள வந்தவனுக்கு மகள் மறுத்து மொழிந்த –

ஒள்வாண் மறவ ருருத்தெழுந் தும்பர்நாட்
கள்வார் நறுங்கோதை காரணமாக் – கொள்வான்
மருங் கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்
கருங்கண்ணி வெண்கட்டிற்கால் (பு. வெ. நொச். 9)

என்ற பாடல் ஒப்புநோக்கத்தகும். (சா)

வாலி சிவபூசை செய்யக் கடலுக்குச் சென்றுள்ளதை அறிவித்தல்

607. ஆத லாலடல் வாலியொ டும்பொரின்
சாத றிண்ணநீ சாகர நான்கினும்
தீதி லாச்சிவ பூசனை செய்திடப்
பாய்தல் செய்யும் பதறலை யென்றனள்.

ஆதலால் அடல் வாலியொடும் பொரின்
சாதல் திண்ணம்நீ சாகரம் நான்கினும்
தீது இலாச் சிவபூசனை செய்திடப்
பாய்தல் செய்யும் பதறலை என்றனள்.

பொ: ஆகையால், வலிமைமிக்க வாலியோடு நீ போர் செய்தால் நீ சாவது உறுதி; நான்கு கடலினும் தீது இல்லாத சிவ பூசை செய்து முடிந்திடப் பாய்ந்து வருவான் அதற்குள் நீ பதருதே என்று தாரை கூறினள்.

கு: துந்துமி முதலோர் வாலியை எதிர்த்து இறந்து பட்டார்களாதலின் நீ அவனேடு பொருதாலும் அவர்களைப் போலச் சாதல் திண்ணம் என்றவாறு. சாகரம் – கடல். நாற்றிசையிலும் உள்ள கடலைச் சாகரம் நான்கினும் என்ருர். சிவபூசனையின் சிறப்புணர்த்த தீதிலாச் சிவபூசை என்ருள். தீதிலது எனவே நல்லதே வினையும் சிவபூசை என்றவாருயிற்று. வலிமை மிக்க பேருருவினனுகிய வாலிக்குப் பூசைக்குரிய இடம் பெருங்கடலே என்பது புலப்படுத்தியவாறு. பாய்தல் என்றது ஆசிடையிட்ட எதுகை. பாய்தல் செய்யும் என்றது, பாய்ந்து வருவான் என்னும் பொருளது. கடலுக்குச் சென்றுள்ளவன் வரக்காலம் தாழ்க்குமோ என ஐயுருதே என்பாள், பாய்தல் செய்யும் பதறலை என்ருள். பதறுதல் – அவசரப் படுதல்- பதறலை என்பது முன்னிலை வினைமுற்று. (ரு)

தென்கடற் கரையில் பூசையிலிருக்கும் வாலியை
இராவணன் காணுதல்

608. தரிக்கி லாயெனிற் றென்றிசைச் சாகரத்
தரக்க வேகுதி யாலெனத் தாரையீ

துரைக்க வேகி யுயர்சிவ பூசையில்
இருக்கும் வாலியை யெய்தின ேனாக்கினுன்.

தரிக்கிலாய் எனில் தென்திசைச் சாகரத்து
அரக்க! ஏகுதியால் எனத் தாரை ஈது
உரைக்க ஏகி, உயர்சிவ் பூசையில்
இருக்கும் வாலியை எய்தினன் நோக்கினுன்.

பொ: அரக்கனே! நீ வாலிவரும் வரையில் தரிக்கமாட்டாய் எனில், தென்திசைக் கடலுக்குச் செல்வாயாக என்று தாரை இதனைச் சொல்ல இராவணன் அவள் சொன்னபடி சென்று உயர்ந்த சிவபூசையில் இருக்கின்ற வாலியை அணுகி நோக்கினுன்.

கு: தரித்தல் – பொறுத்துக் கொள்ளுதல். சாகரம் – கடல்; சகரர் தோண்டியது என்னும் காரணத்தால் வந்த பெயர். பெரு வலியுடைய வாலியின் மனைவி என்ற உரிமையும் பெருமையும் இருத்தல் பற்றி இராவணனை அரக்க! என எளித்தல் நோக்கால் விளித்தாள் தாரை. இராவணனுடைய பொறுமையின்மையும் இங்ஙனம் விளிக்கக் காரணம் ஆயிற்று. உயர்சிவபூசை என்றது, தேவர் யாரினும் உயர்ந்த சிவனை நோக்கிய பூசையை. பூசையில் இருத்தல் என்றது பூவும் நீருங் கொண்டு சிவன் திருமேனிக்குப் பூசை செய்து விட்டுப் புருவ நடுவில் இறைவனை நிறுத்தித் தியானித்திருத்தல். எய்தினன் நோக்கினுன் என்பது முற்றெச்சம். எய்தி நோக்கினுன் என்பதே பொருள். (சு)

தியானத்திலிருந்த வாலியை இராவணன் கட்டிட எண்ணுதல்

609. மேருவை யொக்கு மேனியன் விளங்கும்
விரிகிதிர் பரப்பிவந் துதிக்கும்
சூரிய னெக்கு மு.கத்தினன் கடலைச்
சுராசுரர்க் கமிழ்தெழக் கடைந்த

வீரிய னறியான் பரவச ளுகி
விழிமுகிழ்த் திருந்திட விதுவே
காரிய மிவனைக் கட்டுவ னென்னக்
கருதினன் கருமனத் தரக்கன்.

மேருவை ஒக்கும் மேனியன் – விளங்கும்
விரிகதிர் பரப்பிவந்து உதிக்கும்
சூரியன் ஒக்கும் முகத்தினன் – கடலைச்
சுராசுரர்க்கு அமிழ்து எழக்கடைந்த
வீரியன், அறியான் பரவசன் ஆகி
விழிமுகிழ்த்து இருந்திட, இதுவே
காரியம் இவனைக் கட்டுவன் என்னக்
கருதினன் கருமனத்து அரக்கன்.

பொ: மேருமலையை ஒக்கும் தோற்றமும் நிறமும் பெற்ற மேனியையுடையவனுய்ப் பொருள்கள் விளங்குதற்குக் காரணமான விரிந்த கிரணங்களைப் பரப்பிக்கொண்டு குணதிசைக் குன்றில் உதிக்கின்ற சூரியனை ஒக்கின்ற முகத்தினனுய்த் தேவர்க்கும் அசுரர்க்கும் ஈயும் பொருட்டுப் பாற்கடலை அமிழ்து எழுமாறு கடைந்த வீரனுகிய வாலி, வேறு ஒன்றையும் அறியானுகித் தன் வயம் இழந்து பரவசனுய்க் கண்களை மூடிக்கொண்டு தியானத்தில் இருந்திட, வஞ்சகத்தால் கருத்த மனமுடைய இராவணன், இப்போது யான் செய்யத்தக்க காரியம் இதுவே! இவ்வாலியைக் கட்டுவேன் என்று கருதினுன்.

கு: மேருமலை போன்ற பருவுடம்பும் பொன்னிறமும் உடைமை பற்றி மேருவை யொக்கும் மேனியன் என்ருர். சிவ பிரானைப் புருவ நடுவில் வைத்துத் தியானிக்கும்போது ஏற்படும் சிவானுபவ முதிர்ச்சியில் வாலியின் முகம் உதயசூரியன் போல ஒளிவீசிக் கொண்டிருந்ததை உணர்த்துவாராய் 'விளங்கும் விரி கதிர் பரப்பி வந்துதிக்கும் சூரியன் ஒக்கும் முகத்தினன்' என்ருர். வாலியின் பேராற்றலைப் புலப்படுத்த கடலைச் சுரா சுரர்க்கு அமிழ்து எழக் கடைந்த வீரியன் என்ருர். சுர அசுரர் என்பது

தீர்க்க சந்தியால் சுராசுரர் எனப் புணர்ந்து நின்றது. தேவர் களாலும் அசுரர்களாலும் கடைய முடியாத நிலையில் சென்று அவர் பொருட்டுப் பாற்கடலைக் கடைந்து அமுது எழச் செய்த வீரியமுடையவன் வாலி என்றவாறு. சிவபூசையில் சிவனையன்றி வேறொன்றையும் அறியாதவனுத் தன்வயம் இழந்து பரத்தின் வயமாகிக் கண்களை மூடிக்கொண்டிருந்த வாலியின் அமைதி நிலைபைப் புலப்படுத்த அறியான் பரவசனுகி விழி முகிழ்த்து இருந்திட என்றுர். கருமனத்து அரக்கன் என்றது கருத்துடையடைகொளியணி. சிவபூசையில் இருப்பவனைக் கட்ட லாகாது எனக் கருதாதது. கருமனத்தால் நிகழ்ந்தது என்றவாறு. (எ)

இராவணன் வாலியைப் பற்றுதல்

610. அவ்விடை யவன்றன் கண்விழித் தந்த
வரக்கனை யறிந்தறி யான்போல்
தெவ்விடை வெம்போர்த் திறன்மிகு வாலி
திரியவுங் கண்முகிழ்த் திருப்ப
இவ்விடை யிவனைக் கட்டுவெ னென்று
விராவண னுழைபுலி யெனவும்
வெவ்விடை யொதுங்கி வருகின்ற தெனவு
மெள்ளவந் தவனையே பற்ற.

அவ்விடை அவன்தன் கண்விழித்து அந்த
அரக்கனை அறிந்து அறியான்போல்
தெவ்விடை வெம்போர்த் திறன்மிகு வாலி
திரியவும் கண்முகிழ்த்து இருப்ப,
இவ்இடை இவனைக் கட்டுவென் என்று
இராவணன் உழைபுலி எனவும்
வெவ்விடை ஒதுங்கி வருகின்றது எனவும்
மெள்ளவந்து அவனையே பற்ற.

பொ: அவ்விடத்து அவ்வாலி தனது கண்விழித்துப் பார்த்து வந்தவனுகிய அரக்கனை அறிந்துகொண்டு அறியாதிருப்பவன்போல நடித்துப் பகைவரிடத்துக் கொடிய போர் செய்யும் வலிமை மிக்க

வாலி, மீண்டும் கண்ணை மூடிக்கொண்டிருப்ப, இராவணன் இவ்விடத்து இவ்வாலியைக் கட்டுவேன் என்று மானைப்பிடிக்கச் செல்லும் புலிபோலவும் கொடிய எருது விரைந்து நடவாமல் ஒதுங்கி வருகின்றது என்னும் படியும் மெல்லெனப் பின்னால் ஒளிந்து வந்து அவ்வாலியைப் பற்ற.

கு: அமைதியாகச் சிவபூசையிலிருக்கின்ற வாலியின் செவியில் இராவணன் வருகின்ற காலடி ஓசை கேட்டவுடன் சிறிது கண் திறந்து பார்த்து, வந்தவன் இராவணன் என்பதை அறிந்துகொண்டவுடன் அறியாதவன்போல நடித்து மீண்டும் கண்மூடிக் கொண்டிருந்தான் என்பதும், இராவணன் வாலியின் நடிப்பை உண்மையெனக் கருதி மெல்லவந்து வாலியைப் பற்றினான் எனவுங் கொள்க. அறியான்போல் கண்முகிழ்த்திருப்ப என்பதனால் வாலி பொய்யாக நடித்தான் என்பது புலனாகும். திரியவும் – மீளவும். திறமையற்றவர்கள் செய்யத்தக்க செயலை வாலி செய்தது விளையாட்டின் பொருட்டே என்பது புலப்பட, தெவ்விடை வெம்போர்த் திறன்மிகுவாலி என அவன் போர்வலியைச் சிறப்பித்தவாறு. முகிழ்த்தல்–மூடுதல். கண் முகிழ்த்திருப்ப என்ற செயவெனெச்சம் 'அவனையே பற்ற' என்று பிற கருத்தாவின் வினை கொண்டது. உழை-மான். உழை புலியெனவும் என்றது, மானைப் பிடிக்கச் செல்லும் புலி போலவும் என்றவாறு. புலியும் விடையும் இராவணனுக்கு உவமையாக வந்தன. வீறு தோன்ற நடக்கும் புலி, மானைப் பிடிக்கும்போது அம்மானறிந்து தப்பிச் செல்லாதபடி மெல்லென ஒதுங்கிச் செல்வது போலவும், கொடிய ஆனேறு வீறு நடைவிடுத்து மெல்லென ஒதுங்கி வருவது போலவும், இராவணன் தனது ஏறு நடையை விடுத்து வாலியின் பின்னால் மெல்லென ஒதுங்கிச் சென்று பற்றிட என்க. (அ)

### இராவணனை வாலினால் கட்டிக்கொண்டு வாலி மேல் கடற்குப் பாய்தல்

611. வெய்யவா ளரக்கன் கையிரு பதினால்
வீக்கவும் விறன்மிகு வாலி
கய்யினா லவனை நெருக்கென விறுக்கி
வாலினாற் கடிதுறக் கட்டி

மய்பணி கண்டன் பூசனை முடித்து
வாலிடை யிராவணன் றூங்கப்
பய்யரா வதனைக் கவ்விவிண் படரும்
கருடனின் மேற்கடல் பாய்ந்தான்.

வெய்ய வாள் அரக்கன் கைஇருபதினுல்
வீக்கவும், விறல்மிகுவாலி
கய்யினுல்அவனை நெருக்கென இறுக்கி,
வாலினுல் கடிதுறக் கட்டி
மய்யணி கண்டன் பூசனை முடித்து
வாலிடை இராவணன் தூங்க,
பய்யரா அதனைக் கவ்வி விண்படரும்
கருடனின் மேற்கடல் பாய்ந்தான்.

பொ: கொடிய வாலினையுடைய இராவணன் இருபது கைகளாலும் பிடித்துக் கட்டவும் வெற்றிமிக்க வாலி, தன் இருகையாலும் அவ்விராவணனை நெருக்குறுமாறு இறுக்கிப் பிடித்துப் பின்பு வாலினுல் விரைவாகக் கட்டிவிட்டு மையணிந்தது போன்று தோன்றும் நீலகண்டனுகிய சிவபிரானின் பூசனையை முடித்துக்கொண்டு, வாலினிடத்து இராவணன் கட்டுண்டு தொங்கிக்கொண்டு வரப் படத்தினையுடைய பாம்பினைக் கவ்விக்கொண்டு விண்ணில் பறந்து செல்லும் கருடனைப்போல மேல்கடலில் பாய்ந்தான்.

கு: வெய்ய என்ற முதலடி எதுகைக் கேற்ப, கை, மை, பை என்பன போலியாய்க் கய், மய், பய் என வந்தன. மேலைச் செய்யுளில் பற்ற என்றதற்கு விளக்கம் கூறுவாராய்க் 'கையிருபதினுல் வீக்கவும்' என்ருர். இதனுல் இராவணன் தன் இருபது கைகளாலும் வாலியை இறுகப்பற்றிக் கட்டினன் என்பது புலனும். அவன் கட்டுவதற்குள் வெற்றிமிக்க வாலி தன் இருகையினுலேயே அவனை நெருக்குற இறுக்கிப் பிடித்துக்கொண்டு வாலினுல் விரைந்து கட்டினுன் என்றும் வாலினுல் கட்டுண்ட இராவணன் கிடக்க வாலி தன் பூசையை முடித்துக்கொண்டு விண்வழித் தாவி மேல்கடலுக்குச் சென்ருன் என்றும், பத்துத்தலைகளையுடைய

இராவணன் வாலில் தொங்காநிற்க, வாலி விண்வழிச் செல்லும் தோற்றம், படத்தினையுடைய பாம்பினைக் கவ்விக்கொண்டு பறக்கும் கருடனைப் போலக் காணப்பட்டதென்றும் கொள்க. வெய்யவாள் என்றது சிவபிரான் கொடுத்த வாளினை. வரத்தால் பெற்ற வாள் இராவணன் கையிலிருப்பவும் அதற்கு அஞ்சாது வாலி தன் இருகைகளால் இறுக்கிப் பற்றினுன் என்பது இதனுல் புலனுயவாறு. பையராப் போன்றவன் இராவணன், கருடனைப் போன்றவன் வாலி என்க. கருடனின் என்புழி இன் உவமஉருபு. பாம்பும் கருடனும் போன்றன இராவணனும் இராவணனைக் கட்டிய வாலும் வாலியும் என்றமையால் இது இரட்டையுவமம் ஆதல் அறியலாம். (சு)

மகோதரன் முதலியோர் வாலியைத் தொடர்தல்

612. வன்பெல வாலி வல்விசைப் பாய
மற்றவன் மெய்விசைக் காற்ருல்
முன்புள மலையு மரங்களு முறிந்து
முன்புசென் றனமுரண் சேராப்
பின்புள வவையும் பறிந்துபின் சென்ற
பெருவலி மகோதரன் முதலாம்
அன்புடை யமைச்ச ரரசனை மீட்பா
னடன்மிகு வாலிபின் ருெடர்ந்தார்.

வன்பெல வாலி வல்விசைப்பாய
மற்றவன் மெய்விசைக் காற்ருல்
முன்புஉள மலையும் மரங்களும் முறிந்து
முன்பு சென்றன, முரண் சேராப்
பின்புஉள அவையும் பறிந்து பின்சென்ற,
பெருவலி மகோதரன் முதலாம்
அன்புடை அமைச்சர் அரசனை மீட்பான்
அடல்மிகு வாலிபின் தொடர்ந்தார்.

பொ: மிகுவலி படைத்த வாலி, வல்விசையோடு பாய்ந்கு செல்ல அவன் உடம்பு வேகத்தால் உளதான காற்ருல் அவனுக்து முன்பு இருக்கும் மலேயும் மரங்களும் முறிந்து அவனுக்கு முன்பு சென்றன. நின்றபடி நிற்றற்குரிய வலிமையில்லாது அவன் பின்பு இருக்கும் மலேகளும் மரங்களும் வேர் பறிந்து அவன் பின்னே சென்றன. பெரிய வலிமையுடைய மகோதரன் முதலிய அன்புடைய அமைச்சர்கள் தம் அரசனுகிய இராவணனே மீட்கும் பொருட்டு ஆற்றல்மிக்க வாலியின் பின்னே தொடர்ந்து சென்ருர்.

கு: பெலம் - பலம். வன்பெலம் என்பது மீமிசைச்சொல் விசையோடு பாய என உருபு விரிக்க. வாலி வல்விரைந்து பாய்ந்து. செல்லும் போது அவன் உடம்பு வேகத்தால் உளதான காற்ருல் அவனுக்து முன்னே இருக்கும் மலேகளும் மரங்களும் முறிந்து முன்னே சென்றன எனவும் அவனுக்குப் பின்னே இருந்த மலேகளும் மரங்களும் வேர் பறிந்து அவன் பின்னே சென்றன எனவும் கொள்க. சென்ற என்பது அன்பெருத அகரவீற்று முற்று. பறிதல் – வேர் அற்று மேலெழுதல். இங்கு அனுமன் இலங்கைக்குத் தாவிச் செல்லும்போது நிகழ்ந்ததை நினேவுகூர்தல் தகும். 'ஊழிக்காலின் வள்ளுகிர் வீரன் செல்லும் விசைபொரு மறுகி வாரி, தள்ளிய திரைகள் முந்துற் றிலங்கைமேற் றவழ்ந்த மாதோ' (சுந்தர – கடருவுபடலம் 23) என்றது காண்க வாலி செல்லும் வழியில் முன்னிருக்கும் மலேயும் மரங்களும் முன் சென்றது போலவே அவன் பின்னிருந்த வலிமையில்லாத மலே யும் மரங்களும் அவனேப் பின் தொடர்ந்து சென்றன. வாலியின் இயக்கம் முன்புள்ளவற்றையும் இயங்கச் செய்தன என்றவாறு.

(கவ)

வாலியின் காற்ருல் மகோதரன் முதலோர் வலியிழந்து வீழ்தல்

613. தாழ்வில்போ ராற்றற் றடவரைப் புயத்தோர்
தரியலர் மடங்கிட வமரில்
சூழுமா மாயை யரக்கர்தம் விசையாற்
ருெடரவொண் றிறலமர் தொலேயாப்

பாழிமா வாலி பாய்ந்திட வவன்றன்
பருவரை மெய்விசைப் பின்செல்
ஊழிமாருதமே கொண்டுபோய் அலைப்ப
வுரனழிந் தனைவரும் வீழ்ந்தார்.

தாழ்வுஇல் போர் ஆற்றல் தடவரைப் புயத்தோர்,
தரியலர் மடங்கிட அமரில்
சூழும் மாமாயை அரக்கர் தம் விசையால்
தொடர ஒண்திறல் அமர் தொலையாப்
பாழி மாவாலி பாய்ந்திட அவன் தன்
பருவரை மெய்விசைப் பின்செல்
ஊழிமாருதமே கொண்டு போய் அலைப்ப,
உரன் அழிந்து அனைவரும் வீழ்ந்தார்.

பொ: யார்க்கும் தாழ்தல் இல்லாத போர் செய்யும் ஆற்றலை யுடைய பெரிய மலைபோன்ற தோள்களையுடையவர்களாய், பகைவர் பின்னிடுமாறு போரில் சூழ்ச்சிசெய்யும் பெரிய மாயையில் வல்லராய அரக்கர்கள், தம் வேகத்தால் வாலியைப் பின்தொடர, சிறந்த திறமையோடு செய்யும் போரில் தோல்வியுறுத வலிமையிற் சிறந்த வாலி பாய்ந்து செல்ல, அவனுடைய பருத்த மலைபோன்ற உடம்பின் வேகத்திற்குப் பின் செல்கின்ற ஊழிக்கடைக் காற்றே அவரைக் கொண்டுபோய் வருத்த, வலிமையிழந்து மகோதரன் முதலிய அனைவரும் வீழ்ந்தார்கள்.

கு: புயத்தோராகிய அரக்கர், தரியலர் மடங்கிட அமரில் சூழும் மாமாயை அரக்கர் என்க. மகோதரன் முதலியோர் வாலியின் பின்னால் தம் மன்னனை மீட்பதற்குத் தம் விசையால் தான் தொடர்ந்தார்கள். ஆனால் வாலியின் பருவரை மெய்விசைப் பின் செல் ஊழிக் காற்றே அவரைக் கொண்டு போய் அலைத்தது; அதனால் அவர்கள் வலியிழந்து அனைவரும் வீழ்ந்தார்கள். வாலியின் உடம்புக் காற்றால் மலைகளும் மரங்களுமே பின் தொடர்ந்து சென்றன என்றால், மகோதரன் முதலியோர் தம் விசையால் எப்படிச் செல்லவியலும்? எனத் தோன்றும் ஐயத்தை

அகற்றியவாறு. வாலி அலைக்க வேண்டாது அவன் உடம்பில் எழுந்த காற்றே அலைத்திட அவர்கள் அனைவரும் வீழ்ந்தனர் என்றவாறு. மகோதரன் முதலிய அரக்கர் தம் பெருமையை, தாழ்வில் போராற்றல் தடவரைப்புயத்தோர் எனவும் தரியலர் மடங்கிட அமரில் சூழும் மாமாயை அரக்கர் எனவும் புகழ்ந்து கூறி, அவர் தடவரைப் புயமும் சூழுமாமாயையும் வாலியின் உடம்பில் எழுந்த காற்றுக்கு எதிர் நிற்கவியலாமல் ஊழிக் காற்றுப் போன்ற அக்காற்றால் அலைப்புண்டு வலியிழந்து வீழ்வாராயினர் என வாலியின் வலிமையைப் புலப்படுத்தியவாறு. ஒண் திறல் அமர் தொலையாப் பாழிமாவாலி என்பது வாலியின் பெருமை. பாழி – வலிமை. பாழிமாவாலி – வலிமையுடைய பெரிய வாலி. பருவரை மெய் என்றது உவமத்தொகை. பருத்த மலை போன்ற உடம்பு என்க. வாலி உடம்பின் விசையால் எழுங்காற்று பெருவலி யுடையதாகலின் அதனை ஊழி மாருதமாக உருவகஞ் செய்தவாறு. கடையூழியில் தோன்றும் பெருங்காற்று உலகை யழித்திடும். இங்கு வாலிக்குப்பின் செல்லும் ஊழிமாருதம் அரக்கரை வீழ்த்தியது என்றவாறு. (கக)

### வாலி பாய்ந்து சென்ற வழி (12–15)

614. பாரத வருடம் பரந்த யோசனைக
ளொன்பதி னுயிரம் பாய்ந்து
நீரத முயங்கு நெடுந்தட விமய
நிலையிரண் டாயிர நீங்கிச்
சீரதமுடைய சிறந்த கிம்புருட
மொன்பதி னுயிரந் தீர்ந்தாங்
கேரணி யேமகூடமோ ரிரண்டா
யிர நிலை யிமைப்பினிற் பாய்ந்து.

**பாரத வருடம் பரந்தயோசனைகள் ஒன்பதினுயிரம் பாய்ந்து நீரதம் முயங்கும் நெடுந்தட இமயம் நிலைஇரண்டாயிரம் நீங்கி, சீரதம் உடைய சிறந்த கிம்புருடம் ஒன்பதின் ஆயிரம் தீர்ந்து ஆங்கு ஏரணி எமகூடம் ஓரிரண்டாயிரம் நிலை இமைப்பினிற் பாய்ந்து.**

பொ : பாரத தேசம் பரவியுள்ள ஒன்பதினாயிரம் யோசனை களைக் கடந்து மேகங்கள் தழுவியுள்ள நீண்ட பெரிய இமயம் நிலத்துள்ள இரண்டாயிரம் யோசனைத் தொலைவைக் கடந்து, சிறப்புள்ள இரதங்களைத் தன் பாற்கொண்ட சிறந்தகிம்புருட தேசம் ஒன்பதினாயிரம் யோசனைத் தொலைவைக் கடந்து அவ் விடத்து அழகுமிக்க ஏமகூட மலை இரண்டாயிர யோசனை வழியை இமைநேரத்தில் கடந்து.

கு : பாய்ந்து, நீங்கி, தீர்ந்து, பாய்ந்து என்பன கடந்து என்ற ஒருபொருள் குறித்து வந்தன. குளகம் 14 ஆம் செய்யுளில் முடிவுறும். நீரதம் – மேகம். மேகங்கள் தவழ்கின்ற இமயம் என்க. இச்செய்யுளில் இருபத்திரண்டாயிரம் யோசனைத் தொலைவு வாலி கடந்து சென்றதைக் குறிப்பிட்டவாறு. நாவலந்தீவினையாண்டு வந்த அங்கிநீரன் என்னும் அரசன் தன் பிள்ளைகள் ஒன்பதின்மர் பேரால் நாவலந்தீவைப் பகிர்ந்து கொடுத்துப் பெயரும் சூட்டினன். முதன் மகன் பரதன், அவனுக்குக் கொடுத்த தேசம் பாரத தேசம். கிம்புருடன் இரண்டாம் மகன். அவனுக்குக் கொடுத்த தேசம் கிம்புருடகண்டம். இதனைக் கந்தபுராணம் அண்டகோசப் படலத்தில் 22ஆம்செய்யுளால் அறியலாம். கிரும்புருட கண்டத்தில் உள்ளோர் கல்லாலின் கனியை உண்பவர்கள், ஆதலின் சீரத முடைய சிறந்த கிம்புருடம்' என்றார்' ரசம், ரதம் எனவரும்; சீரான கல்லாலங்கனியின் ரசத்தை உண்பவர் தங்கியுள்ள கிம்புருடம் எனப்பொருள் கொள்ளலாம். ஏமகூடம் என்பது மலையின் பெயர். (கஉ)

### மேல்கடல் சார்தல்

615\. பொன்னரி வருடம் பொருந்து மோசனைக
ளொன்பதி னாயிரம் போக்கித்
தன்னிலை யிரண்டா யிரமுடை நிடதம்
தாவிமே லலைகடல் சார்ந்து

பின்னரன் பூசை விதிமுறை முடித்துப்
பெருகுநீ ரிரமிய வருடம்
ஒன்னலர் காலன் வாலியோ சனைக
ளொன்பதி னுயிர மொழிந்து.

பொன்னரி வருடம் பொருந்தும் ஓசனைகள்
ஒன்பதினுயிரம் போக்கித்
தன்நிலை இரண்டாயிரம் உடை நிடதம்
தாவி மேல் அலைகடல் சார்ந்து
பின் அரன்பூசை விதிமுறை முடித்துப்
பெருகுநீர் இரமியவருடம்
ஒன்னலர் காலன் வாலி யோசனைகள்
ஒன்பதினுயிரம் ஒழிந்து.

பொ : பொன்மயமான அரிவருடம் என்றதேயம் பொருந்தியுள்ள ஒன்பதினுயிரம் யோசனைகளைப் பின் தள்ளிச் சென்று பின்பு தன் பரப்பு நிலை இரண்டாயிரம் யோசனையுடைய நிடதம் என்னும் நாட்டைக் கடந்து மேற்குக்கடலை அடைந்து பின்பு சிவபூசையை விதிமுறையால் செய்து முடித்துவிட்டுப் பகைவர்க்கு எமன்போன்ற வஞகிய வாலி, பெருகிய சிறப்பினையுடைய இரமிய வருடம் என்னும் தேயத்திற்குரிய ஒன்பதினுயிரம் யோசனைத் தொலைவைக் கடந்து.

கு : அரிவருடம் என்பது ஒரு தேசத்தின் பெயர், 'அம்புவியின் நிடதமுதல் ஏமங்காறும் அரிவருடம்' (கந்தபு – அண்டகோசப்–37) என்பது காணலாம். நிடதம் என்பது அரிவருடத்தின் உட்பிரிவு, நிடத தேயத்தின் பரப்பு இரண்டாயிரம் யோசனையாகும். இது மேலைக்கடலைச் சார்ந்துள்ள பகுதி எனக் கொள்ளலாம். 'நிடதம் தாவி மேலைக்கடல் சார்ந்து' என்றதால் இது புலனும். நிஷதம் என்னும் வடசொல் நிடதம் என இங்கு வந்துள்ளது. நிசதம் எனவும் இச்சொல் பயின்றுவரும். இரமியம் என்பது சுவேத மலைக்கும் நீலமலைக்கும் நடுவண் இருப்பது, சுவேத நீல நெடுங்கிரியின் நடுவண் இருப்பது' (கந்தபு – அண்டகோசப் –37)

என்பதால் இது புலனும். போகி, ஒழிந்து என்பன கடந்து என்னும் ஒருபொருள் குறித்து வந்தன. ஒன்னலர் – பகைவர். ஒன்னலர் காலன் என்பது பகைவர்க்கு எமனைப் போன்று அஞ்சத்தக்கவன் என்னும் பொருளது. வாலிக்கு அடை. ஒழிந்து என்ற எச்சம் 15–ஆம் செய்யுளில் முடியும், குளகம். மேல்கடல் அடைய வாலி தாண்டிச் சென்ற தொலைவு முப்பத்திரண்டாயிரம் யோசனையாகும். ஒருயோசனை என்பது ஒன்பது கல் தொலைவு. (கரு)

### வடகடல் அடைதல்

616. நீலமால் வரையீ ராயிர நீங்கி
   நின்றொளிர் இளாவிருத வருடம்
மேலுயர் சுவேத மோசனை பதினோ
   ராயிரம் விரைவினிற் பாய்ந்து
கோலநீள் குருவஞ் சிருங்க முன்சொன்ன
   வளவுபோய் வடகடல் குறுகி
ஆலமா மிடற்றோ னடியிணை பேணி
   யங்கிருந் தருச்சனை முடித்து.

நீலமால் வரைஈ ராயிரம் நீங்கி
   நின்றுஒளிர் இளாவிருத வருடம்
மேலுயர் சுவேதம் ஓசனை பதினோராயிரம்
   விரைவினிற் பாய்ந்து
கோல நீள் குருவம் சிருங்க முன்சொன்ன
   அளவுபோய் வடகடல் குறுகி
ஆலமா மிடற்றோன் அடியிணை பேணி,
   அங்கு இருந்து அருச்சனை முடித்து.

**பொ :** நீலமலை என்கின்ற பெரிய மலைக்குரிய இரண்டாயிரம் யோசனை கடந்து, நிலைபெற்று விளங்குகின்ற இளாவிருத தேசம், மேலுயர்ந்து விளங்கும் சுவேதமலை இவற்றின் பரப்பாகிய பதினோராயிரம் யோசனைத் தொலைவு விரைவாகப் பாய்ந்து கடந்து, அழகுமிக்க குருவம் என்ற தேயத்தையும் சிருங்கம்

என்கின்ற மலையையும் முன்சொன்ன அளவாகிய பதினோராயிரம் யோசனைத் தொலைவு சென்று கடந்து, வடகடலை அடைந்து நஞ்சினை அடக்கிய கரிய கண்டத்தினையுடைய சிவபிரானின் திருவடியிரண்டையும் போற்றி அவ்விடத்திருந்து அருச்சனை செய்து முடித்துவிட்டு.

கு: மேலைக்கடலில் சிவபூசை செய்த வாலி அங்கிருந்து வடகடலைஅடைதற்கு நடுவே இரமியம், நீலமலை, இளாவிருத கண்டம் சுவேதமலை குருவம், சிருங்கம் என்ற நாடுகளையும் மலைகளையும் கடக்க வேண்டியிருந்தது என்றவாறு. இரமியம், இளாவிருதம், குருவம் என்பன தேயங்கள். நீலமலை, சுவேதமலை, சிருங்கம் என்பன மலைகள் மேல் கடலிலிருந்து வடகடல் வந்தடைய முப்பத்து மூன்று ஆயிரம் யோசனைகள் வாலி கடந்து சென்றான் என்றவாறு. முடித்து என்னும் எச்சம் வருஞ்செய்யுளில் கிட்கிந்தை புகுந்தான் என்ற வினையோடு முடியும் பேணுதல் – போற்றுதல். 'ஏற்ற விமம் வடபால் நீலம் சுவேதம் இயற்சிருங்கம்' (கந்தபுரா– அண்டகோசப் 34) என்று கூறியுள்ளதால் இவை இமயமலைக்கு வடபால் உள்ள மலைகள் என்பது புலனும். இந்த அமைப்பிற் கேற்ப 'கோலநீள் குரவஞ் செருந்தி' என்ற பாடம் அமையவில்லை. குரவம் என்பது குருவம் என ஆழவார்திருநகரிப் பதிப்பில் உள்ளது. அதுவே பொருந்திய பாடமாகும். இமயமலையின் வடபால் குருவம் என்ற தேயம் இருக்கின்றது. அனுமன் மருத்து மலையை யெடுக்கச் சென்றபோது இந்தத் தேயத்தைப் பார்த்த தாகக் கம்பர் கூறியுள்ளார். 'வள்ளல் உத்தர குருவையுற்றான், (மருத்துமலைப் – 54) எனவருதல் காணலாம். உத்தரகுரு குருவம் எனவும் கூறப்படும். சிருங்கம் என்ற மலையின் பெயரையே ஏடு எழுதுவோர் சுருங்கி எனவும் செருந்தி எனவும் பிழைபட எழுதினார்போலும். (கசு)

வாலி கிட்கிந்தை புகுதல்

617. மேற்கட லோடு வடகடலுள்ள
யோசனை விரைந்துபோய்க் கீழை
மாற்கட லெய்தி வளர்சடை யோனை
மகிழ்ந்துவ ணிருந்துபூ சித்தும்

மேற்கட லோடு தென்கட லுள்ள
யோசனை விசையொடு பாய்ந்து
போர்க்கடல் வாலி புனைமணி மாடப்
பொன்னகர்க் கிட் கிந்தை புகுந்தான்.

மேற்கட லோடு வடகடல் உள்ள
யோசனை விரைந்துபோய்க் கீழை
மாற்கடல் எய்தி வளர்சடை யோனை
மகிழ்ந்தவ ணிருந்து பூசித்தும்
மேற்கட லோடு தென்கட லுள்ள
யோசனை விசையொடு பாய்ந்து
போர்க்குஅடல் வாலி புனைமணி மாடப்
பொன்னகர்க் கிட்கிந்தை புகுந்தான்.

பொ: மேலைக்கடலோடு வடகடலுக்குள்ள யோசனைகளின் தொலைவினை விரைந்து கடந்து கீழ்த்திசையிலுள்ள கருங்கடலை அடைந்து வளர்ந்த சடையினையுடைய சிவபிரானை அவ் விடத்திலிருந்து மகிழ்ந்து பூசித்துப் பின்பு மேல்கூறிய கீழ்கடலோடு தென்கடலுக்குள்ள யோசனைகளை விசையோடு பாய்ந்து கடந்து போர் செய்தற்கேற்ற வலிமையை யுடைய வாலி, மணிகளைக் கொண்டு அழகு செய்யப்பெற்ற அழகிய நகரமாகிய கிட்கிந்தையில் புகுந்தான்.

கு: மாற்கடல் என்றது கருங்கடல் என்னும் பொருளது. மால் – கருமை. அவணிருந்து மகிழ்ந்து பூசித்து என இயையும். 'மேற்கடலோடு தென்கடல்' என்புழி, மேலே கூறிய கீழ் கடலோடு என்ற பொருளில் மேற்கடல் வழங்கப்பட்டுள்ளது. போர்க்கு போர் செய்வதற்கேற்ற என்க. அடல் – வலிமை. போர் செய்தற்குரிய வலிமையுடைய வாலி போர் செய்யாமலே இராவணனைக் கட்டிய வாலினோடு நாற்கடலினும் சென்று சிவனைப் பூசித்துக் கிட்கிந்தையை அடைந்தான் என்றவாறு. மேல் மூன்று அடிகளிலும் றகர வொற்று எதுகையாக வந்துளது. நான்காமடி மட்டும் ரகரவொற்றினை எதுகையாக அமைத்துள்ளார்

ஆசிரியர். இது றகர ரகரம் என்ற ஒற்றுமை கருதி வந்தது போலும். (கடு)

வாலி தாரையின் வேண்டுகோளின்படி இராவணனை விடுதல்

618. ஆங்கவன் வரக்கண் டகமகிழ் தாரை
யவனெடு வாலிடைக் கிடந்து
தூங்கிய வரக்கன் றன்றுயர் கண்டு
துறுகழல் வாலியை நோக்கி
ஈங்கிவன் யாவ னிவனைநீ போக
வினிவிடு கெனமன மிரங்கித்
தேங்கமழ் குழலி செப்பிட விடுத்துத்
தீயவன் றனக்கிவை செப்பும்.

ஆங்கு அவன் வரக்கண்டு அகமகிழ்தாரை
அவன் நெடுவாலிடைக் கிடந்து
தூங்கிய அரக்கன் தன் துயர் கண்டு
துறுகழல் வாலியை நோக்கி
ஈங்கு இவன் யாவன்? இவனை நீ போக
இனிவிடு(க) என மனம் இரங்கித்
தேம்கமழ் குழலி செப்பிட விடுத்துத்
தீயவன் தனக்கு இவை செப்பும்.

பொ: அவ்விடத்து அவ்வாலி வரக்கண்டு மனமகிழ்ந்த தாரை அவ்வாலியின் வாலில் கிடந்து தொங்கிக் கொண்டுள்ள இராவணனாகிய அரக்கன்தன் துயரைக் கண்டு வலிய வீரக் கழலையுடைய வாலியைப் பார்த்து 'இங்குள்ள இவன் யார்? இவனை நீ இனிப் போகவிடுக' என்று மனம் இரங்கித் தேன்மணக்கும் கூந்தலையுடைய தாரை சொல்ல, அவ்விராவணனை விடுத்துவிட்டு அந்தக் கொடியவனாகிய இராவணனுக்கு இவற்றைச் சொல்லுவானானான்.

கு: நாற்கடற் கரையிலும் அமர்ந்து சிவபூசை செய்து வரும் வாலியைப் பார்க்கும் போது தாரை மனமிக மகிழ்ந்தவள், அவ்

வாலியின் வாலில் தொங்கித் துன்புறும் இராவணனைப் பார்க்கும் போது இரக்கமும் கொண்டாள் என்க. தூங்குதல் - தொங்குதல். துறுகழல்—வலிய வீரக்கழல். வீரக்கழலணிந்து தன் வீரத்தைப் புலப்படுத்தும் வாலியின் பெருமைக்கு இராவணனை வாலில் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு நாற்றிசையும் சென்று வருதல் ஏற்ற தன்று என்ற குறிப்புத் தோன்ற துறுகழல் வாலியை நோக்கி என்றார். இனிப்போக விடு என்றது இதுகாறும் அவன் பட்ட துயர் போதும் இனி விட்டுவிடுக என மனம் இரங்கிக் கேட்டுக் கொண்டவாறு. பெண்ணின் இரக்கவுணர்வு இதனால் புலனாகும். தேன்கமழ் என்பது எதுகை நோக்கித் தேங்கமழ் எனத் திரிந்து நின்றது. இராவணனுக்கு வாலி செப்பியது வரும் செய்யுளில் காணலாம். (கசு)

வாலியொடு போர் செய்ய வந்ததை இராவணன் இயம்பல்

619. பிஞ்ஞகன் பூசை பேணுதல் வேண்டிப்
பெருங்கட றொறுஞ் செலப்பாயும்
அந்நிலை யதனி லரக்கனீ வந்த
காரிய மறிந்திலே னரக்கா
வென்னிடை வந்த காரண மதனை
விளம்பென விராவணன் இயம்பும்
உன்னொடு பொருவான் வந்தகப் பட்டே
னுண்மையீ தெனவவ னுரைக்கும்.

பிஞ்ஞகன் பூசை பேணுதல் வேண்டிப்
பெருங்கடல் தொறும் செலப் பாயும்
அந்நிலை அதனில் அரக்கன்நீ வந்த
காரியம் அறிந்திலேன், அரக்கா!
என்இடை வந்தகாரணம் அதனை
விளம்பு என இராவணன் இயம்பும்
உன்னொடு பொருவான் வந்து அகப்பட்டேன்
உண்மைஈது என அவன் உரைக்கும்.

பொ: பிஞ்ஞகம் என்னும் தலையணியை அணிந்துள்ள சிவ பிரான் பூசையை விரும்பிச் செய்தல் வேண்டிப் பெரிய கடல் தொறும் செல்லுதற்காகப் பாயும் அந்த அவசர நிலையில் அரக்க னுகிய நீ வந்த காரியத்தை அறிந்து கொள்ளவில்லை, அரக்கனே! நீ என்னிடம் வந்த காரணத்தைச் சொல்லுக என வாலி கேட்க, இராவணன் சொல்லுவான் 'உன்னேடு போர் செய்வதற்காகவே வந்து அகப்பட்டுக் கொண்டேன், இது உண்மையாகும்' என்று சொல்ல, வாலி சொல்லுவான்.

கு: பிஞ்ஞகம் என்னும் தகட்டணியை அணிந்த காரணத் தால் சிவபிரான் பிஞ்ஞகன் எனப் பெயர் பெற்றுன். இச்செய்யுள் மெல்லின எதுகையால் வந்தது. பிஞ்ஞகன், அந்நிலை என்னிடை உன்னெடு என்பனவற்றில் இரண்டாம் எழுத்து மூன்று வகை யால் வந்துள. மூவகை யெழுத்துக்களேனும் மெல்லினம் என ஓரினமாக அடங்குதலின் இது மெல்லின எதுகை ஆயிற்று. விளம்புதல் இயம்புதல் இரண்டும் சொல்லுதல் என்னும் ஒரு பொருள் குறித்து வந்தவை. பொருவான் வந்து அகப்பட்டேன் என்றமையால் வருமுன் இராவணன் கொண்ட செருக்கும் வந்தபின் அவன் கண்ட நெருக்கும் புலப்படும், புனைந்துரை அன்று என்பான் உண்மையீது என்ருன். அவன் என்றது வாலியை.(௬எ)

### இராவணன் வாலியோடு தோழமை கொள்ளுதல்

620. மின்னெளிர் முடியாய் வென்றவர் தோற்பர்
தோற்றவர் வெல்வர்வெஞ் சமரில்
என்னெடும் பொருவா னிச்சையுண் டாயி
னிராவணு பொருதி யீண்டென்னக்
கன்னெடுந் தோளாய் கலங்கினென் வாலாற்
கட்டுண்டு பட்டது கிடக்க
இன்னமும் பொரவோ வினிச்செரு வமையு
மின்று நின் ரேழனு னென்ருன்.

மின்ஒளிர் முடியாய்! வென்றவர் தோற்பர்,
தோற்றவர் வெல்வர், வெம்சமரில்;
என்னொடும் பொருவான் இச்சை உண்டாயின்
இராவணா பொருதி ஈண்டு என்னக்
கல்நெடுந் தோளாய்! கலங்கினென், வாலால்
கட்டுண்டு பட்டது கிடக்க,
இன்னமும் பொரவோ? இனிச்செரு அமையும்
இன்று நின் தோழன் நான் என்றான்.

பொ: மின்னலைப் போன்று ஒளிவீசுகின்ற முடியை அணிந்தவனே! கொடிய போரில் வென்றவர் தோற்பர், தோற்றவர்கள் வெல்வார்கள், எனவே இராவணா! என்னோடு போர் செய்ய ஆசையிருந்தால் இப்பொழுது போர் செய்வாயாக! என்று வாலி சொல்ல, மலைபோன்ற தோளையுடையவனே! நின் வாலால் கட்டுண்டு கலங்கினேன், அப்போது பட்ட துன்பம் என் உடம்பிடை கிடக்கவும் இன்னமும் போர் செய்யவோ? இனிப் போர் வேண்டா அமையும்; இன்றுமுதல் நான் நின் தோழன் என்று கூறினான்.

கு: போரில் வென்றவர் தோற்றலும் தோற்றவர் வெல்லுதலும் இயல்பு என்பதை வாலி விளக்கி இராவணனைப் போர் செய்யச் சொல்லுதல். மின்னொளிர் முடியணிந்த கொண்டமையால் வெற்றி வாராது என்ற குறிப்புப் புலப்பட மின்னொளிர் முடியாய்! என விளித்தவாறு. தன்னொடு பொருவார் யாரும் தோல்வி காண்பதே இயல்பு. ஆகலின் எவரும் தன்னொடு போர் செய்ய ஆசைப்பட மாட்டார்கள் என்ற கருத்துத் தோன்ற 'என்னொடும் பொருவான் இச்சையுண்டாயின்!' என்றான். ஈண்டு என்றது இங்கு இப்பொழுது என்னும் இடமும் காலமும் குறித்து வந்தது. வாலியின் தோளின் வன்மை கண்டவன் ஆதலின்! கல்நெடுந் தோளாய் என அவனை விளித்தான். கலங்கினேன் எனத் தனியாகக் கொண்டு, வாலாற்பட்டது கிடக்க எனப் பிரித்து, வாலால் கட்டுண்டு பட்ட துன்பம் என்மெய்யின்கண் கிடக்கவும் இன்னமும் பொரவோ எனக் கூறியதாகக் கொள்ளலும் ஆம். பொரவோ என்புழி ஓகாரம் வினாப் பொருளது. வாலியின் வலிமைக்கு முன் இராவணன் வலிமை செல்லாமையுணர்ந்தவுடன்

நின் தோழன் நான் என்று தானே வலிய தோழமை கொண்டாட லானுன் இராவணன். (கஅ)

வாலி இராவணனைத் தோழமை கொண்டு விடுதல்

621. என்றிலங் கேச னியம்பிட வாலி
யெழுந்தபே ருவகையா லிறுகத்
தன்றிரட் டோளாற் றழுவியாங் கவனைத்
தன்னெடு நகரிடைக்கொண்டு
சென்றினி தூட்டிச் சிறந்தன செப்பித்
திங்களொன் றினிதுகொண் டிருந்தாங்
கின்றைநா டொடங்கி யென்னுடைத் தோழ
னென்றிலங் கேசனை விடுத்தான்.

என்று இலங்கேசன் இயம்பிட வாலி
எழுந்தபேர் உவகையால் இறுகத்
தன்திரள் தோளால் தழுவி, ஆங்கு
அவனைத் தன்நெடு நகரிடைக்கொண்டு
சென்று, இனிது ஊட்டிச் சிறந்தன செப்பி,
திங்கள் ஒன்று இனிது கொண்டு இருந்தாங்கு
இன்றைநாள் தொடங்கி என்னுடைத் தோழன்
என்று இலங்கேசனை விடுத்தான்.

பொ: இலங்கைக்கு அரசனுகிய இராவணன் இன்று நின் தோழன் என்று சொல்ல, வாலி உள்ளத்தே எழுந்த பெருமகிழ்ச்சியால் தனது திரண்ட தோளால் இறுகத் தழுவிக்கொண்டு அங்கு நின்றும் அவ்விராவணனைத் தன் பெரிய அரண்மனைக்குக் கொண்டு சென்று இனிதாகிய உணவு வகைகளையுண்ணச் செய்து சிறந்த முகமன் மொழிகளைச் சொல்லி ஒரு மாதம் வரையில் இனிதாகத் தன்வீட்டில் உடன் கொண்டிருந்து (பின்பு அவனிடம்) இன்றுமுதல் என்னுடைய தோழன் நீ என்று சொல்லி இலங்கைக்கு அரசனுகிய இராவணனை விடைகொடுத்து அனுப்பினுன்.

கு: என்று என்றது முன்னைச் செய்யுளில் கூறியதை அனுவதித்தவாறு. நகர் என்றது அரண்மனையை. இனிது என்றது இராவணனுக்கு இனிதாக இருக்கும் உணவுப் பொருள்களை. ஊட்டி – உண்பித்து. சிறந்தனவாகிய உபசார மொழிகளைச் சொல்லி என்பார் சிறந்தன செப்பி யென்றார். ஆங்கு – அசை. இற்றைநாள் என்பது எதுகை நோக்கி, இன்றைநாள் என ஆயிற்று. இராவணன் சொல்லியவாறே வாலியும் என்னுடைத் தோழன் என்று கூறியவாறு. விடுத்தான் என்பது விடைகொடுத்து அனுப்பினன் என்னும் பொருளது. இதற்கு முன் செய்த பகைச் செயல்களை மறந்திட வேண்டும் என்று கூறுவது போல இன்றை நாள் தொடங்கி என்னுடைத் தோழன் என்றான். வாலி பெருவலி யுடையனாயினும் இலங்கைக்கு அதிபனாகிய இராவணன் இன்று நின்தோழன் என்று சொன்னது வாலியினுள்ளத்தைக் கவர்ந்து விட்டது. எனவே அவனை ஒரு திங்கள் வரையில் தன் அரண் மனையில் இனிய விருந்தூட்டி உபசரித்தனுப்பலானான். (கக)

அவ்வாலியின் தோழனாகிய இராவணனை வென்ற
இராமனை அகத்தியர் புகழ்ந்தது

622. அலைதழு வுத்தி யரவணைத் துயினீத்
தயோத்திவந் தடைந்தடல் வீரச்
சிலைதழு வியநின் செஞ்சர மொன்று
நெஞ்சகம் பிளப்பவத் திறலோன்
நிலைதழு வியபூ ணிந்திரன் குலிசத்
தேறுபட் டிருசிற கற்ற
மலைவிழு வதுபோல் வீழ்ந்தனன் வீர
மற்றுனை யொப்பவர் யாரே.

அலை தழுவு உத்தி அரவணைத்துயில் நீத்து
அயோத்தி வந்து அடைந்து அடல்வீரச்
சிலை தழுவிய நின்செஞ்சரம் ஒன்று
நெஞ்சகம் பிளப்ப அத்திறலோன்

நிலைதழுவிய பூண் இந்திரன் குலிசத்து
ஏறுபட்டு இருசிறகு அற்ற
மலைவிழுவதுபோல் வீழ்ந்தனன் வீர!
மற்றுனை ஒப்பவர் யாரே!

பொ: அலைகளைத் தன்பால் தழுவியுள்ள பாற்கடலில் பாம்பணையில் துயில்கின்ற அறிதுயில் நிலையை விடுத்து அயோத்தியில் வந்து அவதரித்து வலிமையும் வீரமுமுடைய கோதண்டம் என்னும் வில்லைத் தழுவியபடி நீ விடுத்த செம்மையான அம்பு ஒன்று மார்பைப் பிளத்தலால் அத்திறமையுடைய இராவணன், நிலையாக அணியப் பெற்ற அணிகலன்களையுடைய இந்திரனது வச்சிரப்படையால் ஏறுண்டு இரண்டு சிறகுகளும் அற்ற மலை விழுவது போலத் தரையில் இறந்து விழுந்தான், அவனை அவ்வாறு விழச் செய்த வீரமுடையோனே இவ்வுலகில் உன்னை ஒப்பவர் யாருளர்? (யாருமில்லை என்றபடி).

கு: இராமபிரானின் பழைய தெய்வநிலையை உணர்த்த 'அலைதழுவுத்தி யரவணைத் துயில் நீத்து' என்றும் அவன் அவதாரத்தின் சிறப்புணர்த்த அயோத்தி வந்து என்றும் அவதாரத்தின் பயன் உணர்த்த நின் செஞ்சரமொன்று நெஞ்சகம் பிளப்ப அத்திறலோன் விழ்ந்தனன் என்றும் கூறினர். இராமன் அம்பால் இராவணன் யாக்கை விழுந்ததற்கு உவமையாக இந்திரனுடைய வச்சிரப்படையால் சிறகற்ற மலைவிழுந்ததைக் கூறினர். இருசிறகு அற்றமலை என்ற உவமையடையால், இருபது கரங்களற்ற இராவணன் விழுந்தான் என்று பொருளிலும் வருவித்துக் கொள்க. இந்திரன் அமரர்க்கு அரசன் ஆகலின் எஞ்ஞான்றும் அணிகலன் அணிந்திருப்பான் என்பார், நிலைதழுவிய பூண் இந்திரன் என்றார். குலிசம் – வச்சிரப்படை. முற்காலத்து மலைகள் சிறகுகளையுடையவாய்ப் பறந்து விரும்பியவிடத்தில் இறங்கி மக்களுக்குத் துன்பஞ்செய்து வந்தனவாக அதுகண்டு இந்திரன் மக்கள் துயர்போக்கத் தன் வச்சிரப்படையால் மலைகளின் சிறகுகளை அறுத்துத் தள்ளினன் என்பது புராணக்கதை. யாராலும் வெல்ல முடியாத வலிமையும் வாலியின் நட்பும் பெற்றுச் செருக்கி வாழ்ந்த இராவணனை வெல்லுதல் எளிதன்று

ஆதலின் அவனை வென்ற இராமனைப் பார்த்து வீர! 'மற்றுனை யொப்பவர் யாரே' என அகத்தியர் புகழ்வாராயினர். இராவணன் வீழ்ந்தபோது விடணன் 'ஆயிரந்தோளினுலும் வாலியு மரிதினைய மேயினவென்றி விண்ணோர் சாபத்தின் விளைந்த மெய்ம்மை தாயினுந்தொழத்தக்காண்மேல் தங்கிய காதற்றன்மை நோயுநின் முனிவு மல்லால் வெல்வரோ நுவலற்பாலார்?' (இராவணன் வதைப். 248) என்று கூறியுள்ளது நினையலாம். (உ௰)

வாலி வாலால் கட்டுண்ட படலம் முற்றிற்று.

# 11. அநுமப் படலம்

## முன்னுரை

அநுமனுடைய பிறப்பு முதலிய வரலாற்றைத் தெரிவிக்கும் படலம் ஆதலின் இது அநுமப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. கிட்கிந்தா காண்டத்தில் ஓர் அநுமப்படலம் உண்டு. இப்படலம் அதனின் வேருய் அநுமனின் தொடக்க வரலாற்றினை மட்டும் தெரிவிக்கும் படலமாக விளங்குகின்றது. சில சுவடிகளில் இப் படலத்தின் பிற்பகுதியைப் பிரித்து அதற்கு விடைகொடுத்த படலம் எனப் பெயர் கொடுக்கப்பட்டுளது.

## படலப் பொருட் சுருக்கம்

வெற்றியையுடைய வாலியின் வீரச் செயல்கள் முழுவதையும் அகத்திய முனிவர் சொல்லத் தொடங்க அவ்வரலாறு முழுவதையும் மனதில் உணர்ந்து இராமன், வாலியின் வெற்றியிருக்கட்டும், பகைவர் அஞ்சுமாறு போர் செய்யும் வலிமையாலும் ஆகாய மீது உயர்ந்து தோன்றும் மேருமலையைப் பெருமைகுன்றச் செய்துவிட்டுச் சிறிதும் நெகிழ்ச்சியின்றி உறுதியாக நிற்கும் உடல் நிலையாலும் குறைவில்லாது கற்ற கல்வியறிவாலும் அளவில்லாத குணம், நீதி, வெற்றி முழுவதையும் அறிவோடு செய்கின்ற அநுமனை ஒப்பவர் இனி இவ்வுலகில் யாருளர்?

கடலில் காவல் செய்துகொண்டிருந்த அங்கார தாரை என்ற அரக்கியின் வாயில் நுழைந்து குடலை மாலையாகச் சூடிக்கொண்டு புறம்போந்து அலைகளோடு கூடிய கடலைத் தாண்டிப் பகைவர்தம் படைக்கலங்கள் எல்லாம் பொடிப்பொடியாகுமாறு அழித்துத் தன் மேல் போர் செய்ய வரும் சம்புமாலி முதலியவர்களையும் அவர்தம் நால்வகைப் படைகளையும் அழிக்கும் அநுமனை ஒப்பவர் இனி, இவ்வுலகில் யார்? செய்தற்கரிய பெரிய தவத்தினைச் செய்து முடித்த அகத்திய முனிவரே! என் தம்பி இலக்குவனைப் பிரமாத்திரத்தால் மயங்கச் செய்ய அப்போது மேருமலைக்கு வடக்கேயுள்ள மருத்து மலையை யெடுத்துக் கொண்டு ஒரு நாழிகைப் பொழுதிற்குள் வருவார் ஒருவர் இந்த உலகில் இனி இருக்கின்ருரோ? ஆதலால், சொல்லுமிடத்து அநுமனை ஒப்பவர் யாருளர்?

சூரியன் மகனுகிய சுக்கிரீவனேடு நமக்குக் கிடைத்த நட்பும் உறவும் இவ்வநுமனுல் இயன்றதுதான். அளவிடமுடியாத பெரிய நீரையுடைய தென்கடலுக்கு அணைகட்டி அடைத்ததும் இவனுலே யாம். அரக்கர்களால் இலக்குவனுக்குவந்த இடையூறுகள் எல்லாம் நீங்கச் செய்தது இவனே. யான் அரக்கர் குலம் வேரறுத்ததே இவனுல்தான். இனி யான் சொல்வதற்கு யாதுளது? தருமத்தி னின்றும் பிரியாத அநுமன் வளர்ந்தால் மேருமலையைக் காட்டிலும் பெரிய வடிவினனுவான். தன் மேனியைச் சிறிதாய் ஒடுக்குவா னுயின் சிறிய அணுவிலும் சிறியன் ஆவான். தான் இவ்வுலகத் திற்கு வந்த காரியம் முடித்தற்பொருட்டு அளவாகிய உருவதனைக் கொண்டுள்ள வீரனுகிய அநுமன் அடைந்துள்ள வலிமையை உலகவர் அறிவார் ஆயினும் முழுவதும் அறியும் பொருட்டு விரித்துச் சொல்லுக என இராமன் கூறுகின்முன்.

இராமனின் அமிழ்தம் சொட்டுகின்ற சொற்களைச் செவியில் கேட்டு அநுபவிக்கும் பேறுபெற்ற அகத்திய முனிவன் இராமனைப் பார்த்துப் 'நெடியோனே! கவனமாகக்கேள்' என்று தொடங்கி, இவ்வுலகில் அழகையும் சீரையும் அறிகின்ற அறிஞர்களில் மிக்கோனுகிய அநுமானின் பிறப்பையும் பெரிய வீரச் செயலையும் சொல்லலானுன்.

உலகில் யாரினும் வலியனுகிய அநுமன் சூரியனுல் தரப்பட்ட வரங்களையுடையவன்; பொன்மயமான மேருமலைபோலத் தோன்று தலால் சுவணமேரு என்ற பிள்ளைத் திருநாமத்தையுடையவன். இரண்டாக நெருங்கிய பெரிய மலைபோன்ற தோள்களையுடை யவன். காற்றின் வேந்தனுக்கு அஞ்சனை என்பவளின் வயிற்றில் உதித்தவன். அவன் பிறந்தபோதே தம் பிள்ளைக்கு இருக்கும் பெரிய வலிமையை யறிந்து தாயும் தந்தையும் மனத்துக்குள் மகிழ்ந்தனர். பாவ எண்ணங்களையுடைய அரக்கர்கள் இனி ஆயுள் குறைந்தவராவர் எனத் தேவர்கள் மகிழ்ந்து கூத்தாடினர்.

அனுமன் பிறந்தவுடன் தன் தாயைத் தொழுது எனக்கு இனிய உணவு எது? என்று கேட்க, அன்னை குளிர்ந்த சோலையில் உள்ள பருவத்தால் சிவந்த பழமெலாம் நினக்கு இறையாவதே

என்று சொல்லிவிட்டுத் தன் மகனுக்குத் தரும்பொருட்டுப் பழத்தைத் தேடிக்கொண்டு காட்டிற்குச் செல்ல, பசியினால் பதைபதைத்துத் தனித்து வாய்திறந்து அழுத அனுமான் விரைந் தெழுந்து நம் தாய் சொன்ன சிவந்த பழம் இதுதான் என்று உதய சூரியன்மேல் பாய்கின்றான். அதுகண்ட தேவர்களும் முனிவர்களும் தம் உள்ளத்தினில் 'இவன் எப்போதும் இருப்பதாக' என வாழ்த்து கின்றனர். மேலும் இவன் பிறந்தபோதே தந்தை போன்ற வேகத் தின் வலிமையால் சூரியன்மேல் பாய்கின்றான். இவன் வளர்ந்தபின் இவன் பகைவரானோர் இவன் கையால் என்ன பாடு படுவரோ? என்கின்றனர்.

தாவிச்செல்கின்ற அனுமனை நோக்கி அவன் தந்தை வாயு தேவன் என் மகன் அனுமன் மீது படும் சூரிய கிரணங்கள் எல்லாம் வெப்பம் இல்லாமல் குளிர்ந்த நிலாக் கதிர்கள் போன்றன வாகுக என வாழ்த்துகின்றான். வாயுதேவனின் விருப்பப்படி குளிர்ந்து தோன்றும் சூரியனை அனுமன் அணுகி அவன் வட்டத் தைக் கையால் பற்றிக்கொண்டு வாயால் கவ்வுதலும் அவன் செய்கைக்கு உடன்பட்டுச் சூரியன் சிறுகுழந்தை என மனமிரங்கி அவனைக்கண்டு கோபித்துக் கொள்ளவில்லை. பெருகிய கருணை யால் அனுமனைப் பார்த்துக் காதல என்று அழைக்கின்றான்.

அனுமனால் சூரியன் பற்றப்பட்டிருந்த பொழுது அவனைப் பற்றுதற்கு வந்த இராகு பார்க்கின்றான். சூரியனைப் பற்றிநின்ற வெற்றிவாய்ந்த அனுமனைக் கண்டு மனம் நடுங்கிச் சென்று தேவேந்திரனை அணுகி நிலைபேறுடைய இந்திரனே! சூரிய மண்டலத்தை விழுங்குதற்கு முன்னமே எம்மை விதித்திருக் கின்றாய். அந்த முறை கெடுமாறு வேறோர் அயலவன் இடையில் புகுந்து விரிந்த சூரிய மண்டலத்தைக் கவ்விக்கொண்டு யான் வந்த பிறகும் விடாமல் இருக்கின்றான். உரிமையில்லாத அயலவன் சூரியனைப் பற்றுதலும் விடாமையும் ஆகிய இவை என்ன நியாயங்கள்? என்று முறையிடுகின்றான். இதைக் கேள்வியுற்ற இந்திரன் சினத்தால் கண் சிவக்கப்பார்த்து வெள்ளானைமேல் ஏறிக்கொண்டு சூரியனை நெருங்கிச் சென்று, இராகுவைப் பார்த்து சூரியனைப் போய்ப்பற்றுக எனச் சொல்ல, இராகுவும் சூரியனை

நெருங்குகின்ருன். இராகுவின் வரவைக் கண்ட அனுமன் சூரிய மண்டலத்தை விடுத்து அந்த இராகுவின் மேல் பாய்கின்ருன். இராகு அஞ்சி ஓடி இந்திரன் திருவடியில் போய் வீழ்கின்ருன்.

தன்னைக் கண்டு அஞ்சி ஓடின இராகுவினைத் தொடர்ந்து வருகின்ற அனுமான்மேல் இந்திரன் வெகுண்டு தன் வெள்ளை யானையைச் செலுத்திக் கொண்டு செல்ல, காற்றினும் வேகமுடைய அனுமான், பெரியதோர் பழத்தைப் பெற்றுவிட்டோம் என்று பெரிதும் மகிழ்ந்து அந்த வெள்ளையானையின் மேல் பாய்கின்ருன். அப்போது இந்திரன் வெகுண்டு எமனைப் போன்ற அனுமான்மேல் தன் கொடிய வச்சிரப்படையை வீசுகின்ருன். அனுமன் முன் கொண்ட தன் நினைவையே மறந்துபோய்த் தரையில் வீழ்கின்ருன்.

தன் மைந்தன் வீழக்கண்ட வாயுதேவன், வச்சிரப்படை வீசிய இந்திரன்மேல் கோபம் கொண்டு, இந்த மூவுலகங்களையும் இமைப்பொழுதில் அழிப்பேன் என்று மனதில் எண்ணி, அந்த மைந்தனை எடுத்துக்கொண்டு விண்ணில் இயங்காமல் அங்கு ஓரிடத்தில் அடங்கி விடுகின்ருன். வலிமையில்லாத மாயவுடம்பினை உள்ளே நின்று இயக்குகின்ற பிராணவாயுக் கோபித்துக் கொண்டமையால், கயிறு அறுபட்ட ஊசலைப்போலவும் உள்ளே நின்று ஆட்டுகின்ற இயந்திரக் கயிறு அற்ற பாவை போலவும் உலகத்துள்ள அனைவரும் தரையில் வீழ்கின்றனர்.

அரசர்களாய் உயிர்களைக் காக்கும் தலைவர்கள் இல்லாமையால் துன்பத்தால் பெரிதும் வருந்தி இரத்தக்கறை படிந்த வேலைப் போன்ற கண்களையுடைய பெண்டிரைக் காமுறுபவர்களும் இல்லாமல், வேதங்களை ஓதுவார் இல்லாமையால் வேதத்தின் ஒலியும் இல்லாமல் காலைச் சந்தியிலும் மாலைச் சந்திலும் செய்யும் சந்தியாவந்தனமும் இல்லாமல் வேள்விகள் செய்யும் இடங்களும் இல்லாமல் உலகம் வறிதாயிற்று. காற்று இல்லாமையால் ஆண்களின் மூத்திர வாயிலும் பெண்களின் தீட்டுவருவாயிலும் அடைத்துக்கொண்டமையால் மூடிய தோற்பை போன்ற உடம்பு பெருத்து வீங்கப் பெற்றுக் கண்ணும் காதும் மூக்கும் நாக்கும் தோலும் ஆகிய அறிதற்கருவிகள் ஐந்தும், கயிறு அறுதலால் கீழே

சிந்துகின்ற மணிகளையுடைய கோவையைப் போன்றனவாய்த் தம் தன்மை கெட்டு நிற்கின்றன.

கடல் நீரால் சூழப்பெற்ற இவ்வுலகில் உள்ள மக்கள் காம போகத்தை விடுத்துக் கற்சுவரும் கட்டையும்போல் அசைவின்றி யிருத்தலானும் ஐம்புலனும் செயல்படாது அடங்கியிருத்தலானும் இடது மூக்கிலும் வலது மூக்கிலும் பிராணவாயுவின் இயக்கம் இன்மையாலும் யோகிகளைப் போன்று காணப்படுகின்றார்கள். அப்போது வர்னவரும் தானவரும் முனிவரும் சித்தரும் வித்தியா தரரும் வாயுதேவனின் கோபத்தினாலே வயிறுபெருத்து மகோதரர் ஆனவர்கட்கெல்லாம் நாயகனாகிய பிரமனை அணுகுகின்றார்கள். பிரமனைப் பார்த்து, உலகப்படைப்பிற்கு ஆதியாக விளங்கும் வேதவித்தகனே! ‘இந்திரன் தன் வச்சிரப்படையால் அடிப்பட்டுத் தன் மகன் அனுமன் எமன் வாயில் வீழ்ந்ததைக் கண்டு, வாயு தேவன் கோபித்துக்கொண்டு ஓரிடத்தில் அடங்கியதால் உலகோர் அனைவரும் தம் வயிறுகள் பெரியசாலைப் போலவும் பூதத்தின் வயிறுபோலவும் வீங்கப்பெற்றுப் புரள்கின்றார்கள்’ என்று அத் தேவர் முதலியோர் சொல்லக் கேட்ட பிரமன் இப்பொழுதே சென்று உலகவர் நோயைத் தீர்ப்பேன் என்னும் கருத்துடைய வனாய்த் தேவர்கள் தன்னைச் சூழ்ந்துவர, வலிய திறமையுடைய வனா யிருந்தும் இறந்து கிடக்கும் அனுமனை மடியில் வைத்துக் கொண்டு, மகனைப் பிரிந்த பெருந்துன்பத்தால் வெதும்பிய மனத்தையுடையனாக விளங்கும் வாயுதேவனைக் காண்கின்றான்.

இந்திரன் முதலிய தேவர்கள் சூழவந்த பிரமனைப் பார்த்து உள்ளத்தே எழுகின்ற துன்பத்தோடு வந்து தன்னடி பணிந்த வாயுதேவனைத் தன் மலர்போன்ற கையால் எடுத்து நிறுத்திவிட்டு அந்த வாயுதேவன் பெற்ற பாலகனாகிய அனுமனைத் தன் கையால் தடவிக் கொடுக்கின்றான். அவன் தடவின அளவில் இந்திரன் வச்சிரப்படையால் இறந்த அனுமான் உயிர் பெற்றெழுகின்றான். அவன் எழுதலும் வாயுதேவன் நெஞ்சு குளிர்ந்தவனாகின்றான். முன்போல உலகமெங்கும் பாய்ந்து சென்று சஞ்சரிக்கலானான். பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாம் அனுமனை நோக்கி அவனுக்கு இதமான சொற்களைச் சொல்கின்றார்கள்.

இந்திரன் அஞ்சனையின் அன்புறு புதல்வனாகிய அனுமனை நோக்கி, 'என் கூரிய வச்சிரப்படையால் பிளவுபட்ட புண்ணின் வடு தீர்வதாக! நின் கன்னம் அறுதலால் கன்னத்தின் பெயராகிய அனு என்பதனோடு சேர்த்து அனுமன் என்னும் பேர் பெற்று உலகம் உள்ள அளவும் அழியாதிருக்கும் புகழைப் பெறுவாயாக' என்று வரங்கொடுத்தான். பின்பு சூரியன் அனுமனை நோக்கி என் ஒளிநிறைந்த கதிர்களாகிய கரங்களில் நூற்றில் ஒரு பங்கு உனக்கு வந்து பொருந்துவதாக, எல்லா வித்தைகளையும் ஏற்றுக் கொள்ளுதற்கேற்ற ஆற்றல் உனக்கு உண்டாவதாக! என வாழ்த்தி வரம் தருகின்றான்.

வருணன், போர்க்களத்தில் என் பாசத்தினால் பகைவர்கள் உன்னைக் கட்டியிழுக்கும்பொழுது உனக்கு மரணமில்லை' என வரம் கொடுக்க, எமன் என் தண்டாயுதத்தால் வலிமை மிக்க அனுமான் உயிர் நீங்காதிருப்பானாக என வரம் கொடுக்கின்றான். குபேரனும், தன் தண்டாயுதத்தால் அனுமானுக்கு மரணம் ஏற்படலாகாது எனச் சொல்ல, உருத்திரன் தன் கைத்தலத்தால் அனுமானுக்கு உயிர் நீங்கலாகாது என வரம் கொடுக்கின்றான்.

பிரமன், தன் தண்டினால் அனுமன் அழிவின்றி மிக்க மேதாவியாய் ஒருநாளும் இறவாத ஆயுளும் அடைவானாக! என வரம் கொடுக்கின்றான். தேவதச்சன் தேவர்களின் ஆயுதங்களால் போர்க்களத்தில் அனுமான் சாதல் இலனாகுக என வரம் கொடுக்கின்றான். கடைசியில் பிரமன் வாயுதேவனை நோக்கி, வன்னி சகாயனே! நின் மகன் அனுமான் மண்ணுலகத்தோர்க்கும் விண்ணுலகத்தோர்க்கும் துன்பத்தைச் செய்கின்ற இராவணனுடைய இலங்கை நகரைத் தீக்கிரை யாக்கி இராமன் மனமகிழும் படி அரக்கர் குலத்தை வேரறுத்துப் பின்பு அவ்விராமனது பேரருளால் பிரமபதவியும் பெறுவான் என்று சொல்லிச் செல்கின்றான். சென்றபின்பு தேவர்கள் எல்லாம் கொடுத்த வரங்களின் செருக்கினால், இதுநன்று, இது தீது என்று உணர்ந்து பார்க்காமல் சிறந்த முனிவர்கள் தங்கியுள்ள இடத்தில் சென்று வேள்விக்கு உதவக்கூடிய தயிர் பால் நெய் இவற்றையெடுத்து அருந்திவிட்டு, மரவுரியினை வைத்துள்ள பையினையும் வேள்வியில் நெய் வார்ப்ப

தற்கு உரிய அகப்பை முதலியவற்றையும் எடுத்துக்கொண்டு எழுகின்றான். அம்முனிவர்கள் ஊழித்தீப்போல வெகுண்டு, இவ்வனுமான் சிறந்த பிரமன் தண்டினாலும் அடக்குதற்கு அரியவன் ஆதலின், இவன் கருத்தழிந்து பித்துடையவன் போலத் தன் வலிமையைத் தான் உணராதவனாகுக' என்று சாபம் கொடுக்கின்றார்கள்.

முனிவர்களின் சாபத்தால் அனுமான் செருக்கு நீங்கிச் சாந்த குணமுள்ளவனாய்த் தவமுனிவர்கட்கு அஞ்சி அவர் பணி செய்வதில் கருத்துள்ளவனாய் ஒழுகுகின்றான். அந்நாளில் இருக்க இரசதன் (ரிக்ஷ ரஜஸ்) மைந்தர்களாகிய வாலியும் சுக்கிரீவனும் பிறந்து வளர்ந்தபின் மின்னலைப் போன்ற இடையை யுடையவளாய்த் திருமகள் போன்று விளங்கும் உருமை என்னும் பெண் காரணமாகப் பகைவராகி இருவரும் எதிர்த்துப் போர் செய்ய, இளையவனாகிய சுக்கிரீவன் வாலியின் வலிமைக்கு ஆற்றாதவனாய் இளைத்துப் புறங்காட்டி ஓடிச்சென்று தன்னால் செயற்குரிய செயல் யாதுமின்றித் தளர்ந்து (வாலி அணுக முடியாத) மதங்கவனத்தை அடைகின்றான்.

அவ்வனத்துக்குரிய மதங்கமுனிவனது சாபத்திற்கு வாலி அஞ்சி அந்த மதங்கவனத்தில் புகாது இருந்தமையால் அவனால் கொல்லப்படாமல் வாழ்நாளைப் பெற்ற சுக்கிரீவனோடு மனங்கலந்த தோழனாகிச் சேர்ந்து தன் வலிமை யுணராமலே அங்கு அடங்கியிருக்கின்றான். உயர்ந்த புகழையுடைய இராம! இந்த அனுமான் நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அறுபத்து நான்கு கலைகளையும் ஐந்திர வியாகரணத்தையும் நிலமார்கிய வீதியில் நின்று கொண்டே வெம்மையுடைய சூரியனோடு சென்று கற்று ஒருநாளில் உணர்ந்து கொண்டவனாவன். கருணையும் இரக்கமும் உடைமையாலும் செருக்கின்றி நினைத்த செயல்களை முடிக்கின்ற தன்மையாலும் இம்மண்ணுலகிலும் அவ்விண்ணுலகிலும் அனுமானை ஒப்பவர் இலர். புகழால் நிறைந்த அனுமான் நின்னைத் திருவடியின்கண் விழுந்து தொழுதுநின்ற பொழுது தருமம் தலைதூக்கி நின்றது, தேவர்கள் மகிழ்ச்சியால் ஆடினார்கள். பாவம் தலை சாய்த்து வாடியது. வாலி முதலியவர்களின் கண்ணும் தோளும் புருவமும் மார்பும் இடம் துடித்தன.

மலமாசு நீங்கிய தூய்மைமிக்க இராமா! தனக்கு ஒப்பில்லாதவனுய் வெற்றிமிக்கிருந்த அனுமானை—சினமிக்க அரக்கர்கள் போர் புரியும்போது போர்க்களத்தில் நீ நினைத்த காரியத்தை ஒரு கணத்தில் முடித்துவிட்டு நின்னை வணங்கி நிற்கும் தன்மையுடையவனை - உன்னைப் பிரியாது நிற்கும் சதுரப்பாடு உடையவனைப் பற்றி உனக்கு யான் சொல்வதற்கு இனி யாதுளது? எனக் காற்றுக் கடவுள் பெற்ற மைந்தனுகிய அனுமானின் பிறப்பும் அவன் செய்த செயல்களும் அவன் தேவர்கள்பால் பெற்ற பெரிய வரங்களும் முனிவர்களின் சாபத்தால் நடுவே அவன் தன்னை உணராதிருந்த தன்மையும் முதலிய எல்லாவற்றையும் அகத்திய முனிவன் சொல்ல இராமன் வியந்து மகிழ்ந்து தானும் அனுமானைப் புகழ்கின்ருன்.

சிறந்த பண்புள்ள முனிவர்கள் இராமன் கூறிய சொற்களைக் கேட்டு இராமனுகிய மன்னவனுக்குச் சொல்கின்ருர்கள். உணர்வால் நீண்டு தோன்றுகின்ற மேலோனே! நாங்கள் நாள்தோறும் செய்ய வேண்டிய எங்களுக்குரிய நியமங்கள் இருக்கின்றன; ஆயினும் நின்னைப் பிரிவதில் எங்கள் மனம் உடம்படவில்லை என்று பணிவாகக் கூறுதலும், உலக முழுமைக்கும் தலைவனுகிய இராமன் கூறுவானுனன். அரிய தவத்தினையுடைய முனிவர்களே! உங்களுடைய நியமங்களில் குறைவதென்பது இல்லாதொழிக! உங்களுடைய செயல்கள் யாவும் எங்களுடைய அரச காரியங்கள் திருந்துதற்குக் காரணமான பெரிய தவமாகும் என்று புகழ்ந்து சொல்லுதலும், முனிவர்கள் அவ்விடத்து இராமபிரானைப் பார்த்து நிறைந்த அருளோடு ஆசிகள் சொல்லி 'இனிது இருப்பாயாக' என்று வாழ்த்தி வாழ்வு பெறுகின்ற தூய வேதங்களில் வல்ல பெரிய முனிவர்கள் தத்தம் ஆசிரமங்களுக்குச் செல்லப் பயணமானுர்கள்.

பின்பு சனகமகாராசன் உலகத்தையே மறைப்பதற்குரிய பெரும்படையோடு மகிழ்ச்சியுடன் பணிகின்ற இராமபிரானைத் தழுவிக் கொண்டு தான் முன் ஈட்டிய தனம் அணிகலன் ஆடை விளக்கம் பொருந்திய பெண்டிர்கள் முதலிய பலவற்றையும் கொடுத்தபின்பு, இராமபிரான் இராவணனது குலத்தை வேரறுத்த வரலாற்றைச் சொல்லிப் புகழ்கின்ருன். அச்சனகனுக்குப் பின்பு பெரிய சேனையையுடைய முடிமன்னர்கள் இராமனைக்

கண்டு வணங்கி அருகில் அமர்கின்றனர்கள். அம்மன்னர்களுக்கு இராமனும் உபசாரச் சொற்களைச் சொல்லி அவர்களோடு அளவளாவியிருக்கின்றான். அப்போது சனகன் தன் சேனையோடு விடைபெற்றுக் கொண்டு தன் நாட்டிற்குப் பயணமாகின்றான். சனகன் பிரிவால் வருந்தும இராமன், சீதையோடிருந்து மற்ற மன்னர்களுக்கும் விடைகொடுத்து அனுப்புகின்றான், பின்பு மன்னர் களெல்லாம் தனக்குப் பரிசாகக் கொணர்ந்து கொடுத்த சிறந்த பொருள்களையெல்லாம் ஏற்றோர்க்குத் தானமாக அளிக்கின்றான்,

இராமன் தானணிந்திருந்த ஆபரணங்களையும் அந்தணர் முத லியோர்க்குத் தானமாக அளிக்கின்றான். பின்பு அங்கதன் என்ற வானர வீரனுக்குத் தன் தோளில் அணிந்திருந்த அங்கதத்தை (தோள் வளையை)ப் பரிசாக அளிக்கின்றான். பின்பு வானர சேனைத் தலைவர்கட்கு நாகமீன்ற மாணிக்கங்களையும் பிற செல்வங்களையும் கொடுக்கின்றான். சேதுபந்தனம் செய்த நளனுக்கு அரிய பெருஞ் செல்வத்தைப் பரிசாகக் கொடுக்கின்றான். வீடணனுக்கும் தக்க பரிசு வழங்குகின்றான்.

பின்பு வானர சேனைக்கு ஒரு மாதம் வரையில் அறுசுவை யுண்டி ஒரு நாள்போலச் சிறப்பாக ஊட்டுகின்றான். சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவனைப் பார்த்துப் பெரிய தோளையுடைய வீரனே! அங்கதன் நின் அடைக்கலம் என்று வலிமைமிக்க வாலி உயிர்விடும்போது சொன்ன வார்த்தை என் சிந்தை விட்டுப் போகாது. ஆதலால், இந்த அங்கதனைக் கவனத்தில் கொள்க. என்றும், முனிவர் சாபத்தால் தன் வலிமையையறியாத அனுமனை மனத்தில்கொண்டு பாதுகாப்பாயாக என்றும், இந்திரசித்து செய்த போரில் என் காரணமாகத் தம் இனிய உயிரை விடுத்த இங்குள்ள இவர்கள் எல்லாம் உன்னுடைய பாதுகாப்புக்குரியவர்கள் என்றும் சொல்லி, அந்தச் சுக்கிரீவனை மார்பில் தழுவிக் கொள்கின்றான்.

தன்னுடன் பிறந்து செல்வத்தால் சிறந்து வாழ்ந்த இராவணனை அண்ணன் என்று பாராமல் வெறுத்து அரக்கர் குலப்பிறப்பையே அறுத்துவிட்டுத் தனக்கு அடிமைப்பட்டொழுகும் வீடணனைப் பார்த்து, தருமத்தையே சீலமாகக் கொண்டவனே! செருக்கில்லாத

நின் முன்னோனாகிய குபேரனோடு பகைகொள்ளாதே அலைகடலால் சூழப்பட்ட இலங்கை மாநகரில் இருந்து அரசு செய்வாயாக' என்று இராமன் சொல்லியனுப்புகின்றான். அப்போது அனுமான் வந்து பணிந்து நின் அடியேனாகிய யான், நீரைப்பிரிந்த மீன் போலவும் தாய்ப் பசுவைப் பிரிந்த கன்று போலவும் உயிர்பிரிந்த உடல் போலவும் தாங்குவோர் இன்றி வாழ்தல் ஆற்றேன்; நின் அடி பிரியாத நிலையை அருள வேண்டும் என்று தேம்புகின்றவனை நோக்கி, அனும! நீ இங்கு இருந்தால் சுக்கிரிவன் துணையிழப்பான், ஆதலால் அவனோடு செல்வதே நல்லது என அவனை உயிர் பொருந்தத் தழுவிக் கொள்கின்றான்.

இவ்வாறு ஒவ்வொருவரையும் இதமான சொற்களைச் சொல்லி விடை கொடுத்து அனுப்பச் சுக்கிரீவன் முதலியோர் இராமன் திருவடிகளை வணங்கி ஒழுகுன்ற கண்ணீரையுடையவர்களாய், நீ சொன்ன வண்ணம் செய்கின்றோம் என்று சொல்லிக்கொண்டு கிட்கிந்தையை அடைகின்றார்கள். பின்பு வீடணன் வீடு அடைவோம் என்று விரும்புவோர்க்கு வீட்டின் தாழ்ப்பாளைத் திறந்திட வல்ல தாள்களையுடைய இராமபிரானை வணங்கிக் கண்ணீர் சோர்ந்து நிற்க, அவனை அன்பினால் தழுவிக்கொண்டு தேவர்கள் போற்றும்படி இலங்கையில் நல்லரசு செய்க என்று சொல்லி விடைகொடுத்தனுப்புகின்றான் என்பது இப்படலப் பொருள்.

## ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. **வான்மீகத்தில்:** சுமேரு என்கிற மலையில் ஆட்சி செய்து வந்த கேசரி என்பவன் மனைவி அஞ்சனை அவளிடத்தில் வாயு தேவன் உத்தமனான ஒருபுதல்வனை உண்டுபண்ணினான். நெற்கதிர் நிறமுள்ள அனுமனைப் பெற்றாள். பெற்றவுடன் பழங்களைக் கொண்டுவரக் காட்டிற்குப் போயிருந்தாள். அப்போது குழந்தை அனுமான் தாய் பக்கத்தில் இல்லாமையாலும் பசியாலும் வருந்தி, சரவணத்தில் முருகன் எவ்வண்ணமோ அவ்வண்ணம் அதிகமாக அழுதான். அப்பொழுது உதயமாகிற சூரியனைக் கண்டு பழமெனக் கொண்டு அந்தச் சூரியனை நோக்கிப் பறந்து சென்றான் என்றுளது.

ஒட்டக்கூத்தர் இதனைச் சிறிது மாற்றிக் கூறுகின்றார். சுமேரு என்பது சூரியனருளால் தோன்றிய மலையெனவும் அம்மலையில்

ஆட்சி புரிந்தவன் கேசரி எனவும் அவன் மனையாட்கு வாயுவின் அருளால் தோன்றியவன் அனுமன் எனவும் வான்மீகம் கூறவும் ஒட்டக்கூத்தர்:

சூரியன் தருவரத்தினன் சுவணமேரு வெனும்பேரினன். என அனுமானுக்குப் பெயரர்க்கியுள்ளார். தன்னைப் பெற்ற அஞ்சனை யைத் தொழுது அனுமன் எனக்கு இனிய இரை யாது? என்று வினவியதாகவும், பருவத்தால் சிவந்த கனி உனக்கு உணவாகும் என அஞ்சனை சொல்லிவிட்டு அனுமன் பசிக்குப் பழம் கொணரக் காட்டிற்குச் சென்றதாகவும் பசியினல் வருந்திய அனுமான் அழுது அரற்றிக் கொண்டு விண்ணைப் பார்த்தபோது உதயமாகும் சூரிய னைக் கண்டு நமக்கு அன்னை சொன்ன பழம் இதுவேயெனச் சூரியன் மேற் பாய்ந்ததாகவும் கூறுகின்றார்.

பிறந்தவுடன் தனக்கு உணவு எது என அனுமன் கேட்டதும் அவனுக்கு அஞ்சனைப் பருவத்தால் சிவந்த பழம் உனக்கு உணவு எனக் கூறியதும் ஆகிய நிகழ்ச்சிகள் ஒட்டக்கூத்தரின் படைப்பே. வான்மீகத்திலில்லை; என்றாலும் இப்படைப்பு நன்றாகவேயுள்ளது.

2. வான்மீகத்தில்: வாயுபகவான் கிரீட குண்டலங்கள் பூ மாலைகள் பொன்னாபரணங்கள் இவைகள் அசையப் பிரமதேவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினதாகவும், பிரமனும் ஆபரணங்க ளால் அழகுபெற்று விளங்கும் தங்கையால் அனுமனைத் தடவிக் கொடுத்ததாகவும் உளது.

ஒட்டக்கூத்தர் வாயுதேவனுக்கு இத்தகைய அணிகலன்கள் இருந்ததாகவோ பிரமன் பேரணிகலன்களை அணிந்திருந்ததா கவோ சொல்லவில்லை.

3. வான்மீகத்தில்: வாயுதேவன், தன்புதல்வன் அனுமனை எடுத்துக்கொண்டு வந்து அஞ்சனையினிடம் ஒப்புவித்து அவன் தேவர்களின் வரங்களை மிகுதியாகப் பெற்றிருப்பதையெல்லாம் விரிவாகச் சொல்லிவிட்டு மறைந்தான் என்றுள்ளது. ஒட்டக்கூத்தர் இதுபற்றி யொன்றுமே சொல்லவில்லை.

4. **வான்மீகத்தில்:** அனுமானுக்கு வரம் கொடுத்தவர்களில் சூரியன் அனுமானுக்குத் தன் கலைகளில் நூற்றிலொரு கலையைக் கொடுத்ததோடு சாத்திரங்களைக் கற்கும் ஆற்றல் இவனுக்கு உண்டாகிறபோது நானே சாத்திரத்தைக் கற்பிக்கின்றேன் என்று சொன்னதாகவுள்ளது. மேலும் அகத்தியர் அனுமனைப் புகழும் இடத்தில்: பெருஞ்செல்வமாகிய வியாகரண சாத்திரத்தைச் சூரியனை வணங்கி உபதேசம் பெற உறுதி செய்து கொண்டு சூரிய பகவானையே பார்த்தவண்ணம் உதயகிரியிலிருந்து அத்தமன கிரிவரையில் சென்று அனுமான் திகம் என்ற உரையையும் சங்கிரகத்தோடு கூடிய ஸ்ரீபாடியத்தையும் பூரணமாய்ப்பெற்றிருக் கின்றான். நியாய சாத்திரம் சந்தசாத்திரம் முதலிய மற்ற சாத்திரங்களிலும் அனுமானுக்கு இணையானவர்கள் இல்லை என்று கூறியுள்ளார்.

**ஒட்டக்கூத்தர்:** சூரியன் அனுமானுக்குக் கொடுத்த வரங்களைப் பற்றிக் கூறும்போது வில்லார் கரத்தில் சதகூற்றில் ஒருகூறுனக்கு மேவிடுக' எனவும், எல்லாவிஞ்ஞைகளும் தரிக்க இசைந்த சத்தி உண்டாங் காண் நல்லாய் கொள்நீ தருகின்றேன்' எனவும், கூறியதாகவே சொல்கின்றார். ஆனால், அகத்தியர் அனுமானைப் பற்றிப் புகழும்போது கூறியுள்ளபடி, அனுமான் வியாகரண சாத்திரத்தைச் சூரியனை வணங்கி உபதேசம் பெற உறுதி செய்துகொண்டு சூரியனையே பார்த்த வண்ணம் உதயமலை யிலிருந்து அத்தமன கிரி வரையில் சென்று ஒரு நாளில் திகம் என்ற உரையையும் சங்கிரகத்தோடு கூடிய ஸ்ரீபாடியத்தையும் நிறைவாகக் கற்றான் என்பதைச் சொல்லவில்லை.

5. **வான்மீகத்தில்:** அகத்திய முனிவர் முதலிய முனிவர்கள் இராமனிடம் விடைபெற்றுச் செல்லும்போது இராமன் தங்களுடைய மகிமையாலே யாகங்களைச் செய்யப் போகிறேன். அப்பொழுது தாங்கள் கலந்துகொண்டு அந்த வேள்வியை முடித்துத் தர வேண்டும் எனக் கேட்டுக் கொண்டதாக உள்ளது. ஒட்டக் கூத்தர் இச்செய்தியைச் சொல்லவில்லை.

6. **வான்மீகத்தில்:** இராமன், சனகனைப் பார்த்து, தேவரீ ருடைய பெரிய தவப் பயத்தாலேயே என்னால் இராவணன் கொல்

லப்பட்டான், தேவரீரால் நாங்கள் பாதுகாக்கப்படுகின்றோம். தேவரீர் தமது புரிக்கு எழுந்தருளலாம். தேவரீருக்குத் துணையாகப் பரதனும் காணிக்கைகளை யெடுத்துக் கொண்டு பக்கலில் வருவான் எனக் கூறுகிறான். அதுகேட்ட சனகன் அரசே! உன் தரிசனத்தாலும் நயத்தாலும் மகிழ்ச்சியடைகின்றேன். எனக்காக வைக்கப்பட்ட காணிக்கைகள் எல்லாவற்றையும் என் மகளுக்கே சீராகக் கொடுத்துவிடுகிறேன்' எனச் சொல்லிப் புறப்பட்டதாக வுள்ளது கேகய நாட்டு அரசனிடத்தும் இவ்வாறே இராமன் கூற அவனும் காணிக்கைகள் எல்லாம் உன்னிடத்திலேயே குறைவற்றதாக இருக்கட்டும் எனச் சொல்லிப் புறப்பட்டதாகவுள்ளது. காசி ராசனையும் தழுவிக்கொண்டு காசிக்குப் புறப்படச் சொல்லிவிட்டு மற்றைய முந்நூறு அரசர்களையும் பார்த்து உங்கள் அன்பாலும் குணங்களாலும் அறம் குறைவின்றி விளங்குகின்றது. உங்கள் புண்ணியச் சிறப்பாலும் அருளாலும் தான் இராவணன் கொல்லப் பட்டான். அவன் வீழ்ச்சிக்கு யான் வெளிப்படையான கருவி; அவ்வளவுதான்.

சனகன் மகளைக் காட்டினின்றும் இராவணன் கவர்ந்து கொண்டு போன செய்தியைக் கேட்டதுமே பரதனால் நீங்கள் அழைக்கப்பட்டீர்கள். பெருமுயற்சியும் பெருந்தன்மையுமுடைய உங்கள் எல்லோர்க்கும் வெகுகாலம் கடந்துவிட்டது. இங்கிருந்து திரும்பிப் போக நான் விடை தருகின்றேன் என்று கூறியதாக வுள்ளது.

ஒட்டக்கூத்தர் இவற்றையெல்லாம் விளக்கமாகக் கூறவில்லை.

7 **வான்மீகத்தில்:** அனுமான் இராமனைப் பார்த்து இராமாயணம் எவ்வளவுகாலம் பூலோகத்தில் நிகழ்கின்றதோ அதுவரையில்தான் எனது உயிர் என்னுடம்பில் இருக்கும். இதற்கையமில்லை என்றுகூற இராமன், இருக்கையினின்றும் எழுந்து அனுமனை அன்புப் பெருக்கால் தழுவிக் கொள்கின்றான் உலகங்கள் எவ்வளவு காலம் நீடித்திருக்குமோ அவ்வளவுகாலம் என்கதையும் விளங்கும். அதுவரையில் உன் உயிரும் உடலில் இருக்கட்டும் என்று சொல்லித் தன் மார்பிலணிந்திருந்த ஒளிமிக்க வைடூரிய மாலையைக் கழற்றி அனுமானின் கழுத்தில் அணிவிக்

கின்றான். பின்னர் சுக்கிரீவன் முதலிய வானரர் எல்லோரும் கண்ணீர்விட்டுக்கொண்டு பிரிந்து போகின்றார்கள் என்றுளது.

ஒட்டக்கூத்தர் அனுமானைப் பற்றிய இந்த நிகழ்ச்சிகளைச் சொல்லவில்லை. சுருக்கம் கருதிச் சொல்லவில்லை போலும்.

மன்னர்கள் எல்லாம் இராவணனோடு போர் செய்யும் பொருட்டுப் பரதனால் அழைக்கப்பட்டார்கள் என்பதும், இவர்கள் புறப்படுவதற்குள் இராவணன் வதை முடிந்து இராமன் வந்து சேர்ந்துவிடவே அங்கேயிருந்து முடிசூட்டுவிழாவிற்குப் பின் இவர்கள் எல்லாம் இராமனால் அனுப்பப்பட்டார்கள் என்பதும் வான்மீகத்தில் கூறப்பட்டுள்ளது.

ஒட்டக்கூத்தர் இதனைக் கூறவில்லை.

## படலப் பொருட்சிறப்பு

இந்த அனுமப் படலத்தில் இராமன் அகத்தியரிடம் அனுமனைப் பற்றிப் பாராட்டிக் கூறும் பகுதி மிகுசிறப்புடையது. அனுமானுடைய சிறப்புகள் அனைத்தையும் ஒன்றுசேர்த்துக் கூறியுள்ள திறம் வியக்கத்தக்கதாகவுள்ளது. இதுவொரு அனுமபுராணம் என்று சொல்லுமாறு அது அமைந்துள்ளது. பேராற்றல் பெற்றிருந்த வாலியின் சிறப்பினை விரித்துக்கூற எண்ணிய அகத்தியரைப் பார்த்து மறவாலி கொற்றம் அதுவோ கிடக்க' என்று வாலியின் கொற்றத்தைக் கேட்க விரும்பாமையை இராமன் புலப்படுத்திவிடுகின்றான். மறவாலி என்றதால் கொடுமை நிறைந்தவன் என்ற குறிப்பும் பொருந்தச் செய்துள்ளான். ஒருவன் சிறப்பு வெற்றியில் மட்டும் இல்லை- அவன் தூய ஒழுகலாற்றில்தான் உள்ளது என்பதை யறிந்தவன் இராமன் ஆதலின், இராவணனோடு நட்புச் செய்து கொண்ட ஒன்றே அவன் இழிவுக்குப் போதுமான சான்றாகும் என்பதையுங்கொண்டு அத்தகைய குற்றம் ஏதும் இல்லாமல் நன்னெறி சென்று நல்லறத்திற்குத் துணையாய் நின்ற அனுமனை ஒப்பவர் இவ்வுலகில் இலர் என்பதைப் புலப்படுத்துகின்றான்.

பகைவரை அச்சமுறச் செய்யும் வலிமையாலும் மேருமலையின் பெருமை குன்றச் செய்யும் நெகிழ்ச்சியில்லாத உறுதியான உடல் கட்டாலும், குறைவிலாத கல்வி கற்ற அறிவாலும் அளவில்லாத குணத்தாலும், நீதியாலும் வெற்றியாலும் அனுமனை ஒப்பவர் இவ் வுலகில் யாருளர்?

கடலில் காவல் செய்துகொண்டிருந்த அங்காரதாரை என்ற அரக்கியின் வாயில் நுழைந்து அவள் குடலை மாலையாகச் சூடிக் கொண்டு அவள் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே வந்து கடலைத் தாண்டிப் பகைவர்தம் வெற்றிதரும் கருவிகள் எல்லாம் பொடியாகுமாறு அழித்துவிட்டுத் தன்னை எதிர்த்த சம்புமாலி முதலிய அரக்கர்களையும் அவர்தம் நால் வகைப்படைகளையும் சங்காரம் செய்த அனுமானை ஒப்பவர் இவ்வுலகில் யார்?

வெள்ளிமலையை உருத்திரனோடு அள்ளியெடுத்த வலிமைமிக்க இராவணனுக்கு மகனாகிய அக்ககுமாரனைத் தரையொடு தரை யாகுமாறு கையால் அரைத்துக் கொன்று இலங்கை நகரை எரியூட்டிப் பின்பு வந்த சேனையைக் கடல் அலைகளோடு அழுந்துமாறு அமுக்கிவிட்டு ஒரே தாவில் கடலின் வடகரையை அடைந்த வெற்றியனுமனை ஒக்குமவர் யார்?

போர் செய்யும் வலிய வில்லேந்தும் இலக்குவனை எழுபது வெள்ளம் வானரப்படையோடும் இந்திரசித்துப் பிரமன் படையால் மயங்கச் செய்தபோது, மேருமலைக்கு வடக்கேயுள்ள மருத்து மலையை யெடுத்துக்கொண்டு ஒரு நாழிகைப் பொழுதில் வருபவர் ஒருவர் உளரோ? அவ்வாறுவந்த அனுமானை ஒப்பவர் இவ்வுலகில் யாருளர்?

இவனால்தான் சூரியன் மகனாகிய சுக்கிரீவனோடு எனக்கு இனிய நட்பும் உறவும் ஏற்பட்டன. இவனால்தான் கடலில் அணைகட்ட இயன்றது. இவனால்தான் யான் அரக்கர்குலம் வேரறுத்தது என்றால் இனி யான் சொல்லுவது யாதுளது? அறத்திற் பிரியாத அனுமான் வளர்வானேல் மேருமலையினும் பெரிதாக வளர்வான். சிறிதாக ஒடுங்குவானேல் அணுவினும் சிறியவனாவான். காரியம் செய்யும்போது அளவான வடிவுடன்

இருப்பான் என இராமன் அனுமான் பெருமைகளை வாயாரப் புகழ்கின்றான். தனக்குக் கீழ் பணி செய்துகொண்டிருந்த அனுமன் புகழை இவ்வாறுவிரித்துக் கூறும் இராமன் இயல்பு அவன் பெருந் தன்மையைப் புலப்படுத்துகின்றது. உலகில் பணியாளர்க்கு ஏற்றமளிக்கும் புதுநெறியை வகுத்துக்கொடுத்துள்ளான் எனலாம்.

இராமபிரான் மன்னர்களுக்கெல்லாம் விடைகொடுத்து அனுப் பும் நிகழ்ச்சியைக் கூறும் செய்யுட்கள் பதின்மூன்றும் அடிதோறும் முதற்சீர் முழுவதும் ஒத்துவரும் யமகமாக அமைத்துள்ள முறை புலவர்க்கு அமுதமொத்தினிக்கும் தன்மையது.

விடணனை வழியனுப்பும் செய்தியைக் கூறும், 'வீடணன் வீடணைவோர்க்குத் தாள் திறக்கும் தாளானை, வெய்யாள் ஏவக் காடணைந்த கருங்களிற்றைக் கழலிணைத்தாமரை வணங்க, கனக மேருக் கோடணைந்த தோளாரக் கொண்டல் நிறத்தவனவனைப் புல்லிச் செம்பொன் நாடணைந்த சுரர் போற்ற நல்லரசு செய்தி யென விடுத்தான் நாதன்' என்ற செய்யுள் அமுதமொத்தினிப்பதை அனுபவித்துக் காணலாம். இதனை எத்தனைமுறை சொன்னாலும் சலிப்புத் தோன்றாது இனிமை சொட்டும் இயல்பினது.

### அகத்தியர்க்கு இராமன் சொல்லத் தொடங்குதல்

623. புலவா ளரக்க னிருநா லிரட்டி
யொருநாலு பெற்ற புயமும்
தலையான பத்து முறவால் விசித்த
சயவாலி கொற்ற முழுதும்
மலையா சலத்து மறையோ னுரைப்ப
வதெலான் மனத்தி லுணராச்
சிலையா லரக்கர் திறல்வே ரறுத்த
திறலா னுரைக்கு மிவையே.

புலைவாள் அரக்கன் இருநால்இரட்டி
ஒருநாலு பெற்ற புயமும்
தலையான பத்தும் உற வால் விசித்த
சயவாலி கொற்றம் முழுதும்
மலையாசலத்து மறையோன் உரைப்ப, அது
எலாம் மனத்தில் உணராச்
சிலையால் அரக்கர் திறம்வேர் அறுத்த
திறலான் உரைக்கும் இவையே.

பொ : புலால் வீசும் வாளையுடைய இராவணனது இருபது தோள்களும் பத்துத் தலைகளும் அழுந்துமாறு வாலால் இழுத்துக் கட்டிய வெற்றியை யுடைய வாலியின் வீரச் செயல்கள் முழுவதையும் பொதிய மலையில் வாழும் அகத்திய முனிவர் சொல்லத் தொடங்க அவ்வரலாறு எல்லாவற்றையும் மனத்தில் உணர்ந்து, வில்லினால் அரக்கர்தம் இனத்தை வேரறுத்த திறலையுடைய வனாகிய இராமன் இவற்றைச் சொல்வானானான்.

கு : பகைவர் உடம்பினை அரிந்து பழகிய வாள் ஆதலின் அது புலால் கமழ்வதாயிற்று. இருநாலிரட்டி என்றது பதினாறினை. அதனோடு ஒரு நாலுபெற்ற புயம் என்றது இராவணனின் இருபது தோள்களை. உற — அழுந்த. வால் விசித்த என்றது வாலால் கட்டின என்றவாறு. இராவணன் வாலியின் வாலால் கட்டுண்டதைச் சொன்ன அகத்தியர் வாலியின் வீரவரலாறு முழுவதையும் சொல்லத் தொடங்க, அதனை உளங்கொண்ட இராமபிரான் இவற்றைச் சொல்லலானான்; எனப் பின் கூறும் நிகழ்ச்சிக்குத் தோற்றுவாய் செய்தவாறு. மலையாசலம் — பொதியமலை. இவையுரைக்கும் என மாறுக. வேரறுத்தல் என்றது பூண்டோடு அழித்தலை. உரைப்ப என்றது உரைக்கத் தொடங்க என்னும் கருத்தினது. வருஞ்செய்யுளில் மறவாலி கொற்றம் அதுவோ கிடக்க என இராமன் கூறியதாக வருவதால் அகத்தியமுனிவர் வாலியின் வீர வரலாற்றைச் சொல்லத் தொடங்கிய அளவில் இராமபிரான் அதுவோ கிடக்க என நிறுத்திவிட்டு அனுமானின் சிறப்பைச் சொல்லுகின்றான் எனக்கொள்க. (க)

இராமபிரான் வாலியின் கொற்றம் கிடக்கட்டும்,
அநுமானை ஒப்பவர் ஆர்? எனல்

621. மறவாலி கொற்ற மதுவோ கிடக்க
மருவார் வெருக்கொள் வலியால்
நிறைவான் மிசைப்பொன் வரையீ டழித்து
நெகிழாது நிற்கு நிலையால்
குறையாத விச்சை யதனு லளப்பில்
குணநீதி கொற்ற முழுது
மறிவா லியற்று மநுமானை யொக்கு
மவரார் சகத்தி லினியே.

மறவாலி கொற்றம் அதுவோ கிடக்க
மருவார் வெருக்கொள் வலியால்
நிறைவான் மிசைப் பொன்வரை ஈடுஅழித்து
நெகிழாது நிற்கும் நிலையால்
குறையாதவிச்சை அதனுல், அளப்புஇல்
குணம் நீதி கொற்றம் முழுதும்
அறிவால் இயற்றும் அநுமானை ஒக்கு
மவர் ஆர் சகத்தில் இனியே.

பொ: வீரத்தையுடைய வாலியின் வெற்றியது கிடக்கட்டும், பகைவர் அச்சம் கொள்ளுமாறு செய்யும் வலியாலும் நிறைவாக வுள்ள ஆகாயமீது உயர்ந்து தோன்றும் மேருமலையைப் பெருமை குன்றச் செய்துவிட்டுச் சிறிதும் நெகிழ்ச்சியின்றி உறுதியாக நிற்கும் உடல் நிலையாலும், குறைவுபாடாத வித்தைகற்ற அறிவாலும், அளவு இல்லாத குணம், நீதி வெற்றி முழுவதையும் அறிவோடு செய்கின்ற அநுமானை ஒப்பவர் இனி இவ்வுலகில் யாருளர்? (ஒருவரும் இலர் என்றவாறு).

கு: வலிமையாலும் உடம்பின் தோற்றத்தாலும் மேரு மலையையும் தோல்வியுறச் செய்தற்குரியவன் அநுமான் என்ற வாறு. மருவார் வெருக்கொள் வலியால், நெகிழாது நிற்கும்

நிலையால், குறையாத விச்சையதனுல் அநுமானை ஒக்குமவர் ஆர் என்க. அளப்பில் குணம் நீதி கொற்றம் முழுதும் அறிவால் இயற்றும் அனுமன் என அனுமனுக்கு அடையாக்குக. அளப்பில் குணமும்நீதியும் உடையனுய்க்கொற்றம் முழுவதையும் அறிவோடு இயற்றுகின்ற அநுமன் என்றவாறு. சகத்தில் இனி அனுமானை ஒக்குமவர் ஆர்? என இயைக்க. வாலியின் கொற்றத்தைச் சொல்லத் தொடங்கிய அகத்தியரிடம் இராமபிரான் 'மறவாலி கொற்றமதுவோ கிடக்க' என்றது, அவ்வாலியின் வலியைத் தாமே அறிந்துள்ளமையாலும் அவன்பால் குணமும் நீதியும் இன்மை தெரிந்தமையாலும் ஆம். கொற்றமதுவோ என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. மருவார் – பகைவர். வெருக்கொளல் – அஞ்சுதல். பொன்வரை என்றது மேருமலையை. வானளாவிய உயர்ச்சியைப் புலப்படுத்தவேண்டி நிறைவான் மிசைப்பொன்வரை என்ருர். அனுமானின் துளக்கமில்லாத நிலையைப் புலப்படுத்த நெகிழாது நிற்கும் நிலையால் என்ருர். விச்சையதனுல் என்றது, அனுமானின் நூலறிவைப்புலப்படுத்தவேண்டி; நவவியாகரணங் களையும் சூரியனெடு திரிந்துகேட்ட பெருமை அனுமனுக்கு உண்டு என்பதை நினைப்பித்தவாறுமாம். (௨)

சம்புமாலியை வென்றமை

625. அங்கார தாரை குடர்மாலை சூடி
யலைவேலை தாவி யடையார்
தங்கார ணங்கள் பொடியாக நூறி
வருசம்பு மாலிமுதலோர்
பொங்கார வார மொடுநேர் பொருந்தி
வருசேனை யானை பரிதேர்
சங்கார மாடு மனுமானை யொக்கு
மவரார் சகத்தி லினியே.

அங்கார தாரை குடர்மாலை சூடி அலைவேலை தாவி, அடையார் தம் காரணங்கள் பொடியாக நூறி வருசம்புமாலி முதலோர்

பொங்கு ஆரவாரமொடு நேர்பொருந்தி வருசேனை யானைபரிதேர்
சங்காரம் ஆடும் அனுமானை ஒக்குமவர் ஆர் சகத்தில் இனியே

பொ: கடலில் காவல் செய்துகொண்டிருந்த அங்காரதாரை என்ற அரக்கியின் வாயில் நுழைந்து குடலை மாலையாகச் சூடிக் கொண்டு புறம்போந்து அலைகளோடு கூடிய கடலைத்தாண்டிப் பகைவர்தம் வெல்லுதற்குக் காரணமான கருவிகள் எல்லாம் பொடிப் பொடியாகுமாறு அழித்துத் தன்மேல் போர் செய்ய வரும் சம்பு மாலி முதலியவர்களையும் மிக்க ஆரவாரத்தோடு தன்நேரில் பொருந்தி வருகின்ற அவர்தம் காலாட்படையும் யானைப்படையும் குதிரைப்படையும் தேர்ப்படையும் ஆகிய நால்வகைப் படைகளை யும் சங்காரம் செய்யும் அனுமானை ஒப்பவர் இனி இவ்வுலகில் யார்? (ஒருவரும் இல்லை என்றபடி).

கு: அங்காரதாரை என்பவள் தென்கடலில் வாழ்ந்து கொண் டிருந்த அரக்கி. இவள் அங்கு வருவோரின் நிழலைப்பிடித்து இழுத்து அவர்களை விழுங்கும் திறமுடையவள். அனுமான் கடலைத் தாவும்போது 'இங்கார் கடத்திரெனை யென்றுவெழுந்தாள்' 'அங்காரதாரை பெரிதாலால மன்னாள்' (சுந்தர-கடருவு-76) என்று இவள் செயலைக் குறிப்பிடுதல் காணலாம். திசைமுழுவதும் தன் வாயாகத் திறந்து கொண்டு விழுங்க வந்த இவளது வாய் வழியே அனுமன் புகுந்து அவள் குடலைக் கைக்கொண்டு விண்ணில் தாவினான். 'சாகாமிருகத் தலைவரிற்றிலக மன்னான். ஏகாவரக்கி குடல் கொண்டுட னெழுந்தான், மாகாலசைப்ப வடம் மண்ணினுற வாலோடு, ஆகாயமுற்ற கதலிக்குவமை யானான்'(சுந்தர-கடருவு-85) என்பது இங்கு நினைக்கத்தகும். காரணங்கள் என்றது போர்க்குக் காரணமான கருவிகளை. நுறி – அழித்து. சம்புமாலி என்பவன் பிரகத்தனுக்கு மகன். இராவணன் கட்டளையிட்டபடி இவன் அனுமானைப் பற்றச் சென்றவன். தேரினுட் புக்குக் கலித்தான் சிலையைக் கையால் வாங்கிக் கழுத்தினிடையிட்டு வலித்தான் பருவாய் மடித்து மலைபோற்றலை மண்ணிடை வீழ (சுந்தர – சம்புமாலிவதைப் – 47) என அனுமன் சம்புமாலியைக் கொன்ற நிகழ்ச்சி கூறப்படுதல் காணலாம். முதலோர் என்றது பஞ்சசேனபதிகள், அக்ககுமாரன் என்போரை. நால்வகைப்

படையோடு அவர்களையும் அனுமான் சங்காரம் செய்தான் என்றவாறு. அரக்கர் வாழ்கின்ற இலங்கையில் தனி ஒருவனைச் சென்று சம்புமாலி பஞ்சசேனாதிபதியர், அக்ககுமாரன் போன்றோரைக் கொன்ற திறம் மற்றவர்களால் இயலும் திறமன்று என்பார் 'அனுமானை ஒக்குமவரார்?' என்றார். சங்காரம் செய்தல் — கொல்லுதல். (௫)

அக்ககுமாரனை வென்ற வீரம்

626. வரையோ டுருத்திரனை மீதெடுத்த
வயவா ளரக்கன் மகனைத்
தரையோ டரைத்து நகர்தீ மடுத்து
வருசே னையைச் சலதியில்
திரையோ டமுக்கி யொருதா விலத்தி
வடதீர முற்ற திசைமேல்
உரையோடு வெற்றி யநுமானை யொக்கு
முரவோர் சகத்தி லுளரோ.

வரையோடு உருத்திரனை மீது எடுத்த வயவாள் அரக்கன் மகனைத்
தரையோடு அரைத்து நகர்தீமடுத்து வருசேனையைச் சலதியில்
திரையோடு அமுக்கி, ஒருதாவில் அத்திவடதீரம் உற்ற, திசைமேல்
உரையோடு வெற்றி அநுமானை ஒக்கும் உரவோர் சகத்தில்
[உளரோ?

பொ: கயிலைமலையோடு உருத்திரனை மேலே தூக்கிய வலிய வாளேந்திய இராவணனுக்கு மகனாகிய அக்ககுமாரனைத் தரையோடு தரையாகுமாறு கையால் அரைத்துக் கொன்று இலங்கை நகரை எரியூட்டிப்பின் வந்த சேனையைக் கடலில் அலைகளோடு அழுந்துமாறு அமுக்கிவிட்டு, ஒரே தாவில் கடலின் வடகரையை அடைந்த எண்திசை மேலும் புகழ் பரவுதற்குக் காரணமான வெற்றியையுடைய அனுமானை ஒக்கும் வலிமையுடையோர் உலகத்தில் உளரோ? (இலர் என்றவாறு).

கு: வரை என்றது கயிலைமலையை. இராவணன் கயிலை மலையை யெடுத்த நிகழ்ச்சியை 'வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்ததிருமேனி' (யுத்த-இராவணன் வதைப் - 239). எனவும், அஞ்சாதே கயிலாய மலையெடுத்த வரக்கர்கோன் தலைகள் பத்தும் மஞ்சாடுதோளெரிய வடர்த்தவனுக் கருள்புரிந்த மைந்தர் கோயில் (8-130-1 ஞானசம்பந்தர் தேவாரம்) எனவும் வருமாற்றுல் உணரலாம். வயவாளரக்கன் என்றது சிவன் கொடுத்த வலிய வாலினையேந்திய இராவணன் என்பது புலப்பட வேண்டி. அரக்கன் மகன் என்றது, அக்ககுமாரனை 'வயிரக்கையொடு பிடியா விண்ணொடு மண்காணத் தேய்த்தான் (அக்ககுமாரன் வதைப் - 38) என்பதால் அரக்கன் மகனைத் தரையோடு அரைத்தமை புலனும். நகர் தீ மடுத்து என்றது, இலங்கை யெரியூட்டிய படலத்தால் அறிதற்குரியது. அத்தி - கடல். வடதீரம் என்றது வடகரையை. உரை-புகழ். எண்திசைகளின் மேல் புகழ் பரவுதற்குக் காரணமான வெற்றியையுடைய அனுமன் என்க. ஓடுதல் - பரத்தல். உரவோர் - வலிமையுடையோர். அனுமன் தனக்குவமையில்லாதவன் என்பது விளக்கிய வாறு. (௪)

மருத்துமலை கொணர்ந்த மாண்பு

627, அருமா தவத்தின் முனிவா வுரைக்கி
னநுமானை யொக்கு மவரார்
செருவார் சிலைக்கை யிளையோனை மிக்க
திறல்வா னரப்ப டையொடும்
மருவார் மயக்க வடமே ருவுக்கு
வடபான் மருத்து மலைகொண்
டொருநா ழிகைக்குள் வருவா ரொருத்த
ருளரோ சகத்தி னினியே.

அருமாதவத்தின் முனிவா! உரைக்கின்
அநுமானை ஒக்குமவர் ஆர்?
செருவார் சிலைக்கை இளையோனை மிக்க
திறல் வானரப் படையொடும்

மருவார் மயக்க, வடமேருவுக்கு
வடபால் மருத்துமலை கொண்டு
ஒருநாழிகைக்குள் வருவார் ஒருத்தர்
உளரோ? சகத்தில் இனியே?

பொ: செயற்கரிய பெரிய தவத்தினைச் செய்து முடித்த அகத்திய முனிவா! போர் செய்யும் தன்மை நிறைந்த வில்லை யேந்திய கையினையுடைய என் இளையோனாகிய இலக்குவனை மிக்க திறமை வாய்ந்த எழுபது வெள்ள வானரப்படையோடும் பகைவர்களாகிய அரக்கர் பிரமாத்திரத்தால் மயங்கச் செய்ய, அப்போது வடமேருமலைக்கு வடக்கேயுள்ள மருத்துமலையை யெடுத்துக்கொண்டு ஒரு நாழிகைப் பொழுதிற்குள் வருவார் ஒருவர் இந்த உலகத்தில் இனி இருக்கின்றாரோ? ஆதலால் சொல்லுமிடத்து அநுமானை ஒப்பவர் யாருளர்? (ஒருவருமிலர்)

கு: அருமாதவம் என்றது, பிறரால் செய்தற்கு அரிய பெருந்தவத்தை. மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் வேனிலில் நெருப்புக்கிடையில் நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் வரும் வருத்தத்தைப் பொறுத்துக் கொண்டு நெடிதிருக்கும் தவநிலை செயற்கரும் செயலாதல் தெளிவு. செருவார் சிலை — போர் செய்தற்குரிய தன்மைகள் நிறைந்த வில். செரு வார் சிலை எனப் பிரித்துப் போர் செய்தற்குரிய நீண்ட வில் எனக் கொள்ளலும் ஆம். போர் செய்யும் வில்லையேந்தியிருந்தும் பிரமாத்திரத்தால் மயங்கலானான் இலக்குவன் என நினைப்பித்து அரக்கரின் மாயங்களை விளக்கியவாறு. மருவார் என்று பொது வகையாற் கூறியிருப்பினும் இந்திரசித்தினையே கொள்ளுதல் வேண்டும். என்னை? அவனே பிரமாத்திரத்தால் அனைவரையும் மயங்கிவிழச் செய்தவன் ஆதலின் என்க. அனுமான் சாம்பவான் சொன்ன அடையாளங்களைக் கொண்டு மருத்துமலையை விரைந் தடைந்து மருந்துகள் இரவில் தெரியாமையால் அம்மலைச் சிகரத் தையே விரைந்து கொணர்ந்து அனைவரையும் எழுப்பிய அற்புதச் செயலை இராமன் நினைந்து கூறியவாறு. கால விரைவு கூறுமுகத் தால் ஒரு நாழிகைக்குள் என்றார். இந்நிகழ்ச்சி மருத்துப்படலத் தால் அறியலாம் மருத்துமலை கொண்டு ஒரு நாழிகைக்குள்

வருவார் சகத்தில் இனி உளரோ? எனவே, அனுமானை ஒக்குமவர் ஆர்? என இயையும். (ரு)

வெற்றியெல்லாம் அனுமானால் என்றல்

628. இவனா லருக்கன் மகனோ டெமக்கிவ்
வினிதாய நட்பு முறவும்
இவனா லளப்பில் பெருநீ ரடைத்த
திளையா வயத்த நுமனும்
இவனா லரக்கர் பொருசே னையிற்சென்
றிடையூ றகற்றி யவெலாம்
இவனா லரக்கர் குலம்வே ரறுத்த
தினியா னுரைப்ப தெவனோ?

இவனால் அருக்கன் மகனோடு எமக்கு
இவ் இனிதாய நட்பும் உறவும்;
இவனால் அளப்புஇல் பெருநீர் அடைத்தது;
இளையா வயத்து அநுமனும்
இவனால் அரக்கர் பொருசேனையில் சென்று
இடையூறு அகற்றிய எலாம்;
இவனால் அரக்கர் குலம் வேர்அறுத்தது
இனி யான் உரைப்பது எவனோ?

பொ: சூரியன் மகனாகிய சுக்கிரீவனோடு இந்த இனிய நட்பும் உறவும் இவ்வநுமனால் இயன்றது தான். அளவிட முடியாத பெரிய நீரையுடைய தென்கடலுக்கு அணைகட்டி அடைத்தது இவனாலேயாம். யார்க்கும் இளையாத வலியினை யுடைய அனுமானாகிய இவனால்தான் அரக்கர்களின் போர் செய்கின்ற சேனையில் சென்று இலக்குவனுக்கு வந்த இடையூறு நீக்கிய செயலெல்லாம் நிகழ்ந்தது. யான் அரக்கர்தம் குலம் வேரறுத்ததே இவனால்தான், இனி யான் சொல்வதற்கு யாதுளது?

கு: இவனால் என்ற சொல்லே நான்குமுறை சொற்பின் வருநிலையணி பொருந்த வந்தது. அநுமனுற்ற இல வற்புறுத்த

வேண்டியே, கூறியது கூறலாகாது. கூறியது கூறலுங் குற்ற மன்று வேறொரு பொருளை விளக்குமாயின்" என்பது காண்க. அருக்கன் மகன் என்றது சுக்கிரீவனை. சுக்கிரீவனை நண்பனாகக் கொண்டதோடு தம்பி என்ற உறவுடையனாகவும் இராமபிரான் கொண்டானாகலின் நட்பும் உறவும் இவனால் என்றார். குன்று சூழ்வான் மகனொடும் அறுவராணோம் என்றது நினைக்க. எமக்குச் சுக்கிரீவனோடு நட்பும், பெருநீர் அடைத்ததும், அரக்கர் சேனையிற் சென்று இடையூறு அகற்றியதும் அரக்கர்குலம் வேரறுத்ததும் இளையாவயத்து அநுமனும் இவனால் என்று கூறி முடித்த இராமன் இனி யான் உரைப்பது எவனோ? என்று முடிவு செய்கின்றான். இனிச் சொல்லவேண்டுவது ஒன்றும் இல்லை என்றவாறு. சேதுபந்தனம் கட்டியதில் பெரும் பங்கு அனுமானுக்குரியது என்னும் கருத்தால் அளப்பில் பெரு நீரடைத்தது இவனால் என்றார். அரக்கர் சேனையிற் சென்றிடையூறு அகற்றியது என்பது அனுமன் இராமபிரானைத் தன் தோள்மேல் தாங்கிக்கொண்டு அரக்கர் சேனையில் புகுந்து நூறுபத்துடை நொறில் பரித்தேரின் மேனுன்முன், மாறில்போரரக்கன் பொர நிலத்து நீ மலைதல் வேறுகாட்டுமோர் வெறுமையை மெல்லியனெனினும் ஏறுநீயைய வென்னுடைத்தோளின் மேலென்றான் (முதற்போர் - 218) என்றது காண்க. (சுா)

அநுமன் வரலாற்றை முற்றும் உரைத்தி என
அகத்தியர்க்கு இராமன் கூறுதல்

629. பிறியா வறத்தி னநுமான் வளர்ச்சி
பெருமேரு விற்பெ ரியனும்
சிறிதா யொடுக்கு மெனின்மே னியற்ப
வணுவா னதிற்சி றியனும்
உறுகா ரியத்தி னளவா முருக்கொ
ளுயர்வீ ரனுற்ற வலிதான்
அறியா திருக்கு மதுவேது முற்று
மறிவா னுரைத்தி யெனவே.

பிறியா அறத்தின் அநுமான்
 வளர்ச்சி பெருமேருவின் பெரியன் ஆம்
சிறிதாய் ஒடுக்கும் எனின் மேனி,
 அற்ப அணுவானதிற்சிறியன் ஆம்;
உறுகாரியத்தின் அளவாம் உருக்கொள்
 உயர்வீரன்உற்ற வலிதான்
அறியாதிருக்கு மது ஏது? முற்றும்
 அறிவான் உரைத்தி எனவே.

பொ: தருமத்தினின்றும் பிரியாத அநுமன் வளர்ச்சி பெறுவானுயின் பெரிய மேருமலையைக் காட்டிலும் பெரிய வடிவினனுவன்; தன் மேனியைச் சிறிதாய் ஒடுக்குவான் எனின், சிறிய அணுவிலும் சிறியன் ஆவன்; தான் இவ்வுலகத்திற்கு வந்த காரியம் முடித்தற்பொருட்டு அளவாகிய உருவத்தைக் கொண்டுள்ள வீரனுகிய அனுமான் அடைந்துள்ள வலிமைதான் உலகவரால் அறியாதிருக்கும் நிலை ஏது? ஆயினும் முழுவதும் அறியும் பொருட்டுச் சொல்லுக என இராமன் சொல்ல.

கு: பிறியா அறத்தின் அனுமான் என்றதை அறத்திற் பிரியா அநுமான் எனப் பிரித்துக் கூட்டுக. பிரியா என்பது எதுகை நோக்கிப் பிறியர் என வந்தது. அறத்திற் பிரியான் எனவேஎன்றும் தருமத்திற்குத் துணையாயவன் என்பது போதரும். சிறிதாயொடுக்கு மெனின் எனப் பின்வருந் தொடரை நோக்கின் முதலடியில் வளர்ச்சி பெறின் மேருவிற் பெரியனும் என்ற பாடம் இருந்திருத்தல் வேண்டும் எனத் தோன்றுகிறது. அப் பாடம் கிடைக்காமையால் வளர்ச்சி பெறுவானுயின் என வேண்டும் சொல் வருவிக்கப்பட்டது. வளர நினைத்தால் மேருவிற் பெரிய வடிவினனுவன். மேனியை ஒடுக்க நினைத்தால் சிறிய அணுவினும் சிறியவன் ஆம் என்றவாறு. இத்தகு ஆற்றலுடையவன் ஏன் அவ்வடிவத்தோடு உலாவவில்லை என்ற வினுவிற்கு விடை கூறுவாராய் உறுகாரியத்தின் அளவாம் உருக்கொள் உயர் வீரன் என்ருர். வந்த வேலையை முடிக்க வேண்டி மிகப்பெரியதும் மிகச்சிறியதும் ஆகிய வடிவுகொள்ளாமல் அளவான வடிவத்தோடு அனுமான் விளங்கினுன் என்றவாறு. அனுமானின் பேருருவம்

உருக்காட்டுப் படலத்தாலும் சிறிய உருவம் ஊர்தேடு படலத்தில் புகை புகாவாயிலும் புகுவான் என்றதாலும் அறியலாம். அனுமானின் வலிமை யாரும் அறியாதிருக்க வழியில்லை என்பார். அறியாதிருக்குமாறு ஏது? என்றார். அங்ஙனமாயினும் அவன் வலிமை முழுவதும் ஒழிவில்லாமல் அறிந்து கொள்ளும் பொருட்டு உரைத்தி என அகத்தியர்க்கு இராமன் சொன்னான் என்றவாறு. உரைத்தினனக் குறியோன் உரைக்கும் எனவருஞ் செய்யுளில் முடியும்; குளகம். (எ)

இராமன் கட்டளையையேற்று அகத்தியன்
அனுமானின் பிறப்பும் வீரமும் பேசத் தொடங்கல்

630. மறவோர் குலத்தை யறவே ரறுத்து
மனுநீதி பற்றி யரசாள்
திறலோ னுரைத்த வமிழ்தூறு சொற்கள்
செவிவாய் மடுத்து நுகரும்
குறியோ னுரைக்கு நெடியோய் குறிக்கொ
ளெனமே தினிக்கு ளணிசீர்
அறிவோரின் மிக்க வநுமா னுதிப்பு
மதிசே வகச்செ யலுமே.

மறவோர் குலத்தை அற வேர்அறுத்து,
மனுநீதிபற்றி அரசு ஆள்
திறலோன் உரைத்த அமிழ்து ஊறு சொற்கள்
செவிவாய் மடுத்து நுகரும்
குறியோன் உரைக்கும்; நெடியோய்!
குறிக்கொள்என மேதினிக்குள் அணிசீர்
அறிவோரின் மிக்க அநுமான்
உதிப்பும், அதிசேவகச் செயலுமே.

பொ: பாவிகளின் குலத்தை முழுவதும் கெடுமாறு வேரோடு களைந்து ஒழித்துவிட்டு மனுவின் நீதிநூலைப் பின்பற்றி அரசு செய்கின்ற திறமைமிக்கவனாகிய இராமன் சொன்ன, அமிழ்து சொட்டுகின்ற சொற்களைச் செவியில் கேட்டு அநுபவிக்கும் பேறுபெற்ற

குறிய வடிவினனாகிய அகத்தியன், (இராமனைப் பார்த்து) நெடியோனே! குறிக்கொண்டு கேட்பாயாக என்று தொடங்கி இப்பூமிக்குள் அழகையும் சீரையும் அறிகின்ற அறிஞர்களின் மிக்கோனாகிய அனுமானின் பிறப்பும் பெரியவீரச் செயலும் உரைப்பானானன்.

கு: மறம் – பாவம். மறவோர் – பாவிகள்; என்றது, அரக்கரை. குலத்தையற வேரறுத்து என்புழி, அற என்றது இடைப்பிறவரலாய் வந்தது. அரக்கர் குலமே பூமியில் அற்றுப் போகுமாறு வேரோடு ஒழித்து என்றவாறு. அறுத்து, பற்றி அரசாள் திறலோன் என்று இராமனைச் சிறப்பித்தவாறு. இராமபிரானின் வாயில் பிறந்த அமிழ்தனைய சொற்களைச் செவி மடுக்கும் வாய்ப்பு நமக்குக் கிட்டவில்லையே என்ற ஏக்கம் தோன்றுமாறு இந்நூலாசிரியர் திறலோன் உரைத்த அமிழ்தூறு சொற்கள் செவிவாய் மடுத்து நுகரும் குறியோன் என்றார். வடிவிற் குறியனாயினும் இராமன் சொல்லமுதை நுகரும் பாக்கியத்தில் நெடியவனே என்பது குறிப்பால் அறிவித்தவாறு அமிழ்தூறு சொற்கள் என்றது அமிழ்தின் சுவை சொட்டுகின்ற இராமன் சொற்களை. செவிவாய் என்புழி 'வாய்' ஏழன் உருபு. செவியில் என்பது பொருள்; இனி, செவியாகிய வாயில் என்றும் பொருள் கொள்ளலாம். மடுத்தல் – உட்கொள்ளுதல். நுகர்தல் என்றது அநுபவித்தலை. குறியோன் உரைக்கும் நெடியோய் என்புழி முரண்தொடை யமைந்தழகு செய்தல் காணலாம். குறிக்கொள் என்றது மனம் பொருந்திக்கேள் என்றவாறு. மேதினி – பூமி. அணிசீர் அறிவோர் என்றது உலகில் அழகையும் புகழையும் அறிந்த அறிவுடையோரை இனி, அழகையும் சிறப்பையுமுடைய அறிஞர் எனலும் ஆம். அறிஞரில் அறிஞன் அநுமான் என்றவாறு. உதிப்பு–பிறப்பு. சேவகம் – வீரம். குறியோன், அநுமான் உதிப்பும் சேவகச் செயலும் உரைக்கும் என மாறுக. (அ)

அநுமான் பிறப்பு

631. சூரியன் றரு வரத்தினன்
சுவணமேருவெனும்
பேரினன்செறி பெருவரைத்
தோளினன் பேணும்

பாரி லஞ்சனே வயிற்றினிற்
பவனனுக் குதித்தோன்
பாரி னும்பெரு வலியுடை
யெழின்மணிப் புதல்வன்

சூரியன் தரு வரத்தினன் - சுவணமேரு எனும்
பேரினன், செறிபெருவரைத் தோளினன் - பேணும்
பாரில் அஞ்சனே வயிற்றினில் பவனனுக்கு உதித்தோன்
யாரினும் பெருவலியுடை எழில்மணிப் புதல்வன்.

பொ : உலகில் உள்ள எல்லோரினும் பெருவலியுடைய அழகிய மணிபோன்ற புதல்வனுகிய அனுமான், சூரியனுல் தரப்பட்ட வரத்தையுடையவன், கண்டோர்க்குப் பொன்மயமான மேருமலைபோல் தோன்றுவதால் சுவணமேரு என்ற பிள்ளைத் திருநாமத்தையுடையவன்; இரண்டாய் நெருங்கிய பெரியமலை போன்ற தோள்களையுடையவன்; போற்றுதற்குரிய பூமியில் காற்றின் வேந்தனுக்கு அஞ்சனை என்பவளின் வயிற்றினில் உதித்தவன்.

கு : சூரியன்தரு வரத்தினன் என்றது, சூரியனுல் கொடுக்கப் பட்ட வரத்தையுடையவன் என்றவாறு. சூரியன் தந்த வரமாவது 'என் கிரணங்களாய கரங்களில் நூறில் ஒருகூறு உனக்குப் பொருந்துக! எல்லா வித்தைகளும் தாங்குதற்குரிய சத்தியுண் டாகுக' எனக் கொடுத்த வரம். இது இப்படலத்து முப்பத்தைந்தாம் செய்யுளால் விளங்கும். சுவணமேரு என்பது காரணப்பெயர் பவனன் - வாயுதேவன். வாயுதேவனுக்கும் அஞ்சனு தேவிக்கும் பிறந்தவன் என்றவாறு. (கூ)

பெற்றேரும் வானத்துற்றேரும் மகிழ்தல்

632. பிறந்த போழ்தினிற் பிள்ளைதன்
பெருவலி யறிந்து
சிறந்த தாயருந் தந்தையுஞ்
சிந்தையுள் மகிழ்ந்தார்

மறங்கொள் நெஞ்சுடை வாளெயிற்
றரக்கர்தம் வாழ்நாள்
குறைந்து ளாரெனக் குனித்தது
வானவர் கூட்டம்.

பிறந்த போழ்தினில் பிள்ளைதன் பெருவலி அறிந்து
சிறந்த தாயரும் தந்தையும் சிந்தையுள் மகிழ்ந்தார்
மறம் கொள் நெஞ்சுடை வாள்எயிற்று அரக்கர்தம் வாழ்நாள்
குறைந்துளார் எனக் குனித்தது வானவர் கூட்டம்.

பொ: பிறந்தபோதே தம் பிள்ளைக்கு இருக்கும் பெரிய வலிமையை அறிந்து, சிறப்புள்ள தாயும் தந்தையும் மனத்துக்குள் மகிழ்வாரானூர். பாவ எண்ணங்களைக் கொண்டுள்ள நெஞ்சினை யுடைய, வாள்போன்று கூரிய கோரைப் பற்களையுடைய, அரக்கர் தம் ஆயுள் நாள் குறைந்தவர் ஆனூர் என்று தேவர்கள் கூட்டம் மகிழ்ச்சியினுல் கூத்தாடிற்று.

கு: சிறந்த என்ற அடையைத் தந்தைக்கும் கூட்டுக. சிறந்தார் எனப் பெற்றேர் இருவரும் பேசப்படுவர். தாயர் என்றது அஞ்சனையை. தந்தையென்றது வாயுதேவனை. தம் பிள்ளை யின் பெருவலியைப் பிறர்க்குக் கூறின் கண்ணேறு படுமாதலின் பிறர்க்குப் புலப்படாது மகிழ்ந்தார் என்பார், சிந்தையுண் மகிழ்ந் தார் என்ருர். மறம்—பாவம். பாவஞ் செய்தலையே நினைக்கும் நெஞ்சு என்பார் மறங்கொள் நெஞ்சு என்ருர். வாள் எயிறு கூறியது அரக்கர்க்குக் கோரைப்பல் இருத்தல் பற்றி. அறத்திற் பிரியாத அனுமான் வலிமையால் மறத்திற் பிரியா அரக்கர் மாய்வது திண்ணம் என்ற எண்ணத்தால் வானவர் கூட்டம் அரக்கர்தம் வாழ்நாள் குறைந்துளார் எனக் குனிக்கலாயிற்று குனித்தல் — கூத்தாடுதல். ஆடுங்கால் காலை வளைத்துநின்று ஆடும் இயல்பு புலப்படக் குனித்தது என்ருர். கூட்டம் என்ற சொல் அஃறிணை ஒருமையாதல் பற்றிக் குனித்தது என ஒருமையாற் கூறினூர். (கய)

### தனக்கு உணவு யாதென்ற அனுமானுக்கு அஞ்சனை கனியே உணவெனல்

633. துனிவி லாமதி யன்னையைப்
புதல்வனுந் தொழுதிங்
கினிய தாமிரை யாதெனக்
கியம்புதி யென்னப்
பனியு லாவிய சோலையிற்
பருவத்திற் சிவந்த
கனியெ லாமுனக் காவதென்
றன்னைதான் கழற.

துனிவு இலாமதி அன்னையைப் புதல்வனும் தொழுது இங்கு
இனியது ஆம் இரையாது எனக்கு இயம்புதி என்னப்
பனி உலாவிய சோலையில் பருவத்தில் சிவந்த
கனி எனலாம் உனக்கு ஆவது என்று அன்னைதான் கழற.

பொ: வெறுப்பில்லாத புந்தியையுடைய தன் தாயை மகனாகிய அனுமான் தொழுது 'எனக்கு இங்கு இனிதாகிய இரை யாது? சொல்லுக' என்று கேட்க, அன்னைதான் குளிர்ச்சி பொருந்திய சோலையில் தக்க பருவத்தில் சிவந்த பழமெலாம் உனக்கு இரையாவதே என்று சொல்ல.

கு: துனிவு – வெறுப்பு. மகன் செயலைக்கண்டு வெறுப் படையாத இயல்புடையவள் தாயாகலின், மகன்கேட்ட கேள்விக்கு வெறுப்பின்றி விடை கூறினாள். குரங்கும் விலங்கினமாதல்பற்றி அதன் உணவை இரை என்று கூறினார். பனி – குளிர்ச்சி. உலாவுதல் – பொருந்துதல். கனியிருக்கக் காய்கவர்தல் கூடாது என்பாள், பருவத்தில் சிவந்த கனியெலாம் உனக்காவது என்றாள். கழறுதல் – சொல்லுதல். கழற என்ற செயவெனெச்சம், வருஞ் செய்யுளில் பசியினால் 'பதைபதைத்து இரங்கிப் பரிதிமேற் பாய்ந் தான்' என முடியும். (கக)

அநுமான் சூரியனைப் பழமெனக் கருதிப் பாய்தல்

634. செழுமல ர்த்திரு வனையதாய்
செழுங்கனி நாடிப்
பழுவ முற்றிடப் பசியினுற்
பதைபதைத் திரங்கி
அழுத ரற்றிய பாலனவ்
வன்னைமுன் சொன்ன
பழந மக்கிது வாமெனப்
பரிதிமேற் பாய்ந்தான்.

செழு மலர்த்திரு அனைய தாய் செழுங்கனி நாடிப் பழுவம் உற்றிடப், பசியினுல் பதைபதைத்து, இரங்கி அழுது அரற்றிய பாலன், அவ் அன்னைமுன் சொன்ன பழம், நமக்கு இதுவாம் எனப் பரிதிமேல் பாய்ந்தான்.

பொ: செழுமையான செந்தாமரை மலரில் உள்ள திருமகள் போன்ற தாய் அஞ்சனை. தன் மகனுக்காகச் செழுமையான கனியைத் தேடிக் கொண்டு காட்டிற்குச் செல்ல, தனித்துப் பசியினுல் பதைபதைத்து உளமிரங்கி அழுது வாய் திறந்து அரற்றிய குழந்தை அநுமான், அந்தத் தாய் முன் சொன்ன சிவந்த பழம் நமக்கு இதுவேயாகும் என்று சூரியன் மேல் பாய்ந்தான்.

கு: சூரியன் உதிக்கும் நிலையில் சிவந்து காணப்பட்டதைப் பார்த்து இது சிவந்திருத்தலின் நம் அன்னை கூறிய சிவந்த கனி இதுவேயாகும் என்று கருதிச் சூரியன்மேல் பாயலானுன். அனுமன் பசி தணிக்க அன்னை வனம் நண்ணியதை யறியாது, பசி பொறுக்க முடியாமையால் தானே சூரியனைப் பழம் எனத் திரியக் கொண்டு அதனைக் கவரப் பாய்தான் என்றவாறு. (கஉ)

வானவர் முதலோர் அநுமானைக் கண்டு வாழ்த்துதல் 13, 14

635. பாய நோக்கிய வானவர் தானவர் பழிப்பில்
தூய மாதவர் முதலினேர் தோன்றிய வியப்பால்

வாயு வேகமும் வயினதே யன்றன்மாக் கதியும்
ஒய்வி லாதிவ னிடத்தினி லிருக்கவென்
றுரைத்தார்.

பாய, நோக்கிய வானவர், தானவர், பழிப்புஇல்
தூய மாதவர் முதலினோர் தோன்றிய வியப்பால்,
வாயு வேகமும் வயினதே யன்தன்மாக் கதியும்
ஒய்வு இலாது அவன் இடத்தினில் இருக்க' என்று உரைத்தார்.

பொ : சூரியன்மேல் அனுமான் பாய்ந்ததைப் பார்த்த தேவர்களும் தானவர்களும் பழிப்பு இல்லாத தூய்மைமிக்க மாதவர்கள்முதலினோரும், தம் உள்ளத்தில் தோன்றிய வியப்பினால் காற்றின் வேகமும் கருடனின் வேகமும் ஓய்வின்றி இவ்வனுமா னிடத்தில் எப்போதும் இருப்பதாக என்று வாழ்த்தினர்.

கு : அனுமான் சூரியன்மேல் பாய அதை நோக்கிய வானவர் முதலோர் அவன் வேகம் வாயுவேகம் போலவும் கருடன் வேகம் போலவும் இருத்தலைக் கண்டு வியந்து இந்த வேகம் எப்போதும் இப்படியே இவனிடம் இருப்பதாக என மகிழ்ந்து வாழ்த்தியவாறு. வியப்பு என்பது முன்னர்க் காணாத ஒன்றினைக்கண்டுழி வருகின்ற மனமருட்கை. பரிதிமேற்பாயும் அனுமானிடம் பொருந்திய வேகத்தை இதுகாறும் வானவர் முதலினோர் கண்டதில்லை யாகலின் காணாததைக் கண்டு வியந்து இவ்வேகம் எப்போதும் இவனுக்கு நிலைத்திருப்பதாக என எண்ணி வாழ்த்தினர். இவ்வாழ்த்தே மருத்துமலை கொணரச் சென்ற அன்று அனுமனுக்குத் துணை செய்ததுபோலும். (கரு)

636. பின்னுங் கூறுவார் பிறந்தபோ
தேயிவன் பிதாவே
அன்ன வேகத்தி னுற்றலா
லருக்கன்மேற் பாய்ந்தான்

மன்னு மாருதி வளர்ந்தபின்
மருவல ராஞேர்
என்ன தாகியென் படுவரோ
விவன்கையா லென்ருர்.

**பின்னும் கூறுவார் பிறந்தபோதே இவன் பிதாவே**
**அன்ன வேகத்தின் ஆற்றலால் அருக்கன்மேல் பாய்ந்தான்**
**மன்னும் மாருதி வளர்ந்தபின், மருவலர் ஆஞேர்**
**என்னது ஆகி என்படுவரோ இவன்கையால் என்ருர்?**

பொ : மேலும் சொல்லுவர்ராய் 'இவன் பிறந்தபோதே இவனுடைய தந்தை வாயுதேவன் போன்ற வேகத்தின் வலிமையால் சூரியன்மேல் பாய்ந்தான். நிலைபேறுடைய அனுமன் வளர்ந்த பிறகு பகைவராயுள்ளோர் என்ன நிலையினராய் என்ன பாடு படுவார்களோ இவன் கையினுல்' என்று கூறினுர்கள்.

கு: பிறந்தபோதே சூரியன்மேற் பாய்ந்தவன், வளர்ந்த பின்பு எப்படிப் பாய்வாஞே? இவனுல் பாயப்பட்டோர் என்ன நிலையில் இருப்பார்களோ? என்ன பாடு படுவார்களோ? என்றவாறு இவன் கையால் மருவலர் ஆஞேர் என்னது ஆகி என்படுவரோ? என இயையும். பின்னும் கூறுவாராய் என்ருர்; என முடியும். அனுமன் சிரஞ்சீவியாதலின் மன்னு மாருதி என்று சிறப்பித்தார். மன்னுதல் – நிலைபெறுதல். மருவலர் – பகைவர். இவன் கையால் என்னது ஆகி என்படுவரோ என்று வாஞேர் முதலியோர் இங்குக் கூறியதற்கேற்ப, அக்ககுமாரன் அனுமன் கையால் தரையில் தேய்க்கப் பெற்று அழிந்ததை இங்கு நினையலாம். வயிரக்கை 'கொடுபிடியா விண்ணுேடு மண்காணத் தேய்த்தான் ஊழியினுலகேழ் தேயினுமொருதன் புகழிறை தேயாதான்' (அக்ககுமாரன் வதைப்-38) என்றது காண்க. (கசா)

**வாயு தேவன் வாழ்த்து**

**637. ஈது வானவர் தானவர் முதலிஞே ரியம்ப**
**வாத ராசனீ தியம்பினன் 'பாயுமென் மைந்தன்**

மீது வெய்யவன் வெங்கதிர். வெண்ணிலா
சீத சந்தனச் சீகர மாகுக வென்றான்.[வென்னச்

ஈது வானர் தானவர் முதலினோர் இயம்ப
வாத ராசன் ஈது இயம்பினன் பாயும், 'என்மைந்தன்
மீது வெய்யவன் வெங்கதிர் வெண்ணிலா என்னச்
சீத சந்தனச் சீகரம் ஆகுக' என்றான்.

பொ: வானவரும் தானவருமாகியோர் இதைச் சொல்ல, வாயுதேவன் இதனைச் சொன்னான். 'தாவிச் செல்கின்ற என்மகன் அநுமான் மீது படும் சூரியனுடைய வெப்பமான கிரணங்கள் எல்லாம் வெள்ளிய நிலாக்கதிர்களைப் போன்றவாய்க் குளிர்ந்த சந்தன மழையாக ஆகுக' என்று கூறினான்.

கு: ஈது இயம்ப என இயையும். வாதராசன்—வாயுதேவன். என் மைந்தன்மீது படும் சூரியனின் வெப்பமான கிரணங்கள் வெண்ணிலவின் கிரணங்களைப் போல்வனவாய்க் குளிர்ந்த சந்தன மழைபோலத் திகழ்வதாக என வரங்கொடுத்தான் வாயுதேவன் என்க. சீகரம்—மழை. வாயுதேவன் தன் மகன்மேல் வைத்த அன்பின் மிகுதியால் வெய்யவன் வெங்கதிர் வெண்ணிலா என்ன என்று கூறியதோடு அமையாது சீத சந்தனச் சீகரம் ஆகுக எனவும் கூறலானான். சீதம்—குளிர்ச்சி. சந்தனச் சீகரம் என்றது, சந்தன மாகவே பெய்கின்ற மழையை; சூரியன் கிரணங்கள் அனுமான்மீது படும்போது வெண்ணிலவின் தண்ணிய கிரணங்களைப் போலவும் குளிர்ந்த சந்தன மழையைப் போலவும் விளங்க வேண்டும் என்றவாறு. ஆகுக என்றது போலுக என்னும் பொருளது. 'ஆள்வாரிலி மாடாவேனோ என்புழி ஆவேனோ என்பதற்குப் போல்வேனோ எனப் பொருள் கூறப்படுதல் காணலாம். (௬௫)

சூரியன் அனுமனிடம் கருணை காட்டல்

638. ஆய்ந்து தாதையீ தியம்பிட
வருக்கன் மேலேறப்
பாய்ந்து மண்டிலம் பற்றினன்
கௌவலு மதனுக்

கேய்ந்து வெய்யவ னிவன்சிசு
வெனமன மிரங்கிக்
காய்ந்தி லன்பெருங் கருணையாற்
காதல வென்றான்.

ஆய்ந்து தாதை ஈது இயம்பிட அருக்கன்மேல் ஏறப்
பாய்ந்து மண்டலம் பற்றினன் கௌவலும் அதனுக்கு
ஏய்ந்து வெய்யவன், இவன்சிசு என மனம் இரங்கிக்
காய்ந்திலன்; பெருங்கருணையால் காதல! என்றான்.

பொ: (சூரியனைப் பற்றும் அனுமானுக்கு வெப்பம் தாக்கா திருக்க வேண்டுமே என்று) ஆராய்ந்து தந்தையாகிய வாயு தேவன் இதைச் சொல்ல, சூரியன்மேல் பொருந்தப் பாய்ந்து அவன் வட்டத்தைக் கையால் பற்றிக்கொண்டு வாயால் கவ்வுதலும் அச்செய்கைக்கு உடன்பட்டுச் சூரியன், சிறுகுழந்தை என மனம் இரங்கி அவனைக்கண்டு கோபித்துக்கொள்ளவில்லை; பெரிய கருணையால் (அனுமனைப் பார்த்து) காதல! என்று அழைத்தான்.

கு: ஈது இயம்பிட என்றது, என் மைந்தன்மீது வெய்யவன் வெங்கதிர் வெண்ணிலா வென்னச் சீதசந்தனச் சீகரம் ஆகுக என்று முன் சொன்னதை. அருக்கன் – சூரியன். மண்டலம் என்றது சூரியன் வடிவமாகிய வட்டத்தை. அதனுக்கு ஏய்ந்து என்றது, அனுமன் கையால் பற்றுதற்கும் வாயால் கவ்வுதற்கும் உடன்பட்டிருந்து என்றவாறு. அனுமன் சிறுகுழந்தையாகலின் அவன் செயலுக்கு வெகுளலாகாது என்ற கருத்தால் வெய்யவன் இவன் சிசு என மனம் இரங்கிக் காய்ந்திலன் என்றார். காய்ந்திலன் – வெகுண்டிலன். மனம் இரங்கியதால் காய்ந்திலன் என காரணப்பொருளதாக்குக. வெயில் காய்ந்திலன் என்ற பொருளும் உடன் தோன்றிற்று. காதல என்றது அன்பனே! என்றவாறு. தன்னைக் கையால் பற்றி வாயால் கவ்வுகின்றவனைக் காதல என்று விளித்தது சூரியனுடைய பெருங்கருணையால் நிகழ்ந்தது என்பார், பெருங்கருணையால் காதல! என்றான் என்றார். (கசு)

சூரியனை அனுமன் பற்றியிருத்தலைக் கண்ட இராகு இந்திரனிடம் சொல்லுதல்

639. அற்றை நாளிலவ் வலர்கதிர்
மண்டல மதனைப்
பற்று வான்சென்று பார்த்தலும்
பற்றியே நின்ற
கொற்ற மாருதி தனைக்கண்டு
குலைந்துபோ யிராகு
வெற்றி விண்ணவர் வேந்தனைக்
கண்டிவை விளம்பும்.

அற்றை நாளில் அவ்அலர் கதிர் மண்டலம் அதனைப்
பற்றுவான் சென்று பார்த்தலும், பற்றியே நின்ற
கொற்ற மாருதிதனைக் கண்டு குலைந்துபோய் இராகு
வெற்றி விண்ணவர் வேந்தனைக் கண்டு இவை விளம்பும்.

பொ: அனுமன் பற்றிநின்ற அந்நாளில் அந்த விரிந்த கிரணங்களையுடைய சூரிய மண்டலத்தைப் பற்றுதற்குச் சென்று இராகு பார்த்தலும், அம்மண்டலத்தைப் முன்னமே பற்றிநின்ற வெற்றிவாய்ந்த அனுமனைக் கண்டு மனம் நடுங்கிச் சென்று வெற்றியையுடைய தேவர்கட்கு அரசனைக் கண்டு இவற்றைச் சொல்லுவானானன்.

கு: அநுமன் சூரியனைப் பற்றிய நாள் அமாவாசை நாள் ஆதலின் அன்று இராகு சூரியனைப் பற்றுதற்கு எண்ணி நண்ணிப் பார்க்கும் பொழுது, அச்சூரியனைப் பற்றிக்கொண்டு அநுமன் இருத்தலைக் கண்டு மனம் நடுங்கி இந்திரனிடம் சொல்லலானன் என்றவாறு. அநுமன் உருவத்தைப் பார்த்துப் பயந்த இராகு, தான் ஒன்றும் செய்ய முடியாது என்பதை அறிந்து தனக்குத் தலைவனாகிய இந்திரனிடம் சொல்லலானன் என்க. மருத்துவின் மகன் மாருதி எனவருதல் தத்திதாந்தநாமம் என்பர். குலைதல் - மனம்

நடுங்குதல். வெற்றி விண்ணவர் வேந்தன் என்றது, இந்நிகழ்ச்சியிலும் வெற்றி காண்பான் என்னும் குறிப்பினது. (கள)

இராகுவின் முறையீடு

640. மன்னு மிந்திர மதிகதிர்
மண்டலம் விழுங்க
முன்ன மேயெமை விதித்தனை
முறைகெட வேறோர்
அன்னி யன்புகுந் தலர்கதிர்
மண்டலம் கவ்வி
இன்ன மும்விடா னிவையென்ன
நியாயங்க ளென்றான்.

மன்னும் இந்திர! மதி, கதிர் மண்டலம் விழுங்க
முன்னமே எமை விதித்தனை; முறைகெட வேறுஓர்
அன்னியன் புகுந்து அலர்கதிர் மண்டலம் கவ்வி
இன்னமும் விடான்; இவைஎன்ன நியாயங்கள்? என்றான்.

பொ: நிலைபேறுடைய இந்திரனே! சந்திர மண்டலத்தையும் சூரிய மண்டலத்தையும் விழுங்குதற்கு முன்னமே எம்மை விதித்திருக்கின்றாய்; அந்த முறை கெடுமாறு வேறு ஓர் அயலவன் இடையில்புகுந்து விரிந்த சூரிய மண்டலத்தைக் கவ்விக் கொண்டு (யான் வந்தபின்னும்) இன்னும் விடாமல் இருக்கின்றான் (உரிமையில்லாத அயலவன் சூரியனைப் பற்றுதலும் விடாமையுமாகிய) இவை என்ன நியாயங்களாகும்? என்று முறையிட்டான்.

கு: மதிகதிர் மண்டலங்களைப் பற்ற முன்னமே விதித்தவனும் இப்பொழுது இருப்பவனும் வேறல்லன் என்பான், மன்னுமிந்திர! என விளித்தான். மதிகதிர் மண்டலம் என்றது உம்மைத்தொகை. மதியும் கதிருமாகிய மண்டலம் என்றவாறு. அன்னியன் - உரிமையில்லாத அயலவன். கவ்வியது ஒரு பிழை,

உரியவன் வந்தபின்னும் விடாமை மற்ருெரு பிழை. இந்த இரண்டும் நியாயம் அல்ல என்பான் இவையென்ன நியாயங்கள் எனப் பன்மையாற் கூறினுன். (கஅ)

### இந்திரன் இராகுவை ஏவுதல்

641. என்று கூறிட வெரிவிழித்
திந்திரன் வெள்ளிக்
குன்று போலயி ராவத
மேற்கொண்டு குறுகிச்
சென்றி ராகுவைத் தினகரற்
பற்றெனச் செப்ப
நன்றி தென்றவ னுயிறு
தனைச் சென்று நண்ணி.

என்று கூறிட எரிவிழித்து இந்திரன் வெள்ளிக்
குன்றுபோல் அயிராவதம் மேற்கொண்டு குறுகிச்
சென்று, இராகுவைத் தினகரற் பற்று எனச் செப்ப,
நன்று இது என்று அவன், நாயிறுதனைச்சென்று நண்ணி.

பொ : என்று இராகு முறையிட்டுச் சொல்ல, இந்திரன் கண் நெருப்புப் போலச் சிவக்கப்பார்த்து, வெள்ளிமலை போலும் அயிராவதம் என்னும் வெள்ளானையின்மேல் ஏறிக்கொண்டு சூரியனை நெருங்கிச் சென்று இராகுவைப் பார்த்து, 'சூரியனைப் போய்ப் பற்றுக' எனச் சொல்ல, நல்லது என்று அந்த இராகு சென்று சூரியனை நெருங்கி.

கு : இராகு எடுத்துக் காட்டிய முறைகேட்டினைக் கேட்ட வுடன் இந்திரன் சினந்து பார்த்தபோது அவன் கண்கள் நெருப் பெனச் சிவந்தன ஆதலின் எரிவிழித்து என்ருர். குன்றுபோலும் அயிராவதம் என்பதனுள் உம் விகாரத்தால் தொக்கது. அயிரா வதம் என்பது நான்கு கொம்புகளையும் வெண்ணிறத்தையுமுடைய

தெய்வயானை. இது பார்க்கடலில் தோன்றியது. குறுகுதல்—நெருங்குதல். தினகரன் – சூரியன். தினத்தைச் செய்கின்றமை பற்றி வந்த காரணப் பெயர். தன் தலைமை தோன்ற இராகுவை நோக்கிச் சூரியனைப் பற்றெனெ ஆணையிட்டான். அவன் ஆணையின்படி இராகு சூரியனை நெருங்கினான்; நண்ணி என்னும் வினையெச்சம் பற்றுவான் எண்ணிய என வருஞ் செய்யுளின் வினைகொண்டு முடியும். குளகம். (கரு)

அனுமன் தன்மேல் வருவது கண்டு இராகு இந்திரனடியில் வீழ்தல்

642. இரவி மண்டலம் பற்றுவா
னெண்ணிய விராகு
வரவு கண்டனன் மாருதி
மண்டலம் விட்டவ்
அரவின் மேலுறப் பாய்தலு
மாங்கவன் கதறி
வெருவி யோடினன் விண்ணவர்
கோனடி வீழ்ந்தான்.

இரவி மண்டலம் பற்றுவான் எண்ணிய இராகு,
வரவு கண்டனன் மாருதி, மண்டலம் விட்டுஅவ்
அரவின்மேல் உறப் பாய்தலும் ஆங்கு அவன் கதறி
வெருவி ஓடினன், விண்ணவர் கோன் அடி வீழ்ந்தான்.

பொ: சூரியன் மண்டலத்தைப் (இந்திரன் ஆணைப்படி) பற்றுவதற்கு எண்ணிய இராகுவின் வரவைக் கண்டனனாய் அநுமான் சூரிய மண்டலத்தை விடுத்து அந்த இராகு என்னும் பாம்பின்மேல் பொருந்தப் பாய்தலும், அங்குள்ள இராகு கதறிக் கொண்டு அஞ்சி ஓடினனாய்த் தேவேந்திரன் திருவடியில் போய் வீழ்ந்தான்.

கு: இந்திரன் ஆணைப்படி சூரிய மண்டலத்தைப் பற்றுதற்கு நெருங்கிய இராகுவை அநுமன் கண்டு அந்த இராகுவின் மேல்

பாய்ந்தான் என்றும் அதுகண்டு பயந்து கதறிக்கொண்டு இராகு தன்னை ஏவிய இந்திரனிடம் ஓடிவந்து அவன் திருவடியில் வீழ்ந்தான் என்றும் கொள்க. மண்டலம் விட்டு என்றது இதுகாறும் பற்றியிருந்த சூரிய மண்டலத்தை விடுத்து என்றவாறு ஒன்றை விட்டு மற்றொன்றைப் பற்றுகின்ற குரங்கின் இயல்பைப் புலப்படுத்தியவாறு. அவ் அரவு – அந்த இராகு என்னும் பாம்பு வெருவுதல் – அஞ்சுதல். அடிவிழ்ந்தான் எனவே அபயம் புகுந்தான் என்பது புலப்படும். (உ. 1)

அனுமன் இராகுவை விடுத்து அயிராவதத்தின்மேல் பாய்தல்

643. வெருவி யோடின வெவ்வரா
விணைத்தொடர் வேக
வரியின் மேலரி யழன்றயி
ராவத முந்தப்
பெரிய தோர்கனி பெற்றனெ
னெனப்பெரி துவந்து
கரியின் மேலெழப் பாய்ந்தனன்
காற்றினுங் கடியான்.

வெருவி ஓடின வெவ் அராவினைத் தொடர்வேக
அரியின்மேல் அரி அழன்று அயிராவதம் உந்தப்
பெரியதோர் கனி பெற்றனென் எனப் பெரிது உவந்து
கரியின்மேல் எழப் பாய்ந்தனன் காற்றினும் கடியான்.

பொ: தன்னைக்கண்டு அஞ்சி ஓடின கொடிய இராகு என்னும் பாம்பினைத் தொடர்ந்து வருகின்ற வேகத்தையுடைய அநுமன்மேல் இந்திரன் வெகுண்டு தன் வாகனமாகிய அயிராவதத்தைச் செலுத்திக்கொண்டு செல்ல, காற்றினும் வேகமுடையவனாகிய அனுமான், பெரியதோர் பழத்தைப் பெற்றுவிட்டோம் என்று பெரிதும் மகிழ்ந்து அந்த வெள்ளையானைமேற் செல்லப் பாய்ந்தான்

கு: தொடர்வேக அரி என்றது தொடர்கின்ற வேகத்தை யுடைய அநுமனை தொடர் அரி என்றது வினைத்தொகை அரி என்பது குரங்கு, இந்திரன் என்ற இரு பொருளையும் இங்கு உணர்த்த வந்தது. அரியின்மேல் அரி அழன்று - அனுமன் மேல் இந்திரன் வெகுண்டு. உந்துதல் – செலுத்துதல். வெள்ளை யானையைக் கண்டவுடனே அனுமான் பெரியதோர் பழம் என அதனை எண்ணி மகிழ்ந்து அதன்மேல் பாய்ந்தான் என்றவாறு. பாய்ந்து செல்வதில் தந்தையினைக் காட்டிலும் விரைவுடையவன் அனுமான் என்பார், காற்றினும் கடியான் என்றார். காற்றினுங் கடியான் பெரியதோர் கனிபெற்றனென் எனப் பெரிதுவந்து கரியின் மேலெழப் பாய்ந்தனன் என இயையும். (உக)

இந்திரன் குலிசம் எறிய அனுமான் விழுதல்

644. இன்ன காலையி லிந்திர
னெதிர்வருங் கூற்ற
மன்ன மாருதி மேற்கன
லாலகா லம்மெனக்
கொன்னு னைப்பெருங் குலிசம்விட்
டெறிதலுங் கொண்ட
தனனி னைப்பினை மறந்துபோய்த்
தரணியில் வீழ்ந்தான்.

இன்ன காலையில் இந்திரன், எதிர்வரும் கூற்றம்
அன்ன மாருதிமேல் கனல் ஆலகாலம் எனக்
கொல்நுனைப் பெருங் குலிசம் விட்டு எறிதலும், கொண்ட
தன்நினைப்பினை மறந்துபோய்த் தரணியில் வீழ்ந்தான்.

பொ: இந்தச் சமயத்தில் இந்திரன் தன் எதிரில் வருகின்ற எமனைப்போன்ற அநுமான் மேல், கனலுகின்ற நுனியினையுடைய பெரிய வச்சிரப்படையை வீசி எறிதலும், அனுமான் முன்கொண்ட தன் நினைவையே மறந்து போய்த் தரையில் வீழ்ந்தான்.

கு: அனுமானைக் கண்டபோது இந்திரனுக்கு எமன் எதிர் வருவதுபோல இருந்தது என்றவாறு. தன்னைக் கொல்லவரும் கூற்றுவனாகவே எண்ணித் தற்காப்புக்காக வச்சிரப் படையை வீசித் தாக்கினான் இந்திரன் என்க. கனலுகின்ற ஆலகாலம் என வினைத்தொகையாகக் கொள்க. ஆலகாலம் என்றது பெரிய நஞ்சினை. பெரிய நஞ்சுபோலக் கொல்லவல்ல நுனியினையுடைய வச்சிரப்படை என்க. குலிசம் – வச்சிரப்படை. கொண்ட நினைப்பு என்றது, பசிக்குப் பழம் அருந்தவேண்டும் என்ற நினைப்பினை. இந்திரனது வச்சிரப்படையால் தாக்குண்டு அநுமான் மூச்சற்றுத் தரையில் வீழ்ந்தான் என்றவாறு. (உஉ)

வாயுதேவன் தன்மகனை எடுத்துக் கொண்டுபோய்
ஓரிடத்து அடங்கியிருத்தல்

645. மைந்தனை வீழக் கண்ட
வாயு வாசவன்மேற் சீறி
இந்தமூ வுலகு முற்று
மிமைப்பினிற் கெடுப்பெ னென்று
சிந்தையி னெண்ணி யந்தச்
சேயினை யெடுத்துக் கொண்டங்
கந்தரத் தியக்க மின்றி
யடங்கின னிருந்த காலை.

மைந்தனை வீழக் கண்ட வாயு வாசவன்மேல் சீறி,
இந்த மூவுலகு முற்றும் இமைப்பினில் கெடுப்பென் என்று
சிந்தையின் எண்ணி, அந்தச்சேயினை எடுத்துக் கொண்டு, அங்கு
அந்தரத்து இயக்கம் இன்றி அடங்கினன் இருந்த காலை.

பொ: தன் மைந்தனாகிய அநுமானை வீழக்கண்ட வாயு தேவன் (இவ்வாறு வீழச் செய்த) இந்திரன்மேல் கோபங்கொண்டு இந்த மூன்று உலகங்கள் முழுவதையும் இமைப்பொழுதில் அழிப்பேன் என்று மனத்தில் எண்ணி, அந்த மைந்தனை எடுத்துக்

கொண்டு விண்ணில் இயங்காமல் அங்கு ஓரிடத்தில் அடங்கி யிருந்தபோது.

கு: இந்திரன், தன் மகனை வீழ்த்தியதற்கு ஈடாக அவன் ஆட்சியிலுள்ள மூவுலகங்களையும் இமைப்பொழுதில் அழிப்பேன், எனக் கருவுகொண்டு வாயு விண்ணில் எப்போதும் இயங்குகின்ற தன் இயக்கத்தை விடுத்து அநுமானை எடுத்துக்கொண்டு அங்கு ஓரிடத்தில் அடங்கியிருந்தான் என்றவாறு. வாயுவின் இயக்கமே மூவுலகும் வாழ்தற்குக் காரணமாகும். அவ்வியக்கத்தை நிறுத்திக் கொண்டால் எவ்வுயிர்தான் வாழமுடியும்? எனவே, வாயு தன் கோபத்தைக் காட்டவே ஓரிடத்தில் அடங்கியிருந்தான் என்க. இருந்தகாலை, பொறியறு பாவை போன்றும் வீழ்ந்தனர் புவனத் துள்ளோர் என வருஞ் செய்யுளில் முடியும். குளகம். (உரு)

காற்றின் இயக்கம் நின்றமையால் மூவுலகத்தோரும் வீழ்தல்

646. உறுவலி யில்லா மாய
உடம்பினை உள்ளே நின்று
பிறிவிலா தியக்கு கின்ற
பிராணவா யுக்கோ விப்ப
அறுகயிற் றூசல் போன்று
மங்கொடிங் குண்ணின் றூட்டும்
பொறியறு பாவை போன்றும்
வீழ்ந்தனர் புவனத் துள்ளார்.

உறுவலி இல்லா மாய உடம்பினை உள்ளே நின்று
பிறிவு இலாது இயக்குகின்ற பிராணவாயுக் கோவிப்ப,
அறுகயிற்று ஊசல்போன்றும், அங்கொடு இங்கு உள்நின்று ஆட்டும்
பொறிஅறு பாவை போன்றும் வீழ்ந்தனர் புவனத்து உள்ளார்.

பொ: மிக்க வலிமை இல்லாத மாய உடம்பினை உள்ளே நின்று பிரியாமல் எப்பொழுதும் இயங்கச் செய்கின்ற பிராண

வாயுக் கோபித்துக் கொண்டமையால், கயிறு அறுபட்ட ஊசலைப் போலவும் அங்கும் இங்குமாக ஆடுமாறு உள்ளே நின்று ஆட்டு கின்ற இயந்திரக் கயிறு அற்ற பாவை போன்றும் உலகத்துள்ளார் அனைவரும் வீழ்ந்தனர்.

கு : உறுவலி – மிக்கவலிமை. வலிமையில்லாத உடம்பினுக்கு வலியூட்டியியங்குவிப்பது பிராணவாயுவே என்றவாறு. மாய வுடம்பு என்றது மாயையின் காரியமாகிய உடம்பு என்றவாறு. இவ்வுலக வடிவங்களுக்கு மாயையே முதற்காரணம் என்பது சைவசித்தாந்த முடிபு. தேரின் மண் மாயை யாகத் திரிகைதன் சத்தியாக, ஆரியன் குலாலனுய் நின்ருக்குவனகிலமெல்லாம் (சிவஞானசித்தியார்–37) என்பது காணலாம். வாயுதேவனே உயிர்களின் பிராணவாயுவாகவும் இருக்கின்றவன் ஆதலின், அவன் கோவித்துக்கொண்டு அடங்கியவுடன் உலகத்தோர் அனை வரும் இயக்கமற்று வீழ்வாராயினர் என்க. உலகத்தோர் வீழ் வதற்கு அறுகயிற்றூசலும் பொறியறுபாவையும் ஆகிய இரண்டு உவமைகளைக் கூறியுள்ளார். கயிற்றில் தொங்குகின்ற ஊசல், கயிறு அற்றவுடன் தரையில் வீழ்தல்போலப் புவனத்துள்ளோர் வாயுதேவன் அடங்கியவுடன் வீழ்வாராயினர் என்றவாறு. இவ் வுவமை 'பிறைபுல்கு சடையாய் பாதத் தறுகயிறூசலானேன் அதிகைவீரட்டனீரே' (திருநாவுக்கரசர் தேவாரம்-264) என்ற பகுதியை நினைப்பிக்கின்றது. பொறி – இயந்திரக்கயிறு. பிராண வாயு – ஊசலுக்குக் கயிறு போலவும் பாவைக்கு இயந்திரக் கயிறுபோலவும் உயிர்களின் இயக்கத்திற்கு இன்றியமையாத காரணமாக உள்ளது என்றவாறு. பாவை என்பது மரப்பாவையை. நாணகத்தில்லார் இயக்கம் மரப்பாவை நாணால் உயிர் மருட்டி யற்று (திருக்குறள்–1020) என்றது காணலாம். மரப்பாவைக் கூத்தினைப் பொம்மை ஆட்டம் என்பர். (உச)

காற்றினியக்கமின்மையால் உலகின் வறிய நிலை

647. இறைவர்கள் காப்போ ரின்றி
யிடும்பையாற் பெரிது நொந்து
கறைகெழு வேற்க ணாரைக்
காமுறு வோர்க ளின்றி

மறையொலி யின்றிச் சந்தி
வந்தனை யின்றி வேள்வித்
துறைகளு மின்றி வையஞ்
சூனிய மாயிற் றன்றே.

இறைவர்கள் காப்போர் இன்றி இடும்பையால் பெரிதும் நொந்து
கறைகெழு வேல்கண்ணரைக் காமுறுவோர் இன்றி
மறை ஒலி இன்றிச் சந்தி வந்தனை இன்றி வேள்வித்
துறைகளும் இன்றி வையம் சூனியம் ஆயிற்று அன்றே.

பொ: அரசர்களாய் உயிர்களைக் காக்கும் தலைவர்கள் இல்லாமையால் துன்பத்தால் பெரிதும் வருந்தி, இரத்தக்கறை படிந்த வேலைப்போன்ற கண்களையுடைய பெண்டிரைக் காமுறுப வர்களும் இல்லாமல், வேதங்களை ஓதுவார் இல்லாமையால் வேதத்தின் ஒலியும் இல்லாமல், காலைச்சந்தியிலும் மாலைச்சந்தியிலும் செய்யும் சந்தியாவந்தனமும் இல்லாமல், வேள்விகளைச் செய்யும் இடங்களும் இல்லாமல் உலகம் வறிதாக ஆயிற்று.

கு: இறைவர்கள் என்றது அரசர்களை. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கிறையென்று வைக்கப்படும் (திருக்குறள்) என்பது நினைக்கலாம். துன்பம் துடைத்துக் காக்கும் மன்னரையில்லாமையால் உலகவர் துன்பங்களால் பெரிதும் நொந்தனர் என்றவாறு. இதனுல் உலகில் பொருள் செய்வாரின்மை கூறப்பட்டது. காமுறுவோர்களின்றி என்றதனுல் உலகில் இன்பம் உறுவோர் இன்மை கூறப்பட்டது. மறையொலியும் சந்திவந்தனையுமின்றி என்றதனுல் அறஞ்செய்வோர் இன்மையும் வேள்வித்துறைகளுமின்றி என்றமையால் வீட்டை விரும்புவோர் இன்மையும் விளக்கியவாறு. உலக மக்களுக்கு உரிய அறமுதலிய நான்கும் நிகழாமை கூறி உலகம் சூனியம் ஆனதை விளக்கியவாறு. சூனியம் – ஒன்றும் இல்லாமை. இறைவர்களாய்க் காக்கும் மன்னவரில்லாமை மக்களின் பெருந்துன்பத்திற்குக் காரணமாதல் போலவே இன்பம் நிகழாமைக்கும் அறம் நிகழாமைக்கும் வீடு

பேற்று முயற்சி நிகழாமைக்கும் காரணமாயிற்று. காப்போர் இன்மைக்குக் காரணம் காற்றுக் கடவுள் அடங்கியமையே என்பது முன்னரே பெறப்பட்டது. (உ-ரு)

காற்று இன்மையால் மக்களின் ஐம்பொறிகளும் செயலற்றமை

648. மாத்திரைப் போழ்து மேனி
நிற்குமோ வாயு வின்றி
மூத்திரப் புருட வாயி
லடைத்தலான் மூடு தோற்பை
காத்திரம்பெருத்து வீங்கக் கண்செவி
மூக்கு நாத்தோல்
சூத்திர மற்றுச் சிந்துந்
தொகுமணிக் கோவை போன்ற.

மாத்திரைப் போழ்தும் மேனி நிற்குமோ? வாயு இன்றி;
மூத்திரப் புருட வாயில் அடைத்தலான் மூடு தோற்பை
காத்திரம் பெருத்து வீங்கக் கண்செவி மூக்கு நாத்தோல்
சூத்திரம் அற்றுச் சிந்தும் தொகுமணிக் கோவை போன்ற.

பொ: காற்று இல்லாமையால் ஆண்களின் மூத்திரவாயிலும் பெண்களின் தீட்டுவருவாயிலும் அடைத்துக்கொண்டமையால், மூடிய தோற்பை போன்ற உடம்பு பெருத்து வீங்கப் பெற்றுக் கண்ணும் செவியும் மூக்கும் நாக்கும் தோலும் ஆகிய அறிதற் கருவிகள் ஐந்தும் கயிறு அறுதலால் கீழே சிந்துகின்ற கூட்டமான மணிகளையுடைய கோவையைப் போன்றனவாய்த் தம் தன்மை கெட்டு நின்றன. எனவே, காற்று இல்லாமல் இந்த உடம்பு ஒரு நொடிப் போழ்துதானும் நிற்குமோ? நில்லாது காண்.

கு: மாத்திரை என்பது கண்ணிமைப் பொழுதும் கைந்நொடிப்பொழுதும் போன்ற காலச்சிறுமையை. இயல்பெழுமாந்தர் இமை நொடி மாத்திரை. (நன்னூல்—எழுத் – 45) என்பது நினைய

லாம். வாயுவின்றி என்பது வாயுவின்றி மாத்திரைப் போழ்தும் மேனி நிற்குமோ? என முன்னும் வாயுவின்றி மூத்திரப் புருட வாயில் அடைத்தலால் எனப் பின்னும் இயைந்து இடைநிலை விளக்காய் நின்றது. வாயுவின்றி மாத்திரைப் போழ்து மேனி நிற்குமோ எனக்கொண்டு கூட்டுக. இது வேற்றுப்பொருள் வைப்பணி. நிற்குமோ என்ற வினா ஓகாரம், நில்லாது என்னும் எதிர்மறைப் பொருள் உணர்த்தியது. மூத்திரவாயில், புருடவாயில் என உம்மைத் தொகையைப் பிரித்துக் கூட்டுக. புருடு – தீட்டு , மாதவிடாய் – பூப்பு. அது வரும் வழியைப் புருடவாயில் என்றார். இந்த வழிகள் காற்றில்லாமையால் அடைத்து விட்டன- அடைத்த லால் உடம்பு பெருத்து வீங்கிற்று; கண் முதலிய பொறிகளும் தம் தன்மை யிழந்து நின்றன என்றவாறு. மணிக்கோவை போன்றவை கண் முதலிய அறிதற் கருவிகள். மணிக்கோவையில் உள்ள நூல் போன்றது காற்று. நூலற்றதும் சிந்தும் கோவை மணி போலக் காற்று நின்றவுடன் பொறிகள் ஐந்தும் தம் தன்மை யிழந்து நின்றன என்றவாறு. கண் செவி மூக்கு நாத்தோல் என்பது பன்மொழி உம்மைத்தொகை; சேர சோழ பாண்டியர் என்றாற்போல. அனுமான் காரணமாகக் காற்றுக்கடவுள் அடங்கி யிருந்தமையால் உலகத்து ஏற்பட்ட நிகழ்ச்சிகொண்டு உலகின் பொதுவான நிலையை நிறுவியவாறு. (உஅ)

### காற்றின்மையால் உலகவர் யோகியர் போல காட்சியளித்தல்

649. காமபோ கத்தை நீத்துக்
கற்சுவ ருலர்ந்த காட்டம்
ஆமென விருத்த லானு
மைம்புல னடங்க லானும்
வாமமும் வலமும் வாயு
வழங்குத லின்மையானும்
ஏமநீ ருலகி லுள்ளோ
ரியோகிக ளென்னலானார்.

காம போகத்தை நீத்துக் கல்சுவர் உலர்ந்த காட்டம்
ஆம் என இருத்தலானும் ஐம்புலன் அடங்கலானும்
வாமமும் வலமும் வாயு வழங்குதல் இன்மையானும்
ஏமநீர் உலகில் உள்ளோர் இயோகிகள் என்னல் ஆனர்.

பொ : பாதுகாவலான கடல் நீரால் சூழப்பெற்ற இவ்வுலகில் உள்ளவர்கள், காமபோகத்தை விடுத்துக் கற்சுவரும் உலர்ந்த கட்டையும் போலும் எனக் கருதுமாறு அசைவின்றி யிருத்தலானும் ஐம்புலனும் செயல்படாது அடங்கியிருத்தலானும், இடது மூக்கிலும் வலது மூக்கிலும் பிராணவாயுவின் இயக்கம் இன்மையாலும் யோகிகள் போன்றவரானர்.

கு: யோகியர் என்போர் காம இன்பத்தை விடுத்து, அசைவின்றி யிருந்து ஐம்புலனடங்கப்பெற்று மூச்சுக் காற்றை அடக்கிக் கொண்டு நிற்போராவர். இப்போது உலகமக்கள் அனைவருமே கற்சுவரும் உலர்ந்த கட்டையும் போல அசைவின்றியிருத்தலாலும் ஐம்புலன் செயற்படாமல் அடங்கியிருக்கப் பெற்றமையாலும் மூக்கின் இருதுளைகளிலும் பிராணவாயுவின் போக்கு வரவு இல்லாமையாலும் அந்த யோகியர் என்று சொல்லத்தக்கவரானர் என்றவாறு. அசைவின்றி யிருத்தற்குக் கற்சுவரும், உலர்ந்த காட்டமும் உவமை. கல்லும் சுவரும் எனப் பிரித்துக் கூறலும் ஆம். ஆம் என என்புழி ஆம் என்பது உவம உருபு, வாமம் — இடப்பக்கம். இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்று மூக்கின் மூன்று பகுதிகள் உண்டு. மூக்கின் இடது துளையில் இயங்கும் காற்றுக்கு இடைகலை என்றும் வலது துளையில் இயங்கும் காற்றுக்கு பிங்கலையென்றும் அவ்விரண்டிற்கும் இடைப்பட்ட மூக்கு நுனியை சுழுமுனையென்றும் பெயர் கூறுவர். இருத்தலானும் அடங்கலானும் வழங்குதலின்மையானும் உலகிலுள்ளோர் யோகிகள் என்னலானர் என்று ஏதுக்கூறி உவமித்தலின் இச்செய்யுள் ஏது உவமையணி ஆகும். ஏமம் — பாதுகாப்பு. தன்னெழிமெய்ம் முன் யவ்வரின் இகரந்துன்னும் என்று துணிநருமுளரே’ (நன். 205) என்ற விதியால் உள்ளோரியோகிகள் என இகரம் துன்னியது.

(உஎ)

அமரர் முதலியோர் பிரமனிடம் சொல்லுதல்

650. ஆயவை நிகழுங் காலை
யமரர்தா னவர்க ளாய்ந்த
தூயமா தவர்கள் சித்தர்
விஞ்சையர் துறக்கத் துள்ளோர்
வாயுகோ பத்தினாலே மகோதர
ராகி யுள்ளோர்
நாயக னாகி நின்ற
நான்முகன் றன்னை நண்ணி.

ஆயவை நிகழும் காலை அமரர் தானவர்கள் ஆய்ந்த
தூய மாதவர்கள் சித்தர் விஞ்சையர் துறக்கத்து உள்ளோர்,
வாயு கோபத்தினாலே மகோதரர் ஆகியுள்ளோர்
நாயகன் ஆகி நின்ற நான்முகம் தன்னை நண்ணி.

பொ: அவ்வாறான நிகழ்ச்சிகள் நிகழும்போது அமரர்கள், தானவர்கள் ஆராய்ந்த அறிவினையுடைய தூய பெருந்தவ முனிவர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள் துறக்க நாட்டில் உள்ள தேவர்கள் ஆகியோர் வாயுதேவனின் கோபத்தினாலே வயிறு பெருத்து மகோதரர் ஆனவர்கள். தமக்கெலாம் நாயகனாகி இருக்கின்ற பிரமனை அணுகி,

கு: முன்னர்க்கூறிய நிகழ்ச்சிகளை யெல்லாம் சேர்த்து ஆயவை எனச் சுட்டினார். அமரர், தானவர், மாதவர்கள் சித்தர் விஞ்சையர் துறக்கத்துள்ளோர் என்பவர் நாற்பத்தெட்டுத் தேவ கணங்களைச் சேர்ந்தவர்கள். துறக்கத்துள்ளோர் என்பது மக்களாய்த் தவமுயன்று துறக்கம் பெற்றவர்களைக் குறித்ததாகவும் கொள்ளலாம். மகோதரம் என்பது வயிறு வீங்கும் ஒருவகை நோய். வாயுவின் கோபத்தாலே வயிறு வீங்கப்பெற்ற அமரர் முதலானோர் அம் மகோதரம் என்னும் நோயுடையவர் போலாயி

னர் என்பார், மகோதரராகியுள்ளார் என்றார். தோற்றத்தால் மகோதர நோயுற்றோர் போல் இருப்பவர்கள் என்றவாறு. இந்திரனே இந்த நிலைமைக்குக் காரணன் ஆகலின் அவனை விடுத்து அவனுக்கு மேல் தமக்கு நாயகனாகி நின்ற நான்முகனை நண்ணலானார் என்றவாறு. நண்ணி என்ற எச்சம், முப்பதாஞ் செய்யுளில் என்றவரியம்ப என்னும் வினையோடு முடியும். (உஅ)

### தேவர்கள் முறையீடு

651. ஆதிவே தியனே கேட்டி
யமரர்கோன் குலிசத் தாலே
காதல னாய மைந்தன்
காலன்வாய் வீழக் கண்டு
வாதரா சன்கோ விப்ப
வயிறுகள் பெருஞ்சா லென்னப்
பூதம தென்ன வீங்கிப்
புரண்டனர் புவனத் துள்ளோர்.

ஆதிவேதியனே கேட்டி! அமரர்கோன் குலிசத்தாலே
காதலன் ஆய மைந்தன் காலன்வாய் வீழக் கண்டு
வாதராசன் கோவிப்ப வயிறுகள் பெருஞ்சால் என்னப்
பூதம்அது என்ன வீங்கிப் புரண்டனர் புவனத்து உள்ளோர்.

பொ : உலகப் படைப்பிற்கு ஆதியாக அமைந்த வேத வித்தகனே! கேட்பாயாக! தேவர்கட்கு அரசனாகிய இந்திரன் தன் வச்சிரப்படையால் அடியுண்டு அன்பிற்குரியனாகிய தன் மகன் அநுமான் எமன் வாயில் விழ்ந்ததைக் கண்டு வாயுதேவன் கோபித்துக்கொண்டு ஓரிடத்தில் அடங்கியதால், உலகத்துள்ளோர் அனைவரும் தம் வயிறுகள் பெரிய சால்களைப் போலவும் பூதத்தின் வயிறுபோலவும் வீங்கிப் புரண்டார்கள்.

கு : முத்தொழிலில் முதற்றொழிலாகிய படைப்பிற்கு உரியவன் பிரமன் ஆகலின் ஆதி என்றும் வேதங்களை நான்கு வாய்களாலும்

சொல்லுகின்றவன் ஆகலின் வேதியனே! என்றும் விளித்தார்கள். காதலனுய மைந்தன் என்றது வாயுதேவனின் அன்பிற்குரிய மகனுகிய அநுமனை. குலிசத்தாலே காலன் வாய் வீழக்கண்டு என்றது இந்திரன் தன் வச்சிரப் படைகொண்டு தாக்கியதால் அநுமன் இறந்தது கண்டு என்றவாறு. காலன்வாய் வீழ்தல் இங்கு இறத்தலையுணர்த்தியது. வாதரர்சன் என்றது வாயுதேவனை. வாதம் – காற்று. வயல்களுக்கு நீர்பாய்ச்சக் கிணறுகளிலிருந்து நீர் முகந்து இறைக்கும் இரும்புத்தகட்டாலாய பெரும்பாத்திரம் சால் எனப்படும். பூதமது என்றது, பூதத்தின் வயிற்றினை. புவனத்துள்ளோர் வயிறுகள் வீங்கிப் புரண்டனர் என இயையும். காற்றின் இயக்கம் இன்மையால் வந்த கேட்டினைப் புலப்படுத்த இது கூறினர். (உகூ)

பிரமன் வருந்தும் வாயுதேவனைக் காண்டல்

652. என்றவ ரியம்பக் கேட்ட
விரணிய கருப்ப னின்னே
சென்று நோய் தீர்ப்பே னென்னுஞ்
சிந்தையன் றேவர் சூழ
வன்றிறன் மாண்ட சேயை
மடியினில் வைத்து நோயால்
கன்றிய மனத்த னுய
காற்றினுக் கரசைக் கண்டான்.

என்று அவர் இயம்பக் கேட்ட இரணிய கருப்பன், இன்னே சென்று நோய்தீர்ப்பேன் என்னும் சிந்தையன் தேவர் சூழ வன்திறல் மாண்டசேயை மடியினில் வைத்து நோயால் கன்றிய மனத்தன் ஆய காற்றினுக்கு அரசைக் கண்டான்.

பொ: என்று அத்தேவர் முதலியோர் சொல்லக்கேட்ட பிரமன், இப்பொழுதே சென்று உலகவர் நோயைத் தீர்ப்பேன் என்னும் கருத்துடையவனுய்த் தேவர்கள் தன்னைச் சூழ்ந்துவர,

வலிய திறமையுடையவனுயிருந்து இறந்துகிடக்கும் மகனுகிய அநுமானை மடியில் வைத்துக்கொண்டு மகனைப் பிரிந்த பெருந் துன்பத்தால் வெதும்பிய மனத்தையுடையனுக விளங்கும் வாயு தேவனைக் கண்டான்.

கு: அவர் என்றது, தேவர் முதலியோரை. இரணிய கருப்பன் என்றது பிரமனுக்குப் பெயர். பொன்முட்டையிலிருந்து தோன்றினமையால் பெற்ற பேர் என்பர். இன்னே–இப்பொழுதே. நோய் என்றது, உலகமக்கள் காற்றின்மையால் வயிறுகள் வீங்கிப் படும் துன்பத்தை. மாண்ட சேய்–இறந்த தன் மகனுகிய அநுமானை. இறக்குமுன் பெற்றிருந்த வலிய திறமையைக் குறித்து வன்றறல் மாண்ட சேய் என்றுர். தந்தைக்கு மகன்பால் உள்ள பேரன்பால் அவனுடம்பைத் தரையில் கிடத்தாமல் வாயுதேவன் மடியினில் வைத்துக் கொண்டு வருந்திக் கொண்டிருந்தான் என்றவாறு. கன்றுதல் மனம் வெதும்புதல். இரணிய கருப்பன் காற்றினுக்கரசைக் கண்டான் என இயையும். (௫௰)

பிரமன் அனுமானை மலர்க்கையால் தடவுதல்

653. இந்திரன் முதலா யுள்ள
விமையவர் சூழ வந்த
அந்தணன் றன்னை நோக்கி
யகத்தெழு துன்பத் தோடு
வந்தடி பணிந்தோன் றன்னை
மலர்க்கையா லெடுத்து வாயு
தந்தபா லனைத்தன் கையாற்
றடவினன் றயாவின் மிக்கான்.

இந்திரன் முதலாய் உள்ள இமையவர் சூழவந்த
அந்தணன் தன்னை நோக்கி அகத்து எழு துன்பத்தோடு
வந்து அடிபணிந்தோன் தன்னை மலர்க்கையால் எடுத்து வாயு
தந்த பாலனைத் தன்கையால் தடவினன் தயாவின் மிக்கான்.

பொ: இந்திரன் முதலாக உள்ள தேவர்கள் சூழ வந்த பிரமனைப் பார்த்து உள்ளத்தே எழுகின்ற துன்பத்தோடு வந்து தன் அடிபணிந்த வாயுதேவனைத் தயாவில் மிக்கவனுகிய பிரமன் தன் மலர்போன்ற கையால் எடுத்து நிறுத்திவிட்டு அந்த வாயு தேவன் பெற்ற பாலனுகிய அநுமனைத் தன்கையால் தடவிக் கொடுத்தான்.

கு: குற்றம் செய்தவனுகிய இந்திரனும் உடன் வந்துளான் என்பது புலப்பட இந்திரன் முதலாயுள்ள இமையவர் என்ருர். அந்தணன் என்றது, பிரமனை. உறவுடையாரைக் கண்டபோது முன்பு அகத்துள் மறைந்திருந்த துன்பம் வெளிப்படுதல் இயல்பு ஆதலின் அந்தணன் தன்னை நோக்கி அகத்தெழு துன்பத்தோடு வந்தடி பணிந்தோன் என்ருர். தன்னடியில் வீழ்ந்த வாயு தேவனைத் தன் கையால் எடுத்து நிறுத்தியதோடு அமையாமல் அவன் வருத்தந்திர, அவன் பாலனுகிய – இறந்து கிடக்கும் அநுமனையும் தன்கையால் அருளோடு தழுவினுன் என்பார், வாயுதந்த பாலனைத் தன்கையால் தடவினன் தயாவின் மிக்கான் என்ருர். தயா – அருள். தயாவின் மிக்கான் என்பது பிரமனுக்கு வினையாலணையும் பெயர். தயாவின் மிக்கான் தடவினன் என இயையும். (௩௪)

அநுமான் உயிர்பெற்றெழ வாயுதேவன் உளங்குளிர்தல்

654. நீடிய மலரின் மேலோ
னெடுங்கையா னீவ லோடும்
வாடிமண் மடிந்த பைங்கூழ்
மழைவிழத் தளிர்க்கு மாபோல்
வீடிய மைந்தன் சீவன்
பெற்றிடத் துயரின் வெந்து
கோடிய நெஞ்சு தாதை
குளிர்ந்தன னுணர்வின் மிக்கான்.

**நீடிய மலரின் மேலோன் நெடுங்கையால் நீவலோடும்**
**வாடிமண் மடிந்த பைங்கூழ் மழைவிழத் தளிர்க்குமாபோல்**
**வீடிய மைந்தன் சீவன் பெற்றிடத் துயரின் வெந்து**
**கோடிய நெஞ்சு தாதை குளிர்ந்தனன் உணர்வின் மிக்கான்.**

பொ: நீடித்த வாழ்வினையுடைய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமன், தன்நெடிய கையால் தடவுதலும், வாடித் தரையில் மடிந்து வீழ்ந்த பயிர் மழைத்துளி விழுந்தவுடன் தளிர்க்குமாறு போல (இந்திரனது வச்சிரப்படையால்) இறந்த மகனாகிய அநுமான் உயிர்பெற்று எழுந்தான், அவன் எழுதலும் உணர்வின் மிக்கவனாகிய தாதை வாயுதேவன் முன்பு துயரத்தால் வெந்து மாறுபட்ட நெஞ்சு குளிர்ந்தவனானான்.

கு: தாதை நெஞ்சு குளிர்ந்தனன் என்க. உணர்வின் மிக்கானாகிய தாதை என இயையும். மலரின் மேலோன் என்றது பிரமனை. தாமரை மலரில் வீற்றிருக்கும் இயல்புடையனாதலின் பிரமனை அப்பெயரால் குறிப்பிட்டவாறு. நீடிய என்ற அடை அயனுக்குரியதாகும். நீடித்த ஆயுளையுடையவன் என்பார். நீடிய மலரின் மேலோன் என்றார். நெடுங்கை என்றது முழந் தாளளவு நீண்ட கையை; இதனை உத்தம இலக்கணம் என்பர், நீவுதல் – தடவுதல். பிரமன் தன் கையால் தயாவினொடும் தடவியவுடன் இறந்த அநுமான் உயிர்பெற்று எழுந்தான். இறந்த அவன் உயிர்பெற்றெழுந்தமைக்கு வாடி மண்ணில் மடிந்துபோன பயிர், மழை பெய்தவுடன் தளிர்க்கும் தன்மையை உவமை கூறினார். வாடி மண் மடிந்த பைங்கூழ் போன்றவன் வச்சிரப் படையால் இறந்துபட்ட அநுமான், மழைநீர் போன்றது பிரமன் கையால் தடவியது, மடிந்த பயிர் தளிர்த்தது போன்றது அநுமான் உயிர் பெற்றது. வீடுதல் – இறத்தல். சீவன் - உயிர். கோடிய நெஞ்சு என்றது, கோபத்தால் மாறுபட்ட வாயுவின் மனத்தை.

இனி, இவ்வுவமையை வாயுதேவனுக்கு உரியதாக்கலுமாம். மகன் இறந்தமையால் தாதை துயரின் வெந்து கோடிய நெஞ்சு, வீடியமைந்தன் சீவன் பெற்றிடக்கண்டு உணர்வு மிக்கவனாய்க் குளிர்ந்தனன். வாடிய பயிர், வாயுதேவன்; மழைவிழல் அநுமான்

எழுதல்; பயிர் தழைத்தல், வாயுமனங் குளிர்தல் என உவமையைப் பொருத்துக. வாடிய பைங்கூழ் மழைவிழத் தளிர்க்குமா போல் மைந்தன் சீவன் பெற்றிடத் தாதை கோடிய நெஞ்சு குளிர்ந்தனன் என்க. தளிர்க்குமாபோல் குளிர்ந்தனன் என இயையும்.

(௫௨)

பண்டுபோல் வாயு சஞ்சரிக்கக் கண்டு பிரமன் முதலியோர்
அவ்வநுமனை வாழ்த்துதல்

655. திண்டிறன் மைந்தன் சீவன்
பெற்றிடத் தேர்ந்த வாயு
பண்டுபோ லுலக மெங்கும்
பாய்ந்துதான் சரியப் பார்த்துப்
புண்டரீ கத்து மேலோன்
புரந்தரனாதி யுள்ள
அண்டர்க ளெவரு நோக்கி
யவற்கித மறைய லுற்றார்.

திண்திறல் மைந்தன் சீவன் பெற்றிடத் தேர்ந்த வாயு,
பண்டு போல் உலகம்எங்கும் பாய்ந்து தான் சரியப் பார்த்து,
புண்டரீகத்து மேலோன் புரந்தரன் ஆதியுள்ள
அண்டர்கள் எவரும் நோக்கி அவற்கு இதம் அறையல் உற்றார்.

பொ: திண்ணிய திறமை மிக்க மைந்தன் அநுமான் உயிர் பெற்றிடக் கண்ட வாயுதேவன் மகிழ்ந்து முன்போல உலகம் எங்கும் பாய்ந்து சென்று சஞ்சரிக்கக் கண்டு தாமரை மலரின் மேல் தங்கும் பிரமன், இந்திரன் முதலாய் உள்ள தேவர்கள் எல்லோரும் அநுமனை நோக்கி அவனுக்கு இதமான சொற்களைச் சொல்லத் தொடங்கினார்கள்.

கு: தேர்ந்த – அறிந்த–கண்ட. உலகர் உய்யுமாறு வாயு பண்டுபோல் உலவுவதைக் கண்டவுடன் பிரமன் முதலிய தேவர்

கள் அனுமனை நோக்கி இனிய சொற்களைச் சொல்லலானார்கள். மகன் உயிர்பெற்ற மகிழ்ச்சியால் வாயுதேவன் பாய்ந்து சஞ்சரித்தான் என்றவாறு. சரித்தல் – இயங்குதல். தான்சரிய என்றது பிறர் வேண்டாமல் தானே இயங்க என்றவாறு. பார்த்தது வாயுவை. நோக்கியது அனுமனை. இதம் – இதமான சொற்கள். அறைதல் – சொல்லுதல். அவற்கு என்றது அனுமானுக்கு என்றவாறு. (௬௬)

இதன்பின் 66–ல் ஒரு பாடல் உள்ளது.

655. (அ)

இந்தமு வுலகை யெல்லா மிடர்கெடுத் திமையோர் ஆனோர்
சிந்தையிற் றுயரமெல்லாந் தீர்க்குமித் திறலின் மிக்க
மைந்தனுக் கும்மாலாய வரங்கள்நீர் வழங்கும் என்ன
வெந்திறல் விண்ணோர் வேந்தன் இனையன விளம்பல்உற்றான்.

இந்திரன் வார்த்தை

656. சீர்பெற் றொளிர்பூ ணஞ்சனைதன்
சிறுவன் தன்னை முக நோக்கிக்
கூர்பற் றியவென் குலிசத்தாற்
கூறு படுபுண் வடுத்தீர்க
ஆர்பெற் றார்நீ பெற்றதுநின்
னநுவற் றிடலா லநுமனெனும்
பேர்பெற் றுலக முள்ளளவும்
பெறுதி பெயராப் புகழென்றான்.

சீர்பெற்று ஒளிர்பூண் அஞ்சனைதன் சிறுவன் தன்னை முகம்
கூர்பற்றிய என் குலிசத்தால் கூறுபடு புண் வடுத் தீர்க[நோக்கி,
ஆர்பெற்றார் நீ பெற்றது? நின்அநு அற்றிடலால் அநுமன் எனும்
பேர் பெற்று உலகம் உள்ளளவும் பெறுதி பெயராப் புகழ்
[என்றான்.

பொ: சிறப்புப்பெற்று விளங்குகின்ற அணிகலன்களையுடைய அஞ்சனையின் புதல்வன் அநுமானை முகம்நோக்கி (இந்திரன்) என்

கூர்மை பொருந்திய வச்சிரத்தால் பிளவுபட்ட புண்ணின் வடு தீர்வதாக! நீ பெற்ற பேறு இவ்வுலகில் யார் பெற்றார்கள்? நின் கன்னம் அறுதலால் (கன்னத்தின் பெயராகிய அநு என்பதனோடு சேர்ந்து) அநுமன் என்னும் பேர் பெற்று உலகம் உள்ள அளவும் அழியாதிருக்கும் புகழைப் பெறுவாயாக! என்று கூறினான்.

கு: என்குலிசத்தால் என்ற குறிப்பால் இது கூறியவன் இந்திரன் என்பதை உய்த்துணரலாம். பிரமன் கையால் தடவிக் கொடுத்த போதே வச்சிரத்தாலாய புண் ஆறி உயிர் பெற்று விட்டமையால் இந்திரன் இப்பொழுது புண் வடுத்தீர்க என வரம் கொடுக்கலானான். பின் கொடுக்கப் போகும் வரத்தின் பெருமை நினைந்து நீபெற்றது ஆர் பெற்றார் என இந்திரன் கூறினான். அநு – கன்னம். முன்பு அநு பிளக்கப் பெற்றவன் இப்போது மீண்டும் முன் போலவே வடுவற்ற அநுவினைப் பெற்றுவிட்டதால் அநுமன் என்ற காரணப் பெயரையும், உலகம் உள்ளளவும் வாழ்கின்ற சிரஞ்சீவிப் பதவியையும் பெறுக என வரம் கொடுத்தான். இந்த இரண்டு பேறுகளும் பிறர்க்குக் கிடைக்காத அரிய பேறுகளாதல் காணலாம். பெயராப் புகழ் என்றது உலகை விட்டு நீங்காது வாழ்கின்ற புகழினை. பெயராப்புகழ் பெறுதி என்றான் என இயையும். இனி ஆதாரமாகிய உலகம் உள்ளளவும் ஆதேயமாகிய புகழ் நிலைபெறும் இயல்பு நினைந்து அழியாப் புகழைப் பெறுக எனக் கூறியதாகவும் கொள்ளலாம். சிறுவன் என்றது மகன் என்னும் பொருளில் வந்தது. வடுத்தீர்க பெயராப்புகழ் பெறுதி என்றான் எனவே அனுமனுக்கு இருவரங்களை இந்திரன் கொடுத்தான் என்றவாறு. என்றான் என்ற பயனிலைக்கு எழுவாய் இந்திரன் என்ற பெயர்; அது மறைந்து நின்றது; தோன்றா எழுவாய் என்று இது சொல்லப்படும். (௯௪)

### சூரியன் வரம்

657. பொல்லா விருளைக் கடிந்தோட்டும்
புவனதீபன் புகல்வானென்
வில்லார் கரத்திற் சதகூற்றி
லொருகூ றுனக்கு மேவிடுக

எல்லா விஞ்சை களுந்தரிக்க
விசைந்த சக்தி யுண்டாக
நல்லாய் கொண்ணீ தருகின்றே
னென்று நவின்று னலமிக்கான்.

பொல்லா இருளைக் கடிந்து ஓட்டும் புவனதீபன் புகல்வான்'என்
வில்லார் கரத்தில் சத கூற்றில் ஒருகூறு உனக்கு மேவிடுக;
எல்லா விஞ்சைகளும் தரிக்க இசைந்த சக்தி உண்டாக!
நல்லாய்! கொள்நீ தருகின்றேன்' என்று நவின்றான் நலம்
[மிக்கான்.

பொ: கண்ணை மறைக்கின்ற பொல்லாத புறவிருளை நீக்கி ஓட்டுகின்ற உலக விளக்காக இருக்கும் சூரியன் சொல்வான், 'என் ஒளி நிறைந்த கதிர்களாகிய கரங்களில் நூற்றில் ஒரு பங்கு உனக்கு வந்து பொருந்துவதாக' எல்லா வித்தைகளையும் ஏற்றுக் கொள்ளுதற்கேற்ற ஆற்றல் உனக்கு உண்டாவதாக! நல்ல பண்புடையவனே! யான் தருகின்றேன் நீ கொள்க' என்று நலம் மிக்கவனைச் சொன்னான்.

கு: ஒருபொருளும் காணமுடியாது மறைக்கின்ற கொடுமை நினைந்து பொல்லாவிருள் என்று கூறினார். சூரியன் வந்தவுடன் இருள் நீங்கும் இயல்பு நினைந்து கடிந்தோட்டும் புவனதீபன் எனச் சூரியன் செயலாகச் சொன்னார். புவனதீபன் – உலக விளக்காக விளங்குகின்றவன். சூரியன். என்வில்லார் கரம் எனச் சூரியன் கூறியது, ஒளிக்கதிர்களை. வில் – ஒளி. ஒளிக்கதிர்களைக் கரங்களாகக் கூறும் மரபு பற்றி வில்லார் கரம் என்றார். மேவிடுக – பொருந்திடுக. விஞ்சைகள் – வித்தைகள். எல்லா நூல் களையும் கற்கத்தக்க ஆற்றலை அனுமனுக்குச் சூரியன் கொடுத் தான் என்றவாறு. சக்தி – ஆற்றல்: நலமிக்கானைய் நவின்றான் என இயைத்துக் கொள்க. நல்லஉள்ளம் மிக்கவனைச் சொன்னான் என்பது கருத்து: மேவிடுக! உண்டாக! என்பன வியங்கோள் வினைமுற்றுக்கள்: புவனதீபன் நவின்றான் என்க. (௩௫)

வருணனும் எமனும் வரமளித்தல்

658\. இரண பூமி யிடைநின்ரு
லென்பா சத்தா லீர்த்தக்கால்
மரண மில்லை யுனக்கென்று
வருண ராசன் வரங்கொடுப்பத்
தரணி யோரை விதிவழியே
தண்டிப் போனென் றண்டிஞல்
முரணின் மிகுமா ருதியாவி
முடியா தொழிக வெனமொழிந்தான்

'இரண பூமியிடை நின்ருல் என்பாசத்தால் ஈர்த்தக்கால்
மரணம் இல்லை உனக்கு' என்று வருணராசன் வரம் கொடுப்பத்
தரணியோரை விதிவழியே தண்டிப்போன், 'என்தண்டிஞல்
முரணின்மிகும் மாருதிஆவி முடியாது ஒழிக', என மொழிந்தான்.

பொ: போர்க்களத்திடை நின்ருல் எனது பாசத்திஞல் பகைவர் கட்டி இழுக்கும் பொழுது உனக்கு மரணமில்லை என்று வருணன் வரம் கொடுக்க, உலகத்தோரை விதியின் வழியே ஆராய்ந்து தண்டிப்போனுகிய எமன், 'என் தண்டாயுதத்தால் வலிமை மிக்க அனுமன் உயிர் நீங்காதொழிக' என்று சொன்னுன்.

கு: இரணபூமி-போர்க்களம். வருணனுக்கும் பாசம் உண்டு. வருணனுக்குரிய பாசத்தால் போர்க்களத்தில் அனுமானைக் கட்டியிழுத்தால் அவனுக்கு மரணம் வாராது என வருணன் வரம் கொடுத்தான். எமன் தன் தண்டாயுதத்தால் அனுமானின் உயிர் போகாது என்று சொன்னுன். வருணன் அனுமானை முன்னிலைப் படுத்தி, என் பாசத்தால் ஈர்த்தக்கால் மரணமில்லை உனக்கு என்று சொன்னுன். எமனே அனுமனைப் படர்க்கையில் வைத்து என் தண்டிஞல் முரணின்மிகு மாருதியாவி முடியாதொழிக என மொழிந்தான்: எமன் உயிர்கள் செய்த வினைகளை ஆராய்ந்து முறைப்படி தண்டிப்பவன் ஆதலின் அவனைத் தரணியோரை விதிவழியே தண்டிப்போன் என வினையாலணையும் பெயரால்

குறிப்பிட்டார். சாற்றும் நாள் அற்றது எண்ணித் தருமம் பார்த்து ஏற்றும் விண் என்று சொல்கின்றவன் எமன் என்பதைத் தாடகை வதைப் படலத்தால் அறியலாம்: (ரு௬)

குபேரனும் உருத்திரனும் வரமளித்தல்

659. காற்றின் சிறுவன் முகநோக்கிக்
கருணை யாலென் கதையானீ
கூற்றின் சூழ லுருயென்று
குபேரன் கூறக் கூற்றுதைத்த
ஏற்றின் பாக னென்கரமூ
விலையி னாலு மென்னாலும்
ஆற்றன் மிகுமா ருதியாவி
யகலா தொழிக வெனவருள.

காற்றின் சிறுவன் முகம் நோக்கிக் கருணையால் 'என் கதையால்நீ
கூற்றின் சூழல் உருய்' என்று குபேரன் கூறக் கூற்று உதைத்த
ஏற்றின் பாகன் 'என்கர மூஇலையினாலும் என்னாலும்
ஆற்றல் மிகும் மாருதி ஆவி அகலாது ஒழிக' என அருள.

பொ: காற்றின் மகனாகிய அநுமானின் முகத்தைப் பார்த்துக் குபேரன் கருணையால் என் கதையால் நீ எமன் உலகத்திற்குச் செல்லமாட்டாய் என்று சொல்ல, எமனை உதைத்த, விடையை ஊர்ந்து செல்லும் உருத்திரன் என் கையில் உள்ள மூவிலைச் சூலத்தாலும் என்னாலும் வலிமை மிக்க அநுமான் உயிர் நீங்காது ஒழிவதாக என்று சொல்லியருள.

கு: கதை – தண்டாயுதம். கூற்றின் சூழல் என்றது எமன் உலகத்தை. ஏற்றின்பாகன் என்றது, விடையை யூர்பவனாகிய உருத்திரனை. பாகன் என்றது செலுத்துவோனை. மூவிலை என்றது மூன்று இலைவடிவாகச் செய்யப்பட்ட சூலத்தினை. தன்னாயுதத்தாலும் தன்னாலும் அநுமானுக்கு மரணமில்லை என உருத்திரன்

அருளொடு கூறினன் என்றவாறு. அகலாது ஒழிக என்புழி ஒழிக என்பது துணைவினை; அகலாதாகுக என்பதே கருத்து. அருள என்றது சொல்ல என்னும் பொருளது. உருத்திரன் பெருந் தெய்வ மாதலில் சொல்ல என்பதை அருள என உயர்வுகருதிக் கூறிய வாறு. குளகம்: வருஞ்செய்யுளில் முடியும். (௩௭)

### பிரமனும் தேவதச்சனும் வரம் கொடுத்தல்

660. தாதா வுரைக்கு மென்பிரம
தண்டாற்றானுஞ் சாவின்றி
மேதா வியுமா யொருநாளும்
விளியா நாளு முறுகவென
தீதாயினர்வே ரறுக்கு மெழிற்
றேவர்ப டையாற் செருக்களத்தில்
வாதா மகன்சா வொழிகவென
வானோர் தச்சன் வரங்கொடுத்தான்.

தாதா உரைக்கும் 'என் பிரம
தண்டால் தானும் சாவுஇன்றி
மேதாவியுமாய் ஒருநாளும் விளியா
நாளும் உறுக' என
'தீது ஆயினர்வேர் அறுக்கும் எழில்
தேவர் படையால் செருக்களத்தில்
வாதா மகன் சாவு ஒழிக' என
வானோர் தச்சன் வரங்கொடுத்தான்

பொ: எனது பிரம தண்டினாலும் சாவு இன்றி, அறிவின் மிக்க மேதாவியுமாய் ஒருநாளும் இறவாத ஆயுளும் அடைவானாக! எனப் பிரமன் சொல்லுகின்றான். தீது செய்வோரை வேரோடு அழிக்கின்ற அழகிய தேவர்களின் ஆயுதங்களால் போர்க்களத்தில் வாயுமகனாகிய அநுமான் 'சாதல் இலனாகுக என்று தேவதச்சன் வரம் கொடுத்தான்.

கு: தாதா என்றது, பிரமனை. என்பிரம தண்டால் என்பதாலும் இதனையறியலாம். மேதாவி – அறிவாற் சிறந்தவன். ஒரு நாளும் விளியா நாள் என்றது, சிரஞ்சீவி நிலையை. தீதாயினர் வேர் அறுத்தல் தேவர் படைக்கு அடையாகும். செருக்களம் – போர்க்களம். வாதா என்றது வாயுதேவனை. (ந-அ)

பிரமன் வாயுதேவனுக்குச் சொல்லியது 39, 40

661. வானோர் முதலாய் வந்துநின்ற
மறையோர் முனிவ ரருளாளர்
ஆனோ ரெல்லா மநுமானுக்
கழிவி லாத வரமளிப்ப
நானா வகைய சராசரமு
முலகும் படைத்த நான்முகத்தோன்
ஊனு ருடலி னின்றியக்கு
மொருவன் றனக்கிங் குரைசெய்தான்.

வானோர் முதலாய் வந்து நின்ற மறையோர் முனிவர் அருளாளர்
ஆனோர் எல்லாம் அநுமானுக்கு அழிவு இலாத வரம் அளிப்ப,
நானா வகைய சராசரமும் உலகும் படைத்த நான்முகத்தோன்
ஊனூர் உடலின் நின்று இயக்கும் ஒருவன் தனக்கு இங்கு
[உரைசெய்தான்.

பொ: தேவர்கள் முதலாக அங்கு வந்து நின்ற அந்தணர்கள் முனிவர்கள், அருள்பெற்ற பெரியோர்கள் ஆகியோர் எல்லாம் அநுமானுக்கு அழிவு இல்லாத வரத்தைக் கொடுக்கப் பலவகையான இயங்குவனவும் நிற்பனவுமான உயிர்களையும் அவ்வுயிர்களுக்கு இடமான உலகத்தையும் படைத்த பிரமன் தசைவடிவாக அமைந்த உடலில் நின்று இயக்குகின்ற ஒப்பற்றவனாகிய வாயு தேவனுக்குச் சொன்னான்.

கு: அங்கு வந்து நின்ற அனைவரும் அநுமானுக்கு மரணமின்றி நெடிது வாழ்தற்குரிய வரத்தையே கொடுத்தார்கள்

என்பார், அநுமானுக்கு அழிவிலாத வரம் அளிப்ப என்றுர். இதனுல், பின்பு பிரமன் சொல்லுகின்றது இதனினும் வேறுபட்டது என்பது குறிப்பாலுணரப்படும். நானுவகை - பலவகை. சரம், இயங்குவனவாகிய மக்கள் விலங்கு முதலியன. அசரம் என்றது மரம் செடி கொடிகள் போன்று இயக்கமின்றி ஓரிடத்தில் நிலைத் திருப்பவற்றை. சரஅசரம் சராசரம் எனத் தீர்க்க சந்தியால் புணர்ந்து நின்றது. ஊனுர் உடல் என்றது தசை முதலிய எழுவகைத் தாதுக்களால் இயன்ற உடம்பினை. உடலில் பிராண வாயுவாக நின்று இயங்கி அவ்வுடம்பை இயக்குகின்றவன் வாயு தேவனே என்றவாறு. ஒருவன் என்றது ஒப்பற்றவன் என்னும் பொருளது. அயன் உரை செய்தது வருஞ்செய்யுளில் காண லாம். (கூகூ)

662\. வன்னி சகாய நின்மைந்தன்
வையத்தோர்க்கும் வானோர்க்கும்
இன்னல் செய்யு மிராவணன்ற
னிலங்கை நகரை யெரியூட்டி
மன்ன னிராமன் மனமுவப்ப
வயவா ளரக்கர் குலமறுத்துப்
பின்னை யவன்றன் பேரருளாற்
பிரம பதமும் பெறுமென்றுன்.

**வன்னி சகாய! நின்மைந்தன் வையத் தோர்க்கும் வானோர்க்கும் இன்னல் செய்யும் இராவணன் தன் இலங்கை நகரை எரியூட்டி, மன்னன் இராமன் மனம் உவப்ப, வயவாள் அரக்கர் குலம்அறுத்துப் பின்னை அவன்தன் பேரருளால் பிரம பதமும் பெறும் என்றுன்.**

**பொ: நெருப்புக் கடவுளுக்குத் துணையாக இருப்பவனே! நின் மகன் அநுமான் மண்ணுலகத்தோர்க்கும் விண்ணுலகத்தோர்க்கும் துன்பத்தைச் செய்கின்ற இராவணனுடைய இலங்கை மாநகரைத் தீக்கிரையாக்கிவிட்டு, அரசனுகிய இராமன் மனம் மகிழும்படி வலிய வாளினை யுடைய அரக்கர்தம் குலத்தை வேரறுத்துப் பின்பு**

அவ்விராமனது பேரருளால் பிரம பதவியையும் பெறுவான் என்று கூறினன்.

கு : வாயுதேவனுக்கு வன்னிசகாயன் என்பதும் ஒருபெயர்; நெருப்புக்கடவுளுக்குத் துணை செய்பவன் என்ற காரணம் பற்றியது. 'தூமமுமெமது பவனனுமெமது தோழன்... என்று கொண்டறவும் அகங்கரித்தனன் வெகுண்டு அழலோன், (வில்லிபாரதம் - காண்டவதகனச்-33) என்புழி அக்கினிதேவன் காற்றுக்கடவுளைத் தனது தோழனாகக் கூறியுள்ளது நினையலாம். வன்னி - நெருப்பு. சகாயன் - துணைபுரியும் தோழன். வயவாள் அரக்கர் - வலிய வாளினை யுடைய அரக்கர். குலம் அறுத்தலாவது அரக்கர் குலத்தை வேரொடு களைதல். அவன் என்றது இராமனை. சிரஞ்சீவியாக இருக்கும் அநுமன் பின்பு இராமன் அருளால் பிரமபதம் பெற்று விளங்குவான் என அநுமானின் எதிர்கால வாழ்வு பற்றிய குறிப்பினைப் பிரமன் வாயுதேவனுக்குச் சொன்னான் என்றவாறு. (சுகூ)

### அனுமன் விளையாட்டு

663. என்று மலரோ னேகியபின்
 னிமையோர் கொடுத்த வரச்செருக்கால்
நன்று தீதென் றுணராது
 நன்மா முனிவ ருறைவிடத்துச்
சென்று தயிர்பா னெய் குடித்துச்
 சீரைச் சுருக்குச் சுருவமெலாம்
ஒன்றும் வலியோன் கொண்டெழலு
 மூழித் தீயி னுடன்றவர்கள்.

என்று மலரோன் ஏகியபின் இமையோர் கொடுத்த வரக் செருக்
நன்று தீது என்று உணராது நல்மா முனிவர் உறைவிடத்துச் [கால்
சென்று தயிர்பால் நெய் குடித்துச் சீரைச் சுருக்குச் சுருவம் எலாம்
ஒன்றும் வலியோன் கொண்டு எழலும் ஊழித் தீயின் உடன்று
[அவர்கள்.

பொ : என்று சொல்லிவிட்டுப் பிரமன் சென்றபின்பு தேவர்கள் எல்லாம் கொடுத்த வரங்களின் செருக்கினுல் இது நன்று, இது தீது என்று உணர்ந்து பார்க்காமல் நல்ல சிறந்த முனிவர்கள் தங்கியுள்ள இடத்திற்குச் சென்று வேள்விக்கு உதவக்கூடிய தயிர், பால், நெய் இவற்றை எடுத்து அருந்திவிட்டு மரவுரியினையும் வேள்வியில் ஓமம் செய்தற்கும் நெய் வார்ப்பதற்குமுரிய சுருக்கு சுருவம் முதலிய எல்லாவற்றையும், வரங்களால் தன்னிடத்துச் சேர்ந்த வலிமையையுடைய அநுமான் எடுத்துக்கொண்டு எழுதலும், அம்முனிவர் ஊழிக்கடையில் எழும் தீயைப்போல வெகுண்டு.

கு : இமையோர் – தேவர்கள். வரச் செருக்கால் – வரங்கள் பல பெற்றுள்ளேன் என்னும் செருக்கினுல்; நல்ல தன் நலனும் தீமையும் உணராமல் அநுமான் முனிவர்கள் ஆசிரமத்திற்குச் சென்று அங்குள்ள தயிர்பால் நெய் என்றிவற்றை எடுத்துப் பருகியும், மரவுரியையும், யாகத்தில் நெய் வார்த்தற்குரிய அகப்பை முதலிய எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டும் எழவே அருள் மிக்க முனிவர்க்கும் ஊழித்தீப்போன்ற சினம் பொங்கிற்று என்றவாறு. சுருக்கு என்றது, ஓமம் கொடுக்கும் கருவியை. சுருவம் – வேள்வியில் நெய்வார்க்கும் அகப்பை. உடன்று – சினந்து குளகம். வருஞ் செய்யுளில் முடியும். ஒன்றும் வலியோன் என்றது அநுமானை. தேவர்கள் வரங்களால் தன்னிடத்துச் சேர்ந்த வலிமையுடைய அநுமான் என்றவாறு. (சுக)

முனிவர் சபித்தல்

661. பொன்மை நிறத்த வயன்வரத்தாற்
புவன மூன்றும் பொடிபடுத்தும்
தன்மைப் பிரம தண்டினுற்
சாதிப்பரியோ னவன் பொல்லாக
கன்மத் தினையெம் மிடைச் செய்யுங்
காற்றின் றனையன் கருத்தழிவுற்
றுன்மத் தன்போல் தன்வலிதான் உணரா
தொழிக வெனச் சபித்தார்.

பொன்மை நிறத்த அயன் வரத்தால்
புவன மூன்றும் பொடி படுத்தும்
தன்மைப் பிரம தண்டினுல்
சாதிப்பரியோன் அவன், பொல்லாக்
கன்மத்தினை எம்மிடைச் செய்யும்;
காற்றின் தனையன், கருத்து அழிவுற்று
உன்மத்தன்போல் தன்வலிதான்
உணரா தொழிக! எனச் சபித்தார்.

பொ: அந்தப் பொன்னின் நிறத்தினையுடைய பிரமன் வரத்தினுல் உலகம் மூன்றினையும் பொடி செய்யும் தன்மையுடைய பிரம தண்டினுலும் அடக்குதற்கு அரியவன் அவன் ஆதலின், தீய செயல்களைத் தீமைபுரியாத எம்மிடத்துச் செய்கின்றுன்; காற்றின் மகனுகிய அந்த அநுமான், கருத்து அழிந்து பித்துடையவன் போலத் தன் வலிமையைத் தான் உணரா தொழிவானுக என்று சாபம் கொடுத்தார்கள், அம்முனிவர்கள்.

கு: முனிவர்கள் அநுமானின் அடாச் செயல்களால் வருந்திப் பிரமன் கொடுத்த வரத்தால் பிரம தண்டினுலும் அடக்குதற்கு அரியவன் அவன் ஆதலின் இங்ஙனம் உலகம் மூன்றையும் துன்புறுத்துகின்றுன். எனவே அவனை வேறு வகையால் அடக்குதல் அரிது. அவன் தன்வலிமை தானறியாத பித்தனுக இருப்பின் இக்கொடுமைகளைச் செய்யமாட்டான் என்று கருதிய முனிவர்கள் அநுமானைப் பித்தனுகுமாறு சபித்தார்கள் என்றவாறு. புவன மூன்றும் பொடிபடுத்தும் தன்மையுடைய பிரம தண்டு என்க. பொல்லாக் கன்மத்தினை எம்மிடைச் செய்யும் காற்றின் தனையன், உன்மத்தன் போல் உணராதொழிக எனவே, உன்மத்தனுகுக என்று சபித்தவாருயிற்று. உன்மத்தம் - மதிமயக்கம். சாதிப்பரியோன் என்றது, கொல்லுதற்கு அரியவன் என்னும் பொருளது.
(௬௨)

அனுமன் பணிவு

665. சாப மொழிந்து தருக்கொழிந்து
சாந்த ளுகி யநுமான்வெங்
கோப மொழிந்து மாதவர்க்குக்
கூசிக் குறிக்கொண் டொழுகுநாள்
தீப மனையா னுலகுக்குத்
திறல்வா ரணத்தோ னரியிதயத்
தாப னிருக்க விரசதனும்
தனிப்போர் வீரன் றன்மைந்தர்.

**சாபம் மொழிந்து தருக்கு ஒழிந்து சாந்தன் ஆகி அநுமான், வெம் கோபம் ஒழிந்து மாதவர்க்குக் கூசிக் குறிக்கொண்டு ஒழுகும்நாள், தீபம் அனையான் உலகுக்குத் திறல்வாரணத்தோன் அரிஇதயத் தாபன் இருக்க இரசதன் ஆம் தனிப்போர் வீரன் தன் மைந்தர்.**

பொ: முனிவர்களால் சாபம் மொழியப் பெற்றமையால் அநுமான் செருக்கு நீங்கிச் சாந்த குணமுள்ளவனாய் வெம்மையான கோபம் ஒழிந்து பெரிய தவமுனிவர்கட்கு அஞ்சி அவர் பணியில் கருத்துடையனாய் ஒழுகும் நாளில், உலகத்திற்குத் தீபம் போன்ற ஒளியுடையவனாய்த் திறமை மிக்க ஐராவதத்தையுடைய இந்திரன் சூரியன் என்போரின் இதயத்தில் தாபத்தையுண்டாக்கியவனும் 'இருக்க இரசதன்' என்ற பெயருடையவனும் ஆகிய ஒப்பற்ற போர் வீரனுடைய மைந்தர்கள்.

கு: குளகம். மொழிந்து என்பது செயப்பாட்டுவினைப் பொருளது. தருக்கு – செருக்கு. சாபம் மொழியப்பட்டமையால் தருக்கு ஒழிந்து, என்க. இருக்க இரசதன் என்பது வாலி சுக்கிரீவர்களின் தந்தை பெயர். ரிக்ஷரஜஸ் என்ற வடசொல்லின் தமிழாக்கமாக இப்பெயர் விளங்குகின்றது. இருசவிரசன் எனவும் இப்பெயர் காணப்படுகின்றது. இப்பெயர் பெற்றது ஒரு குரங்கு. பிரமன் ஒருமுறை யோகத்தில் இருந்தான். அவன் கண்ணிலிருந்து

ஒரு துளி நீர் பூமியில் விழுந்தது. அந்நீர் ஓர் ஆண்குரங்காய்ப் பேரொளியுடன் காட்டில் குரங்குகட்கு அரசாய்த் திரிந்து கொண்டிருந்தது. ஒருநாள் பார்வதியம்மையாரின் வனத்திற்குச் சென்று அங்குள்ள நீர்நிலையில் மூழ்கியது. பெண்குரங்காக மாறியது. இப்பெண் குரங்கின் ஒளியையும் அழகையும் கண்டு இந்திரன் காமுற்றான்; அவன் வீரியம் அதன்வாலில் பதிய, வாலி பிறந்தான். பின்பு சூரியன் அதனைக் கண்டு காமுற்றான். அவன் வீரியம் அதன் கழுத்தில் பதியச் சுக்கிரீவன் தோன்றினான். இந்நிகழ்ச்சியைப் புலப்படுத்தவே திறல்வாரணத்தோன் அரி இதயத்தாபன் இருக்க இரசதன் என்றார். அரி — சூரியன். இதயத் தாபன் — இதயத்தில் காமதாபத்தை உண்டாக்கினவன். முன்பு ஆண் குரங்காக இருந்த நிலையை நினைந்து ஆண்பாலாகக் கூறினார். அவன் மைந்தர் என்றது வாலி சுக்கிரீவரை. குளகம். (சுரு)

வாலிக்குத் தோற்ற சுக்கிரீவன் மதங்கவனம் சார்தல்

666. துன்னார் கால னும்வாலி
சுக்கி ரீவன் தோன்றியபின்
மின்னார் மருங்குற் றிருவென்ன
விளங்கு முருமை காரணமாய்
இன்னாராகி யிருவரும்போ ரெதிர்ப்ப
விளையா னிளைத்தோடித்
தன்னாற் செய்யுஞ் செயலற்றுத் தளர்ந்து
மதங்க வனஞ் சார்ந்தான்.

துன்னார் காலனும் வாலி சுக்கிரீவன் தோன்றிய பின்
மின்னார் மருங்குல் திருஎன்ன விளங்கும் உருமை காரணமாய்
இன்னார் ஆகி இருவரும்போர் எதிர்ப்ப, இளையான் இளைத்து ஓடித்
தன்னால் செய்யும் செயல் அற்றுத் தளர்ந்து மதங்கவனம் சார்ந்
[தான்.

பொ: பகைவர்க்கு எமனாக விளங்கும் வாலியும் சுக்கிரீவனும் பிறந்து வளர்ந்தபின் மின்னலைப் போன்ற இடையினையுடையளாய்த் திருமகள் போன்று விளங்கும் உருமை என்னும் பெண் காரணமாகப் பகைவராகி இருவரும் எதிர்த்துப் போர் செய்ய, இளையவனாகிய சுக்கிரீவன் வாலியின் வலிக்கு ஆற்றாதவனாய் இளைத்துப் புறங்காட்டி ஓடிச்சென்று தன்னால் செய்தற்குரிய செயல் யாதுமின்றித் தளர்ந்து (வாலி அணுகாத) மதங்கவனத்தை அடைந்தான்.

கு: பகைவர் யாவராயினும் அவரைக் கொன்று தீர்க்கும் வலிமை பெற்றவன் வாலியாகலின், துன்னார் காலனும் வாலி எனச் சிறப்பித்தவாறு. காலன்–எமன். தோன்றியபின் என்றது பிறந்து உலகில் தோற்றமுடையவராய் வளர்ந்தபின் என்னும் பொருளது. மருங்குல் – இடை. மருங்குலைத் திருமகட்கும் அடையாக்கலாம். ருமை என்பது தமிழ்க்கேற்ற நடையில் உருமை எனவாயிற்று. ரவ்விற்கம் முதலாமுக்குறிலும் (நன்னூல்–பதவியல்–21) என்பது விதி. சுக்கிரீவன் மனைவியாகிய உருமையை வாலி விரும்பி கைப்பற்றியதால் உடன் பிறந்தார் இருவரும் பகைவராயினர். இன்னாராகி–பகைவராகி. போர் எதிர்ப்ப என்றது எதிர்த்துப் போரிட என்ற பொருளில் வந்தது. இனி, போர்க்கோலங் கொண்டு எதிர்க்க எனலும் ஆம். இளையான் என்றது, சுக்கிரீவனை; இளையவன் என்பது பொருள். இளையான் இளைத்து என்பதில் முரண்டொடை அமைந்திருத்தல் காணலாம். அண்ணனாகிய வாலியின் வலிக்குத் தோற்றுச் சுக்கிரீவன் புறங்காட்டி ஓடி மதங்க வனத்தைச் சார்ந்தான் என்றவாறு. (சச)

அநுமான் சுக்கிரீவனோடு நண்பனாதல்

667. அந்த முனிவன் சாபத்துக்
கஞ்சி வாலி யவ்வனத்து
வந்து புகுதா தொழிதலால்
வாழ்நாள் பெறுஞ்சுக்கிரீவனொடும்

சிந்தை கலந்து சகியாகிச்
சேர்ந்து தன்னை யுணராதே
அந்த ணாளர் சாபத்தா
லநுமா னடங்கி யங்கிருந்தான்.

அந்த முனிவன் சாபத்துக்கு அஞ்சி வாலி அவ்வனத்து வந்து புகுதாது ஒழிதலால், வாழ்நாள் பெறும் சுக்கிரீவனொடும் சிந்தை கலந்து சகியாகிச் சேர்ந்து தன்னை உணராதே அந்தணாளர் சாபத்தால் அநுமான் அடங்கி அங்கு இருந்தான்.

பொ : அவ்வனத்துக்குரிய மதங்க முனிவனது சாபத்திற்கு வாலி அஞ்சி அந்த மதங்கவனத்தில் வந்து புகாமல் இருந்ததால் (அவனால் கொல்லப்படாமல்) வாழ்நாளைப் பெற்ற சுக்கிரீவனோடு மனம் கலந்து தோழனாகிச் சேர்ந்து தன் வலியை யுணராமலே முனிவர் தம் சாபத்தால் அநுமன் அடங்கி அவ்வனத்தே இருந்தான்.

கு: மதங்கமுனிவன் சாபமாவது:— துந்துபி உடலைத் தூக்கித் தன் மலையில் எறிந்த வாலி தன் மலையை மிதிக்கின் தலை வெடித்துச் சாவானாக! என்பது. அந்தச் சாபத்துக்கு அஞ்சியே வாலி அவ்வனத்தில் புகாதிருந்தான். மதங்கமுனிவர் இருந்த மலையும் காடும் அம்முனிவர் பெயரால் வழங்கப்பட்டன. வாலி மரணத்திற்கு அஞ்சி வாராத மலையில், சுக்கிரீவன் மரண பயமின்றி வாழ்நாள் பெற்று வாழ்ந்திருந்தானாக, அவனோடு அநுமான் மனங்கலந்த நண்பினனாகச் சேர்ந்து தன்வலிமை தானறியாமல் வாழ்ந்து வந்தான் என்றவாறு. சகி என்பது தோழி என்னும் பெண்பாற்குரிய சொல்லேனும் இங்குச் சகித்துவம்—நட்பு—தோழமை என்ற பொதுப் பொருள் கருதி ஆண்பாலுக்கும் வழங்கப்பட்டது போலும். அந்தணாளர் சாபம் என்றது முனிவர் சாபத்தை. காற்றின் றனையன் கருத்தழிவுற்று உன்மத்தன் போல் தன் வலி தானுணரா தொழிக, (42) என முன் கூறப்பட்டிருத்தல் காணலாம். (சரு)

அநுமான் சூரியனிடத்தில் வேத முதலியவற்றை ஓதியுணர்தல்
வேறு

668. வேதமொரு நாலுடன் விளங்கிய
சடங்கமும் விரிந்த கலையும்
ஓதநில வீதிமிசை யேழுபரி
பூணருண னூர விரைதேர்
மீது செலும் வெங்கதிர வன்றனொ
டயிந்திர வியாகரணமும்
ஓதியொரு நாளினி லுணர்ந்தனனிம்
மாருதி யுயர்ந்த புகழோய்.

வேதம் ஒருநாலுடன் விளங்கிய சட்அங்கமும் விரிந்த கலையும்
ஓதநில வீதிமிசை ஏழுபரி பூண் அருணன் ஊர, விரை தேர்
மீது செலும் வெங்கதிரவன் தனொடு, அயிந்திர வியாகரணமும்
ஓதி ஒருநாளினில் உணர்ந்தனன் இம்மாருதி உயர்ந்த
[புகழோய்!

பொ: உயர்ந்த புகழையுடைய இராமபிரானே! இந்த அநுமான், வேதங்கள் ஒரு நாலோடு விளக்கமுடைய ஆறு அங்கங்களையும், அறுபத்து நான்காக விரிந்த கலைகளையும், ஐந்திர வியாகரணத்தையும், கடலால் சூழப்பட்ட நிலமாகிய வீதிமேல் நின்றுகொண்டே, ஏழு குதிரைகள் பூண்டதும் அருணன் தூண்ட விரைந்து செல்கின்றது மாகிய தேர்மீது செல்லுகின்ற வெம்மை யுடைய சூரியனோடு சென்று கற்று ஒருநாளில் உணர்ந்து கொண்டவனவன்.

கு: அகத்தியமுனிவர் கதைக்கு நடுவே இராமபிரானை விளித்துக்கூறியது; உயர்ந்த புகழோய்! என்றது இராமபிரானை. வேதம் நான்காவன. இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. சட் என்ற வட சொல்லுக்கு ஆறு என்பது பொருள். சட் அங்கம் – சடங்கம் ஆயிற்று. ஆறு அங்கங்களாவன: சிட்சை. வியாகரணம், சந்தம், நிருத்தம், சோதிடம், கல்பம் என்பன. அநுமான் பேருரு வெடுக்கும் இயல்பினன் ஆகலின் நிலத்தின்மீது

நின்று கொண்டே சூரியன் செல்லும் எதிர் திசையில் தலையைச் சாய்த்துக் கொண்டு வேதம் முதலியவற்றை ஒருநாளில் ஓதி உணர்ந்தான் என்க. சூரியன் வெம்மை தாக்காத வரத்தை வாயு முன்னரே கொடுத்திருத்தலின் சூரியனோடு நெருங்கிக் கற்கும் வாய்ப்பு அநுமானுக்கு உண்டாயிற்று. ஆறு அங்கங்களில் ஒன்றாகிய வியாகரணத்தைச் சிறப்பு நோக்கித் தனியே பிரித்துக் கூறினார். ஓதம் – கடல். கடலால் சூழப்பட்ட நிலத்தை ஓதநிலம் என்றார். நிலவீதிமிசை நின்று என ஒருசொல் வருவிக்க. வெங்கதிர் என்றது சூரியனை. எழுபரிபூண் அருணன் ஊர விரை தேர்மீது செல்லும் என்பது, சூரியனுக்கு அடை. பரிபூண்தேர் அருணன் ஊர விரைதேர் எனத் தனித்தனி இயையும். பூண்தேர் விரைதேர் என்பன வினைத் தொகைகள். கதிரவன்றனொடு ஓதிஎன்றது, வானவீதியில் செல்லும் சூரியனொடு தலைசாய்த்துக் கொண்டே ஓதிய நிலையையுணர்த்தியது இந்திரனால் செய்யப்பட்ட வியாகரணம் ஐந்திர வியாகரணம் எனப்பட்டது. வியாகரணம் – இலக்கணம். ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனப் பனம் பாரனார் பாயிரத்தில் கூறியிருப்பதையும், இளங்கோவடிகள், கப்பத்திந்திரன் காட்டிய நூலின் (சிலப்–காடுகாண் காதை) எனக் குறிப்பிடுவதையும் இங்கு நினையலாம். (சஅ)

அநுமான் தனக்குவமையில்லாதவன் என்றது

669. தண்ணளி யினன்மிகு தயாவுடை
மையால்வரு தருக்கறு தலால்
எண்ணு கரு மங்களவை யாவுமிடை
யூறற வியற்று மியல்பால்
நண்ணலரை விண்ணவர்க ளாயினு
நடுக்குறு மிடுக்குடை மையால்
மண்ணுலகில் விண்ணுலகில் மாருதியை
யொக்குமவர் யாருமிலையால்.

தண்அளியினுல், மிகு தயாவுடைமையால்,
வருதருக்கு அறுதலால்,
எண்ணு கருமங்கள் அவையாவும் இடையூறு
அற இயற்றும் இயல்பால்,
நண்ணலரை விண்ணவர்கள் ஆயினும்
நடுக்குறு மிடுக்கு உடைமையால்,
மண்ணுலகில் விண்ணுலகில் மாருதியை
ஒக்குமவர் யாரும் இலையால்.

பொ: குளிர்ந்த கருணையுடைமையாலும் மிக்க இரக்கம் உடைமையாலும் வளர்கின்ற செருக்கு அற்றிருத்தலாலும் நினைத்த செயல்கள் எல்லாவற்றையும் இடையூறு இல்லாமல் செய்து முடிக்கின்ற தன்மையாலும் தேவர்களேயாயினும் பகைவர்களை நடுங்கச் செய்கின்ற வலிமையுடைமையாலும் இம்மண்ணுலகத்திலும் அந்த விண்ணுலகத்திலும் அநுமானை ஒப்பவர் எவரும் இல்லை.

கு: தண்ணளியும் தயாவும் ஒருபொருள் உணர்த்துவனவே, ஆயினும் இருசொல்லும் இங்கு வழங்கப்பட்டிருத்தலின் கருணையும் இரக்கமும் எனப் பொருள் கூறலாயிற்று. தண்ணளியும் தயாவும் முன்னியது முடிக்கும் முயற்சியும் பகைவரை நடுங்குவிக்கும் மிடுக்கும் செருக்கிலாமையும் ஆகிய ஐந்து குணங்களால், அநுமான் ஒப்பற்றவனுக உள்ளான் என்றவாறு. நடுக்குறல் – பிறவினை. நண்ணலர் – பகைவர். மிடுக்கு – வலிமை. மண்ணுலகிலும் விண்ணுலகிலும் அவனை ஒப்பவர் இல்லை என்பது, யாண்டும் இல்லை என்னும் கருத்தினது. மாருதம்–காற்று. காற்றுக் கடவுளின் மகன் மாருதி எனப்பட்டான், சனகன் மகள் சானகி ஆனதுபோல. (சஎ)

அநுமான் இராமனை அடைந்ததால் உளதாய நிலை

670. அறந்தலை யெடுத்த தடல் வானவர்க
டானவர்க ளாடினர் கடீ
மறந்தலை யிறக்கியது வாலிமுத
லானவர்கள் வாம நயனம்

சிறந்ததிர டோள்புருவ மார்பிவை
துடித்தன சிறந்த புகழான்
நிறைந்த குண மாருதி நினைத்திரு
வடித் தொழுது நின்ற பொழுதே.

அறம் தலை எடுத்தது அடல்
வானவர்கள் தானவர்கள் ஆடினர்கள்; தீ
மறம் தலை இறக்கியது; வாலி
முதலானவர்கள் வாம நயனம்
சிறந்த திரள்தோள் புருவம் மார்பு
இவை துடித்தன, சிறந்த புகழான்
நிறைந்த குண மாருதி நினைத்திருவடித்
தொழுது நின்ற பொழுதே.

பொ: சிறந்த புகழால் நிறைந்த குணவானுகிய அநுமான் நின்னைத் திருவடியின் கண் வீழ்ந்து தொழுது நின்ற பொழுது, தருமம் தலைதூக்கி நின்றது; வலிமையுடைய தேவர்களும் தானவர்களும் மகிழ்ச்சியால் ஆடினுர்கள். தீயதாகிய பாவம் தலை சாய்த்து நின்றது; வாலி முதலியவர்களின் இடக்கண்ணும், சிறந்த இடத் தோளும் இடப்புருவமும் இடமார்பும் ஆகிய இவை தீய நிமித்தமாகத் துடித்தன.

கு: அநுமான் தனித்திருந்த பொழுதினும், இராமனை வணங்கி அடியவனுக ஆன பின்னரே அவன் ஆற்றல் மிக்கது, செயல்பட்டது ஆகலின், மாருதி நினைத் திருவடித் தொழுது நின்ற பொழுது அறந்தலையெடுத்தது, தீமறம் தலையிறக்கியது, வாலி முதலானவர்களின் இடக்கண் முதலியன துடித்தன என்றுர். அநுமான் இராமனை மதங்கமலையில் கண்டு சுக்கிரீவனேடு நட்பு செய்வித்ததால் சுக்கிரீவனுக்குத் துணையாக நின்று இராமன், வாலி முதலியவர்களை வதைத்தமையறியலாம். ஆடவர்க்கு இடது கண் முதலியன துடித்தல் அவர்களழிவைக் குறித்த தீநிமித்தமாகும். இராவணன் இராமனேடு போர் புரியத் தொடங்கிய பொழுது அவன் இடத்தோள்கள் துடித்த தன்மையை சுடர்மணி வலயஞ் சிந்தத் துடித்தன இடத்த பொற்றேள் (யுத்த - இராவணன்

வதைப் - 18) என்பதால் அறியலாம். வீரத்தையுணர்த்தும் மறத்தை நீக்குதற்குத் திமறம் என்றார். வாமம் - இடப் பக்கம். நயனம் - கண். கண்ணும் தோளும் புருவமும் மார்பும் இடப் பக்கம் துடித்தன என்க. (சஅ)

### அநுமானின் சிறப்பு

671. தனக்குவமை யற்றவனை வெற்றிமிகு
மாருதி தனைத்தடை யிலாச்
சினத்தொடு மனத்திற லரக்கர்கள்
செருப்புரி களத்த மலநீ
நினைத்தது முடித்தொரு கணத்தினி
னினைத்தொழுது நிற்ப வனையான்
உனக்கினி யுரைப்பதெவ னுத்தம
வுனைப்பிரிவில் வித்தக னையே.

தனக்கு உவமை அற்றவனை
வெற்றிமிகு மாருதிதனை தடையிலாச்
சினத்தொடு மனத்திறல் அரக்கர்கள்
செருப்புரி களத்து அமல! நீ
நினைத்தது முடித்து ஒரு
கணத்தினில் நினைத்தொழுது நிற்பவனை யான்
உனக்கு இனி உரைப்பது எவன்?
உத்தம! உனைப் பிரிவுஇல் வித்தகனையே.

பொ: மல அழுக்கு அற்ற தூயவனே! தலைமைக் குண முடையவனே! தனக்கு ஒப்பு இல்லாதவனை - வெற்றிமிக்க அநுமானை - யாராலும் தடைசெய்ய முடியாத சினத்தோடு மனவலிமை யுடைய அரக்கர்கள் போர்புரியும் போர்க்களத்தில் நீ நினைத்த காரியத்தை ஒரு கணத்திலில் முடித்துவிட்டு நின்னை வணங்கி நிற்கும் தன்மையுடையவனை - உன்னைப் பிரியாது நிற்குற் சதுரப் பாடு உடையவனைப் பற்றி உனக்கு யான் சொல்லுவதற்கு இனி யாதுளது?

கு: தனக்குவமை யற்றவனை, மாருதிதனை. நீ நினைத்தது முடித்து ஒருகணத்தினில் நினைத்தொழுது நிற்பவனை, உனைப் பிரிவில் வித்தகனை, என்பன ஒரு பொருள்மேல் வந்த பல பெயர் -கள் இரண்டனுருபு ஏற்று அடுக்கி நின்றன, 'ஞானத்தின் திரு வுருவை நான்மறையின் தனித்துணையை வானத்தின் மிசையின்றி மண்ணில் வருமதிக் கொழுந்தை தேனக்க மலர்க் கொன்றை செஞ் சடையார் சீர்தொடுக்கும் கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள். (பெரிய புரா – திருஞானசம்பந்தர்) என்ற திருப் பாட்டுப்போல.' அரக்கர்களின் கோபம் இதுகாறும் யாராலும் தடைப்பட்டு நின்றதில்லை என்பார், தடையிலாச் சினத்தொடு மனத்திறல் அரக்கர் என்றார். செருப்புரிகளம் – போர்புரியும் இடம். அரக்கர் போர்க்களத்தில் நீ நினைத்தது முடித்தொரு கணத்தினில் நினைத்தொழுது நிற்பவனை என்றது, மருத்துமலை கொணர்ந்தது முதலிய செயற்கருஞ் செயல்களைக் குறிப்பிட்டவாறு. உனைப்பிரிவில் வித்தகனைப் பற்றி முற்றும் அறிந்தவனாகிய உனக்கு, இறைவனை நினைந்து தவம் கிடக்கும் யான் உரைப்பது எவன்? என்றவாறு. வித்தகன்–சதுரப்பாடுடையவன். (சசு)

அநுமான் குணத்தை இராமன் புகழ்தல்

672. வாடைதரு சேய்பிறவி யுஞ்செயல்க
ளும்பெரு வரங்களு மிரிந்
தோடுவினை மாதவர்ச பிப்பவிடை
தன்னையு ணராத வகை யும்
நீடு தவ மாமுனியு ரைத்திட
வியந்துநிரு தேசன்மடி யக்
கோடுவி லிராகவன் மகிழ்ந்தவனு
மாருதி குணம்புகழ் தலும்.

வாடைதரு சேய் பிறவியும் செயல்களும் பெருவரங்களும், இரிந்து ஓடு வினை மாதவர் சபிப்ப, இடை தன்னை உணராத வகையும், நீடு தவ மாமுனி உரைத்திட, வியந்து நிருதேசன் மடியக் [தனும் கோடுவில் இராகவன் மகிழ்ந்து அவனும், மாருதி குணம் புகழ்

பொ: காற்றுக்கடவுள் பெற்ற பிள்ளையாகிய அநுமான் பிறப்பும் அவன் செய்த செயல்களும் அவன் தேவர்கள்பால் பெற்ற பெரிய வரங்களும், இருவினையும் இரிந்து ஓடுதற்குக் காரணமான பெருந்தவ முனிவர்கள் சபித்தலால் நடுவே அவன் தன்னை யுணராத அத்தன்மையும், நீண்டகால தவத்தையுடைய சிறந்த அகத்திய முனிவர் சொல்ல, அரக்கர்களுக்கு அரசனாகிய இராவணன் மடியும்படி வளைத்த வில்லையுடைய இராமன், வியந்து மகிழ்ந்து அவனும் சேர்ந்து அநுமானின் குணத்தைப் புகழ்தலும்.

கு: வாடை என்பது இங்கு வடதிசையிலிருந்து வரும் காற்றைக் குறிக்காமல் பொதுப் பொருள் உணர்த்தியது. பிறவி - பிறப்பின் வரலாறு. அவன் செயல்களாவன:- சூரியனைப் பழம் என நினைந்து பற்றியதும் பிறகு இராகுவையும் பின்பு ஐராவதத்தையும் பற்றியதும் ஆம். பெருவரங்கள் என்றது. இந்திரனும் பிரமனும் வருணனும் போன்ற தேவர்கள் கொடுத்த பெரிய வரங்களை. தவத்தின் சார்பால் இருவினை நீங்கப் பெற்றவர் என்பார். இரிந்தோடு வினை மாதவர் என்றார். இரிந்தோடுதல் - அஞ்சி ஓடுதல். தன்னையுணராத வகை என்றது, தன்வலிமையை யுணராத உன்மத்த நிலையை. நிருதேசன் என்றது இராவணனை. நிருதேசன் மடியக் கோடுவில் இராகவன் என்றது, இராவணன் மடியுமாறு வில்லை வளைத்து அம்பு எய்த இராமன் என்றவாறு. கோடுவில் என்றது வில்லை வளைத்து அம்பு எய்ததைக் குறிப்பால் உணர்த்திய வாறு. அவனும் என்புழி உம்மை, இறந்தது தழீஇயது. அகத்திய முனிவரே யன்றி அவனும் மாருதி குணம் புகழ்தலும் என்றவாறு. புகழ்தலும் என்பது வரும் செய்யுளில் முடிவுறும். குளகம். இராகவன் வியந்து மகிழ்ந்து என இயையும். (௩௰)

### முனிவர்கள் தம் இருப்பிடம் செல்ல விரும்புதல்

673. தேடுதன மாகுவ ரெனத்தெளியு
மாமுனிவர் சொற்க ளவைகேட்
டோடுமது கண்டுசின மாறரச
னுக்கிவை யுரைப்ப ருணர்வால்

நீடுவர வெங்கணிய மங்களுள
வாகினு நினைப்பிரி தலில்
கூடுகில தெங்கண்மன மென்றலு
மகண்டபதி கூறுமிவையே.

தேடு தனம் ஆகுவர் எனத் தெளியும்
மாமுனிவர் சொற்கள் அவைகேட்டு
ஓடும் அது கண்டு சினம் மாறு
அரசனுக்கு இவை உரைப்பர் உணர்வால்
நீடு வர! எங்கள் நியமங்கள் உள,
ஆகினும் நினைப்பிரிதலில்
கூடுகிலது எங்கள் மனம் என்றலும்
அகண்டபதி கூறும் இவையே.

பொ : முயன்று தேடுதற்குரிய செல்வம் ஆவர் இவர் எனச் சான்றோரால் தெளியப்பட்ட சிறந்த முனிவர்கள், இராமன் கூறிய சொற்களைக் கேட்டு, பகைவர் ஓடுவது கண்டு அவரைத் துரத்தாது கோபம் தணிகின்ற இராமனாகிய அரசனுக்கு இவற்றைச் சொல்லலானார். உணர்வால் நீண்டு தோன்றுகின்ற மேலோனே! நாங்கள் நாள்தொறும் செய்ய வேண்டிய எங்களுக்குரிய நியமங்கள் இருக்கின்றன. ஆயினும் நின்னைப் பிரிவதில் எங்கள் மனம் உடன்படவில்லை; என்று பணிவாகக் கூறுதலும், உலக முழுமைக்கும் தலைவனாகிய இராமன் கூறுவானானான்.

கு : முனிவர்களின் அருமை பெருமைகளை நினைப்பவர்கள் அம்முனிவர்களை முயன்று தேடுதற்குரிய பெருஞ்செல்வமாகத் தெளிவார்கள் என்பார், தேடுதனமாவர் எனத் தெளியுமாமுனிவர், என்றார். தெளியும் என்பது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. சொற்கள் அவை என்றது, இராமன் அநுமான் குணங்களைப் புகழ்ந்து கூறிய சொற்களை. அவை பகுதிப்பொருள் விகுதி. அரசன் என்றது இங்கு இராமனை. அவன், அழியுநர் புறக்கொடை அயில் வாளோச்சாக் கழிதறுகண்மையுடையவன் என்பதை விளக்குவாராய் ஓடுமது கண்டு சினம் மாறு அரசன் என்றார். இராமனுக்கு இவ்வியல்பு உண்டு என்பதை முதனாட் போரில்

ஆனையாவுனக்கமைந்தன மாருத மறைந்த பூனையாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு நாளைவாவென நல்கினன் (யுத்த - முதற்போர்ப்படலம் - 256) என இராவணனை நோக்கிக் கூறிய, சினம் தணிந்த சொல்லால் தெளியலாம். பரம் - மேன்மை. உணர்வால் நெடியோனாகிய மேலோனே என்பார், உணர்வால் நீடுவர! என்றார். எங்கள் நியமங்கள் உள என்றதால் அந்த நியமங்களைச் செய்யச் செல்லும் விருப்புடையவர் என்பது புலனாகும். ஆகினும் நினைப்பிரிதலில் கூடுகில தெங்கள் மனம் என்றது, இராமனைப் பிரிய கில்லாத மனநிலையை யுணர்த்தியது. அகண்டபதி என்றது, இவ்வுலகத்தில் ஒரு கண்டத்திற்குத் தலைவன் என்பதின்றி உலகம் முழுமைக்கும் பதியாவான் என்பது புலப்படுத்தியவாறு. அகண்டம் - கண்டப்படாத - பிரிக்கப்படாத உலகம். (௫௧)

முனிவர்கள் தம் ஆச்சிரமங்கட்குப் புறப்படுதல்

674\. உங்கணிய மங்களவை குன்றுதலி லாதொழிக
வுங்கள் பரமெங்கள ரசும்
இங்கிவை திருந்திடு மிருந்தவ
மருந்தவ வெனப் புகழ்தலும்
அங்கவனை யாரருளொ டாசிகள்
மொழிந்தினி திருத்தி யெனவாழ்
துங்கமறை மாமுனிவ ராச்சிரம
முன்னிநெறி துன்னு பொழுதின்-

உங்கள் நியமங்கள் அவை குன்றுதல் இலாதுஒழிக
உங்கள் பரம் எங்கள் அரசும்
இங்கு இவை திருந்திடும் இருந்தவம்;
அருந்தவ! எனப்புகழ்தலும்
அங்கு அவனை ஆர்அருளொடு ஆசிகள்
மொழிந்து இனிது இருத்தி என வாழ்
துங்க மறை மாமுனிவர் ஆச்சிரமம்
முன்னி நெறி துன்னு பொழுதின்-

பொ: (இராமபிரான் முனிவரை நோக்கி) அரிய தவத்தினை யுடைய முனிவரே! உங்களுடைய நியமங்களில் குறைதல் என்பது இல்லாதொழிக! உங்களுடைய செயல் எங்களுடைய அரச காரியங்களாய் இங்கு நிகழ்கின்ற இவை திருந்துதற்குக் காரண மான பெரிய தவமாகும் என்று புகழ்ந்து சொல்லுதலும் (முனிவர்கள்) அவ்விடத்து இராமபிரானைப் பார்த்து நிறைந்த அருளோடு ஆசிகள் சொல்லி, 'இனிது இருப்பாயாக' என்று வாழ்த்தி வாழ்வு பெறுகின்ற தூய வேதங்களில் வல்ல பெரிய முனிவர்கள் தத்தம் ஆசிரமங் களுக்குச் செல்ல முற்பட்டுப் பயணமானவுடன்.

கு: முனிவர்கள் மேலைச் செய்யுளில் 'எங்கள் நியமங்கள் உளவாகினும் நினைப்பிரிதலில் கூடுகிலது எங்கள் மனம்' என்று கூறித் தம் பிரிதற்குறிப்பைப் புலப்படுத்தினமையால் இங்கு இராமபிரான் உங்கள் நியமங்களவை குன்றுதலிலாதொழிக! எனவும் உங்கள் பரம் எங்கள் அரசும் இங்கு இவை திருந்திடும் இருந்தவம் எனவும் புகழ்வானாய் விடைகொடுத்தான் என்க. பரம் – செயல். உங்கள் நியமங்களாகிய செயல்களே இங்கு எங்கள் அரசு திருந்தி நடப்பதற்குரிய பெருந்தவமாகும் என்றபடி. காட்டில் முனிவர் செய்யும் வேள்வி முதலிய நியமங்களால் நாட்டில் நல்லரசு பெருக வழிவகுக்கும் என்பது கருத்து. நீங்கள் எம் நாட்டைவிட்டுக் காட்டுக்குச் சென்ற வழியும் எங்கள் வாழ்வையே வளர்க்கின்றீர்கள் என முனிவர்களைப் புகழ்ந்தவாறு. பரம்பொருளாகிய இராமபிரானை இனிதிருத்தி என வாழ்த்திய முனிவர்களே அவனருளால் வாழ்வு பெறுகின்றார்கள் என்பார், இனி திருத்தி யென வாழ் துங்கமறை மாமுனிவர் என்றார். வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் (திருவாசகம் – திருச் சதகம்) என்பது நோக்குதற்குரியது. துங்கமறை - தூய்மையான வேதம். முன்னி-முற்பட்டு. நெறிதுன்னுதல் என்றது, பயணமாதலை. (௬௨)

சனகன் வருகை

675\. முடிச்சனகர் கோனுலகை மூடுபடை
யோடுவகை யோடணுகிடத்
தடுப்பரிய பேருவகை யோடுபணி
தாசரதி யைத்தழுவிமுன்

படைத்த தன மாபரண மாடைதிகழ்
பாவையர்க ளாதிபலவும்
கொடுத்தபி னிராவண குலத்தினை
யறுத்தகதை கூறியிடலும்.

முடிச்சனகர் கோன் உலகை மூடு படையோடு உவகையோடு அணு
தடுப்பு அரிய பேருவகையோடு பணி தாசரதியைத் தழுவிமுன் [கிடத்
படைத்ததனம் ஆபரணம் ஆடை திகழ் பாவையர்கள் ஆதி பலவும்
கொடுத்தபின் இராவண குலத்தினை அறுத்த கதை கூறியிடலும்.

பொ: முடியணிந்த சனகமகாராசன் உலகத்தையே மறைப்பதற்குரிய பெரும் படையோடு மகிழ்ச்சியுடன் வரக் கண்டு தடுத்தற்கரிய பெருமகிழ்ச்சியுடன் பணிகின்ற இராமபிரானைத் தழுவிக்கொண்டு சனகன் தான் முன் ஈட்டிய தனம், அணிகலன், ஆடை விளக்கம் பொருந்திய பெண்டிர்கள் முதலிய பலவற்றையும் கொடுத்த பின்பு, இராமபிரான் இராவணனது குலத்தை வேரறுத்த வரலாற்றைச் சொல்லுதலும்.

கு: சனகனும் பேரரசனுதல் புலப்பட முடிச் சனகர் கோன் என்ருர். உலக முழுவதையும் மறைத்துக்கொள்ளத்தக்க பெரும் படை என்பார், உலகைமூடுபடை என்ருர். சானகியைப் பெற்ற தந்தையாகலின் அவனைக் கண்டவுடன் தடுப்பரிய பேருவகை யோடு இராமன் பணிவானுனான். தசரதன் மகன் என்னும் பொருள்படத் தாசரதி என்ருர். தத்திதாந்த நாமம் என்பர் வட நூலோர். படைத்த தனம்-ஈட்டிய செல்வம். இராமபிரான் செல்வத் தால் குறைவிலனுயினும் தன் திருமகள் மணாளன் என்ற உரிமை கருதித் தனம் ஆபரணம் ஆடை முதலியவற்றைப் பரிசிலாகக் கொடுத்தான். பரிசில் பொருளாகப் பாவையரையும் கொடுத்தல் பண்டை முறையாகும். பணிப்பெண்டிராக இவர்கள் விளங்கு வார்கள். இராவண வதைக்குப்பின் சனகனைக் காண்பது இப்போதேயாகலின் இராமபிரான் இராவண குலத்தினை யறுத்த கதையை அவனுக்குக் கூற வேண்டியதாயிற்று. (ருக)

இராமன் முடிமன்னர்களோடு அளவளாவுதல்

676. ஆனைபரி யாபரண மாடைதன
மாதியுப காரமொடு மாச்
சேனைமுடி மன்னவர்கள் சென்றடி
பணிந்தய லிருந்த பொழுதில்
மானகுண பூடண னிராகவன்
மகிழ்ந்துமுடி மன்னவர்களுக்
கானவுப சாரமொழி கூறியவ
ரோடள வளாவியபினே.

ஆனை பரி ஆபரணம் ஆடை தனம் ஆதி உபகாரமொடு மாச்
சேனைமுடி மன்னவர்கள் சென்று அடிபணிந்து அயல்
இருந்தபொழுதில்
மான குண பூடணன் இராகவன் மகிழ்ந்து முடி மன்னவர்களுக்கு
ஆன உபசார மொழி கூறி அவரோடு அளவளாவிய பினே.

பொ : பெரிய சேனையையுடைய முடிமன்னர்கள், யானை, குதிரை, அணிகலன், ஆடை, தனம் முதலிய பரிசிற் பொருள்களோடு சென்று அடிவணங்கி அருகில் இருந்தபொழுது, பெருமை வாய்ந்த குணங்களையே அணிகலன்களாகக் கொண்ட இராமன், மகிழ்ந்து அந்த முடி மன்னர்களுக்குரிய உபசார மொழிகளைச் சொல்லி அவர்களோடு கலந்து பேசிய பின்பு.

கு : உலகாள ஏன்று கொண்ட இராமன் நிலைமைக்கும் தங்கள் தகுதிக்கும் பொருந்த முடிமன்னர்கள் ஆனை பரி முதலியவற்றைப் பரிசிலாகக் கொடுத்து வணங்கினர்கள். உபகாரம் என்றது, இங்கு இராமனுக்கு உபாகாரப்படும் பரிசில் பொருள்களை. மானம் – பெருமை. இனி மானத்தையும் குணத்தையும் பூடணமாகக் கொண்டவன் என்றலும் ஒன்று. நவையறு குணங்களென்னும் பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி தன்னைக் காணலாம் இன்னும் என்னும் காதலாலிருந்தேன் கண்டாய் (மாயாசனகப்–22) எனச் சீதை கூறுவதுங் காண்க. அளவளாவுதல் தன்னளவும் அவர் அளவும் புலப்படுத்திக் கலந்து பேசுதல்.

(ருசு

இராமபிரான் சனகனையும் மற்ற மன்னர்களையும் வழியனுப்புதல்

677. சனகன் வானுறுந் தன்னக ரத்துவாழ்
சனகர் நீங்கிடத் தாப மடைந்தவன்
சனகன் மாமக ளோடு தவாதமஞ்
சனகன் வந்த வரசரை விட்டபின்.

சனகன் வான்உறும் தன்நகரத்து வாழ்
சனகர் நீங்கிடத் தாபம் அடைந்தவன்
சனகன் மாமகளோடு தவாதமஞ்
சனகன் வந்த அரசரை விட்டபின்.

பொ : சனகன் வானுலகம் போன்ற தன் மிதிலை நகரத்து வாழ்கின்ற சனங்களோடு அயோத்திவிட்டு நீங்கிச் செல்ல, அவன் பிரிவால் வருத்தம் அடைந்தவனும் அந்தச் சனகனின் சிறந்த மகளாகிய சீதையோடு கெடாத மஞ்சன நீராடியவனும் ஆகிய இராமன் அயோத்திக்கு வந்திருந்த மன்னர்களையெல்லாம் அவர் குறிப்பினையறிந்து விடை கொடுத்தபின்.

கு: இப்பாடல் அடிதோறும் முதற்சீர் ஒத்துவந்தமையால் யமகம் எனும் சொல்லணி அமைந்ததாகும். இராமன் முடிசூட்டு விழாக் காண வந்த சனகன், இராமனுக்கு உகந்த பரிசில்களைக் கொடுத்துவிட்டுத் தன்னகரத்து வாழ் மக்களோடு விடைபெற்றுப் பிரிந்து சென்றானாக, அவன் பிரிவால் வருந்திய இராமன் தன் முடிசூட்டு விழாவிற்கு வந்த மற்ற மன்னர்களையெல்லாம் விடை கொடுத்தனுப்பினான் என்றவாறு. வானுறுந் தன்னகரத்து வாழ் சனகர் நீங்கிட என்றது, வானுலகம் போன்ற தன் மிதிலை நகரத்து வாழ்கின்ற மக்களோடு விடைபெற்று நீங்க என்றவாறு. சனகர் - மக்கள். சனகரொடு நீங்கிட என்புழி மூன்றனுருபு விகாரத்தால் தொக்கது. சனகன் மகளாகிய சீதையோடு முடிசூட்டு விழாவில் திருமஞ்சன நீராடினவன் ஆதலின் மாமனார் என்ற அன்புப் பிணிப்பால் சனகன் பிரிந்தபோது இராமன் தாபம்அடைவானாயினன். தவாத – கெடாத. மஞ்சனகன்—திருமஞ்சன நீராடியவன்.

தாபமடைந்தவனும் மஞ்சனநீராடியவனும் ஆகிய இராமன் என இயையும். விட்டபின் என்ற எச்சம் வரும் செய்யுளில் முடியும். (௫௫)
குளகம்.

மன்னர்கள் தந்த பரிசில் பொருள்களை
இராமன் இரவலர்க்கு வழங்குதல்

678. தார ணித்தலை யார்க்குந் தரியலர்
தார ணிப்பொருந் தாவமர் வேந்தர்க்கும்
தார ணிப்பரந் தீர்த்தவன் தந்தனன்
தார ணிப்புய மன்னர் தருந்தனம்.

தாரணித்தலை யார்க்கும் — தரியலர்
தார் அணிப்பொருந்தா அமர் வேந்தர்க்கும்
தாரணிப் பரம் தீர்த்தவன், தந்தனன்
தார்அணிப்புய மன்னர் தருந்தனம்.

பொ: பகைவர்கள், தூசிப்படையாகியமுன் அணியில் பொருந்தாதபடி (பின்னிடும்படி) போர் செய்கின்ற வேந்தர்க்கும் பூமி பாரம் பொருந்தாவண்ணம் தீர்த்தவனாகிய இராமபிரான், மாலை அணிந்த தோள்களையுடைய மன்னர்கள் தனக்குப் பரிசாகத் தந்த பொருள்களை இவ்வுலகத்தில் (இன்னார் இனியார் என்று பாராது) ஏற்றோர் அனைவர்க்கும் தானமாகத்தந்தான்.

கு: தீயவர்களை அழித்துப் பூமி பாரத்தைப் போக்கினவன் இராமன் ஆதலின், அவனை தாரணிப் பரம் தீர்த்தவன் என்று பாராட்டினார். பரம் – பாரம். தாரணிப்பரம் தீர்த்தவன், மன்னர் தருந்தனம் தாரணித்தலை யார்க்கும் தந்தனன் என இயையும். தரியலர் – பகைவர். தார் – தூசிப்படை. தரியலர் தார் அணிப் பொருந்தா அமர் வேந்தர் என்றது, பகைவர்கள் தூசிப்படையாகிய முன்னணியில் பொருந்தாமல் அழிக்கின்ற போர்த்திறம் வல்ல வேந்தர் என்றவாறு. வேந்தர்க்கும் தாரணிப் பரம் தீர்த்தவன் என்றது, அத்தகு வேந்தர்க்கும் தலைவனாய் இராமனே இருந்து

அரச பாரத்தைத் தாங்கினன் என்றவாறு. யார்க்கும் தந்தனன் என்றது ஏற்பவர் இன்னர் இனியார் என்று பாராமல் ஏற்றவர் அனைவர்க்கும் தந்தான் என்றவாறு. (ருசு)

இராமன் அந்தணர்க்கு அளித்தல்

679. நூறு கோடி சுவணமு நுண்கலை
நூறு கோடியும் பூணு முதவினன்
நூறு கோடி யிரத நுதற்கரி
நூறு கோடிய சாபனுண் ணூலர்க்கே.

நூறு கோடி சுவணமும் நுண்கலை
நூறு கோடியும் பூணும் உதவினன்,
நூறு கோடி இரதம் நுதல் கரி
நூறு கோடிய சாபன் நுண் நூலர்க்கே.

பொ: பகைவர்களின் நூறு கோடி தேர்களையும் (பட்டம் அணிந்த) நெற்றியையுடைய (நூறு கோடி) யானைகளையும் அழிப்பதற்குரிய வளைந்த வில்லையுடையவனாகிய இராமன், நுண்ணிய நூல்களை யுணர்ந்த முந்நூல் அந்தணர்க்கு, நூறு கோடி அளவினதான பொன்னையும், நூறு கோடி அளவுடைய மெல்லிய ஆடைகளையும் அவ்வளவினவான அணிகலன்களையும் கொடுத்தான்.

கு: சுவணம்-பொன். நுண்கலை என்றது நுட்பமான நூலால் இயன்ற ஆடைவகைகளை. கோடிய சாபன், நுண்ணூலர்க்குச் சுவணமும் நுண்கலையும் பூணும் உதவினன் என இயையும். பகைவரின் இரதம் கரி இவற்றை அழிப்பதற்குரிய வளைந்த வில்லையுடையவனாகிய இராமன் என்க. நூறுதல்-அழித்தல். நூறுகோடி இரதம், நூறு கோடி கரி என்றது மிகுதியுணர்த்தியவாறு. பகைவர்தம் பெரும்படைகளையழிக்க வல்லதாய் வளைந்துள்ள வில் என அதன் சிறப்புணர்த்தியவாறு. சாபம் - வில். அதனை யுடையவன் சாபன் எனப்பட்டான். கோடிய - வளைந்த. நுண் ணூலர் என்றது, நுண்ணிய நூற்கருத்துக்களை யுணர்ந்தவர்கள்

எனவும், நுண்ணிய முந்நூலை யணிந்தவர் எனவும் பொருள்படும். இருபொருளும் இங்கு ஏற்புடையனவே. (௫எ)

### கழுத்திலணிந்த முத்தாரத்தைக் கொடுத்தல்

680. களமொ ழிந்திடச் சால கடங்கரைக்
களமொ ழிந்திட லங்கையிற் காதினன்
களமொழிந்தசீர்க் கையின் வழங்கினன்
களமொ ழிந்தறி யாக்கதி ராரமும்.

களம் ஒழிந்திடச் சால கடங்கரைக்
களம் ஒழிந்திட லங்கையில் காதினன்
களம் ஒழிந்தசீர்க் கையின் வ்ழங்கினன்
களம் ஒழிந்து அறியாக் கதிர் ஆரமும்.

பொ: தன் மனைவி தன்னைவிட்டுப் பிரிந்தமையால் (அவளைப் பிரியச் செய்த) இராவணன் முதலிய அரக்கரைப் போர்க்களத்தில் இறந்து ஒழிந்திடுமாறு இலங்கையிற் சென்று கொன்றவனாகிய இராமன், மேகங்கள் தோல்வியுற்று ஒழிதற்குக் காரணமான கொடைச் சிறப்பினையுடைய தன் கையினால், தன் கழுத்தைவிட்டு நீங்கியறியாத ஒளிவாய்ந்த முத்துமாலையை இரவலர்க்கு வழங்கினான்.

கு: களம் என்ற பலபொருள் ஒருசொல் இங்கு நான்கு அடியிலும் முறையே மனைவி, போர்க்களம், மேகம், கழுத்து என்ற நான்கு பொருள்களில் வந்துள்ளது. சால கடங்கர்—அரக்கர். சால கடங்கடர் எனவும் இவர் வழங்கப்படுவர். இலங்கை எனத் தமிழ் வழக்கிற்கேற்ப வரவேண்டிய சொல் இங்கு இகரம் இல்லாமல் லங்கை என்றே வழங்கப் பட்டுள்ளது. காதுதல் → கொல்லுதல். கைம்மாறு கருதாது மழையைப் பொழிவது மேகம்; அந்த மேகத்திலும் மிகுதியாகக் கைம்மாறு கருதாது கொடுக்கின்ற கை இராமனுடைய கையாதலின், மேகம் தோற்றொழிதற்குரியதாயிற்று. களம் ஒழிந்த சீர்க்கை என்புழி ஒழிந்த என்ற பெயரெச்சம் காரணப்பொருளது; மேகம் தோற்றொழிதற்குக் காரணமான

கொடைச் சிறப்பினையுடைய கை என்க. தன் கழுத்தில் விருப்புடன் அணிந்த முத்துமாலை ஆகலின், அது அவன் கழுத்தைப் பிரிந்தறியாதது என அதன் சிறப்புணர்த்தியவாறு. ஆரம் — முத்துமாலை.

(ருஅ)

அங்கதனுக்கு இராமன் தோள்வளை கொடுத்தல்

681. அங்க தன்ற னளவறி யாவணி
அங்க தந்திகழ் மொய்ம்ப னருமறை
அங்க தன்னிவ் வகிலாண்ட நாயகன்
அங்க தன்றனக் கீந்தா னருளொடும்.

அங்கு அதன்றன் அளவு அறியா அணி
அங்கதம் திகழ் மொய்ம்பன் அருமறை
அங்கதன் இவ் அகிலாண்ட நாயகன்
அங்கதன் தனக்கு ஈந்தான் அருளொடும்.

பொ: அவ்விடத்து அதனுடைய விலை மதிப்பு இவ்வளவு என யாரும் அறியாத பெருமதிப்புடைய அங்கதம் என்னும் அணிகலன் விளங்குகின்ற தோள்களையுடையவனும், அரிய வேதங்களின் மெய்ப்பொருளாய் அவற்றில் கரந்துறைபவனும், இந்த அகில அண்டங்கட்கும் நாயகனும் ஆகிய இராமன், அங்கதன் என்ற வானர வீரனுக்குத் தன் அங்கதத்தை அருளோடும் கொடுத்தான்.

கு: வாலியின் மகன், அங்கதன். இவன் பெயர்க்கு ஏற்ப நான்கடியிலும் அங்கதம் என்ற சொல்லமையுமாறு இந்த யமகப் பாடலை ஆசிரியர் அரிதின் அமைத்துள்ளார். இராமன் அங்கதன் என்ற வானர வீரனுக்குத்தன் தோளில் அணிந்திருந்த அங்கதம் என்னும் அணியைக் கழற்றிக் கொடுத்தான் என்பதே கருத்து. அதன்றனளவு என்புழிச் சுட்டு இயற்பெயர்க்கு முன் வந்தது, செய்யுளாகலின். அணியங்கதம் என்பதை அங்கத அணி என மாற்றுக. அணியாகிய அங்கதம் எனக்கிடந்தவாறே பொருள் கொள்ளுதலும் ஆம். மொய்ம்பன் — தோள்களையுடையவன். மொய்ம்பன், அருமறை அங்கதன், அகிலாண்ட நாயகன் என்பன

இராமன் என்னும் ஒரு பொருள் மேல் வந்த பல பெயர்கள்; இறுதியில் ஈந்தான் என்ற ஒரு வினையொடு முடிந்தன. அங்கதம் – தோள்வளை. அருமறை அங்கதன் என்றது அரிய வேதங்களில் மறைந்துறைகின்றவன் என்றவாறு. இனி அங்கதம் என்பதற்குப் பொய் எனப் பொருள் கொண்டு இராமன் வேதங்கட்கு எட்டாதவனாய் அந்த வேதங்களைப் பொய்யாக்கினவன் எனப் பொருள் கூறலும் ஆம். அணியங்கதம் திகழ் மொய்ம்பன், ஈந்தான் என்பதால் இராமன்தன் தோள்வளையையே கொடுத்தான் என்பது உய்த்துணரப்படும். (ருகூ)

வானரர் சேனைத் தலைவர்கட்கு இராமன் மாணிக்கப் பரிசு அளித்தல்

682\. பன்ன கத்து மணிதனம் பண்டை நூல்
பன்ன கப்பக வன்படர் வேலையைப்
பன்ன கத்தணை செய்பர னீந்தனன்
பன்ன கப்படைத் தானைப் பதிகட்கே.

பன்னகத்து மணிதனம், பண்டை நூல்
பன் அகப் பகவன் படர்வேலையைப்
பல்நகத்து அணைசெய் பரன் ஈந்தனன்
பல்நகப்படைத் தானைப் பதிகட்கே.

பொ: பற்களையும் நகத்தையுமே படையாகக் கொண்டுள்ள வானரசேனையின் தலைவர்கட்குப் பழமையான வேத நூல்களில் சொல்லப்படுகின்ற – உயிர்களின் இதயங்களில் வீற்றிருக்கின்ற கடவுளும், பரவிய கடலைப் பல மலைகளைக் கொண்டு அணை கட்டியவனுமாகிய இராமன், நாகமீன்ற மாணிக்கங்களையும் பிற செல்வத்தையும் கொடுத்தான்.

கு: தானைப் பதிகள் – சேனைத்தலைவர்கள். தானைப்பதிகட்கு அணைசெய்பரன் மணி, தனம் ஈந்தனன் என்க. பன்னகம்–பாம்பு. பன்னகத்து மணியென்றது நாகமீன்ற மாணிக்கத்தை. நாகம் மணியை உமிழ்வதுண்டு என்பதை இருங்களிறட்ட பெருஞ்சின

உழுவை, நாமநல்லராக் கதிர்பட உமிழ்ந்த மேய் மணிவிளக்கில் புலர வீர்க்கும் (அகநா-72) எனவும் அருவிதந்த அரவுமிழ் திருமணி எனவும் கூறப்படுதலால் உணரலாம். மணி தனம் என்றது உம்மைத்தொகை. மணியும் தனமும் ஈந்தனன் என்க. பண்டை நூல் என்றது பழமறையை. பழைய வேதங்களில் சொல்லப் படுகின்ற பகவன் – அகப்பகவன் என இயையும். அகப்பகவன் என்றது உயிர்களின் இதயங்களில் தங்குகின்ற பகவன் என்ற வாறு. பன்னுதல் - சொல்லுதல். பண்டைநூல் பன் அகப்பகவன் என்றது, இராமனுடைய முன்னைய பரநிலையை நினைப்பித்தபடி. வேலை – கடல். பரவியுள்ள கடலைப் பல மலைகளைக் கொண்டு அணைகட்டியவன் என்றது, அவதார நிலையின் அருஞ் செயலைக் குறிப்பிட்டபடி. பல்நகம் – பலமலைகள். அணையென்றது, சேது பந்தனத்தை. அணைகட்டிய நிலையில் இராமன் மானிட வேடத்தவனே யாயினும் அவன் பரம்பொருளே என்பதைப் பலர் உணர்ந்திருந்தமையால் இங்கு அணைசெய்பரன் எனச் சிறப்பித்தார். வானரங்களுக்குப் படைக்கலமாக உதவியவை அவற்றின் பல்லும் நகமுமே யாதலின் பன்னகப் படைத்தானை என வானர சேனையைக் குறிப்பிட்டார். (சூ௰)

சேதுபந்தனம் செய்த நளனுக்குப் பரிசு

683. அம்பு யத்தயன் ருதை யணிதிகழ்
அம்பு யத்த னரக்கன் படவடல்
அம்பு யத்தொடை யுய்த்தோ னளித்தனன்
அம்பு யத்தணை செய்தோற் கருந்தனம்.

அம்புயத்து அயன் தாதை அணிதிகழ்
அம்புயத்தன் அரக்கன் பட, அடல்
அம்புயத்தொடை உய்த்தோன் அளித்தனன்
அம்புயத்து அணைசெய்தோற்கு அருந்தனம்.

பொ: தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவனுக்குத் தந்தையும், இருபுறமும் அணி அணியாகத் திகழ்கின்ற இருபது அழகிய புயங்களையுடையனுகிய அரக்கன் இராவணன் இறக்கு

மாறு வலிமைமிக்க பிரமாத்திரத்தை விட்டவனுமாகிய இராமன், கடலில் சேதுபந்தனம் என்னும் அணையைக் கட்டிய நளன் என்னும் வானரத் தலைவனுக்கு அரிய செல்வத்தைப் பரிசாக அளித்தனன்.

கு: அம்புயத்தயன் தாதை என்றது, இராமனுடைய முன்னைய பரநிலையை யுணர்ந்து கூறியது. அம்புயம் – தாமரை. அணிதிகழ் அம்புயத்தன் என்பதற்கு, வாகுவலையம் முதலிய அணிகலன்கள் விளங்குகின்ற அழகியதோள் எனவும் பொருள் கொள்ளலாம். புயத்தனாகிய அரக்கன் என இருபெயரொட்டாக்குக. அடல் – வலிமை. அம்புயத்தொடை என்றது பிரமாத்திரத்தை. இராமன் பிரமாத்திரத்தால் இராவணனைக் கொன்றான் என்பதை; நாரணன்றிரு வுந்தியினான் முகன், பாரவெம்படை வாங்கியிப் பாதகன், மாரி னெய்வெனென்றெண்ணி வலித்தனன், ஆரியன் னவனுவி யகற்றுவான் (இராவணன் வதைப்–192) என்ற பாடல் கொண்டுணரலாம். நான்காம் அடியிலுள்ள அம்புயம் நீர் என்னும் பொருளது. அது ஆகுபெயராய்க் கடலை உணர்த்தியது. கடலில் அணைகட்டியவன் நளன் என்னும் வானரத் தலைவன். இதனை மஞ்சினிற்றிகழ் மலையை மாக்குரங், கெஞ்சுறக் கடிதெடுத்தெறியவே நளன் விஞ்சையிற்றுங்கினன் சடையன் வெண்ணெயில் தஞ்ச மென்றோர்களைத் தாங்குந் தன்மைபோல் (சேதுபந்தனப்-9) என்றதால் அறியலாம். உய்த்தோன், அணைசெய்தோற்கு அருந்தனம் அளித்தனன் என இயையும். அரக்கன்பட அடல் அம்புயத் தொடையுய்த்தோன் என்றது, இராம அவதாரத்தின் செயற்கருஞ் செயலை யுணர்த்தியவாறு. அம்புயன் தொடை என்பது, எதுகை நோக்கி 'அம்புயத்தொடை' என வந்தது. (சூ ௩)

### வீடணனுக்குப் பரிசு அளித்தல்

684. மானி லங்கைமன் போற்றவ ளர்நதி
மானி லங்கை யிருப்பமன் னாகவே
மானி லங்கையில் வாளியி லட்டகோ
மானி லங்கைமன் வாழ வழங்கினன்.

மான் இலங்கைமன் போற்ற வளர்நதி
மாநிலம் கைஇருப்ப, மன் ஆகவே
மான் இலங்கு ஐயில் வாளியில் அட்ட கோ
-மான் இலங்கைமன் வாழ வழங்கினுன்.

பொ: மாரீசனுகிய மாயமானை விளங்குகின்ற கூரிய அம்பி ஞல் கொன்ற கோமானுகிய இராமன், பெரியோனும் இலங்கைக்கு மன்னவனும் ஆகிய இராவணன் போற்றிக் காத்தலால் இடை யருது நீர் பெருகுகின்ற நதிகளையுடைய பெரிய நிலம் தன் கையில் தங்கியிருப்ப, இலங்கைக்கு மன்னவனுகிய வீடணன் நிலைத்த அரசனுக வாழ அதை வழங்கினுன்.

கு: மூன்றும் அடியில் மான் என்றது, மாயமானை. இலங்கு அயில் என்பது. யமகம் ஆதலின் இலங்கு ஐயில் எனப் போலி யாயிற்று. அட்ட கோமான் என்க. நான்காமடியில் இலங்கை மன் என்றது வீடணனை. அட்ட கோமான் இராவணன் போற்றுதலால் நீர் பெருகுகின்ற நதிகளையுடைய பெரிய நிலம் கையிருப்ப, இலங்கைமன், மன்னனுக வாழ அதனை வழங்கினுன் என இயை யும். வீடணன் அடைக்கலமடைந்ததும் கொடுத்த அரசினையே நிலைபேருகப் பெறக் கொடுத்தான் என்க. (கூ௨)

685. அந்த வானர காரிய சுரர்கோ
னந்த வானர கேசரி யாயினேன்
அந்த வானர வாண்மை வியந்தனன்
அந்த வானர மங்கையன் ஞர்களால்.

அந்த வானர காரி, யசுரர் கோன்
நந்த வால் நர கேசரி ஆயினேன்,
அந்த வானர ஆண்மை வியந்தனன்
அந்த வான் அரமங்கை அன் ஞர்களால்.

பொ: அந்த வாலியாகிய வானரத்தைக் கொன்றவனும் (முன்பு) அசுரர் தலைவனுகிய இரணியன் அழியுமாறு வாலோடுங் கூடிய நரசிங்கம் ஆயினவனும் ஆகிய இராமன், செய்மையில்

உள்ள வானகத்து அரமங்கையர் போன்ற பெண்களைக்கொண்டு அந்த வானரர்களின் ஆண்மையை வியந்தான்.

கு: நந்துதல் - அழிதல். நரகேசரி என்றது நரசிங்கத்தை. அரமங்கை யன்னார்களால் ஆண்மை வியத்தலாவது, ஆடலாலும் பாடலாலும் பெண்டிர் பாராட்டச்செய்வது. (சுரு)

வானர சேனைக்கு அறுசுவையுண்டி யளித்தல்

686. திங்கள் வெண்குடை யோனரிச் சேனைக்குத்
திங்களொன்றொரு நாள்போற் செலுத்தினான்
மங்கை பங்கன் வரையெடுத் தோன்சிர
மங்கை பங்கன் னறுசுவை யுண்டியே.

திங்கள் வெண்குடையோன் அரிச்சேனைக்குத்
திங்கள் ஒன்று ஒருநாள் போல் செலுத்தினான் –
மங்கை பங்கன் வரையெடுத்தோன் சிரம்
அங்கை பங்கன் அறுசுவை உண்டியே.

பொ: உமை மங்கையை இடப் பங்கிலே கொண்டுள்ள சிவனது கயிலைமலையை யெடுத்தவனாகிய இராவணனின் தலைகளை யும் அழகிய கைகளையும் பங்கமுறச் சிதைத்தவனாகிய இராமன், முழுச்சந்திரன் போன்ற ஒற்றைவெண் கொற்றக் குடையுடைய வனாய் வீற்றிருந்து கொண்டு வானர சேனைக்கு, அறுசுவையொடு கூடிய உண்டி வகைகளை வழங்கி, ஒருமாதம் ஒருநாளாக இனிதின் கழியுமாறு செலுத்தினான்.

கு: மங்கைபங்கன் வரையடுத்தோன் என்றது, இராவணனை. எடுத்தோன் சிரம் அங்கைபங்கன் என்றது, இராமனை. இராவண னுடைய பத்துத் தலைகளையும் அழகிய இருபது கைகளையும் குறைத் தவன் என்பது பொருள். பங்கன்–குறைத்தவன். பங்கம்–குறை. இலங்கையில் நிகழ்த்திய வீரச்செயலை விளக்கியவாறு. அயோத்தி வந்தபின் அரசனாய் ஆட்சி செய்த நிலையையுணர்த்த வேண்டித் திங்கள் வெண்குடையோன் எனக் கூறியவாறு. அரிச்சேனை –

